உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீவிஸ்வநாதபரப்ரம்ஹணேநம:

# காசிகண்டம்.

சைவசிரோமணியாகிய

## அதிவீரராமபாண்டியர்

மொழிபெயர்த்தருளியது.

இஃது

தா - குப்புசாமி நாயகரவர்களின்

விருப்பத்தின்படி

ஈக்காடு - அரங்கசாமி முதலியார் குமாரரும்

சென்னைக் கிறிஸ்டியன்காலேஜ்

தமிழ்ப்பண்டிதருமாகிய

## ஈ - இரத்தினவேலு முதலியார்

பிரமாணசஹிதம் நூதனமாகச்செய்த

பொழிப்புரையுடன்

சென்னை:

ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1895.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

இஃது

மதுராபுரி மகாவித்துவான்

ம-௱-௱-ஸ்ரீ,

**சபாபதிமுதலியா ரவர்களது**

மாணாக்கருள்,

சென்னைக் கிறித்தவக்கலாசாலைத்

**தமிழ்ப் பண்டிதரு ளொருவரு மாகிய**

**வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.**

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செந்தமிழ்நா டெனப்பகரும் பொழிலகத்து முளைத்திட்ட தீஞ்சொ லான
ரந்தமில்சீர்ப் புலவரெனுந் தருக்களிடைத் தோன்றியின்ப மாகு நல்ல
கந்தமெங்கும் வீசலுறு மதிவீர ராமனெனுங் கவிம ரத்திற்
சந்தமுறக் கனிகாசி கண்டமெனுஞ் சுவைப்பழத்தைத் தான்பி ழிந்து. (க)

எண்ணரிய கலைஞானச் சாகரநீர் பருகியெழூஉ மெழிலி யன்னு
னண்ணலஞ்சீர் பெறுகங்கை யங்குலத்தா னிரத்தினவே லபிதா னத்தான்
றெண்ணலஞ்சேர்ந் தினிமைசெறி செழுந்தமிழ்வா சகக்கலத்துச்செவிவாயாக
மண்ணவரும் விண்ணவரு முண்ணவரும் பொருட்டேறல் வழங்கி னனே. (உ)

உ

வேலுமயிலுந்துணை.

திருமயிலை - வித்துவான்

# சண்முகம்பிள்ளையவர்கள்

இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தண்ணேந்து மலரிதழித் தொடையேந்து சசியேந்து தனிக்கோ டீரத்
தெண்ணேந்து மொருவனைமுன னிமயவரை யினறெடுதத வெம்பி ராட்டி
பண்ணேந்து மொழிப்பாவை புனையங்கா னலின்மயிலாப் பரிவி னேத்து
நண்ணேந்து தென்மயிலை நகரொருசா ருடைத்தொண்டை நாட்டின மாதோ.

மாமேவு மதிச்சடையோ னுதல்விழியென் றுலகியம்பு மரபிற் குறைத்
தூமேவு மயிற்பாடயாற் றொலைச்சியோன றணனருளாற் றோன்றி யோன்பூங்
காமேவு தாமனகர் வரும்பர்சா னென்னிரண்டு கண்ணே போல்வான்
தீமேவுங் கரத்திறையன் பன்குப்பு சாமிநரோந் திரன்றுன வேண்ட. (உ)

தீக்காட்டி லாடுகினற சிந்தையினர் திருத்தொண்டு செறிவன் றொண்டா
வாய்க்காட்டற் புதஞ்சாலுங் கோலுதவு நன்னீர்மை மலிவெண் பாக்கம்
பூக்காட்டி னிளைபொலியும் பாகூரொன் றொருதலனும புடையே கொண்ட
ஈக்காட்டுக் கோட்டத்து ளீக்காடென் றொருநகர மிலங்கு மாலோ. (௩)

இன்னகர் வயிற்றொண்டர் சீர்பரவு மெங்கள்பிரா னினிது தோன்றும்
நன்னர்மர பினிலரங்க சாமியெனப் புவிபுகழு நலலோ னற்றும
இனனறவிர் மாதவத்தி னங்குரமா விரத்தினவே லெனவந் தெய்தித [ன்.
தன்னிகரில் சைவமெனும் பயிர்வளர்ப்பான் மிகசெறிந்தான் றனைநே ரில்லா

பிறந்தபய னரனடியே பேணுவதென் றுளந்தோந்து பிறங்கி னேனன்
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தா லெனக்கவிதை கழற வலலோன்
சிறந்தவர னடியாரை யவ்விறைவ னெனக்கருது சீர்த்தி யானல்
அறந்தவா வுள்ளத்தா னரன்றொண்டே மிகப்புரியு மாரவ மிக்கான். (௫)

முப்பொருளென் றுரைசாலும் பொருளினனி சிறந்தோங்கி முன்னூலெல்லாம்
இப்படியென் றுரைத்திடவொண் ணுப்பதியைக் கேசியெனு மிருடி யன்னாள்
செப்பியதோத் திரமென்னுஞ் சிவபராக் கிரமமெனத் துஞ் சிந்தை யோர்நதிட்
டற்புதச்செந் தமிழினெமக் கிந்தஞான றுதவுமுகி லனைய நீரான. (௬)

புண்டரிக புரத்தினிலா னந்தநடம் புரிதருமெம புனிதன் சீர்த்தி
கொண்டொளிக்குஞ் சூதனெவி மாலையோ ரிளைந்திற் குறைவில் காந்தத்
தெண்டகுமா னந்தவனச் சிறப்புரைக்குங் காசிகண்ட மெனுநன் னூலுக்
கொண்டரணி யுயநச்சி னார்க்கினிய ரெனவுரையிட் டுதவி னனல். (எ)

சிறப்புப்பாயிரம் முற்றிறறு.

சிவமயம்.

# உபோற்காதம்.

முத்தமிழ் முழுதொருங் குணர்ந்த உத்தமப் புலவர்காள்!

அநாதிமல முத்தராகிய சிவபெருமான் அநாதிமல பெத்தராகிய ஆன்மாக்கள் கடைத்தேறும்பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளிய வேதாகமங்களை யுணர்தற்குரியர் பிராமணர் - க்ஷத்திரியர் - வைசியர் என்னு மூன்று வருணத்தவர்களே யாவர். கொலை முதலிய பஞ்சமகாபாதகங்களை நீங்கி நற்குண நற்செய்கை வாய்ந்து சற்குருவையடைந்து, அவனருளாற் சிவதீக்ஷை செய்யப்பெற்ற சற்சூத்திரர் சிவபெருமான அருளிச்செய்த இருபத்தெட்டு சிவாகமங்களையும் ஓதற்குரியாராயினும்,ஆரியபாஷையிற்பழகித் தருக்க வியாகரண நூல்களிற் றோந்து மேற்கூறிய ஆகமங்களையோதல் இக்காலத்திலியாவர்க்கும் கடினமாகவே யிருக்கின்றது. இக்கடினத்தை நீக்கக் கருதியே வேதாகமங்களின் விரிந்த பொருள்களை முன்னரோ வியாதமுனிவர் அஷ்டாதஸ புராணங்களாக வடமொழியிற் புகன்றுளார்.

அத்தகைய புராணங்கள் பதினெட்டனுள்ளே மிகச்சிறந்ததும், சுமார் இலக்ஷங்கிரந்தங்களா லாக்கப்பட்டதும், புராணரத்தினமெனச் சிறப்புப்பெயரெய்தியதும், எல்லாப் புராணங்களி னுமுள்ள விஷயங்களைச் சங்கிரகமாக விளக்கவல்லதுமாகிய ஸ்ரீமகாஸ்காந்தபுராணமானது ஸனற்குமாரஸம்ஹிதை- ஸூதஸம்ஹிதை-ஸங்கரஸம்ஹிதை-விஷ்ணுஸம்ஹிதை-பிரமஸம்ஹிதை-சூரியஸம்ஹிதை என ஆறு பெரும் பிரிவுகளை யுடையது. அவற்றுட்சூதஸம்ஹிதையொன்றே செந்தமிழ்நடையில் முழுவதும் விளங்குகின்றது. ஸனற்குமாரஸம்ஹிதை ஸங்கரஸம்ஹிதைகளிற் சிற்சில பாகங்களே பலதலபுராணங்களாக மொழிபெயர்க்கப்பட்டன. ஸங்கரஸம்ஹிதையிற் குமாரோற்பவகண்டம் -காசிகண்டம் -காளிகாகண்டம் முதலிய பலகண்டங்களாகிய உட்பிரிவுகளுண்டு. அவற்றுட் குமாரோற்பவகண்டம் ஒன்றே ஸ்ரீகச்சியப்பசிவாசாரியசுவாமிகளால் மொழிபெயர்க்கபபட்டுக் கந்தப்புராணம் என்னும் பெயரால் வழங்கி வருகின்றது. காளிகாகண்டத்தின் ஒருபாகம் காஞ்சிப்புராணம் (முதற்காண்டம்) ஆயிற்று.

இக் காசிகண்டமானது ஸ்தலம்-தீர்த்தம்-மூர்த்தியாகிய மூவகைவிசேடமு மமையப்பெற்ற காசிநகரத்தின சிறப்பைக் கூறுவதாயும், வைதிக லௌகிகமார்க்கங்களைப் பலவகையிலும் நன்குவிளக்குவதாயு முள்ளது. இதனைச் சைவசிரோமணியாகிய அதிவீரராமபாண்டியர் சொன்னயம் - பொருணயம் - அலங்கார முதலியவை நிரம்பிய காப்பியரூபமாக மொழிபெயர்த்தருளினர். இந்நூலுக்கு உரையாவது வசனமாவது ஒருவருஞ் செய்தாரில்ர். ஆதலின், இதற்கு ஒரு பொழிப்புரைசெய்து முக்கியமான விடங்களிற் பிரமாண சஹிதமாய் வெளியிட்டால் உலகோபகாரமாக இருக்குமென்னுங் கருத்துட்கொண்ட எமது நண்பர் ம-ள-ள-ஸ்ரீ, தாமல் - துப்புசாமிநாயகர் எம்மைக் கேட்டுக்கொண்டமையின், அவர் கருதியவாறே செய்யவேண்டுமென்னும் மனவொருமையும், அவாவும் எம்மைச் செய்யும்படி வற்புறுத்தின.

காசிகண்டம் மூலபாடமாக இதுகாறும் இருமுறையச்சிடப்பட்டிருப்பினும், அதனைச் சுத்தப்பிரதியாகச் செய்தாரொருவருமிலர். அவ்விருபதிப்புகளுட் பிந்தியதே முந்தியதைக்காட்டிலுஞ் சிறிது சிறந்ததென்னலாம். அவ்விரு பதிப்புகளையுங்கொண்டு உரைசெய்து வருகையில், மோனையில்லாமலும் எதுகையில்லாமலும், சீர் அசை எழுத்துக்கள் குறைந்தும் மிகுந்தும், எழுத்துக்கள் நிலைமாறியும், அத்தியாயமுறைதவறியும், பாட்டிலக்கங்களும் அத்தியாய இலக்கங்களும் பிசகியும், எடுத்து விளக்க விரிவாகும் பலவகைப் பிழைபாடுற்று ஒன்றோடொன் றொவ்வாதிருந்தமையின், முந்திய பதிப்பை யறவேயொழித்துவிடநேர்ந்தது. இரண்டாவது பதிப்பு ஒன்றைக்கொண்டே உரைசெய்ய ஏலாமல் ஏட்டுப்பிரதி தேடுகையில், சென்னை - கோவிந்தப்பநாயகர் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ, ஆனூர்-சிங்காரவேலுமுதலியார் கொடுத்த பிரதி பிரயோசனப்பட்டது. சந்தேகநேர்ந்து இதனாலேயும் தீர்க்கமுடியாவிடின், கோட்டையில் வைத்துள்ள கவர்ன்மெண்ட் ஓரியண்டல் லைப்ரெரியிற் (Govt. Oriental Library, Fort Saint George.) சேமிக்கப்பட்டிருக்கும் மூன்றுபிரதிகளில் மிகச் சிறந்ததாக விளங்கும் ஒரு பிரதியின் உதவியே எமக்குப் பெருந்துணையாய் நின்றது. இந்நூலுட் பல விடங்களிற் சந்தித்த கற்பனைகள் சாஸ்திரவிஷயங்களாதியவற்றுட் சிலவற்றிற்கு எமது நண்பர்கள் உதவிசெய்யவும் வாய்ந்தன. அதுபற்றி அவர்கள் விஷயத்தில் நன்றிபாராட்டுகின்றோம்.

அரசர்பெருமானாகிய அதிவீரராமபாண்டியரது உட்கருத்துக்களை முற்றும் எடுத்து விளக்கவல்லேமல்லமாயினும், எமக்குப் புலப்பட்டவரையில் வரைந்துளேம். "மறப்பெனும் பகைவன் வாரிக் கொண்டனன்-அவன்கையிலகப்படா தடங்கின வற்றுளுஞ் - சிறிதினைச் சிறியேன் சிறிய சொற்றமக் - குரைத்தன னன்றியீ தொருநூ லன்றே" எனவும், "நூலுரை போதகா சிரியர் மூவரும்-முக்குண வசத்தால் முறைமறந் தறைவர்" எனவும், "அதிமதி நுட்ப மோ டகிலகலை கற்கினும் - விதியது வசத்தால் விதிவிலக் கயர்ப்பர்" எனவும் தொல்லாசிரியர்சொல்லியவண்ணம் மனிதரியல்பிற்குத் தவறுகளிருக்கக் கூடுமாதலின் "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்- மிகைநாடி மிக்க கொளல்" என்ற தெய்வப்புலவர் சொற்படி அறிவுடையோர் அங்கீகரித்துக் கொள்வரென்று துணிவுறுகின்றோம்.

இவ்வுரை யெழுதிப் பதித்து வருகையில் எமக்குப் பலவகை யுதவிகள் புரிந்தும், எதிர்பாராத அநேக விஷயங்களாக நேரிட்ட அசந்தர்ப்பங்களால் ஊக்கமழியாது விடா முயற்சியோடு அச்சிட்டு வெளிப்படுத்தியும், பதி புண்ணியத்தைக் கைக்கொண்ட எமது நண்பர் **ம-ா-ா-ஸ்ரீ, தா - துப்புசாமி நாயகர்** சிவகடாக்ஷ மேலிட்டு, இவ்வாறே அரிய பெரிய அநேக நூல்களை நாளாவர்த்தியில் வெளியிட்டு, நீடூழி வாழ்ந்து புகழுடம்பு பெறுமாறு சிவபெருமான் திருவருள் பாலிப்பாராக. சுபம்! சுபம்!

சென்னை : } இங்ஙனம் :
மன்மதஹு துலாரவி. } ஈ-இரத்தினவேலுமுதலியார்,
சிறித்தவகலாசாலைத்தமிழ்ப்பண்டிதர், சென்னை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காசிகண்ட அட்டவணை.

## காசிகண்ட அட்டவணை

முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ விஸ்வநாத பரப்பிரம்ஹணே நம:

---

# காசிகண்டம்.

---

## பாயிரம்.

### விநாயகர் காப்பு.

*மாற்றரிய தொல்பிறவி மறிகடலி னிடைப்பட்டுப்*
*போற்றுறுதன் குரைகழற்றாட் புணைபற்றிக் கிடந்தோரைச்*
*சாற்றரிய தனிமுத்தித் தடங்கரையின் மிசையுய்ப்பக்*
*காற்றெறியுந் தழைசெவிய கடாக்களிற்றை வணங்குவாம்.*

**(இதன் பொருள்.)** திருவருளுற்றாலன்றி எத்தன்மையராலும் நீக்குதற்கரிய பழமையாகிய ஜெனன மென்னும் மடங்குதலுடைய சமுத்திரத்தி லகப்பட்டுத் துதிக்கத்தக்க தமது சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளாகிய தோணியைத் தமக்கோராதரவாகப் பிடித்துக்கிடந்த ஆன்மகோடிகளை, எத்தகையினராலும் இத்தகையினதென் றெடுத்துச் சொல்லுதற்கரிய ஒப்பற்ற மோட்சமென்னும் விசாலமாகிய கரையின்மீதுகொண்டுபோய்ச் செலுத்தும்படி, காற்றினைவீசுகின்ற தழைத்த திருச்செவிகளையுடைய மதம்பொழிகின்ற யானைமுகக் கடவுளை யாம் வணங்குவாம். **என்றவாறு.**

பிறவி இருவினையொப்புமலபரிபாகம் வந்தாலன்றி யொழியாததும், அஃது அநாதிசம்பந்தமுடையதும், என விளக்குவானகருதி "மாற்றரியதொல்பிறவி" என்றும், கடல் சிறிது மசைவற விருத்தலின்மையால் "மறிகடல்" என்றும், நீரிடைவீழ்ந்தோர் கரையேறப் பற்றுகோடு வேண்டுதலின் "புணைபற்றி" என்றும், விநாயகரது உபயதிருவடிகளே கரைசேர்க்கப்பட்ட புணையாதலின் "தாட்புணை" என்றும், அத்திருவடிகள் கொடியவரைச்செகுத்த வெற்றியையும் அடியவருக் கருள்செய்யுந் திறத்தையுமுணர்த்த வீரக்கழ லணிந்தவையாதலின் "குரைகழற்றாள்" என்றும், பெருந்துயருற்றுழிச் செயலறியாதிருப்ப ராதலின் "கிடந்தோர்" என்றும், முத்தியுல கடைந்தோர் சுவர்க்காதியுல கடைந்தவர்போலத் திரும்புதலின்மையின் அதன்பெருமை யியம்புதலரிதும் அதற்கு வேறே ஒப்புயர்வின்மையு முடையதாதலின "சாற்றரியதனிமுத்தி" என்றும், விநாயகரது திருவடிகளாகிய புணைபற்றிப் பிறவிக்கடல் கடந்து முத்தியுல கடைந்துள்ளார் எண்ணில்லா ரென்ப துணர்த்த "தடங்கரை" என்றும், மற்றைய வுலகுக்கெல்லாம் முத்தியுல குயர்ந்ததென்பார் "கரையின்மிசை" என்றும், விநாயகர் (சாமர கர்நர்)

எனப் பெயர்பெற்றுள ராதலின் "காற்றெறியுஞ்செவி" என்றும, அக்காற்று ஊழிக்காற்றுகிய சண்டமாருதத்துக்குச் சமமாதலின் "தழைசெவி" என்றும, தமது கருணைப்பெருக்கம்போன்று இருவகை மதப்பெருக்குடைய ராதலானும, மாறுபட்டுள்ள திருமேனியில் உத்தமாங்கம யானைவடிவமாதலானும் "கடாக்களிற்றை" என்றுங் கூறினர்.

மாறிமாறிப் பிறக்குந்தன்மையாற் பிறவி மறிகடலெனப்பட்டது. இதனை,

"பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தொல்தோணி கண்டார்"—என்னும் நம்பியாண்டார்நம்பி திருவாக்கானும்,

காற்றெறியுந் தழைசெவி—என்பதனை

"கார்கொண்ட கவுண்மதக் கடைவெள்ள முங்கட் கடைக்கடைக் கனலுமெல்லை, கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி கடைக்காறிரட்ட" என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கானும்,

மாறுபட்டுள்ள திருமேனி—என்பதனை

"மணிகொண்ட கோடொரு மருங்குண்மை யாலாண்மை வடிவென்று மஃதின்மையோர், மருங்குண்மை யாற்பெணமை வடிவென்று மீதுகீழ் மாறிய திருக்காட்சியா,லணிகொண்ட வுயர்திணைய தென்றுமஃ றிணையென்று மாககுங களத்தலரிதா, மைங்கரச் சிந்துரம்"—என்னும் திருவாக்கானு முணாக.

உத்தமாங்கம் என்பது சிரம்.

விநாயகருக்குள்ள மதங்கள்: பரஞானம் அபரஞானம் என இரணடு.

சைவசமயிகள் யாதொருகாரியமுஞ் செய்யத் தொடஙகுகையில் அஃது முட்டின்றி முடிதற்பொருட்டு விநாயகரை வணஙகுதல மரபாதலின இவரும தாமெடுத்துக்கொண்ட காசிகண்ட மொழிபெயர்ப்பு நிறைவேறும்பொருட்டு விநாயகவணக்கம் முதலிற் கூறினர்.

அதன் வரலாறு.

பூர்வத்திற் கயமுகாசுரன தான் பெற்றுள்ள வரத்தி னிறுமாப்பால் பிரமாதிதேவர்களுக்கெல்லாம் விபத்துசெய்துவர தேவாக ளதனைச்சகியாதவர்களாகி ஒருங்குகூடித் திருக்கைலாயமலையையடைந்து திருநந்திதேவரனுஜ்ஞையா லுட்சென்று சிவபெருமானைத் தரிசித்துத் தமக்குநேர்ந்த குறைகளை விண்ணப்பஞ்செய்து முறையிட சிவபெருமான் "அவன என்னை நோக்கி அரியதவஞ்செய்து தேவராலும் மனிதராலும் அசுரராலும் மிருகஙகளாலும் இறவாதிருக்க வரமபெற்றுளன். ஆனல் தன துருவாகிவருவோனால இறவாவரம் கேட்டானில்லை நாம் மாறுபட்ட திருமேனியாக யானைமுகத்தொடு சென்று அவனை யடக்குவோம்" என நவர்கட்கு விடைகொடுத்தனுப்பிப் பார்வதிதேவியாரோடும் அம்மலைக்குச்சமீபத்திலுள்ள சித்திரச்சாலையையடைந்து அங்கு விசுவகருமனு லெழுதப்பட்டுள்ள மந்திரவடிவமாகிய சித்திரங்களைப் பார்வதிதேவியாருக்குக் காட்டி "பெண்ணே! முதலிலுள்ள பிரணவாகாரமாகிய இரண்டு யானைகளில் முற்பட்டது திரிமூர்த்தி

கலையுந் தந்தது. அது எனதுவடிவாகும். அமைத்தது சத்திகள்மூவரையும்பெற்றது. அது நினது வடிவாகும ஆதலின் யாம் அப்பிரணவச் சித்திரங்களின் வடிவ மாகுதும" என்று திருவுளஞ்செய்ய,உமாதேவியாரும் அக்கருத்துக்கிசைந்தனர். அப்பொழுது இறைவர் ஆங்கோர் திருவிளையாடலைச்செய்ய அதனுலப் பிரணவவடிவத்தினி றும விநாயகா திருவவதாரஞ்செய்தனர். பிறகு விநாயகரைக் கைலைமலையிற்கொண்டுவந்து மகுடஞ்சூட்டி "உனனைவணங்கி உனதருள்கொண்டு செய்யுங் கருமங்களை நிறைவேற்றவும்,வணங்காதுசெய்யுங் கருமங்களைத் தவிர்க்கவும், உனக்கு விக்கினவிநாயகனெனப் பெயர் தந்தோம்" என்று கூறித் தேவர்களைப் பார்த்து "இவன நமது மூத்தபிள்ளை. இவனை யெம்மைப்போன் றுபசரியுங்கள்" எனச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளினர். பிறகு தேவர்கள் விநாயகக்கடவுளை யுபாசிக்க அவர் கயமுகாசுரனுடன போர்புரிந்து அவனெவவகை யாயுதங்களாலு மிறவாதிருந்தலின தமது கொமபை யொடித்தெறிய அவன் பெருச்சாளி வடிவாயினன. அதனை விநாயகர் வாகனமாக்கிக்கொண்டனர்.—என்பது.

விநாயகபுராணம - கெஜமுக னுற்பத்தி படலம்.

"வான நாட்டுறை யுமபரான் மனனுமா னிடரால்
தான வாகுலத் தவர்களான் மற்றுளோர் தம்மால்
கான கத்துறு விலங்கினுந் கருதுயி ரிறந்தே
ஈன முற்றிடா வகையுமெற் கீந்தரு ளென்றான்."

"மும்ம தம்பொழி கறையடிக் கைம்மலை முகமுடை யசுரன்றான்
தம்மு றுத்தனில விளிந்திடா வரமெனைக் கேட்டிவ னதுதனால்
தெமமு னைகக்டி னினனையா திபர்களாற் றீங்கிலாத் தீயோனை
செமமை மிக்குபர் கரிமுகத திறைவனாய்ச் சென்றடு கின்றேமால."

எனவும,

விநாயகபுராணம - திருவவதாரப் படலம்.

"முராரி யாதிய தேவாகண முதலுறு முழுதுல கினிலுள்ளோர்
விராவி யாதொரு காரிய மாயினும் விளங்குறச் செயவென்றே
பராவி யன்னருச் சனைசெய்வோர் மனத்துறு பான்மைதங் தருளுன்னன்
பிராது செப்பவர் காரிய மூறுசெய் திடுதியென் றிவைசொன்றனை."

கந்தபுராணம - கெஜமுக னுற்பத்தி படலம்.

"நினறவன் றனனை நோக்கி நெடியபல படைக ளேவிச்
சென றிவன் றன்னைக் கொல்லாச சிவனருள் வரத்தின் சீரா
லின்றினிச் செய்வ தென்னென றிறைவரை யுன்னி யெந்தை
தனறிருக் கோட்டி லொன்று தடக்கையின் முறித்துக் கொண்டான்."

"தடக்கையி லேந்துங் கோட்டைத் தந்தியா மவுணன் மீது
விடுத்தலு மனையன் மார்பை வெய்தெனக் கீண்டு போகி

யுடற்படி மிசையே வீழ்த்தி யொல்லையி லோடித தெண்ணீரக்
கடற்படிந் தமலன மைந்தன் கரததிலவந் திருந்த தனறே." — எனவும்,
வருவனவற்று னுணர்க.

இச்செய்யுளில் யாம் என்னும் எழுவாய் எஞ்சிநின்றது. யாம் களிற்றை வணங்குவாம் என முடித்துக்கொள்க. (க)

## கடவுள் வாழ்த்து.

### விசுவநாதர்.

வேறு.

சீர்பூத்த செழுந்தரங்கத் தீம்புனன்மந் தாகினிதண் டேனூர் கொன்றைத்
தார்பூத்த செஞ்சடையி லணிநதுமதன் மேலவிழைவு தணியா னாகிக்
கார்பூத்த விருவிசும்பிற் கங்கைநதி சூழ்கிடநத காசி வாழும
ஏர்பூத்த தனிமுதலவி னிணையடிப்பூங் கமலமல ரேத்து வாமே.

(இ-ள்.) சிறப்புப் பொருந்திய செழுமையாகிய அலைகளைவீசும் மதுரமுள்ள நீர்மயமாகிய கஙகையைக் குளிர்ந்த தேனூறுளிக்குங கொன்றைமலாமாலை பிரகாசிக்கின்ற சிவந்த சடைமுடியிலதரித்தும், அக்கங்கைமீது தாமகொணட பெருவிருப்ப மடங்காதவராகி, மேகஙகள பரவிவிளஙகும பெருமைதஙகிய ஆகாயததிலுள்ள கங்காநதியானது புடைசூழ்ந்து விளங்குங் காசி க்ஷேத்திரத்தில் திருக்கோயிலகொண் டெழுந்தருளியிராநின்ற அழகுமிகுந்த ஒபபற்ற முதறபெருஙகடவுளாகிய விசுவநாதப்பெருமானது அழகிய தாமரைமலாபோனற இரணடு திருவடிகளையும் திரிகரணசுத்தியாகத் துதிப்பாம். எ - று.

திரிகரணமாவது - மனம், வாக்கு, காயம் என்பனவாம்.

### சிவபெருமான் கங்கையை யணிந்த காரணம.

முற்காலத்தில் அயோத்திநகரை யரசுபுரிந்த சகரனென்பவன் விடுத்த அசுவமேதப்புரவியை இந்திரன் கண்டு மனம்பொறாதவனாகி வஞ்சனையாற் பிடித்துப் பாதலத்திற் கடுந்தவம்புரிந்திருக்கும் கபிலமுனிவா பக்கலிற் கட்டிப்போயினன். அவவரசன் புதலவராகிய சகரர்கள் அறுபதினாயிரவரும் தந்தைகட்டளைப்படி, அக்குதிரையை உலகமுழுதுந்தேடிக் காணாது பூமியைததோணடிப் பாதலததையடைநது அங்கருந்தவம்புரியுங் கபிலமுனிவாபா லிருக்கக்கண்டு, இம்முனிவனே குதிரையைக் கொணர்ந்தவனென வைதனர். அதனால முனிவர் கோபித்து விழித்துப்பார்க்க சகரர்கள் அறுபதினாயிரவருஞ் சாம்பராயினா். அச்செய்தியையவருடனிருந்த தூதுவர்சொல்லக்கேட்ட சகரராஜன் தனபௌத்திரனாகிய அஞ்சுமான என்பவனை யழைதது "என்புதல்வரிறப்பினும் யாகத்தை விட்டுவிடலாமோ" என, அவவஞ்சுமான் பாதலஞ்சென்று கபிலமுனிவருக்கு முன்னே கிடக்கின்ற சாம்பர்மலையைப்பார்த்து நடுக்கமுற்று முனிவனாததொழுது குதிரையைக் கேட்க, அவர் நடந்த செய்தியைச் சொல்லி குதிரையைக் கொடுக்க, அதைப் பெற்றுக்கொண்டு தன பிதாமகன்பால் விடுத்து அவன் செய்யும் அசுவமேதயாகத்தை முடிப்பித்தான். அவன் சந்ததியாரு ளொருவனாகிய பகீரதன் தன் மூதா

தைகளாகிய சகரர் அறுபதினாயிரவரும் கபிலமுனிவரது கடுங்கோபத்தாற் சாம்பராய் நரகமடைந்துள்ளதை யறிந்து, அவர்களைச் சுவர்க்கமடைவிக்கக் கருதி பிரமதேவனை நோக்கிப் பதினாயிரவருடந் தவம்புரிந்தனன. பிரமதேவன் அத் தவத்திற கிரங்கிப் பிரசன்னமாய் "ஆகாயகங்கை அவர்க ளஸ்தியின்மேற் பட்டால் அவர்கள் சுவர்க்கமடைவா. அது பூமியில் வருமாகில் அதன வேகத்தை ஆற்றுதல் சிவபெருமானுக்கன்றி ஏனையோருக்கு அரிதாதலால் அவரை நோக்கித் தவஞ்செய்யத்தொடங்கு" என்று மறைந்தனன. பகீரதன் பதினாயிரவருடந் தவம்புரிந்து அவரருள்பெற்று, கங்கையை நோக்கி ஐயாயிரவருடந் தவம்புரிந்து நிற்கையில், கங்கைபெண்வடிவாகவந்து "என் வேகமதிகமாதலால் என்னைத் தாங்கும்படிச் சிவபெருமானை நோக்கி இன்னும் அரிய தவங்களைச்செய்" என்று சொல்லிப்போக, மீட்டும் சிவபெருமானைநோக்கி இரண்டாயிரத்தைஞ்ஞூறுவருடந் தவஞ்செய்ய, பெருமான் பிரசன்னமாகக்கண்டு, கங்கை பெண்வடிவாகவந்து தன்னிடஞ் சொன்னவற்றைச்சொல்லி அவர் "காக்கிறேன்" என்றுசொல்லிய வரத்தையும்பெற்றுக்கொண்டு, திரும்பவும் கங்கையை நோக்கி இரண்டாயிரத்தைஞ்ஞூறு வருடமளவுந் தவஞ்செய்தனன். அப்பொழுது கங்கை மூவுலகமும் அச்சமுற்று நடுங்கும்படி ஆரவாரித்துக்கொண்டு வந்து தோன்றினள். அவ்வாறு வந்த கங்கையைச் சிவபெருமான் சிந்தாமல ஒரு சடைநுனியி லணிந்தனர். பகீரதன கங்கையைக் காணுமல் வருந்திநிற்கக்கண்டு சிவபெருமான் "நமது சடையி லிருக்கின்றனள் அஞ்சாதே" என்று ஒரு சிறுதுளிவிட, கங்கை பூமியிலிழிந்து நதி வடிவமாயினள் இவ்வாறுவந்த கங்கைமுன் அரசன் செல்லுகையில், இறந்தோரைக்கதியிற் சேர்க்க விரைந்து செல்லும் கங்கையினது வேகத்தால் சன்னுமுனிவர் யாகம் அழிய, அவர் கோபங்கொண்டு அந்நீரை உள்ளங்கையிலேற் றுட்கொண்டனர். அரசன் கங்கையைககாணுமல் சன்னுமுனிவரை வணங்கி முன் நடந்தவற்றைச் சொல்ல அவர மனமிரங்கிக் காதின்வழியேவிட்டனர். கங்கை இறந்துகிடந்த சகரருடல் உதிர்ந்த சாம்பலிற் படிய அவர்கள் நற்கதி யடைந்தனர. என்பது.

கம்பராமாயணம் - அகலிகைப்படலம்.

"மாக நன்னதி புவியிடை வருகின்மற் றவடன்
வேக மாற்றுதல் கண்ணுதற் கன்றிவே றரிதாற்
றோகை பாகனை நோக்கிநீ யருந்தவந் தொடங்கென்
றேகி னானல கனைத்துமெவ வுயிர்களு மீந்தான்.

உந்தி யம்புயத் துதித்தவ னுறைதரு முலகும்
இந்தி ராதிய ருலகமு நடுக்குற விரைத்து
வந்து தோன்றினள் வரநதி மலைமகள் கொழுநன
சிந்தி டாதொரு சடையினிற் கரந்தனன் சேர.

புன்னு னித்தரு பனியென வரநதி புனிதன்
சென்னி யிற்கரந் தொளிதர வணங்கினன் றிகைத்து
மன்ன னிற்றலும் வருந்தனஞ் சடையள்வா னதியின்
றென்ன விட்டன னொருசிறு தவனிபோந் திழிந்தாள்.

இழிந்த கங்கைமுன் மனனவன் வினைவொடு மேகக்
கழிந்த மன்னவர் கதிபெற முடுகிய கதியால்
அழுந்த மாதவச் சனனுவின் வேள்வியை யழிப்பக்
கொழுந்து விட்டெரி வெகுளியன் குடங்கையிற் கொள்ளா.

உண்டு வந்தனன் மறைமுனிக் கணங்கள்கண் டுவப்பக்
கண்டு வேந்தனும் வணங்கிமுன் னிகழ்ந்தன கழறக்
கொண்டு போகெனச் செவிவழி கொடுத்தனன குதித்து
விண்டு நீங்கின ருடனுகு பொடியின்மே வினளே."—எனவும்,

கந்தபுராணம் தக்ஷகாண்டம ததீசியுத்தரப்படலம.

"அந்நதி மூன்று தன்னி லயனகா புகுநத கங்கை
தன்னருந் திறவின மிக்க பகீரதன றவததான் மீளப்
பின்னரு மிமையா முக்கட் பெருந்தகை முடிமேற் றுங்கி
இந்நில வரைப்பிற் செல்ல விறையதில விடுத்தல் செயதான்."—எனவும்,
வருவனவற்றுற் காண்க.

பகீரதனுல பூமியில வநத காரணமபற்றிப பாகீரதி எனவும், சன்னுமுனி வா காதுவழிவநததுபற்றிச் சானவி எனவும் கங்கைக்குப் பெயர்கள் வழங்கின. சகரரால தோண்டப்பட்டதால் சாகரம் எனக் கடலுக்குப் பெயராயது. (உ)

விசாலாக்ஷியம்மையார்.

வேறு.

அலகிலாக் கருணை யென்னு மந்தளி ரீன்று தொலலை
யுலகெலாம பூத்துக் கங்கை யுவட்டெடுத தொழுகுஞ் சென்னி
மலையினிற் படர்ந்த பச்சை மரகதக் கொடியை ஞானக்
கலையமு தொழுகு தீஞ்சொற் கனியினைக் கருத்துள் வைப்பாம்.

(இ - ள்.) அளவிலலாத கிருபையென்று சொல்லப்பட்ட அழகிய தளிரைவிட்டுப், பழமையாகிய எலலா வுலகங்களையும் அவற்றிலுள்ள ஆன்மகோடிகளோடும் பூத்துக் கங்காநதியானது ஊற்றெடுத்துப பாய்கின்ற சிகரத்தையுடைய (மாணிக்க) மலையினிற் படர்ந்து விளங்கும் பசுமைநிறமபொருந்திய மரகதக்கொடியும் ஞானசாஸ்திரங்களாகிய அமுதமொழுகும் மதுரமாகிய மொழியையுடைய கனியுமாகிய விசாலாக்ஷியம்மையாரை நமது கருத்துள் வைத்து வணஙகுவோம்.

மரகதம் என்பது நவரத்தினங்களுள் ஒன்று. அது பசியநிறமுள்ளது ஆதலின் "பச்சைமரகதக்கொடி" எனவும், தளிர்த்தலும் புட்பித்தலும் கொடிகளின் இயற்கையாதலின் "கருணையென்னு மந்தளி ரீன்று தொல்லை யுலகெலாம் பூத்து" எனவும, கொடிகள் படர்தற்கோர் கொழுகொம்பு வேண்டுதலின் "மலையினிற் படர்ந்த" எனவுங் கூறினர்.

உலகெலாமென்றது பல்லாயிரங்கோடி அண்டங்கள். இதனை "அண்டக் குவைவெண் மணற்சிறுசோ றாக்கித் தனியே விளையாடுங், கொண்டற் கோதாய் படியெழுத லாகா வுருவக் கோகிலமே" என்னுந் திருவிளையாடற்புராணத்

தாலும், கருணையைத் தளிர் எனக் கூறியதை "கருணையிளந் தளிர்காட்டி யெஞ்ஞான்றும்" என்னும் பட்டணத்துப்பிள்ளையார் திருவாக்கானும் உணர்க.

உமாதேவியார் பசிய நிறமுடையராதலானும் சிவபெருமானது திருமேனியில் அர்த்தசரீரம் பெற்றுள்ளாராதலானும "கற்பகமருங்கிற்பூத்த காமருவல்லியொத்தாள்" என்ற திருவாக்குபோலப் "பச்சைமரகதக்கொடி" என்றார். மற்றைக் கொடிகளைப்போலல்லாமல் இது மரகதக்கொடி யெனக் கூறப்பட்டதாலும் சிவபெருமான அந்திவண்ணன் தீவண்ணன எனப் பெயர்பெற்றுச் செந்நிறமுடையராதலானும், மலையெனப் பொதுப்படக் கூறியதை மரகதத்துக்கினமாகிய மாணிக்கம் என வருவிக்கலாயிற்று.

"கொடியை," "கனியினை" என்பவை "உருபுபல வடுக்கினும வினைவே றடுக்கினும், ஒருதம மெச்ச மீறுற முடியும்" என்றதனால் இரண்டனுருபுகளடுக்கி வினைமுற்றைக் கொண்டன.

யாம் என்னும் எழுவாய் எஞ்சி நின்றது. (சு)

ஸ்தல விநாயகர்.

கரைபொரு கங்கை யாற்றிற் காளிந்தி மடுப்ப தென்னச்
சொரிமதக் கலுழி வெள்ளஞ் சுழித்துவார்ந் தொழுகக் காசித்
திருநக ரினிது வைகுந் திங்களங் குழவிக் கோட்டு
வரைபுரை களிநல் யானை மலரடி வணங்கு வோமே.

(இ-ள்.) வெள்ளத்தின் மிகுதியால் கரையை மோதுகின்ற கங்காநதியிற் காளிந்தி நதி கலப்பதுபோல ஒழுகுகின்ற மதப்பெருக்கின கலங்கலாகிய வெள்ளமானது சுழித்துக்கொண்டு பெருக்கெடுத்தொழுகக் காசிநகரமாகிய சிறந்த க்ஷேத்திரத்தில் அடியவர்கட்கருளும்படி இனிமையாக வசிக்கின்ற அழகிய இளம்பிறைச்சந்திரனை யொத்த வொற்றைக் கொம்பினையும், மதச்செருக்கையும் மலைநிகர்த்த நல்ல யானைமுகத்தையு முடைய துண்டிவிநாயகரது தாமரை மலர்போன்ற திருவடிகளைத் தொழுவோம். எ-று.

காசிநகரம் முத்தித்தலங்களேழனுள் முதன்மைபெற்றதும், விராட்புருடனது ஆக்ஞாஸ்தானமுமாக விளங்குவதுமாதலால் "காசித்திருநகர்" எனப்பட்டது. அதனை,

இந்நூல் தீர்த்தமகிமையுரைத்த அத்தியாயம்.

"காசிமா யாபுரி யவந்தி காஞ்சிமற்
றேசைகோ ளயோத்திவண் டுவரை யொப்பறு
மேசிலா மதுரையென் றிசைக்கு மேழ்பதி
மாசறு முத்தியை வழங்கு மென்பவே."—எனவும்,

திருவிளையாடற்புராணம் வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியபடலம்.

"திருவள ராரூர் மூலந் திருவானைக் காவே குய்ய
மருவளர் பொழில்சூ ழண்ணு மலைமணி பூர நீவி

ரிருவருங் கண்ட மன்ற மிதயமாந் திருக்கா ளததி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் திமமாங் காசி.

பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமரந் திரமாம் வேத
மறைதரு துவாத சாந்த மதுளையீ ததிக மெந்த
முறையினு லென்னின் முன்னர்த் தோனறிய முறையா லென்றக்
கறையறு தவத்த ரோடு கவுரியன் கோயில் புக்கான்."— எனவும் வரு

வனவற்றுற் காண்க.

இளம்பிறைச்சந்திரன வளைந்துள்ளதாலும், வெண்ணிற முடையதாலும் யானைத்தந்தத்துக் குபமானப்படுத்தி "திங்களங்குழவிக்கோடு" என்றூர். அதனை

"தழைவிரி கடுக்கை மாலைத் தனிமுதற் சடையிற் சூடுங்
குழவிவெண் டிங்க ளிற்ற கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கு
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி செனனி வைப்பாம்." — என்கிற

இந்நூலாசிரியர் வாக்கானும்,

"மாமேவு வான்பிறை முடிப்பிறை யிரண்டென்ன வாய்க்கடைத் தோற் றியவிரு, மருப்பிரண் டென்னவங் கைக்கோ டிரண்டென்ன மார்பின்முத் தார மென்னப், பாமேவு பேருதர பந்தமென வாரூழ் படாமெனத் தாளின் முத்தம், ப்திித்தகழ லெனவிரவ மேலோங்கு பேருருப் பண்ணவனை யஞ்ச லிப்பாம்." — என்பதனுனு முணர்க.

விநாயகர் தமதொருகொம்பினை முறித்தகாரணம் முதற்செய்யுளிற் கூறப் பட்டிருக்கின்றது.

விநாயகர்வணக்கம் இருகாற்கூறிய தென்னெனில் முட்டின்றி முடிதற் பொருட்டுமுதலினும், சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கியபின்னர் அவர்கள் புத்திரர்களில் மூத்தோராதலால் முருகக்கடவுள் முதலாயினோருக்கு முன்னுமாக மீண்டும் துதிசெய்யலாயிற்று. (ச)

முருகக்கடவுள்.

இலைமுகப் பைம்பூண் டாங்கி யேர்குடி யிருந்த கொம்மை
முலைமுகிழ் பூத்த வள்ளி முயங்குதோள் வெற்பி னுனை
மலைமுகம புழுங்க வாட்டி மாமுத றடிந்து வெய்ய
கொலைபழுத் தொழுகும வைவேற் குழகனை வணங்கல் செய்வாம்.

(இ-ள்.) அச்சவடிவாகிய முகத்தையுடைய பசும்பொன்னு லாகிய ஆபர ணங்களைத தரித்து அழகானது குடியிருக்கின்ற திரண்ட முலையாகிய அரும்பு விளங்கும் வள்ளிநாயகியார் தழுவுகின்ற திருப்புயங்களாகிய மலையையுடைய வரும், கிரவுஞ்ச பர்வதத்தின் முகமானது வருந்தும்படி யழித்து, மாமரவடிவாகி நின்ற சூரபன்மனையுங் கொன்று, கொடிய கொலைத்தொழில் மிகுந்து விளங்குகி ன்ற கூர்மையாகிய வேலாயுதத்தைத்திருக்கரத்தில் ஏந்தினவருமாகிய முருகக் கட வுளை வணங்குவாம். எ - று.

மலைமுகம புழுங்க வாட்டிய தாவது.

அகத்திய முனிவர் தென்றிசை நோக்கிச்செல்லுகையில் கிரவுஞ்சன் என்னும் அசுரன மலைவடிவாக நின்று தனது மாயையால வழிதெரியாதபடி அலைக்க, அகத்தியமுனிவர் கோபங்கொண்டு "நீ இவவாறே மலைவடிவாகக் கிடந்து குமாரககடவுள வேலாயுததகதுக்கு இரையாகுக" எனச் சபித்தேகினர். அதுமுதல் கிரவுஞ்சன் மலைரூபமாகவே இருந்தனன். அப்படியிருக்கையில் சூரபன்மனது தம்பிமார்களில் இளையோனாகிய யானைமுகம்பெற்ற தாருகாசுரன் அதில் வசித்திருந்தனன. முருககடவுள் சூரனைச் சங்கரிக்கச் செல்லுகையில் அவ விருததாநதங்களை யுணர்நது தமது திருக்கரத்திலுள்ள வேலாயுததகதால் தாருகனையும் மலைவடிவாகவுள்ள கிரவுஞ்சனையும் வதைத்தனர். என்பதாம். இதனை,

கந்தபுராணம - உற்பத்திகாண்டம் - தாருகன்வதைப்படலம்.

" தாருகன மார்ப மெனனுந் தடம்பெரு வரையைக் கீண்டு
சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று
வீரமும் புகழுங் கொண்டு விளங்கிய தென்ன வங்கட்
சோரியுந் துகளு மாடித் துண்ணென மீண்ட தன்றே." — எனவும்,

மாமுத றடிந்ததாவது.

முருகக்கடவுள் சூரபனமனோடு யுத்தஞ்செய்கையில் அவன்கொண்ட பற்பல மாயாவடிவங்களையெல்லாம் சஙகரிததுவருகையில் கடலில் பெரிய மாமரவடிவாக நின்றனன். அதனை யுணர்ந்து தமது திருக்கரத்திலுள்ள சத்தியாகிய வேலாயுதத்தைச் செலுத்தி அம் மாமரவடிவையு மாய்த்தனர். என்பதாம். இதனை,

கந்தபுராணம்-யுத்தகாண்டம்-சூரபன்மன் வதைப்படலம்.

" வனனியி னலஙகல் கானறு வானறழை புகையி னல்கிப்
பொனனென விணர்க லீன்று மரகதம் புரையக் காய்த்துச்
செநநிற மணிக ளென்னத் தீம்பழங் கொண்டு கார்போற்
றுனனுபல் கவடு போக்கிச் சூதமா யவுண னினமுன்.

விடம்பிடித் தமலன் செங்கண் வெஙகன லுறுத்திப் பாணி
யிடமபிடித திட்ட தீயிற் றோய்ததுமுன னியற்றி யன்ன
வுடம்பிடித் தெய்வ மிவாா றுருகெழு செலவி னோகி
மடம்பிடித் திட்ட வெஞ்சூர் மாமுத றடிந்த தன்றே." — எனவும் வருவனவற்றாற் காண்க. (௭)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர்.

கேழ்கிளர் புனிற்றுத் திங்கள் கிடந்தொளிர் சடையோன் பங்கிற்
றூழிருங் கூந்தற் பேதை தடமுலைத் தீம்பான் மாந்தி
யேழிசை வரைப்பு முய்ய வீர்ந்தமிழ் மாரி பெய்த
காழிமா முகிலின் செய்ய மலரடி கருத்துள் வைப்பாம்.

(இ-ள்.) ஒளிவீசும் இளம்பிறைச் சந்திரன இருந்து பிரகாசிக்கும் சடையினையுடைய சிவபெருமானது வாமபாகத்தில் எழுந்தருளியுள்ள நீண்டு மாக்ஷிமைப்

பட்ட அளகபாரத்தையுடைய உமாபிராட்டியாரது பூரித்த திருத் தனங்களி ணின் றிழிந்த மதுரமாகிய பாலினை அமுதுசெய்து சப்தலோகங்களிலுமுள்ள ஆன்மாக்கள் உஜ்ஜீவிக்கும்படி குளிர்ந்த தமிழ்வேதமாகிய மழையைப் பொழிந்த சீகாழிநகரத்தில் திருவவதாரஞ் செய்த பெருமைபொருந்திய மேகமாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனரது சிவந்த திருவடிகளை நமது மனதகுள் எழுந்தருளியிருக்கச் செய்வாம். எ - று.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனரை முகிலெனக் கூறியதனால் - முகில் நீருண்ணுதலும், மழைபெய்தலும், ஏனையோர்பாற் பிரதியுதவி கருதாமலே பயன்றருதலும் கூறவேண்டி "முலைத்தீம்பான மார்ந்தி" எனவும், "தமிழ்மாரி பெய்த முகில்" எனவும், "ஏழ்நிலவரைப்பு முய்ய" எனவும் கூறினர்.

ஆளுடையபிள்ளையார் மூன்று வயதில் தந்தையாராகிய சிவபாதவிதயர் நீராடச்செல்லுகையில் தமக்குச் சிவபிரானது திருவருள்கூடத தந்தையாரைத் தொடர்ந்து அழுதுகொண்டு பின் சென்றார். அவவாறு பின்வரத்தொடர்ந்த பிள்ளையாரைச் சிவபாதவிதயர் கோபங்கொண்டார் போன்று விலக்கவும், பிள்ளையார் திருப்பதங்களை யுதறிக்கொண்டு திரும்பாதிருக்கக்கண்டு "உன் செய்கை இதுவாயில் வா" என்று உடன்கொண்டு சென்று ஆலயததுள்ளிருக்கும் தீர்த்தத்தைக் குறுகி, பிள்ளையாரைக் கரையிலே யிருக்கச்செய்து தாம தீர்த்ததிலிறங்கி நின்று சங்கற்ப அகமருஷண ஜுக்தபடனம் முதலியவைசெய்ய, பிள்ளையார் அச்செயல்களைப் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு ஸ்நானஞ்செய்கையில பிள்ளையார் தந்தையாரைக் காணமல், சிவபெருமானை வழிபட்ட பண்டைய வுணர்வு மூளக் கண்ணீர்ததும்பக் கண்களைக் கைகளாற்பிசைந்து உதடு துடிக்கும்படி, உலகினகணுள்ள ஆன்மான்களெல்லாம் பிழைக்கும்விதம் விம்மிஅழுதார். தமதுபண்டைய வுணர்ச்சி புலப்பட்டோ அன்றிப் பிள்ளைப்பருவத்தின் இயற்கையாலோ சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருத்தோணி ஆலயத்தின சிகரத்தைப பார்த்து "அம்மே அப்பா" எனறு அழைத் தழுதனர். அப்பொழுது தோணியப்பா அவருக்குத் திருவருள்செய்யத்திருவுளங்கொண்டு திருநிலைநாயகியம்மையாரோடும் இடபவாகனரூடராய்த் தீர்த்தக்கரைக் கெழுந்தருளி அம்மையாரைப்பார்த்து "உனது முலைப்பாலைப் பொன்வள்ளத்திற்கறந்து இவனுக்குஊட்டு" எனத் திருவருள் செய்தனர். உமாதேவியார் அவ்வாறேகறந்து அதனேடு சிவஞானத்தையுங் கலந்து பிள்ளையாரது கண்ணீரைத் துடைத்து வள்ளத்தைக் கையிற்கொடுதது ஊட்டி அழுகைநீக்கிஅநுக்கிரகஞ்செய்தருளினர். உலகுக்கெல்லாம் பரமபிதாமாதாக்களாகிய இவர்களால் ஆட்கொண்டபடியால் ஆளுடையபிள்ளையார் எனவும் தேவர் முனிவர் முதலிய யாவர்க்குங் கிடைத்தற்கரிய சிவஞானத்தோடு சம்பந்தப்பட்டதால் திருஞானசம்பந்தர் எனவும் பெயர்பெற்றனர். பிறகு சிவபாதவிதயர் தமது நியமங்களை முடித்துக் கரையேறி ஆளுடையபிள்ளையாரைப் பார்த்து "எச்சில் மயங்கும்படி உனக்குப் பால்கொடுத்தாரைக்காட்டு" என்று ஓர் சிறுகோல்கொண்டோச்ச, பிள்ளையார் உச்சியின்மேல் ஒரு திருக்கையைத் தூக்கித் திருவிரலாற் சுட்டி ஆகாயத்தில் உமாதேவியாரோடு இடபாரூடராய் நின்ற சிவபெருமானைக் காண்பித்து "தோடுடையசெவியன்" என்னும் முதலையுடைய திருப்பதிகமோதி

னர். பிறகு பற்பல திருப்பதிகங்களை பல சிவஸ்தலங்களிலோதி அநேக அற்புதங்களை இயற்றினர். இதனை,

“ அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி யருட்கருணை
யெழுகின்ற திருவுள்ளத் திறையவர்தா மெவ்வுலகுந்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் துணைமுலைகள்
பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன.

ஆரணமு முலகேழு மீன்றருளி யனைத்தினுக்குங்
காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரிணங்கு சிவபெருமா னருளுதலுஞ் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைபொன் வள்ளத்துக் கறந்தருளி.

எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
யுண்ணடிசி லெனவூட்ட வுமையம்மை யெதிர்நோக்குங்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலையங் கழுகைதீர்த் தங்கணரு ளருள்புரிந்தார்.

யாவர்க்குந் தந்தைதா யெனுமிவரிப் படியளித்தா
ராவதனு லாளுடைய பிள்ளையா ராயகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்
தாவிறனிச் சிவஞான சம்பந்த ராயினார்.

எச்சின்மயங் கிடவுனக்கீ திட்டாரைக் காட்டென்று
கைச்சிறிய தொருமாறு கொண்டோச்சக் காலெடுத்தே
யச்சிறிய பெருந்தகையா ரானந்தக் கண்டுளிபெய்
துச்சியினி லெடுத்தருளு மொருதிருக்கை விரற்சுட்டி.” — என வரும் பெரியபுராணச் செய்யுட்களா லுணர்க.

திருப்பிரமபுரத் தேவாரம்.

“ தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடி
காடுடையசுடலைப்பொடிபூசியென துள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே.” (௫)

**திருநாவுக்கரசுநாயனார்.**

வேறு.

கருவாழிக் கரைகாணுச் சாக்கியர்கள் கற்றூணிற் சிக்க யாத்துப்
பெருவாழி யிடைவீழ்ப்ப வதுபுணையாக் கரையேறிப் பெட்பி னுள்ள
முருகாமெய்ம் மயிர்பொடிப்ப வோங்கெயின்மூன் றெரித்தோனை யுவந்து
திருநாவுக் கரசனிரு சேவடிப்பூங் கமலமலர் சென்னிசேர்ப்பாம். [பாடுந்

(இ-ள்.) பிறவிக் கடலின் எல்லைகடந்து கரைகாண முடியாத சமணசமயிகள் கற்றூணில் சிக்குண்ணும்படிக் கட்டிப் பெரிய கடலினிடத்தில் விழச்செ

ய்ப அவர்கள் கட்டிவிடுத்த கற்றூணையே தெப்பமாகக் கொண்டு திருப்பாதிரிப புலியூர்க் கருகில் கரையேறி, ஆசையுடன மனமுருகி, சரீர முழுவதும் மயிர்க்குச் செறியும்படி, உயர்கின்ற மும்மதிலையுடைய திரிபுரத்தை எரித்தவராகிய சிவபெருமானை மனவிருப்போடு தமிழ்வேதமாகிய தேவாரத்தாற் றுதி செய்த திருநாவுக்கரசுநாயனரது இரண்டு சிவந்த திருவடிகளாகிய அழகுபொருந்திய தாமரைமலர்களைச் சிரமேற் கொள்வாம். எ - று.

அருள்வள்ளலாராகிய திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுனைப்பாடி நாட்டில் திருவாய்மூரில் புகழனார் செய்த பெருந்தவத்தால ஒரு சற்புத்திரராக அவதரித்தருளி இளமையிலேயே தாய் தந்தையர் விட்டுநீங்கப்பெற்றுத் தமது தமக்கையாருதவியால் வாழ்கின்றவர் முன்னைய வினைப்பயனால உத்தமோத்தமமாகிய சைவசமயத்தை விடுத்து ஆருகதமதப் பிரவேசஞ்செய்து தருமசேனர் என்னும் பட்டம் பெற்று வசித்திருந்தனர். இதனை அவரது தமக்கையாராகிய திலகவதியார் உணர்ந்து திருவதிகைவீரட்டானத்தெழுந்தருளிய சிவபிரானைப்பிரார்த்திக்க அப்பெருமான் அவருக்குச் சூலைநோய் கொடுத்து அதனமூலமாகத் திருவதிகைக்கு வருவித்து சூலைநோயை விலக்கி ஆட்கொண்டருளினர். இவ்வாறியதைப் பாடலிபுத்திரத்திலிருக்கும் சமணர் கேள்வியுற்று ஒன்றுகக்கூடி "தருமசேனர் செய்தி அரசன் அறிந்தால அவருக் குற்ற சூலைநோய் நமமால் நீக்கப்படாமை பற்றி நம்மீது மிகக் கோபங்கொண்டு தானுஞ் சைவனுவான்" என்று ஆலோசித்து ஓர் வஞ்சனையாகிய யுக்தியைக்கொண்டு பல்லவராசனை யடைந்து "அரசனே நமது மரபிலிருந்து தலைமைபெற்றுள்ள தருமசேனர் தமது தமக்கையாரோடு கூடிவாழ விரும்பிச் சூலைநோய்வந்ததாகக் காட்டி எங்களால் தீரவில்லையென்று மோசஞ்செய்து பழையபடி சைவராயினர் ஆதலால் அவரை வருவித்துத் தண்டிக்கவேண்டும்" என்று சொல்ல அரசன் "இம்முனிவர்காட்டுங் கொடியோனைப் பிடித்துவாருங்கள்" என ஏவலாளரையனுப்ப, அவர்கள் அரசன்கட்டளைப்படி நாயனரை யடைந்து "உம்மை எமதரசன் இப்போதே யழைத்துவரச்சொன்னான்" என்று சொல்ல நமது திருநாவுக்கரசுநாயனார் "நாமார்க்குங் குடியல்லோம்" என்னும் மறுமாற்றத்திருத்தாண்டகம்பாடி வரமாட்டோம் என மறுக்க, அதுகண்ட மந்திரிமாரவரை வணங்கிப் பிரார்த்திக்க, நாயனு ரதற்கிசைந்து பின்செல்ல அரசனறிந்து "இவ்வாறு நம்மையிகழ்ந்தோனை யாதுசெய்வோம்" எனக் கேட்க, சமணர்கள் "நீற்றறையி லிடல்வேண்டும்" என்றார்கள். அரசனவ்விதமே யாகுகவெனத் தண்டலாளர் சுடுகையாகிய நீற்றறையிலிட்டனர். நாயனார் "சிவனடியாருக்குந்தீமைவருமோ" வென்றெண்ணி "மாசில்வீணையு" மென்னுந் திருக்குறுந்தொகையைப் பாடிக் குளிர்ச்சியாக விருந்தார். ஏழுநாள் நீற்றறையைத் திறந்துபார்க்கையில் நன்குவிளங்கக் கண்டு "இன்னும் யாது செய்வோம்" எனறரசன்கேட்க "நஞ்சூட்டுவதேதகும்" என்றனர். அவ்வாறே யாகுகவென நஞ்சுகலந்த பாற்சோறிட, அதனை யுண்டு முயிர்வாழ்ந்திருக்க, மேலும் யாதுசெய்வோமென "உமது யானைமுன்விடுவது தகும்" என, அரசன் "அவ்விதமுஞ் செய்க" என்றனன். சமணர்கள் அரசன்யானையை நாயனார்முன் நிறுத்த, அவர் சிறிதுமஞ்சாமல் "சுண்ணவெண் சந்தனச்சாந்தும்" என்னும் பதிகம்பாடினார். யானை நாய

னை வலம்வந்து வணங்கிப் போயிற்று. அவர் இதுறிலெல்லா மிறவாதிருத்தல் கண்ட பல்லவராசன் சமணர் விருப்பின்படியே "கல்லோடுசேர்த்துக் கயிற்றாற் கட்டிப் படகின்மேற்கொண்டுபோய்ச் சமுத்திரத்தில் தள்ளிவிடுங்கள்" என்றனன். அவர்க ளவ்வாறே கடலிற்றள்ளிவிட திருநாவுக்கரசுநாயனார் "சொற்றுணை வேதியன்" எனும் நமச்சிவாயத் திருப்பதிகமோதியருள சிவபெருமான் றிருவருளாற் கல்லே தெப்பமாகமிதந்தது கயிறு அறுந்தது. வருணன் கல்லையே சிவிகையாகத் தாங்கிக்கொண்டு திருப்பாதிரிப்புலியூரின் பக்கத்தில்விடக் கரையேறினார். அதுகண்ட பல்லவராஜனும் சைவ னாயினன்.

மறுமாற்றத் திருத்தாண்டகம்.

"நாமார்க்குங்குடியல்லோநமனையஞ்சோநரகத்திலிடர்ப்படோநடலையில்லோம
ஏமாப்போம்பிணியறியோமபணிவோமல்லோமின்பமேயெந்நாளுந்துன்பமில்லை
தாமார்க்குங்குடியல்லாததன்மையானசங்கரனற்சங்கவெண்குழையோர்காதிற
கோமாற்கேநாமென்றுமீளாவாளாய்க்கொய்ம்மலர்ச்சேவடியிணையேகுறுகினோ
[மே."

தனிக்குறுந்தொகை.

"மாசில்வீணையுமாலைமதியமும்
வீசுதென்றலும்வீங்கிளவேனிலும
மூசுவண்டறைபொய்கையும்போன்றதே
ஈசனெந்தையிணையடிநீழலே."

பண் - காந்தாரம.

"சுண்ணவெண்சந்தனச்சாந்துஞ்சுடர்த்திங்கட்சூளாமணியும்
வண்ணவுரிவையுடையும்வளரும்பவளநிறமும்
அண்ணலரண்முரணேறுமகலம்வளாயவரவும்
திண்ணெனகெடிலப்புனலு முடையாரொருவர்தமர்நாம்
மஞ்சுவதியாதொன்றுமில்லையஞ்சவருவதுமில்லை."

நமச்சிவாயத் திருப்பதிகம்.

"சொற்றுணைவேதியன்சோதிவானவன்
பொற்றுணைதிருந்தடிபொருந்தக்கைதொழக்
கற்றுணைப்பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும்
நற்றுணையாவதுநமச்சிவாயவே." — எனுந் திருப்பாசுரங்களை முதலிலுடைய திருப்பதிகங்கள். (எ)

சுந்தரமூர்த்திநாயனார்.

வேறு.

கதமெழரி நேமி தூண்டிக் கராங்கவா குரவ னீன்ற
மதலையை யழைத்த செங்கண் மாலென வருந்து ஞம
லதிர்கட லமிர்த மன்ன வருந்தமிழ்ப் பதிகம் பாடி
முதலைவாய்ப் பிள்ளை தந்த முதல்வனை வழுத்தல் செய்வாம்.

(இ-ள்) வேகத்தோடு செல்லும் பிரகாசம் பொருந்திய இரதத்தைச் செலுத்தி முதலைவிழுங்கிய தமதாசிரியர் புதல்வனை வரவழைத்து ஆசிரியனுக்குக் கொடுத்த செவ்விய கண்களையுடைய விஷ்ணுமூர்த்தியைப்போல வருத்தமடையாமல் ஒலிக்கின்ற திருப்பாற்கடலி லுதித்த அமுதத்தை யொத்த அரிய தமிழ் வேதமாகிய திருப்பதிகமொன் றோதியருளி முதலைவிழுங்கிய பிள்ளையை வருந்தி நின்ற தாய் தந்தையர்க்கு அதன் வாய்வழி வருவித்துக் கொடுத்த முதல்வராகிய சுந்தரமூர்த்திநாயனாரைத் துதிப்போம். எ - று.

"கராங்கவர் குரவ னீன்ற மதலையை யழைத்த செங்கண்மால்"—என்பதன் விவரம்.

அவந்திதேசத்திலுள்ள சாந்தீவினி யெனபவரைக் கிருஷ்ணனும் பலராமனும் வித்தியாகுருவாகக்கொண்டு வேதாகமங்களைக் கற்றுணர்ந்தனர் பிறகு கண்ணன் ஆசிரியரை வணங்கி "உமக்கு வேண்டிய குருகாணிக்கை யாது" எனக் கேட்க, அவர் தமது பத்தினியாரைக் கேட்டனர். அவர் மனைவி "சிறிது காலத்திற்குமுன் சமுத்திரஸ்நானஞ் செய்கையில் அலையில் அகப்பட் டிறந்த நமது புத்திரனைக்கேளுங்கள்" என்று சொல்ல, அவ்வாறே கண்ணனைக்கேட்டனர். உடனே கண்ணன தன அண்ணனுடன தேரோறி வருணலோகம் அடைய, அது கண்ட வருணன் கண்ணனை வணங்கி "வந்தகாரணம்யாதென" கண்ணன் "கட லாடுகையி லிறந்த எம தாசிரியர் புதல்வனைத தருக" என, வருணன் "கடலில் வசிக்கும் பாஞ்சசனன் என்னு மவுணன விழுங்கிவிட்டான்" எனக்கேட்ட கண்ணன கடலிற்பாய்ந்து அங்கு துயிலும் அசுரனது நெஞ்சைப்பிளந்து அதனுள்ளிருந்த சங்கைக் கைக்கொண்டு தேரோறி இயமனுலகடைந்து சங்கைப் பூரித்தனன். அவ வோசைகேட்ட இயமன் விரைந்தோடிவந்து வணங்கி இங்குவந்த காரணம் யாதெனக் கேட்டுணர்ந்து புதல்வனைத்தரக் கண்ணன் அப்புதல்வனை ஆசியர்முன் கொணர்ந்து விடுத்தனன். என்பது. இதனை,

பாகவதம்-குரவன் மைந்தற் கொணர்ந்த அத்தியாயம்.

"கோடற் கிவர்பா னுரித்தென்னெனக் கோதை மாலை
சூடுற்ற மன்றற் குழலாளொடு சூழ வன்னாள்
பாடுற்ற வேலைப் பரப்பின்றலைப் பட்டு முன்னம்
வீடுற்ற மைந்தன் றனைக்கோடல் விரும்பு கென்றாள்.

வஞ்சம் படைத்து மறிவெண்டிரை வேலை யூடு
துஞ்சுந் திறல்வா ளவுணன் றனைச் சூழ்ந்து பற்றி
நெஞ்சம் பிளக்து நிலவுக்கதிர்ச் சங்கு கொண்டான்
கஞ்சங் கடுக்குங் கருணைத்தடங் கண்ணன் மாதோ.

மின்னும் பிறைவா ளெயிற்றந்தகன் வீற்றி ருக்கும்
தென்னம் புலத்திற் கதிர்மாமணித் தேர்க டாவிப்
பின்னக் கிரையிற் கவர்சக்கு பிறங்க யாவும்
முன்னம் படைத்த முகினின்று முழக்கல் செய்தான்,

வெருவுற்ற கூற்றம் வினைவேரொடெதிர் வந்தி றைஞ்சி
வரவுற்ற தென்கொ லெனவேந்தலும் வந்த வண்ணம்
தெரிவுறற தாக்கிச் சிறுவற்றர வொல்லை மீளாக்
குரவற் பணிந்து குமரனறவினைக் கொள்க வென்றான்."—எனவும் வருவன வற்றாற் காண்க.

முதலைவாய்ப் பிள்ளை தந்த முதல்வன். என்பதன் விவரம்.

திருவாரூரில் பரவைநாச்சியார திருமாளிகையிலிருந்து சுந்தரமூர்த்திநாயனார் மலைநா டடைந்து சேரமான்பெருமாணாயனாரைக் காணவேண்டுமென்னும் விருப்போடுபுறப்பட்டு வழியிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டுவருகையில், கொங்கதேசத்தில் திருப்புக்கொளியூ ரென்னுஞ் சிவஸ்தலத்தை யடைந்தனர். அவ்வூர்ப்பிராமணவீதியாகச்செல்லுகையி லெதிரெதிராகவுள்ள இரண்டு வீடுகளில் ஒன்றில் மங்கலவோசையும் மற்றொன்றில் அழுகுரலுங்கேட்டு, அங்குள்ள வேதியரை நோக்கி "இஃதென்ன" வெனக்கேட்க அதற் கவ்வந்தணர் வணங்கி "இவ்விரண்டு வீடுகளினு முள்ள ஐந்தாண் டுடைய பார்ப்பனச்சிறுவர் ஓர் மடுவில் நீராடுகையி லொருவனை முதலை விழுங்கியது. பிழைத்துவந்த சிறுவனுக் கிவ்வீட்டி லுபநயனமாகின்றது. இறந்துபோனவன சுற்றத்தவ ரவ்வீட்டி லழுகின்றனர்" என்று சொல்லக்கேட்ட எமது சுந்தரமூர்த்திநாயனர் திருவுளமிரங்கப் புதல்வனையிழந்த பிராமணனும் மனைவியும் வணங்கிநிற்ப "உமது புத்திரனையா முதலையுண்டது?" எனக் கேட்க, அதற் கவர்கள் "அஃது முன்னடந்தது. தேவரீரைக் காண நெடுநாளாக விரும்பிய எம திச்சை வீணாகாமல் தெரிசனமாயிற்று" என மகிழ்கொண்டிருப்பதைக்கண்ட எமது நாயனர் "இவர்கள் புதல்வனையிழந்ததுமெண்ணாது எமது வருகையைக் களித்தன ராதலின இவர் புத்திரனை யெழுப்பிக்கொடுத்துப் பினனரோ அவிநாசியப்பரை வணங்குவோம்" என்று அவர்களை நோக்கி "உமது பிள்ளையை முதலை விழுங்கிய மடுவெங்கே" என அவர்கள் காண்பித்தனர். அதன் கரைமேலிருந்து ஓர் திருபபதிகமோதித் துதிக்க யமன் முதலைவாயிற்பட்டதுமுத லதுகாறும் கழிந்த வயதுகளின் வளர்ச்சியு முநிரந்திருக்கும்படி அப்பிள்ளையி னுடலை முதலைவயிற்றிற் புகுத்த முதலை கரையி லுமிழ்ந்தது. அப்பிள்ளையின் தாய்தந்தைமுதலானவர்கள் வணங்கினர். சுந்தரமூர்த்திநாயனர் அச்சிறுவனுக் குடனே யுபநயனஞ் செய்வித்தனர். என்பது. இதனை,

பெரியபுராணம் - வெள்ளையானைச்சருக்கம்.

"மறையோர் வாழு மப்பதியின் மாடவீதி மருங்கணைவார்
நிறையுஞ் செல்வத் தெதிர்மனைக ளிரண்டி னிகழ்மங் கலவியங்க
ளறையு மொலியொன் றினியொன்றி லழுகை யொலிவந் தெழுதலுமங்
குறையு மறையோர் களையிரண்டு முடனே நிகழ்வ தென்னென்றார்.

அந்த ணாளர் வணங்கியரும் புதல்வ ரிருவ ராயாண்டு
வந்த பிராயத் தினர்குளித்த மடுவின் முதலை யொருமகவை
முந்த விழுங்கப் பிழைத்தவனை முந்நூ லணியுங் கலியாண
மிந்த மனைமற் றந்தமனை யிழந்தா ரழுகை யென்றுரைத்தார்.

மைந்தன் றன்னை யிழந்ததுயர் மறந்து நான்வந் தணைந்ததற்கே
சிந்தை மகிழ்ந்தார் மறையோனு மனைவி தானுஞ் சிறுவனையா
னந்த முதலை வாய்நின்று மழைத்துக் கொடுத்தே யவிநாசி
யெந்தை பெருமான் கழல்பணிவே னென்றா சென்றா ரிடர்களைவார்.

உரைப்பா ருரையென றெடுத்ததிருப் பாட்டு முடியா முன்னுயர்ந்த
வரைப்பான் மையினீட் டம்புயத்து மறலி மைந்த னுயிர்கொணர்ந்து
திரைப்பாய் புனலின் முதலைவயிற் றுடலிற் சென்ற வாண்டுகளுந்
தரைப்பால் வளர்ந்த தெனநிரம்ப முதலைவாயிற் றருவித்தான்."—என்பது
ஞனு முணர்க.

தேவாரம் பண் குறிஞ்சி.

"உரைப்பாருரையுகந்துள்கவல்லார்தங்களுச்சியா
யரைக்காடரவாவாதியுமந்தமுமாயினுப்
புரைக்காடுசோலைப்புக்கொளியூரவிநாசியே
கரைக்கான்முதலையைப்பிள்ளைதரச்சொல்லுகாலனையே." (அ)

**மாணிக்கவாசகசுவாமிகள்.**

வேறு.

கொழுதிபினவரியளிகள்கூட்டுண்ணுங்கொன்றையந்தார்க்குழகன்றாளிற்
பழுதறுசொற்பாமாலைபுனைந்தேத்தியெறிதிரைநீர்ப்பரவையாடை
முழுதுலகுமதிக்கவிகைதனிநிழற்றியொருசெங்கோன்முறைநடாத்தும்
வழுதிமுனம்பரியழைத்தவாதவூரிறைவனடிவழுத்தல்செய்வாம்.

(இ - ள்.) இறகுகள் பொருந்திய கூட்டமாகிய வண்டுகள் கொத்தித் தேனைக் கொள்ளைகொண்டுண்ணும் அழகியகொன்றைமாலையையணிந்த சிவபெருமானது திருவடிகளில் குற்றமற்ற நால்வகைச் சொற்களாலாகிய பாமாலையைச் சாற்றித் துதித்து, மோதுகின்ற அலைகளையுடைய நீர்மயமாகிய கடல்சூழ்ந்த பூமி முழுதும் சந்திரவட்டக்குடை நிழல்செய்யத் தனதொப்பற்ற செங்கோலை மநுமுறை தவறாது நடத்திய அரிமர்த்தனபாண்டியமகாராஜனை முன்பு சிவபிரானது திருவருளால் தாம்கொண்டபொருளுக்கேற்ப குதிரைகளை வரவழைத்துக்கொடுத்த திருவாதவூரில் திருவவதாரஞ்செய்த தலைவராகிய மாணிக்கவாசகசுவாமிகளது திருவடிகளைத் துதிப்பாம். எ - று.

"பழுதறுசொற்பாமாலை" என்றது, பூமாலை தொடுப்போர் பலவகை மலர்களைக் கொள்ளுவது போலப் பாமாலை தொடுப்போர் பலவகைச் சொற்களைக் கொண்டு தொடுப்பதாலும்,பழுதாகா மலர்களே எம்பெருமானுக் குதவுமாப்போல குற்றமற்ற சொற்களே பரமபதியின் சம்பந்தமாகிய பாமாலைக் குதவுமென்பதாலும், என்றுணர்க."

உலகி லுள்ளோ ரெல்லாம் தன் கட்டளைக் கடங்கி யிருத்தலால் "உலகமெலாம் பொதுநீக்கி யொருகோலோச்சி" என இந் நூலாசிரியர்தாமே வேறோரமையத்துக் கூறியதுபோல ஈண்டும் "கவிகை தனிநிழற்றி யொருசெங்கோன் முறைநடாத்தும் வழுதி" என்றார்.

ஆளுடையவடிகள் பாண்டியநாட்டில் திருவாதவூரில் வேதியருள் ஆமாத்தியர்குலத்தில் அவதரித்துப் பதினாறுவயதில் வேதாகமங்கள் முழுதுணர்ந்திருந்தனர். இவரது வல்லமையை **அரிமர்த்தனபாண்டியன்** கேள்வியுற்று வரவழைத்து அமைச்சுரிமையும் **தென்னவன்பிரமராயன்** எனனும் பெயருங் கொடுத்து அதிக வல்லவராக விருத்தலால அனபுகொள்ள டிருந்தனன. ஆளுடையவடிகளாகிய திருவாதவூரர் அரசகாரியத்தில தொழிலும் எம்பெருமான் திருவடிக்கண் அறிவுமாகத் தனக்கோர் ஞானகுருவைத் தேடிக்கொண்டிருந்தனர். அப்படியிருக்கையில் அரசன கீழ்க்கடற்கரையில குதிரைகொள்ளும்படி கட்டளையிட, அளவற்ற பொருளை யெடுத்துக்கொண்டு சென்றனர். சிவபெருமான் இவரது பக்குவநிலையை நோக்கி ஆசிரியத்திருக்கோலந்தாங்கி, திருப்பெருந்துறையிற் குருந்தமரநீழலி லெழுந்தருளி வாதவூரையர் வருகைநோக்கி யிருந்தனர். ஐயர் அத்திருப்பதியைச் சமீபிக்கையிலேயே அன்பும் ஆசையும் மிகவும அதிகரிக்கச்சென்று ஆசிரியர் பெருமானைக்கண்டு ஆனந்தமெனனும கடலிற்படிந்து பரவசமாகி "எம்பெருமானே! இவ வுடல் பொருள் ஆவி மூன்றனையுந் திருவுள்ளம்பற்றுக" என்று யாசிக்கக் கருணாநிதியாகிய சிவபெருமான அருட்கணகளாற்பார்த்து அஸ்த மஸ்தகசையோகஞ் செய்து ஐந்தெழுத்த துண்மையை உபதேசித்தனர். அது முதல் அமைச்சர்பெருமானும் குருராயனைப் பாமாலைகளால் துதிசெய்ய, பெருமான் "**மாணிக்கவாசக**! இங்கிருப்பீர" எனறு திருவாய்மலர்ந்தருளித் திருக்கூட்டத்துடன அந்தர்த்தானமாயினர். மாணிக்கவாசகர் பிரிவாற்றாது துன்புற்றுக்கட்டளை கடவாது அங்கேயே பெருமானுக்கு ஆலயம் அடியவருக்குணவு முதலிய திருப்பணி செய்துகொண்டிருந்தனர். அது கேள்விப்பட்ட அரசன் மந்திரர் பெருமானுக்கு ஓலையனுப்ப அவர் பெருமான் சந்நிதியிற்சென்று அரசோலையின்கருத்தை விண்ணப்பஞ்செய்து "ஆவணிமூலத்திற் பரித்திரளவரும். நீபோம்" என றுண்டாகிய உத்தரவைக்கொண்டு மதுரையையடைந்து மன்னவனைக்கண்டு செய்தி சொல்லித் திருவாலவுடையாரைவணங்கியிருந்தனர். ஆவணிமூலமாகியும் குதிரைகள்வந்து சேராமையால், அரசனகோபித்துத் தண்டலாளரைப்பார்த்து "இவன் நமது பொருளைக் கொண்டுபோய்க் குதிரை கொடாமையால் தண்டித்து அவற்றை வாஙகுங்கள்" எனறு சொல்ல, அவர்கள சிறிது மஞ்சாமல் செய்த தண்டனைகளெல்லாம திருவாதவூரர சிவத்தியானபரராக விருப்பதால் அவருக்கு அதிக முறுத்தவில்லை. மாணிக்கவாசகர் பெருமானை யிரந்து வேண்டப் பெருமான் திருவுள்ள மிரங்கி, கணநாதர்களைப்பரிசனங்களாக்கிக் காட்டில் வசிக்கும் நரித்திரளைப் பரித்திரளாக்கித் தாமே தலைவராக எழுந்தருளினிர். பாண்டியன் குதிரைகளின் பெருக்கத்தையும் லட்சணத்தையும் கண்டு வெகுமானமுதலியவை செய் தனுப்பி விட்டு மாணிக்கவாசகரையும் உபசரித்தனன். என்பது. இதனை,

திருவிளையாடற்புராணம் - நரிபரியாக்கியபடலம்.

"என்னிவன் பரிமாக் கொண்ட தென்றவை வருவ தென்றுத்
தனனெதிர் நின்ற வஞ்சத் தறுகணர் சிலரை நோக்கிக்
கொனனுமிக் கள்வன் றன்னைக் கொண்டுபோய்த் தண்டஞ் செய்தெம்
பொன்னெலா மறுவு கொண்டு வாங்குமின் போமி னென்றான்.

பொன்னெடுஞ் சயிலங் கோட்டிப் புரம்பொடி படுத்த வீரா
சொன்னெடுந் தாளை யுள்கி நின்றனர் சுமந்த பார
மங்கெடுந் தகையார் தாங்கி யாற்றினு ரடைந்த வன்பா
தன்னெடும் பாரமெல்லாந் தாங்குவா ரவரோ யனறே.

வண்டுழு தாரி னுன்றன் மரபின்மன் னவரு முன்னுட்
கண்டறி யாத காட்சிக் கவனவாம் பரியை நோக்கி
யண்டர்நா யகன்போ னூறு மாயிரங் கண்பெற் றூறு
முண்டமை யாவென றுள்ளக் குறிப்பொடு முவகை பூத்தான.

கொத்தவிழ்தார் நறுஞ்சாந்தங் கொண்டுசெழும் புகைதீபங் கொடுத்துப் பூசை
பத்திமையாற் செய்திறைஞ்சி யெதிர்நிற்ப வாலவாய்ப் பரனை நோக்கிக்
கைத்தலந்தஞ் சிரமுகிழ்த்து வாழியெனப் பரிகொடுத்தான் கயிறு மாறி
முத்தொழிலின் மூவராய் மூவர்க்குந் தெரியாத முக்கண் மூர்த்தி.'' — எனவும்
வருவனவற்று னுணர்க. (கூ)

அறுபத்துமூவர்.

முறுவற்றண் கதிர்மதியு முரிபுருவக் குனிசிலையு மூசி வண்டு
கறிகற்கு மலர்க்குழலுங் குழைதடவுங் கருநதடங்கட் கயலுந் தாங்கு
மறுவற்ற மதிமுகத்து மானிடத்தா மழுவலத்தர் மலர்த்தாள் சேர்ந்த
அறுபத்து மூவர்மல ரடியிணைக ளெமதுசிரத் தணிதல செய்வாம்.

(இ - ள்.) தந்தபந்தியெனனும் குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனையும், ஒடியத்தகும் புருவமாகிய வளைந்தவில்லையும்,வண்டுகள மொய்த்து கறித்தலைக்கற்கின்ற மலர்மாலையணிந்த கூந்தலையும், குண்டலங்களைத் தடவுகினற கரிய விசாலித்த கண்ணுகிய சேற்கெண்டையையும்,தமது திருமேனியிற் பெறற களங்கமற்ற பூரணச்சந்திரன்போலும் முகத்தைபுடைய உமாதேவியாரைத் தமது இடதுபாகத்திலுடையவரும், மழுப்படையை வலதுபாகத்திலேந்தியவரும ஆகிய சிவபெருமானது தாமரைமலரையொத்த திருவடிகளையடைநத அறுபத்துமூனறு நாயனமார்களது மலர்போன்ற உபயதிருவடிகளை எமது சிரசின்மேல் அணிநதுகொள்வோம். எ - று.

கறி என்பது முதனிலைத் தொழிற்பெயர். (கo)

பரமாசாரியர்.

திருக்கிளர்வெண் பிறைக்கொழுந்துஞ் செஞ்சடையு மறிமானுந் திண்டோ ளெட்டு
முருக்கிளர்வெம் புலியதளுங் கரநதுமா னுடவடிவி னுலகிற் போநது
மருட்கிடனு மெனைப்பிணித்த வல்வினையின் றொடரானைத்து மாய நூறி
யருட்கடைக்க ணளித்தாண்ட சுவாமிதே வன்றிருத்தா ளகத்துள் வைப்பாம்.

(இ-ள்.) சிவஞானச் செல்வமிருந்த வெண்மையாகிய இளம்பிறைச் சந்திரனையும், செவ்விய சடையையும், மறியாகிய மானையும், வலிமையிருந்த எட்டுத திருப்புயங்களையும், நிறம்விளங்கும் வெவ்விய புலித்தோலாடையையும் ஒளித்து, மானுடத் திருமேனியோடு உலகின்கண் எழுந்தருளிவந்து, உன்மத்தத்திற் கிடமாகிய என்னைக்கட்டியிருந்த வலிய இருவினைத்தொடக்குமுற்றுங் கெடும்படியொழித்து, கிருபை பொருந்தும் கடைக்கண் பார்வையைத் தந்து அடிமைகொண்டருளிய சுவாமிதேவ ரென்னும் திருப்பெயர்வகித்த எமது பரமாசாரியரது திருப்பதங்களை மனத்து ளிருத்துவாம். எ - று.

ஆசிரியரைச் சிவபெருமானாகவே கொள்ளவேண்டுதலின் அப்பெருமானே தமது திருவுருவத்தை முற்றும் மறைத்து மனிதவடிவுதாங்கி எழுந்தருளினர் எனபது தோனற "திருக்கிளர்வெண் பிறைக்கொழுந்துஞ் செஞ்சடையு மறிமானுந் திண்டோ ளெட்டு - முருக்கிளர்வெம் புலியதளுங் கரந்துமா னுடவடிவி னுலகிற் போந்து" எனவும் "அன்னைதன் சிசுவையைய னுமைமீன் பறவைபோலத், தன்னகங் கருதிநோக்கித் தடவிசந் நிதியிருத்தி" என்று கூறிய கைவல்லியநவநீதத்தின்படி ஞானாசிரியன் தன்சீடன் தன்னைப்போ லாகுகவென ஆமைபோனறு நினைத்தும், "மீன்போற் செவ்வியுறநோக்கி" என்னும் பரஞ்சோதி முனிவர் வாக்கின்படி மீன்போன்று பார்த்தும், பறவைபோன்று அஸ்தமஸ்தகயோகஞ்செய்தும் இருவினைத்தொடக்கை யொழித் துபதேசித்துக் கிருபைசெய்தல் முறையாதலின "வல்வினையின் றொடரனைத்து மாயநூறி, யருட்கடைக்கணளித்தாண்ட சுவாமிதேவன்" எனவுங் கூறினர்.

ஆமை நினைத்தும், மீன் பார்த்தும், பறவைகள் அடைகாத்தும் தமது முட்டைகளைப் பொறித்தல் இயற்கை. (கக)

**சிவனடியார்கள்.**

அவிராழிச்சுடர்ப்படைகொண்டுலகளிக்குநெடுமாலுமயனுங்காணுத்
துவர்வாய்மெல்லியல்பாகன்றிருவருள்பூணடிரங்குதிரைசுருட்டுநதெண்ணீ
ருவராழிசூழ்கிடந்தவிருநிலத்திற்பாதலத்திலும்பாகாட்டிற் [ணீ
சிவவேடநதரிததவாமறறெவருளரங்கவர்மலாத்தாள்சென்னிசேர்ப்பாம்.

(இ ள்) ஒளிவீசுஞ் சுதரிசனம் என்னும் கிரணம்பொருந்திய சக்கராயுதத்தைக்கொண்டு உலகிலுள்ள பிராணிகளையெல்லாம் இரக்ஷிக்கும் திரிவிக்கிரமாவதாரங்கொண்ட விஷ்ணுமூர்த்தியும், பிரமதேவனும் காணுதற்கரிய பவளம்போலும் வாயையும் மெலலிய சாயலையுமுடைய உமாதேவியாரை அர்த்தபாகமாகக்கொண்ட சிவபெருமானது திருவருள்பெற்று,ஒலிக்கின்ற அலைகள் வீசப்பெற்ற தெள்ளிய நீரமயமாகிய உவர்க்கடலாற் சூழபபெற்ற பெரிய பூமியிலும் பாதலத்திலும் சிவவேடத்தை மேற்கொண்டவர் யாவருண்டோ அவரது மலர்போலும் பாதங்களை எமது முடிக்கு அணியாகச் சேர்ப்போம். எ - று.

விஷ்ணு சிவனிடம் சக்கராயுதம் பெற்ற விவரம்.

பூர்வம் விஷ்ணுமூர்த்தியானவர் **க்ஷுபன்** என்னும் அரசன் காரணமாகத் **ததீசி** முனிவரை யெதிர்த்துப் போர்புரிந்து அவர்மேல் தமது சக்கரத்தைச் செலு

த்த அது ததீசிமுனிவரது வச்சிரயாக்கையில தாக்கி வாய் மடிந்தது. அதனைக் கண்ட விஷ்ணு, அமரனா நோக்கி "இதுபோலும் வேறு சக்கரம் இனிப் பெறும் வகை யாது" என்றுகூறி வருந்த, தேவர்கள் 'சிவபெருமான் சலந்தர னென்னும் அசுரனைக் கொன்ற சக்கராயுதம வைத்திருக்கின்றனர' என்று சொல்லக் களி கூர்ந்து சிவபெருமானைத் தினம் ஆயிரம் தாமரைமலர்களா லர்ச்சித்துவர, சிவபெருமான விஷ்ணுவினது பத்தி முதிர்ச்சியைப் பரிசோதிக்கும்படி மலரொன்றை மறைத்தனர். விஷ்ணு அதனை யுணராராகிப் பவன் என்பது முதலாக வுள்ள ஆயிரம திருப்பெயர்களையுமோதிக்கொண்டு வழக்கமபோல் ஒவ்வொரு திருப்பெயருக் கொவ்வொரு மலரா லர்ச்சித்துவந்து கடைசியில ஒரு மலர் குறையக்கண்டு இது எம்பெருமான் செயலென் றுணர்ந்து ஓர் கண்ணைப பிடுங்கி மலராகப் பாவித்து அருச்சனைசெய்தனர். எமது பெருமான் அவ ரன்பிற் கிரஙகி மீண்டுங் கண் பெறுமாறு கிருபைசெய்து கமலக்கண்ணனென்னும் பெயரையும் தனகையிலிருந்த சுதரிசனமெனனும் சக்கரத்தையுங் கொடுத்தனர். என்பது. இதனை,

காஞ்சிப்புராணம் - திருமாற்பேற்றுப்படலம்.

"பன்னுமொரு திருப்பெயர்க்கு நறுங்கமலங் காணாமை பதைத்து நோக்கி
யென்னினிமேற் செயலென்று தெரிந்துணர்ந்து தனதுவிழி யிடந்து பெம்மான்
கொன்மலர்த்தாண்மிசைச்சாத்திக் களிகூர்ந்தானுறப்பினையுங் கொடுப்பதலலான்
மென்மையுறத் தாங்கொண்ட விரதத்தை விடுவர்களோ கொள்கை மேலோர்.
ஆங்கவனை யெதிர்நோக்கி நின்பூசைக் ககமகிழ்ந்தே முனக்கின் றொன்று
தேங்கமல விழியளித்தேம் பதுமாக்க னெனும்பெயரிற றிகழ்வா யிவ்வூர்
பாங்குபெறு திருமாற்பே றெனப்பொலிக வெனறருளிப் பானு கோடி
தாங்குகதிர்ச் சுதரிசனப் பெயராழித் தனிப்படையு முதவி யெங்கோன்."

கூர்மபுராணம் - மாயோன் நேமிபெற்ற அத்தியாயம்.

"வையம் பொதிந்த செங்கனிவாய் மாயோ னன்புக் குண்மகிழ்வுற்
றையன் கையாற் புறநீவி யடியிற புனைந்த மலர்க்கண்ணு
மெய்த நல்கிச் சுதரிசன மென்னுஞ் சுடரா ழியுமீந்து
செய்ய கமலக் கண்ணனெனும் பெயருஞ் சிறபபி னொடுமளித்தான."

திருவாய்மொழி.

"செக்கர்வா னச்சடையான் சேவடியின் முன்னுளில்
மெய்க்கணிட்டுச் சக்கரநீ பெற்றவினை யாட்டேயோ
மைக்கண்மா மேனியனே வாளரக்கர் கோளரியே
யெக்கலம் புடைசூழ் திருக்குறுங் குடியானே." — என வருவனவற்றானுணர்க.

சிவவேடந் தரித்தவர் என்பது விபூதி, உருத்திராக்கம், கல்லாடை முதலியவை யணிந்துள்ளாரை.—இதனை,

காஞ்சிப்புராணம் - இரணியசப்படலம்.

"பத்தர்மொழிப்பகுதிசேவையினைக்கூறும்பரிசாலீசன்
பத்தரவர்க்கினியசேவகனேயாதலினிப்பான்மைபூண்ட

பத்தர்படிமவொழுக்கங்குலனென்றும்பார்க்கவேண்டா
பத்தனெனப்படுவோர்கண்டிகைபுநீறும்பரித்தமெய்யோர்." — எனக் கூறி யதா னுணர்க. (கஉ)

வேறு.

அறந்தவா தொழுகும வைதிக சைவ நெறியினி லகனில மருங்கிற் [தின்
பிறந்துளோர் பிறவா நின்றுளோா பிறப்போா பெய்கழற் றுமரைப் போ
மறந்திடா தன்பு பூணடுளோர் யாவ ராயினு முவந்துமற் றவர்தஞ்
சிறந்தபூங் கமல மருட்டிவீ டளிக்குஞ் சேவடி சென்னியிற் சோபபாம்.

(இ-ள்.) இடமகன்ற நிலவுலகத்தில் நீதிதவறாமல் நடக்கும் வைதிகசைவ மார்க்கத்தில் முனனமே பிறந்துள்ளவாகளும், இப்போது பிறக்கின்றவர்களும், இனிப் பிறப்பவர்களும் ஆனவரது வீரக்கழலணிந்த பாதமாகிய தாமரைமலர்களில் எக்காலத்தும் நீஙகாது பேரன்புற்றவர்கள், குலம் நடக்கைமுதலியவற்று லெததன் மையராயினும, அவர்களது சிறப்புத் தங்கிய அழகிய தாமரைமலர்களை மருட்டிப் பேரின்பவீடாகிய மோட்சத்தைக் கொடுக்கும் சிவந்த திருவடிகளைச் சிரசின்மேற் சேர்த்துக் கொள்ளுவாம். எ - று.

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம.

"சங்கநிதிபதுமநிதியிரண்டுந்தந்துதரணியொடுவானாளத்தருவரேனு
மங்குவாரவர்செல்வமதிப்போமல்லோமாதேவர்க்கேகாந்தரல்லராகி [னுங்
லஙகமெலாங்குறைந்தொழுகுதொழுநோயாராயாவுரித்துத்தின் றுழலும்புலையரோ
கங்கைவார்சடைக்கணிந்தார்க்கன்பராகிலவர்கண்டீாநாமவணஙகுங்கடவுளாரே."

காஞ்சிப்புராணம்.

"மறைநான்கும் பயின்றொழுகி யிட்டிகளும் பலவியற்றி மல்லன் ஞாலத்
திறவாத புகழ்படைத்து மீசனிடத் தனபிலனா யெண்ணு துள்ளம
புறமோதிக் கொலைபயின்று மதுமாந்துங் கொடும்பாவப் புலைய றேனு
மறவாணன றிருவடிக்கீ ழன்பினோ லவர்நம்மை யடிமை கொள்வார்."

எனவுங் கூறப்பட்டிருப்பதால் "யாவராயினும்" என்று குலம் ஒழுக்க முதலியவை நோக்காது கூறினர். (கந)

வாழ்த்து.

வேறு.

அருமறை முனிவர் வாழ்க வானினம் வாழ்க தெண்ணீர்
விரிதிரை யுலகங் காக்கும் விறலகெழு வேந்தன் வாழ்க
மருவிய திங்க டோறு மழைவளஞ் சுரகக வெங்கோன்
பொருவற மொழிந்த தொன் னூல பொற்பொடும் பொலிக மாதோ.

(இ - ள்.) அருமையாகிய வேதங்களையுணர்ந்த அநதணர் வாழக்கடவர். பசுக்கூட்டங்கள் வாழக்கடவன. விரிநத அலைகளையுடைய தெளிந்த நீர்மயமாகிய கடல்சூழ்ந்த பூமியைத் தனது ஆக்ஞாசக்கரத்தினு லிரட்சிக்கின்ற வெற்றி மிகு

ந்த மன்னவன் வாழக்கடவன். பொருந்திய மாதந்தோறும் மழை வளப்ப மிகுந்து பெய்யக்கடவது. மேது மன்னவனாகிய அதிவீரராமபாண்டிய மகாராஜன சமான மில்லாமல் தமிழ்ப்பாடலாகக் கூறிய பழமையாகிய காசிகண்டம் அழகோடும் சிறக்கக்கடவது. எ - று.

"வாழ்க வந்தணர் வானவ ரானினம் - வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக." என்னும் பரமாசாரியா திருவாக்கின்படி வேதியர்யாககருமங்களுககுரியாராதலின் முதலில் "அருமறைமுனிவாவாழ்க" என றும், அவர்களசெய்யும யாககருமங்களுககுப் பசக்கள் இனறியமையாதனவாதலின "ஆனினமவாழ்க" என்றவா பின்னும், அவவாறு யாகஞ்செய்யின காலநதவறுது மழைபெய்யுமாதலால் "மருவியதிங்கடோறு மழைவளஞ்சுரக்க" என அதனபினனும "திங்கண் மும்மழை பெய்யச் செழும்புயல, பொங்கி வாழ்க புரவல னோங்குக" எனனும் திருவாககினபடி, வேண்டுமளவில மழை பெய்யின மனனவன் விளங்குவானுதலால் "விரிதிரை யுலகங்காக்கும விறலசெழு தேர்நன வாழ்க" என இறுதியிலுங் கூறினர்.

"தொன்னூல" என்றது இதன் முதனூலின் பெயராகிய காசிகண்டம் என்னும் பெயரே இதற்கிடவேணடுதலின் இந்நூலாசிரியர் வேறோ ரமயத்தில "புதிதாவொன்று முரைத்திலமால" என்று கூறி வடமொழிப்பெயரையே அந் நூலுக்கிட்டதுபோல ரணடுங கூறினர் எனக. (௧௪)

## சிறப்புப்பாயிரம்.

### வேறு.

புவிபுகழுங் காசிகண்டம பொருவிலபரா சரன்புதல்வன புகன்ற வாறே
செவிவழியி னமுதுகுத்த தெனமதுரம் பொழிதமிழாற் றெரித்தல செய்
னுவவுமதிக் குடைநிழறற வோராழி திசையுருட்டி யொலிநீர் வேலே [தா
யவனிபுரந் தருள்வழுதி யதிவீர ராமனிக லரச ரேறே.

(இ - ள்.) பூரணசந்திரன் போனற வெண்கொற்றக்குடை நிழல் செய்ய, ஒப்பற்ற ஆகஞாசககரத்தை அஷ்டதிக்குகளிலுஞ் செலுத்தி, ஒலிக்கின்ற நீரமயமாகிய கடல்சூழ்ந்த பூமியை அரசசெய்து காத்தவனும், பகைத்த யானைகளாகிய அரசருக்கு ஆண்சிஙகம்போன்றவனும் ஆகிய அதிவீரராமபாண்டியமகாராஜன், உலகத்தார் புகழ்ந்துபேசங் காசிகண்டம் என்னும் இந்நூலை ஒபபற்ற பராசர முனிவர் புத்திரராகிய வியாசமுனிவர் சொல்லியவகையே காதுகளில் அமுதத்தைச் சிந்தியது போல மதுரம்பொருந்திய தமிழ்ப்பாஷையில் மொழிபெயர்த்துப் பாடினன். எ - று.

உவா என்பது "குறியதன் கீழாக் குறுகலு மதனோ-டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்" எனறதனல் உவவு என நின்றது. உவா எனபது பூரணை அமாவாசியைகளுக்குப் பொதுவாயிருப்பினும் "உவவுமதிக்குடை" என்பதனல், உவவுமதி என்பதற்குப் பூரணசந்திரன் எனப்பட்டது. (௧௫)

## புராணவரலாறு.

### வேறு.

நீற்றொளி பழுத்த நெற்றியன் றொன்னூ னிகழ்த்திய வறநெறி யமிழ்த
மூறறிருந் தொழுகு நாவின னெணடோ ளொருவனை யெண்ணிய வுளத்
மாற்றருஞ் சிறப்பிற் கணடிகை மாலே மருளற விளங்கிய மெய்ய [தன்
னாற்றருந் தவத்துச் சூதமா முனிவ னைமிசா ரணியத்தி னடைந்தான்.

(இ-ள்.) திருவெண்ணீற்றினது பேரொளிவிளங்கும் நெற்றியை யுடைய வரும், பழமைபொருந்திய புராண நூல்கள் சொல்லும் தருமமார்க்கமாகிய அமுத மானது ஊற்றெடுத்தொழுகும் நாவினையுடையவரும், எட்டுத் திருப்புயஙகளை யுடைய ஒப்பற்ற சிவபெருமானைத் தியானிக்கும் மனததையுடையவரும், நீக்குதற் கரிய சிறப்பினையுடைய உருத்திராக்கமாலையானது அறியாமையென்னும் மயக்கம் நீஙக விளங்குகினற தேகமுடையவரும், யாவரும் செயதற்கரிய தவததையுடைய வரும் ஆகிய பெருமைதங்கிய சூதபுராணிகா நைமிசாரண்ணியத்திற்குப் போனூர்.

சூதமா முனிவன் வரவெதிர் நோக்கித் துகளற முக்குறும் பெறிந்து
மாதவக் கிழமை பூண்டுளோர் யாரும வருகென முகமனன் கியம்பித்
தீதற யாங்க ளிழைத்தநற் றவத்தின் செய்தியாற் போந்தனை யென்ன
வாதரம் பெருகி யருக்கிய முதல யாவையு முறையினி லளித்தார்.

(இ-ள்.) குற்றம் நீங்கக் காம வெகுளி மயக்க மென்னும் மூன்று பொல்லா ங்கினையும் வெட்டி யொழித்து, பெருமை பொருந்திய தவத் தரிமையை மேற் கொண் டுள்ளோராகிய நைமிசாரணியவாசிகள யாவரும் மாக்ஷிமைதங்கிய சூத முனிவரது வருகையை எதிர்பார்த்து எழுந்தருளுக என்று உபசாரவார்த்தைகளை மிகுதியுஞ் சொல்லி, குற்றம் நீஙக நாஙக ளியற்றிய நல்ல தவ வொழுக்கத்தால் தேவரீர் எம்மிடம் எழுந்தருளினீர் என்று பேரானந்தமிகுந்து அருக்கிய முத லாகிய எல்லாவற்றையும் கிரமமாகக் கொடுததார்கள். எ-று.

அருக்கிய முதல எனபது அருக்கியம், பாத்தியம், ஆசமனம். (கஎ)

வழிவரல் வருத்த மாற்றிய பின்னர் சூதமா முனிவரமகிழ்வான் [மொழிந்த
மொழிதரு பதினெண புராணமு முனனர் மொழிந்தனை காந்தத்துண்
பழுதறு காசி கண்டநீ யினனும பகர்ந்திடல் வேண்டுமென் றிரப்பப்
பொழிதரு கருணை வியாதனை வணங்கிச் சூதமா முனிவான் புகலும.

(இ-ள்.) வழிநடந்துவந்ததால் உண்டாகிய வருத்தத்தை நீக்கியபிறகு ஓ பெருமைதஙகிய சூதமுனிவரே! விருப்போடு சொல்லுகின்ற பதினெண்புராணங் களையுந் தேவரீா அடியேங்களுக்கு முனனமே சொன்னீர். காந்தபுராணத்திற் சம் ஹிதைகள் ஆறனுள் ஒன்றாகிய சஙகரசம்ஹிதையிற் சொலலப்படும் குற்ற மற்ற காசிகண்டத்தைத் தேவரீா இன்னும் ஒருமுறை ஓதியருளவேண்டும் என்று யாசி க்க, இருபைசொரிகினற தமது ஆசிரியராகிய வியாசமுனிவரை வணங்கிப் பெரு மைபொருந்திய சூதமுனிவர் சொல்லுவாராயினர். எ-று.

"மொழிதரு பதினெண்புராணம்" எனபதை,

கந்தபுராணம் - பாயிரப்படலம்.

"எதிரில சைவமே பௌடிய மாக்கண்ட மிலிங்க
மதிகொள் காந்தநல் வராகமே வாமன மச்சம்
புதிய கூர்மமே பிரமாண்ட மிவைசிவ புராணம்
பதும மேலவன் புராணமாம் பிரமமே பதுமம்.

கருது காருட நாரதம் விண்டுபா கவத
மரிக தைப்பெய ராக்கினே யம்மழற் கதையா
பிரவி தன்கதை பிரமகை வாத்தமா மிவைதாந்
தெரியு மோன்பதிற் றிருவகைய புராணமாந் திறனே."—எனவும்,

காந்தம் ஆறு சம்ஹிதைகளுடையது. எனபதை

திருவிளையாடற்புராணம் - புராணவரலாறு.

"முற்ற வோதிய புராணமூ வாறினுட் காந்தம்
பெற்ற தாறுசங் கிதையவை யாறுந்தம் பெயராற்
சொற்ற பேர்சனற் குமாரமா முனிவரன் சூதன்
கற்றை வார்சடைச் சங்கரன மாலயன் கதிரோன்." — எனவும் கூறிய வற்றா னுணர்க. (கஅ)

## பாயிரம் முற்றும்.

ஆக திருவிருத்தம் - கஅ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பூர்வகாண்டம்.

முதலாவது,

## நாரதர் விந்தவரையைக் கண்ட அத்தியாயம்.

திருவளர் மகதி வீணைத் தெய்வமா முனிவன் றெண்ணீர்
நருமதை யாற்றின் மூழ்கி நானிலத் துயிர்கட் கெல்லாங்
கருதிய வனைத்து நல்குங் குடிலையங் கடவுட் போற்றி
வருதலும் பொருவில விந்த மால்வரை யினிது கண்டான்.

(இ-ள்.) சிவஞானச்செல்வம் வளர்கின்ற மகதிவீணையையுடைய தெய்வீகம்பொருந்திய பெருமைதங்கிய நாரதமுனிவர் தெளிந்த நீர்மயமாகிய நருமதை நதியில் ஸ்நானஞ்செய்து,பூமியிலுள்ள ஆன்மாக்களுக்கெல்லாம் அவை எண்ணிய பொருள்கள் யாவையும் அருள்செய்கின்ற அழகிய பிரணவப்பொருளாகிய சிவபெருமானைத் துதித்துவருகையில் சமானமற்ற பெரிய விந்தபாவதத்தை இனிமையாகப் பார்த்தார். எ - று

மகதி என்பது நாரதமுனிவர் கையிலுள்ள வீணையை. ஆதலின் மகதி வீணை என்பது முன்னையது சிறப்பும், பின்னையது பொதுவுமாக வந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

நானிலம்—குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவாம். மலைச்சார்பைக் குறிஞ்சி என்றும், காடுங் காடுசார்ந்த பூமியையும் முல்லை என்றும்,வயலும் வயல்சார்ந்த இடமும் மருதம் என்றும், கடலுங் கடல்சார்ந்த நிலமும் நெய்தல் என்றும் சொல்லப்படும்.

நருமதையாறு புண்ணியநதிகள் ஏழனுள் ஒன்று. அவையாவன,-கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி.

குடிலையங்கடவுள் சிவபெருமான் என்பதை.

காஞ்சிப்புராணம்.

“ காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக் கவின்றகல் லாடைமேற் புனைந்து
யாமெலாம் வழுத்துந் துறவியென விருந்து மொருத்திதன் னிளமுலைச் சுவடு
தோமுறக் கொண்டா னெச்சிறை யிடல்போற் சுடர்மனக் குகையுள் ஏ கம்பத்
தோமொழிப் பொருளை யடக்கியா னந்த முறுநர்வா ழிடம்பல வுளவால்.”—என்பதனு லுணர்க. (க)

குழைத்துவின் படருங் கோட்டுக் கோழனை யதவம் யாவும
பழுத்தன கின்ற தோற்றம பைந்துழாய்ப் படலைத் திணடோ
ளழற்பொலி திகிரி மாய னளப்பரு மண்ட மெல்லாம
விழுததகு மெய்யிற் ருங்கி கின்றென விளங்கிற் றன்றே.

(இ - ள்.) அம்மலையினிடத்தில், தளிர்விட்டு ஆகாயத்திற்பரவிய கிளைக ளையும், வழுவழுப்பாகிய அடியையும உடைய மரங்களெல்லாம் பழங்கள் தொஙகு வனவாகி நிற்கும் பார்வையானது, பசிய துளவமாலையை யணிந்த வலிதங்கிய புய ங்களையும், அக்கினிபோன்ற சுதரிசனமெனனும் சக்கராயுததகையும் உடைய விஷ்ணுமூர்த்தியானவா அளவிடுதற்கரிய அண்டகோடிகள் முழுவதையும் மேன மைதங்கிய தமது திருவுருவததிற் ருங்கி நினறதுபோலும் விளங்கும. எ - று.

அன்று. ஏ-அசை. (உ)

மின்றிகழ் கமஞ்சூற் கொண்டல் படிதலும் வேழ மென்னுச்
சென்ெறுரு வேழ மேற்பச் செவிவளி விசையிற் சிநதிக்
குன்றினின் றகன்ற மேகங கொல்சினக் களிகல யானைப்
பின்ெறுடர்ந் தேகவஞ்சிப் பெயாந்தமா வியானை போலும.

(இ - ள்.) நிறைவாகிய சூல்கொண்ட மின்னல் விளங்குகின்ற மேகமானது அம்மலையில் தாழ்ந்திருப்பதை ஒரு யானையானது கண்டு தன்போலும் யானை எனறு கருதிப்போய் எதிர்க்க, எதிர்த்த யானையினது காதுகளின காற்றுவிசை யாற்சிதறி அம்மலையினின்றும் நீஙகிய மேகமானது, கொல்லததக்க கோபத்தை யும் மதச்செருக்கையுமுடைய நலல யானையானது பினறெடர்ந்துவரப் பயந்து நீங்கிய பெரிய யானையை ஒத்திருக்கும். எ - று. (ட)

தளிமுகிற் படல மதண் சாரலிற் றவழ வோங்கி
வெளிமுக டணவு சென்னி மீககிளா மரங்க ளெலலாம்
நளிர்கிலா மணிக்கற் பாறை நகைமதி தவழ மல்குங்
குளிாபுனற் றிவலை மாந்திக் குழைத்தன வளரு மனறே.

(இ - ள்.) மழைத்துளிகளையுடைய மேகக்கூட்டங்கள் அழகிய குளிர்ச்சி தங்கிய சாரலில் தவழுமபடி யுயர்ந்து ஆகாய முகட்டினை நெருங்கிய மலையினது உச்சியின்மேல் விளஙகுகின்ற விருட்சங்களெல்லாம் குளிாச்சிதங்கிய சந்திரகாந் தக்கற்களாகிய பாறைகள் ஒளிபொருந்திய சந்திரன் தவழுதலால் பெருக்கெடுக் கின்ற குளிர்ந்த நீர்த்துளிகளைக் குடிததுத் தளிர்கள் விடடனவாகி வளரும். எ-று.

நிலாமணிக்கல் - சந்திரகாந்தக்கல்; சந்திரனைக் கண்டு நீர் துளிக்கும் கல் லைச் சந்திரகாநதக் கல் என்றும், சூரியனைக்கண்டு நீர் துளிக்கும் கல்லைச் சூரியகா ந்தக்கல் என்றும் சொல்லுவர்.

சாரலிலே மேகங்கள் தவழும் எனக் கூறியதால் அம்மலையின் சாரலே மேகமண்டல அளவில் உயர்ந்துள்ள தெனபதும், அவவாறு கூறவே அம் மலையி னது உயர்வு கூறவேண்டாததுமாயிற்று. (ச)

வண்டொடு ஞிமிறுந் தேனு மலர்ப்பொதி யவிழ்த்து வார்ந்த
தண்டுளி நறவ மார்ந்து தண்ணறுஞ் சாரற் றூழ்ந்த
கொண்டலி னனைந்த கூந்தற் குறத்தியர் குழாங்கொண் டேகி
விண்டொடு குடுமி யேறி விரித்தனர் புலர்த்து வாரே.

(இ-ள்.) கூட்டமாகிய குறமாதர், பொன்வண்டுகளும் ஆண்வண்டுகளும் பெண்வண்டுகளும் மலர்களினது கட்டுகளை யவிழ்த்து ஒழுக்கிய குளிர்ச்சிபொருந்திய துளிகளாகிய தேனைக்குடித்து, குளிர்ந்த வாசந் தங்கிய மலைச்சாரலிற் றூழ்ந்த மேகத்தினால் நனைந்த அளகபாரத்தைக் கொண்டவர்களாகிச் சென்று, ஆகாயமளாவிய மலையுச்சியிலேறி தமது நனைந்த கூந்தலை விரித்து உலர்த்துவார்கள்.

வண்டுகள் மலர்ப்பொதி யவிழ்த்துவார்ந்த நறவம் - வண்டுகள் மலர் மொட்டுகளில் மொய்ப்பதால் இதழ்கள் விரிந்து உள்ளிருந்து சிந்துகின்ற தேன். என்பது. (ரு)

தடஞ்சினை மரங்க ளெல்லாஞ் சநதனம் வேழ மெல்லாங்
கடம்பொழி புழைக்கை காலவாய்க் கழற்சினக் களிநல் யானை
யடைந்துலாம் விலங்கி யாவு மருங்கடி நரந்த நாவி
மிடைந்துறு பறவை யாவுங் கின்னர மிதுன மாதோ.

(இ-ள்.) விசாலமாகிய கிளைகளையுடைய விருட்சங்களென்று சொல்லப்படுவனவெல்லாம் சந்தனவிருட்சங்களே. வேழமென்று சொல்லப்படுவனவெல்லாம் துவாரம் பொருந்திய கையையும், தொங்குகின்ற வாயையும், அதிகரிக்கின்ற கோபத்தையும், மதச்செருக்கையும் உடைய மதநீர் சிந்தும் நல்ல யானைகளே. கூடி உலாவுகின்ற மிருகங்களென்று சொல்லப்படுவனவெல்லாம அரிய வாசனை வீசும் கஸ்தூரிமிருகமும் புநுகுபூனைகளுமே. நெருங்கியுள்ள பறவைகளென் சொல்லப்படுவனவெல்லாம் கின்னரமிதுனங்களே. எ - று.

கின்னரம் என்பது செவிக்கு அதிக இனிமையாகிய இசைபாடும் ஓர்வகைப்பறவை. மிதுனம் = சம்பந்தம். இது தனித்துவாழுந் தகுதியுடையதல்ல. ஆண் பெண்ணுள் ஒன்றைவிட்டொன்று பிரியின் உடனே உயிர் விடத்தக்கது. (சு)

இனையன வளங்கொள் விந்த மானுட வுருவ மெய்திக்
கனைகதிர்ச் செல்வ னென்னக் கதிர்ப்பரந் தெறிக்கப் போந்த
வினையறு தவத்து மிக்க வீணைமா முனியைக் காணுப்
புனைகழல் வழுத்த வெண்ணிப போயெதிர் கொண்ட தன்றே.

(இ-ள்.) இத்தன்மையன வாகிய பலவளப்பங்களைக் கொண்ட விந்த பர்வதமானது நிறைவாகிய கிரணங்களையுடைய சூரியன் என்று சொல்லும்படியாக ஒளிமிகுந்து பிரகாசிக்க அங்கெழுந்தருளிய தீவினைநீங்கிய தவத்தில்மிகுந்த வீணையில் வல்ல பெருமைதங்கிய நாரதமுனிவரைக் கண்டு மனிதவடிவமடைந்து அவரது அழகிய திருவடிகளை வணங்கும்படி நினைத்துப்போய் எதிர்கொண்டது. எ - று.

தன்னைக் காணவருவோரை எதிர்கொள்ளுதல் உபசாரங்களுள் ஒன்று.

தீக்தொடை மகதி வீணைத் தெய்வமா முனிவன் மூளி
லேக்தெழிற் குடுமிக் குன்றங் குழைவொடு மிறைஞ்சிற் றென்றாற்
பாகதளின் பிடரின் மேய படகட லுடுத்த பாரில
வாய்ந்தநற் றவத்தின் மிக்க துளதென வகுக்க லாமோ.

(இ-ள்.) வாசனைதங்கிய மலர்மாலையணிந்த மகதிவீணையை யேந்திய தெய்வீகம்பொருந்திய பெருமைதங்கிய நாரதமுனிவர் திருவடிகளில் அழகு பொருந்திய உச்சியை யுடைய விந்தபர்வதம் மன வுருக்கத்தோடும் வணங்கியது. அவவாறு வணங்கியதென்றால், ஆதிசேடன் பிடரியில்தங்கிய சமுத்திரஞ்சூழ்நத நிலவுலகததில் பொருந்திய நல்ல தவத்தைப்பார்க்கிலும் மேம்பாடுடையதாக ஒரு பொருள் உள்ளது என்று சொல்லுதல்கூடுமோ. கூடாது. எ - று.

மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்களும் ஒன்றுகூட நமஸ்கரித்தது என்று குறிப்பிக்க "குழைவொடு மிறைஞ்சிற்று"—என்றார்.

"பாந்தளின் பிடரின்மேய பார்" — எனறது ஆதிசேடனும் அஷ்டமகா நாகங்களும் சுமக்கும்பூமி; ஆதிசேடன இடையிலும், வாசுகி அநந்தன் தககன சங்கபாலன் குளிகன் பதுமன மகாபதுமன் கார்க்கோடகன ஆகிய அஷ்டநாகங்கள் முறையே கிழக்குமுதல் வடகிழக கீறாக எட்டுத் திக்குகளிலும் பூமியைத் தாங்கி நிற்கும். சிறப்புநோக்கி ஆதிசேடனசுமக்கும் பூமி என்பர். இந்நவநாகமும் காசிபப்பிரமாவுக்கும்அவன்மனைவிகள் பதின்மூவருள் கத்துருவைக்கும் பிறந்தன.

"வாய்ந்தநற் றவத்தின் மிக்க துளதென வகுக்கலாமோ"

என்பதனை,

காஞ்சிப்புராணம்.

"தவமே மேலா நெறியாகுந் தவமே சிவனார் தமைக்காட்டுந்
தவமே துறக்க மடைவிக்குந் தவமே நரனைத் தேவாக்குந்
தவமே வசாரி திசைக்கிறைவர் சார்ஙக னயனு மாக்குவிக்குந்
தவமே கிடைப்பிற் கிடையாத துண்டோ வெனறு சாற்றினனால்."—என்பதனு னுணர்க.

(அ)

வணங்கலுந் தழீஇக்கொண் டன்பின் வரம்பிலா வாசி கூறும்
பிணங்குநூன் மார்ப னுள்ளம் பெட்புற வுவகை பொங்க
விணங்கிய முகம னோடு மருக்கிய முதல வீந்து
தணிந்துதாள் வருடிப் போந்த வருத்தமுந தவிர்த்த தன்றே.

(இ - ள்.) விந்தபர்வதம் இவவாறு நமஸ்கரிக்கவும் தழுவிக்கொண்டு அன்போடு அளவில்லாத ஆசீர்வசனததைச் சொல்லும் நெருங்கிய உபவீதமணிந்த மார்பராகிய நாரதமுனிவர் மனதில் அன்புபொருந்தவும்,ஆனந்தம் அதிகரிக்கவும், பொருந்திய உபசாரவார்த்தைகளோடும் அருக்கியமுதலியவற்றைக் குறைபாடின்றிக் கொடுத்து, மனமிளகிப் பாதங்களைப் பிடித்து வழிநடந்துவந்த வருத்தத்தையும் நீக்கியது. எ - று.

உபவீதம் என்பது பூணுநூல். மார்பினிடத்தி லணிந்த உபவீதம் நூலொடு நூல் சிக்குண்டு நிற்றலிற் "பிணங்குநூன் மார்பன்" என்றார். (கூ)

மாதவ விவணீ போத மனத்திரு ளகன்ற தமபொற்
பாதநுண் டுகளா லின்றென் பவக்கட றூர்ந்த திற்றைத்
தீதறு நாளு நன்னு ளாயது சேணி னோங்கு
பூதர மெனனும பேரு மெனக்கினிப் பொலிந்த தன்றே.

(இ-ள்.) பெருமைதங்கிய தவத்தையுடைய நாரதமுனிவரே! தேவரீர் இவவிடம் எழுந்தருளியதால், என் மனத்திலிருந்த அஞ்ஞானமாகிய இருள் நீங்கியது. தேவரீரது அழகிய பொன்போன்ற திருவடியினது நுண்ணிய தூசினுல் இப்பொழுதே எனது பாவமாகிய சமுத்திரம் தூர்ந்தது. குற்றமற்ற இன்றையதினமும் நல்ல தினமாயிற்று. இனி ஆகாயவரையிலுயர்ந்த விந்தபர்வதம்என்னும பெயரும் எனக்கு விளங்கியது எ-று.

இருள் சூரியனைக் கண்டவுடன் நீங்குவதுபோல அஞ்ஞானமாகிய இருள் ஞானசூரியராகியதேவரீரைக் கண்டவுடன் நீங்கியது என்பார் "இவணீபோத மனத்திருளகன்றது" எனவும்,குளமுதலிய ஆழமான இடங்கள் மண்முதலியவற்றால் தூருவதுபோலப் பாவமாகியசமுத்திரம் தேவரீரதுபாததூளியால்தூர்ந்தது. அதுவும் இக்கணமே முடிந்தது எனபார் "பாதநுண் டுகளா லின்றென் பவக்கடறூர்ந்தது" எனவும், தேவரீரைக்கண்டு வசனித்ததால் இற்றைப் பொழுது நற்பொழுதாயிற்று என்பார் "இற்றைத்தீதறு நாளு நன்னுளாயது" எனவும், இத்தியாதி வைபவஙகளால இதுகாறும் இருந்ததுபோ லல்லாது இனிச் சிறப்பினையடைந்தே னென்பார் "பூதர மென்னும் பேரு மெனக்கினிப் பொலிந்தது" எனவுங் கூறினர்.

நன்னுளாயது - எனபதனை,

"நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று." — என்னும் ஔவையாரது திருவாக்கா னுணர்க.

பூதரம்—பூ பூமி. தரம் சுமத்தல். (கo)

என்றலு முயிர்ப்பு வீங்கி நாரத னிருப்ப நோக்கித்
துன்றிரும் புவிக ளெலலாஞ் சுமப்பவன் யானே மற்றைக்
குன்றெலாஞ் சுமக்கு மென்னல் கூற்றலாற் றரிக்க லாற்ற
பொன்றிணிந திருக்கு நீரான் மேருவும் பொலிநத தன்றே.

(இ-ள்.) என்று சொல்லவும், நாரதமுனிவர் பெருமூச்சுவிட்டு இருக்கக் கண்டு நெருக்கமாகிய பெரிய எல்லா உலகங்களையும் நானே தாங்குகின்றவன் மற்றைப்பர்வதங்களெல்லாம் தாங்கும்என்று சொல்லுதல் சொல்லளவேயன்றித் தாங்குதல்முடியாது. பொன் மிகுந்திருக்குந்தன்மையால் மேரு மலையும் அதிகரித்தது.

மற்றப் பர்வதங்கள் என்பது அஷ்டகுலபர்வதங்களில் இது நீங்கியவற்றை.

கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம். இவை எட்டுமே அஷ்டகுலபர்வத மெனப்படும். இவற்றுள் கந்தமாதனத்தை நீக்கி ஏழெனவுஞ் சிலர் கூறுவர். (௧௧)

உயர்தரு மத்த மில்லா நிடதமு மவுண ரோங்குஞ்
செயிருடை யுதய வெற்புஞ் செம்மையி னீலக் குன்று
மியல்புற நடத்தல் செல்லா ரேவதக் கிரியு நாகம்
பயிலியற் பொதிய வெற்பு மெனக்கிணை பகர லாமோ.

(இ-ள்.) உயர்ந்துசெல்லக்கூடும் சிறகுகளில்லாத நிடதகிரியையும், அசுரர் கூட்டம் மிகுந்த துன்பத்தை யுண்டுபண்ணும் உதயகிரியையும், செம்மையாகிய நீலகிரியையும், சாதாரணமாக யாவரும் நடத்தல்கூடாத ரேவதகிரியையும், தேவர்கள் சஞ்சரிக்கும் இயல்பினையுடைய பொதியமலையையும் எனக்குச் சமானமாகச் சொல்லுதல் கூடுமோ. எ-று.

அத்தமில்லாநிடதம்-இந்திரனால் சிறகுகளறுபட்ட நிடதகிரி. அத்தம்-கை.

உதயவெற்பு - கீழ்க்கடலிலுள்ள பர்வதங்களுள் ஒன்று. இதில் சூரியனுதிக்கையில் எண்ணில்லாத ஆயுள்பெற்ற அசுரர் பலர் அவனது உதயத்தால் தமக்குத் தீமையும் மற்றையோர்க்கு நன்மையும் விளைவது கருதி அவனது வருகையைத் தடுப்பர். ஆதலால் உதயகாலத்தில் அந்தணர் முதலானோர் சூரியனைக்குறித்து அருக்கியங்கொடுப்பர். அவர்கள் அவ்வாறு கொடுத்த அருக்கியநீர் வாளாகச்சென்று அசுரரைக்கொன்று சூரியனுக்கு வழிசெய்யும். இதுபோலவே மாலைப்போதில மேற்றிசைக்கடலிலுள்ள அஸ்தகிரியில் வசிக்கும் இவர்கள் தாயாதிகள் அங்கேதடுப்பர். அப்போதும் அவ்வாறே அருக்கிய நீரால் வழிபெறுவன். அசுரர் மீண்டும் தமது ஆயுண் மிகுதிபெற்ற வரததால் உயிர்த்தெழுவர். ஆதலால் "அவுண ரோங்குஞ் செயிருடை யுதயவெற்பு" எனப்பட்டது.

நாகம் - இடவாகுபெயராய்த் தேவர்களை யுணர்த்திற்று.

"நாகம்பயிலியல்"—என்பதற்கு ஆகாயமளாவிய,என்றாவது,யானைகள்வசிக்கும் என்றாவது, (சந்தனவிருக்ஷமிகுந்துள்ள இடமாதலால் அவ்வாசனைக்காக) பாம்புகள் திரியும் என்றாவது கூறுதலும் கூடும். (௧௨)

கண்ணில்மந் தரமும் வெய்ய கடும்பனி நவிய வோங்கு
மண்ணலங் குடும்பக் குன்று மகனிலஞ் சுமக்க லாகா
விண்ணுயர் சைய முங்கிர வுஞ்சமும் வேலை ஞாலத்
தெண்ணுறு கிரிகள் யாவு மெனக்கிணை யல்ல மாதோ.

(இ-ள்.) இடமில்லாத மந்தரகிரியும், மிகவும் கொடுமைதங்கிய பனியானது தன்னை யடைந்தோரைத் துன்பப்படுத்த உயர்ந்த பெருமையிற் சிறந்த அழகிய சிகரங்களையுடைய இமயகிரியும், இடமகன்ற பூமியைச்சுமத்தல் செய்ய முடியா. ஆதலால் ஆகாயவளாயிலுயர்ந்த சையகிரியும், கிரவுஞ்சகிரியும், கடல்சூழ்

ந்த பூமியிலுள்ளனவாகிய எண்ணப்பட்ட மலைகள் எவையும் எனக்குச் சமான மலல. எ - று.

கண்ணில்மந்தரம்—தேவர்கள் கூட்டங்கொண்டிருப்பதால், அல்லது மரம் முதலியவை அடர்ந்திருப்பதால வெற்றிடமில்லாத மந்தரகிரி என்றார். கடும்பனி மிகுந்திருப்பதால் அதனிடஞ் செல்வோர் குளிரால் விறைத்து இறக்கத்தக்கதும் உலகின்கண்ணுள்ள எல்லாமலைகளிலும் பெரியதும், ஆதலின் "கடும்பனி நலிய வோங்கும் அண்ணலங் குடுமிக்குன்று" என்றார். பனியின்மேம்பாட்டால் இமய கிரி இமாசலம் எனப் பெயர்பெறும் இமாசலம் - இமம் - பனி அசலம் மலை என்பது பொருள. (௧௩)

என்றிகல் விந்தங் கூற விருஞ்சடைக் கடவுள் வைகுங்
குன்றமே முதலா யுள்ள குலவரை யனைத்து நிற்க
நன்றுகொ லிதனுக் குற்ற மனச்செருக் கென்று நக்கு
மன்றலங் கமலப் புத்தேண் மகனுளத் தெண்ணிச் சொல்வான்.

(இ-ள்.) என்றிவ்வாறு வலிதங்கிய விந்தபர்வதஞ் சொல்ல வாசம்பொருந்திய அழகிய தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவரது புத்திரராகிய நாரதமுனிவர் பெருமைதங்கிய சடைக்கற்றையையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் கைலைமலைமுதலாக வுள்ள சிரேஷ்டமாகிய பர்வதங்களெல்லாமிருக்க, இந்த விந்த பர்வதத்துக்குப் பொருந்திய மனோ கர்வம் நன்றாயிருந்தது என்றெண்ணிச் சிரித்துச் சொல்வாராயினர். எ - று.

இகல் விந்தம் என்பதற்கு ஏனைய பர்வதங்களைத் தனக்குச் சமமல்லவென்று தாழ்த்திப் பொருமையாற் கூறினதால், பகைகொண்டவிந்தம் எனக் கூறினும் பொருந்தும். (௧௪)

உடைதிரைப் பரவை ஞாலத் துயர்விசும பகடு தோயுங்
கடவுணமால வரைகட் கெல்லா மிறையெனக் கழற லென்னோ
வடவரை நின்னை யாது மதிக்கிலா துரைத்த மாற்றந்
தடவரைக் கிறைவ நின்பாற் சாற்றுவான் புகுந்து ளேனால்.

(இ-ள்.) சாய்ந்து சாய்ந்து வருகின்ற அலைகளையுடைய கடல்சூழ்ந்த பூமியில், உயர்வாகிய ஆகாயமுகட்டைஅளாவும்படி உயாந்த தெய்வீகம் பொருந்திய பெரிய பர்வதங்களுக்கெல்லாம் தலைவனென்று சொல்லுதல் என்னகாரணம்? வடக்கின்கண்ணுள்ள மேருபர்வதம் உன்னைக் கொஞ்சமும் மதியாமற் சொல்லிய சொறகளை விசாலமபொருந்திய விந்தபர்வதராஜனே நான் உன்னிடத்திற்சொல்லும்படி வந்தேன். எ - று.

வடதிசையிற் பல பர்வதங்களிருப்பினும் மேருபர்வதத்தையே சிறப்புநோக்கி "வடவரை" என்பா - அது பொன்மலையாதலானும், சிவபிரானுக்கு வில்லாக இருந்ததாலும் சிறந்துள்ளது எனக்கொள்க. (௧௫)

நின்னுழை யடைந்த போழ்தி னெட்டுயிர்ப் பெறிந்த வாறு
மன்னது கருதி யென்று வறைந்துநன் முகமன் கூறி
யின்னிசை மகதி வீணை யிருந்தவர்க் கிறைவன் வானோர்
பொன்னக ரதனை நோக்கிப் போயினன் போய பின்னர்.

(இ-ள்.) நான் உன்னிடத்தில் வந்தபோது பெருமூச்செறிந்த விதமும் அம்மேருபர்வதம் சொல்லிய அந்தச் சொற்களை எண்ணியே என்று சொல்லி நல்ல உபசாரவார்த்தைகளை யோதி, இனிய இசையையுடைய மகதிவீணையைக் கையி லுடைய பெருமைவாய்ந்த தவசிரேஷ்டர்களுக்குத் தலைவராகிய நாரதமுனிவர், தேவர்கள்வாசஞ்செய்யும் பொன்னுலகமாகிய தேவலோகத்தை நோக்கிச் சென றூர். அவர் அவவாறு சென்றபிறகு. எ - று. (கசு)

வேறு.

விழ்புலன் வழிமனம் விடுநர் வாழ்க்கையுஞ்
சூழ்வினை முடித்திடார் துய்த்து வாழ்வதுந்
தாழ்விலன் புடையதன் றமரி கழ்ந்திட
வாழுநர் வாழ்க்கையும் வாழ்க்கை யாகுமோ.

(இ-ள்.) விஷயங்களிற்படிகின்ற ஐம்புலன்களின் வழியில் மனத்தைவிடு கின்றவர்களது உயிர்வாழ்தலும், தன்னைப் புடைசூழ்ந்த போரினைமுடிக்காதவர் கள் உணவு முதலியவை குறைவின்றியுண்டு உயிர்வாழ்தலும், தாழ்ச்சியில்லாத அன்பினையுடைய தமது சுற்றத்தவர்கள் இழிவாகப்பேச வாழ்கின்றவர்களது உயிர்வாழ்தலும், உயிர்வாழ்தலென்று சொல்லலாகுமோ. எ - று.

புலன் ஐந்து—சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்; இவற்றின் வழித்தாய் மனம் விஷயங்களிற்சென்று வருந்துதலின் அவர் வாழ்க்கையும்,சூழ்வினை முடியா தவர் என்றும் துன்பமே அடைவராதலால் அவர் வாழ்க்கையும், பந்துக்கள் மதி யாதகாலத்தில் மதிப்பாரொருவருமில்லையாதலால் அவர் வாழ்க்கையும்,வாழ்க்கை யல்ல என்பதனால் "வாழ்க்கையாகுமோ" என்றார். வாழ்க்கையாகுமோ என்ற தில் ஓ எதிர்மறைப்பொருளது.

சூழ்வினை என்பதற்கு தனக்கு நேர்ந்த இன்றியமையாதனவாகிய கருமங் கள் என்று பொருள் கூறினும் பொருந்தும். (கஎ)

திருந்தலர் புகழொடுஞ் செல்வந் துய்த்திட
வருந்தியுங் கருணையோ டடிசில் வாய்மடுத்
தருந்தியுந் துயின்றுநல் லின்ப மாற்றியு
மிருந்துயிர் சுமப்பதி னிறத்த னன்றரோ.

(இ-ள்.) ஒருவர் தமது பகைஞர்கள் கீர்த்தியோடு பெருஞ்செல்வத்தை அநுபவிக்கத் தாம் வருத்தப்பட்டும் பொரிக்கறியோடு அன்னம் புசித்து உண்டும், நித்திரைசெய்தும், நல்ல இன்பங்களை அநுபவித்தும், உடலைச்சுமந்து உயிர்வாழ்ந் திருத்தலைக் காட்டிலும் இறப்பது நலம். எ - று.

அரோ - அசை. (கஅ)

புந்தியைக் கொடியவெம் பசியைப் பொற்பினை
யந்தமின் முயற்சியைத் துயிலை யாற்றலை
நந்தலி லுயிரினை நன்னர் நெஞ்சினைச்
சிந்தையொன் றெய்திடிற் சிதைக்கு மென்பவே.

(இ-ள்.) (எப்படிப்பட்டவருக்கும்) மனதில் ஒருவருத்தம் வந்து சேர்ந்தால் (அது அவரது) புத்தியையும், கொடுமையாகிய மிகுந்த பசியையும், அழகையும், இடைவிடாத எத்தனத்தையும், நித்திரையையும், பராக்கிரமத்தையும், கெடுதலில்லாத உயிரையும், நல்லமனதையும் அழிக்குமென்று பெரியோர் சொல்லுவர். எ-று.

உருத்தெழு வெப்புநோய் பழகி னுய்யுமா
றருத்திய மருந்தினி லமையுஞ் சிந்தைவெப்
பெரித்துநாள் பற்பல கழியி னீண்டுமன்
மருத்துவ ரோவிது மாற்ற வல்லரே.

(இ-ள்.) மிகுந்து எழும்புகின்ற சுரநோயானது ஒருவனை விடாது பற்றுமாயின, உண்ணச்செய்த மருந்தினால் அவன் பிழைக்கும்விதம் பொருந்தக்கூடும். மனக்கொதிப்பு ஒருவனைப்பற்றிவருத்திப் பலதினங்கள் செல்லுமாயின், இவ்வுலகத்திலுள்ள பெரிய வயித்தியர்களோ இதனை மாற்றவல்லவராவர்? மாற்றவல்லவராகார்கள்! எ-று.

ப்பட்டசுரம் நீக்கற்கரிய நோயாயிருக்கினும் மருந்தினால் அதனைமாற்றி அந்நோய் கொண்டோனை உயிர்ப்பிக்கக்கூடும் ஆதலின் "அருத்திய மருந்தினிலமையும்" என்றார். சிந்தை வெப்பு நீக்குதலருமை என்பது "மனவியாதிக்கு மருந்தில்லை" என்றபடி. (உ0)

மெய்ம்மைநூற் றுறைபடி வீணை வல்லவன்
பொய்மமொழி புகல்வனென் றெண்ணல் புல்லிதே
யம்மவோ மேருவு மமருக் கெண்ணுமே
னம்முடை யெறுழ்வலி நன்று நன்றரோ.

(இ-ள்.) உண்மையாகிய சாஸ்திரத்தின் துறைகளில் தோய்ந்தவரும், வீணைகானஞ் செய்வதில் வல்லவருமாகிய நாரதமுனிவர் பொய்வார்த்தை சொல்லுவரென்று ஆலோசித்தல் அறிவின்மையேயாகும். அம்மா! மேருபர்வதமும் (நம்மோடு) சண்டைசெய்வதற்கு நினைக்குமாகில், நம்முடைய மிகுந்த வல்லமை அதிக நன்றாயிருக்கும். எ-று.

பொய்—பஞ்சமாபாதகங்களுளொன்று. உண்மையாகிய சாஸ்திரங்களைக் கற்றோர் அதனைவிலக்குவர் ஆதலால் "மெய்ம்மைநூற் றுறைபடி வீணை வல்லவன் - பொய்ம்மொழி புகல்வனென் றெண்ணல் புல்லிதே"—என்றார்.

அம்ம - வியப்பிடைச்சொல். (உக)

பொலனெடுங் கிரிக்குறு புகழ்ச்சி யாதவன்
வலம்வரு கின்றதால் வந்த தாமவன்
செலவினைத் தடுப்பனென் றெண்ணித் தெண்டிரை
யுலகளந் தவனென விசும்பி னோங்கிற்றே.

(இ ள்.) நெடிய பொன்மலையாகிய மேருபர்வதத்திற்கு உண்டாகிய கீர்த்தியாவது சூரியன் தன்னைத் தினமும் வலம் வருவதால் வந்து நேர்ந்ததாகும். (ஆதலால்) அவனது செல்லுகையை யான் தடுக்கின்றேன் என்று கருதித் தெளிவாகிய அலைகளையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த உலகத்தைத் திரிவிக்கிரமாவதாரங்கொண்டளந்த விஷ்ணுமூர்த்தியென்று கண்டோர் சொல்ல ஆகாயமுகட்டி லுயர்ந்தது.

இக்கருத்தை - கந்தபுராணம் - விந்தகிரிப்படலம்.

"உருக்கிளர் விந்த மென்னு முருகெழு பிறங்கன் மேல்போய்ப்
பரக்கம தாகி யம்பொற் பனிவரை காறு மான்று
நெருக்கிய தன்மை பானமை நிலமுழு தளந்த மேலோன்
றிருக்கிளர் பொன்னக் தூசு புனைந்தெனத் திகழ்ந்த தம்மா."—என்பதனு னுணர்க.

"தெண்டிரையுலகளந்தவன்" என்பதன் சரிதம்.

விஷ்ணு பிருகுமுனிவர் சாபத்தால், காசிபமுனிவர் மனைவியாகிய அதிதி வயிற்றில், வாமனன் என்னும் பெயரோடு தோன்றி, மாபலியிடம் போய் மூன்றடி மண் யாசித்துப்பெற்று, ஓரடியால் பூவுலகத்தையளந்து தனதெனச்செய்து, மற்றோரடியால் மாபலியைமிதித்துப் பூமியின்கீழ்ச் சிறையிட்டு, அண்டங்களிடியவும் திக்குகள் நிலைபேரவும் மூவுலகமும் தன்னுருவில் தோன்றவும், பெரிய உருவங்கொண்டு இறுமாந்திருந்தனர். அதுகண்டு அஞ்சிய இந்திரன் பிரமன் முதலிய தேவர் திருக்கைலையையடைந்து சிவபெருமானைத் துதித்துக் குறைசொல்லி யாசிக்க, கருணாநிதியாகிய சிவபெருமான் அருள்கூர்ந்து வயிரவக்கடவுளை நோக்க, அவர் பெருமானது திருவுள்ளக்குறிப்பை யறிந்து இறுமாந்திருக்கும் விஷ்ணுவிடஞ்சென்று "நீ கொண்டிருக்கும் இவ்வுருவையும் செருக்கையும் விலக்கி உனது நிஜவடிவுடன் வைகுந்தமடையக்கடவாய்" என்றுகூற, வாமனன் அவர் சொல்லியதைச் சிறிதும் கவனியாததால், வயிரவக்கடவுள் கோபங்கொண்டு பெரிய தண்டினால் அண்டமிடிய வீசி அடித்தனர். அதனால் நீண்டவடிவுகொண்ட வாமனன் கீழேவீழ்ந்து செருக்கொழிய, வயிரவக்கடவுள் வாமனனது மேற்றோலையுரித்து ஆடையாகத்தரித்துக்கொண்டு முதுகெலும்பைப் பிடுங்கித் தண்டாகக் கையிற்பற்றிச் சென்றனர். பிறகு விஷ்ணு சிவபிரானையர்ச்சித்து வாமனபுராணம் தேவர் முனிவர் முதலானோர்க்குக் கூறி பழையவடிவோடு வைகுந்தமடைந்தனர். என்பது.—இதனை,

உபதேசகாண்டம் - வாமனவதாரச் சருக்கம்.

"நெடுமுடிக் கொடிஞ்சி மான்றேர் நீணிதி நிறைந்த குப்பை
படுமணிக் கலன்க ளம்பொற் பசுந்துகிற் றூனை தானை
விடுபரி முதல யாவும் வேண்டலம் வேண்டி னேமெம்
மடிதொறு மளவை மூன்று நின்னிலத் தளித்தி யென்றான்.
எத்திரு நிலத்தை யோர்தா ளடக்கிய தெவையுந் தாங்கித்
தோய்ந்தெழு வடபான் மேருச் சுற்றுவிட் டெழுந்து மீப்போ
பாந்தளி னிவந்த தோர்தா ளோர்பதந் தளவை காணான்
சாய்ந்தனன் மகுடச் சென்னி மாபலி தருவா கோமான்.

ஈரொயிற் றசுரர் கோமான் மாபலி யென்போன் றன்னைக்
காரகப் படுத்தி மற்றைக் கடிகம ழலங்கற் குல்லைத்
தாரகப் படுத்த மாயோன் றன்னிக ரின்மை நோக்கிப்
பேரக லண்ட மெல்லாம் பிளப்பதற் குருத்து நின்றான்.

அன்னது தடுத்தி யாயி னமரரு முனிவர் யாரு
மின்னடித் தொண்டு நீங்கா நெறிநிற்கு நிலையி னிற்பா
ரென்னலு மியம்ப வெற்பீன் றளித்திட வுலக மீன்ற
கன்னியோர் பாக னேவ வயிரவக் கடவுள் சென்றான்.

பற்றினன் வயிரத் தண்டம் பகிரண்ட மதிர வோச்சிச்
சுற்றின னுருமு காலத் தெழித்தனன் றுளவ மார்பி
னெற்றின னெற்ற லோடு மெறிபடு சண்ட வாயு
முற்றுற விற்று வீழு மூரிவெங் கிரியிற் சாய்ந்தான்."—எனவும்,

காஞ்சிபுராணம்.

"எளியரை வலியர் வாட்டில் வலியரை யிருநீர் வையத்
தளியறத் தெய்வம் வாட்டு மெனுமுறைக் கமைய வாங்கே
தெளியுமா புலியைச் செற்றோர்ச் செருக்குரிக் கவயம் போர்த்த
வளியுளார் கச்சி காவல் வயிரவர்க் கன்பு செய்வாம்." — எனவும் வருவன
வற்றாற் காண்க. (௨௨)

மழகதிர் கனைகடன் முகட்டில் வந்துமே
லெழுவது செய்கட னிறுத்தற் கெண்ணுபு
பழமறை யந்தணர் பார்க்குந் தன்மைபோ
னிழலுமிழ் மணிவரை நோக்கி நின்றதே.

(இ - ள்.) இளஞ்சூரியன் ஒலிக்கின்ற கீழ்ச்சமுத்திரத்தினது உச்சியில் வந்து மேலெழுதலை, பழமையாகிய வேதங்களை யுணர்ந்த பிராமணர்கள், செய்ய வேண்டிய தமது காலைக்கடனை முடித்தற்கெண்ணி, எதிர்பார்க்கின்ற தன்மையைப்போல, ஒளிவீசுகின்ற நவமணிகளையுடைய விந்த பர்வதமானது எதிர்பார்த்து நின்றிருந்தது. எ - று.

உதயகாலத்துச் சூரியனை அப்போது பிறப்பவன்போல இளஞ்சூரியன் எனவும்,இளமையாகிய கிரணங்களையுடையவன் எனவும்,பொருள்பட "மழகதிர்" என்றார். "கனைகடன் முகட்டில் வந்துமே லெழுவது" என்பதில், மேலெழுவது உதயகிரியினின்றே ஆதலின், கடலைக் கீழ்க்கடல் என்றாம்.

எண்ணுபு - செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம். (௨௩)

நாரதர் விந்தவரையைக்கண்ட அ - ம்.

முற்றிற்று.

சிவமயம்.

இரண்டாவது,

## தேவர்கள் பிரமலோகமடைந்த அத்தியாயம்.

அருமறை யந்தணர் கடன்க ளாற்றிட
மருவிரி கமலமேல் வண்டு பாணசெய
விரிகதிர் திசைதொறும பரப்பும் விணணவன்
முரிதிரைக் கருங்கடன் முகட்டிற் றோன்றினன்.

(இ-ள்.) அருமையாகிய வேதங்களில் வல்லவராகிய பிராமணர்கள் தமது காலைக்கடனைச் செய்யவும், வாசனையோடு (இதழ்கள்) விரிந்த தாமரைமலர்களில வண்டுகள் பண்பாடவும், விரிந்த கிரணங்களைத் திக்குகள்தோறும பரப்புகினற சூரியன், மடங்குகின்ற அலைகளையுடைய கருமையாகிய சமுத்திரத்தின் உச்சியில் உதயமாயினன். எ - று.

பொழுதுபுலர்ந்து சூரியோதயகாலமானாலன்றி அந்தணர் தமது கடன செய்தலில்லை யாதலாலும், சூரியன் உதித்தாலன்றித் தாமரை மலர்தலில்லாமல் அதனிடத்தில் வண்டுகள் தேனுண்டு இசைபாடுதலில்லையாதலாலும், அவை நிக ழச் சூரியன் உதயமானான் என்று பொருள்பட "அருமறை யந்தணர் கடன்க ளாற்றிட மருவிரி கமலமேல் வண்டு பாண்செய"—எனக் கூறினர். (க)

எழுந்தவெய் யவனழற் கிறைவன் றிக்கினைக்
கழிந்துபோய்ச் செந்தமிழ்க் கடவுண் மால்வரை
தழங்கிசை யருவியிற் றவழுந் தென்றலங்
கொழுந்துலாந் தென்றிசைக் குறுகன் மேயினன்.

(இ-ள்.) அவ்வாறு உதயமான சூரியன், நெருப்புக்குத் தலைவனுகும் அக்கினிபகவானது திசையை நீங்கிச் சென்று, செவ்விய தமிழ்க்கடவுளாகிய அகஸ்தியமுனிவர் எழுந்தருளிய பெரிய பொதியமலையினது ஒலிக்கின்ற ஓசையையுடைய அருவியாற்றில் தவழ்ந்துசெல்லும் அழகிய இளந்தென்றலானது உலாவுகின்ற தென்றிசையை நெருஙகினன். எ - று.

வெய்யவன் - சுடுகின்ற கிரணங்களையுடையவன்.

இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் அஷ்டதிக்குப்பாலகர் முறையே கிழக்குமுதல் வடகிழக்கீறாக இருப்பதாதலின், அழற்கிறைவன் திக்கு எனபது தென்கிழக்கு.

தமிழ்க்கடவுள் அகஸ்தியர் என்பதை.

காஞ்சிபுராணம் பாயிரம்.

"காசியி னின்றும் போந்து கம்பர்தா மருளப் பெற்று
மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமே
லாசிலாத் தமிழ் பரப்பி யருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசினன் மலைய வெற்பிற் குருமுனி திருத்தாள் போற்றி."—எனவும்,

காஞ்சிபுராணம் - தழுவக்குழைந்தபடலம்.

"எவவினையு மோம்புதலாற் றிராவிடமென் றியல்பாடை
யெவவமறப் புதிதாக யான்வகுப்ப நல்கியது
வெவவருணத் துள்ளார்க்கு மெளிதாகப் புத்தேளி
ரெவ்வெவர்க்குஞ் சுவையமிழ்தி னினிதாகச் செய்தருள்வாய்.

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ." — எனவும் வருவன
வற்றாற் காண்க. (உ)

கனைகதிர்ப் பரிதியங் கடவுள் வானவன்
றுனைவயப் புரவிக டூண்டச் செல்கில
வெனையரோ தடுப்பவ ரென்ன வெண்ணுறு
வனைகழ லருணனும் வணங்கிக் கூறுவான்.

(இ-ள்.) நிறைவாகிய கிரணங்களையுடைய அழகியசூரியபகவானது விரை ந்துசெல்லும் (தேரிற் பூட்டிய) வெற்றி பொருந்திய குதிரைகள் செலுத்துகையில் செல்லவில்லை (ஆதலால் தேரைச் செல்லவொட்டாமல்) தடுப்பவர் யாவரோ என் றெண்ணி, அலங்கரிக்கின்ற வீரக்கழலை யணிந்த அருணனும் (சூரியனை) வணங்கிச் சொல்லுகின்றான். எ - று.

சூரியன்தேர் ஒற்றைச்சக்கர முடையது. அருணன் என்பவன் சூரியனது ரதசாரதி. (௩)

என்னுடைப் பணியினா லன்றி யெல்லொளி
மன்னவ பொலங்கிரி வலங்கொ ளேலென
மின்னகு மணிதிகழ் விந்த மால்வரை
தன்னுடை வலியினாற் றடுத்த தாமென்றான்.

(இ-ள்.) பகலில் பிரகாசத்தை உண்டுசெய்கின்ற சூரியனே ! எனது கட் டளையாலல்லாமல், பொன்மலையாகிய மேருமலையை வலஞ்செய்யாதே' யென்று மின்னலைக் கக்குகின்ற நவமணிகள் விளங்கும் பெரிய விந்தபர்வதமானது தனது வல்லமையால் (நமது தேரைச் செல்லவொட்டாமல்) தடுத்ததாகும் என்று அரு ணன் சொன்னான். எ - று.

சூரியனுக்குப் பகலவன் என்று பெயரொன்றிருப்பதால் "எல்லொளிமன் னவன்" என்றார். எல் என்பதற்கு இரவு, பகல் என்று பொருள்க ளிருப்பினும் சூரியன் இரவி லுதித்தல் இல்லையாதலால் ஈண்டு பகலெனப்பட்டது.

பொலங்கிரி என்பதற்கு அழகிய மேருமலை எனக் கூறினு மமையும். (௪)

என்றலு மிருட்குறும் பெறியும் வெய்யவன்
றன்றிரு விசும்பெலா மறைதத தோற்றத்தா
னன்றுசன் றிதன்வலி யென்று நன்மணிக்
குன்றினை வியப்பொடுங் குறித்து நோக்கினன்.

(இ-ள்.) என்று (இவ்வாறுஅருணன்) சொல்லவும், இருளாகிய பகையினை அழிக்கின்ற சூரியன், நெருங்கிய பெரிய ஆகாய முழுவதையும் மறைத்துவிட்ட காட்சியினால், இவவிந்தபர்வதத்தின் வல்லமை மிகவும் நன்றாயிருந்தது என்று சொல்லி, நல்ல நவமணிகளையுடைய விந்தபர்வதத்தை மதித்து ஆச்சரியத்தோடு பார்த்தனன். எ - று. (ரு)

வடதிசைக் குணதிசை மருவி வாழுநர்
படர்வெயில் கனற்றலிற் பையு ளெய்தினர்
குடதிசைத் தென்றிசைக் குழுமி வாழுநர்
மிடையிருட் பிழம்பினு லுள்ளம் வெம்பினர்.

(இ-ள்.) வடதிசையிலும் கீழ்த்திசையிலும் பொருந்தி வாழ்கின்ற ஜீவ கோடிகளெல்லாம் எங்கும் பரவியவெயில் சுடுதலினால் (சகிக்கமுடியாது) துன்பத்தையடைந்தனர். மேற்றிசையிலும் தென்றிசையிலும் கூடிவாழ்கின்ற ஆன்ம கோடிகளெல்லாம் நெருங்கிய இருட்கூட்டத்தினால் (ஒன்றுந்தெரியாமல்) மனம் வருந்தினா. எ - று. (சு)

அருமறை வேள்விகண் முதல வாகிய
கருமமென் றுரைத்தவை யாவுங் காய்கதி
ரிரவியஞ் செல்வனை யின்றி யின்மையால்
விரிகட லுலகெலாந் துயரின் வீழ்நதவே.

(இ-ள்.) அருமையான வேதசம்பந்தமாகிய யாகங்கள் முதலான காரியங்கள் என்று சொல்லப்பட்ட செயல்கள் எல்லாம் சுடுகின்ற கிரணங்களையுடைய அழகிய செல்வனாகிய சூரியனையின்றி இல்லாமையினால், மிகுந்த நீர்ப்பெருக்கினையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த உலகின்கண்ணுள்ள ஆன்மாக்கள்யாவும் துன்பக் கடலி வாழ்ந்தன. எ - று.

உலகு இடவாகுபெயராய் ஆன்மாக்களை யுணர்த்தி நின்றது. (எ)

தோற்றுவித் தளித்தவை துடைத்தல் காலங்கள்
போற்றுதல் வெங்கதிர்ப் புனித னன்றிமற
றுற்றுந ரின்மையா லுலகம் யாவையு
மாற்றருஞ் சித்திர மென்ன வைகுமால்.

(இ-ள்.) எல்லாவற்றையும் உண்டாகச்செய்து அவற்றைப் பாதுகாத்து பிறகு அழிததலும், புண்ணியகாலங்களைக் கொண்டாடுதலும், வெவ்விய கிரணங்களையுடைய பரிசுத்தனாகிய சூரியனை யல்லாமல் செய்கின்றவர் வேறில்லாமையினால் உலகினுள்ளபிராணிக ளெல்லாம் மாற்றுவதற்கரிய சித்திரப்பதுமையைப் போல அசைவற்றிருந்தன. எ - று.

தோற்றுவித் தளித்தவை துடைத்தல் என்பதை,

சிவஞானசித்தியார்.

"சாற்றிய கதிரோ னிற்கத் தாமரை யலருங் காந்தங்
காற்றிடுங் கனலை நீருங் காந்திடுங் காசினிக்கே."—என்பதனானுணர்க.

அந்தந்தப் புண்ணியகாலங்களில் ஒவ்வொருவரும் விரதாதிகளை அநுஷ்டித்து ஒழுகுவதற்குக் காலத்தைக்கணித்துத் தினகரன் எனனும் பெயருற்று விளங்குகின்றவன் என்பது தோன்ற "காலங்கள் போற்றுதல்" என்றார். (அ)

ஓரிடை வெயிலிரு ளோரி டத்ததாய்ச்
சேர்தலி னாகருந் தேவர் யாவரும்
பார்மிசை முனிவரும் பங்க யாசனன்
வார்கழற் றாமரை யடைந்து வாழ்த்தினர்.

(இ-ள்.) ஒருபக்கத்தில் வெயிலும், மற்றொரு பக்கத்தில் இருளுமாகச் சேர்ந்திருத்தலால், நாகலோகத்தாரும், முப்பத்துமுக்கோடி தேவர்களும், பூமியின்மீதுள்ள முனிவர்களும், (அத்துன்பத்தினின்று நீங்கும்பொருட்டு) தாமரைமலர்ப் பீடத்தையுடைய பிரமதேவனது நீண்ட வீரக்கழலணிந்தபாதமாகிய தாமரைகளைச் சரணடைந்து வாழ்த்துவா ராயினர். எ - று.

பிரமதேவனை இவர்கள் வாழ்த்துதல் பொருந்துமோ வெனின், கடவுளை வாழ்த்துவதாலேயே தாம் வாழ்வராதலாற் பொருந்துமென்க. இதனை,

திருவாசகம்.

"வாழ்த்துவதும்வானவர்கடாம்வாழ்வான்மனநின்பால
தாழ்த்துவதுந்தாமுயர்ந்துதம்மையெல்லாந்தொழவேண்டி
சூழ்த்துமதுகரமுரலுந்தாரோயைநாயடியேன்
பாழ்த்தபிறப்பறுத்திடுவான்யானுமுன்னைப்பரவுவனே." — என்பதனுனுணர்க. (௯)

வேறு.

அருவமா யுருவ மாகி யாதியா யநாதி யாகிப்
பிரமமா யடைதற் கெட்டாப் பேரின்ப வீட தாகி
யிரணிய கருப்ப னாகி யாருமா யெவையு மாகித்
தெரிவரும் பொருளாய் நின்ற நின்னடி சென்னி சேர்ப்பாம்.

(இ-ள்.) அருவமாகியும், உருவமாகியும், (அருவுருவமாகியும்) எல்லாவற்றிற்கும் ஆதியாகியும், அநாதியாகியும், பிரமமாகியும்,எத்தன்மையர்களாலும் அடைவதற்கு எட்டாததாகிய பேரின்பத்தைத் தரத்தக்க முத்தியாகியும், இரணியகருப்பனாகியும், சரமாகியும், அசரமாகியும், (இவ்வகையினதென்று)தெரிந்து உரைத்தற்கரிய பரம்பொருளாகியும், எழுந்தருளியிருக்கின்ற தேவரீருடைய திருவடிகளை எம்முடைய சிரசின்மேல்வைத்து வணங்குகின்றோம். எ - று.

போற்றிப்பஃறொடை.

" நன்னெறியின் ஞானகலர் நாமேல மொன்றினையும்
அந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப்—பின்னன்பு
மேவா விளங்கும் ப்ரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப்—பூவலையந்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை—அன்னவனுக்
காதிகுணம்"—என்றபடியே,

ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களுள் ஆணவம் ஒன்றினையேயுடைய விஞ்ஞானகலர்க்கு அருண்மயமாகவே நின்று அவருள்ளத்தெழுந்தருளி அனுக்கிரகிப்பவன் என்பார் "அருவமாய்" என்றும், ஆணவம் கன்மமென்னும் இரண்டினை யுடைய பிரளயாகலர்க்கு மான் மழு சதுர்ப்புஜஙகளோடு எழுந்தருளித் திருவருள்புரிந்தும், அம்மூன்றினையும் ஒருங்கேயுடைய சகலர்க்கு மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல ஆசாரியத் திருவுருவங்கொண்டு ஆன்மாக்களின் பாசவீக்கம் போக்கிப் பேரருள் புரிந்தும் விளங்குகின்றவன் என்பார் "உருவமாகி" என்றும், எல்லாக் கடவுளருக்கும் முதற்பெருங்கடவுளென்பார் "ஆதியாய்" என்றும், ஓர்காலத்தில் தோன்றுதல் இல்லவனென்பார் "அநாதியாகி" என்றும், உருவம்அருவம் உருவாருவம் என்னும் இம்மூவகைத்திருமேனிகளும் ஆன்மகோடிகட் கருள்செய்தற்பொருட்டே யன்றித் தனக்கெனச சுதந்தர விலக்கணமுடையவ னன்றென்பார் "பிரமமாய்" என்றும், சிந்தையும் நிலையுஞ் செல்லா நிலைமைத்தென்பார் "அடைதற்கெட்டா" என்றும், யாகாதிகளைச்செய்து முடித்து சுவர்க்காதிபோகங்களை அனுபவித்துள்ளார்க்கும், அதனைவெறுத்து நிலையுள்ளதாகவிரும்புந் தன்மையதென்பார் "பேரின்பம்" என்றும், தத்துவசோபானங்களைக்கடந்து நிற்றலே முத்தி யென்பார் "வீடு" என்றும், அண்டபிண்டஙக ளனைத்தையும் தனக்குரிய திருமேனியாகக்கொண்டுள்ளவன் என்பார் "இரணியகருப்பனுகி" என்றும், 'எல்லாமா யல்லவுமாய்' என்றபடியே எவவகைப் பொருளுள்ளும் எள்ளில் எண்ணெய்போற்கலந்துள்ளவ னென்பார் "யாருமாயெவையுமாகி" என்றும், 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' என்றபடியே, அத்துவிதமாக அறிந்துள்ள சிவஞானிகளுக்கு அனுபவித்துணர்தற் கியலுமேயன்றி முனனிலையாகச் சுட்டுணர்தற்கு அரியவனென்பார் "தெரிவரும்பொருளாய்" என்றும், இவ்வகைய திருக்கோலமனைத்தும் எம்போல்வார்க்கு அருளக்கருதி எம்முன்னே தோன்றினை என்பார் "நின்ற" எனவுங்கூறினர்.

அருவமாவன - சிவம், சத்தி, நாதம், விந்து என்பனவாம். உருவமாவன - மகேச்சுரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன் என்பனவாம். அருவுருவமாவது - சதாசிவன்.

"அருவமாய் உருவமாகி" என்பதனுல் "ஒருமொழி யொழிதன் னினங் கொளற் குரித்தே" என்றபடி அருவுருவமும் வருவித்துரைக்கலாயிற்று. (௧0)

எழுதரு மறைகட் கெய்தா தெங்குமாய் நின்றாய் போற்றி
மொழியுடன் மனதுக் கெட்டா முழுப்பரம் பொருளே போற்றி
தொழுதகு தவத்தோர் நெஞ்சத் தூவெளி யதனிற் றேன்றி
யழிவருஞ் சோதி யாய வருமறைக் கொழுந்தே போற்றி.

(இ-ள்.) எழுதுதற்கரிய வேதங்களால் காண்பதற்கரிதாய் எங்கும் நிறைந்துள்ள கடவுளே வந்தனம். மனம் (வாக்கு) காயம் என்னும் திரிகாணங்களுக்கும் எட்டாத நிறைந்த பரம்பொருளே வந்தனம். (உலகத்திலுள்ள யாவராலும்) வணங்கத்தகுந்த தவத்தினையுடைய மெய்ஞ்ஞானிகளின் இருதய மென்னும் ஞானகாயத்தில் வீற்றிருந்தருளி, கெடாத பரஞ்சோதியும் அரிய வேதத்தின் கொழுந்துமாயுள்ள எம்பெருமானே தேவரீருக்கு வந்தனம். எ-று.

உதாத்தம், அனுதாத்தம், சொரிதம் முதலிய ஒலிவடிவாயுள்ள வேதங்களனைத்தும் எழுதாக்கிளவியே என்பார் "எழுதருமறைகள்" என்றும், "வேதங்களையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே" என்னும் திருவாதவூரடிகளது திருவாக்கின்படியே, வேதங்கள் பல்லூழிகாலம் வருந்தித் தேடினும், அவற்றிற் கெட்டாப் பரம்பொருளென்பார் "எய்தாது" என்றும், "ஒன்றுநீ யல்லே யன்றியொன் றில்லை" என்றாற்போலச் சிற்சடப் பிரபஞ்சங்களனைத்தும் தன்னையன்றி வேறாக இயலாவென்பார் "எங்குமாய்" என்றும், அத்தகையனேனும், பசுகரணத்துடன் காண முயலும் ஆன்மகோடிகளின், மனம் வாக்கு காயங்கட்கு அதீதமாயுள்ளவனென்பார் "மொழியுடன் மனதுக் கெட்டா முழுப்பரம் பொருள்" என்றும், தவமுதிர்ச்சியால் தெய்வீகம்பெற்று ஏனையோர் வணங்கத்தக்க தகுதியினர் என்பார் "தொழுதகுதவத்தோர்" என்றும், "மலர்மிசையேகினான்" எனறபடியே பெருந்தவத்தினையுடைய மெய்ஞ்ஞானிகளின் இருதயமாகிய பரமாகாயத்தில் வீற்றிருந்தருள்பவனென்பார் "நெஞ்சத் தூவெளி யதனிற் றேன்றி" எனறும், அத்தோற்றம் பூத பவுஷிய வர்த்தமானம் என்னும் முக்காலத்தினுங் கெடாத கோடிசூரியப் பிரகாசமாயுள்ளதென்பார் "அழிவருஞ் சோதியாய" என்றும், வேதங்களால் தேடிக் காண்டற்கு அரியவனுயிருந்தும், அவற்றைவிட்டு நீங்காமல் அவற்றின் கொழுந்துபோல முடிந்தபொருளாக உள்ளவனென்பார் "அருமறைக் கொழுந்தே போற்றி" என்றுங் கூறினர்.

"மொழியுடன் மனது" என்றமையால், வாக்கு என்பது வருவித்துரைக்கப்பட்டது.

"தொழுதகுதவத்தோர் நெஞ்சத்தூவெளி" என்பதனை,

திருவாதவூரர் புராணம்.

"முக்குணம்புல னைந்துட னடக்கி மூல வாயுவை யெழுப்பிரு வழியைச்
சிக்கெ னும்படி யடைத்தொரு வழியைத் திறந்து தாண்டவச் சிலம்பொலி
யுடன்போய்த், தக்க வைஞ்செழுத் தோரெழுத் துருவாந் தன்மை கண்டரு
டரும்பெரு வெளிக்கே, புக்க மூந்தின ரெமதுருப் பெறுவர் புவியில் வேட்
டுவ னெடுத்தமென் புழுப்போல்."—என்பதனு னுணர்க. (கக)

விச்சையா யவிச்சை யாகி விளங்குமுக் குணத்திற் றோன்றி
முச்செயல் புரியா நின்ற மூவராய்க் கால மேவா
திச்சையிற் புருட னாகி யிறைஞ்சுநர் பவத்தில் வீழு
மச்சம தகற்றி நின்ற வமலனே போற்றி போற்றி.

(இ-ள்.) விச்சையாகியும், அவிச்சையாகியும், விளங்குகின்ற (இராசதம தாமதம் சாத்துவிகம் என்னும்) முக்குணங்களினிடமாகத்தோன்றி, (சிருட்டி திதி சங்காரம்என்னும்) முத்தொழில்களையும் செய்கின்ற (பிரமன் விஷ்ணு உருத்திரன் என்னும்) மூன்று மூர்த்திகளாகியும், காலாதீதப்பட்டு இச்சையினால் பரமபுருடனாகியும், தம்மை வணங்குகின்ற ஆன்மகோடிகள் ஜனனசாகரத்தில்வீழ்ந்து வருந்துகின்ற பயத்தை யொழித்து எழுந்தருளிய மலரகிதனே தேவரீருக்கு வந்தனம். வந்தனம். எ - று.

விச்சை - ஞானம், அவிச்சை - அஞ்ஞானம்.

"விச்சையா யவிச்சையாகி" —என்பதனை,

திருவாசகம்.

"கையார்வளைசிலம்பக்காதார்குழையாட
மையார்குழல்புரளத்தேன்பாயவண்டொலிப்பச்
செய்யானைவெண்ணீறணிந்தானைச்சேர்ந்தறியாக்
கையானையெங்குஞ்செறிந்தானை அன்பர்க்கு
மெய்யானையல்லாதார்க்கல்லாதவேதியனை
யையாறமர்ந்தானைப்பாடுதுங்காணம்மானாய்."—என்பதனானும்,

"இறைஞ்சுநர் பவத்தில் வீழு மச்சம தகற்றி நின்ற வமலன்"—என்பதை,

சிவஞானசித்தியார்.

"அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே." என்பதனானுமுணர்க.

இராசதகுணம் ஒன்றையேகொண்டு சிருட்டித் தொழிலைச் செய்து பிரமனாகியும், இராசத தாமத குணங்களைக் கொண்டு சிருட்டி திதிகளைச் செய்து விஷ்ணுவாகியும், இராசத தாமத சத்துவகுணஙகளைக்கொண்டு சிருட்டி திதி சங்காரங்களைச் செய்து உருத்திரனாகியும் விளங்குகின்றவன் என்பார் "விளங்கு முக் குணத்திற் றோன்றி முச்செயல் புரியா நின்ற மூவராய்" என்றார். (கஉ)

ஐம்பெரும் பூத மாகி யவற்றுறு குணங்க ளாகி
யைம்பொறி யாகி யந்தக் கரணமா யறிவு மாகி
யைம்பெருங் கரும மாகி யனைத்தினுந் தோய்ந்துந் தோயா
வைம்பெருங் கடவு ளாகு மாதிநின் னடிகள் போற்றி.

(இ-ள்.) (பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும்) ஐந்து ஸ்தூல பூதங்களாகியும், அப் பூதங்களினிடத்திற் பொருந்திய (ஐந்து) குணங்களாகியும், (மெய் வாய் கண் மூக்கு செவி என்னும்) ஐம்பொறிகளாகியும், (மனம், புத்தி, சித்

தம, அகங்காரம் என்னும் நான்கு) அந்தக் கரணங்களாகியும், (ஆன்மாக்கட்டோறும் விளங்குகின்ற) அறிவின்மயமாகியும்,(சிருட்டி,திதி,சங்காரம், திரோபவம்,அனுக்கிரகம் என்னும்) ஐந்து பெருந்தொழில்களாகியும், (இவைபோன்ற) எல்லாவற்றிலும் கலந்திருந்தும் அவற்றிற், கதீதமாகிய, (பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன்,சதாசிவன் என்னும்) ஐந்து பெருந்தேவர்களாக விளங்கும் முழுமுதற் கடவுளே தேவரீரது திருவடிகளுக்கு வந்தனம். எ - று.

"ஐம்பெரும் பூதமாகி யவற்றுறு குணங்களாகி"—என்பதனை,

உண்மைவிளக்கம்.

"மண்கடின மாய்த்தரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமா
மொண்கனல்சுட் டொன்றுவிக்கு மோவாமல்—வண்கால
பரந்துசலித் துத்திரட்டும் பார்க்கிலா காயம்
நிரந்தரமாய் நிற்கு நிறைந்து."—என்பதனாலும்,

அறிவின்மயமாக விளங்குகின்றார்—என்பதை,

திருமூலர் திருமந்திரம்.

"அறிவு சிவமிரண் டென்ப ரறிவிலார்
அறிவு சிவமாவ தாரு மறிகிலார்
அறிவு சிவமாவ தாரு மறிந்தபின்
அறிவே சிவமா யமர்ந்திருப் பானே."— என்பதனானு முணர்க. (௧௩)

வெருவரும் காம மாதி வெஞ்சுற வெறிய நீங்கா
விருவினைத் திரைக ளெற்றும் பிறவியங் கடலு ளெய்தி
மருளுறு முயிர்க ளெல்லாம வருந்துறா தேற்ப ஞான
வருளுரு வெடுத்த வுன்ற னடியிணைக் கன்பு செய்வாம்.

(இ-ள்.) அச்சத்தைத்தருகின்ற காம முதலிய வெவ்விய மகரமீன்கள் அடிக்க, நீங்காத (பாவ புண்ணியங்களெனனும்) இருவினைகளாகிய அலைகள் மோதுகின்ற பிறவிக்கடலில் வீழ்ந்து, மயங்கிக் கிடக்கின்ற ஆன்மகோடிகளெல்லாம் வருத்தமடையாமல், வீட்டைப்பெறும்படி, ஞானமயமாகிய அருள்விளங்கும் திருவுருவமெடுத்த தேவரீரது உபயபாதங்களுக்கு நாங்கள் யாவரும் அன்புசெய்கின்றோம். எ - று.

காமமாதி என்பன - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் ஆறுமாம்.

வெரு வரும் - என்பதில் வெரு - முதனிலைத் தொழிற்பெயர். (௧௪)

உயிர்ப்புறு மறைகள் வேரிவ் வுலகெலாஞ் செய்ய பொற்றுள்
பயிர்ப்புறு நிலதின் சென்னி பரமவா காய மாகும்
வியப்புறு சுழிக ளுந்தி நடுவெளி யாகு மெய்யின்
மயிர்த்தொகை யனைத்து மெண்ணில் வான்றருக் குலங்க ளாமால்.

(இ-ள்.) தேவரீரது சுவாசமாகப் பொருந்திய வேதங்கள் எல்லாவற்றிற்கும் மூலமாகும், பயிர்ப்பினையுடைய நிலமாகிய இவ்வுலகமெல்லாம் தேவரீரது

அழகிய சிவந்த திருவடிகளாகும். பரமாகாயம் தேவரீரது திருமுடியாகும். வியக்கத்தக்க நீர்ச்சுழிகள் தேவரீரது கொப்பூழாகும். வெளியானது தேவரீரது இடையாகும். அளவில்லாத சிறந்த விருக்ஷசாதிகளெல்லாம் தேவரீரது திருமேனியிலுள்ள மயிர்க்கூட்டங்களாகும். எ - று. (கடு)

கடவுணின் மனத்திற் றோன்றுங் கலைமதி கண்ணிற் றோன்றும்
படர்வெயிற் கற்றை கான்று பாயிருள் பருகும் வெய்யோன்
மிடைதரு புவன மெல்லா நின்னுழை மேய வேத்தப்
படுபுகழ் புகழ்வோன் போற்றப் படுநில நீயே யாமால்.

(இ-ள்.) பிரமதேவனே! தேவரீரது இதயத்தில் (சோடச)கலைகளோடு கூடிய சந்திரன் உதிப்பான். தேவரீரது நேத்திரத்தில் படர்ந்த கிரணத்தொகுதியாகிய வெயிலைக் கக்கி நெருங்கிய இருளை உண்ணுகின்ற சூரியன் உதிப்பான். நெருங்கிய உலகங்களெல்லாம் தேவரீரிடத்திலே பொருந்தியுள்ளன. துதிக்கப்பட்ட புகழ்ச்சியும், புகழ்பவனும், புகழ்ச்சி செய்யப்பட்ட பூமியும் தேவரீரேயாகும் (ஆதலால் தேவரீரையன்றிப் பிறிதொன்றுமில்லை.) எ - று. (கசு)

என்றடி தொழுது போற்றி யிமையவர் நிற்ப வோங்குங்
குன்றிருஞ் சிறைக ளீர்ந்த குரிசில்வாண் முகத்தை நோக்கித்
துன்றிரு விசும்பி னின்றும் போந்தமை சொல்லு கென்ன
மன்றலங் கமலப் புத்தேண் மனமகிழ்ந் துரைக்க லுற்றான்.

(இ-ள்.) என்றிவ்வாறு தேவர்கள் (பிரமதேவனது) திருவடிகளைவணங்கித் துதித்து நிற்க, உயர்கின்ற பர்வதங்களினது பெரிய சிறகுகளை அரிந்த இந்திரனது ஒளிதங்கிய முகத்தைப்பார்த்து, நெருங்கிய பெரிய தேவலோகத்தினின்றும் நீங்கள் (யாவரும் ஒருங்குகூடி) வந்த காரணம் யாது? சொல்லக்கடவீர் என்று வாசனைவீசும் அழகிய தாமரைமலரில் எழுந்தருளியுள்ள பிரமதேவன் மனக்களிப்படைந்து சொல்லத் தொடங்கினான். எ - று.

இமையவர் என்பதற்கு, கண்களை இமைக்காதவர்கள் என்று பொருள்.

"குன்றிருஞ் சிறைகளீர்ந்த குரிசில்"—என்பது,

முற்காலத்தில் மலைகளுக்குச் சிறகுகளிருந்தமையால் அவை நிலையியற் பொருளாக விராமல், தமக்கு விருப்பான இடங்கட்குப் பறந்து சென்று இறங்குகின்றதும், சிறிதுகாலம் அங்கிருந்து பிறகு வேறோரிடத்திற்குப் போகின்றதுமாகி இயங்கியற் பொருள்களாயிருந்தன. அதனால பூமியிலுள்ள மனிதர்முதலிய பல பிராணிகளுக்கும், விருட்சம் நீர்நிலை முதலியவற்றிற்கும், தீங்குநேரிடுகின்றமை நோக்கிய தேவர்கள் தமது அரசனாகிய இந்திரனிடம் முறையிட, இந்திரன் தன் கையிலிருந்த வச்சிராயுதத்தால் எல்லாமலைகளின் சிறகுகளையும்அறுத்து, அசலமென்னும் பெயரையடையச்செய்தனன். அப்போது அவன்கை வச்சிராயுதத்துக்குப்பயந்து கீழ்த்திசைக்கடலில் இடபகிரி, துந்துபிகிரி, தூமிரகிரி என்கிற மூன்றும், தென்றிசைக்கடலில் சக்கரகிரி, மைநாககிரி, வலாககிரி என்கிற மூன்றும், மேற்றிசைக்கடலில் சோககிரி, வராககிரி, கந்தனகிரி என்கிற மூன்றும், வடதிசைக்கடலில்

கங்ககிரி, சந்திரகிரி, துரோணகிரி எனகிற மூன்றும் ஆகப் பன்னிரண்டு மலைகள் உவர்க்கடலில் ஒளித்துக் கொண்டன.

அசலம் - சலனமற்றது அதாவது அசைவில்லாதது. (கஎ)

வழுத்துமித் துதியா லென்னை முகுந்தனை மழுவ லானை
முழுத்தபே ரனபு முற்றி முறையினிற் பரவி னோக்கு
விழுத்தகு பொருள்க ளாகி வேண்டுவ வெறுபப நலகித்
தொழத்தகு மறைக ளேத்துந் தூயவீ டளித்து மன்றே.

(இ - ள்.) நீஙகள் என்னை வணங்கிச் சொல்லிய இததோத்திரத்தால், என்னையும் விஷ்ணுமூர்த்தியையும் மழுவாயுதத்தையுடைய சிவபெருமானையும், நிறைந்த பேரனபானது முதிர்ந்து, கிரமததுடன் துதிசெய்தவர்களுக்கு, மேன்மை தங்கிய பொருள்களாகி (அவர்களால) விரும்பப்படுவனவற்றை, விரும்பிய அளவினும் மிகுதியாகக் கொடுத்து, (யாவராலும்) வணங்கத்தக்க வேதங்கள் துதிசெய்கின்ற பரிசுத்தமாகிய மோக்ஷத்தைக் கொடுப்போம். எ - று. (கஅ)

வெருவர லொழிந்து நெஞ்சின் வெந்துயர் தவிர்க நீவி
ரருமறை முதல வாய விஞ்சைநன் மகங்க ளான்ற
பொருவறும் வாய்மை நீதி புனிதமா தவங்கள் யாவு
முருவுகொண் டெம்மை நீங்கா துவப்பொடு மினிது வைகும்.

(இ-ள்.) நீங்கள் அச்சப்படுதலைவிட்டு உங்கள் மனதிலுள்ள கொடியதுன்பம் நீங்கக்கடவீர். அரிய வேதங்கள் முதலாயின வித்தைகள், நல்லயாகங்கள், மேம்பட்ட சமானமற்ற சத்தியம், நீதி, பரிசுத்தமான சிறந்த தவங்கள், முதலானவையெல்லாம் எமதுவடிவத்தைப்பெற்று எம்மை எப்பொழுதும்பிரியாமல் சந்தோஷத்துடன் இனிமையாக வாசஞ்செய்யும். எ - று.

பொருவறும் வாய்மை-என்பதனை,

காஞ்சிபுராணம்.

"மெய்யே சிறந்த பெருநலமா மெய்யே யெவையு நிலைபெறுத்து
மெய்யா லழல்கால் கதிர்பிறவுந் தத்தந் தொழிலின விலகாவா
மெய்யே யெவைக்கு மிருப்பிடமா மெய்யே மெய்யே சிவமாகு
மெய்யே பிரம பதமெனவும் புகனறான் வினைதீர் காசிபனே."—என்னுஞ் செய்யுளா லுணர்க. (ககூ)

ஒலிமுதற் புலன்க ளைந்து மொடுக்கியுட் கரணஞ் செற்றோ
ரலகினுன் மறையுந் தெள்ளி யறநெறித் துறையு ணின்றோர்
பலன்விழை யாது நோற்போர் பத்தினிப பெணடி ராவின்
குலமினி தருந்தப் பைமபுற் கொடுப்பவர் தவத்தின் மிக்கோர்.

(இ-ள்.) சத்தம் முதலிய ஐம்புலன்களையும் அடக்கி, அந்தக்கரணங்களைச் செயித்தவர்களும், குற்றமற்ற நான்கு வேதங்களையுங் கொழித்து தருமமார்க்கத் துறையில் நின்றவர்களும், (பெறவேணடிய) பிரயோசனமாக (ஒன்றையும்) விரும்பாமல் விரதங்களை ஆசரிப்போர்களும், கற்பினையுடைய பெண்களும், பசுக்களின்

குலமானது இனிமையாகவுண்ணப் பசியபுல்லைக் கொடுத்தவர்களும், தவத்தின மேம்பாடுடையவர்களும். எ - று.

இதுமுதல் நான்கு பாடல்கள் * குளகம்.

சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் - இவையே ஐம்புலன்கள்.

வேதம் நான்காவன :—இருக்கு,யசுர்,சாமம், அதர்வணம். அன்றியும், உப வேதம் நான்கு - ஆயுள்வேதம், அருத்தவேதம், தநுர்வேதம், காந்தருவவேதம. இன்னது வேண்டுமென்னும் விருப்பால் விரதமிருக்கின்,அது இம்மையில் மாத்திரம் பயன்றருமே யல்லது, மறுமையிற் சிறிதும் பயன்படுவதல்ல ஆதலின், விரதமிருக்கும்பொழுதும் "ஓருமை மனத்திற் பணிவோ ரெவரவ ருத்தமரோ" எனக் கூறியுள்ளதுபோற் சிந்தையின்றி வணங்கவேண்டும் என்பார் " பலனவிழையாது நோற்போர் " என்றார்.

ஆவிற்குப் புல் கொடுத்தோர் பலன்- சிவபுண்ணியத்தெளிவு,

" இரவி யெழுமுற் காலத்தி னெழுந்தோர் பிடிபுற் பறித்தன்பாற்
பரவி யரிய சுரபிகட்குப் பரிந்து கொடுத்த பெருந்தவத்தோர்
விரவும் வறுமை யாவைகளும் விரவா தொழிந்தே வெண்மதியு
மரவு மணியு மணிமுடியோ னமருஞ் சிவலோ கத்தடைவார்."என்பதனுனுணர்க.

பிறர்மனை விழைதல் செய்யார் பெற்றதாய் தந்தை தாளி
னறுமலர் தூவித் தாழ்வோ ரான்மறைக் கிழவர் பாதத்
துறுபுன னுகர்வோர் கங்கைக் கரையினி லுடல நீத்தோர்
மறைபுகழ் பிரயாகை தன்னின் மாகநீர் படிந்த தூயோா.

(இ-ள்.) அன்னியரது மனைவியரை விரும்பாதவர்களும்,தன்னைப்பெற்ற மாதாபிதாக்களினது பாதஙகளில் வாசனைதங்கிய மலர்களால் அருச்சித்து வணங்குகின்றவர்களும், நான்கு வேதங்களையும் உரியவர்களாகிய பிராமணர்களது பாதோதகபானம் செய்தவர்களும், கங்காதீர்த்தக்கரையில் உடலைவிட்டு (உயிர்) நீங்கினவர்களும், வேதங்கள் புகழ்கின்ற பிரயாகையில் மகாட்சத்திரத்தில் மூழ்கின பரிசுத்தமானவர்களும். எ - று.

பாத உதக பானம் என்பது கால்களைக் கழுவிய சலத்தை உண்ணுதல்.

தாய் தந்தையர், அந்தணர் இவரது பெருமையை,

ஆசாரக்கோவை.

" அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்முன்
நிகரில் குரவ ரிவரைத்
தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே
யாவருங் கண்ட நெறி."—எனவும்,

" ஐம்பூதம் பார்ப்பார் பசுத்திங்க ளாயிறு
தம்பூத மெண்ணா திகழ்வானேல்—தன்மெய்க்கண்
ஐம்பூத மன்றே கெடும்."—எனவும் வருஞ் செய்யுள்களுக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையிற் காண்க.

* " குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்."—என்பது சூத்திரம்.

பிரயாகையின் சிறப்பை-காசி ரகசியம்.

"சூலடங் கேச ரெதிர்பிர யாகை துஜையினு மாவயிற் கங்கை
சீலமார் யமுனை சங்கம முழுகிற் சிதைதருங் கருப்படு மவத்தை"— என மாறுபடாது கூறியது காண்க. (உக)

ஒளிமதி யயனஞ் சார்ந்தோ ருபையகோ முகியை யீந்தோ
ரளியுட னிறந்தோர்க் கெல்லாங் கயையினி லன்ன மீந்தோர்
தெளிவுடன் புனித ராகித் திங்களொன் றிடையிட் டுண்போர்
களிதரு காம மாதி கழிமலங் கழுவு நீரார்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற சாந்திராயணவிரதத்தை அனுஷ்டித்தவர்களும், இரண்டு கோமாதாக்களை (முறைப்படி) தானஞ்செய்தவர்களும், (தனது வமிசத்தில்) இறந்த பிதுர்களுக்கெல்லாம் அன்புடன் கயாதீர்த்தக்கரையில், பிண்டம் கொடுத்தோர்களும், ஞானத்துடன் பரிசுத்தராகி மாதம் ஒன்று இடையில் விட்டுப் புசிப்பவர்களும், சந்தோஷத்தைத் தரத்தக்க காம முதலிய மிருதியாகிய குற்றங்களை ஒழிக்கும் தன்மையையுடையவர்களும். எ - று.

சந்திரன்வழியாக இருக்கும் விரதம் சாந்திராயணம். அதாவது சந்திரன் கலை குறையும் பக்கத்தில், கலைக்கோர் கவளமாகக் குறைத்தும், கலை வளரும் பக்கத்தில், கலைக்கோர் கவளமாக உயர்த்தியும் உண்ணுதல்.

உபயகோமுகியாவது—கன்றும் பசுவுமாகத் தானஞ்செய்தல். இதனை, சூல்கொண்ட பசுவைப் பிரசவிக்கும்போது கன்று தாயினின்றும் முற்றும் நீங்கா முன்னர் முறைப்படி வேதியருக் களித்தல். எனவுங் கூறுவர் சிலர்.

கயை என்பது கங்கைத்துறைகளில் ஒன்று. அவவிடத்தில் பிண்டம் இறந்தோர்க் களித்தால, அநேக காலம் பிண்டங் கொடுக்கவேண்டுவதில்லை என்றும் அநேக தலைமுறையில் இறந்தோரெல்லாம் முத்தியடைவரென்றுஞ் சொல்லுவர். இதுபற்றியே எவவிடத்தும் கருமஞ்செய்து முடிப்போர் பிதுர்களுக்குப் பிண்டமளிக்கையில் 'கயாபிண்டம்' எனக் கூறுதல் சாம்பிரதாயம்.

"திங்களொன றிடையிட் டுண்போர்" — என்பது மாச உபவாசமிருந்து பிறகு உண்ணுபவர்களை. (உஉ)

ஈங்கிவர் யாரு மெம்பா லினிதுவீற் றிருந்து பின்னர்
நீங்கருங் காசி தன்னிற் பிறந்துவெண் ணீற்று மேனிக்
கோங்குறழ் முலையாள் பங்கன் குனாகழற் கமலம் போற்றி
யாங்கவ னருளான் மீளாப் பேரின்ப மடைவர் மாதோ.

(இ-ள்.) ஆகிய இங்கு சொல்லப்பட்டவர்கள் யாவரும் எம்மிடத்தில்(சிறிதுகாலம்) இனிமையாக இருந்து, பிறகு (தேவர்களானாலும் சென்றால்) நீங்குதற்கரிதாகிய காசிநகரத்திற் பிறந்து,திருவெண்ணீற்றினையணிந்த திருமேனியையும், கோங்கரும்பையொத்த தனங்களையுடைய உமாபிராட்டியாரை அர்த்தபாகமாகவுமுடைய சிவபெருமானது சப்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிகளாகிய தாமரைகளைத் துதித்து, அச்சிவபெருமானுடைய திருவருளால் (எப்பொழுதும்) நீங்காத பேரினபத்தைப் பெறுவர். எ - று.

நீங்கருங் காசி—என்பதனை,

"மெல்லியல் பாக னுவந்துறை காசியை விட்டேனைத்
தொல்லை நெடும்பதி தனனை விரும்புதல் சூழுங்கால்
நல்லமிர் தந்தன தங்கை யிருப்பவு நச்சாமல்
புல்லறி வோடு புறங்கையை நக்குதல் போலாமால்."—என்னும்செய்யுளா
னுணர்க.

"வெண்ணீற்றுமேனி"—என்பது.

பிரமன் முதலிய தேவர்களையெல்லாம் எமது சிவபெருமான் சிருட்டித்து அழிக்கின்ற சம்ஹாரகாலத்தில், அப்பெருந்தேவர்களது என்புமாலைகளையும் சிரமாலைகளையும் அணிந்து, அவர்களது சரீரத்தைச் சூலத்தின் முனையிற் குத்திக் கொண்டு தமது நெற்றியில் விளங்குகின்ற அக்கினியாகிய கண்ணினால் உற்றுப் பார்த்து, அச்சரீரங்களைச் சாம்பராக்கி, தன்னையடைந்து யாவரும் உஜ்ஜீவிக்கும்படி அத்தூளனத்தைத் தமது திருமேனிமீது பூசுவர். —என்பது, இதனை,

கந்தபுராணம் தக்ஷகாண்டம்.

"வேதன் மான்முத லோரை நம்பன விதித்த ழித்திடு பொழுதெலாந்
தீதி லங்கவ ரென்ப ணிந்து சிரங்கள் கேச மணிந்துநீள்
கோதி லாதொளிர் சூல மீதுடல் கொண்டு நீறது கண்டுபின்
மீது பூசுமி யாவ ருந்தனை மேவி யுய்ந்திட வேண்டியே."—என்பதனு லுணர்க.

உறுபுல னடக்கி வேத நெறிவழி யொழுகி நின்ற
வறுதொழி லோரு மானுங் குலமொன ராமவரு ளாய்ந்து
மறுவறு மறையோர் தமபான் மந்திர மனைத்தும வைத்தேன்
றெறுவிடை யவிகள் யாவுந் தோமறத் தொகுத்து வைத்தேன்.

(இ-ள்.) தீமைபொருந்திய ஐம்புலன்களையொடுக்கி வைதிகசைவமார்க்கத்தில் நல்லொழுக்கம் பூண்டிருக்கும், ஆறுதொழிலினை யுடையவராகிய வேதியரும் பசுக்களும் குலத்தில் ஒன்றாகும். அத்தன்மையராகிய அந்தணர்களில் ஆராய்ந்து குற்றமற்ற வேதியரிடத்தில் மந்திரங்கள் எல்லாவற்றையும இருக்கச்செய்தேன். பசுக்கூட்டத்தினிடத்தில் அவிர்பபாகங்கள் எல்லாவற்றையும் குற்றம் நீங்கச் சேர்த்துவைத்தேன். எ - று.

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் — என்பவையே பிராமணரது அறுதொழில்கள். (உச)

ஆன்குளம் படியிற் சேர்ந்த வருந்துக டோயப் பெற்ற
வூன்பயில் யாக்கை கங்கை தோய்ந்ததா மருப்பி னுச்சி
வான்புனற் கடவுட் போயா றிருக்கும்வா னிலவு காலுங்
கூன்பிறை முடித்த செலவி கொம்பிடை வதியு மாதோ.

(இ-ள்.) பசுவினது குளம்பின்கீழ்ச் சேர்ந்திருக்கிற அரிய புழுதியானது படியப்பெற்ற மாமிசத்தோடு கூடிய சரீரமானது கங்காநதியில் ஸ்நானஞ்செய்த பலனையடைந்ததாகும். கொம்பினது நுனியில், சிறந்த நீர்மயமாகிய (கங்கை முதலிய) பேர்வகித்த தெய்வீகம்பொருந்திய (புண்ணிய) நதிகளிருக்கும். கொம்பினது

மத்தியில், ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற சந்திரிகையைக் கக்கும் வளைந்த இளம் பிறைச் சந்திரனை முடியிற் சூடிய செல்வி வாசஞ்செய்வாள். எ - று.

கூன்பிறை முடித்த செல்வி என்பது உமாதேவி. (உஎ)

கோசலந் தெய்வ நன்னீர் நருமதை கோம யந்தா
ஞசறு யமுனை திமபா லலைபுனற் கங்கை யாகு
மாசிலவெண் டிங்கட் கண்ணி வரதனு மயனு மாலுந்
தேசுடை யதனி லென்றுஞ் சேர்ந்தினி திருப்ப ரன்றே.

(இ-ள்) கோசலமானது தெய்வீகம் பொருந்திய நல்ல நீர்மயமாகிய நரு மதை நதியாகும். கோமயமானது குற்றமற்ற யமுனாநதியாகும். மதுரம்பொருந்திய பாலானது அலையோடுகூடிய நீரையுடைய கங்காநதியாகும். களங்கமில்லாத வெண்மையாகிய சந்திரனை மாலையாகவுடைய சிவபெருமானும், பிரமதேவனும், விஷ்ணுமூர்த்தியும், ஒளிபொருந்திய அப்பசுவினிடத்தில் எக்காலத்திலும் நீங்காது இனிமையாக எழுந்தருளியிருப்பர். எ - று.

கோசலம் - பசுநீர்; கோமயம் - சாணம்.

வரதன் - யாவர்க்கும் வரமளிப்போன் அல்லது சிரேஷ்டன். (உஅ)

உலகெலா முறுப்பின் வைகு மாவினை யுவந்து போற்றி
வலம்வரிற் றேவை யெல்லாம் வலம்வரு பயனுண் டாகுங்
குலவும்வா னுதியான் மெய்யிற் றைவரிற கொடுநோய் துன்பங்
கலதிபோய் நறுமென் கூந்தற் கமலைவந் தடையு மன்றே.

(இ-ள்.) உலகம் முழுவதும் தனது அவயவங்களில் வாசஞ்செய்யும் பசுக்களை, (ஒருவன்) மனம் விரும்பி வணங்கிப் பிரதட்சணஞ்செய்தால், எல்லாத் தேவர்களையும் பிரதட்சணஞ் செய்தபலன் உண்டாகும். (ஒருவன) பிரகாசம் பொருந்திய சிறந்த அதன்சரீரத்தில் நகத்தினால் தடவினால், கொடியவியாதிகளும் விபத்துக்களும் தரித்திரமும் நீங்கி, வாசந் தங்கிய மெல்லிய கூந்தலையுடைய இலக்குமியானவள் வந்து சேருவள்.

" நுதியான்மெய்யிற்றைவரில் "—நகத்தால் சரீரத்திற் தடவினால் அதாவது சொறிந்தால். கலதி என்டதற்கு மூதேவிஎனபது பொருள். இங்கு அவளகாரியமாகிய தரித்திரம். கமலை என்பது தாமரையில் வசிப்பவள். இப்பெயர் இலக்குமி சரஸ்வதிகட்குப் பொதுவாயிருப்பினும் கலதி போய் என்று முன் கூறியதால், மூதேவி நீங்கியவிடத்தில் வரவேண்டியவள் ஸ்ரீதேவியே ஆதலால், இலக்குமி என்றும்.

" உலகெலாம் உறுப்பின் வைகும் ஆ "—என்பதனை

சிவதருமோத்தரம்-கோபுரவியல்.

" வேதாவுங் கரியவனு மாவினது கோட்டடியின் விளங்கி வாழ்வர்
கோதாவி முதற்றீர்த்தங் கோட்டினுதிச் சராசரமுங் கூடி நிற்கு
மீதான சிரத்தமலன் விமலையத னடுநெற்றி விசாக ஞசி
மீதானந் தனிலதனுண் ஞசிதனி ஞகேசர் விளங்கு வாரோ.

ஆசகல விருகன்ன நாப்பணச்சு வினிதேவ ரமர்ந்து வாழ்வர்
தேசுடைய பருதிமதி நயனத்திற் றந்தத்திற் செறியும் வாயு
வோசையுறு நாவதனில் வருணனுறை மகளோங்கூங காரநெஞ்சி
னேசமுற யமனியக்கர் கெண்டதலத் தெந்நாளு நிலவு வாரோ.

ஓட்டதத்தி னுதையாத்த மனசந்தி யிவையுறையு முறைவன் கண்டத்
தீட்டுடைய விந்திரனே யிமிலிருப்ப ரருக்கனொன வியம்புந தேவர்
வாட்டமிலாச் சாத்தியரோ வாழ்வார்க ளுரமதனி லனில வாயு
நீட்டியதா னொருநான்கின் மருத்தெனபர் முழந்தாளி னிலவு வாரோ.

குரத்தினுதிப் பன்னகரோ குடிகொள்வர் காந்தருவா குரதத்தி னுப்ப
ணிருப்பரர மகளிர்கண மிவரெல்லா மேற்குரத்தின முதுகி னெலலை
யுருத்திரரோ சந்துதொறு முறைவார்கள் வசுதேவர் பிதுர்க்க ளோங்கிப்
பருததவனைப் பலகைதனிற் பகத்துறைவ ரெழுமாதா பரிவு கூர்ந்தே.

திருமகளே யபானத்தி னுகேச ரடிவாலிற் சிறந்து வாழ்வ
ரிரவியொளி வாலின்மயி ரிலங்கியிடுஞ் சுரநதிதா னேயு நீரின்
வரமுடைய யமுனைமய மதுதன்னின மாதவர்க ளுரோமம் வாழ்வ
ருரமுடைய பூதேவி யுதரத்திற் பயோதரதத்தி னுததி யெல்லாம்.

சடரத்தி னிதையத்திற் றழைத்தமுக மதுதன்னிற் றங்கு மங்கி
கடனுடனே காருகபத்தியமெழுவா யொருமூன்றுங் கடின வென்பி
னுடனுறுசுக் கிலந்தனினு முறையுமக வினையனைத்து முறுப்புத்தோறுந்
திடமுறுகற் புடைமடவா ரெறிந்திருப்பா ரிம்முறையைச சிநதை செய்தே.''என
வருவனவற்று னுணர்க. (உஎ)

குடங்கர் செருத்த னலலான் கோதறு முனிவர் வேதங்
கடவுண்மீன கற்பு மாதர் வள்ளியோர வாய்மை காபபோ
ரிடையிடா துவந்து தானம் வழங்குந ரெழுவ ராவரா
புடவிகீழ் விழாதெஞ் ஞான்று மேனிதினிற பொறுக்கு நீரார்.

(இ-ள்) குடம்போலும மடியையுடைய நல்லபசுக்களும்,குற்றமற்றமுனிவர்களும், வேதங்களும், அருநததிபோலும் கற்பினையுடைய பெணகளும், வரையாதுகொடுக்கின்ற ஈகையாளரும், சத்தியத்தைக் காப்பாற்றுகின்றவாகளும், நீங்காமல் எப்பொழுதும் மனம்விரும்பித் தானங்கொடுப்போாகளும், ஆகியஎழுவரும் உலகம் கீழேவிழாமல் எந்நாளிலும் சுலபமாகததாஙகுமதனமையுடையவராவார்.

விளங்குநம் முலகின் மேலாம வைகுந்த மதன்மேற கந்தன்
வளங்கெழு முலகம வெறபின மாதுல கதனின் மேலாங்
களங்கனி யனைய கண்ட னுலகதன் மேலாம பாங்க
ருளங்கவர் வனப்பின் மேவுங கோவின துலக மாமே.

(இ-ள்.) விளங்குகின்ற நமது சத்தியலோகததிலும் (விஷ்ணுவினது உலகமாகிய) வைகுந்தம் மேலாகும். அந்த வைகுந்தததிலும் குமாரக்கடவுளது வளப்பமிகுந்த உலகம் மேலாகும். அந்த குமாரக்கடவுளது உலகததிலும் பர்வதராஜ

புத்திரியாராகிய உமாதேவியாரது உலகம் மேலாகும். அந்த உமாதேவியாரது உலகத்திலும் களங்கனியை யொத்த ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானது உலகம மேலாகும். பார்த்தோர் மனதைக் கவரும் அழகினையுடைய கோவுலக மானது அதன்பக்கத்திற பொருந்தும. எ - று. (உகூ)

கூறுநான் மறைவல் லோருக் கானினைக் கொடுக்கு மேலோ
ரீறிலபே ரினபந் துய்த்து நரைதிரை மூப்பு மின்றி
யாறெலாம் பாலாய்ச் செய்ய வளறுபா லடிசி லாய
வீறுயர் கோலோ கத்தின் மேவிவீற் றிருப்பர் மாதோ.

(இ ள்.) சொல்லுகின்ற நான்கு வேதங்களில் வல்லவர்களாகிய வேதிய ருக்குப் பசுக்களைத் தானஞ்செய்கின்ற மேம்பட்டவர்கள் கெடுதலில்லாத பேரின் பத்தை அனுபவித்து, நரை திரை மூப்பு முதலியனவும் பெறுதலில்லாமல், வழி முழுவதும பாலாகவும்செம்மையாகிய சேறுனது பாற்சோறாகவும்ஆகிய புண்ணிய மிகுந்த கோவுலகத்திற் பொருந்தி வீற்றிருபபார்கள். எ - று.

நரை திரை மூப்பு—என்பது, உரோமம் வெண்ணிறமடைதல். உடலின் மீந்தோல் சுருங்குதல். விருத்ததிசை யடைதல்.

ஆன் என்பதில் "ஆமா கோனவ வனையவும் பெறுமே" என்றதால் ன் சாரியை. (௩0)

ஏதமின் மறைக டேரா ரிருபிறப் பாள ரல்லா
ராதியிற் றோன்றி நின்ற வேதமு மங்க மாறு
மோதிய புராண நூலுங் கண்களோ டுள்ள மாகு
மேதகு மவையி லாதார் விழியொடு மனமி லாதார்.

(இ ள்.) குற்றமில்லாத வேதங்களில் தேர்ச்சியடையாதவர்கள இரு பிறப்பாளர் (என்று சொல்லப்படுகின்றவராகிய வேதியர்) ஆகமாட்டார்கள் (உலக சிருட்டியின்) முதலில் உற்பவித்து நின்ற வேதங்களும், ஆறு வேதாங்கஙகளும, பெரியோர் சொல்லிய புராண நூல்களும் கண்களோடு மனமாகும் (ஆதலால்) மேம் பாடுடைய அவற்றை உணர்த லில்லாதவர்கள் கண்களோடு மன மில்லாதவர்க ளாவார்கள். எ - று.

மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்கிற ஆறும் வேதாங்கமெனப்படும். (௩க)

விந்தமால் வரைபொற் கோட்டு மேருவோ டிகலி வெய்யோ
னந்தரத் தியங்கா வண்ணந் தடுத்ததா லமரீ ரிங்கு
வந்தனிர் காசி தன்னில வான்றவம் புரியா நின்ற
செந்தமிழ் முனிவ னலலால யாரது தீர்க்கு நீரார்.

(இ-ள்.) தேவர்களே! பெரிய விந்தபர்வதமானது அழகிய சிகரங்களை யுடைய மேருபர்வதத்தோடு பகைமைகொண்டு, சூரியன ஆகாயத்தில் சஞ்சரி யாதவகையாகத் தடுத்தபடியால்,(என்னைநோக்கி) இவிடம் வந்தீர்கள். காசிக்ஷேத் திரத்தில் சிறந்த தவத்தைச் செய்கின்ற செவ்விய தமிழ்முனிவராகிய அகஸ்திய





முனிவரல்லாமல், அதனை விலக்குந்தன்மையை யுடையவர் யாரிருக்கின்றனர்? (ஒருவருமில்லை.) எ - று.

தமிழ் பண்பாகுபெயராய்ப் பாஷைமே னின்றது. (௩௨)

காசியி னுறையு முக்கட் கனியருட் கடலின் மூழ்கி
யாசற விளங்கு கின்ற குடமுனிக் கரிய துண்டோ
தேசுடை முனிபா னீவிர் சென்மின்க ளென்ன வோதி
வாசமென் கமல வீட்டு மறையவன் மறைந்து போனான்.

(இ - ள்.) காசிநகரத்தில் எழுந்தருளிய திரிநேத்திரங்களையுடைய அருட்கனியாகிய சிவபெருமானது கிருபாசமுத்திரத்தில் அமிழ்ந்து, குற்றமற்று விளங்குகின்ற குடமுனிவராகிய அகஸ்தியமுனிவருக்கு, செய்தற்கரிய காரியம் ஒன்றிருக்கின்றதோ? (இல்லை. ஆதலால்) நீங்கள் கீர்த்திபொருந்திய அம்முனிவரிடத்திற் செல்லுங்களென்று திருவாய்மலர்ந்து,வாசம்பொருந்திய மெல்லியதாமரைமலரை வீடாகவுடைய பிரமதேவன் அந்தர்த்தானமாயினன். எ - று.

சிவபெருமானை "முக்கட்கனி"—என்றதனை,

அஞ்செழுத் தருங்காய் தோன்றி "நஞ்சுபொதி
காள கண்டமுங் கண்ணொரு மூன்றுந்
தோளொரு நான்குஞ் சுடர்முக மைந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீறு பூசி
யறுசுவை யதனினு முறுசுவை யுடைத்தாய்க்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருந்
தேனுயர் மருத மாணிக்கத் தீங்கனி"—எனனும் பட்டணத்துப்பிள்ளையார் திருவாக்கா னுணர்க.

அகஸ்தியர் கலசத்திற் பிறந்தோர் ஆதலால், குடமுனி எனவும், கும்பயோனி எனவும், பெயர் பெற்றனர். (௩௩)

உடைதிரைப் பரவை யேழுங் குடங்கையின் வாரி யுண்ட
கடவுண்மா முனிவன் றன்னைக் காண்பது நிமித்த மாகப
படவர வசைத்த முக்கட் பரமன்வீற் றிருக்குங் காசி
யடைதுமா மென்று நெஞ்சங் களித்தன ரமர ரெல்லாம்.

(இ-ள்.) சாய்தல் பொருந்திய அலைகளையுடைய சப்தசமுத்திரங்களையும், உள்ளங்கையி லேற்று, ஆசனமஞ்செய்த தெய்வீகம்பொருந்திய பெருமைதங்கிய அகஸ்தியமுனிவரைத் தரிசித்தல் காரணமாக, படத்தையுடைய சர்ப்பங்களை (அரைக்கச்சாகத்) தரித்த திரிநேத்திரங்களையுடைய விஸ்வநாதப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற காசி நகரத்தை நாம் அடைவோமென்று தேவர்கள் யாவரும் மனங் களித்தனர். எ - று.

"பரவையேழு" — என்பது உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன்.

"பரவையேழுங் குடங்கையின் வாரியுண்ட - கடவுண்மா முனிவன்" என்பதன் சரிதம்.

பூர்வத்தில் இந்திரன், அரம்பை மேனகைமுதலிய தேவதாசிகளது ஆடல் பாடலைக்கண்டு கேட்டு மனங்களித்திருந்தமையால், அச்சபையின்கண் வந்தருளிய பிரகஸ்பதிபகவானைக் கண்டு குருவென்று மதித்து வந்தனைவழிபாடுகள் செய்யாம லிருந்தனன். அதனைக்கண்ட தேவகுரு மனவருத்தத்தால் உடனே சபையை விட்டு நீங்கினர். சில தினங்களில் தேவர் செல்வம் குறையக்கண்ட இந்திரன் இக் குறைவு ஆசிரியவழிபாடு செய்யாததால் வந்ததாகுமென்று, அவ ரிருக்கையிலுந் தேவர் பதவிகளிலுந் தேடிக்காணாது, பிரமதேவனை வணங்கி நடந்த வகையைச் சொல்ல, ஆசாரியனை இகழ்ச்சிசெய்தபாவம் வளர்தலை ஆலோசித்து "இதுமுதல் பிரகஸ்பதிமுனிவரைக் காணுமளவும் துவஷ்டா என்பவன்பெற்ற திரிசிரன் அசுர னாயினும் நடக்கையிலும் விவேகத்திலும் மேம்பட்டவன் ஆதலால், அவனைக் குரு வாகக்கொள்ளுக" என்று பிரமன்சொல்ல, அவ்வாறே அங்கீகரித்து அத் திரி சிரனைக் குருவாகக்கொண்டான். இந்திரன் திரிசிரனைநோக்கி "தேவர் செல்வம் அதிகரிக்கும்படி ஒரு யாகஞ் செய்யவேண்டும்" என, திரிசிரன் "அவ்வாறே ஆகுக" என்று, தேவர் செல்வம்குறையவும் அசுரர் செல்வம் அதிகரிக்கவும் ஓர் யாகஞ்செய்தனன். அவன் செய்யும் வஞ்சனையை யறிந்த இந்திரன் தன் கைவச் சிரத்தால் அவன் முச்சிரங்களையும அறுத்துத்தள்ளினான். உடனே இந்திரனைப் பிரமகத்திபிடித்தது. தேவர்கள் வேண்டுகோளால் நிலம் நீர் மரம் மாதர் அப் பிரமகத்தியை யேற்றனர். திரிசிரன் என்னும் தன்புத்திரனை இந்திரன் கொன்ற செய்தியைக்கேள்வியுற்ற துவஷ்டா என்பவன் ஒரு யாகஞ்செய்ய அதனிடத்தில் விருத்திராசுரன் தோன்றினன். அவனை இந்திரன்மீது விடுத்தான். இந்திரன் அவனோடு போர்புரியச் சக்தியற்றவனாகித் தோற்று பிரமனிடம் முறையிட, அவன் விஷ்ணுமூர்த்திமுன்னர் விடுத்தனன். விஷ்ணுவிடம் தன்துயரைச்சொல்லினன் அப்போது விஷ்ணுவானவர் "உன் கை வச்சிராயுதம் நாட்பட்டது. பகைவருயி ரைக்கொல்ல வலியுடையதல்ல. ஆதலால், வேறோர்வச்சிராயுதம் புதிதாய்வேண்டும் அதனைப்பெறும்விதம்யாதெனில், பூர்வம் திருப்பாற்கடலைக் கடையச்செல்லுகை யில், தேவரும் அசுரரும் ஆயுதங்களோடுவருதல் கூடாதென்று, அவற்றையெல் லாம் ததீசிமுனிவர்பால் வைத்தோம. அநேககால மானதாலும் அவரை ஒருவரும் கேளாததாலும் அவர் அவற்றை விழுங்கிவிட்டனர். அது முதுகெலும்போடு கலந் திருக்கின்றது. அவர் அதனைக் கேட்குமுன்னே கொடுப்பார். அதனைவச்சிராயுத மாக்கிக்கொண்டு எதிர்த்தால் ஜெயிப்பாய்" என்றனர். அதுகேட்டுத் ததீசிமுனிவ ரிடமபோய் இதனைச் சொல்லி யாசிக்க, அவர் பிரமநாடி வழியாகக் கபாலத்தைக் கீண்டு முத்தியுலகடைந்தனர். அம் முதுகந்தண்டோடு கூடியிருந்ததை விசுவ கன்மனால் வச்சிராயுத மாக்கிக்கொண்டு விருத்திராசுரனோ டெதிர்த்துப் போர் புரிகையில், விருத்திராசுரன் சகிக்க முடியாமல் கடலில் வீழ்ந்து மறைந்தனன். இந்திரனும் அவனோடு குதித்துத் தேடிக்காணமல், பிரமதேவனிடம் முறையிட "நீ அகஸ்தியரை வேண்டினால் அவர் அதற்குத் தக்க உதவிசெய்வர்" என்றனன். அதுகேட்ட இந்திரன் அகஸ்தியமுனிவரிடம் போய்ப்பிரார்த்திக்க, அகஸ்தியர் சிவ பெருமானைத் தியானித்து சமுத்திரத்தைத் தனது உள்ளங்கையில் ஓர் உழுந்தள வாக்கி ஆசமனஞ் செய்தனர் என்பது.—இதனை,

யாம் சிரமசைத்தனம் அப்பொழுது நமது குண்டலத்தி லிருந்தமணி இத்தடாகத்தில் வீழ்ந்ததால் இதற்கு **மணிகன்னிகை** எனப் பெயர் வழங்கக்கடவது. இதில் மூழ்கினோர் பெறுதற்கரிய மோக்ஷமடைவர்" எனத் திருவாய்மலர்ந்தருளினர். இதனை,

"களங்கனி யனைய மேனிக் கண்ணனின் றவத்தென் சென்னி
துளங்கலுங் குழையிற் சூழ்ந்த சுடர்மணி விழுந்த வாற்றால்
வளங்கெழு மிந்த வாவிக் கொளிமணி கன்னி கைப்பேர்
விளங்குக விதனிற் றோய்ந்தோர் பெறலரும் வீடு சேர்வார்." என்பதனு
னுணர்க. (௨)

பொங்கிப் பரந்த திரைக்கங்கைப் புனல்சூழ் காசி நகருறையுந்
திங்கட் கண்ணி முழுமுதலின் செய்ய மலர்த்தா ளிணைதொழுது
கொங்கிற் பொலிந்த நறுமலர் தூய்க் கோயில வலங்கொண டோரைந்து
கங்குற் பொழுது கழித்துமனங் களிகொண் டுருகிக் கனிந்தனரால்.

(இ-ள்.) பெருக்கெடுத்துப் பரவிய அலைகளையுடைய கங்கைநீரால் சூழப்பெற்ற காசிநகரத்தில் வாழ்கின்ற சந்திரசேகரரும் முழுமுதற்கடவுளுமாகிய விஸ்வநாதரது, சிவந்த தாமரையாகிய உபயதிருவடிகளை வணங்கி, மகரந்தத்தோடு விளங்கிய வாசனைபொருந்திய மலர்களைக்கொண்டு அர்ச்சித்து, சந்நிதானத்தைப் பிரதக்ஷணஞ்செய்து, ஐந்திராத்திரிப்பொழுது கழித்து ஆனந்தங்கொண்டு கனிந்திருந்தனர். எ - று. (௩)

எறிநீர்க் கங்கை சூழ்கிடந்த வின்ன நகரி னெஞ்ஞான்றும்
பறவை யினமும் விலங்குகளு மிறக்குங் காலைப் படர்சடையெம
மிறைவன் புகறு ரகப்பிரம வுபதே சத்தா லீறில்கதி
பெறுப வென்னி லீங்குறைவோர் பெறுபே றியாமோ பேசுவதே.

(இ-ள்.) கரையில் மோதுகின்ற சலப்பெருக்கையுடைய கங்காநதியானது சூழ்ந்து விளங்கும் இந்தக்காசிநகரத்தில்,எக்காலத்திலும் பட்சிசாதிகளும் மிருகங்களும் மரணமடையும்பொழுது,படர்ந்த சடையையுடைய எமது தலைவராகிய சிவபெருமான் செய்கின்ற தாரகப்பிரமமந்திர உபதேசத்தால் கெடுதலில்லாத நற்கதியை யடையும் என்று சொன்னால், இவ்விடத்தில் வாசஞ்செய்வோர் அடைகின்ற பதவியை யாமோ எடுத்துப் பேசத்தக்கவர்கள்? எ - று.

தாரகப் பிரமமந்திரம் எனபது உடனே பாசங்களினின்று நீங்கச்செய்யும் பேராற்றலுடைய ஓர் மஹாமந்திரம்.

சிவபெருமான் தாரகப்பிரமமந்திரத்தை ஆங்கு தேகத்தைவிடும் உயிர்கட்கு கிரியாணதிசையில் வலதுசெவியில் உபதேசிப்பர்.—இதனை,

"தூயசெழுங் கங்கையலை சுழித்தெறியும் புனலிலொரு துளியுண் டோருந்
தாய்முலைப்பால் மீட்டருந்தாத் தன்மையா லாங்குடலந் தனைவிட் டோர்க்கு
வேயனைய தோளிபங்கன் றாரகத்தை வலச்செவியில் விளம்ப றன்றாற்
சேயுயர்விண் ணவருலகோ காசிநகர்க் கிணையாகச் செப்பு மாறே."—என்னுஞ்
செய்யுளா னுணர்க.

இன்ன நகரி னிடைபபிறந்த மலத்தின் புழுவு மீறெய்தின்
மன்னும் பிறவிக் கடற்படிந்து வருந்தா தழியா வீடெய்து
முன்ன ரிழைத்த நல்வினைகண் முழுது முலப்பின் விசும்பொழிந்து
பின்னு நிலத்தி னிடைவந்து பிறபபே நமது பேறினிதால்.

(இ-ள்.) இப்படிப்பட்ட காசிநகரத்தில் உற்பவித்த மலப்புழுவும் இறுதி யடையுமாயின், நிலைபெற்ற ஜெனனமாகிய சமுத்திரத்தில அழுந்தி (பாசபந்தங்க ளாற் கட்டுண்டு) வருத்தப்படாமல், (எக்காலத்தும்) கெடாத சுவர்க்கவீட்டை யடையும் முற்காலத்திற்செய்த புண்ணியம முற்றும் ஒழிந்தால்,தேவலோகத்தை விட்டு மறுபடியும் பூமியினிடத்தில்வந்து பிறபபதே நமது பதவிகளில் இனிமை யானது. எ - று.

பிறப்பு ஒனறன்பின் ஒனறாகத்தொடர்ந்துவருவது ஆதலால் அது ஒழிந்த வழி ஈறு என்றார். (௫)

மற்ற நகரின் வீற்றிருந்து மதிவெண கவிகை தனிநிழற்றுங்
கொற்ற வேந்த ராதலினுங் குளிரவெண டாள மணிவரன்றி
யெற்று திரைநீர்க் காசிதனில யாரோ யேனு மிறத்தலினி
தொற்றை நுதற்கட் பெருமானு யுறையுந் தனமைத் தாதலினால்.

(இ-ள்.) எத்தகையினராயினும் மற்ற நகரங்களில் பொருந்தியிருந்து,சந் திரனையொத்த வெண்கொற்றக்குடை ஒப்பற்று நிழலைச்செய்யும் வெற்றிபொருந் திய அரசராதலைப் பார்க்கிலும், நெற்றியில் ஒற்றைக்கண்ணையுடைய சிவபெருமா னது சாரூப்பியமடைந்து வசிக்கச்செய்யுந் தன்மையுடையது ஆதலால்,குளிர்ச்சி பொருந்திய வெண்மையாகிய முத்துமணிகளை வாரிக்கொண்டு கரையைமோது கின்ற அலைகளையுடைய கஙகாசலத்தினாற் சூழப்பட்ட காசிநகரத்தில் இறத்தல் இனியது. எ - று. (௬)

முளரிப் பொகுட்டில் வீற்றிருக்கு முதல்வன் பகற்போ தெட்டிலொன்
குளிரவெண் மதிச்செஞ் சுடாபபரிதி குடுமி வரையின் சிறகரிநத [றிற்
மிளிருங் குலிசப படைசுமநத வேநதன் முதலோ ரிறநதிடுவ
ரளவில் பிரம ரழிந்திடினு மழியா ரிந்த நகருறைவோர்.

(இ-ள்.) தாமரைக்கொட்டையில் எழுந்தருளியிருக்கும் பிரமதேவனது பகற்காலத்தில அரைக்காற்பொழுதில, குளிர்ச்சிபொருந்திய வெண்மையாகிய சந்திரன், செவ்விய சுடரினையுடைய சூரியன், சிகரங்களையுடைய மலைகளின் சிறகுகளையரிந்த ஒளிசெய்கின்ற வச்சிராயுதத்தைத் தாங்கிய தேவேந்திரன் முதலானவர்கள் இறந்துபோவர். (அப்படிப்பட்ட நாள்கொண்ட நூறுவருடங் கழிய இறக்கின்ற) கணக்கில்லாத பிரமதேவர்கள் இறந்துவிட்டாலும் இக் காசிநக ரில் வசிப்பவர்கள் அழியமாட்டார்கள். எ - று.

பிரமனுக்கு இரண்டாயிரம் சதுர்யுகங்கொண்டது ஒருநாள். கிரேதாயுகம். திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் கூடிய சதுர்யுகம் ஒன்றுக்கு வருஷம்

சங,உ௦,000அப்படிஇரண்டாயிரஞ்சதுர்யுகங்கள்சேர்ந்தவருஷம்அ௬௬௪,00,00,000 பிரமனுக்கு ஒருநாள். இதில் அரைக்கால்தினத்தில் எண்ணிறந்த சந்திரா சூரியா இந்திரர் முதலானோர் முடிவர்.

இரண்டாயிரஞ்சதுர்யுகம் பிரமனுக்கு ஒருநாள்.—என்பதனை,

"தேரிற் சதுர யுகமிரண் டாயிர நாட்டிங்களாண்
டோரிலந் நூற்றி லயன்மாண் டொந்தமு முற்றுத்தென்பாற
சேரு நுகத்துளே யினவட பாற்கழி செல்லெளிது
சாரும் பிறப்பொழித் திம்மா னிடத்திற் சனிக்கரிதே." — என்னும் அறி

வானந்த சித்தியாரால் உணர்க.

பிரமனது ஆயிரம் சதுர்யுகங்கொண்டபகல் நீககத்துக் கற்பாந்தவெள்ளம் வரும்; அப்பொழுது பூமி அந்தரம் சுவர்க்கமென்னும் மூவுலகமும் முழுகி யழிவுறும். அக்காலத்தில் விண்மீன்களோடு சோமசூரியர்களும் தேவர்களும இறப்பர். பதினான்கு மனுக்களும், இந்திரர்களும், முனிவர்களும் மகலோகத்தையடைவர். பிரமன் சிருட்டித்தொழிலினறித் துயிலுறுவான. ஆதலால் "அளவில் பிரமரழிந்திடினும்" என்றார். (எ)

மறிமா னேக்கி யொருபாகன் வாழுங் காசிக் கேகுதுமென்
றறியான் சொல்லு மடிக்கடியோா புரவி மகப்பே றடைநதிடுவன்
குறியா நடந்து குரைதிரைநீர்க் கங்கை யாடிக் கொனறைபுனே
யிறையோன் பாதந் தொழுமவாபே றெமமாற் கூறுந் தகைமைத்தோ.

(இ-ள்.) மறியாகிய மான்போலுங் கண்களையுடைய உமாபிராட்டியாரை ஒரு பாகமாகக்கொண்ட சிவபெருமான வாழ்கின்ற காசிநகரத்துக்குப்போவோம் என்று அடிக்கடி சொல்லுகின்ற (அதன் விசேடத்தை) அறியாதவன் ஒபபறற அசுவமேதயாகத்தின் பலனை அடைவன் என்றால, அந்நகரைக் குறிதது வழி நடந்து ஒலிக்கின்ற அலைகள்பொருந்திய நீரையுடைய கங்கையில் முழுகி, கொன்றைமாலையைத்தரித்த ஸ்ரீவிஸ்வநாதரது திருவடிகளை வணஙகுகின்றவாகள் பெறுகின்ற பதவி எம்மாற் சொல்லுந் தகுதியுடையதோ. எ - று.

காசிக்கேகுதுமென்று அடிக்கடி சொல்லும் அறியான பெறும்பலனே.

காசிரகசியம்.

"வார ணாசி யுளநினைத்தோர் வளமார் சிவசா லோக்கியரே
வார ணாசி வாய்மொழிவோர் வளமார் சிவசா மீப்பியரே
வார ணாசி தரிசித்தோர் வளமார் சிவசா ரூப்பியரே
வார ணாசி வசித்தமர்வோர் வளமார் சிவசா யுச்சியரே."—எனவும்,

"சிலரொரு காசி ரூபஞ் சிந்தித்துங் காசி யென்றே
சிலரிடை யறாது சொற்றுஞ் சிலரதை யடைந்த மர்ந்துஞ்
சிலரத னிடத்துத் தெய்வச் சிவப்பிர திட்டை செய்துஞ்
சிலர்சிறு தானி மங்குச் செய்தும்போக் கினர்தம் பாவம்."—எனவும் வரு

வனவற்றா லுணர்க. (அ)

கடவுட் கங்கைப் பேரியாறு காணி லாடிற் கடன்கழிக்கிற்
றொடில்வா னெறிசென் றடைந்திடுவர் சூழ்ந்து கோயில் வலம்வந்து
முடியாற் காசி முழுமுதலை வணங்கி முத்தி மண்டபத்தோர்
நொடியா யினுமுள் ளுறைந்திடுவோர் நுவலற் கரிய வீடடைவார்.

(இ-ள்.) தெய்வீகம் பொருந்திய கங்கையென்னும் பெயரையுடைய நதியைத் தரிசித்தாலும், அதில் மூழ்கினாலும், அதில் பிதுர்க்கடன் அல்லது காலசந்திக்கடன் கழித்தாலும்,அதைத் (தமது கைகளாற்) பரிசித்தாலும் தேவலோகத்திற்போய்ச் சேருவர். ஆங்குள்ள திருக்கோயிலைச்சுற்றிப் பிரதக்ஷணஞ் செய்து, தமது சிரத்தால் காசிவிஸ்வநாதப்பெருமானை வணங்கி, முத்திமண்டபத்துள் ஓர் கணப்பொழுதாயினும்வாசஞ்செய்பவர்கள் (யாவராலும்)சொல்லுதற்கரிய மோக்ஷத்தையடைவாரகள். எ - று.

முத்திமண்டபம் என்பது அங்கடைந்தோரை முத்தியிற் கூட்டத்தக்கது. அம்மண்டபத்திலிருந்து ஒருதரமாயினுஞ் சிவபிரானைத்தியானஞ்செய்தால் மேன்மை வரும். அது சிவபிரானுக்கு அதிக விருப்பமாகிய இடம்.—இதனை,

இந்நூல் முத்திமண்டபத்தின்சிறப்புரைத்த அத்தியாயம்.

"குன்ற மெடுத்து நிரைகாத்தோய் குறுகா முத்தி மண்டபத்தின்
சென்ற நமதன் போங்குநெடுங் கயிலை யிடத்துஞ் செல்லாதால்."—எனவும்,

"அருள்கூர் முத்தி மண்டபத்தி னமைந்த வுவகை நமதன்பர்
மருளா விதய மலரிடத்து மிலையா மகிழ்வுற் றுங்கிருந்து
தெருளா னம்மை யொருபோது சிந்தை செய்வோ ரொழிவரிய
கருவா ழியிற்புக் கிறந்துபிறந் துழலார் முத்தி நெறிகாண்பார்." —எனவும், (கூ)

வருவனவற்று னுணர்க.

என்று காசி வீறனைத்து மெண்ணி யெண்ணி வியப்பெய்தி
மன்றற் றருவி னீழலுறை வைரப் படையோன் முதலமர
ரொன்றி நீங்கா முக்குறும்பு மெறிந்து புலன்க ளோரைந்தும்
வென்ற கலச முனியுறையு மிருக்கை நோக்கி விரைந்தெழுந்தார்.

(இ-ள்.) என் றிவ்வாறு வாசம்பொருந்திய கற்பகத்தருவின் நிழலில் வசிக்கின்ற வச்சிராயுதத்தையுடைய இந்திரன் முதலிய தேவர்கள், காசிநகரத்தின் பெருமையையெல்லாம் மிகவுமெண்ணிஆச்சரியமடைந்து ஒன்றாகக்கூடி (எவருக்கும்) நீங்காத முக்குற்றங்களையும் ஒழித்து, ஐம்புலன்களையும் ஜெயித்த கலசத்திற்றோன்றிய அகஸ்தியமுனிவர் வசிக்கும் ஆசிரமத்தைக் கருதி, சீக்கிரமாக எழுந்து போயினர். எ - று.

அமரர் - மரித்தலற்றவர்.

காமம, வெகுளி, மயக்கம் - இவையே முக்குற்றமெனப்படும். (க0)

அழலுங் கனலும் வெய்யவனு மழற்றா வாகி மருண்மாலைக்
குழவி மதிபோற் குளிர்தூங்கும் புரிகோட் டிரலை யிளங்கன்று
முழையி னுறைவெம் புலிப்பறழும் விளையாட் டயரு முள்ளெயிற்றுத்
தழலகட் பாம்பி னகல்வாயை யளையென் றெலிக டனித்துயிலும்.

(இ-ள்.) (அவவாசிரமத்தருகில்) சுடுகின்ற நெருப்பும் சூரியனும் சுடாதனவாகி, மயஙகுகின்றஅந்திப்பொழுதில் காணப்படும் இளம்பிறைச்சந்திரன போன்று குளிர்ச்சியை வீசும். புரிந்த கொம்புகளையுடைய கலைமான்களின இளஙகன்றுகளும் மலைக்குகைகளில் வசிக்கின்றவெவவிய புலிக்குட்டிகளும் (ஒன்றோடொன்று கூடி) விளையாடுதல்செய்யும். எலிகள் முள்ளையொத்த பற்களையும் அக்கினியையொத்த கோபக்கண்களையுமுடையபாம்புகளின் இடமகன்றவாயை வளையென்றெண்ணித் தனித்து நித்திரைசெய்யும். எ - று.

அகத்தியமுனிவர் தருமசுரூபி யாதலால், அவரது ஆசிரமத்தருகில் வசிக்கும் மிருகங்களும், பறவைகளும், இயற்கையாகத் தமக்குள்ள பகைமைபாராட்டாமல், நட்புப்பாராட்டி ஒனறோடொன்று அளவளாவிநிற்றலை, இதுமுதற் பத்துப்பாடல்களாற் சிறப்பித்துக் கூறினர். (கக)

அரிமா னேற்றிற் கூன்பிறைக்கோட் டண்ணல் வேழ முதுகுரிஞ்சும்
வெருவாச் சரபந் தலையணையா வெங்க ணரிமான் விழிதுயிலும
புரிகோட் டிரலைப் புனிற்றுமறி பொங்கி யெழுந்து வால்குழைத்துப்
பரிவாற் கடைவாய்ப் பாலொழுகப் பாய்வெம புலியின் முலையுணணும்.

(இ-ள்.) வளைந்த பிறைச்சந்திரன்போன்ற தந்தங்களையுடைய பெருமை தங்கிய யானைகள் ஆண்சிங்கங்களின்மீது தமது முதுகைத்தேய்த்துக்கொள்ளும். கோபக்கண்ணையுடைய சிங்கஙகள் சரபங்களுக்குப் பயப்படாமல் (அவற்றைத) தலையணையாகக்கொண்டு தூஙகும். புரிந்த கொம்பினையுடைய கலைமானகளின் இளங்கன்றுகள், பாய்கின்ற வெவவிய புலிகளின் முலையிலுள்ளபாலை, மேறகொண்டெழுந்து தமது வாலைக் குழைத்துக்கொண்டு ஆசையுடன் தமதுவாய்க்கடையில் பால்சிந்தும்படி குடிக்கும். எ - று.

கூன் பிறைக்கோடு என்பது வளைந்த சந்திரனபோனற கொம்பு. அதாவது **வக்கிரதந்தம்.**

சரபம் என்பது எண்காற்புள் அது சிங்கங்களைக்கொல்லும் வலியுடையது. இதனை,

காஞ்சிபுராணம் சிவபுண்ணியப்படலம்.

“ நன்னு லிரண்டு திருவடியு நனிநீள் வாலு முகமிரண்டுங்
கொன்னுர் சிறகு முருத்திரமுங் கொடுமபே ராப்பு மெதிர்தோற்றச்
செங்கீர் பருகிச் செருக்குநர மடங்க லாவி செகுத்துரிகொண்
டொன்னுர் குலங்கண் முழுதழித்த வுடையான் சரபத் திருவுருவம்.” என்னும் செய்யுளா னுணர்க. (கஉ)

கேழற் பன்றி மருப்பினிலங் கிளையா ஞமலி மேற்றுயிலும்
பேழ்வாய்க் கரடி மயிருளர்ந்து முதிர்சூன் மந்தி பேனெடுக்கு
மூழிக் கனல்பாய்ந் தொழுகுவிழி யுரகங் கீரி மேலுறங்கு
மாழைச் சிறுமான் குழக்கன்றை வந்து நரிக டைவருமால்.

(இ-ள்.) பன்றிகள் தமது கொம்புகளால் பூமியைக்களைந்து நாய்களின் மீது படுத்துறங்கும். கருப்பமுதிர்ந்துள்ள குரங்குகள் பிளவுபட்ட வாயையுடைய

கரடியின்மயிரை வகிர்ந்து பேன்பார்த்தெடுக்கும் ஊழித்தீயைப்போலும் நெருப்புப்பொறிகள் சிந்துகின்ற கண்களையுடைய பாம்புகள் கீரிப்பிள்ளைகளமேல் நித்திரைசெய்யும். நரிகள் அழகிய சிறியமானினது இளங்கனறுகளைச் சமீபித்துவந்து தடவிக்கொடுக்கும். எ - று.

கேழற்பன்றி இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

உரகம் - பாம்பு. இதற்கு மார்பால் நடப்பது என்று பொருள். (கரு)

பொருவின் மறையி னுபனிடதப் பொருள்க டோர்து பூவையொடு
முருவச் செந்தார்ப் பசுங்கிள்ளை யுரையா நிற்கும் பலவிலங்கும்
வெருவல் செய்யா தடுசினத்த வேடர் சிலையின் முதுகுரிஞ்சுங்
குருகு வாவி யருகிருந்து முகளு மீனங் குததாவால்.

(இ-ள்.) அழகு பொருந்திய சிவந்த பூங்கொத்துகளிலுள்ள பச்சைக்கிளிகள் சமானமில்லாத வேதத்தினது உபநிடதப்பொருளில் ஆராய்ச்சி மிகுந்து நாகணவாய்ப்பறவைகளோடு (அவற்றைச்) சொலவிக்கொண்டிருக்கும். பலவகையானமிருகங்களும் பயப்படாமல், கொல்லுகின்றகோபத்தையுடைய வேடர்களது வில்லின்மேல் தமதுமுதுகுகளைத் தேயத்துக்கொள்ளும். நாரைகள் தடாகத்தின் சமீபத்திலிருந்தும் அதில் குதிக்கின்ற மீனகளைக் குத்திப்பிடிக்கமாட்டா. எ - று.

கவரி யினங்கள் கடைகுழைந்து கருமை வாரந்த வாலதியைக்
குவிமென் கொங்கைக் குறத்தியாதங் குழலோ டொபபுக் காணுமிக
கவையென் றெண்ணிக் கூரெயிற்றுக் கொடுவெம புலியு நயநதுதசை
கவாதல் செய்யா தெஞ்ஞான்றும் பசுந்தோட் டறுகு கறித்திடுமால்.

(இ-ள்.) கவரிமான கூட்டங்கள் தமது அடியிற் குழைந்து கருமையாகி நீண்டுள்ளவால்களை, குவிந்த மெல்லிய தனததையுடைய குறப்பெண்களது கூந்தல்களோடு ஒப்பிட்டு, (இவவிரண்டில் எது மேம்பட்டது எனப்) பார்க்கும். கூர்மையாகிய பற்களையுடைய கொடுமைபொருந்திய வெவ்விய புலிகளும் மிகுதியும் குறறமுடையது என்று கருதி, இறைச்சியை விரும்பிப் புசியாது எப்பொழுதும் இதழ்களையுடைய அறுகம்புற்களைக் கறித் துண்ணும். எ - று. (கடு)

புழுவுந் தசையும் வெண்ணிணமும் பொதிநத குரம்பை வீக்குதற்குக்
கழியூ னுகர்ந்தோர கொடுநரகிற் கற்ப காலங் கிடந்தழுந்தி
விழைவின் முன்னர் தா நுகர்ந்த விலங்கு மவர்தம் மெய்த்தசையை
யழிவெம் பசியாற் பறித்தருந்த லெனனும் பான்மை யறிந்தேயோ.

(இ-ள்.) புழுவும், மாமிசமும், வெண்மையாகிய கொழுப்பும் திணிந்துள்ள உடலைப் பெருக்குவதற்கு, (என்பினின்றும்) கழிந்தமாமிசத்தை உண்டவர்கள கற்பகோடிகாலம் கொடிய நரகத்தில் அழுந்திக்கிடந்து, முன்னே தாம் விருப்போடு புசித்த மிருகங்களும் அவர்களது சரீரத்தின் மாமிசத்தை, மிகக் கொடியபசியால் பிடுங்கித் தின்னுதல் என்னும் தகுதியை உணர்ந்ததாலே. எ - று.

ஊனுகர்ந்தோர் கொடுநரகிற் கிடந்தழுவர்—என்பதை.

சிவஞானதீபம்.

"எவவுயிரும் பராபரன்சந் நிதிய தாகு மிலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயில், எவவுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி யிரங்காது கொன்றருந்து மிழிவி னோரை, வவவியமன் றூதரருந் தண்டஞ் செய்து வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து, வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாறு வேதனைசெய் திடுவரென விள ம்பு நூலே."—எனவும்,

பதிபசுபாசவிளக்கம்.

"அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
யிம்மா னுடரெல்லா மினபுற் றிருக்கின்று
ரம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவாக்கும்
பொய்ம்மா நிரயமென்றாற் புசித்தவாக்கென் சொல்லுவதே." — எனவும்

வருவனவற்று னுணர்க.

இதுமுத லிரண்டு செய்யுள்கள குளகம். (கசு)

கொன்று விலங்கின் றசைநுகருங் கொடுமை யோரவ் விலங்கினுடற்
றுன்று மயிரொத் தனையாமத் துணைய காலம் வெந்நரகி
னென்றி நுகர்வாய்ப் புழுவொழுக வுழப்ப ரென்கை யுணர்ந்தேயோ
கன்று சினவெங் கொடுவிலங்கும புலவூன் றின்னக் கருதாவால்.

(இ-ள்.) மிருகங்களை உயிர்வதைசெய்து அவற்றின் மாமிசத்தைப் புசிக்கின்ற கொடியவர்கள் (அவர்கள் தின்ற) அம்மிருகங்களின் உடலிலுள்ள நெருங்கிய மயிர்கள் எவ்வளவாகுமோ அவ்வளவுகாலம், வெப்பமாகிய நரகத்திற் பொருந்தியிருந்து (மாமிசத்தைத்) தின்ற வாய்களில புழுக்கள் சொரிய வருந்துவரென்பதை அறிந்துதானோ, மிகுந்த கோபத்தையுடைய வெவ்விய மிருகங்களும் புலவு நாற்றம் வீசும் மாமிசத்தைத்தின்பதற்கு நினையா. எ - று. (கஎ)

ஒருமீன் புலவு வாய்மடுப்பி னொழியுந தசைக ளனைத்தினையும்
பரிவா னுகர்ந்தோர் வீழ்கின்ற பாழ்வெந் நரகிற் படிவரெனு
மருமா மறையின் பொருடேர்ந்தோ வந்தா மரைநாண் மலர்ப்பொதுளும்
விரிநீர் வாவி பயின்மீன்கள் விழுங்கா துலவும் புள்ளினமே.

(இ-ள்.) ஒருமீனினது இறைச்சியைப் புசித்தால் (அதனை யுண்டவர்கள்) ஒழிந்த மாமிசங்கள் எல்லாவற்றையும் விருப்போடு புசித்தவர்கள் படிகின்ற பாழாகிய வெப்பம்பொருந்திய நரகத்தில் வீழ்வார்கள் என்னும் அரிய பெருமைதங்கிய வேதப்பொருளை நன்று யறிந்துதானோ, பட்சிகூட்டங்கள் அழகிய அன்றலர்ந்த தாமரைமலர்கள் நெருங்கியிருக்கின்ற பரந்த நீரையுடைய தடாகங்களில் சஞ்சரிக்கின்ற மீன்களை விழுங்காமல் உலாவிக்கொண்டிருக்கும். எ - று. (கஅ)

நசையா னறவு வாய்மடுத்தோர் நரகி லளப்பி னாளழுந்தி
வசையா னீட்டுங் கள்ளுண்ணு மாந்த ராக நிலத்துதித்து
மிசையா தனவு மிசைவரெனும் வேத மொழியின் பொருளுணர்ந்தோ
யிசைதேர் சுரும்பர் மதுகரமென் றிருந்துந் தேற லருந்தாவே.

(இ-ள்.) ஆசையோடு கள்ளைக் குடித்தவர்கள் அளவில்லாத காலம் நரகத்தி லழுந்திக்கிடந்து, (பூர்வம் தாம்செய்த குற்றத்தால்) திரும்பவும் கள்ளைக் குடிப்பவர்களாகப் பூமியிற்பிறந்து,உண்ணத்தகாதனவாகிய பண்டங்களையும் உண்ணுவார்கள் என்னும் வேத வாக்கியத்தின் பயனை யறிந்துதானோ, பண்ணிசையில் தேர்ச்சியடைந்துள்ள வண்டுகள் மதுகரமென்று பேர்பெற்றிருந்தும் தேனைக் குடியா.

நறவு, தேறல், மது என்பவை கள் என்றும் தேன் என்றும் பொருள் பயக்குமாதலால் நறவு குடித்தோர் நரகி லாழ்வார் என்பதை யறிந்துதான் "மதுகர மென்றிருந்தும் தேற லருந்தா" என்றார்.

"மதுகரம்"— வண்டு, இதற்குத் தேன் பொருந்திய கையையுடையது. என்பது பொருள்.

நறவுவாய் மடுத்தோர நரகிலளப் பிறளழுந்துவா—என்பதனை.

கூர்மபுராணம.

"கள்விலை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர் கள்ளருந் துதற்குடன் படுவோர்
கள்ளருந் துநரை மகிழுநர் நரகிற் கற்பகா லங்கிடந் தழுந்தி
யெள்ளுறுந் தீய மலப்புழு வாகி மலத்தினை நுகர்ந்துபின் னிறந்து
விள்ளருங் கொடிய ரௌரவ நரகின் மீட்டுமீட் டிழந்துநாள் கழிப்பார்." என்பதனு னுணர்க. (௧௧)

சேவ லன்ன மணப்பதற்குச் செல்ல விருடி யுறைவிடமென்
றாவி யனைய பெடைவிலக்கு மந்தண் மாவி னிளங்குயிலுங்
கூவல் செய்யா பவக்கடலைக் குழவி மதிவே ணியனன்றி
யாவர் கடத்து வாரென்னுப் பூவை கிளியோ டியம்புமால்.

(இ-ள்.) அன்னச்சேவல்கள் தமது பெட்டையன்னங்களைக் கூடுவதற்குச் சமீபித்துச் செல்ல, அவற்றின் உயிரையொத்த அப் பெண்ணன்னங்கள் இஃது முனிவர் ஆசிரமம் என்று சொல்லித்தடுக்கும். அழகிய குளிர்ச்சி யமைந்த மாமரங்களிலுள்ள இளமைதங்கிய குயில்களும் கூவமாட்டாது. நாகணவாய்ப்பட்சிகள் இளம்பிறைச்சந்திரனை யணிந்த சடையையுடைய சிவபெருமானன்றிப் பாவமாகிய சமுத்திரத்தைக் கடக்கும்படிச் செய்யவல்லவர் யார் என்று கிளிகளோடு சொல்லும். எ - று.

"தேரிளந் தென்ற லாகச் செழுங்குடை மதிய மாகத்
தூரியங் கடல்க ளாகச் சொற்குயில் காள மாக
நாரியர் சேனை யாக நறைவண்டு விடுது தாகப்
பாரினில் விஜயஞ் செய்யும் படைமதன்." — என்னும் இந் நூலாசிரியர் வாக்கின்படியே, குயில் மன்மதனது எக்காளமாதலால், அதன் குரலோசையாற் சையோக விருப்பம் தோன்றுமெனக் கருதி அவை அவ்விடத்தில் கூவாதிருக்கும் என்பார். "அந்தண் மாவி னிளங்குயிலுங் கூவல் செய்யா."—என்றார்.

"குழவிமதி வேணியன."—எனபதன வரலாறு.

தக்கன் என்பவன் தான் பெற்ற அசுவினி முதலிய நட்சத்திரங்களாகிய இருபத்தேழு பெண்களையும் சநதிரனுக்கு மணமுடித்து அவர்கள் யாவரையும் சமமாகப் பார்த்து வரும்படி திட்டஞ்செய்து அனுப்பினன். சநதிரன் அவவாறே சிறிதுகாலம் வித்தியாசமில்லாது நடத்தி, நாளுக் கொருத்தியிடம் இருந்துவந்தனன். பிறகு அவர்களில் கிருத்திகை, உரோகணி என்னும் பெண்கள் அழகிற்சிறந்தோராகவிருந்ததால் அவர்பால் அதிக அன்புபாராட்டி ஏனையோரை முகநோக்காதுயினன். அப்பெண்கள் மனந்தாளாதவர்களாகித் தமது குறைகளைத் தந்தைபாற்சொல்ல, அதைக்கேட்ட தக்கன் மனம்வெகுண்டு "நாளுக்கொரு கலையாகக் குறைந்து இறக்கக்கடவன" என்று சாபமிட, சந்திரன் அவவாறே தக்கன்சாபத்தால் தினமோகலையாகப் பதினைந்து தினங்களில் தன்கலைகளெல்லா மழிந்து ஓர் கலையோடு மனம்வருந்தி, தனக்குநேர்ந்த குறையை இந்திரன்பால் முறையிட, இந்திரன் "நீ பிரமதேவனிடஞ் சொல்லிக்கொண்டால்,பிரமதேவன தனது புதல்வனாகிய தக்கனிடஞ்சொல்லி உன்சாபத்தை மாற்றக்கூடும்" என்று சொல்ல, அவவாறே பிரமதேவனைக்கண்டு வேண்டிக்கொளள, பிரமன் "தக்கனும் தந்தையென் றென் சொல்லைக் கேட்கமாட்டான். யானும் அவனிடஞ் செலலேன். நீ கைலையை யடைந்து கண்ணுதலைப் பிரார்த்திக்கின அவர் உனது குறை தீர்ப்பர்" என, அதுபோலவே சநதிரன் திருக்கைலாயமலையை யடைந்து அருட்பெருங்கடலாகிய எமது சிவபெருமானிடம தனக்குற்ற சாபத்தைச் சொலலி யாசிக்க, பெருமான் எஞ்சியுள்ள ஒருகலையைத் தமது சடைமுடியில் தரித்து "உனது கலைகளிலொனறு என் முடிமீதிருத்தலால் நாளுக்கொருகலையாக வளர்ந்தும்,தக்கன் சாபத்தினுல் நாளுக்கொருகலையாகக் குறைநதும், இருக்கக்கடவாய். எப்போதும் ஒரு கலை உன்னைவிட்டு நீங்காது" என்றனர்.

கந்தபுராணம் - தக்ஷகாண்டம - சந்திரசாபப்படலம்.

"தீர்ந்தன வன்றியே திங்க டன்னிடை
யார்ந்திடு கலையினை யங்கை யிற்கொளா
வார்ந்திடு சடைமிசை வயஙகச் சேர்த்தினன்
சார்ந்தில தவவழித் தக்கன் சாபமே."—எனவும்,

"நின்ன தொல்கலை யைந்துமுப் பகலிடை நிரம்பிப்
பின்ன ரவவழி தேய்ந்துவந் தோர்கலை பிரியா
தின்ன பான்மையே நிகழுமெக் காலமு மென்றான்
முன்னை யாவிதோ றிருநதெலா மியற்றிய முதல்வன்." — எனவும் வருவனவற்றாற் காண்க. (௨௦)

இனைய தூய வாசிரமத் தெறிக்கும் வடவைப் பேரொளியுங் [த்
கனைவெங் கதிரு மொருங்கெழுந்து கதிர்விட் டெறிக்கும் பான்மையென
தனிநான் மறையோர் வடிவெடுத்த தன்மையென்ன வொளிதழைத்து
வினைதீர் தவத்துக் குறுமுனிவ னுறைத னேக்கி விழிகளித்தார்.

(இ-ள்.) இப்படிப்பட்ட (அற்புதங்களையுடையதாகிய) ஆசிரமத்தில், ஒளி வீசுகின்ற வடவாமுகாக்கினியினது பெரிய பிரகாசமும், மிகுதியாகிய வெவ்விய கிரணங்களையுடைய சூரியனும், ஒன்றாகத்தோன்றிக் கிரணங்களை வீசிப் பிரகாசிக்குந்தன்மைபோலவும், ஒப்பற்ற நான்குவேதங்களும் ஒருருவெடுத்துவந்த தன்மை போலவும் ஒளிமிகுந்து, தீமை நீங்கிய தவத்தையுடைய குறுமுனிவராகிய அகஸ்தியபகவான் எழுந்தருளியிருத்தலைக் கண்டு கண்களிகூர்ந்தனர் (தேவர்கள்).

வடவாமுகாக்கினி - வடவை, முகம், அக்கினி; பெண்குதிரை முகம்போலுள்ள நெருப்பு. இது கடல் அளவுகடவாதிருக்கும்படிக் கடவுளால் நியமிக்கப்பட்டது.

குறுமுனி - குறுகிய உருவினையுடைய முனிவர்; அகஸ்தியர். (௨௧)

மடமென் பிணையி னிளம்புனிற்று மறியுந் தறுகட் கூரெயிற்ற
கொடுவெஞ் சினத்த புலிப்பறழுங் குலவி யாடு முற்றத்துக்
கடவுட் கற்பி னிகரில்லாக் காதற் பன்னி கமலமல
ரடிமென் சுவடு கண்ணுறலு மமரர் யாரும் வணங்கினரால்.

(இ-ள்.) மடமையுடைய மெல்லிய மான்களினது அதிக இளமையாகிய கன்றுகளும், அஞ்சாமையையும் கூர்மையுள்ள பற்களையும் மிகக் கொடிய கோபத்தையுமுடைய புலிக்குட்டிகளும், சந்தோஷித்து (ஒன்றோடொன்று) விளையாடுகின்ற முன்றிலில், தெய்வத்தன்மையும் கற்பின்மிகுதியில் தனக்கு நிகரில்லாமையும் (நாயகனிடத்தில்) ஆசையும் உடைய (அகஸ்தியமுனிவர்) பத்தினியாராகிய (உலோபாமுத்திரையம்மையாரது) தாமரைமலரையொத்த மெல்லிய திருவடிச்சுவட்டைப்பார்த்தலும் (அங்கடைந்த) தேவர்கள் யாவரும் வணங்கினர். எ - று.

"கண்ணுகற்புடை நங்கையர் சீறடி மன்னி னெவ்விடந் தோயினு மற்றஃ தெண்ணு கின்ற தலங்க ளெவற்றினும், புண்ணி யத்தல மென்று புகல்வரால்" எனப் பின்வருகிறபடியே, உலகத்தில் எவ்விடமாயினும் பதிவிரதைகளின் பாதந்தோய்ந்தவிடம் எல்லாவற்றினும் மேலாகிய புண்ணியத்தலம் என்று, அகஸ்தியமுனிவர் பத்தினியாராகிய உலோபாமுத்திரையம்மையாரது திருவடிச் சுவடு கண்டு அங்கடைந்த தேவர்கள் அதனை வணங்கினர். ஆதலின் "கமலமல ரடிமென் சுவடு கண்ணுறலு மமரர் யாரும் வணங்கினரால்" என்றார்.

சுவடு - நிலத்திற் காலடி தோய்ந்த அடையாளம். (௨௨)

குறைகூ றுதற்கு வந்தடைந்த குலிசப் படையோன் முதலமரர்
நறையூற் றிருந்த பொதியவிழ்க்கு நளிர்மென் கமல மலர்ப்பொகுட்டி
லுறைவோ னென்ன வினிதியற்றும் யோக மொழிந்து வீற்றிருக்கு
மறையோன் கமல முகநோக்கி வாழி வாழி யெனவுரைத்தார்.

(இ-ள்.) தமது குறைகளைச் சொல்லிக்கொள்வதற்கு வந்து சேர்ந்த வச்சிராயுதத்தையுடைய இந்திரன்முதலிய தேவர்கள், தேனூற்றெடுத்திருந்த கட்டுகளை யவிழ்க்கின்ற குளிர்ச்சி பொருந்திய மெல்லிய தாமரைமலர்க்கொட்டையில் வசிக்கும் பிரமதேவனைப் போல, இனிமையாகச்செய்கின்ற யோகநிட்டை நீங்கி

எழுந்தருளியிருக்கின்ற வேதங்களில் வல்ல அகஸ்தியமுனிவரது தாமரைமலரை யொத்த திருமுகத்தைப் பார்த்து வாழிவாழி என்று சொல்லினர். எ - று.

கமலமுகம் - தாமரைபோலும் மலர்ந்தமுகம், அதாவது இவர்களைக்கண்டவுடன் சந்தோஷித்தமுகம் என்பது. (உரு)

ஏத்து மமரர் தமைநோக்கி யெழுந்த முகம னினிதியம்பி
வாழ்த்தி யுவந்தாங் கவர்க்கியன்ற விருக்கை யீந்து வானுலக
நீத்தெங் குடிலிற் புகுந்ததென்னை யென்று னெறியி லைமபொறியுங்
காத்து மறையின் பொருடெரிந்த கடவுட் பெருமா தவத்தோனே.

(இ-ள்.) ஐம்பொறிகளையும் புறஞ்செல்லாது முறையாக அடக்கி, வேதத்தின் பொருளை நனகுணர்ந்த தெய்வீகம்பொருந்திய பெருமைதங்கிய தவங்களைச் செய்து முடித்த அகஸ்தியமுனிவர், தன்னைத் துதிக்கின்ற தேவர்களதுமுகத்தைப் பார்த்து (தமது வாக்கினிடத்திலே) தோன்றிய உபசாரவார்த்தைகளை இனிமையாகக்கூறி அவர்களை ஆசீர்வதித்து, சந்தோஷித்து அவர்கட்குத் தன்னாற்கூடிய ஆசனமளித்து, நீங்கள் தேவலோகத்தை விடுத்து எமது சிறு வீட்டிற் கெழுந்தருளியகாரணம் என்ன என்று கேட்டனர். எ - று.

வேதங்களைத் தன் வாயாற் கூறி வேதியன் எனப் பெயர்பெற்ற பிரமன் ஒருகாலத்தில் அதன் உண்மைப்பொருளுணராது முருகக்கடவுளாற் குட்டுண்டு சிறையிருக்கப்பெற்றனன். வேதத்தைப் பாகுபாடு செய்யவந்தவரும் விஷ்ணுவினபராவதாரருமாகிய வியாசமுனிவர் நைமிசாரணியமுனிவர்கள் தன்னை யடைந்து வேதப்பொருள் யாதெனக் கேட்க, உண்மைப்பொருளுணராது மால் கொண்டு மாலே பரம்பொருள் எனறு கூறிக் கையு நாவு மெழாது கம்பித்துத் துன்புற்றனர். அத்தகைய பிரம விஷ்ணுக்களுக்குத் தோன்றாத மறைப்பொருளைச் சிவபெருமானுக் குபதேசித்து, சுவாமிநாதன் எனப் பெயர்பெற்ற ஸ்ரீசுப்பிரமணியமூர்த்திகளை ஆசாரியராகக் கொண்டவராதலின், அகஸ்தியமுனிவரை "மறையின் பொருடெரிந்த கடவுட் பெருமா தவத்தோன்" என்றார். (உசா)

தேவர்கள் அகஸ்தியர் ஆசிரமத்தில்வந்த அ - ம.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் கoக.

உ

சிவமயம்.

நான்காவது,

# கற்பிலக்கணங் கூறிய அத்தியாயம்.

தீதெ றிந்த தமிழ்முனி செப்பலும்
யாது சொற்றனர் விண்ணவ ரென்றருள்
மாத வத்தினர் கேட்ப மகிழ்வுடன்
சூத மாமுனி சொல்லலுற் றனரோ.

(இ-ள்.) முக்குற்றத்தையொழித்த தமிழாசிரியராகிய அகஸ்தியமுனிவர் (இவ்வாறு) சொல்லவும், தேவர்கள் யாது சொல்லினர் என்று கேட்ட பெரிய தவத்தினையுடைய (நைமிசாரண்ணிய வாசிகளாகிய எண்பத்தெண்ணாயிர) முனிவர்கள் கேட்கும்படி, பெருமை தங்கிய சூதமுனிவர் சந்தோஷத்துடன் சொல்லத் தொடங்கினர். எ - று. (க)

அரிய நான்மறை தேரு மகத்தியன்
பரிவி னன்மொழி கேட்டலும் பண்புடைக்
குரவன் வாண்முக நோக்கினர் கோதிலா
விருவி சும்பி னிமையவர் யாருமே.

(இ-ள்.) உணர்தற் கரிய நான்கு வேதங்களையும் நன்குணர்ந்த அகஸ்தியமுனிவர் சொல்லிய ஆசையோடு கூடிய நல்ல சொற்களைக் கேட்டவுடனே, குற்றமில்லாத பெரிய தேவலோகத்தில் வாசஞ்செய்கின்ற தேவர்கள் யாவரும், நல்ல குணத்தினையுடைய தமது ஆசாரியராகிய பிரகஸ்பதிமுனிவரது ஒளிதங்கிய முகத்தைப்பார்த்தனர். எ - று. (உ)

பனிவி சும்பி னிழிந்து பரிவொடும்
புனைக ருங்கழல் விண்ணவர் போந்தமை
முனிவ கேட்டி மொழிகுவல் யானென
வினிதி னந்தண னோக்கி யியம்புவான்.

(இ-ள்.) அகஸ்தியமுனிவரே! அலங்கரிக்கின்ற வலிதங்கிய வீரக்கழலையணிந்த தேவர்கள், குளிர்ச்சி பொருந்திய ஆகாயத்தினின் றிரங்கி ஆசையுடன் (தேவரீரிடத்தில்) வந்த காரணத்தை யானெடுத்துச் சொல்லுகின்றேன் கேட்பீராக என்று பிரகஸ்பதிமுனிவர் இனிமையோடு (அகஸ்தியமுனிவரை) நோக்கிச் சொல்லத்தொடங்கினர். எ - று. (ங)

மன்னு கானினு மோங்கு வரையினு
முன்ன ருந்தவ மாற்று முனிவரி
லன்ன மூர்தியை யன்றி யருந்தவ
நின்னை யொப்பவர் நீணிலத் தியாவரோ.

(இ-ள்.) அருமையாகிய தவங்களைச் செய்த அகஸ்தியமுனிவரே! நிலைபெற்ற (தபோ) வனத்திலும், உயர்ந்த, மலைகளிலும் நினைத்தற் கரிய தவங்களைச்

செய்கின்ற முனிவர்களில்,தேவரீருக்குச் சமானமானவர்கள் அன்னப்பட்சியை வாகனமாகவுடைய பிரமதேவனை யல்லாமல், பெரிய உலகத்தில வேறே யாரிருக்கின்றனர்? ஒருவரு மில்லை. எ - று. (ச)

கங்கை சூடிய கண்ணுதற் சாமிதன்
பொங்கு பேரருள் பூண்ட வருந்தவ
வங்கண வானத் தமரர் குறையுறி
னெங்கு மேவுவர் நின்னிடத் தன்றியே.

(இ-ள்.) கங்கையாற்றைச் சடையிற் றரித்த நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது மிருந்த பெருமை தங்கிய கிருபையைப் பெற்ற அரிய தவசிரேஷ்டராகிய அகஸ்தியமுனிவரோ! இடமகன்ற வானுலகத்தில் வாசஞ்செய்கின்ற தேவர்கள் தங்களுக் கோர் குறைவு நேரிமோயின், தேவரீரிடத்தில் வருவ ரனறி வேறெங்கே செல்லுவார்கள். எ - று. (ரு)

செயிரில் கற்பின் றிகழ்மணிக் குன்றனை
மயிலன் னானின் மனைக்குரி யாளெனி
லுயர ருந்தவ வுன்ற னுளத்திடை
முயலி லேது முடித்தற் கரியதே.

(இ-ள்.) உயர்ந்த அருமையாகிய தவங்களைச் செய்துமுடித்த அகஸ்திய முனிவரோ! குற்றமில்லாத கற்போடு விளங்குகின்ற மாணிக்கமலையை யொத்த எமது தாயாகிய மயில்போலுஞ் சாயலைக்கொண்ட உலோபாமுத்திரை என்னும் அம்மையார் தேவரீரது பத்தினியாராகும் என்றால், தேவரீரது மனதில் எத்தனித்தால் செய்து முடிப்பதற்கு அருமையான கருமம் எது இருக்கின்றது? எதுவுமில்லை! எ - று.

அனை - அன்னை என்பதன் தொகுத்தல்விகாரம். (சு)

விளங்க ருந்ததி மேனை சுநீதியுட்
டௌங்கு சாவித் திரியந சூயைநின்
களங்க மற்றதோர் கற்புடை யாளொடு
முளம்பொ ருந்தி நிகர்சொல வொண்ணுமே.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற அருந்ததியையும், மேனையையும், சுநீதியையும் உள்ளத்தில் (அன்பு) விளங்கும் சாவித்திரியையும், அநசூயையையும்,தேவரீரது குற்றமற்ற சமானமில்லாத கற்புடைய மனைவியாராகிய உலோபாமுத்திரையாரோடு மனமொத்து சமானமாவொன்றுசொல்லக்கூடுமோ? கூடாது. எ - று. (எ)

கொழுந னுண்டபின் றுனுகர் கொள்கையும்
விழித்து யின்றபின் றுஞ்சலு மென்றுயி
லெழுதன் முன்ன மெழுதலு மேயன்றோ
பழுதில் கற்புடைப் பாவையர் செய்கையே.

(இ-ள்.) நாயகன் (அன்னம்) புசித்த பிறகு தான் புசிக்கும் கோட்பாடும், அவன் நித்திரைசெய்தபிறகு தான் நித்திரைசெய்தலும், (அவன் நித்திரைநீங்கி)

எழுந்திருப்பதன்முன்னே தனது மெல்லிய நித்திரையினின் றெழுந்திருப்பதுமே யல்லவா? குற்றமில்லாத கற்புடையபெண்களது செய்கைகளாகும். எ - று.

இதுபோலவே நடந்துவந்த தமது மனைவியாராகிய வாசுகி என்பவர் இறந்த காலத்தில் திருவள்ளுவநாயனார் கூறிய

"அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவறுத பாவாய்—அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
வென்றூங்கு மென்க ணிரா."—என்னும் வெண்பாவா லுணர்க.

"மென்றுயில்" என்பதனால் பெண்கள் நித்திரைசெய்கையில் கணவன் முதலாயினோர் சிறுகுரலிட் டழைக்கின், விடைதர விருக்கவேண்டுமென்றித் தம்மை மறந்து நித்திரைசெய்யப்படா தென்பது பெறப்பட்டது. (அ)

எரிம ணிப்பொலம் பூண்சுமந் தின்னுயிர்க்
குரிய கேள்வ ருவப்பமுன் னெய்துவார்
பிரியுங் காலையிற் பெய்கலன் யாவையு
மொருவி மாசுட லுண்டிட வைகுவார்.

(இ-ள்.) (கற்பினையுடைய மாதர்) பிரகாசிக்கின்ற நவமணிக ளிழைத்த பொன்னாலாகிய ஆபரணங்களைப்பூண்டு, இனிய உயிர்க்குச் சுதந்தரமுடைய கணவர் கண்டு களிக்கும்படி அவர்முன்செல்லுவர். நாயகர் தன்னை நீங்கிய காலத்தில் அணிந்திருக்கும் ஆபரணங்கள் எல்லாவற்றையும் நீக்கிச் சரீரத்தில் அழுக் குண்ணும்படி அழகுசெய்யாதிருப்பர். எ - று.

இதனை,—"நாவில்லா நாள்பூத்த நன்மலரும் போலுமே
யாளில்லா மங்கைக் கழகு."—என்னும் ஔவையார் திருவாக்கா லுணர்க. (கூ)

இனிய கேள்வர் முனியி னெதிர்நின்று
துனிகொ ணெஞ்சொ டெதிர்மொழி சொல்கிலா
ரனைய கேள்வ ரெறியினு மன்பொடு
கனிவர் நெஞ்சகங் கற்புடை மாதரே.

(இ-ள்.) கற்புடையபெண்கள் தமது இனிமையாகிய புருஷர் (யாதொரு காரணத்தினாலாவது) கோபங்கொண்டால், வெறுப்படைந்த மனதுடன் நேர் நின்று பதில்வார்த்தை சொல்லமாட்டார்கள். அப்படிப்பட்ட கணவர் எறிந்தாலும் ஆசையோடும் மன மிரங்குவார்கள். எ - று.

எறிதல் என்பது - அடித்தல், உதைத்தல், குத்தல், வெட்டல் ஆகிய நால்வகை யூறினொன்று.

கேள்வர் என்பதற்கு உறவினர் என்பது பொருள். கணவனைக்காட்டிலும் மனைவிக்குச் சிறந்த உறவின னில்லையாதலால், ஈண்டு கணவன் என்பதற்குக் கேள்வர் என்றார். (௰)

எய்து மிற்றுறந் தேகல ரில்லகல்
ளைதய லாமுகங் காணினுஞ் சாம்புவார்
மையில் காதலர் வந்தெவை யாயினுஞ்
செய்தி ரென்றலுஞ் செய்தன மென்பரால்.

(இ ள்.) (பதிவிரதைகளாகிய பெண்கள்) தான் அடைந்துள்ள வீட்டை விட்டு வெளியேசெல்லமாட்டார்கள். (அப்படி) வீட்டைவிட்டு வெளியேசெல்லும்பெண்களது முகத்தைப்பார்த்தாலும் ஒடுங்குவர். குற்றமற்ற கணவர்வந்து எவற்றையாகிலும் செய்தீர்களா எனக் கேட்டலும் செய்துவிட்டோம் என்று சொல்லுவர். எ - று.

இதனை திரிகடுகம்.

"கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனும்
உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந் தெல்லை கடப்பாளு மிம்மூவர்
வல்லே மழையருக்குங் கோள்."—என்பதனு னுணர்க.

தான் மணஞ்செய்துகொண்டு சென்ற கணவன் வீடு ஏன்பது புலப்பட "எய்துமில்"—என்றார். (கக)

விழவு கண்ணுறன் மேதகு நோன்புறல்
பழுதிற் றூநதி யாடுதல பண்ணவர்த்
தொழுது வாழ்த்துத றேமறு கற்பினோர்
கொழுந ரேவலி னன்றிக் குறிக்கொளார்.

(இ-ள்.) குற்றமற்ற கற்பினையுடைய பெண்கள் திருவிழா (முதலியவேடிக்கைகளைப்)பார்த்தலும், மேன்மைதங்கிய விரதங்களை ஆசரித்தலும், குற்றமில்லாத பரிசுத்தமாகிய புண்ணியநதிகளில் மூழ்குதலும், தேவர்களை வணங்கித் துதித்தலும், தமது கணவர் கட்டளையின்றிச் செய்யமாட்டார்கள். எ - று. (கஉ)

வளையுந் தங்கலன் மாற்றவட் கீயினு
முனிவு செய்கலர் மூப்பினர் சேர்வுறுத்
தனியிற் சேர்கலர் தாம்பிற ரிற்புகார்
புனித நெஞ்சுடைய புண்ணிய மாதரோ.

(இ-ள்.) பரிசுத்த மனதை யுடைய புண்ணியவதிகளாகிய கற்பினை யுடைய பெண்கள் அலங்கரிக்கின்ற தமது ஆபரணங்களை (கணவன்) மாற்றவளுக்குக் கொடுப்பினும் கோபங்கொள்ளமாட்டார்கள். முதுமைப்பருவ முடையார் அடைந்தில்லாத வேற்றிடம் செல்லமாட்டார்கள். அயலார் வீட்டினுள்ளே நுழையமாட்டார்கள். எ - று.

மாற்றவள்—வேற்றுப்பெண் அல்லது சககளத்தி. சகம்=சமானம், களத்தி=கழுத்துகொடுத்தவள். அதாவது தன்போன்று மணஞ்செய்துகொண்டவள் என்பது பொருள். இது சக்களத்தி என இக்காலத்து வழங்குகின்றது. (கங)

திருந்து மாயுள் சிதையுமென் றெண்ணித்தம்
பொருந்து காதலர் நாமம் புகன்றிடா
ரிருந்த போதன்றித் தாமு மிருந்திடா
ரருந்து மிச்சி லமிழ்தி னுகர்வரால.

(இ-ள்.) (பதிவிரதைகள்) தமக்கு அமைந்த நாயகரது திருத்தமாகிய வாழ்நாள் குறைவுபடுமே என்று கருதி, அவரது பெயரைச் சொல்லமாட்டார்கள். நாயகர் உட்கார்ந்தபோதல்லாமல், தாம் அவருக்குமுன்னே உட்காரமாட்டார்கள். அவர் உணடு விட்டுவிட்ட மிகுதியாகிய எச்சிலை, அமுததததைப்போல உணணு வார்கள். எ - று. (கச)

அறந்த வாத்தம தன்ப ரருளினற்
றுறந்து ளோர்பிறப் போர்தொழில் செய்குநர்
சிறந்த தொல்குலத தெய்வம் பசுவிருந்
திறந்து ளோர்க்கும் பகுத்தினி துண்பரால்.

(இ-ள்.) (கற்புடையமாதர்கள்) நீதி தவறாத தமது நாயகரது கிருபை யால், துறவிகளுக்கும், சுற்றத்தவர்களுக்கும், ஏவலாளருக்கும், மேம்பட்ட பழைமை யாகிய குலத்தெய்வத்திற்கும், பசுக்களுக்கும், விருந்தினருக்கும், தமது வமிசத்தில் இறந்துள்ள பிதுரர்களுக்கும், பாகித்து இனிமையாக உண்ணுவார்கள். எ - று.

இதனை திருக்குறள்.

"துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை."

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை."—எனவருவனவற்றா லுணர்க. (கரு)

மேவு காதல ருள்ளம் விழைந்தன
வேவு முன்னர் குறிப்பி னியற்றுவார்
தாவி லன்பர் தமையலர் தூற்றிடும்
பூவை யன்னவர் புன்முக நோக்கிலார்.

(இ-ள்.) (கற்புடையபெண்கள், தம்மை மணஞ்செய்து) பொருந்திய நாய கரது மனதில் விரும்பிய செயல்களைச் செய்யும்படி, அவர் கட்டளையிடுவதன் முன்னே குறிப்பாலுணர்ந்து செய்துமுடிப்பர். கெடுதலில்லாத தமது நாயகனைப் பலரறியப் பழிச்சொல்லால் தூற்றுகின்ற குயில்போலும் குரலையுடைய பெண்க ளது அற்பமாகிய முகத்தைப் பார்க்கமாட்டார்கள். எ - று.

"ஏவு முன்னர் குறிப்பி னியற்றுவார்"—என்பதனை "ஏவாமக்கண் மூவா மருந்து." என்னும் மூதாட்டியார் திருவாக்கானும்,

"கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி கொண்டன
செய்வகை செய்வான் றவசி கொடிதொரீஇ
நல்லவை செய்வா னமைச்ச னிவர்மூவர்
பெய்யெனப் பெய்யு மழை."—என்னும் திரிகடுகத்தானும் உணர்க. ()

இல்ல றத்திற் கியைவன வீட்டுவா
ரலல செயதே வறிதி னழித்திடார்
புலலு காதல ராயுட் பொலிவுற
மல்ல லோங்கணி மஞ்ச ளணிவரால்.

(இ-ள்.) (பதிவிரதைகள்) இல்வாழ்க்கைக்கு வேண்டியவற்றைப் பாது காத்துச் சேர்த்துவைப்பார்கள். தீய கருமங்களைச் செய்து ஒன்றையும் வீணில் அழிக்கமாட்டார்கள். தம்மை மணந்த கணவரது வாழ்நாட்கள் மிகும்படி வள மிகுந்து அழகுசெய்கின்ற மஞ்சளைப் பூசுவார்கள். எ - று. (கள)

கொழுநன் சொற்கட வாதுறை கொள்கையே
வழுவி னல்லறம வான்றவ மாற்றுத
றொழுது தெய்வம் பராய்மலர் தூவுதல்
பழுதில் கற்புடைப் பத்தினிக் கென்பவே.

(இ-ள்.) குற்றமில்லாத கற்பினையுடைய மனைவியருக்கு நாயகனது உத்தரவுகடவாது வசிக்கின்ற கோட்பாடே, தவறுதலில்லாத நல்ல தருமமும், சிறந்த தவஞ்செய்தலும், கடவுளை வணங்கி மலரால் அருச்சித்துத் துதித்தலும் என்று பெரியோர் சொல்லுவர். எ - று.

இதனை "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை." என்னும் ஔவையார் திருவாக்கா னுணர்க. (கஅ)

அழகின் மீக்கஞ் சிறிதில ராயினு
மொழிவி னோய்கிரம் புற்றன ராயினுங்
கிழவுத் தன்மைய ராயினுங் கேள்வரைப்
பழுது சொல்கலர் பண்பின் முயங்குவார்.

(இ-ள்.) (கற்பினையுடைய பெண்கள் தமக்கு நேர்ந்த) கணவர், அழகின் மேம்பாடு கொஞ்சமும் இல்லாதவரானாலும், தீராதவியாதிகள் மிகுந்து அடையப் பெற்றவரானாலும், (வயதுமுதிர்ந்து) விருத்தத்தன்மை உடையவரானாலும், (அவரைக்) குற்றஞ்சொல்லமாட்டார்கள். அவருக்குத் தகுதியாகத் தழுவுவார். எ - று.

ஒழிவில்நோய் - தொழுநோய் முதலியன. எனக்கொள்க.

நேரிசைவெண்பா.

"கொண்ட கணவன் குருபியே யானாலும்
பண்டுதான் செய்த பலனெனவே—கண்டுகொண்டு
குற்றமென வெண்ணிமனங் கோணா தவன்பணியைப்
பற்றிமிகச் செய்வார் பரிந்து."—என்பதனா னுணர்க. (கக)

அன்பர் துஞ்சிடிற் றுஞ்சுத லாங்கவர்
துன்ப மெய்திடிற் றுமுமத் துன்புற
வின்ப முற்றிடி னின்புற் றிருத்தலே
மன்பெ ருந்தவங் கற்புடை மாதர்க்கே.

(இ-ள்.) கற்புடைய மடந்தையருக்கு நாயகர் நித்திரைசெய்தால் (தாமும் அவர் போல்) நித்திரை செய்தலும், அவர் வருத்தமடைந்தால் (தாமும் அவர் போல்) வருத்தப்படுதலும், அவர் சந்தோஷித்திருப்பின் (தாமும் அவர்போல) சந்தோஷித்தலுமே நிலைபெற்ற பெரிய தவமாகும். எ - று.

"காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே." எனனும் நீதிவாக்கியத்தின்படியே, நாயகன் எச்சமையத் தெவவா றிருப்பினும், மனைவி அவனுக்கிசைய, அச்சமையத்தவவாறே இருக்கவேண்டும். என்பது கருத்து. (உo)

வாள்வி ழிக்குல மங்கைய ரன்பர்பொற்
றாள்வி ளக்கிய தண்புனல் கங்கையுங்
கேள்வ ரேகிளர் தேவர்கண் மூவரி
லாளு மெய்ம்மை யடிகளென் றெண்ணுவார்.

(இ-ள்.) ஒளிதங்கிய கண்களையுடைய (பதிவிரதைகளாகிய) நற்குடியிற் பிறந்த மாதர்கள், தமது கணவரது அழகிய பாதங்களைக் கழுவிய குளிர்ச்சியாகிய நீரைக் கங்காசலம் என்றும், அக் கணவரோ விளங்குகின்ற (உத்தமத்) தேவர்கள் மூவரில் உண்மையாக எம்மை ஆட்கொள்ளும் சிவபெருமான் என்றும் எண்ணுவார்கள். எ - று.

"தேவர்கள் மூவரி லாளுமெய்ம்மை யடிகள்" என்பது "உத்தமத்தேவர் தம்மு ளுத்தமனீசனும்" என்ற **பரஞ்சோதிமுனிவர்** திருவாக்கானுணர்க. அன்றியும், இதற்கு - பிரமா,விஷ்ணு, உருத்திரன் என்னும் பெருந்தேவர் மூவரைக் காட்டிலும், எம்மை அடிமையாகக்கொண்ட உண்மையாகிய கடவுள் - எனப் பொருள்கொள்ளுதலும் கூடும். "கேள்வ ரேகிளர் தேவர்கள் மூவரி - லாளு மெய்ம்மை யடிகள்"—என்பதனை "குலமகட்குத் தெய்வங் கொழுநனே" எனனும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கா னுணர்க.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெயயு மழை." என்னும் திருவள்ளுவநாயனார் திருவாக்கின்படி கணவனையே தெய்வமென்று வணங்குங் கற்பினையுடையாள், நினைக்கின் முடியாத தொன்றில்லை என் றுணரவேண்டும். (உக)

ஆன்ற கற்பினர் பூப்பி னகன்றுறை
மூன்று நாளு முகமலர் காட்டலர்
தோன்ற யாதுஞ்சொல் லார்புன றோய்ந்தபின்
சான்ற காதலர் தம்முக நோக்குவார்.

(இ-ள்.) மேம்பட்ட கற்பினை யுடைய பெண்கள் மாசருதுவையடைந்தால்,விலகி வாசஞ்செய்கின்ற மூன்றுதினத்திலும் தமது முகமாகியமலரை நாயகருக்குக் காட்டமாட்டார்கள். அவர்காதில் புலப்படும்படி ஒருவார்த்தையுஞ் சொல்லமாட்டார்கள். (நான்காநாள்) நீராடியபிறகு மிகுதியாகிய அன்புடைய தமது கணவர் முகத்தைப் பார்ப்பார்கள். எ - று.

"மூன்று நாளு முகமலர் காட்டலர்"—என்பதனை,

ஆசாரக்கோவை.

"தீண்டாநாண் முந்நாளு நோக்கார்நீ ராடியபின்
ஈராறுநாளு மிகவற்க வென்பதே
பேரறி வாளர் துணிவு"—என்பதனு னுணர்க. (உஉ)

புனித மாநதிப் பூம்புன லாடுநா
ளினிய காதலர் வேற்றிட மெய்திடி
லனைய கேள்வனை யன்பின் மனக்கொடு
பனிவி சும்பிற் பரிதியை நோக்குவார்.

(இ-ள்.) (கற்புடைய மாதர்கள்) பரிசுத்தமாகிய சிறந்த புண்ணியநதிகளின் அழகிய நீரில் மூழ்கும்போது, தமக்கு இனிமையாகிய நாயகர் வேற்றூருக்குப் போயிருப்பாராயின், அப்படிச்சென்றிருக்கும் நாயகனை அன்போடு மனதிலெண்ணி ஸ்நானஞ்செய்து, குளிர்ச்சிதங்கிய ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற சூரியனைப் பார்ப்பார்கள். எ - று. (உ௩)

வசையில் காதலர் தாய்தந்தை வைகுறி
லசதி யாடில ரன்ப ரழைத்திடின்
மிசையு நல்லமு தேனும் விடுத்துள
நசையி னோடும் பொருக்கென நண்ணுவார்.

(இ-ள்.) இகழ்வில்லாத தமது நாயகரது தாய்தந்தைகள் இருந்தால் (அவர்கள் முன்பாக) சிரித்துப்பேசமாட்டார்கள். கணவர் தம்மைக் கூப்பிடுவாராயின் மேலாகிய நல்ல அமுதமாயினும் உண்ணுவதைவிட்டு மனதிற்கொண்ட பேராவலோடும் சீக்கிரமாக அவரைச் சமீபித்து வருவார்கள் (பதிவிரதைகள்) எ - று.

திருவள்ளுவநாயனுர் மனைவியாராகிய வாசுகி என்பவர் ஒருநாள் கிணற்றில் நீரெடுக்கையில், நாயனுர் அழைக்க,நீர்க்குடத்தை அப்படியே விட்டுவந்தனரென்றும், திரும்பிப்போய்ப் பார்க்கையில் அரைக்கிணற்றில் விட்டுவந்தவகையேயிருந்ததாகவும் சரித முளது. இத் திருட்டாந்தத்தால் எத்தொழிலி லிருப்பினும் கணவர் வேண்டியபோது அவற்றை விட்டுவரவேண்டு மென்பது புலப்படுவது காண்க. (உ௪)

தாதை தன்னினுந் தன்னையர் தம்மினு
மாதர் மென்மொழி மைந்தர்க டம்மினுங்
கோதில கற்புடை யார்தங் கொழுநர்பாற்
காதல கூர்ந்து களிமகிழ் வெய்துவார்.

(இ-ள்.) குற்றமற்ற கற்பினையுடைய மாதர்கள், (தமது) தந்தையைக் காட்டிலும், ஆசாரியாகளைக் காட்டிலும், அழகிய மெல்லிய மழலைசசொற்களையுடைய பிள்ளைகளைக்காட்டிலும், தமது நாயகரிடத்தில் ஆசைமிகுந்து பெருமகிழ்ச்சியை யடைவர். எ - று. (உ௫)

உரலி லம்மியி லோங்கு முலக்கையிற்
பரவும் வாயிற் படியின் முறத்தினிற்
றிருவ கன்றிடு மாலெனச் சோரதிரார்
பொருவில் கற்புடைப் புண்ணிய மாதரே.

(இ-ள்.) சமானமில்லாத கற்பினையுடைய புண்ணியவதிகள் தமது செல்வம் தம்மைவிட்டு விலகிப்போமென்று உரலமேலும், அம்மிமேலும், உயர்கின்ற உலக்கைமேலும், வணங்குகின்ற வாயிற்படிமேலும், முறத்தினமேலும் ஒருபோதும் உட்கார்ந்திருக்கமாட்டார்கள். எ - று. (உகூ)

உரிய கேள்வ ருவந்து பணிந்திடா
தரிய நோன்பொடு பூசனை யாற்றுவார்
கரிய கூற்றுவன் றூதர் கடிந்திட
வெரியுந் தீநர கத்திடை யெய்துவார்.

(இ-ள்.) தமக்குரிய கணவனை மனம் விரும்பி வணங்காமல், அருமையாகிய விரதங்களோடு தேவபூசைகளைச்செய்யும் பெண்கள், கருமையாகிய யமதூதர்கள் தண்டிக்கும்படி (முக்காலத்தினும்) எரிகின்ற தீமயமாகிய நரகத்தினிடத்தில் பொருந்தி வாழ்வார்கள். எ - று.

பணிந்திடா வரிய நோன்பொடு பூசனை எனவும் பாடம். அவ்வாறு கொண்டால், நாயகன் அனுசரியாத விரதங்களை யாசரித்து, அவன் வணங்காத கடவுளரை வணங்கும் பெண் என்று பொருள்கொள்ளவும். (உ௬)

கடிம ணஞ்செயுங் காதலர் தமபழி
மடமை யோடு மொழிபவர் மற்றவ
ருடன்வெ குண்டுரை யாடுந ரோரியாய்
முடுவ லாகப் பிறப்பர் முடிவினே.

(இ-ள்.) (வேதவிதிப்படியே) திருமணஞ்செய்த கணவரது குற்றங்களை அறிவின்மையால் வெளியிற்சொல்லும் பெண்களும், அவரோடு கோபித்து எதிர் வார்த்தைசொல்லுகின்ற பெண்களும் இறந்தபின்னர் (முறையே) நரியாகவும், நாயாகவும் பிறப்பர். எ - று.

என்றால், கணவன தவறியதை வெளிப்படுத்தியவள் நரியாகவும், எதிர்த்துப்பேசினவள் நாயாகவும் மறுஜென்னமடைவார்கள். என்பதாம்.

“கற்புடைத் தன்பு முடைத்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு—மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு.”—என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கின்படி அமையப்பெற்றவர் பூர்வ ஜென்ம புண்ணியத்தாற் கிடைத்ததென்றும், இவவாறு எதிர்த்துப்பேசும் மனைவி அமைந்தவர்

“எதிர்நிற்கும் பெண்ணு மியல்பி லெரும்புஞ்
செயிர்நிற்குஞ் சுற்றமு மாகி—மயிர்நைப்ப

முந்தைப் பழவினையாய்த் தின்னு மிவைமூன்றும்
நொந்தார் செயக்கிடந்த தில்.''—என்னும் திரிகடுகத்தின்படியே பூர்வ ஜென்மபாவத்தாற் கிடைத்ததென்றும் கொள்ளவேண்டும். என்பது. (உஅ)

கொழுநர் சீறிற் குறுகிமுன் வைபவ
ருழுவை யாகப் பிறப்ப ருருத்துநெஞ்
சழல மாற்றவட் சீறு மறிவிலோர்
கழல்கட் கூகைப் பிறப்பிற் கழிவரால்.

(இ-ள்.) நாயகர் கோபித்தால் அவரை நெருங்கி அவருக்குமுன்னே திட்டுகின்ற பெண்கள் (மறுஜெனனத்தில்) புலியாகப்பிறப்பர். கோபித்து மனஞ் சுடும்படி தன்சகக்களத்தியைச் சீறுகின்ற அறிவில்லாதபெண்கள் சுழலுகின்ற கண்ணையுடைய கோட்டானுகப் பிறந்தழிவர். எ - று. (உகூ)

ஏதி லான்ற னெழில்கண் டுவப்பவர்
பேது செய்துழல் பேயுரு வெய்துவார்
காத லன்பசிக் கக்களித் துண்பவர்
பாத கஞ்செயும் பன்றியிற் றோன்றுவார்.

(இ-ள்.) அன்னிய புருஷருடைய பேரழகைக் கண்டு அவர்மீது ஆசைகொள்ளும்பெண்கள் துன்பஞ்செய் துழல்கின்ற பேய்வடிவத்தை யடைவார்கள். தமது கணவர் பசித்திருக்க ஆசைகொண்டு (அவருக்கு முன்னே) உண்ணும் பெண்கள் பாவஞ் செய்கின்ற பன்றிப் பிறவியில் ஜெனிப்பர். எ - று.

பரபுருஷரை இச்சித்தல் கூடாது என்பதனை,

ஆசாரக்கோவை.

"தம்மேனி நோக்கார் தலையுளரார் கைந்நொடியார்
எம்மேனி யாயினு நோக்கார் தலைமகன்
தன்மேனி யல்லாற் பிற''—எனபதனுனுணர்க. (௩0)

மருவு காதல ராருயிர் மாய்ந்திடி
லெரியின் மூழ்கி யிறந்து படுவதற்
கருநெ றித்தலை வைக்கு மரிவையர்
புரவி நன்மகப் பேறு பொருந்துவார்.

(இ-ள்.) தன்னை மருவிய கணவரது அருமையாகிய உயிரானது அழிந்துவிடுமாயின், அக்கினிப்பிரவேசஞ்செய்து தானும உயிர மாய்த்துக்கொள்வதற்கு அரிய நல்லமார்க்கத்தில் மனம்வைக்கும் பெண்கள், நல்ல அசுவமேதயாகஞ்செய்த பலனை யடைவார்கள். எ - று.

எரியின் மூழ்கி யிறந்துபடுதலாவது -நாயகனோடு உடன்கட்டையேறுதல்; அல்லது, உடனே நெருப்பில் வீழ்ந் திறத்தல் என்பதாம். (௩க)

முற்று செந்தழன் மூழ்கிய கற்பினோர்
புற்ற ராக்கொடு புள்ளர சேகல்போ
லெற்று கால படர்க்கை பறித்தினி
துற்ற கேள்வரொ டும்பரி னேகுவார்.

(இ-ள்.) (கணவனிறத்தலால்) முதிர்ந்த செந்நிறமுடைய அக்கினியில் வீழ்ந்திறந்த பதிவிரதைகள், பட்சிராஜனாகிய கருடன் புற்றிலுள்ள பாம்பினைப் பற்றிக்கொண்டு பறந்துபோதல்போல, கொல்லுகின்ற யமதூதர்களுடைய கையினின்றும் பறித்துக்கொண்டு இனிமையாகப் பொருந்திய கணவரோடு தேவலோகம் போவார்கள். எ - று. (௩௨)

கொழுநன் பாவி யெனினுங் கொழுநனோ
டழலின் மூழ்கினள் கற்புடை யாளெனின்
விழியி லன்னவட் காணில்வெங் கூற்றுவ
னுழுவ லன்பனைக் கைவிடுத் தோடுமே.

(இ-ள்.) நாயகன் பாதகங்களைச் செய்தவன் என்றாலும், நாயகனோடு அக்கினியி லிறங்கினவள் கற்புடைய பெண்ணாக இருப்பாளாகில், கொடியயமன் தனது கண்களால் அவளைப் பார்த்தால், விடாது தொடர்ந்த அன்பினையுடைய (அவளது) நாயகனைக் கைவிட்டு ஓடுவான். எ - று. (௩௩)

வடபு லத்து வயங்கு மருந்ததிக்
கடவுட் கற்பினர் காந்திதங் கண்ணுறிற்
படர்சி கைக்கனல் வெங்கதிர் பான்மதி
சுடர்ம ழுங்கிப் பொலிவில தோன்றுமால்.

(இ-ள்.) வடதிசையில் விளங்குகின்ற அருந்ததியை யொத்த சிறந்த கற்பினையுடைய மாதர்களது காந்தியானது தமது கண்களுக்குப் புலப்பட்டால், பரவிய கொழுந்தினையுடைய நெருப்பும், வெவ்விய கிரணங்களையுடைய சூரியனும், வெண்மையாகிய சந்திரனும், ஒளிகுன்றி விளக்கமில்லாது தோன்றும். எ - று.

நட்சத்திரங்களில் அருந்ததி வடக்கின்கண் உள்ளதாதலின "வடபுலத்து வயங்கு மருந்ததி" என்றார். (௩௪)

நீடு காதல னோடுயிர் நீத்திடும்
வீடில் கற்பினண் மெய்ம்மயி ரொன்றினுக்
காட கப்பசும் பொன்னிலத் தாயிரங்
கோடி காலங் கொழுநனொ டின்புறும்.

(இ-ள்.) மிகுந்த அன்பினை யுடைய தனது நாயகனோடு உயிர்துறந்த கெடுதலில்லாத கற்பினையுடைய பெண், தனது சரீரத்திலுள்ள உரோமம் ஒன்றுக்கு ஆயிரங்கோடிகாலம் ஆடகம் என்னும் பசியபொன்னுலகமாகிய சுவர்க்கலோகத்தில் நாயகனோடு இன்பமனுபவித்திருப்பாள். எ - று.

"மெய்ம்மயிர் ஒன்றினுக்கு" என்பதால், உடலிலுள்ள உரோமம் எண்ணற்கரிதுபோல் - எண்ணில்காலம் விளங்குவள் என்பது பொருள்.

ஆடகம் நால்வகைப்பொன்களில் ஒன்று. அவையாவன—ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம். (௩௫)

கற்பு மேய கனங்குழை மாதனைப்
பெற்று ளோர்தம் மரபும் பெருந்தவக்
கற்பி னுட்கொண்ட காதல னுருயிர்ச்
சுற்றம் யாவுந் துறக்கத்தி னெய்துமால்.

(இ-ள்.) கற்பினைப்பொருந்திய கனமாகிய காதணிகளை யணிந்த மகளிரை ஈன்றவரது மரபிலுள்ளாரும், பெரியதவத்தையுடைய அக்கற்புடையாளை மணஞ் செய்துகொண்ட கணவரது உயிர்போலப் பொருந்திய உறவினர் யாவரும் சுவாக்கத்தை யடைவர்கள். எ - று.

இதன்கருத்தை - திரிகடுகம்.

" மண்ணின்மேல் வான்புகழ் நட்டானு மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாட் பெற்றானும்—உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித் தொட்டானு மிம்மூவர்
சாவா வுடம்பெய்தி னார்."—என்பதனு னுணர்க.

மரபு, சுற்றம் என்பன பொருளால் உயர்திணையும், சொல்லால் அஃறிணை யுமாதலின், எய்தும் என அஃறிணைமுடிபுதந்து கூறினார். (௧௬)

பொருவில் கற்பின் வழீஇயபுன் மங்கைய
ருரிய மூன்று மரபினுள் ளோரையும்
வெருவத் தேங்கி விழுங்கி யுமிழ்கலா
வெரியுந் தீநர கிற்குடி யேறுவார்.

(இ-ள்.) சமானமில்லாத கற்புநிலைமையினின்றும் தவறிய அற்பமாகிய பெண்கள், தமக்குரிய மூன்றுகால்வழியிற் பிறந்துள்ளார் யாவரையும், தன்னகப் படுத்தி நீக்காத எரிகின்ற நெருப்பினையுடைய நரகத்தில், பயந்து நடுங்கி வாசஞ் செய்யும்படி குடியேற்றுவார்கள். எ - று.

மரபு மூன்று ஆவன—தந்தைமரபு, தாய்மரபு, கணவன்மரபு.

வழீஇ என்பது இயற்கையளபெடை. (௧எ)

நண்ணு கற்புடை நங்கையர் சீறடி
மண்ணி னெவ்விடந் தோயினு மற்றஃ
தெண்ணு கின்ற தலங்க ளெவற்றினும்
புண்ணி யத்தல மென்று புகல்வரால்.

(இ-ள்) விரும்புகின்ற கற்பினையுடைய மங்கையரது சிறியபாதங்கள் பூமியில் எவ்விடத்தில் படிந்தபோதிலும், (பத்தர்கள் அடையும்படிக்) கருதுகின்ற ஸ்தலங்கள் எல்லாவற்றினும், அவ்விடம் (மேம்பட்ட) புண்ணியஸ்தலம் என்று பெரியோர் கூறுவர். எ - று.

சிறுமை + அடி — சீறடி என முதனீண்டுநின்றது. நீளாவிடின், சிற்றடி என வரும்.

மற்று, ஆல்—அசைகள்.

எவற்றினும் என்பதில் உம் முற்றுமையாதலால் எகரம் எஞ்சாமைப்பொருளில் வந்தது. (௩அ)

கவ்வை வெண்டிரைக் கங்கை முதலவாந்
தெய்வ மாநதி யாவுஞ் செறிந்ததம்
எவ்வ மறறிடக் கற்பி னியைந்திடு
நவ்வி நோக்கிய ராட நயக்குமால்.

(இ-ள்.) ஒலிக்கின்ற வெண்மையாகிய அலைகளையுடைய கங்கைமுதலாகிய தெய்வீகம்பொருந்திய சிறந்தநதிகளெல்லாம், நெருங்கிய தமதுதுன்பம் நீங்கக் கற்புப்பொருந்திய மான்போலுங் கண்களை யுடைய பெண்கள் (தம்மிடத்தில்) மூழ்கும்படி விரும்பும். எ - று.

புண்ணியநதிகள் தம்மிடத்தில் மூழ்கினோரது பாவங்களை யொழிக்கும் வன்மையுடையதாயிருந்தும், அந்நதிகளின் பாவம் பதிவிரதைகள் மூழ்குவதால் பரிகரிக்கப்படுமென்பார் " கற்பி னியைந்திடு நவ்வி நோக்கிய-ராட நயக்குமால் " என்று ராகலின், கற்பின் மடந்தையர் புண்ணியநதிகளினு மேம்பட்டவர் என்பது பெறப்பட்டது. (௩௯)

மண்ணு நன்மணி வேய்ந்து வயங்கிய
வண்ணன் மாடங்க ளாயினுங் கற்புடைப்
பெண்ணி னல்லவ ரில்லெனிற் பேய்க்கண
நண்ணு கின்ற வனமென காட்டுவார்.

(இ-ள்.) அழகிய நல்ல நவரத்தினங்களால் அலங்கரித்து விளங்குகின்ற பெருமை பொருந்திய மாளிகைகளானாலும், கற்பினை யுடைய மாதர்க ளில்லையானல், அவ்விடத்தைப் பேய்க்கூட்டங்கள் விரும்பிவாழ்கின்ற வனம் என்று பெரியோர் சொல்லுவர். எ - று.

இதன் கருத்தை.

" நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா வுண்டிபாழ்
ஆறில்லா வூருக் கழகுபாழ்—பாரி
லுடப்பிறப் பில்லா வுடம்புபாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை." — என்னும் மூதாட்டியார் திருவாக்கானுணர்க. (௪0)

காற்றும் வெய்ய கனைகதி ருங்கடற்
றோற்று தண்ணில வுச்சுடர்த் திங்களும்
போற்று கற்பிற் புரிகுழற் பூங்கொடி
மேற்றொ டும்பொழு துள்ளம் வெருவுமால்.

(இ-ள்) சுடுகின்ற வெவ்விய கிரணங்களையுடைய ஒளிவீசுகின்ற சூரியனும், கடலிற்றோற்றுகின்ற குளிர்ச்சி பொருந்திய சந்திரிகையோடு பிரகாசிக்கின்ற சந்திரனும்,(அக்கினியும்) துதிக்கின்ற கற்புப்பொருந்திய புரிந்த கூந்தலையுடைய அழகிய பூங்கொம்பை யொத்த மாதர்மேற் பரிசிக்கையில் மனம் அஞ்சுவர். எ - று.

சீதை அக்கினியிற் குளித்தபோது, அக்கினி சகியாதவனுயினுன் என்னும் இராமாயண சரிதத்தானும், சூரிய சந்திரர்களாகிய சுடர்களைக் கூறியதானும்,அவ ற்றிற் கினமாகிய அக்கினி என வருவிக்கலாற்று. (சுக)

மேவு காதலன் வீயப் புனல்பொழி
காவி யங்கட் கலன்கழி மாதரை
யாவி நீத்துக் கிடந்திடும் யாக்கைபோல்
யாவ ருந்தொட நீதென் றியம்புவார்.

(இ-ள்.) தன்னைச்சேர்ந்த கணவன உயிர்விடவால், நீர்சிந்தும் நீலோற்ப லம்போலும் அழகிய கண்களையுடைய விதவைகளாகிய பெணகளை, உயிரை யொழித்து விழுந்துகிடக்கும் வெற்றுடல்போல, எவர்களும் பரிசித்தல் தீமை யுடையது என்று (நூல்வல்லோர்) சொல்லுவர். எ - று.

ஆவி நீத்துக் கிடந்திடும் யாக்கை=பிரேதம்.

உயிரொழிந்த பிரேதபரிசத்தாற் சூதகம் நேரிட்டு ஸ்நானஞ்செய்தல் போல, கைம்மையடைந்தாரைக் கையாற்றொடுதலும் அவவாறேயாகும் எனபார "கலனகழி மாதரை - யாவி நீத்துக் கிடந்திடும் யாக்கைபோல் - யாவ ருந்தொட நீதென் றியம்புவார" என்றார். (சுஉ)

மாற்ற ருங்கல னீத்த மகளிரை
யாற்றெ திரப்படி னேகல ராயலாற்
போற்றி வாழ்த்துதல் பூண்கழி மாதரில்
வேற்று மாதாசொல் வெவ்விட மென்பரால்,

(இ-ள்.) மாற்றுதற்கரிய கலன்கழிந்த பெண்களை (ஒருவாசெல்லுங்கால்) எதிர்ப்பட்டால் (தாம் உத்தேசித்துச்சென்ற விடத்துக்குப்) போகமாட்டாது திரு ம்புவர். மாங்கலியத்தையிழைந்த கைம்பெண்களில் வணங்கித் துதித்தல் தாயை யல்லாமல்,ஏனைய மாதரதுசொல் வெவவிய விஷத்துக் கொப்பாகும எனப் பெரி யோா கூறுவர். எ - று.

கலன் என்பது ஆபரணங்களுக்குப் பொதுவாயினும் ஈண்டு சிறப்புபற்றி மாங்கல்லியததிற் காயது. (சுரு)

கைம்மை யாகிய கற்புடை மங்கையர்
தம்மொ ழுக்கந் திறம்பிடிற் றுமலா
லம்ம தங்குலத் தோரையு மாரழல்
வெம்மை சோநர கத்திடை வீழ்த்துவார்.

(இ-ள்.) (தமது நாயகர் இறந்ததனுல்) விதவைத்தன்மையாகிய கற்பினை யுடைய மடந்தைமார் தமதுகற்புநடையில் தவறுவாராகில்,தாமமாத்திரமேயல்லா மல், ஐயோ! தமது குலத்தினர்யாவரையும் நெருப்புப்பொருந்திய வெப்பமுடைய நரகத்தில் வீழச்செய்வர். எ - று. (சுச)

கிழல்செய் பொற்கல னீத்த மடந்தையர்
குழலி னைக்குறை யாது முடித்திடி
லழல்கட் கூற்றுவன் றூதர்மற் றங்கவர்
விழையுங் கேள்வனைப் பாசத்தில் வீக்குவார்.

(இ-ள்.) நிழலைச்செய்கின்ற பொன்னாலாகிய மாங்கல்லியத்தை நீக்கிய விதவையர் தமது கூந்தலைக் களையாமல் முடிப்பாராயின், நெருப்பைப்போலுங் கோபம்பொருந்திய கண்களையுடைய யமதூதர், அவர்கள் விரும்புங் கணவனை அவ்விடத்தில் பாசக்கயிற்றால் கட்டுவார்கள். எ - று. (சரு)

மருவு காதலன் மாய்ந்திடின் மங்கைய
ரொருப கற்பொழு துண்டரும் பாக்கிலை
விரியும் பாயல வெறுத்துமண் மேற்றுஞ்சி
யரிய நோன்புக ளாற்றிட வேண்டுமால்.

(இ-ள்.) பெண்கள் தம்மைக்கலந்த புருஷன் இறந்தால், பகலில் ஓரே வேளை யுணவுகொண்டு, அரிய பாக்குவெற்றிலையையும், பரவிய படுக்கையையும், மனம்வெறுத்து நீக்கி மண்மேற்படுத்துத் துயின்று, அரியவிரதங்களை யாசரித்து (உயிர்வாழ) வேண்டும். எ - று.

உடல் இளைக்கவேண்டுமென்கிற குறிப்பால் "கொண்டநல் விரதத் தினைத்தயாக் கையுமிக் கொடியனேற் கருளுநா ளுளதோ" என்ற சிவப்பிரகாச சுவாமிகள் திருவுள்ளக்கருத்திற் கிணங்க "காதலன் மாய்ந்திடின்***அரிய நோன்புகளாற்றிடவேண்டுமால்" என்றார். (சசு)

சுடர்செய் பொற்கல னீத்திடுக் தோகையர்
கடவுள் பூசனை காதலி னுற்றியு
முடல மாசுண வுள்ளுயிர் நீத்திடா
தடகு மூல மருந்திட வேண்டுமால்.

(இ-ள்.) பிரகாசத்தைச் செய்கின்ற அழகிய மாங்கல்லியமிழந்த மாதர்கள், தேவதா அர்ச்சனை ஆசையுடன் இயற்றியும், சரீரத்தை அழுக்குண்ணும்படி வைத்தும், உள்ளிருக்கும் உயிர்நீங்காமல் இலைகளையும் கிழங்குகளையும் பசி நீங்கும்பொருட்டுக் (குறைவாக) உண்டும் இருக்கவேண்டும். எ - று. (சஎ)

எரிசெய் பொற்கல னீத்தவ ரின்னணம்
விரதம் பூண்டு விழுத்தவ மாற்றிடிற்
பரவு கின்ற பதியுல கெய்துபு
பொருவி லாவரும் போக நுகர்வரால்.

(இ-ள்.) ஒளியை உண்டுசெய்யும் பொன்னாலாகிய மாங்கல்லியத்தை யிழந்த விதவைகள், இவ்விதமாகிய விரதங்களை மேற்கொண்டு பெருமை தங்கிய

தவத்தைச் செய்வாராயின், துதிக்கின்ற தமது கணவன்சென்ற உலகத்தை யடைந்து சமானமில்லாத அருமையாகிய இஷ்டபோகங்களை (அவனுடன்) அனுபவித்திருப்பர். எ - று.

எய்துபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (சஅ)

இன்ன வற்று ளியம்பிய கற்பிய
லன்னை நின்னிடத் தெய்தின ளாதலி
னுன்னை யேத்தி வினையொழிந் தோமென
மன்னு மாதவன் பன்னியை வாழ்த்தினன்.

(இ-ள்.) இப்படிப்பட்டவைகளில் சொல்லிய கற்பின் றன்மையையுடைய தாயாகிய (உலோபாமுத்திரை என்னும்) அம்மையார் உம்மிடத்தில (மனைவியாக) அடைந்திருக்கின்றனர். ஆனபடியால், உம்மைத் துதித்து எமது துன்பம நீங்கினோம் என்று நிலைபெற்ற பெரிய தவத்தையுடைய அகஸ்தியமுனிவரது மனைவியை ஆசீர்வதித்தார் (பிரகஸ்பதிமுனிவர்). எ - று. (சகூ)

பொருவில் கற்புடை யாள்பதம் போற்றிய
தெருளு நெஞ்சுடை விண்ணவர் தேசிகன்
முரிதி ரைக்கட லுண்ட முனிவனைப்
பரவி யின்மொழி பற்பல கூறுவான்.

(இ-ள்.) சமானமில்லாத கற்பினையுடைய உலோபாமுத்திரையினது பாதங்களைத்துதித்த தெளிந்த மனதினையுடைய தேவகுருவாகிய வியாழபகவான், முரிகின்ற அலைகளையுடைய சமுத்திரசலத்தை ஆசமனஞ்செய்த அகஸ்தியமுனிவரைத் துதித்து இனியவார்த்தைகள் பற்பலவகையாகச் சொல்லத்தொடங்கினர்.

அகஸ்தியர் கடனீரை ஆசமனஞ்செய்ததின விபரம் முன கூறப்பட்டுள்ளதால், ஆங்கு கண்டுகொள்க. (ருo)

குடிலை நீயிவள் கோதறு மாமறை
வடிவி னற்றவ நீயிவள் வான்பொறை
யடிக ளாதலி னின்னுளத் தாயுங்கால்
முடிவு றுதன வில்லை மொழியினே.

(இ-ள்.) (உங்களிருவருக்கும் ஒப்பிட்டால்) தேவரீர் பிரணவப்பொருள் ஆகும். இவவன்னையார் குற்றமற்ற பெருமைதங்கிய வேதவடிவாகும். தேவரீர் வசையில்லாத நல்லதவவடிவாகும். இவவன்னையார் சிறந்த பொறுமையின்வடிவாகும். தேவரீர் எமக்கெல்லாம்தலைவராதலால், உமது திருவுளளத்தில் ஆராயுமிடத்து முடிவுபெருத கருமங்களே இல்லை. எ - று. (ருக)

ஐய வானத் தமரர்கள் யாவருஞ்
செய்வ தொன்றில ராகித் திகைப்புற
மையல் விந்தம் வளர்ந்தது வானுற
வெய்ய வன்றடந் தேரை விலக்கியே.

(இ-ள்.) ஐயனே! ஆகாயத்தில் வசிக்கின்ற தேவர்கள் எல்லாரும் செயற்பாலது ஒன்றுமில்லாதவராகித் திகைக்கும்படி, மதிமயக்கங்கொண்ட விந்தபர்வதமானது சூரியனது விசாலமாகிய இரதத்தைச் செல்லவொட்டாமல் தடுத்து, ஆகாயத்தை அளாவி வளர்ந்திருக்கின்றது. எ - று.

விந்தகிரி என்பது குமரிகண்டத்தில் தெற்கு வடக்கிருக்க வுள்ள ஏழு மலைகளில் ஒன்று. அவையாவன-மயேந்திரகிரி, பொதியகிரி, சையகிரி, சத்திகிரி, விருக்குகிரி, விந்தகிரி, பாரியாத்திரகிரி என்பன. இதனை,

சிவதருமோத்தரம்-கோபுரவியல்.

"உன்னதந்தென் மயேந்திரமே யுயர்மலையஞ் சையகிரி
வின்னவிலுஞ் சுத்திகமே விருக்குமுயர் விந்தியமே
பன்னுபுகழ் மிகுபாரி யாத்திரமே யெனப்பகர்ந்த
வின்னகிரி யேழுமுதற் குமரிதலத் திசைந்தனவே." என்பதனானுணர்க. ()

பொன்னங் குன்றொ டிகலிவிண் போகுய
ரன்ன வெற்பின் வலியை யடக்குவார
முன்ன மேழ்கட லுண்ட முனிவர
நின்னை யன்றி நிகழ்த்திடின் யாவரே.

(இ-ள்.) முன்னாளில் சப்தசமுத்திரங்களையு முண்ட அகஸ்தியமுனிவரே! அழகிய மேருபர்வதத்துடன் பகைமைகொண்டு ஆகாயத்தைநோக்கிச் செல்லுகின்ற உயர்ந்த அப்படிப்பட்ட விந்தபர்வதத்தினது வல்லமையை அடக்கத்தக்கவர்கள், தேவரீரையல்லாமல் சொல்லுமிடத்து யாவரிருக்கின்றனர். எ - று. (ருங)

என்று தேவர் குரவ னிசைத்தலுங்
குன்றின் வீக்கங் குறைப்ப லமரர்நீர்
சென்று நும்பதி சேர்கென வோதினன்
துன்று வேலை பருகிய தூயவன்.

(இ-ள்.) என்றிவ்வகையாக தேவகுருவாகிய வியாழபகவான் சொல்லவும், நெருங்கிய கடலைக்குடித்த பரிசுத்தராகிய அகஸ்தியமுனிவர், தேவர்களே! யான் விந்தமலையினது இறுமாப்பை அடக்குகின்றேன். நீங்கள் உமதுலகத்தை அடையுங்கள் என்று சொல்லி விடைகொடுத்தருளினர். எ - று. (ருச)

கற்பிலக்கணங்கூறிய அ - ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் கருஅ.

சிவமயம்.

ஐந்தாவது,

# அகஸ்தியர் விந்தவரையை யடைந்த அத்தியாயம்.

விண்ணவர் யாவரு மேகிய பின்னர் விரிகொன்றைக்
கண்ணி மிலைச்சுஞ் செஞ்சடை முக்கட் கனிதன்னை
யெண்ணி மனத்தா லைம்புல னென்னு மிகல்செற்றோ
னண்ணு முலோபா முத்திரை யோடு நவில்கின்றான்.

(இ-ள்.) ஐம்புலன்களாகிய பகையைச்செயித்த அகஸ்தியமுனிவர், தேவர்கள் யாவரும் தமது உலகத்தை அடைந்தபின்பு, (இதழ்கள்) விரிந்த கொன்றை மலர்மாலையைச் சூடிய செவ்விய சடையினையுடைய மூன்று நேத்திரங்கள் பொருந்திய அருட்கனியாகிய சிவபெருமானை மனதில் தியானித்து, அன்பு பொருந்திய உலோபாமுத்திரை என்னும் தமது பத்தினியாரோடு சொல்லத் தொடங்கினர். எ - று.

ஞானப்பயிர் விளையுங்கால் ஐம்புலன்கள் அதனையழிக்கக் கருதும். அக்காலத்து அவவைம்புலனைச் சாந்தத்தினால் தடுக்கவேண்டும். இவர் அவவாறு செய்தவர் என்பதுதோன்ற "ஐம்புல னென்னு மிகல்செற்றோன்" என்றார். இதனை,

"நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற வகழ்ந்து போக்கித் தூர்வைசெய்
தன்பெனும் பாத்தி கோலி முனபுற
மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்
பக்தித் தனிவித் திட்டு நித்தலும்
ஆர்வத் தண்ணீர் பாய்ச்சி நேர்நின்று
தடுக்குநர்க் கஞ்சா திடுக்கண் செய்யும்
பட்டி யஞ்சினுக் கஞ்சியுட் சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்து" — என்னும் பட்டணத்துப் பிள்ளையார் திருவாக்கா னுணர்க.

'முக்கட்கனி' என்பது முன் விளக்கப்பட்டுள்ளது. (க)

குன்ற மனைத்தின் வார்சிறை யீர்ந்த குலிசத்தோ
னின்றொரு வெற்பை யடக்கும் வலித்திற மில்லான்போ
னின்று தவத்தை யிரப்பும் வேதிய னென்னும
னன்றுகொ னம்முறை வந்தது கற்பி னலமிக்கோய்.

(இ-ள்.) கற்பின் விருப்பமிகுந்த உலோபாமுத்திரையே! எல்லா பர்வதங்களின் நீண்ட சிறகுகளையும் அறுத்த வச்சிராயுதத்தையுடைய இந்திரன் இப்பொழுது ஒரு விந்தபர்வதத்தை யடக்கும் வல்லமை மிகுதி இல்லாதவன்போல,

நன்னெறியினின்று தவத்தைச் செய்துமுடிக்கும் அந்தணன் என்று கருதாமல் நம்மிடத்தில்வந்து குறைகூறியது நன்மையுடையதுதாமோ. எ - று.

நன்று கொல் என்பதில் 'கோல்'ஐயப்பொருளில் வந்தது. "கொல்லே யைய மசைநிலைக் கூற்றே" என்றபடி.

இதுமுதல் நான்குபாடல்கள் அகஸ்தியர் தமது மனைவியைநோக்கிக் கூறு கின்றனர். (உ)

பன்னிரு வெய்யவ ரீறுசெய் கூற்றுப் படாசெந்தி
மன்னிய வட்ட வசுக்கண் மருத்துவர் வானோர்க
ளுன்னினு மண்ட மனைத்து மிடிந்திடு மொலலார்போ
லென்னுழை யெய்தி யிரந்தமை யெண்ணுறி லென்னேயோ.

(இ-ள்.) பன்னிரண்டு சூரியர்களும், (ஆயுளை) முடிவுசெய்கின்ற யமனும், படாந்தெரிகின்ற செந்நிறமுடைய அக்கினியும், நிலைபெற்ற அஷ்டவசுக்களும், மருத்துக்களும், தேவர்களும், (ஆகிய இவர்கள்) மனதில் நினைத்தாலும் அண்ட கோடிகளெல்லாம் அழிந்துபோகும். என்னிடத்தில்வந்து பகைஞர்போல யாசித்த காரணம் யோசிக்குமிடத்தில் யாதோ? அறிகிலேன். எ - று.

தமது காசிவாசத்தைத் தடுத்தமையின் 'ஒல்லார்' என்றார்.

கூற்று உடல் வேறு உயிர் வேறாகக் கூறுபடுத்துவோன்.

பன்னிருசூரியர் ஆவார்-தாத்துரு சக்கரன் அரியமன் மித்திரன் வருணன் அஞ்சுமான் இரணியன் பகவான் திவச்சுவான் பூடன் சவித்திரு துவட்டன். இப் பெயர் சித்திரைமாத மேடவிராசிமுதல் ஒவ்வொருமாதத் தொவவோ ரிராசியிற் புகுந்து சூரியனுக்கு முறையே செல்லுமென்பர். இவரே துவாதசாதித்தர்.

வசுக்களாவார்—அனலன், அணிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் எனு மெண்மர்.

மருத்துவர் என்பது இரண்டு அஸ்வினிதேவர்களை. அவர்கள் வரலாறு:—

சம்ஹா என்னும் சூரியன் தொட்டா என்பவன புதல்வியாகிய சஞ்ஞிகை யை மணந்து வைவச்சுதமநு, யமன், யமுனை என்னும் பெண், ஆகிய மூவரைப் பெற்றனன். சஞ்ஞிகை சூரியனது உடல் வெப்ப மாற்றாளாகித் தனது சாயலை ஓர் பெண்ணாக்கி "நீ இவவிருத்தாந்தத்தைச் சொல்லாது இவ்வாறே என் நாயக னிட மிரு" என்று தந்தைபாற் சென்று நிகழ்ந்தவை சொல்லினள். தந்தை கோபித்தது கண்டு, சூரியன்பாற்செல்லற்கஞ்சி, உத்தாகுருவிற் றவஞ்செய்திருந்த னள். சூரியன் மாயையென்றுணராது சாயாதேவியுடன்கூடவே அவள் சாவர்ணி என்னும் எட்டாம்மநு, சநி, பத்திரை என்னும் பெண்,ஆகிய மூவரைப் பெற்றுத் தன் மூத்தவள் ஈன்ற பிள்ளைகளை வஞ்சித்துவந்தாள். அதுகண்ட யமன் மனம் பொறாதாகித் தாயை யுதைக்க, அவள் "உன் கால் முறிக" எனச் சாபமிட அதைத் தந்தைபாற் சொல்ல, சூரியன் மனைவியை நோக்கி "பிள்ளைகளை யெல் லாஞ் சமமாகப் பாராமல் மூத்தோர்பால் வெறுப்பும் இளையோர்பால் விருப்பும் வைக்கவேண்டுவதென்ன" என, அவள் பயந்து நடந்தவற்றைச் சொல்ல, சூரி

யன் தன மாமனிடஞ் சென்று, "என மனைவி யெங்கே" என்று கேட்க, அவன் "அவள் உன வெப்பம் ஆற்ருளாகி, உத்தரகுருவில பெண்குதிரை வடிவொடு தவஞ்செய்கின்றனள்" என, சூரியன் ஆண்குதிரை வடிவேற்றுச் சென்று சமீபித்து "தவஞ்செய்பவள் யார்" என, அவள் பயந்தோடப் பின்றொடர்ந்து செல்லுகையில் தாது இருமூக்கின்வழியு மொழுக மருத்துவர் இருவர் பிறந்தனர். என்பது.

இதனை, திருவிளையாடற்புராணம் மாணிக்கம்விற்றபடலம்.

"சஞ்சையாம் பகற்கடவுண் மனைவியவன் கனலுடலந் தழுவ லாற்ரு
தஞ்சுவா டன்னிழலைத் தன்னுருவா நிறுவிவன மடைந்து நோற்க
விஞ்சையா லறிந்திரவி பின்றொடர மாப்பரியா மின்னைத் தானுஞ்
செஞ்செவே வயப்பரியாய் மையல்பொரு திந்தியதைச் சிந்தி னானே." என்பதனு னுணர்க. (௩)

இருநில மேத்திய காசியில் வாழ்தற் கிடையூறு
வருமென மாதவ ரோதிய மாற்றம வழக்காகும்
பொருவறு தேவரு நமமை யிரந்து புகன்றூர்பூங்
கருநெறி சோதரு மென்குழ லீங்கது கண்டோமால்.

(இ ள்.) மலர்சூடிய கருமையாகிய சுருங்குதல்பொருந்திய மெல்லியகூந்தலையுடைய உலோபாமுத்திரையே! பெரிய நிலவுலகத்தார் துதிக்கும் காசிநகரத்தில் வசிப்பதற்குத்தடைசம்பவிக்கும் என்று பெருமைபொருந்திய தவசிரேஷ்டர்கள் சொல்லும்வார்த்தை வழக்கமாகும். சமானமறற தேவர்களும், நம்மை யாசித்து (இவ்விடம்விட்டு நீங்கும்படி) சொல்லினர். ஆதலால் இப்போது அவ்வாக்கியததின் உண்மையைப் பார்த்தோம். எ - று. (௪)

தத்துவம் யாவு முணர்ந்து தனிப்பொரு டாமாகிக்
கைத்தல மேவிய நெல்லி யெனும்படி கண்டோர்கள்
சித்த முவந்துறை காசியி லீசன் றிருவுள்ள
மித்திற மாக விளைந்திடின் மாற்றுவ தெவ்வாறே.

(இ ள்.) தத்துவங்கள் எல்லாவற்றையும் அறிந்து, உள்ளங்கையிற்பொருந்திய நெல்லிக்கனியென்று சொல்லும்படி ஒப்பற்ற பரம்பொருள் தாமாகிக்கண்ட பெரியோர்கள், மனம் விரும்பி வசிக்கும் காசி நகரத்தில் (நாம் வசிக்க) சிவபெருமானுடைய திருவுள்ளக்குறிப்பு இவவிதமாக வந்து சம்பவிக்குமானல், அதனை எவவிதமாக விலக்குவது? பெண்ணே. எ - று.

"ஆறு றையுநீத் ததன்மே னிலையைப் - பேறு வடியேன் பெறுமா றுளதோ" என்னும் அருணகிரிநாதர் திருவாக்கின்படி, தத்துவங்கள் முப்பத்தாறினையும் உணர்ந்து, தத்துவாதீதனுகிய சிவத்தைத் தெரிசித்துத் தான் அதுவாக நின்றவர். என்பது தோன்ற "தத்துவம் யாவு முணர்ந்து தனிப்பொரு டாமாகி"— என்ருர்.

தத்துவங்கள்—ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம், என மூன்றுவகைப்படும். அவற்றுள்,

**ஆன்மதத்துவம்** — பூதங்கள் ஐந்தும், புலன்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், கரணங்கள் நான்கும், ஆகிய இருபத்துநான்குமாம். **வித்தியாதத்துவம்** காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை, என்னும் ஏழுமாம். **சிவதத்துவம்** சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம், என்னும் ஐந்துமாம். ஆக தத்துவங்கள் முப்பத்தாறுதல் காண்க. இம்மூவகைத் தத்துவங்களும் அசுத்தம், சுத்தாசுத்தம், சுத்தம், எனவும் பெயர்பெறும்.

பூதங்கள் ஐந்தாவன—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்.
புலன்கள் ஐந்தாவன—சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம்.
ஞானேந்திரியங்கள் ஐந்தாவன—மெய், வாய், கண், மூக்கு, செவி,
கன்மேந்திரியங்கள் ஐந்தாவன—வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம்.
கரணங்கள் நான்காவன—மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

"கைத்தலமேவிய நெல்லி" இதனை வடநூலார் **கரதலாமலகம்** என்பர். மற்றைக் கனிகளை ஒப்பிடாமல், நெல்லிக்கனியை ஒப்பிட்டதென்னெனின், அது தன்னுள்ளிருக்கும் வகையை மேலேயே காண்பித்தலாலும், உள்ளும்புறமும் ஒப்பாயிருத்தலாலும் என்றுணர்க. (ரு)

மெல்லியல பங்க னுவந்துறை காசியை விட்டேனைத்
தொல்லை நெடும்பதி தன்னை விரும்புதல் சூழுங்கா
னல்லமிர் தங்தன தங்கை யிருப்பவு நச்சாமற்
புல்லறி வோடு புறங்கையை நக்குதல் போலாமால்.

(இ-ள்.) மெல்லிய சாயலையுடைய உமாதேவியாரை அர்த்தபாகமாகக் கொண்ட சிவபெருமான் விரும்பி வசிக்கின்ற காசிநகரத்தைவிட்டு, மற்றைய பழமையாகிய பெரிய நகரங்களை அடைய இச்சித்தலை ஆராயுமிடத்து, நல்ல தேவாமிர்தம் (ஒருவனது) உள்ளங்கையிலிருக்கவும், (அவன்) அதனையுண்ண விரும்பாமல் அற்பமாகிய அறிவுடன் தன் பின்கையை நக்குவதுபோலிருக்கும். எ - று.

அகம்+கை=அங்கை—"அகமுனர்ச்செவிகைவரினிடையனகெடுமே"
**அமிர்தம்** மரணத்தை யொழிப்பது. (சு)

அறத்தி னிருப்பிட மாகிய காசி யடைந்தோர்கள்
வெறுத்தறி வில்லவர் போலது தன்னை விடுத்தக்கான்
மறுத்து நினைத்திடி லெய்துவ தெங்ஙன மாசின்றித்
திறப்பட முத்தி விழைந்தவர் விட்டயல் செல்லாரே.

(இ-ள்.) தருமத்தினது வாசஸ்தானமாகிய காசிநகரத்தைச்சேர்ந்தவர்கள் மதியில்லாதவர்களைப்போல, (அவ்விடத்தில் வாசஞ்செய்தலை) வெறுத்து அக்காசிநகரத்தை விட்டு விலகியபோது மீண்டு ஆங்கடையநினைத்தால் அடைதல் எவவிதம். குற்றமில்லாமல் குணப்படும்படி மோக்ஷத்தை விரும்பினவர்கள் (அந்நகரத்தை விட்டு) ஒருபோதும் புறம்பே செல்லமாட்டார்கள். எ - று.

தருமம் முப்பத்திரண்டு வகையினையுடையது.—இதனை,

காஞ்சிபுராணம் - தழுவக்குழைந்தபடலம.

"தெய்வந்தென் புலத்தார்பூத மானிடம் பிரம மெனவோ
ரைவகை யெச்சம் பூர்த்தந் துறந்தவர் மடங்க ளன்பு
செய்யுமில வாழ்வாாக் கில்ல மனைக்குப கரணந் தேம்பூப்
பெய்தமை தண்ணீர்ப் பந்த ரெங்கணும் பிறங்கு சோலை.

இரப்பவர் குருட ரெவவ முற்றவர்ப் புரத்தல் வெந்நோய்
துரக்குநன் மருந்து தூவாய் மகவினை யோம்பல் சுண்ணம்
பரித்தபா கடையே யெண்ணெய் பைம்புனல் குளிப்ப வேண்டு
மருக்கிளர் துவர்க ளாதி மலரணை நிலனுன் கன்னி.

கடிமணம் விளக்கு மாறுக் கடனொழித் திடுதெ லீச
னடியவர் விழைவ வீகை யக்கமா மணிவெண ணீறு
படியிலாக் கடவுட் பூசை யுபகர ணங்கள் பாசந்
தடிதரு வேத வாய்மைச் சைவநூல் புராண நல்கல்.

சிவபிரா னடிக்கீழ்ப் பத்தி செவியறி வுறுத்த லோடு
மூவகையி னபயம் யார்க்கும் வழங்குத லுள்ளிட் டோது
நவையிரி யறமெண் ணான்கு"—என வருவனவற்றா னுணர்க. (எ)

மூவ ரிருப்பிட மாய்முகி லூர்தி முதற்றேவர்
மேவரு தற்கரி தாயருண் முத்தியின் வீடாயிப்
பாவ மகற்றுறு காசியின் வாழ்வு படைத்தோர்கள்
யாவ ரவர்க்கரி தாய விழுப்பொருள் யாதேயோ.

(இ-ள்.) திரிமூர்த்திகளது வாசஸ்தானமாகியும்,இந்திரன்முதலிய தேவர்களும் அடைதற்கரியதாகியும்,கிருபைதங்கிய மோக்ஷத்தினது இருப்பிடமாகியும், உள்ள பாவங்களையெல்லாம் நீக்குதல்பொருந்திய இக்காசிநகரத்தில் உயிர்வாழ்தல்பெற்றவர்கள் யாவரோ, அவர்களுக்குப் பெறுதற்கு அருமையாகிய மேலான பொருள் எது இருக்கின்றது? எதுவுமில்லை! **எ - று.**

திரிமூர்த்திகள் - பிரமா, விஷ்ணு, உருத்திரன்.

முகிலூர்தி - மேகவாகனனாகிய இந்திரன்.

பாவம் பலவகைப்படினும், அவற்றுள் மிகுந்தன - கொலை, களவு, பொய், கட்குடி குருநிந்தை. இவவைந்தையுமே பஞ்சமாபாதகம் என்பர்.

மூவரிருப்பிடமாய்—என்பதனை,

காசிரகசியம்.

"முத்தியா வருக்குங் கொடுப்பமென் றலகின் முகிழ்த்தபஃ றலங்களி னுள்ளுஞ்
சித்திசேர் பவருக் களித்திடுங் காசித் திருத்தலம் போலுவ தில்லைப்
பத்திசெய் பரம சிவத்தல மென்றும் பரவுவிட் டுணுத்தல மென்று
மெசத்தியவ் பிரமத் தலமென்று மூரைப்ப வோங்குமவ் வானந்தக் கானம்."
என்பதனு னுணர்க.

வையக மேழு மிடிந்திடு காலையு மாயாதே
ஐய னெடுத்தொளிர் சூல நுதிக்கு ளமைந்தோங்கு
மெய்புணர் வோருறை காசியை விட்டொரு நற்றான
மெய்த மனத்தை விடுக்குநர் பேதைமை யென்னேயோ.

(இ-ள்.) சப்த லோகங்களும் நிலைகுலைந்து பாழாகும் ஊழிகாலத்திலும் அழியாமலிருக்கும்படி, சிவபெருமான் (திருக்கரத்தில்) தாங்கி விளங்குகின்ற சூலாயுதத்தினது முனையில் தங்கி உயர்வதும், உண்மையாகிய பேரறிவினையுடையோர் வசிக்கின்றதுமாகிய காசிஸ்தலத்தைவிட்டு, வேறொரு நல்ல ஸ்தலத்தை யடையும்படி மனத்தைச் செலுத்துகின்றவர்களது அறிவின்மை யாது நிமித்தமோ? (அறிகிலேன்). எ - று.

"மெய்புணர்வோர்" என்பது-சிவபெருமானே உண்மைப்பொருளென்று கண்டறிந்த அறிவினர். (௯)

மாசுறு பேதைமை தம்மை மறைப்ப மறைந்தாறு
வாசை யெனுஞ்சுற வெற்று பவக்கட லாழ்கின்றோர்
ஈச னுவந்துமை யோடக லாம லிருந்தோங்கு
காசி யெனும்புணை யன்றியெவ் வாறு கடப்பாரோ.

(இ-ள்.) குற்றம் பொருந்திய அறிவின்மையானது தங்களை மறைக்க, (அதனால்) மறைந்தவர்களாகி, நீங்காத ஆவலென்னும் மகரமீனானது மோதுகின்ற பிறவியாகிய கடலில் மூழ்கிக்கிடக்கின்றவர்கள், சிவபெருமான் ஆனந்தித்து உமாதேவியாரோடு நீங்காமலெழுந்தருளியிருந்து உயர்ந்ததாகிய காசிநகரம் என்னும் தெப்பமல்லாமல் எவ்வாறு அப்பிறவிக்கடலைக் கடந்து கரையேறுவார்கள். எ - று.

"அற்றவ ரென்பா ரவா வற்றார்" என்றபடி, ஆசைநீங்காது சென்னந்தோறும் துன்புறுத்துவது என்பது தோன்ற "ஆறு-வாசை யெனுஞ்சுற வெற்று பவக்கடல்" என்றார். அவ்வாசையே பிறவிக்குக் காரணம் என்பார்.

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து."—என்றார் **திருவள்ளுவர்.** (௧௦)

செய்ய வழற்றலை நின்று தவம்பல செய்தாலு
மெய்தரும் யோக மளப்பில நாளு மிழைத்தாலு
மையறு காசியை வார்பிறை சென்னி வனைந்தாடு
மைய னருட்சிறி தின்றி யடைந்திட லாகாதே.

(இ-ள்.) செவ்விய பஞ்சாக்கினி இடையிலிருந்து பலவகையாகிய தவங்களைச் செய்தாலும், கிடைப்பதற் கருமையாகிய (அஷ்டாங்க) யோகங்களை அளவில்லாத நாள்கள் பலவும் செய்தாலும், இளம்பிறைச்சந்திரனை நீண்ட சடைமுடியில் தரித்து ஆனந்தத்தாண்டவஞ் செய்யும் எமது சிவபெருமானது திருவருள் கொஞ்சமும் இல்லாமல், குற்றமற்ற காசிநகரத்தை யடைவது ஒருவருக்கும் உண்டாகமாட்டாது. எ - று.

யோகம் எட்டாவன - இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாம்.

இதனை சூதசங்கிதை.

"இயம நியம மாசனமே யிலங்கு பிராண யாமமே
வயமார் பிரத்தி யாகாரம் வருதா ரணையே தியானமே" —என வருவதனு னுணர்க.

"ஐய னருட்சிறி தின்றி யடைந்திட லாகாது" திருவருளா லல்லாமல் மனிதனது சுயேச்சையால் முடியாது என்றபடி. இதனை "அவனரு ளாலே யவன்றாள் வணங்கி" என்னும திருவாதவூரடிகள் திருவாக்கா னுணர்க. (கக)

அறம்பொரு ளின்ப மியற்று தவத்தி னடைந்தாலுங்
கறங்கு திரைக்கட னஞ்ச நுகர்ந்தருள் காமாரி
யுறைந்த வளங்கெழு காசியி னல்லதை யொன்றுனு
மிறந்து பிறந்துழல் வோர்தனி முத்தியி னெய்தாரே.

(இ-ள்.) அறம், பொருள், இன்பம் எனனும் மூன்றினையும் தாம்செய்த தபோபலத்தால் பெற்றபோதிலும், ஒலிக்கின்ற அலைகளையுடைய சமுத்திரத்தில தோன்றிய ஆலகாலவிஷத்தை (தேவர் உயிர்பெறுமாறு) உண்டருளிய சிவபெருமான் வசிக்கின்ற வளப்பமிகுந்த காசிநகரத்தாலல்லாமல் வேறெதனுலும், இறந்தும் பிறந்தும் துன்பமுறுகின்ற மாந்தர்கள் ஒப்பற்ற மோக்ஷவீட்டில் சேரமாட்டார்கள். எ - று.

"அறம்பொருளின்பம்" என்பவை மூன்றுபுருஷார்த்தங்கள். இதனைவடநூலார் **தர்மார்த்தகாமியம்** என்பர், அறமாவது தருமஞ்செய்தல். பொருளாவது நல்வழியில் திரவியந்தேடல், இன்பமாவது மனைவியுடன் சுகித்தல். இதனை "ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங் - காத லிருவர் கருத்தொருமித் தாதரவு, பட்டதேயின்பம்"—என்னும் ஔவையார் திருவாக்கா னுணர்க.

அல்லதை என்பதில் ஐ சாரியை.

"இறந்து பிறந்துழல்வோர்" என்பதனை, "முனனை யெத்தனை யெத்தனை சென்மமோ மூட னயடி யேனு மறிந்திலேன்- இன்ன மெத்தனை யெத்தனை சென்மமோ" எனவும், "முன்னம் பிறந்த பிறப்போ முடிவில்லை- இன்னம் பிறப்பிக்கவெண்ணுதே" எனவும், "எத்தனையூ ரெத்தனைவீ டெத்தனைதாய் பெற்றவர்க- ளெத்தனைபே ரிட்டழைக்க வேனென்றேன்" எனவுங் கூறிய பட்டணத்தடிகள் திருவாக்கா னுணர்க. (கஉ)

அருமறை யாகம மாகிய நூல்க ளனைத்தேயும்
பொருவறு காசியை யன்றி வழுத்தல் பொருந்தாவா
லிருவினை விட்டொரு மும்மல மாயை யிகழ்ந்தோர்கள்
திருவமர் காசியை விட்டய லோர்பதி செல்லாரே.

(இ-ள்.) அரிய வேதாகமங்களாகிய எல்லா நூல்களிலேயும், சமானமற்ற காசி க்ஷேத்திரத்தை யல்லாமல (வேறொன்றினையும்) துதித்தல்செய்திலா; ஆதலால், இருவினைகளை ஒழித்து மும்மலங்களாகிய மாயாசம்பந்தத்தை விலக்கின புண்ணியர்கள் (சிவஞானச்) செல்வம் பொருந்திய காசித்தலத்தை நீங்கிப் புறத்திலுள்ள வேறொரு தலத்தில் (வாழும்படி) போகமாட்டார்கள். எ - று.

"இருவினை விட்டொரு மும்மல மாயை யிகழ்ந்தோர்கள்" — என்பது இருவினையொப்பு மலபரிபாகமடைந்தவர்களை. (௧௩)

இடைகலை பிங்கலை வாலை சிறந்துட னிவைகூடு
முடிவறு வார ணாசிநடு வயாசுழி முனையென்று
விடைய மறுத்துயர் மெய்த்தவ மேவிய காபாலி
யடைவி னுரைததன னிந்நக ருக்கிணை யாதேயோ.

(இ-ள்.) அழிவற்ற வாரணாசி (யாகிய இக்காசிக்ஷேத்திரம் விராட்புருடனுக்கு) இடைகலை, பிங்கலை, வாலைக ளாகிய (இவை மூன்றும்) மேம்பட்டு (ஒன்றோடொன்று) கலக்கின்ற நடுவேயுயர்ந்த சுழுமுனைநாடியாகுமென்று, விஷய வாதனைகளைப் போக்கி மேம்பட்ட உண்மையாகிய தவத்தைப் பொருந்திய காபாலி (வடிவுகொண்ட சிவபெருமான்) முறையோடு திருவாய்மலர்ந்தருளினர் (ஆதலின்) இக் காசிநகரத்துக்குச் சமானமாகிய வேறு நகரம் யாதிருக்கின்றது?.

வாரணாசி என்பது வரணை அசி என்னும் நதிகள் கங்கையோடு சம்பந்தப் பட்ட இடம். இடைகலை, பிங்கலைகள் வாலையாகிய சத்தியோடு சம்பந்தப்பட்ட இடம் சுழுமுனை நாடியாதலால், விராட்புருடனுடைய பூமிக்கு வாரணாசியாகிய இக் காசி சுழுமுனை யெனப்பட்டது. சுழுமுனையை பிரமரந்திரத்தின் சம்பந்தமாக வுள்ளதால் பிரமநாடி யெனவுங் கூறுவர். இதனை,

சூதசங்கிதை - ஞானயோககாண்டம்.

"கொண்டு நடுஞ்சேர் சுழுமுனை நாடி கோதறு மந்நா டியையே
தேனமொழி பிரம நாடியென் றுரைப்பர்"—என்பதனா லுணர்க. (௧௪)

இத்தலை மெய்த்தி யிறக்குநர் யாரு மிளைப்பாற
வுத்தரி கங்கொடு மாதுமை வீசிட வுமையோர்பால்
வைத்தவ ருமபொருண மேவரு தாரக மறையோதி
முத்திய ளித்திடு மிப்பதி யார்விட முயல்வாரே.

(இ-ள்.) இக் காசிநகரத்திற் சென்று உயிர்விடுகின்றோர் யாவரும், இளைப்பாறும்படி உமாதேவியார் தமது உத்தரிகத்தைக்கொண்டு விசிறவும், உமாபிராட்டியாரைத் தமது ஒப்பற்ற வாமபாகத்திற் கொண்டருளிய அரிய பரம்பொருளாகிய சிவபெருமான, கிடைத்தற்கரிய தாரகப்பிரமமந்திரத்தை உபதேசித்து மோக்ஷத்தைக் கொடுப்பர். (ஆகையால் இத்தன்மைத்தாகிய பெரும்பயனளிக்கும்) இந் நகரத்தைவிட்டு நீங்க யார்தான் முயற்சிசெய்வர்?. எ - று.

உத்தரிகம்=மேற்போர்வை. (௧௫)

ஆசில் வளங்கெழு மூவுல கத்தினு மாயுங்காற்
காசி நகர்க்கிணை யாகிய நற்பதி காணேமால
மாசறு திங்கண் முடித்துயா மன்றுண் மகிழ்ந்தாடு
மீசனை யொப்பவர் தேவ கணத்திடை யாரேயோ.

(இ-ள்.) களங்கமற்ற சந்திரனை (சடாமகுடத்தில்) தரித்து, உயர்வாகிய பொன்னம்பலத்தில் ஆனந்தத்திருநடனஞ் செய்கின்ற (நடராஜமூர்த்திகளாகிய) எமது சிவபெருமானுக்குச் சமானமானவர்கள், தேவகூட்டத்தில யாரிருக்கின்றனர்? (ஒருவருமில்லை. அதுபோல) ஆராயுமிடத்து குற்றமற்ற வளப்பமிகுந்த திரிலோகஙகளிலும், காசிநகரத்திற்குச் சமானமாகிய நலல நகரததைக் காணேம்.

“குடதிசை யதனின் மருவுகுற் றாலங் கோதறு சித்திர சபையாம்
குற்றமில் குணக்கிற் பழயனூர் மன்றங் குலவு ரத்தினமன் றென்பார்
அடல்விடைப் பாக னெல்லையம் பதியி லம்பலந் தாம்பிர சபையாம்
ஆலவாய் மதுரை வெள்ளியம் பலமே யணிதில்லைச் செம்பொனம் பலமே.”
என்றார் இரட்டைப்புலவர்.—ஆதலின், சிவபெருமான் நடனஞ்செய்த சபைகள், இரத்தினச்சபையாகிய திருவாலங்காடும், பொற்சபையாகிய சிதம்பரமும், வெள்ளியம்பலமாகிய மதுரையும், தாமிரச்சபையாகிய திருநெல்வேலியும், சித்திரச்சபையாகிய திருக்குற்றாலமும், எனபபோந்த ஐந்து திருச்சபைகளிலும் “மன்றுள்” எனப் பொதுப்படக்கூறியதால் சிறப்புநோக்கிப் பொன்னம்பலமாகிய சிதம்பரம் எனக் கொள்ளப்பட்டது. அன்றியும்,

“ஆக்குந் தொழிற்றமரு கம்புரக் குந்தொழி லமைந்தவர தஞ்சாம்பரா
யழிக்குந் தொழிற்றீ மறைக்குந் தொழிற்றலை யமைந்தூன்று தாண்மறைப்புப்
போக்குந் தொழிற்குஞ் சிதத்தாளி வைந்தும் பொலிந்திடச் சுருதிவாழ்ததப்
புன்மையின் றுய்ந்தன மெனச்சகல புவனமும் போற்றெடுத் தேத்தமடமை
நீக்கும் புலிப்பத முனித்தலைவ னும்பணி நெடுந்தலைத் தவமுனிவனும்
நிறைமகிழ் திளைப்பமா தேவன்மன் றினினட நிகழ்த்தல்”—என்றபடியே அவ்வானந்தத்தாண்டவம் பஞ்சகிருத்திய காரணமாகவே நிகழ்கின்றது எனறுணர்க.

ஈசனை யொப்பவர் தேவகணத்திடையார்—என்பதனை,

“உத்தமத் தேவர்தம்மு ளுத்தம னீசனுகும்
உத்தமச் சத்திமாரு ளுத்தமி யுருத்திராணி” — என்னும் பரஞ்சோதி முனிவர் திருவாக்கானும்,

“காசி நகர்க்கிணை யாகிய மெய்ப்பதி காணேம்”—என்பதனை,

காசிரகசியம்.

“தேவரு ளெம்மைப் போலுந் திகழ்தரு சத்தி மாருட்
பூவரு நின்னைப் போலும் புருடரிற் றிருமால் போலு
மேவருந் தீர்த்தந் தம்முள் வெண்டிரைக் கங்கை போலுந்
தாவருந் தலங்க டம்முட் டலைமைபெற் றதுமா காசி.” — எனப் பெருமான் உமாதேவியாரை நோக்கிச் சொல்லிய செய்யுளானு முணாக. (௧௯)

இக்காசி க்ஷேத்திரத்தை விட்டு நீக்குவது உமக்குப் பெருமையாகுமோ. (என்று, மேலும் சொல்லுகின்றனா அகஸ்தியமுனிவா). எ - று. (கஅ)

தேவருறு பகைதொலைபபத் ததீசிமுது கென்பளித்தான் றிருமால் வேண்ட, வோவருசீ ரெறும்வலித்தோள் கொடுஞ்சிறைய புள்ளரசு மூர்த்தி யானன், மாவலிமூ வுலகளித்தான் மதுகையிட வருஞ்சிரமுன் வழங்கி னரால், மேவரிய காசியைவிட் டெம்பருறு குறைமுடித்தல விழுமிதாமால்.

(இ-ள்.) தேவர்களுக் குற்ற பகை (யாகிய விருத்திராசுரனைக் கொன்று) ஒழிக்கும்படி ததீசிமுனிவர் தமது முது கெனபினைக்கொடுத்தார். விஷ்ணுவானவர் (தனனை வரம்) வேண்ட ஒழியாத சிறப்பினையும் மிகுந்த வலிதஙகிய புயங்களையும், கொடிய சிறகுகளையும் உடைய பட்சிராஜனுகிய கருடனும் (அவ்வாறே அவருக்கு)வாகனமாயினன். மாவலி என்னும் சக்கரவர்த்தி (வாமனுவதாரம் கொண்ட விஷ்ணு யாசிக்க) மூவடிமண் கொடுத்தனன். மதுகையிடவர்கள் (விஷ்ணு தேவர் கேட்டுக்கொண்டபடியே) தமது சிரசுகளைக் கொடுத்தனர். (இவர்களுக் கெல்லாம் புகழுடம்புகளுள ; ஆதலால்) கிடைத்தற்கரிய காசிநகரத்தை விட்டு (ஆயினும்) தேவர்களுக்குற்ற குறையை யொழித்தல் சிறந்ததாகும். எ - று.

தேவருறு பகைதொலைப்பத் ததீசிமுது கென்பளித்தான்—என்பது

இந்திரன் விருத்திரனைககொல்ல வலியற்றவனுகி, விஷ்ணுவினது சூழ்ச்சியால் ததீசிமுனிவரையடைந்து, அவரது முதுகந்தண் டென்போடு கூடியிருக்கும் ஆயுதக்குவியலைக் கேட்க, அவர் இவ்வுடலால் அடையும் பயன் இதைவிட வேறில்லை யென்று பிரமநாடி வழியாகக் கபாலத்தைக் கீண்டு விண்ணுலகடைந்தனர். இந்திரன் அதைக்கொண்டு பகையொழித்தான். என்பது. இதனை,

திருவிளையாடற்புராணம்.

“என்றனன் கரண மொன்றி யெழுகருத் தறிவை யீர்ப்ப
நின்றனன் பிரம நாடி நெறிக்கொடு கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச் சேர்ந்தன னுலகை நோன்பால்
வென்றனன் றுறக்கம் புக்கு வீற்றினி திருந்தா னம்மா.” — என்பதனு னுணர்க.

திருமால் வேண்டப் புள்ளரசு மூர்தியானன் - என்பதன் சரிதம்.

காசிபமுனிவர்மனைவிகளில் கத்துரு விநதை என்னும் இருவரும் அழகிற் சிறந்தோரொன்று ஒருவரோடொருவர் வாதிட்டு, தோற்றவள் சிறையிருப்பதாகத் தம்முள்ளே தீர்மானித்துக்கொண்டு, தமது நாயகரிடம்போய் “யாஙகளிருவரில் அழகிற்சிறந்தவள் யார்” என, காசிபர் “கத்துருசிறந்தவள்” என்றுகூற, அவள் தமது தீர்மானப்படி விநதையைச் சிறையிட்டனள். விநதை தன்மாற்றவளை நோக்கிச் சிறைநீக்கும்படி வேண்ட, கத்துரு “தேவர்காவலிலுள்ள அமுதத்தைக் கொண்டுவந்தால் சிறைவிடுவேன்” என்றனள். காசிபரருளினுல் விநதை கருடனைப் புதல்வனுகப்பெற்றுத் தன் குறையைச்சொல்லினள். கருடன் “அவவாறே

இக்காசி க்ஷேத்திரத்தை விட்டு நீக்குவது உமக்குப் பெருமையாகுமோ. (என்று, மேலும் சொல்லுகின்றனா அகஸ்தியமுனிவா). எ - று. (கஅ)

தேவருறு பகைதொலைபபத் ததீசிமுது கென்பளித்தான் றிருமால் வேண்ட, வேவறுசீ ரெறும்வலித்தோள் கொடுஞ்சிறைய புள்ளரசு மூர்தி யானுன், மாவலிமூ வுலகளித்தான் மதுகையிட வருஞ்சிரமுன் வழங்கி னூரால், மேவரிய காசியைவிட் டும்பருறு குறைமுடித்தல விழுமிதாமால்.

(இ-ள்.) தேவர்களுக் குற்ற பகை (யாகிய விருத்திராசுரனைக் கொன்று) ஒழிக்கும்படி ததீசிமுனிவர் தமது முது கெனபினைக்கொடுத்தார். விஷ்ணுவானவர் (தனனை வரம்) வேண்ட ஒழியாத சிறப்பினையும் மிகுந்த வலிதஙகிய புயங்களையும், கொடிய சிறகுகளையும் உடைய பட்சிராஜனுகிய கருடனும் (அவ்வாறே அவருக்கு)வாகனமாயினன். மாவலி என்னும் சக்கரவர்த்தி (வாமனுவதாரம் கொண்ட விஷ்ணு யாசிக்க) மூவடிமண் கொடுத்தனன். மதுகையிடவர்கள் (விஷ்ணு தேவர் கேட்டுக்கொண்டபடியே) தமது சிரசுகளைக் கொடுத்தனர். (இவர்களுக்கெல்லாம் புகமுடம்புகளுள ; ஆதலால்) கிடைத்தற்கரிய காசிநகரத்தை விட்டு (ஆயினும்) தேவர்களுக்குற்ற குறையை யொழித்தல் சிறந்ததாகும். எ - று.

தேவருறு பகைதொலைப்பத் ததீசிமுது கென்பளித்தான்—என்பது

இந்திரன் விருத்திரனைககொல்ல வலியற்றவனுகி, விஷ்ணுவினது சூழ்ச்சியால் ததீசிமுனிவரையடைந்து, அவரது முதுகந்தண் டென்போடு கூடியிருக்கும் ஆயுதக்குவியலைக் கேட்க, அவர் இவ்வுடலால் அடையும் பயன் இதைவிட வேறில்லை யென்று பிரமநாடி வழியாகக் கபாலத்தைக் கீண்டு விண்ணுலகடைந்தனர். இந்திரன் அதைக்கொண்டு பகையொழித்தான். என்பது. இதனை,

திருவிளையாடற்புராணம்.

"என்றனன் கரண மொன்றி யெழுகருத் தறிவை யீர்ப்ப
நின்றனன் பிரம நாடி நெறிக்கொடு கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச் சேர்ந்தன னுலகை நோன்பால்
வென்றனன் றுறக்கம் புக்கு வீற்றினி திருந்தா னம்மா." — என்பதனுணர்க.

திருமால் வேண்டப் புள்ளரசு மூர்தியானுன் - என்பதன் சரிதம்.

காசிபமுனிவர்மனைவிகளில் கத்துரு விநதை என்னும் இருவரும் அழகிற்சிறந்தோரென்று ஒருவரோடொருவர் வாதிட்டு, தோற்றவள் சிறையிருப்பதாகத் தம்முள்ளே தீர்மானித்துக்கொண்டு, தமது நாயகரிடம்போய் "யாஙகளிருவரில் அழகிற்சிறந்தவள் யார்" என, காசிபர் "கத்துருசிறந்தவள்" என்றுகூற, அவள் தமது தீர்மானப்படி விநதையைச் சிறையிட்டனள். விநதை தன்மாற்றவளை நோக்கிச் சிறைநீக்கும்படி வேண்ட, கத்துரு "தேவர்காவலிலுள்ள அமுதத்தைக் கொண்டுவந்தால் சிறைவிடுவேன்" என்றனள். காசிபரருளினுல் விநதை கருடனைப் புதல்வனுகப்பெற்றுத் தன் குறையைச்சொல்லினள். கருடன் "அவவாறே

அமுதங்கொணர்ந்து சிறைவிடுவிப்பேன்" என்று தேவலோகத்தை யடைந்து, அமுதத்தைக் காத்திருந்த தேவர்களையெல்லாம் ஜெயித்து, அதை எடுத்துக்கொண்டு திரும்புகையில், விஷ்ணுவானவர் கருடனை எதிர்த்தனர். இருபத்தொருநாள் ஒருவருக்கொருவர் தோல்வி வெற்றியில்லாமல் கடுஞ்சமர் செய்தனர். விஷ்ணு கருடனை நோக்கி "உன்வல்லமைக்கு மகிழ்ந்தேன். வேண்டியவரத்தைக்கேள்" என கருடன் விஷ்ணுவைநோக்கி "உன்னை மெச்சினேன். நீ வேண்டும்வரம் கேள்" என, விஷ்ணு இதுநல்லசமையமென்றெண்ணி "நீ எனக்கு வாகனமாகவேண்டும்" எனக் கேட்க, கருடன் அதற்கிசைந்து, அமுதத்தைத் தாய்பாற்கொடுத்துச் சிறை நீக்கித் தான்கொடுத்தவரப்படி விஷ்ணுவுக்கு வாகனமாயினன்-என்பது. இதனை,

காஞ்சிபுராணம் - முத்தீசப்படலம்.

"வன்புள் வேந்தநின் வீர மகிழ்ந்தன
னென்பு டைவரங் கொள்ளென விங்கிவ
னுன்பெ ருந்திறற் குன்மகிழ்ந் தேனமற்றென்
றன்பு டைவரங் கொள்ளெனச் சாற்றினான்.

மாய னம்மொழி கேட்டு மகிழ்ச்சியிற்
றூயை யோதிய சொற்றவ றுமெனி
னீயெ னக்கு நெடுந்தகை யூர்தியா
யேயு மிவ்வரம் யான்கொள நல்கென்றான்." எனவருவனவற்றானுணர்க.

மாவலி மூவுலகளித்தான்—என்பதன் சரிதம்.

வாமனவுருவுடன் விஷ்ணுயாசித்தபடி மூவடிமண்கொடுக்க விரும்பிய மாபலியைநோக்கிச் சுக்கிரன் "வந்திருப்பவர் விஷ்ணு கொடாதே. உனக்குத் தீமைவரும்" என்று கூறியும், மாபலி "விஷ்ணுவுக்குத் தானஞ்செய்தேன் என்னும் பேரிருந்தாற் போதும். யானிறந்தாலும் சரியே" என்று, அவரிஷ்டப்படி தானஞ்செய்தனன். என்பது.—இதனை,

உபதேசகாண்டம் - வாமனாவதாரச்சருக்கம்.

"மூவடி மண்ணினை யேற்றுச் செய்வதென் மொழிதி யென்னத்
தேவியர் தவத்துச் சிந்தை செய்தவ ணிருந்து செய்வே
மாவது புரிதி யென்று வறைந்தன னமல னன்னோ
னீவது முயன்றான் வெள்ளி யருகினின் றீயே லென்றான்."—என்பதனானுணர்க.

மதுகைடவருஞ் சிரமுன் வழக்கினர்—என்பதை,

விருத்தாசலபுராணம் - கிரிச்சருக்கம்.

"காதி ரண்டினிற் குறும்பியிற் கண்ணர்பா விரண்டு
பேத மாகிய மதுவுடன் கைடவன் பிறந்து
சீத ரன்றனைப் பொருதனர் சீதரன் றோற்று
யாது செய்குவோ மெங்ஙனம் வெல்லுவோ மென்றான்.

தேற்றமாய்வரங் கேண்மினென றுரைத்தனன் றிருமால்
தோற்ற நீவர மென்கொலோ தருகுவை சொல்லா
யேற்ற மாகிய வெங்களைக் கேள்வர மென்றூர்
மாற்ற மென்கையான் மாயுமி னென்றனன் மாயன்." — எனவும்,

"மாயன் கையினுன் மதுவுடன் கையிடவன் மடிந்தார்" எனவும் வருவன வற்று னுணர்க. (கக)

என்றினைய பலகூறிக் குழவிமதி புனைசடிலத் தெம்மான் காசித், துன்றுசரா சரமபலவுந் தொழுதுவலங் கோணடகல்வான் சுருங்க வோங்கு, குன்றினுறு வலிதணிபபான் குறுமுனிவ னேகுதலுங் குழைந்து மாழ்கிப், பொன்றினர்தம் முகம்போலப பொலிவழிந்த துயர்விந்தப் பொருபபு மாதோ.

(இ-ள்.) என் றித்தன்மையாகிய பல விஷயங்களைச் சொல்லிக்கொண்டு, பிறைச்சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய எமது சிவபெருமான் எழுந்தருளிய காசிநகரத்திலுள்ள சரம் அசரம் முதலிய பலவற்றையும் பணிந்து பிரதக்ஷணஞ்செய்து, விசாலமாகிய ஆகாயம் நெருங்கும்படி யுயர்ந்த விந்தபர்வதத்துக்குற்ற வல்லமையை அடக்கும்படி அகத்தியமுனிவர் செல்லவும், உயர்ந்த விந்த பர்வதமானது வாட்டமுற்று மயங்கி இறந்தோரது முகத்தைத்போல அழகு குறைந்து நின்றது. எ - று. (உ0)

ஆற்றலரும் பெருந்தவத்துக் குறுமுனிவன் காசிநக ரகன்று ஞாலம் போற்றுபெருங் கற்புடைய லோபாமுத் திரையினெடு போத லோடு மூற்றிருந்து நறவொழுகுங் கமலநா யகனியங்கா துமபர் யார்க்கு, மாற்றரிய வலியுடைத்தா யெழுந்துதிசை யளந்தோங்கு வரையைக் கண்டான்.

(இ-ள்.) செய்தற்கருமையாகிய பெரிய தவங்களைச்செய்து முடித்த அகத்தியமுனிவர், உலகத்திலுள்ளோர் துதிக்கின்ற மிகுந்த கற்பினையுடைய உலோபாமுத்திரை (என்னும் தமது மனைவி) யோடு காசிநகரத்தைவிட்டுநீங்கி, தேன் ஊற்றெடுத்துச் சிந்தும் தாமரைமலருக்கு நாயகனாகிய சூரியன் சஞ்சரியாமற்றடுத்து, தேவர்கள் யாவருக்கும் நீக்குதற்கரிய வல்லமை யுடையதாகி உயர்ந்து, அட்டதிசைகளையும் அளந்தோங்கிய விந்தபர்வதத்தைப் பார்த்தனர். எ - று.

தாமரை சூரியனைக்கண்டே மலருந்தகுதியுடையதாதலால், சூரியனைக் கமலநாயகன் என்றூர். (உக)

கடலேழு மொருகுடங்கைக் கொண்டகுறு முனிவருதல் காண்ட லோடு, முடல்வேர்வு வரவுள்ளம் பதைபதைப்பத் தலைபணிப்ப வுயிர்ப்பு வீங்கிப், படியூடு புகுவதெனப் பணிந்துமறைக் கிழவொழிற் படிவந் தாங்கித், தடமேரு வுடனிகலும் விந்தவரை முனிவனடி தாழ்ந்த தன்றே.

(இ-ள்.) சப்த சமுத்திரங்களையும் ஒரு குடங்கையி லேற்று (ஆசமனஞ் செய்த) அகத்தியமுனிவரது வருகையை, விசாலமாகிய மேரு பர்வதத்தோடு

பகைமைகொண்ட விந்தபர்வதமானது பார்த்தவுடனே, சரீரம்வேர்க்கவும் மனம் மிகுதியும் பதைக்கவும் தலைநடுக்கவும் பெருமூச்சுவிட்டு, பூமியின்கீழ்ப் புகுவது போல வணங்கி, அழகிய வேதியர்வடிவங்கொண்டு அகத்தியமுனிவரது திருவடிகளில் நமஸ்கரித்தது. எ - று.

அடாதது செய்தோர் படாதுபடுவர் என்றபடிபோல நானெசெய்த குற்றத்திற்குக் கடலேழு மொருங்கு குடங்கையிற் கொண்ட பேராற்றலுடைய இவரால் என்ன வகைய தண்டனை விதிக்கப்பெறுவேனோ என அச்சமுற்று நின்றது என்பார், அவ்வச்சக்குறிப்புத்தோன்ற "உடல்வேர்வு உரவுள்ளம் பதைபதைப்பத் தலைபனிப்ப வுயிர்ப்பு வீங்கிப் - படர்பூமி புகுவதெனப் பணிந்து"—என்றார். (உஉ)

தனதுணைத்தா டொழுதெழுந்த விந்தவரை முகநோக்கித் தவத்தின் மிக்கோ, னின்றுமுதல பொதியவரை நீங்கியா ணிவ்வுழிமீட் டெய்து காறு, முன்றனது பேருருவ மிவ்வண்ண மிருக்கவென வுரைத்துப் போனான், றென்றலிள மதுகுழவி பொடு தீந்தமிழு மினிதுலவுந் தென்பான் மன்னோ.

(இ-ள்.) தவத்தில் மிகுந்த அகத்தியமுனிவர் தமது இரண்டு பாதங்களையும் வணங்கி நின்ற விந்தபர்வதத்தின் முகத்தைப்பார்த்து, இதுமுதல் யான பொதியமலையை விட்டு மறுபடியும் இவ்விடம் வருமெல்லையளவும், உனது பெரிய வடிவுநீக்கி இவ்வாறே (அடக்கமாக) இருக்கக்கடவாய் *என்று கட்டளையிட்டு, மிகவும் இளமையாகிய தென்றலும் மதுரம்பொருந்திய தமிழும் இனிமையாக உலவுகின்ற தென்றிசையை நோக்கிப்போயினர். எ - று.

* இச்சரித்திரம் வேறுவகையாகவும் வழங்கிவருகின்றது. அதாவது,

அகத்தியமுனிவர் தென்றிசையைநோக்கிச் செல்லுகையில், விந்தபர்வதம் ஆகாயமளாவி நிற்றலால் "விந்தபர்வதமே யான் பொதியமலைக்குப்போகவேண்டும் வழிவிடு" என, விந்தம் "சூரிய சந்திரர்களும் செல்லவொட்டாமல் பெருகிவோங்கிநிற்கும் யான் சிறிய வடிவினையுடைய உனக்குப் பயந்து வழிவிடுவதில்லை. திரும்பிப்போ" என்றது. அதுகேட்ட முனிவர் கோபங்கொண்டு, தமது தபோபலத்தால் பிரமபதவியளவாயில் கையைநீட்டி விந்தமலையி னுச்சியில் வைத்து அழுத்த, அவ்விந்தபர்வதம் பிலத்துக்குள் அழுந்தி நாகலோகவளவில் தாழ்ந்துவிட்டது. விந்தம் முனிவரைவணங்கி "யான் செய்தது குற்றமே. தேவரீர் மனம்பொறுத்து யான் எப்பொழுது இவ்வடிவம் விட்டுப் பெறுவேன் அதை அருள்செய்யவேண்டும்" என்று கேட்க, அகத்தியர் "யான் பொதியமலையை நீங்கித் திரும்பவும் இவ்விடம் வந்தால் பெறுவாய்" எனப் புன்சிரிப்போடுரைத்துப்போயினர். என்பது.—இதனை,

கந்தபுராணம்-அசுரகாண்டம் விந்தம் பிலம்புகு படலம்.

"சேயுயர் நிலைப்பிற் றுகிச் சேண்புகும் விந்த மென்னு
மாயிருங் குவடு கேண்மோ மற்றியாம் பொதிய வெற்பிற்
போயிருந் திடவே யுன்னிப் போந்தன மதனுக் கின்னே
நீயொரு சிறிது செல்லு நெறியளித் திடுதி யென்றான்.

எறிகதிர் மதியி னுக்கு மேகருந் திறத்தால் வான
நெறியினை யடைத்துத தொலலை நெடியமால் போன்று நின்றேன
குறியசிற் கஞ்சி யாறு கொடுப்பஜே வெனது தோறற
மறிகிலை மீண்டு போகென் றவவரை மொழிநத தன்றே.

அற்புத மமரர் கொள்ள வாற்றவுங குறியோன் விநத
வெற்பினை தும்பர் தன்னின மீயுயர் குடங்கை சோதகி
வற்புற வூன்ற வல்லே மற்றது புவிக்கட் டாழ்ந்து
சொற்பிலம் புகுந்து சேடன றொனனிலை யடைநத தனறே.

அள்ளலை யடைகின் றேரி லரமபுகு மடுக்க லஞசி
வள்ளலை யருளிக் கேண்மோ மற்றுனை வழிப டாம
லெள்ளலை யிழைத்து மேன்மை யிழந்தனன் றமியன் குற்ற
முள்ளலை யெழுவ தெஞ்ஞான் றுரையெனக் கூறிற் றனறே.

அன்னதோர் பொழுது தன்னி லலைகடல் செறித்த வங்கை
முன்னவன் விந்த வெற்பின் மொழியினை வினவி யான்போ
யிந்நெறி யிடையே மீளி னெழுதியா னீயு மென்னு
நன்னகை யோடு சொற்று னாரதன் சூழ்ச்சிக் கொப்ப."—என வருவன

வற்று னுணர்க.

"தென்றவிளங் குழவியோடு தீந்தமிழு மினி துறையுந் தென்பால்"

என்பதனை,

திருவிளையாடற்புராணம.

"கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
அடுக்க வந்துவந் தாடுவா னுடலி னிளைப்பு
விடுக்க வாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்னே."—என்பதனுனுணர்க. ()

அருந்தவத்தோ னேகுதலும் விந்தமால் வரையுளத்தி னச்ச நீங்கிப்
புரிந்துபுரிந் தவனேகும் வழிநோக்கி நோக்கியுடல் புளகம பூப்பப்
பெருந்தவத்தோன் சபியாம லேகுதலா லின்றன்றே பிறந்தோ மென்னு
வருந்தினி பணிந்திருப்பப் பரிதிவா னவன்மேரு வலங்கொண் டானல்.

(இ-ள்.) அரிய தவத்தினையுடைய அகஸ்தியமுனிவர் (தென்றிசைநோக்கிச்) செல்லவும், பெரிய விந்தகிரியானது மனதிலிருந்த பயமொழிந்து மிகவும் விரும்பி, அவர்போகின்ற வழியைப் பார்த்துப்பார்த்து, சரீரமுழுவதும் மயிர்க்குச்செறிய பெரிய தவசியாகிய அம்முனிவர் (நமக்குச்) சாபமிடாமல் சென்றபடியால் இன்றல்லவோ பிறந்தோம் என்றெண்ணி வருத்தமுற்று மிகவும் அடங்கியிருக்க, சூரியபகவான் மேருமலையை வலஞ்செய்து சென்றனன். எ - று.

"பரிதிவா னவன்மேரு வலங்கொண்டான்" — என்பது, சூரியன் செல்ல வேண்டிய முறையேசென்று மேற்கடலையடைந்தான். என்பதாம். (உச)

மலர்தலைய வுலகமெலாம பண்டுபோற் றருமநெறி வளர்த்த நாளுங்
கலனிழந்த மகளிரிளை முலைபோல விந்தவரை கவின்க டாந்த
துலைவறுநற் றவமுனிவ னமலனுறை காசிநக ருள்ளத் தோரா [மன்றே.
வலர்கமலப் பொகுட்டுறையுந் திருமகள்சேர் சினகரத்தை யடைந்தான்

(இ-ள்.) இடமகன்றுள்ள பூமிமுழுவதும் தருமமார்க்கம் முன்போலவே (அன்றுதொட்டு)வளர்ந்தோங்கியது. மாங்கல்லியத்தைப்போக்கிய விதவையினது இளைக்கின்ற தனத்தைப்போன்று விந்தவரை (அன்றுமுதல்) எந்நாளும் (தனக்குரிய) அழகுநீங்கியது. கெடுதலற்ற நல்ல தவங்களைச் செய்த அகஸ்தியமுனிவர் நின்மலராகிய சிவபெருமான எழுந்தருளிய காசிநகரத்தை மனதில் தியானித்துக் கொண்டு, மலர்ந்த தாமரைக்கொட்டையில் வசிக்கும் இலக்குமிதேவியார் வாழ்கின்ற (கொல்லாபுரம் என்னும் நகரிலுள்ள) திருக்கோயிலை அடைந்தனர். எ-று.

விதவைத்தன்மை யடைந்தோர் முன்போல மார்பில் பலவகை ஆபரண மணிதலும் களபம பூசுதலும,நாயகன்கைபடுதலு மின்மையால் அவர்கள்முலையை உவமித்து "கலனிழந்தமகளிரிளைமுலைபோலவிந்தவரைகவின்கடாந்த"—என்றார்.

விந்தவரைக் குரிய கவின் ஆவது பண்டைய வடிவு. (௨௫)

மூவுலகு மிடரியற்று மடலவுண ருயிரொழிய முனிவு கூர்ந்த
பூவையுறழ் திருமேனி யருட்கடவு ளகன்மார்பிற் பொலிந்து தோன்றித்
தேவருல கினும்விளங்கு புகழ்க்கொல்லா புரத்தினிது சேர்ந்து வைகும
பாவையிரு தாடொழுது பழமறைதேர் குறுமுனிவன் பழிச்சு கின்றான்.

(இ-ள்) பழமையாகிய வேதங்களை நன்குணர்ந்த அகஸ்தியமுனிவர், (சுவர்க்கமத்திய பாதலமெனனும) மூனறுலகங்களிலும்,துன்பஞ்செய்யும் பராக்கிரமத்தையுடைய அசுரர்கள் இறக்கும்படி, கோபமிகுதியைக் கொண்ட காயாம்பூவை யொத்த திருமேனியை யுடைய கிருபை தங்கிய விஷ்ணுதேவரது அகலமாகிய மார்பினிடத்தில் பிரகாசித்து விளங்கி, தேவலோகத்தைப்பார்க்கிலும் மேம்பட்ட புகழ்விளங்கும் கொல்லாபுரம் என்னும் நகரத்தில் இனிமையாக எழுந்தருளி வசிக்கும் இலக்குமிதேவியாரது உபயதிருவடிகளை வணங்கி, (பின்வருமாறு) துதிக்கின்றனர். எ-று.

"மூவுலகு மிடரியற்று மடலவுண" என்றது — சோமுகாசுரன், இரணியாக்கன், இரணியகசிபன், இராவணன், கும்பகாணன், இந்திரசெயித்து, பிரலம்பன் முதலான கொடிய அசுரர்களை. அவர்கள் சரித்திரங்களை விரிக்கிற் பெருகுமென விடுத்தாம்

சிவகருணையடையோரன்றி மற்றையோர் அந்நகரத்தின்கண் இல்லாமையால அந்த கோல்லாபுரம் எனப் பெயர்பெற்றது. (௨௬)

கொழுதியிசை யளிமுரலுந் தாமரைமென் பொகுட்டிலுறை கொள்கை போல, மழைபுரையுந் திருமேனி மணிவண்ண னிதயமலர் வைகுமானே, முழுதுலகு மினிதீன்ற வருட்கொம்பே கரகமல முகிழ்த்து நாளுங், கழிபெருங்கா தலிற்றொழுவோ ரவினைதீர வருள்கொழிக்குங் கமலக் கண்ணாய்.

(இ-ள்.) இசைபாடும் வண்டுகளுங் கொத்திக்கொண்டு ஒலிக்கின்ற தாமரைமலரின் மெல்லிய கொட்டையில் வசிக்குந்தன்மையைப்போல, மேகத்தை யொத்த திருமேனியையுடைய விஷ்ணுமூர்த்தியின் இதயதாமரையில் வீற்றிருக்கும் இலக்குமியே! உலகமுழுவதையும் இனிமையாகப்பெற்ற கிருபைதங்கிய பூங்கொம்புபோல்பவளே! கைகளாகிய தாமரைகளைக்குவித்து எக்காலத்திலும் மிகவும் அதிகரித்த அன்போடு வணங்குவோரது துன்பங்கள் நீங்க அருள்செய்கின்ற தாமரைமலர்போலுங் கண்களையுடைய தாயே! எ - று.

இதுமுதல் ஐந்துபாடல்களால், கொல்லாபுரத்தில் எழுந்தருளியுள்ள இலக்குமிதேவியை அகஸ்தியர் தோத்திரஞ் செய்கின்றனர். (உஎ)

கமலைதிரு மறுமார்பன் மனைக்கிழத்தி செழுங்கமலக் கையாய் செய்ய
விமலைபசுங் கழைகுழைக்கும் வேனிலான் றனையீன்ற விந்தை தூய
வமுதகும்ப முலைக்கரத்தாய் பாற்கடலு ளவதரித்தா யன்பா நெஞ்சத்
திமிரமகன் றிடவொளிருஞ் செழுஞ்சுடரே யெனவணக்கஞ் செய்தான்
[மன்னோ.

(இ-ள்.) தாமரையில் வசிப்பவளே! சிறந்த (ஸ்ரீவச்சம்) என்னும் மறுவைப்பொருந்திய மார்பராகிய (விஷ்ணுமூர்த்தியினது) மனைவியே! செழுமையாகிய தாமரைமலர்போன்ற திருக்கரங்களையுடையவளே! செந்நிறம் பொருந்திய விமலையே! பசிய கரும்பு (வில்லை) வளைக்கும் மன்மதனைப்பெற்ற விந்தையே! பரிசுத்தமாகிய அமுதக்குடம்போலுந் திருத்தனங்களை யுடையவளே! (ஓர்காலத்தில) திருப்பாற்கடலில் திருவவதாரஞ்செய்தவளே! அடியவரது மனதி லிருக்கும் (அஞ்ஞானமாகிய) இருள் நீங்கும்படி விளங்குகின்ற செழுமைதங்கிய சோதிவடிவமாகவுள்ள தாயே! என்று (தோத்திரஞ்செய்து) வணங்கினார் (அகஸ்திய முனிவர்). எ - று.

"தூய-வமுதகும்பமலர்க்கரத்தாய" எனவும் பாடம் உண்டு.

விமலை = மலமற்றவள்; விந்தை = வீரலட்சுமி.

மன்மதன் ஆன்மாக்களுக்குக் காமவிச்சையை வேனிற்காலத்திலேயே அதிகமாக வுண்டுபண்ணுபவ னாதலால் "வேனிலான்"—எனப்பட்டனன். (உஅ)

மடற்கமல நறும்பொகுட்டி லாசிருக்குஞ் செந்துவர்வாய் மயிலே
மற்றுன், கடைக்கணருள் படைத்தன்றோ மணிவண்ண னுலகமெலாங்
காவல் பூண்டான், படைத்தனனான் முகக்கிழவன் பசுங்குழவி மதிபுனை
ந்த பரமன் றானுந், துடைத்தனனின் பெருஞ்சீர்த்தி யெம்மனோ ராலெ
டுத்துச் சொலற் பாற்றோ.

(இ-ள்.) வாசனைதங்கிய இதழ்களையுடைய தாமரைக்கொட்டையில் அரசிருக்கின்ற செம்பவளம்போலும் வாயையுடைய மயிலினசாயலைக் கொண்டவளே! உன்னுடைய கிருபைபொருந்திய கடைக்கண் பார்வையைப் பெற்றல்லவோ, நீலமணிபோன்ற திருமேனியையுடைய விஷ்ணுமூர்த்தி எல்லாவுலகங்களையும் இரட்சித்தனன். நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் (எல்லாவுலகங்

களையும்) சிருஷ்டித்தனை. பசிய இளஞ்சந்திரனை (முடியிற்) சூடிய உருத்திரனாக வான் (அவற்றையெல்லாம்) சங்கரித்தனை. (ஆனபடியால், உனது பெருஞ்சிறப்பை எம்போன்றவர்களால் எடுத்துச்சொல்லுந் தகுதியுடையதோ? எ - று. (௫௯)

மல்லலினெடும் புவியனைத்தும் பொதுநீக்கித் தனிபுரக்கு மன்னர்
தாமுங், கல்வியினிற் பேரறிவு கட்டழகி னிகரிலாக் காட்சி யோரும்,
வெல்படையிற் பகைதுரந்து வெஞ்சமத்து வாகைபுனை வீர ராமும், மல
ரிமலர்ப் பொகுட்டுறையு மணியிழைநின் னருணோக்க மடைந்து ளாரே.

(இ-ள்.) அகவிதழ்களையுடைய தாமரைமலர்க்கொட்டையில் வசிக்கும் அழகிய ஆபரணங்களையணிந்த இலக்குமிதேவியே! வளம்பொருந்திய பெரிய உலகமுழுதும் பொதுத்தன்மையினின்று விலக்கி ஒப்பின்றி அரசுசெய்யும் அரசர்களும், கல்வியினாலும் மிகுந்த ஞானத்தினாலும் ரூபலாவண்ணியத்தினாலும் தமக்குச் சமானமில்லாத தோற்றமுடையோர்களும், வெல்லத்தக்க அஸ்திரசஸ்திரங்களால் (தமது) சத்துருக்களை யொழித்து வெவ்விய யுத்தகளத்தில் வெற்றிமாலையைத்தரித்த சுத்தவீரர்களும், உனது கிருபாநோக்கத்தைப் பெற்றிருக்கின்றனர்.

"உலகமெலாம் பொதுநீக்கி யொருகோ லோச்சிப் பார்த்திபனும்" என இந்நூலாசிரியரே வேறோரிடத்துக் கூறியதுபோல, ஈண்டும் "மல்லலினெடும் புவியனைத்தும் பொதுநீக்கித் தனிபுரக்கு மன்னர்"—என்றார்.

அணியிழை என்பது அன்மொழித்தொகை. (௬0)

செங்கமலப் பொலந்தாதிற் றிகழ்ந்தொளிரு மெழின்மேனித் திரு
வே வேலை, யங்கணுல கிருணீக்கு மலர்கதிராய் வெண்மதியா யமரர்க்கூ
ட்டும், பொங்கழலா யுயிர்களிக்கும் பூங்கொடியே நெடுங்கானிற் பொருப்
பின் மண்ணி, லெங்குளைநீ யவணன்றோ மலவுலகஞ் சிறந்தோங்கி யி
ருப்ப தம்மா.

(இ-ள்.) செந்தாமரைமலரின் அழகிய மகரந்தப்பொடியைப்போல பிரகாசித்து விளங்குகின்ற அழகிய திருமேனியையுடைய இலக்குமியே! கடல்சூழ்ந்த இடமகன்ற உலகத்திலுள்ள அந்தகாரத்தையொழிக்கும் பிரகாசமுடைய சூரியனாகியும், வெண்ணிறம்பொருந்திய சந்திரனாகியும், தேவர்களுக்கு (அவிப்பாகத்தை) உண்பிக்கும் அதிகரித்த (யாக) அக்கினியாகியும், (முச்சுடர்வடிவாக நின்று) பிராணிகளைக் காத்தருளும் பூங்கொடிபோல்பவளே! பெரியகாட்டிலும், மலையிலும், பூமியிலும் நீ எங்கிருக்கின்றனையோ அவ்விடமல்லவோ பலவாகிய வளங்கள் சிறப்புற்று அதிகரித்திருக்கும் தாயே! எ - று. (௬க)

என்றுதமிழ்க் குறுமுனிவன் பன்னியொடு மிருநிலத்தி லிறைஞ்சலோடு
நன்றுனது துதிமகிழ்ந்தே மானமறையோ யித்துதியை நவின்றோ ரியாரும்
பொன்றலரும் பெரும்போக நுகர்ந்திடுவ ரிங்கிதனைப் பொறித்த லேடுள்
மன்றமனை யகத்திருப்பின் வறுமைதருந் தவ்வையவண் மருவல் செய்யா

(இ-ள்.) என்றிவ்வகையாக தமிழாசிரியராகிய அகஸ்தியமுனிவர் தோத்திரஞ்செய்து, தமது மனைவி(யாராகிய உலோபாமுத்திரை) யாருடன் பெரிய

பூமியில் வணங்கவும், (இலக்குமிதேவியார் திருவுள்ளமிரங்கிச்சொல்லுகின்றனர்) நான்குவேதங்களிலும் வல்ல அகஸ்தியமுனிவனே! உனது தோத்திரத்தால் மிகுதியும் ஆனந்தித்தோம். இதோத்திரத்தைப் பாராயணஞ்செய்தோர் எல்லாரும் கெடுதலில்லாத அருமையாகிய பெரிய (இஷ்ட)போகங்களை அனுபவிப்பார்கள். இத்தோத்திரத்தை எழுதிய ஏடு சபை வீடு (முதலிய) இடங்களிலிருந்தால்,தரித்திரத்தைக்கொடுக்கும் மூதேவி அவ்விடத்தில் வந்து சேரமாட்டாள். எ - று.

இதுமுதல் நான்குபாடல்கள் இலக்குமிதேவி அகஸ்தியமுனிவருக்கு அருள்செய்தவை.

இலக்குமிதேவி யுள்ளவிடத்தில் அவளுக்கு மூத்தாளாகிய மூதேவி சேரமாட்டாள். அதுபோலவே, அவளது புகழ்விளங்கும் இத்தோத்திரமுள்ளவிடத்திலும் சேராள் என்பது தோன்ற "இதனைப் பொறித்தவேடு - மன்றமனை யகத்திருப்பின் வறுமைதருந் தவ்வையவண் மருவல் செய்யாள்"—என்றார். (௩உ)

அந்தணநின் றுயரறிந்தேங் காசிநக ரகன்றெவரே யாற்ற வல்லா,ரிந்துவகிர் புனைசடிலத் திறையவனுங் காசிதணந் தேகி யோங்கு, மந்தரவெற் பினையடைந்து காசிபிரி துறைவிரக மமர் நோயால், வெந்துயருற் றவண்மேவ விரிஞ்சன்முதல் வானவரை விடுத்தல செய்தான்.

(இ-ள்.) அகஸ்தியமுனிவனே! உனது மனத்துயரை யுணர்ந்தோம். காசிக்ஷேத்திரத்தைப் பிரிந்து யாவர்தாம் சகிக்கவல்லவர்கள். சந்திரனது பிளவினைசூடிய சடையினையுடைய தலைவராகிய சிவபெருமானும் காசிநகரத்தை நீங்கிச்சென்று, உயர்ந்த மந்தரகிரியை (வாசஸ்தானமாகக்கொண்டு) சேர்ந்து காசியை நீங்கி வசிக்கும் பிரிவாற்றாமையா லாகிய துன்பநோயால், மிகுதியாகிய வருத்தமுற்று, அவ்விடத்திற் செல்ல பிரமாமுதலிய தேவர்களை அனுப்பினர். எ-று.

கஞ்சமல ரயன்முதலோர் கண்ணுதல்பான் மீளாது காசி மேவி,யெஞ்சலினல் வளநோக்கி யிருந்தனரால் பைந் துளவணியு மெம்மான் சூழ்ந்த, வஞ்சனையான் முழுமுதல்சேர் காசிநகர் தனிலவிருமபி மகிழ்ந்தா னென்றூ, னெஞ்சுதனிற காசிதனைப் பிரிந்தேக நினைப்பவரோ நெறியி லாதார்.

(இ-ள்.) தாமரைமலரில் வசிக்கும் பிரமன் முதலிய தேவர்கள் நெற்றிக்கண்ணினை யுடைய சிவபெருமானிடத்தில் திரும்பி வராமல், குறைவில்லாத (நிறைந்த) நல்ல வளப்பமுற்றிருப்பது நோக்கிக் காசிக்ஷேத்திரத்திலேயே பொருந்தி வாழ்ந்தனர். பசுமையாகிய துளவமாலையணிந்த எமது விஷ்ணுதேவர் ஆலோசித்த வஞ்சனையால் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான சேர்ந்துள்ள காசிநகரத்தில் விருப்பங்கொண்டு சந்தோஷித்திருந்தனர் என்று சொல்வோமானால் காசிநகரத்தைவிட்டு விலகிச்செல்லும்படி மனதில் எண்ணுகின்றவர்களே சன்மார்க்கத்தி லிராதவர்க ளாவர். எ - று.

(௩௪)

அருமறையோய் காசிவரு மிருபத்தொன் பானுகத்தி லடைதி நீயுங் குருபரனுக் கலைமுழுது முனக்குணர்த்து சுடர்வடிவேற்குமரன் றன்னை மருவுவையீண் டகன்றேகி னணித்தாகக் கங்கைநதி வளங்கொள் காசிப் பொருவருஞ்சீர்த் தலமுழுது மற்றவனே நீபுணரப் புகல்வ னென்றாள்.

(இ - ள்.) அருமையாகிய வேதங்களை யுணர்ந்த அகஸ்தியமுனிவனே! வருகின்ற இருபத்தொன்பதாவது யுகத்தில் நீ காசிக்ஷேத்திரத்தை யடைவாய். இவ்விடம்விட்டுச்சென்றால், குறைவறத்தியாக (வேதாகம முதலிய) சாஸ்திரங்களையெல்லாம் உனக்கு விளங்கும்படி பிரகாசம்பொருந்திய வடித்த வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளை சமீபத்திலேயே அடைவாய். கங்காநதியினது நீர்வளப்பங்கொண்டு விளங்கும் ஒப்பற்ற அரிய சிறப்பினையுடைய காசித்தல மான்மிய முழுவதும் நீ தெரிந்துகொள்ளும்படி அவரே (உனக்குச்) சொல்லுவார். என்று (இலக்குமிதேவியார்) திருவுளஞ்செய்தனர். எ - று. (௨௫)

உரவுநீர்க் கடலேழு மொருகுடங்கை தனிலேந்தி யுண்ட மேலோன்
விரைகொள்பூந் தாமரையின் மெல்லியலை படிவணங்கி விளங்கு கற்பின
பொருவில்சீர் பயூவையொடு திசைமுகனை யருஞ்சிறையிற் புகுத்து ஞா
முருகவே ளினிதுறையும் பதிதேடி யவன்பாத முன்னிச் சென்றான். [ன

(இ-ள்.) ஒலிக்கின்ற நீர்மயமாகிய சப்த சமுத்திரங்களையும் தமது ஒப்பற்ற உள்ளங்கையி லேற்று ஆசமனஞ்செய்த மேலோராகிய அகஸ்தியமுனிவர், வாசனையோடுகூடிய பொலிவுதங்கிய தாமரைமலரிலவசிக்கும் இலக்குமிதேவியாரது திருவடிகளை நமஸ்கரித்து, பிரகாசிக்கின்ற கற்பினையும், ஒப்பற்ற சிறப்பினையுமுடைய உலோபாமுத்திரையோடும், பிரமதேவனை அரிய சிறையிலிட்ட ஞானசுரூபியாகிய முருகக்கடவுள் இனிமையாக எழுந்தருளியுள்ள க்ஷேத்திரத்தைத் தேடிக்கொண்டு, அக்கடவுளது திருவடிகளைத் தியானித்துக்கொண்டு சென்றனர். எ - று.

"திசைமுகனை யருஞ்சிறையிற் புகுத்து ஞான முருகவேள்"—என்றதன சரித்திர வரலாறு.

ஸ்ரீ முருகக்கடவுள், நவவீரர் முதலிய தமது துணைவருடன் பலவகையாகிய திருவிளையாடல்களைச் செய்துகொண்டு ஸ்கந்தகிரியில் எழுந்தருளியிருக்கையில், ஒருநாள் பிரமன்முதலிய தேவர்கள் திருக்கைலாயமலையையடைந்து சிவபெருமானை வணங்கித் திரும்பினர். அப்பொழுது குமாரக்கடவுள், அவர்களில் தலைவனாகிய பிரமனைக்கண்டு, வருகவென வழைத்து "நீயார்? உன செய்தொழிலென்ன?" என, பிரமன் நமஸ்கரியாது கைகுவித்து "நான் பிரமன். சிருஷ்டித்தொழில் செய்வது." என, "நீ எதைக்கொண்டு சிருஷ்டிக்கின்றாய்" என, "பெருமான் செய்த வேதத்தைக்கொண்டே படைக்கின்றேன்." என்றனன். அதுகேட்ட இளையபிள்ளையார் "வேதந்தெரியுமாகிற் சொல்" என, பிரமன் இருக்கு ஓதும்படி நினைத்து முதலில் பிரணவத்தைக் கூறினன். முருகக்கடவுள் 'போதும். அதுவாயில் பொருள்கூறி மேலே சொல்' என, பிரமன் பொருளுணராது மயங்குதலால், அவனைக் கோபத்தாற் றலையிற் குட்டிக் காலாலுதைத்துத்தள்ளிச் சிறையிலிடும்படி பரிசனர்களுக்குக் கட்டளையிட்டு, தாமே பலநாள் சிருஷ்டியைச் செய்துவந்தனர். இச் செய்தியறிந்த விஷ்ணு, தேவர் முனிவர் பலரொடுங் கைலாயமடைந்து கருணாநிதியாகிய எம்பெருமானை வணங்கி "என் புதல்வனைச்

சிறைநீக்கி வைக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, சிவபெருமான் திருநந்திதேவரை விளித்து "நமது கட்டளை யென்று சொல்லிப் பிரமனைச் சிறைநீக்கிவை" என்று திருவுள்ளஞ்செய்ய, திருநந்திதேவர் அவ்வாக்ஞையைச் சிரமேற்கொண்டு அவ்வாறே ஸ்கந்தகிரியை யடைந்து குமாரக்கடவுளை வணங்கித் திருவாணையை விண்ணப்பஞ்செய்ய, அவர் மறுத்ததனால் ஒன்றுஞ் சொல்லமாட்டாது திரும்பினார் பிறகு பெருமான் திருவோலக்கத்துடன் எழுந்தருளி இளையபிள்ளையாருக் குரைத்துச் சிறை நீக்குவிப்பித்தனர் என்பதாம்.—இதனை,

கந்தபுராணம் - உற்பத்திகாண்டம் - அயனைச்சிறைபுரிபடலம்.

"எட்டொ ணாதவக் குடிலையின் பயனினைத் தென்றே
கட்டு ரைத்திலன் மயங்கலு மிதனைப் பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மைய தோவெனச் செவ்வேள்
குட்டி னனய னெந்துமா முகங்களுங் குலுங்க.

மறைபு ரிந்திடுஞ் சிவனருண் மதலையா மலர்மே
லுறைபு ரிந்தவன் வீழ்தரப் பதத்தினு லுதைத்து
நிறைபு ரிந்திடு பரிசன ரைக்கொடே நிகளச்
சிறைபு ரிந்திடு வித்தனன் கந்தமாஞ் சிலம்பில்." — என்னுஞ் செய்யுள்களா லுணர்க. (௩௯)

அகஸ்தியர் விந்தவரையை யடைந்த அ - ம.

முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் ககக.

சிவமயம்.

ஐந்தாவது,

## தீர்த்த மகிமையுரைத்த அத்தியாயம்.

அங்கணுல கிறைஞ்சி யருந்தவத்தோ னெறியோ டேகியிப் புவனத்
திங்களிள மைக்குழவிக் கோடிருச நறுமுகை சிதைத்து தண்ணென்
கொங்குகமழ் நறுங்கொன்றைத் தேனருவி யலைத்தொழுகு கோடீரத்துக்
கங்கைநதி புவட்டிடிக்குங் கடவுளுறை திருச்சைலங் கண்ணுற் றானே.

(இ-ள்.) அந்த தவசியாகிய அகஸ்தியமுனிவர் இடமகன்ற பூலோகத்தி லிருந்த திருவிளைபொழிந்த, (முருகக்கடவுளைத் தேடிக்கொண்டு) போகும் ஒருவழி யினிடையில, இளமைதங்கிய பசிய பிறைச்சந்திரனாகிய கொம்பானது தேய்த்த லால் வாசனையையுடைய மொக்குகள விகசித்து, குளிர்ந்த நறுமணங்கமழுமக ரந்தத்தேனோடுகூடிய கொன்றைமலரினது தேனருவியானது அலைகளையுடையதா ய்ப் பாயும் சடைமுடியில, கங்காநதி ஊற்றெடுத்தொழுகுகின்ற சிவபெருமான எழுந்தருளியுள்ள ஸ்ரீசைலம் (என்னும பர்வதத்தைக்) கண்டனர்.

அகஸ்தியமுனிவர் ஸ்ரீசைலத்தை யடைந்தபோது அங்கு நடந்ததாக ஒரு சரிதம் உண்டு. அதாவது:—

**சயகீயசவ்வியன்** என்னும் பெயர்பெற்ற முனிவரதுமாணாக்கரிலொரு வன் வேதமுதலியவற்றை நன்குணர்ந்தும் கொலை, களவு, கட்குடி, பரதாரகமனம் முதலிய தீச்செயல்கள் மிகுதியுஞ்செய்தலநோக்கி, முனிவர் மனம்பொறாது, "நீ இக்காசியைவிட்டு விலகாவிடிற்சபிப்பேன்" என, அவன அவ்வாறே காசியைவிலகிச் சிறிதுகாலம் விந்தமலையிலும், கோதாவிரிக்கரையிலும், வேதாநதிக் கரையிலும சஞ்சரித்துக்கொண்டு தவமியற்றி, கடைசியில் ஸ்ரீசைல மடைந்து குமாரக்கடவுளை நோக்கி அருந்தவம்புரிந்திருக்கையில், காசியை மனத் தெண்ணிவருத்தத்துடன அவ்விடத்துக்கு வரும் அகஸ்தியமுனிவர் சொலலும் காசிகாசி என்னுஞ்சொல செவிபுக, அவன் பாவம்விலகி நல்லுருவொடு விளங்கி அகஸ்திய முனிவரைவணங்கிப்பிறகு அவரால முருகக்கடவுளைத் தரிசித்தனன். என்பது காசிரகசியவரலாறு. இதனை,

பஞ்சக்குரோசப்பிரதக்கண மகிமையுரைத்த அத்தியாயம்.

"எழுந்தவன் குறிய முனிவரன் றாதப் பிறைஞ்சியான் காசியின் வசித்துத்
தழுந்தர மலைப் பாதகம் புரிந்தேன சற்குரு வெறுத்தெனைக் கடியக்
கழுந்துகொண மதியிற் காசியை நீத்துக் கருதுபற் பலதலம் வசித்திங்
குழுந்தள வாக்கி யுததியுண் முனிவா வற்றுநோற் றிருந்தனன் வருந்தி.

ஆயதோர் காலை முனைவமெத் தவம்பா ஞற்றின னேவ தறியேன்
பாயமா தவத்தி காசியென் றுரைத்துப் படர்ந்தனை யதுசெவி யேறத்
தீயமா தகத்தீர்ந் துடமனே னளவாத் தேசுபெற் றுய்ந்தன னென்றான்
மேயமா முனியுங் கேட்டிரும் பூதுவிழைதரத் தன்னுளே மகிழ்ந்தான்."

என்பதனு லுணர்க. (க)

வேறு.

பனனி கேளிப் பருப்பதம யோசனை
புன்னி லெண்பத்து நான்ககன ரோங்கிடு
மனனு மியாவு மிலிங்க வடிவின
துன்னு வாரதம பவங்க டுடைக்குமால்.

(இ-ள்.) (அகஸ்தியமுனிவர் சொல்லுகின்றார்.) உலோபாமுத்திரையே! கேள் (ஸ்ரீசைலம் என்னும்) இப்பர்வதம் நினைத்துபபார்ததால் எண்பத்துநானகு யோசனைதூரம் அகலமுடையதாய் உயர்ந்துள்ளது. (இவவிடத்தில) உள்ள பொருள்களெல்லாம் சிவலிஙகவடிவமாகும். (இப்பர்வதம்) இங்கடைவோரது பாவஙகளை ஒழிக்கும் வல்லமையுடையது. எ - று.

[இதுமுதல் சிவசன்மா முத்திபெற்ற அத்தியாயம் வரையில் அகஸ்தியர் உலோபாமுத்திரையாருக்குக் கூறியவை.] (உ)

ஆத லாலிவ் வளைவலங் கொணடலாப்
போது தூவிப பணிகெனப் பொறறொடி
யீது நண்ணிற் பிறப்பறு மென்றிடிற்
றீதில் காசியைச் சிநதிபப தெனகொலோ.

(இ-ள்.) ஆனபடியால் பொன்னாலாகிய வளையல்களையணிந்த உலோபாமுத்திரையே! இப்பர்வதத்தைப் பிரதட்சிணஞ்செய்து,விகசிதப்பட்ட மலர்களாலருச்சித்து நமஸ்கரிக்கக்கடவாய் என்று (அகஸ்தியமுனிவர்) கட்டளையிட, இப்பர்வதத்தை அடைந்தால், பிறவித்துன்ப மொழியுமென்னிற் காசியை நினைத்து வருந்துதல் என்னகாரணமோ? (சொல்லவேண்டும்) எ - று. (ங)

என்று பன்னி யியம்பலு முத்திவீ
டொன்ற நல்கு பதிபல வுண்டென
மன்ற நற்றவ ரோதினர் மாணிழை
நன்று கேட்டி யெனநவின் றனரோ.

(இ-ள்.) என்றிவவகையாக உலோபாமுத்திரையார் சொல்லவும், மோட்ச வீட்டைப் பெறும்படி (தம்மிடத்தடைந்தோர்க்குக்) கொடுக்கின்ற (புண்ணிய) ஸ்தலஙகள் பலவுள என்று மேமபட்ட நல்ல தவசிரேஷ்டர்கள் சொல்லியிருக்கின்றனர். மாட்சிமைப்பட்ட ஆபரணங்களை யணிந்தவளே! நன்றாகக் கேட்பாயாக என்று (அகஸ்தியமுனிவர்) சொல்லுகின்றார். எ - று. (ச)

வேறு.

அதிர்புனற் பிரயாகை விளங்குமோங் கார மவந்திகா லஞ்சர மயோத்தி
மதுரைகோ கன்னம புட்கர மகரா லயந்துவா ரகைவளக் காஞ்சி
வெதிரிகாச் சிரமந் திரியமபகங் கங்கை வேலைபிற் புகுமிடஞ் சிநது
நதிசரச் சொதியோ டொன்றிடங் குருக்கேத் திரமொடு நைமிசா ரணியம

(இ-ள்.) ஒலிக்கின்ற நீர்வளம்பொருந்திய பிரயாகையும், பிரகாசிக்கின்ற ஓங்காரமும்,அவந்தியும்,காலஞ்சரமும்,அயோத்தியும்,மதுரையும்,கோகன்னமும், புஷ்கரமும், மகராலயமும், துவாரகையும்,வளப்பமிகுந்த காஞ்சியும், வெதிரிகாச்

சிரமமும், திரியம்பகமும், கங்காசமுத்திர சங்கமமும், சிந்துசரஸ்வதி சங்கமமும், குருக்ஷேத்திரமும், நைமிசாரணியமும். எ - று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம். (௫)

விரிபுனற் கங்காத் துவாரநற் றுறக்க வீடருள் ஸ்ரீசைலம்
பிருகுகச் சஞ்சீர் பெற்றுயர் பிருகு துங்கமென் றினைய வன்றித்
தரைபுகழ் தாரா தீர்த்தமே வண்டரங்கச் சத்தகோ தாவிர்த தடமென்
றுரைபெறு கடவுட் டீர்த்தமா நிலத்தி லுண்டென வோதின ருயர்ந்தோர்

(இ-ள்.) பரவிய நீரையுடையதாகிய கங்காத்துவாரமும், (தன்னிடத்தடைந்தோர்க்கு) நல்ல மோக்ஷவீட்டினை உதவுகின்ற பெரிய ஸ்ரீசைலமும், பிருகுகச்சமும், சிறப்புப்பெற்று உயர்ந்த பிருகுதுங்கமும் என்று சொல்லப்பட்டவைம் இவைபோல்வன வல்லாமல், உலகிலுள்ளோர் புகழுகின்ற தாராதீர்த்தமும், வெள்ளிய அலைகளையுடைய சத்தகோதாவிரித்தடமும், என்று சொல்லப்படுகின்ற தெய்வீகம்பொருந்திய தீர்த்தங்கள் பெரிய பூமியில (அனேகம்) உண்டெனப் பெரியோர் சொல்லினார். எ - று. (௬)

சத்தியந் தானஞ் சம்மதி மின்சொற் சாற்றுத லொருவழிப் படுதல்
புத்தியே முதல கரணமோ ரான்கு மடக்குதல் புலன்கள்போம் வழியி
னுய்த்திடா தமைத்தல் பொறைதிட ஞான முயிர்க்கெலாந் தண்ணளி பு
வித்திற மனைத்து மானத தீர்த்த மெனவெடுத் தியம்பினர் மேலோர். [ரித

(இ-ள்.) உண்மையுடைமை, (ஏற்போர்க்குக்) கொடுத்தல், (யாவரிடத்தும்) பகையின்மை, (தன்னிடத் தூர்ப்போர்க்கு) இனியவார்த்தை சொல்லுதல், (மனம் விடயங்களைப்பற்றாது) ஒருவழிப்படுதல், புத்திமுதலாகச் சொல்லப்பட்ட அந்தக்கரணங்கள் நான்கினையும் (புறஞ்செல்லாமல்) நிறுத்துதல், ஐம்புலன்கள் செல்லுகின்றவழியில் செலுத்தாமல் (மனதை) அடக்குதல், பொறுமை, கலங்காத (உண்மை) ஞானம், (தன்னைப்போலவே யெண்ணி) ஆன்மாக்களுக்கெல்லாம் மிகுந்த கிருபைசெய்தல் (முதலாகிய) இப்படிப்பட்ட குணங்கள் எல்லாவற்றினையும் மானததீர்த்தம் என்று மேலோர் எடுத்துச் சொல்லினார். எ - று.

அறநதுறை பயிலு மானத தீர்த்த மாடல ராகிநீ ராடிற்
புறநதழுக் கொழிவ தலலது புனித ராகிலர் பூந்திரை சுருட்டுஞ்
சிறைபபுன லதனின் முழைபுறழ் பகுவாய்த் திவிழிக் கூரெயிற் றிடங்கர்
சுறக்குல முதல வளபபருங காலந் தோய்ந்ததாற் றுறக்கமுற் றனவோ.

(இ-ள்.) பொலிவுதங்கிய அலைகளைச் சுருட்டுகின்ற கரைபோட்டுள்ள சலத்தில் குகையை யொத்த பிளவுபட்ட வாயையும், நெருப்பை யொத்த கண்களையும், கூர்மையாகிய பற்களையுமுடைய முதலை, சுறாமீன முதலிய (நீர்வாழ் ஜந்துக்கள்) அளவில்லாதகாலம் படிந்திருந்ததனால் மோக்ஷம்பெற்றனவா? இல்லை! (அதுபோல) தருமவழியில் விளங்கும் மானததீர்த்தத்தில் மூழ்காதவர்களாகி (புண்ணியநதிகளின) நீரில் மூழ்கினால், (சரீரத்தின்) மேலுள்ள அழுக்கு நீங்குவதல்லாமல் பரிசுத்தராகமாட்டார்கள். எ - று.

சிறைப்புனல்—புறஞ்செல்லாமல் கட்டுப்பாடுடையதாகிய நீர். (௮)

வேறு.

முதுக்குறை விலாதவர் மொழியுந் தெய்வநன
னதிபபுன லாடினு நவையி னீஙகலா
மதுக்குடம பன்முறை வரமபின் மாநதிப
புதுப்புன லாடினும புனித மெய்துமோ.

(இ-ள்.) கட்குடமானது அநேகந்தடவை அளவில்லாத பெருமைதங்கிய (புண்ணிய) நதிகளினது புதிய சலததில் மூழ்கினாலும பரிசுதத மடையுமோ? (அடையாது, அதுபோல) பேரறிவினை உடைத்தாயில்லாதவா, சொலலுகின்ற தெய்வீகம் பொருநதிய நல்லநதிகளின நீரில் ஸ்நானஞ் செய்தாலும் பாவததினின் றும் நீங்கமாட்டாாகள். எ - று.

நவை=குறறம். ஈண்டு பாவததிற காயது. (௬)

கற்றதங் கல்வியுங் கடவுட் பூசையு
நற்றவ மியறறலு நவையி ருனமும்
மற்றுள வறங்களு மனததின் பாலழுக்
கற்றவாக் கேபய னளிக்கு மென்பரால்.

(இ ள்.) (ஆசிரியனைபடைந்து)கற்றுக்கொண்டதமதுவிதயையும்,தேவதா ர்ச்சனையும், நலலதவங்களைச செய்தலும், குறறமில்லாத தானஞ் செய்தலும், மற் றுள்ளதருமஙகளும் (ஆகிய இவை யெலலாம்) மனதினிடத்தில குற்றம் நீஙகியவ ர்களுக்கே தமது பிரயோசனததைக் கொடுக்கும (ஏனையோாக்குக் கொடாது) என்று (பெரியோா) சொலலுவா. அ - று.

கல்வி பூசை தவம் தானம் ஆகிய இவற்றை உடைத்தாயிருப்பினும் பரிசுத்தமனமுடையோரே அவற்றின் பயனனுபவிப்பர் ஆதலின, "மனத்தின்பா லழுக் கற்றவாக்கே பயனளிக்கும" என்றாா. (கO)

பொறிவழிப் புலன்செலா தடக்கிப் புந்தியை
நிறைபரம பொருளிடை நிறுத்து நின்மல
ருறைவிட மல்லதை யுள்ள தாங்கொலோ
வெறிபுனற் றீாத்தமென றியம்பப் பட்டதே.

(இ-ள்.) ஐம்பொறிகளின் வழியில் அறிவினைச் செல்லவொட்டாம லடக்கி, சர்வபரிபூரணனாகிய சிவபெருமானிடத்தில மனதை நிறுததுகின்ற பரிசுதத மானவர்கள் வசிக்கின்ற இடமல்லாமல், மோதுகின்ற நீர்மயமாகிய தீாத்தம் என்று சொல்லப்பட்டது (வேறொன்று) இருக்கின்றதாகுமோ? இல்லை. எ - று.

நிறைபரம்பொருள்=எங்கும் நிறைந்த மேலாகியபொருள். நின்மலர் = ஆணவ கனம மாயைகளை நீக்கியோர். அல்லதை—ஐ சாரியை. (கக)

உரைப்பரு மானத தீர்த்த மோதிடிற்
சுருக்கமின ஞானநீர் தோய்தன் மற்றது
விருபபொடு வெறுப்பென விளம்பப் பட்டதோர்
கருபபுகுத் திடுமலங் கழுவு மென்பவே.

(இ-ள்.) சொலுதற்கரிய (பெருமையையுடைய) மானதீர்த்தமானது (எப்படிப்பட்டதெனச்) சொன்னால், குறைவில்லாத ஞானமாகிய நீர் நிறைந்ததாகும். அம் மானதீர்த்தமாகியது, இச்சையும், இச்சையின்மையும், என்று சொல்லப்பட்ட ஒரு கருப்பாசத்தையிற் பிரவேசிக்கச்செய்யும் மும்மலங்களை ஒழிக்கும் (தகுதியுடையது) என்று (மேலோர்) சொல்லுவர். எ - று. (கஉ)

உடலுறு மவயவத் துத்த மாங்கம்போற்
றொடுகடல் வளையினுட் டோயு மாற்றினுட்
கடவுண்மா நதியுள வவற்றிற் காதலாற்
படிந்தா ரழிவிலாப் பதத்திற் சேர்வரால்.

(இ-ள்.) சரீரத்தில் பொருந்திய (முப்பத்திரண்டு) அவயவங்களில், உத்தமாங்கம் (சிறந்துள்ளது, போல, (சகரரால்) தோண்டப்பட்ட கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் கலந்துள்ள நதிகளில் தெய்வீகம்பொருந்திய சிறந்த நதிகள் (மேம்பட்டனவாய்) இருக்கின்றன. அப்புண்ணியநதிகளில் ஆசையோடு மூழ்கினவர்கள (எப்பொழுதும்) அழிவில்லாத (நல்ல) பதவியிற் சேர்வார்கள். எ - று.

உத்தமாங்கம்=சிரசு. (கங)

புண்ணிய தீர்த்தங்கள் பொருந்தி யாடினோர்
மண்ணிடைப் பறவைகள் விலங்கு மற்றுள
வெண்ணறு மியோனிகள் யாவு மெய்திடார்
விண்ணிடைக் கடவுள ராகி மேவுவார்.

(இ-ள்.) புண்ணியதீர்த்தங்களையடைந்து அதில் ஸ்நானஞ்செய்தவர்கள், பூமியில் (சஞ்சரிக்கும்) பட்சிகள் மிருகங்கள் மற்றுமுள்ளனவாகிய கணக்கில்லாத (எழுவகை) யோனிபேதமுடைய (ஜந்துக்களாகவும்) பிறவி யடையாதவர்களாகி, தேவலோகத்தில் தெய்வப்பிறவியை யடைந்து வீற்றிருப்பார்கள். எ-று.

"பறவைகள் விலங்கு மற்றுள - வெண்ணறு மியோனிகள்." — என்பது. எழுவகைத் தோற்றத்தினையுடைய எண்பத்துநான்குலட்சம் யோனிபேதமாகிய ஜந்துக்களை. அவையாவன - தேவர்-பதினான்குலட்சம், மக்கள்-ஒன்பதுலட்சம், விலங்கு-பத்துலட்சம், பறவை-பத்துலட்சம், ஊர்வன-பதினொருலட்சம், நீர்வாழ்வன-பத்துலட்சம், தாவரம்-இருபதுலட்சம் ஆகும். இதனை,

"ஊர்வ பதினொன்று ஒன்பது மானுடம்
நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்து—சீரிய
பந்தமார் தேவர் பதினா லயனமைத்த
அந்தமில்சீர்த் தாவரநா லைந்து."—என்பதனு லுணர்க.

மேற்கூறிய பலவகைப் பிறவிகளையும் அடையாதவர்களாகி தெய்வப்பிறவியையடைவார் என்பது தோன்ற "எண்ணுறு மியோனிகள் யாவுமெய்திடார்-விண்ணிடைக்கடவுள ராகி மேவுவார்."—என்றார். (கச)

அறத்திறந் திறம்பினோ ரருளி லாதவர்
துறக்கமோன் றில்லெனச் சொலலும் புன்மையோர்
சிறப்புடைப் பயனுறாத் தர்க்கஞ் செய்குநர்
பெறற்கருந் தீர்த்தநற் பயன்பெ றாரகளே.

(இ-ள்) தருமமார்க்கத்தினின்றும் தவறினவர்கள், (பிராணிகளிடத்துக்) கிருபையில்லாதவர்கள், மோட்சம் (என்பதாக) ஒரு பொருளில்லை என்று சொல்லும் அறிவில்லாதவர்கள், சிறப்பினையுடைய பிரயோசனமில்லாத தர்க்கவாதஞ் செய்பவர்கள், (ஆகிய இவர்கள் யாவரும்) பெறுதற்கரிய தீர்த்த (ஸ்நானத்தாலாகிய) நல்ல பிரயோசனத்தை அடையமாட்டார்கள. எ-று.

துறக்கமொன் றில்லெனச் சொல்லும் புன்மையோர்-உலகாயதமதஸ்தர்.

"சிறப்புடைப்பயனுறாத்தர்க்கம்"—என்பதனை,

"கைவல்லிய ஞானநீதி—
நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று நாட்டுவேன் காம மொருவன்
நாட்டினு லோபழைய ஞானமுக் கியமென்று நவிலுவேன் வடமொ ழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்திரா விடத்திலே வந்ததா விவக ரிப்பேன்
வல்லதமி ழறிஞரவி னங்ஙனே வடமொழியில் வசனங்கள் சிறிது புகல்வேன்
வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைவந்த வித்தையென முத்திதருமோ."
என்னும் தாயுமானவர் திருவாக்கா னுணர்க. (கரு)

அருளுடன் றீர்த்தங்க ளாட வேண்டினோ
ரொருபக லுணவொழித் தொழுகு மும்மதக்
கரிமுகன் றாளிணை கருதி மற்றைநாட்
பரிவொடு பாரணம் பண்ணி யேகுவார்.

(இ-ள்.) கிருபையுடன் (புண்ணிய) தீர்த்தங்களில் மூழ்கும்படி விரும்பினவர்கள், ஒருநாள் ஆகாரத்தை நீக்கி (உபவாசமிருந்து,) பாய்கின்ற மும்மதங்களையுடைய யானைமுகம் பொருந்திய விநாயகக்கடவுளின உபயதிருவடிகளைத் தியானித்து மறுநாள் ஆசையோடு பாரணஞ்செய்து (பிறகு தாம் எண்ணியபடி யாத்திரைக்குச்) செல்லுவர். எ-று.

விநாயகருக்குப் பரஞானம் அபரஞானம் எனனும் இருமதங்களேயுளவாக விருப்ப, கன்னமதம் கபோலமதம் பீஜமதம் எனனும் மும்மதங்களையுடையார் போல, ஈண்டு "ஒழுகுமும்மதக்கரிமுகன" எனறது முகம் யானைமுக மாதலின் ஜாதியொருமைபற்றிக் கூறினரெனக.

பாரணம்=உபவாசமிருந்து புசித்தல். (கசு)

மன்பெருந் தீர்த்தங்க ளாடி மாநிலம்
பொன்பசு முதலிவை வழங்கிப் பூசுரர்க்
கன்பினொ லமுதுற மூடிசி னூட்டிப்பின்
றெனபுலத் தவர்கடன் செய்ய வேண்டுமால.

(இ-ள்.) நிலைபெற்ற பெரிய (புண்ணிய) தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து, பெருமைதங்கிய நிலம், பொன், பசுக்கள் முதலாகிய இவற்றைத் தானஞ்செய்து, பிராமணர்களுக்கு அன்போடு அமுதத்தைக்கொடுத்த (அறுசுவையோடுகூடிய, அன்னத்தை உண்பித்து, பிறகு தென்றிசையையடைந்துள்ள தமது பிதுர்க்கடன் கழிக்க வேண்டும். எ - று.

பூசுரர்=பூலோகதேவர்; அந்தணர்.

தென்புலத்தவர்=தென்றிசையடைந்துள்ளவர்; இறந்தோர். (கஎ)

ஒருத்தனைத் தன்மனத் துன்னி வான்புனற்
றிருத்தகு தீர்த்தங்க ளாடல் செய்திடற்
றருப்பையா லவனுட லனைய வொப்பதோ
ருருப்பட வியற்றிநல் லுதக மாட்டுவார்.

(இ-ள்.) (தம்முடன் தீர்த்தயாத்திரைசெய்தற்குவராத) ஒருவனைத் தமது மனதில் எண்ணி, சிறந்த நீர்மயமாகிய மேம்பட்டதீர்த்தங்களில் மூழ்கவேண்டு மானால், அவனுடைய சரீரத்தையொத்த ஒருருவம் உண்டாகும்படி தருப்பைப் புல்லினாற் செய்து (அப்புல்லுருவத்தை) நல்லநீரில் (தம்முடன்) மூழ்குவிப்பார் கள். எ - று. (கஅ)

ஆடக மளித்துநீ ராட்டு வித்தவர்
கூடுவ ரோரிரு நான்கு கூறுமற்
றாடுந ரொருபதி னாறி லொன்றுதாங்
கேடிலபே றடைகுவர் கிளக்குங் காலையே.

(இ-ள்.) சொல்லுமிடத்தில் பொன் (முதலியவற்றைத் தானமாகக்) கொடுத்து, (தருப்பையாற்செய்தவடிவத்தை அல்லது பிறிதொருவனை) புண்ணிய தீர்த்தத்தில் மூழ்குவித்தவர்கள் (அப் புண்ணியத்தில்) எட்டிலொருபங்கு பெறுவர். (அவ்வாறு) மூழ்குகின்றவர்கள் கெடுதலில்லாத அப்புண்ணியத்தில் பதினாறில் ஒருபாகம் பெறுவார்கள். எ - று.

ஒரு பதினாறிலொன்று என்பது வீசம்பங்கு. (கக

அலைபுனற் றீர்த்தங்க ளடைந்த வற்றைநா
ளிலைவறப் பாகிலை யுண்டி நீத்துப்பின்
றலைமயிர் குறைத்துநீர்த் தடத்து மூழ்கிடி
னிலைபெறு பாவங்க ளனைத்து நீங்குமால்.

(இ-ள்.) (தீர்த்தஸ்நானஞ் செய்பவர்கள்) அலைகள்பொருந்திய நீரையு டைய தீர்த்தங்களைச்சேர்ந்த அன்றையதினம், கெடுதல்நீங்கப் பாக்குவெற்றிலை யையும் போசனத்தையும் விலக்கிப் பிறகு தலையிலுள்ள உரோமங்களைக்களைந்து (மழுக்கி) நீர்மயமாகியதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தால் நிலைபெற்றுள்ள (நீங்காத) பாவங்களெல்லாம் (அவைகளைவிட்டு) நீங்கிப்போம். எ - று.

அன்று+நாள்=அற்றைநாள். "ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே" என்றபடி. (௨0)

காசிமா யாபுரி யவந்தி காஞ்சிமற
றோசைகொ ளயோத்திவண் டுவரை யொப்பறு
மேசிலா மதுரையென் றிசைக்கு மேழ்பதி
மாசறு முத்தியை வழங்கு மென்பவே.

(இ-ள்.) காசி, மாயாபுரி, அவந்தி, காஞ்சி, கீர்த்தியைக்கொண்ட அயோத்தி, வளப்பமிகுந்த துவாரகை, சமானமற்ற குற்றமில்லாத மதுரை, என்று சொல்லுகின்ற ஏழு (புண்ணிய) நகரங்களும் குற்றமற்ற மோட்சவீட்டைத் (தம்மையடைந்தோர்க்குக்) கொடுக்கும் என்று (பெரியோர்) சொல்லுவர். எ - று.

மதுரைநகரத்தில் தடாதகைப்பிராட்டியார், சோமசுந்தரக்கடவுள், உக்கிரகுமார வழுதியார் என உமாதேவியார், சிவபெருமான், முருகக்கடவுள் ஆகிய மூவரும் அரசுசெய்தமையாலும், சிவபெருமானே சங்கப்புலவர்களுக்குத் தலைவராயிருந்தமையாலும் அங்கு அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் செய்ததாலும் "ஒப்பறு மேசிலாமதுரை" என்றார். இதனை,

"உலகம யாவையு மீன்றவ ளும்பரு ளுயர்ந்த
திலக நாயகி பரஞ்சுடர் சேயென மூன்று
தலைவ ரான்முறை செய்தநா டிஃதன்றிச் சலதி
சூலவு பாரினுண் டாகுமோ துறக்கத்து மஃதோ."—எனவும்,

"கண்ணு தற்பெரு கடவுளு கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழ்"—எனவும், வரும் திருவிளையாடற்புராணத்தா லுணர்க. (௨௧)

ஒலிபுனற் பிரயாகைகே தார மோங்குசீர்
மலிதிருச் சைலமென் றுரைக்கு மாண்புடை
நிலைபெறு தலங்களு நினைத்தற் கெய்துறு
வலைவறு முத்தியை யினித ளிக்குமால.

(இ-ள்.) ஒலிக்கின்ற நீரையுடைய பிரயாகை, கேதாரம், மேம்பட்ட சிறப்புமிகுந்த ஸ்ரீ சைலம் என்று சொல்லப்படும் மாட்சிமையுடைய நிலைபெற்ற (புண்ணிய) ஸ்தலங்களும் எண்ணுதற்கும் எட்டாத துன்பமற்ற மோட்சத்தைத் (தம்மையடைந்தோர்க்கு) இனிமையாகக் கொடுக்கும். எ - று. (௨௨)

நெடுநில வரைப்பினி னிகழ்த்து தானங்கண்
மடிவறு முத்தியை வழங்கு மென்றது
கடவுணீர்க் கங்கைசூழ் காசி மாநக
ரடைவதற் கேதுவா யமைந்த வாற்றினால்.

(இ-ள்.) பெரிய நிலவுலகத்தினிடத்தில் சொல்லுகின்ற (புண்ணிய) ஸ்தலங்கள் கெடுதலற்ற மோட்சத்தைக்கொடுக்கும் என்று சொல்லியது (எதனாலென்றால்) தெய்வீகம்பொருந்திய நீர்மயமாகிய கங்காநதி சூழ்ந்திருக்கும் பெருமை பொருந்திய காசிக்ஷேத்திரத்தைச் சேருவதற்கு, முகாந்தரமாகப்பொருந்திய தன்மையினால் (ஆகும்). எ - று.

"தவமுந் தவமுடையார்க்காம்" என்றபடி, புண்ணியஸ்தலங்களில் வசிப்பதனால காசிக்ஷேத்ரத்துக்கு அடைபுந்தன்மை சேர்கிற தென்பர் "கடவுணீர்க் கங்கை * * * அடைந்தவர்ந்திறல்" என்றார். (௨௩)

ஏதமில் தானங்கள் யாவுங் காசிபோல்
மேதகு முத்தியை விளைத்தி டாவெனச்
சீதரன் கணத்தினோர் சிவசன் மாவினுக்
கோதிய கதையினை முனிவ னோதுவான்.

(இ-ள்.) குற்றமில்லாத எல்லாஸ்தலங்களும் காசிக்ஷேத்திரத்தைப்போல மேம்பாடுடைய மோக்ஷத்தை உண்டுசெய்யமாட்டா என்று, விஷ்ணுவின் கணநாதர்கள் (ஆகிய சுசீலன் நருமசீலன் என்போர்) சிவசன்மாவென்னும் பிராமணனுக்கு (முற்காலத்தில்) சொல்லிய கதையினை, அகஸ்தியமுனிவர் (தமது பன்னியாகிய உலோபாமுத்திரைக்குச்) சொல்லுகின்றனர். எ - று.

சீதரன் = இலட்சுமியை மார்பிற்றரித்த விஷ்ணு. (௨௪)

தீர்த்த மகிமை யுரைத்த அ - ம்.

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௨௧௩.

சிவமயம்.

ஏழாவது,

# சத்தபுரியின் சிறப்புரைத்த அத்தியாயம்.

மலலல்வளஞ் சிறந்தோங்கு வடமதுரைப் பதியினிலோர் மறைவ லாள, னெலலேயினற் றவமாற்றி யினிதீன்ற சிவசன்மா வென்போன் மேனாட், டொல்லேமறைப பொருடோர்ந்து துகளறுசீரப் பலகலையின றுறைகள் போகிக், கல்வியெனும பெருங்கடலின் கரைகடந்து நிதியீட் டிக் களித்தா னன்றே.

(இ-ள்.) மிகுதியாகிய வளப்பமுடையதாய்ச் சிறப்புறறோங்கிய வடமதுரை என்னும் நகரததில வேதங்களில் வல்லவனாகிய ஓர அநதணன, முற்காலத்தில அளவில்லாத நல்லதவங்களைசசெய்து இனிமையாகப்பெற்ற (புதல்வனாகிய) சிவசனமா என்னும பெயரையுடையவன பழமையாகிய வேதபபொருளை நன்குணாந்து குற்றமறற கீாததியையுடைய பல சாஸ்திரங்களைக்கற்று, கல்வியென்கினற பெரியசமுத்திரத்தின கரையைக்கடந்து செல்வத்தைச் சம்பாதிததுச் சந்தோஷித்திருந்தான். எ - று.

'பலகலையின றுறைகள்போகி' என்பது பலவகைப்பட்ட சாஸ்திரங்களின் மார்க்கங்களிற சென்று. (க)

இயற்றரிய பலவினையம் யாவுமுயன் றருநிதிய மெனைத்து மீட்டி, யுயிர்க்குயிரா மழலைமொழிக் கிண்கிணிக்காற்சிறுவாகளை யுவப்பி னீன்று,பயிர்ப்புறுமிற் கிழத்தியொடு மளகையர்கோ னெனப்போகம் பலவுந்துய்த்து,வியப்பொடுதன் புதல்வாபெற வீட்டுநெறி யனைத்தினையும் விழைவி னீநதான.

(இ-ள்.) செய்தற்கரிதாகிய பலவகைப்பட்ட செயல்கள் எல்லாவற்றாலும் எத்தனித்து, அரிய செலவம் (என்று சொல்லப்படுமவகை) எல்லாம் சம்பாதிதது, உயிர்ககுஉயிராகிய குதலைச்சொல்லையும சதங்கைமாலையணிந்த காலையுமுடைய பிள்ளைகளைச் சந்தோஷத்துடனபெற்று,பயிாப்பினையுடைய மனைவியுடனே அளகாபுரிக்கிறைவனாகிய குபேரனைப்போல பலவகைபபடட இஷ்டபோகங்களையும் அனுபவிதது, ஆச்சரியத்துடன தனது புத்திராகள இல்வாழ்க்கைக்குரிய எல்லாவறறையும் பெறறுக்கொள்ளுமபடி (வயதுமுதிாநதிருநததால்)ஆசையுடன் கொடுத்தனன (சிவசன்மன). எ - று.

"தம்பொருளென்ப தம்மக்கள்" எனவும்,

"குழலினி தியாழினி தென்பதம் மக்கண், மழலைசசொற் கேளா தவா" எனவும், திருவள்ளுவநாயனா கூறியபடியே "உயிர்க்குயிரா-மழலைமொழிக் கிண கிணிக்காற் சிறுவாகள்" என்றா.

பயிாப்பு—மகடூஉக்குணம் நான்கிலொன்று. (உ)

த்தி லேனுல், விரைகமழு நறுந்தணணீர வேனிலவாய்வேட்டவருக களி த்தி லேனுட், கருதரிய வருமகங்கள் பலவாற்றித் தேவர்கடன் கழிதகதி லேனுல.

(இ-ள்.) அரிய வழிகளில் நிழலேயுண்டுசெய்ய இலைகளைத் தளிரததுள்ள பருத்த அடிகளையுடைய மரஙகளைவைத்து வளாததேனில்லை குளிர்ந்த வாசனை வீசுகின்ற நல்ல துளசிச்செடி ஒன்றையினுமவைத்து இனிமையாக வளாததே னில்லை. வாசனைகமழும் நல்ல குளிர்ந்தசலத்தைக்கோடைககாலததில(தாகவிடா யால தணணீர்) விருமபியவர்களுக்குக் கொடுத்தது (தாகததைத தணிததேன) இல்லை. மனதில் எண்ணுதறகரிய அருமையாகிய பலயாகஙகளைசசெய்து தேவாக டனசெயததேனில்லை. எ - று. (௫)

அழிபசியால வருந்தாம லந்தணருக் கினனமுத மளித்தி லேனசெ ல், வழிவருத்தந் தீரந்தேக வாங்கவாக்குக குடைசெருபபு வழஙகி லேன வண், டழைபசுந்தோட் டறுகுபறித் தானருந்தக கொடுத்திலன்றண கழனி பைமபொ,னிழைதவழுங கோமமைமுலைக கன்னியரை மறையவ ர்கட் கீந்தி லேனுல.

(இ-ள்.) வருத்துகினற பசியினுல் துனபமடையாமல், வேதியாகளுக்கு இனிமையாகிய (அறுசுவையோடுகூடிய) அனனமிட்டேனில்லை. அவவேதியாக ட்கு (வழிநடந்து) செல்லும் வருத்தம்நீஙகி நடக்கும்படி, குடைகளையும செருப்பு களையும் கொடுததேனில்லை. வளப்பமிருந்த தழைதத பசிய இதழ்களையுடைய அறுகம்புல்பறித்துப் பசுக்களுக்கு உண்ணக்கொடுததேனில்லை. குளிர்நத கழனி களையும்,பசும்பொன்னுலாகிய ஆபரணஙகள விளஙகும குவிநதமுலையினையுடைய கன்னிகைகளையும் வேதியருக்கு (முறைபபடியே) கொடுததேனிலலை. எ - று.

குடை செருப்பு இவற்றின பயனை,

"பகலோன நெறுங்கிரணம் பாய்பறவை யெச்சம்
மிகமேலு முதகற்றும் விண்ணின—முகிலதனுல
பெய்யுமழை யைத்தடுக்கும் பேரழகு மாமொருவா
கையிற் குடையிருந்தக் கால்."

"கலனு முறுத்தாது காலின்முட் டையாது
எல்லைமாறத தாண்டன்று டேறாது—தொலலைவரு
மாலை யிருளில வழிநடக்கக் கூசாது
காலிற் செருப்பிருந்தக் கால."—என்பனவற்றுல் லறிக. (௬)

முதலவனுருத திரசமகம் பவமான நாடோறு மொழிந்தி லேன்வெங் கதமொழிபி லெட்டுவிக் கழிபெரும்பா வக்கடலைக் கடநதி லேனுற்,புதைபி ருளுமவெள்ளியுமோர் பதின்மூனறுந் திதியுடனே பொருந்து செங்கேழ் க், கதிரவன்வா ரமுமொழிந்த நாளரசை வலங்கொணடு களித்தி லேனுல.

(இ-ள்.) பவன (எனனுந் திருநாமததை, முதலாகவுடைய முதற்பெருங் கடவுளாது உருத்திரசமக மந்திரத்தைத தினந்தோறும பாராயணஞ் செய்தேனி

கைத்தலங் கூப்பிய மைந்தர்க ளுஞ்சடு காமேட்டே
பதறித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே." — எனனுங் கட்ட ளைக்கலித்துறையா னுணாக.

"மேலைத் தவத்தாற் றவஞ்செய்தார்" — எனக் கூறிய முனிவர் கருத் தின்படியே, இம்மையிற் புண்ணியஞ்செய்யாதார் மறுமையில் தரித்திர முறுவா ராதலின், யானெனனசெய்வேனெனபார் 'நல்குரவாய் மறுமையினு மெலிகுவே னே' என்றார். (க0)

என்றினைய பலகூறி நிலையில்லா யாக்கையினி யிருக்குங் காறுந் [தஞ்
குன்றினுமவார் திரைசுருட்டுங் கடலாடைப் புவியிடத்துங் கோதி நீர்த
சென்றுகொடுந் துயரகல வாடுவலென் றுளத்தினிடச் சிந்தை செய்தான்
மன்றவருந் தவமாற்றும் வடமதுரைப பதிவாழு மறைவல லோனே.

(இ-ள்.) என் றித்தனமையாகிய பல சொற்களைச சொல்லிக்கொணடு நிலையிலலாத இந்த உடல் இனி யிருக்கு மெல்லையும், மலைகளினும கொடிய அலை கள் வீசும் கடல்சூழ்ந்த பூமியினும் (விளங்கும்) குற்றமற்ற தீரதத (யாத்திரை) சென்று, கொடிய துனபமானது நீஙகும்படி (அவற்றில) மூழ்குவேன் என்று தனது மனததில ஆலோசிததனன். நிலைபெற அருநதவஙகளைசசெய்யும் வட மதுரை எனனும் நகரத்தில் வசிக்கும வேதங்களில வல்லவனாகிய (சிவசன்மா எனனும் அந்தணன). எ - று. (கக)

தெள்ளுமுது மறைக்கிழவன் சத்தபுரி யிடத்தினியாஞ் சேறு மென்று[றி
வொள்ளியநல வோரைதனி லைங்கரன்பொற் றுமரைததா ளுவந்து போற்
முள்ளரைய செழுங்கமல முகையுடைந்து வழிதேறன முருகு நாறு
மள்ளலஞ்சேற் றகலவயல்சூ ழயோத்திமா நகரதனி லடைந்தானன்றே.

(இ ள்.) தெள்ளிய பழமையாகிய வேதஙகளை யுரிய (சிவசனமா என் னும் அந்தணன அயோததி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவநதி, துவாரகை எனனும்) சத்தபரிகளுக்கும யாம் இனிமையாகச் செல்வோம என்று, ஒளிதங்கிய நல்லசபமுகூர்த்தததில ஐநது திருக்கரஙகளையுடைய விநாயகக்கடவுளது அழகிய தாமரைபோனற திருவடிகளை விருமபித துதித்து, முட் பொருந்திய அடிகளை யுடைய செழிய தாமரை மொட்டுகள விகசிதது வழிகின்ற தேன வாசனை வீசும அழகிய மிகுந்த சேற்றினையுடைய அகனற வயல்கள் சூழ்நத அயோத்தியெனனும் பெருமைதங்கிய நகரததில் சேர்ந்தனன். எ - று.

"நவவொ டுகர வும்மைநிகழ் பல்லவும்" என்னுஞ்சூத்திரத்தினால், சேறும் என்பது எதிர்காலம. (கஉ)

சரையுநதிப புனல்படிநது தென்புலத்தோர் கடனகழித்துத் தழல
செய் வேளவி,யருமறையோ ரினிதுவப்ப வமுதுறழு மின்னடிசி லமைய
வூட்டிப்,பரிவினொடு மங்கரிற் பஞசராத் திரமுறைநது பவளஞ்சிநதி, விரி
கதிர்வெண் மணிகொழிக்கும் வீங்குபுனற் பிரயாகைதனின் மேவி னானே.

(இ-ள்.) சலாயசாதியின் நீரில் மூழ்கி (அவ்விடத்தில்) பிதுர்க்கடன் கழித்து அக்கினியால் பாகஞ்செய்யப்பட்ட அரிய வேதங்களை யுணர்ந்த பிராமணர்கள் இனிமையாகச் சந்தோஷிக்கும்படி அமுதத்தை யொத்த இனிய அன்னத்தை (அவர்களுக்குப்) பொருந்தும்படி உண்பித்து, ஆசையுடன் அவ்வயோத்திநகரத்தில் ஐந்திராத்திரிகள் வசித்துப் பின்பு (காலையில்) பட்டணத்தை நீங்கி, விரிந்த கிரணங்களையுடைய வெள்ளிய முத்துமணிகளைக் கொழிக்கும் பொருந்திய பெருமையுள்ள பிரயாகையை அடைந்தனர் (சிவசன்மா). எ-று. (கங)

உடைதிரைநீர் பிரளயத்து மார்க்கண்டன முதன்முனிவ ருறைவ தாய
வடதருவைப் புனிற்றுமதி யலைபுரட்டுங் கங்கையொடு வணைந்த வேணிக்
கடவுளைவெண் மணிகொழிக்கும் பாலாழி துறந்துசெழுங் கமலை யோடு
மடியர்துய ரகற்றுவலென் றினிதடைந்த மாதவனை யாங்குக் கண்டான்.

(இ-ள்.) மோதுகின்ற அலைகளையுடைய நீர்மயமாகிய ஊழிவெள்ளத்திலே மார்க்கண்டேயர்முதலிய (சிரஞ்சீவிகளாகிய) முனிவர்கள் வசிப்பதாகிய வடவால விருட்சத்தையும், பிறைச்சந்திரனை அலையெறிகின்ற கங்காநதியுடன் தரித்த சடையினையுடைய சிவபெருமானையும், வெள்ளிய முத்துமணிகளைக் கொழிக்கும் திருப்பாற்கடலைவிட்டுச் செழுமையாகிய இலக்குமியுடன் அடியவரது துன்பங்களை நீக்குவேன் என்றினிமையாக வந்துள்ள விஷ்ணுமூர்த்தியையும், அப் பிரயாகையில் தெரிசித்தனன் (சிவசன்மா). எ-று. (கச)

பெறலரிய தருமத்தின் பேறெல்லாம் விரிதெண்ணீர்ப் பிரயாகை யாற்று
ளுறலிலொரு துணைமணற்கு நிகர்தூங்கா கொடும்பாவ மனைத்து மான
துறுபெயர்கேட் பினுநடுங்கு மாடிறந்து மாண்டுவதிந் துயிர்விட் டோருங்
குறைவிலபர கதியடைந்து வீற்றிருப்ப ரெனமறைகள் கூறக் கேட்டான்.

(இ-ள்.) பெறுதற்கரிய தருமங்களினாலாகிய பதவிகளெல்லாம் பரவிய தெளிந்த நீரையுடைய பிரயாகைநதியிலுள்ள கருமணற்படியில் ஒரு நுண்ணிய மணலுக்குச் சமானமாகாது (எனவும்) கொடிய (பஞ்சமாபாதகமுதலிய) பாவங்களெல்லாம் அப்படிப்பட்டதின் (பிரயாகை என்று) பொருந்திய பெயரைக்கேட்டாலும் (தன்னைச்செய்தோரைவிட்டு) அஞ்சியோடும் (எனவும்) அந்நதியில் மூழ்கினோரும், அவ்விடத்தில் வாசஞ்செய்து உயிர்விட்டோர்களும் குறைவில்லாத மேலான மோட்சத்தைப்பெற்று வாழ்ந்திருப்பார்கள் எனவும், வேதங்கள் சொல்லக்கேட்டுணர்ந்தனன் (சிவசன்மா). எ-று. (கரு)

செங்கதிர்ச்செல் வனுமாதி கேசவனுங் கண்களாய்த் தெய்வ நன்னீர்ப்
பொங்குதிரை மணிகொழிக்கும் வரணையசி கைகளாய்ப் புனலிற் றோய்ந்
தோர், வெங்கொடும்பா தகந்தொலைத்து விடுதருந் திருவேணி வேணி யா
ய, கங்கைவிரி புனலாடைக் காசியணங் கினைநோக்கிக் களித்தா னன்றே.

(இ-ள்.) செவ்விய கிரணங்களையுடைய சூரியனும் ஆதிகேசவனாகிய விஷ்ணுவும் கண்களாகவும், தெய்வீகம்பொருந்திய நல்ல நீர்மயமாகிய மிகுந்த அலைகள் முத்துக்களைக்கொழிக்கின்ற வரணை அசி (என்னும் ஆறுகள்) கைகளாகவும்,

தனது நீரில் மூழ்கினோரது வெவ்விய கொடும்பாவங்களை ஒழித்து மோட்சத்தைக் கொடுக்கும் (சிவபெருமானது) திருச்சடையிலுள்ளதாகிய ஆகாயகங்கையினது பரவியநீரை ஆடையாகவுமுடைய காசிதேவியைத்தரிசித்து (சிவசன்மன்) மகிழ்கூர்ந்தனன். எ - று. (கரு)

மதிதவழு முயர்பொலங்கோட் டிமையநெடு வரைமுதல வரைகள் யாவுந, ததைமலர்ப்பைந் தருமுதல தருக்களுமெண் ணறுபுவனந் தனிலுள் ளோரும்,விதிமுறையி னுங்கடைந்து புகழ்மாகத் திங்கடனில் விளங்கும் வெய்யோன், கதிரமணிததிண் டேர்க்கடவு புலரியின்வாய் புனலாடக் கண்ணிற் கண்டான்.

(இ-ள்.) சந்திரன் தவழும்படிச் சஞ்சரிக்கும் உயர்ந்த பொன்னுலாகிய உச்சிகளையுடைய பெரிய இமயபர்வதமுதலிய எல்லா பர்வதங்களும், மலர்கள் நெருங்கிய பசுமையாகிய கற்பகத்தரு முதலிய விருட்சங்களும், கணக்கில்லாத உலகங்களில் வசிக்கின்றவர்களும், வேதவிதியில் சொல்லப்பட்டிருக்கும் கிரமப்படி அவ்விடத்தில் வந்துசேர்ந்து, யாவரும் புகழ்கின்ற மாசிமாதத்தில் பிரகாசிக்கின்ற சூரியன தனது கிரணங்களையுடைய அழகிய பலம்பொருந்திய தேரினைச் செலுத்தும் உதயகாலத்தில் மூழ்கும்படி தன கண்களார பார்த்தனன் (சிவசன்மா). எ - று.

புலரி=விடியற்காலம். இது சிறுபொழு தாறனுள் ஒன்று. அவையாவன-மாலை, யாமம், வைகறை, விடியல, நண்பகல், எற்பாடு எனபனவாம (கஎ)

கண்டுகளி மகிழ்தூங்கி யாங்கதனின் வளமனைத்துங் கருத்தி னோர்ந்து,மண்டுபுனற் பிரயாகைதனி லோர்திங்க ளுறைந்ததறபின் வளங்கொள் கங்கைத், தண்டுறைசூழ் காசிநகர் புகுமளவின மலர்தூவித் தாழ்ந்து தாழாத், திண்டிறல்வெங கரிமுகத்தோ னிலங்குபொலந் தாமரைத்தாள் சென்னி சேர்த்தி.

(இ-ள்.) சிவசன்மா (இவையெல்லாம்) பார்த்துப் பேரானந்தம் அதிகரித்து, அப்பிரயாகையின வளப்பம் முழுவதும் தன் மனதி லுணர்ந்து, மிகுந்த நீர்ப்பெருக்கையுடைய பிரயாகையில் ஒருமாதம் வசித்திருந்து அதனபிறகு, பல வகை வளப்பங்களைக் கொண்ட குளிர்ச்சிதங்கிய கங்காநதித்துறையால் சூழப்பட்ட காசிநகரத்தில் பிரவேசிக்கும்போது வலிமையும் பராக்கிரமமு முடைய வெவ்விய யானைமுகங்கொண்ட (மூத்தபிள்ளையாரது) விளங்குகின்ற அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளை மலர்களா லருச்சித்து வணங்கிச் சிரமேற்கொண்டு. எ - று.

இதுமுதல் இரண்டு பாட்டல்கள் குளம். (கஅ)

கடவுண்மணி கன்னிகையின் புனலபடிந்து திரைபுரட்டுங் கங்கை யாடியடைவிலரு முனிவர்கடன் றெனபுலத்தோர் கடனாற்றி யோரைந் தாய விடயமறுத் திடுமறையோ னைமபெருந்தீர்த் தமுமூழ்கிவிரிந்தகொன்றைத் தொடைபுனையு மகிலேசன் றாள்வணங்கியநகரைத்துதித்தலசெய்தான்.

ஆதியுக மொழிந்துவரு மூன்றுகத்து மாகாள மவந்தி மற்றை
யோதுவளஞ் சிறந்தோங்கு முச்சினி யெனுநகரி லுடன்று கூற்றைக்
காதியிடு மாடகே சுரர்தார கேசுரர்மா காள ரென்னச்
சோதிவட தருவினிழ லினிதுறையும பரமனடி தொழுது போனான்.

(இ-ள்.) முதல்யுகமாகிய (கிரேதாயுகம்) நீங்கிப் பின்வருகின்ற (திரேதா யுகம், துவாபர யுகம், கலி யுகம் என்று பெயர்பெறும்) மூன்று யுகங்களிலும், (முறையே) மாகாளம், அவந்தி, சொல்லுகின்ற வளப்பமிகுந்தோங்கிய உச்சினி என்னும் நகரங்களில் யமனைக்கோபித்துக்கொன்றருளிய மாகாளர், தாரகேசுரர், ஆடகேசுரர் என்று சோதிசொரூபமாகிய வடவாலவிருட்சத்தினது நீழலில் இனிமையாக எழுந்தருளியுள்ள மேலாகிய சிவபெருமானது திருவடிகளை வணங்கிச சென்றனன. எ - று.

"பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும் - வேறுநிர னிறீஇ முறையினு மெதிரினு - நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே" — என்ற படி எதிர்நிரனிறைப்பொருள்கோளாதலின், திரேதாயுகத்தில் மாகாளத்தில் மாகாளரும், துவாபரயுகத்தில் அவந்தியில தாரகேசுரரும், கலியுகத்தில உச்சினியில் ஆடகேசுரரும், எனப்போந்து கூற்றையடக்கினர் எனக்கொள்க. (உஉ)

காதலிற்சென் றிறந்தோர்க்குச் சாரூபஞ் சிவனளிக்குங் காஞ்சிக் கேகி
யாதரத்தி னேழ்பகலாண் டிருந்திறந்தோ ரென்பனைத்து மலங்கற் றிண்
டோட்,சீதரன்றன் வளையாழி யுருவாகுந் துவாரகையிற் சென்று பின்னா
மாதவத்தோ ரெஞ்ஞான்று மூவந்துறைமா யாபுரியின் வந்து சேர்ந்தான்.

(இ ள்.) அன்போடுசென்று (வசித்திருந்து) உயிர்விட்டோர்களுக்குச் சாரூபபதவியைச் சிவபெருமான் கடாட்சித்தருளும் காஞ்சிநகரத்துக்குச்சென்று ஆசையுடன் ஏழுநாள்வரையில் அக்காஞ்சிநகரத்தில் வசித்திருந்து (அதனைவிட்டுப் பின்பு) மலர்மாலையையணிந்த வலிதங்கிய திருப்புயங்களையுடைய விஷ்ணு மூர்த்தியினது வளைந்த சக்கரவடிவை ஆங்கு இறந்தோரது என்புகளெல்லாம் பெறுகின்ற துவாரகாபுரியிற்போய்,பிறகு பெருமைதங்கிய தவத்தினையுடையோர் எக்காலத்திலும் விரும்பி வசிக்கின்ற மாயாபுரியில் வந்து சேர்ந்தனன் (சிவசன்மா). எ - று.

சாரூபம் = பெருமானது வடிவம்.

சீதரன் சீ இலக்குமியை தான் மார்பில் தரித்தவன்; விஷ்ணு. (உ௩)

பொன்னகரி னுயர்மாயாத் துவாரமென்றும பொருவிலரித் துவாரமென்றுந், துன்னுதடங் கரைக்கங்கை சுழித்திடைபோ தலிற்கங்காத் துவாரமென்று, மின்னணரும் பெயருடைத்தாய் வைகுந்தத் தினிதேறு மேணியாக, மன்னியமா யாபுரியி லினிதிருந்தா னருந்தவத்து மறைவல் [லோனே.

(இ-ள்.) பொன்மயமாகிய தேவலோகத்தைப் பார்க்கிலும் உயர்ந்த மாயாத்துவாரம் என்றும், சமானமில்லாத அரித்துவாரம் என்றும், நெருங்கிய விசாலமாகிய கரையையுடைய கங்காநதி சுழித்துக்கொண்டு நடப்பதலால் கங்காத்துவாரம் என்றும் இவ்விதமாக மூன்று திருநாமங்களையுடையதாகி, வைகுந்தபதிக்கு இனிமையாக ஏறுகின்ற ஏணியாக நிலைபெற்ற மாயாபுரி (என்னுநகரத்தில்) அரியதவங்களைச்செய்த வேதங்களில் வல்லவனாகிய (சிவசன்மாவென்னும்) வேதியன் இனிமையாய் வசித்திருந்தான். எ - று. (உ௪)

தோமறுமே காதசிநோன் பினிதாற்றிக் கங்குலிடைத் துயிலு றாமற், பூ
மகள்கேள் வனைவணங்கி மறுநாட்பா ரணமினிது புரியு முனே, நோமுறு
வெப் பொடுகுளிர்வந் தெய்திட லு மிறப்பதனை யெண்ணி மாயோன், காம
ருபொற் செழுங்கமல மலா பொருவு மிருசரணங் கருத்துட் கொண்டான்.

(இ-ள்.) (சிவசன்மா) குற்றமற்ற ஏகாதசிவிரதம் இனிமையாகவிருந்து (அன்றைய) இராத்திரிமுழுவதும் நித்திரை செய்யாமல், இலக்குமி நாயகனாகிய விஷ்ணுமூர்த்தியைப் பணிந்து,மறுநாளாகிய துவாதசியில் (விரதமுடித்து) உணவு கொள்வதற்கு முன்னே மயக்கமுற்ற சுரத்தோடு குளிர்வியாதிகள்வந்து சேரவும், தான் மரணமடைதலைக் கருதி விஷ்ணுவினது அழகிய பொன்போன்ற செழுமை தங்கிய தாமரைமலர்க்குச் சமானமாகிய இரண்டுதிருவடிகளையும் மனதில் தியானித்துக்கொண்டிருந்தான். எ - று. (உ௫)

வாளமரின் வெருவாது மருமமபோழ்ந் தயிலுருவ மடிந்து ளோருந
தாளிணைகள் சிவபூரத் தீர்த்தயாத் திரைபோகிச் சாகின் றோருங்
காளமுகி லெனக்கரிய காலபடர் தமைவிழியிற் காணா ரென்று [ன்.
நாளுமறை யுரைப்பதெண்ணி வெருவொழிந்தா னருமறைக ணவிலு நாவா

(இ-ள்.) வாட்போரில் பயப்படாமல் மார்பிளந்தும் வேலாயுதமுருவவும் (யுத்தகளத்தில) இறந்தோர்களும, இரண்டு பாதங்களும மிகச் சிவக்கும்படி தீர்த்தயாத்திரை சென்று (இடையே) இறக்கினறவர்களும், (முறையே வீரசுவர்க்கமும் மோட்சமும்பெறுவா. ஆதலால்)காளமேகம்போலக் கருநிறம்பொருந்திய யமதூதாகளைத் தமதுகண்களாற் பார்க்கமாட்டாாகள் என்று எக்காலத்திலும் வேதங்கள்சொல்லுவதைத் தன்மனதில நினைத்து அச்சத்தினின்று நீங்கினன அரிய வேதங்களை ஓதுகின்ற நாவினையுடையோனாகிய சிவசன்மா. எ - று. (உ௬)

வெய்யகொடு நோய்கனற்ற வேழுநாள் கழிந்ததற்பின் மேனி வாடிக்
கைடறவாய்ச் சிவசனம னிறந்திடலுந் தண்டுளவோன் கணங்க ளாய
பொய்யிறவச் சுசீலனுமெய்ப் புண்ணியசீ லனுந்திதலை பூத்து வீங்கு [ரால
தொய்யின்முலையரம்பையர்சூழ் விமானமொடுமிருநிலத்திற் றோன்றினு

(இ-ள்.) வெப்பமிகுந்த கொடியசுரநோய் காய்தலால் ஏழுநாள் நீங்கிய பிறகு உட லிளைத்து எதையுஞ்செய்யச் சக்தியற்றவனாய்ச் சிவ்சன்மன் மரண

நறையி தழ்க்கமலே கேள்வனடி நணணு மடியா
ரறிவ தற்கரிய தாயபொருள் வேறு முளதோ
மறைய வாக்கிறைவ வெமபெயர் மதிக்கி லவையே
குறைவி னற்கதைகள் கேட்டன குறித்து மொழிவாம்.

(இ-ள்.) வேதியர்களுக்குத் தலைவனே! தேன்பொருந்திய இதழ்களை யுடைய தாமரையில் வசிக்கும் இலக்குமிதேவியின நாயகனாகிய விஷ்ணுமூர்த்தி யினுடைய திருவடிகளை விரும்பும் அடியார்கள் தெரிந்துகொள்வதற்கு அருமை யானதாகிய பொருள் வேறிருக்கின்றதோ? (இல்லை. ஆதலால்) எம்முடையபெயர் கள் கணிக்குமிடத்தில் (நீர் சொல்லிய) அவையேயாகும். குறைவில்லாத நல்ல கதைகள் கேட்டவற்றைக் குறித்துச் சொல்லுவோம். எ - று. (ச)

என்று கூறியுட னேகுதலு மோரு லகுகண்
டொன்று மிவ்வுலக மியாதுவிக டங்கொ ளுருவுங்
குன்று செல்வமுமு ளாரெவர்கள் கூறு கெனலு
நன்று கேளென மகிழ்ந்துகண நாதர் நவில்வார்.

(இ-ள்) என்று (கணநாதர்கள்) சொல்லி (விமானத்திற் சிவசன்மன்) உடன்செல்லவும் (சிவசன்மன்) ஓருலகத்தைப்பார்த்து, (கணநாதர்களே!) பொரு ந்திய இவவுலகம் யாது பெயரினையுடையது? விகடமாகிய வடிவத்தையும் குறை ந்தசெல்வத்தையும் பொருந்தி இங்கு வசிப்பவர்கள் யாவர்? சொல்லவேண்டும் என்று கேட்கவும், கணநாதர்கள் நல்லது கேட்பாயாக என்று சொல்லத்தொடங் கினார்கள். எ - று.

விகடம்=வேறுபாடு. குன்று செல்வம் - வினைத்தொகை. (ரு)

இலகு வெண்பிறை யெயிற்றெரிகள் சிந்து பகுவா
யலகை சேருலக மீதுசுசி யின்றி யரனை
மலர்க டூவினரு மின்றென வளித்து மனநொந்
துலைவி னேடுதுய ருற்றவரு மிங்கு றைவரால்.

(இ-ள்.) பிரகாசிக்கும் வெண்மையாகிய பிறைச்சந்திரன்போன்ற வக்கிர தந்தங்களையும், நெருப்புப்பொறிகள் சிந்தும் பிளவுபட்ட வாயையுமுடைய பசா சுகள்சேர்ந்து வசிக்கும் உலகமாகிய அலகைலோகம் இது. ஆசாரமில்லாது சிவ பெருமானை மலர்களா லருச்சித்தவர்களும், (யாசித்தோர்க்கு) இல்லை யென்று (பிறகு) கொடுத்து (அதனால்) மனம்வருந்தி நடுக்கத்துடன் துன்புற்றவர்களும் இவவுலகத்தில் வசிப்பார்கள். எ - று. (சு)

தாத ருந்திவரி வண்டுமுர றண்டு ளவினேன்
சீத ரனறனது தாள்பரவு தெய்வ மறையோ
யீது குய்யகவு லோகமிவ ணுளு முறைவோர்
கோதில் வெற்றிபெறு குய்யக ரெனப்பு கலுவார்..

(இ-ள்.) கீற்றினையுடைய வண்டுகள் மகரந்தப்பொடிகளை யுண்டு ஒலிக் கின்ற குளிர்ச்சிதங்கிய துளவமாலையையணிந்த விஷ்ணுமூர்த்தியினது திருவடி

கனைத்துதிக்கும் தெய்வீகம்பொருந்திய (சிவசன்மன் என்னும்) வேதியனே! இது குய்யகலோகம் (எனவும்) இவவிடத்தில எக்காலத்திலும் வசிப்பவர்கள் குற்றமற்ற ஜெயத்தைப்பெற்ற குய்யகர் எனவுஞ் சொல்லுவர் (முன்னோர்.) எ - று. (௬)

தொகுத்த நறபொரு ளறத்தினுயர் தூய வர்பெறப்
பகுத்த ருந்திபிட லின்றியுயா பாழி வயினிற்
புகுத்தி மன்னுயிர்க ளுக்கிடர் புரிகதி லாகளாய்
மிகுத்த வன்பினுறை வாருறைவ ரென்ன வியவா.

(இ-ள்.) தருமமார்க்கத்தில் சம்பாதித்த நலலபொருளை, உயர்ந்த பரிசுத்தமானவர்கள் அடையும்படிப் பாகித்துக்கொடுத்துப் (பிறகு தாம்) உண்ணுதவில்லாமல், உயரமாகிய பெரியவயிற்றில புகச்செய்து, நிலைபெற்ற பிராணிகளுக்குத் துன்பஞ்செய்தல் இல்லாதவர்களாகி, (யாவரிடத்தும்) அதிகரித்த அன்பையுடையவர்களாயிருப்போர் (இவவுலகத்தில) வாசஞ்செய்வார்கள் என்று (கணநாதர்கள்) சொல்லச் (சிவசன்மன) ஆச்சரியமுற்று. எ - று.

இதுமுதல இரண்டுபாடல்கள் குளகம்.

"தீவினைவிட்டீட்டல் பொருள்" என்றபடி "அறத்தின் தொகுத்த நற்பொருள்" என்று கூட்டிக்கொள்க. (௭)

ஆங்கு நின்றகனு மங்கெறியி லேகுதலுங்கண்
டீங்கு மேயவுல கெவ்வுலக மென்ன வினவத்
தேங்க னிந்தொழுகு தெள்ளிளி யுடைத்தி வவியா
ழோங்கு செல்வமுறு கந்தருவர் வாழு லகமே.

(இ ள்.) அக்குய்யகலோகத்திலிருந்து செல்லும் அவவழியிடையேவேறோருலகத்தைப்பார்த்து, இவவிடத்தில் பொருந்திய உலகம் என்ன உலகம் என்று (சிவசன்மன்) கேட்க (கணநாதர்கள் சொல்லுகின்றனர்) இனிமை மிகுந் தொழுகும் தெள்ளிய இசையினையுடைய வலிக்கட்டுபொருந்திய வீணை (வாசிப்பதில்) மிகுந்த செல்வமுற்ற கந்தருவர்வாழ்கின்ற (காந்தருவ) லோகம். எ - று.

இளி-ஏழிசையிலொன்று. அவையாவன-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பனவாம். இவற்றுள் மிடற்றால் குரல், நாவினால் துத்தம், அண்ணத்தால் கைக்கிளை, சிரத்தால் உழை, நெற்றியால் இளி, நெஞ்சால் விளரி, மூக்கால் தாரம். இங்ஙனம் தனித்தனிப்பிறக்கும் இவையே ஏழ்சுரமெனவும் வீணையில் ஏழ் நரம்பெனவும்படும்.

"தெள்விளியுடைத்திவவியாழ்" எனவும் பாட்டுமுண்டு. விளி=ஓசை. ()

அரிய நல்விரத மாற்றுநர்க ளன்பி னுருக
விருவி சும்புறையும் விண்ணவனா யாழி னவில்வோர்
புரிந ரம்பிசை மகிழ்ந்தரசா கல்கு பொருள்கொண்
டுரிய தானமு ளளித்தவர்க ளிங்கு றைவரால்.

(இ-ள்.) அருமையாகிய நல்ல விரதங்களை ஆசரிப்போர்களும், பெரிய வானுலகத்தில் வசிக்கும் தேவர்களை அன்போடு (மனம்) உருகும்படி வீணையினால் துதித்தவர்களும், புரிந்த நரம்புக்கருவியின் ஓசையை ஆனந்தித்து மன்னவர்கள் சன்மானித்தளித்த திரவியத்தைக் கொண்டு (செய்தற்கு) உரித்தாகிய தருமங்களை முதலிற் செய்தவர்களும், (ஆகிய இவர்களெல்லாம்) இந்த உலகத்தில் வாழ்ந்திருப்பார்கள். எ - று.

நரம்பு- ஆகுபெயராய் வீணையையுணர்த்தியது. இதுவாச்சியவகை நான்கிலொன்று. அவையாவன தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி என்பன. அவற்றுள் தோற்கருவி பேரிகை முதலியன. துளைக்கருவி சின்னம் தாரை முதலியன. நரம்புக்கருவி யாழ்முதலியன. கஞ்சக்கருவி வெண்கலத்தாற் செய்யப்பட்ட தாளம் முதலியன.— மிடற்றுக் கருவி என்பதையும் உடன் கொண்டு ஐந்தெனவுஞ் சிலர் கூறுவர். (க0)

ஆதி நம்பனுரு நாதவுரு வாகு மெனமுன்
ஓது கின்றமறை யாவையு முணர்த்தி டுதலாற்
கீத மீசனமுன் னாளுநவில வேண்மை யுடையோர்
தீதி லிவ்வுலகு சேருவ ரெனவு ரைசெய்தார்.

(இ-ள்.) முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானது திருவடிவம் நாதவடிவமாகும் என்று முதலில் சொல்லுகின்ற வேதங்கள் எல்லாம் அறிவித்திடலால், சிவபெருமான (சன்னிதானத்தின்) திருமுன்னர் எக்காலத்திலும் (அப்பெருமானது ஓசைவடிவாகிய) சங்கீதங்களைப் பாடுகின்ற அன்புடைமை பெற்றவர்கள் குற்றமில்லாத இவ்வுலகத்தை (தமது இருப்பிடமாகச்) சேருவார்கள் என்று (கணநாதர்கள்) சொல்லினர். எ - று. (கக)

ஆண்டு நின்றுசெலு மந்நெறியி லோரு லகமுன்
காண்ட லோடுமிஃ தெவ்வுலக மென்று கழற
மாண்ட நற்றவ மியற்றரு மறைக்கி ழவகேள்
வேண்டு போகநுகர் விஞ்சையர்கள் மேவு லகமே.

(இ-ள்.) அக்கந்தருவலோகத்திலிருந்து போகின்ற அவ்வழியில், ஒருலகத்தைத் (தனக்கு) முன்னே பார்த்தலும், இஃது என்ன உலகம் என்று (சிவசன்மன்) கேட்க, மாட்சிமைப்பட்ட நல்ல தவங்களைச்செய்த அரிய வேதத்திற்குரிய வேதியனே! கேட்பாயாக. விரும்பிய இஷ்டபோகங்களை (விரும்பியவகையே) அனுபவிக்கும் விஞ்சையர்கள் வசிக்கின்ற (வித்தியாதர) உலகம் என்று கணநாதர்கள் மேலுஞ் சொல்லுகின்றனர்). எ - று. (கஉ)

பயனவி ழைந்துசிவ பூசைபுரி வோரப யிலுவோர்க்
கயிலு மின்னடிசி லாடைபொருள் யாவு முதவி
மபலசெய் கின்றபொரு ளச்சுதலி லாது மகிழ்கூர்ந்
தியல்விசைப்பனுவ லலகுமவ ரிங்கு றைவரால.

(இ-ள்) (விரும்பிய) பலன்களை இச்சித்துக் (காமியார்த்தமாகச்) சிவபூசைசெய்வோர்களும்(அவ்வாறு) செய்வோர்களுக்கு உண்ணத்தக்க இனியஉணவு

வஸ்திரம் (முதலிய) பொருள்களையெல்லாம் உதவிசெய்து, மயக்கத்தை உண்டு செய்யும் செல்வத்தை விரும்பாமல் ஆசைமிகுந்து, இயல் இசை (நாடகமாகிய கடவுட்புகழ்கூறும்) நூல்களைத் தானமாகக்கொடுப்பவர்களும் இந்த (வித்தியாதர) உலகத்தில் வாசஞ்செய்வார்கள். எ - று.

தன்னை உடையோரை மதிமயங்கச்செய்து பணடையபாட்டையு மறக்கச் செய்யும் வல்லமையுடையது பொருள் ஆதலால் 'மயல் செய்கின்ற பொருள்' என்றார். இதனை.—"காதுளார் செவிட ராவா கண்ணுளார் குருட ராவா" எனவும், "பெருத்திடு செல்வமாம் பிணிவந் தெய்திடி, னுருத்தெரி யாமலே யொளிம ழுங்கிடும்" எனவும, வரும் முதியோர் வாக்குக்களா லுணர்க.

"இயலிசைப்பனுவல்" என்றதால் அவற்றிற்கினமாகிய நாடகம்என வருவிக்கப்பட்டது. இயல, இசை, நாடகம் எனபவை தமிழின மூன்று பிரிவுகள்.

"இயலிசைப்பனுவனல்குமவர்" அடையும் பலனை,

உபதேசகாண்டம்.

"எழுதி யன்பருக் கீந்தவர் திருமுறை யெழுதித்
தொழுது தம்மனைத் தொகுப்பவர் பெருநலந் துய்த்தீண்
டொழுகு காலம்வீற் றுவவொரு கற்பமோ ரொழுத்திற்
கழிவி லாப்பெருங் கயிலையுற் றருங்கதி யடைவார்." என்பதனு லுணர்க.

என்றி யம்புகண நாதருட னேகு நெறியின்
மன்ற லோதியர மங்கையர் நெருங்கி யிருபால்
நின்று சாமரை யிரட்டவொளிர் நீல வரைபோல்
வென்றி சேர்தருமன் வந்துளம் வியந்து புகலவான்.

(இ-ள்.) என்று(இந்தவகையாகச்)சொல்லிய கணநாதர்களுடன் போகும் வழியில், (இயற்கை) மணங்கமழும் கூந்தலையுடைய தெய்வப்பெண்கள் சமீபித்து இருபுறத்திலுமிருந்து சாமரைவீசும்படிப் பிரகாசிக்கின்ற நீலமலைபோல, வெற்றி மிகுந்த இயமதருமராஜன்வந்து (சிவசன்மாவைப்பார்த்து) மனங்களித்துப் (பின் வருமாறு) சொல்லுகின்றான். எ - று.

மானுடப்பெண்களில் முதற்சாதியாகிய பதுமினிப்பெண்கட்கும், தெய்வ மாதாகட்கும் சரீரத்திலும் கூந்தலிலும் இயற்கைமண முடையதாதலின், ஈண்டு தெய்வமாதரை "மன்ற லோதியர மங்கையர்' என்றார்.

இயமன், பாரபட்சமில்லாது குற்றத்துக்கேற்ற தண்டஞ்செய்வோன் ஆதலால், தருமவழி தவறாதவன் என்று பொருள்படத் தருமன் எனவும், நடுவன் எனவும் பெயர்பெறுவான. (கசு)

அரிய நான்மறை முதற்பல கலைக்கு மறிவா
லொருவ னுயினை யுவப்பினொடு கைத்த புரியு
மருவி வல்வினை துடைத்தனை மகிழ்ச்சி யதனுற்
பொருவி லின்னையெதிர் காணிய புகுந்த னனியான்.

(இ-ள்.) (சிவசன்மாவே! கேள்) நீ அருமையாகிய நான்குவேதங்கள் முதலான பலவகைப்பட்ட சாஸ்திரங்களுக்கும் அறிவினால் ஒருவனாய் (புண்ணிய நகரங்களாகிய) சத்தபுரிகளிலும் ஆசையுடன்சென்று (உனது) தீவினைகளை ஒழித்தாய். (ஆனதால்) சமானமில்லாத உன்னை யான் ஆனந்தத்தோடு எதிர்கொண்டு காணும்படி வந்தேன்.—எ - று.

காணிய என்பது செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (கரு)

என்ன நன்முகம னன்பொடு மியம்பி மறைதோ
மன்ன ருந்தவனை வாழ்த்திவிடை கொண்டு மகிழ்வாற்
றுன்னு காலபடர் சூழ்வர விளங்கு தருமன்
தன்னி ரும்பதியில வந்தினிது சார்ந்த னனரோ.

(இ-ள்.) என்று (இயமதருமன்) நல்ல உபசாரவார்த்தைகளை ஆசையுடன் சொல்லி, வேதங்களை நன்குணர்ந்த நிலைபெற்ற அரிய தவங்களைச் செய்த சிவசன்மாவை ஆசீர்வதித்து எதிர்மொழிபெற்று, சந்தோஷத்துடன் நெருங்கிய காலபடர்கள் (தன்னைச்) சூழ்ந்து வரும்படி விளங்குகின்ற இயமதருமன் தனது பெரிய நகரத்தில் வந்து இனிமையாகச் சேர்ந்திருந்தனன். எ - று. (கசு)

தரும னேகலும் வியந்துசிவ சன்மன் மொழிவா
னுருவும் வாய்மையு முளத்தினை யுருக்க விழைவான்
மருவி யேகுமிவ னேமறலி மற்றி வனையோ
வெருவும் வெய்யவுரு வத்தின னெனப்பு கல்வதே.

(இ-ள்.) இயமன் (இவ்வாறு சொல்லிச்) செல்லவும், சிவசன்மா சந்தோஷித்துச் சொல்லுகின்றான். (அழகிய) வடிவமும் நீதியாகிய சொற்களும் (கண்டு கேட்டோரது) மனதை உருக்கும்படி ஆசையோடு அளவளாவிச்செல்லும் இவனன்றோ இயமன்? இவனைத்தானோ (கண்டோர்) பயப்படும் கொடிய (கோர) வடிவமுடையவன் என்று (உலகத்தார்) சொல்வது? எ - று. (கள)

வடிவ மீதலது மற்றுமுள தோவி னையன்மாட்
டடைவர் யாரிவன காக்கணடை யாத கல்வர்யார்
புடைகொள் சையமினி யீதுகொல் புகனறி டுகவென்
றுடனு றைந்திடுக ணங்களொடு னாக்க மொழிவார்.

(இ-ள்.) (இந்த இயமனுக்கு) வடிவம் இதுவேயல்லாமல் வேறே உண்டோ? இவனிடத்தில் (அவதிப்படும்படி) வருபவர்கள் யார்? வராமல்போகிறவர்கள்யார்? இடங்கொண்டு விளங்கும் சையமினி என்பது இதனைத்தானோ? (இவற்றையெல்லாம்) சொல்லவேண்டும் என்று தன்னுட னிருக்கும் கணநாதர்களுடன் (சிவசன்மா) சொல்ல (அவர்கள்) சொல்லுகின்றனர். எ - று.

சையமினி என்பது இயமனது நகரம். (கஅ)

தரும நீதிபொறை யன்பொடு தயாவி வைகளோ
ருருவு கொண்டனையன் மற்றிவனே யொக்கு மவர்யா

ருரும றைக்கிழவ நின்னிக ரருந்த வர்முனம்
பொருவி னலவடிவின் வந்துமுக மன்பு கலவனால்.

(இ-ள்.) அரிய வேதங்களுக்குரிய சிவசன்மாவே! (இயமன்) தருமமும் நியாயமும் சாந்தமும் அன்பும் தயவும் (ஆகிய) இவையே ஓர்வடிவங்கொண்டு வந்தாற்போல்பவன். இவனுக்குச் சமானமானவர்கள் யாரிருக்கின்றனர்? (ஒருவருமில்லை) உம்மையொத்த அருந்தவஞ்செய்தோர்க்குமுன் சமானமில்லாத நல்ல உருவத்துடன் வந்து உபசாரவார்த்தைகளைச் சொல்லுவான். எ - று.

இதுமுதல முப்பத்தெட்டு செய்யுள்களால் இயமன் நல்லவர்கட்குக் கொடுக்கும் புண்ணியரூபதரிசனமும், பாவிகட்குக் காட்டும் கோரரூபக் காட்சியும், தன்னிடத்துற்ற பாவிகட்குச் செய்யும் இயமபுரத்தெண்டனையும், இயமனது நகரமடையாதவ ரிவரென்பதையும் சொல்லுகின்றார். மேல் சிவசன்மா வினாக்களுக்குக் கணநாதர் விடைகூறியபடி. (கக)

அலகி லாவுயி ரடங்கலும் விழுங்கு பகுவா
யிலகு வாளெயி றிலங்கவெரி சிந்து முசல
மலைதி ரண்டன புயங்களில் வயங்கி யொளிர
வுலரு குஞ்சிவட வைக்கனலை யொத்தெ ரியவே.

(இ-ள்.) அளவில்லாத எல்லாப்பிராணிகளையும் (ஒன்றாக) விழுங்கும் பிளவுபட்டவாயில் பிரகாசிக்கும் ஒளிதங்கியபற்கள் விளங்கவும், அக்கினிப்பொறியைக்கக்கும் இருப்புலக்கையானது மலைதிரண்டு வந்தாலொத்த தோள்களில் பிரகாசித்துத் தோன்றவும், சிலம்புகின்ற தலைமயிர் வடவாமுகாக்கினியையொத்து எரியவும். எ - று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். இம்மூன்று செய்யுள்களால் பாவிகள்முன்வரும் கோரரூபத்தை வருணித்துக்கூறுகின்றனர்.

உலருகுஞ்சி=செய்ப்பசை யற்றிருக்குந் தலைமயிர். (உ0)

ஆழி வெண்டிரை யுயிர்த்தகொலை யால முடனே
யூழி வெங்கனலொ ருங்குசுழல் கண்க ளுமிழப்
பாழி வாயிதழ் துடிப்பவெடி பட்டு நெடுவா
னேழு முட்குமுரு முக்குர லிடித்த திரவே.

(இ-ள்.) வெண்மைபொருந்திய அலைகளையுடைய திருப்பாற்கடல் அளித்த கொலைத்தொழிலையுடைய ஆலாகலவிஷத்துடன், வெவ்வியபிரளயகாலாக்கினியும் ஒன்றாகக்கூட்டிச்சுழல்கின்ற கண்கள் சிந்தவும், பெரியவாயிலுள்ள உதடுகள் துடிக்கவும், நெடிய சத்தலோகங்களும் வெடிபட்டு அஞ்சும் இடிபோன்ற குரல் கர்ச்சித்து அதிரவும். எ - று.

ஆலாகலம் என்பது ஆலம் எனவும் ஆலகாலம் எனவும் வரும். (உக)

வெய்ய பாதகர் வெருக்கொளு முருக்கொ டுகிணத்
தொய்யில் பூசுகதை சுற்றியெதிர் தோன்றி மறலி

கையில் வாண்மழு வசைத்துலவு கால படரைச்
செய்ய கட்கடையி ளேக்கியிவை-செபபி டுவனல்.

(இ-ள்) கொடியபாவங்களைச் செய்தவர்கள் பயப்படும் (இப்படிப்பட்ட) வடிவத்தைக்கொண்டும், கொழுப்பினால்தோய்யிலெழுதிய கதாயுததைதைச்சுழற்றிக் கொண்டும், கையினிடத்தில் ஒளிதங்கிய மழுவாயுதத்தைப் பிடித்தும் இயமன் (அப்பாவிகள்) முன்னே காணப்பட்டு, திரிந்துகொண்டிருக்கும் காலதூதரைச் சிவந்த கடைக்கண்ணாற்பார்த்து, (பின்வரும்) இவவிதமாகச் சொல்லுவான். (௨௨)

துன்மு காகதை சுழற்றிநெறி யற்ற விவர்தஞ்
சென்னி மூளைக டெறித்திட வடித்தி டுதிமற்
றன்ன பாதக ரடித்துணை பிடித்து மறுக
மன்னு பாறையி லடித்துடல மாய்த்தி டுதியால.

(இ-ள்) துன்முகா! நீதிவழியைத்தவறிய இதோவிருக்கும் பாவிகளது தலையிலுள்ளமூளைகள் சிதறிப்போம்படிக் கதாயுதத்தைச்சுற்றி அடிக்கக்கடவாய். அப்படிப்பட்டவர்களாகிய பாவிகளது இரண்டுகால்களையும்பற்றி மனங்குழம்பும் படிநிலைபெற்ற பாறையிலடித்து (அவர்களது) சரீரத்தை அழிக்கக்கடவாய்.

துன்முகன், விகடபத்திரன், உக்கிரமுகன், பாசபாணிமுதலாக இவவத்தியாயத்தில் பின்வருவோர் இயமனது தண்டலாளர்கள்.

இதுமுதல் முப்பத்துநான்கு பாடல்களால இயமபுரத்தெண்டனை கூறுகின்றார். (௨௩)

வெட்டு வாள்கொடு கழுத்தினின் மிதித்து விழியைத்
தொட்ட கழ்ந்திடு துடிக்கவடி பாச மதனாற்
கட்டி யங்கவா கழுததற விறுக்க றையின்வா
யிட்ட ரைத்திடுதி மெய்த்தசையை யீர்ந்தி டுதியால்.

(இ-ள்.) (அவர்களை) கழுத்தில் மிதித்துக்கொண்டு உனவாளாயுததால் (துண்டுதுண்டாக) வெட்டக்கடவாய். கண்களைப்பிடித்துத் தோண்டிவிடக்கடவாய். பதைக்கும்படி அடிக்கக்கடவாய். பாசக்கயிற்றாற் கட்டி அவர்கள் கழுத்தானது அங்கறும்படி இறுக்கக்கடவாய். பாறைவாயிலிட்டு அறைக்கக்கடவாய். சரீரத்தின் மாமிசத்தை அறுக்கக்கடவாய். எ - று.

அறை = பாறை. (௨௪)

பிறர்ம னைக்குரிய பேதைய ரிடத்து விழைவாய்க்
குறுகு காலிணை குறைத்திடுதி கொம்மை முலைமே
லிறுகு றத்தழுவு கையிணையை யீர்தி யவாமே
லுறுசி னத்திறெடு மூசிக ணிறுத்தி டுதியால்.

(இ-ள்.) அன்னியரது இல்வாழ்க்கைக்குச் சுதந்தரமாகிய பெண்களிடத்தில் ஆசைகொண்டு (அவர்கள்வீட்டுக்குச்) செல்லும் இரண்டு பாதங்களையும் வெட்டிவிடக்கடவாய். (பிறமாதர்களின்) குவிந்தமுலையில் குழையும்படி அணைத்த இரண்டுகைகளையும் அறுத்துவிடக்கடவாய். (அப்படி அன்னியமாதரைக்

கலந்த) அவர்கள்பேரில் மிகுந்த கோபத்துடன் (பழுக்கக்காய்ச்சிய இரும்பு) ஊசிகளை நிறுத்தக்கடவாய். எ - று.

பிறர்மனைக்குரிய பேதையா = அன்னியர் மனைவிகள்.

பேதை என்பது பெண்கள் பருவங்கள் ஏழிலொன்று. அந்த ஈண்டு பெண்களுக்காயது. பேதை என்பதற்கு அறிவினைக் குறைமுடையோர் எனப் பொருள்கூறினும் பொருந்தும். (உ௫)

வெம்மை யோடுபிறா தம்பழி விளம்பி யுழலுஞ்
செம்மை யில்லவாக டயுமிழும் வாயி லயலார்
தமமில வாழ்பவளை நோக்கினா தடங்கண் மிசையு
மமம யோவென விருப்புமுளை கொண்ட றைதியால.

(இ-ள்.) கோபத்தினால் அன்னியரது குற்றங்களை (பலர்முன்) எடுத்துச சொல்லிக்கொண்டு திரியும் நற்குணமில்லாதவர்களது தீய சொற்களைச் சொல்லுகின்ற வாயினிடத்திலும், அன்னியரதுமனைவியராகவாழ்கின்ற (வேற்று)மாதரை (அவர் அழகின் மிகுதிபற்றி) பார்த்தவர்களது விசாலமாகிய கண்களினிடத்திலும், அம்மா ஐயோ என் றலறும்படி இரும்பு முளைகளைக்கொண்டு அடிப்பாயாக.

'மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற் றம்மின வன்றொடர்' என் பதனால், இரும்பு + முளை = இருப்புமுளை என்றாயிற்று. (உ௬)

மின்னு கக்ககதிர் வேலவிகட பத்தி ரமிகப்
புன்மை யில்லவர் தமைப்பழி புகன்ற விவரைத்
துன்னு மூளைதசை சோரிநிறை பாழ்ந ரகின்வாய்ச்
சென்னி கீழுற மடுத்தனல செறுத்தி டுதியால்.

(இ-ள்.) மின்னலானது பிரகாசித்தது போன்ற கிரணங்களை யுடைய வேலேந்திய விகடபத்திரா! கொஞ்சமும் கீழ்மைக்குண மில்லாதவர்களைப் பழிச் சொல்லால் (தாழ்த்திக்)கூறிய இப்பாவிகளை, நெருங்கிய மூளையும் சதையும் உதிரமும் நிரம்பிய பாழ்நரகத்தில் தலைகீழாகநிறுத்தி உண்பித்துஅக்கினிமூட்டுவாயாக.

"மின்பின பனகன் றொழிற்பெய ரனைய - கன்னவ் வேற்று மென்மை யோ டுறழும்" என்பதனால் மின் என்பது உகரச்சாரியை பெற்று மின்னு என நின்றது. தசை இலக்கணப்போலி. (உ௭)

போற்று தம்பொருள் புதைத்துவறி யோரின் மெலியா
காற்றி சைக்கணு நடந்தடி வருந்தி கசையா
லேற்ற ருந்துமவா கையதனி லெண்ணெ யொழியா
தூற்றி ருந்தொழுக வாக்கியெரி யூட்டி டுதியால்.

(இ-ள்) காப்பாற்றிய தமது திரவியத்தைப் (பூமியில்) புதைத்து (பத்திரப்படுத்தி வைத்துவிட்டு) தரித்திரர்களைப்போல வருந்தி, நான்கு புறத்திலுஞ் சென்று காலகள்நோகப் பேராசையுடன் பிச்சையெடுத்து உண்பவர்களது கைகளில், எண்ணெய் நீங்காமல் ஊற்றெடுத்தொழுகும்படிச்செய்து அக்கினியை மூட்டிவிடுவாயாக. எ - று. (உ௮)

தருக்கு மைம்புல னெறிந்துபொறை சாலகு ரவனை
மருக்கொள் கொன்றைபுனை வானவன் முதற்க டவுளைச்
செருக்கி னேடுபழி செப்புமவர் வாயி னிடைசெம்
புருக்கி வெந்தழலக னன்றெழுக வூற்றி டுதியால்.

(இ-ள்.) அகங்கரிக்கும் ஐம்புலக்குறும்புகளை நீங்கிப் பொறுமை மிகுந்த ஆசாரியனையும், வாசனையைக்கொண்ட கொன்றை (மலர்மாலையைத்) தரித்த சிவபெருமான் முதலாகிய தேவர்களையும், கெருவத்தினுல் குற்றஞ் சொன்னவர்கள் வாயினிடத்தில் மிகுந்த அக்கினியானது அதிகரித்துச் சுடும்படிச் செம்பினை நீர் போன்றுருக்கி ஊற்றக்கடவாய். எ - று. (உகூ)

விருப்பி னேடொருவ னீவது விலக்கி யிடுவோ
ருரைக்கு நாவையறு வேதியரொ டும்பர் பொருளை
யருப்ப மாயினு நுகர்ந்தவர் வயிற்றை யகழா
விருப்பு முள்ளொடு மலப்புழு நிறைத்தி டுதியால்.

(இ-ள்.) ஆசையுடனே ஒருவன் (பிறர்க்குக்) கொடுக்கும்பொருளை (வேண்டாமென்று) தடுத்துவிட்டவர்களது (அவவாறு) சொல்லிய நாக்கினைஅறுக்கக் கடவாய். பிராமணருடன் தேவர் பொருள்களை அருப்பமாஞலும் உண்டவர்களது வயிற்றினைத் தோண்டி இரும்புமுள்ளுடன் மலப்புழுக்களை நிறைத்துவிடக் கடவாய். எ - று.

அருப்பம் = மோர்; ஈண்டு சிறிது என்னும் பொருளது. (௩0)

உம்பர் வேதியர் விருந்தினரை யூட்டி நுகரார்
தம்ப சிக்கன றணிப்பபனி துய்த்த விவரை
வெம்பு கண்டக ருளத்தின்மிக வெம்மை புரியுங்
கும்பி பாகநர கத்திடை குளிப்ப வெறிவாய்.

(இ-ள்.) தேவர், பிராமணர், அதிதிகள் (ஆகிய) இவர்களை (முன்னர்) உண்பித்துப் (பிறகு) உண்ணுதவாகளாகி, தம்முடைய பசிததீ அடங்க மிகுதியும் புசித்த இப்பாவிகளை, கோபங்கொண்ட துஷ்டாகளது மனதைக்காட்டிலும் மிகவும் கொடுமைகளைச் செய்கின்ற கும்பிபாகம் என்னும நரகத்தில் மூழ்கும்படி எறிந்துவிடுவாயாக. எ - று.

கும்பிபாகம் எனபது மகாநரகங்கள் ஏழனுள் ஒன்று. அவையாவன:— அள்ளல், இரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி என்பனவாம். (௩க)

உடல்சி னத்தறுக ணுக்கிர முகத்த வதெளிந்
தடைகு நர்க்கிட ரிழைத்தவரை யஞ்சொன் முதிரா
மடைக ளடைப்புதல்வ ராருயிரை வவ்வு மிவரைக்
கொடிய மாரவுர வத்திடை குளிப்ப விடுவாய்.

(இ-ள்.) பெருங்கோபத்தையும் அஞ்சாமையையும் உடைய உக்கிரமுகத்தவனே! ஆராய்ந்து (தம்மிடத்தில்) அடைக்கலம் புகுந்தவர்களுக்குத் துன்புறு

செய்தவர்களையும், அழகிய சொற்கள்முதிராத (குதலைமொழியையும்) இளமை தங்கிய நடையையும் உடைய குழந்தைகளது அருமையாகிய பிராணனைவாங்கும் இவர்களையும், மிகக்கொடுமையாகிய இரௌரவநரகத்தில் மூழ்கும்படி விடுவாயாக. எ—று. (கஉ)

மருள்செய் கின்றநற வுண்டவரை மண்டு கடலபோற்
குருதி வாய்நரகி னுய்த்திடுதி கோதி னெறிசே
ரரும றைக்கிழவ ராருயிர் செகுத்த விவரை
யிருள்செ றிந்தநர கத்திடை யெடுத்தெ றிதியால்.

(இ-ள்.) மயக்கத்தை உண்டுபண்ணும் கட்குடித்தவர்களை மிகுந்த சமுத்திரம்போன்று உதிரம்பொருந்திய நரகத்தில் (வசிக்கும்படி) செலுத்துவாயாக. குற்றமில்லாத (தரும) மார்க்கத்தில் சேர்ந்த அரியவேதங்களுக்குரிய அந்தணரது அருமையாகிய உயிர்களைக்கொன்ற இவர்களை இருள்மிகுந்த நரகத்தில் (துன்புறும்படி) எடுத்தெறிவாயாக. எ - று.

'குருதிவாய் நரகு, இருள்செறிந்த நரகு' என்பவை. முறையே இரத்தப்பிரபை, தமப்பிரபை ஆகிய நரகவட்டங்கள்.

நரகவட்டம் ஏழு. அவை தமப்பிரபை, இமப்பிரபை, தூமப்பிரபை, வாலுகப்பிரபை, சாகரப்பிரபை, இரத்தப்பிரபை, அழற்பிரபை, என்பனவாம், அவற்றுள் இருள், குளிர், புகை, மணல், துயிலாமை, இரத்தம், தீ ஆகிய இவைமுறையே மிகுந்திருக்குமெனவுங் கூறுவர். (கங)

மாலு மூழ்ந்துகுரு பன்னியை மணந்த விவரைச்
சால நற்பொருள் கரந்துகவர் தன்மை யரைவெங்
கால சூத்திர மெனுங்கொடிய காய்ந ரகின்வா
யோவி டுமபடி யிழுத்துநனி யுய்த்தி டுதியால்.

(இ-ள்.) மோகங்கொண்டு குருபத்தினியைக்கலந்த இப்பாவிகளையும், மிகவும் நல்லபொருள்களை ஒளித்திருந்து திருடிய தன்மையினரையும், வெப்பமிகுந்த காலசூத்திரம் என்னும் கொடுமைதங்கிய எரிகின்ற நரகத்தினிடத்தில் முறையிட்டு அழும்படி இழுத்துக்கொண்டுபோய் நன்றாகச் சேர்த்திடுவாயாக.

உழத்தல் = துன்புறுதல். (கச)

ஆய நான்மறை யருந்தவர்த மாவி கவருந்
தீய பாவமுத னன்குனி செய்யு மவரோ
டேயி னோரையசி பத்திர மெனப்பெ யரவாங்
காயும் வெந்நரகி னிட்டுடல் களற்றி டுதியால்.

(இ-ள்.) நான்கு ஆகிய வேதங்களையுணர்ந்த அரியதவங்களைச் செய்த அந்தணரது உயிரைக்கொல்லும் தீமைபொருந்திய (பிரமஹத்தி) மகாபாதகமுதலியவான்கையும்மிகுதியாகச் செய்பவர்களுடன் பொருந்திநேசித்தவர்களை அசிபத்திரம் என்னும் பெயரையுடைய எரிகின்ற வெப்பமாகிய நரகத்திற்போட்டு [illegible] லைச்சுவாயாக. எ - று.

சூதசங்கிதை - கழுவாயுரைத்தவத்தியாயம.

“ மறையவர்ச் செருத்தோன் கடிமது நுகர்ந்தோன்
வயங்குசெம் பொற்கள வாண்டோன்
நிறையருட் குரவன் பன்னியைப் புணர்ந்தோ
னிகரிலிக் கொடியனை யாரும்
அறைவரான் மாபா தகரென வவனை
யடுத்தொரு வருடநட் டவரும்
முறைதவிர் மாபா தகர்களே யென்ன
மொழிவதற் கையமொன் றின்றே.” எனறபடியே,நகரத்துக்கு வெளியே அக்கினியைவளர்த்திச் சிவத்தியானஞ்செய்து அதில்வீழ்ந்திறந்தால் தீரும் பிரமகத்தியின்பாவமும், கள்ளைக் கொதிக்கக்காய்ச்சிச் சிவத்தியானஞ்செய்து குடித்து உயிர்விட்டால் தீரும் கள்ளுண்டவின் பாவமும, இரும்பாலோர் தண்டஞ்செய்து மன்னவன்கையிற் கொடுத்துத் தானசெய்தகுற்றத்தைச்சொல்லி இதனல் என்தலையில் அடிக்கவென அவன அடிக்க உயிர்விட்டால் தீரும் பொற்களவின் பாவமும், இரும்பாலவள்போல் ஒருருவஞ்செய்து நெருப்பிற் பழுக்கக்காய்ச்சிச் சிவத்தியானஞ்செய்துதழுவி உயிர்விட்டால்தீரும்குருபத்தினியைச் சேர்ந்த பாவமும், ஆகிய இவை நான்குமே பெரும்பாவங்களாதலின “அருந்தவர்த மாவி கவருந் தீய பாவமுத னன்கு ” எனவும்,அவருடன் ஒருவருடம் நேசித்திருந்தோரும் மாபாவிகளாதலின் “ அவரோ டேயினோரை * * * கனன்றிடுதியால்” எனவுங் கூறினர். (கரு)

ஈட்டு பாதகரை வெய்யதழ லெண்ணெ யிடையே
மாட்டி மற்றவ ருடற்றசைகள் போழ்ந்து வளையுந்
தோட்டி யென்னவொளிர் துண்டமத னூற்ப றவைகள்
கூட்டு ணுங்கொடிய கோரநர கத்தி டுதியால்.

(இ-ள்.) சம்பாதித்த பாவமுடையோர்களை,வெப்பமாகிய சுடுகின்ற எண்ணெய்க் (கொப்பறையில்) விட்டு, அவர்கள் சரீரத்தின மாமிசத்தைப் பட்சிகள் வளைந்த தோட்டியைப்போலும் பிரகாசிக்கின்ற தமது மூக்கினுற் பிளந்து விருந்துண்ணும்படிக் கொடுமைதங்கிய கோரமாகிய நரகத்தில் இடக்கடவாய். எ - று.

தோட்டி = யானைக்குடாரி ; அங்குசம். துண்டம் = மூக்கு. (கசா)

தேட ருந்துணைவ ரானொடு திருந்தி ழையினூர்
வாடி நொந்துளம் வருந்தவதை செய்த விவரைக்
கூட சன்மலி யெனுங்கொடிய வெங்க ரகினிட்
டாடன் மாபுயவெம் மத்திகை யெடுத்த றைதியால்

(இ-ள்.) போரில்வல்லபெரியபுயங்களையுடையவனே ! சம்பாதிப்பதற்கருமையாகிய சகோதரனையும், பசுக்களையும், திருந்திய ஆபரணங்களையணிந்த மாதர்களையும், இளைத்து மனம்நொந்து வருத்தமுறும்படி வதைசெய்த இப் பாவிகளைக் கூடசன்மலி என்னும் பெயரையுடைய கொடுமையாகிய வெப்பமிகுந்தநரகத்தில் வீழ்த்தி வெவ்விய குதிரைச்சம்மட்டியையெடுத்து அடிக்கக்கடவாய். எ - று.

வதைசெய்தலாவது துன்புறுத்தல் அல்லது கொல்லுதல்.

தேடருந்துணைவர்—என்பதனை,

கந்தபுராணம்.

"பொன்னைநிலந் தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை யெல்லாம் பெறலாகு
மென்னை யுடைய வினையோனே யிப்பிறப்பி
லுன்னை யினிப்பெறுவ துண்டோ வுரையாயே."—எனவும்.

சீவகசிந்தாமணி.

"திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செருக்க லாகு
நண்பொடு பெண்டிர் மக்க ளியாவையு நண்ண லாகு
மொண்பொரு ளாக்க லாகு முடப்பிறப் பாக்க லாகா
வெம்பியை யீங்குப் பெற்றே னெனனெனக் கரிய தென்றான்." — என
வும், வருவனவற்று ளுணர்க. (கஎ)

மாதர் தம்மனை யிருப்பவயன் மங்கை யர்தமைக்
காத லான்மருவு கையிணை பிடுங்கி யெறிவெங்
கோத முற்றுமனை தோறெரி கொளுத்து மிவரை
யேத மெய்தவெரி காலுநர கத்தி டுதியால்.

(இ-ள்.) (தாம் மணஞ்செய்த) மனைவியர்வீட்டிலிருக்க அன்னியமாதரை மோகத்தோடு தழுவிய (பாவிகளின்) இரண்டுகைகளையும் பிடுங்கி எறியக்கடவாய். (மனத்தில்) வெவ்விய குற்றம்வைத்துக்கொண்டு வீடுகள்தோறும் நெருப்பினாற் கொளுத்திய இப்பாவிகளைத் துன்ப முறும்படி அக்கினியைச்சிந்தும் நரகத்தில் இடக்கடவாய். எ - று.

எரிகாலு நரகம் - அழற்பிரபை என்னும் நரகவட்டம்.

கோதம் என்பதில் அம் சாரியை. (கஅ)

கோளு ரைத்துநிதி கொள்பவர் நடுப்பு கல்கிலா
மாள நஞ்சமிடு வோர்நிறையின் மல்கு மளவி
னாளும் வஞ்சக மிழைத்தவா நடுக்க முறவெங்
காள கூடநர கத்தினிடை கட்டி யெறிவாய்.

(இ-ள்.) (ஒருவர்செய்த குற்றத்தைக்) கோள் சொல்லிப் பொருள்பறிப்போரும், (இருவர் விவாதமுற்ற காலத்தில்) நடுவுநிலைமையாக (நியாயத்தைச்) சொல்லாதவர்களும்,இறக்கும்படி விஷம் ஊட்டியவர்களும்,முறையின் நிலைமையிலிருந்தகாலத்தில் எப்பொழுதும் வஞ்சகம்செய்வோர்களும், (ஆகிய இத்தன்மையுற்ற பாவிகளை) காளகூடம் என்னும் நரகத்தில் நடுங்கும்படிக்கட்டி எறிவாயாக.

இச்சை யுற்றருளி ஞேடுமினி தாடு புனல்வாய்ப்
பிச்ச ரொன்னவுமிழ் நீர்மலம் விடுத்த பிழையோ
ரச்ச முற்றழுத ரற்றிநனி யாவி மறுக
மிச்சில் வெய்யகொடு பாழ்நரகின் வீழ்த்தி டுதியால்.

(இ-ள்.) விருப்பம் பொருந்திக் கிருபையுடன் இனிமையாக மூழ்குகின்ற சலத்தினிடத்தில் உன்மத்தனைப்போல, எச்சில்-சிறுநீர்-மலம் (ஆகிய இவற்றைக்) கழித்த குற்றமுடைய பாவிகளை, பயமுற்று அழுது மிகவும் துன்பப்பட்டு உயிர் நீங்கும்படி எச்சில் பொருந்திய வெப்பமாகிய கொடிய பாழ்நரகத்தில் வீழச்செய்வாய். எ - று.

பிச்சர் - பித்தர் மொழியிடைப்போலி. (சO)

கருவ ழித்தவர்க ளுடலைக்க ருவியா
லரிபொ ருத்துபின மம்மியிடை யிட்ட ரைநெடுந்
திரிகை வாயிடை திரித்துருவ மாக்கி யடரா
வெருவ ருங்கொடிய பாழ்நரகில விட்டி டுதியால்.

(இ-ள்.) கருப்பத்தை நாசஞ்செய்தவர்களது சரீரத்தைத் (துண்டு துண்டாகக்) கத்தியினால் அரிவாயாக. (அவ்வாறரிந்த) பிறகும், அம்மியின்மேலவைத்து அரைப்பாயாக. (பின்னும்) பெரிய இயந்திரத்திலிட்டரைத்து உருவமாகச்செய்து, நெருங்கிய அச்சமுடைய கொடிய பாழ்நரகத்தில் விட்டுவிடுவாயாக. எ - று.

திரிகை=இயந்திரம். இது இக்காலத்து எந்திரம் என வழங்குகின்றது. ()

அறுசு வைப்பொருள் பகர்ந்துழலு மாத ணாதமை
நறிய கன்னலிடு மாலையி னறுக்கி டுதிதம
முறைதி றம்பவுல காளுமுடி மன்ன வர்தமை
வறிய கூவலிடை தள்ளுதி மறிந்து விழவே.

(இ-ள்.) அறுசுவையோடு கூடிய தினபண்டங்களை விற்றுத் திரிகின்ற பிராமணர்களை, நல்ல கருமபையிட்டு ஆட்டுகின்ற ஆலையில் வைத்துப் பொடிப்படுத்துவாயாக. தமக்குக் கூறியுள்ள மநுநீதி தவறும்படிப் பூமியை அரசுசெய்யும் கிரீடம்புனைந்த அரசர்களை, இறந்துவிழும்படி நீர்வரண்ட பாழ்ங்கிணற்றில் தள்ளுவாயாக. எ - று.

அறுசுவை—கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பனவாம். (சஉ)

மருள்கொ டுக்குநறை விற்கும்வணி கக்க படரை
வெருவ ரத்தசைக ளெனபுபொடி யாக வினைவி
னுரலி விட்டுய ருலக்கையி னிடிதொ ழிகலா
நரகி டைபபதை பதைக்கநனி நண்ண விடுவாய்.

(இ-ள்.) மயக்கத்தை உண்டுசெய்யும் கள்விற்கின்ற வைசிய வஞ்சகர்களை, அஞ்சும்படி சீக்கிரத்தில் உரலில்போட்டு மாமிசமும எலும்புகளும் தூளாகும்படி பெரிய உலக்கையாலிடித்து, (எக்காலத்திலும்) நீங்காத நரகத்தினிடத்தில் மிகுதியும் பதைபதைக்கும்படிப் பொருந்த விடுவாயாக. எ - று.

"கள்ளுண்போன் சோர்வின்மைபொய்" என்னும் முதுமொழிக் காஞ்சிபோல, கள் தன்னைக் குடித்தோனுக்கு மயக்கந்தருதலால், அதனை — "மருள்கொடுக்கு நறை" என்றார். (சங)

லை, ஈக்களோடு வண்டுகள் மிகுந்த நரகத்தில் பிரவேசிக்கும்படி நீங்கள் விட்டுவிடு வீராக. என்று (இவ்விதமாக) எதிர்நின்று கடுஞ்சொல்லோடு பாவிகளுக்குமுன் னே தோன்றுவான் (இயமதருமராஜன்). எ - று.

ஈயினொடுவண்டுசெறியும்நிரயம் - **சேந்துத்தானம்** என்னும்நரகம். (சஎ)

அன்ன பாவிகண மன்புகறல் கேட்டு ளயரா
முன்னர் நாடொறு மிழைத்தபிழை முற்று முணரா
வென்ன செய்துமினி யென்றுமதி மாழ்கி வெருவோ
டுன்ன ருங்கொடிய தூதர்மு னுறப்ப தறுவார்.

(இ-ள்.) அப்படிப்பட்டபாவிகள் இயமதருமன் கட்டளையிடுதலைக்கேட்டு உள்ளந்தளர்ந்து,தாம் முற்காலத்தில் தினந்தோறுஞ்செய்த குற்றங்களையெல்லாம் உணர்ந்து, இனி யாதுசெய்வோம் என்றெண்ணிப் பயத்துடன் புத்தி மயங்கி, நினைத்தற்கரிய கொடுமையுடைய தூதர்களுக்கு முன்னே வருவதற்குப் பதறுவா ர்கள். எ - று. (சஅ)

முறைவ ழாதுலக முற்றுமினி தாழி நடவு
மறைத ருங்கழ லலங்கலவடி வேல ரசரைப்
பொறையி னோடளவ ளாயெதி புகுந்து மகிழ்வான்
மறலி பூசனை புரிந்தடி வழுத்தி யிடுமால.

(இ-ள்.) நீதிமுறை தவறாமல் பூமிமுழுவதையும் இனிமையாக அரசு செய்யும் ஒலிக்கின்ற வீரக்கழலையும், வெற்றிமாலைசூடிய கூர்மையாகிய வேலையு முடைய மன்னவர்களை, இயமதருமன் சாந்தத்துடனே எதிர்கொண்டு கலந்து சந் தோஷத்தால் பூசைசெய்து (அவர்களது) பாதங்களை வணங்குவான். எ - று. ()

மறைவ லோர்கண்முத னான்குவரு ணத்த வர்களு
நெறிவ ழாதுத மொழுக்கநெறி நின்ற னர்களேற்
றெறுசி னத்தபக டேறியணி செம்பொ னணைமே
லுறைதி ரென்றினிது வந்துமுக மன்பு கல்வனால்.

(இ-ள்.) பிராமணர்கள் முதலாகிய நான்குவருணத்திற் பிறந்தவர்களும், (தத்தமக்குக்கூறப்பட்டுள்ள) சாதியாசாரந்தவிராமல், தமக்குரியவழியில் நடப்பா ர்களாகில், மிகுந்த கோபத்தையுடைய எருமைக்கடாவைவாகனமாகக் கொண்ட இயமதருமன்,அழகியசெம்பொன்னாலாகிய ஆசனத்தின்மீது உட்காருங்கள்என்று இனிமையாகச் சந்தோஷித்து உபசாரவார்த்தைகளைச் சொல்லுவான். எ-று. ()

## வேறு.

தரும சேனன் விடபருமன் றந்த வக்கிரன் சயத்திரதன்
பருதி வடிவேற் காந்தமனும் பாசன் றிறல்கொள் பராந்தகன்வெங்
குருதி வடிவாட் டிபதனுவாக் குக்கி ரியுமாத் தனன்சிறந்த
வுருவத் தண்டாச் சகத்திரசித் துவனுச் சுவன்போ ருச்சுனனே.

(இ-ள்.) தருமசேனன், விடபருமன், தந்தவக்கிரன், சயத்திரதன், பிரகா சம் பொருந்திய கூர்மைதங்கிய வேலைத்தாங்கும் காந்தமன்ஆகிய பாசன்,பராக்கிர மத்தைக்கொண்ட பராந்தகன், வெவ்விய உதிரமானது வடிகின்ற வாளையுடைய

திபதன், உவாக்குக்கிரி, உமாத்தனன், மேம்பட்டநல்வடிவத்தையும் குளிர்ந்தமலர் மாலையையுமுடைய சகத்திரசித்து, உவனுச்சுவன், டோருச்சனன். எ - று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம். இதுமுதல் ஆறு பாடல்களால் இயமலோகமடையாதவர் இவர்களென்று கூறுகின்றனர். (நூக)

எறிவேற் றனைப் புரிஞ்சயன்சி ரிரந்தி தேவன் பலகலையின்
றுறைபோ யுயர்ந்த பரமாத்தி சுவனு வாவென் றிவாமுதலாந
திறலவா ளரசர் விண்ணுலகிற் சிறந்த சுதன்மை மண்டபத்தி
னுறைவாா திருத சினமறலி யுறைபு நகரிற் செலலாரே.

(இ ள்.) எறிகின்ற வேலேந்திய சேனையையுடைய புரிஞ்சயன், சீர்த்தித ங்கிய இரந்திதேவன், பலவகைப்பட்ட சாஸ்திரங்களின் மார்க்கங்களிற் சென்று மேம்பட்ட பரமாத்தி, சுவனுவா என்று சொலலப்பட்ட இவர்கள் முதலாகிய வலிதங்கிய வாளேந்தும் மன்னவர் (கணக்கில்லாதவர்கள்) தேவலோகத்திற்சிறந்த சுதன்மையென்னும் மண்டபத்தில் வாசஞ்செய்வார்கள், (இப்படிப்பட்டவாகளெல் லாம்) சுழலுகின்ற கோபததையுடைய இயமன் வாசஞ் செய்யும் பட்டணத்தில் போகமாட்டார்கள். எ - று.

சுதன்மை மண்டபம் என்பது இந்திரனது வசந்த மண்டபம். (நூஉ)

நீல கண்டன் மழுவேந்தி நெற்றிக் கண்ணன் பூதேசன்
கால காலன் விடையூர்ந்தோன் கங்கை சூடி காமாரி
சூல பாணி கரியுரிதழ்தோன் றோகை பாகன் காபாலி
யால முண்டோன் மதிசூடி யந்த காரி யீசானன்.

(இ ள்.) நீலகண்டன், மழுவேந்தி, நெற்றிக்கண்ணன், பூதேசன், காலகாலன், விடையூர்ந்தோன், கஙகைசூடி, காமாரி, சூலபாணி, கரியுரித்தோன், தோகைபாகன், காபாலி, ஆலமுணடோன, மதிசூடி, அந்தகாரி, ஈசானன. எ-று.

இதுமுதல் நானகுபாடல்கள் குளகம். (நூங)

வாசு தேவன் சனார்த்தனன்போர் மதுசூ தனனச் சுதனெமா
லீச னரனசங் கரனகிரிச னிறைவன் பினாக பாணிசிவன்
கேசி நாசன மணிவண்ணன கெருடத் துவச னரசிங்க
னுச மில்லோன் விடையூர்தி நமபன் மிருததுஞ் செயனபாகன்.

(இ-ள்.) வாசுதேவன், சனார்த்தனன், யுததததிலவல்லவனுகிய மதுசூதனன், அச்சுதன, நெடுமால, ஈசன், அரன, சங்கரன, கிரிசன், இறைவன், பினாக பாணி, சிவன, கேசி, நாசன, மணிவண்ணன, கெருடத்துவசன, நரசிஙகன, அழி வில்லாதவன், இடபவாகனன், நம்பன், மிருத்துஞ்செயன், உமாபாகன். எ - று.

பினாகம்=சிவபெருமானது வில். (நூச)

அரவா பரண னழலேந்தி யட்ட மூர்த்தி செகதீசன்
புருடோத் தமனேக சவன்கணணன் புயங்க சாயி புள்ளூர்தி
பரமன் சாந்தன் கணநாதன் பவன்முக் கணணன் சருவேசன்
றிரிவிக் கிரமன கமலைபதி தேவன் சவுரி மாதவனே.

(இ-ள்) அரவாபரணன், அழலேந்தி, அட்டமூர்த்தமாகவுளளவன், செகதீசன், புருஷோத்தமன், கேசவன, கண்ணன், புயங்கசாயி, புள்ளூர்தி, மேலானவன், சாந்தமுடையவன், கணநாதன், பவன், முக்கண்ணன, சருவேசன, திரிவிக்கிரமன, இலக்குமிநாயகன், தேவன், சவுரி, மாதவன். எ - று. (ருரு)

புராரி தாமோ தரன்சயம்பு பூவை வண்ணன் கோபாலன்
முராரி யனந்தன் கோவிந்தன முகுந்தன் சார்ங்க பாணியரி
கிரீச னென்னும் பெயர்முதலாக் கிளக்கு நாம நூறறெட்டும்
பராவு மவர்கள் யமனுலகம் படரா ரழியாப் பதமபெறுவார்.

(இ-ள்.) திரிபுராந்தகனன், தாமோதரன், சுயம்பு, காயாம்பூவண்ணன, கோபாலன், முராரி, அனந்தன், கோவிந்தன், முகுந்தன, சார்ங்கபாணி, அரி, கிரீசன் என்று சொல்லப்படும் பெயாகள்முதலாகிய திருநாமங்கள் நூற்றெட்டினையும் ஓதித் துதிக்கின்றவர்கள் இயமலோகத்தைச் சேராதவராகி அழியாத நற்பதவியை யடைவார்கள். எ - று.

சார்ங்கம் = விஷ்ணுவினது வில்.

இந் நான்கு பாடல்களினு முள்ள பெயர்கட்குக் காரண மெழுதப்புகின் விசேடித்து விரியுமாதலின் விடுத்தாம். (ருசு)

என்று சிவசன் மாவினுட னினவண் டூத மருவுயிர்க்கு
மன்றற் றுளவோன் கணநாதர் வகுத்து மொழியு மமையத்துப்
பொன்றுாழ் திதலைப் பொம்மன்முலைப் புரிமென் கூந்த லரமகளி
ரொன்றி மகிழ்வோ டினிதுறையு முலக மதனைக் கண்ணுற்றான்.

(இ-ள்.) என்றிவவிதமாகச் சிவசன்மாவுடன், வண்டினங்கள் ஊதுவதனால் வாசனையைக்கக்குகின்ற குளிர்ந்த துளவமாலையையணிந்த விஷ்ணுவின் கணநாதர்களாகிய (சுசீலன் - தருமசீலன்) என்போர், (தம்மைக் கேட்டவற்றிற்கு விடைகூறும்படி) பிரித்துச்சொல்லுஞ் சமையத்தில், பொன்னிறமும் பின்னிடும்படியாகத் தேமல்படர்ந்து பூரித்த தனங்களையும், புரிந்த மெல்லிய கூந்தலையுமுடைய தெய்வமாதர்கள்கூடிச் சந்தோஷத்துடன் இனிமையாகவசிக்கும் (அரம்பையர்) உலகத்தைப் பார்த்தனன் (சிவசன்மா). எ - று. (ருஎ)

சிவசன்மாவை யியமன் எதிர்கொண்ட அ - ம்.

முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - ௩00.

சிவமயம்.

ஒன்பதாவது,

# சிவசன்மா சூரியலோகங்கண்ட அத்தியாயம்.

கண்டுமகிழ் வோடினிய கண்கவர் வனப்பிற்
றொண்டையிதழ் மாதரிவர் யார்கொலெதிர் தோன்று
மண்டுவள மேயதுலக மியாதென வழங்க
விண்டுகண நாதர்கள் வியந்தினி துரைப்பார்.

(இ-ள்.) (சிவசன்மா அரம்பையருலகத்தைப்) பார்த்து மகிழ்ச்சியுடன் இனிமையாகிய கண்களைக் கவருகின்ற அழகினையும், ஆதொண்டைக் கனியை யொத்த உதடுகளையுமுடைய இம்மங்கையர் யாவரோ? எதிரிற்காண்கின்ற நெருங்கிய வளமிகுந்த உலகம் என்னவுலகமோ? என்று கேட்க, விஷ்ணுவின் கணநாதர்கள் சந்தோஷித்து இனிமையாகச் சொல்லத்தொடங்கினர். எ - று.

தொண்டை = ஆதொண்டைச்செடி அல்லது கொவ்வைச்செடி; முதற்பொருளின் பெயராகிய தொண்டை என்பது அதன் சினைப்பொருளாகிய கனிகளுக்காதலின் இது பொருளாகுபெயர். (க)

ஈங்கிவர்கள் வேள்விபுரி வோரையிமை யோரை
நீங்கரிய காதலுற நெஞ்சினை யுருக்குந்
தீங்குதலை மென்மொழிய தெய்வமட மாதர்
வாங்குதிரை வேலையமு தத்தினொடு வந்தார்.

(இ-ள்.) (சிவசன்மாவே!) இவ்வுலகத்தில் வசிக்கும் இம்மாதர்கள் யாகம் செய்வோரையும் தேவர்களையும் நீங்குதற்கரிய ஆசைபொருந்த மனமுருகச் செய்யும் இனிமையாகிய மெல்லிய மழலைச்சொல்லையுடைய இளமைதங்கிய தெய்வப்பெண்கள். இவர்கள் வளைவாகிய அலைகளையுடையதிருப்பாற்கடலிற் றோன்றிய தேவாமுதத்தோடு பிறந்தவர்கள். எ - று.

பூர்வத்தில் தேவர்களும் அசுரர்களும் ஒருங்குகூடி மந்தரகிரியை மத்தாகவும், வாசுகியைக் கயிறாகவும், சந்திரனை அடைதூணாகவுங் கொண்டு திருப்பாற்கடலைக் கடைய அதில் அரம்பாஸ்திரீகள், காமதேனு, கற்பகவிருட்சம், சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி முதலிய பலபொருள்கள் தோன்றின என்பதாம். இதனை,

கூர்மபுராணம் - இராமனவதரித்தவத்தியாயம்.

“ மந்தரந் தாழ மாயவ னாமை யுருக்கொடு வலியினிற் றாங்கி
யுந்துநீர்க் கடலைக் கடைதலு மோர்கை கமண்டல மோர்கைதன் டேந்தி
நந்தலிற் றன்வந் திரிமுதற் பிறந்தா னடைக்கு கூத்திய ராகு
மந்தமி லரம்பை மகளிர்தெள் ளமுதோ டறுபது கோடிவந் துதித்தார்.”
என்பதனா னுணர்க. (உ)

பொன்னெழுகி வார்த்தனைய பொற்புடை நரம்பி
னின்னிசைய வீணையொடு பாணிநட முஞ்சொற்
பன்னரிய தெய்வநவில் பாடைகலை மாட்சி
மன்னுமத னூலசுரத விஞ்சையிவர் வல்லார்.

(இ-ள்.) இவ்வரம்பாஸ்திரீகள் பொன்னுனது ஒழுகியதை யொத்த அழகிய நரம்பினையுடையதாய் இனிய இசையமைந்த வீணையினோடு அபினயத்தை யுடைய நடனத்திலும், சொல்லுதற்கரிய புகழையுடைய தெய்வபாஷையிலுள்ள நூல்களில் சிறப்புப்பொருந்திய மதனூலில் சொல்லப்பட்ட சுரதவித்தையிலும் வல்லவர்கள். எ - று.

மதன் + நூல் = மதனூல். இது காமசாஸ்திரம். (௩)

அலம்புசை மனோகரை யுருப்பசி யணிப்பூஞ்
சிலம்புபுனை சீறடியு மாவதி திருந்து
நலந்திகழு மேனகை கலாவதி நடத்தா
லிலங்குகன மஞ்ஞைநிகர் காந்திமதி யென்பார்.

(இ-ள்.) அலம்புசை, மனோகரை, உருப்பசி, அழகிய பொலிவுதங்கிய சிலம்பைத்தரித்த சிறிய பாதங்களையுடைய உமாவதி, திருத்தமாகிய நன்மை விளங்கும் மேனகை, கலாவதி, நடனத்தால் விளங்குகின்ற சீர்தங்கிய மயிலுக் குச்சமானமாகிய காந்திமதி என்பவர்களும். எ - று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௪)

மனங்கவர் கலாநிதி சுபானனை மழைக்க
ணனங்கதி லகங்கிருது சுற்கையழ காருங்
கனங்குழையி னுணமதன மோகினி களிப்பாற்
றினம்புது நலந்தருதி லோத்தமை யரம்பை.

(இ-ள்.) (கண்டோரது) மனதைக்கிரகிக்கும் கலாநிதி, சுபானனை, குளிர்ந்த பார்வையையுடைய அனங்கதிலகம், கிருது, சுற்கை, அழகுமிகுந்த கனம்பொருந்திய காதணிகளையுடையவளாகிய மதனமோகினி, சந்தோஷத்தோடு நாடோறும் புதிதாகிய இன்பத்தைத்தரும் திலோத்தமை, அரம்பை. எ - று. (௫)

சந்திரகலை சந்திரவி லேகைதவ சுற்கை
யைந்துபரி வேள்விபுரி வோரணையு மங்கை
யுய்ந்திட நினைந்துபல வேள்விக ளுஞற்றும்
வெந்தழலி லந்தணர் விரும்புமட மாதர்.

(இ-ள்.) சந்திரகலை, சந்திரவிலேகை, ஐந்து அசுவமேதயாகங்கள் செய்வோர் சேரும் மங்கையாகிய தவசுற்கை, என்று பெயர்பெறும் இத் தெய்வதாசிகள், உச்சிவிக்கக் கருதி பலவகைப்பட்ட யாகங்களைச்செய்யும் வெவ்விய ஹோமாக்கினியையுடைய வேதியர்கள் (தம்மைக் கலந்து சுகந்தர) இச்சிக்கும் இளமைதங்கிய மாதர்களாவார்கள். எ - று. (௬)

இன்னவர்க ளாதிமட வாரொளைய ரென்னி
லன்னவர்க ளாறுபதி னாயிரவ ராவார
மன்னிளமை யோடியா வனப்பொரு விலாதா
ருன்னுவிழை வின்படி யுருபபல வெடுபபார.

(இ-ள்.) இவர்கள் முதலாகத் தேவதாசிகள் எவ்வளவினரென்றால், (தொகையினால்) *அறுபதினாயிரம்பேர் ஆவார்கள். (இவர்கள்) நிலைபெற்ற இளமைப் பருவத்துடன் மிகுந்த அழகையும் (எக்காலத்திலும்) நீங்குத லில்லாதவர்கள். தாம் நினைத்த விருப்பத்தின்பிரகாரம் பலவகைப்பட்ட உருவங்களை எடுக்கும் வல்லமையுடையவர்கள். எ - று. (எ)

* அறுபதுகோடி எனவுங் கூறுவா சிலர்.

இங்கிவர்க ளன்றிபுய ரேழ்கடல் வரைப்பின்
மங்கையர்கண் மாதவுப வாசம்விடு போதி
னங்கதுதன் னெஞ்சமறி யாதுதவ றுற்றாற்
கொங்குகமழ் விண்ணிலுறை கூத்தியர்க ளாவார்.

(இ-ள்.) (திருப்பாற்கடலிற்பிறந்து) ஈண்டுவசிக்கும் இவர்களேயல்லாமல் சத்தசமுத்திரங்களாற் சூழப்பட்ட உலகத்தில் உள்ள பெண்கள் தமது மாதவுபவாசத்தை விடுகின்ற காலத்தில் அது அவர்களது மனத்திற்குத் தெரியாமல் தவறிவிடுமானால், (அவர்களும்) வாசனைவீசுகின்ற தேவலோகத்தில் வாசஞ்செய்யும் நடனமாதர்களாவார்கள். எ - று.

எழ்கடல்வரைப்பு—என்பதனை,

கந்தபுராணம்.

"பரவுமிவ் வுலகி லுப்புப் பால்தயிர் நெய்யே கன்னல்
இரதமா மதுநீ ராகு மெழுகடல்" ஏழு தீவும்
வரன்முறை விரவிச் சூழ மற்றதற் கப்பால் சொர்ணத்
தரையது சூழ்ந்து நிற்குஞ் சக்கர வாள சையம்."—என்பதனு னுணர்க.

கூத்தியர்=கூத்தாடும் பெண்கள். (அ)

தீதின்மன மன்பொடு பொருந்துதல் செயாம
லேதில னொருத்தன்வலி திற்புணரி னேங்கிக்
காதலனை நெஞ்சுற நினைந்துருகு கற்பின்
மாதர்களு மிவ்வுலகம் வைகிடுவ ரன்றே.

(இ ள்.) ஆசையுடன் குற்றமில்லாத மனம் பொருந்துதல்செய்யாமல், அன்னியபுருஷன் ஒருவன் தன்னைப் பலாத்காரமாகச் சேர்ந்துவிட்டால், (அது முதல்) வருந்தி நாயகனை மனதிற் பொருந்தும்படி எண்ணி உட லுருகுகின்ற கற்பின் மிகுதியையுடைய மங்கையரும் இந்த அரம்பையருலகத்தில் வாசஞ்செய்வர்.

தூயமறை யோனொடு விரும்புமொரு தோகை
யேயகல விக்கினி தியைந்தவை கொடுத்தோ
ராயபலன் வேட்டுய ருந்தவ முயன்றோர்
மீயுயரு மிவ்வுலக மேவுவர்க ளன்றே.

(இ-ள்.) பரிசுத்தமாகிய வேதங்களையுணர்ந்த பிராமணனுடன (காரணத தால்) புணர இச்சிக்கும் ஒப்பற்ற மயிலின்சாயலையுடைய மாதாகளும, பொருந் திய (அப்படிப்பட்ட) புணாச்சிக்கு இனிமையாகத் தமமாற்கூடிய பொருள்களை உதவிசெய்தோர்களும், தமக்குவேண்டிய பிரயோசனத்தை இச்சித்து உயாந்த அருமையாகிய தவஙகளைச்செய்தோர்களும், (ஆகிய இவாகள்) மேம்பட்டு உயாந்த இவவுலகத்தைத் (தமக்கு வாசஸ்தானமாகப்) பொருந்துவாாகள். எ - று.

**புத்** என்னும் நரகத்தினின்றும் தாய் தந்தையரை மீட்கிறவன என்று பொருள்படும் **புத்திரர்** இல்லார்க்கு முத்தியில்லை யாதலின், கணவன அனுமதி மீது அவனுக்கு மூத்தானையாவது, அவன் தந்தையையாவது, புரோகிதன் முத லிய வேதியரையாவது "மிதுன விச்சையும் புத்திரோற் பத்தியால விரும்பு" என் னும் கைவல்லியத்தினபடி, கலந்து புத்திரப்பேறு அடையலாம என்பது மநுநீதி. இவாகளுள் மிக்கோன் வேதியனாதலின் "தூயமறை யோனொடு விருமபுமொரு தோகை" என்றார். (கo)

கன்னியை யொருத்தனுறு காதலொடு சேரி
லன்னவளு மன்றுமுத லாகநனி வாட
மன்னிவிர தத்தொடும வருநதியுறை வாளேற்
றன்னிகரில் பொற்பினொடு மிவ்வுலகு சாாவாள்.

(இ-ள்.) கன்னிப்பருவமுடைய மாதை ஒருவன் (அவளிடத்திற)பொருந் திய மோகத்துடன் புணாந்தால, அனறுதொட்டு (உடல்) மிகவும இளைக்கும்படி நிலைபெற்ற விரதங்களுடன் வருத்தமுற்று வசித்திருபபாளாகில, அக்கன்னிகை யும் தனக்குச் சமான மில்லாத அழகோடும் இவவுலகததை (இருப்பிடமாக) அடைவாள். எ - று.

கன்னி என்பது விவாகமில்லாப்பெண். (கக)

என்றுகண நாதாக ளியம்பவவை கேளா
நின்றினிது சென்னெறியி னீதிமறை வலலோன்
மன்றலகமழ் செங்கமல வாணமுக மலர்த்துந
துன்றுகதி ரோனமருவு தொல்லுலகு கணடான்.

(இ-ள்.) என்றிவவிதமாக (விஷ்ணுவின) கணநாதர்கள் சொல்ல அவற் றைக் கேட்டுக்கொண்டு இனிமையாகப் போகின்றவழியில், நீதியோடுகூடிய வேதங்களில் வல்லவனாகிய சிவசன்மா, வாசனை வீசுகினற செந்தாமரைமலரின் பிரகாசம்பொருந்திய முகத்தை மலரச்செய்கின்ற நெருங்கிய கிரணங்களையுடைய சூரியன் வாசஞ்செய்யும் பழமையாகிய சூரியலோகத்தைப்பார்த்தனன். எ - று.

தாமரையிற் சிறநதது செந்தாமரையாதலாலும், தாமரைமலர்கள் சூரியன் உதித்தவுடன் மலரும் இயற்கையினவாதலாலும், சூரியனைக்கண்டு விகாரப்பட்டு மலரும் மலரின் செய்கையை அவிகாரியாகிய சூரியன்மீதேற்றி "செங்கமலவாண் முக மலர்த்துந்-துன்று கதிரோன்" எனக் கூறினா. (கஉ)

மின்பொருவு செங்கதிர் விரிந்திருள் விழுங்கும்
பொன்பிறழு மோருருளி னேழ்புரவி பூண்ட

மன்பெரிய தேரிலுறை வானவனை நோக்கி
யன்பொடு வணங்கவருள் செய்தன னகன்றான்.

(இ-ள்.) மின்னலையொத்த செவ்விய கிரணங்கள்விரிந்து, அந்தகாரத்தை யடக்குகின்ற பொன்போன்று பிரகாசிக்கும் ஒற்றைச்சக்கரமும் ஏழ்புரவியும் பூண்டிருக்கின்ற நிலைபெற்ற பெரிய இரதத்திலிருக்கும் சூரியபகவானைத் தரிசித்துச் (சிவசன்மா) ஆசையுடன் நமஸ்கரிக்கவும், (சூரியன் அவனுக்கு) அநுக்கிரகஞ்செய்து நீங்கிச் சென்றனன். எ - று.

“வினைமுற்றேவினையெச்சமாகலுங்-குறிப்புமுற்றெச்சமாகலுமுளவே” என்னும் சூத்திரத்தின்படியே “செய்தனனகன்றான” என்பதில் செய்தனன் என்னும் வினைமுற்று செய்து என்னும் வினையெச்சப் பொருளில்வந்து, தன போன்று உயர்திணை ஆண்பாற்படர்க்கை இறந்தகால வினைமுற்றாகிய அகன்றான் என்பதைக் கொண்டு முடிந்தது. (கங)

ஆதவ னகன்றிடலு மந்தண னுரைப்பான்
யாதுதவ மாற்றினர்க ளிவ்வுலகு சேர்வார்
போதல்புரி தேவனிலை யென்புகறி ரென்னக்
காதலொடு விண்டுகண நாதர்க ளுரைப்பார்.

(இ-ள்.) சூரியன்செல்லவும் சிவசன்மா (கணநாதர்களைநோக்கிச்)சொல்லுகின்றான். எத்தன்மையினவாகிய தவங்களைச்செய்தோர் இந்தஉலகத்தை அடைந்திருப்பார்கள்? (இப்போது இங்கிருந்து) போகின்ற சூரியபகவானது நிலைமை எத்தகையினது? (அவற்றைச்) சொல்லுங்கள் என்று கேட்க, விஷ்ணுவினது கணநாதர்கள் ஆசையோடு சொல்லுகின்றனர். எ - று. (கச)

பூதமைவை யுதனி புரந்திடுவன் யாவ
னோதமற முத்தொழி லியற்றிடுவன் யாவன்
வேதவடி வாய்த்தனி விளங்குமவன் யாவன்
மாதவவ வன்கொலிவ னென்னமறை கூறும்.

(இ-ள்.) பெரியதவங்களைச்செய்த சிவசன்மாவே! கேள். எவன் ஐம்பெரும்பூதங்களையும் ஒட்டற்றுக் காக்கின்றவனோ, எவன் குற்றம்நீங்கும்படிச் (சிருட்டி-திதி - சங்காரம் என்னும்) மூன்றுதொழில்களைச் செய்கின்றவனோ, எவன் வேதவடிவமாகச் சமானமறப் பிரகாசிக்கின்றவனோ அவன்தான் இச்சூரியன் என்று வேதங்கள் முறையிடும். எ - று. (கரு)

இன்னகதிர் வானவனை யீசனென வெண்ணிப்
பொன்னடி பணிந்தினிது பூசனை புரிந்தோர்
மன்னுவர்க ளிப்பதம் வழுத்தல்புரி யாதோர்
துன்னவரி தாகுமிரு ணுங்குலகு சேர்வார்.

(இ-ள்.) இப்படிப்பட்ட கிரணங்களையுடைய சூரியதேவனைச்சிவபெருமான் என்று மனத்தில் நினைத்து (அவனது) அழகிய திருவடிகளைவணங்கி இனிமையாகப் பூசைசெய்தவர்கள் இந்தச் சூரியலோகத்தில் நிலைபெற்றிருப்பார்கள்.

(அவவாறன்றிச் சூரியதேவனை) வணக்கஞ்செய்யாதவர்கள் நெருங்குதற்கு அரிதாகிய இருள் மிகுந்த நரகலோகத்தைச்சேர்ந்து வசிப்பார்கள். எ-று.

திருவாசகம்.

"நிலநீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன்
புலனாயமைந்தனோடெண்வகையாய்ப்புணர்ந்துநின்றான்
உலகேழெனத்திசைபத்தெனத்தானொருவனுமே
பலவாகிநின்றவாதோணோக்கமாடாமோ."—என்றபடியே சூரியன் சிவ

பெருமானது அஷ்டமூர்த்தங்களி லொன்றாதலானும், அவரது திரிநேத்திரங்களி லொன்றாதலானும், சூரியனைச் சிவபிரானாகவே பாவிக்கவேண்டும் என்பது. (கசு)

வேறு.

கதிய ளித்திடுங் காயத் திரியினை
யுதய காலையி லுச்சியின் மாலையில்
விதியி னோதல் விடுத்துறை கின்றவர்
பதித ராகுவ ரேழு பகலினே.

(இ-ள்.) (நற்கதியாகிய) மோட்சத்தைக்கொடுக்கின்ற காயத்திரி மந்திர ஜெபத்தைச் சூரியோதயகாலமாகிய காலைப்பொழுதிலும், சூரியன் உச்சியிலிருக்கும் (மத்தியானப்) பொழுதிலும், (சூரியன்அஸ்தமனமாகும்) மாலைப்பொழுதிலும், (ஆக மூன்றுகாலத்திலும்) முறையோடு ஜெபித்தல்விட்டு வசிக்கின்றவர்கள் ஏழு தினங்களில் பதிதராவார்கள். எ - று.

பதிதர் என்பது குலம் - சமயம் - ஆச்சிரமம் முதலியவற்றி னொழுக்கத்தி னின்றுந் தவறினோர். (கஎ)

வேறு.

பொருவருங் காயத் திரியினை யுதயம் பொருந்திடு மளவுநின் றுரைத்து
மருவுநண் பகலிற் பரிதியை நோக்கி நவின்றுபுன் மாலையம் பொழுதில
விரிகதி ருடுக்க டோன்றிடு காறும விழைவொடு மௌனமா யிருந்து
திரிதரு புலன்க ளடக்கினர் செபிக்கிற் செங்கதி ருலகிடைச் சேர்வார்.

(இ-ள்.) நிகர்சொல்லுதற்கரிய காயத்திரிமந்திரத்தைக் (காலையில் சூரியன் உதிக்குமெல்லையுஞ் செபித்தும், பொருந்திய நடுபபகலில் சூரியனைநோக்கிச் செபித்தும்,அழகிய இள மாலைக்காலத்தில் விரிந்த கிரணங்களையுடைய நட்சத்திரங்கள் தோன்றுமளவும் ஆசையுடன் மவுனமாகவிருந்து (விஷயங்களில் எக்காலத்தும்) உழலுகின்ற ஐம்புலன்களைப் (புறஞ்செல்லாமல்) அடக்கினவர்களாகியுஞ் செபித்தால் (அவர்கள்) சிவந்தகிரணங்களையுடைய சூரியலோகத்தைச் சேருவார்கள். எ - று.

புலன்கள் சிறிதும் சும்மாவிராமல் விஷயங்களிற்பட் டுழல்தலால் "திரிதருபுலன்கள்" எனக் கூறினார். (கஅ)

மைந்துடை மைத்தே காசுரர்த் தெறுவான் மாலையுங் காலையும் பகலு
மந்தண ருதவு மருக்கியப் புனலை யாதவ னினிதுவந் தருள்வான்

வாகிய சாஸ்திரங்களையும் அப்பியசித்துள்ளவன வேதியனாகமாட்டான். (ஆனால்) ஒப்பற்ற சிறப்பினையுடைய காயத்திரிமந்திரத்தை முறையோடு ஜெபித்தவன (எவ்வருணத்தவனாயினும் அவனே) வேதியனாவான். எ - று.

"கோசிகன காயத் திரிதனைச் செபித்ததா லன்றோ - அருமறைப் பிரம விருடியாய்ப் படைக்கு மருந்தொழிற் கொருவனா யமாந்தான்" என்பது.

காதிராசன் புத்திரனாகிய கோசிகன் வேட்டையாடும்படி வனஞ்சென்று பிரமரிஷியாகிய வசிட்டமுனிவர் தவச்சாலையை யடைந்து, அவர் காமதேனுவைக் கொண்டு செய்வித்த விருந்துண்டு, அப்பசுவைக்கேட்க, அவர் கொடாததால் கட்டிப்பிடித்தனன். அது உடலைச சிலிர்க்க பல மிலேச்சர் தோன்றி அரசன் சேனையை யழிக்க, அவன் புத்திரா நூற்றுவர் இது முனிவன் வஞ்சகமென்று போர்க்கெழ, அவர் விழித்துப்பார்க்கச் சாம்பராயினர். அதுகண்ட கோசிகன் முனிவருடன் போர்செய்து செயிக்கச் சகதியற்று "அரசா வல்லமையிலும் முனிவர் தவவல்லமை சிறந்துளதாதலின யானுந் தவஞ்செய்வேன்" எனறு அருந்தவஞ் செய்கையில், பிரமன் அவனது தவத்துக்கிரங்கி "நீ அரசமுனிவன்" என்றோதினன். மீண்டுந் தவஞ்செய்திருக்கையில், அயோத்திமன்னனாகிய திரிசங்கு தன தாசாரியராகிய வசிட்டரை யடுத்து "யான உடலோடு சுவர்க்கம் புகவேண்டும் என, வசிட்டர் "அவ்வாறே உன் வாழ்நாள் கழிந்தாகுக" என, திரிசங்கு "இப்போதே செய்விக்கவல்ல வேறொருவனைக்கொண்டு முடிப்பேன்" என, வசிட்டர் "நீ என்னைவிட்டு வேறே ஆசாரியனை விரும்பியதால் நீசனாகுக" என, திரிசங்கு அவ்வாறே நீசனாகிப் பலராலும் வெறுக்கப்பட்டு, தவஞ்செய்யும் அரசமுனிவன் பாலணுகித் தன கருத்தை யியம்ப, காதிசேய் "அவ்வாறே யாகுக" எனறு தன் தபோபலத்தால் "மேலேறுக" எனலும், திரிசங்கு உயர்ந்துசெல்லத் தேவர்கள் கண்டு "சீ சீ புலையா! இங்கு வராதே இறங்கு" என, வீழ்வதுபோல வரும் திரிசங்கு அபயம் கூற, கோசிகன், "இந்திரன்முதலிய தேவர்களும் உலகமும் யான் வேறே சிருட்டிப்பேன்" என்று சில பொருள்களைப் படைக்க, தேவர்கள் பயந்து கோசிகனபால் நண்ணி "நீ படைத்த பொருள்களும் அவ்வரசனும் நக்ஷத்திரமண்டலத்திலிருக்க" என வோதிப்போயினர். மீண்டுந் தவஞ்செய்கையில் அம்பரீஷன் தனது யாகப்பசுவைக் காணாமல் நரமேதயாகஞ்செய்யும்படி ரிசிக முனிவனுக்கும் கோசிகைக்கும் பிறந்த இரண்டாவது புதல்வனைப் பொருள்கொடுத்துப் பெற்றுவருகையில் அப்புத்திரன் தனது மாதுலனாகிய கோசிகனைக் கண்டு வருந்த இரண்டு மந்திரங்களை உபதேசித்து அவ னுயிரைக் காத்தனன். மேலுந் தவஞ்செய்கையில தேவர்கள் மேனகையை யனுப்ப அவளோடு சிறிதுகாலங் கூடிப் பிறகு அவளை விலக்கப் பினனும் அரம்பையை யனுப்பினர். அவளைப் பாறையாகும்படிச் சபித்து, செய்தற்கரிய பெருந்தவஞ்செய்கையில் பிரமதேவன் பிரசன்னமாகி "நீ பிரமரிஷி" என்று கூறினன் என்பதாம்.

கூர்மபுராணம்.

"சென்னிகீ ழாக வீழுந் திரிசங்கு வென்னும் வேந்தை
நின்னிலென் றுரைத்து வானி னிறுவிவா சவன்ற னோடும்

இன்னுமோ ருலகஞ் செய்வே னெனவெடுக் கணங்கள் விளைந்தோ
பன்னருஞ் சராசரங்கள் சிருட்டி படைத்தா னன்றே.

படைத்தலும் விண்ணோர் நகைத்துக் கோசிகன் பாலடைந் தேத்தி
அடக்கரும் புலத்தோய் நீயிவை படைத்தவை படைப்பு முன்னர்த்
திடப்படப் படைத்த யாவுந் தாமிரு சகத்தி லேதே
உடித்தொளிர் புவியின் பாங்கா வதிகமென வுரைத்தன போற்றி" — எனவும்,

"பேசருந் தவத்து முனிவர னுச்சி பிழைத்தது மம்புடைப் புறத்தே தோகை
மாசறு புவன மெங்கணும் புகையாய் வளைந்தது மட்டுவ ளுகைக்கும்
ஈசனு மேத்தி மகிழ்ந்தனம் பிரம விருடிநீ தவமென்று செல்லென
பாசடை கமலப் பொகுட்டினோ னகல்விம் பமதின சிட்டினை படைத்தான்"
எனவும், வருவனவற்றா லுணர்க. (உக)

கருதருஞ் சுடரு மலரினன் முகனுங் கருங்கடல் வண்ணனு மறையுந்
தெரிதரு காயத் திரியெனப் புகலவர் மறைகளு மங்ஙனஞ் செப்பும்
பரிசினற் காயத் திரிக்குமொள் ளொளிய பரிதிவா னவற்குமெஞ் ஞான
பொருவிலா வாச்சிய வாசக பாவ சம்பந்த முண்டெனப் புகலவார். றும

(இ-ள்.) நினைத்தற்கரிய சுடர்வடிவாகிய சூரியனும், தாமரைமலரில் எழுந்தருளியிருக்கும் நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவனும், கடல்போலுங் கரிய திருமேனியையுடைய விஷ்ணுமூர்த்தியும், வேதமும் (முதியோர்) உணர்ந்த காயத்திரிமந்திரமாவர் என்று பெரியோர் சொல்லுவார்கள். வேதங்களும் அவ்வாறு சொல்லுகின்றதன்மையால், காயத்திரி மந்திரத்திற்கும் ஒள்ளிய பிரகாசத்தையுடைய சூரியபகவானுக்கும் எக்காலத்திலும் சமானமில்லாத வாச்சிய வாசக பாவனையாகிய தொடர்ச்சி உள்ளது என்பதாக (மேலோர்) சொல்லுவார்கள்.

வாச்சியம்=பொருள். வாசகம்=சொல். சூரியன் பொருளும், காயத்திரி சொல்லுமாக விளங்கும் என்பார் "காயத்திரிக்கும் பரிதிவானவற்கும் வாச்சிய வாசகபாவசம்பந்தமுண்டு" என்றார். இது எதிர்நிரனிறைப்பொருள்கோள். (உஉ)

சிறந்தபல் லுயிர்க்கு மெண்பெருந் திசைக்கும் வியாபியாஞ் செங்கதிர்ச் செல்வன், பிறந்ததும் பிறவா நிற்பதும் பிறக்கப் படுவதும் பேசிலாங் கவனே, யறிந்துணர் காயத் திரிதனை யோதி யலர்கதிர்ச் செல்வனை யன்பா, னறுந்துணர் தூவிக் கைதொழு மவரே நண்ணுமப் பதியில்வீற் றிருப்பார்.

(இ-ள்.) மேம்பட்ட பலபிராணிகளுக்கும் பெரிய அஷ்டதிசைகளுக்கும் செவ்விய கிரணங்களையுடைய செல்வனாகிய சூரியன், சர்வவியாபியாவான். பிறந்திருப்பனவும், பிறக்கின்றனவும், இனிப் பிறப்பனவும் (ஆகிய பொருள்களெல்லாம்) ஆலோசிக்குமிடத்தில் அச்சூரியபகவானே. கற்று உணர்ந்த காயத்திரிமந்திரத்தைச் செபித்து, பரவிய கிரணச்செல்வனாகிய சூரியனை ஆசையுடன் வாசனை தங்கிய கொத்துக்களாகிய மலர்களாலருச்சனைசெய்து வணங்குகின்றவர்களே பொருந்திய இந்தப்பதவியில் வாழ்ந்திருப்பார்கள். எ - று.

வியாபி - நிறைந்தவன். (உங)

அருக்கபூ சத்தி லருக்கமூ லத்தி லருக்கவத் தத்திலுத் திரத்திற்
றிருக்கிளா ரருக்க வாரமென் பதனிற செழுஞ்சுடாப பரிதிவா னவனைக்
கருத்துற நினைத்து மெய்மமயிா பொடிபபக கைதொழு திருகணீா வார
மருக்கிளா மலாதூ யிறைஞ்சுநா தமது மனத்தினில விழைந்தனபெறுவார்

(இ ள்.) ஆதிவாரத்தில்வரும் பூசநட்சததிரத்திலும், ஆதிவாரததிலவரும் மூலநட்சததிரத்திலும், ஆதிவாரத்தில்வரும் அஸ்தநட்சததிரத்திலும், (ஆதிவாரததில்வரும) உத்திரநட்சத்திரத்திலும், செல்வமிகுந்த ஆதிவாரம் என்று சொலலப்பட்ட நாட்கள் எல்லாவற்றிலும், செழுமைதஙகியசுடராகிய சூரியதேவனை மனமபொருந்தக் கருதி, சரீரமுழுதும மயிாக்குசசெறிய வணங்கி, இரண்டுகண்களினின்றும் ஆனந்தபாஷபமசொரிய வாசனைபிகுநத மலாகளாலருச்சித்துப் பணிபவர்கள் தஙகள் இதயததில் விரும்பிய இஷ்டகாமியங்களை அடைவார்கள்.

அருக்கவாரம் எனபது சூரியனது வாரமாகிய ஆதிவாரம் இதுபானுவாரம் எனவும் பெயர்பெறும். (உச)

பூசமா தத்தி லருக்கவா ரத்திற் புலரியி னீரிடைப் படிந்து
மாசறு தான மோமநற செபங்கண மனமகிழ் சிறபபவாங் கியற்றிப்
பேசருங காமக் குரோதமவிட் டருளாற் பிறஙகுசெங் கதிரவற் றொழுவா
ரேசவில வனபபி லரமபையா மருவ விரவிநன் பதத்தில்வீற் றிருபபாா.

(இ-ள்.) தைமாதத்தில ஆதிவாரதினத்தில் விடியறகாலையில் நீரிலமூழ்கி, குற்றமற்ற தானங்களும்- ஓமமும்- நல்ல (காயத்திரிமுதலிய மந்திர)ஜெபங்களும்- மனக்களிப்பு அதிகரிக்கநடததி, சொல்லுதற்கரிய காமம்-குரோதம் (முதலிய ஆறு உட்பகைகளையும) நீக்கி, கிருபையுடன பிரகாசிக்கும் செவவிய கிரணங்களையுடைய சூரியனைவணஙகுகின்றவர்கள், குற்றமில்லாத அழகினையுடைய தெய்வமாதர்கள் தம்மை அணையும்படி நல்ல சூரியபதவியில (இருப்பிடங்கொண்டு) வாழ்ந்திருப்பார்கள். எ - று.

பூசமாதம் எனபது தைமாதம். மாதங்கள் ஒவவொன்றிற்கும் நட்சத்திரங்கள் ஒவவொன்று சிறந்துள்ளன. அவற்றில் பூசநட்சததிம் மகரமாதமாகிய தைமாதத்திற்கே சிறந்தது ஆதலின் தைமாதம் என்பதற்கு, அம்மாதத்திற் சிறந்த நட்சத்திரத்தின்பெயரால் பூசமாதம் என்றனா.

ஆறு உட்பகைகளாவன—காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், என்பனவாம். (உரு)

மருவிய வயனத் தருமறை கூறு மந்திரம் புகன்றுதென் புலத்தோர்க், குரியநற் கடன்கள் கழித்துளோர் நறுநெய் யுடன்றில வோமங்கள் புரிந்தோர், பரிவொடு கடவுட் பராயினோர் விளங்கு பரிதிபோன் றிலங்குருவெடுத்துப், பெருகுநோய் துன்ப மூபபிவை யொழிந்து பிறங்குமிப் பதத்தினி லுறைவார்.

(இ ள்.) பொருந்திய (இரண்டு) அயன காலங்களில், அரிய வேதங்கள் சொல்லுகின்ற (காயத்திரி) மந்திரத்தைச் செபித்து, இயமதிசை யடைந்த தமது பிதுர்க்களுக்குரிய நல்ல (தருப்பண முதலிய) கடன்களை முடித்தவர்களும், வாசம்

காட்டேற் றிடனு மரிநோக்கியிக் கள்வ ரேயோ
ஈட்டேற்ற வானோ ருடனுணருவ ரென்று தன்கை
நீட்டேற் றிடுசட் டுவங்கொண்டு நிருதர் சென்னி
வீட்டிச சுரருக் கமுதூட்டி விருந்து செய்தான்.

புன்னாக நாக மணிவானடி போற்றி நோற்றுச்
செந்நாக மோடு கருநாகத்தின செய்கை பெற்றுப்
பின்னாக முனனந் தமைக்காட்டிய பெற்றி யோனை
அந்நாக மீது மறைப்பாரமு துண்ட கள்வா."—எனபனவற்றானுணர்க.

இரவியை யராததீண் டெல்லையி லெறிநீர் யாவையுங் கங்கையை நிகர்க்கு, மருமறைக் கிழவ ரியாருநான் முகனைப் பொருவுவ ரரும்பொருளனைவையும், விரிசுடரப பைமபொன் போலுமவ் வேலை வீங்குநீ ராடுதலோமம, புரிதனற் ானம வழங்குத விரவி பதத்தினிற பொருந்துகாரணமாம.

(இ-ள்.) சூரியனை இராகுகேதுக்களாகிய) சர்ப்பங்கள் தீண்டுகின்ற (கிரகண) காலங்களில், அலைகள் மோதுகின்ற சலம் யாவும் கங்காசலத்தை யொக்கும். அரிய வேதஙகளுக் குரியவர்களாகிய அந்தணர் எல்லாரும் நானகுதிருமுகங்களையுடைய பிரமதேவனை ஒப்பாவா. அரிய எல்லாப் பொருள்களும் விரிந்த பிரகாசத்தையுடைய பசிய பொன்னைச் சமானமாகும் ; (ஆதலால) அக்கிரகணகாலத்தில், பெருகிய நீரில மூழ்குதலும்-ஓமஞ செய்தலும்-நலல தானங் கொடுத்தலும்- இந்தச் சூரிய பதவியிற் சேருதற்குரிய முகாநதரமாகும். எ - று. (உஅ)

ஆயிரங் கதிரோ னெனும்பெயர் முதலா வலர்கதிர்ப் பரிதியீ றாகத்
தூயநான் மறையு மியமபிய வெழுபா னுமமும் விதிமுறை துதித்து
மேயபே ரனபாற் கொழுமலர் தூவி விரைமலர்ச் சேவடி தொழுவார்
பாயிருள் பருகி யுலகெலாம் விளக்கும் பகலவன் பதத்தில்வீற் றிருப்பார்

(இ-ள்.) ஆயிரங்கதிரோன் என்று சொல்லப்படும் திருநாமமுதல் தொடங்கி,பரந்தகிரணஙகளையுடைய பரிதி எனனும் திருநாம மிறுதியாகவுள்ள,பரிசுத்தமாகியநான்குவேதஙகளும எடுத்துச்சொலலிய எழுபதுதிருப்பெயாகளாலும், நூல்களிலவிதிக்கப்பட்டகிரமத்தோடுதுதிசெய்து,பொருந்திய பேரன்புடன் செழித்த மலர்களாலருச்சித்து, வாசனைதஙகிய தாமரைமலா போன்ற சிவந்த (சூரியபகவானது) திருவடிகளை வணங்குகினறவர்கள், பரவிய இருளினை யடக்கிப் பூமிமுழுவதும் ஒளியைச் செய்கின்ற சூரியனது பதவியில் வாழ்ந்திருபபார்கள். எ - று.

"ஆயிரங்கதிரோ னென்பதுமுதலா வலர்கதிர்ப் பரிதியீ றாகத்- தூயநான் மறையு மியம்பிய வெழுபா னுமம்" என்பது எழுபது திருநாமங்களடங்கிய சூரிய மந்திரம்—இது குருமூலமாக உணருந்தன்மையது. (உகு)

செம்பின்வள் ளத்திற் றண்புன னிறைத்துச் செய்யசாந் தறுகுவெள் ளரிசி, வமபவி மூலரிப் போதுதூய் முழந்தாண் மண்ணிடை யூன்றி முன் னுரைத்த, வைம்பதோ டிருபா னுமமு மோதி யாங்கது சென்னி

மாட் டேத்தித், தமபோற் படக்கி யருக்கியங் கொடுப்போர் தயங்குமிப்
பததினிற் சார்வார்.

(இ-ள்.) செம்பாற் செய்த கிண்ணத்திற் குளிர்ந்த நீரை விட்டு, சிவந்த
சந்தனமும் - அறுகம்புல்லும் - வெள்ளரிசியும் - வாசனையுடன் முறுக்கவிழ்ந்த
அலர் மலரும் (ஆகிய இவற்றைச், சேர்த்து, முழங்காலை மடித்து பூமியில் ஊன்றிக்
கொண்டு, முனிவர் சொல்லிய எழுத்து [illegible] செபித்து, அச்செபிட்ட
உள்ளத்தைச் சிரமேற்கொண்டு, தமது [illegible] காத்து
(சூரியபகவானுக்கு) அருக்கியங் கொடுப்பவர்கள் விளக்குகின்ற இந்தச் சூரியபத
வியில் சேர்வார்கள். எ - று.

உள்ளம்=வட்டில் அல்லது கிண்ணம். (௨௦)

மன்னுபே ரொளிகட் குறைபுளாம் பரிதி வானவன் பெருமைமை
யாரோ,யின்னதென் றெடுத்து மொழிகுவ ரெமமா லியன்றன மொழிந்தன
மென்னாத், தன்னமா கணங்கண மொழிதல் கேட் டன்னார் தம்மொடு வி
ழைவினுங் ககன்று, சென்னெறி யதனிற் புரந்தர னுறைபு மூலகுகண்
டுளமகிழ் சிறந்தான்.

(இ-ள்.) நிலை பெற்ற மிகுதியாகிய பிரகாசங்களுக்கெல்லாம் இருப்பிடமா
கிய சூரிய தேவனது மேம்பாட்டை எத்தகையினர்தான இத்தன்மையது என்றெ
டுத்துச்சொல்ல வல்லவர்கள்?(ஒருவருமில்லை:ஆதலின்) எங்களால் சொல்லக்கூடுமா
னவற்றைச் சொன்னோம் என்று தன்னுடன் பொருந்திய விஷ்ணுகணநாதர்கள்
சொல்வது கேட்டு, அவர்களுடன் விருப்பத்தோடு அங்கிருந்து நீங்கி மேலேபோ
கும்வழியில் இந்திரன் வசிக்குந் தெய்வலோகத்தைச் சிவசன்மா பார்த்து மனதில்
களிகூர்ந்தனன். எ - று. (௨௧)

சிவசன்மா சூரியலோகங்கண்ட அ - ம.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௨௧.

பத்தாவது,

# சிவசன்மா தெய்வலோகங்கண்ட அத்தியாயம்.

காண்ட லோடும் விழிகள் களிப்புற
வீண்டு தோன்று முலக மியாதென
மாண்ட நற்றவன் கேட்டிட வான்றொட
நீண்ட மாயன் கணங்க ணிகழ்த்துமால்.

(இ-ள்.) (சிவசன்மா தெய்வலோகத்தைப்) பார்க்கவும், கண்கள் சந்தோஷிக்கும்படி இவ்விடத்தில் காண்கின்ற உலகம் என்னவுலகம்? என்று மாட்சிமைப்பட்ட தவங்களைச்செய்த சிவசன்மா கேட்க, ஆகாயமளாவும்படி உயர்ந்த (திரிவிக்கிரமாவதாரங்கொண்ட) விஷ்ணுமூர்த்தியினது கணத்தலைவர்கள் சொல்லுகின்றனர். எ - று.

"வான்றொட நீண்டமாயன்" என்பதன் சரிதம் முன கூறப்பட்டுளது.

களைத்து வண்டுஞ் சுரும்புங் கஞலிய
தளைப்பொ லந்தரு நண்ணிவ் வுலகினை
நினைப்ப ருந்தவப் பேற்றி னிலைபெற
மனத்தி னலவகுத் தான்மய னென்பவே.

(இ-ள்.) பெண்வண்டுகளும் ஆண்வண்டுகளும் ஒலித்துக்கொண்டு நிரம்பியுள்ள குளிர்ச்சிதங்கிய அழகினையுடைய பஞ்சதருக்கள் பொருந்திய இத்தெய்வலோகத்தை, நினைத்தற்கரிய தவப்பலனால் நிலைபெற்று விளங்கும்படி மயன் (என்னும் விசுவகன்மன) தனது மனோதியானத்தால் சிருட்டித்தனன். எ - று.

பஞ்சதருக்கள் - அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பனவாம். (உ)

மன்பெ ருந்தரு மாணிழை நல்கலாற்
பொன்செய் கொல்லரு மில்லை புதியவா
யன்பிற லுய்ப்பன வானின நல்கலா
லின்ப வுண்டி யடுநரு மில்லையால்.

(இ-ள்) (இத்தெய்வலோகத்தில் வசிப்போர்க்கு)நிலைத்திருக்கின்ற பெரிய கற்பகவிருட்சமானது மாட்சிமைப்பட்ட ஆபரணங்களை (நினைத்தவகையே) கொடுத்தலால்,(ஆபரணங்களைச்செய்கின்ற)பொற்கொல்லருமில்லை. காமதேனு ஆசையுடன் புதிதாக உண்ணத்தக்க பொருள்களைத் தருதலால், இனிமையாகிய உணவினைச் சமையல்செய்வோர்களு மில்லை. எ - று.

பொன்செய்கொல்லர் - பொற்பணிசெய்வோர்; தட்டார். (ந)

அண்ணல் யானை யடலயி ராவத
மண்ணு செய்ய மணிகள்சிந் தாமணி
யுண்ணு முணவு யமிர்த முயர்பொழில்
கண்ணா கன்சினைக் கற்பகச் சோலையே.

(இ-ள்.) (இந்நகரத்திலுள்ள) பெருமைதங்கிய யானையோ பராக்கிரமம் பொருந்திய ஐராவதமாகும். அழகினைச்செய்கின்ற மணிகளோ சிந்தாமணிகளாகும். புசிக்கின்ற உணவோ தேவாமுதமாகும். உயர்ந்த சோலையோ இடமகன்ற கிளைகளையுடைய கற்பகச்சோலைகளாகும். எ - று.

ஐராவதம்—நான்குகொம்புகளையுடையதாய்த்தேவேந்திரனிடத்திலுள்ள வெள்ளையானை. (ச)

வாம மேகலை யார மங்கையர்
தாம வீதிகள் யாவுந் தமனியஞ்
சேம நற்குடி யாவையுந் தேவர்கள்
காம தேனுக் கறவைக ளென்பவே.

(இ-ள்.) (இங்குவசிக்கும்) அழகிய மேகலாபரணத்தையணிந்த மாதர்களோ அரம்பாஸ்திரிகள். மலர்மாலைகட்டிய தெருக்களோ எல்லாம் பொன்மயம், சுகமாகவாழ்ந்திருக்கும் நல்லகுடிகளோ எல்லாரும் தேவர்கள். கறவைப்பசுக்களோ காமதேனுக்கள் என்று சொல்லுவர். எ - று.

மேகலை - எண்கோவையணி; இது மாதர்கள் இடையிலணிவது. (ரு)

கரும ணித்தொகை கள்ளிருள் காட்டலும்
விரிப சும்பொ னிளவெயில் வீசலு
மருவ லன்றி வளங்கெழு மாநகாக்
கிரவு மில்லை பகலுமிங் கில்லையால்.

(இ-ள்.) இவவிடத்தில் நீலரத்தினக்கூட்டங்கள் மிகுந்த இருளைச்செய்யவும், ஒளிவீசும் பசியபொன்னானது இளவெயிலைவீசவும், பொருந்துதலல்லாமல் வளப்பமிகுந்த பெருமைதங்கிய (இந்த அமராவதி என்னும்) நகரத்திற்கு (வேறே இயற்கையாகவுண்டாகும்) இராத்திரிக்காலமுமில்லை. பகற்காலமுமில்லை. எ - று.

திருவ நீணகர் காக்குந் திறலினோன்
மருவு மேழ்திசைப் பாலர் மணிமுடி
பொருது சேர்ந்து வெயிற்கதிர் பூத்தொளி
ரரிம ணிக்கழ லிந்திர னென்பவே.

(இ-ள்.) செல்வம்பொருந்திய பெரிய (அமராவதி) நகரத்தை அரசுசெய்யும் பராக்கிரமமுடையோன் (யாவனென்றால்), பொருந்திய (அக்கினி-இயமன் - நிருதி-வருணன் - வாயு - குபேரன்—ஈசானன் என்னும்) எழுதிக்குப்பாலகர்களது அழகிய கிரீடங்கள் (நமஸ்கரிக்கையில்) படுதலினால் சிவந்து, வெயில்போலுங் கிரணங்களைவீசி ஒளிசெய்யும் நவமணிகள்பதித்த வீரக்கழலையணிந்த தேவேந்திரன் என்று சொல்லுவர். எ - று. (எ)

புரவி மாமக நூறு புரிந்துளோர
கருநெ டுங்கட்பு லோமசை கண்கவர்
வருமு லைத்தடம் புல்லிபிம மாநகர்க்
கரச ராக வினிதிருந தாள்வரால.

(இ-ள்.) பெருமைதங்கிய நூறு அசுவமேதயாகங்கள் செய்துமுடித்தவர்கள், கருமையாகிய நீண்டகணகளையுடைய இந்திராணியினது (கண்டோர்) கண்களைக் கிரகிக்கும் தனஙகளைத்தழுவி, இச்சிறந்த நகரத்திற்கு அரசர்களாக இனிமையோடு (சிஙகாசனத்தில்) வீற்றிருந்து செங்கோல்செலுத்துவர். எ - று.

புலோமசை - இந்திரன்மனைவி. யாவனொருவன் நூறு அசுவமேதயாகங்களை முடித்துச் சப்தரிஷிகள் சிவிகைதாங்க அமராவதியடைந்து சிங்காதனத்திலிருக்கின்றனனோ அவனுக்கு மனைவியாகவேண்டியவள். இதனை.

திருவிளையாடற்புராணம்.

"மாதவ ரெழுவர் தாஙக மாமணிச் சிவிகை யேறிப்
போதரி னவனே வானோர் புரந்தர னவனே யுனறன்
காதல னுகு மென்முன கைதொழு ததற்கு நேர்ந்தம்
மேதகு சிறப்பா விஙகு வருகென விடுத்தா னே."—என்பதனுனுணர்க.()

ஆன்ற வேத மறைதரு முப்பத்து
மூன்று கோடி யமரா முறைமுறை
சான்ற கேள்விச் சதமகன் பூங்கழல்
வான்று ணைப்பதம் போற்றி வணங்குவார்.

(இ-ள்.) மேன்மைதங்கிய வேதங்கள்சொல்லுகின்ற முப்பத்துமுக்கோடி தேவர்களும், வரிசைவரிசையாக அதிகரித்த (நீதிநூல்களினது) ஆராய்ச்சியையுடைய இந்திரனது பொலிவுதங்கிய வீரக்கழலையணிந்த சிறந்தபாதங்கள் இரண்டினையும் துதித்து நமஸ்கரிப்பாகள். எ - று.

தேவர்வகை முப்பத்துமூன்று. அவையாவன—ஆதித்தர்- பன்னிரண்டு, அச்சுவினிகள் - இரண்டு, உருத்திரர் - பதினொன்று, வசுக்கள்-எட்டு என்பதாம்.

வெருவ லின்றி மருமத்து வேனுழைந்
துருவ வோட்டி னுயிர்விடு மன்னவ
ரரும கம்புரி விப்பவ ராற்றுந
ரொரிசெய் பொன்னிலத் திந்நக ரெய்துவார்.

(இ-ள்.) யுத்தகளத்தில் பயப்படுதலில்லாமல் மார்பினிடத்தில் வேலாயுதமானது நுழைந்து உருவிச்செல்லும்படிப் (போர்செய்து) உயிர்நீங்கி இறந்த அரசர்களும், அருமையாகிய யாகங்களைச் செய்விப்பவர்களும், செய்துமுடிப்பவர்களும் (ஆகிய இவர்களெல்லாம்) ஒளிசெய்கின்ற பொன்னுலகமாகிய தெய்வலோகத்தில் இந்த (அமராவதி) நகரத்தில் வீற்றிருப்பார்கள். எ - று. (கூ0)

துலங்கு செம்பொற் றுலைபுகு மன்னவ
ரலங்கு ளைப்பரி நன்மக மாற்றுந

நிலங்கு பைம்பொ னளப்பில விந்துளோர்
நலங்கொ ளிவ்வுல கத்திடை நண்ணுவார்.

(இ-ள்.) விளங்குகின்ற செம்பொன்னாலாகிய துலாபுருஷ அரசர்களும், அசைகின்ற புறமயிரையுடைய நல்ல குதிரையைக்கொண்டு பண்ணுகிற அசுவமேத யாகஞ் செய்கின்றவர்களும், பிரகாசிக்கின்ற அளவிறந்த பசும்பொன்னைத் (தான மாகக்) கொடுத்தோர்களும், மேன்மையைக்கொண்டிருக்கும் இந்தத்தெய்வலோகத்தில் பொருந்தி வாழ்வார்கள். எ - று.

"செம்பொன் துலை புகுதலாவது"—தராசில் நின்று தன்னளவுகொண்ட எடையையுடைய பொன்னைத் தானமாகக்கொடுப்பது. என்பதாம். (கக)

தவமி ழைத்துந் தனிமக மாற்றியும
புவிக ளேழும் புரந்திடு வேந்தரு
மவுன சித்த ரரக்க ரியக்கர்மற்
றெவரு மிந்நக ரெய்த விரும்புவார்.

(இ-ள்.) தவஞ்செய்தும், ஒப்பற்றயாகங்களை நடத்தியும், ஏழுலகங்களையுங் காக்கும் மன்னவர்களும், மவுனம்பொருந்திய சித்தர்களும், இராட்சதர்களும், இயக்கர்களும், மற்றுஞ்சொல்லப்பட்ட எல்லாக் கணத்தவர்களும் இந்நகரத்தை (வாசஸ்தானமாக) அடைய இச்சிப்பார்கள். எ - று.

மற்றெவரும் என்பது சித்தர் அரக்கர் இயக்கர் நீங்கிய மற்றைப் பதினைந்து கணத்தவர்களை. (கஉ)

எனவி ளம்புதல் கேட்டியன் மாதவன்
றனைவி லேகு நெறியினோர் தொன்னகர்
முனமவி ளங்கிய தியாது மொழிகென
வினவ லுங்கண நாதர் விளம்புவார்.

(இ-ள்.) என்று (விஷ்ணுவின் கணத்தலைவர்கள்) சொல்லுதலைக்கேட்டு, பெருமைதங்கிய தவங்களைச்செய்த சிவசன்மா விமானமோடுசெல்லும் மார்க்கத்தில், ஒருபழமையாகிய நகரம் எனக்குமுன்னே விளங்கியது. இது என்ன நகரம் சொல்லவேண்டுமென்று கேட்கவும், கணநாதர்கள் சொல்லுகின்றனர். எ - று.

ஈது பாவக லோக மெரிபுகு
மாதர் வேள்விக ளாற்றுமறையவர்
சீதந் தீர்ப்பன நல்குந் திறத்தினோ
ராத ரத்திவ் வுலகி னடைவரால்.

(இ-ள்.) இது அக்கினிலோகம். (கணவனிறத்தலாலாவது, தமக்குநேர்ந்த பழிப்பைச் சகியாவாற்றலாவது (அக்கினிப்பிரவேசஞ் செய்திறந்த மாதர்களும், யாகங்களைச்செய்யும் வேதியர்களும், குளிர்ச்சியைத்தீர்க்கத்தக்க பொருள்களைத் (தானமாகக்)கொடுக்கும் தன்மையுடையோரும், ஆசையோடு இவ்வுலகத்திற் சேருவார்கள். எ - று.

பாவகன் = அக்கினி. (கச)

விணனு ளோரு மிவனுகர் மிச்சிலே
புண்ண வேணடிவ ரொணபிறைக் கண்ணியன்
கணனு மீஙகிவ னின்ன கடவுளை
பெணனு ருதவா பாழ்நர கெய்துவார்.

(இ-ள்.) தேவர்களும் இவவக்கினிபகவான் உண்ட எச்சிலையே புசிக்க விரும்புவார்கள். ஒளிபொருந்திய பிறைச்சந்திரனை மாலையாகத்தரித்த சிவபெருமானது திருக்கண்களுளொன்றாகிய அக்கினிக்கண்ணும் இவனாகும்; ஆதலால் இந்த அக்கினிதேவனைத் துதியாதவர்கள் பாழ்நரகத்தை அடைவார்கள். எ - று.

இந்த வெந்தழற் செல்வனுக் கீன்றரு
டந்தை யாரொத் தவமுயன் றிபபதம்
வந்த டைந்தனன் கூறுமின மற்றென
வந்த ணாளனுக் காஙகவர் கூறுவார்.

(இ-ள்.) (என்று சொல்லிய கணநாதர்களைப்பார்த்து) வெவவிய நெருப்புக்கிறைவனாகிய இந்த அக்கினிதேவனைப் பெற்றருளிய தகப்பன்யாவன்? (இவன்) எத்தன்மைத்தாகிய தவஙகளைச்செய்து இந்த (அக்கினி) பதவியைப்பெற்றான்? (அவற்றை) சொல்லுங்கள் என்று வினவ, சிவசன்மாவுக்குக் கணநாதர்கள் சொல்லுகின்றார்கள். எ - று.

“மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை-யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.” என்னுந் திருக்குறளின்படியே, அக்கினிபகவானது உயர்ந்த பதவியைப்பார்த்து “ஈன்றருள் தந்தையார்?” என வினவலாயிற்று. (கசு)

கொன்றை வேணிக் குழகனுக் கன்பினன்
மன்ற நற்றவ மாற்றி யரும்புலன்
வென்று நோற்ற புகழ்விசு வாநர
னென்று ளானொ ரிருபிறப் பாளனே.

(இ-ள்.) கொன்றைமலர்மாலையை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு அன்பனாகி, நிலைபெற்ற நல்லதவங்களைச்செய்து, அரிய ஐம்புலன்களையுஞ் செயித்து, மேம்பட்ட புகழினையுடைய விசுவாநரன் என்று பெயர்பெற்ற பிராமணன் ஒருவன் இருந்தான். எ - று. (கஎ)

பெருமை சான்ற பிரம சரியத்தின்
மருவு நாளின் மறைபயி லந்தண
னரிதி னாற்றுறு மாச்சிர மங்களி
னுரிய தியாதென வுள்ளத்தி லெண்ணினன்.

(இ-ள்.) வேதங்களைக் கற்றுணர்ந்தவிசுவாநரன் என்னும் வேதியன் மேம்பட்ட பெருமையையுடைய பிரமசரிய ஆச்சிரமத்தில் பொருந்தியிருக்கும் காலத்தில், அரிதாகச்செய்கின்ற ஆச்சிரமங்களில் நன்மையையுடையது எந்த ஆச்சிரமம் என்று தனதுமனத்தில் ஆலோசித்தனன். எ - று. (கஅ)

இறந்து ளோர்க்கு மிரவலாக் குந்தனி
துறந்து ளோர்கட்குந் துப்புர விதலா
லறந்த வாதுய ரிலற யாற்றுதல
சிறந்த தென்ன வினிதுளந் தெறிறுன்.

(இ-ள்.) (தனகுடும்பத்தில்) இறந்துள்ள பிதுர்களுக்கும், யாசகர்களுக்கும், (இல்லறவாழ்க்கையை யொழித்த) ஒப்பில்லாத துறவிகளுக்கும், முறைபோகிகொடுத்தலால் தருமமாக்கத்தவறாமல் உயர்ந்த இல்லறதருமத்தை நடத்துதல் நான்கு ஆச்சிரமங்களிலும் சிறப்புடையதென்று (விசுவாநரன்) தன்மனதில் இனிமையாகத் தெளிந்தனன். எ-று.

உயர் இல்லறம் எனபதனை "இல்லறமல்லது நல்லறமன்று" என்னும், ஒளவையார் திருவாக்கானும், இச்செய்யுளின் கருத்தைத் "துறந்தார்க்குத் துவ வாதவர்க்கு மிறந்தார்க்கு - மில்வாழ்வா னெனபான் றுணை." என்னும் திருவள்ளுவநாயனார் திருவாக்கானுமுணர்க. (கக)

ஏச லன்றி யியம்பிய நாள்களின்
மாசில் கற்பின் மனையவட் சேர்ந்திடல்
பேசு கின்ற பிரம சரியமென்
றூசில் வேதங்க ளியாவு மறையுமால்.

(இ-ள்.) பழித்தலற்றுக் குறிக்கப்பட்ட தினங்களில் களங்கமில்லாத கற்பினையுடைய தனது மனையாட்டியைக் கலந்திருத்தல் (யாவரும் புகழ்ந்து) ஓதுகின்ற பிரமசரிய ஆச்சிரமம் என்று குற்றமில்லாத எல்லாவேதங்களும் சொல்லுகின்றன. எ-று.

ஆசாரக்கோவை.

"உச்சியம் போழ்தோ டிடையாம மீரந்தி
மிக்க விருதேவர் நாளோ டுவாத்திதிநாள்
அட்டமியு மேனைப் பிறந்தநா ளிவவனைத்தும்
ஒட்டா ருடனுறவின் கண்."—என்றபடியே, உச்சிவேளை, நடுராத்திரி, காலை, மாலை, திருவாதிரை, திருவோணம், பூரணை, அட்டமி, தாம் பிறந்தநாள் என்று விலக்கப்பட்ட நாட்களைநீக்கி விதிக்கப்பட்டநாட்களில்மாத்திரம் மனைவியைச் சேரவேண்டுதலின் "இயம்பிய நாட்களில் மாசில் கற்பின் மனையவட் சேர்ந்திடல் பிரமசரியம்." என்றார். (உ0)

இல்ல றத்தி னியைந்துங் கிளையொடும்
புலலிப் பாத்துண லீத்தவர் பூந்திரை
மல்கு நீர்படி யாதவர் மாண்பொரு
ணல்கி டாரிவ ரோர கெய்துவார்

(இ-ள்.) இல்லறவாழ்க்கையிற் பொருந்தியிருந்தும் சுற்றத்தாரோடு அளவளாவிப் பாகித்து உண்ணுதலை யொழித்தவர்களும், பொலிவுதங்கிய அலைகள் மிகுந்த தீர்த்தங்களில் மூழ்காதவர்களும், மாட்சிமையுடைய பொருளைத் (தன்

ளிடத்துற்றோர்க்குக்) கொடாதவர்களும் (ஆகிய) இவர்களே நரகத்தை யடைவார்கள். எ - று.

"அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக் - கோடின்றி நீர்நிறைந் தற்று." எனவும், "காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு - மன்னநீ ராக்கே யுள." எனவுங்கூறிய திருக்குறளின்படியே, இல்வாழ்வோர் சுற்றந்தழுவவேண்டுதலின் அவ்வாறு செய்யாதவர்களும், "கடவுண்மா நதியுள வவற்றிற் காதலாற் - படிகுந ரழிவிலாப் பததறிற் சேர்வரால்" என இந்நூலில் வருதல்போல, தீர்த்தஸ்நானஞ்செய்தவர்கள் பாவமொழிந்து முத்தியுறுவராதலின் அவ்வாறு மூழ்காதவர்களும், "இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு - நல்லாற்றி னின்ற துணை." என்னுந் திருக்குறளின்படியே தருமஞ்செய்யவேண்டுதலின் அவ்வாறு செய்யாதவர்களும் ஆகிய இவர்களெல்லாம் நரகடைவர் என "இல்லறத்தினியை ந்துஞ் * * * * நரகெய்துவர்" என்றார். (உக)

அரிய பூமபுன லாடிய நாண்முதன்
மருவு பன்னிரு நாளு மணந்திட
லொருவ னிற்பிழை யாம லொழுகுதல்
பெருமை சான்ற பிரம சரியமே.

(இ-ள்) (மாசருதுவடைந்து மூன்றுநாள் விலகியிருந்து) பொலிவுதங்கிய அரிய நீரிலமூழ்கிய தினம்முதலாகப் பொருந்திய பன்னிருதினங்களிலும் (தனது மனைவியைக்) கலத்தலும், ஒருவனது மனைவிபால் (மனத்தாலாயினும்) தவறுமல் நடத்தலும், பெருமையிருந்த பிரமசரியநிலையாகும். எ - று.

"பூம்புன லாடிய நாண்முதல் மருவு பன்னிரு நாளு மணந்திடல்." எனக் கூறிய தென்னெனின், மாதா பூப்படைந்தது முதல் மூன்றுதினம் பிரஷ்டையாக விருப்பினும் காமவிச்சையாற் கலந்தால் முதல்நாளில் நாயகன் சண்டாளத்துவ தோஷமுற்று நாசமடைவான். இரண்டாநாள் புணரில் நாயகனுக்குப் பிரம்மகத்தி தோஷமும், நாயகிக்கு நாசமுமுண்டாம். மூன்றாநாள்புணரில் நாயகனுக்குக்கிராம சண்டாளத்துவ தோஷமும், கருப்பத்துக்கு நாசமும்வரும். ஆதலால் அம்மூன்று நாட்களையும்விலக்கி, "பூம்புனலாடிய நாள்முதல" என்றும், "பிறன்மனை நயவா னறன்மனை வாழ்க்கைக்கு, வரையா நாளின மகப்பேறு குறித்துப், பெருநலந் துய்க்கும் பெற்றித் தன்றே" என்னும் குமரகுருபரசுவாமிகள் திருவாக்கின்படியே மாதர்கருப்பமெய்துங்காலம் அதற்குமேல் * பன்னிரண்டு நாட்களேயாம் ஆதலின் "பன்னிருநாளு மணந்திடல்" என்றார். இதனை,

ஆசாரக்கோவை.

"தீண்டாநாண் முந்நாளு நோக்கார்நீ ராடியபின்
னீராறு நாளு மிகவற்க வென்பதே
பேரறி வாளர் துணிவு."—எனவும்,

* பன்னிருநாளுள்ளும், ஒற்றைப்பட்ட தினங்களிற் புணரில் பெண்சிசுவும், இரட்டைப்பட்ட தினங்களிற் புணரில் ஆண்சிசுவும் கருப்பமெய்துமென்பது மதங்கம உடன்பாடு.

அனைத்து நீத்தவ ராகியு மொன்றினை
மனத்தி னால்விழைந் தோர்மனை வாழ்குந
ரெனைத்து ணவளித் தாலுமற் றினபுறா
நினைபப ருந்தவ நீத்த பதிதரே.

(இ-ள்.) எல்லாவற்றையும் ஒழித்த சன்னியாசிகளாயிருந்தும் ஒரு பொருளை மனததால் விரும்பியவர்களும், இல்வாழ்க்கையிலிருப்போர் எவவளவு மிகுதியாகிய உணவினைக் கொடுத்தாலும் திருப்தியடையாதவர்களும், (ஆகிய இவர்கள்) நினைப்பதற்கரியதவத்தை ஒழித்த பதிதராவார்கள். எ - று.

பதிதர்=சமயாசார தருமந்தவறினோ. (உசு)

இல்ல றத்தினு யர்ந்ததொன் றில்லெனத்
தொல்லை நான்மறை யாளன் றுணிவுறு
முலலை மூரன் முகிழ்முலைக் கொவ்வைவாய்
வல்லி தன்னை மணம்புரிந் தானரோ.

(இ-ள்.) கிருகஸ்தாச்சிரம தருமத்தைக்காட்டிலும் மேம்பட்டதாகிய ஆச்சிரமம் ஒன்றுமேயில்லை என்று பழமையாகிய நானகுவேதங்களையு முணர்ந்த விசுவாநரன் மனந்துணிந்து, முல்லையரும்பினை நிகாத்த பல்வரிசையும், அரும்புகின்ற தனத்தையும், கொவவைக்கனியைபபோன்ற வாயையுமுடைய வல்லிக்கொடியையொத்த ஒருபெண்ணை விவாகஞ்செய்து கொண்டனன். எ - று. ()

மனைய றந்திறம் பாது மறையவன்
புனைசெய் மேகலை யோடுமெ பொருந்துநாட்
கனையி ருட்குழற் கற்புடைக் காதலி
முனைவ கேட்டி யெனமொழி வாளரோ.

(இ-ள்.) (விசவாநரன் என்னும்) வேதியன் இல்லறதருமந் தவறாமல், அழகுசெய்கின்ற மேகலாபரணத்தையணிந்த மனைவியுடன வாழ்நதிருக்குங்காலத்தில், (ஒருநாள்) அதிகரித்த இருளையொத்த கூந்தலையும் கற்பையுமுடைய மனைவியானவள் நாயகனே! கேட்பாயாக என்று (பின்வருமாறு) சொல்லுகின்றனள்.

மேகலை - எண்கோவையணி; இதனை,

"எண்கோவை மேகலை காஞ்சி யிருகோவை
பண்கொள் கலாபமிரு பத்தொன்று—கண்கொள்
பருமம் பதினன்கு முப்பத் திரண்டு
விரிசிகை யெனறுணரற் பாற்று."—என்பதனு னுணாக. (உஅ)

அடிக ணின்னரு ளெய்தி யடியனே
னெடிவில செல்வ முலப்பில பெற்றனன்
வடவ ரைச்சிலை யானன்ன மைந்தனைக்
கடிதி னலகெனக் கைதொழு தேத்தினள்.

(இ-ள்.) நாயகரோ! அடியேன் தேவரீரதுகிருபையைப் பெற்றுக் கெடுதலில்லாத செல்வம் அளவிறந்தனவாக அடைந்திருக்கின்றனன் (எனினும், புத்தி

ரட்பே றற்றவனாக விருக்கின்றமையால்) மேருமலையை வில்லாகவுடைய சிவ பெருமானையொத்த ஒருபுத்திரனைத் தேவரீர் விரைவில் எனக்குக் கொடுத்தருள வேண்டும் என்று வணங்கிச் சொல்லினள். எ - று.

"தம்பொருளென்பதம் மக்க ளவர்பொருள்-தந்தம் வினையான் வரும்." என்னுந் திருக்குறளின்படியே ஒருவருக்குரிய முக்கியமானசெல்வம் புத்திரராதலின் "மைந்தனைக் கடிதெனக்கு" என்றாள் எனக்கூறினார்.

"வடவரைச்சிலையான்" என்பது-சிவபெருமான் திரிபுரதகனஞ்செய்யச் சென்றபொழுது மேருமலையை வில்லாகவளைத்து, ஆதிசேடனாகிய சர்ப்பத்தை நாணாக ஏற்றி,விஷ்ணுவை அம்பாகக்கொண்டு நின்றனர் என்பதாம்.—இதனை,

"மேருவி லாயத னாரா வாரொடு வெங்கணை மாலரியாய்
விரிதலை யுலகந் தேரா யதினுறு மிருசக டிருசுடராய்
ஆரண நாலும் பரிபா யம்புய னமைவுறு சாரதியாய்
அதினீ யுற்றிக லழியா முப்புர மட்டிடு மக்காலில்
சீருறு மூவர்க ளழியா துன்னடி சேரா நின்றனரால்
சிந்தையி லுனைமற வாதவர் தம்மைச் சேர்விலை யெவரோகாண்
வேணிக றுக்தொடை மாதொரு பங்குறை வெற்பே கற்பகமே
வேதகி ரிப்பவ ரோகவ யித்திய வேணிமு டிக்கனியே."— என்னும்

**சிதம்பரசுவாமிகள்** திருவாக்கானுணர்க. (உக)

அரனை யன்ன மகவை யளித்தியென்
றுருவ மேகலை யாளிங் குரைத்தது
கருதி லின்னவள் சொல்லன்று கண்ணுதற்
றிருவு ளச்செய லாமென்று தேறினான்.

(இ - ள்.) அழகிய மேகலாபரணமணிந்த இவள் சிவபெருமானையொத்த குழந்தையைத் தருவாயாக என்று இவ்வகையாகக் கூறியதை எண்ணுமிடத்தில், இவள் தானே சொல்லியதல்ல; நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானது திருவுள்ளச் செய்கையாகும் என்று (விசுவாநரன்) தனக்குள்ளே மனத்திற் றுணிந்தனன். எ - று.

"கண்ணுதல்" நெற்றியிற் கண்ணையுடையவர். அதாவது-ஒருகாலத்திற் திருக்கைலாயகிரியில் ஓர் சோலைநடுவில் விளங்கும் பொன்மண்டபத்தில் சிவபெருமானும் உமாதேவியாரும் எழுந்தருளியிருக்கையில், தேவியார் ஓர் திருவிளையாடலைக் கருதிப் பெருமானுக்குப் பின்வந்து இரண்டு திருக்கரங்களாலும் பெருமானது திருவிழிகளைப்புதைக்க, அவ்விழிகள் சூரியசந்திரராதலின் உலகெங்கும் இருண்டு உயிர்களெல்லாம் தத்தமக்குரிய செயல்களைக்கைவிட்டு வருந்தின. அக்காலத்திற் பெருமான் உயிர்கள்மேற் கருணைகூர்ந்து நுதற்கண் திறந்தனர். என்பதாம்.—இதனை,

கந்தபுராணம்-தட்சகாண்டம்-ததீசியுத்தரபடலம்.

“ஈசனை யொருஞான் றம்மை யெழில்பெறு கயிலைக் காவிற்
டேசல ராட லுன்னிப் பின்வரா விழியி ரண்டுந்
தேசுறு கரத்தாற் பொத்தச் செறிதரு பவனம் யாவு
மாசிருள் பரந்த தெல்லா வுயிர்களும் வருத்தங் கொள்ள.

ஓங்குதன் னுதலி னாப்ப ணொருதனி நாட்ட நல்கி
யாங்கது கொண்டு நாத னருள்கொடு நோக்கி யாண்டு
நீங்கரு நிலைமைத தாகி நின்றபே ரிருளை மாற்றித்
தீங்கதிர் முதலா னோர்க்குச் சிறந்தபே ரொளியை யீந்தான்.” என்னுஞ்
செய்யுட்களாலுணர்க. (௫0)

மைய கணணி மகவளிப் பேனுளத்
தைய மெய்தலென் றுற்றி யருநதவஞ்
செய்ய வெண்ணித் திரைபொரு கங்கைசூழ்
பொய்யில் காசியிற போயடைந் தானரோ.

(இ-ள்.) (விசுவாநரன்) மைதீட்டிய கணகளையுடையவளே! அவ்வாறே குழந்தையைததருகின்றேன் (இதுவிஷயத்தில்) உனது மனத்தில் சநதேகமடையாதே எனறு ஆறுதல்செய்து, அருமையாகிய தவஙகளைச்செய்யும்படிக் கருதி, அலைகள மோதுகினற கங்காநதி சூழ்ந்திருக்கும் குற்றமில்லாத காசி க்ஷேத்திரத்திற்போய்ச் சோநதனன். எ-று. (௫௧)

மாசி லாத மணிகன்னி கைப்புன
லாசில வேதிய னுடிமுத் தாபமுந்
தேசி னீக்கித் திருவளர் காசிவா
ழீசர் யாரையு மேத்தி யிறைஞ்சினன்.

(இ-ள்.) குற்றமில்லாத விசுவாநரன் என்னும் வேதியன களங்கமிலலாத மணிகனனிகையென னுந்தடாகத்தினது நீரில ஸநானஞ்செய்து,(அம மணிகன்னிகைஸ்நான)மகததுவத்தினுல் முக்குற்றஙகளையும் ஒழித்து, செல்வம் வளருகின்ற காசிநகரத்தில வாழ்கினற எலலா மூர்த்திகளையும் துதிதது வணஙகினன. எ-று.

“காசிவாழீசர்” எனபது ஆங்குப் பலரால் பிரதிட்டை செய்யப்பட்டுள்ள பற்பல சிவலிங்கமூர்த்தங்களை. (௫௨)

உடைதி ரைபபுனற் றீர்த்தங்க ளொன்றற
வடைவி னுடி யருமறை வேதியன்
மிடையு மீசரில யாவா விழைந்தன
கடிதி னல்குவ ரென்று கருதினன்.

(இ-ள்.) அரிய வேதங்களையுணர்ந்த விசுவாநரன், முரிகின்ற அலைகள் பொருந்திய நீரையுடைய தீர்த்தங்களில் ஒன்றும்நீங்காமல் முறையுடன் (அவற்றிலெல்லாம்) மூழ்கி,(அக்காசிநகரததில்) நெருங்கியிருக்கும் மூர்த்திகளில் இச்சித்த பொருள்களை விரைந்து கொடுப்பவர் எவர்என்று தனக்குள் எண்ணினன். எ-று.

(இ-ள்.) அவன் அவ்வாறெண்ணியபொழுது வீரேசமூர்த்தியினது (சந்நிதானத்தின) திருமுன்னா பொருந்தியுள்ள (பஞ்சமுத்திரைஎனனும்) சத்திபீடத்தில் ஞானம் விளங்கும் பிரகடையுடன் விகடைஎனனும் சத்திகள் வசிப்பார்கள் அதனபக்கததில் சித்திவிநாயகர் எழுந்தருளியிருப்பர். இவ்விடததில் இவர்களை எக்காலத்திலும் தியானஞ்செய்பவர்கள் மோட்சத்தை இனிது பெறுவார்கள் என்று எல்லாமறிந்த பெரிய தவங்களையுடையமுநியோர் சொல்லினா.

"சேடு தாங்கு மூவுலகினிற் சிறந்தன சத்தி
பீட மூவிரு பத்துநான்கு" என்னும் திருவிளையாடற் புராணத்தினபடி சத்திபீடங்கள் அறுபததுநான்கு. அவற்றுள் இது ஒனறு. இதற்குப **பஞ்சமுத்திரை** பீடமென்றும் இதில் **பிரகடை**, **விகடை** என் றிருசத்திகள் இருப்பரென றுங் கூறப்பட்டிருக்கின்றது. இவற்றின் விரிவு தேவிபாகவதம் என்னும வடநூலுட் காண்க. (ருடு)

பஞ்சசுரனேழ்புவியும் புரக்கும்வசு பூரணனும் பழிப்பில் வேந்த
னஞ்சலிசெய் தருள்கொழிக்கும வீரேச னடியிணையி லடைந்தார் செய்ய
கஞ்சமுகை கவற்றுமுலைக் கோதிலா வரமபையெனுங கனிவாய்த் தீஞ்
வஞ்சியர மகளாடல புரிந்தவனறன சேவடியின் மருவினளே. [சொல

(இ-ள்.) பஞ்சசுரன் என்பவனும், ஏழுலகங்களையுங காக்கும் வசுபூரணன் என்னும் பழிப்பில்லாத அரசனும் இகருவணங்கி, கிருபை கொழிக்கினற வீரேசப்பெருமானது உபயதிருவடியில் ஐக்கியமாயினர். செவவிய தாமரை மொட்டினையொத்த தனங்களையும், கொவவைக் கனியையொத்த வாயையும், மதுரமாகிய சொல்லையுமுடைய வஞ்சிக்கொடிபோன்ற குற்றமில்லாத அரமபை எனனும் பெயரையுடைய தெய்வப்பெண்ணனவள், இவவிடத்தில் நடனஞ்செய்து அப்பெருமானது திருவடியில் கலந்தனள். எ-று. (ருசு)

விரிகதிர்சூழ் பிறைமௌலி வேள்விபுரி தருபாரத்து வாசன் மிக்க
வருமறைதேர வேதசிர செனுந்தவத்து மறைமுனிவ னன்பி னோடும
பொருவிலுருத் திரசமகம விதிமுறையி னேதிநறும் புனலி னூடி
யுருவினொடும வீரேசன் றிருவுருவி னொன்றாக வுறைதல் செய்தார்.

(இ-ள்.) விரிவாகிய கிரணங்கள் மிகுந்த பிறைச்சந்திரனை யணிந்த சிவபெருமானைக் குறிதது யாகஞ்செய்கின்ற பரத்துவாசமுனிவனும், மேம்பட்ட அருமையாகிய வேதஙகளைத தேர்ந்த வேதசிரசு என்னும் தவங்களையுடைய முனிவனும், அன்புடன் உருத்திரசமகம் என்னும் சமானமில்லாத மந்திரத்தை விதிக்கப்பட்டுள்ள கிரமப்படி ஜெபித்து நறிய தீர்த்தத்தில் மூழ்கி அருள்வடிவுடன வீரேசப்பெருமானது திருவுருவத்தில் இரண்டறக் கலந்தாகள். எ-று.

கின்னரமா தொருத்திதன துயிர்க்குயிரா யினிதுறையுங் கேள்வ னோடு
மினனிசையாழ் பயின்றீசன் சரணடைந்தா ளெழிற்சங்க சூட னென்னும்
பன்னகவேந் தொளிகெழுதன் பணுமணிநீ ராஞ்சனஞ்செய் பரிசுதன்னாற்
றுன்னரிதா யணித்தாகும பேரின்பக் கடல்படிந்து துளைந்தா னன்றே.

(இ - ள்.) ஒரு கின்னரகணப்பெண் தனது உயிர்க்குயிராக இனிதுவாழ்ந்திருக்கும் கணவனுடன (வீரேசப்பெருமானது திருச்சந்நிதானத்தின் திருமுன்னா) இனியவோசையையுடைய யாழ் வாசித்து, அப்பெருமானது திருவடிகளையடைந்தனள். அழகிய சங்கநுடன எனனும் பெயர்பெற்ற சாப்பாராஜன் தனது ஒளிமிகுந்த சிரோமாணிக்கததால (வீரேசப்பெருமானுக்கு) அபிஷேகஞ்செய்ததன்மையால், கிடைத்தற்கருமையாய்ச சமிபித்ததாகிய பேரின்பக்கடலில் மூழ்கித் திருவடிகளை யடைந்து வாழ்ந்தனன. எ - று.

பணுமணி நீராஞ்சனஞ் செய்தலாவது,—தனது உச்சியிலுள்ள மாணிக்கத்தால் அபிடேகித்தல். (கஅ)

சிலைத்தடந்தோட் சயித்திரதன் வீரேசன் சேவடியிற் சிந்தை சேர்த்தி
நிலக்கிழமை யனைத்துமுன மெய்தினன் விரதனெ னிகரில் வேந்து ...ப்ப
மிலக்கமிலசீர் வசுதத்த னெனுமவனிகர்க் கிறைவனுமிவ் விறைவன் செ
மலாக்கமலத் தாள்வணங்கி வானவரும பெறலரிய மகப்பெற் றூரால்.

(இ-ள்.) மலைபோலும் விசாலமாகிய புயங்களை யுடைய சயித்திரதன் (என்னும் அரசன்) வீரேசப்பெருமானது திருவடிகளில் முற்காலத்தில் மனதைச் செலுத்தித் தியானித்து உலகம் முழுவதையும் (தனக்கே யுரியதென) சுதந்தரம் பெற்றனன். விரதன் என்னும் பெயருடையவனுகிய சமானமில்லாத அரசனொருவனும், கணக்கில்லாத சீர்த்தியையுடைய வசுதத்தன் என்னும் வைசியகுலத்தலைவனும், இப்பெருமானது சிவந்த மலராகிய தாமரையொத்த திருவடிகளை வணங்கித் தேவர்களும் பெறுதற் கருமையான புதல்வரைப் பெற்றனர். எ - று. (கசு)

ஆதலினிவ் வீரேச னடிபோற்றி யருமகப்பே றடைவ னென்று
வேதமறு மதிக்கூவப் புனலாடி யையபுலனு மிகலை நூறிக்
காதலெனுங் காமமுதன் முக்குறும்பு மெறிந்துளத்துக் கவலை நீங்கி
வேதமுறை தெரிந்தருளும் விசுவா நரனரிய விரதம பூண்டான்.

(இ - ள்.) ஆனபடியால் இந்த வீரேசப்பெருமானது திருவடிகளைத் துதித்து அரிய புத்திரப்பேற்றினைப் பெறுவேன் எனறு நினைத்து, (ஆங்குள்ள) குற்றமற்ற சந்திரகூவததின் நீரில் மூழ்கி, ஐம்புலன்களாகிய பகையையொழித்து ஆசையென்று சொல்லப்படும் காமம் முதலிய மூன்றுகுற்றங்களையும்விலக்கி, மனதிலுள்ள துயரம்தவிர்ந்து (தவஞ்செய்தற்கு) வேதத்திற் கூறிய முறைகளை நன்குணர்ந்தருளிய விசுவாநரன் செய்தற்கரிய சிவவிரததை மேற்கொண்டனன். எ - று.

மதிக்கூவம் என்பது வீரேசர் சந்நிதானத் தருகிலுள்ள தீர்த்தப்பெயர் ; மதி = சந்திரன், கூவம் = கிணறு.

காமமுதன் முக்குறும்பு,—காமம், வெகுளி, மயக்கம். (௨0)

ஓர்திங்க ளோர்பகலுண் டோர்திங்க ளிரவருந்தி யொருவா நக்கி
யோர்திங்க ளயின்றுமற்றை யோர்திங்க ளெவ்வுணவு மொழிந்து திப்பா...டி
லோர்திங்கள் குடித்தடைக்கா யோர்திங்க ளருந்தியெள்ளி னுறுநுண் பிண்
யோர்திங்க ளுகர்ந்துபின்ன ரோர்திங்கள் பரிவினொடு முறுநீ மாந்தி.

(இ - ள்.) ஒருமாதம் பகற்காலத்தில் ஒருமுறை புசித்தும், ஒருமாதம் இரவிலுண்டும், ஒருமாதம் கிடைத்தபோது அருந்தியும், ஒருமாதம் எவ்வகையுணவையும் நீங்கிப் (பட்டினியிருந்தும்,) ஒருமாதம் மதுரம்பொருந்திய பாலைக்குடித்தும், ஒருமாதம் தாம்பூலத்தைத்தரித்தும், ஒருமாதம் எள்ளினது நுண்ணிய மாவைப் புசித்தும், பின்பு ஒருமாதம் இரக்கத்தோடும் பொருந்திய நீரைப்பருகியும். எ-று.

- இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (சக)

ஓர்திங்க ளானுதவு மைந்தினையும் புனிதமா யுவந்து மாந்தி
யோர்திங்கள் சாந்திரா யணம்புரிந்து தருப்பைநுனி யொழுகு தெண்ணீ
ரோர்திங்கள் பருகிமற்றை யோர்திங்கள் வளியருந்தி யுடலம் வாட்டிப
பாரொங்கு மதிசயிப்பப் பன்னிருதிங் களுந்தவத்திற் பயின்றா னன்றே.

(இ-ள்) ஒருமாதம் பசுக்கள் கொடுக்கின்ற பஞ்சகவ்வியத்தைப் பரிசுத்தமாக விரும்பிக் குடித்தும், ஒருமாதம் சாந்திராயணவிரதம் இயற்றியும், ஒருமாதம் தருப்பைப்புல்லின் முனையி லொழுகும் தெளிந்தநீரைக்குடித்தும், ஒருமாதம் வாயுபட்சணஞ்செய்தும், சரீரத்தைஇளைப்பித்து உலகமெல்லாம் அதிசயிக்கும்படி பன்னிரண்டு மாதங்களும் தவஞ்செய்தான் (விசுவாநரன் என்னும் வேதியன்).

திருவிளையாடற்புராணம்.

“பெரும்பக லல்லூண் கங்குலூ ணுதவப் பெற்றவூ ணிலைமுதற் பல்லூ
ணரும்பொடி யெள்ளுண் சாந்திரா யணமா னைந்துபா னறியநீர் தருப்பை
யிரும்புத னுனிநீர் காலிவை நுகர்ந்து மியற்றரும் பட்டினி யுற்றும்
வரம்புற விராறு திங்களு நோற்று வாடிமேல் வருஞ்சுறா மதியில்.” — என

இவ்வாறு ஒருவருடம் முறையே விச்சாவதி தவஞ்செய்ததாக மாறுபடாது கூறியது காண்க. (சஉ)

திங்களொரு பன்னிரண்டுங் கழிப்பமற்றைத் திங்கடனிற் றிரைகு லாய
கங்கைநறும் புனலாடி வீரேச னடிபரவுங் கருத்தி னோடு
மங்கணைய வவ்விலிங்கத் தாணடிருநான் கமைந்துவளர் செவ்வி யோடுந்
துங்கநெடுஞ்சடாமௌலித்தாபதன்போ லோருருவுதோன்றக்கண்டான்.

(இ-ள்.) ஒரு பன்னிரண்டு மாதங்கள் (இவ்வாறாகக்) கழிய விசுவாநரன் அந்த மாதத்தில அலைகள் தவழுகின்ற கங்காநதியின் வாசனைபொருந்திய நீரில் ஸ்நானஞ்செய்து, வீரேசப்பெருமானது திருவடிகளை வணங்கும் எண்ணத்துடன் அவ்விடத்திற்கு வருகையில், அச்சிவலிங்கமூர்த்தத்தில் எட்டுவயதுகள் பொருந்திவளர்கின்ற அழகோடும், பரிசுத்தமாகிய நீண்ட சடைமுடியையுடைய தவசியைப்போல ஒரு திருவடிவம் விளங்கப்பார்த்தனன். எ-று. (சங)

வெண்ணீறு புனைவடிவு மருமறைகண் மழலையுற மிழற்று வாயு
முண்ணீர்மை திரிந்துருகக் காதளவு மோடியரு ளொழுகு கண்ணுந், தெ
ணணீர்முத் தெனவொளிருங் குறுநகையுஞ் சிறுசதங்கை சிலம்புந்தாளு
ங்,கண்ணீர் நுண் டுளிசோர மயிர்பொடிப்பவிதயமலர்களிப்பக்கண்டான்.

(இ-ள்.) திருவெண்ணீற்றினை யணிந்த திருமேனியையும், மழலைச்சொற்கள் பொருந்த அரிய வேதவாக்கியங்களை ஓதுகின்ற திருவாயையும், உள்ளத்தின்

குணமானது மாறி உருகும்படி கதிரினையளாவி நீலமென்னிறமுடை பொருந்துகின்ற திருநேத்திரங்களையும், தெளிவாகிய நிலவு தோன்றிய (முத்துவரிசைபோலப்) பிரகாசிக்கும் சிறிய தந்தபந்திகளையுடைய, சிறிய சதங்கைகளோடு ஒலிக்கின்ற திருவடிகளையும் (விசுவாநரன், தனது கண்கள் தூண்டிய துளிகளாக ஆனந்தபாஷ்பஞ் சிந்தவும், (உடல்முழுதும்) மயிர்க்குச்செறியவும், இதயத்தாமரை சந்தோஷிக்கவும் தரிசித்தனன். எ - று. (சச)

அருவுருவா யேகமாய்க் குணங்குறிக ளெவையுமின்றி யசலமாகி
நிருமலமா யெவ்வுயிர்க்கு முயிராகிச் சுடரொளியாய் நித்தமாகிக்
கருதரிய வானந்தக் கடலாகி மெய்ஞ்ஞானக் கனியாய் நின்ற
வரதநின தடிக்கமல மனத்திருத்திக் கொழுமலர்தூய் வழுத்தல் செய்வாம்.

(இ-ள்.) அருவுருவமாகியும், ஏகமாகியும், குணங்குறிமுதலியனயாவுமில்லாமல் அசைவற்றதாகியும், மலரகிதமாகியும், எவ்வுயிர்கட்கும் உயிராகியும், சுடரினது பிரகாசமாகியும், எக்காலத்தும் உள்ளதாகியும், நினைத்தற்கரிய இன்பசாகரமாகியும், உண்மைஞானத் திருக்கனியாகியும், விளங்குகின்ற மேலான கடவுளே! (தேவரீரது) திருவடித்தாமரைகளை எமது இதயத்திலிருக்கச்செய்து மதாரத்தமலர்களா லருச்சித்து (எக்காலத்திலும்) வணங்குவாம். எ - று.

இதுமுதல் எட்டுப்பாடல்கள் விசுவாநரனால் துதிக்கப்பட்டவை.

சிவம் - சத்தி - நாதம் - விந்து என்னும் அருவமும், மகேச்சுரன் - உருத்திரன் - விஷ்ணு- பிரமன் என்னும் உருவமும் உடையதன்றி அருவமும், உருவமும் கலந்த சதாசிவமூர்த்தமாக விருப்பவன் என்பார் "அருவுருவாய" என்றும், நிர்க்குணனாக விளங்குபவன் என்பார் (குணம் இன்றி) எனவும், நிருவிகற்பமாக விளங்குபவன் என்பார் "அசலமாகி" என்றும், மற்றைச் சிவ தேவர்போன்று ஆணவாதிமலங்களாற் சிக்குண்டு கிடப்பவனல்லன என்பார் "நிருமலமாய்" என்றும், கிஞ்சிஞ்ஞத்துவத்தையுடைய தேவர்முதலிய சீவாத்மாக்களுக்கெல்லாம் மேலான பரமாத்மாவாகப் பிரகாசிப்பவன என்பார் "எவ்வுயிர்க்குமுயிராகி" என்றும், சூரிய சோமாக்கினிகளாகிய முச்சுடர்கட்கும் ஒளிசெய்பவன் என்பார் "சுடரொளியாய்" என்றும், எக்காலத்திலும் அழிவில்லாதிருப்பவனென்பார் "நித்தமாகி" என்றும், அனுபவித்தாலன்றி எண்ணுதற்கெட்டாமையும், அவ்வாறனுபவிக்குங்கால் மேலானஇன்பத்தைத் தருவதுமுடைமையின "கருதரியவானந்தக் கடலாகி" என்றும், "அன்பர்க்குமெய்யானை யல்லாதார்க்கல்லாத வேதியனை" என்னும் திருவாசகத்தின்படி அடியவர்களுக்கு உண்மைஞானம் விளங்கச்செய்யும் கனிபோல்வான் என்பார் "மெய்ஞ்ஞானக் கனியாய்" என்றும், பிரமாதி தேவரும் காணக்கூடாதவனாயினும் என் முன்னர் எளிதில்தோன்றியவன் என்பார் "நின்ற" என்றும், ஆன்மாக்கள் இச்சித்தவரங்களை யளிப்பவன அல்லது எவர்கட்கும் மேலானவன் என்பார் "வரத" என றுங் கூறினர். (சரு)

இலகொளிய கதிரொன்று பிரம்புனல்பெய் குடங்கடொறு மியைந்து நா
மலகில்பல வுருவாகித் தோன்றுதல்போற் சராசரங்க ளனைத்து மாகி [ளு

யுலகமுழு வதற்குமொரு தனிக்கடவு ளாகியுல களந்த மாலு
மலரயனு மறியாது நின்றநின்றன் சேவடிகள் வணங்கு வாமே.

(இ-ள்.) விளங்குகின்ற பிரகாசத்தையுடைய சூரியன் ஒருவனே நீரை நிரம்பிய அளவில்லாத குடங்களிலும் (பிரதிபிம்பித்துப்) பொருந்தி, எக்காலத்திலும் குற்றமில்லாத பல வடிவங்களாகிக் காணப்படுதல்போன்று, சரம் அசரம் ஆகிய பொருள்கள்யாவுமாகி, சமஸ்த உலகங்களுக்கும் ஒரோப்பற்ற கடவுளாகி, (திரிவிக்கிரமாவதாரங் கொண்டு) மூவுலகங்களையும் அளவுபடுத்திய திருமாலும் தாமரையில் வசிக்கும் பிரமனும்தேடிக் காணுதற்கரியாது (சோதிமலையாக) எழுந்தருளிய தேவரீரது சிவந்த திருவடிகளைத் துதிப்பாம். எ - று.

"மாலு மலரயனு மறியாது நின்றான்" என்பதன் சரிதம்.

முன்னொருகற்பத்தில் பிரமதேவன் தேவர்முதலிய எழுவகைத் தோற்றங்களையுஞ் சிருட்டித்துத் தானே பரம்பொருளெனநிறுமாந்து உலாவிவருகையில், திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்திருக்கும் விஷ்ணுமூர்த்தியைக்கண்டு மார்பிற்றட்டி யெழுப்பி "நீயார்" என்று கேட்க, விஷ்ணு "யான் உன்றந்தை" என, பிரமன் "எல்லாப்பொருள்களையும் படைப்பவன் நானே; நீ எனக்குத்தந்தையா" என்று பலவிதமாக இழித்துப்பேச, விஷ்ணு கோபங்கொண்டு பிரமனை அறைய இருவரும் அநேககாலம் போர்செய்தனர். அப்பொழுது நாரதர் ஆங்குத் தோன்றி "நீங்கள் இனிப் போர்செய்தால் உலகமழியும். பரம்பொருளாகிய சிவபெருமான் சிறிதுபொழுதில் அக்கினித்தூணாகத் தோன்றுவர்" என்று கூறிச்செல்லவும், அதனைக்கவனியாது இறுமாப்பால் போர்புரிகையில், எமது சிவபிரான் இருவருக்கு மிடையே சோதிததம்பமாக நின்று, அசரீரியாய் "இதன் அடிமுடியைக் கண்டோரோ மேலானவர்" என்றருளியதைக் கேட்டு, விஷ்ணு "அடிதேடுவேன்" என்று பன்றியாகிப் பூமியைத்தோண்டியும்,பிரமன் "முடிகாணுவேன" என்று அன்னமாகிப் பறந்தும் சென்றனர். விஷ்ணு பாதலமேழுங்கடந்தும் அடிகாணாமற்றிரும்பினன். பிரமன மேலேழுலோகங்களைக்கடந்தும் முடிகாணாது தளர்ந்து திரும்பி விஷ்ணுவைநோக்கி "நாமிருவரும் இப்பெருமானையருச்சித்து அவரது திருவருளால் தரிசிப்போம்" என, இருவரு முடன்பட்டுப் பூசித்துத் தவஞ்செய்கையில் சிவபெருமான் பிரசன்னராகி அவர்கட்கு வரமளித்தனர். அசசோதி வடிவம் சிறிது சிறிதாகச்சுருங்கி ஓர் மலைவடிவாயிற்று. அது திருவண்ணாமலை என்று சொல்லப்படுவது.—என்பது இதனை,

கந்தபுராணம் - தக்ஷகாண்டம் - அடிமுடிதேடுபடலம்.

"நீண்டுநில னிருவிசும்பிற் கிளர்ந்துமடி முடியுணரோ
மீண்டுமவன் றன்னருளான் மிடல்பெற்று வந்தனமா
லீண்டுசிவன் றனைவழிபட் டிருவருமன் னவன்றேறறங்
காண்டுமென யானுரைப்பக் கண்ணனுமங் கதற்கிசைந்தான். எனவும்,

வேண்டு நல்வரங் கேண்மினீ ரென்றலும் விசும்பிற்
றூண்ட வம்புரி பகவநின் சரணமே யரணாப்

பூண்டி டுந்தலை யன்பரு ளென்றலும் புரிந்து
காண்ட குந்தழற் சோதியு ளிமைப்பினிற் கலந்தான்.

கலந்த காலையில் யாங்கண்முன் றெழுதெழுங் காலைச்
சலங்கொள் பான்மையின முனனுநத தேவோன் றலாய்
மலர்ந்த பேரொளி மிசை சுருங்கியே வாதோ
விலங்க லாகிய துலகெலாம் பரவியே விப்ப." னெவும், பிரமன் தக்கனை நோக்கிக்கூறிய செய்புள்களா னுணர்க. (சசு)

கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினிலவா ளரவுமலை கடலிற் பட்ட
கூன்முதுகிப பியிற்றோனறு வெள்ளியுமம முதலுணமை குறிககிற் றிரு
யானவைபோ னினையறியிற் றென்றுசக மனைத்துநிலவா தழியு மாற்றாற்
றேனவிழ்பூங் கடுக்கையணி செலவனை தறைகழற்றாள் சென்னி சேர்ப்பாம்.

(இ ள்.) கானலினிடத்தில் தெள்ளியசலமும், கயிற்றினிடத்தில் ஒளி தங்கிய பாம்பும், அலைகளையுடைய சமுத்திரத்தில்தோன்றிய வளைந்தமுதுகினையுடைய கிளிஞ்சிலோட்டில் வெள்ளியும்போலக்காணப்படுகின்ற(சந்தேகம்)அதன் முதற்பொருளை ஆலோசித்தறியுமிடத்தில் நீங்கும்; ஆகிய இவற்றைப்போன்று, உமது இலக்கணங்களை அறிந்தால், காணப்படும் உலகமுழுவதும் (உம்மையன்றி வேறு) இல்லாதழியுந்தன்மையால் தேனோடு மலர்ந்த பொலிவுதங்கிய கொன்றை மாலையையணிந்த சிவபெருமானே! தேவரீரது சப்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிகளை எமது சிரசின்மேல் அணிந்துகொள்ளுவாம். எ - று. (சஎ)

நீரினிடைத் தண்மையுஞ்செந் நெருப்பினிடை வெம்மையும்வெண்ணிலவுத் திங்கள், சோதருதட் பமுமிலகு செஞ்ஞாயிற் றழற்சியுநதீம் பாலி னெய்யு, மீர்ம்மலரி னறுமணமு மென்னலா முலகமெலா மிருக்கு மெந்தை,வார்கழற்சே வடிக்கமல நறவொழுகு மலர்தூவி வணங்கல செய்வாம்.

(இ ள்.) சலத்தினிடத்தில் குளிர்ச்சியும், சிவந்த அக்கினியில் வெப்பமும், வெள்ளிய சந்திரிகையைக்கக்கும சந்திரனிடத்தில குளிர்ச்சியும், விளங்குகின்ற சிவந்த சூரியனிடத்தில் உஷ்ணமும், மதுரம் பொருந்திய பாலினிடத்தில் நெய்யும், குளிர்ச்சிபொருந்திய புட்பங்களில் இனியவாசனையும்,என்று சொல்லப்படுவதாய் உலக முழுவதும் (சர்வ வியாபியாய்) விளங்குகின்ற எந்தையாகிய சிவபெருமானே! (தேவரீரது) நெடிய வீரக்கழல் தரித்த சிவந்ததிருவடித்தாமரைகளைத் தேன்சிந்துகின்ற மலர்களானருச்சித்து யாம் எக்காலத்தும் வணங்குவாம்.

நோக்கின்றிக் கண்டுஙனி கையின்றிக்கொடுத்துமறை நுவல்வ தாய நாக்கின்றி யறுசுவையு மினிதுணாநதுங் காலின்றி நடத்தல் செய்து, மூக்கின்றி மணங்கவர்ந்துஞ் செவியின்றிக் கேட்டுமறை முதல்வ ரியாக்கும், வாக்கன்றி மனத்தினுக்கு மெட்டாநின் றுமைதாள் வணங்கல் செய்வாம்.

(இ-ள்) கண்களில்லாமலே (எல்லாவற்றையும நன்குகப் பார்த்தும், கரங்களிலலாமலே (ஆன்மாக்கள்வேண்டிய பொருள்களை) உதவியும், வேதஙகள் சொல்லுவதாகிய நாக்கில்லாமலே அறுவகைப்பட்ட உருசியையும் இனிமையாக அறிந்தும், பாதங்களிலலாமலே (எலலா உலகங்கட்கும) நடந்தும், மூக்கில்லாமலே வாசனைகளைக்கிரகித்தும்,காதுகளில்லாமலே (அவரவாகளது தோத்திரங்களை) கேட்டும், வேதங்களையுணர்ந்த வேதியர்முதல் எத்தகையினருக்கும வாக்கேயல்லாமல் மனம் (காயம் ஆகிய) இவற்றினுக்கும் எட்டாமல் விளஙகுகின்ற தேவரீரது தாமரைபோனற திருவடிகளை யாம் வணஙகுவாம். எ - று. (சகூ)

வணடுழாய்ப் பசுந்தெரியன் மாயவனு நான்முகனும் வானு ளோரு, மண்டாரா யகனுமறை முனிவர்களு மறிவரிதா யன்பு முற்றுந, தொண்டரா னவர்க்கெளிதாய்த் தோன்றுதனிச் சுடர்க்கொழுநதே சுருதி யென்னும், பணடைநூன் முடிவிலுறை பராபரநின னடிககமலம பணிதல செய்வாம்.

(இ-ள்.) வள்ளிய பசுமைதங்கிய துளவமாலையையணிந்த விஷ்ணுமூர்த்தியும், நான்குதிருமுகங்களையுடைய பிரமதேவனும்,தேவர்களும், ஆகாயவாசிகட்கிறைவனுகிய இந்திரனும்,வேதங்களையுணர்ந்த முனிவாகளும் (ஆகிய இவர்களெல்லாம) தெரிதற்கரிதாகி, பக்திமுதிர்ந்த அடியவாகட்கு எளிதாகிக் காணப்படுகின்ற ஒப்பற்ற சுடர்க்கொழுந்தாகிய சிவபெருமானே! வேதமென்று சொலலப்படும் பழையநூலினது அநதத்திலே விளஙகுகின்ற பராபரப்பொருளே! தேவரீரது திருவடித்தாமரைகளை (எப்போதும்) யாம் வணங்குவாம். எ - று. (ருo)

குலங்குடிகோத் திரமின்றிப பிறப்பிறப்புப் பெயர்வண்ணங் குணமு மின்றி, யிலங்கொளிய வெறுவெளியா யிருந்துநெடு நீருலகம் யாவும வேட்ட, நலங்கொள்பொரு ளனைத்தினையு நல்குதலா னளிர்மதிச்செஞ் சடையோய் மற்றுன், பொலன்கழற்று மரைமலரெம் புன்றலையின் மிசைசூட்டிப் போற்று வேமால.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய சந்திரனைத் தரித்த சிவந்த சடாபாரத்தையுடைய சிவபெருமானே! சாதி - குடிப்பிறப்பு - கோத்திரம் - ஜெனனம் - மரணம - திருநாமம்-வடிவம் - குணம (முதலிய இவையெல்லாம் எனறுமிலலாமல், பிரகாசிக்கும் ஒளியையுடைய வெறுவெளியாகிவிளஙகி,நெடிய கடல்சூழ்ந்த உலகிலுள்ள பிராணிகள்யாவும் இச்சித்த நனமை மிகுந்த எலலாப் பொருள்களையும் அனுக்கிரகித்தலால்,தேவரீரது அழகிய வீரக்கழலையணிந்த (திருவடிகளாகிய) தாமைமலர்களை எமது அற்பமாகியசிரசில் தரிததுக்கொண்டு துதிபபோம். எ-று.

முதியவனீ காளையுநீ முதுக்குறைவில் பாலனுநீ முளரி வாட்டு [ந்
மதிபுரையும் வாண்முகத்து மலைமடந்தை கொழுநனுநீ வானோர் போற்று
கதமெழிகான் மூவிலைவேற் கங்காள நாதனுநீ யாத லாலுன் [வாம்.
பொதியவிழ்தா மரையனைய பூங்கழல்க ளென்ஞான்றும போற்றல் செய்

(இ-ள்.) (உலகிலுள்ள யாவரைப் பார்க்கிலும்) வயோதிக பருவமுடையவரும் தேவரீரோ! யவவனபருவமுடையவரும் தேவரீரோ! பேரறி வில்லாத குழந்

தைப்பருவ முடையவரும் தேவரீரே! தாமரைமலர்களைப் புலரச்செய்யும் சந்திரனைப்போன்ற ஒளிதங்கிய திருமுகத்தையுடைய பர்வதராஜபுத்திரியாராகிய உமாதேவியாரது கணவரும் தேவரீரே! தேவர்களெல்லாம் துதிக்கும் வேகத்தோடு கூடிய அக்கினியைக் கக்கும் சூலாயுதத்தோடும் கங்காளத்தையும் ஏந்திய தலைவரும் தேவரீரே! ஆதலால் சிவபெருமானே! தேவரீரது முறுக்கவிழ்ந்த தாமரைமலரையொத்த பொலிவுதங்கிய திருவடிகளை யாம் எக்காலத்திலும் துதிப்பாம்.

மூவிலைவேல்=மூன்று இலைகளையுடைய வேல்; அதாவது சூலம்.

கங்காளம்=தசை கழிந்த முழுவெலும்பு.

திருவாசகம்.

"கங்காளந்தோளின்மேலேகாதலித்தான்காணேடீ
கங்காளமாமாகேள்காலாந்தரத்திருவர்
தங்காலஞ்செய்யத்தரித்தனன்காண்சாழலோ."—என்றபடியே, சர்வசங்காரகாலத்தில் பிரமவிஷ்ணுக்கள் இறக்க அவர்களது என்புகளைச் சிவபெருமான் தமது திருத்தோளின்மீது மாலையாகத்தரிப்பர் ஆதலால் 'கங்காளநாதன்' என்று பெயர்பெறுவார். (௩௨)

என்றினைய துதிகூறி யிறைஞ்சுதலு மாங்கவனை யெழுக வென்று, நன்றுதுதி மகிழ்ந்தனனீ விழைந்தனநல குவன்விரைவி னவிற்றி யென்ன, மன்றவுயிர்க் குயிராய வரதனினக் கறிவரிதாய் மற்றொன் றுண்டோ, புன்மொழிமேலென்றனைக்கேட்ட தெனலெனெ மறைமுதல்வன் புகல்வன் மாதோ.

(இ-ள்) என்றித்தன்மையாகிய தோத்திரங்களைச்சொல்லித்துதித்து வணங்கவும் (சிவபெருமான்) அவ்விச்சுவாநரனை எழுந்திரு என்று, உனது தோத்திரத்திறகு மிகுதியும் ஆனந்தித்தேன் நீ விரும்பிய வரங்களைக் கொடுப்பேன் சீக்கிரத்திற் சொல்லுவாயாக என்று திருவாய்மலர்ந்தருளவும், நிலைபெற்ற உயிர்கட்குயிராகிய மேலான கடவுளே! தேவரீரது திருவுள்ளத்திற்கு உணர்தற் கரிதாக ஒரு பொருளிருக்கின்றதோ? இழிமொழி யுடையேனாகிய என்னைத் தேவரீர் வினவியது என்னகாரணம்? என்று விசுவாநரன் சொல்ல, வேதமுதல்வராகிய சிவபெருமான (பினவருமாறு) திருவுள்ளம்பற்றுகின்றனர். எ-று. (௩௩)

மின்போலு நுடங்கிடைநின் மனைக்கிழத்தி யவள்வயிற்றின் விண்ணோர் போற்ற, வென்போலு மொருபுதல்வன் கிரகபதி யெனும்பெயரி னியைவனன்ப, முன்போல்யா மித்துதிப்பெருவகைபுரி யட்டகமீ துலகிளுளு, மன்போடே துதித்திறைஞ்சில வந்தியரு மருமகப்பே றடைவர் மாதோ.

(இ-ள்.) மின்னற்கொடிபோலுந் துவளுகின்றஇடையினையுடையஉனது மனைவி கருப்பத்தில், தேவர்களெல்லாம் துதிசெய்யும்படி என்னைப்போலும் ஒரு புத்திரன் கிரகபதி என்னும் பெயர்கொண்டு பொருந்துவான். உன்னையொத்த

அன்பர்கள் யாவரிருக்கின்றனர்? (ஒருவருமில்லை) இத தோத்திரமாகிய பேரான ந்தத்தை யுண்டுசெய்யும் அஷ்டகத்தின்மேல் உலகத்தில் எக்காலத்தும் ஆசை கொண்டு (எம்மைத்) தோத்திரஞ்செய்து வணங்கினால், மலடிகளும பெறற்கரிய புத்திரப்பேற்றினைப் பெறுவார்கள். எ - று.

அட்டகம்=எட்டுப்பாடல்கள் கொண்டது. (௫௪)

என்னமொழிந் தருந்தவத்தோன் வேட்டவர முவந்தருளி யிலிங்க நாப்பண், டுன்னுமிறை மறைந்திடலுஞ் சூழ்புலன்வென் றிருவினையுந்தொ லைந்து நீங்கா, மன்னியவா ணவமுதல மலமூன்றின் வேரகழ்ந்த மறைவ லாளன், றன்னமர்கா தலியுறையு மனையகத்தின் மகிழ்வினொடுஞ் சாரந்தா னன்றே.

(இ - ள்.) என்று (இவ்வகையாக) திருவாய்மலர்ந்தருளி, அரிய தவங்களை ச்செய்த விசுவாநரன் விரும்பிய (புத்திரப்பேறாகிய) வரத்தைச் சந்தோஷித்து அனுக்கிரகஞ்செய்து, (வீரேசப்பெருமானாகிய) சிவலிங்கரூபத்தின் மத்தியில் விளங்கும் சிவபெருமான் அந்தர்த்தானமாகவும், புடைசூழ்ந்த ஐம்புலன்களையுஞ் செயித்து இருவினைகளையும் நீங்கி, நீங்காத நிலைபெற்ற ஆணவம் முதலியமும்மலங் களையும் வேரோடுபோக்கிய வேதங்களில் வல்லவனாகிய விசுவாநரன் பொருந் திய தனது மனைவி வசிக்கும் வீட்டிற்கு ஆசையுடன்போய்ச் சேர்ந்தனன். எ-று.

"முத்தியினு முண்டு மூன்றவத்தை" என்றபடியே ஆணவாதி மலங்கள் நீங்காதவை யாதலின் "மன்னியவா ணவமுதல மலமூன்று" என்றார். (௫௫)

சிவசன்மா தெய்வலோகங் கண்ட அ - ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ௩அ௬.

உ

சிவமயம்.

பதிவிரதாமகத்து,

# சிவசன்மா அக்கினியுலகங் கண்ட அத்தியாயம்.

தொழுதகு தவத்தின் மிக்க தொன்மறை யுணர்ந்த ஞானன்
விழைவொடு மறங்க ளாற்றி மேதக வொழுகு நாளி
லெழிலரும் பொழுகச் செய்யாத் தெழுமுலை யறன்மென் கூந்தற்
கழைபுரை தோளி னுட்குக் கருப்பம்வந் துற்ற தன்றே.

(இ-ள்.) வணங்கத்தக்க தவத்தில் மேம்பட்ட, பழமையாகிய வேதங்களை யுணர்ந்த விசுவாநரன் ஆசையுடன் (பலவகைத்) தருமங்களைச்செய்து சிறப்பாக வாழுங்காலத்தில், அழகுமிகுந்து விளங்கும்படி இறுமாந்து தோன்றிய முலைகளை யும், கருமணற்படிவம்போன்ற மெல்லிய கூந்தலையும், மூங்கிலையொத்த தோள்களை யுமுடைய அவனது மனைவிக்கு (அவன்பெற்றுவந்த வரத்தின்படியே) கருப்பம் வந்து சேர்ந்தது. எ - று. (க)

அலர்முலை யம்மெல் லோதி யரிமதர் நெடுங்கட் செவ்வாய்
விலகிவில் லுமிழும் பூணாள் வியாழகேந் திரத்திற் றூய
நலனுறு மோரை தன்னி னுண்மலர் மாரி சிந்த
வுலகெலா முவகை பொங்க வொருமக வுயிர்த்தா ளன்றே.

(இ-ள்.) அடியிற்பரந்த முலையையும், அழகிய பிருதுவாகிய கூந்தலையும், அரிபடர்ந்து செழித்து நீண்டகண்களையும், செவ்விய வாயையும், விட்டு விட்டு ஒளி வீசுகின்ற ஆபரணங்களையுமுடைய அவனமனைவி, வியாழகேந்திரத்தில் பரிசுத்த மாகிய நன்மைபொருந்திய முகூர்த்தத்தில், புதியமலர்மாரி பெய்யவும் பூமியிலுள் ளோரெல்லாம் சந்தோஷம் அதிகரிக்கவும் ஒப்பற்ற ஆணகுழந்தையைப் பிரசவி த்தனள். எ - று.

கேந்திரம் என்பது உதயம்; அல்லது லக்கினத்திற்கு ஏழு, நான்கு, பத் தாமிடங்களில நிற்றல். வியாழம்=பிரகஸ்பதி. தூயநலனுறுமோரை என்பது அக்காலத்தில் சுபக்கிரகங்கள் உச்சமும் ஆட்சியும் பெற்றிருத்தலும், பாபக்கிரகங் கள் பார்வைமுதலியன நீங்கியிருத்தலுமாம். (உ)

பொன்மழை பொழிந்த வானம் பூநறுஞ் சுண்ணஞ் சிந்தித்
தென்வரை யுயிர்த்த தென்றற் றிசைதொறுந் தவழ்ந்த தொல்கி
மின்னுறழ் மருங்கு கோவ விஞ்சையர் மகளி ராடக்
கின்னர மிதுன மியாவுங் கிளர்நரம் புளர்ந்த வன்றே.

(இ ள்.) (அக்குழந்தைபிறந்த காலத்தில்) ஆகாயம் சுவர்னமாரி வருஷி த்தது. தென்மலையாகிய பொதியவரையிற்பிறந்த தென்றற்காற்று மலர்களின் வா சனைதங்கிய மகரந்தப்பொடிகளைச் சிந்திக்கொண்டு, அட்டதிக்குகளிலும் மெல்ல நடந்தது. வித்தியாதரப் பெண்கள் துவண்டு மின்னலையொத்த தமதுஇடைகள்

சோவும்படி நடனஞ்செய்ய, கின்னரமிதுனங்களெல்லாம் விளங்குகின்ற நரம்பாலாகிய யாழோசை செய்தன. எ-று.

மருங்கு=இடை. இப்பதம் மருங்குல் எனவும் வரும். (ங)

அத்திரி மரீசி கார்க்க னங்கிரா வசிட்டன் சனனு
முத்தழல் வேள்வி யாற்று முற்கலன் சிலாதன் சங்க
னுத்துங்கன் வியாதன் வாச்ச னுரோமசன பரதது வாசன்
மெய்த்தவ மதங்கன தக்கன் விபாண்டகன மிருக சிங்கன்.

(இ-ள்.) அத்திரி- மரீசி- கார்க்கன- அங்கிரா-வசிட்டன்- சனனு- (காருகபத்தியம் - ஆகவனீயம் - தக்கணாக்கினி எனனும்) முத்தீயினால் யாகங்களைச்செய்யும் முற்கலன்- சிலாதன்- சங்கன்- உதங்கன-வியாதன்- வாச்சாயனன்- உரோமசன்- பரதத்துவாசன- உணமையாகிய தவங்களைச்செய்த மதங்கன-தக்கன- விபாண்டகன - மிருகசிங்கன. எ-று.

இதுமுதல் மூனறுபாடல்கள் குளகம். (ச)

காசிபன் சாது கன்னன் காவல னுபத் தமபன்
கோசிகன் சீதன் பாக்கன் குர்ச்சன்றே வலனு ரீதன்
மாசில்கண ணுவனமார்க் கணடன் வானமீகன சாலங் காய
னுசறு பிருகு செஞ்சொ லகத்தியன் வாம தேவன்.

(இ-ள்.) காசிபன் - சாதுகன்னன - காவலன் - ஆபத்தம்பன-கோசிகன்- சீதன் - பாக்கன - குச்சகன - தேவலன் - ஆரீதன் - குற்றமிலலாத கண்ணுவன்- மார்க்கண்டன் - வான்மீகன் - சாலங்காயன - களங்கமற்ற பிருகு - செவ்விய சொல்லையுடைய அகத்தியன் - வாமதேவன. எ-று. (ரு)

நாரத னாதி யாய நான்மறை முனிவர் விண்ணோ
கார்நிறச் செங்கண் மாயன் கலைமகள் கொழுந னந்தி
போருடைக் குலிச வேந்தன் பொன்புக ரூரக வேநதர்
சீர்கெழு மறைவ வாள னிலவயிற் சோநதா ரன்றே

(இ-ள்) நாரதனமுதலாகிய நான்குவேதங்களையு முணர்நத முனிவர்களும், தேவர்களில் மேகநிறத்தையும் சிவந்த கண்களையுமுடைய விஷ்ணுமூர்த்தியும், சரச்சுவதிநாயகனாகிய பிரமதேவனும், திருநந்திதேவரும்,யுத்தத்தையுடைய வச்சிராயுதமேந்திய இந்திரனும், பிரகஸ்பதிமுனிவரும், சுக்கிரபகவானும், (ஆதிசேடன்முதலிய) நாகராசர்களும், சிறப்புமிகுந்த விசுவாநரனது வீட்டில்வந்து சேர்ந்தார்கள. எ-று.

நந்தி என்பதற்குச் சிவபெருமான் எனப் பொருள்கூறினு மமையும். (சு)

உரவுநீர்க் கடல்க ளேழு மொலிகெழு கடவு ளாறு
மருவியஞ் சாரற் குனறு மலர்சினைத் தருக்க ளியாவு
மருவுதம் முருவ மாற்றி மானுட வுருவு தாங்கி
யெரியழற் கடவு டோன்று மில்வயிற போந்த மாதோ.

(இ-ள்) வலிதங்கிய நீரையுடைய சத்தசமுத்திரங்களும், கீர்த்திமிகுந்த (கங்கைமுதலிய) புண்ணியநதிகளும், அருவியாறுகள் இழிகின்ற அழகிய சாரலை

யுடைய (இமயமுதலிய) மலைகளும்,மலர்ந்த பூங்கொத்துக்களையுடைய (கற்பகமுதலிய) விருட்சங்களும் (ஆகிய இவை பெய்யாம் பொருந்திய தமது (இயற்கை) ரூபத்தை மறைத்து மனிதவடிவமேற்று, (இக்குழந்தையாகிய) எரிகின்ற அக்கினி பகவானை பிறந்த விட்டிற்குவந்தன. எ - று. (எ)

விதிமுறை சாதகன்மம் வேதியன் சிறுவற் காற்றிப்
பதினொன்று நாளி னிலவின் பதியெனப் பெயரு சாத்தி
மதுமடை திறந்து பாயும் வணடுழாய் முகுந்த னோடு
நதைமலர்க் கமலப புத்தே டனைகர்க் கேகி னூன்.

(இ-ள்.) விசுவாநரனது பத்திரனுக்கு விதிக்கிரமமாய்ச் சாதகன்மம் (முதலியகிரியைகளை) செய்து, பதினோராவதுதினத்தில கிரகபதி என்று நாமகரணஞ் செய்தது,தேனை பெருக்கெடுத்துப் பாய்கின்ற வளப்பம்பொருந்திய துளவமாலையை யணிந்த விஷ்ணுமூர்த்தியோடு (இத்தவர்கள்) நெருங்கிய தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனும் தனது உலகத்தைச்சேர்ந்தனன். எ - று.

சாதகன்மமென்பது அததிரமந்திரத்தால் நூறு ஓமஞ்செய்து வாமமந்திரத்தால் புத்திரன் முகத்தை எதிர்நோக்கிப் பஞ்சபிரமமந்திரங்களை உச்சரித்து உச்சியை மோந்து புருடமந்திரத்தை வலதுசெவியிற் செலுத்தல். சாதகன்மத்துக்குப்பின் செய்யவேண்டிய கிரியை உத்தாபனம்; அதாவது அசுத்தமாகிய அறையினின்றும் சுத்தமாகிய உயர்வீட்டத்திற் குழந்தையைச் சேர்ப்பிக்குங் கிரியை. உத்தாபனத்தின் பின்செய்யவேண்டியது நாமகரணம்; அதாவது பேரிடுதலிற் செய்யுங் கிரியை. (அ)

தேசினி லுருவி னிச னனையவிச் சிறுவற் பெற்ற
மாசறு கடவுட் கற்பின மடந்தையை மறைவ லானை
யாசிகள் கூறி யீச னன்பினாக் கரிய துணைப்பட
பேசினென் பொருந் தந்தம பெருமபதி யடைந்தார் மன்னோ.

(இ-ள்.) கீர்த்தியினாலும் வடிவினாலும் சிவபெருமானை நிகர்த்த இக்கிரகபதியென்னும் குழந்தையையீன்ற குற்றமற்ற தெய்வத்தன்மை பொருந்திய கற்பினையுடைய தாயையும்,விசுவாநரனென்னும் தந்தையையும் ஆசீர்வதித்து, சிவபெருமானது அன்பர்களுக்கு அரிதாகியபொருள் பேசுமிடத்தில் ஏதேனும் இருக்கிறதா? (ஒன்றுமில்லை) என்று (அவ்விடத்தில்வந்துகூடிய) எல்லோரும் தங்கள் தங்களது வாசஸ்தானங்களை யடைந்தனர். எ - று. (கூ)

சிறுவனுங் குறையு நாளிற் றிங்களோர் நான்கிற் செய்ய
மறுகிடை மிதிப்பித் தாறு மதிதனி லலவாய் செய்யா
வறையுமோ ராண்டில வாய்ந்த மயிர்வினை முடித்தாண் டைந்தின்
முறையின்முப் புரிநூலிட்டு முதுமறை பயிற்று வித்தார்.

(இ-ள்.) (கிரகபதி யென்னுங்) குழந்தையானவன் அங்குவசிக்கின்ற காலத்தில் (தாய்தந்தையர்) நான்காவதுமாதத்தில் செம்மையாகிய சந்திமிதித்தலென்னும் பிரவாசக்கிரியைசெய்து, ஆறுமாதத்தில் அன்னபிராசனக்கிரியைசெய்து, அளவுபடுத்திய ஒருவருடத்தில் பொருந்திய சவுளக்கிரியை முடித்து, ஐந்தாவது

வருடத்தில் கிரமமாக உபநயனக்கிரியைசெய்து, பழமையாகிய வேதங்களை அப்பியசிப்பித்தனர். எ - று.

பிரவாசம்—குழந்தையை யெடுத்துக்கொண்டு ஆலயத்துக்குச் செல்லுங் கிரியை. சவுளம்-மயிர்வினைகருச் செய்யுங் கிரியை. உபநயனம் - பரசிவத்தைத் தரிசிப்பித்தற்குச் சமீபமாகிய நயனத்தை யுண்டாக்குங் கிரியை. (க0)

அறிவுடைக் குரவன் சான்ருய் விஞ்சைக ளனைத்து முற்றி
மறையினுக் கொருவ னென்ன வானபுக ழுலகம போர்பப
வுறைதரு நாளிற் றெய்வ மகதியா ழிசையி னோங்கு
நறைமலாப் புத்தே ளீன்ற நாரத முனிவன் போநதான்.

(இ ள்.) பேரறிவினையுடைய ஆசாரியனமுன்னிலையில் எல்லாவித்தைக ளையும் கற்றுமுடித்து, வேதத்துக்கொருவனேஎன்று சிறந்தகீர்த்தியானது உலக முழுதும் நிறையும்படி வசிக்கின்றகாலத்தில, தெய்வீகம்பொருந்திய மகதிவீணை யிசையினாற் கீர்த்தியிருந்த தேனொழுகுகின்ற தாமரைமலரில வசிக்கும் பிரமதே வன் பெற்றருளிய நாரதமுனிவர் (அவனிடம்) வந்தனர். எ - று. (கக)

ஆயும்யாழ் முனியைப் போற்றி யளவளாய் முகமன் கூறி
மேயநல விருக்கை நலகும விச்சுவா நரனை நோககி
மாயிரு ஞாலம் போற்று மகவினைப் பயந்தாய் நின்போ
லேயின ரியாரோ சீர்த்தி மகபபெருர்க் கின்ப மியாதே.

(இ-ள்.) (பண்ணோசையை, ஆராய்கின்ற வீணையையேந்திய நாரதமுனிவ ரைத் துதித்துக்கலந்து உபசாரவார்த்தைகளைச்சொல்லி,பொருந்திய நல்ல ஆசன மளித்த விசுவாநரனைப்பார்த்து (நாரதமுனிவர் சொல்லுகின்றார்) நீ பெருமைதங் கிய பெரிய உலகமெல்லாந் துதிக்கத்தக்க புத்திரனைபபெற்றனை! யார்தான உன னைப்போலக் கீர்த்திபொருந்தியவர்கள்? சிறப்பினையுடைய புதல்வரைப் பெரு தார்க்குச் சந்தோஷம் ஏது? எ - று. (கஉ)

தந்தைதாய் பணித்தல் செயயுந் தவமலாற் றவம்வே றிலலை
மைந்தருக் கெதிக ளேனும வணஙகுவா தாயைத தந்தை
யந்தமைந் தனையே போற்றல வேணடுமற றுத றன்னுற்
சிந்தையுற் றுணரிற் றுயே தநதையிற சிறநதாண மனனோ.

(இ-ள்) பிள்ளைகளுக்குத் தநதையும் தாயும் கட்டளையிட்டவற்றைச் செய்வதே தவமல்லாமல் மேலானதவம் பிறிதொன்றுமிலலை. (அப்புத்திரர்) எதிக ளானுலும் தாயைவணஙகுவார்கள். (பிள்ளை எதியானகாலத்தில) தகப்பன அந் தப்பிள்ளையை வணஙகவேண்டுவதாகிய இவவிதிமுறையால், மனத்தில் ஆலோசிக் கும்போது தாயே பிதாவைக்காட்டிலும மேமபட்டவள். எ று. (கங)

எத்திரு வுடைய ரேனு மின்கனி மழலைச் செவ்வாய்ப
புத்திர னிலாரோ ரெனறும் பொறியில ராய வாறரூன்
மெய்த்தவம் புரிந்து மைந்தர்ப் பெறுவதே விழைவர் யாரு
முய்த்தகன் மகவு மோரேழ் பான்மையா யுரைப்பர் மேலோர்.

(இ-ள்.) எவ்வகைப்பட்ட செல்வமுடையவர்களானாலும் இனிமையாகிய குதலைச்சொற்கள் மிகுந்த சிவந்தவாயையுடைய புத்திரனை உடையவர்களாயிராதவர்கள் எக்காலத்திலும் செல்வமில்லாதவர்கள் ஆகிய தன்மையால், எத்தகையினரும் உண்மையாகிய தவங்களைச்செய்து புதல்வர்களை அடைதற்கே விரும்புவார்கள். உண்டாகப்பெற்ற புத்திரர்களும் ஏழுவகையாமென்று மேலோர் சொல்லுவர்.

பொறி=இலக்குமி; ஈண்டு அவள் காரியமாகிய செல்வத்திற்காயது.

"எத்திருவுடையரேனும் * * * பொறியிலர்"—என்பதனை,

நளவெண்பா.

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கை பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்."—என்பதனானுணர்க. (கச)

மனைவிதன் கொழுநற் கீன்றோன் மற்றவ னருளி னாலே
யனையவ ளயலாற் கீன்றோ னரும்பொருள் கொடுத்துக்கொண்டோ
னினிதுறு தெத்து மைந்தன் மகவெனப் புகுந்த மைந்தன்
றனையைசேய் தன்னா லாவி யுய்ந்தவன் றனைய ராவார்.

(இ-ள்.) மனைவியானவள் தன் புருஷனுக்குப் பெற்றபிள்ளையும், அக்கணவனது விருப்பத்தின்படியே அவள் அன்னியபுருஷனுக்குப்பெற்றவனும், அருமையாகிய பொருளை (விலையாகக்கொடுத்து) வாங்கியவனும், இனிமையுற்ற தெத்தாகப்பெற்ற பிள்ளையும், புத்திரன் என்று தன்னிடமுறப்பெற்ற புதல்வனும், தனது குமாரத்தியினது புதல்வனும், தன்னாலுயிர்பிழைத்தோனும் (ஆகிய இவ்வெழுவரும்) புத்திரர்களாவார்கள். எ - று. (கரு)

ஈங்கிவர் முறையிற் றாழ்வ ரெனவெடுத் தியம்பிச் செய்ய
பூங்கழற் குமரன் றன்னை வருகெனப் புகன்று நோக்கி
யாங்கவ னிலக்க ணங்க ளியாவையு மறைவ னென்னத்
தூங்கிசை மகதி வீணை நாரதன் சொலவ லுற்றான்.

(இ-ள்.) இவ்வாறுகூறப்பட்ட இப்புத்திரர்கள் முறையே (ஒருவருக்கொருவர்) குறைவாவார்கள் என்றெடுத்துச்சொல்லி, செம்மையாகிய பொலிவுதங்கிய வீரக்கழலணிந்த (கிரகபதி என்னும் பெயர்வாய்ந்த) அவ்வாலிபனை அருகில்வருக என்று அழைத்து, அவனது ரூபலட்சணங்களை யெல்லாம் பார்த்து (அவற்றின் பலனை) சொல்வேன் என்று இசைவிளங்கும் மகதிவீணையையேந்திய நாரதமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ - று.

இதுமுதல் ஒன்பது செய்யுள்களால் புருஷசாமுத்திரிகை கூறுகின்றார்.

கடிகொள்குங் குமச்சே றாட்டி நூலினாற் காம னன்னா
னடிமுதன் முடியீ றாக நூன்முறை யளந்து நோக்கி
நெடுமையுங் குறுக்கு நூற்றெட் டங்குல மாகு நீராற்
படிமுழு துலகங் காக்கும் பார்த்திப னாவ னின்னோன்.

(இ-ள்.) வாசனைவீசுங் குங்குமச்சாந்தை நூலில்தடவி அதனால் மன்மதன் போன்ற அநதக் கிரகபதியைப் பாதம்முதற்கொண்டு ரேசமட்டில சாஸ்திரங்களிற்கூறிய முறையாக அளந்துபார்த்து, உயரமும அகலமும நூற்றெட்டங்குலமிருப்பதால், கடல்சூழ்ந்த நிலவுலகமுழுவதும, இரடசிக்கினற அரசனவான் இச்சிறுவன். எ - று. (கஎ)

ஐந்துநீண் டைந்து நேர்ந்தே யாறிட முயர்ந்தேழ் சேநது
முநதுமூன் றகன்று மூன்று குறுகிமூன் றாழ்ந்தி ருககு
மந்தமில குணங்கண முப்பா னிரணடொடு மமர்ந்த மாநத
ரிந்திர திருவி னோங்கி யினிதுவீற் றிருப்பர் மாதோ.

(இ-ள்.) (சரீரத்தில்) ஐந்திடங்கள் நீளமாகியும,ஐநதுமிருதுவாகியும், ஆறிடங்கள் உயர்வாகியும், ஏழிடங்கள் சிவப்பாகியும், முற்பட்டதாகிய மூன்றிடங்கள் அகலமாகியும, மூனறுகுறுகியதாகியும, மூனறுஆழமாகியும், விளங்குகினற கெடுதலில்லாத (உததமலட்சண) குணஙகள் முபபத்திரண்டுடன் பொருந்திய மனிதர்கள் தேவேநதிரனைப்போலச் செல்வமிகுநது இனிமையாக வாழ்ந்திருப்பார்கள். எ - று.

மூன் றகன்றும், மூன்று குறுகியும் என்பதற்குப் பிரதியாகச் சிலா இரண்டகனறும் நானகு குறுகியும எனக் கூறுவா. இதனை,

"உன்னத மாறு நீணட வுறுபபைந்து சூக்கந் தானு
மனனது குறுக்க நானகா மகலுறுப் பிரண்டே ழாகச்
சொன்னது சிவப்பு மூனறு கமபீரந் தொகுதத வாறே
இன்னது விரிக்கி லெண்ணுன விலக்கண வுறுப்பா மென்ப." — என்னுந் திருவிளையாடற்புராணத்தா லுணாக. (கஅ)

நீண்டிட னைநது கணகை கதுப்புநீண் முழுந்தாண் மூக்கு
மாண்டுநேர்ந் திருக்கு மைந்து மயிர்விர லுகிர்தோல வெணப
லீணடுப ராறு நெற்றி தோள்வயி றிருகை மூலம
பூணடுயில கொள்ளு மார்பம் பொறபுடைப புறஙகை யாமால்.

(இ-ள்.) நீண்டிருக்கும் ஐந்திடங்கள்:—கண்கள் - கைகள - கவுள்-நெடிதாகிய முழங்கால்கள் - மூக்கு எனபனவாம். மாட்சிமைபபட்டு மிருதுவாகவிருக்கும் ஐந்திடங்கள் :—உரோமம - விரலகள் - நகங்கள் - தோல் - வெண்மை தங்கிய பறகள என்பனவாம். உயாவோடுகூடிய ஆறிடஙகள்:—நெற்றி - தோள்கள்- வயிறு - இரண்டு கைம்மூலஙகள - (பதக்கம் முதலிய) ஆபரணஙகள விளங்குகின்ற மார்பு – அழகினையுடையபுறங்கை எனபனவாம. எ - று. (கக)

ஏழிடஞ் சிவதத லங்கை யிணையடி கடைக்க ணண்ணங்
கீழிதழ் நகநாக் காகுங் கிளத்திய வகல மூன்று
தாழ்மருங் ககல நெற்றி குறுகுமூன் றிடங்கள் சாற்றிற்
சூழ்கபோ லம்மு ழந்தாள் கீழதாண் குறியுஞ் சொலலும்.

(இ-ள்.) சிவந்ததாகவிருக்கும் ஏழிடங்கள்:—அழகிய இருகைகள் - பாதங்கள் - கட்கடை—மேல்வாய் - கீழுதடு - நகம் - நாக்கு எனபனவாம். மேற்சொல்

விய அகலமாகவிருக்கும் மூன்றிடங்கள்:—தாழ்ந்த இடுப்பு - மார்பு - நெற்றி என்பனவாம். சொல்லுமிடத்தில் குறுகியிருக்கின்ற மூன்றிடங்கள்:—சூழ்ந்த கபோலம்-முழந்தாளின் கீழ்-ஆணகுறி எனபனவாம் (என்று நூல்கள்) சொல்லும்.

அண்ணம் என்பதற்கு உள் நா எனவும் பொருள். (உ௦)

மூன்றிட மாழ்ந்த வுந்தி மொழியுட னுற்ற லின்ன
வான்றவிச் சிறுவ னன்பா லமர்ந்தன வன்றி யேயுந்
தோன்றுதோன் மென்மை யாகத் தோன்றலா லங்கை வன்மை
யேன்றபல பகாத லான்மற் றிவனிறை யாகு மன்றே.

(இ-ள்.) ஆழமாகவிருக்கும் மூன்றிடங்கள்:—நாபி- ஓசை-மிக்க வலிமை என்பனவாம் இடபடிப்பட்ட இலக்கணங்களெல்லாம், மேம்பட்ட இப்பிள்ளையினிடத்தில் பொருந்தியுள்ளன ; அல்லாமலும் இடபதலவன (காட்சியால்) சிறந்தவனுக விளங்குதலாலும் அழகிய கையில உள்ள ரேகை லட்சணங்கள் குறைபாடின்றி மிகுந்திருத்தலாலும் இவன் அரசனுவான. எ று. (உக)

சிறுவிர றன்னி னின்றுந் தற்சனி யளவுந் திரா
வுறுவரை கிடந்த வாற்று லொழிவறு மாயு ளெய்து
நறுமலர்த் தாள்க ளொத்துத் தசைந்துவேர் வெழாது நன்கா
யுறுபர டொத்த வாற்று லுலப்பறு திருவ னுவான்.

(இ-ள்.) கனிஷ்டிகை விரலினின்று சுட்டுவிரல்மட்டிலும் விடாமற்பொருந்திய இரேகைவிளங்குகின்ற தன்மையால முடிவற்ற தீர்க்காயுளையுடைவான. வாசமபொருந்திய மலர்போன்ற பாதங்கள் சமமாகிமாமிசமுடையவாய் வியர்வு தோன்றாமல நன்றாகப்பொருந்தியகாற்பரடுகள் (ஒன்றோடொன்று) நீங்காதிருத்தலால் குறைவற்ற செல்வமுடையவனுவான. எ - று.

தற்சனி=சுட்டுவிரல். வேர்வு என்பது யாக்கைக்குறுகுற்றம் பதினெட்டனுளொன்று. அவையாவன:— பசி - நீர்வேட்டல் - பயம் - வெகுளி - உவகை - வேணடல் - நினைப்பு - உறக்கம் - நரை - நோய் - மரணம் - பிறப்பு - மதம்-இன்பம் - அதிசயம் - வேர்த்தல் - கேதம் - கையறவு எனபனவாம்.

சிறுவிரல் - பெருவிரலுக் கடுத்த ஆள்காட்டிவிரல்; கடைவிரல் (உஉ)

அகங்கையில் வரைக ளற்ப மாகியுஞ் சிவந்து மேய
சங்கொடு குலிச நேமி தநுவொளிர் மகரம போல
விங்கிவன் றன்பால் வாய்ந்த விலக்கணங் கிடக்கை தன்னாற்
பொங்குபர் வெறுக்கை யெய்திப புரந்தரன் போல்வ னன்றே.

(இ-ள்) உள்ளங்கையில் கீற்றுகள் சிறிதாகியும், செந்நிறமுடையதாகியும், பொருந்திய சங்கு-வச்சிரம-சக்கரம் - வில் - விளங்குகின்ற மகரமீன, ஆகிய இவற்றைப்போல இச்சிறுவனிடத்திற் பொருந்திய ரேகைலட்சணஙகள்இருத்தலால் அதிகரித்துயர்ந்த செல்வத்தையடைந்து இந்திரனைப்போல விளங்குவான்.

“ அகமுனர்ச் செவிகை வரினிடை யன கெடும் ” என்பதனுல், அகம்+கை=அங்கை என நின்றது. (உ௩)

நெற்றியி லைந்து கீறு நிலவலால் வலம தாகச்
சுற்றியோர தாரை யாய்நீர் வீழ்தலா றுணைபபொற றாளி
னூறுமே னோக்கி ரேகை கிடததலா லொழுகு தாதுப
பொற்புறு கமல வாசம போன்மெனக் கமழ்ந்த வாற்றால.

(இ-ள்.) நெற்றியிலே ஐந்துரேகைகள் விளங்கலாலும், நீர் வலதுபுறஞ் சுழித்துக்கொண்டு ஒருதாரையாக ஒழுகுதலாலும், அழகிய இரண்டு பாதஙகளி னின்றும் மேல்நோக்கி ரேகையிருததலாலும்,ஒழுகுகினற தாதுவானது அழகு பொருந்திய தாமரைமலரின் பரிமளம்போனறு மணத்தலாலும். எ - று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (உச)

கைவிர னீக்க மின்றி யிருத்தலாற கணக டேனபோற்
செவ்விவாய்ந் திருக்கு மாற்றாற சிங்கததின் வயிறு போல
வவ்வயி னமைத றன்றா லாயுளுந் திருவு மலகி
யெவ்வெலாத் திசையும போற்ற வின்பமுற் றிருப்பன் மாதோ.

(இ-ள்.) கையிலிருக்கும் விரல்கள் விலங்குதவிலலாமல (ஒனறோடொ ன்று நெருஙகி) இருபபதாலும், கண்கள் வண்டினையொத்து அழகுபொருநதி யிருப்பதாலும், வயிறு சிஙகததினதுவயிற்றைப்போலப் பொருந்தியிருததலாலும், (இச் சிறுவன்) வாழ்நாளும் செல்வமும் மிகுந்து எல்லாததிக்குகளிலுள்ளோரும் துதிக்கும்படி சுகித்து வாழ்ந்திருப்பான். எ - று. (உரு)

இலக்கண முடைய னாகு மீங்கிவன் பன்னீ ராணடி
னலக்கணுற் றுவி சோர வசனியே றதிர்ந்து வீழும
விலக்குவ துண்டே னீவிர் விலக்குக வென்று கூறி
நலத்தகு மகதி வீணை நாரதன் போயி னானே.

(இ-ள்.) (இச்சிறுவன் உத்தமமாகிய) லட்சணங்களை யுடையவனாவான் ; ஆகிலும், இவன பனனிரண்டுவயதில் துன்பப்பட்டு உயிர்நீஙகுமபடி இடியானது அதிர்ந்துவிழும். நீஙகள் அதனைத்தவிர்க்கும் வகையிருந்தால தவிருஙகள் என்று சொல்லி,நனமையிருந்த மகதிவீணையையேந்திய நாரதமுனிவர் (தமதிச்சையின் படி) சென்றனர். எ - று. (உசா)

நாரதன் மொழிந்த தெண்ணி நவையறு பன்னி யோடுஞ்
சீர்கெழு மறைவ லாளன் றேசழிந் தாவி சோர
வார்பனி நெடுங்கண் போர்ப்ப மற்றினி யெனசெய் வோமென்
றேர்கெழு குமரற் புல்லி யிடைவிடா தரற்று கின்றான்.

(இ-ள்.) சீர்த்திமிகுந்த வேதங்களில்வல்லவனாகிய விசுவாநரன், நாரத முனிவர் சொல்லியவார்த்தையைக் குற்றமற்ற தனதுமனைவியுடன் ஆலோசித்து, பலங்குன்றி உயிர்சோரவும், குளிர்ச்சிதங்கிய கண்ணீர் நீண்ட விழிகளைமறைக்க வும், இனி என்னசெய்யப்போகின்றோம் என்று அழகுமிகுந்த (கிரகபதியென்னும் தனது) புததிரனைத் தழுவிக்கொணடு நீங்காமல் புலம்புவானாயினன். எ - று.

ஆற்றருந் தவங்க ளியாவு மாற்றியு மளப்பில் கால
மேற்றுநற் றான மெய்தி நுவலரு மறையால் விண்ணோர்ப்
போற்றியுந் தமியே னிந்த புதல்வனைப் பயந்த தெல்லாங்
கூற்றினுக் குணவாய் வாளாக் கொடுப்பவோ வென்று ழைந்தான்.

(இ-ள்.) செய்தற்கரிய எல்லாத்தவங்களையுஞ்செய்தும்,நல்லமுத்திஸ்தான மாகிய காசிக்ஷேத்திரத்தை யடைந்து அநேகநாட்கள் விரதமிருந்தும்,செபித்தற் கரிய மந்திரங்களால் தேவர்களைத் துதித்தும்,தமியேனாகிய யான் இப்புத்திரனைப் பெற்றதெல்லாம்வீணாய், இயமனுக்கு இரையாகக்கொடுக்கத்தானோ என்று மனம் வருந்தினன (விசுவாநரன்.) எ - று.

தமியேன்=வறியேன்; எளியேன். (உஅ)

பொறியிலாக் கொடியேற் கென்றோ புதல்வனை யளித்தா னெந்தை
யறநெறி திறம்பு கின்றேற் கருமக விருக்குங் கொல்லோ
மறுகுபுன் னரகி னின்று மற்றினி யெடுப்பா ரியாரென்
றுறுதுயர்க் கடலின் வீழ்ந்து கரைபெறா துழல்கின் றானே.

(இ-ள்.) எமது தந்தையாகிய சிவபெருமான், செல்வமில்லாத தீயவனாகிய எனக்கு ஏனோ (இப்படிப்பட்ட மேன்மையாகிய) புத்திரனைக் கொடுத்தனர்? தருமமார்க்கந்தவறி நடக்கின்ற எனக்குப் பெறுதற்கரிய இத்தகையபிள்ளை யிருக்குமோ? மனங்குழம்புகின்ற அற்பமாகிய (புத்—என்னும்) நரகத்தினின்றும் என்னையெடுத்து (கரையில்) விடுவோர் யாவர்? என்று இவ்வாறு நினைத்து, துன்பக் கடலில் அழுந்தி நீங்காமல் மனங்கலங்குகின்றவனானன். எ - று.

பொறி=இலக்குமி. ஈண்டு பேறு எனனும் பொருளது; பேறு பதினாறு வகைப்படும். அவையாவன:—புகழ், கல்வி - வலி - வெற்றி- நன்மக்கள்-பொன்-நெல் - நல்லூழ் - நுகர்ச்சி - அறிவு-அழகு - பெருமை - இளமை - துணிவு - நோயின்மை - வாழ்நாள் என்பனவாம். (உகூ)

மாலயன் முதலோ ருய்ய மறிகட லகட்டிற் றோன்று
மாலமுண டிருண்ட கண்டத தமலவென் றுரைப்போர் தம்பாற்
காலன்வந் தணுகான் கால காலநீ யளித்த விந்தப்
பாலனை யளித்தல் வேண்டு மென்றுயிர் பதைத்துச் சோர்ந்தான்.

(இ-ள்.) வளைகின்ற அலைகள்பொருந்திய க்ஷீராப்தியில்தோன்றிய ஆலால விஷத்தைத் திருமால் பிரமன்முதலிய தேவர்கள்யாவரும் பிழைக்கும்படித் திருவமுதுசெய்து நீலநிறமடைந்த ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானே! என்று துதிப்போரிடத்திலும், இயமன் (பயமுற்று) சமீபிக்கமாட்டான். (அவ்வாறிருக்க) இயமனுக்கு இயமனானபெருமானே! தேவரீர் (அடியேனுக்குக்) கடாட்சித்த இப்பிள்ளையைக் காக்கவேண்டும் என்று உயிர் துடித்து மூர்ச்சையுற்றான் (விசுவாநரன்). எ - று.

"மாலயன் முதலோ ருய்ய ஆலமுண் டிருண்ட கண்டன்" என்பது.

முன்னொருகாலத்தில் தேவர்க்கும் அவுணர்க்கும் நேரிட்ட போரில் பலர் மடிதலால், இருதிறத்தாரும் பிரமாவை யடைந்து "நாங்க ளிறவாமல் தெடுநாள்

போர்செய்யக் கருதினோ மாதலின பாற்கடலைக்கடைந்து அமுதளிக்கவேண்டும்" என, பிரமன் "திருமாலுடன சொல்லி முடிப்பிப்பேன" என்று அவர்களோடு கூடி க்ஷீராப்தியை அடைந்து ஆங்கு யோகநித்திரை செய்யும் திருமாலை வணங்கி அவர்கள் விருப்பத்தைச்சொல்ல, திருமால் அதற் கியைந்து மந்தரமலையை மத்தாக நட்டு சந்திரனை அடைதூணாக்கி, வாசுகி எனனும் பாம்பைக் கயிறாகப்பூட்டி தேவர்கள் ஒருபுறமும், அவுணர் ஒருபுறமும் ஈர்க்கும்படி கட்டளையிட்டு, தாம கூர்மவடிவேற்று மலையினது அடியையும் முடியையும் முதுகினாலும் கைகளாலும் பற்றிநிற்க, தேவரும் அவுணரும் இளைபபெய்தும்படிப் பலகாலம் கடைந்தமையால் தாம்பாகிய வாசுகி சகிக்கமாட்டாமல உடல்பதைதது நாததுடிக்கத் தனது ஆயிரம் வாய்களாலும் விஷங்கக்கியது அவ்விஷம் எங்கும் இருண்டுபோம்படி ஒல்லெனப் பரவ, தேவர் முனிவர் முதலாயினோர் பயந்தோடினர். அது கண்ட விஷ்ணு நா மிவர்களைக் காபபோமெனறு அவர்கள்மேற் செல்லும் விஷத்தைத் தா மெதிர்த்தனர். அவவிஷம் அவர் திருமேனியைக் கருநிறமாக்க அவரும் நிற்கற் கஞ்சி யோட்டெடுத்தனர். யாவரும் ஒருங்குசேர்ந்து திருக்கயிலாய கிரியை யடைந்து திருநந்திதேவ ரனுக்ஞையால் உட்சென்று எம்பெருமானைத் தரிசிக்க, சிவபெருமான் "விஷ்ணுவே! உருவம் வேறுபட்டு இவர்களுடன்கூடி வந்த தென்னை?" என்று தெரியாதவர்போன்று வினவ, விஷ்ணு நிகழ்ந்தவற்றைச் சொல்லி எம்மைப் பாதுகாக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, சிவபெருமான் உமாதேவியாரை நோக்க, தேவியார் "இவர்களைக் காக்கவேண்டும்" என, பெருமான் சுந்தரரைப் பார்த்து "சுந்தரா! அவ்விஷத்தைக் கொணர்க" என, அவ்வாணையின்படி அவர் தமது உள்ளங்கையிற் றிரங்கிப பெருமானிடந் தர, அதை வாங்கித் திருக்கரத்தில் வைத்துக்கொண்டு "தேவர்களே! இதனை உண்ணவா? விட்டுவிடவா?" என, தேவர்கள் "உமது திருக்கரததில வரவே உருவம் சிறுத்தது. அதனை விட்டால் உலக மழியும். எவ்வெவற்றிற்கும் முதற்பாகம் தேவரீரதே; ஆதலால் விஷமாயிருப்பினும் அதனைக் கொள்ளவேண்டும்" என்று பிரார்த்திக்க, சிவபெருமான அவ்வாறே சம்மதித்தது திருவமுது செய்கையில் அது கண்டம் அளவு செல்ல அதனை யாவருங் கணடு "எம்மை உயிர் காத்ததற்குச் சாட்சியாக இவ்விஷம் கண்டத்திலேயே யிருக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, பெருமான் அங்கேயே ஒரு நீலமணிபோன்று நிறுத்தி மணிகண்டர், திருநீலகண்டர், சீகண்டர் முதலிய திருநாமங்களைப் பெற்றனர். பிறகு சிவபெருமான் கட்டளையின்படி மீட்டும் பாற்கடலைக்கடையப் பலபொருள்களும்அமிர்தமும்பிறந்தன என்பது.—இதனை,

கந்தபுராணம்.

தக்ஷகாண்டம் - ததீசி யுத்தரப்படலம்.

"ஐயநீ யன்றி யாரிவ் வனல்விட மாற்று நீரார்
செய்யகைக் கொண்ட வாற்றாற் சிறிதெனக் காட்டிற் றன்றே
வெய்யதோ ரிதனை யின்னே விட்டனை யென்னிற் பின்னை
யுய்வரோ யாரு மின்னே யொருங்குடன் முடிந்தி டாரோ.

முடிவிலா வுனக்கே யனரோ முனனூறு பாக மெல்லாம்
விடமதே யெனினு மாக வேண்டிது மிதனை வல்லே
யடியரோ டுய்யு மாறா லருந்தினா யருணைமேரா வென்னக்
கடிகம ழிதழி வேடதேன் கடவுளே யினிதே யென்றான.

என்றனன் விளைவிற் றனைக் கேட்டிய விடமுட் கொள்ளாச்
சென்றது மிடற்றி லன்ன திறத்தினை யாரு நோக்கி
யின்றெம துயிர்கள் காத்த் தெந்தை சாலும் பங்க
ணின்றிட வடிய னென்றெ நல்லனைப் போற்ற லுற்றார்." — என்பதனு
லுணர்க. (௬0)

தந்தைதாய் வருந்த நோக்கித் தளர்ந்திட றவிர்க முக்க
ணெந்தைசீ ரடியார் தம்பா லெய்திடா வெரிகட் பேழ்வாய்
வெந்திறற் கூற்று மஞ்சு மசனியோ விழு மெணடோ
வந்தணன் மலர்த்தாள் போற்றி யாங்கது தடுப்பே னென்றான்.

(இ - ள்.) (கிரகபதியென்னுஞ் சிறுவன்) பிதாமாதாக்களினது துக்கத்தைப் பார்த்து மனத்தளர்ச்சி யடையவேண்டாம். துன்பம்நீங்கக்கடவீர். திரிநேத்திரங் களையுடைய எமது தந்தையாகிய சிவபெருமானது சிறப்புவாய்ந்த தொண்டர்க ளிடத்தில் (எத்தகைய துன்பமும்) வரமாட்டா. அக்கினியையொத்த கண்களையும் பெரியவாயையும் வெவ்விய பராக்கிரமத்தையுமுடைய இயமனும் (சமீபிக்கப்) பயப்படுவான் (என்றால்) இடியோவிழத்தக்கது? எட்டுத்திருப்புயங்களையுடைய சிவபெருமானது மலர்போன்ற திருவடிகளைத்துதித்து அதனை விலக்குவேனென் று (தாய்தந்தையரைநோக்கிச்) சொன்னான். எ - று. (௬௧)

ஆங்கது கேட்ட போது மையநீ னுரைத்தாய் தண்ணார்
திங்கதிர்க் குழவித் திங்கட் கண்ணியன் செய்தி கேட்டி
பூங்கழல வழுத்து கின்ற பாலற்காய்ப் புகைகு லாய
வோங்கழற் றறுகட் கூற்றை புதைத்துயி ரளித்தா னன்றே.

(இ - ள்.) அவ்வாறு சொல்லியவற்றைக் கேட்கவும் (விசுவாநரன் சொல்லு கின்றான்) அப்பா! நன்றுசொல்லினை. குளிர்ச்சிதங்கிய அழகிய இனியகிரணங்க ளைவீசும்இளஞ்சந்திரனைச் சிரோமாலையாகத்தரித்த சிவபெருமானது செய்கைத் திறத்தைக் கேட்பாயாக. பொலிவுதங்கிய வீரக்கழலணிந்த திருவடிகளைவணங்கு கின்ற பாலராகிய மார்க்கண்டேயமுனிவருக்காக, புகைகலந்த மிகுந்த நெருப் பைப்போலுங் கோபக்கண்களையுடைய இயமனையுதைத்து (அவரது) உயிரைக் காப்பாற்றினர். எ - று.

கண்ணி=கொண்டைமாலை.

கூற்றையுதைத் துயிரளித்தானென்பதற்கு இயமனை உதைத்து உயிர் தொலைத்து மீண்டும் தேவர்வேண்டியபடி பூமிபாரம்நீக்க எழுப்பினர். என்று பொருள்கூறுதலும் ஒன்று.

"கூற்றையுதைத் துயிரளித்தான" என்பது.

மிருகண்டுமுனிவர் என்பவர் முற்கலமுனிவர் புத்திரியாகிய மருத்துவதி எனுங் கன்னிகையைமணந்து சிறிதுகாலம புத்திரரின்மையால் காசி க்ஷேத்திரத்தை யடைந்து மணிகன்னிகையில் மூழ்கிச் சிவபெருமானை நோக்கிப் புத்திரபேற்றினை யவாவித் தவஞ்செய்ய, பெருமான பிரத்தியட்சமாகி "முனிவனே! தீக்குணம் - ஊமை - செவிடு - குருடு-முடம் - தீராப்பிணி - அறிவின்மை ஆகிய இவற்றோடு கூடிய நூறுவயது உயிர்வாழும் புத்திரன வேண்டுமோ? அல்லது அழகு - நல்வடிவு - நோயின்மை - எமதன்பு - இவற்றைப் பெறறுப் பதினறு வயது ஜீவித்திருக்கும் புதல்வன் வேணடுமோ? சொல்" என, முனிவன் "வயது குறைந்து வாழ்ந்தாலும சத்புத்திரனே வேண்டும்" என, அவவாறேயருளி அந்தர்த்தானமாயினர். பிறகு சிறிதுநாளில் அம்முனிவன் மனைவி கருப்ப மெய்தி நலல சுபமுகூர்த்தத்தில் ஓர் புத்திரனைப் பெற்றனள். தேவர் புஷ்பமாரி சொரிந்தனர். தேவதுந்துபி முதலிய முழங்கின. பிரமதேவன் அச்சிறுவனுக்கு மார்க்கண்டன் என்று பெயரிட்டனன். உபநிட்டானம், சகதிமிதித்தல், அன்னப்பிராசனம் முதலியவற்றை மாசந்தோறு மியற்றி ஒருவருடத்தில் தலைமயிர் களைந்து இரண்டாம் வருடம் கர்ணவேதனம்முடித்து ஐந்து வயதில் உபநயனம் நடத்தி வித்தியாப்பியாசஞ் செய்வித்தனர். மாரகண்டேயர் வேதாகமமுதலிய நூல்களிற்றேர்ந்து சிவபெருமானே உண்மைபபொருளெனவுணர்ந்து சிவபக்தியும் சிவனடியாரிடத் தன்பும் அதிகரித்தனர். அவவாறிருக்கையில வயது பதினறுகவே தாய் தந்தையர் இவரைப்பற்றி எப்போதும் துனபமுற்றிருந்தனா. அதனை யுணர்ந்து என்னெனக்கேட்க உண்மை சொல்லாராகிக் கடைசியில் சிவபெருமான் தனக்களித்தவரத்தைத் தந்தைசொல்ல "தந்தையே! யான் சிவார்ச்சனைசெய்து பெருமானது பேரருளால் இயமனை வென்று வருகின்றேன். அஞ்சவேண்டாம்" என்று கூறி விடைகொண்டு தென்றிசையில் திருக்கடவூரை யடைந்து சிவலிங்கந்தாபித்துப் பூசைசெய்து பெருமானால் "இயமபயம நீஙகுக" என்று திருவாய்மலர்ந்தருளிய வரத்தைப்பெற்று, மீண்டும் பூசிக்கையில மரணகாலங் குறுகவே, இயமனது கட்டளைப்படி ஓர் தூதன் வந்து அவர் பூசாபலத்தினால் சமீபிக்கக்கூடாதவனாகி சையமினி நகரமடைந்து தன் தலைவனுக்குச் சொல்ல, அவன் கோபித்துத் தன் கணிகராகிய சித்திரகுத்திரர்களை வருவித்து அவர் கணக்கைக் கேட்டறிந்து தன் மந்திரியாகிய காலனை யனுப்ப, காலன் போய்ப் பார்ததுத் திரும்பிவிட இயமன் சீறித் தன்மகிஷவாகனத்தையழைப்பித்துத் தானே அதினமீதேறி மழு - தண்டம் - பாசம் - சூலம் இவற்றை யேற்று, குடையுங் கொடியுந் தூதர் தாங்கிவர மார்க்கண்டேயரைக்கிட்டி அழைக்க அவர் வராமையால் "பிரமாதிதேவர்களும் யானுமே ஒருகாலத் திறப்போமானுல் நீயோ வரமாட்டாதவன்" என்று கோபத்துடன் நீலமலைபோல் நின்று கழுத்தில் பாசத்தை வீசி யிழுக்க எத்தனிக்கையில் மார்க்கண்டேயர் அஞ்ச, சிவபெருமான் 'பயப்படாதே' என்று அருளிச்செய்து அச்சிவலிங்கமூர்த்தத்தி னின்றுந் தோன்றி, தமது இடதுகாலால்உதைக்க இயமன் பூமியில்வீழ்ந் திறந்தனன். மார்க்கண்டேயருக்குச் சிரஞ்சீவி யளித்த

னர். பின்னர் பூமியில் மரணமில்லாமையால சுமைதாங்கமாட்டாது பூமிதேவி குறையிரப்பப் பெருமான் இயமனை யெழுப்பினர் என்பது.— இதனை.

கந்தபுராணம் - அசுரகாண்டம் - மார்க்கண்டேயப்படலம்.

"எறிந்தான் பாச மீர்த்திட லுமுள் ளிதுபோழ்தி
லறிந்தான் முனு மீசனை யேத்தி யடீந்தற்
பிறிந்தா னல்லன மற்றினி யிந்தப் பெருமைந்தன்
மறிந்தா னன்றோ வென்றிமை யோரு மருளுற்றார்.

ஈர்க்கும் பாசங் கந்தர முற்று மிடறில்லா
மார்க்கண் டன்முற் றோன்றின னின்பால் வருதுனபந்
தீர்க்கின் றுநீ யஞ்சலை யென்றே திசையாழிக்
கார்க்கண் டத்துக் கண்ணுத லையன கழறுற்றான்.

மதத்தான் மிக்கான் மற்றிவன் மைந்த னுயிர்வாஙகப்
பதைத்தா னென்னு வுன்னி வெகுண்டான் பதமூன்றுஞ்
சிதைத்தான் வாமச் சேவடி தன்னாற் சிறிதுந்தி
யுதைத்தான் கூற்றன் விண்முகில் போன்மண் ணுறவீழ்ந்தான்." என்பத னுணர்க. (கஉ)

ஆசறு சுவேத னென்பா னுருயி ருய்யக் கூற்றின்
பாசம தொழித்துக் காத்தான் சிலாதன்மெய்ப் பால னுவி
நாசம துறமற் பற்று நமனையீங கடர்த்தான் விண்ணோர்
வாசவ னுதி யுய்ய மறிகட லஞ்ச முண்டான்.

(இ-ள்.) (சிவபெருமான்) குற்றமற்ற சுவேதன என்பவனது அருமையாகிய உயிர்பிழைக்கும்படி இயமனது பாசத்தைவிலக்கிக் காப்பாற்றினர். சிலாதர முனிவர் புதலவராகியபாலகரது உயிர்இறுதியடையாமல் (யாவருயிரையும்) பிடிக்கின்ற இயமனை அடக்கினர். இந்திரன்முதலிய தேவருயிர்பிழைக்கும்படி, மடங்குதலுடைய பாற்கடலிற்றோன்றிய ஆலகாலவிஷத்தைப் பானஞ்செய்தருளினர்.

சுவேதனுயிர் காத்ததாவது.

**சுவேதன்** என்னும் வேதியன் சிவபூசைசெய்திருக்கையில் இயமன்தனது பாசத்தை அவனது கழுத்திலெறிய,சுவேதன் சிவபெருமானை வேண்டிக்கொள்ள, பெருமான் உமாதேவியாரோடு அவ லிங்கத்தினின்றுந் தோன்றக் கண்ட இயமன் யோசனைதூரம்போய் விழுந்தனன். சிவபெருமான் சுவேதனுக்கு எண்ணில்லாத வாணாளளித்து இயமனை யெழுப்பினர் என்பது.—இதனை,

காஞ்சிபுராணம் - இறவாத்தானப்படலம்.

" சுவேத னென்பான் வாழ்நாட் கழிவு துன்னுநாட்
சுவேதக் கீற்று மாடச் சூழ லதனிடைச்
சுவேத நல்லா னுரர்தி தோன்று பொழுதனன்
சுவேத கீற்று னீத்தான் பிறவித் துன்பமே."— எனவும்,

இலிங்கபுராணம் - சுவேதன் காலனைவென்ற அத்தியாயம்.

"சிறிய தூமமுவானொளென றெண்ணிமறைச் சுவேதனெனிரி திங்கள் வேணிக்
கறைமிடற்றோ னடிபரவுங் காலையினிற் கண்களழல் கதுவக் கீற்றுப்[றகோட்
பிறைபெயிற்று வாய்மடித்துப் பெருஞ்சினந்தன றிலக்கொளீஇப் பிறங்குபொ
டிறுவனைகால் கொடுநடந்து வருவனென வெங்கால னெய்தி னனே.

பாசமவன் கழுத்திடலும் பாய்விடையோய் காத்தியெனப் பகரா முன்னம்
மாசின்மணி மிடற்றிறைவன வடவையழல் கக்குமழு வாள்கைத் தாங்கித்
தேசுடைய விலிங்கத்திற் கணங்களொடுந் தேவியொடுந் தோன்றநோக்கி
யோசனைபோய் வெங்கால னுருமினதிர்ந் துள்ளாவி யொழிய வீழ்ந்தான்." —
எனவும் வருவனவற்று னுணர்க.

சிலாதர் பாலனைக் காத்தது.

**சிலாதரமுனிவர்** சிவபெருமானைநோக்கி அரியதவஞ்செய்ய, பெருமான் காட்சிகொடுத்து வேண்டும்வரம் யாதென "இறவாத்தன்மையுடைய புதல்வனை அருளவேண்டும்" என, சிவபெருமான "அவ்வாறே இறவாதவனும் என்கூறாகிய ஒரு புதல்வன் யாகபூமியில் உதிப்பான்" என்று திருவாய்மலர்ந்தருளினர். முனிவர் யாகபூமியை உழுகையில், பொற்பேழையில் ஒரு குழந்தை யிருக்கக்கண்டு வணங்கி "உலகிலுள்ளார்க்கெல்லாம் தந்தையாகிய தேவரீர் என்க்காகக் குழந்தையானீரா!" என்று தனவீட்டுக்குக் கொண்டுபோய்ச் **சேப்பேசுரர்** என்று பெயரிட்டுச் சந்தோஷித்து வளர்த்தனர். ஏழுவயதில **மித்திராவருணர்** என்னு முனிவரர் "இப்புதல்வன இன்னும் ஒருவருடத்திலிறப்பான" என்று சொல்லக்கேட்டு,சிலாதரர்வருந்த "யான இறவேன் வருந்தவேண்டாம்"என்று அவரைத்திடப்படுத்திவிட்டு, சிவபெருமானைத் தோத்திரஞ்செய்ய, பெருமான் காட்சி கொடுத்து "இயமன் உனனிடம்வரமாட்டான்" என்று திருவாய்மலர்ந்து தமது திருக்கரத்தைச் சிரமேல் வைத்து, மகுடாபிஷேகஞ் செய்து **திருநந்திதேவர்** எனனுந் தமதுபெயருமு சாரூப்பியமும் அளித்து,**சுயசை**என்னும் கன்னிகையை, மணஞ்செய்வித்து, திருக்கயிலாயகிரிக்கு முதற்பெருங்காவலாகிய பதவிதந்தனர்.

இலிங்கபுராணம் - நந்திகேசுரர் காலனைவென்ற அத்தியாயம்.

"பருவ மேழுசெல் காலையிற் பழமறை முழுதுந்
தெரியு மித்திரா வருணராந் தீதறு முனிவர்
அருகு வந்தினி யோர்பரு வத்தினி லாவி
யொருவு மென்றுரை செய்தன ருணாவினி லுணர்ந்தே.

ஆய வாசகங் கேட்டலு மருளுடைச் சிலாதன்
சாய நெஞ்சகந் தளர்தலுந் தளரனீ தளரல்
மாய்வ தில்லையா னென்றவன் மனங்கொளக் கூறிப்
பாயு மால்விடைப் பாகனைப் பணிந்தனன் றுதித்தான்..

வழுத்தல் கேட்டலு மதிமுகி ழணிந்தவார் சடைமேற்
குழைத்த பைந்தளிர்க் கொன்றைதாழ் குழகன்வந் தாவி

யழிக்குங் கூற்றுவ னுனனுழை யணுகிடா னென்று
தழைத்த காதலாற் றலையின்மேற் றன்கரம் வைத்தான்."—எனபதனு
னுணர்க. (௬௬)

நிலந்தலை மயங்கா வண்ண நெறிபலா நெறிமேற் கொண்ட
சலந்தர னுயி ருண்ணத் தாளினா னேமி யுய்த்தா
னலந்தலை விளைக்கு மெய்ய வந்தகா சுரனுற் வானு
ளுலந்திட வளப்பில காலம் வெயிலிடை புலர்த்தி னானே

(இ-ள்) பூமியில மயங்காத ஈனமாக்கத்தைத தீயசெய்கைமேற்கொ ண்ட சலந்தராசுரனது உயிரைக்குடிக்கும்படிப் பாதத்தினுல் (பூமியினின்று சுதரிசன மெனனும்) சக்கராயுதத்தை உண்டுபண்ணினர். துன்பத்தைச் செய் கின்ற கொடிய அந்தகாசுரனது சிவகாலம் அறியும்படி அளவில்லாதகாலம் (அவ னை வயிரவ சூலத்தியால்) வெயிலிலே உலரும்படிச் செய்தனா (சிவபெரு மான்). எ - று.

சலந்தர னுயி யுண்ணத் தாளினு னேமி யுய்த்ததாவது.

இந்திரன் ஒருகாலத்தில் திருக்கயிலையையடைய, சிவபெருமான் வடிவுமா றி வழியில் நிற்கக்கண்டு "நீயாவன்? எத்தொழில்செய்வோன?" என ஒன்றுங் கூறுதிருப்பக்கண்டு கோபித்துத் தன் கை வச்சிரத்தால் தாக்க, அது பொடியாக வுதிர்ந்தது. பெருமானுக்குக் கோபம்வந்து ஓர் உருத்திரவடிவேற்க, இந்திரன் அஞ்சிப் பலவகையாகத் துதிபுரிய மனம்பொறுத்துத் தன் கோபத்தால் உண்டா கிய வெயர்வை நீரை வழித்தெறிய அது மேற்கடலில் வீழ்ந்து ஒரு புத்திரனுயது. அதனைச் சமுத்திரராசன் மகன்மைகொண்டு வளர்த்துவருகையில பிரமனுல் சலந்தரன் என்னும் பெயர்பெற்று, காளைப்பருவமடைந்து அவுணருடன் கூடி தானவதச்சனுல ஓர் அழகிய நகரஞ் செயவித்து, காலநேமியின் புதல்வி விருந்தையை மணந்து சிறிதுகாலம் வசித்திருந்து, மேருமலையிலிருந்த தேவர்க ளோடு போர்புரியக் கருதிச்செல்ல, தேவாகள் விஷ்ணுவை வேணட, அவா கரு டாரூடராய் இருபதிஞயிரவருடம் போர்பொருது அவனைச் செயிக்கமாட்டாமல் புகழ்ந்துசென்றனர். அதுகண்ட இந்திரன பயந்து கயிலையை யடையத் துணிவ ராலுணாந்து சலந்தரன் ஆங்குச் செல்லப் புறப்படுகையில் வேண்டாமென்று மனைவி தடுப்பவுங் கேளாணுகி, சேனைசமுத்திரத்துடன் கயிலையையடைய, இந்தி ரன் பயந்து வெள்ளிமலையிலுள்ள திருச்சந்நிதானத்தினுட் சென்று சிவபெருமா னைக்கண்டு நிகழ்ந்த துன்பங்களை விண்ணப்பிக்க, பெருமான "அஞ்சாதே" என்று அனுக்கிரகித்து, நரைத்த கிழவுருவமும், ஊன்றியதடியும், தொங்கிய கம ண்டலமுமுடைய ஓர் முனிவடிவேற்று இந்திராதியர் மறைந்து பின்றொடரச் சென்று சலந்தரனைக்கண்டு "நீ யார்? எங்கேபோகின்றாய்" என வினவ "யான் சமுத்திரராசன் மகன் என்பேர் சலந்தரன் சிவனோடு போர்செய்யச் செல்கின் றேன்" என, "நன்றுகூறினாய்" என்று நகைத்து "நீ கண்ணுதலோடு போர் செய்யக் கருதினுல் இறப்பாய் பிழைக்கவேண்டுமானுல் திரும்பிப்போ" என, சலந் தரன் "சிறிதுநேரம் இங்கிருந்து என் வல்லமையைப் பார்" என, "யான் சிவ பெருமானுக் கிரண்டாவது உன் வல்லமையைக் காணவந்தேன்" என்று தனது

திருவடியால் ஓர சக்கரம்போற கீறி "இவ்வலையத்தைச் சிரசிலேற்றித் தாங்கவல் லையா" எனவும், சலந்தரன் "இதுதானு பெரிது" என்று கைகளா லெடுத்து மார்பிலும் புயததிலும் தாஙகிச் சிரசின்மேல வைத்துக்கொள்ள அச்சக்கரம் அவனை இருபிளவாக்கியது. அவனுடனவந்த சைனியமெல்லாம் பெருமானது விழித்தீயினுல சாம்பராயின. பின்னா பெருமான தனது நிஜவடிவுகாட்ட இந்தி ரனமுதலானுர் மகிழ்ந்து போற்றினா என்பது.—இதனை,

கந்தபுராணம் - தக்ஷகாண்டம் - ததீசியுத்தரப்படலம்.

"புரத்தழல் கொளுவியோன் பொறிதத நேமியைக்
கரத்திடை யெடுத்தனன் கணங்கொண் டெய்தலி
னுரத்திடைப் புயத்திடை யுயிர்ததுத் தாங்கியே
சிரததிடை வைததனன தேவ ரார்க்கவே.

பரிதியங் கடவுளப் பதகன் றனனுட
லிருபிள வாகியே யிறைவன் றன்னிடை
யுருவுகொண் டேற்றதிவ் வுலகம் யாவையுங
குருதியம் பெருங்கடல் வளைந்து கொள்ளவே."—என்பதனு னுணர்க.

அந்தகாசுரன் வாளு ளுலந்திடச்செய்ததாவது.

இரணியாக்கன் புதல்வனுகிய அந்தகாசுரன் அருந்தவஞ்செய்து பலவரங் களைச் சிவபெருமானிடம் பெற்று, திருமாலாதி தேவர்களைப் போரில்செயித்துத் துனபுறுத்த அது சகியாததேவர்கள் பெண்வடிவமேற்றுத் திருக்கயிலையையடை ந்து பார்வதியாரது கணஙகளாகிய மாதருடன் கலந்து காலஙகழித்திருந்தனர். அப்பொழுது அந்தகாசுரன் அவாகளைப பிடித்துவருவேனென்று கயிலையையடை ய, தேவர்கள் சிவபெருமானிடம் விண்ணப்பஞ்செய்ய, பெருமான் வயிரவமூர்த் தியையனுப்ப, வயிரவர் அவனைப்போரில்வென்று சூலத்தின்முனையிற்குத்திநெடுங் காலம் நடனஞ்செய்து "அந்தகா! உனக்கென்னவேண்டும்" என, அவனுக்கு அறிவு விளங்கியதால் "மோக்ஷந்தந்தருள்க" என்றுயாசிக்க, அவவாறே அனுக்கிர கித்தனர். என்பது.—இதனை,

காஞ்சிபுராணம்-அந்தகேசப்படலம்.

"தனைப்புறங் கண்ட மின்னுர் தமைப்பற்றி வருது மென்னு
மனத்தருக் குய்ப்ப மீட்டு மந்தகன் வருதல் காணுஉப்
புனத்துழாய்ப் புத்தேண் முன்னர்ப் போற்றிவிண் ணப்பஞ் செய்ய
வினைத்தொடக் கறுக்கு மெங்கோன் வயிரவன் றனைவி டுத்தான்.

வயிரவன் படையோன முன்னும் வானவர்க் கிடுக்கண் செய்வான்
வயிரவன் றுடியன் சேனை வலத்தவ னுகிப் போந்த
வயிரவன் மனத்தான் றன்னைப் பொருதுவன் சூலத் தேந்தி
வயிரவன் களிப்பு மிக்கு வாகையி னடனஞ் செய்தான்."—எனவருவன வற்று னுணர்க. (௩௪)

வடவரை வில்ல தாக வாசுகி நாணி யேற்றிக்
கடனிற வண்ண னம்பாக் கதழெரி நுதிய தாக
வடையலர் புரந்தீ யூட்டு மழனிறக் கடவுட் போற்றி
யிடிவரல் விலக்கு கென்ன வேத்தினன் விடைகொண் டானே.

(இ-ள்.) வடக்கின்கணுள்ள மேருமலையை வில்லாகக்கொண்டு, வாசுகி என்னும் பாம்பை நாணாக ஏறிட்டு, சமுத்திரம்போலும் நீலநிறத்தையுடைய திருமாலை அம்பாகக்கோத்து, வேகத்தோடு செல்லும் அக்கினியை அம்பின் கூர்வாயாகவைத்து (அவற்றைப் பிரயோகிக்காமல்) தம்மை வணங்காத அரக்கர்வசித்திருந்த திரிபுரங்களை (சிரிப்பினால்) அக்கினிக்குஉண்பித்த (செந்நிறம்பொருந்திய) தீவண்ணராகிய சிவபெருமானைத் துதித்து இடிவிழும்படி வருதலைத்தவிர்ப்பாயாக என்று (விசுவாநரன்) சொல்ல (கிரகபதி தாய்தந்தையரை) வணங்கித் (தவஞ்செய்யச்) செலவுபெற்றுக்கொண்டனன். எ-று. (கரு)

களங்கனி யனைய மேனிக் கண்ணனுங் கமலத் தோனு
மளந்தறி வரிய தாகுங் காசியி லடைந்து பின்னர்த்
துளங்குநீர்க் கங்கை மூழ்கித் தூமதிக் கண்ணி யானை
யுளங்கனிந் துருகப் போற்றி யுவபபொடும் வழிபட் டானே.

(இ-ள்.) களாப்பழம்போலுங் கரிய திருமேனியையுடைய விஷ்ணுமூர்த்தியும், தாமரைமலரில்வசிக்கும் பிரமதேவனும் அளவுபடுத்தி உணர்தற்கு இயலாதாகிய (பெருஞ்சிறப்பினையுடைய) காசிக்ஷேத்திரத்தைச்சேர்ந்து பின்பு விளங்குகின்ற கலங்கலாகிய நீரையுடைய கங்காநதியில் ஸ்நானஞ்செய்து, பரிசுத்தமாகிய சந்திரனைச்சிரசிற்றரித்த சிவபெருமானை மனங்கசிந்துருகும்விதமாகத் துதித்துக் களிப்போடுவழிபாடு செய்வானாயினன் (கிரகபதி). எ-று.

வழிபடல்=தொண்டுசெய்தல். (கசு)

முத்திவான் றருவி லின்ப முதிர்ந்தநற் கனியோ தூய
சித்திரன் முனையோ முத்தித் திருமக ளேந்தும பந்தோ
மெய்த்தவ ரிதய நீங்கா வெறுவெளிச் சுடர தேயோ
வித்தலை யெய்தி யார்க்கு மருள்புரி யிலிங்க மாதோ.

(இ-ள்.) இவ்விடத்தில் வீற்றிருந்து எல்லாருக்குந் திருவருளைப்பாலிக்கின்ற சிவலிங்கமூர்த்தி சிறந்த மோட்சமென்கிற விருட்சத்தில் சந்தோஷமென்னும் தேன்பொருந்திக் கனிந்திருக்கும் நல்லபழமோ! பரிசுத்தமாகிய ஞானப்பயிரை விளையச்செய்யும நல்ல முளையோ! முத்தியாகிய இலக்குமியின் கையிற்றாங்கிய ஒரு பந்துதானோ! உண்மையாகிய தவசிகளது உள்ளத்தைவிட்டுப் பிரியாத சுத்தவெளியில் காணப்படும் சுடர்வடிவமோ! என்று தோத்திரஞ்செய்தான். ()

இன்னிசைக் கிழவன் முன்ன ரியம்பிய நெறியா லீசன்
பொன்னடி பரவப் பெற்றே னென்றுள முவகை பூப்பத்
தன்னுடைப் பெயரா லாங்கோ ரிலிங்கந்தா பித்தி யார்க்கு
முன்னரும் விரத மொன்று முறைபிற ழாது நோற்றான்.

(இ - ள்) இனிய ஓசையையுடைய வீணையேந்திய நாரதமுனிவர் (யான் இடிவிழுந்திறப்பேனென்று) முன்னே சொல்லிய வழியினலல்லவா சிவபெருமானது அழகிய திருவடிகளைத் துதிசெய்யப்பெற்றேன்; என்று நினைத்துக் (கிரகபதி) தனது மனதில் மகிழ்ச்சிபொங்க, அந்தக் காசிக்ஷேத்திரத்தில தனது பெயரால் ஓர் சிவலிங்கமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து, யாவரும் நினைத்தற்கரிய ஒரு விரதத்தை விதிக்கப்பட்ட கிரமந்தவறாமல் ஆசிரயித்தனன். எ - று. (௩அ)

குடங்கணூற் றெட்டிற் கங்கைக் குளிர்புன லேந்தி யன்பி
னுடன்றினந் தோறுந் தெய்வ வுருத்திர சமகத் தாட்டித்
தடந்திகழ் குவளை யோரா யிரத்திரு நான்கு சாத்தி
யடங்கலா புரந்தி யூட்டு மணணலை வழி[illegible]ட் டானே.

(இ.ள்.) (கிரகபதி) அன்போடு ஒவ்வொருநாளும், குளிர்ச்சிபொருந்திய கங்காநீரை நூற்றெட்டுக்கும்பங்களில் தாங்கிவந்து தெய்வீகம்விளங்கும் உருத்திர சமகமந்திரஜெபத்துடன் அபிஷேகஞ்செய்து,தடாகங்களில் விளங்கும் நீலோற்பலமலர்கள் ஓர்ஆயிரத்தெட்டால் (சகஸ்திரநாம) அருச்சனைசெய்து, பகைஞர்களது திரிபுரங்களை எரித்த சிவபெருமானை வணங்குவானாயினன். எ - று.

கொடிப்பூ - கோட்டுப்பூ - நீர்ப்பூ-புதற்பூ என மலர்கள் நான்கு வகைப்படும்; அன்றியும் நிலப்பூஎன ஒன்று கூட்டி ஐந்துவகை என்பாருமுளர். அவற்றுள் குவளை ஓர்வகைநீர்ப்பூக்கொடியாதலின் அதனை "தடந்திகழ்குவளை" என்றார்.

மென்பழ மாறு திங்கள் வீழ்சரு காறு திங்க
ளின்புன லாறு திங்க ளெறிவளி யாறு திங்க
ளன்புட னருந்தி யீராண டருந்தவ மிழைத்த பின்னர்
மின்பயி லசனி யேறு வீழுநா ளடைந்த தன்றே.

(இ ள்.) (கிரகபதி) ஆசையுடன் முதலாவது ஆறுமாதம் மெல்லிய பழவருக்கங்களைப்புசித்தும், இரண்டாவதுஆறுமாதம் (காற்றில்உதிர்ந்த) சருகுகளை அருந்தியும், மூன்றாவது ஆறுமாதம் இனிய சுத்தஜலத்தைப் பானஞ்செய்தும், நான்காவது ஆறுமாதம் வீசுகின்ற வாயுவைப் பட்சணஞ்செய்தும் ஆக இரண்டு வருஷகாலம் அருமையாகிய தவத்தைச் செய்தபிறகு (ஒருநாள்) மின்னலை வீசுகின்ற இடிவிழவேண்டிய நாள்வந்து சேர்ந்தது. எ - று. (௪0)

அவ்வழிச் சிறுவன் முன்ன ரகவிரு விசும்பு காக்குந்
தெவ்வடு வயிர வொள்வாட் புரந்தரன் வந்து சேர்ந்து
வெவ்வினை யறநீ யாற்றுந் தவத்தினை வியந்தேன் மைந்த
வெவ்வரங் கேட்டி யேனுந் தருகுவ னியம்பு கென்றான்.

(இ-ள்.) விசாலமாகிய பெரிய தேவலோகத்தை இரட்சிக்கும்,பகைவர்களைக்கொல்லும் ஒளிதங்கிய வச்சிரவாளையேந்திய இந்திரன,அப்பொழுது கிரகபதி என்னும் சிறுவனது கண்களுக்குத்தோன்றும்படி அவன் முன்னேவந்து சேர்ந்து, புதல்வனே! கொடியதீவினைச்சம்பந்த மொழியும்படி நீசெய்த தவத்துக்கு அதிசயித்தேன், (நீவிரும்பி) எந்தவரத்தைக் கேட்டாலும் கொடுப்பேன் சொல்வாயாக என்றனன். எ - று. (௪௧)

மணிநிற வண்ணன் செங்கேழ மலரயன் முதலி னோரை
யணுவள வேனு முள்ளத் துணர்கிலே னமல னன்பர்
துணிவுறி னவர்கட் கெய்தாப் பொருளெவை சொல்லி னன்னோர்
பணிதலைக் கொள்ளு நீயோ வளிக்குவை பகாதி யென்றான்.

(இ-ள்.) (என்று வினவிய இந்திரனைநோக்கிக் கிரகபதி) நீலமணிபோன்ற மேனியையுடைய திருமால், செந்நிறமுடைய தாமரைமலரில் வசிக்கும் பிரமன் முதலாகியதேவர்களையே மனதில் சிறிதும் எண்ணியறியேன். பரிசுத்தராகிய சிவ பெருமானது அடியவர்கள் இச்சித்தால் அவர்கட்கு எப்பொருள்தான் சொல்லு மிடத்தில் கிடைக்காதவை? அவ்வடியவர்களது கட்டளையைச் சிரமேற்றாங்கும் நீயா (எனக்குவேண்டும் வரங்களைக்) கொடுக்கவல்லவன்? சொல்வாயாக என்ற னன். எ - று. (௪௨)

அ·தணன் சிறுவன் கூறக் கேட்டலு மழலு நெஞ்சத்
திந்திரன் சினமீக் கூர வென்னினும் வலியன் கொல்லோ
சந்திர மௌலி பேதை மதியினைத் தவிர்தி தாழா
துய்ந்திட வரங்கள் கேட்டி யெனவவ னுரைக்க லுற்றான்.

(இ-ள்.) பிராமணப்பிள்ளையாகிய கிரகபதி (இவ்விதமாகச்) சொல்லக் கேட்டவுடனே, கொதிக்கின்ற மனமுடைய இந்திரனுக்குக் கோபம் அதிகரித்துச் சந்திரசேகரனாகிய சிவன் என்னைக்காட்டிலும் சிறந்தவனோ? மூடபுத்தியை விடுவாயாக. (இடிவிழுந்து வீணாய்) கெடாமல் பிழைக்கவேண்டிய வரங்களைக் கேட்டுக்கொள்ளுக என்று சொல்லவே அந்தக் கிரகபதி (அதற்குப் பதிலாக) சொல்லத்தொடங்கினான். எ - று.

பேதை=அறிவிலி ; ஈண்டு பேதைமதி என்பதற்குப் பிள்ளைமைக்குணத் துக்கேற்ற சிற்றறிவு எனக் கூறினும் பொருந்தும். (௪௩)

நள்ளிருட் கங்குற் போதி லகலிகை நலனுண் டேகுங்
கள்வநின் வெளிற்று நெஞ்சம் பிறழ்ந்தவை கழற வேண்டாம்
வள்ளிலைச் சூல மேந்தி யிடத்தலால் வரங்க ளம்ம
கொள்வனோ பிறந்துஞ் செத்துஞ் சுலவிய வமரர் தம்பால்.

(இ-ள்.) இருள்மிகுந்த நடுராத்திரியில் அகலிகை என்பவளது போகம் நுகர்ந்து சென்ற திருடனே! உனது அற்பமாகிய மனம் தடுமாறியவற்றைச் சொல்லவேண்டாம். கூர்மையுடைய அச்சவடிவாகிய சூலாயுதத்தைத் தாங்கிய சிவபெருமானிடத்தி லல்லாமல், அடிக்கடி ஜெனித்தும் மரித்தும் உழலுகின்ற ஏனையதேவர்களிடத்தில் வரங்களைப் பெற்றுக்கொள்வேனோ? (பெற்றுக்கொள்ள மாட்டேன்.) எ - று.

இந்திரனை, "அகலிகை நலனுண்டேகுங் கள்வன்" என்றது.

**கௌதமமுனிவர்** மனைவியாகிய **அகலிகை** அழகிற் சிறந்திருந்தமையால் **இந்திரன்** நடுராத்திரியில் சேவல்போற் கூவ, அதனைக்கேட்ட முனிவர் பொழுது புலர்ந்ததென்றெண்ணிக் கங்கைத்துறைக்குச்செல்ல, இந்திரன் கௌதமர்போல

வடிவுகொண்டு அகலிகையைக் கட்டிச் சுகித்திருக்கையில், முனிவர் அகாலமாத லால் திரும்பிவர இவன் பூனைவடிவுடன் ஓட, கௌதமர் "இந்திரா! உனக்கு உடல் முழுதும் பெண்குறியாகுக" என்றும், அகலிகையைநோக்கி "நீ பாறையாகுக" என்றும் சபித்தனர். அகலிகை மனம் பொறுக்கவென வேண்ட "தசரதராமன் திருவடியால் பெண் ஆவாய்" என்றும், உடல்முழுதும் பெண்குறியாகத் தனது உலகத்தையடைந்த இந்திரனைக்கண்ட தேவர்கள் பலர் ஒன்றுகூடி யாசிக்க "அவை கண்களாகுக" என்றும் சாபானுக்கிரகம் செய்தனா. என்பது இதனை.

பாலகாண்டம் - அகலிகைப்படலம்.

"தீவிழி சிந்த நோக்கிச் செய்ததை யுணர்ந்து செய்ய
தூயவ னவனை நின்கைச் சுடுசர மனைய சொல்லால்
ஆயிர மாதர்க் குள்ள வறிகுறி யுனக்குண் டாகென்
றேயின னவையெ லாம்வந் தியைந்தன விமைப்பின் முன்னம்.

அந்தவிந் திரனைக் கண்ட வமரர்கள் பிரமன் முன்னா
வந்துகோ தமனை வேண்ட மற்றவை தவிர்ந்து மாறாச்
சிந்தையின் முனிவு தீர்ந்து சிறந்தவா யிரங்கண் ணாகத்
தந்தம துலகு புக்கார் தையலுங் கிடந்தாள் கல்லாய்." — என்பதனு னுணர்க.

இதுவிஷயத்தில் இந்திரனுக்குநேர்ந்த சாபம் வேறு வகையாகவுங் **கூர்ம புராணம்** முதலிய நூல்கள் சொல்லுகின்றன. விரிப்பிற்பெருகும். (சச)

என்னலுங் கனன்று சீறி யிருவிசும் பளிக்கு மேலோன்
மின்னகு வயிர வொள்வா ளுருமுக விதிர்தத லோடு
மன்னது நோக்கி மைந்த னயர்தலு மமலன் றோன்றித்
தன்னமர் கையான் மேனி தைவந்து தளர லென்றான்.

(**இ-ள்.**) என்றிவ்வாறு (கிரகபதி) சொல்லவும், பெரிய தேவலோகத்தைக் காக்கின்ற இந்திரன்கோபமிகுந்து மின்னலைவீசுகின்ற ஒளிதங்கிய வச்சிரவாளை இடிவிழும்படி அசைக்கவும், கிரகபதி அவ்வாறு இந்திரனசெய்தலைக்கண்டு சோர்வடைய, சிவபெருமான் (அவனுக்குக) காட்சிதந்து, பொருந்திய தமது திருக்கரங்களால் (அவனது) சரீரத்தைத்தடவி மனந்தளராதே என்று திருவாய்மலர்ந் தருளினர். **எ - று.** (சரு)

அயிலெயிற் றரவ மார்ந்தோ னங்கையி னீவப் பெற்றுத்
துயிலுணர்ந் தெழுந்தான் போல வெழுந்தது துயர நீங்கி
முயலறு திங்கட் கண்ணி முதல்வனைக் கண்ணிற காணா
மயிருடல் பொடிப்பக் கண்ணீர் வார்தர மகிழ்ச்சி கூர்ந்தான்.

(**இ-ள்.**) கூர்மைபொருந்திய பற்களையுடைய சர்ப்பங்களை (அரையிற்) கட்டிய சிவபிரானது அழகிய திருக்கரங்களால் தடவப்பெற்று, நித்திரைதெளிந்து எழுந்தவனைப்போன்று எழுந்து, தனக்குநேர்ந்த துன்பம் தவிர்ந்து, களங்கமற்ற சந்திரனைச் சிரமாலையாகத்தரித்த முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானைக் கண்க

ளால் தெரிசித்து, சரீரமுழுதும் மயிர்க்குச்செறியவும், கண்கள் ஆனந்தபாஷ்பம் சிந்தவும் சந்தோஷமிருந்தனன் (கிரகபதி). எ - று.

சந்திரனிடத்திலுள்ள களங்கத்தை முயல் - சயரோகம் என்று கூறுவது வழக்காதலின், பெருமான் சடையிலுள்ள சந்திரனுக்கு அஃதில்லை என்பார் "முயலறுதிங்கள்" என்றார். (சக)

திருநகை சிறிய கோட்டிச் சிறுவன்வாண் முகத்தை நோக்கி
வெருவினை போலு மற்று னுளத்தினை தெரிய வேண்டி
யுருமுவீழ் குலிச மேந்தி யுறறவ னியானே பாரி
லிருவிசும பினிலென் னன்பாக் கியாரிட ரியற்று வாரே.

(இ-ள்.) (சிவபெருமான) சிறிதாகிய திருப்புன்னகையரும்பி, கிரகபதியினது பிரகாசம்பொருந்திய முகத்தைப்பார்த்து, பயந்தனைபோலக் காணப்படுகின்றது; நானே உனது மனதைப் பரிசோதிப்பதற்காக இடிவீழும்படி வச்சிராயுத மேந்தி (இந்திரனைப்போல) வந்தவன். பூமியிலும் பெரிய தேவலோகத்திலும் எனதடியவர்களுக்கு யாவர்தான் துன்பஞ்செய்யவல்லவாகள்? ஒருவருமில்லை. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

இச்செய்யுளில் **நோக்கி** என்னும் வினையெச்சம், அடுத்தசெய்யுளின் இறுதியிலுள்ள **அருளினான்** என்னும் வினைமுற்றைக் கொண்டது. (சஎ)

இந்திரன் பதிக்கும் வெய்ய யமனுறை பதிக்கு நாப்பண்
வெந்தழற் கடவு ளாகி யினிதுவீற் றிருத்தி யென்னச்
சுந்தரப் பைம்பொன் மௌலி விண்ணவர் வணங்கச் சூட்டித்
தந்தைதா யோடு மாங்குச் சார்கென வருளி னானே.

(இ-ள்.) (கீழ்த்திசையிலுள்ள) இந்திரனது தெய்வலோகத்திற்கும் (தென் றிசையிலுள்ள) இயமன் வசிக்கின்ற லோகததிற்கும் நடுவிலே (தென்கீழ்த்திசையில்) வெவ்விய நெருப்புக்குக் கடவுளாகிய அக்கினிதேவனாகி இனிதாகவாழ்ந்திருக்கக்கடவாய் என்று திருவாய்மலர்ந்து, தேவாகளெல்லாம் தொழும்படி அழகிய பசும்பொன்னாலாகிய கிரீடம்புனைவித்து, உனது பிதாமாதாக்களுடன் அந்த உலகத்தை அடைக என்று அனுக்கிரகித்தனர். எ - று. (சஅ)

இங்குநீ யமைத்துப் போற்று மிலிங்கமெஞ் ஞான்றும் வெய்ய
பொங்கழற் கடவு ளென்னு நாமத்திற் பொலிவ தாக
வங்கது வழுத்தி னோர்மே லசனிவீ ழாதென் றோதி
மங்கையோர் பாகன் றாய விலிங்கத்தின் மறைந்திட் டானே.

(இ-ள்.) உமாதேவியாரை ஒருபாகமாகவுடைய எமது சிவபெருமான் இக்காசிநகரத்தில் நீ பிரதிஷ்டைசெய்து துதித்த சிவலிங்கமூர்த்தம், எக்காலத்திலும் மிகுந்த வெப்பமாகிய அக்கினிதேவலிங்கம் என்னும் திருப்பெயரோடு விளங்கக்கடவதாக. அவ்விலிங்கத்தைப்பணிந்தவர்கள்பேரில் இடிவிழாது என்று அருளிச்செய்து பரிசுத்தமாகிய சிவலிங்கமூர்த்தியிடையே அந்தர்த்தானமாயினர்.

ஆக - என்பது ஆகுக என்பதன் இடைக்குறை. (சகூ)

ஆரழற் கடவு டன்மை யீதென வறிதி யின்னுஞ்
சீர்பெற வறியற் பால தெரித்துநீ கேட்டி யென்னுக்
காருறழ் மேனி யான்றன் கணமெடுத் தியம்ப லோடும்
பார்புகழ் சிவசன் மாவும் பரிவொடும் பகர்த லுற்றான்.

(இ-ள்.) (சிவசன்மாவே!) அருமையாகிய அக்கினிதேவனது தன்மை இத்தகையினது என்றறியக்கடவாய். இன்னம் சிறப்புப்பெற நீ தெரியவேண்டியவற்றை உணர்த்துவோம்; கேட்பாயாக. என்று கருமைமிகுந்த திருமேனியையுடைய விஷ்ணுமூர்த்தியினது கணநாதர்கள் எடுத்துச்சொல்லவும், உலகத்தார் புகழ்கின்ற சிவசன்மா என்பவனும் ஆசையுடன் (பின்வருமாறு) சொல்லத்தொடங்கினான். எ - று. (ரு0)

சிவசன்மா அக்கினிலோகங் கண்ட அ - ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் சுஙO.

சிவமயம்.

பன்னிரண்டாவது,

சிவசன்மா

# நிருதியுலகும் வருணனுலகுங் கண்ட அத்தியாயம்.

எரியின் றன்மை யியம்பினி ரிங்கினி
நிருதித் தன்மை நிகழ்த்திட வேண்டுமென்
றரிய நான்மறை யந்தணன் கூறலுங்
கரிய மாயன் கணங்க ளியம்புமால்.

(இ-ள்.) அருமையாகிய நான்கு வேதங்களையு முணர்ந்த அந்தணனாகிய சிவசன்மா, (கணநாதர்களே!) அக்கினிபகவானது தன்மையைச் சொன்னீர்கள்; இதற்குமேல் நிருதியினது தன்மையைச் சொல்லவேண்டும் என்று கேட்கவும், நீலநிறம்பொருந்திய திருமாலின் கணத்தலைவர்கள் சொல்லுகின்றனர். எ-று. (க)

இழிகு லத்து மியைந்து மறநெறி
வழுவ வின்றி மறைதிறம் பாதுயர்
தொழுகு லத்தவர் தாண்மலர் சூடுவோர்
விழைபு மிவ்வுல கத்திடை மேவுவார்.

(இ-ள்) தாழ்வாகிய சாதியிற் பிறவியடைந்தாலும் தருமமார்க்கந் தவறுதலில்லாமல, வைதிகநெறிக்கு மாறுதுயர்ந்த வணக்கத்தக்கும் மேற்குலத்தவரது பாததாமரைகளை, தமது சிரசின்மேற் கொள்பவர்கள் (யாவரும்) விரும்புகின்ற இந்த நிருதியுலகத்திற் பொருந்திவாழ்வார்கள். எ-று.

உயர்தொழுகுலத்தவர் என்பது பிராமணர் - க்ஷத்திரியர் - வசியர் - சூத்திரர் என்னும் நாற்குலத்தவர்களிற் பிந்தியோர் முந்தியோரை வணங்கவேண்டியது எனபதாம். (உ)

அரக்க ரென்பதை யல்லது மற்றவ
ரிரக்க தம்முயி ரென்ன வுயிரெலாம்
புரக்குந் தன்மை பொறைநிறை வாய்மையா
லுரைக்கும வானவர் தமமி லுயர்ந்துளார்.

(இ-ள்.) (இவ்வுலகத்தில் வசிப்பவர்கள்) அரக்கர் என்று சொல்லப்படுவதேயல்லாமல்; அவர்கள் கிருபை-தம்முயிர்போல மன்னுயிர்களைக் காக்குங்குணம்-பொறுமை மாட்சிமை-சத்தியம் ஆகிய இக்குணங்களால் (மேம்பாடாகச்) சொல்லுகின்ற தேவர்களைக்காட்டிலும் உயர்ந்தவராவார்கள். எ-று. (ந)

நண்ணு மித்திசை நாளும் புரந்தரு
ளண்ணல் செய்தி யறைகுவங் கேட்டியால்

விண்ணி னோங்குயர் விந்தப் பொருப்பய
லெண்ணில் வேட ரிருக்கையொன் றுண்டரோ.

(இ-ள்.) பொருந்திய இத் தென்மேற்குத்திக்கினை எக்காலத்தும் (அரசு செய்து) காக்கின்ற (திக்குப்பாலகனாகிய) நிருதியினது சரித்திரத்தைச் சொல்லுவோம் சிவசன்மாவே! கேட்பாயாக. (என்று கணநாதர்கள் சொல்லத்தொடங்கினர்) ஆகாய மளாவி யுயர்ந்த விந்தகிரிக்குச் சமீபத்தில் கணக்கில்லாத வேடர்கள் வசிக்கும் வேடர்குறிச்சியொன் றிருந்தது. எ - று. (ச)

அங்கு மேவிய வேடர்க் கதிபனும்
பிங்க லாக்க னருமதைப் பேரியாற்
றங்க ரைக்க ணிருந்தத ரேகுநர்
தங்க ளுக்கிடர் தீர்க்குந் தகைமையோன்.

(இ-ள்.) அக்குறிச்சியில் வாழ்கின்ற வேடர்களுக்கு அரசனாகிய பிங்கலாக்கனென்பவன், (எத்தன்மையானவ னென்றால்) அழகிய நருமதை யென்னும் பெயரையுடைய நதிக்கரையிலிருந்துகொண்டு வழிச்செல்கின்ற பிரயாணிகளுக்கு நேரிடுந் துன்பங்களைத் தவிர்க்கத்தக்க தன்மையுடையவன். எ - று. (ரு)

கடவுட் கங்கைசூழ் காசியி னேகுநர்க்
கடிசில வைகு மிருக்கை யரும்பொருள்
குடைசெ ருப்புக் கொடுத்தென் பெயர்சொலி
னிடைத டுக்குந ரில்லென வேவுவான்.

(இ-ள்.) (அன்றியும்) தெய்வீகம் பொருந்திய கங்காநதியாற் புடைசூழ்ந்த காசிக்ஷேத்திர யாத்திரைசெய்வோர்க்கு உண்பதற் குரிய உணவு - தங்குகின்ற இடம் - அரிய பொருள்கள் - (வெயில் மழைகளைத்தவிர்க்க) குடை - (நடை கொடுக்க) பாதரட்சை (முதலிய பொருள்களைத் தானமாக) உதவிசெய்து, (பிங்லாக்கன் என்று) என பெயரைச் சொன்னால் வழியிடையே தடைசெய்பவர்கள் ஒருவருமில்லை என்று கட்டளையிட்டனுப்பத்தக்கவன். எ - று. (சு)

கல்லென் சும்மைத் திரைபொரு கங்கையிற்
செல்லு மன்பர்க் கிடுக்கண் செயுமென
வல்லி யங்கண் முதலிய மாக்களைக்
கொல்வ தன்றிமற் றியாவுங் குறைத்திடான்.

(இ-ள்.) கல் என்னும் ஓசையையுடைய அலைகள் மோதுகின்ற கங்காஸ்நானத்திற்காக வழிச்செல்லும் அடியவர்களுக்குத் துன்பங்களை உண்டாக்கும் என்று கருதி, (அந்தக் காட்டிலிருக்கும்) புலிகள்முதலிய துஷ்டமிருகங்களைக் கொல்வதேயல்லாமல் வேறே (மரமுதலிய) ஒருபொருளையும்வெட்டமாட்டாதவன் (அந்தப் பிங்கலாக்கன். எ - று.

கல் - ஒலிக்குறிப்பு; வடநூலார் இதனை **அநுகாரணம்** என்பர். (எ)

ஆற லைக்கு நாலா ளன்பருக்
கீறி லாம லினிதி ளிக்குநாள்
மாறு கொண்டொரு வேடன் வழிச்செல்வோர்க்
கூறு செய்ய வொளித்தடல் வைகினன்.

(இ-ள்.) சிவனடியவர்களுக்கு வழிப்பறிப்போரால் ஒரு தீமையுமின்றி இனிமையாகக் காக்குங்காலத்தில்; ஒருவேடன் பகைகொண்டு வழிப்போக்கர்களுக்குத் தீமையை உண்டுபண்ணும்படி (ஒருவருமறியாமல் நடக்கும் வழிக்குப்) பக்கத்தில் மறைந்துகொண்டிருந்தான். எ - று. (௮)

அன்ன கானிடை யாரிருட் போதினிற்
றனனும் வெய்ய புலிதொடரத் தேகலுந்
தன்னை மேபடை நீங்கத தமியனுய்ப
பொன்னி றக்கட் புளினனும வைகினன்.

(இ-ள்.) பொன்னைப்போல நிறமமைந்த கண்களையுடைய அவ்வேடன் அப்படிப்பட்ட காட்டினிடத்தில் இருள்பொருந்திய இராக்காலத்தில், கொடுமை தங்கிய புலியொன்று தன்னைப் பின்றொடர்ந்துவரவும், அதிகரித்த தனது படைகள் (தன்னைவிட்டுப்) பிரிய ஒன்றியாக இருந்தான். எ - று.

படை = ஆயுதம் ; சேனை. (௯)

அருகெ றிக்கட் கரந்தமா வேட்டுவன்
பொருவில் காசியிற போகின்ற வன்பரை
புருமெ னச்சென் றுரறிமற் றுங்கவர்
வெருவ யாவும பறித்திடுமவேலையின்.

(இ-ள்.) (மனிதசஞ்சாரம) அருமையாகிய வழியில் ஒளித்துக்கொண்டிருக்கும் அவ்வேடன் ஒப்பில்லாத காசியாத்திரையாய் வழிச்செல்கின்ற அடியார்களை, இடியைப்போல எதிர்த்துப்போய், பெருங்கோபங்கொண்டு அவர்கள் அஞ்சும்படி எல்லாப்பொருள்களையும் அபகரித்துக்கொள்ளுங்காலத்தில். எ - று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௰)

மங்கை பாகன் மலரடி கைதொழ
விங்கி யாங்கள் புகுந்தன மித்தலைத்
துங்க வேடர் தொடர்ந்தன ரென்செய்கோம்
பிங்க லாக்க வெனப்பெய ரோதினர்.

(இ-ள்.) பார்வதிதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ்கரிக்கும்படி நாங்கள் இவ்விடத்திற்குவந்தோம். இங்கே வெற்றிமிகுந்த வேடர்கள் எங்களைச்சூழ்ந்தார்கள். நாங்களென்ன செய்யப்போகிறோம் பிங்கலாக்ஷ என்று அவனது பெயரைச்சொன்னார்கள். (துன்புற்றயாத்திரைவாசிகள்). எ - று. (௧௧)

வெஞ்சி னப்புலி வேட்டத்தின் மேவிய
செஞ்சி லைப்பிங்க லாக்கன் செவியிடைத்

தஞ்ச மிலலவர் சாற்றொலி யேற்றலு
மஞ்ச லஞ்சலென் றுங்குவர் தெய்தினன.

(இ-ள்.) வெவ்விய கோபத்தையுடைய புலிவேட்டைசெய்வதில் பொருந்தியிருந்த செம்மையாகிய வில்லைத்தாங்கிய பிங்கலாக்கனது காதுகளில், துணையில்லாதவர்கள் (தனதுபெயரைச்) சொல்லிய ஓசைகேட்கவும், நீங்கள் பயப்படாதீர்கள் பயப்படாதீர்கள் என்று அவன் அவ்விடத்தில் வந்து சேர்ந்தனன். எ - று.

வெங்க ணோக்கினன் வீக்கிய கச்சினன்
சிங்க வேறறி னெழுமடி சீற்றத்தன்
கங்கை சூடித னன்பரைக் காய்ந்தநீ
ரெங்கு மேவுதி ரென்றெதிர்ந் தானரோ

(இ-ள்.) கண்களில கோபப்பார்வையையும், (அரையினிடத்தில்) கட்டியிருக்கின்ற கச்சினையும், ஆண்சிங்கத்தைக் காட்டிலும் ஏழுபங்கு மிகுந்த கோபத்தினையும்உடையபிங்கலாக்கன, கங்கையாற்றை முடியிற்றரித்த சிவபெருமானது அன்பர்களைத் துன்புறுத்திய நீங்கள் எங்கிருப்பீர்கள் என்று கூறி எதிரிட்டனன்.

ஈறி லாம லியானிங் கிருக்கவு
நீறு பூசித னன்பரை நீவிரோ
வூறு செய்குவி ரென்றுரை யாடினன்
மாற டர்த்த வரிவிற் றடக்கையான்.

(இ-ள்.) பகைஞர்களைச் செயித்த வரிக்கட்டுகள் பொருந்திய வில்லினையேந்தும் விசாலித்த கைகளையுடைய பிங்கலாக்ஷன், யான் இவ்விடத்தில் இறவாதிருக்கையில், திருவெண்ணீறுதரித்த சிவனடியார்களை நீங்களோ தீமைசெய்து பிழைக்கவல்லவர்கள்? என்று கூறினன். எ - று.

ஈறிலாமலியானிங்கிருக்க என்பதற்குச் சிவனடியார்களுக்கு எத்தகைய துன்பமும் நிகழாது இடைவிடாமல்காத் திவ்விடத்திலிருக்க என்றுபொருளுரைப்பினும் பொருந்தும். (கச)

வரிவி னொலி கேட்டிகல் வஞ்சகன்
வெருவி யோட லும வேதிய ரியாரையும்
புரியி னுய்த்துவெம் போர்க்கறை கூவிமேற்
றிருகு வேடன்முன் சென்றெதிர்ந் தானரோ.

(இ-ள்.) கட்டமைந்த அவனது வில்லின் குணத்தொனி கேட்டு, வலிதங்கிய வஞ்சகனாகிய வேடன் பயந்தோட்டெடுக்கவும், (பிங்கலாக்ஷன் ஆங்கு துன்புற்றிருந்த) எல்லாப் பிராமணர்களையும் ஊரில் சேர்த்து, கொடிய யுத்தத்திற்கு வலிய அழைத்து வஞ்சகனாகிய வேடனைச் சேர்ந்து எதிரிட்டான். எ-று.

சிறக்கு நங்குலச் செய்தி யொழிந்திவன்
மறக்கு லக்குவ மூவெனத் தோன்றினை
னெறுத்து மியாமென வொக்கலைக் கூவினன்
வெறித்த குஞ்சியன் வெள்ளியங் கண்ணினன்.

(இ-ள்.) (செய்ப்பகையற்றுச்) சுருண்ட கூந்தலையுடையவனும் வெண்மை தங்கிய கண்களையுடையவனுமாகிய அவ்வேடன், இவன் மேம்பட்ட நமது சாதித் தொழிலை நீங்கி, இவ்வேடர்குலத்துக்குத் தவறாகப்பிறந்தனன் (ஆதலால்) நாம் இவனைக் கொல்லுவோம் என்று தனது சுற்றத்தவர்களைக் கூப்பிட்டான். எ-று.

ஆங்க வன்றனி கூவலி னார்த்துடன்
வீங்கு தோளினர் வில்லினர் வாளினர்
பாங்க ரிற்பிங்க லாக்கனைப் பற்றுபு
வாங்கு தெண்டிரை போல்வளைந் தாரரோ.

(இ-ள்.) அவன் அவ்வகையாகத் தனித்து நின்று அழைக்கவும், உடனே ஆரவாரித்துப் பூரித்த புயமுடையவர்களும் வில்லேந்தினவர்களும் வாள் பிடித்தவர்களும் (ஆகச் சிலர்தோன்றி) பிங்கலாக்ஷனை நெருங்கி, வளைவாகிய தெள்ளிய அலைகளையுடைய கடல்போன்று பக்கத்தில் சூழ்ந்துகொண்டார்கள். எ-று. (௧௭)

முற்று சேனை முடிப்பமென் றன்புடன்
செற்ற மின்றி யெதிர்ந்து செருச்செயு
மற்ற நோக்கிக் கவசம்வில் வார்கணை
துற்று மாவ மிவைதுணித் தாரரோ.

(இ-ள்.) (பிங்கலாக்ஷன) தன்னை முற்றுகைசெய்த வேடர்கூட்டத்தைக் கொல்லுவோம் என்று நினைத்துக் கோபமில்லாமல் ஆசைகொண்டு எதிர்த்துச் சண்டைசெய்யும் சமையம்பார்த்து (வேடர்கள் அவனது மார்பிலணிந்திருக்கும்) கவசம் - (கையிற்பற்றிய) வில் - (முதுகிற்கட்டிய) நெடிய அஸ்திரம் நிறைந்துள்ள ஆவம் ஆகிய இவற்றை அறுத்தனர். எ-று.

ஆவம்=அம்பறாத்தூணி. (௧௮)

வில்லும் வாளியு மின்றி வெறுங்கையான்
மல்ல லேறனை யானனி வாய்மடித்
தொல்லை முன்சென் றமரி னுழக்கலுங்
கொலைசி னத்தொ ரரக்கன் குறைத்திட்டான்.

(இ-ள்.) வலிமைபொருந்திய ஆண்சிங்கத்தையொத்த அப்பிங்கலாக்ஷன், வில்லும் அம்பும் இல்லாமல் வெறுங்கையோடு பற்களை மிகக் கடித்து,முன்னிட்டு விரைந்துபோய்ச் சண்டையிற் கலக்கவும், (அவ்வேடர்களுக்கு நேசனாகிய) கொல்லத்தக்க கோபத்தையுடைய ஓர்ராட்சதன் அவனை வெட்டிவிட்டனன். எ-று.

கரிய கந்தரக் கண்ணுத லானவ
னரிய வன்பர்க் குதவி புரிந்துவெஞ்
செருவி லாருயிர் நீத்திடுஞ் செய்தியா
னிருதி யாயின னென்ன நிகழ்த்தினர்.

(இ-ள்.) (அப்பிங்கலாக்கன்) நீலநிறமமைந்த ஸ்ரீகண்டத்தையுடைய நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானது மெய்யடியார்களுக்கு உபகாரஞ்செய்து கொடுமையாகிய போர்முனையில் அரிய உயிரைத்துறந்ததன்மையால், நிருதிபதவியுற்றனன் என்று (விஷ்ணுவின் கணநாதர்கள்) சொல்லினர். எ-று. (௨0)

நிருதி செய்தி நிகழ்த்தினிர் நீதிசால்
வருணன் செய்தி வகுத்துரைப் பீரெனச்
சுருதி நூற்றுறை போயவன் கேட்டலும்
பொருவின் மாயன் கணங்கள் புகலுமால்.

(இ-ள்.) வேதம்முதலாகிய நூற்றுறைகளில்தேர்ந்துள்ள சிவசன்மா (கணநாதர்களே) நிருதியினது தன்மையைச்சொன்னீர்கள்; தருமமிகுந்த வருணபகவானது தன்மையையும் பிரித்துச்சொல்வீர்களாக என்று வினவலும்,ஒப்பில்லாத விஷ்ணுமூர்த்தியினது கணத்தலைவர்கள் (பின்வருமாறு) சொல்லுகின்றனர். எ-று.

முன்னை நான்மறை யாளர்க்கு முத்துமிழ்
கன்ன லோடுங் கழனி யளித்துளோர்
துன்னு தீர்த்தத் துறைபடி கட்டினோர்
மன்னு வெஞ்சிறை வல்லி விடுத்துளோர்.

(இ-ள்.) பழமையாகிய நான்குவேதங்களையுமுணர்ந்த அந்தணருக்கு முத்துக்களைச் சொரிகின்ற கரும்புடன் விளைகழனிகளைத் தானங்கொடுத்தோர்களும், நெருங்கிய தண்ணீர்த்துறையில் படிக்கட்டு கட்டிவைத்தவர்களும், கொடுமைதகிய சிறையிருப்பாகிய கால்விலங்குகளைநீக்கி விடுவித்தவர்களும். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (உஉ)

முறையி னீட்டு பொருள்கொடு மொய்ம்மலாத்
துறைகொள் வாவி குளம்பல தொட்டவர்
நெறியிற் சாலைதண் ணீர்ப்பந்தல வைத்துளோ
ருறைவ ராவிவ் வருண னுலகினே.

(இ-ள்.) நல்லவழியில் சம்பாதித்த திரவியத்தைக்கொண்டு,மலர்களநெருங்கிய நீர்த்துறைகளையுடைய பல தடாகங்களையும் குளங்களையும் தோண்டினவர்களும, (பலபேர் நடக்கும்) வழியில் (நிழலசெய்யும்படி) சாலைகளும், (தாகந்தணியும்படி) தண்ணீர்ப்பந்தலும் வைத்தவர்களும் இந்த வருணனுலகத்தில் வாசஞ்செய்வார்கள். எ-று. (உ௩)

உருத்தி ரற்றெழு தியோகி னுறங்குமோர்
கருத்த மப்பிர சாபதி கணனெ்ன
வருத்தி சேர்மக வாயசு சிட்டிமான
விரித்த தெண்டிரை நீர்த்துறை மேவினன்.

(இ-ள்.) சிவபிரானைவணங்கி யோகநித்திரையிலிருக்கும் ஒப்பற்ற கருத்தமப்பிரசாபதி என்பவரது கண்ணென்று சொல்லும்படி ஆசைமிகுந்த புத்திரனாகிய சுசிட்டிமான் என்னுஞ் சிறுவன் (ஒருகாலத்தில்) தெள்ளிய அலைகளையுடைய விசாலம்பொருந்திய நீர்த்துறையை யடைந்தனன். எ-று. (உ௪)

உறுத வத்து முனிவ ருயிர்நிகர்
சிறுவ ரோடுமச் சோனத்திற் சேர்ந்துயர்

நறிய தீம்புன லாடலு நண்ணியோர்
கறுவு சிற்றக் கராங்கவா் தெகிற்றல்.

(இ-ள்.) பொருந்திய தவத்தினையுடைய முனிவர்களது பிராணனை யொப்பாகிய பிள்ளைகளோடு (சகிட்டிபோன) அந்த சோனத்திற்போய் உயர்வாகிய நல்ல மதுரம்பொருந்திய நீர்விளையாடலைச் செய்யக் கோபத்தையுடைய ஒரு முதலை அவ்விடம்வந்து அவனைப் பற்றிக்கொண்டு போயிற்று. எ - று.

சோனம் - உயரத்திலிருந்து துளித்துளியாக நீர்சொரியுமிடம். உ௬

முதலை யொன்றுயிர் வௌவ முனிவரின்
மதலை வீந்தன னென்று மறைபவா
புதல்வா வந்து புகலவுங் கேட்டிலா
ரிதய மீசன் பதத்தி லிருத்தலால.

(இ-ள்.) ஒருமுதலை (இவ்வாறு அவனது) உயிரைக் கொள்ளைகொள்ளக (கண்ட)வேதியச்சிறுவர் (கருத்தமப்பிரசாபதியிடம்) வந்து முனிவனே! உனது புதல்வன் இறந்தான் என்று சொல்லவும், அவர் தமதுமனதைச் சிவபிரானது திருவடியிற் செலுத்தியிருத்தலால் தமது செவியில் கேட்கவில்லை. எ - று. ()

அண்ட கோடிக ளியாவு மரனுழைக்
கண்டு யோகங் கனிந்துறை யந்தணன்
மண்டு தீம்புன லோடுதன் மைந்தனைத்
திண்டி றற்கராம் பற்றுபு சேறலும்.

(இ-ள்.) பல்லாயிரகோடி அண்டங்களையெல்லாம் சிவபெருமானிடத்தில் தரிசித்து யோகசித்திரையில் ஆனந்தித்திருக்கும் கருத்தமப்பிரசாபதி, மதுரம்பொருந்திய நீர்ப்பெருக்குடன் தனதுபுதல்வனை வலிய பராக்கிரமம் தங்கிய முதலை பிடித்துக்கொண்டு செல்லவும். எ - று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (உஎ)

முழங்கு தண்புனற் றேவி முதுக்கரா
விழுங்கு மைந்தனை வெய்ய காரவொடிக்
தழங்கு வாரியி னுய்ப்பபத் தழலெனப
புழுங்கி யோர்கண நாதன் பொருவிலான்.

(இ-ள்.) ஒலிக்கின்ற குளிர்ச்சிபொருந்திய கங்காதேவி, (அந்நதியில் வாசஞ்செய்யும்) பழமையாகிய முதலைவிழுங்கிய புத்திரனைக் கொடுமைதங்கிய முதலையுடன் சப்திக்கின்ற சமுத்திரத்திற்செலுத்த (அதனைக்கண்ட) சமானமில்லாதவனாகிய ஒரு சிவகணத்தலைவன் நெருப்பைப்போன்று மனங்கொதித்து. எ - று.

தெண்டி ரைக்கடற் செல்வனை நோக்கிநீ
யண்டர் நாயக னன்பன் புதல்வனைக்
கொண்டு வந்த தெவனெனக் கூறலு
மண்டு தெண்டிரை யுள்ள மறுகியே.

(இ-ள்.) தெள்ளிய அலைகளையுடைய சமுத்திரராஜனைப்பார்த்து,நீ தேவ தேவனாகிய சிவபெருமானிடத்தில் அன்புள்ளவனது புத்திரனை (உன்னிடத்திற்கு) கொண்டுவேக்தது என்னகாரணம்? என்று சொல்லவும், நெருங்கிய கீர்த்தியையுடைய சமுத்திரராஜன் (ஐயோ இதென்னவென்று) மனங்குழம்பி. எ - று.

மறுவில் செங்கதிர் மாமணி யாவையுஞ்
சிறுவன் மேனியிற் சேர்த்தி முதலையோ
டெறிதி ரைக்கட லெய்திய தன்மையாங்
கறிவி னோக்கின னைம்பொறி செற்றுளான்.

(இ-ள்.) குற்றமில்லாத சிவந்தகிரணங்களையுடைய சூரியன்போன்ற சிறந்த முத்துமுதலிய எல்லாவற்றையும் (சுசிட்மொன்என்னும்) இளைஞனது சரீரத்தில் அணிவித்து, முதலையுடனே மோதுகின்ற அலைகளையுடைய சமுத்திற்பொருந்திய தன்மையைத் தானிருக்குமிடத்திலேயே ஞானதிருஷ்டியில் கண்டனன். ஐம்பொறிகளைச்செயித்த கருத்தமப்பிரசாபதி. எ - று. (௯0)

இன்ன நோக்கி முனிவ னிருத்தலும்
பன்னு நான்மறைப் பாலனை யார்கலி
யன்ன வெய்ய கராவொடு மாதிதன்
முன்ன ருய்த்து வணங்கி மொழியுமால்.

(இ-ள்.) கருத்தமப்பிரசாபதி இவற்றை (ஞானதிருஷ்டியால்) பார்த்துக் கொண்டிருக்கவும், சொல்லுகின்ற நான்குவேதங்களுக்குரிய (சுசிட்மொன் என்னும்) சிறுவனை, அந்தக்கொடுமைபொருந்திய முதலையுடன் சிவபெருமானது திருமுன்னர்விட்டுச் சமுத்திரராஜன்வணங்கிப் (பின்வருமாறு) சொல்லுகின்றான். ()

ஆதி நாத வடியன் பிழைத்திலன்
காதி வெய்ய கராங்கவர் பாலனைச்
சீத வான்புனற் றேவியென் பாலுய்த்தாண்
மாத வர்க்கிம மகவை யளித்தியால்.

(இ-ள்.) புராதனராகிய தலைவரோ! அடியேன் இத்தகைய தவறுசெய்ததில்லை. கொடிய முதலைஅடித்துப் பிடித்த இப்புத்திரனைக் குளிர்ச்சிபொருந்திய சிறந்த கங்காதேவி என்னிடத்தில் விட்டனள் (ஆதலால்) இப்புதல்வனைப் பெருமைபொருந்திய தவத்தையுடைய (இவனது பிதாவினிடம்) கொடுப்பீராக(என்று மேலும் சொல்லுகின்றான் சமுத்திரராஜன). எ - று. (௯உ)

அண்ண னின்னுடை யன்பன் புதல்வனென்
றெண்ணி யோர்கண நாத னிசைத்திட
வுண்ண டுங்கியிங் குய்த்தன னலெனத்
தண்ணந் தாமரைத் தாள்பணிந் தேகிற்றே.

(இ-ள்.) சிவபெருமானே! தேவரீரது அடியவர் புத்திரன் என்று நினைத்து ஒரு சிவகணத்தலைவன் சொல்லக்கேட்டு மனம்நடுங்கி இவ்விடத்தில் விடுத்தனன் என்றுகூறிக் குளிர்ச்சிதங்கிய அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கிச் (சமுத்திரராஜன்) சென்றனன். எ - று. (௯௩)

கள்ள யர்வுயிர்க் குங்கமழ் கொன்றைபோன்
றெள்ளு நான்மறை யோயநின் சிறுவனைக்
கொள்க வென்ன வவனுங் குறிக்கொளா
வுள்ள மின்புற் றியோக மொழிந்திட்டான்.

(இ ள்.) மணம்பொருந்திய தேனைநனிக்கும் கொன்றைமாலையைச்சூடிய சிவபெருமான், தெள்ளிய நான்குவேதங்களையுமுணர்ந்த கருத்தமப்பிரசாபதியே! உனது புத்திரனைப்பெற்றுக்கொள் என்று அநுக்கிரகிக்க, அம்முனிவனும் உணர்ந்து மனதில் சந்தோஷமடைந்து யோகத்தினின்றும் நீங்கினன். எ - று. (டுச)

சேந்த கண்ணுஞ் செழுமணி மார்பமுந்
தோய்ந்த குஞ்சியுஞ் சோர்வுறு முள்ளமுங்
காய்ந்த வெங்கட் கராங்கவர் கையுமா
யேய்ந்த மைந்தனை நோக்கின னின்புற்றான்.

(இ-ள்.) சிவப்பேறிய கண்களும், செழுமைதங்கிய முத்துமாலையணிந்த மார்பும், நீரில்மூழ்கி நனைந்த தலைமயிரும், தளர்ச்சியடைந்த மனமும், கோபித்த வெவ்விய கண்களையுடைய முதலைபற்றிய கையுமாகப்பொருந்திய புதல்வனைப் பார்த்து (கருத்தமப்பிரசாபதி) ஆனந்தமடைந்தனன். எ - று. (டுடு)

அன்பி னோடு மடிதொழு மைந்தனை
யின்ப மெய்தத் தழீஇய விருந்தவன்
றன்பெ ருந்தவ நோக்கித் தனயனு
மன்பெ ருந்தவ மாற்றன் மனங்கொண்டான்.

(இ-ள்.) ஆசையுடன் தனது பாதங்களைப்பணிகின்ற புதல்வனை இன்ப முண்டாகும்படி ஆலிங்கனஞ்செய்த பெரியதவங்களையுடைய கருத்தமப்பிரசாபதியின் சிறந்த தவமகிமையைப்பார்த்து, புதல்வனாகிய சுசிட்மோனும் நிலைபெற்ற பெரிய தவங்களைச் செய்தல்வேண்டுமென்று மனதில் எண்ணங்கொண்டனன்.

"மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர் - சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு" எனக்கூறிய திருவள்ளுவநாயனார் கருத்தினபடியே, புதல்வரதுடற்பரிசம்பெற்றோ ருடலுக் கின்பந்தருமாதலின், ஈண்டு "மைந்தனை - யின்ப மெய்தத் தழீஇய விருந்தவன்" என்றார். (டுசா)

தந்தை நல்லருள் பூண்டு தழல்விழி
யெந்தை மேவிய காசியி லேகித்தன்
சிந்தை கூரச் சிவலிங்க மொன்றமைத்
தந்த மில்லதோர் மாதவ மாற்றினன்.

(இ ள்.) (சுசிட்மோன்) பிதாவாகிய கருத்தமப்பிரசாபதியின் (அனுமதியாகிய) நற்கிருபையை மேற்கொண்டு அக்கினிக்கண் வாய்ந்த எமது தந்தையா

கிய சிவபெருமான் பொருந்திய காசிக்ஷேத்திரத்திற் சென்று, தன்மனதில் களிப்புமிகுந்து ஓர் சிவலிங்கபிரதிஷ்டைசெய்து, அளவில்லாத ஒருபெருந்தவஞ் செய்தனன். எ - று. (கஎ)

ஆற்று நற்றவ நோக்கி யகமகிழ்ந்
தேற்றி னேறு மிறைவன் மதலைமுன்
றோற்றி வேட்டன கேளெனச் சொல்லலும
போற்றி நெஞ்சங் குழையப் புகலவனுல.

(இ-ள்.) இடபத்தை ஆரோகணிக்கின்ற தலைவராகிய ஸ்ரீவிச்சுவநாதப் பெருமான, அவன் அவ்வாறுசெய்கின்ற நல்ல தவத்தைப்பார்த்து மனங்களித்து, அந்தச் சுசிட்மோனுக்கு முன் காணப்பட்டு, நீ இச்சித்தவரங்களைக்கேள் என்று திருவாய்மலர்ந்தருளவும், மனமுருகும்படித் துதித்துப் பின்வருமாறு சொல்லுகின்றான. எ - று. (கஅ)

தளிந றுவும்ழ் கொன்றையந தாரினேய்
நளிபு னற்கிறை யாமவர நல்குதி
யளிய னுக்கெனத் தாழ்ந்தடி போற்றினன்
வெளிறெ ரிந்த விரிதரு கேள்வியான்.

(இ-ள்.) வெளிற்றுத்தன்மையை யொழிந்த விரிவாகிய விசாரணையை யுடைய சுசிட்மோன், தேனைத் துளித்துளியாகச் சிந்துகின்ற அழகிய கொன்றை மலர்மாலையையணிந்த எமது பெருமானே! எளியேனாகிய எனக்குக் குளிர்ச்சி பொருந்திய சலத்துக்குத் தலைவனாகும் வரத்தைக் கொடுப்பாயாக என்று கூறித் திருவடிகளை நமஸ்கரித்துத் துதித்தனன். எ - று. (கக)

தருண வெண்பிறைக் கண்ணியன் றுவருங்
கருணை யோடு கடற்கிறை யாகநல்
லருண யந்திட் டமரர் குழாந்தொழ
வருண னென்று மணிமுடி சூட்டினன்.

(இ-ள்.) இளமைதங்கிய வெள்ளிய பிறைச்சந்திரனைச் சிரோமாலையாகத் தரித்த எமது சிவபெருமான் நீங்காத கிருபையுடன சமுத்திரராசனாகும்படி நன்மைபொருந்திய திருவருள் பாலித்து, தேவா கூட்டம் வணங்க வருணராசன் என்று திருநாமமிட்டு நவரத்தினமிழைத்த கிரீடம் தரிப்பித்தனர். எ - று. (௨0)

சீர்கொண் மைந்தநீ போற்று சிவ்லிங்கப்
பேரு நின்பெய ராகப் பெருந்தவத்
தார்வ மோடும ருச்சனை செய்துளோா
நீரி னெய்துகோ யாவையு நீங்குவார்.

(இ-ள்.) கீர்த்தியைக்கொண்ட புத்திரா! நீ (பிரதிட்டைசெய்து) துதித்த சிவலிங்கக்குறியின் திருநாமமும் உனது பெயரால் விளங்குக. பெருமைவாய்ந்த

தவத்தில் ஆசையுடன் அதனைப் பூசித்தவர்கள் சலத்தினிடத்தில் உண்டாகும் எத்தன்மைத்தாகிய துன்பங்களினின்றும் விலகுவார்கள். (சக)

என்று கூறி யிறைவன் மறைதலுந்
தன்று ணைப்பெருஞ் சுற்றமுந் தானுமாய்
மன்ற நாளும் வருண பதத்தினி
லொன்றி யின்புற் றுவந்திருந் தானரோ.

(இ ள்.) என்றிவ்விதமாகச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாகவும், (சுசிட்டமோன்) தனது துணைவராகிய எண்ணிறந்த உறவினரும் தானுமாக (அதுமுதற்கொண்டு) எக்காலத்தும் நிலைப்பட்ட வருணபதவியிலே கலந்து சுகமடைந்து சந்தோஷித்திருந்தனன். எ - று. (சஉ)

சிவசன்மா நிருதியுலகும் வருணனுலகுங் கண்ட அ - ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சஎ..

———

சிவமயம்.

பதின்மூன்றாவது,

சிவசன்மா

## வாயுவுலகுங் குபேரனுலகுங் கண்ட அத்தியாயம்.

என்னநெடுமால் கணமுரைப்ப வினிய பொருடேர் மறைக்கிழவன
மன்னு காற்றின் வரன்முறையும வழுவா துரைத்தி ரெனலோடும்
பொன்னங் கமலத் தயனேடும் புவனம பூததோ னருளடியார்
பன்னு மறையின் பொருடோர்ந்த முனிவனேடும பகாதலுற்றார்.

(இ ள்) எனறிவ்வகையாகத் திரிவிக்கிரமாவதாரங் கொண்ட விஷ்ணுமூர்த்தியின் கணநாதர்களாகிய சுசீலன் - தருமசீலன் என்போர் சொல்லக்கேட்டு, இனிமையாகிய உண்மைப்பொருளை நன்குணர்ந்த வேதங்களுக்குரிய சிவசன்மா (கணநாதர்களே) நிலைபெற்ற வாயுதேவனது வரலாற்றையும் முறைபிறழாமற் சொல்லுங்கள் என்று கேட்கவும், பொன்மயமாகிய அழகிய தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனுடன் சகலலோகங்களையும்உந்தியில்மலர்ந்த விஷ்ணுவின்அருள் பெற்ற கணத்தலைவர்கள், வேதங்களுரைக்கின்ற பொருளைத்தேர்ந்த சிவசன்மாவுடன் சொல்லத்தொடங்கினர். எ - று. (க)

ஈது வளர்காற் றிறைவனக ரின்னேன் காமக் குறும்பெறிந்த
தீதி றவத்துக் காசிபன்றன் சிறுவன் காசி நகரடைந்து
பாதி மதிவே ணியனிருதாள் பத்து நூறா யிரமாண்டு
காத லோடு மினிதேத்திக் கருதற் கரிய தவம்புரிந்தான்.

(இ-ள்.) இவ்வுலகம் வீசுகின்ற காற்றுக்குத்தலைவனாகிய வாயுலோகம்; இவன் காமமுதலிய பகையைக் கடிந்த குற்றமில்லாத தவத்தையுடைய காசிபமுனிவர் புத்திரன். இவன் (முன்னொருகாலத்தில) காசிக்ஷேத்திரத்திற் சென்று அர்த்தசந்திரனைச் சடையிற்றரித்த சிவபெருமானது உபயதிருவடிகளைப் பத்து லக்ஷவருஷம் ஆசையுடன் இனிதாகத் துதித்து யாவராலும் நினைத்தற்கரிய தவஞ்செய்தனன். எ - று. (உ)

ஆற்றுந் தவத்தா லவனமைத்த விலிங்க மதனி லமலனன்பாற்
றோற்றி யுனது தவமகிழ்ந்தோம் விழைந்த தியாது சொல்லுகெனப்
போற்று மறைதேர் காசிபன்றன் புதல்வ னுவகை மீதூர
வேற்றுக் கொடியோன் பாதமல ரிறைஞ்சி யேத்தத் தொடங்கினனால்.

(இ ள்.) அவன் பிரதிஷ்டைசெய்த சிவலிங்கமூர்த்தத்தினின்றும் சிவபெருமான் தவப்பலனால், அன்போடு வெளிப்பட்டு, உனது தவத்துக்குச் சந்தோஷித்தோம் நீ விரும்பியது யாது? சொல்லக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருள, துதிக்கத்தக்க வேதமுணர்ந்த காசிபமுனிவர் புத்திரன் சந்தோஷமிக அதிகரித்தலால், இடபக்கொடியையுடைய எம்பெருமானது திருவடித்தாமரைகளை வணங்கி (பின் வருமாறு) துதிசெய்யத்தொடங்கினன். எ - று. (ங)

தண்ணங் கமலை கேள்வனுக்குத் தனிநான் முகற்கும் புரந்தரற்கு
நண்ணற் கியைந்த பதங்கொடுக்கு நளிமா மதிச்செஞ் சடையினே
யெண்ணற் கரிய மறைநான்கு மிதுவன் றிதுவன் றெனப்ப தல்லாற்
கணணற் கரியா யெனபோலவா ரெவ்வா றுன்னைக் கருதுவதே.

(இ-ள்.) குளிர்ந்த அழகிய தாமரையில் வசிக்கும் சிதேவியின் நாயகனாகிய விஷ்ணுமூர்த்திக்கும், ஒப்பற்ற நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவனுக்கும், இந்திரனுக்கும், விரும்புதற்குரிய பொருந்திய பதவிகளை அனுக்கிரகிக்கும் குளிர்ச்சிதங்கிய பெருமைவாய்ந்த சந்திரன் விளங்கும் செவ்விய சடையையுடையவனே! நினைத்தற்கரிய நான்கு வேதங்களும் இதுவல்ல இதுவல்ல என்று சொல்லுவதல்லாமல் காண்பதற்கு அருமையானவனே! என்னையொத்த புல்லறிவினர் எவவாறு தேவரீரைத் துதிசெய்வது. எ-று. (சு)

துதியுந் துதிக்கப் படுவோனுந் துதிக்கு மவனு முலகீன்ற
விதியும் விதியை யளிப்போனு மிவாக ளறியா விழுப்பொருளாம்
பதியு மாகி யெவ்வுயிர்க்கு முயிரா யவற்றிற் பற்றிலலா
முதல்வ நின்னை யுணர்ந்தெவ்வா றெளியே னேத்த முயல்வதுவே.

(இ-ள்.) தோத்திரமும், தோத்திரஞ்செய்யப்பட்ட பொருளும், தோத்திரஞ் செய்பவனும், உலகங்களைச் சிருட்டித்த பிரமனும், பிரமனைஉந்தியீந்த திருமாலும் ஆகிய இவர்கள் உணராத மேம்பட்ட பொருளான பதியுமாகியும், எல்லாவுயிர்கட்கும் உயிராகியும், அவற்றிற் கன்னியமாகியுமுள்ள தலைவனே! ஏழையாகிய யான் தேவரீரை எவவாறு தெரிந்து துதிக்க எத்தனிப்பது? எ-று.

பதி=தலைவன். மனிதாகளும் தேவர்களுமாகிய பசுக்களுக்கெல்லாம் தலைவராதலின, சிவபெருமானுக்குப் **பசுபதி** என்பதோர் திருநாமம்.

துதி - துதிக்கப்படுவோன் - துதிக்குமவன் என்பது காண்பான் - காட்சி காணப்படுவது இவற்றை ஞாதரு ஞானம் ஞேயம் என்பர் வடநூலார். (ஞ)

நீருஞ் சுலவி யெறிவளியு நெருப்பும புதைந்த நெடுவானும்
பாரும விந்து நாதமுத லெவையு மொருங்கு படைத்திடுமுன்
பேரும் வடிவு மில்லாத பெமமா னின்னைத் தனித்துறந்தோர்
யாரு மறியார் நின்சீர்த்தி யானோ நாவாற் பழிச்சுவனே.

(இ-ள்) சலமும், சுழன்றுவீசுகினற காற்றும், அக்கினியும், (கட்புலனுக்கு) மறைந்திருக்கினற நெடியவிசும்பும், பூமியும், விந்துவும், நாதமும் முதலாகிய எவ்வகைப்பொருள்களையும் ஒன்றாகச் சிருட்டிசெய்தற்கு முற்பட்டு (எத்தன்மைத்தாகிய) திருநாமமும் திருவுருவமுமின்றி விளங்கும் கடவுளே! (ஒன்றினிடத்தும் பற்றின்றி) தனித்துத் துறந்தோர்முதலிய யாவரும் தேவரீரது தன்மையை உணரமாட்டார்களென்றால்; யானோ தேவரீரை நாவினாற் றுதிக்கத்தக்கவன்.

அருவ மாகிச் சலமின்றி யொன்றா யுறையு மமைதிதனின்
மருவு மிச்சை யுயரிச்சா சத்தி யாக மறைப்பொருளா
மொருவ நீயே சத்திசிவ மென்ன விரண்டா யுறைந்தீறும்
பொருவி லுருவ ஞானமிச்சை சத்தி யுருவிற் பொருந்தியதால்.

(இ-ள்.) தேவரீர் அருவமாகியும் அசைவற்றும் தனித்தும் பொருந்தியிருக்குஞ் சமயததில் இச்சாசத்தியானது பொருந்தும். உயர்ந்த அவவிச்சாசத்திசமேதராக வீற்றிருநதருளும் வேதப்பொருளாகிய கடவுளே! தேவரீரோ அச்சத்தி சிவம் என்னும் இரண்டுருவாக எழுந்தருளியிருந்தீர்; ஆகவே தேவரீரது ஒப்பற்ற திருவுருவமானது ஞானமும்இச்சையுமாகிய திருவுருவத்தோடுபொருநதியுள்ளது.

சிவபெருமானது ஐஞ்சத்திகளுள் ஈண்டு இச்சாசத்தியைக் கூறியதனால் "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறிததே." எனறபடி பரை - ஆதி - ஞானம் - கிரியை என்னும் ஏனைய சத்திகளையுங் கொள்க—அவற்றுள் பரசிவத்தினைப்பிரியாத அருட்சததி பரசிவத்தாயிரத தொருகூறான நிட்களசிவத்துடன கூடிக் கிருத்தியத்தைத் திருவுளத்தி லடைப்பது பராசத்தி. அதி லாயிரத் தொருகூறு வலி யுற்றதாய்ப் பெத்த முத்திகளில வியாபிப்பது ஆதிசத்தி. அதி லாயிரத்தொருகூறு வலியுடைத்தாய் வடிவைப்பிரேரிப்பது இச்சாசத்தி. அதி லாயிரத் தொருகூறு வலியுள்ளதாய் அறிவை விளக்குவது ஞானசத்தி. அதி லாயிரத்தொருகூறு வலிகொண்டது கிரியாசத்தி. ஆகவே இச் சததிகளைக்கொண்டு நின்மலரான சிவம் ஆன்மாக்களிடத்துக்கொண்ட கருணைகாரணமாகச் சகத்தைசசிருட்டிக்கிறார். சிவன் இச்சத்திகளைவிட்டுத் தனித்திரார். ஞானசத்தி கிரியாசத்திகளிரண்டும் சிவனிடத்தில் சமவாயமாகச் சேர்ந்திருக்கும். ஞானசத்தியால் சகத்தையறிகிறார். கிரியாசத்தியால் செய்கிறார். இக்கிரியாசத்தியேஆன்மாக்களுக்குப் பலத்தைக்கொடுப்பது. இக்கிரியாசததி சுத்தாத்வவாசிகளான மந்திர - மந்திரேச்வர - விஞ்ஞானகலர் இவர்களுக்குப் போக முண்டாக்கலால் மல மாயா கன்ம ரூபையாயிருக்கும். அந்தச் சிவசத்தி ஒன்றாயிருக்கினும் உபாதிபேதத்தினால் மூவிதமாய் லய போக அதிகாரங்களுக்குக் கருவியாகும். *இச்சத்திபேதத்தால் தச்சத்திமானாகிய சிவனும் லய போக அதிகாரியாய், சிவன் - சதாசிவன் - மகேச்சுரன்-எனப்படுவர். ஆகவே யிச்செய்யுளிடத்து சிவனது கிருத்தியபேதத்தால் பேதமுற்ற ஐவகைச் சத்திகளையும் நின்மலசிவம் - சதாசிவம் - மகேச்சுரம் என்னும் மூவகைச் சிவபேதங்களையுங கூறப்பட்டது என்க. (எ)

சத்தி சிவமா நுமதிடத்திற் கிரியா சத்தி யுதித்ததற்பின்
மொய்த்த வலகில் புவனமெல்லா முறையி னுதித்த ஞானசத்தி
பெத்த மறுநல் லுருவநீர் கிரியா சத்தி யுருப்பிறையை
வைத்த மௌலிப் பரைகிரியா சத்தி யுருவாம் வளருலகம்.

(இ-ள்.) சத்தியும் சிவமுமாய இருவர்கூட்டத்தில் கிரியாசத்தி தோன்றிய பிறகு பலவாக நெருங்கியுள்ள அளவிடுதற்கரிய அண்டவைப்புகள் அனைத்தும் முறையாகவுதித்தன. ஞானசத்தியினது பக்தநீங்கிய சிறந்தவுருவம் தேவரீராகும்; கிரியாசத்தியினுருவம் பிறையைமுடித்த சடைமுடியினையுடைய சத்தியே; கருணையோங்கிய வுலகம் கிரியாசத்தியினது உருவமாம். எ - று. (அ)

ஆய வாற்றா லனைத்தினுக்கு மைய நீயே காரணமாந்
தூய மலரோ னின்வலப்பாற் றுளவ நெடுமா லிடப்புறனுங்
காயு மெரிசெங் கதிர்மதியங் கண்மூன் றாகு நினதுயிர்ப்பு
மேய மறையாந் திசைபுரட்டும் விரிநீர்க் கடனின் வெயர்வாமால்.

(இ-ள்.) இவ்வாறாகிய தன்மையால் எல்லாப் பொருள்கட்கும் தேவரீரே காரணம். ஐயனே! பரிசுத்தம்பொருந்திய தாமரையிலிருக்கும் பிரமன் தேவரீரது வலப்புறமும், துளவமாலையணிந்த திருமால் தேவரீரது இடப்புறமுந்தோன்றுவா. சுடுகின்ற அக்கினியும் சூரியனும் சந்திரனும் தேவரீரது திரிநேத்திரங்களாகும். தேவரீரதுசுவாசம்,பொருந்திடவேதமாகும். அலைகளாடுகின்ற விரிந்தநீர்மயமாகிய சமுத்திரம் தேவரீரது வெயர்வையாகும். எ - று.

"தூய மலரோன் வலமும் மாலிடமும்" என்பதனை.

கூர்மபுராணம்.

"மைந்த நின்னையென வலப்புறத் தளித்தன னறிவ
பைந்து ழாய்மது வண்ணனை யெனதிடப் பாலிற்
றந்த ளித்தன னிவிரவெ ககிருகன் றழல்மேற்
காத னேயெனக் கருணையி னுச்சிமோக் துரைப்பான்." —! என்பதனு
னுணர்க. (கூ)

இறைவ நினது செவிவெளியாந் திசையி னைந்து நினதுகர
மறுவின் மறையோர் நினதுமுக மற்றுன் றடந்தோள் வாள்வேந்தர்
செறியுந் திசைகள் விரித்தசைத்த குறங்கு வணிகர் தேவர்முடி
யறையுங் கழல்கள் சூழ்கிடந்த வம்பொற் சரணம் பின்னவரே.

(இ-ள்.) தலைவரோ! தேவரீரது திருச்செவிகள் ஆகாயமாகும். பத்துத் திக்குகளும் தேவரீரது திருக்கைகளாகும். குற்றமில்லாத வேதியர்கள் தேவரீரது திருமுகத்துத்தோன்றுவர். வாட்படையேந்திய மன்னவா தேவரீரது திருப்புயத் துதிப்பர்.வணிகர் நெருங்கியதிக்குகளை ஆடையாகத்தரித்த தேவரீரது திருத்தொடையிற்பிறப்பர். சூத்திரர்தேவர்களது கிரீடங்கள்படுதலாற்சட்டிக்கின்ற வீரக்கழலணிந்த அழகுபொருந்தியபொன்மயமான தேவரீரது திருவடிகளிற்ஜெனிப்பர்.

திசையைந்து என்பது அட்டதிசையுடன் மேலுங்கீழும் எனக்கொள்க.

பெண்ணு மாணு மெனவுறைந்திவ் வுலக முழுதும் பெற்றாய்நீ
தண்ணந் துளவத் தாரோனுந் தண்டா மரையி னுறைவோனு
மெண்ண வரிய பரம்பொருணீ யெனவு வேத்தி யெனக்குவர
மண்ண னின்மே லன்பென்று மழியா திருத்த லெனத்தொழுதான்.

(இ-ள்.) தேவரீரேபெண்ணும் ஆணும் என்று சொல்லும்படிவிளங்கி இந்த உலகத்திலுள்ள பிராணிகள்யாவையும் உண்டுசெய்தீர். தேவரீரே குளிர்ச்சிபொருந்திய அழகிய துளவமாலையையணிந்த விஷ்ணுமூர்த்தியும் குளிர்ந்த தாமரைமலரில் வசிக்கின்ற பிரமதேவனும் நினைத்தற்கு அருமையாகிய மேலானபொருளாக விளங்குகின்றவர் என்று இவ்விதமாகத் துதிசெய்து எனக்குஅருள்செய்யவேண்டிய வரமாவது கடவுளே! தேவரீரிடத்திலுள்ள அன்புநீங்காது எக்காலும் விளங்குதலாம் என்று காசிபமுனிவர் புத்திரன் நமஸ்கரித்தனன். எ - று. (கக)

தொழுத சிறுவன் முகநோக்கிச் சூழ்ந்து துதைந்து தாதாடிக்
கொழுதி யினவண் டிசைபயிலுங் கொன்றை வேணி யருட்பரமன்

விழையு முயிர்க ளனைத்தினுக்கு முயிரா யுலவை வேந்தனெனத்
தழையு மோசை திசைபோர்ப்ப வடமேற் றிசையிற் சார்குதியால்.

(இ-ள்.) கூட்டமாகிய வண்டுகள்சூழ்ந்துகொத்தி மகரந்தப்பொடிகளில் மூழ்கிப் பண்பாடுகின்றகொன்றைமாலையையணிந்த சடையையுடைய திருபாமூர்த்தியாகிய சிவபெருமான், தன்னைவணங்கிய சிறுவனதுமுகத்தைப்பார்த்து விரும்பிய எல்லாவுயிர்கட்கும் உயிராகிக் காற்றுக்கிறைவனுகியவாயுதேவனென்று ஒலிக்கின்ற கீர்த்தி திக்குகளெல்லாம் பரவ வடமேற்குத்திசையை அடையக்கடவாய் (என்று பினனும் திருவாய்மலர்ந்தருகினறனர்). எ - று. (கஉ)

ஆர்வ மோடு நீயினிதி னமைத்த விலிங்கம் பவனமாம
பேர தாக விதுபணிந்தோர் நமது பதியிற் பிரியாது
சார்க வென்ன வரமுதவித் தாளங் கொழிக்கக் கழைகுனிக்கு
மாரற் காய்ந்தோ னருளொடுமவ் விலிங்க நாப்பண் மறைந்தனனால்.

(இ-ள்.) ஆசையுடன் நீ இனிதாகப் பிரதிட்டைசெய்த சிவலிஙகம் பவனலிங்கமென்னும் பேரையுடையதாக விளங்குக. இவவிலிங்கத்தை வணங்கினவர்கள் நமதுசிவபதவியில் நீங்காமல் அடைந்திருக்கக்கடவர்என்றுகிருபையுடன் வரமளித்து,முத்துக்களைக் கொழிக்கும்படி கரும்புவில்லை வளைக்கின்ற மனமதனை எரித்த சிவபெருமான் அச் சிவலிங்கக்குறியின்மத்தியில் அந்தர்த்தானமாயினர்.

பவனம்=வாயு ; காற்று.

சிவபெருமான் மன்மதனை யெரித்த சரிதம்

ஈசுவரியார் பர்வதராஜபுத்திரியாராகத் திருவவதாரஞ்செய்து தவத்திருக்க, சிவபெருமான் சதுர்விதபுருஷார்த்தங்களைச் சனகனுதிமுனிவரர்கட்கருளி யோகிருந்தனர். அக்காலத்து சூரபன்மனால் துன்புற்ற தேவர் வேண்டுகோளின்படி பிரமன் மன்மதனை நினைக்க, அவன் வந்துவணங்கி "என்னை நினைத்ததென்?" என, பிரமன் "சிவபிரான்மீது மலர்க்கணைதொடுத்து, அவர் யோகுநீங்கி உமையை மணம்புரியச்செய்" எனக்கேட்டு, மதனன் 'சிவ சிவ' என்று செவியைக் கரத்தாற் பொத்திக்கொண்டு 'உடன்படேன்' என, பிரமன் "தடுத்தாற் சபிப்பேன்" என மதனன் 'நின் சாபம் பெறுதலினும் சிவபிரான்முன் சென்று இறப்பதே நலம்' என்று விடைகொண்டு தன் மனைவியாகிய இரதி தடுப்ப அவளைத் தேற்றி, அம்பறாத்தூணிகட்டி, தாமரை - மா - அசோகு - முல்லை - நீலம் ஆகிய ஐந்துமலர்க்கணைகளும், கரும்புவில்லும், மாந்தளிராகிய வாளும், எக்காளமாகிய குயிலும், முரசமாகிய கடலொலியும், மீனக்கொடியும், சந்திரனுகிய குடையும் கொண்டு கிளிகளாகிய குதிரைகள்பூட்டிய தென்றற்றேர்மீது இரதியுடனேறிக் கயிலாயகிரியையடைந்து தேரினின்றிரங்கி வணங்கித் தனது பரிவாரங்களை நிறுத்திவிட்டு, இரதியுடன் வில்லும் வாளியுங்கொண்டு திருநந்திதேவரை வணங்கி 'பெருமான்பாற் செல்ல விடையருள்' என்ன, திருநந்திதேவர் 'மேற்புறவாயிலால் செல்க' என்னும் கட்டளையை மேற்கொண்டு மேற்புறவாயிலால் சென்று எமது சிவபெருமான் யோகத்திருப்பதைக்கண்டு நடுநடுங்கி மூர்ச்சித்து வீழ்ந்தனன். இரதி அவனை உபசரிக்க, மூர்ச்சைதெளிந்த மன்மதன் இறக்கத்துணிந்து

வில்லைவளைத்து எய்ய எத்தனிக்கையில், மனோவதி நகரத்தினின்றும் பிரமன்முத லாயினோர் இவனதுசெய்கையைக் காணவேண்டி மறைந்துநிற்க, மன்மதன் கரும்பு வில்லை வளைத்துச் சுரும்புநாண் ஏறிட்டுப் பஞ்சபாணங்களைச் சிவபெருமான்மீது விடுத்தனன். அம்மலர்க்கணை சிவபெருமானது திருமேனியிற்பட்டச்சிறிதுவிழித்த லால மதனன் சாம்பராயினன. இரதி பலவகையாகப் புலம்பிப் பெருமானைத் துதிக்க, சிவபிரான் "உமையை மணந்தபின்னர் மன்மதனை எழுப்புவோம்" என் றனுக்கிரகித்து உமாதேவியார் தவத்தைப் பரிசோதித்து, சத்தரிஷிகளால் மணம் பேசி தேவியை மணந்தனர். அப்பொழுது இரதி சிவபெருமானை வேண்ட அவ ளுக்குமாத்திரம் தோன்றவும் உலகில அநங்கனாக விருந்து தன் றொழிலைப் புரி யவும் மன்மதனை யனுக்கிரகித்தனர் என்பதாம். இதனை,

கந்தபுராணம் - உற்பத்திகாண்டம - காமதகனப்படலம.

"கேளி தொன்று வைப்பல் வேத கேடு சூழ நினதுவாய்ச்
சூளின் மேலை யியல்ப கன்று துன்பு ழந்து படுதவிற்
காள கண்டன் முன்பு சென்று கடிய வெய்ய கணைகளேய்
மாளி னுஞ்சி றந்த தம்ம மற்று முய்ய வாகுமே."—எனவும்,

விட்டவெம் பகழி யைந்தும் வியத்தகு விமலன் மீது
பட்டலுஞ் சிறிதே வேளைப் பார்த்தனன் பார்த்த லோடுங்
கட்டழல் பொதிந்த நெற்றிக் கண்ணது கடிதே காமற்
சுட்டது கயிலை முற்றுஞ் சூழ்புகை பரவிற் றன்றே."—எனவும்,

ஷை - ஷை - மோனநீங்குபடலம்.

"இனைய கூறின ளிரதிவேண் டிடுதலு மிணைதீர்ந்த
புனித னல்லரு ளெய்தியே மங்கைநீ புலம்பாய்கேள்
வனைக ருங்குழற் கவுரியை மேவியாம் வரைபோதி
னுனது கேள்வனை யளிக்குதும் போதியென் றுரைசெய்தான்" எனவும்,

ஷை - ஷை - திருக்கல்யாணப்படலம.

"எரிபுனை நமது நோக்கா லிறந்தநின் னுடல நீறாய்
விரைவொடு போயிற் றன்றே வேண்டின ளிரதி யன்னாட்
குருவமா யிருத்தி யேனை யும்பரோ டிம்பர்க் கெல்லா
மருவினை யாகி யுன்ற னரசியல் புரிதி யென்றான்." — எனவும் வருவன வற்று ளுணர்க. (கஅ)

என்று காற்றுக் கிறைசெய்தி யாவு முறைபப வினிதுவந்து
கன்று சினவெங் குறும்பெறிந்து மறைநூற் கடலின் கரைகடந்த
வென்றி முனிவ னிதிக்கிழவன் செய்தி யனைத்தும் விளம்புகென
மன்றல் கமழுந் துழாயலங்க னெடுமா லடியார் வகுத்துரைப்பார்.

(இ-ள்.) என் றிவ்விதமாக வாயுதேவனது செய்திகளையெல்லாம் வாசனை வீசுகின்ற துளவமாலையையணிந்த விஷ்ணுமூர்த்தியினது கணநாதர்கள் சொல்ல, மிகவும் சந்தோஷித்து, பெருங்கோபம் என்னும் வெவ்விய பகையைக் களைந்து,

வேதநூலாகிய சமுத்திரத்தின கரையைத் தாண்டிய வெற்றிபொருந்திய சிவசன்மா,குபேரனது சரித்திரங்களையெல்லாம் சொல்லுங்கள் என்று கேட்க (கணநாதர்கள்) விளக்கிச் சொல்லத்தொடங்கினர். எ - று. (கசு)

குடக்காய்த் தெங்கின் பழமுதிரக் குதிக்குங் கயவாய் நெடுவாளை
மடற்பூங் கமுகின் மிடறொடிக்கு மல்லல வளங்கூர் காமபிலியிற்
கடற்பா ரனைத்து மிசைபோக்கிக் காம முதல முக்குறும்பின்
றொடர்ப்பாடறுத்தவேள்விதத்த னென்னவுளனோர்தொன்மறையோன்

(இ-ள்.) குடம்போன்ற காய்களையுடைய தென்னைமரத்தினது நெற்றுகள் சிந்துவதனால், அகழியிற் பொருந்திபுள்ள பாய்கின்ற நெடிய வாளைமீன்கள் அழகிய பூமுடிகளையுடைய பாக்குமரங்களினது மிடறுகளை யொடிக்கின்ற சிறந்த வளப்பமிகுந்த காம்பிலிநகரத்தில், சமுத்திரஞ்சூழ்ந்த உலகமுழுதும் கீர்த்தியைப் பரப்பிக் காமம்முதலாகிய முக்குற்றங்களின சம்பந்தங்களை விலக்கிய வேள்விதத்தன என்னும் பெயரையுடைய பழமையாகிய வேதியன ஒருவனிருந்தான்.

அன்ன மறையோன் பலகால மாற்றுந் தவத்தா லருளொடுமோர்
கன்னற் குதலை மகவீன்று னவன்பேர் காமா குணநிதியான்
முன்னூற் கரும முடித்ததற்பின் மதியின் வளர்ந்து முதுக்குறைவாற்
பன்னு மறையின் பரப்பனைத்துங் கடந்தான் பனுவ லினிதுணர்ந்தான்.

(இ-ள்.) அந்த வேள்விதத்தன் அநேககாலம் செய்ததவத்தால் (சிவபெருமானது) திருவருளுடன் கருப்பஞ்சாறுபோன்ற மழலைச்சொல்லையுடைய ஒரு புத்திரனைப்பெற்றான். அழகிய குணநிதியான் என்பது அவன் பெயர். (அப்புதல்வன்) உபவீதச்செய்கை நிறைவேற்றியபின்னர் (பூர்வபக்ஷத்துச்) சந்திரன்போல வளர்ந்து பேரறிவினால், சொல்லுகின்ற விரிவாகிய வேதங்களையெல்லாங்கற்றுச் சிவாகமங்களிலும் இனிதாகத் தேர்ந்தனன். எ - று.

பனுவல் = ஆகமம். சிவாகமம் இருபத்தெட்டுவகைப்படும். அவையாவன— காமிகம் - யோகசம் - சிந்தியம் - காரணம் - அசிதம் - தீப்தம் - சூக்குமம் - சகத்திரம் - அஞ்சுமான் - சுப்பிரபேதம் - விசயம் - நிசுவாசம் - சுவாயம்புவம் - அனலம் - வீரம் - இரௌரவம் - மகுடம் - விமலம் - சந்திரஞானம் - விம்பம் - புரோற்கீதம் - இலலிதம் - சித்தம் - சந்தானசருவோத்தமம் - பாரமேச்சுரம்-கிரணம் - பேதம் - வாதுளம் என்பனவாம். (கரு)

இனைய காலை யூழ்துரப்ப வுள்ளம் வேறு பெழிற்புதலவன்
மனையி னீட்டும பொருளனைத்துங் கவர்ந்து கொடுபோய் மதிமருட்டும்
வினையம் வல்லார் பொருசூதின வாளா வழங்கி மேவரிய
தனது தொல்லை மறைநெறியுந் திறம்பி நாளுந் தவறிழைத்தான்.

(இ-ள்.) அழகிய புதல்வனாகிய குணநிதியான் இத்தன்மையான காலத்தில் பழவினை தன்னைச் செலுத்த மனம் வேறுபட்டு வீட்டில் (பெரியோர்) தேடிவைத்த எல்லாப்பொருள்களையுந் திருடிக்கொண்டுபோய், புத்தியை மயக்குகின்ற வஞ்சகத்தில் வல்லவர்கள் ஆடுகின்ற சூதாட்டத்தில் வீணுகக்கொடுத்து, கிடைத்

தற்கருமையாகிய தனது பழையவேதமார்க்கமுந் தவறிப் பிரதிகாலமும் குற்றங்களைச் செய்வானாயினன். எ - று. (கஎ)

தாதை மகனியாண் டுளனென்று கேட்குந் தோறுந் தாய்வெருவி
யோதற் ககன்றா னெனச்சூது மறைத்து மொழிய வுணர்கிலனாய்த்
தீதி றவத்து வேள்விதத்த னென்னுஞ் செழுநான் மறைவலனோன்
காதற் புதல்வற கருங்கற்பிற் காமர் கன்னி மணமுடித்தான்.

(இ ள்.) வேள்விதத்தன் தனது புத்திரனாகிய குணநிதியான் எங்கேயிருக்கின்றனன் என்று விசாரிக்கும்போதெல்லாம், அவனது தாய் பயந்து வித்தியாப்பியாசஞ்செய்தற்குப் போயினன் என்று சூதாட்டத்தை ஒளித்துச்சொல்ல, குற்றமில்லாத தவத்தையுடைய வேள்விதத்தன் என்னும் செழுமைதங்கிய நான்கு வேதங்களில் வல்லவனாகிய பிராமணன் தெரியாதவனாகி, ஆசையையுடைய புத்திரனுக்கு அரிய கற்பினையுடைய அழகிய கன்னிகையை விவாகஞ்செய்வித்தனன். எ - று. (கஅ)

வேறு.

ஆயு மைந்தனை வருகென வழைத்துநீ யிழைக்குந்
தீய செய்தியை யுந்தையின் றுணர்ந்திடிற் செயிர்த்துக்
காயு மென்னொடு நின்னையு மென்பது கருதி
மாய வெங்கவ றூடுதன் மறைத்தியான் மொழிந்தேன்.

(இ-ள்.) தாயும் புத்திரனை வா என்று கூப்பிட்டு நீ செய்கின்ற கொடிய (சூதாடும்) தொழிலை உனது பிதா இப்போது தெரிந்துகொண்டால்; கோபித்து என்னுடன் உன்னையும் வெறுப்பர், என்பதை நினைத்து (அவர் உன்னை எங்கே என்று கேட்டதற்கு) வஞ்சனைபொருந்திய வெவ்விய சூதாடுதலை மறைத்து யான் (வேறொருவகையாகச் சென்றாயெனச்) சொல்லினேன். எ - று. (கக)

உந்தை செய்தியு மொழுக்கமு முணர்கிலை யன்றி
மைந்த நங்குலக் கிழமையு மதிக்கிலை மறைதே
ரந்த ணாளர்தஞ் சிறுவர்கல் லொழுக்கமீங் கறிந்துஞ்
சிந்தை செய்கிலை யென்றுகண கலுழ்ந்திவை செப்பும்.

(இ-ள்.) புதல்வனே! உனது தந்தையினது நடக்கையையும் ஆசாரத்தையும் நீயறியவில்லை; அல்லாமலும் நமது மரபுரிமையையும் ஆலோசிக்கவில்லை; வேதங்களையுணர்ந்த பார்ப்பனப்புதல்வரது ஆசாரத்தை நீ தெரிந்துகொண்டும், அவற்றையெல்லாம் (சிறிதும்) எண்ணவில்லையென்று கண்ணீர்விட்டழுது இவ்விதமாகச் சொல்லினள். எ - று. (உ0)

ஊற்றி ருந்துவாட் டடங்கணீர் சோரநின் றுரைக்கு
மாற்றங் கொள்கலா தாங்கவ னுறைந்தனன் வஞ்சம்
வேற்றி னின்புறல் கள்ளுணல் வேட்டம்வெங் கவறு
போற்றல் செய்குநர் புணர்ப்பினை யாவரோ தடுப்பார்.

(இ ள்.) ஒளிபொருந்திய விசாலமாகிய கண்களில் ஊற்றெடுத்து நீர்சொரியும்படி வருந்திச் சொல்லும் தாய்வார்த்தையை அவன் ஏற்றுக்கொள்ளா திருக்

தனன்; (ஏனெனில்) வஞ்சனை - பிறர்மனைவிரும்புதல் - கட்குடித்தல் - வேட்டையாடுதல் - வெவ்விய சூதாடல் ஆகிய இத்தொழில்களைச் செய்வோரது சிநேகத்தை யார்தான் தடுக்கவல்லவர்? (யாருமில்லை!). எ - று.

இச்செய்யுளில் " வஞ்சம்வேற்றில்லின்புறல் * * * யாவரோதடுப்பார் " என்பது கவிக்கூற்று; அதாவது நூலாசிரியரது நீதி அபிப்பிராயம். (உக)

இன்ன தன்மையி னியைந்துளான் றனையினி தீன்ற
வன்னை கண்படு மமைதியிற் றந்தையாங் களித்த
மின்னு நன்மணி மெல்விரன் மோதிரங் கவர்ந்து
துன்ன ருங்கவ றாடுநர்க் கதனையுந் தோற்றான்.

(இ-ள்) இப்படிப்பட்ட குணங்களிற் பொருந்தியுள்ள குணநிதியான், தன்னை இனிமையாகப்பெற்ற தாய்நித்திரைசெய்யுஞ்சமயத்தில்,தன்பிதா அவள்பாற் கொடுத்துவைத்த பிரகாசிக்கின்ற நல்லமணிகள்பதித்த மெல்லிய விரல்மோதிரத்தைத் திருடிக்கொண்டு நெருங்குதற்கரிய சூதாடிகளுக்கு அம்மோதிரத்தையும் தோற்றுவிட்டான். எ - று. (உஉ)

நினைவ ருந்தவ மாற்றிய நிகரிலன் மறையோன்
மனைவி கையிடை கொடுத்ததன் மணிவிர லாழி
யினித ணிந்துளா னொருவனை மறுகிடை யெதிராப்
புனையு மாழிமற் றெனதென வாங்கவன் புகலுவான்.

(இ-ள்.) நினைத்தற்கரிய தவங்களைச்செய்த ஒப்பில்லாத நான்குவேதங்களையுணர்ந்த வேள்விதத்தன், தனது பத்தினிகையிற்கொடுத்த தனது அழகிய விரல்மோதிரத்தை இனிதாகத்தரித்துள்ளவனொருத்தனைத் தெருவில் எதிர்வரக்கண்டு நீ அணிந்திருக்கும்மோதிரம் என்னுடையது என்று சொல்ல, அதற்கு அவன் சொல்லுகின்றான். எ - று. (உங)

பன்னற் கேள்வியோய் களவினிற் கொண்டிலன் பரிவா
னென்ன லென்றுகிற் சூதினிற் கவர்ந்துநின் பாலன்
மன்னு மோதிர மின்றுதோற் றனன்வனை கலன்கள்
பொன்னின் றூசிவை நாடொறும் பொருதுதோற் குவனால்.

(இ-ள்.) பலவகைப்பட்ட நல்விசாரணையுடையவனே! யான் இதைத திருட்டிற்கொண்டதில்லை; உனதுபுத்திரன் நேற்றைப்பொழுது எனது வஸ்திரத்தை ஆசையுடன் சூதாட்டத்திற் கெலித்து, பொருந்திய இம்மோதிரத்தைஇன்று எனக்குத்தோற்றான். (இதுதான்) அலங்கரிக்கின்ற ஆபரணங்களும் பீதாம்பர முதலிய ஆடைகளும் தினந்தோறும் சூதாடித் தோற்கின்றான். எ - று. (உச)

நீதி யற்றவ மறைபயி னின்னிளஞ் சேயைச்
சூது வல்லவர் சிகாமணி யெனப்பலர் சொல்வா
ரீது சிந்திலை போலுமென் றெதிர்த்தவ னுரைப்பக்
காது தீக்குளம் வெள்ளினன் கலைமறைக் கிறைவன்.

(இ-ள்.) குற்றமில்லாத நல்லதவங்களைச் செய்தவனே! வேதபாராயணஞ் செய்யும் இளமைபொருந்திய உன்புதல்வனை, சூதாட்டத்திற் றிடசாலிகளுக்கெல்லாம் மேம்பட்டவன் என்று பலருஞ்சொல்வார்களே இது உனக்குத் தெரியாதுபோலும், என்று அவன் தடுத்துச்சொல்ல வேதமுதலிய சாஸ்திரங்கட்குரிய வேள்விதத்தன் (மகன்மேலுள்ள) ஆசைநீங்கி மனதில வெட்கங்கொண்டனன்.

நாணொடுந்தன நிலயிற் போகினான் மறையோன்
வாணி லாநகை புரிந்துதன மனைவியை நோக்கி
பேணில சிந்தைநின் சிறுவன்யாண் டேகின னெனப
பூணு லாமுலை நீர்த்துறைப் புகுந்தன னென்றாள்.

(இ-ள்.) வேள்விதத்தன் வெட்கத்துடன தன்வீட்டிற்குச்சென்று,பெருஞ்சிரிப்புச் சிரித்துத் தன்மனையாட்டியைப் பார்த்து, வளைதலில்லாத மனதையுடையஉனதுமகன் எவவிடம்போனான்என்று கேட்க,ஆபரணமணிந்த தனங்களையுடைய அவன் மனைவி குளத்துக்கு (நீராடப்) போனான் என்று சொல்லினள்.

ஈது நிற்கயா னெண்ணெயாட் டயர்வுழி யீந்த
நீதி லென்கையிற் சிறுவிரன் மோதிரந் தருகென்
றோத வுள்வெரீஇ நண்பக லுறுகடன் கழிக்கப்
போதிர் துய்த்தபி னுழிகல் குவனெனப் புகன்றாள்.

(இ-ள்.) (அதற்கு வேள்விதத்தன்) இது விருக்கட்டும்; யான் அப்பியங்கனஞ்செய்துகொள்கையில் உன்கையிற்கொடுத்த குற்றமில்லாத எனது கையின் சிறுவிரல் மோதிரத்தைக் கொடுப்பாயாக என்று சொல்ல, மனம் பயந்து பொருந்திய உச்சிகாலக்கடனைக் கழிக்கவாருங்கள்; நீர்புசித்தபிறகு மோதிரத்தைக்கொடுப்பேன் என்று சொல்லினள். எ - று. (உஎ)

நெறியி கந்துதம் மாபினி னீரல செய்யு
மறுவின் மைந்தனைப் பெறுதலின் மகப்பெறா தனுருற்
றுறைத னன்றுமற் றொருவனா லுயர்குல முழுதுஞ்
சிறுமை யெய்திலாங் கவற்றுறந் துறுபழி தீர்ப்பார்.

(இ-ள்.) நீதிமார்க்கந்தவறி, தமது குலத்திற்குத்தகாத நடக்கைபுரிகின்ற குற்றத்தையுடைய புத்திரனைப்பெறுதலைக்காட்டிலும், பிள்ளையில்லாது துன்பமுற்று உயிர்வாழ்தலே நல்லது; ஒருபிள்ளையினால் உயர்ந்த தமதுசுற்றத்தாரெல்லாரும் தாழ்வடைவார்களாயின், அவனை விலக்கிவிட்டுத் தமக்கு நேர்ந்த அபகீர்த்தியை நீக்குவார்கள் (பெரியோர்). எ-று. (உஅ)

என்ன நூற்கடல் கடந்துளோ ருரைப்பதை யெண்ணி
முன்னர் நின்றுபொய் மொழிந்திடு முகிழ்முலைத் துவர்வாய்ப்
பன்னி தன்னொடு மகத்துறந் தந்தணன் பரிந்தோர்
பொன்னின் வார்முலைப் பூவையைக் கடிமணம் புரிந்தான்.

(இ-ள்.) என்றிவ்விதமாக, வேள்விதத்தன் சாஸ்திரக்கடலைக்கரைகண்ட பெரியோர் சொல்லுவதை நினைத்து, தன் எதிரிலிருந்து பொய்வார்த்தைபேசும் அரும்பையொத்த முலையையும் பவளம்போன்ற வாயையுமுடைய மனைவியுடன்

புதல்வனையும் மனம்வருந்தி ஒழித்து,பொன்னலாகிய கச்சினையணிந்த தனங்களை யுடைய இலக்குமி நிகர்த்த ஓர்பெண்ணை விரைந்து மணஞ்செய்தான். எ - று.

பொய், சூது இவையிரண்டும் பெரும்பாதகங்களுட் சேர்ந்தவை யாதலின் அவ்விரண்டினையுடையானென மனைவி புத்திரன் இருவரையும் ஒழித்தனன்.

தந்தை நீத்தனன் றன்னொடுந் தாயினை யென்று
வந்த மில்லதோர் வெந்துயர்க் கடலிடை யாழ்ந்து
முந்து செய்ததீத தொழில்வினை முன்னிநெஞ் சழிந்து
சிந்தை செய்தனன் செய்யுமா றென்னெனத் திகைத்தான்.

(இ - ள்.) (குணநிதியான்) தன்னுடனேதாயையும்,பிதா விலக்கிவிட்டன னென்று முடிவில்லாத ஒப்பற்ற வெவ்விய துன்பசாகரத்தில் மூழ்கி, தான்முன் செய்த கொடுங்காரியங்களை யெண்ணி மனம்வருந்தி ஆலோசித்து, செய்யும்வகை யாதென்றுணராது மயங்கினன். எ - று. (௯௦)

கற்றி லேமொரு கலைகளுங் கைப்பொரு ளீட்டப்
பெற்றி லேமினி யெங்ஙனுய் குவமெனப் பேதுற
றற்ற மில்பசிக் கனல்கொளுந் திடவயர் போழ்தி
னொற்றை யாழியன் குடகடற் றிரையில்வீழ்ந் தொளித்தான்.

(இ-ள்.) யாம் எவ்வகைச் சாத்திரங்களையும் படிக்கவில்லை: திரவியந் தேடவகைபெறவில்லை: இனியெவ்வாறு பிழைப்போம் என்றெண்ணித் துன்பமெய்தி,அளவில்லாத பசியாகிய அக்கினிபற்றி யெரிய மூர்ச்சையடையுஞ் சமையத்தில், சூரியன் மேற்கடலின் அலைகளில் மூழ்கி அஸ்தமனமாயினன். எ - று. ()

உற்ற ஞான்றுயர் சிவநிசி யாதலி னுவந்து
கற்றை வார்சடைக் கடவுளை யருச்சனை புரியு
மற்றொர் வேதியன் பின்றொடர்ந் தாலய மருவி
யற்ற நோக்கின னேற்றுமின் னமிழ்தெடுத் தயில்வான்.

(இ-ள்.) (இவ்வாறு அவனுக்குத்துன்பம்) நேர்ந்ததினம் (எல்லா நாட்களினும்) மேம்பட்ட சிவராத்திரிகாலம் ஆனபடியால், சந்தோஷித்து நெடிய சடைக் கற்றையையுடைய சிவபெருமானை அருச்சனைசெய்கின்ற வேறோரந்தணனைப் பின்றொடர்ந்து சென்று திருச்சந்நிதானத்தையடைந்து இனிய உணவைப்பிச்சையெடுத்தேனும் உண்ணும்படிச் சமையம்பார்த்தனன் (குணநிதியான்.) எ-று.

முருந்து வாணகை பங்கனை யருமறை முதல்வன்
புரிந்த பூசனை கண்டுயில் பொருந்தில னாகி
வருந்தி நோக்குபு வைகறை யாமத்தி னளவு
மிருந்து மற்றவன் றுயில்வது கண்டன னெழுந்தான்

(இ-ள்.) முருந்துபோன்ற ஒளிதங்கிய தந்தபந்தியையுடைய உமாபிராட்டியை பாகங்கொண்ட சிவபெருமானுக்கு, அரியவேதங்களையுணர்ந்த பிராமணன்செய்த பூசையை (குணநிதியான்) நித்திரைகொள்ளாதவனாகி வருந்த

முற்றுப்பார்த்து இரவுவிடியுமெல்லை யிருந்து, அவ்வேதியன் நித்திரைசெய்யுஞ் சமயங்கண்டு எழுந்து சென்றான். எ-று.

முருந்து = மயில்முதலிய பறவைகள் இறகின் அடி. (௧௩)

ஆண்டெ ழுந்துபோ யீசன்முன் னமிழ்தினை யெடுப்பக்
காணடல் செய்திலன் மழுங்கிய கனைசுடர் விளக்கைத்
தூண்டல செய்துவெண் சோறதனை யெடுத்தனன் விரைவின்
மீண்ட போழ்திலோர் வேதியன் காலிடை மிதித்தான்.

(இ-ள்.) அவ்விடத்தினின்றெழுந்து சென்று சிவபெருமானது திருமுன்னர் (நிவேதித்துவைத்துள்ள) திருவமுதை யெடுக்கத் தெரியாதவனாகி, இருண்டுள்ள சுடர்குறைந்த தீபத்தைத் தூண்டி, வெண்சோறாகிய பிரசாதத்தை யெடுத்துக்கொண்டு துரிதமாகத் திரும்புகையில (வழியில் சயனித்திருந்த) ஒருபிராமணனது பாதத்தை மிதித்துவிட்டனன். எ-று. (௧௪)

மிதித்த போதிலவ் வேதியன் றுண்ணென விழித்து
மதித்தி டாதிவண் வந்திடு கள்வன்யா ரென்னக்
கொதித்த நெஞ்சினன் கூக்குர லெழுப்பலுங் காப்போ
ரதிர்த்து வந்துகைப் பிடித்துமற் றவன்றலை யறுத்தார்.

(இ-ள்.) (குணநிதியான் அவனது காலை) மிதித்தகாலத்தில், அப்பிராமணன் சீக்கிரமாக நித்திரை நீங்கி, சிறிதும் எண்ணாமல் இச்சந்நிதானத்தினுள் வந்துவிட்டதிருடன் யாவன் என்று சொல்லிக் கோபங்கொண்ட மனமுடையவனாகி கூச்சலிடவும், காவலாளர் ஆரவாரித்துவந்து பிடித்துக்கொண்டு அவனது சிரத்தைத் துண்டித்தனர். எ-று. (௧௫)

ஆக்கை நீத்திடு சிறுவனை யந்தகன் றூதர்
வீக்கி யேகலும் விடுமின்கள் விடுமின்க ளென்னாத்
தீக்க னன்றுமிழ் மூவிலைச் சூலவே றிரித்துக்
காக்கு மாறொழுங் கண்ணுதற் கணங்கள்வந் தடைந்தார்.

(இ-ள்.) உடலிழந்த குணநிதியான் என்பவனை இயமதூதர்கள் (தமது பாசத்தால்) கட்டிக்கொண்டு செல்லவும், விட்டுவிடுங்கள் என்று, கோபித்து அக்கினியைச்சிந்துகின்ற மூத்தலைவேலைச்சுழற்றிக்கொண்டு, திதிக்கடவுளாகிய விஷ்ணுதேவர் வணங்குகின்ற நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானது கணநாதர்கள் வந்து சேர்ந்தனர். எ-று. (௧௬)

நுதல்வி ழித்தொளிர் விழியினன் கணங்களை நோக்கிப்
பதம்வ ழுத்திவெங் கூற்றுவன் றூதுவர் பகர்வார்
முதுகு லத்தொழுக் கிழந்துதாய் மொழிவது முனிந்து
மதிம ருட்டிவெஞ் சூதினை வைகலு மிழைத்தோன்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய பெருமானது சிவகணங்களை வெவ்விய இயமதூதர்கள் பார்த்து அவர்கள் பாதங்களை வணங்கிச் சொல்லுவார்கள். இவன் தனது பழமையாகிய பிராமணகுலாசாரத்தை நீங்கி, தாய்சொற்களைக் கட

ந்து புத்தியை மயக்கி வெவ்விய சூதாட்டத்தினைத் தினந்தோறும் ஆடினவனை (அன்றியும்.) எ - று. (௩௭)

பஞ்சின் மெல்லடிப் பாவைதன் மனைவயிற் பதைப்ப
வஞ்செஞ் சீறடிக் கூத்திய ரணிமுலை தோய்ந்த
வஞ்ச னெந்தைகின் மாலியங் கவர்ந்தன னிவன்மற்
றுஞ்சு போவதற் கிழைத்ததெத் தவமென வுரைத்தார்.

(இ-ள்.) பஞ்சைப்போலும் மெல்லிய பாதங்களையுடைய மனைவி தனது வீட்டில் மனம் வருந்தும்படி, அழகிய சிவந்தசிறிய பாதத்தையுடைய வேசையரது ஆபரணமணிந்த தனங்களிற்படிந்த வஞ்சகன்; எமது தந்தையாகிய சிவபெருமானது கின்மாலியத்தைத் திருடினவன்; இவன (எங்கள் கையினின்று) தப்பிப்போகும்படிச் செய்துள்ளதவம் யாது? என்று (இயமதூதர்கள்) சொல்லினர்.

ஈது கேட்டலுஞ் சிவநிசி தனிற்றுயி லின்றி
மாது பாகனை யன்பொடு வழிபடக் கண்டான்
சோதி யஞ்சட ரொளியுறத் தூண்டின னவற்றாற்
றீதொ ழிந்தனன் கலிங்கநாட் டிறைவனாய்ச் சேர்வான்.

(இ-ள்.) இதனைக் கேட்கவும் (சிவகணங்கள் சொல்லுகின்றனர்) சிவராத்திரியில் நித்திரையில்லாமற் பார்வதிபாகனாகிய சிவபெருமானை ஆசையோடு வணங்கத் தெரிசித்தான். (சிவசந்நிதியில்) சோதிமயமாகிய அழகிய தீபத்தைப் பிரகாசம் பொருந்தும்படித் தூண்டினான். அப்புண்ணியங்களால் (முன்செய்த) பாவங்களை விலகினவனாகி கலிங்கதேசாதிபதியாக (இனிப்) பிறப்பான். எ-று. (௩௯)

என்று கூறிய சிவகண நாதரை யிறைஞ்சிக்
கன்று வெஞ்சினக் கூற்றுவன் றூதுவர் கயிற்றி
னென்ற வீக்கிய சிறுவனை யொல்லையின் விடுத்துத்
தென்றி சைக்கிறை நகர்வயிற் சென்றடைந் தனரால்.

(இ-ள்.) என்று சொல்லிய சிவகணத்தலைவர்களை வணங்கி, மிகவும் வெவ்விய கோபத்தையுடைய இயமனது தூதர்கள் தமது பாசத்திற் சிக்குண்ணும்படி கட்டிய குணநிதியானைச் சீக்கிரத்தில் அவிழ்த்துவிட்டு, தென்றிசைக்குத்தலைவனாகிய இயமதருமராசனது சையமினி நகரத்திற்குப்போய்ச் சேர்ந்தனர். எ-று.

நீர்க்கு டக்கனி சுமந்துநீண் முடம்படு தெங்கின்
கார்க்கு லந்துயில் கழனிசூழ் கலிங்கநா டளிக்கு
மார்க்கும் வண்கழ லருந்தமன புதல்வனா கென்னப்
போர்க்க ணிச்சியோ னடியாரங் குரைத்தனர் போனார்.

(இ-ள்.)(இயமதூதர் சென்றபிறகு குணநிதியானைப்பார்த்து) நீரையுடைய குடம்போன்ற தெற்றுக்காய்த்தாங்கி உயர்ந்து முடங்கிய தென்னஞ்சோலையில் மேகக்கூட்டங்கள் தங்குகின்ற கழனிகள் சூழ்ந்த கலிங்கதேசத்தைக் காக்கின்ற ஒலிக்கும் வண்மைதங்கிய வீரக்கழலணிந்த அருந்தமன் என்போனது மகனாகக் கடவாய் என்று, யுத்தஞ்செய்கின்ற மழுப்படையுடைய சிவபெருமானது கணநாதர்கள் சொல்லிப்போயினர். எ-று. (௪௧)

ஈச னன்பர்த மருளினுற் குணநிதி யென்பான்
காசு கண்படு புரிசைசூழ் கலிங்காகோன் மகவாய்
மாசி லாதநல் லோரையின் மகிழ்வுறத் தமனென்
றோசை போகிய பெயரொடு முதித்தன னன்றே.

(இ-ள்.) சிவகணநாதர்களது கிருபையினுல் குணநிதி என்பவன் நவமணிகள் விளங்குகின்ற மதில சூழ்ந்த (அருந்தமனெனனும்) கலிங்கதேசத்தரசன் புதல்வனுய்த் தமன் என்னும் கீர்த்திமிகுந்த பெயருடன குற்றமில்லாத நல்ல சுப முகுர்த்தத்தில் சந்தோஷமுண்டாகும்படிப் பிறந்தனன். எ - று. (சஉ)

முற்ப வத்துறு தொடர்ச்சியின் முதுக்குறை வெய்திச்
சிற்ப ரன்திரு வாலய மெங்கணுந தீப
மற்பி னுலமைத் தளப்பரு மறமபுரிந தீசன்
பொற்ப தத்தினில வைகலும பூசனை புரிந்தான்.

(இ ள்) தமன் முன் செனனத்திற்செய்த புண்ணியவசத்தால் பேரறிவு விளங்கிச் சிவபெருமானது திருச்சந்நிதானம் முழுவதும் ஆசையுடன் விளக்கேற்றி, அளவிடுதற்கரிய தருமங்களைச்செய்து ஜெகதீசனது அழகிய திருவடிகளில் தினந்தோறும் அருச்சனைசெய்துகொண்டிருந்தான், எ - று. (சங)

இன்ன நல்லறம் பற்பல காளிருந் தியற்றிப்
பின்னர் மாய்தலும் பிஞ்ஞக னலயந் தோறு
மின்னு செஞ்சுட ரேற்றலாற் சுடர்மணி விளக்க
மன்னு கோநக ரளகைக்கு மன்னவ னுனன்.

(இ-ள்.) தமன் இத்தகையினவாகிய நல்ல தருமங்களை அநேககாலம் நடாத்தியிருந்து பிறகு மரணமடையவும்,சிவசந்நிதானங்களிலெல்லாம் பிரகாசிக்கின்ற செவ்வையாகிய விளக்கினை யேற்றியதனுல், ஜொலிக்கின்ற மாணிக்கம்போலும் தோற்றம்பொருந்திய சிறந்த (அளகாபுரி என்னும்) நகரத்திற்கு அரசனுகிய குபேர னுயினன். எ - று. (சச)

அளகை மாநக ரீங்கிவன் முன்னினி தாண்ட
வொளிரு வேலர செவனென மறையவ னுரைப்பக்
களிறு கூப்பிடக் கருணைசெய் கடவுளைப் பரவும்
வெளிறெ ரிந்தநற் கேள்வியோ ரிவைவினம் புவரால்.

(இ-ள்.) (என்று விஷ்ணுவின்கணநாதர்கள் சிவசன்மாவுக்குச்சொல்ல) சிவசன்மா, இவன் குபேரனுவதன்முன்னர் சிறந்த அளகாபுரியை இனிமையாக அரசுபுரிந்த பிரகாசிக்கின்ற வேலேந்திய மன்னவன் யாவன்? என்று வினவ, (கஜேந்திரன் என்னும்) யானை அழைக்க (அதற்குமுன்தோன்றி) கிருபைசெய்த விஷ்ணு மூர்த்தியைத் துதிசெய்கின்ற உறுதியாகிய நல்ல விசாரணையையுடைய விஷ்ணு கணத்தலைவர்கள் சொல்லுகின்றனர். எ - று.

திருமால் களிறுகூப்பிடக் கருணைசெய்ததாவது.

முன்னொருகாலத்தில் இந்திரன் காஞ்சிநகரடைந்து ஆங்கோர் சிவலிங்கப் பிரதிட்டைசெய்து சிவபெருமானைத் தினந்தோறும் அருச்சித்து வழிபட்டுவந்த

னர். அக்காலத்து கஜேந்திரனென்னும் யானை அவர்செய்யுஞ்சிவபூசைக்குவேண்டிய திருப்பள்ளித்தாமதத்துக்குரிய பலவகைமலர்களைக் கொய்து கொடுத்துக்கொண்டு அவரருள்பெற்றிருந்தது. அது ஒருநாள் தாமரை மலர்ந்துள்ள ஓர் பெரிய தடாகத்திலிறங்கி மலர்கொய்ய, அச்சலத்தில் வசித்திருக்கும் ஒரு முதலை அதன் காலைப்பற்றி யீர்க்க, யானை கரைப்புற மிழுக்க, இவ்வாறு பல வருடங்கள் சென்றன. யானை பொறுக்கமாட்டாமல் தன் தலைவனுகிய திருமாலை மூலமே! என்றழைக்க, தேவர்களெல்லாம் "யாம்மூலமல்லேம்" என்றிருப்பத் திருமால் கருடாரூடராய்ச் சென்று யானையைக் கண்டு "அஞ்சாதே" என்று, தன் கையிலிருந்த சுதரிசனத்தைச் செலுத்தி முதலையைச் சங்கரித்து, யானையுடன் காஞ்சிப்பதியையடைந்து, அஃதளிக்கும் திருப்பள்ளித்தாமத்தாலருச்சித்துவந்து சிவபெருமானது திருவருள்பெற்று வரதராஜர் என வீற்றிருக்கின்றனர் என்பதாம். இதனை,

காஞ்சிபுராணம்-புண்ணியகோடீசப்படலம்.

"இவ்வகை தண்புன லின்கரை மீதிவை யோவாமே
தெவ்வுட னீர்ப்புழி யாண்டுக ளெண்ணில சென்றேகக்
கைவரை யாற்றரி தாயல றிக்கரு மாமேகத்
தவ்வடி வோனை யழைத்தது மூலமெ னக்கூவி.

அண்ட ரெலாம்யா மூலம லேமென் றகல்போழ்திற்
புண்டரி கக்கட் புண்ணிய னற்புள் ளரசின்மேற்
கொண்டெதி ரெய்திக் கரியர செய்துங் கொடுவெங்கோய்
கண்டுளெ கெக்கா னஞ்சலை யஞ்சேல் களிறென்று.

ஆழி யெறிந்தா னதனுயி ருண்டான் கரியோடும்
வாழிய காஞ்சி மாநக ரெய்திச் சிவபூசை
வேழ மளிக்கு மேதரு பள்ளித் தாமத்தா
லூழ்முறை யாற்றித் தவகனி செய்தங் குறைகாலை." - என்பதனானுணர்க.

விதிய ளித்திடும் புலத்திய னுதவுவிச் சிரவர்
மதலை யாகிய வச்சிர வணனரன் மலர்த்தா
டுதிசெய் தாங்கவ னருளினாற் சுடர்மணி யளகைப்
பதிபு ரந்தனன் பதுமகற் பத்தினிற் பரிவால்.

(இ-ள்.) பதுமகற்பத்தில் ஆசையுடன் பிரமதேவன் பெற்ற புலத்தியமுனிவன் ஈன்ற விச்சிரவர் புத்திரனுகிய வச்சிரவணன் என்பவன் சிவபெருமானது மலர்போன்ற திருவடிகளைத்தோத்திரஞ்செய்து அப்பெருமானது திருவருளினால் மாணிக்கம்போலும் பிரகாசம் பொருந்திய அளகாபுரியைக் காத்தனன். எ-று.

கற்ப மாங்கது கழிந்தபின் கமலவீட் டுறைவோ
னற்பி னுலுயர் சராசர மனைத்தையு மளிப்பப்
பொற்செ ழுந்தரு கீழ்வ்வாழ் புரந்தான் முதலோ
குப்ப வித்தது மீங்கிவன் குபேரனு யுறைந்தான்.

(இ-ள்.) தாமரைமலராகிய பீடத்தில் வீற்றிருக்கும் பிரமதேவனது, அட்டதுக்கப்பம் முடிந்தபிறகு அவனுடன் உயர்ந்த சரம் - அசரம் முதலிய எல்லாவற்றையும் சிருட்டிசெய்ய, அழகிய செழுமைதங்கிய கற்பகவிருட்சத்தின் நீழலில் வாசஞ்செய்யும் இந்திரன் முதலானவர்களை தோற்றுவித்து, இருந்தனன் அவன் குபேர பதவியில் இருந்தனன். எ-று. (௪௭)

முன்ன மாலயத் தொளிசுடர் தூண்டலான் முறையே
பின்ன செல்வமு மளகையும் பெற்றன னென்று
பொன்னின் தாதுகு கொன்றையான் காசியம் பதியின்
மன்னி யாங்கொரு சிவலிங்க மகிழ்வொடு மமைத்தான்.

(இ-ள்.) முற்பிறவியில் சிவசந்நிதானத்திலுள்ள ஒளிதங்கிய திருவிளக்கைத் தூண்டினதனால், கிரமமாக இப்படிப்பட்ட பெருஞ் செல்வத்தையும் அளகாபுரியையும் அடைந்தோமென்று, பொன்போலும் அழகிய மகரந்தப்பொடிகளைச் சிந்தும் கொன்றைமாலைசூடிய சிவபெருமானது அழகிய காசிக்ஷேத்திரத்திலிருந்து, சந்தோஷத்துடன் அவ்விடத்தில் ஓர் சிவலிங்கத்தைப் பிரதிட்டைசெய்தான்.

மாசில சித்தமாந் தகளியி லன்புநெய் வாக்கி
யீச னன்றிவே றில்லெனுந் திட்பநூ லிரியிற்
றேசு டைத்தனி ஞானவொண் செழுஞ்சுட ரேற்றி
யாசில் கொள்கையோன் பற்பகல் யோகினி லிருந்தான்.

(இ-ள்.) களங்கமில்லாத மனமாகிய அகலில் அன்பாகிய நெய்யைச்சொரிந்து, சிவபெருமானன்றி வேறொரு கடவுளில்லை யென்கின்ற திட்பமாகிய நுண்ணிய திரியில், கீர்த்திபொருந்திய ஒப்பற்ற ஞானமாகிய ஒளியையுடைய செழுமை தங்கிய தீச்சுடரைக் கொளுத்தி, குற்றமில்லாத கொள்கையையுடைய இக்குபேரன் பலகாலம் யோகத்திலிருந்தனன். எ-று. (௪௯)

அன்ன காலையி லுங்கவன் றவத்தினை வியந்து
முன்ன மூவெயின் முருக்கிய முக்கணெம் பெருமான்
பொன்ன வாஞ்சுணங் கருமபிய புணர்முலை யுமையா
டன்னொ டுஞ்சுடர்ப் பிழம்பென வவ்வழிச் சார்ந்தான்.

(இ-ள்.) அப்படிப்பட்டகாலத்தில் அவன்செய்கின்ற தவத்துக்கு மனங்களித்து, பூர்வத்தில் மும்மதில்களைப் பொடிசெய்த திரிநேத்திரங்களையுடைய எமது சிவபெருமான் பொன்போன்றதாகிய தேமல் படர்ந்து அரும்பி நெருங்கியுள்ள திருத்தனங்களையுடைய உமாதேவியாருடன் சோதிமயமாக அவ்விடத்தில் எழுந்தருளினார். எ-று. (௫௦)

அளகை காவல வாற்றிய வருந்தவ மகிழ்ந்தே
முளமகி ழ்ந்தன வுரைத்தியா முதவுவ மென்னக்
களைக ணாகிய கருமிடற் றெந்தையாங் குழைப்பத்
துளிகண போர்த்திட நோக்கரி தாயிவை சொல்வாள்.

(இ-ள்.) அளகாபுரியை அரசுசெய்கின்ற குபேரா! நீ செய்த அரியதவத்திற்கு மனமகிழ்ந்தோம்; மனதில் விரும்பியவற்றைச் சொல்லுக; யாம் அவற்றை அநுக்கிரகிப்போம் என்று யாவர்க்கும் பற்றுக்கோடாகிய நீலகண்டத்தையுடைய எமது சிவபெருமான் திருவாய் மலர்ந்தருள, (குபேரன்) தனது கண்களில் நீர்த்துளி நிறைய தேவரால் தரிசிக்கக்கூடாதவனாய் இனிவருமாறு சொல்லுகின்றான். எ - று.

மாசி லாதவ ரளப்பில ரெழுந்தென வயங்குந்
தேசு பூத்தநின் செழுமலர்ச் சேவடி காணக்
கூசு கின்றன கண்ணிணை கூசிடா வண்ண
மீச நல்குதி யனையதே வரமெனக் கென்றான்.

(இ-ள்.) ஈசனே! குற்றமில்லாத சூரியர்கள் கணக்கில்லாதவர்கள் உதயமானாற்போல விளங்குகின்ற ஒளிமிகுந்த தேவரீரது செழுமைதங்கிய மலர்போன்ற சிவந்த திருவடிகளைத் தெரிசிப்பதற்கு, எனது இருகண்களும் கூசுகின்றன; (அவை அவ்வாறு) கூசாதவிதம் அனுக்கிரகிப்பீராக; அதுவே அடியேனுக்குவேண்டியவரம் என்றனன் (குபேரன்.) எ-று (௫௨)

காக்கு மாயனுங் கடிகமழ் கமலநா யகனும்
வாக்கி னாலுயர் மனத்தினாற் காணொணா வடிவ
நோக்கு மாறருள் புரிதலு நோக்கியப் பரனை
நீக்க மன்றிவா ழுன்னையைப் பார்த்திது நினைவான்.

(இ-ள்.) உலகத்தைக்காக்கின்ற விஷ்ணுமூர்த்தியும், மணம்வீசும் தாமரைவாசியாகிய பிரமதேவனும், வாக்கினாலும் உயர்ந்த மனத்தினாலும் (காயத்தினாலும்) அறியக்கூடாத திருவுருவத்தைத் தெரிசிக்கும்படித்திருவருள்செய்யவும், அவ்வாறேதெரிசித்து, அப்பெருமானைப பிரிதலற்று வாழ்கின்ற தாயாகிய உமாதேவியாரைப்பார்த்துக்குபேரன இவ்வாறு நினைக்கின்றனன். எ - று. (௫௩)

முன்ன வன்றிரு மேனியி னுறைந்திட முயன்ற
தென்ன நற்றவ மெனனினு மிவளென நோனு
துன்னி நோக்கலு மொருவிழி மறைந்திட விவன்யார்
துன்னு வஞ்சக னெனவுமை யரனொடுஞ் சொன்னாள்.

(இ-ள்.) இவ்வம்மையார் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானது திருவுருவத்திற் கலந்துவாழும்படிச் செய்தது எத்தகைய நல்லதவம்என்று இலேசாக நினைத்துப்பார்க்கவும (அவ்வாறுநினைத்துப்பார்த்த குபேரனுக்கு) ஒருகண் ஒளிமழுங்க, இவன் யாவன் மிகுந்தவஞ்சகனஎன்றுஉமாதேவியார் சிவபெருமானுடன் உரைத்தருளினார் எ - று. (௫௪)

மாது நின்றவப் பெருமையை மதித்தன னல்லால்
யாது சொற்றனன் முனிபலே யிவன்விழி யருள்கென்
றோதி நாயக னறைதலு மம்பலத் தமர்ந்த
போத ரிக்கணு ளளித்தலும் பொற்கணு னதுவே.

(இ-ள்.) யாவர்க்கும் ஆதியே தலைவராகிய சிவபெருமான், பெண்ணே! இவன் உனது தடைபெருக்கத்தை ஆலோசித்தனனே யல்லாமல் வேறொன்ன செய்தனன் நீ கோபியாதே; இவன் கண்பெறுமாறு கிருபைசெய் என்று கட்டளைசெய்ய, ஸ்ரீ பொன்னம்பலத்தில் ஆனந்தத்திருநடனதரிசனத்தில் பொருந்திய தாமரைமலர்போலும் அரிபடர்ந்தகண்களையுடைய உமாதேவியார் அநுக்கிரகிக்க அவனுக்குப் பொற்கண் ணாயிற்று. எ-று. (௫௫)

இழந்த தனவிழி பெறுதலு மியக்காதம பெருமான
குழைந்த வெணபிறைக் கணணியன் குரைகழல வணங்கித்
தழைந்த வனபினுற் பரையிரு தாமரைச் சரணம்
விழைந்து போற்றிநல் லுவகைமீ தூர்ந்தெழுந் தொழுதான்.

(இ-ள்.) இயக்கர்களுக்குத் தலைவனாகிய குபேரன் மறைந்ததன துகண்ணை யடையவும், வளர்ந்த வெண்மைதங்கிய இளம்பிறைச் சந்திரனைமாலையாகவுடைய சிவபெருமானது ஒலிக்கின்றவீரக்கழலணிந்த திருவடிகளை நமஸ்கரித்துஅதிகரித்த ஆசையுடன உமாதேவியாரது உபயசரணாரவிந்தங்களை விரும்பித்துதித்து நற்களிப்பு அதிகரிக்க எழுந்துவணங்கினன. எ-று. (௫௬)

தொழுத வேந்தனைத் துணைமலர்க் கைகளாற் றைவந்
தெழுக வின்றுதொட் டென்னுயிர்த் தோழனீ யென்னுப்
பழுதி னல்வர மருளிநீ பரவிய விலிங்கம்
விழையு நின்னுடைப் பெயரினல் விளங்குக வென்றான்

(இ-ள்.) (சிவபெருமான்) அவ்வாறு வணங்கிய குபேரனைத் தமது உபய மலர்க்கரங்களால் தடவி எழுந்திருக்கக்கடவாய்; இன்றுமுதல் நீ என்னுயிர்த்தோழன் என்று குற்றமிலலாத நல்லவரத்தைத்திருவருள்செய்து, நீதுதித்த இச்சிவலிங்கக்குறி விரும்பிய உன்னுடைய பெயரால் (குபேரலிங்கம் என) விளங்கக் கடவது என்று திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (௫௭)

இயக்கர் விஞ்சையர் குய்யகா கின்னர ரிறைஞ்சி
வியக்க நீணிதிக் குபேரனும பெயரொடு மேவிப்
பயக்கு நலவளத தளகையிற பரிவினவாழ் கென்ன
முயறக ளங்கமின் மதிமுகத் துமையிவை மொழிந்தாள்.

(இ-ள்.) முயற் களங்கமில்லாத பூரணச்சந்திரன் போன்ற திருமுகத்தை யுடைய உமாதேவியார், இயக்கர் - விஞ்சையர் - குய்யகர் - கின்னரர் (முதலிய பதினெண் கணங்கள்) வணங்கிக்களிக்கப் பெருஞ்செல்வத்தை யுடைய குபேரன் என்னும் பெயரோடுபொருந்தி, நல்வளங் களைத்தரும் அளகாபுரியில் வாழக்கடவாய்என்று இவவிதமாக அநுக்கிரகித்தனர். எ-று.

பதினெண்கணத்தோர் இவர்கள் என்பதை,

"கின்னரர் கிம்புருடர் விச்சா தரர்கருடர்
பொன்னமர் பூதர் புகழியக்கர்—மன்னும்

உரகர் சார்சா ரணமுனிவர் மேலாம்
பரகதியோர் சித்தர்பா லர்.

காந்தருவர் தாரகைகள் காணுப் பசாசுகள்
ஏந்துபுகழ் மேய விராக்கதரோ—டாய்ந்ததிறல்
போகா வியல்புடைய போகபூமி யாருடனே
ஆகாச வாசிகளா வார்."—என்பனவற்று னுணர்க. (ருஅ)

வரம ளித்தபின் வரிமிடற் றஞ்சிறை யறுகா
லரவ வண்டிமிர் கொன்றையஞ் சடைமுடி யண்ண
லுருவ மேகலை யுமையொடு மறைதலுங் குபேரன
பரிவின் வாழுமிவ் வளகையி தெனப்பகர்ந் தனரால்.

(இ - ள்.) இவ்வரங்களைக் கடாட்சித்தபிறகு, கீற்றுகள் பொருந்திய மிடற்றினையும், அழகிய சிறகுகளையும், ஆறுகால்களையுமுடைய சப்திக்கின்ற வண்டுகள் கிண்டுகின்ற அழகிய கொன்றைமாலையைத்தரித்த சடைமுடியையுடைய சிவபெருமான், அழகிய மேகலாபரணமணிந்த உமாதேவியாருடன அந்தர்த்தானமாகவும், குபேரன் ஆசையுடன் வாழ்கின்ற இவ்வளகாபுரியின்வரலாறு இது வென்று (சிவசன்மாவுக்கு விஷ்ணுகணத்தலைவர்கள்) சொல்லினர். எ-று. (ருகூ)

சிவசன்மா வாயுவுலகுங் குபேரனுலகுங் கண்ட அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ருஉஎ.

சிவமயம்.

பதினான்காவது,

சிவசன்மா

## ஈசானனுலகுஞ் சந்திரனுலகுங் கண்ட அத்தியாயம்.

உரைத்தவிந் நகரின் கீழ்ப்பா லுலப்பறு செல்வத் தோங்கித்
திருத்தகத் தோன்று கின்ற வுலகெது செப்பு கென்று
வருத்தியின் மறையோன் கூற வாய்பிழி மலர்மென் கூந்தன்
முருக்கிதழ்க் கமலை கேள்வ னடியவர் மொழிய லுற்றார்.

(இ-ள்.) சொல்லிய இக் குபேரனுலகத்திற்குக் கீழ்த்திசையில் அழிவற்ற செல்வத்துடன் மேம்பட்டு சிறப்புப்பெற விளங்குகின்ற உலகம் யாது? சொல்ல வேண்டும் என்று, சிவசன்மா ஆசையோடு கேட்க, ஆராய்கின்ற தேன் சொரியும் மலர்மாலையணிந்த மிருதுவாகிய அளகபாரத்தையும், முருக்கம்பூவை நிகர்த்த அதரத்தையு முடைய சீதேவிநாயகனாகிய விஷ்ணுமூர்த்தியின் கணநாதர்கள் சொல்லத்தொடங்கினார்கள். எ - று. (௧)

ஈண்டுமுன் றோன்று கின்ற தீசான லோக மீங்கு
மாண்டநற் றவத்தின் மிக்கோர் மழுவலான் றாளி லன்பு
பூண்டுளோர் பயன்வெஃ காது பொங்கழல் வேள்வி செய்வோர்
காண்டகு சிறப்பின் மிக்க கண்ணுத லுருவிற் சேவார்.

(இ-ள்.) இதோ முன்னர் காணப்படுகின்றது ஈசானனுலகம்; மாட்சிமை பொருந்திய நல்ல தவத்தில் மிகுந்தோர்களும், மழுப்படையைத் தாங்கிய சிவ பெருமானது திருவடிகளில் அன்புவைத்தவர்களும், சிறந்த அக்கினிகாரியமாகிய யாகங்களை யாதொருபலனையும் விரும்பாது செய்தவர்களும், காணத்தகுந்த சீர்த்திமிகுந்த சிவபெருமானது சாரூபமடைந்து இவ்வுலகத்தில் வசிப்பார்கள். எ-று.

பகருமிவ் வுலகங் காக்கு மவர்பதி னொருவ ரன்னோர்
வகிர்மதிக் கண்ணி யெந்தை மருவிய காசி நண்ணி
நிகரிலீ சான லிங்க நெறியினி லமைத்துப் போற்றிப்
புகரினற் றவங்க ளாற்றிப் பூசனை புரிந்தா ரன்றே.

(இ-ள்.) சொல்லுகின்ற இந்த ஈசான லோகத்தைப் பாதுகாப்பவர் ஏகாதச உருத்திரர்களாவர். அவர்கள் பிறைச்சந்திரனை மாலையாகத்தரித்த எமது சிவ பெருமான் எழுந்தருளியுள்ள காசிக்ஷேத்திரமடைந்து, சமானமில்லாத ஈசான லிங்கப்பெருமானை முறையுடன் பிரதிட்டைசெய்து துதித்து, குற்றமில்லாத நல்ல தவங்களைச்செய்து பூசித்தார்கள். எ - று.

மாதேவன் - அரன் - உருத்திரன் - சங்கரன் - நீலலோகிதன் - ஈசானன் - விசயன் - வீமதேவன் - பவோற்பவன் - காபாலி - சௌமியன் என்னும் இவர்கள் ஏகாதச உருத்திரர். (௨)

பூசனை மகிழ்ந்து தனையொன் பரிந்தளந் திங்கட் கண்ணி
யீசனை வருளா லொன்றாக் கிறவா வாயு ளோடு
தேசுஞ் பரிந் தாணச் செழுஞ்சுடரப் பிழம்பா மோங்கு
மாசறு தனது தொல்லை மானுரு வளிக் குனே.

(இ - ள்.) குளிர்ச்சிதங்கிய பரிசுத்தமாகிய பிறைச்சந்திரனை மாலையாகத் தரித்த சிவபெருமான அவர்கள்செய்யும பூசைக்காகக் களித்து நல்ல கிருபையினால் முடிவில்லாத தீர்க்காயுளோடு ஒளிதங்கிய சூரியனும் நாணத்தக்க செழுமை தங்கிய சுடர்ப்பிழம்பாய் மிகுந்த குற்றமற்ற தமது பழைய மாட்சிமைப்பட்ட வடிவத்தையும் அவர்களுக்கு அனுக்கிரகித்தனர். எ - று.

பிழம்பு=திரட்சி. தொல்லைமானுரு=சாரூப்பியம். (௪)

ஆறணி சடையு நீல கண்டமு மலங்கு சோதி
நீறணி மெய்யுஞ் செய்ய நெற்றியிற் கண்ணுந் தோன்ற
மாறடு மழுவு மானுந் தரித்துவண் கடுக்கை சூடி
யேறுயாத தீச னென்ன வீங்கினி திருக்கின் றாரே.

(இ - ள்.) கங்கையைச்சூடிய சடைமுடியும், நீலகண்டமும், விளங்குகின்ற சோதிமயமாகிய திருவெண்ணீறு தரித்த திருமேனியும், செந்நிறமமைந்த நுதலில் நேத்திரமும் தோன்றும்படி, பகைவரைக்கொல்லும் மழுப்படையும் மானும் (கைகளில்) தாங்கி, வளமமைந்த கொன்றைமாலைதரித்து, இடபவாகனங் கொண்டு, சிவபெருமானைப்போல இவ்வுலகில் இனிதாக வாழ்ந்திருக்கின்றனர். எ - று.

எனவரிக் கணங்கள் கூறக் கேட்டன னேகுங் காலைப்
பனியிரு வசும்பி னூடு பகலிடை நிலவு காலுந்
தனிநகர் கண்டு மற்றிந் நகரெது சாற்று கென்னப்
புனைதுழாய்ப் படலை மார்ப னடியவர் புகல லுற்றார்.

(இ - ள்.) என்று விஷ்ணு கணத் தலைவர் சொல்லக்கேட்டு (சிவசன்மா) செல்லும்போது, குளிர்ச்சிதங்கிய பெரியஆகாயத்தில் பகற்காலத்திலும் சந்திரிகை வீசும் ஒப்பற்ற நகரத்தைக்கண்டு இந் நகரம் எவ்வுலகம் சொல்லவேண்டும் என்று கேட்க, அழகிய துளசிமாலையணிந்த மார்பினையுடைய விஷ்ணுமூர்த்தியின் கணநாதர்களாகிய (சுதனமன - சுசீலன என்போர்) சொல்லத்தொடங்கினர். எ - று.

மலரயன் மனத்திற் றோன்று மத்திரி வரம்பில் கால
முலகிடைத் தவஞ்செய் காலைத் தாதுமே லோங்கி யங்கட்
புலன்வழி பொழுகிப் பத்துத் திசையினு மோர்ப்பத் திக்கா
மலர்முலை மாதர் தாங்க லாற்றலர் மண்ணின் வீழ்ந்தார்.

(இ - ள்.) தாமரைமலரில் வசிக்கின்ற பிரமதேவனது மானதபுத்திரராகிய அத்திரிமுனிவர் அளவில்லாதகாலம் பூமியில் தவஞ்செய்கையில், வீரியமானது மேலெழுந்து அழகிய கட்புலன்வழியாகப் பாய்ந்து பத்துத்திக்குகளிலும் மூட, பருத்த முலையினையுடைய திக்குத் தெய்வமாதர்கள் சுமக்கமாட்டாமல் பூமிமேல் விழ்ந்தனர். எ - று. (௭)

சிந்திய திவலை பைங்கூ ழாயின திரளொடு வீழ்ந்த
துந்துநீ ருலக முய்ப்ப விமானமே லுலகம்பூத்த
வந்தனை வைத்தா னென்ன வாருயிர் பெற்று முக்க
ணெந்தைவாழ் காசி மேவி யிலிங்கமோ ரமைத்த தன்றே.

(இ-ள்.) (அவவாறுபாய்ந்த வீரியத்தினின்று சிதறிய துளிகள பயிர்களாயின, ஒன்றாக வீழ்ந்த வீரியம், கடல் சூழ்ந்த உலகமெல்லாம் பிழைக்கும்படி விமானத் திலிருந்து பூமியைப் படைத்த பிரமதேவனை வைத்தனன என்று சொல்லும்படி அரிய உயிரினை யடைந்து திரிநேத்திரங்களையுடைய எமதுசிவபெருமான் வாழும் காசியைச் சேர்ந்து ஓர் சிவலிங்கம் பிரதிட்டைசெய்தது. எ - று. (அ)

பரமனை வணங்கி நூறு பதுமநற் றவஞ்செய் காலை
யருள்கனிந் திறைவன் றோன்றி யந்தண ரவனி பைங்கூழ்
விரிபுனீ ரவற்றுக் கெல்லாம வேந்தனு யுறைதி யென்ன
வொருகலை வாங்கிக் கங்கை யொழுகுவார் சடையில் வேய்ந்தான்.

(இ-ள்.) சிவபெருமானை வணங்கி அளவில்லாத காலம் நல்ல தவங்களைச் செய்கையில, பெருமான் கிருபைமிகுந்து காட்சிதந்து, வேதியர் - உலகம் - பயிர் விரிவாகிய நீர் முதலிய அனைத்துக்கும் அரசனாயிருக்கக்கடவாய் என்று அனுக்கி ரகித்து, ஒருகலையை எடுத்துத் தமது கங்காநதிசொரியும் நெடிய சடைமுடியில் தரித்தனர். எ - று.

பதுமம் = கோடாகோடி. நூறுபதுமம் என்றதால் அளவில்லாதகாலம் என்றாம். (௯)

ஒண்ணிற வுரோணி தன்னோ டுவந்தினி திருப்ப மற்றைப்
பெண்ணலங் கனிந்த மாதா தந்தையோ டதனைப் பேசத்
தண்ணளி யிலாத தக்கன சபித்தலாற் பக்கந் தோறும
விண்ணிடைத் தேய்ந்த லோடும் வளர்தலு மேவி னானே.

(இ-ள்.) அழகிய உரோகணி என்னும் மனைவியுடன (மட்டிலும்) விரும்பி வசித்திருக்க, ஏனைய பெண்தனமை மிக்க மனைவியர் தமது பிதாவாகிய தக்க னிடத்தில் அதனைச் சொல்ல, கிருபை சிறிதுமில்லாத தக்கன் கொடுத்த சாபத் தால் பக்ஷந்தோறும (தவறாமல்) ஆகாயத்தில தேய்தலும் வளர்தலும் பொருந்தி யிருக்கின்றான (சந்திரன்.) எ - று. (௧0)

போற்றிமூ வுலகுங் காக்கும் புரவல னாகிப் பின்ன
ராற்றரு மிராச சூய மாற்றியிவ் வுலகு மெலாஞ்
சாற்றுநான் மறையோர்க் கீந்து தையலோர் பாகத் தெந்தை
மாற்றரு மருளாற் சோம னெனும்பெயர் மருவி னானே.

(இ-ள்.) திரிலோகங்களையும் ரட்சிக்கின்ற மன்னனாகிப் பின்பு, செய்தற் கரிய இராசசூயயாகமியற்றி, இவ்வுலகமுழுதும் புகழ்ந்து சொல்லுகின்ற அந்த ணருக்கு (பலவகைத்தானங்களை) அளித்து, பார்வதிதேவியாரை ஒருபாகமாக வுடைய எமது சிவபெருமானது நீக்கற்கரிய கருணையால் சோமன் என்னும் நாமம் பொருந்தினன. எ-று. (௧௧)

முறையினிற் சநதி ரேசன் முன்னர்நல் வேள்வி செய்து
நிறைதவம் புரிந்த பேற்றால் நிறையிதழ் முகைவாய் விண்ட
செறிமலர்க் கொன்றை வேணிச் சிகாமணி யாய தன்றிக்
கறைமிடற் றரவம பூண்ட கண்ணுதற் கண்ணு மானன்.

(இ-ள்.) சந்திரேசன் எனனும் சிவலிங்கப்பெருமானது திருச்சந்நிதானத்தின் முன்பு கிரமத்துடன் நல்ல யாக மியற்றி அன்பு நிறைந்த தவத்தைச்செய்த பலனால், இதழ்கள் நிறைந்த மொட்டுகள் விகசித்த மலர்கள் நெருங்கிய கொன்றைமாலையை யணிந்த சடையினராகிய சிவபெருமானுக்குச் சிகாமணியானதுமல்லாமல்; நீலகண்டத்தையுடைய சருப்பங்களைத்தரித்த நெற்றிக்கண்ணராகிய அப்பெருமானுக்கு ஒரு நேத்திரமுமாயினன். எ - று. (கஉ)

பரிதிவெங் கதிரால் வாடும பற்பல வுயிரு முன்றன்
விரிகதிர்க் கற்றை தோயின் மெய்குளிர்ப் புறுக யாமும்
பொருவில்பூ ரணையி னின்பேற் புனைந்தவிவ் விலிங்கத் தன்னின்
மருவுது மியம மீன்ற மயிலியன் மடந்தை யோடும.

(இ-ள்.) வெவ்விய கிரணங்களையுடைய சூரியனால் வாடுகின்ற பலவகைப்பட்ட பிராணிகளும் உனது விரிவாகிய கிரணத்தொகுதி படிந்தால் உடல் குளிர்ச்சியடையக்கடவன. சமானமில்லாத பவுர்ணமித்திதியில் உனதுபேறைப்பெற்ற இச்சிவலிங்கமூர்த்தத்தில் யாமும் இமாசலமன்னன்பெற்றமயிலினசாயலையுடைய உமாதேவியுடன் பொருந்தியிருப்போம். எ - று. (கங)

'இமயமீன்றமயிலியன்மடந்தை'—என்பது,

திருக்கைலாயகிரியில் சிவபெருமான் திருவோலக்கங்கொண் டிருக்கையில் உமாதேவியார் எழுந்து பெருமானை வணங்கி "தலைவனே! தேவரீரை வணங்காத தக்கன்புத்திரி எனனுமபெயரும், அவனால் போஷித்த உடலும் நான் சகிக்கவில்லேன். அவை மாறும்வண்ணந் திருவருள் செய்யவேண்டும" என்றுபிரார்த்திக்க, எம்பெருமான் "உமையே! இமாசலமன்னன் உன்னைப் புதல்வியாகப் பெற வேண்டுமென அம்மலையில ஓர் தடாகத்தருகில் தவஞ்செய்கின்றான். அவன் புத்திரியாகுக. யாம் வந்து மணஞ்செய்வோம்" என்று அனுக்கிரகிக்க, தேவியார் அவவாறே ஓர் தாமரைத் தவிசின்மேல் பிள்ளைமைக்கோலங் கொண்டிருக்கக் கண்ட இமயமன்னன் தொழுது கூத்தாடிக் கையிற்றாங்கி மேனை யென்னும் மனைவிபாற கொடுத்து வளர்த்தனன். பிறகு தேவியார் தவஞ்செய்து பெருமானை மணந்தனர் எனபதாம். இதனை,

கந்தபுராணம்-உற்பத்திகாண்டம்-பார்ப்பதிப்படலம்.

"மெய்த்தவ மியற்றிய வெற்பன் காணிய
வத்தட மலருமோ ரரவிந்தத் தின்மேற்
பைத்ததோர் குழவியின் படிவத் துற்றன
ளொத்திறத் துயிரையு மீன்ற தொன்மையாள்"—எனவும்,

"பங்கயத் தவிசின் வைகும் பராபரை தனைத்த ஞாது
செங்கையி னெடுத்து வல்லே சென்னிமேற் றாங்கி யேகித்

துக்கர் செய்த தன்னை யிரண்முறை யிருக்கைபுக்கு
மக்களை யீன்னெனன்று மனவிலைக் கொடுத்தான மாதேர்" எனவும்
வருவனவற்றானுணர்க. (கங)

மதிபுரு முவாவிற் றிங்கள் வாரமவந் திடையின முன்னாள்
விதியினி லுணவு நீத்து விழித்துபி னாது காலைக்
கதிரமதிக் கூப மூழ்கிப் பிறந்துளோர் கடன்க ளாற்றி
னதிபுனற் கங்கையிற் பிண்ட மிட்டபப் பயனடைவ ரன்றே.

(இ-ள்.) சந்திரன் (சோடசகலைகளுடன்) பொருந்தும் பூரணையிற் சோம வாரம்வந்துகூடினால், அதன்முந்தியதினத்தில் முறையுடன் உணவை நீக்கி நித்திரை செய்யாதிருந்து உதயகாலையில் ஒளியையுடைய சந்திரகூபத்தில் ஸ்நானஞ் செய்து இறந்த பிதுரர்கடனை முடித்தால், ஒலிக்கின்ற நீரையுடைய கங்கை (மணிகர்ணிகை கங்கைத் துறை)யில் பிண்டங்கொடுத்த பலனைப் பெறுவார்கள். எ-று. (கச)

சித்திரைத் திங்க டன்னி னிறைமதி சேருங் காலை
யித்தலை யெய்தி யிசை விலிங்கத்தை வழிபட் டோர்கண்
முத்தியி லடைவர் சத்தி யோகபீ டத்தின முனனுட்
பத்தியின வழிபட் டுய்ந்தோர் பலருளா ராவ ரன்றே.

(இ-ள்.) சித்திரைமாதத்தில் பூரணைவருகையில், இவவிடத்தையடைந்து இந்தச் சிவலிங்கமூர்த்தத்தை வழிபாடுசெய்தவர்கள் மோக்ஷலோகத்திற் சேருவர். யோகபீடத்திலுள்ள சத்தியம்மையின முன்னர் பூர்வத்தில அநேகர் வழிபாடுசெய்து உச்சீவித்தவர்கள் அளவிலலாதவர்கள் உளராவர். எ-று.

**யோகபீடம்** என்பது உலகிலுள்ள சத்தி பீடங்கள் அறுபத்துநான்கினுள் ஒன்று. இதுகாசியிலுள்ளது. (கரு)

அட்டமி தோறு மிந்தப் பீடத்தி னருச்சித் தோர்க்கு
மட்டவிழ் கூந்தற சத்தி வரமினி தளிக்கு மெனனுக்
கட்டழ லதனுல வென்றி வாசிலை காமற் காய்ந்த
விட்டொளிர திங்கள் வேணி விமலனு மறைந்து போனுன்.

(இ-ள்.) அட்டமித் திதிகளிலெல்லாம் இச்சத்திபீடத்தில பூசித்தவர்களுக்கு மணம்வீசும் அளகபாரத்தையுடைய சத்தியானவள் பலவரங்களை இனிதாகக் கொடுப்பாள் எனறு திருவாய்மலர்ந்தருளி, கண்ணுகிய தீயினுல வெற்றி பொருந்திய நெடிய கரும்புவில்லையுடைய மன்மதனை யெரித்த, கிரணங்களைவீசிப் பிரகாசிக்கின்ற சந்திரனைச் சூடிய சடையையுடைய சிவபெருமான அந்தர்த்தானமாயினர். எ-று. (கசு)

அன்றுதொட் டுலக மெல்லாங் குளிர்ப்புற வகல்வான் போர்த்த
துன்றிருட் பிழம்பு சீக்குஞ் சோமன்வா ழுலக மீதா
மென்றுபூந் துளவோ னன்ப ரிசைப்பவே குதலும் பன்மீ
னென்றிய வுலக நோக்கி யாதென வுரைக்க லுற்றார்.

(இ-ள்.) அன்றையமுதற்கொண்டு உலகமுழுவதும் குளிர்ச்சிபொருந்த விசாலமாகிய ஆகாயத்தைமூடிய நெருங்கிய இருட்கூட்டத்தை நீக்குகின்ற சந்திரன் வசிக்கின்ற லோகம் இதுவாகும் என்று பொலிவுதங்கிய துளவமாலையணிந்த விஷ்ணுகணநாதர்கள் சொல்லக்கேட்டு (சிவசன்மா) போகவும், பல நட்சத்திரங்கள் கூடியுள்ள உலகத்தைப்பார்த்து, இஃதென்னவுலகம் என்று கேட்க (கணநாதர்கள்) சொல்லத்தொடங்கினர். எ - று. (௧௭)

சிவசன்மா ஈசானனுலகுஞ் சந்திரனுலகுங் கண்ட அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ௫௫௪.

சிவமயம்.

பதினைந்தாவது,

சிவசன்மா

## தாரகையுலகும் புதனுலகுங் கண்ட அத்தியாயம்.

நறுமலர்க் கமலவீட் டுறையு நான்முகன்
றுறுகழற் காற்பெரு விரலிற் றோன்றிய
செறிதவக் கிழவனுந் தக்கன் சீர்பெற
வறுபது மகளிரை யருளி னனரோ.

(இ-ள்.) வாசனைதங்கிய தாமரைமலராகிய வீட்டில்வாழ்ந்திருக்கும் நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவனது நெருங்கிய வீரகண்டாமணிதரித்த பாதத்தி லுள்ள பெருவிரலிற் பிறந்த மிகுந்த தவத்தையுடைய தக்கன்சிறப்படையும்படி அறுபதுபுதல்வியரைப் பெற்றனன். எ-று. (க)

ஆங்கவர் தம்மினூ வொன்ப தங்கலார்
தீங்கறு காசியின் வரணைத் தீரத்தின்
பாங்கரி னிலிங்கமொன் றமைத்துப் பண்புடன்
றூங்கரு மன்பினிற் றவமி யற்றினர்.

(இ-ள்) அப்புதல்வியர் அறுபதின்மரில் இருபத்தேழுமாதர்கள் குற்ற மற்ற காசிக்ஷேத்திரத்தில் வரணாநதிக்கரையின் பக்கத்தில், ஓர் சிவலிங்கக்குறி யைப் பிரதிட்டைசெய்து தகுதியாக மிகுந்த ஆசைகொண்டு சிவபெருமானை நோக்கிச் செய்தற்கரிய தவஞ்செய்தார்கள். எ-று. (உ)

அகில்வயி றார்ந்துமி ழும்மெ லோதியர்
திகழ்புரு டாயுத மென்னுஞ் செய்தவந்
தகவுட னாற்றலு மகிழ்ந்து தாழ்சடை
வகிர்மதிக் கணணியான் வந்து தோன்றினன்.

(இ-ள்.) அகிற்கட்டையின் புகைமணங் கமழும் அழகிய மெல்லிய கூந் தலையுடைய பெண்கள், விளங்குகின்ற புருடாயுதம் என்னும் செய்யத்தக்கதவத் தை முறையுடன் செய்யவும், நீண்ட சடாபாரத்தில் பிறைச்சந்திரனாகிய மாலையை யுடைய சிவபெருமான் சந்தோஷித்து அவர்களுக்குக்காட்சிதந்தனர். எ-று.

செய்தவ மகிழ்ந்தனம் விழைதல் செப்புமின்
றையலீ ரொன்றலுந் தலைவ நின்னிகர்
மையறு கொழுநனை வழங்கு வாயென
வையனும பெரிதுவந் தருளன் மேயினன்.

(இ-ள்.) பெண்களே! நீங்கள் இயற்றிய தவத்துக்கு மனமகிழ்ந்தோம்; விரும்பியவற்றைச்சொல்லுங்கள் என்று(சிவபெருமான்)திருவாய்மலர்ந்தருளவும்,

ட் மங்கையர்) தலைவனே! தேவர்களெல்லோர்க்கும் தூர்நமற்றவனாவனே! அடியேங்கட்கு அநுக்கிரகிப்பாயாக என்று விண்ணப்பஞ்செய்யச் சிவபெருமானும் மிகக் ....... திருவருள் செய்வாராயினர். எ - று. (௭)

கோலைபழுத் தொழுகிய வேற்கட் கோதைமீர
மலர்தலை யுலகினி லிருளை மாற்றுதண
கலைமதிக் கடவுளுங் கணவ னும்மன
வலர்முலை பாகனுங் கருளி னனரோ.

(இ-ள்.) கொலைத்தொழிலிற் பயின்று விளங்கிய வேற்படைபோலுங் கண்களையுடைய கன்னிகைகளே! இடமகன்றபூமியிலுள்ள அந்தகாரத்தை விலக்கும் குளிர்ந்த கலைகளையுடைய சந்திரன் உங்கட்கு நாயகனாவான் என்று பரவிய திருத்தனங்களையுடைய பார்வதிபாகராகிய சிவபெருமான் அருளிச்செய்தனர்.

உயர்புரு டாயுத மென்னு மொண்டவ
மயர்வற வாற்றலிற் புருட மாட்சிமை
யியல்புற வேண்டிழி யடைதி ரெண்ணிலாச்
செயிர்று முடுக்களிற் சிறந்து வைகுவீர்.

(இ-ள்.) (பெண்கள்!) உயர்வாகிய புருடாயுதமென்னும் நல்ல தவத்தினை நீங்கள் மயக்கம் நீங்கச்செய்தலால், கணவனையடையுஞ் சிறப்பினை இயல்பாக விரும்பியகாலத்தில் பெறக்கடவீர்கள்; அன்றியும் கணக்கிலலாத குற்றமற்ற நக்ஷத்திரங்களில் மேம்பாடுபெற்று வாழ்ந்திருப்பீர்கள். எ - று. (௮)

ஆர்வமுற் றலமத்தவிவ் விலிங்க மந்நலீர்
தாரகைப் பெயரதாய்த் தயங்கி யோங்குக
வீர்ம்மதிப் பதத்தின்மீ திருத்திர் நீரென
வார்சடை யந்தணன் மறைந்து போயினான்.

(இ-ள்.) அழகிய ஸ்திரீகளே! நீங்கள் ஆசைகொண்டு பிரதிட்டைசெய்த இந்தச சிவலிங்கக்குறி நட்சத்திரப் பெயருற்றதாய் விளங்கி உயரக்கடவது; நீங்கள் குளிர்ச்சிதங்கிய சந்திரபதவிக்குமேல் இருக்கக்கடவீர் என்று வரமருளிச் செய்து, நெடிய சடையையுடைய சிவபெருமான அந்தர்த்தானமாயினர். எ-று.

மதர்விழி மங்கையர் திங்கள் வானவன
பதியெனப் பயிலுறு பதமற் றீதெனுங்
கதையினைக் கேட்டன னேகுங் காலையிற்
புதனுய ருலகினைப பொருந்த நோக்கினன.

(இ-ள்.) சந்திரனைக் கணவன் என்று சொல்லுகின்ற மதர்த்த கண்களையுடைய அவ்விருபத்தேழுமாதர்கள் சஞ்சரிக்கும் தாரகையுலகம் இதுவென (விஷ்ணுகணத்தலைவர்கள் சொல்லிய) சரித்திரத்தைச் (சிவசன்மர்) கேட்டுப் போகையில் புதன்வசிக்கின்ற உயர்ந்த உலகத்தினைத் தன்முன் விளங்கப்பார்த்தனன்.

பொற்றரு விழுதுவிட் டனைய புஞ்சடை
நற்றவன் கணங்களை நயந்து நோக்குறு

சிற்பநா[illegible] டைசந்தி தெய்வ [illegible]
[illegible] யொழிகென வுறைநன [illegible]

(இ-ள்) அத்திய [illegible] விழுது விட்டதைப்போன்ற [illegible] கிய சடையையுடைய [illegible] சிவசன்மா [illegible] கணநாதர்களை விரும்பிப்பார்த்து (கணநாதர்களே!) [illegible] கூடப்பட்ட இடக்கண களுடன் விளங்கிய இந்தத் தெய்வகம்பொருந்திய [illegible] விசேடத்தைச்சொல்லவேண்டுமென, அவர்கள் சொல்லத் தொடங்கினர். எ-று. (௯)

கண்வழுக் குறுசுடர் காலு மோர்கலை
யணணறன் சடைமிசை யமைந்த வாற்றினு
லெண்ணுமூ வுலகமு மேத்த லான்மதி
விண்ணவற் குள்ளமும வேறு பட்டதே.

(இ-ள்) (சிவசன்மாவே!) கட்புலனைத் தெறிக்கச்செய்யும் பிரகாசத்தைக் கக்குகின்ற ஒருகலை சிவபெருமானுடைய சடைமுடியிற் பொருந்திய தன்மையா லும், நினைக்கின்ற மூவுலகத்திலுள்ளவர்களும் துதித்தலாலும், சந்திரனுக்கு மன மும் (இயற்கை நீங்கி) வேறுவகையினதாயிற்று. எ-று. (௧௦)

மருவுகா தலின்மதிக் கடவுள் வானவர்
வெருவினர் விலக்கவுங் குரவன் மேவிய
முருகுவாய் மடுத்தளி மூசு பூங்குழற்
றெரிவையை வலிதினிற சேர்ந்திட் டானரோ.

(இ-ள்.) சந்திரன் (ஒருகாலத்தில்) தன்பால் பொருந்திய மோகத்தினால், தேவர்கள் பயந்து விலக்கவும் (கில்லாறுகி, அகிலமுதலிய புகையின்)வாசனையுண்டு வண்டுகள் மொய்க்கின்ற மலர்மாலை சூடிய கூந்தலையுடைய பிரகஸ்பதிமுனிவர் மனைவியாகிய தாரையைப் பலவந்தமாகப் புணர்ந்தான். எ-று. (௧௧)

பானிலாக் கடவுளுங் குருவின் பன்னியை
மானமற் றினபுற மணநத தன்மையாற்
கூன்முது கிளமபிறை முடித்த கோனன்றி
வேனிலவேள் பகழிபார் விலக்க வல்லரோ.

(இ-ள்.) வெண்மை தங்கிய சந்திரிகைவீசுங் கடவுளாகிய சந்திரனும் குரு பத்தினியாகிய தாரையை வெட்கமில்லாது களி புண்டாகும்படிக் கலந்தவிதத் தால் (ஆலோசிக்குமிடத்தில்) வளைந்த முதுகினையுடைய இளமைபொருந்திய பிறைச்சந்திரனைச் சடையிற்சூடிய சிவபெருமானன்றி யார்தான் மன்மதன்கணை யைத்தடுக்குந் திடமுடையார்? (யாருமில்லை!) எ-று

மன்மதன் வேனிற் காலத்திலேயே அதிகமாகச் சையோகவிருப்பமுண்டுபண்ணுவோனுதலால் வேனில்வேள் எனப்பட்டனன். மன்மதனகணைகளைந்து அவையாவன:—தாமரை - மா - அசோகு - முல்லை - நீலம். அக்கணைசெய்யும் துன்ப முதலியவற்றை.

"வனசஞ் சூத மசோகு முல்லை
நீல மெனமதன் பெய்கணை யைந்தே"—எனவும்,

"சம்பிர யோகம் விப்பிர யோகம்
சோகம் மோகம் மரணமுந் தோன்றும்" — எனவும்,

"சம்பிர யோகஞ் சொல்லு நினைவும
விப்பிர யோகம் வெய்துயிர்த் திரங்கல்
சோகம் வெதுப்புந் துயப்பன தெவிட்டலும்
மோக மழுங்கலும் மொழிபல பிதற்றலும்
மரணம் அயர்ப்பும் மயக்கமுஞ் செய்யும்" — எனவும், வருவனவற்று லுணர்க. (கஉ)

வெய்யகூற் றுருத்தெறி வேல்வி லக்கினு
மெய்துமூழ் வினைத்தொட ரெண்ணி மாற்றினுந்
தையலார் முழுமதி முகத்திற் றங்கிய
மையகட் காலவேன் மாற்ற லாகுமோ.

(இ-ள்.) கொடியயமன் கோபித்துவிடுகின்றவேற்கணையைத்தடுத்தாலும், தன்னையடைகின்ற ஜன்மாந்தர வினைச்சம்பந்தத்தை ஆலோசித்து நீக்கினாலும், மாதர்களது பூரணச்சந்திரன்போன்ற முகத்திலுள்ள மைதீட்டியகண்களாகிற காலவேலாயுதத்தை நீக்கக்கூடுமோ? கூடாது! எ-று. (கந)

அரும்பெறற் செல்வம்வந் தடைந்த காலையிற்
றிருந்திய நல்லறஞ் செய்து நாடொறும்
விரிந்தநற் புகழினை விளைத்தல் வீறுசால்
புரந்தரற் காயினும் புரிய லாகுமோ.

(இ-ள்.) பெறுதற்கரிய செல்வம் (தனக்கு) வந்து சம்பவித்தகாலத்தில், திருத்தமாகிய நல்லதருமங்களைத் தினந்தோறுமியற்றி(உலகெங்கும்) பரவியநல்ல கீர்த்தியை உண்டு செய்தல் பெருமை மிகுந்த தேவேந்திரனுக்காயினும் செய்யக் கூடுமோ? கூடாது. எ-று. (கச)

தனித்தனி முச்சுட ரியற்றித் தங்கிய
வனைத்துல கிருளையு மகற்று நான்முக
னினைப்பருஞ் செல்வம்வந் தெய்தி னீடிய
மனச்செருக் கெனுமிரு ளகற்ற வல்லனே.

(இ-ள்.) தனித்தனியாக (சூரிய சோமாக்கினி என்னும்) மூன்று சுடர்களையும் சிருட்டித்து, எல்லா உலகங்களிலுள்ள இருளையும் நீக்குகின்ற பிரமதேவன், எண்ணுதற்கரிய பெருஞ்செல்வம் தன்னைவந்தடையப்பெற்றால், மேம்பட்ட மனத்தினிடத்துள்ள இறுமாப்பு என்னும் இருளை நீக்கவல்லவனாவானோ? எ-று

ஏர்பெறு மிருந்திச் செருக்கை யெய்திடிற்
றேர்செவி யுடையருஞ் செவிட ராகுவ
ரோர்தரு முணாவலோ ருமை ராகுவர்
கூர்விழி யுடையருங் குருட ராவரே.

(இ-ள்.) அழகுபொருந்திய பெரியசெல்வச்செருக்கை அடையப்பெற்றால், நல்ல காதுகளையுடையவர்களும் செவிடராவார்கள்; (பிறர் தம தபிப்பிராயத்தை) உணரத்தக்க சொலவன்மையுடையவர்களும் ஊமைகளாவார்கள்; கூரிய (ஒளியையுடைய) கண்களைப் பெற்றவர்களுங் குருடராவார்கள். எ-று. (கசு)

ஈர்ம்மதிப் புங்கவ னிளங் லாங்கைத்
தாரையை விடுக்கலன் றருக்கி வைகலாற்
கார்முகங் குழைத்துவிண் காக்கும வானவா
போர்முகத் தழன்றுளம் புழுங்கி யெய்தினா.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய சந்திரபகவான் இளஞ்சந்திரிகை வீசும் தந்தபந்தியையுடைய தாரையை நீங்காதாகி இறுமாந்து வசித்திருத்தலால், தேவலோகத்தைக்காக்கும் தேவர்கள் வில்லைவளைத்துச்சண்டைசெய்யும்படிகோபித்து மனம் வருந்திச் சந்திரனையடைந்தனர். எ-று. (கஎ)

விண்ணவர் சோமனை வெகுணடு ளாரென
வெண்ணுறூ வன்பரொத் தவறி ழைப்பினுந்
தண்ணளி புரிந்தினி தளிக்குந் தாழ்சடைக்
கண்ணுதல் பிநாகவிற் கைககொண டெய்தினன்.

(இ-ள்.) அடியவர் எத்தகையகுற்றத்தைச் செய்தபோதிலும் மிகக்கிருபை செய்து இனிமையாக (அவர்களைக்) காக்கின்ற தொங்கியசடையையும் நெற்றிக்கண்ணையுமுடைய சிவபெருமான், தேவர்கள் சந்திரனிடத்தில் கோபங்கொண்டிருக்கின்றனர் என்றெண்ணி, தமது பிநாகவில்லைக் கையிலேற்றுச்சென்றனர். எ-று.

பிநாகம் - சிவபெருமான் கையிலுள்ளவில். (கஅ)

எய்தின ரமரரு மமரி னேற்றெதிர்
மையுறழ் கண்டனும் வரிவில் வாங்கினு
னுய்யுமே யுலகுபோ ரொழிப்பல யாளெனச்
செய்யதா மரைமலர்ச் செல்வ னெய்தினன.

(இ-ள்.) தேவர்களும்யுத்தத்துக்கு எதிர்த்துச் சமீபித்தார்கள்; கருநிறமாகிய ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானும் உலகம்பிழைக்குமா சண்டையைமுடிப்பேன் என்று திருவாய்மலர்ந்து வரிக்கட்டுகளமைந்த தமது வில்லை வளைத்தனர்; (அக்காலத்தில்) சிவந்த தாமரைமலரிலிருக்கும் பிரமன் (சிவபெருமான் திருமுன்னர்) வந்தனன். எ - று. (ககூ)

புல்லறி வுடையவிப் புலவ ரோங்கர்
வில்லொடும் போந்ததே கணைவி டுத்திடி
லல்லலுற் றுலகெலா மழியு மின்றென
வல்லியோர் பாகனை வணங்கிக் கூறுவான்.

(இ-ள்.) பார்வதிபாகராகிய சிவபெருமானை நமஸ்கரித்துச் சிற்றறிவுடைய இத்தேவர்களோ தேவரீருக்குச் சமானமென்று பிநாகவில்லுடன எழுந்தருளினீர்? அஸ்திரத்தைப்பிரயோகித்தால் இப்பொழுதே சர்வாண்டங்களும் துன்புற்று நாசமடையுமே என்று மேலுஞ் சொல்லுகின்றனன் (பிரமதேவன்). எ-று.

எந்தையெந் நிலையவா குரவன் பன்னியை
மைந்தனிற் கவர்ந்தனன் மதியென் றேத்தலும்
வெந்திறற் கணிச்சியோன் விடுத்தி டென்னச்
சந்திரன் விடுத்தனன் றாரை தன்னையே.

(இ-ள்.) எமது தந்தையாகிய சிவபெருமானே! பிரகஸ்பதிமுனிவர் மனைவியைச் சந்திரன் மோகத்தால் அபகரித்தனன் என்று விண்ணப்பஞ் செய்யவும், வெவ்விய பராக்கிரமமுள்ள மழுப்படைதாங்கிய சிவபெருமான சந்திரா!) விடுகென்னத் திருவாய்மலர்ந்தருள, சந்திரனும் அவ்வாறே தாரையை விடுத்தனன்.

நண்ணிய பன்னிதன் கருப்ப மானமுற
பண்ணவன் முனிவினால் விழுப்ப வாங்கது
மண்ணிடை வீழ்தலும் வானி னோங்கிய
விண்ணவ ரொளிகெட விளங்கு கின்றதே.

(இ-ள்.) பொருந்திய குருபத்தினியின் கருப்பத்தைப் பிரமதேவனது கோபத்தினால் விழச்செய்ய, அப்பிண்டம் பூமியின்மேல் விழுந்தவுடனே ஆகாயத்திலுள்ள மேம்பட்ட தேவர்களின் பிரகாசமெல்லாம் பின்னிடும்படி (அதிக ஒளியுற்றதாய்ப்) பொலிந்து விளக்கமுற்றிருந்தது. எ-று. (உஉ)

மங்கையிக் கருவினை யுயிர்த்தன் மாசறு
மெங்குலக் குரவறகோ வுவரி யேழுடை
யங்கணமா நிலத்திருள் பருகு மாய்கதிர்த்
திங்களுக் கோவெனத் தேவர் கூறினர்.

(இ-ள்.) (குருபத்தினியாகிய) மாதே! நீ இப்புதல்வனைப் பெற்றது குற்றமற்ற எமது குலகுருவாகிய பிரகஸ்பதிபகவானுக்கோ? (அல்லது) சத்தசமுத்திரங்களை ஆடையாகவுடைய அழகிய இடமகன்ற பெரிய உலகத்திலுள்ள அந்தகாரத்தை நீக்கும் ஆய்ந்த கிரணங்களையுடைய சந்திரனுக்கோ? என்றனர் தேவர்கள்.

பூண்சுமந் தோங்கிய பொம்மல வெம்முலை
நாணசுமந் தோங்கிய நடுக்க மெய்துறச்
சேண்பயி லமரரை முனிவு செய்தலும்
பாண்சுரும் பிமிர்மலாப் பரமன் கூறுவான்.

(இ-ள்.) ஆபரணமணிந்து பூரித்த பொலிவுதங்கிய கொடிய தனங்களையுடைய தாரை, வெட்கமேலிட்டு உடல் பனிப்புண்டாக ஆகாயத்தில் வசிக்கும் அமரர்களைக் கோபிக்கவும், பண்பாடுகின்ற வண்டுகள் ஒலிக்கும் தாமரைமலரிலுள்ள பிரமதேவன் (தாரையை நோக்கிச்) சொல்லுகின்றான். எ-று. (உச)

வெறிமதுக் கலுழிபஞ் சேற்றின் மென்சிறை
யறுபதம் வழுக்கிவீழ்ந் தரற்று பூங்குழ
லுறுசினந் தணிதிமற் றெவர்க்கு யிர்த்தனை
செறிகதி ருமிழுமிச் சிறுவன் றன்னையே.

(இ-ள்.) பரிமளம்பொருந்திய தேனின் கலங்கலாகிய அழகிய சேற்றில் மெலிவிய சிறகுகள் பொருந்திய வண்டுகள் கால்வழுக்கி விழுந்து முழுகின்ற பொலிவுதங்கிய கூந்தலையுடைய தாரையே! நீ பொருந்திய கோபமடங்குக; நெருங்கிய கிரணங்கள்வீசும் இக்குழந்தையை நீ யாருக்குப் பெற்றாய்? எ - று.

தோந்திலன் யாதுநீ செப்பு கென்றலுங்
காந்தணமென் முகிழ்விரல கூப்பிக் கண்கவ
ரேந்திழை யிருட்டுறும் பெறியுந தண்சுடா
வேந்தனுக் கின்றன னெனவி ளம்பினள்

(இ-ள்.) யான் எதுவும் தெரிந்தேனில்லை; நீ சொல்லக்கடவாய் என்று (பிரமன்) கேட்கவும், மெல்லிய காந்தள்மலரரும்பு போலும் விரல்களைக் குவித்து, (கண்டோரது) கண்ணொளியைக் கிரகிக்கும் தாரை இருட்கூட்டத்தை விலக்கும் குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனுக்குப்பெற்றேன் என்று சொல்லினள்.

பைந்தொடி நலலுரை கேட்டுப பாற்கதிர்ச்
சந்திரன் கரங்களாற் றழுவி யன்புடன்
மைந்தனை யுச்சிமோந் துளம கிழ்ச்சிகூா
புந்தியா னுமமும புதனென் றோதினன்.

(இ-ள்.) வெள்ளிய கிரணங்களையுடைய சந்திரன், பசிய வளையலணிந்த தாரையினது நல்வசனத்தைக்கேட்டு, ஆசையோடு தன கைகளாற் புதல்வனை ஆலிங்கனஞ்செய்து உச்சியை மோந்து மனக்களிப்பு மிகுகின்ற அறிவினால் (அப் புத்திரனுக்குப்) புதன் என்று பெயருமகொடுத்தனன். எ - று. (உ௭)

அண்ணலு மறைந்தன னமபொற் றாமரைப்
பண்ணவன் மருவுதன் பதியி லெய்தினன்
றண்ணிலா முகிழ்நகைத் தாரை தன்னொடும்
விண்ணவர் குரவனும விசுமபி னேகினன்.

(இ-ள்.) சிவபெருமானும் அந்தர்த்தானமாயினர். அழகிய பொன்னிற மமைந்த தாமரையில் வாழும் பிரமதேவன பொருந்திய தனது நகரமடைந்தான். குளிர்ந்த சந்திரிகைவீசும் (முல்லை) அரும்புபோல தந்தபந்தி வாய்ந்த தாரையுடன் தேவகுருவாகிய வியாழபகவானும் தேவலோகத்தை யடைந்தான். எ - று. (உ௮)

உருவினும் வலியினு முவமை வேறிலாத்
திருமிகு சிறுவனுந திங்கள் வானவ
னருளொடுங் காசியி லடைந்து நல்லருள்
புரிதரு மிலிங்கமொன் றமைத்துப் போற்றினன்.

(இ-ள்.) வடிவத்தினும் வல்லமையினும் தனக்குச் சமானம் வே றில்லாத செல்வமிகுந்த (புதனென்னும்) பிள்ளையும், (தந்தையாகிய) சந்திரபகவா

னது கிருபையால் காசிக்ஷேத்திரத்திற் சென்று நல்லகருணையைச்செய்கின்ற சிவ லிங்கம் ஒன்று பிரதிட்டைசெய்து அதனைத் தொழுதுவந்தனன். எ - று. (௩௯)

ஒருபதி னாயிரம் பருவ மூணிகந்
தரியநற் றவமினி தாற்ற மேலவையிற்
றெரிவையோர் பங்கமர் திங்கள் வேணியான்
மருவுமவ் விலிங்கத்தின் வந்து தோனறினான.

(இ-ள்.) (புதன்) ஒருபதினாயிரவருஷகாலம் உணவாதிகளை வெறுத்து அருமையாகிய நல்ல தவத்தை இனிதாகச் செய்டிகாலத்தில, உமாதேவியாரை ஒரு பாகமாகக் கொண்ட சந்திரசேகரராகிய சிவபெருமான, பொருந்திய அச்சிவலிங்க மூர்த்தியினின்று (அவனதுகண்களுக்குப்) புலப்பட்டனர். எ - று. (௩0)

கார்வர வுகுப்பு களிகொள் மஞ்ஞையி
னாவமொ டினிதெழுந் தாடிக் கண்ணிணை
நீருக நெஞ்சகங் குழைய முககனன
வாரகழ தெவடி வணங்கி யேத்தினான்

(இ-ள்.) மேகத்தினது வருகையைக்கண்டு சந்தோஷங்கொண்டு (தோகையை விரித்தாடுக்கின்ற) மயிலைப்போல, (புதன்) ஆசையுடன் இனிதாகஎழுந்து ஆனந்தக்கூத்தாடி, இருவிழியிலும் ஆநந்தபாஷ்பம் சிந்தவும் மனமிளகவும் திரிநேத்திரங்களையுடையசிவபெருமானது நெடியவீரக்கழலதரித்த சிவந்ததிருவடிகளைப் பணிந்து துதித்தான். எ - று. (௩௧)

மல்லலந் திருவொடு மகிழ்ந்து வாழினும
அலலலம் படுகுழி யழுந்தி மாழ்கினுஞ்
செலவநின ருளிலென சிநதை நீங்கிடா
நலவர மருள்கென நவினறு போற்றினான்.

(இ-ள்.) சிவபெருமானே! வளமமைந்த நல்லசெல்வத்துடன் சந்தோஷித்துஉயிர்வாழ்ந்தாலும், துனபமாகியபடுகுழியில் வீழ்ந்துதுக்கித்துவருந்தினாலும், தேவரீரது திருவடியினின்று எனது மனமானது பிரியாத நலலவரத்தைத் திருவருள்செய்வீராக என்று யாசித்துத் துதிசெய்தனன் (புதன்). எ று. (௩உ)

இறைவனு முளமகிழ்ந் துடுக்க ளியாவையு
முறைதரு முலகின்மேல் விளங்கி யொன்பதென்
றறைதரு கோளிலொன் றாகி வாழ்கெனப்
பெறலரு நலவரம் பெரிது நல்கியே.

(இ-ள்.) தலைவராகிய சிவபெருமானும் மனங்களித்து, நக்ஷத்திரங்களெல்லாம் வசிக்கின்ற (தாரகை) உலகத்திற்கு மேல் வீற்றிருந்து, ஒன்பது என்று சொ

ல்லப்படுங்கிரகங்களில் ஒருவனாகி வாழக்கடவாய் என்று பெறுதற்கரிய நல்வர
த்தை இனிதாக அனுக்கிரகித்தது. எ - று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௧௩)

விதியினிற் போற்றிய விலிங்க மீறுசால
புதனெனும் பெயரொடும் பொலிக வென்றுதன்
ததைமலர்க் கொன்றையான் மறையத் தண்ணொளி
மதியகன் பதியினில் வைகி னானரோ.

(இ-ள்.) நீ கிரமத்துடன் பணிந்துவந்த இந்தச் சிவலிங்கத்தின் பெருமை மிகுந்த புதன் என்னும் பெயருடனே கண்டு விளங்கக்கடவது என்று திருவாய்மல ர்ந்தருளி, நெருங்கிய கொன்றைமலர்மாலையையணிந்த சிவபெருமான் அந்தர்த்தானமாக, குளிர்ந்த நிலவைக்கக்கும் சந்திரன் புதல்வனாகிய புதன் இவ்வுலகத்தில் வசித்தனன். எ - று. (௧௪)

அவ்வுல கிதுவென வறைந்து செலவுழித்
தெய்வநன் மறையவன் சிறப்பி னோங்கிய
கவ்வைசால் கவியுல கினிது கண்ணுறூஉ
மிவ்வுல கியாதென வியம்பன் மேயினார்.

(இ-ள்.) அப்புதனுலகம் இது வென்று (விஷ்ணுகணநாதர்கள்) சொல்லிப் போகையில், தெய்வீகம் பொருந்திய நல்ல வேதியனாகிய சிவசன்மா சிறப்போடு விளங்கும் கீர்த்திமிகுந்த சுக்கிரனுலகத்தை இனிதாகப் பார்த்து, இவ்வுலகம் என்ன? என்று கேட்க (கணநாதர்கள்) சொல்லத்தொடங்கினார். எ-று. (௧௫)

சிவசன்மா தாரகையுலகும் புதனுலகுங் கண்ட அ-ம்.

முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் ௨௮௧.

உ

சிவமயம்.

# பதினாறாவது,

# சிவசன்மா சுக்கிரனுலகங்கண்ட அத்தியாயம்.

கொடிய வவுணா நிருதர்தொழுங் குரவன் பெயர்சுக் கிரனாகும
படவெவ் வரவ மருங்கசைத்துப் பரவைத் திரையி னுதித்தெழுந்த
விடமுண் டிருண்ட கண்டனருள் மிருத சஞ்சீ வினியெனனு
மொழிவில விஞ்சை யினிதுணர்ந்த வுரவோ னீங்கு வைகினனால்.

(இ-ள்.) நிலைபொருந்திய அசுரரும் இராக்கதரும் வணங்குகின்ற ஆசிரியன் பெயர் சுக்கிரன் என்பதாகும். கொடுமைதங்கிய படத்தையுடைய நாகங்களை அரையிற்கட்டி, அலைகளையுடைய க்ஷீராப்தியில் தோன்றிய ஆலாலவிஷத்தைப் பானஞ்செய்து கறுநிறமமைந்த ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமான திருவருள்செய்த மிருதசஞ்சீவினி என்கிற அழிவில்லாத மந்திரத்தை நன்குதேர்ந்த வலியுடைய அவன இங்குவசிக்கின்றனன. எ - று. (க)

மிருத சஞ்சீ வினியென்னும் விஞ்சை யெவ்வா றிவனுணர்ந்தான்
மருவு பெயர்சுக் கிரனென்ன வந்த தெவ்வா றோதுகென
வரிய மறைதேர் கலைமுனிவன் கேட்ப வறுகால் குடைந்தூத
முருகு விரியும பசுந்துளவோ னன்பா வகுத்து மொழிகுவரால்.

(இ-ள்.) மிருதசஞ்சீவினி என்னுமந்திரத்தை இவன் எவ்விதமாகக் கற்றனன்? பொருந்தியபெயர் சுக்கிரன் என்று எத்தன்மையாகக்கிடைத்தது? சொல்லவேண்டுமென்று, அருமையாகிய வேதப்பொருளைத் தேர்ந்த நூல்களில வல்ல சிவசன்மாவினவ, வண்டுகள் கிண்டிமுரலுதலால் வாசனையோடு இதழ்கள்விரிகின்ற பசியதுளவமாலையணிந்த விஷ்ணுகணத்தலைவர் விளக்கிச்சொல்லத்தொடங்கினர்.

சிவபெருமான சர்ப்பங்களையணிந்ததாவது.

தாருகவனத்து முனிவரர் தமது நிலையழிந்தமை சிவபெருமானால் நிகழ்ந்ததென்றுணர்ந்து அவரைக்கொல்வோமென்றுகருதி அபிசாரவேள்வி ஒன்றியற்றி அதில் தோன்றியசருப்பங்களைப் பெருமான்மீதுஏவ, அப்பெருமான் அவற்றை ஆபரணமாக அணிந்தனர் என்பது. இதனை:—

கந்தபுராணம் - தட்சகாண்டம் - ததீசியுத்தரப்படலம்.

“ஏந்திய பின்னர் வேள்வி யெரியதற் கிடையே யெண்ணில்
பாந்தளங் கொழுந்து தீயோர் பணியினாற் சீற்றங் கொண்டு
போந்தன வவற்றை மாயோன் புள்ளினுக் கஞ்சித் தன்பால்
சேர்ந்திடும் பணிக ளோடு செவ்விதிற் புனைந்தா னெங்கோன்.’ —என்பதனானுணர்க. (உ)

கூற்றம் வெருவ வழலுமிழுங் கொலைவே லந்த காசுரனென்
ருற்றல் சான்ற வவுணனெடு மமா ரியாரு மமரினெதி
ரேற்ற காலைப் பசுங்குண்டனை முதலா மவுண ரிறந்தொழியச்
சீற்ற மிகுமோ ரவுணர்பதி சென்று குரவற் கியம்பினனால்.

(இ-ள்.) இயமனும் அஞ்சும்படி அக்கினியைக்கக்குகின்ற கொலைத்தொழிலையுடைய வேலேந்திய அந்தகாசுரன் என்னும் பராக்கிரம மிகுந்த அசுரனொடு தேவர்கள் எல்லாரும் போரில் எதிர்த்தகாலத்தில், பசுகுண்டனைமுதலாகிய அசுரர்கள் மாண்டுபோக, கோபம் அதிகரித்த ஒரு அசுரோசன (அத்னைக்கண்டு) விரைந்துபோய்த்தமது ஆசிரியனுக்குச்சொல்லினன். எ - று. (௬)

எண்ணி லவுண ரமரர்விடுங் கணையா லாவி யிறந்தொழிந்தா
ரண்ண லீவண் தளிபயினல்லா லுய்யே மெளிய மெனவுரைப்பத்
தண்ணங் கமலப் புத்தேளை யுவமை சாலுந் தனிமுதல்வன்
றுண்ணென் றேகி யமர்க்களத்திற் சுடர்வே லவுண னொடுசேர்ந்தான்.

(இ ள்.) தலைவனே! தேவர்கள்பிரயோகித்த அஸ்திரங்களால் கணக்கில்லாத அசுரர்கள் உயிர்மாண்டுபோனார்கள். தேவரீர்வந்து காப்பாற்றினாலல்லாமல், மெலியவர்களாகிய நாங்கள் (ஒருவரும்) உயிர்பிழைக்கமாட்டோம் என்றுகூற, குளிர்ச்சிதங்கிய அழகிய தாமரைமலரிலுள்ள பிரமதேவனையொப்பாகிய சமானமற்ற அவுணகுரு அவ்வசுரனுடன் விரைந்துபோய் யுத்தகளத்தைச் சேர்ந்தனன்.

வீந்த வவுண ருயிர்பிழைப்ப மிருத சஞ்சீ வினியென்ன
வாய்ந்த விஞ்சை மறைக்கிழவ னறையத் துயிலற் றவர்போல
மாய்ந்தோ ரியாரு முடனெழுந்து வடிவாள் விதிர்த்து வாய்மடித்துக்
காய்ந்து சுழல்கட் டழல்சொரியக் கனன்று ரமரற் கைகலந்தார்.

(இ ள்) சுக்கிரன் மிருதசஞ்சீவினி என்று பெயர் பொருந்திய மந்திரத்தை (யுத்தகளத்தில்) இறந்த அசுரர்கள மீட்டும் உயிர்பெறுமாறு ஜெபிக்க, இறந்தவர்கள் யாவரும் நித்திரைதெளிந்தவர்போலச் சீக்கிரத்திலெழுந்து கூர்மையாகிய வாட்படையை அசைத்துக்கொண்டு பற்களைக்கடித்துக்கோபித்துச் சுழலுகின்ற கண்களினிடத்தில் நெருப்புப்பொறிகள் சிந்தும்படி ஆரவார முற்றவர்களாய்ப் போரிற் கைகலந்தார்கள். எ - று. (௭)

இறந்தோ ரியாரு முயிரெய்தி யிகல்வெஞ் சமத்தி னெதிர்ந்தனரென்
றறந்தாழ் நெஞ்சத் திமையோர்கள் வெருவா நந்தி யுடனறையச்
சிறந்த விசும்பு தனிபுரக்குந் தேவர் வெருவா திருத்திரென
மறந்தாழ் கணிச்சி வானவனை வணங்கிச் சிலாதன் மகனுரைப்பான்.

(இ ள்.) மாண்ட அசுரர்கள் எல்லாரும் மீண்டு உயிர்பெற்றுப் பகைமைகொண்ட கொடும்போரில் சென்றெதிர்ந்துகொண்டார்கள் என்று, கோபங்கொண்டமனத்தையுடைய தேவர்கள் அச்சமுற்றுத் திருநந்திதேவர்பால் முறையிட, சிலாதமுனிவர் புத்திரராகிய திருநந்திதேவர் மேம்பட்ட தேவலோகத்தைக்காக்கும் அமரர்களே! பயப்படாதிருங்கள் என்று சொல்லி, பகைமையை விலக்கும் மழுப்படைதாங்கிய சிவபெருமானைவணங்கிச் சொல்லுகின்றனர். எ - று. (௮)

ஐய நினது திருவருளா லருமா தவத்துப் பார்க்கவன்முன்
னெய்து மரிய விஞ்சையினான் மாய்ந்த வவுண ரியாவரையு
முய்யச் செய்தா னினியமர ருய்யா ரென்ன வோதுதலுஞ்
சைய பாகன் பார்க்கவனைக் கொணர்தி யென்னச் சாற்றினனே.

(இ-ள்.) ஐயனே! தேவரீரது திருக்கருணையால் அருமையாகிய சிறந்த தவங்களைச்செய்த பார்க்கவமுனிவன் (தேவரீரால்) முன்பெற்றுக்கொண்ட அருமையாகிய மிருதசஞ்சீவினிமந்திரத்தால் (போரில்) மடிந்த அசுரர்களெல்லாரையும் பிழைக்கச்செய்தனன்; ஆதலால் இனித்தேவர் பிழைக்கமாட்டார்கள் என்று விண்ணப்பஞ்செய்யவும் உமாசமேதராகிய பெருமான் பார்க்கவனைக்கொண்டுவா என்று திருவாய்மலர்ந்தருளினார். எ - று.

“புதிய அசுரமந்திரி உசனன் பார்க்கவனே சுங்கன் - கோதில் சுக்கிரன் தனிதரு பகர் கவி மழைக்கோள் வெள்ளி” — என்பது நிகண்டாதலால் கவி சுக்கிரன் - பார்க்கவன் - வெள்ளிமுதலிய பெயர்கள் மாறிமாறிச் செய்யுளில் வருதலை ஐயுறாமல் அவை சுக்கிரன் பெயர்கள் எனக்கொள்க. (எ)

சாற்ற லோடு நந்திபரு முக்கட் பரமன் றாள்வணங்கிக்
காற்று மனமும் புறங்கொடுப்பக் கடிதி னேகி யவுணரணி
வீறு விறலோ ரிரிந்தோடத் துரத்தி வெள்ளி தனைப்பற்றி
யேற்றுக் கொடியோன் முன்னுய்ப்ப விரைவி னவனை விழுங்கினனே.

(இ-ள்.) சிவபெருமான் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளவும், திருநந்திதேவர் திருபாலூர்த்தியாகிய திரிநேத்திரங்களையுடைய பெருமானதிருவடிகளை நமஸ்கரித்து, வாயுவேகமும் மனோவேகமும் பின்னிடும்படி விரைந்துசென்று, அசுரர் படைவகுப்பு கும்புகும்பாகக் கலைந்தோடும்படித் துரத்திப் பார்க்கவமுனிவனைப் பிடித்து இடபக்கொடியையுடைய சிவபெருமானது திருச்சந்நிதானத்தில்விட, சிவபெருமான் அவனை விழுங்கினர். எ - று. (அ)

மறுவின் முயற்சி யிலலாத மக்கட் போன்று மாற்றரிய
பொறியில் மாந்தர் தாளாண்மை போன்று மானமே லன்பில்லார்
நெறியி னாற்று நலவிரதம் போன்று நிகரில் கவியின்றிப்
பெறிவே லவுணர் பெருஞ்சேனை பொலிவற் றிடரி னாழ்ந்தனவே.

(இ-ள்.) நல்லபிரயத்தனமில்லாத மாந்தர்போலவும், நீக்கவரிதாகிய அறிவில்லாத மனிதரது ஊக்கத்தைப்போலவும், சிவபெருமானிடத்தில் உள்ளன்பில்லாதவர்கள் முறையோடு செய்கின்ற நலவிரதத்தைப்போலவும், சமானமில்லாத பார்க்கவமுனிவனாகிய ஆசிரியனில்லாமல், செலுத்துகின்ற வேற்படையேந்திய அசுரரது பெரியசேனையானது அழகற்றுத்துன்பத்திலமிழ்ந்தது. எ-று. (கூ)

வெருவ லவுணர் பார்க்கவனை மீட்ப னின்னே யெனவெகுண்டு
முரச மார்ப்ப வளைநரல மூரித் தானை முன்னடப்பக்
கருவி முகிலேய் தடங்குடுமிக் கைலை யடைந்து கறைமிடற்ற
வரவா பரணன் கணங்களொடும் பொருதா னந்த காசுரனே.

(இ - ள்.) (அதுகண்ட) அந்தகாசுரன், அசுரர்களே! பயப்படாதீர்கள்; (நம தாசிரியராகிய) பார்க்கவமுனிவரைச் சிறைபட்டுக்கொண்டு வருகின்றேன் என்று கூறிக் கோபித்துப் பேரிகைமுழங்கவும், உடுக்கைச் சங்கங்களை தொனிக்கவும், வலி தங்கிய சைந்யம் தனக்குமுன்னே செல்லவும், உலகிறந்தும் (உயர்ந்து) காரணமாகிய மேகங்களை சஞ்சரிக்கின்ற விசாலமாகிய சிகரங்களையுடைய கைலாசகிரியைச் சேர்ந்து, நீலகண்டத்தையுடைய சப்பாபரனாகிய சிவபெருமானது திருக்கணங்களோடும் போர்செய்யத்தொடங்கினான். எ - று. (க

அவுணர்க் கிறைவன் விடுகணைபா வாரா கணங்கள் வெருவெய்த
வுவண மூர்ந்தோன் மயிலூர்தி யுடன்வெஞ் சினத்த வெழுமுகன்
றவளக் களிற்றுப் பெருமபாகன் முதலா யமரர் தலைப்பெய்து
புவன முழுதும் புகைப்படவப் போர்ப்பக் கணையாற் புதைத்திட்டார்.

(இ - ள்.) தானவர்குலத்தலைவனாகிய அந்தகாசுரன் பொழிகின்ற பாணவருஷத்தினால் தேவர்கூட்டங்கள் பயமடைய (கண்டு) கருடக்கொடியினராகிய விஷ்ணுமூர்த்தியும், மயில்வாகனராகிய முருகக்கடவுளும், கொடியகோபத்தையுடைய யானைமுகம் பொருந்திய விநாயகமூர்த்தியும், ஐராவதத்தை வாகனமாகக்கொண்ட பெருமைவாய்ந்த இந்திரனும் முதலாகிய தேவர்கள் ஒன்றுகூடி, உலகமெங்கும் புகைவரிசைசூழும்படி (நானாவித அஸ்திரங்களால் மறைத்துவிட்டார்கள். எ - று.

தூர்க்கும் படையால் வளைப்புண்டு துளங்கு மவுணர் வெருவெய்தி
யார்க்கு மமலை செவிமுதலவந் திசைப்ப வந்தெங் களிற்றுரிவை
போர்க்கு மமலன் வயிற்றுறையும் வெள்ளி கொளப் புலப்பட்டுத்
தீர்க்க வரிதா மிடரெய்திப் போமா றுளத்திற் சிந்தித்தான்.

(இ - ள்.) செலுத்துகின்ற பாணங்களால் அகப்பட்டுக்கொண்டு வருந்துகின்ற அசுரர்கள் அச்சமடைந்து இரைச்சலிடும் பேரோசையானது செவிப்புலன்வழி வந்து கேட்க, கொல்லுகின்ற வெவ்விய யானையின் தோலைப்போர்த்திருக்கும் சிவபெருமானது திருவயிற்றிலிருக்கும் பார்க்கவன் கேட்டு அழுது நீக்கவரிதாகிய துன்பமடைந்து வெளிக்கொண்டு செல்லும்படி மனதில் நினைத்தனன். எ - று.

களிற்றுரிவை போர்க்கு மமலன் - என்பது.

**கயாசுரன்** என்னும் அசுரன் மேருமலையில் பிரமனைநோக்கி அருந்தவஞ் செய்தான். **பிரமன்** "தீர்க்காயுவும் வல்லமையும் தந்தேன்; சிவபெருமானுக்கு முன் சென்றால் இவ்வரமழியும்" என்றுகூறினன். கயன் அதுமுதல் தேவர்களைத்துன் புறுத்திவந்தான். அதனைக்கண்ட முனிவர்பயந்து காசியைச்சேர அவன் விடாது பின்வருதலால் **மணிகர்ணிகையி**லுள்ள பெருமானைச்சரணடைய, கயன் தனக்குப் பிரமன் சொல்லியவற்றைமறந்து கோபத்தால் அங்கும்செல்ல, **சிவ பெருமான்** உக்கிரரூபங்கொண்டு அவனைக்காலாலுதைத்துத்தள்ளி உடலைக்கிழித்து, அவன் றோலைப்போர்வையாகக்கொண்டனர் என்பது. இதனை

கந்தபுராணம் - தட்சகாண்டம் - ததீசியுத்தரப்படலம்.

"மதித்து வேழமாந் தானவன் வருதலும் வடவை
யதித்த வனையு மச்சுற வெரிவிழித் தொருதன்
கதித்த தாள்கொடு தள்ளவே கயாசுரன் கவிழ்ந்து
பதைத்து வீழ்தலு மிதித்தனன் சிரத்தையோர் பதத்தால்.

ஒருப தத்தினைக் கவானுற திருக்கரத் துகிரால்
வெரிநி டைப்பிளந் தீரிரு தாள்புடை மேவக்
குருதி கக்கியே யோலிட வவுணர்தங் குலத்துக்
கரியு ரித்தனன் கண்டுநின் றம்மையுங் கலங்க.

ஆரு நாயக னந்தறிக் துயிர்த்தொகை யனைத்தும்
வாளி லாதுகண் ணயர்வது மாற்றுதன் மதித்து
நீளி ருங்கரி யுரித்திடு மதனினை நிமலன்
றோளின் மேற்கொடு போர்த்தன னருள்புரி தொடாபால்."—என வருவ
னவற்றா னுணர்க. (௧௨)

சிந்தித் திருக்குங் காலையிளந் திங்கட் கண்ணி யிறைவயிற்றி
னுந்து தடந்தே ரவுண ருடன் றேவ ருடற்றுங் கொடுஞ்சமருங்
கொந்து கமழுந் துழாயலங்கற் கோனுடன் முதலாம் வானவரு
மந்த மில்லாப பகிரண்ட மனைத்து நோக்கி யின்புற்றான்.

(இ-ள்.) பிறைச்சந்திரனைச் சூடிய சிவபெருமானது திருவயிற்றிலிருந்து கொண்டு இவ்வாறு சிந்தித்திருக்கும் பார்க்கவன, செலுத்துகின்ற விசாலமாகிய தேரினையுடைய அவுணருடன் அமரர்கள்செய்கின்ற கொடியயுத்தத்தையும்,கொந்தாகப்பரிமளிக்கின்ற துளவமாலையணிந்த விஷ்ணுமூர்த்திமுதலாகிய தேவர் செய்கையையும், அளவில்லாத பகிரண்டங்க ளெல்லாவற்றையுங்கண்டு சந்தோஷித்தான். எ - று. (௧௩)

அன்ன நோக்கி யொருநூறாண் டியோக மொழியா தமர்வெள்ளி
பின்ன ரிறைவன் சுக்கிலமாய் வீழ்ந்து பெம்மா னடிபரவ
மன்னு நமது சுக்கிலமாய் வந்த வாற்றாற் சுக்கிரனென்
றன்னை யுலகம் புகலவினி துறைதி யெனலுந் தொழுதகன்றான்.

(இ-ள்) அப்படிப்பார்த்துக்கொண்டு நூறுவருடகாலம் யோகங்கெடாது விளங்கியபார்க்கவன் பின்பு சிவபெருமானது சுக்கிலமாகப்பூமியிலிறங்கி அப்பெருமானது திருவடிகளைவணங்க, பொருந்திய நமது சுக்கிலமாகப்பூமியில் வந்ததன்மையால்,உன்னை உலகத்துள்ளோர்யாவரும் சுக்கிரன்என்று சொல்லும்படி இனிதாகவாழக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளவும் சுக்கிரன வணங்கிப்போயினன். எ - று. (௧௪)

அன்னோன் பெயரின் முறைவழுவா தறைந்தேங் கரியி னுரிபோர்த்த
முன்னோ னளித்த விஞ்சைமுறை கேட்டி பிருகு முனிபுதல்வ

னின்றோன் காசி நகரடைந்தோ ரிலிங்க மமைத்து மலர் தூவிப்
பன்னாள் வழிபா டியற்றிடவும் பரமன் றோன்றக் கண்டிலனால்.

(இ-ள்.) (சிவசன்மாவே) அத்தகைய சக்கிரபகவானது நாமவரலாற்றை
முறைபிறழாது கூறினோம்; யானையின் தோலைப்போர்த்த சிவபெருமான் மிருத
சஞ்சீவினிமந்திரத்தைக் கிருபைசெய்தவிதத்தையுங்கேட்பாயாக(என் றவிஷ்ணு
கணநாதர்கள் சொல்லுகின்றனர்) பிருகுமுனிவர் புத்திரனாகிய இந்தச் சக்கிரன்
காசிக்ஷேத்திரத்திற்குச்சென்று ஓர் சிவலிங்கப்பிரதிட்டைசெய்து பலநாள் அருச்
சித்து வழிபடவும் பெருமான் காட்சியளிக்கவில்லை. எ-று. (௧௫)

உலவாக் கொடிய மும்மலமுங் கழுவிப் புலன்க ளுள்ளடக்கி
யிலையார் கணிச்சிப் பெருமானை யிதய கமலத் தினிதிருத்திக்
கலைதேர் முனிவ னெய்யரியின் புகைவாய் மடுத்துக் கண்முகிழா
வலையா தோரா யிரமபருவ மரிய விரத மாற்றினனால்.

(இ-ள்.) சாத்திரங்களையுணர்ந்த பார்க்கவமுனிவன், கெடாத கொடுமையு
டைய மும்மலங்களையும் நீக்கி,ஐம்புலன்களையும் (புறஞ்செல்லாமல்) நிறுத்தி,கொ
ழுந்துபொருந்திய மழுப்படையேந்தியசிவபெருமானை இதயதாமரையில் இனிதாக
எழுந்தருளச்செய்து நெய்யரிப்புகையைப் புசித்துக்கொண்டு கண்ணிமையாமலும்
மனங்கலங்காமலும் ஆயிரவருடம் அருந்தவங்களைச்செய்தனன். எ-று. (௧௬)

நெய்யரி=பன்னாடை.

ஆற்று மரிய தவநோக்கி யந்தா மரையின் முகையவிழத்
தோற்றும் பரிதி யொருகோடி யெழுந்தா லென்னச் சுடர்மேனி
யேற்றுக் கொடியோன் றோன்றுதலு மிதயங் களிப்ப மயிர்பொடிப்பப்
போற்றி யமரர் முடியுரிஞ்சு பொன்னங் கழலின் மிசைவீழ்ந்தான்.

(இ-ள்.) அவன்செய்கின்ற அருந்தவத்தைப்பார்த்து,அழகிய தாமரையின்
மொட்டுகள் மலரும்படி உதிக்கின்ற சூரியன் கோடிக்கணக்கில் உதயமானாற்போ
ன்று பிரகாசம்பொருந்திய திருமேனியையுடைய இடபக்கொடியேந்திய சிவ
பெருமான்காட்சிதரவும், மனஞ்சந்தோஷித்து மயிர்க்குச்செறியும்படி துதித்து,
தேவர்கள் மகுடம் தேய்க்கின்ற பொன்மயமாகிய அழகியதிருவடிகளில் வீழ்ந்து
பணிந்தான் (பார்க்கவமுனிவன்) எ-று. (௧௭)

தொழுது வீழ்ந்த முனிவனை யெடுத்து நமது சுக்கிலத்தின்
விழையு மகவாய் வருதியென்று மிருத சஞ்சீவினியென்னும்
பழுதின் மறையு மளித்திவணீ பழிச்சு மிலிங்க மின்பேராற்
றழைக வென்ன வருள்கூர்ந்து தழற்கட் பரமன் மறைந்தனனால்.

(இ-ள்.) அவ்வாறு வணங்கிப்பணிந்த பார்க்கவமுனிவனை, அக்கினிக்கண்
ணையுடைய சிவபெருமான், தூக்கியெடுத்து, நமது வீரியத்தின்வழி விரும்புகின்ற
புதல்வனாய் வரக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளி,மிருதசஞ்சீவினி என்னும்

குற்றமற்ற மந்திரத்தையும் உபதேசித்து, இவ்விடத்திலே நீ வணங்கிய இலிங்கம் உன்பெயரால் (சுக்கிரலிங்கம் என) விளங்கக்கடவது என்று திருவருள்செய்து அந்தர்த்தானமாயினர். எ - று (கஅ)

இன்ன விஞ்சை யிவ்வண்ண மடைந்த புகரி னுலக மிஃ
தென்ன விளம்பு முனாகேளா வேகு நெறியி னிபன்முனிவன்
முன்ன ரங்கா ரகனுலகந் தோன்ற லோடு மொழிகெனப்
பொன்னார் திகிரி நெடுமாய னன்ப ரதனைப் புகல்கின்றார்.

(இ - ள்.) இந்த மிருதசஞ்சீவினி மந்திரத்தை இவ்விதமாகப் பெற்ற சுக்கிரனுலகம் இது என்று சொல்லிய வார்த்தையைக்கேட்டுப் போகும்வழியில், சிவசன்மாவுக்குமுன் செவ்வாயுலகந் தெரியவும், (இதுஎன்னவுலகம்?) சொல்லுக என்று கேட்க, பொன்மயமாகிய (சுதரிசனமென்னும்) சக்கராயுதத்தையுடைய திரிவிக்கிரமாவதாரங்கொண்ட விஷ்ணுமூர்த்தியின் கணநாதர்கள் (சிவசன்மாவை நோக்கிச்) சொல்லததொடங்கினர். எ - று. (கக)

சிவசன்மா சுக்கிரனுலகங் கண்ட அ - ம.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௯௦அ.

உ

சிவமயம்.

பதினேழாவது,

சிவசன்மா

# செவ்வாய் வியாழம் சனியுலகங்கண்ட அத்தியாயம்.

செவ்வா யுலகீ தரிசிந் தியவேல்
மைவார் விழிமங் கையொழிந் திடலும
வெவ்வா ளரவஞ் சடைமீ தணியு
மவ்வா னவன்யோ கினமர்ந் தனனால்.

(இ-ள்.) (சிவசன்மாவே!) இது அங்காரகனுலகம்; (இதன் வரலாற்றைச் சொல்லுகின்றோம் என விஷ்ணுகணத்தலைவர் சொல்லத்தொடங்கினர்) அரிபரந்த மைதீட்டிய வேலைபோலும் நீண்ட கண்களையுடைய உமாதேவியார் தம்மைப் பிரிதலால், ஒளிதங்கிய கொடிய சர்ப்பங்களைச் சடையிற்சூடிய சிவபெருமான் நல்ல யோகத்தில எழுந்தருளியிருந்தனர். எ - று. (க)

தனைநோக் கியதாழ் சடையோ னுதலிற்
பனிநேர் வுயர்பார் மிசைவீழ்ந் ததுவோர்
கனிவாய் மகவா யதுகண் டெறிநீர்
வனைமே கலைமங் கைவளர்த் தனளால்.

(இ-ள்.) யோகத்தி லெழுந்தருளிய நீண்ட சடையினராகிய சிவபெருமானது நெற்றியில்(தோன்றிய) குளிர்ந்த வெயர்வுநீர் பூமியில் சிந்தி, அது ஆதொண்டைக்கனிபோல வாயையுடைய புதல்வனாயிற்று; (அவ்வாறனதை) மோதுகின்ற சமுத்திரத்தை ஆடையாகத்தரித்த பூமிதேவி பார்த்து (எடுத்து மகன்மை கொண்டு) வளர்த்துவந்தாள். எ - று. (உ)

மண்மங் கைவளர்த் தலின்மண் மகனென்
றெண்ணும் பெயரெய் தினனீங் கிவனுங்
கண்ணன் புகழ்கா சியடைந் தெறிநீர்த்
தண்ணந் துறைவா னதிசார்ந் தனனால்.

(இ-ள்.) பூமிதேவி வளர்த்துவந்ததனால் மண்மகன் என்று சொல்லுகின்ற ஒருநாமத்தை யடைந்தனன; இந்த அங்காரகன் விஷ்ணுமூர்த்தியும் புகழ்ந்துபேசுகின்ற காசிக்ஷேத்திரஞ்சேர்ந்து, எறிகின்ற நீர்ப்பெருக்கையுடைய குளிர்ந்த அழகிய துறைகள் பொருந்திய கங்காதீரத்தை யடைந்தனன். எ-று.

மண்மகன் என்பதும், அங்காரகன் பெயர்களுள் ஒன்று. (ங)

வெங்கா மமெறிந் துயர்மெய்ந் நெறியிற்
றங்கா விழைவோ டுதவம் புரியப்
பொங்கா ரழன்மே னிபொடித் தெழலா
லங்கா ரகனா யினனன் னவனே.

(இ-ள்.) கொடிய காம (முதலிய குற்றங்களை) நீக்கி, மேம்பட்ட (ஞான மயமாகிய) உண்மைநெறியிலிருந்து ஆசையுடனே தவஞ்செய்கையில், அதிகரித்த நெருப்பானது சரீரத்தில் (எங்கும்) புளகித்துத் தோன்றுதலால், அச் செவ்வாய் அங்காரகன் என்னும் பெயருடையவனாயினன். எ - று.

அங்காரகன் = அக்கினி ; ஈண்டு அக்கினிமயமானவன் என்பதுபொருள்.

நெறிசேர் தவநோக் கினைத் தருளான்
மறையோ தியமைத் தன்முன்வந் தணுகி
யறைவார் கடனஞ் சமருந் தியசீ
ரிறையோ னுமளித் தனனிவ் வுலகே.

(இ-ள்.) ஒலிக்கின்ற நெடிய கடலிற் றோன்றிய விஷத்தைத் திருவமுது செய்த சிறப்புடைய சிவபெருமான், ஞானமார்க்கத்தின் சம்பந்தமாகிய தவத்தைப் பார்த்து, திருவருளால் வேதங்களை யுணர்ந்த அந்தச்செவ்வாயின்முன்வந்து திருக்காட்சியளித்து இப்பதவியைத் தந்தனர். எ - று. (௫)

எனவோ துதல்கேட் டினிதே குதலு
முனமோர் நகர்தோன் றமுதுக் குறைவாற்
றனிநான் மறையோ னிதுசா றுகெனா
வினைதீர் கணநா தர்விளம் புவரால்.

(இ-ள்.) என்று சொல்லுவதைக் கேட்டுக்கொண்டு இனிதாகப் போகையில், தனக்குமுன்னே வேறொரு உலகங் காணப்பட, பேரறிவினால் ஒப்பற்ற நான்குவேதங்களையு முணர்ந்த சிவசன்மா இது (என்னவுலகம்?) சொல்லவேண்டும் என்று கேட்க, தீவினைச்சம்பந்தம் நீங்கிய விஷ்ணுகணத்தலைவர்கள் சொல்லத்தொடங்கினார்கள். எ - று. (௬)

வேறு.

பனிமலர்க் கமலவீட் டுறையும் பண்ணவன்
முனமுல கியற்றுவான் முன்னு போதவன்
மனனிடை யத்திரி மரிசி யங்கிரா
வெனுமிவர் முதலினோ ரெழுவர் தோன்றினர்.

(இ-ள்.) குளிர்ந்த தாமரைமலராகிய வீட்டில் வசிக்கின்ற பிரமதேவன் முன் (ஒருகற்பத்தில்) உலகத்தைச் சிருட்டிசெய்யும்படி எண்ணியபொழுது, அப் பிரமதேவன் மனதினின்றும் அத்திரி - மரிசி - அங்கிரா என்று சொல்லப்படும் இவர்கள் முதலாகிய எழு முனிவர்கள் உதித்தார்கள். எ - று. (௭)

அனையரின் மறைபயி லங்கி ராவருள்
புனையுமாங் கிரதனென் றுரைக்கும் பொற்புடை
முனிவனை யீன்றன னவனு முக்கணு
னினிதுறை தீம்புனற் காசி யெய்தினன்.

(இ-ள்.) அவ்வெழுவரில், வேதங்களையுணர்ந்த அங்கிராவென்பவன் கிருபைபொருந்திய அழகிய ஆங்கிரதன் என்று சொல்லும் பெயருடைய முனிவ

லைப் பெற்றனன். அந்த ஆங்கிரதமுனிவன் திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் இனிமையாக வாழ்கின்ற மதுரம்பொருந்திய கங்காநதிசூழ்ந்த காசிநகரமடைந்தான். எ - று. (௯)

அருளினா லிலிங்கமாண் டமைத்து மீயுய
ரிருவிசும் புறைதரு தேவ ராண்டினா
லொருபதி னாயிர வருட மோங்கிய
பொருவரு நற்றவம் புரிந்திட் டானரோ.

(இ-ள்.) திருவருளினால் அக்காசிநகரத்தில் ஓர் சிவலிங்கம் பிரதிட்டை செய்து, மிகுதியாகவுயர்ந்த பெரிய விண்ணுலகத்தில் வசிக்கும் தேவர்களது வருடக்கணக்கில் பதினாயிரவருடகாலம், விசேஷித்த சமான மற்ற நல்ல தவத்தைச் செய்தனன். (ஆங்கிரதமுனிவன்) எ - று.

மனிதர்கட்கோர்வருடம் தேவர்கட்கோர்தினம்ஆதலால் அத்தினம் முப்பதுகொண்டது மாதம் எனவும், அம்மாதம் பன்னிரண்டுகொண்டது வருடமெனவும் கொள்க. (௧௦)

ஏற்றிருங் கொடிவல னுயர்த்தி யாணர்வெண்
ணீற்றொளி பழுத்ததெண் ணிலவுக் கண்ணியா
னாற்றருந் தவத்தினுக் கிரங்கி யாயிடைத்
தோற்றியாங் கிரதனை நோக்கிச் சொல்லுவான்.

(இ-ள்.) பெரிய இடபக்கொடியை வலப்புறம் உயர்த்திய, அழகிய திருவெண்ணீற்றின் பிரகாசம்விளங்கும்,தெள்ளிய சந்திரிகைவீசும் இளம்பிறைமாலையணிந்த சிவபெருமான், ஆங்கிரதன் செய்கின்ற (யாவரும்) இயற்றுதற்கரிதாகிய தவத்திற்கு மனமிரங்கி அவனுக்குக் காட்சிதந்து பார்த்துச் சொல்லுகின்றனர்.

அளப்பருந் தவமினி தாற்றி யன்பினி
னுளத்தையிவ் விலிங்கத்தோ டொன்ற நோக்குபு
திளைத்தனி னுலகெலாஞ் சிவ னென்றுனைக்
கிளத்துக நெறிவழாக் கேடில் சிந்தையோய்.

(இ-ள்) நன்னெறி தவறாத கெடுதலில்லாத மனமுடைய ஆங்கிரதமுனிவனே! அளவிடற்கரிதாகிய தவத்தை இனிதாகச்செய்து அன்போடுகூடிய மனத்தை இவ்விலிங்கத்துடன் பொருந்தத் தரிசித்து அன்புநிறைதலால், உலகத்திலுள்ளோரெல்லாம் உன்னைச் சிவன் என்று சொல்லக்கடவர். எ - று. (௧௧)

அருளினா னீயினி தமைத்த லிங்கப்பேர்
பொருவரு வியாழத்திற் பொலிக மற்றது
பரவினர் மலர்கொடு பழிச்சி னோரெலாந்
தெருளொடும் புந்தியிற் சிறந்து வைகுவார்.

(இ-ள்.) ஆசையுடன் நீ இனிதாகப் பிரதிட்டைசெய்த சிவலிங்கக்குறியின் பெயர் சமானமற்ற வியாழம் என்னும் பெயரால் (வியாழலிங்கம்) என விளங்கக்கடவது. அதனை வணங்கினவர்களும் மலர்களாலருச்சித்துத் துதித்தவர்களும் ஞானத்தோடு அறிவிற் சிறந்துவாழ்வார்கள். எ - று. (௧௨)

மன்பெருங் குணங்களை யுடைய வாற்றினு
மென்பெருங் கருணையின நியைந்த தானுநீ
பொன்பயில் விருவிசும பளிக்கும் புங்கவற
களையுடைக் குரவனே யாதி யிண்டெனு

(இ-ள்.) நிலைபெற்ற பெருமை தங்கிய குணங்களையுடைய தன்மையாலும், எனது பேரருள் இப்பொழுது கைகூடியதனாலும், பொன்மயமாகிய பெரிய தேவலோகத்தைக் காக்கும் தேவர்களுக்கெல்லாம் நீ அன்புபொருந்திய ஆசிரியனாகக்கடவாய் . எ-று. (கங)

அந்தர துந்துபி கறங்கி யார்த்தெழப்
பைந்தொடி யரம்பைய ராடப் பங்கய
னிந்திரன் முதலினோ ரினிதி னேத்திடச்
சுந்தரச் சுடர்மணி மௌலி சூட்டியே.

(இ-ள்.) தேவதுந்துபியானது மிகுதியாக ஆரவாரித்து எழவும், பசிய வளையல்களையணிந்த அரம்பாஸ்திரீகள் நடிக்கவும்,பிரமன் - இந்திரன் முதலாகிய தேவர்கள் இனிதாகத் துதிக்கவும், அழகுபொருந்திய பிரகாசிக்கின்ற நவமணிகள் பதித்த கிரீடத்தை தரிப்பித்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (கச)

ஊற்றிருந் தழிநறு வொழுகு கொன்றையோ
னேற்றவவ் விலிங்கத்தின மறைந்திட் டானிய
லாற்றல்வா சவன்முத லடைந்து ளோரெவாம்
போற்றுதம் பதியிடைப் போயி னாரரோ.

(இ-ள்) ஊற்றெடுத்துத் துளிக்கின்ற தேன்சொரியுங் கொன்றைமாலையணிந்த சிவபெருமான் தகுதியாகிய அச்சிவலிங்கக்குறியில் மறைந்துவிட்டனர்; பராக்கிரமமுடைய இந்திரன்முதலாக அங்கு வந்தவர்கள் யாவரும் துதிக்கத்தக்க தத்தமது நகரங்கட்குச்சென்றனர். எ-று. (கரு)

ஆதலால் வியாழத்தி னுலகென் றுங்கவ
ரோதலகேட் டேகுமந் நெறியி லோர்பதி
தீதறக் காண்டலுஞ் சிவசன் மாவிஃ
தியாதென மாதவன் கணமி யம்புமால்.

(இ-ள்.) ஆனபடியால் இது வியாழபகவான் வசிக்கின்ற உலகம் என்று அவர்கள் சொல்லக்கேட்டுப் போகின்ற மார்க்கத்தில், ஒரு நகரம் குற்றமறத் தோன்றவும், சிவசன்மா இந்து என்ன வுலகம் என்று கேட்க, விஷ்ணுவின்கணநாதர்களாகிய சுதன்மன் சுசீலன் என்போர் சொல்லத்தொடங்கினர். எ-று. (கசு)

வேறு.

அருந்தவக் கிழமை பூண்ட காசிபற் கறன்மென் கூந்தற்
கருந்தடங் கிடந்த வுண்கட் காரிகை யதிதி யென்னு

முருந்திள முறுவற் பன்னி மொய்யிருட் பிழம்பு சிப்பக்குந்
திருந்துசெங் கதிர்கள் பூத்த தினகரன் றன்னை யீன்றாள்.

(இ-ள்.) செய்தற்கரிதாகிய தவவுரிமை மேற்கொண்ட காசிபமுனிவருக்குக் கருமணல்போல மெல்லிய அளகபாரத்தையும் கருமையாகிய மையூட்டிய பரந்த விழிகளையும், மயிலிறகின் அடியையொத்த தந்தபந்திகளையுமுடைய மனைவியாகிய அதிதி என்பவள், நெருங்கிய இருட்கூட்டத்தை யொழிக்கும் திருந்திய சிவந்த கிரணங்களையுடைய சூரியனைப்பெற்றனள். எ-று. (௧௮)

தூயநற் றவஞ்செய் தொட்டா வீன்றரு டுணைமென் கொங்கை
யாய்பிழி பறன்மென் கூந்தற் சஞ்ஞிகை தன்னை யன்பிற்
காயழற கடவுள் சான்றாய்க் கடிமணம் புரிதல செய்தான்
பாயிருட் பிழம்பு சீக்கும பரிதியஞ் செலவன் றானே.

(இ-ள்.) பரந்த இருட்கூட்டத்தை யொழிக்கும் அழகிய செல்வனாகிய சூரியன், பரிசுத்தமாகிய நல்ல தவங்களைச்செய்த தொஷ்டா என்பவன்பெற்ற இரண்டு மெல்லிய தனங்களையும், தேன் பொழியும் கருமணற்படிவுபோன்ற மிருதுவாகிய கூந்தலையும் உடைய சஞ்ஞிகை என்னும் கன்னிகையை, எரிகின்ற அக்கினிதேவன் சாட்சியாக ஆசையுடன்இன்பந்தரத்தக்க வதுவைசெய்தனன்.

மல்லலைத் தெழுந்து வீங்கி மறங்கிளர் திணிதோட் குன்றின்
றொல்லுல களிக்கும் வைவச் சுதமநு வினையும் வெய்ய
கொல்சினப் பகடு தூண்டுங் கூற்றையும் யமுனை யென்னு
மல்லினுங் கனிந்த மேனி யணங்கையு மினிதி னீன்றாள்.

(இ-ள்.) மல்யுத்தத்தில் (எதிர்த்தோரை) வருத்திப் பூரித்து விளங்கி வீரம் பொருந்திய வலிய புயங்களாகிய குன்றினையும், பழமையாகிய பூமியைத் தாங்கி ரக்ஷிக்கின்ற வைவச்சுதமநுவையும், கொடிய கொலைத்தொழிலபுரியும் கோபங்கொண்ட எருமைக்கடாவை வாகனமாகவுடைய இயமனையும், இருளைப்பார்க்கினும் கருநிறமமைந்த சரீரத்தையுடைய யமுனை என்னும் பெண்ணையும் இனிதாகப்பெற்றாள் (சஞ்ஞிகை). எ-று. (௧௯)

அன்னவள் வெய்யோன் மெய்யி னழல்கதிர்க் காற்றா ளாகித்
தன்னிழ றன்னை யாங்கோ ரணங்கெனச் சமைத்து நீங்கா
தின்னண மிருத்தி யிவ்வா றியம்பனீ யென்று தாதை
தொன்னகர்க் கேகி யன்னோர்க் குற்றவை யனைத்துஞ் சொன்னாள்.

(இ-ள்.) அந்தச் சஞ்ஞிகை சூரியன் சரீரத்திலுள்ள சுடுகின்ற கிரணங்களுக்குச் சகியாதவளாய், தனதுசாயலை ஓர்பெண்ணாகச்சிருட்டித்து (சாயையே!) நீங்காமல் இவ்விடம் இருக்கக்கடவாய்; இவ்விருத்தாந்தங்களை நீ ஒருபொழுதும் வெளியிடாதே; என்று சொல்லித் தனதுபிதாவினது பழமையாகிய நகரத்தையடைந்து நிகழ்ந்தவற்றையெல்லாம் அவனுடன் சொல்லினள். எ-று. (௨௦)

ஆங்கது கேட்ட தாதை யழலெழ விழித்து நோக்கி
யீங்கிது புரிவர் கொல்லோ கற்புடை மகளி ரென்னத்

தீங்கிழைத் தனமீட் டேகிற் கதிரவன் சீறு மென்னத்
தாங்கருந் தவங்கள் செய்வா னுத்தர குருவிற் சார்ந்தாள்.

(இ-ள்.) அவ்வாறு சொல்லக்கேட்ட தந்தையாகிய தேஷ்டா, நெருப்புப்பொறிபறக்கக் கோபித்துப் பார்த்து (மகளே!) கற்புடையமாதர் இத்தகைய காரியஞ் செய்வார்களோ? என்று சொல்ல, (சஞ்ஞிகை, நாம் கொடுஞ்செயல் புரிந்தோம்; திரும்பிச்சென்றால் சூரியன் கோபிப்பானென வெண்ணி, அருமையாகிய தவங்களைச் செய்யும்படி உத்தரகுரு என்னுமிடத்துக்குப்போயினள். எ-று.

பதனழி சருகு தின்று பரிதியை மனத்தி லுன்னித்
திதலைபூத் தலர்ந்த கொங்கை செய்தவம் புரியு மெல்லை
மதர்வைவே லுண்கிச் செய்த மாயைமற றிவளென் றெண்ணான்
றதைமலர்க் கூந்தற் சாயா தேவியைத் தழீஇ னானே.

(இ-ள்.) உலர்ந்த இலைச்சருகுகளைப் பக்ஷணஞ்செய்து, சூரியனை மனதில் தியானித்து, தேமல்படர்ந்து பூரித்த முலைகளையுடைய சஞ்ஞிகை இயற்றத்தக்க தவஞ்செய்யுங்காலத்தில், (சூரியன்) மதர்த்த கூர்மையாகிய வேலைபோலுங் கண்களையுடைய சஞ்ஞிகை உண்டுபண்ணிய மாயையாக்கும் இவள் என்று தெரியாதவனாய் நெருங்கியமலர்மாலையணிந்த கூந்தலையுடைய சாயாதேவியைக்கூடினான்.

சாவனி யென்னு மெட்டா மநுவினைச் சனியை வெய்ய
வேலெவன மிளிரு முண்கட் பத்திரை யெனனு மானை
யோவறு மன்பி னீன்று முன்னவ ளுவபபி னீனற
மூவரைப் போற்றல் செய்யாண் முனிவொடு மிகழ்ச்சி செய்தாள்.

(இ-ள்.) சாவனி என்று சொல்லப்படும் எட்டாவது மநுவையும், சனியையும், கொடிய அம்பு என்று சொல்லும்படி விளங்கும் மையூட்டிய கண்களையுடைய பத்திரையென்னும் பெண்ணையும், நீங்காத ஆசையுடன்பெற்று, தனக்கு மூத்தாளாகிய சஞ்ஞிகை விருப்புடன்பெற்ற மூன்று மக்களையும் அன்புபாராட்டாமல் கோபத்தோடு சிறுமாறு செய்துவந்தாள் (சாயாதேவி.) எ-று.

இகழவு முனிதல் செய்யான் மநுவினி திருப்பப் பொங்கி
வெகுளியின் மறலி தாயை யுதைப்பத்தா ளெடுக்கும் வேலைத்
தகைவறு முளத்தா ளாகிச் சமனையே புழுங்கச் சீறி
மகவின்றாண் முறிக வென்று வன்பெருஞ் சாப மிட்டாள்.

(இ-ள்.) அவ்வாறு சாயாதேவி தம்மைச் சிறுமாறுசெய்யவும், வைவச்சுதமநு கோபியாதவனாகி இனிதாகவே யிருக்க, யமன மனம்பொறானாகிக் கோபத்துடன் தாயை உதைக்கும்படி காலைத்தூக்குங்காலத்தில், (சாயாதேவி) தகுதியற்ற (கொடிய) மனமுடையவளாகி யமனை வருந்தும்படி கோபித்து, புதல்வனாகிய அவனது கால்முறியக்கடவது என்று வலிதாகிய பெரிய சாபங்கொடுத்தாள் எ-று.

வேறு.

அன்னை முனிந்த வாறனைத்துந் தாதைக் கடுங்கூற் றெடுத்துரைப்ப
வென்னை செய்த பிழையென்ன மறையா தனைத்து மினிதியம்பக்

இரவி யடைந்தென் மனைக்கிழத்தி யாண்டை யாளென் றுரைத்திடலும்
பொருவி னுனது கதிர்வெம்மைக் காற்றா ளாகிப் பெரும்போக
மருவு நுகருத் தரகுருவிற் பெட்டைப் பரியின் வடிவாகி
யரிய பெருமா தவமினிதொன் றாற்றா நின்றா ளாயிழையே.

(இ-ள்.) சூரியன் (தொஷ்டாவிடஞ்) சென்று என்மனையாட்டி யெங்கிருக்கின்றனள் என்று கேட்கவும், ஆய்ந்த ஆபரணங்களையணிந்த அப்பெண் சமானமில்லாத உனது கிரணங்களின் உஷ்ணத்தைச் சகியாதவளாகி, விசேடித்த போக பாக்கியங்களையடைந்தனுபவிக்கும் உத்தரகுருவில் பெண்குதிரையினுருவமேற்று இயற்றுதற்கரிய பெருமைவாய்ந்த சிறந்த தவம் ஒன்று இனிதாகச்செய்கின்றாள்.

அம்மெ லோதி யிடத்துறையி னழற்று நினது கொடியகதிர்
வெம்மை யடக்கல் வேண்டுமென விடைகொண் டேகிப் பூண்சுமந்த
பொம்மன் முலையாங் கிருந்துதவம் புரித னோக்கி யிருள்சீகுஞ்
செம்மற் கதிர்வா னவனவள்பாற் பரியி னுருவிற் சென்றடைந்தான்.

(இ-ள்.) அந்த மிருதுவாகிய கூந்தலையுடைய சஞ்ஞிகைபாற் கலந்தால், உனது சுடுகின்ற கொடுமைவாய்ந்த கிரணங்களின் வெப்பத்தை அடக்கவேண்டும் என்று (தொஷ்டா) கூற, இருளைவிலக்கும் சிறந்த கிரணங்களையுடைய சூரியன் (மாமனிடம்) செலவுபெற்றுக்கொண்டுபோய், ஆபரணமணிந்த பூரித்த முலைகளையுடைய சஞ்ஞிகை அவ்விடத்தில் தவஞ்செய்திருத்தலைப்பார்த்து அவளிடம் ஆண்குதிரைவடிவுடன் போய்ச் சேர்ந்தனன். எ - று. (௫0)

மருவு பொழுதிற் குழைகிழித்து மதர்க்குங் குவளைக் கருநெடுங்கட்
புரிமென் கூந்தல் யார்கொலெனப் புரியு மருமா தவநீங்கி
வெருவி யோடப் பின்றொடரும் வேலைத் தாது மூக்கின்வழிச்
சொரித லோடு மருத்துவரோ ரிருவ ரதனிற் றோன்றினரால.

(இ-ள்.) சமீபிக்கையில், குண்டலங்களை யூடுருவிச்செழித்திருக்கும் நீலோற்பலம்போலும் கருமைவாய்ந்த நெடியகண்களையும், புரிந்தமிருதுவாகிய அளகபாரத்தையும் உடைய பெண்யாரோ? என்று சூரியன்கூற, (சஞ்ஞிகை) தான் செய்யும் அருமையாகிய சிறந்த தவமொழிந்து பயந்து ஓட்டெடுக்க, (சூரியன்) பின்றொடர்ந்து செல்லுங்காலத்தில் வீரியம் மூக்கின் வழியாகச் சிந்தவும், ஒப்பற்ற மருத்துவர் இருவர் அதிலுதித்தனர். எ - று. (௫௧)

ஆய காலை வெருவேனின் னன்பன் யானென் றரும்பெறற்றன
மேய வுருவிற் றோன்றுதலும் விழைவி னாற்றுந் தவப்பேற்றா
லேய கொழுநற் சேர்ந்தனமென் றிரவி யோடு மவளிருப்பச்
சாயா தேவி யினிதின்ற சனியுங் காசி நகரடைந்தான்.

(இ-ள்.) அக்காலத்தில், அஞ்சாதே யான் உனதுகணவன் என்று கூறி அடைதற்கரிய தனது நிஜவடிவுடன் சூரியன் தோன்றவும், அச்சஞ்ஞிகை நாம ஆசையுடன் செய்த தபோபலத்தால் நமக்கு இயைந்த நாயகனோடு கலந்தோம்

என்று நினைத்துச் சூரியனுடன்வாழ்ந்திருக்க, சாயாதேவி இனிதாகப்பெற்ற (புதல்வர்மூவருள்) சனி என்பவனும் காசிக்ஷேத்திரத்துக்குப் போயினன். (௬௨)

ஆங்கு மேவித் தன்னுடைப்பெ யரானு லிங்க மொன்றமைத்துப்
பாங்கி னிபற்று மருந்தவத்தா னெடுவெனை டிங்கட் பைங்கணணிக்
கோங்க முலைபா ளொருபாகன் புரிபு ய நள்மேற் கொணடுவகை
யோங்கு வெய்யோன் றருபுதலவ னினிதி னுறைபு முலகிதுவே.

(இ-ள்.) அவ்விடத்திலிருந்து தனது பெயரால் ஓர் சிவலிங்கக்குறியைப் பிரதிட்டைசெய்து முறைமேோடு நடத்திய அருமையாகிய தவமகிமையால், மிகுந்த வெண்ணிறமமைந்த சந்திரனைப் பசிய கிரீடமாலையாகக்கொண்ட பார்வதிபாகராகிய சிவபெருமானது அனுக்கிரகித்த திருவருளை மேற்கொண்டு, சந்தோஷ மிகுந்த சூரியன் பெற்ற புதல்வனாகிய சனி இனிதாகவசிக்கின்ற உலகம் இது. எ-று.

கோங்கமுலையாள் = கோங்கரும்புபோலும் திருத்தனங்களையுடைய உமாதேவியார். (௬௩)

கங்கை யெறிநீர்த் திரைகொழிக்குங் கடவுட் காசி நகருறையு
மங்கை பாகன் சினகரத்தின் றென்பான் மருவி வீற்றிருக்கும்
பொங்கு கதிர்வா னவனீன்ற சனிபபே ரிலிங்கம் போற்றுமவ
ரங்க ணுலகி லெஞ்ஞான்று மழியாப் பெரும்பே றடைகுவரால்.

(இ-ள்.) மோதுகின்ற நீர்மயமான கங்கையின் அலைகள் கொழிக்கும் தெய்வீகம் பொருந்திய காசிநகரத்தி லெழுந்தருளிய விசாலாக்ஷியம்மை சமேதராகிய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமானது திருச்சந்நிதானத்தின் தென்றிசையிற் பொருந்தி விளங்குகின்ற மிகுந்த கிரணங்களையுடைய சூரியன் பெற்ற சனியின பெயரையுடைய சிவலிங்க மூர்த்தியைத் துதிப்பவர்கள், அழகிய இடமகன்ற உலகத்தில் எக்காலத்தும் கெடாத பெரும்பதவியைப்பெறுவார்கள். எ-று. (௬௪)

என்று கூறு முரைகேளா வேகு நெறியி லைம்புலனும்
வென்ற பெருமா தவரொழுவ ருறைத னோக்கி விழிகளிப்பக்
கன்று சினவெங் குறும்பெறிந்த மறையோ ரிவரார் கழறுகென
மன்றல் கமழுந் துழாயலங்கன் மாய னன்பர் வகுத்துரைப்பார்.

(இ-ள்.) என்று (விஷ்ணுகணத்தலைவர்கள்) சொல்லிய வார்த்தையைக் கேட்டு (சிவசன்மா) போகையில், ஐம்புலன்களையும் செயித்த பெருமைதங்கிய சிறந்த சத்தவிருடியர்இருப்பதைக்கண்ணுற்றுக் கண்களிகொள்ள, மிகுந்த கோபமாகிய பகையையொழித்த (சாந்தசீலர்களாகிய) இவ்வேதியர்கள்யாவர்? சொல்லவேண்டும் என்று சிவசன்மாகேட்க, வாசனைவீசும் துளவமாலை யணிந்த விஷ்ணுகணநாதர்கள் பிரித்துச்சொல்லுகின்றனர். எ-று. (௬௫)

சிவசன்மா செவ்வாய் வியாழம சனியுலகங்கண்ட அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ௩௬௨.

[illegible].

பதினெட்டாவது.

## சிவசன்மா சத்தவிருடிக ளுலகங்கண்ட அத்தியாயம்.

அருந்தவம் புரியுமிங் கிவரை யாம்மறை
திருந்துமே ழிருடிக ளென்றுந் தேமல
ரிருந்தல கியற்றுமேழ் பிரம ரென்னவும
விரித்தநூற் கேள்வியோர் விளம்பு வாரரோ.

(இ-ள்.) இங்ஙனம் அருமையாகிய தவத்தைச்செய்கின்ற இவர்களை, வேதங்களின் பொருளாராய்ச்சியில் திருந்திய சத்தரிஷிகளெனவும், வாசனைவீசுகின்ற தாமரைமலர்ப்பீடத்திலிருந்து ஆன்மாக்களைச் சிருட்டிசெய்யும் சத்தபிரமர்களெனவும், பரவிய நூற்கேள்விகளையுடைய பெரியோர் கூறுவார். எ - று. (க)

மலர்தலை நிலம்புகழ் மரீசி யத்திரி
புலகனற் புலத்தியன் கிரிது போற்றரு
மிலகுபே ரங்கிரா வசிட்ட னீங்கிவா
நலனுறு பன்னியா் நாமங் கேட்டியால.

(இ-ள்) பரந்த இடமுடைய உலகத்திலுள்ளோர் புகழ்ந்துபேசுகின்ற மரீசி - அத்திரி - புலகன் - நல்ல (தவமுடைய) புலத்தியன் - கிரிது - துதித்தற்கரிய பெருமைவிளங்கும் அங்கிரா - வசிட்டன் (எனப்பெயருடையார்) இவவிருடியரது நன்மைபொருந்திய மனைவிமாரது பெயர்களையுங் கேட்பாயாக. எ - று.

தேசுற விளங்குசம் பூதி தேவரும்
பேசரு ருயைவான் சமைபி ரீதிமற்
றேசைபோஞ் சந்ததி மிருதி யோங்கிய
வேசிலாக் கற்பருந் ததியென் றோதுவார்.

(இ-ள்.) கீர்த்திபெறப் பிரகாசிக்கின்ற சம்பூதி - தேவர்களும் பேசத்தகுந்த அநசூயை - சிறந்த சமை - பிரீதி - சிறப்புமிகுந்த சந்ததி - மிருதி - குற்றமில்லாத மிகுந்தகற்புடைய அருந்ததி - என்று (பெயருடையாரான அம்முனிவர் பத்தினிகளைச்) சொல்லுவார்கள். எ - று. (உ)

அருமறை நூற்பொருள் வடித்த வந்தணன்
பொருவறு முலகெலாம் புனித மாதவர்த்
தருதிரொன் றிசைத்தலு மவருந் தண்புனற்
றிரைதவழ் காசியிற் சென்று மேயினார்.

(இ-ள்.) கிடைத்தற்கரிய வேதநூல்களின் பொருளைப்பாகுபடுத்திய பிரமதேவன், சமானமற்ற உலகத்திலுள்ள ஆன்மகோடிகளையெல்லாம், பரிசுத்தம் பொருந்திய மகத்தாகிய தவத்தையுடைய (இச்சத்தவிருடிகளை) உண்டுசெய்யுங்கள் என்று சொல்லவும், அவ்விருடிகளும் குளிர்ந்த அலைகள் பொருந்திய கங்காநதிதவழும் காசிக்ஷேத்திரத்திற்போய்ச் சேர்ந்தனர். எ - று. (ச)

தம்பெய ராற்றிகழ் லிங்கந் தாபித்தோ
ரும்பர்வேட் டவிபுனத் தவமு ணும்ம
வம்பவி ழலங்கலங் கொன்றை வார்சடை
நம்பனமுன் றோன்றிய் வுலகை நல்கினன்.

(இ-ள்.) தத்தமது பெயர்களால் விளங்குகின்ற சிவலிங்கங்களைப் பிரதிட்டைசெய்து, ஒப்பற்ற தேவர்கள் விரும்பி அவிப்பாகத்தை யுண்ணும்படித் தவஞ் செய்யவும், வாசனைபொதி முறுக்கவிழ்ந்த அழகிய கொன்றைமாலை தரித்த நெடிய சடையையுடைய சிவபெருமான் அவர்கட்குக் காட்சியளித்து இவ்வுலகத்தையனுக்கிரகித்தனர். எ - று. (௫)

இருடிகள் பன்னிய ரெழுவர் தம்முளங்
கருணைசா லருந்ததி கடவுட் கற்பினைத்
திருமறு மார்பனு மயனுஞ் செலவியு
முருவுடை வாணியும் விழைய வோதுவார்.

(இ-ள்.) ரிஷிபத்தினிகள் எழுவருக்குள் அழகிய கிருபையிருந்த அருந்ததியினது தெய்வீகம் விளங்கும் கற்பின்மேம்பாட்டை, சிறந்த (ஸ்ரீவத்ஸமென்னும்) மறுவினையுடைய மார்பராகிய விஷ்ணுமூர்த்தியும், பிரமதேவனும், இலக்குமியும், அழகுவாய்ந்த சரசுவதியும் யாவரும் விரும்பும்படிப் பேசுவார்கள். எ - று. (௬)

முப்புரி நூலணி முனிவ ரேத்திய
மெய்ப்பொரு ளிலிங்கத்தை விதியிற் போற்றுவோர்க்
கெப்பொரு ளெய்துதற் கரிய மற்றவர்
செப்பரும் பிரமநற் பதத்திற் சேர்குவார்.

(இ-ள்.) உபவீதந் தரித்த சத்தவிருடிகள் பணிந்த உண்மைப்பொருளாகிய சிவலிங்கக்குறியைக் கிரமத்துடன் துதிசெய்தவர்களுக்கு எத்தனமைத்தான பொருள்கள் அடைதற்கரியன? (எவையுமில்லை!); அவர்கள் சொல்லுதற் கரிய நல்ல பிரமபதவியில் வாழ்வார்கள். எ - று. (௭)

சிவசன்மா சத்தவிருடிக ளுலகங்கண்ட அ - ம.

முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - ௬௫௰.

உ

சிவமயம்.

பத்தொன்பதாவது.

# துருவன் வழிக்கொண்ட அத்தியாயம்.

எனவுரைத் தெகுழி மேரு வுச்சியிற்
கனைகதிர்க் கயிறுகைப் பற்றிக் கண்கவர்
தனியொளி பரப்பிய சோதி சக்கரந்
துனைவினி லியற்றுவான் யாவன் சொற்றிரால்.

(இ-ள்.) என்று சொல்லிச்செல்லுகையில், மேருபர்வதத்தின் கொடுமுடியில் ஒலிக்கின்ற பிரகாசம்பொருந்திய சூத்திரத்தைக்கையிற் பிடித்துக்கொண்டு, கண்டோரது கண்ணொளியைக் கிரகிக்கும் ஒப்பற்ற பிரகாசத்தைப் பரவச்செய்த சோதிசக்கரத்தை விரைவுடன் செய்கின்றவன் யாவன்? சொல்லுங்கள். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (க)

என்றரு மறையவ னியம்ப வீர்ந்துழாய்
மனறுறு நலங்கலம் பரிதி மார்பினன்
பொன்றிகழ் திருந்தடி போற்றி யைம்புலன்
வென்றசீ ரடியவர் விளம்பன் மேயினர்.

(இ-ள்.) என்று, அரிய வேதங்களை யுணர்ந்த சிவசன்மா சொல்ல, மணங்கமழும் குளிர்ந்த துளவமாலை யணிந்த அழகிய சூரியனை யொத்த மார்பராகிய விஷ்ணுமூர்த்தியினது பொன்போலுந் திருந்திய திருவடிகளைத் துதித்து, ஐம்புலன்களைச் செயித்த சிறப்புமிகுந்த கணநாதர்கள் சொல்லத்தொடங்கினர். எ-று.

வேறு.

பைததோங்கு மாயிரவாய்ப் பாம்பின்முடிக் கிடந்தபுவி பரிக்குந் தெண்ணீர், முத்தாரந் துயல்வருதோட் சுவாயம்பு மனுவாய சூரி வேலா, னுத்தான பாதனெனு மொருமகவை யுவப்பினொடு மீன்றா னன்னோன், மைத்தாழ்பூங் கரியகுழற் சுருதியொடு சுநீதியையும் வதுவை செய்தான்.

(இ-ள்.) படத்தையுடையதாய் உயர்ந்த ஆயிரம் வாய்களைப் பொருந்தும் ஆதிசேடனது உச்சியில விளங்குகின்ற பூவுலகத்தை (அரசுசெய்து) தாங்கிய, தெளிந்த நீரில் தோன்றிய முத்துமாலை அசைகின்ற புயங்களையுடைய சுவாயம்பு மநுவாகிய வலிமையுடைய வேலேந்திய மன்னவன், உத்தானபாதன் என்னும் ஒரு புதல்வனைச் சந்தோஷத்துடன் பெற்றனன்; அந்த உத்தானபாதன் மேகத்தைக்காட்டிலும் கருநிறமமைந்த பொலிவு தங்கிய கூந்தலையுடைய சுருதி என்பவளுடன், சுநீதி என்பவளையும் மணஞ்செய்துகொண்டனன். எ-று. (உ)

கன்னலபசுந் தேனொழுகு கனிபழுத்தா லனையமொழிக் கால வேற் கட், பொன்னவிருஞ் சுணங்கணிந்த பொபமன்முலைச் சுருதியெனும் புரைதீர வல்லி, யன்னவளுந் தமனென்னு மகவினைரள் சுநீதியெனு மறன மென் கூந்த, லெக்கிலமும புகழ்பூாங்க விங்கவனை யருந்தவஞ்செய் தினி தி னீன்றாள்.

(இ-ள்.) தித்திப்பாகிய பசிய தேன் துளிக்குங் கனியானது பழுத்தாலொத்த சொல்லையும், காலனது வேலாயுதம்போலுங் கண்களையும், பொன்போன்று பிரகாசிக்கின்ற தேமல்படர்ந்த பூரித்த முலைகளையும், குற்றந்தீர்த்த வல்லிக்கொடிபோன்ற (இடையையுமுடைய) சுருதி எனபவள், உத்தமன் என்னும் பத்திரனைப் பெற்றனள். கருமணற்படிவுபோலும் மெல்லிய கூந்தலை உடைய சுநீதியென்பவள் எவ்வுலகங்களிலும் புகழ் மிகும்படி அருந்தவஞ்செய்து இந்தத் துருவனை இனிதாகப் பெற்றனள். எ - று. (௪)

மைதோய்ந்த மதர்நெடுங்கட் சுருதிபயுண் மைந்தனைத்தன் மடியின் வைத்து, நெய்தோய்ந்த வடிவேலா னிரையுளோமா னரியணையி னிருக்கு மேல்வை, யைதேந்து மகலல்குற் சுநீதியுந்தன் மகவினைநல லணிகள் பூட்டிக், கொய்தாமம் புனைந்துய்ப்ப வவனுமபோய்த் தாதையடி குறுகினனே.

(இ-ள்.) மை தீட்டி மதர்த்து நீண்ட கண்களையுடைய சுருதியென்பவள் பெற்ற (உத்தமன்) என்னும் பத்திரனை, நெய்பூசிய கூரிய வேலைத் தாங்கிய உத்தானபாதன், வரிசையாகிய பெருமையையுடைய சிங்கங்கள் சுமக்கும் பீடத்தின் மேல் தன் மடியில் வைத்துக்கொண்டு வீற்றிருக்குங்காலத்தில், அழகுபொருந்திய பரந்த நிதம்பத்தையுடைய சுநீதியென்பவளும தன புத்திரனாகிய துருவனை, நல்ல ஆபரணங்களா லலங்கரித்து (பருவத்திற்) கொய்த மலர்களாலாகிய மாலைசூட்டிச் செலுத்த, அவனும் சென்று தன பிதாவின் காலகளைக் கிட்டினான். எ - று. (௫)

சென்றடைந்த மழலைமொழிக் கிண்கிணிக்காற் றளர்நடைய சிறுவன் போந்து, வென்றிவடி வேலவேந்த னரியணைச்சென் றேறுதலும வெகுண்டு நோக்கிக், குனறிரண்டு தாங்கியெழில கனிந்தொழுகு கற்பகமபூங் கொம்ப ரன்னாள், கன்றுசினத் தொடுமவேந்தன மடியேற லெனவிலக்கிக் கனன்று சொல்வாள்.

(இ ள்.) (தந்தைபாற்) போய்ச்சேர்ந்த குதலைச்சொல்லையும், சதங்கைமாலையணிந்த கால்களையும், சிறுநடையையுமுடைய துருவன், வெற்றிபொருந்திய கூர்மைவாய்ந்த வேலேந்தும் உத்தானபாதனது சிங்காதனத்திற் போய், ஏறப்புகுதலும், இரணடு (முலைகளாகிற) சிறுகுனறுகளைச் சுமந்து அழகு மிகுந்து விளங்குகின்ற பொலிவுதங்கிய கற்பகக்கொம்பை யொத்த (இடையையுடைய) சுருதியென்பவள்பார்த்து, அரசன்மடியிலேறாதேயென்று மிகுந்த கோபத்தோடு தடுத்து, வெகுண்டு சொல்லத்தொடங்கினாள். எ - று. (௬)

நன்மரபு தனிற்றோன்றி யரசன்மணி முடிக்குரிய நங்கை யாய
வெனவயிற்றிற் பிறவாமற் பொறியிலா ளவ்வயிற்றி னிசைந்த மைந்தா
மன்னனுறையு மரியணையி லேறற்கா தெனவுரைப்ப மைந்தன் மாழ்கித்
தன்னையாந் தாய்மருங்கணைந்து தளர்வொடிவை யனைத்துஞ் சாற்றினானே.

(இ-ள்.) நல்ல குடியிற் பிறந்து மன்னவனது நவமணி பதித்த கிரீடத்தைப்பெறுதற்குச் சுதந்தரமுடைய பட்டமகிஷியாகிய என்வயிற்றினின்று தோன்றாமல், செல்வமில்லாத அவளது வயிற்றில் பொருந்திய மகனே! அரசன் கொலுவீற்றிருக்கும் சிங்காதனத்தில் ஏறுதல் கூடாது என்று (மீட்டுங்) கூற, துருவன் மனமயங்கி, பொருந்திய தனது தாயினிடஞ்சென்று இவ்விருத்தாந்தங்களையெல்லாஞ் சோர்வுடன் சொல்லினன். எ-று. (எ)

உரைக்குமக னினைத்தனது குறங்கிருத்தி மெய்தழுவி யுச்சி மோந்து, வரைத்தடந்தோண் மன்னவனற் மனைவியாற் றலைமைபெறு மாட்சி தன்றால, விருப்பமுறு தன்புதல்வற் கலலாதிவ் வரசுரிமை மேவா தென்னுஞ், செருக்கினுடைத் தனளவள்போற் றவம்புரியா வெளியமெவன் செய்வ தென்றாள்.

(இ-ள்.) (சுநீதியென்பவள்) அவ்வாறு சொல்லுகின்ற துருவனைத் தன் தொடைமீதுவைத்து ஆலிங்கனஞ்செய்து உச்சிமோந்து, மலைபோலும் விசாலித்த புயங்களையுடைய அரசனது மனைவியர்களில் முதன்மைபெற்ற விசேடத்தால் இவ்வரசசுதந்தரம் தனவிருப்பமுற்ற மைந்தனுக்கல்லாமல் (வேறொருவருக்கும்) பொருந்தாது என்னும் இறுமாப்பால் பேசினள்; அவளைப்போல நற்றவஞ்செய்யாத ஏழைகளாகிய நாம் என்னசெய்வது? என்று சொல்லினள். எ-று. (அ)

அருந்தவத்தாற் பெறலரிய வரசுரிமை யாங்கவள்செய் தடைந்தா ளென்னில, வருந்தியருந் தவமாற்றி வானவர்க்கும் பெறற்கரிதாய் வயங்கு சோதி, திருந்துமுய ருலகடைவன் விடைதருதி யெனவிருதாட் சென்னி சோத்தான், பொருந்துதிரைக் கடற்பிறந்த வமுதனைய மழலைமொழிப் புதல்வன்றானே.

(இ-ள்.) அலைகள்பொருந்திய திருப்பாற்கடலில் தோன்றிய தேவாமுதத்தையொத்த குதலைச்சொல்லையுடைய துருவன், பெறுதற்கரிய இராச்சியபாரத்தை அருந்தவஞ்செய்து அதனாலே அந்தச் சுருதி பெற்றுளாளானால், யானும் வருத்தமுற்று (அதைக்காட்டிலும்) அரிய தவத்தைச் செய்து தேவர்களுக்கும் கிடைத்தற்கரியதாய் விளங்குகின்ற சோதிமயமாகிய உயர்ந்த உலகத்தைப் பெறுவேன; எனக்கு உத்தரவு கொடுப்பாயாக என்று கூறித் தாயினது இரண்டு பாதங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். எ-று. (கூ)

இருநான்கு பருவமின்னு நிறைந்திலது நெடியபுகா னிடையிற் போகி, யொருவாது தவம்புரிதற் கொன்றுமோ கிறபிரிந்து முய்வேன் கொல்லோ, வெருவாவுள் ளுயிர்பதைப்ப மாறறவடீ மொழிவிடத்தால் வெதும்பு வேனின், னரிதாய மழலைமொழி யமிழ்தருந்தா தாற்றுவன்கொலத்தே வென்றாள்.

(இ-ள்.) (அறிவுகெட்ட சுநீதி மகனே!) இன்னும் எட்டாவதுவயது பூர்த்தியாகவில்லை; கொடுமிகின்ற வனத்திற் சென்று நீ கோரத் தவஞ்செய்தற்குக் கூடுமோ? உன்னைவிட்டு நீங்கியும் உயிர் பொறுத்திருப்போமோ? மனம் பயந்து உயிர் துடிக்கும்படி சக்களத்தியாகிய சுருசியினது கொடுஞ்சொல் என்னும் விடவேகத்தால் துன்புறுகின்ற யான், உனது அருமையான குழலைச்சொல்லாகிய அமிர்தத்தை உட்கொள்ளாமல் சகிப்பேனோ? ஐயோ! என்று சொன்னாள். எ-று.

வெடி=சிள்வண்டு. (௧௦)

அரிபாற்று நறுங்கூந்த லிவ்வண்ண மழுதரற்றி யவலங் கூறத், தெரிபழுத்த தளைப்பழனத் துள்ளுகயல் செழுந்தாமரைப் பொகுட்டிற் றுஞ்சும், வளவயல்சூழ் நாடொருவி மழலைமொழிக் கிண்கிணிக்கான் மைந்தனேகி, முளியரிசூழ் கொடியகானில் வெருவ நமோரா தவமினிது முயலு மெல்லை.

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கும் வாசனை தங்கிய அளகபாரத்தையுடைய சுநீதி இவ்விதமாகக் கூறி அழுது துன்பப்பட, மழலைச்சொல்லையுடைய கிண்கிணிமாலையணிந்த துருவன், சேறுமிகுந்த குளிர்ச்சிதங்கிய வயலினின்றும் துள்ளுகின்ற கயல்மீன்கள் செழுமைதங்கிய தாமரைமலர்க்கொட்டையில் தூங்கும் வளப்பமமைந்த வயல்களால் சூழப்பட்ட நாட்டை நீங்கிச் சென்று, உலர்ந்த சிறுதூறுகள் சூழ்ந்த கொடுமைதங்கிய வனத்திலடைந்து அஞ்சத்தக்க ஒப்பற்ற தவத்தை இனிதாகச்செய்ய எத்தனிக்கையில். எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (௧௧)

அழலூட்டிப் பின்னுகரு மறுதொழிலர் முனிவரரா ணடைந் திக் கானத், துழைவேட்டுத் தவம்புரிகோ யாரைநீ யெனவவர்தா ளுவப் பிறைஞ்சி, மழைபோட்டு கொடைத்தடக்கை யுத்தான பாதனருண் மதலை யென்றான், குழைபோட்டிக் குமிழ்பழிப்புங் கொழுங்கயற்கட் சுநீதியருள் குமரன் றானே.

(இ-ள்.) அக்கினிகாரியஞ்செய்து பின்பு உண்ணுகின்ற ஆறுதொழில்களையுடைய சத்தரிஷிகள் அவ்விடஞ்சேர்ந்து, இந்த வனத்தில் விரும்பித் தவஞ்செய்கின்றாய் நீ யார்? என வினவ, குண்டலங்களைத் தாக்கிக் குமிழமலரைப்போன்ற மூக்கினிடத்தில் பாயும் கொழுமை வாய்ந்த சேற்கெண்டைபோலுங் கண்களையுடைய சுநீதி யென்பவள் பெற்ற புதல்வனாகிய துருவன், அவர்கள் திருவடிகளை விருப்புடன் பணிந்து, மேகமும் பின்னிடத்தக்க ஈகையையுடைய விசாலமான கைகள் பொருந்திய உத்தானபாதன்பெற்ற புத்திரன் யான் என்று சொன்னான்.

வேதியர் அறுதொழில்களாவன:—ஓதல் - ஓதுவித்தல் - வேட்டல் வேட்பித்தல் - ஈதல் - ஏற்றல் என்பனவாம். (௧௨)

உடைதிரைநீர்க் கடல்வலயம் பொதுநீக்கித் தனிபுரக்கு முரவோன் மைந்த, னொடிபடுகா னிடைப்போந்து தவம்புரிதற் குற்றதெவ னிகழ்த்து கென்ன, வடலரியா சனத்திருக்கை மறுத்தனடா யாங்கதனு லமராரியார்

க்குத், தொடர்வரிய பதம்பெறுதற் கடைந்தனனிடான் பெறுமுறைநீ சொல்க வென்றார்

(இ-ள்.) மறிகின்ற அலைகள்பொருந்திய நிலையுடைய கடல்சூழ்ந்த பூமியைப் பொதுத்தன்மை கடந்து ஒப்பற்று ரக்ஷிக்கின்ற வேந்தனாகிய அரசனபுத்திரனாகிய நீ, நெருங்கியிருக்கின்ற வனத்திலடைந்து தவஞ்செய்தற்குச் சம்பவித்தகாரணம் என்னை? சொல்லவேண்டுமென்று இருடிகள்கேட்க, பராக்கிரமம்பொருந்திய சிங்காதனத்திலிருந்தவனை மாற்றாந்தாய் ஏவ அச்சொல்லுடன் நாரதர் ஆணைப்படியால் நான் எல்லாத் தேவர்கட்கும் அடையக்கூடாத பதவியை அடைதற்குவந்தேன்; அதனை அடையும் க்ரமம் தாங்கள் அருளிச்செய்யவேண்டுமென்று துருவனகூறினன். எ-று.

கன்னிநறும் பசுந்துளவின் றழைபலங்க றுயல்வருதோட் காயா மேனி, முன்னவனைப்போன லடிப்போற்றின் முடியாத பொருளுளவோ முருகு நாறப், பொன்னனைய பூந்தாதவிழ்க்கும் பூங்கமலப் புத்தேளு மநுவு மனைவோரும், பன்னிருவா கியவெழுத்தோ ராறுநவின் றெவர்க்குந் தலைவ ரானார்.

(இ-ள்) அழியாத வாசம்பொருந்திய பசியதுளவின் இலைகளாலாகிய மாலை அசைகின்ற தோள்களையுடைய காயம்பூவண்ணராகிய திருமாலினது அழகிய திருவடிகளைத் துதிசெய்தால் முற்றுப்பெறாதகருமங்கள் இருக்கின்றனவோ? இல்லை! நறுமணங்கமழ்ந்து பொன்போலும் விளங்குகின்ற பொலிவுதங்கிய மகரந்தப் பொடிகளைச்சிந்தும் தாமரைமலரிலுள்ள பிரமதேவனும், மநுவும் அவ்விஷ்ணு மூர்த்தியின் திருவுருவமாகவுள்ள துவாதசாக்ஷரமந்திரத்தைச் செபித்து எல்லோருக்கும் தலைவரானார்கள் (என்று ரிஷிகள் மேலுங் கூறுகின்றனர்). எ-று.

கன்னியிளம் பசுந்தாற்றுக் கதலிவனம் விளிம்புடுத்த கழனி நாட்டு
மன்னனருந் தவப்பேற்றின் வருபுதல்வ வுலகளந்த மாயோன் செய்ய
பொன்னடியை நினதிதயப் பூங்கமலத் தினிதிருத்திப் புலவர் யார்க்கு[ம்]
முன்னரிய பதம்பெறுதி யெனவுரைத்துக் கடவுண்மறை முனிவர் போனார்

(இ-ள்.) கெடாத இளமைவிளங்கும் பசியகுலைகளையுடைய வாழைத் தோப்புகளைக் கரையாகச் சூழ்ந்த வயல்களையுடைய நாட்டுக்கு மன்னனாகிய உத்தானபாதனது அருந்தவப்பலனால் தோன்றிய புத்திரா! திரிலோகங்களையும் அளந்த திருமாலின் செவ்வியபொன்போன்ற திருவடியை உனது பொலிவுதங்கிய இதயதாமரையில் இனிதாக எழுந்தருளியிருக்கச்செய்து தேவர்கள் எல்லோருக்கும் நினைத்தற்கரிய பதவியை அடையக்கடவாய்என்று கூறி, தெய்வீகம்பொருந்திய வேதமுணர்ந்த இருடிகள் (தம்விருப்பின்படி) சென்றனர். எ-று. (கரு)

துருவன் வழிக்கொண்ட அ-ம்.

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் கககரு.

உ

சிவமயம்.

இருபதாவது,

# துருவன் தவஞ்செய்த அத்தியாயம்.

துருவனுண் டகன்று மதுவனத் தெய்திச் சுடருமி ழொருமணி கிடந்த, திருமறு மார்பன் கழலிணை நினைந்து திகழொளி திசைதொறும் போர்ப்ப, வரியமா தவமொன் றியற்றலும் வெருவி யார்பத மடைவதற் கினைஞேன், புரிதவ மிதனைக் கெடுப்பனென் றமரர் புங்கவன் புந்தியி னோர்ந்தான்.

(இ-ள்.) துருவன் அடவிடம்விட்டு நீங்கி மதுவனத்தையடைந்து கிரணங்களைச்சிந்துகின்ற ஒப்பற்ற கவுத்துவமணிவிளங்குகின்ற சிறந்தசீவச்சமென்னும் மறுவினையுடைய மார்பாகிய திருமாலின திருவடிகளைத் தியானித்து, பிரகாசிக்கின்ற கீர்த்தி எல்லாதிக்குகளிலும் பரவும்படி,அரிதாகிய சிறந்த ஒருதவத்தைச் செய்யவும், தேவேந்திரன் (அதுகண்டு) பயந்து யாவர் பதவியைப்பெறுவதற்காக இவன் தவஞ்செய்வதோ; இதனை அழிப்பேன் என்று மனதில் ஆலோசித்தான்.

கருங்கயன் மருட்டிக் கடைக்குழை யெறிந்து காலவேல் பொருவு வாட்டடங்க, ணரமையர் குழாத்தோ டளிவிருந் தயருமைங்கணைக் கிழவனை விடுப்பிற், றிருந்துமென் மழலைச் சிறுவனு தன்னுற் கலவியிற் சிந்தைசெய் கிலனேல, வருந்திநெஞ் சழிவா னலகையா மென்று வனபெரும பேய்க்கணம் விடுத்தான்.

(இ-ள்.) கருமையாகிய சேற்கெண்டையை மயக்கச்செய்து, கடையால் குண்டலங்களைமோதி, காலனது வேலாயுதம்போன்ற ஒளிபொருந்திய விசாலமாகிய கண்களையுடைய தெய்வமாதர்கூட்டத்துடன் வண்டுகள்விருந்துண்ணுகின்ற பஞ்சபாணங்களையுடைய மன்மதனைவிடுத்தால், திருந்திய மிருதுவாகிய குதலைச் சொல்கூறும் இளைஞனாதலால் புணர்ச்சியில் மனங்கொள்ளான்; பேய்களையனுப்பின் அதனால் மனம்வருந்திப்பயமுறுவான் என்றுகருதி,வலிதாகிய பெரியபேய்க்கூட்டத்தை விடுத்தனன் (தேவேந்திரன்.) எ - று. (உ)

விடுத்தவெங் கனற்க ணலகைமற் றவையும் வெருவர வியற்றவும் வெருவான்,சுடர்ப்படைத் திகிரி யண்ணன்மே லன்பின் றுணிவுகண் டாங்கொர்பேய் விரகா, லடுத்தவ னன்னை யுருவுகொண் டெய்தி யரும்பெறற் குமரவு னன்னையான், கெடுத்துயி வாழேனெனமருட் டிடவுங் கேடிலா னுளத்துளங் கினனலை.

(இ-ள்.) அவன்செலுத்திய கொடிய அக்கினிக்கண்ணமைந்த பேய்களியாவும் (துருவனைப்) பயமுறுத்தவும் அஞ்சானாகி,ஒளிதங்கிய சக்கராயுதமேந்திய விஷ்ணுமூர்த்தியினிடம்வைத்த அன்பின துணிவைப்பார்த்து,அதில் ஒருபேய் உபாயத்தால் அவனது தாய்வடிவேற்றுச்சமீபித்துச்சென்று பெறுதற்கரிய புதல்வனே!

உன்னைநீங்கி யான் உயிர்வாழேன் என்று பக்கலைப், கெழுதகைமைசால் துருவன் (அப்பாலைக்கும்) பகவிருளிலை. எ - று. (௩)

மழலையஞ் சிறுவ னருந்தவம் புரிபு மனவலி நோக்கியுண் ணடுங்கி, யழல்விழிப் பருஉத்தாட் களிற்றியாவு மமரர்கோன் மருங்கணைந் தெம்மால், விழைவொடுஞ் சிறுவ னருந்தவம் புரிதல் கெடுக்குமா றரிதென விளம்ப, வுழையுறு மமரர் குழுவொடு மலரோ னுறையுளி னெல்லையி னடைந்தான்.

(இ-ள்.) அழகிய குதலைச்சொல்லையுடைய துருவன் அருந்தவஞ்செய்யும் திடசித்தத்தைக்கண்டு மனம்நடுங்கி, நெருப்பைக்கக்கும் கண்களையும் பெரியகால்களையுமுடைய எல்லாப்பேய்களும் தேவேந்திரன்பாற்சென்று ஆசையுடன் அச்சிறுவன் அரியதவஞ்செய்கையை எங்களால் ஒழிக்குமவகை அருமையானதென்று சொல்ல, இந்திரன் தன்னிடம்பொருந்திய தேவர்கூட்டத்துடன் விரைவில் பிரமதேவன்பாற் சென்றனன். எ - று. (௪)

தாளதா மரையி லரசுவீற் றிருக்குஞ் சதுமுகக் கடவுளை வணங்கி, வாளரா முடியிற் கிடந்தபார் புரக்கு மனுகுலத் தோன்றலாங் கியற்று, நீளிருந் தவத்தா லாரபதம் பெறுவா னினைந்தனன் கொலெனக் கிழத்த, வாழுநும் பதத்தில் விழைவிலன் மேலாம பதமபெறு மருத்தியி னமைந்தான்.

(இ-ள்.) தண்டையுடைய தாமரைமலரில் கொலுவீற்றிருக்கும் நான்கு முகங்களையுடைய பிரமதேவனைப்பணிந்து, ஒளிதங்கிய ஆதிசேடனது உச்சியில் விளங்கும் உலகத்தைரக்ஷிக்கின்ற (சுவாயம்பு) மநுகுலத்தில்தோன்றிய சிறுவன் புரிகின்ற மிகச்சிறந்த தவத்தால் யாவர் பதவியையடைய எண்ணினனோ? என்று இந்திரன்கூற, (பிரமன்) உங்களது தாழ்ந்த பதவிகளில்வாழும்படி விரும்பினனில்லை; மேலான பதவியையடையும் ஆசையிற்பொருந்தி யிருக்கின்றனன். எ - று.

ஆங்கவன் மேலாம் பதம்பெறு நீவி ரடைந்திடும் பதமெவற் றினுக்கு, நீங்கரு முறுதி பயந்திடு மென்ன நான்முக னிகழ்த்தலு மகிழ்ரப், பூங்கழல் வணங்கி யமரர்தம பதத்திற் போயினர் துருவனுண் டியற்றுந், தீங்கறு தவத்தா லுளகிழ்ந் தருள்கூர் செங்கணமா லவனுழைச் சேர்ந்தான்.

(இ-ள்.) அச்சிறுவன் சிறந்தபதவியைப்பெறுவான் ; நீங்கள்பெற்றிருக்கும் பதவிகள் எல்லாவற்றிற்கும் நிலைத்துள்ள நன்மையை உண்டுசெய்வான் என்று பிரமதேவன்சொல்லவும், தேவர்கள் சந்தோஷித்துப் பொலிவுதங்கிய திருவடிகளைப்பணிந்து தத்தமது பதவிகளிற் சென்றனர். துருவன் மதுவனத்திற்செய்யும் குற்றமற்றதவத்துக்கு மனங்களித்துக் கிருபைமிகுந்த சிவந்த (தாமரைமலர்போலும்) கண்களையுடைய திருமால் அவனிடம் வந்தனர். எ - று. (௫)

கனைகடல் வயிறு குழையமத் தெறிந்து கடவுளர்க் கின்னமு தளித்த, வனைதுழா யலங்க றுயல்வருந் தடந்தோண் மரகத வண்ணனை நோக்கி, நினைவரும் விழைவிற் கணபனி தூங்க நெஞ்சகங் குழைந்துநெக் குருகு

க, வினையறுத் துயர்ந்தோர் தம்பட்டகமா மென்மலர்ச் சேவடி பணிந்தான்.

(இ-ள்.) ஒலிக்கின்ற திருப்பாற்கடலின் நீரானது குழையும்படி (மந்தரமலையாகிய) மத்தாற்கடைந்து தேவர்கட்கு இனிய அமுதத்தைக் கொடுத்த அலங்கரிக்கின்ற துளவமாலை அசைகின்ற விரிந்த திருப்புயங்களையுடைய மரகதரத்தினம்போலும் திருமேனி வாய்ந்த விஷ்ணுமூர்த்தியைத் தரிசித்து, என்றும் நீங்காத ஆசையுடன் கண்களில் ஆனந்தபாஷ்பம் சிந்தவும், மனநெகிழ்ந்து நெக்குவிட்டுருகவும், தீவினைச்சம்பந்தத்தை விலக்கி மேம்பட்டவர்களது இதயதாமரையை விட்டு நீங்காத மெல்லிய தாமரைமலர்போலும் சிவந்த அவரது திருவடிகளைத் தொழுதான (துருவன்.) எ - று. (எ)

குவலயம் பொதிந்த துளைகழல் முளரி வணங்குறு குமரனை யெடுத்தாங், குவகையங் கடல்வாய் மடைதிறந் தென்ன வுளங்கவர் முகிழ்நகை புரிந்துன், றவமினி துவந்தேம் வேட்டன யாவுந் தருதுவ மியம்புதி யெனலு, நவையற வோர்ந்த வரசிளங் குமர னாரணற் பழிச்சுகின் றனனால்.

(இ-ள்.) உலகமுழுவதையும் (திரிவிக்கிரமாவதாரங் கொண்டபோது) மறைத்த ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த திருவடித்தாமரையைப் பணிந்த துருவனை (விஷ்ணுமூர்த்தி) தூக்கி யெடுத்து, அழகிய ஆநந்தக்கடலானது பொருந்திய மடைதிறந்து பாய்ந்தாற்போல, மனதைக் கிரகிக்கும் புன்னகையரும்பி, உனது தவத்துக்கு இனிதாகச் சந்தோஷித்தோம்; விரும்பிய எல்லாவற்றையும் கொடுப்போம்; சொல்லுக என்று கேட்கவும், குற்றமறத் தவஞ்செய்த இளமைவாய்ந்த அரசகுமாரனாகிய துருவன் திருமாலைப் (பின்வருமாறு) துதிசெய்கின்றனன்.

துருவன் தவஞ்செய்த அ - ம்.

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் ௯௭௮.

உ

சிவமயம்.

## இருபத்தொன்பதாவது,

# துருவன் பதம்பெற்ற அத்தியாயம்.



குழைகழ லமரர் கணத்திலிந் திரனீ கோட்களிற் பரிதிவா னவனீ
யுரைபெறு முலகி னன்முக னுறைபு முலகநீ புடைதிரைக் கடலிற்
றிரைகொள்பாற் கடனீ கடவுண்மா நதியிற் றீம்புனற் கங்கைநீ யுயர்ந்த
வரைகளி லிமயப் பொருப்புநீ யாவின் வளந்தரு சுரபிநீ யாமால்.

(இ-ள்.) ஒலிக்கின்ற வீரகண்டாமணி தரித்த தேவர்கூட்டத்தில் தேவரீர் இந்திரன் ஆவீர்; நவக்கிரகங்களில் தேவரீர் சூரியபகவான்; சொல்லப்படுகின்ற எல்லாவுலகங்களிலும் தேவரீர் பிரமதேவன்வசிக்கும் சத்தியவுலகம்; மறிகின்ற அலைகள்பொருந்திய சத்தசமுத்திரங்களில் தேவரீர் (வெள்ளிய) அலைகள் வாய்ந்த க்ஷீராப்தி; தெய்வீகம்பொருந்திய சிறந்த (புண்ணிய நதிகளில்) தேவரீர் மதுரமாகிய நீரையுடைய கங்காநதி; உயர்வாகிய மலைகளில் தேவரீர் இமயபர்வதம்; பசுக்களில் தேவரீர் வளப்பமிகுந்த காமதேனுவாவீர். எ-று.

இதுமுதல் மூன்றுசெய்யுள்களில் கடைசிவரிகளிலுள்ள ஆம் என்பதை எல்லாவற்றோடு மொட்டுக. (க)

அரியநான் மறையிற் சாமநீ யெழுத்தி லகரநீ யருமறைப் பொருளிற்
புரைதப நின்ற வுபநிட தமுநீ வேள்வியிற் புரவிநன் மகநீ
விரைவினில வளிநீ வருணமோர் நான்கின் வேந்தனீ மருவிய கரணத்
துரைபெறு மனநீ பூதமோ ரைந்தி னோங்கிரு விசும்புநீ யாமால்.

(இ-ள்) அருமையாகிய நான்குவேதங்களில் தேவரீர் சாமவேதம்; அக்கரங்களில் தேவரீர் அகரம்; அரிய வேதப்பொருள்களில தேவரீர் குற்றமற விளங்கும் உபநிடதம்; யாகங்களில் தேவரீர் நல்ல அசுவமேதயாகம்; வேகங்களில் தேவரீர் வாயுவேகம்; நான்கு வருணங்களில் தேவரீர் க்ஷத்திரியவருணம்; பொருந்திய அந்தக்கரணங்களில் தேவரீர் சொல்லத்தகும் மனம்; ஐம்பெரும்பூதங்களில் தேவரீர் உயர்ந்த பெரிய ஆகாயமாவீர். எ-று. (உ)

ஊதிய மதனி லருமகப் பேறு மூதிய நீயுக நான்கி
லாதியா முகநீ தருக்களிற் சிறந்த வரசுநீ யுடுக்களியா வையினு
மேதக விளங்கு பூசநீ புலலிற் றருப்பைநீ விழையுநன் பொருளின்
மாதர்நீ கரும மனைத்தினுஞ் சந்தி வந்தனை மற்றுநீ யாமால்.

(இ-ள்.) பலவகைப்பட்ட லாபங்களில் தேவரீர் அரிய புத்திரப்பேறாகிய லாபம்; நான்கு யுகங்களில் தேவரீர் முற்பட்டதாகிய கிருதயுகம்; விருக்ஷங்களில் தேவரீர் மேம்பட்ட அரசவிருக்ஷம்; நக்ஷத்திரங்களெல்லாவற்றிலும் தேவரீர் மேம்படப் பிரகாசிக்கின்ற பூசநக்ஷத்திரம்; புல்லுகளில் தேவரீர் தருப்பைப்

புல் ; விரும்பத்தகும் நல்ல பொருள்களில் தேவரீர் வெண்ணெய் ; காம்யாநுஷ்டானங்கள் எல்லாவற்றிலும் தேவரீர் சத்தியபாத்திரமாவீர். எ - று. (௬)

கொடிகளிற் சோமக் கொடியுநீ பலகங் கூறிட யோகமோ ரெட்டி
லொடிவறு பிராணா யாமநீ புவன மனைத்துநீ யெனவுவந் தேத்தி
யடிமலர் தொழுத துருவனை நோக்கி யாட்சியிற் குறைதவிர்ந் தொன்றுங்
கடிகமழ் படலைப மைந்துழா யலங்கற் கடவுளிவ் வாசக முரைப்பான்.

(இ - ள்.) உச்சக்களில் தேவரீர் சந்திரவுச்சமாவீர் ; அறிவுடையோர் சொல்லிய அஷ்டாங்க யோகங்களில் தேவரீர் கெடுதலில்லாத பிராணாயாமமாவீர் ; சராசரங்களும் தேவரீரே யாகும் என்று சந்தோஷித்துத் துதித்து, திருவடித்தாமரைகளை வணங்கிய துருவனைப் பார்த்து, (வண்டுகள்) ஆராயுந் தேனின் நன்மையினால் துளிக்கும் மணம் கமழும் வரிசையாகிய பசிய துளவமாலையணிந்த கருநிறமமைந்த விஷ்ணுமூர்த்தியானவர் இவ்வாறு சொல்லத்தொடங்கினார். எ - று.

கொடிகளிற் சோமக்கொடி என்பதற்குத் துவஜங்களில் தேவரீரே சோமக்கொடி என்பதும் ஒன்று. சோமக்கொடி = ஓஷதிகை யாகத்திற்கட்டுங்கொடி.

கழிபெரும் பதங்க ளெவற்றினு மேலாம் பதமுறக் கருதினை யுணர்ந்தேம், விழைவுறு பூத மியாவையு மன்ன மயத்தினின் மேவுமவ் வன்ன, மழையினின் றுறு மம்மழை தனக்கு மருவுகா ரணமென விளங்கு, மொழுகொளிச்சுடரோ னவன்முதற் கோளு நாட்களு முமபரி னுலவும்.

(இ - ள்.) மிகுந்த பெருமை வாய்ந்த பதவிக ளெல்லாவற்றுக்கும் மேன்மையான பதவியை யடைய விரும்பினை ; அதனை யறிந்தோம் ; விரும்பத்தக்க ஐம்பெரும்பூதங்களும் அன்னமயத்திற்பொருந்தும் ; அந்த அன்னமயமும் மழையினால் உண்டாகும் ; அந்த மழைக்குப் பொருந்திய காரணமென்று விளங்குகின்ற ஒளிவீசும் கிரணங்களையுடைய சூரியன் முதலாகிய கிரகங்களும் நக்ஷத்திரங்களும் ஆகாயத்திற் சஞ்சரித்துக்கொண்டிருக்கும். எ - று. (௭)

காற்றெனுங் கயிறதின் வீக்கியுள் ளொளிபகறங்கென விடையறாது
ழலு,மாற்றருஞ் சோதி சக்கரந் திரித்து வடவரை முகட்டிலுன் றாயோ,
டாற்றலி னிருத்தி கற்பமொன் றிறக்கு மளவுமியா னுமற் றிதனை,யேற
றுயர் கொடியோ னருளினா லடைந்தே னீங்கிது நினக்களித் தனனால்.

(இ - ள்.) வாயுவென்னும் பாசத்தினால் (அவற்றை) பிணித்து உள்ளொளியுடைய காற்றாடிபோல நீங்காமற்சுழல்கின்ற மாற்றவரிதாகிய சோதிசக்கரத்தைச் செய்து, மேருமலையின் உச்சியில் உன்தாயுடன் ஒருகற்பகாலங் கழியுமளவும் பராக்கிரமத்துடன் இருக்கக்கடவாய் ; யானும் இந்தச் சோதிசக்கரத்தை இடபக்கொடியையுயர்த்திய சிவபெருமானது திருவருளால் அடைந்தேன் ; இதை இப்பொழுது உனக்குக் கொடுத்தேன். எ - று. (௮)

சலந்தர னுடலம் பிளப்பதற் கிறைவன் றமதாள் விரலினா லமைத்த,
வலம்படு திகிரி பெறுவதை விரும்பி வைகலும் வணங்கினென் மிழறற,வல

ர்ந்தேர்ச் தோட்டிக் கமலமா யிரங்கொண டருச்சனை புரியுழி யொருநா,ளி லங்கிதழ்க் கமல மொன்றிலை தெனக ணிடந்தவ னடியினிட டனனால.

(இ-ள்.) சலந்தராசுரனது உடலைப் பிளப்பதற்காகச் சிவபெருமானது தம து தாமரைமலர்போன்ற திருவடியால் உண்டுசெய்த வெற்றிபொருந்திய சுதரிச னம் என்னும் சக்கராயுதத்தை (என் சக்கரம் கூர்மழுதலாக) அடைவது கருதி, வண்டுகள் பண்பாடும்படி மலர்ந்த செவ்விய இதழ்களையுடைய ஆயிரந் தாமரை மலர்களைக்கொண்டு தினந்தோறும் பூசித்துவருகையில், ஒருநாளில இதழ்கள் விளங்கும் ஒரு தாமரை குறையக்கண்டு (அப்பூசை முட்டுப்படாமல்) தன கண்ணை த்தோண்டி அப்பெருமானது திருவடியில் அருச்சித்தனன். எ-று.

இச் செய்யுளிலுள்ள சரித்திரத்தை (கக) வது பக்கத்தில் "அவிராழிச் சுடர் ப்படை" என்னுஞ் செய்யுளின் அடியில் எழுதியிருப்பதா லுணர்க. (எ)

துகிர்விழு தோட்டிப் படர்ந்தெனக் கிடந்த தூய்சடை யண்ணலு ண்மகிழ்ந்து,திகிரிடம் படையன் றளித்தன னதனுற றெண்டிரைக் கருங் கடற் புவிப்பு, மகலிரு விசும்பும் பாதல முழுது மளித்தன னினக்குயா ன ளித்த, புகலரும் பதமு நிலைபெற வேண்டிற் புராரியி னருள்பெற வே ணடுமெ.

(இ-ள்.) பவளக்கொடி படர்ந்ததுபோல விளங்கும் பரிசுத்தமாகிய சடை டையுடைய சிவபெருமான் (அதற்காக) மனங்களித்து, அழகிய சுதரிசனம் என் னும் சக்கராயுதத்தை அப்பொழுது அனுக்கிரகித்தனர்; அந்தச்சக்கரத்தினால் தெ ளித்த அலைகளையுடைய கருமையாகிய கடல்சூழ்ந்த பூவுலகமும், இடமகன்ற பெ ரிய தேவலோகமும், பாதலலோகமுமாகிய திரிலோகங்களையும் இரக்ஷித்தேன்; யான் உனக்குக்கொடுத்த சொல்லுதற்கரிய பதவியும் நிலைத்திருக்க வேண்டுமா னால், திரிபுரதகனராகிய சிவபெருமானது திருவருளை நீ அடையவேண்டும். (அ)

காளமுண் டிருண்ட மணிமிடற் றெந்தை காசியிற் கார்த்திகை மதியி
னுள்விழ வயாத ருெழுவதற குளத்தி னயந்தனன் வருதிநீ யென்னு
நீளி நந்தவஞ்செய் துருவனோ டலங்க னேமியோ னெறுழ்வலிக் கலுழன்
றோளிடைப் போகிக் காசியி னெல்லை தோன்றுழி யதனினின் றிழிந்தான்

(இ-ள்.) விஷபானஞ்செய்து கருநிறமமைந்த ஸ்ரீகண்டத்தையுடைய எ மது தந்தையாகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள காசிக்ஷேத்திரத்தில் கார்த் திகைமாதத்தில் நிகழ்ந்திருபுற்சவம் தெரிசித்துவணங்க மனம்விரும்பினேன்; நீயும் வரக்கடவாய் என்று,நெடியபெருந்தவஞ்செய்த துருவனுடன் வெற்றிமாலைசூடிய சக்கராயுதத்தையுடைய விஷ்ணுமூர்த்தியானவர் மிக்க வலியமைந்த வயினதேவ ன்தோண்மேலாரோகணித்துச் சென்று, காசியின் அளவுகாணப்படுகையில் வா கனத்தினின்றிழிந்தனர். எ-று. (கூ)

துருவனோ டேகித் திரைபொருங் கடவுட் டுமேணி கன்னிகை யாடி, யுருகியுண ணெகிழக் கணபனி யுகுபப வுவகையின் மெய்ம்மயிர் பொடி ப்பக், கருமணி யனைய திருமிடற் றெந்தை கனைகழற் சேவடி வணங்கி, யரிதினே ரிலிங்க மிவ்வுழி யமைப்பி னதன்பல னளவிட லரிதால்.

(இ-ள்) (விஷ்ணுமூர்த்தியானவர்) துருவனுடன் சென்று அங்கேசோதுகின்ற தெய்வீகமமைந்த பரிசுத்தமாகிய மணிகன்னிகையில்மூழ்கி, உருகி மனம் நெக்குவிடவும், கண்கள் ஆநந்தபாஷ்பஞ்சொரியவும், சந்தோஷத்தால் சரீரமுழுதும் மயிர்க்குச்செறியவும், நீலரத்தினத்தைப்போன்ற ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானது சந்நிதிக்கினிற வீரக்கழலணிந்த சிவந்த திருவடிகளைத்தொழுது இவ்விடத்தில் அருமையாக ஓர் சிவலிங்கமூர்த்தத்தைப் பிரதிட்டைசெய்தால் அதன்பலனை அளவுபடுத்திக்கூற வரிதாகும். எ - று. (௧௦)

எனநனி துவந்து மழகதிர் விரிக்குமப் பொற்றுகி லெழின்மருங் க
சைத்த. மனநவந் துளவோ னுரைத்தலுந் துருவன் வயித்திய நாதர்தம்
மருங்கி, னொன்றிய வுளத்தொ டிலிங்கமொன் றமையா வருந்தவ
மினி தாற்றுக, கொன்றையங் கண்ணிப் படாசடைக் கூத்தன் விழைவொ
டி மாங்குவந் தடைந்தான்.

(இ-ள்) என்று பிருதியஞ் சந்தோஷித்து, இளங்கிரணங்களைவீசும் பீதாம்பரத்தை அழகிய அரையிற்றரித்த வாசனைகமழும் அழகிய துளவமாலையணிந்த விஷ்ணுமூர்த்தி சொல்லவும், துருவன் வயித்தியநாதலிங்கத்தின்சமீபத்தில் ஓர் சிவலிங்கக்குறியை மனவொருமையுடன் பிரதிட்டைசெய்து இனிதாகிய தவத்தைச்செய்ய, அழகிய கொன்றைமாலைசூடிய பரந்த சடையையுடைய சிவபெருமான் ஆசையுடன் அங்கெழுந்தருளினர். எ - று.

கூத்தன் = நடனஞ்செய்வோன்; சிவன். (௧௧)

பழிபடு புலன்க ளடக்கினோற்ற பரிசினுஞ் சிறுவவிப் பதத்தி,னழி
வுறா திருத்தி யெனவர நல்கி யாதியம் பரமனே குதலும, விழைவொ
டுந் துருவ னிப்பத மதனின் மேவிவீற் றிருந்தனன் பசிய, கழையிசைத்
தாவின் கணங்குவித் தருளுங் கண்ணனூர் தன்னக ரடைந்தான்.

(இ-ள்) சிறுவனே! குற்றஞ்செய்கின்ற ஐம்புலன்களையும் புறஞ்செல்லாமற்காத்து நீ தவம்புரிந்ததன்மையால், இந்தப்பதவியில் அழியாமலிருக்கக் கடவாய் என்று வரமளித்து அழகிய முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் அந்தர்த்தானமாகவும், துருவன் ஆசையுடன் இந்தப்பதவியில் பொருந்தியிருக்கின்றான். பசிய புல்லாங்குழலோசையால் பசுமந்தைகளைக்கூட்டியருளிய விஷ்ணுமூர்த்தியும் தனது வைகுந்தநகரமடைந்தனர். எ - று. (௧௨)

துருவனுண் டமைத்த விலிங்கமேத் திடுவோர் தூயவன் சரிதைகே
ட் டருள்வோர், திரைபொரு துருவ குண்டநீர்க் கரையிற் றென்புலத் த
வர்கடன் கழிப்போர், விரிதிரை யளக்கர் சேறுபட் டொழிய மென்புனன்
மொண்டுகொண் டெழுந்த, கருமுகில் விளர்ப்ப விருள்படு மேனிக் கண்
ணன்வாழ் பதத்தில்வீற் றிருப்பார்.

(இ-ள்.) துருவன் ஆங்கு பிரதிட்டை செய்த சிவலிங்கக்குறியைத் துதித்தவரும், பரிசுத்தமாகிய இந்த நற்கதையைக் கேட்டருளினோரும், அலைகள்வாய்ந்த நீரையுடைய துருவகுண்டக்கரையில் பிதுரர்கடனை கழிப்போரும், விரிந்த அலைகள் பொருந்திய சமுத்திரமானது சேருகிப் போம்படி செல்லிய நீரை முகந்து சூல் கொண்டெழுந்த காளமேகமும் வெளுக்கும்படி கருநிறம்பொருந்திய திருமேனியையுடைய திருமால் வீற்றிருக்கும் வைகுந்தபதவியில் வாழ்வார்கள்.

துருவன் பதம்பெற்ற அம்.

முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - கஅக.

௨

சிவமயம்.

இருபத்திரண்டாவது,

## சிவசன்மா மகலோகமுதல் நாலுலகங்கண்ட அத்தியாயம்.

என்னத் துருவன் சரிதைபலவா மியம்பி யேகுமந் நெறியிற்
றுன்னா வரிய மகலோகந் தோன்ற நோக்கிச் சிவசன்மா
மன்னு முலக மியாதெனலு மறங்கூ ரவுணர் மிடல்சாய்த்த
பொன்னார் திகிரி வலனுயர்த்த புத்தே ளடியார் புகலுவரால்.

(இ-ள்) என்று (விஷ்ணுகணத் தலைவர்கள்) துருவனது சரித்திரமெல்லாஞ் சொல்லிச் செல்லுகின்ற அந்தவழியில், நெருங்குதற்கரிய மகலோகந் தெரிய அதைச் சிவசன்மா பார்த்து, நிலைத்திருக்கின்ற இவ்வுலகம் என்னவுலகம்? என்று கேட்கவும், கோபமிகுந்த அசுரர்களது பராக்கிரமத்தை யொழித்த அழகுபொருந்திய பொன்மயமாகிய சக்கரப்படையை வலதுகையிலேந்திய விஷ்ணுவின் கணத்தலைவர்கள் சொல்லத்தொடங்கினர். எ-று. (௧)

இனைய லோக மகலோக மிதனி னறவ மலிதுளவம்
புனையுங் கடவுள் பதம்பணிவோர் கற்ப காலம் பொருந்துவரென்
றனையோ ருரைப்ப முன்னொன்று முலக மியாதிங் கறைதியெனச்
சனகா தியர்வாழ் சனலோக மஃதென் றுணரச் சாற்றினரால்.

(இ-ள்.) இவ்வுலகம் மகலோகம்; தேன்மிகுந்த துளவமாலையைத் தரித்த விஷ்ணுமூர்த்தியின் திருவடிகளை வணங்குவோர் இவ்விடத்தில் கற்பகாலமட்டும் வசிப்பார்கள் என்று அவர்கள் சொல்ல, சிவசன்மா இதற்குமுன் காணப்படுவது என்னவுலகம்? சொல்லவேண்டும் என்று கேட்க, சனகன் முதலானவர்கள் வசிக்கின்ற சனலோகம் இஃது என்று அறியும்படி சொல்லினர். எ-று.

ஏகு நெறியி லொருலகந் தோன்ற லொடு மியாதெனலும்
யோகி னிருந்தோ ரோர்திங்க ளுணவு நீத்தோ ரொருபருவ
மாகம் வருந்த விமையாம லுறைவோ ருதிர்ந்த சருகயில்வோர்
மோக மெறிந்து மூச்சவித்தோர் திங்கட் கொருகான் மூச்செறிவோர்.

(இ-ள்.) மேலே செல்லும் வழியில் வேறொருலகம் காணப்படவும், (சிவசன்மா) இது என்னவுலகம்? என்று வினவலும், (கணநாதர்கள்) யோகசாதனத்திலிருப்போரும், மாதவுபவாசமிருப்போரும், ஒருவருடகாலம் உடல்வருந்தும்படி கண்ணிமைக்காதிருப்போரும், காய்ந்துதிர்ந்த சருகுபக்ஷணஞ் செய்வோரும், காமத்தை யொழித்து சுவாசபந்தனஞ்செய்வோரும், மாதத்துக்கொருவிசை மூச்சுவிடுவோரும். எ-று.

மூச்சவித்தல் என்பது கும்பகஞ்செய்தல்.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (௩)

இன்னோ ருறைபுந் தவலோக மிதென் றியம்பி யேகுதலு
முன்னோ ருலக மெதிர்தோன்ற முளரிப் பொகுட்டின விற்றிருக்கு
மன்னோ னுலக மெனமொழியா வன்ன மூர்தத மறைக்கிழவன
பொன்னா கமலச் சேவடிகள் போற்ற லோடு மவன்புகல்வான்.

(இ-ள்.) ஆகிய இப்படிப்பட்டவர்கள் வசிக்கின்ற தவலோகம் இது என்று சொல்லிச் சொல்லிச்செல்லுகையில் முன்னே வேறோருலகம் எதிரில் காணப்பட (இது என்னவுலகம்? என்று சிவசன்மா கேட்க, கணநாதர்கள்) தாமரைமலர்க் கொட்டையில் எழுந்தருளியிருக்கும் பிரமதேவன் வாழும் சத்தியலோகமென்று சொல்ல, அன்னக்கொடியை யுயர்த்திய அப்பிரமனது பொன்மயமாகிய தாமரைமலர்போன்ற திருவடிகளை (சிவசன்மா) வணங்கவும் (பிரமன்) சொல்லுகின்றான். எ - று. (ச)

வேயா லாவின் கணங்குவித்து வெற்பொன் றேந்தி யினிதளிக்குங்
காயா மலரி னிறம்பழுத்த கமலக் கண்ண னுவந்துறையு
மாயா புரியி னிறந்ததனா லமுத்தற் கரிய வெவ்வுலக
மேயா துனக்கு நினைப்பி னெழுதா மறையின் பொருளுணர்ந்தோய்.

(இ-ள்.) புல்லாங்குழலினால் பசுக்களைக்கூட்டி, ஒப்பற்ற கோவர்த்தனகிரியை (குடையாகத்)தாங்கி இனிதாக (ஆயர்கூட்டத்தைக்)காத்த காயாம்பூவின் சாயல்மிகுந்த தாமரைக்கண்ணராகிய விஷ்ணுமூர்த்தி சந்தோஷித்து வசிக்கின்ற மாயாபுரியில் உயிர்விட்டதன்மையால், நீ நினைக்கும்பட்சத்தில் துதித்தற்கரிய எந்தவுலகம்காணப் பொருந்தாது. ஒலிவடிவாக விளங்குகின்ற வேதப்பொருளையறிந்த சிவசன்மாவே! எ - று. (ரு)

ஆட கேச னுறைபுவன மதனிற் சிறந்த விளாவிரத
நீடு தரங்கக் கடலுடுத்த தீவோ ரேழி னிகரொறிந்த
பீடார் சம்புத் தீவதனிற் பிரித்த கண்ட மொன்பானில்
விடில பரத கண்டமொன்றே கரும பூமி யெனவிளங்கும்.

(இ-ள்.) ஆடகேசரர் வசிக்கின்ற ஆடகேசுரபுவனத்திலுஞ் சிறந்த இளாவிரதமாகிய நீண்ட அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த சப்ததீவுகளில்ஒப்பற்ற பெருமைபொருந்திய ஜம்புத்தீபத்தில் பிரிக்கப்பட்ட நவகண்டங்களில் கெடாத பரதகண்ட மொன்றே கர்மபூமியாக விளங்கிக்கொண் டிருக்கும். எ - று.

எழுதீவுகளாவன - சான்மலி - குசம் - கிரவுஞ்சம் - சாகரம்-புட்கரம் - பிலக்ஷம் - சம்பு - இவை அவ்வத்தீவுகளில் மிகுதியாக விருத்தலின் அப்பெயருற்றனவென வறிக. (சு)

கமைசேர் மற்றைக் கண்டமெட்டிற் கன்மர் போகக் குறைநுகர்வா
ரிமயத் தென்பா லொன்பானு யிரமென் றோது மியோசனையி
னமையு மிமைய விந்தத்து ளமைந்த நிலம்புண் ணியபூமி
யமுனை நதிக்குங் கங்கைக்கு மிடையா நிலமந் தர்வேதி.

(இ-ள்.) பொருந்தியுள்ள மற்ற எட்டுகண்டங்களில் போககாமிகள் அப்போகக்குறையை அனுபவிப்பார்கள்; இமயமலையின் தென்பாரிசத்தில் ஒன்பதி

றுயிரம்யோசனைதூரம் என்று சொல்லப்பட்ட விசாலத்திற்பொருந்திய இமயவிந்தபர்வதங்கட்கு மத்தியில் உள்ள இடம் புண்ணியபூமியாகும்; யமுனாநதிக்கும் கங்கைநதிக்கும் மத்தியில் உள்ள இடத்தை அந்தர்வேதி என்று சொல்லப்படும்.

அந்தர்வேதி=இரண்டாற்றின் நடுவிலுள்ள பூமி. (௭)

பொருவில் கடவு ளிலங்கிடம்பிற புகலுங் குருக்ஷேத் திரஞ்சிறந்த
துரைசா னைமி சாரணிய மதனிற் சிறந்த தொலிகதுங்கிங்
திரைசேர் பிரயாகை யாங்கதனிற் சிறந்த ததனிற் றெய்வ நன்னீர்க்
கரைசேர் கங்கை சூழ்கிடந்த காசிப பதியே சிறந்ததால.

(இ-ள்.) சமானமில்லாத புண்ணியஸ்தலங்களில் (அறிவுடையோரால்) சொல்லுகின்ற குருக்ஷேத்திரம் மேம்பட்டது; கீர்த்திமிகுந்த நைமிசாரணியம் அதனைக்காட்டிலும் மிகுந்தது; சத்திக்கின்ற நெடிய அலைகளையுடைய பிரயாகை அதிலும் அதிகரித்தது; தெய்விகம்பொருந்திய நல்தீர்த்தமயமாகிய கரைமோதுகின்ற கங்காநதிசூழ்ந்து விளங்குகின்ற காசிக்ஷேத்திரம் ஒன்றுமே அதைப்பார்க்கிலும் சிறப்புடையது. எ-று. (௮)

அன்ன வாற்று லாங்கிறந்தோர் முத்தி யடைவ ரருமறையோய்
நின்ன துள்ளம விழைந்ததுவு மஃதென் றுணர்ந்தே னெடுமாயன்
றன்னை யேத்து மடியார்களக் குரைப்ப ரெனலுந் தாழ்ந்திறைஞ்சி
மன்னு கணங்க ளொடுமாயன் பதத்திற் செல்வான் வழிக்கொண்டான்.

(இ-ள்.) அரியவேதங்களையுணர்ந்த சிவசன்மாவே! அந்தத்தன்மையால் அக்காசிநகரத்தில் இறந்தவர்கள் மோக்ஷத்தைப்பெறுவார்கள்; உனது மனதில் விரும்பியதும் அதுவேயெனறறிந்தேன்; விஷ்ணுமூர்த்தியைத் துதிக்கின்ற கணநாதர்கள் உனக்கு (அவையெல்லாம்) சொல்லுவா ரென்று பிரமன்சொல்லவும், சிவசன்மா நமஸ்கரித்துவணங்கி நிலைபெற்றகணத்தலைவர்களுடன் விஷ்ணுபதவிக்குச் செல்லும்படி வழியைமேற்கொண்டனன். எ-று. (௯)

சிவசன்மா மகலோகமுதல் நாலுலகங் கண்ட அ-ம்.

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் ௬௯௩.

உ

சிவமயம்.

இருபத்துமூன்றாவது.

சிவசன்மாவுக்கு

## அண்டத்தளவு கூறியதும் மாலுக்கு முடி சூட்டியதுமாகிய அத்தியாயம்.

கடந்த யோசனை யெத்துணை யெத்துணை கடப்பான்
கிடந்த யோசனை முத்தியென் றடைகுவன் கிளாகென்
றுடன்று முக்குறும் பெறிந்துயர் யோகினி னுறு
மடைந்த வந்தணன் கேட்டலு மாங்கவ ரறைவார்.

(இ-ள்.) நாம் (பூமியினின்று வந்ததுமுதல்) நீங்கிய யோசனை எவ்வளவு? இன்னும் நடக்கும்படியிருக்கும் யோசனை எவ்வளவு? எப்போது மோட்சவுலகத்தை யடைவேன்? சொல்லவேண்டும் என்று முக்குற்றங்களையும் பகைத்துச் செய்த்து எக்காலமும் உயர்வாகிய யோகத்திற் பொருந்திய சிவசன்மா கேட்கவும், அக்கணநாதர் சொல்லுகின்றனர். எ - று. (௧)

எழ்த டங்கிரி யெழுபொழி லேழ்பெருந் தீவு
மாழ்பெ ருங்கட லேழுடை யவனியி னெல்லை
கேழ்கி ளர்ந்தசெங் கதிரவன் கிளாவெயிற் கற்றை
சூழ்கி டந்தன வெத்துணை சொலவினைத் துணையே.

(இ-ள்.) விசாலமாகிய ஏழுபர்வதங்களும், ஏழுவிருட்சங்களும், ஏழுபெரிய தீவுகளும், ஆழமாகிய பெரிய ஏழுமகாசமுத்திரங்களும், உடைய உலகத்தினளவு செந்நிறமமைந்த கிரணங்களையுடைய சூரியனது விளங்குகின்ற கிரணத்தொகுதி எவ்வளவு சூழ்ந்து கிடக்கின்றதோ அவ்வளவினதாகும் சொல்லுமிடத்தில்.

ஏழு மலைகள்;—கைலை - இமயம் - மந்தரம் - விந்தம் - நிடதம் - ஏமகூடம் - நீலகிரி. பொழில், தீவு, கடல் முதலிய முன்கூறப்பட்டுள்ளன. (௨)

அன்ன பூதலத் துபரி னலாகதிர்ச் செல்வன
மன்னு மண்டல மிலக்கமி யோசனை மதிக் கடவு
டுன்னு மண்டல மதனின்மே லத்துணை யதனமேன்
மின்னு தாரகை மண்டலம் விளம்பினர் றுமால்.

(இ-ள்.) அப்படிப்பட்ட பூலோகத்தின்மேல் பரந்தகிரணங்களையுடைய சூரியன் வசிக்கும் சூரியமண்டலம் லக்ஷயோசனைதூரம்; சந்திரமண்டலம் அதற்குமேல் அவ்வளவுதூரம்; பிரகாசிக்கின்ற நக்ஷத்திரமண்டலம் அதற்குமேல் அவ்வளவு தூரமாகுமென்றுசொல்லுமிடத்தில். எ - று.

அண்ட அடுக்குகளையும் அவற்றின் முறையையும் எழுதப்புகுந்தால் மிக்கு விரியுமெனவிடுத்தாம். அவற்றைச் சிவதருமோத்தரம்-கோபுரவியலிலும், கந்த

புராணம் - அண்டகோசப்படலத்திலும், கூர்மபுராணம் - மேருவினசிறப்பு, சம
புத்திவியற்கை, நவகண்டத்தியற்கை யென்பத அத்தியாயங்களிலும், பாரதம் -
அண்டகோசச்சருக்கத்திலுங் கண்டுகொள்க. (௩)

ஈதின் மேற்புதன மண்டல மிலக்கமோ ரிரண்டா
மோது சுக்கிர னுலகதன மீதிரண் டிலக்கங்
கோதில சேயுல கததனை குணிக்கின்மே லதனின்
மீதுபொ னுலகத்துணை யோசனை விளம்பும்.

(இ-ள்.) புதனமண்டலம் அதற்குமேல இரண்டிலக்ஷயோசனைதூரமாகும்; சொல்லுகின்ற சுக்கிரமண்டலம் அதற்குமேல இரண்டிலக்ஷயோசனைதூரம்; குறையில்லாத அங்காரகமண்டலம கணக்கிடப்பட்டதில் அதற்குமேல் அவ்வளவுதூரம்; பிரகஸ்பதிமண்டலம் அதற்குமேல் அவ்வளவு யோசனை (என்று நூல்கள) கூறும். எ-று. (௪)

இதனின் மேற்சனி மண்டல மிலக்கமோ ரிரண்டாங்
கதனின் மேலெழு முனிவ ரமர்ந்தினி துறையுந்
துதிகொண் மண்டல மிலக்கமோ னதனின்மேற் றுருவன்
பதமி லக்கமோன் றியோசனை யாமெனப் பகர்வார்.

(இ-ள்.) சனிமண்டலம அதற்குமேல் இரண்டிலக்ஷயோசனை; சத்தவிருடியர் இனிதாகப் பொருந்திவசிக்கும் துதிக்கத்தக்க மண்டலமானது அதற்குமேல் இலக்ஷயோசனைதூரம்; துருவமண்டலமாகிய பதவி அதற்குமேல் இலக்ஷயோசனைதூரமாகும் என்று (நூல்வல்லோர்) கூறுவர். எ-று. (௫)

வேறு.

பூதலத்தின் மேற்பதினைந் திலக்க மாகும் புவலோக மதனும்பர் சுவருலோக, மேதமறு மெண்பத்தைந் திலக்க மாகு மிதனின்மேன் மகலோக மிரண்டு கோடி, யோதுசன லோகமதன் மேலெண் கோடி யும்பரிற்பன் னிருகோடி தவலோ கஞ்சீர், மேதகைய வாங்கதன்மே லீரெண் கோடி விளங்குறுசத் தியலோகம விளம்புங் காலே.

(இ-ள்.) அளவுசொல்லுமிடத்தில்,பூலோகத்துக்குமேலே புவலோகம் பதினைந்திலக்ஷயோசனையாகும்; அதற்குமேலே சுவருலோகம் குற்றமற்ற எண்பத்தைந்திலக்ஷயோசனையாகும்; அதற்குமேலே மகலோகம் இரண்டுகோடி யோசனை; அதற்குமேலே சொல்லுகின்ற சனலோகம் எட்டுக்கோடியோசனை; அதற்குமேலே தவலோகம் பன்னிரண்டுகோடியோசனை; மேம்பட்ட சிறப்பையுடைய அதற்குமேலே பிரகாசிக்கின்ற சத்தியலோகம் பதினாறுகோடியோசனையாகும்.

ஆங்கதன்மேற் பிரமபத மிரண்டு கோடி யதன்மேன்மா யவனுலக மூன்று கோடி, யோங்குமதன் மேற்புனிற்றுத் திங்கள் வேணி யும்பர்பிரா னுறைபுலக நான்கு கோடி, யீங்கிதன்மே லிவைமூடு மண்டப் பித்தி யொருகோடி நிலமுதலா யீறுகாறு, நீங்கருமைம் பதுகோடி யாகு மேலோர் நிகழ்த்திடுமியோ சனைமறைநூ னெறியி னின்றே.

(இ-ள்.) அப்படிப்பட்ட அதற்குமேலே பிரமபதவி மூன்றுகோடியோசனை. அதற்குமேலே விஷ்ணுமூர்த்தியின் உலகமாகிய வைகுந்தபதவி மூன்றுகோடியோசனை. மேன்மையுற்ற அதற்குமேலே பரிசுத்தமாகிய சந்திரனைச் சடையிற் றரித்த மகாதேவனாகிய சிவபெருமான் வசிக்கும் சிவலோகம் நான்குகோடியோசனை. அதற்குமேலே இவ்வண்டமுழுவதையும் மூடிக்கொண்டிருக்கும் அண்டச்சுவர் கோடியோசனை (ஆனபடியால்) பூலோகமுதல் இறுதியாகவுள்ள அண்டகடாகவரையில் குறைவில்லாத ஐம்பதுகோடியோசனைதூரமாகும் இவ்வுலகமென்று மேலோர் சொல்லுவார். வைதிகநெறியில் விளங்குகின்ற சிவசன்மாவே!. எ - று.

ஓதியவிம் மூதுலக மனைத்துந் தோன்ற வுலப்பரிய திருவருளா லினிது நின்று, காதலுடன் காத்தழிக்கும் விச்சைக் கென்றுங் காரணமாய்க் காரணா தீத மாகிச், சாதல்பிறப் பிணையின்றி யநாதி யாகித் தற்பரமாய்த் தனித்திகழு மவனே தெண்ணீர்ச், சீதநெடுந் திரைக்கங்கை புடைசூழ் காசித் திருநகரில் வீற்றிருக்குஞ் செல்வன் றானே.

(இ-ள்.) சொல்லப்பட்ட இந்தப் பழமையாகிய எல்லாவுலகங்களும் உண்டாகும்படி நீங்காத திருவருளுடன் இனிதாக எழுந்தருளி, ஆசையுடன் (அவற்றை) சிருட்டி திதி சங்காரம் முதலிய தொழில்களைச் செய்தற்குக் காரணமாகியும், காரணாதீதமாகியும் மரணம் ஜெனனமாகிய இத்தகைய துன்பங்களில்லாது அநாதியேயுள்ளவனாகியும், தானே சிறப்புற்றவனாகியும் ஒப்பறவிளங்குகின்ற அச்சிவபெருமானே, தெளிவாகிய நீரையுடைய குளிர்ச்சியமைந்த நெடிய அலைகள் பொருந்திய கங்காநதியானது புடைசூழ்ந்துவிளங்கும் சிறந்த காசிக்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்குஞ் செல்வராகிய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான். எ - று.

காரணமாய்க் காரணா தீத மாகி - என்பதை,

"மூவண்ண றன்சந்நதி முத்தொழில் செய்ய வாளா
மேவண்ணல்"—என்னுந் திருவிளையாடற்புராணத்தா லுணர்க. (அ)

தூங்குமெயி லொருமூன்று மெரிய முன்னந் தூநகைகோட் டியபரமன் சுடர்செய் நேமித், தாங்கியசெந் தாமரைக்கட் டேவை நோக்கிச் சராசரங்க ளனைத்துநீ தானே யாகி, நீங்கரிய முத்தொழிலு மியற்று கென்ன நிரைபுனைமா ளரியணையி லினிதி னேற்றி, யோங்குகதிர் நவமணியின் முகடு வேய்ந்த வொழுகொளிச்சா மரைகளிரண் டுவப்பி னல்கி.

(இ-ள்.) (இடம்விட்டுப்) பெயர்ந்து கொண்டிருந்த மும்மதில்களும் சாம்பராம்படி பரிசுத்தமாகிய புன்னகைசெய்த சிவபெருமான், பிரகாசத்தைச்செய்கின்ற சக்கராயுதத்தைப்பிடித்த சிவந்த தாமரைமலர்போன்ற கண்களையுடைய விஷ்ணுமூர்த்தியைப் பூர்வத்தில் பார்த்து, சராசரங்களாகிய எல்லாப்பொருள்களிலும் நீ, தானேயாக விருந்து ஒழியாதமுத்தொழில்களைச் செய்யக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளி, வரிசையாகிய பிடரி மயிரையுடைய சிங்காதனத்தில் இனிதாக ஏறச்செய்து மிகுந்த ஒளியையுடைய நவமணிகள் பதித்த உச்சியுடைய பிரகாசம் பொருந்திய இரண்டு சாமரைகளைச் சந்தோஷத்துடன் கொடுத்து.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (கூ)

பழவயிரச் சலாகையொருகோடி வேய்ந்து பாயிருள்சீத் தொளிர் காமபு கொளுவிச் செய்ப, வழலுமிழு மணிகுயின்ற மகுடஞ் சோத்தி பாயிரமியோ சனைபரப்பி னளவைத் தாக, வழுவறுநூற் கடல்கடந்த தெய்வத தச்சன் மனத்தினுன் மிகவருந்தி யினிதிற் செய்த, முழுமதியி னெழிலகவற்றி நிலவு காலு முத்தநெடுந் தனிக்குடையோன் றுவந்து நல்கி.

(இ-ள்.) முதிர்ந்த ஒருகோடி வயிரக்கம்பிகளால் அலங்கரித்து, பரந்த இருளையொழித்துப் பிரகாசிக்கின்ற காம்புசெய்து, சிவந்த நெருப்புபோல விளங் கும் பெரிய மாணிக்கங்களால் அமைந்த கலசம் அதற்குத் தரித்து, ஆயிரயோசனை தூரம் அளவையுடையதாக, குற்றமற்ற சிற்பநூற்கடலைக்கரைகண்ட விசுவகன் மா தனது மனதால் மிகவும் வருந்தி இனிதாகநிருமாணித்த பூரணச்சந்திரனது அழகைப்பழித்து நிலவைக்கக்குகின்ற நெடிய ஒப்பற்ற ஒரு முத்துக்குடையைச் சந்தோஷத்துடனே கொடுத்து. எ - று. (கo)

புலவுகமழ் சுடரிலைவே லமரர் விஞ்சைப் புரவலர்கின் னரரியக்கர் சித்தர் நாகர், குலமகளி ரொருகாழ்முத் தணிந்து வீங்கு கொம்மைமுலைப் பொறைசுமந்து குழைந்து தேம்பி, யலமருநுண் ணிடைவருந்த நடிப்ப விண்ணோ ரஞ்சலிசெய் தலர்மாரி பொழிந்து போற்ற, மலைமகடன் செழுங்கரத்தாற் கலன்கள் பூட்டி மலர்மகளை யாங்கவன்பா லமைப்ப மன்னோ.

(இ-ள்.) புலால்மணநாறும் ஒளிதங்கிய அச்சவடிவாகிய வேலேந்திய அமரர் - வித்தியாதரர் - கின்னரர் - இயக்கர் - சித்தர - நாகர் முதலான கணங்கள் கரங்குவித்து மலர்மழைபெய்து துதிக்கவும், சிறந்த அரம்பாஸ்திரீகள் ஒப்பற்ற ஆணிமுத்துக்களைத்தரித்துப் பூரித்த குவிவாகியதனங்களாகிற பாரத்தைச் சுமந்து இளைத்து இளைத்துவருந்துகின்ற நுட்பமாகிய இடுப்பானது வருந்தும்படி நடனஞ் செய்யவும். பர்வதராஜபுத்திரியாராகிய உமாதேவியார் தமது செழுமைதங்கிய திருக்கைகளால் ஆபரணமணிவித்து இலக்குமியை அவ்விஷ்ணுமூர்த்தியின் பக் கத்தில் இருக்கச்செய்யவும். எ - று.

இடை தேம்புதலாவது ஆங்கணிந்துள்ள ஆபரணங்கள் ஒலித்தலாம். ()

பொழிகதிர்நித் திலங்கொழிக்கும் புணரி யேழிற் புரிவளைகு லுளைந்தலறி முத்தங் காலு, மொழுகுபுனற் கங்கைமுத னதியிற் றெண்ணீ ரொள்ளொளிப்பொற் குடத்தேந்தி முறையி னாட்டி, மழகதிரு மிருள வெயிற் கற்றை காலு மணிமவுலி சூட்டிமலர்ப் பொகுட்டின் மேய, பழ மறையோன் முதலமர ரியாரும் போற்றிப் பணிகவென மதுமலர்த்தாட் பணிதல் செய்தார்.

(இ-ள்.) கிரணங்களைச்சொரிகின்ற முத்துக்களைக்கொழிக்கும் சத்தசமுத்திரங்களிலும், முறுக்குகளையுடைய சங்குகள் கருவுற்று இறைச்சலிட்டு முத்துக்களைக் கக்குகின்ற நீர்சொரியும் கங்கைமுதலிய புண்ணிய நதிகளிலுமிருந்து, தெளிவாகிய நீரை மிகுந்த பிரகாசத்தையுடைய பொன்னாலாகிய கும்பங்களிலேற்று வந்து கிரமத்துடன் மங்கலஸ்நானஞ்செய்வித்து, இளஞ்சூரியனும் இருளெய்தும்படி வெயிற்றெறிக்கும் நவமணிபதித்த கிரீடந்தரிப்பித்து, தாமரைக்கொட்டையிற் பொருந்திய பழமையாகிய வேதங்களையுணர்ந்த பிரமன முதலிய தேவர்கள் யாவரும் துதித்து வணங்கக்கடவர் என்று கட்டளையிட, (அவர்கள திருமாலின்) தேன்சிந்தும் மலர்போன்ற திருவடிகளைவணங்கினா. எ - று. (கஎ)

குழந்தைமதிக் கோடுரிஞ்ச முகைவாய் விண்டு கொழுநறவு கொப்
பளிக்குங் கொன்றை மாலை, தழங்குதிரைப் புனற்கங்கை பசும்பொன்
னாற்றுந் தன்மையெனத் தாதுகுக்குஞ் சடிலத் தெம்மான், முழங்கு தி
ரைப் பாற்கடலி னடுவட் டுஞ்சு முகுந்தன்முக நோக்கியறம் பொருளோ
டின்பம், வழங்குதிநீ யெவ்வுயிர்க்கு முத்தி யாமே வழங்குதுமும் மலமெ
றிந்த மதியி னோர்க்கே.

(இ-ள்.) ஒலிக்கின்ற அலைகளையுடைய நீர்மயமாகிய கங்காநதி பசிய பொற்பொடிகளைச் சிந்துந் தன்மையைப்போல, இளம்பிறையினது கொம்புதேய்த்தலால் மொக்குகள் மலர்ந்து கொழுமைதங்கிய தேனைச் சொரியும் கொன்றைமலர் மாலையானது, மகரந்தப்பொடிகளைச்சிந்துஞ் சடைமுடியையுடைய எமது சிவபெருமான், சத்திக்கின்ற அலைகள் வாய்ந்த திருப்பாற்கடலின் மத்தியில் யோகநித்திரைசெய்யும் விஷ்ணுவின் திருமுகத்தைப்பார்த்து தரும - அர்த்த - காமியங்களை எல்லா வுயிர்கட்கும் நீ கொடுத்துவருவாயாக; ஆணவாதி மலமூன்றையும் நீங்கிய அறிவினையுடையவர்கட்கு மாத்திரம் நாமே முத்தியைக்கொடுப்போம் (என்று மேலுங் கூறுகின்றார்.) எ - று. (கஅ)

ஆற்றல்வடி வாட்டடங்கை யவுண ராலு மகல்விசும்பு தனிபுரக்கு
மமர ராலு, மாற்றரிதா யெவ்வுயிர்க்கு மயக்கஞ் செய்யு மாயைநினக் களி
த்தனமெம் மிடப்பா னீயே, யூற்றிருந்து நறவொழுகுந் துளவத் தாரோ
யுனையிகழ்ந்தோ ரெமையிகழ்ந்தோ ரென்ன வோதி, யேற்றையிருங் கொ
டியுயர்த்த கங்கை வேணி யிறைவனுயர் தடங்கயிலை யெய்தி னானே.

(இ-ள்.) சுரப்பெடுத்துத் தேன்சொரியும் துளவமாலையணிந்த விஷ்ணுவே! பராக்கிரமம் பொருந்திய கூரியவாளேந்தும் விசாலித்த கைகளையுடைய அசுரர்களாலும், பரந்த ஆகாயத்தை ஒப்பற்று ரக்ஷிக்குந்தேவர்களாலும், நீக்கவரியதாய் எல்லா ஆன்மாக்கட்கும் மயக்கத்தை உண்டுபண்ணும் மாயாவல்லமையை உனக்குக்கொடுத்தோம்; எமது இடப்பாகம் நீயேயாவாய்; உன்னைத்தூஷித்தவர்கள் எம்மைத் தூஷித்தவர்களாவர் என்று திருவாய்மலர்ந்தருளி, இடபத்தைப்

பெருமை வாய்ந்த கொடியாகவுயர்த்தின கங்காதரராகிய சிவபெருமான் உவந்து விசாலமுற்ற கயிலாயகிரியை அடைந்தனர் எ - று.

"எம்பிடப்பாளியே"—என்பது. விஷ்ணுசுவசத்திகளுள், ஒருவராதலானும், சிவபெருமானது திருமேனியின் இடப்பாகத்தில் தோன்றினமையானும் என்றுணர்க அவற்றை.

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.

"எரியலா லுருவ மில்லை யேறலா லேற வில்லைக்
கரியலாற் போர்வை யில்லைக் காண்டகு சோதி யார்க்குப்
பிரிவிலா வமரர் கூடிப் பெருந்தகைப் பிரானென் றேத்தும்
அரியலாற் றேவி யில்லை யையனை யாற னார்க்கே."

இரட்டைப்புலவர் - திருவாமாத்தூர்க் கலம்பகம்.

"வருக்கைத் தடம்பொழின் மாமாதை யையர்க்கு மாசொன்றில்லா
முருக்கொத்த மேனி யழகிய நாதர்க்கு மூச்சரவத்
திருக்கைக் கமல வரனார்க் கரிதிருத் தேவியன்றேல்
அரிக்குப் பொருளை யிரக்கவிரண் டறிவின்மையே" எனவும்.

கூர்மபுராணம்.

"மைந்த நின்னையென் வலப்புறத் தளித்தன னறிய
பைந்து ழாய்மது வண்ணனை யெனதிடப் பாலில்
தந்த வித்தன னிவிர்வெவ கர் முகன் றழல்கேற்
கந்த னேனெனக் கருணையி னுச்சிமோந் துரைத்தான்" எனவுஞ் வருவனவற்றானுணர்க. (கச)

பொறிவரிவா ளரவுபடப் புடைக்குஞ் சீற்றப் புள்ளரசு வலனுயர்த்த பூவை வண்ணன், மறியிளமா னிடத்தேந்து மண்ணல் செய்ய மலரடிதன் மனத்திருத்தி மகிழ்ச்சி கூர்ந்து, பெறலரிய வைகுந்தத் தடைந்து தீந்தேன் பிலகுபொலந் தாதுகுக்குந் தருவி னீழ, லுறைதருவா னவர்ப்பேணி யவுணர்ச் செற்றுங் குறைந்தனனுன் மறைதெரிந்த வுணர்வின் மிக்கோய்.

(இ - ள்.) புள்ளிகளுடையதாய்க் கீற்றுக ளமைந்த ஒளிதங்கிய பாம்புகள் இறக்கும்படி அடிக்கின்ற கோபத்தையுடைய பட்சிராஜனாகிய கருடனை வலப்புறத்திற்கொடியாகவுயர்த்திய காயாம்பூவையொத்த நிறம்வாய்ந்த திருமால்,இளமை தங்கிய மான்கன்றை இடதுகையிற்றாங்கிய சிவபெருமானது சிவந்த மலர்போன்ற திருவடிகளை மனதில்தியானித்துச் சந்தோஷமிகுந்து,பெறுதற்கரிய வைகுந்தபதவியைச் சேர்ந்து,மதுரமாகிய தேன்றுளிக்கும் பொன்மயமான மகரந்தப்பொடிகளைச்சிந்தும் கற்பகவிருட்சத்தின் நிழலில் வசிக்கின்ற தேவர்களைக்காத்து அசுரர்களைக்கொன்று அங்குவசித்திருக்கின்றனர் ; நான்குவேதங்களையு முணர்ந்த அறிவின்மிகுந்த சிவசன்மாவே !. எ - று. (கரு)

மூதுலகி னிலையனைத்து மொழிந்தோ மீளா முத்திபெறுந் தன்மை
யினி மொழிவல் கேட்டி, தீதறுமா யாபுரியி னுடல நீத்த செய்தியினுல
வைகுந்தத் தினிது மேவிக், காதலுறு மரமகளிர் குமுதச் செவ்வாய்க்
கதிர்முறுவ லின்னமுதங் களிப்ப மாந்திப், போதுறைநான் முகன்யாண
டி லோராண் டெல்லை புத்தேளி ரடிபரவப் பொருந்தி வாழ்வாய்.

(இ-ள்.) பழமையாகிய அண்டத்தின் நிலைமையெல்லாஞ் சொன்னோம்; நீங்காத மோட்சமடையும் விதத்தையும் இனிச்சொல்வோம்கேட்பாயாக (என்று கணநாதர்கள் சொல்லத்தொடங்கினர்) குற்றமற்ற மாயாபுரியில் நீ உயிர்விட்ட தன்மையால் வைகுந்தபதவியில் இனிதாகச்சேர்ந்து, ஆசைபொருந்திய தேவமாதர்களது செவ்வாம்பல் மலர்போலும் சிவந்த வாயாகிய ஒளியமைந்த புன்னகையொடுகூடிய இனிய அமுதத்தைச்சந்தோஷிக்கப்பருகி, தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனது வருடத்தில் ஒருவருடகாலம் தேவர்கள் உன்பாதம்பணிய வாழ்ந்திருப்பாய். எ - று.

"நான்முகனயாண்டிலோராண்டு" — என்பதை, இரண்டாயிரஞ் சதுர்யுகம் பிரமனுக்கு ஒரு நாளாதலின், அவ்விதமான நாட்கள் முந்நூற்றறுபது கூடிய காலம் என்றுணர்க. (கஎ)

சிவசன்மாவுக்கு அண்டத்தளவு கூறியதும்

மாலுக்கு முடிசூட்டியதுமாகிய அ-ம.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ௭கக.

உ

சிவமயம்.

## இருபத்துநான்காவது,

# சிவசன்மா முத்திபெற்ற அத்தியாயம்.

பாகடு குதலைக் கடைசியர் களைந்த பனிமலர்க் குதட்டியோட் டெருமை
நாகிளங் கமுகி னறும்பழந் துஞ்சு நந்திவர்த் தனமெனு நாட்டில்
வேகவெஞ் சிலைக்கை யரசரேத் தெடுப்ப விருத்தகா ளப்பெயர் மருவி
யோகையோ டுலக மொருகுடை நிழற்றவுனதடிப் படுத்துவீற் றிருப்பாய்

(இ-ள்.) கற்கண்டைப்பழித்த மழலைச் சொல்லையுடைய பள்ளஸ்திரீகள் களைபறித்த குளிர்ச்சிதங்கிய மலர்களை அதக்கிக்கொண்டுமௌட்டியத்தையுடைய எருமைகள்,மிக்க இளமைபொருந்திய பாக்குமரங்களின் நல்ல பழங்களில் நித்திரை செய்யும் நந்திவர்த்தனநாட்டிலே, வேகமாக (அஸ்திரங்களைச் செலுத்தும்) கொடுமை வாய்ந்த வில்லேந்திய கையையுடைய மன்னர்கள் துதிக்கும்படி விருத்தகாளனென்னும் பெயர்பெற்றுநித்துச் சந்தோஷத்துடனே உலகமுழுதும் ஒருகுடை நிழல்செய்ய (யாவரும்) உன்னை வணங்கும்படி வாழ்ந்திருப்பாய். எ - று. (க)

ஒண்டொடி யனங்க லேகையே முதலா மொருபதி னுயிர மகளிர்
வண்டுபாண் முரலு நறுந்தொடை கிடந்த வளரிள வனமுலை மணந்து
தெண்டிரை யமிழ்திற் கனிந்தமென் மழலைச் சிறுவர்முந் நூற்றுவர்ப் பய
கெண்டிசை யரச ரிடுதிறை யனுப்ப விருநிலம் புரந்திடு நாளில. [ந்தாங்

(இ-ள்.) ஒளிதங்கிய வளையடைய அலையனங்கலேகைமுதலாகிய பதினுயிரமாதர்களது வண்டுகள் பண்பாடும் வாசனை தங்கிய மலர்மாலையணிந்த வளர்கின்ற இளமைவாய்ந்த அழகிய தனங்களைத் தழுவி, தெள்ளிய அலைகளையுடைய கடலிற் றோன்றிய அமிர்தத்தைக் காட்டிலும் மதுரம்பொருந்திய மிருதுவான சொல்லையுடைய முந்நூறு புதல்வரைப் பெற்று, அட்டதிக்குகளிலுள்ள மன்னர்கள் தமக்கு விதித்த கப்பங்களையனுப்பும்படி பெரியஉலகத்தை இரட்சித்துவருங் காலத்தில். எ - று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (உ)

கங்கைநீர்ப் படிந்து காவடி கொணர்ந்த கலைமறை முனிவர்நிற் பரவி[ப்பத்
மங்கையோர் பாகத் தண்ணல்வீற் றிருக்குங் காசியின் வளனெடுத் துரை
தங்குமுற் பவத்தி னறிவுவந் தெய்தித் தடங்கணீர் வாரவுண் ணெகிழ
விங்கியா முரைத்த யாவையுங் கருதி யின்பவா ரிதியிடை திளையா.

(இ-ள்.) கங்கா சலத்தில் மூழ்கிக் காவடிகொண்டுவந்த வேதநூல்களையுணர்ந்த அந்தணர்,உன்னைத் துதித்து விசாலநேத்திரியாராகிய தேவியாரை ஒரு பாகமாகவுடைய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான் எழுந்தருளியுள்ள காசிக்ஷேத்திரத்தின் வளப்பங்களை யெடுத்துச்சொல்ல,முற்சென்மத்திற் பொருந்திய உணர்ச்சி வந்தடைந்து, விசாலமாகிய கண்களில் நீர் சொரியவும் மனம் நெக்குவிடவும் இப்போது நாங்கள் சொல்லியவற்றையெல்லாம் நினைத்து ஆநந்தக்கடலில் மூழ்கி.

காவடி கொணர்ந்த மறையவர்க் களப்பில் காசொடு மீ நிதி வழங்கிக்
கோவடு சுடர்வேற் றிறலகெழு மகற்குக் கொழுங்கதிர் மணிமுடி சூட்டி
யேவடு தடங்கட் செய்யவா யனங்க லேகைபோ டின்னருள் சுரக்கு
மாவடு நோக்கி பங்கன்வீற் றிருக்குங் காசியி னெல்லையின் மருவி.

(இ-ள்.) தீர்த்தக்காவடி கொண்டுவந்த வேதியருக்குப் பொன்னுடன் பெருந்திரவியங்கள் பலவற்றைக் கொடுத்து, பகைமன்னரைக்கொல்லும் ஒளிதங்கிய வேலேந்திய பராக்கிரம மிருத்தபுதல்வனுக்கு மிருத்தகிரணங்கள் பொருந்திய நவமணிகள் பதித்த கிரீடந்தரிப்பித்து, அம்புபோலுங் கூரிய பரந்த விழிகளையும் சிவந்த வாயையுமுடைய அனங்கலேகையுடன், இனிய திருவருள் பாலிக்கும் மாவடு போலும் திருக்கண்களையுடைய உமாதேவி பாகராகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள காசிக்ஷேத்திரத்தி லடைந்து. எ-று.

"ஒளியா லுலகின் றுயிரனைத்து மீன்போற் செவ்வி யுறநோக்கி - யளியால் வளர்க்கு மங்கயற்கண் ணனனே"—என்னும் பரஞ்சோதிமுனிவர் திருவாக்கின்படி, தேவியார் தமது திருக்கட்கடையால் ஆன்மாக்கட்கு அருள்செய்தல் முறையாதலின், ஈண்டு "அருள்சுரக்கு மாவடு நோக்கி" எனக்கூறினர். (௪)

அருமறைக் கிழவர் முகந்துகொண் டேக வளப்பரு நிதிபல வழங்கி
யிருவினை துடைக்கு மிலிங்கமொன் றமைத்தாங் கிரம்புனல வாவியொன்
றகழ்ந்து, திருவமர் செம்பொற் சினகர மியற்றித் திருவிழா நடத்திடு மே
ல்வை, யுருவவார் சடில னிலவுவெண் ணீற்ற னொருசிவ யோகிவந் தடை
[வான்.

(இ-ள்.) அரிய வேதங்களுக்குரிய அந்தணர் (விரும்பியவளவாயில்) எடுத்துக்கொண்டு செல்லும்படி அளவிலலாத பல திரவியங்களைக் கொடுத்து, இருவினைகளின் சம்பந்தத்தை யொழிக்கும் ஓர் சிவலிங்கக்குறியைப் பிரதிட்டை செய்து, அவ்விடத்தில் குளிர்ந்த நீரையுடைய தடாகம் ஒன்று தோண்டி, சிறப்புப்பொருந்திய செம்பொன்னா லாகிய ஒரு கோயில் கட்டுவித்து, மகோற்சவம் செய்விக்குங்காலத்தில், அழகிய நீண்ட சடையையும் பிரகாசிக்கின்ற திருவெண்ணீற்றையுமுடைய ஒரு சிவயோகி அங்கு வருவான். எ-று. (௫)

அடைந்துநீ யாரை யணங்கிவ ளியார்கோ லாலய மியற்றின ரியாவர், தொடார்தவல் வினைவே ரறுத்திடு மிலிங்கப் பெயரெது சொலலுதி யென்ன, மிடைந்துவண் டறைதா விருத்தகா ளப்போர் வேந்தனியான் மென்சிறை யறுகாற், குடைந்துதே னருந்து பூங்குழ லிவளென் கோமனைக் கிழத்திமற் றுமால்.

(இ-ள்) (அச்சிவயோகி) வந்து, நீயார்? இப்பெண் யாவள்? இக்கோயில் கட்டினவர் யாவர்? (பிறவிகடோறும) நீங்காத வலிய வினைச்சம்பந்தத்தை வேரோடு கல்லும் இச்சிவலிங்கப்பெருமானது திருநாமம் யாது? இவற்றைச் சொல்லுக என்று கேட்க, வண்டுகள் நெருங்கி ஒலிக்கும் வெற்றிமாலை பூண்ட யுத்தத்தில்வல்ல விருத்தகாளராசன் நான்; மெல்லிய சிறகையுடைய வண்டுகள்கிண்டித் தேனுண்ணும் மலர்சூடிய கூந்தலையுடைய இவள் என்மனைவியாகும். எ-று. (௬)

திருவம ரிலிங்கப் பெயருணர்ந் திலன்யா னினகர மியற்றினான் சிவனே, யரியநற் றவஞ்செய் முனிவர வெனாது மன்புமீக் கூர்தர வந்தக், குருகுபாய் தடத்தி னீர்முகந் தளித்தி யென்னலுங் கொணர்ந்துநீ ரளிப்பப், பருகலுங் கிழவுத் தன்மைநீத் தெண்டோட் பழமறை யந்தண னாகி.

(இ-ள்.) அருமையாகிய நல்ல தவங்களைச் செய்த முனிவனே! செல்வம் பொருந்திய சிவலிங்கப்பெருமானது திருநாமம் அறிந்திலேன் : இந்தக்கோயில் கட்டினவர் சிவபெருமானே என்று சொல்லவும், அன்பு அதிகரித்தலால் பறவைகள் பாய்கின்ற இத்தடாகத்தில் சலத்தை மொண்டுவந்து கொடு என்று (அவர்) சொல்ல, (நீ அவ்வாறே) நீர்கொணர்ந்து கொடுக்க, அதைக்குடித்தவுடனே கிழத்தன்மை யொழித்து எட்டுத் திருப்புயங்களை யுடைய பழமையாகிய வேதப் பொருளாகும் சிவபெருமானாகக்காணப்பட்டு. எ - று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (எ)

நிற்றலு முன்னைக் கிழவுரு நீத்து நிருமல னுருவினை யெடுத்த
தெற்றென லோடு மிளநகை கோட்டி யீங்கிவண் முற்பவ மதனிற்
கற்றுணர் சுபாசுப் பெயர்மறை யவன்றன் கன்னிகை சுபானனை யென்பா
ணற்றவம் புரியு நயித்துரு விவளை மணந்துதன் னுளுலந் ததனால்.

(இ-ள்.) (சிவபெருமானாக) நிற்கவும், பண்டைய விருத்தவடிவம் நீக்கி எம்பெருமானது திருவுருவெடுத்தது எவ்வாறு? என்று கேட்கவும், (சிவபெருமான்) புன்னகைசெய்து, இப்பெண் முற்பிறப்பில் நூல்களைக் கற்றுப் பொருளறிந்த சுபாசு என்னும் பெயரையுடைய வேதியனது புதல்வி ; இவள்பெயர் சுபானனை ; நல்ல தவங்களைச்செய்யும் நயித்துருவென்பவன் இவளை விவாகஞ்செய்து தன் வாழ்நாள் கழிந் திறந்ததன்மையால். எ-று. (அ)

கைம்மையா யிவளு மந்நெறி வழாது கடவுளர்ப் பேணியெஞ் ஞான்று, மும்மையி னேற்ற வருந்தவப் பேற்றா லுரவுத்தோள் வழுதிதன் மகளா, யிம்மையி னுதித்துன் மனைவியா யினணீ யிறந்தமுற் பவத்தினில் வளங்கூர், செம்மைசேர் மதுரா புரியினுன் மறைதேர் சிவசன்ம னெனும்பெயர் தரித்தாய்.

(இ-ள்.) இவள் விதவைத்தன்மை யடைந்தும், அக்கற்பின்வழி தவறாமல் எக்காலமும் கடவுளைப்பணிந்து அந்தப் பிறவியில் அருந்தவங்களைச் செய்த பலத்தால், வலிதங்கிய புஜபராக்கிரமத்தினையுடைய பாண்டியன் புத்திரியாக இப்பிறவியிற் பிறந்து உனது மனையாட்டியானாள் ; நீயோ கழிந்த முற்பிறப்பில வளப்பமிகுந்த செம்மைபொருந்திய மதுராபுரியிலே (வேதியகுலத்தில்) நான்கு வேதங்களையும் நன்குணர்ந்த சிவசன்மன் என்னும் பெயரையடைந்தாய். எ று.

வளங்கெழு மாயா புரியினி லுடல மாய்ந்ததால் வைகுந்த மதனிற்
களங்கனி வண்ணன் மலரடி தொழுது கழிபெரும் போகங்க ளுகர்ந்து
விளம்பருஞ் சேட புண்ணிய மதனா னந்திவர்த் தனமென விளங்குந்
துளங்கலி றேயத் தரசனாய்த் தோன்றிச் சுரிகுழ லோடுமீங் கடைந்தாய்.

(இ-ள்.) வளப்ப மிருந்த மாயாபுரியில் உடலைவிட்டிறந்த தன்மையால், வைகுந்தத்தில் களாப்பழம்போலுங் கருநிறமுடைய விஷ்ணுவினது மலர்போன்ற திருவடிகளைப்பணிந்து மிகுந்த பெருமைவாய்ந்த பலபோகங்களை யனுபவித்து, சொல்லுதற்கரிய பிருதியான புண்ணியத்தால் களக்கமில்லாத நந்திவர்த்தனமென்று பெயர்விளங்குந் தேசத்திற்கு அரசனாகப்பிறந்து, நெருங்கிய கூந்தலையுடைய இவளுடன் இங்கே வந்தனை. எ - று. (௧௦)

வேந்தநீ யமைத்த விலிங்கநன் னுமம் விருத்தகா ளேசுர மாக
வாய்ந்தநன் மலரா லருச்சனை புரிந்தோ ரரும்பெறன் முத்தியி னடைக
மாந்தளிர் மேனி யணங்கொடு நீயும வருகென மலர்க்கரம பற்றிப் [வான்.
பூந்துணர்க் கொன்றை வெறிமணங் கமழும் புராரிதன் னிலிங்கத்திற் புகு

(இ-ள்.) அரசனே! நீ இங்கே பிரதிட்டைசெய்த சிவலிங்கக் குறியினது திருப்பெயர் விருத்தகாளேசரமென வழங்குவதாக; (குற்றமின்றி) ஆராய்ந்த நல்ல மலர்களால் அதனைப் பூசித்தவர்கள் பெறுதற்கரிய மோட்சலோகத்திற் சேரக்கடவர்; மாந்தளிர்போலும் நிறமமைந்த (அனங்கலேகையாகிய) உனது மனைவியுடனே நீயும் (என்னோடு) வரக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளி, தாமரைமலர்போலுங் கைகளைப் பிடித்துக்கொண்டு, தேனமைந்த கொன்றைமலர்க்கொத்துகளின் வாசனைவீசும் (சடையையுடைய) திரிபுரதகனராகிய சிவபெருமான் தனது சிவலிங்கக்குறியில் உட்செல்லுவர். எ - று. (௧௧)

என்றவர் கூற வருமறை யோனு மீர்ந்துழாய் மாயவன் பதத்திற்,
சென்றினி தடைந்து பெறலரும் போகந் திளைத்தபி னந்திவாத் தனத்தி
ல், வென்றிவே விறையாய்க் காசியி லடைந்து மேதகு முத்தியெய் தின
னென், றின்றமிழ் முனிவன் விழைவொடு முலோபா முத்திரைக் கினிதி
யம் பினனால்.

(இ-ள்.) என்று அந்த (சுதன்மன் - சுசீலன் என்னும்) விஷ்ணுகணத்தலைவர்கள் சொல்ல, அரிய வேதங்களையுணர்ந்த சிவசன்மாவும் குளிர்ந்த துளவமாலையணிந்த விஷ்ணுபதவியில் இனிதாகப்போய்ச் சேர்ந்து, பெறுதற்கரிய போகங்களை அனுபவித்த பிறகு, நந்திவர்த்தனநாட்டிலே வெற்றிபொருந்திய வேலேந்திய (விருத்தகாளனென்னும்) அரசனாகி, காசிக்ஷேத்திரத்தைச் சேர்ந்து, மேம்பாடு பொருந்திய மோட்சத்தை யடைந்தான். என்று மதுரம்பொருந்திய தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் (தமது மனைவியாகிய) உலோபாமுத்திரை யம்மையாருக்குச் சந்தோஷத்துடன் இனிதாக எடுத்துச்சொல்லினர். எ-று. (௧௨)

[தீர்த்தமகிமையுரைத்த அத்தியாயம் ௧௦௬ - வது பக்கம் "பன்னிகேள்" என்னுஞ் செய்யுள் முதல் இதுகாறும் அகத்தியமுனிவர் உலோபாமுத்திரைக்கு ஸ்ரீசைலத்திலிருந்து சொல்லியவை ஆங்கு இதுபோல [] இக்குறியிட்டு வரைந்திருக்குங் குறிப்பைக் கண்டுகொள்க.]

சிவசன்மா முத்திபெற்ற அ-ம். முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௪௨௧.

ஏகனு யிருக்கு மேலவை யென்னினீங் கரிய ளென்று
மோகமில பிரதானே யென்று மொழிபிர கிருதி யென்றும்
போகமே புரியும் புத்தி தத்துவச் செனனி யென்று
மோகையின மறைகள் கூறு முனையினி யளித்திட் டேனல்.

(இ-ள்.) யான் ஒன்றியாக விளங்குகையில் என்னைவிட்டுப் பிரிதற்கரிய வள் என்றும், மயக்கமில்லாத (தெளிவையுடைய) பிரதானையென்றும், சொல்லப் படுகின்ற பிரகிருதியென்றும், (ஆன்மாக்களுக்குப்) போகங்களையுண்டு பண்ணுகிற புத்திதத்துவத்துக்குச் சிரமென்றும் சந்தோஷத்துடன வேதங்கள் முறையிடுகின்ற உன்னைப் பினனர் பெறத்தந்தனன. எ - று. (ச)

பன்னெடும் பூத மெலலாம் படைக்குமுன் பவளச் செவ்வா
யுன்னொடு மினிது வைக வொளிதிகழ் மஞ்ச மாக
மன்னுமிக் காசி தன்னை வகுத்தன னென்ன வெந்தை
யென்னம ரன்னை யோடு மினிதெடுத் தியமபல செய்தான்.

(இ-ள்) பவளம்போலுஞ் சிவந்தவாயையுடைய உமையே! பலகுணங்களையுடைய ஐம்பெரும் பூதஙகளையுஞ் சிருட்டிசெய்வதன முனனரே, உன்னுடன் சந்தோஷமாக வசிக்க, பிரகாசிக்கின்ற கட்டில்போல நிலைபெற்றிருக்கும் இந்தக் காசிக்ஷேத்திரத்தை உண்டாக்கினேன என்று எமது தந்தையாகிய சிவபெருமான் எமது தாயாகிய உமாதேவியுடன் இனிதாக எடுத்துத் திருவாய்மலர்ந்தருளினர்.

உடைதிரைப பரவை யேழு முடைந்துய ரண்ட கோடி
யடைவுகெட் டிறந்த ஞான்று மமலனு முமையு மாக
விடலரி தாகி யீங்கு வீற்றினி திருத்த றன்னு
லிடுபெய ரிதற்கு நாளு மவிமுத்த மென்பா மாதோ.

(இ-ள்.) மறிகின்ற அலைகளையுடைய சத்தசமுத்திரங்களும பெருக்கெடுத்து,உயர்வாகிய பல்லாயிரங்கோடி அண்டங்களும் நிலைகுலைந்து அழிந்தஊழிகாலத்திலும், சிவபெருமானும் உமாபிராட்டியாருமாக நீஙகாமல் இக்காசிநகரத்திலெழுந்தருளியிருத்தலால், இந்நகரத்துக்கு எக்காலத்தும இடப்பட்டபெயர் அவிமுத்தம் என்று மேலோர் கூறுவர். எ - று. (ரு)

பொருவரு மறைக ணான்கும் புனைந்துரை யென்று கூறு
மருளுடை மாந்தர்க் கிந்த மறைமொழி யுரைக்கிற் றீதாந்
திருவமர் காசி நாளுஞ் சிவானந்த மளிக்கு மாற்றாற்
பெருகுமா னந்த கான மெனும்பெயர் பெற்ற தன்றே.

(இ-ள்.) சமானங்கூறற்கரிய நான்குவேதங்களும் பெருக்கிச் சொல்லப்பட்டவை என்று பிதற்றுகின்ற மயக்கம்பொருந்திய (தெளிவில்லாத) மனிதருக்கு இவ்வேதவாக்கியத்தைப் போதித்தால் கொடியதாகும்; செல்வம்பொருந்திய காசி க்ஷேத்திரம் எக்காலமும் சிவானந்தவாழ்வைத் தருகின்ற தன்மையால் ஆனந்தகான மென்னும் உயர்வாகிய பெயரையடைந்தது. எ - று. (சு)

பொன்னவிர் கடுக்கை வேய்ந்த புனிற்றிளந் திங்கட் கண்ணி
முன்னவன பின்னு மற்றோ புருடனை முறையி னல்க
மன்னிய விச்சை யாற்றன் வாமபா,கததை நோக்க
மின்னகு பரிதி யேந்தும விண்ணவ னுதித்தா னன்றே.

(இ-ள்.) பொன்போலுவ விளஙகுகினற கொன்றைமாலையுடைய திரா [illegible] பிறைசசநதிரனைச சிரசிறறரிதத சிவபெருமான இன்னும [illegible] றையாகப பெறும்படி பொருநதிய விருபபத்துடன தமது [illegible] க்க, மின்னலைக்கக்குகின்ற சக்கராயுதமேநதிய விஷ்ணுமூர்த்தி (ஆகத்ரு-து) [illegible] தரித்தனர். எ - று. (அ)

தண்ணறும பூவை வண்ணன் றுமகை வதன நோக்கி
நண்ணுமின பெயரொன் ருன்று நாரண னுக மற்று
னுணணிக ழுயிர்ப்பு வேத மவற்றினு லெவையு மோாகென்
றண்ண லு முலகம பூத்த வணங்கொடு மறைந்து போனுன்.

(இ-ள்.) குளிர்ந்த வாசனைவீசும் காயாம்பூ வண்ணராகிய விஷ்ணுமூர்த்தி யைப்பார்தது, பொருந்திய உனது பெயர் நாரணன் என்று விளங்குவதாக; உன னிடத்தில் விளஙகும சுவாசம் வேதமாகும்; அதனாலே நீயாவையும் அறியக்கட வாய் என்று திருவாய்மலர்ந்தருளி, சிவபெருமானும் சர்வாண்டங்களையும்பெற்ற உமையம்மையாருடன் அந்தர்த்தானமாயினா. எ - று. (கூ)

ஐயன தாளை சென்னி கொண்டலர் கமலக் கண்ணன்
கையுறு நேமி யாலோர் கடிமலர் வாவி தொட்டு
மெய்யுறு வெயர்வு தன்னு னிறைத்தவன் கரையின் மேவி
மையிலாத தயுத மாணடு வான்றவ மாற்றி னுனே.

(இ-ள்.) தாமரைமலாபோன்ற கண்களையுடைய விஷ்ணுமூர்த்தியானவர், சிவாக்கினையைச் சிரமேற்கொண்டு, தமது கையிற்பொருந்திய சக்கரத்தால் வாச னைதங்கிய மலாகள நிறைந்த ஓர்தடாகந்தோண்டி, உடலிற்பொருநதிய வேர்வை நீரால் அதனை நிரமபச்செய்து, அத்தடாககக்கரையிலிருந்து ஐமபதினுயிரவருட காலம் சிறந்த தவஞ்செய்தனர். எ - று. (க௦)

சேட்டிளம் பரிதி யன்ன திருமணி கிடந்த மார்ப
னீட்டிய தவத்தை நோக்கி யிளம்பிறைக் கண்ணி யெந்தை
பாட்டளிக் கூந்தற் செவ்வாய்ப் பவையொடு மினிதி னெய்தித்
தோட்டல ரிதழித தணடார்ச் சுடாமுடி துளக்கிச் சொலவான்.

(இ-ள்.) பெருமைவாய்ந்த பாலசூரியனபோன்ற சிறந்த கவுததுவமணி விளங்கும மார்பராகிய விஷ்ணுமூர்த்தி செய்த தவததைக்கண்டு, இளமபிறைச் சந்திரனைமாலையாகத்தரித்த எமது தந்தையாகிய சிவபெருமான பணபாம்ப வண்டு கள்மொய்த்தஅளகபாரத்தையும் சிவந்த வாயையுமுடைய பாாவதிதேவியாருடன

இனிதாகக் காட்சியளித்து, இதழ்கள் விரிந்த குளிர்ந்த கொன்றைமாலையுடைய ஒளிவீசும் முடியையசைத்துச் சொல்லத்தொடங்கினர். எ - று. (கக)

முருகவிழ் துளவத் தண்டார் துயல்வரு முழவுத் திண்டோட்
டிருமறு மார்ப வுன்றன் செய்தவ மகிழ்ச்சி கூர்ந்தேங்
கருதுவ யாவு மின்னே தருகுவங் கழறு கென்ன
வுருகிய வுள்ளத் தோடும் பணிந்தவ னுரைக்க லுற்றான்.

(இ-ள்.) மணநாறுங் குளிர்ந்த துளவமாலையசைகின்ற மத்தளம்போன்ற வலியமைந்த தோள்களையுடைய விஷ்ணுவே! உனது தவச்செயலுக்கு மனங்களித்தோம்; விரும்பிய எல்லாவரங்களையும் இப்பொழுதே கொடுப்போம்; சொல்லக்கடவாய் என்று கேட்க, உருகுகின்ற மனதுடன் நமஸ்கரித்துச் சொல்லத்தொடங்கினர் (திருமால்) எ - று. (கஉ)

நீற்றொளி பழுத்த மேனி நிமலவோர் சிறுவ னுய்யக்
கூற்றுயி ருண்ட வெற்றிக் குரைகழற் கமலப் போதிற்
போற்றுமென் னிதயத் தும்பி பொருந்தியெஞ் ஞான்று நீங்கா
மாற்றரு மயக்க நீர்ந்து வதிந்தினி திருத்தல் வேண்டும்.

(இ-ள்.) திருவெண்ணீற்றின் பிரகாசமிக்கதிருமேனியையுடைய நின்மல சொரூபியாகிய சிவபெருமானே! ஒரு சிறுபிள்ளை உயிர்பிழைக்கும்படி இயமனது உயிரைக்குடித்த சத்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடியாகிய தாமரைமலரில் துதிக்கின்ற எனது மனமாகிய வண்டு எக்காலமும் பிரியாமற் படிந்து, நீக்கற்கரிய மயக்கத்தையொழித்து இனிதாகத் தங்கியிருக்க வேண்டுகிறேன். எ - று.

சிறுவன் என்பதை மார்க்கண்டமுனிவன் எனறாவது சுவேதன் என்றாவது கொள்க. (கங)

என்றலு முலகம் யாவும் வெருவர வாற்றி யெய்துங்
கன்றிள மறிமா னேந்து கண்ணுதற் கடவு ளேக்கிக்
குன்றினின் மாரி காத்த குரிசினீ விழைந்து கேட்ட
மன்றநல் வரங்க ளியாவு மகிழ்வொடும் வழங்கி னேமால்.

(இ-ள்.) என்று விஷ்ணுமூர்த்திசொல்லவும், எல்லாவுலகங்களையுந் துன்பப்படுத்திவந்த இளமைவாய்ந்த சிறுமான்கன்றையேந்திய நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான்பார்த்து, கோவர்த்தனகிரியால் மழையைத்தடுத்த விஷ்ணுவே! நீவிரும்பிக்கேட்ட நல்லவரங்களெல்லாம் நிலைபெற்றிருக்கும்படிக் களிப்புடன் அனுக்கிரகித்தோம். எ - று.

சிவபிரான் மானேந்திய சரிதம்.

யாகம் ஒன்றே முத்தி தருமெனக்கருதி, தன்னைப் பணியாத தாருகாவனத்து ரிஷிகள்பால் சிவபிரான், விஷ்ணுவை மோகினிவடிவேற்று அவர்முன்செல்லவிடுத்து, அம்முனிமாதர் வசிக்கும் வீதியில் தாம் பிக்ஷாடனத் திருவுருக்கொண்

டெழுந்தருள, அதுகண்ட அம்மடவார் மோகமிகுந்து பின்றொடர்ந்துபெருமானல் எண்ணாயிரம் புதல்வரை அப்பொழுதே பெற, பெருமான தமமைநோக்கித் தவஞ் செய்யும்படி அவர்களை விடுத்தனர். விஷ்ணுவாகிய மோகினி வரக்கண்ட இருடியர் அவள்பின் றொடர்ந்து தம் பத்தினிமார்பாற் சென்று கற்பழிந்திருப்பது கண்டு சினந்து அவவாறு கற்பழிந்ததோனைக கொலலுதுமென அபிசாரவேள்வி செய்து அதில் பிறந்த புலி—மழு—மான - சர்பபஙகள் - பூதர் - வெண்டலை - தமருகம்-முயலகன எனனும் இவற்றைவிட, சிவபெருமான் புலியை யுரித்து வஸ்திரமாகத்தரித்து, பூதரைச சேனையாகவிருக்கச்செய்து, முயலகனைத் தாளால் மிதித்து, மற்றவைகளைத திருமேனியில் அணிந்துகொண்டனா என்பது இதனை,

கந்தபுராணச்சுருக்கம் தக்ஷகாண்டம்.

"தீதின் மாதர்கள் கற்ப ழித்தவ னைச்செ குத்திடு வேமெனு
மாத ழற்கொண் மகம்பு ரிந்ததின் வந்து வந்துபி றந்திடுங்
காது வெம்புலி பரசு நவலி கடும்ப ணித்திரள் பூதர்கள்
மோது வெணடலை திண்டி நற்றுடி முயல கன்றனை யேவினர்.

வேங்கை தன்னை யுரித்து டுத்தனன் மிக்க சாரதர் தானையாய்ப்
பாஙகு றும்படி யோதி னுனொரு பாத வண்கம லத்தினு
லேங்கு றும்படி முயல கன்றனை யீடி னேடு மிதித்தனன்
வாங்க ருங்கவி னுற்ற மேனியின் மற்றை யாவு மணிந்தனன்."—என்பதனு னுணாக.

இந்திரன பகைமைகொண்டு விடுத்த சத்தமேகங்களைத் தடுத்து, பசுமந்தையைக் காக்கும்படி கண்ணபிரான் கோவர்த்தனகிரியைக் குடையாகப பிடித்தனர் என்பது. இதனை,

கூர்மபுராணம் கண்ண னவ ரித்தபடலம்.

"காரேழுமெ ழுந்தோரொழு கடல்வற்றமு கந்தாங்
கோர்தாரைநல் லயிராவண முயாதீள்கர மொப்ப
வாராவுமிழ் தலுமானிரை துயராதணி துளவோன்
பேராவுயர் கோவர்த்தனங் கொடையாமெனப் பிடித்தான்." — என்பதனுலுணர்க. (கச)

களங்கனி யனைய மேனிக் கண்ணநின் றவத்தென் சென்னி
துளங்கலுங் குழையிற் றூழ்ந்த சுடர்மணி விழுந்த வாற்றால்
வளங்கெழு மிகத வாவிக் கொளிமணி கன்னி கைப்பேர்
விளங்குக விதனிற் றோய்ந்தோர் பெறலரும் வீடு சேர்வார்.

(இ - ள்.) களாப்பழம்போன்ற நிறத்தையுடைய விஷ்ணுவே! உனதுதவத்துக்காக (மகிழ்ந்து) எனதுசிரமசையவும், குண்டலத்தில் அசைந்துகொண்டிருந்த பிரகாசம்பொருந்திய மாணிக்கம் விழுந்ததன்மையால்,வளப்பமிகுந்த இந்ததீர்த்தத்திற்கு ஒளியமைந்த மணிகன்னிகையென்னும் பெயர் விளங்கக்கடவது;இதில் மூழ்கினோர் பெறுதற்கரிய மோட்சவீட்டை யடைவார்கள். எ - று. (கரு)

நால்வகைத் தோற்றத்துள்ள வுயிரெலா நலங்கொள் வாவிப்
பாலுயி ருலப்பின் மீளாப் பதத்தினிற் சேரு மியாருங்
காலவன் பாசந் தத்தங் கழுத்துறப் படட தன்மை
மாலற வுணர்ந்து மென்னோ காசியின் மருவல் செய்யார்.

(இ-ள்.) நான்கு வகைப்பட்ட தோற்றத்தையுடைய (எழுவகைப்பிறவி யடைந்த) எல்லா வுயிர்களும், நன்மை பொருந்திய இம்மணிகன்னிகைக் கருகில் இறந்தால், நீங்காப்பதவிகளை யடையும்; இயமனது வலியமைந்த பாசமானது தங் கடங்களது கழுத்தில் வருந்தன்மை எல்லோரு மறிந்தும் மயக்கம் நீங்கும்படி காசி க்ஷேத்திரத்தில் ஏனோ சேரமாட்டார்கள். எ - று.

நால்வகைத் தோற்றமாவன:— அண்டசம்-சுவேதசம்-உத்பீஜம்-சராயுசம் அவை முறையே முட்டை-வியர்வை-நிலம்-கருப்பை இவற்றினின்றும்பிறப்பன.

யோசனை நூற்றுக் கப்பா லுறைகுந ரேனு மிந்தக்
காசியை நினைந்து வீயிற் கற்பகத் தருவி னீழற்
றேசொடு மமர்ந்து பின்ன ரரசராய்ப் புவியிற் சேர்ந்து
மாசிலிந் நகரின் மேவி மருவரும் வீடு சேர்வார்.

(இ-ள்.) நூறுயோசனைதூரத்திற்கப்பால் வாழ்வோராயினும், இந்தக்காசி க்ஷேத்திரத்தை எண்ணிக் கொண்டு இறந்தால், கற்பகவிருக்ஷத்தின நீழலில கீர்த்தியுடன் பொருந்தியிருந்து, பிறகு பூமியில் மன்னவராகத்தோன்றி, குற்றமில்லாத இந்த நகரத்தை யடைந்து, கிடைத்தற்கரிய மோக்ஷத்தைப்பெறுவார்கள். எ-று.

உருவரும் பொருளு மாக்கை யிளமையு மொருங்கு நோக்கி
யரிவையர் முயக்கி னுள்ள மகிழ்ந்துவெவ் வழல்கட் கூற்றி
னெருமையே றணிந்த கண்டை யொலிசெவிக் கிசைத்த தென்னு
மருவரும் காசி சேரார் மக்களுட் பதடி யாவார்.

(இ-ள்.) நல்வடிவமும், பெறற்கரிய பொருளும், உடலின் இளமையும், ஒன்றாகக் கண்டு (அவை நிலையுள்ளன வல்லவென் றுணராது) மாதாபோகத்தில் மனங்களித்து அக்கினிக்கண் பொருந்திய இயமனது எருமைக்கடா அணிந்திருக்கும் எறிமணியோசை காதுகளிற் கேட்டது என்று, கிடைத்தற்கரிய காசிக்ஷேத்திரத்தை யடையாதவர்கள் மனிதர்களுட் பதர் என்றெண்ணப் படுவார்கள். ()

மணிகன்னிகையின் சிறப்புரைத்த அ - ம்

முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - எ௫௩.

சிவமயம்.

## இருபத்தேழாவது,

## கங்கையின் சிறப்புரைத்த அத்தியாயம்.

ஆதி யுகத்தில் யோகத்தான் முத்தி யடையு மதன்பின்ன
ரோது முகத்தி லருந்தவத்தான் முத்தி யுளதா மோங்கரிய
சோதி ஞானத் தான்முத்தி மூன்று முகத்திற் றுன்னுமுயிர்
காத லோடுங் கலியுகத்திற் கங்கைப் படியின் வீடடையும்.

(இ-ள்.) முதலாவதாகிய கிருதயுகத்தில் (ஆன்மாக்கள்) யோகசாதனத்தால் முத்தியடையும்; அதற்குப் பின்னுகச்சொல்லுகின்ற திரேதாயுகத்தில் அரிய தவஞ்செய்தலால் முத்திபெறும்; மூன்றுவதான துவாபரயுகத்தில் சிவஞானத்தினுல் முத்தியெய்தும்; கலியுகத்தில் பொருந்திய உயிர்களெல்லாம் ஆசையுடன் கங்காஸ்நானஞ்செய்யின் கதியடையும். எ - று.

சோதி=சிவன்; ஆதலால் சோதிஞானம் என்பதற்குச் சிவஞானமென்றும். (க)

அன்பின் மலர்தூய்ச் சிவலிங்க மருச்சித் தோரக ளமரரெல்லா
மின்ப மெய்த வழிபட்ட பலனெய் துதலபோ லடைந்தவாதந
துன்ப மகற்றும் புனற்கங்கை தோய்ந்தோர் கடவு ணதியனைத்து
நன்கு படியும் பேறனைத்து மொழியா தினிது நண்ணுவரால.

(இ-ள்.) ஆசையோடு (இக் காசிநகரத்தில ஒரு) சிவலிஙகக்குறியை மலர் சாத்திப்பூசித்தவர்கள், தேவர்களெல்லாருஞ் சநதோஷமடையும்படி அருச்சனை செய்த பயனடைவதுபோல, தன்னையடைந்து மூழ்கினேரது பிறவித்துன்பத்தையொழிக்கும் நீரையுடைய கங்காநதியில் ஸ்நானஞ்செய்தோர்புண்ணியநதிகளி லெல்லாம் நன்றாக மூழ்கினோர் அடையும்பலனை யெல்லாம் நீங்காமல் இனிதாகப் பெறுவார்கள். எ - று. (உ)

கடவுட் கங்கை நதிப்படிவான் செல்ல வொருவன் கருதுமுன
மிடர்கூர் பாவ மவனையொழிந் தியாண்டு செலவோ மெனக்கருதும
விடய மதனின் மனமபோகா தடக்கி ஞான வெறுவெளியி
லடையு மவருங் காசிநக ரடைவார் பெறும்பே றடையாரால.

(இ-ள்.) தெய்வீகம் பொருந்திய கங்காநதியில் மூழ்கும்படி (தீர்த்தயாத்திரை) போக ஒருவன் நினைக்குமுன்னரோ (அவனது) துன்பமிகுநத பாவமானது அவனைவிட்டு விலகி எங்கேபோவோமென்றெண்ணும்; விடயவாதனையில் மனத்தைச் செல்லாமற்காத்து ஞானமாகிய சுத்தவெளியில் பொருந்தினவர்களும், காசிநகரத்தைச் சேர்ந்தவர்கள் அடையும்பலனைப் பெறமாட்டார்கள். எ - று. (ங)

கும்ப மொருகைதனிலேந்தி யொருகை குளிர்பூம் புனல்சொரிய
வம்பொற் கரமொன் றருள்வரத மபய மொருகை யாகவமைத்
தும்பர் மதிய மொருகோடி யொளிர்வ தென்ன வொளிபரப்பும்
பமபு திரைவான் புனற்கங்கை தன்னை யுளத்திற் பாவித்தே.

(இ-ள்) ஒருகையில் குடத்தைத்தாங்கி ஒருகையில் தண்ணிய நீர் சொரிய, அழகியபொலிவுற்ற ஒருகை கிருபைசெய்கின்ற வரதாஸ்தமும், ஒருகை அபயாஸ்தமுமாகப்பொருத்தி, ஆகாயத்திலுள்ள சந்திரன் கோடிக்கணக்கிற் பிரகாசிப்பதுபோல ஒளியைப்பரவச்செய்யும் ஒலிக்கின்ற அலைகளையுடைய சிறந்த நீர்மயமானகங்கையை மனதில் தியானித்து. எ - று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (௪)

அருளி னோடு மருக்கியமே முதல வழிபா டினிதாற்றித்
தெருளா லென்னை நான்முகனைத் திருமா றன்னை யிமவானை
மருளி றவத்துப் பகீரதனை மலயச் சாந்தால் வாலரியால்
விரகி னமைத்துக் கொழுமலர்தூய் விருப்பி னோடும் பணிந்தேத்தி.

(இ-ள்.) கிருபையுடன் அருக்கியம் முதலாகச் சொல்லப்பட்ட வழிபாடுகள் இனிதாகச்செய்து ஞானத்தினால் என்னையும், பிரமனையும், விஷ்ணுவையும், இமாசலமன்னனையும, மயக்கமில்லாத நல்லதவத்தையுடைய பகீரதனையும், பொதியமலையிற்றோன்றிய சந்தனத்தாலும் வெண்மைவாய்ந்த அரிசியாலும் ஆசையுடன் உருவாகச்செய்து மதர்த்த மலர்களானருச்சித்து அன்புடன் வணங்கித் துதித்து. எ - று.

[மணிகன்னிகையின் சிறப்புரைத்த அத்தியாயம் முதல் நூல் முடியுமெல்லையும் ஸ்ரீமுருகக்கடவுள் அகஸ்திய முனிவருக்குபதேசித்ததாக விருப்பினும், அவற்றுள் முதலிலுள்ள மணிகன்னிகையின் சிறப்புரைத்த அத்தியாயம் முதல் கங்கையின் ஆயிரநாமமுரைத்த அத்தியாயவரையிற் கூடிய நான்கு அத்தியாயங்களும்சிவபெருமான் (விஷ்ணுமூர்த்திக்குப்போதித்தமுறையை) உமாதேவியாருக்குத் திருவாய்மலர்ந்தருளிய கிரமத்தில் அவ்வாறே சொல்லப்பட்டிருக்கின்றன.] ஆதலால், இச்செய்யுளில் என்னை என்பது சிவபெருமானை யுணர்த்திற்று எனவுணர்க. (௫)

கன்னி வாழைக் கவிழ்தாற்றுக் கனியெட் பயறு செழுந்துவரை
யின்ன மறையோர் மகிழ்வெய்த வீந்த நல்கி மீனமை
யன்னந் தவளை நீர்க்காக்கை குரண்ட முதல வணிகிளர்செம்
பொன்னின்மாவில்வெள்ளிதனி லமைத்துக் கங்கை யிடைப்போக்கி.

(இ-ள்.) அழியாத வாழையினது தொங்குகின்ற குலையிற் பழுத்தபழம்- எள்-பயறு - செழுமைவாய்ந்த துவரை இன்னும் இவைபோன்ற பொருள்களில் வேதியர் களிப்படையத் தம்மாற் கூடியவற்றைத் தானமாகக் கொடுத்து, மச்சம்- யாமை - அன்னம் - தவளை - நீர்க்காக்கை - காக்கை முதலான பிராணிகள்போல

அழகுவிளங்குஞ் செம்பொன்னாலாவது மாவினாலாவது வெள்ளியாலாவது (தங்கள் நிலைமைக்குத் தக்கபடி) செய்து,கங்காசலத்திற் செலவிடுத்து. எ - று. (௬)

வாழை-ஏனை மரங்களைப்போலாது, பயனளித்தல்தோறும் தலையிற்றாகவே யிருத்தலானும், சிறுதுமரங்கள் தம்மோடு வேரற்றுப்போவதுபோலல்லாமல் "வாழையடிவாழை" என்னும் பழமொழிக் கேற்கத் தன்பின் கன்றுகளை யுதவலானும் "கன்னிவாழை" என்றார்.

இன்ன வாறு மகிழ்சிறப்பப் பூசை புரிந்தோ ரெழுபிறப்பு
முன்ன வரிய கொடும்பாவ மனைத்து நீங்கி முதுக்குறைவாற்
றன்னை யுணர்ந்து முழுதுலகத் தானுயுறையுந் தவத்தோருந்
துன்ன வரிய பேரின்பத் துறைவாய்ப் படிந்து திளைத்திடுவார்.

(இ-ள்.) இவ்விதமாகக் களிகூரும்படி பூசித்தவர்கள் ஏழு தலைமுறைகளிலும் (அல்லது ஏழுவகைப் பிறவியிலும்) செய்த நினைத்தற்கரிய கொடுமைதங்கிய எல்லாப் பாவங்களும் ஒழிந்து,பேரறிவுடன் தமது இலக்கணத்தை யறிந்து, உலகமெல்லாம் தானாக வசிக்கின்ற பெருந்தவசிகளும் அனுபவிப்பதற்கரிதாகிய பேரின்பக்கடலில் மூழ்கி (சிவாநந்தவாழ்வை) அனுபவிப்பார்கள். எ - று. (எ)

கங்கையின்சிறப்புரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் எ௬0.

சிவமயம்.

இருபத்தெட்டாவது,

## கங்கையில் எலும்புவிழுந்த அத்தியாயம்.

கழிந்தோ ரென்பு திரைபுரட்டுங் கங்கை யாற்றி னெத்துணைநாள்
றழிந்தி டாது கிடந்திடுமற் றந்நாள் காறு மாங்கவர்கள்
விழைந்த வன்போ டரமகளிர் வேய்மென் றடந்தோ ளலனுகர்ந்து
வழிந்து தேறன் முருகுபிரக்குந் தருவி னீழல் வாழ்குவரால்.

(இ-ள்.) இறந்தோ ரெலும்புகள், அலைகள் மடக்குகின்ற கங்காநதியில் எவ்வளவுகாலம் கெடாமலிருக்குமோ அவ்வளவுகாலமட்டும், அவனெனபினா விரும்பிய ஆசையுடன் அரம்பாஸ்திரிகளது மூங்கிலையொதத மிருதுவாகிய பூரித்த தோள்களில் படிந்து இஷ்ட போகங்களை யனுபவித்து, தேன் சொரிந்து மணங்கமழும் கற்பகவிருட்சததின் நிழலில் வாழ்நதிருப்பார்கள். எ - று. (க)

வெய்ய கொடும்பா தகம்புரிந்து விளிந்தோ ரென்பு கங்கையிடைப்
பெய்யி னவர்தீ வினையொருவிப் பெறுதற் கரிய வான்கதிசேர்ந்
துய்யுந் தன்மை யுரைத்திடென வுலகம் பூத்த திருவுநதி
யையன் றொழுது கேட்விடலு மானே றுயர்த்தோ னறைகுவனால்.

(இ-ள்.) மிகக்கொடுமைவாய்ந்த தீச்செயல்களைச் செய்து இறந்தோரது உடலெலும்பைக் கங்காநதியில் விடுத்தால், அவர்கள் பாவவினையை யொழிந்து சிறந்த பதவியையடைந்து பிழைக்கும் விதத்தைத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று, உலகங்களைத் திருவுந்திபூத்த விஷ்ணுமூர்த்தி பணிந்து வினவவும், இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமான் சொல்லத்தொடங்கினர். எ - று. (உ)

புயல்வாய் தடவு மடற்கமுகின் புனிற்றுப் பசுங்காய்க் குலைசிதறக்
கயவாய் வாளைக் களிறுகளுங் கலிங்க நாட்டி லொருமறையோன்
மயறீர் கேள்வித் துறையனைத்தும் வழுக்கி மறையோர் நெறிசிறிதும்
பயிலா னாகிப் படிற்றொழுக்கம் பயின்று திரியு மந்நாளில்.

(இ-ள்.) மேகமண்டல மளாவிய மடல்களையுடைய பாக்குமரத்தினது இளமைதங்கிய பசுமைநிறமமைந்த குலைகளிலுள்ள காய்கள் சிந்துவதால், அகழியிலுள்ள ஆண்வாளைமீன்கள் புரளுங் கலிங்கதேயத்திலே ஒரு வேதியன் மயக்கமற்ற நூற்கேள்வியின் மார்க்கங்களெல்லாந் தவறி, அந்தண ரொழுக்கம் எட்டுணையும் பாராட்டானாகி வஞ்சகநடக்கையை மேற்கொண்டுழலுங்காலத்தில்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (ங)

நல்கூர்ந் துழலுங் கைக்கோளன் மனைவி யொருத்தி கலனுகர்ந்து
செலலற கரிய கொடுங்கானிற் கரந்து சேட்சென் றடிவருந்தி
யலலல கூர்ந்து விழிதுயிலு மறையோன் றன்னை யதிவெயிற்றுக்
கொல்லுஞ் சினத்த கோளுழுவை யொன்று குறுகிக் கொன்றதுவே

(இ-ள்.) தரித்திரமிருக்து துன்புறும் ஒருகைக்கோளனது மனையாட்டியின் போகமனுபவித்து, போவதற்கரிய கொடுமைவாய்ந்தவனத்தில் கால்கள் நோவ அதிகதூரஞ்சென்று ஒளித்திருந்து துன்பமிருந்து நித்திரைசெய்யும் அப்பிராமணனை, கூர்மைபொருந்தியபற்களையுடைய கொல்லத்தக்க கோபமமைந்த வலிய புலியொன்று நெருங்கிக் கொன்றுவிட்டது. எ-று. (௪)

எரிகட் பகுவாய்ப் புலிப்போத்தா லிறந்த மறையோ னிடக்காலை
விரிமென் சிறைய கழுகொன்று கவ்வி விசும்பி னேகுங்காற்
றிருகு சினத்தி னெடுமவேறோர் தீவாய்க் கழுகு பறித்திடலும்
பெருகு திரைவான் புனற்கங்கைப் பேரா றதனில் வீழ்ந்ததுவே.

(இ-ள்.) அக்கினிபோன்ற கண்ணையும், பிளவு பட்டவாயையுமுடைய ஆண்புலியால் உயிரிழந்த வேதியனது இடதுகாலை, பரந்த மிருதுவாகிய சிறகுகளையுடைய ஒரு கழுகு கவ்விக்கொண்டு ஆகாயத்திற் பறந்து செல்லுகையில், (அதனிடத்திலிருந்து) பறிக்கத்தக்க கோபத்துடன் மற்றொரு கொடியவாயையுடைய கழுகுபிடுங்கவும், மிகுந்த அலைகள்வாய்ந்த சிறந்த நீரையுடைய கங்கையென்னும் பேர்பொருந்திய நதியில் விழுந்தது. எ-று. (௫)

இறந்த மறையோன் றனைப்பற்றி யெரிசெங் குஞ்சி நமன்றூதர்
பிறங்கு நிலவுக் கதிருமிழும் பிறைவா ளெயிற்றுக் கூற்றுவன்முன்
கறங்கி னிதயஞ் சுழன்றயரக் கடிதிற் கொடுபோ யுய்த்திடலு
மறந்தாழ் நெஞ்சிற் சித்திரகுத் திரரை நோக்கி யறைந்திடுவான்.

(இ-ள்.) உயிரிழந்த வேதியனை, நெருப்புப்போற் சிவந்த தலைமயிருடைய இயமதூதர் பிடித்துக்கொண்டுபோய், விளங்குகின்ற சந்திரிகைவீசும் பிறைபோன்ற ஒளிவாய்ந்த வக்கிரதந்தங்களையுடைய இயமதருமராஜனுக்கு முன்னே காற்றாடியையொத்து மனந்திரிய விரைவிற்கொண்டுபோய்விடவும், தருமசிந்தையையுடைய சித்திரன் - குத்திரன் (என்னுங்கணிகர்களை) பார்த்து இயமன்சொல்லுகின்றனன். எ-று. (௬)

இன்னோ னிழைத்த விருவினையும் வழுவா துரைத்தி ரெனலோடு
மன்னோர் மறலி தாள்வணங்கி யைய மறைதே ரந்தணர்க்குச்
சொன்ன வொழுக்க நெறியனைத்துந் துறந்து பிறனில் விழைந்தெவரு
முன்ன வரிய பாவமிவன் புரிந்த துரைக்க முடியாதால்.

(இ-ள்.) இவன்செய்த நல்வினை தீவினைகளை முறைதவறாமற் சொல்லுங்கள் என்று கேட்கவும்,அவர்கள் இயமனது பாதங்களைப்பணிந்து,ஐயனே! வேதமுணர்ந்த வேதியர்களுக்குச்சொல்லிய நடவடிக்கை மார்க்கங்களெல்லாம் விலகி, பிறன் மனைவியைவிரும்பி, யாவரும் நினைத்தற்கரியதாகிய பாவங்களை இவன் செய்தது சொல்லமுடியாது. எ-று. (௭)

கற்பின் மகளிர் தமைவலிதிற் கலந்துங் கள்ளுண் மாந்தருட
னற்பி னயின்றுங் கொலைகளவு புரிந்து மறவோர் தமையிகழ்ந்தும்
விற்க லாகாச் செம்பஞ்சு நறவு பகர்ந்தும் வெண்ணிணத்திற்
பற்கண மறையத் தசைநுகர்ந்தும் பன்னாள் களிப்பி னிருந்தனனால்.

(இ-ள்.) உத்தமமாதர்களைப் பலவந்தமாகச் சேர்ந்தும், மதுபானஞ்செய்வோருடன் கூடி ஆசையுடன் (கள்ளைக்) குடித்தும், கொலைத்தொழிலும் திருட்டுமியற்றியும், புண்ணியவான்களை நிந்தித்தும், விற்றற்காகாப் பண்டங்களாகிய செம்பஞ்சு - கள் இவற்றைவிற்றும், வெண்மை பொருந்திய கொழுப்பினால் பற்கள் புதையும்படி மாமிசபட்சணஞ்செய்தும், பலகாலம் மனங்களித்திருந்தான். எ-று.

எரியுங் கொடிய ரவுரவத்திற் கற்ப கால மிவன்கிடத்தற்
குரிய னெனலுஞ் சினங்கதுவி யெரிவாய் நரகி னுய்த்திடெனத்
திருகு சினவெங் காலபடர் சிக்க யாத்து மறையோனைக்
குருதி வாயிற் கொப்பளிக்கக் குத்தி நரகின் மடுத்தனரால்.

(இ-ள்.) எரிகின்ற தீமயமாகிய இரவுரவநரகத்தில் இவன் ஒருகற்பகாலம் இருப்பதற்குத்தக்கவன் என்று (சித்திர குத்திரர்) சொல்லவும், (இயமன்) கோபமிகுந்து நெருப்புப்பொருந்திய நரகத்தில் விடுங்கள் என்றுசொல்ல, திருகுகின்ற கோபத்தையுடைய இயமதூதர்கள் வேதியனைச் சிக்குண்ணும்படி பாசத்தாற்கட்டி, வாயினிடத்தில் உதிரஞ்சொரியும்படி யிடித்து, நரகத்திலழுத்தினார்கள்.

உய்க்குங் காலை யவனிடக்கா லதனை யொழுகு பசுங்குருதி
கக்குந் தீவாய்க் கழுகுபுனற் கங்கை யாற்றின் வீழ்த்தியதாற்
புக்கு நமது கணமவனைப் பொன்செய் விமானத் தினிதேற்றி
நக்க பசும்பொன் சுடர்பரப்பு நாக லோகந் தனில்விடுத்தார்.

(இ-ள்.) அவ்வாறு செலுத்துகையில், அவ்வேதியன் இடதுகாலை, சிந்துகின்ற பசிய உதிரஞ்சொரியுங் கொடியவாயையுடைய கழுகு கங்காசலத்தில் விழச்செய்ததால், நமது சிவகணத்தவர்கள் சென்று அவனைப்பொன்னாற்செய்த விமானத்தில்இனிதாக ஏற்றிக்கொண்டு மிகுந்த பசம்பொன்னின் பிரகாசத்தைப் பரவச்செய்யும் தேவலோகத்தில் விட்டார்கள். எ-று. (௧0)

அனைய கடவுட் பெயராற்றங் கரையி னொருவன் றலங்கரித்துப்
புனலி னோடு முளமகிழ்ந்து புனித மறையோர்க் கினிதளிப்பின்
வினையி னீங்கி யப்பசுவின் மெய்யின் மயிரொவ் வொன்றினுக்குக்
கனைவண் டிமிர்பூந் தருநிழலிற் கற்ப கால மினிதிருப்பார்.

(இ-ள்.) அப்படிப்பட்ட தெய்வீகம்பொருந்திய கங்கையென்னும் பெயரையுடைய நதிக்கரையிலே, ஒரு பசுவைச்சிங்காரித்து மனக்களிப்புகொண்டு பரிசுத்தமாகிய வேதியருக்கு நீரால் (தத்தஞ்செய்து) கொடுத்தால், தீவினைச் சம்பந்தத்தினின்றுவிலகி, அப்பசுவின் சரீரத்திற்பொருந்திய மயிர்கள் ஒவ்வொன்றுக்கு, சத்திக்கின்ற வண்டுகள் பண்பாடும் பூக்களையுடைய கற்பகவிருக்ஷத்தின் நிழலில் ஒருகற்பகாலம் இனிதாக வாழ்ந்திருப்பார்கள். எ-று. (௧௧)

கங்கையில் எலும்பு விழுந்த அ-ம். முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௭௧௧.

உ

சிவமயம்.

இருபத்தொன்பதாவது,

## கங்கையின் ஆயிரநாம முரைத்த அத்தியாயம்.

என்ன லோடும் புனற்கங்கை யெய்தி யாட வலியிலலார்
பின்னர் தரங்கந் தவழ்கங்கைப பெயரா ரூடும் பெரும்பேறு
துன்னும் வண்ண முரைத்தியெனச் சுடாசெய் திகிரிப் படைசுமந்த
கன்னித் துளப மாலகேட்ப முக்கட் கடவுள் கட்டுரைக்கும்.

(இ-ள்.) என்று சொல்லவும், நீர்நிறைந்த கங்காநதியை யடைந்து அதில் ஸ்நானஞ்செய்யச் சக்தியில்லாதவர்கள், அலைகள் தவழுகின்ற கங்கையெனனும் பெயரமைந்த நதியில் மூழ்கிய பெரிய பலனை அடையும் வகையைச் சொல்லவேண்டும், என்று ஒளிவீசுஞ் சக்கராயுதத்தைத் தாங்கிய இளமைவாய்ந்த துளவமாலை யணிந்த விஷ்ணுமூர்த்தி கேட்க, திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் உறுதிப்படச் சொல்லுவார், எ-று. (க)

அமுதோ தகையச் சுதையனகை யதுலை யனந்தை யபிராமை
கமலை கவுரி கந்தவதி கங்கை கரந்தை கலியாணி
யுமையா மனையா னந்தவல்லி யேகை யுதாரை யோங்காரை
விமலை தாரை பராநந்தை விபூதி தேசை யாசாரை.

(இ-ள்.) அமுதோதகை-அச்சுதை-அனகை-அதுலை-அநந்தை-அபிராமை கமலை-கவுரி-கந்தவதி-கங்கை-கரந்தை-கலியாணி-உமை-யாமனை - ஆனந்தவல்லி - ஏகை-உதாரை-ஓங்காரை-விமலை-தாரை-பராநந்தை-விபூதி-தேசை-ஆசாரை. (உ)

கருணை யகோரை பராசத்தி காந்தி துர்க்கை நிராலம்பை
வரதை காம ரூபைதிரி பதகை யபையை வசுதாரை
பரையீ சுரைவல் லபைசொரூபை பானு மதிசூ லினிவிசையை
மிரதை யனுத னுதைதவ ரூபை மாதா விபாவரியே.

(இ-ள்.) கிருபைவாய்ந்த அகோரை-பராசத்தி-காந்தி - துர்க்கை-நிராலம்பை-வரதை-காமரூபை-திரிபதகை-அபையை-வசுதாரை-பரை-ஈசுரை-வல்லபை-சொரூபை-பானுமதி-சூலினி-விசையை-மிரதை-அனுதனுதை-தவரூபை- மாதா-விபாவரி. எ-று. (ங)

சத்தி வினதை சீலவதி தான சாரை குணதீதை
சித்திர ரூபை ரதிவாம தேவி மந்தா கினிவாணி
பத்திரை லீலா வதிசாந்தை பவானி பாகீ ரதிவிமலை
முத்தி யருண்மா வினிவேத முதலா ரியைகா யத்திரியே.

(இ-ள்.) சத்தி-வினதை-சீலவதி-தானசாரை-குணநீதை-சித்திரரூபை-இரதி - வாமதேவி - மந்தாகினி - வாணி - பத்திரை - லீலாவதி - சாநதை-பவானி-பாகீரதி - நிமலே - மோக்ஷத்தை யனுக்கிரகிக்கும் மாலினி - வேதமுதல்-ஆரியை - காயத்திரி. எ - று. (ச)

வேக வதியம் பிகையிந்திரத் துதிசந் தினிசா னவிவிளங்கு
போக வதிசொற் கலாவதியோ கினிமா தவிபுண் ணியைமுதல
வாக வருமா யிரம்பெயரு முள்ளத் துணரி னருமபிறவிச்
சோகந் தணிக்கும் புனறகங்கை தோய்ந்த பலனிங் கடைகுவரால்.

(இ ள்.) வேகவதி - அம்பிகை - இந்திரஸ்துதி - சந்தினி - சாநவி - விளங்குகின்ற போகவதி - சொல்லத்தக்க கலாவதி - யோகினி - மாதவி -புண்ணியை முதலியனவாக வருகின்ற ஆயிரந்திருநாமங்களையும் மனதில தியானிததால், அருமையாகிய பிறவித்துன்பத்தை விலக்குங கங்காநீரில் மூழ்கிய பலனை (தாமிருந்த வீட்டிலிருந்தே) அடைவார்கள். எ - று. (ரு)

இன்ன கடவு ளுமங்க ளியாவு மெழுதி மனையில்வைப்பின்
முன்னை வினைக டீர்ந்துலக முழுது மேத்த வரும்புதல்வர்
மன்னு நிதிய முதல்பெருகுந் திருவி னோங்கி வாழ்வரென
மின்னு கதிர்ச்செஞ் சடைக்கடவு டருமா லோடும் விளம்பினனால்.

(இ-ள்.) இப்படிப்பட்ட தெய்வீகம்பொருந்திய திருநாமங்களையெல்லாம் ஏட்டில் எழுதி தங்கள் வீட்டில்வைத்தால், ஜன்மாந்தரவினைகளொழிந்து, உலகத்திலுள்ளோரெல்லாந் துதிக்க அருமையாகிய புத்திரர்கள்- நிலைபெற்ற செல்வம் முதலாக வளர்கின்ற இலக்குமிவிலாசம் மிகுந்து வாழ்வார்களென று, மினனலைப் போல் ஒளிவீசுஞ் செவ்விய சடையையுடைய சிவபெருமான் விஷ்ணுமூர்த்திக்கு உபதேசித்தனர். எ - று. (சு)

கங்கையின் ஆயிரநாம முரைத்த அத்தியாயம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ளளஎ.

சிவமயம்.

முப்பதாவது,

## வாராணசி சிறப்புரைத்த அத்தியாயம்.

சகரர்வீட் டின்பந் துய்ப்பத் தழங்குநீர்க் கங்கை யாற்றைப்
பகிரதன் கொணர்ந்து தெண்ணீர்ப் படுகரின் விடுத்த லானு
முகில்புரை கரிய மாயன் றவத்தினுல் முதல்வன் காதிற்
றிகழ்மணி வீழ்த லானுஞ் சிறப்புடைத் தாய தன்றே.

(இ-ள்.) சகரர் அறுபதினுயிரவர்; (கபிலமுனிவர்கோபத்தாற் சாம்பராகி நரகத்திலிருப்பது நீங்கி) மோக்ஷசுகத்தையனுபவிக்கும்படி, ஒலிக்கின்ற நீரையுடையகங்காநதியை (அவர்கள் சந்ததியிற்றோன்றிய பகீரதன் கொண்டுவந்து) தெள்ளிய நீர்மயமான படுகரில்விட்ட தன்மையாலும், மேகத்தைப்போலும் கருநிறமமைந்த விஷ்ணுமூர்த்தியின்தவத்தால் சிவபெருமானது திருச்செவியில் விளங்கும் மணிவிழுந்ததன்மையாலும் (வாராணசி) மேம்பாடுபெற்றுள்ளது. எ - று.

சகரருக்காகப் பகீரதன் கங்கைகொணர்ந்த சரிதத்தை (௫) வது பக்கத்தில் "சீர்பூத்த" என்னும் பாட்டினயின்கீழ்க் காண்க (௧)

சார்ந்தவர் பாவ நீங்கத் தகைதலான் வரணை யென்று
மார்ந்தநீர் படிந்தோர் பாவ மறுத்தலா லசியென் றுந்தான்
சேர்ந்தன நாமந் தெற்கு வடக்கதா யுண்மை தேர்ந்தோ
ரோர்ந்திடு முத்தி வைப்பின் காவலா யொழுகு மன்றே.

(இ-ள்.) அடைந்தோரது பாவச்செயலொழியும்படி தடுத்தலால் வரணை யென்றும், பொருந்திய சலத்தில் மூழ்கினோரது பாவங்களை வேரறுத்தலால் அசி யென்றும், தெற்குவடக்காகக்கூடிய உண்மைப்பொருளையுணர்ந்தோர் அறிகின்ற மோட்சத்துக்கிருப்பிடமாகிய காசிக்ஷேத்திரத்திற்குக் காவலாகவிளங்கும். எ-று.

குடதிசை யதனின் முத்தி கொடுக்குந்தே கனியென் றோதுங்
கடகரி முகத்தோன் றன்னைக் காவலா யமைத்தார் பாவத்
தொடருடை மாந்தர் காசி துன்றிடா ராத றன்று
ளுடல்கெழு கணிச்சி யெந்தை யருளின்றி யடையொ ணுதால்.

(இ-ள்.) மேலைத்திக்கில் மோக்ஷத்தையளிக்கும் தேகனி என்று சொல்லுகின்ற மதசலம்பொழியும் யானைமுகக்கடவுளைக் காப்பாகப் பொருத்தினார்கள்; தீவினைச்சம்பந்தமுடைய மானுடர்கள் காசிக்ஷேத்திரத்தை யடையமாட்டார்கள்; ஆனதன்மையால், கோபமிக்க மழுப்படையேந்திய எமது தந்தையாகிய சிவபெருமானது திருவருளில்லாமல் ஆங்குச் சேரமுடியாது. எ - று. (௩)

முருகுகொப் பளிக்குங் கொன்றை மொய்ம்மலர்க் கண்ணி யெந்தை
யருள்பெறூர் கடவுட் காசி யடைந்திடா ரதற்கு முன்ன
முறைபெறு காதை மற்றென் றுணரெனா விசும்பி னேங்குங்
குருகுபோக் குன்றங் கொன்ற குமரவே ளுரைக்கு மன்றே.

(இ-ள்.) நறுமணம்வீசும் நெருங்கிய கொன்றைமலர்மாலையணிந்த சிவபிரானது திருவருளடையாதவர்கள் தெய்வீகமமைந்த காசிநகரத்தையடையமாட்டார்கள்; அதற்குச் சொல்லுகின்ற பூர்வசரித்திரம் ஒன்றிருக்கின்றது என்று, ஆகாயமளாவிய கிரவுஞ்சகிரியைச் சங்கரித்த ஸ்ரீகுமாரக்கடவுள் (அகஸ்தியமுனிவருக்குத்) திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ - று.

குருகுபெயர்க்குன்றம்=பறவையின்பெயரையுடையமலை; அதாவது கிரவுஞ்சம் - அதைச்சங்கரித்த சரிதம் (கூ) வதுபக்கத்திற்காண்க. குமரன+வேள்=குமரவேள்—இது "சிலவிகாரமாமுயர்திணை" எனறபடி ஈறுகெட்டுப் புணர்ந்த அல்வழிச்சந்தி. விரியின் குமரனாகிய வேள் எனவரும். (ச)

கனமபடிந் துண்ணுஞ் சேதுக் கரையினிற் கருணைக் குன்றூந்
தனஞ்சய னென்றோர் நாய்க னுளனவன் றந்தை தாயை
மனஞ்செய்து வழுத்தல் செய்வோன் வான்பொரு ளீட்டி யோசை
தினஞ்செயும் வெய்யோ னாழி சென்றுழிச் செலலா நிற்பான்.

(இ-ள்.) மேகங்கள்இறங்கி நீரையுட்கொள்ளுகின்ற சேதுக்கரையிலே, கிருபாமலைபோன்றவனாகிய தனஞ்சயன் என ஒருவைசியன் உண்டு; அவன் தன் மாதாபிதாக்களைச் சிந்தைசெய்து (தினந்தோறும்) வணங்கிவருபவன்; சிறந்த பொருள்களை (வியாபாரமுயற்சியில) சம்பாதித்து, கீர்த்திதங்கிய நாள்செய்வோனாகிய சூரியன்மேற்கடலடையும் அந்திப்பொழுதில் (வீட்டுக்குப்) போயக்கொண்டிருப்பான். எ - று.

சூரியன் உதித்தலும் அஸ்தமித்தலுமே நாள்கள் உண்டாதற்குக் காரணமாதலின், சூரியனைத் தினஞ்செய்வோன் எனபர். (ரு)

பைந்துழாய்ப் படலை மாலை பண்ணவற் கன்பு பூண்டோ
னிந்திர திருவ னாகி வறுமையொன் றில்லா னேனு
முய்ந்திட வரிய பாவ வறுமையொன் றுடையன் வேனில்
மைந்துடை யழக னேனும் பிறர்மனை விழைதல் செய்யான்.

(இ-ள்.) பசிய துளவமாலைதரித்த விஷ்ணுமூர்த்திக்குப்பத்திசெய்பவன்; இந்திரனையொத்த செல்வவந்தனாகித் தரித்திரஞ்சிறிதுமில்லாதவனானாலும், பிழைத்தற்கரியபாவமாகியதரித்திரமொன்றேயுடையவன்; வேனிற்காலத்திற்றோன்றும் (மன்மதன்போன்ற) பேரழகுடையவனாயினும், பரதாரகமனஞ் செய்யாதவன்.

மழகதிர்ப் பரிதி யேய்க்கும் பகட்டெழின் மார்ப னிவ்வா
றொழுகினன் கியற்று காளி லுவப்பொடு மவனை யீன்றாள்

கிழவுவந் தெய்தி நீங்கா நோய்பல கெழுமி யோங்கத்
தழைவுறு மைம்மே லுந்தி யாருயிர் சாம்பி னாளே.

(இ-ள்.) இளமைவாய்ந்த கிரணங்களையுடைய (பால)சூரியன்போன்ற பேரழகுவாய்ந்த மார்பையுடையதனஞ்சயன் இவ்விதஞ்செய்துகொண்டு (இல்லறவாழ்க்கையை) வழாதுநடத்துகையில், அவனைக் களிப்புடன் பெற்றதாய் வயோதிகதிசை வந்துசேர்ந்து ஒழியாவியாதிகள் பல தோன்றி யதிகரிக்க, மிருதியாகிய கோழை மேலிட்டு அடைதற்கரிய உயிர்துறந்தனள். எ - று. (எ)

பொற்பினிற் செம்மாந் தன்னாள் புலன்வழி யுள்ளம் போக்கிக்
கற்பிகந் தலலல் செய்த வாற்றினாற் கற்ப கால
மெற்பெழுந் தியாக்கை வாட நரகிடை யெய்து மென்ன
வற்புடைப் புதல்வ னெஞ்சத் தாரஞ ரெய்தினானே.

(இ-ள்.) அவள் அழகின்மிகுதியால் அகந்தையெய்தி ஐம்புலன்களின்வழியாக மனதைச்செலுத்தி,கற்பின்தன்மையைவிட்டுத் தீயவழி நடந்ததன்மையால், எலும்புகள் தோன்றும்படி (யாதனா)சரீரம் மெலிவெய்தக் கற்பகாலம் நரகத்திலிருப்பாளென்றுகருதி,அன்புடைய புதல்வனாகிய தனஞ்சயன் மனதில் வருத்தமுற்றனன். எ - று.

யாதனாசரீரமென்பது இறந்தோர் காலபடர்களால் இயமபுரிக்குச்சென்று ஆங்கு ஆக்கினையனுபவிக்கப்பெறும் உடல். (அ)

ஈங்கிவ ளுய்யும் வண்ண மென்கொலென் றுளத்தி னெண்ணித்
தீங்கெறி குமர னன்னை யென்பினைச் சேம மாக்கி
வீங்குநீர்க் கங்கை யாற்றின் மேதக விடுப்ப லென்னா
நீங்கரும் பொருள்க ளியாவு நீத்தரு நெறியிற் போனான்.

(இ-ள்.) தீயவழியினின்று நீங்கிய தனஞ்சயன், இவள் பிழைக்கும்விதம் யாதோ என மனதிலாலோசித்து, தாயின் எலும்புகளைச் சேமப்படுத்தி, மிகுந்த நீர்ப்பெருக்கையுடைய கங்காநதியில் (அவள்) மேன்மைபெறவிடுவேன் எனத் தீர்மானித்து, விடற்கரிய எல்லாம் பொருளையும்விட்டு அருமையாகிய கங்கா யாத்திரை சென்றான். எ - று. (கூ)

போதரு நெறியில் வெப்பு நோயுறப் பொறுக்க லாற்றா
னேதில னொருவ னெய்த விதனைநீ கொணர்தி யென்று
தீதறு செம்பொ னல்கி யவனொடுஞ் செல்லு மாற்றிற்
கோதறு வணிகன் றோன்று மாவணங் குறுகி னானே.

(இ-ள்.) (அவன், யாத்திரை) போம் மார்க்கத்தில் சுரநோய்காண, சகிக்கமாட்டாதவனாய் (வேடுவனாகிய) ஒரு அன்னியன்வரக்கண்டு, நீ இதனைக்கொண்டு வருவாயாக என்று கூறி, குற்றமற்ற செவ்விதாகிய பொன்னைக்கொடுத்து அவனு

டன் போகும்வழியில், நற்குணமமைந்த வசியனாகிய தனஞ்சயன்முன் காணப்ப ட்ட ஓர் கடைவீதியடைந்தான. எ-று. (கo)

ஆங்கவன் புகுது முன்ன ரரும்பொரு ளென்று வேடன்
ருங்கருஞ் சுமையைக் கொணடு கரந்தனன் ருழா தேகி
யீங்கிது காண்டு மென்ன நோக்கலு மென்பு காணா
நீங்கரு நெறியி னோர்பால் நீத்தனன் பதியிற் போனான்.

(இ-ள்.) வேடுவன் அவவணிகன் தன்னையடைதற்குமுன்னம், இதுபெற ற்கரிய திரவியமொன்று நினைதது, சுமததற்கரிய எலும்புமூட்டையை எடுத்துக் கொண்டு மறைந்து விரைந்து சென்று, இதனை அவிழ்த்துப் பரிசோதிப்போம் என்று பார்க்கவும் எலும்பாகவிருக்கக்கண்டு அரியவழியின ஒருபுறத்தேவிடுத்துத் தனது சேரியையடைந்தான். எ - று. (கக)

என்புடைச் சும்மை காணா னேங்கின னுயிர்த்து விம்மி
யன்புடை வணிகர் கோமா னவனடிச் சுவட்டிற் போகி
மன்பெருஞ் சேரி புக்கோர் வாயிலி னடைய வன்னோன்
றன்புனை யாடை யாங்குக் கிடத்தலுங் கணடு சார்ந்தான்

(இ ள்.) (தாய்விடயத்தில்) ஆசைபொருந்திய வணிகர் பெருமானாகிய தனஞ்சயன், எலும்பு மூட்டையைப்பாராமல் ஏக்கமுற்றுப் பெருமூச்செறிந்து து க்கித்து, அவவேடுவனது காற்சுவட்டின்வழியேபோய் நிலையுள்ள பெரியவேடுவச் சேரியில்நுழைந்து, ஓர் வீட்டுவாயிலிற்செல்ல, அவன் தரித்துக்கொள்ளும் வஸ்தி ரம் அவவிடத்திலிருக்கவும் அதனைப்பார்த்து உள்ளேபோயினன். எ-று. (கஉ)

சார்ந்தவ னுறையுள் வைகுந் தையலை நோக்கி யின்றுன்
காந்தனெற் பயந்தா ளென்பைப் பொருளெனக் கவர்ந்து கொண்டு
போந்தன னளித்தல் வேண்டும் பொருணினக் களிப்ப லென்ன
வோர்ந்தவள் கொழுநன் றன்பா லடைந்திஃ துரைக்கு மேல்வை.

(இ-ள்.) தனஞ்சயன் உள்ளேபோய் அவவேடுவனவீட்டில் வசிக்கும் மாதைப்பார்த்து, இற்றைபபொழுது உனது நாயகன் என் தாய் எலும்பைப் பொருளென்று கருதி அபகரித்துக்கொண்டு வந்துவிட்டான்; அதனை நீ எடுத்துக் கொடுக்கவேண்டும்; (நீ விரும்பிய) பொருள்தருவேன் எனறு சொல்லவும், அத னையுணர்ந்த அம்மாது தனநாயகனையுற்று இதனைச் சொல்லுகையில். எ-று.

இதுமுத விரண்டுபாடலகள் குளகம். (கங)

காரொடும் போந்து நாய்கன் றன்னொடுங் கான நண்ணித்
தாண்மிக நோவ வுள்ளந் தளர்வெய்தத் தேடி யாண்டுங
காணல ருத லாலவ் வணிகனைக் கானிற் போக்கி
மாணகர் தன்னை நோக்கிப் போயினன் கிராதன் மன்னோ.

(இ-ள்.) வேடுவன் வெட்கத்துடன் வெளிவந்து தனஞ்சயனுடன் வனத் தையடைந்து, கால்கள் அதிகமாகவருந்தவும், மனம்துன்பமடையவும், எங்குந்

தேடிப்பார்த்துக் காணுமற்போனபடியால், அத்தனஞ்சயனே வனத்திற்செல்ல விடுத்துத தனது மாட்சிமைதங்கிய நகரத்தைநோக்கிப் போய்விட்டான். எ-று.

கானெலாந் திரிந்து சின்னுள் கழிதலுங் காண்டல் செய்யான்
றேனுலாங் கொன்றை வேய்ந்த தேவுறை காசி யெய்தி
வானநீர்க் கடவுட் கங்கை மாநதி படிந்து போய்த்தன்
கோநக ரதனி னுய்கன் குறுகிவீற் றிருந்தா னன்றே.

(இ-ள்.) வணிகனுகிய தனஞ்சயன் வனமெல்லாஞ் சிறிதுகாலங்கழிய அலேந்துதேடியுங் காணுமல், வண்டுகள்திரியும் கொன்றைமாலேசூடிய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான் எழுந்தருளியுள்ள காசிக்ஷேத்திரத்தைக் குறுகி, நீர்மிகுந்த தெய்வீகமமைந்த சிறந்தநதியாகிய ஆகாயகங்கையில் மூழ்கிச்சென்று தனது சிறந்த சேதுக்கைநகரத்திலடைந்து வாழ்ந்திருந்தான். எ-று. (௧௫)

புண்ணியத் திருநீர்க் கங்கைக் கணித்தெனப் புகுந்த வென்பு
நண்ணரி தாகி வாளாப் போதலால நளிர்வெண் டிங்கட்
கணணியன் மறிமா னேந்துங் கடவுடன் னருளா லன்றி
யண்ணலங் காசி தன்னே யமரர்க்கு மடையொ ணுதால்.

(இ-ள்.) தருமஸ்வரூபமாகிய சிறந்த நீரையுடைய கங்காநதிக்குச் சமீபமாகவந்த எலும்பு அதில் சேருதற்கரியதாய் வீணுகப்போன தன்மையால், குளிர்ந்த வெண்மைதங்கிய சந்திரனேச் சிரோமாலேயாகவணிந்த இளமைவாய்ந்தமானேத்தாஙகிய எம்பெருமானது திருவருளாலல்லாமல் பெருமைபொருந்திய அழகிய காசிக்ஷேத்திரத்தைத் தேவர்களுக்குஞ் சேரமுடியாது. எ-று. (௧௬)

ஆதலிற் றீமை யோர்கட் கடையொணு தசியி னேடு
மேதகு வரணே யாறும் விழைதக வொழுகு மாற்றால்
மாதவக் கிழமை பூணட முனிவர வளங்கொள் காசிக்
கேதமில் நாமம் வாரா ணசியென விசைந்த தாமால்.

(இ-ள்.) ஆனபடியால் பாவிகளுக்குச் சேரக்கூடாத அசி என்னும் நதியுடன், மேம்பட்ட வரணே என்னும் நதியும் விரும்பும்படி செல்கின்ற தன்மையால், வளப்பமமைந்த காசிநகரத்திற்குக் குற்றமில்லாத திருப்பெயர் வாராணசி என்று விளஙகியது; பெரிய தவவுரிமைமேற்கொண்ட அகத்தியமுனிவரோ! எ-று.

வரணே + அசி = வாராணசி; இது வரணசி, வாரணசி, வாரணவாசி, வாரணுசி எனவும் வந்துள்ளது. இவை வடமொழிச் சந்தி. (௧௭)

சிறந்துயர் தெய்வக் கங்கைத் தீமபுன லதனிற் சென்று
பிறந்திறந் தாவிக் கின்ற பேதைய ரேனு மூழ்கின்
மறந்திகழ் கணிச்சி யேந்து வானவ னுருவு கொண்டு
துறந்துளோர்க் கடைய லாகாத் துறக்கவீ டடைவர் மாதோ.

(இ-ள்.) மேம்பட்டுயர்ந்த தெய்வீகம்பொருந்திய கங்கையாற்றின்,மதுரந் தங்கிய நீரிற்போய், ஜனித்தும் மரித்துங் களிக்கின்ற அறிவில்லாதவர்களாகு லும் ஸ்நானஞ்செய்தால், கோபம்பொருந்திய மழுப்படைதாங்கிய மகாதேவனது சாரூப்பியமடைந்து, துறவிகளுக்கும் பெறுதற்காகாத மோட்சவீட்டைப் பெறு வார்கள். எ - று. (௧அ)

மலரின்மே லுறைவோன் மேனுள் வைகுந்த மாதியாய
வுலகையுங் கடவுட் காசி நகரையு மொருங்கு நோக்கிப்
புலனெடுங் கோலிற் றூக்க வறம்பொரு ளின்பம் வீடு
நிலவலிற் காசி தாழ்ந்த தவைநெடும விசும்பிற் போன.

(இ-ள்.) தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவன் முற்காலத்தில் வைகுந் தம் முதலாகிய உலகங்களையும், தெய்வீக மமைந்த காசி நகரத்தையும் ஒன்றாகப் பார்த்து அறிவாகிய நீண்ட நிறைகோலால் தூக்கிப்பார்க்க, தருமார்த்த காமிய மோக்ஷம் விளங்குவதால் காசிநகரம் தாழ்ந்துவிட்டது; அந்த வைகுந்தமுதலிய உலகங்கள் (இலேசாகவிருத்தலின் உயர்ந்து) விண்ணுறு சென்றன. எ - று.

"தூக்கின்—மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல, வலிதன்றே தாழுந் துலைக்கு"—என்னும குமரகுருபர சுவாமிகள் திருவாக்கின்படி காசிநகரம் வலிதாதலின்தாழ்ந்து, ஏனைய இலேசாதலின் உயர்ந்தன எனக்கொள்க. (௧௯)

அவிர்மதி வனைந்த வேணி யண்ணல்கட் டழலின் வாய்ப்பட்
டுவர்நிலத் திட்ட வித்தி னுறுவினை தோன்றி டாதாற்
புவியிடை மறஞ்செய் வோரு நல்லறம் புரிந்து ளோருந்
தவமிகு காசி தன்னில விளிவரோன் முத்தி சார்வர்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற சந்திரனைச் சூடிய சடையையுடைய சிவபெரு மானது திருநேத்திரத்தின் நெருப்பி லகப்பட்டு, சவர்நிலததில் விதைத்த விதை யைப்போல, பொருந்திய தீவினைகள் காணப்படா ; (ஆதலால்) உலகத்தில் பா வஞ்செய்பவர்களும் நல்ல புண்ணியஞ்செய்பவர்களும், தவச்செயலில் மிக்க காசி க்ஷேத்திரத்தில் இறப்பார்களானால், மோக்ஷலோகத்தை யடைவார்கள். எ-று.

வரித்தடங் கண்ணி பாகன் மருவிய காசி தன்னி
லருத்தியி னுறைவோ ரெல்லா மமலனல் லுருவு தாங்கி
யிருத்தலாற் புவன கோடி யாவது மோசைபோய
வுருத்திர வாச மென்னு முறுபெய ருடைத்து மாதோ.

(இ-ள்.) கீற்றுகளமைந்த பரந்த கண்களையுடைய விசாலாக்ஷியம்மை யாரைப்பாகமாகவுடைய ஸ்ரீவிச்சவநாதப்பெருமான் வீற்றிருக்கும் காசிநகரத்தில் ஆசையோடு வசிப்பவர்கள் யாவரும் சிவசாரூபம் பெற்றிருத்தலால்,அண்டகோடி களிலெல்லாங் கீர்த்தி பெற்ற உருத்திரவாசம் என்னும் பொருந்திய திருநாம முடையது (அந்தக் காசி க்ஷேத்திரம்.) எ - று. (௨௧)

மரித்திடு மளவில் முத்தி வழங்குமென் றுணர்ந்தும் வாளா
திருத்தகு காசி நீங்கிச் செல்கின்றோ தோன்று காலைக்
கருப்பவே தனையு மாவி கவர்யம தூதர் செய்யு
முருப்பவெங் துயரு மியாது முணர்ந்திலர் போலு மன்றே.

(இ-ள்.) இறக்குங்காலத்தில் மோக்ஷத்தை யுதவும் என்றறிந்திருந்தும் சிறப்புப்பொருந்திய காசிநகரத்தை வீணாகவிட்டுப் புறம்போகின்றவர்கள், பிறக்குங்காலத்துண்டாகிய ஜனனவேதனையும், உயிரைக் கொண்டுபோகுங் காலபடர்கள் செய்கின்ற மிகுந்த வெவ்விய (மரண) வேதனையும், ஆகிய இவற்றையெல்லாம் கொஞ்சமும் அறியார்போலும். எ-று.

பிறக்கையிலும் இறக்கையிலும் நிகழும் வேதனைகளை:—

சிவதருமோத்தரம்.

“ஏன்றேன் றெண்ணி யிருக்குமுயி ரிடர்ப்பட் டழியு மெழில்வரைக்கீழ்
ஒன்று மொருவன நனைப்போலக் கருப்பா சயப்பை யுறத்துதலால்
மன்ற வுததி மறிக்தாழ்வான் வருத்த மென்ன வருந்தியிடும்
நின்ற கருப்பா சயவுதக வெள்ளங் கொள்ள நிறையழிந்தே.

அங்கி யதனிற் றங்கியிடு மயோம யத்த கும்பத்தில்
தங்கு மொருவன் றபனம்போற் றபன மெய்துந் தாயுதரத்
தங்கி சுடவே யழலனைய குசி யதனு லாகத்தைப்
பங்கித் திடவே பமிடரி னிருநாற் குணிகம் பட்டழுங்கும்.

கருப்பா சயமே கட்டமதா மதனி லதிகங் கடுகாலு
முருக்கி யிடவே மோகமுற முன்னைச் செயலு மங்கிலையே
மரிக்க வாலைக் கரும்பெனவே யோனி வழியின் வலிதொலைய
நெருக்கப்பட்டு நிலமிசையே தோன்று முயிரு நிலையுடனே.”— எனவும்,

பெருந்திரட்டு.

“பரணமாகிய பெண்டிருஞ் சுற்றமும் பண்டெங் கையிற்றந்த
இரண மானவை கொண்டிட விவரைவிட் டியம்பிடா திவணேகும்
மரண வேதனை யாவரா லறியலர் மயங்கியைம் புலனத்தக்
கரண மியாவையுங் கலங்கிட வருந்துயர் கடவுளே யறிகிற்பான்.

வந்திடு மரணத் துன்ப மறித்துரை செய்யப் போமோ
உந்திமே லையும் பித்து முணாவொடு பொறிக லங்கி
நந்திடா விருளே மூடி நாவுலர்ந் தலமந் தென்னே
இந்தமா விறப்பிற் றுன்பம் பவத்துன்பத் தெண்ம டங்கே.” — எனவும் வருவனவற்று னுணர்க. (உஉ)

மன்பெரும் பூத மெல்லா மொடுங்கவின் மாம சான
மென்பரவ் வொடுக்க மெவ்வா றென்றிடிற் பூமி நீரி

னென்றிடு மந்நீர் வெய்ய கனலிடை யொடுங்கும் வெந்தீச்
சென்றிரு வளியிற் சேரும் வளியிரு விசும்பிற் சேரும.

(இ-ள்.) நிலைபெற்ற ஐம்பெரும்பூதங்களும் அதனிடத்தொடுங்கலால் மாம சானம் என்று (பெரியோர்) கூறுவர்; அவை யொடுங்கும்விதம் எத்தன்மையெனில், பிருதிவி அப்புவிலொடுங்கும்; அப்பு கொடிய தேயுவி லொடுங்கும்; வெவ்விய தேயுவானதுபோய்ப் பெரிய வாயுவி லொடுங்கும்; வாயுவானது பெரிய ஆகாயத்தி லொடுங்கும். எ-று. (௨௩)

உயர்விசும் பாங்கா ரத்தி னொளிக்குமாங் காரந் தூய்தா
மயர்வறு புந்தி யென்னுங் கானிடை மருவும் புந்தி
பயில்பிர கிருதி தன்னி லடையுமாங் கதுவும் பார்க்கி
லயர்வறு புருடன் றன்னை யொளியற மறைக்கு மன்றே.

(இ-ள்) எல்லாப் பூதங்களினு முயர்ந்த ஆகாயம் ஆங்காரத்திலொடுங்கும்; ஆங்காரம் பரிசுத்தமாகிய மயக்கமற்ற புத்திதத்துவமென்னுங் காட்டில் அடங்கும்; புத்திதத்துவம் சொல்லுகின்ற பிரகிருதியி லொடுங்கும்; அப்பிரகிருதியும் பார்க்குமிடத்தில் சோர்வற்ற புருடனைப் பிரகாசம் நீங்கும்படி மறைத்துக்கொண்டிருக்கும். எ-று.

மேலிரண்டு செய்யுள்களின் கருத்தை

கூர்மபுராணம்.

"மாநிலம் புனலி னொளிக்குமப் புனல்போய் வன்னியிற் கரக்குமவ் வன்னி
யூனமில் வளியிற் சேருமவ் வளிபோ யுயர்விசும் படையுமவ் விசும்பாங்
கேனைய வாங்கா ரத்திடை யொளிக்கு மாங்கது மகானிடை யெய்து
மானவம் மகான்போ யுயர்பிரகிருதி தனனிடை யினிதினி னமரும்." —
என்பதனு னுணர்க. (௨௪)

மேயகால் கைகள் சேர்த்திப் பழுக்கழி நிரைத்து வீக்கிப்
பாயபுன் மயிர்த்தோல் வேய்ந்து சுவாத்தசை நிறீஇய பண்பி
னுயதோ ராக்கை யில்லி னரும்பெறற் சீவ னாகி
யேயவப் புருடன் றானே யினிது வீற் றிருக்கு மாதோ.

(இ-ள்.) பொருந்திய கால் கைகளைச் சேரவைத்து, பழமை வாய்ந்த எலும்பாகிய கழியை வரிசையாகவைத்துக்கட்டி, பரவிய சிறுமயிர்களும தோலும் அமைத்து, சுவராகிய மாமிசத்தை நிறுத்திய தன்மையாலாகிய ஒரு சரீரமென்னும் வீட்டிலே பெறுதற்கரிய உயிராகிப் பொருந்திய அப்புருடன் தானே இனிமையாக வாழ்ந்திருப்பான். எ-று. (௨௫)

முருகவிழ் கமலத் தோனு முகுந்தனு மொழியத் தோன்றும்
பிரளய மதற்கு நாமம் பிராகிருத மென்ப ராலப்

புருடன தகத்துட் கால மூர்த்தியாம் புனிதன் வைகி
யருளொடு மிருந்தெஞ் ஞான்று மினிதளித் தருளு மன்றே.

(இ-ள்.) மணங்கமழுந் தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனும், விஷ்ணுமூர்த்தியும், அழியும்படி நிகழ்கின்ற பிரளயத்திற்குப் பெயர் *பிராகிருதப்பிரளயம் என்று பெரியோர் சொல்லுவர்; அப்புருடனது இதயத்தில் காலமூர்த்தியாகிய பரமேசுரன் வசித்துக் கிருபைகொண்டிருந்து எக்காலத்தும் இனிதாக ரட்சித்தருள்செய்வார். எ - று. (உசு)

அருள்புரி கால மூர்த்தி யாகுமப் பிரமந் தன்னைத்
திருவளர் காசி வாழுஞ் சிவனென வுரைப்பர் மேலோர்
பொருவிலப் பரனே தோன்று புருடனைத் தொடர்ந்தெஞ் ஞான்று
மருவிநீங் காத மூல மலத்தினைத் துடைப்ப னன்றே.

(இ-ள்.) (ஆன்மாக்களின் பரிபக்குவத்துக்குத் தக்கபடி) திருவருள் பாலிக்கின்ற காலமூர்த்தியாகிய அந்தப் பரப்பிரமப் பொருளை, சிவஞானச்செல்வம் விளங்கும் காசிக்ஷேத்திரத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான என்று மேலோர் கூறுவர்; சமானமில்லாத அப்பரம்பொருளே உதிக்கின்ற புருடனைத் தொடர்ந்து எப்பொழுதுங் கலந்திருந்து (ஜனனங்கடோறும்) விலகாத (பிறவிக்கு) மூல காரணமாகிய மும்மலங்களை விலக்கியருளுவர். எ - று. (உஎ)

மருவருங் கருணை யீசன் வருகையி னந்தி மேவிப்
பிரளய மதற்குச் சூல நுதியினிற் றாங்கிப் பேராற்
றுரவுநீர்க் காசி தன்னை யளித்தலா னொருகா லத்து
மெருமையே றுகைத்தோன் றன்னாற் கலியினாற் பயமின் றாமால்.

(இ-ள்.) அடைதற்கரிய கிருபைபொருந்திய சிவபெருமான் (அனுக்கிரகிக்கும்படி) வருவதால், திருநந்திதேவர் எழுந்தருளிப் பிரளயங்கடோறும்,பெருமை வாய்ந்த (கங்கையென்னும்) நதியின் ஒலிதங்கிய நீராற்சூழ்ந்த காசிநகரத்தைத் தமது சூலப்படையின முனையிலெடுத்துக் காத்தலால், எப்பொழுதும் எருமைக்கடாவை வாகனமாகச் செலுத்துகின்ற இயமனாலும், (கலிபுருஷனது) வறுமையாலும் (அவ்விடத்தில்) பயமில்லை. எ - று. (உஅ)

தேசொடும் பொலிந்து முத்தித் திருமக ளுறைத றன்னாற்
காசியென் றுரைப்ப ரென்னக் கடனிற வண்ணன் கேட்ப
வீசன்முன் னுரைத்த வெல்லா மென்னம ரன்னை யோடு
பேசலுங் கேட்ட துன்பாற் பிறழ்ந்திடா துரைத்திட் டேனால்.

(இ-ள்) கீர்த்தியுடன் விளங்கி, மோக்ஷமாகிய இலக்குமிதேவி ஆங்கு வசிப்பதனால் (அந்நகரத்தைக்) காசியென்று சொல்லுவர் என்று நீலவர்ணராகிய

*இதன் விரிவு கூர்மபுராணம் - பிராகிருதப்பிரளயமு மாத்தியந்தப்பிரளயமு முரைத்த அத்தியாயத்திற் கண்டுகொள்க.

திருமால் கேட்கும்படி சிவபெருமான் பூர்வத்தில் திருவாய்மலர்ந்தருளிய சரிதங்களையெல்லாம் எனது (ஆசை) பொருந்திய தாயாகிய உமாதேவியாருடன் திருவுளஞ்செய்கையில், கேட்டவற்றை உன்னிடத்தில் முறைதவறாது சொல்லினன்.

இக்கதை படித்தோர் கேட்டோ ரியாவரு முத்தி சேர்வார்
மிக்கமா தவத்தோ யின்னும் வேண்டுவ கேட்டி யென்னப
புக்குயர் வயிர வன்றன் காதைநீ புகறி யென்னக்
கக்குவெங் குருதிவைவே லறுமுகக் கடவுள் கூறும்.

(இ ள்.) இச் சரிதங்களை வாசித்தோர்களும், செவிசாத்தினவர்களும், (இன்னும் எழுதிக் கற்றோர்) முதலிய யாவரும் மோக்ஷத்தை யடைவார்கள்; மிகுதியாகிய சிறந்த தவத்தையுடைய அகத்தியமுனிவனே! இன்னும் நீ விரும்பிய விடயங்களைக் கேட்பாயாக என்று திருவாய்மலர்ந்தருள, உயர்வாகிய வயிரவமூர்த்தியின் கதையைத் தேவரீர் அனுக்கிரகிக்கவேண்டுமென்று கேட்க, வெவ்விய உதிரஞ் சொரியுங் கூர்மைவாய்ந்த வேலாயுத மேந்திய ஆறு திருமுகங்களையுடைய ஸ்ரீமுருகக்கடவுள் சொல்லத்தொடங்கினர். எ-று. (௩௦)

வாராணசி சிறப்புரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ௦எ.

சிவமயம்.

## முப்பத்தோராவது,

## வயிரவன் தோன்றின அத்தியாயம்.

தேறலொழுகக் கனிந்தபசுந் தேமாங் கனியைப் பிழிந்துசெழுஞ்
சாறு நுகர்ந்தா லென்னவண்ட கோடி பிழிந்து தனிநுகர்ந்து
நீறு பூசி யென்பணிந்து சூலந் திரித்து நின்றாடு
மீறி லொருவ னெவனுளனுங் கவனே யுள்ளத் திருக்குமால்.

(இ-ள்.) தேன்சிந்தும்படிப்பழுத்த தித்திப்பமைந்த பசிய மாம்பழத்தைப் பிழிந்து செழுமைதங்கிய இரசத்தைக் குடித்தாற்போன்று பல்லாயிரங்கோடி யண்டங்களையும் பிழிந்து தனியாகப்பானஞ்செய்து திருவெண்ணீறுதரித்து, (இறந்த பிரமவிஷ்ணுக்களது) என்புகளை மாலையாகவணிந்து, சூலாயுததத்தைச் சுழற்றி நின்று நடிக்கின்ற அழிவில்லாத வொப்பற்ற பரம்பொருளாக வெவனுள்ளவனோ அவனே மனத்திலிருப்பான். எ - று. (க)

அன்ன கடவுள் மாயைமுழு துலக மறைப்ப வவிர்சுடராய்த்
தன்னை யுணரா வகையுறைவோ னுலக முழுதுந் தானாக
மன்னி யிடினு மனோவாக்குக் காய மிவற்றுக் கெட்டாத
முன்னோ னயன்மாற் கவனிலைமை காண்டல் செல்ல முடியாதால்.

(இ-ள்.) அத்தன்மைத்தாகிய பெருமான்,தனது (திரோபவசத்தியின்) மாயையால் உலகமெல்லாம் மறைக்க,விளங்குகின்றமுச்சுடர்வடிவமாகத் தன்னை யாவருமறியாவிதம் வசிக்கின்றவன்; அம்முதற்கடவுள் உலகத்திலுள்ள ஆன்மாக்களெல்லாம் தானாகவே நிரம்பியிருப்பினும், மனம் - வாக்கு - காயங்களுக்கு அடையக்கூடாதவன் ஆதலால் பிரம விஷ்ணுக்களுக்கு அவனது தன்மை காண முடியாது. எ - று. (உ)

மேனாட் பசும்பொற் றடவரையில் விண்ணோர் குழுமி யழிவில்பொருள்
தானாய் நிற்குந் தத்துவமியா தென்ன மொழிந்த தத்துவமிங்
கியானா மென்றே செழுங்கமலப் புத்தே ளிசைப்ப விகலோடு
கோனா னாகிப் பசுந்துளவோன் யானா மென்றே நுவன்றனனால்.

(இ-ள்) முற்காலத்தில் விசாலமாகிய (மேருவென்னும்) பசிய பொன்மலையில் தேவர்கள்கூடிக் கேடில்லாப்பொருளாக விளங்குகின்ற தத்துவம் எது? என்று விசாரிக்க, செழுமைவாய்ந்த தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவன், நீங்கள் சொல்லிய (அத்தகைய) தத்துவப்பொருள் யான்ஆகுமென்று சொல்ல,பசியதுளவமாலையணிந்த விஷ்ணுமூர்த்தி,பகைமையினால் மனம்பொறாராகி நானாகுமென்று சொல்வினர். எ - று. (ங)

என்ன முனிவுற் றிருவோரு மெழுதா மறைக ளெவ்வாறு
சொன்ன ததுவே பொருளென்னுத் துணிந்து கேட்ப மறைநான்கு
மன்னு முலகம் படைத்தளிக்க வல்லீ ரியார்க்கு மதனிலைமை
முன்ன வரிதா னுமக்கெம்மால் மொழியற் பாற்றோ வெனமொழியும்.

(இ-ள்.) என்று (பிரம விஷ்ணுக்களாகிய) இருவரும் (ஒருவரோ டொருவர்) கோபித்து எழுதாக்கிளவியாகிய வேதங்கள் எவ்விதமாகச் சொல்லுகின்றனவோ அதுவே அத்தகையபொருளென்று திடங்கொண்டு அவற்றைக்கேட்க, நான்குவேதங்களும், நிலைபெற்ற உலகத்தைச் சிருட்டித்துக் காக்கவல்லவர்களே ! அப்பரம்பொருளின்றன்மை யாவர்க்கும் நினைக்கவுமரிதாதலால்,உங்களுக்கு எங்களால் சொல்லு மளவினதோ ? எனறு தனித்தனி சொல்லத்தொடங்கின. எ - று.

சாற்று முலக மெவற்றினுக்குந் தானே யாகி யினிதமைத்தல்
போற்றி யளித்தல் துடைத்தலென்னப் புகலு மரிய முத்தொழிலு
மாற்று மொருவ னெவன்சிவனு மவனே மொழிந்த தத்துவமென்
றேற்று மறைக ளொருநான்கின் முதலாம் வேத மிசைத்ததுவே.

(இ-ள்.) சொல்லுகின்ற எல்லா உலகங்களுக்கும்,தானே தலைவனாகி இனிதாகப்படைத்தல் - அவற்றைப்பாதுகாத்து ரட்சித்தல - பின்னாச் சங்கரித்தல் - என்று சொல்லுகின்ற அரிய முத்தொழில்களையும் நடத்தும் ஒப்பற்றவன் எவனோ அவனே சிவபெருமான்; நீங்கள் சொல்லியதத்துவமும் அவனேயென்று, துதிபெறும் நான்குவேதங்களில் முதலாவதாகிய இருக்குவேதங் கூறிற்று எ - று. (ரு)

புரிதற் கரிய வருமகத்தால் யோக மதனுற் புவனமெல்லாம்
பரவப் படுவா னியாவனுளன் யாமு மவனுற் பரிவோடு
முறைபெற் றுலகி னிலைபெறுது மனைய கண்மூன் றுடையோனே
தெரிதற் கரிய தத்துவமென் றிரண்டாம் வேதஞ் செப்பியதால்.

(இ-ள்.) யாவருஞ் செய்துமுடித்தற் கருமையாகிய சிறந்த யாகங்களாலும் யோகசாதனத்தினாலும் உலகத்திலுள்ள எல்லோராலும் துதிக்கப்படுபொருளாக உள்ளவன் எவனோ, அப்பெருமானால் யாங்களும் அன்புடன் சொல்லப்பட்டுப் பூமியில் நிலைபெற்றுளோம்; அப்படிப்பட்ட திரிநேத்திரங்களுடைய சிவபெருமானே அறிதற்கரியதத துவப்பொருளென்று இரண்டாவதாகியஎசுர்வேதங்கூறிற்று.

யாவ னுலக மூன்றினையுந் திரிவிப் பவன்மற் றெஞ்ஞான்றும்
யாவன் யோக முனிவரரா லேத்தப் படுவோ னினிதோங்க
யாவன் றனது பேரொளியா லெவையும் விளக்கு மவ்விறைவன்
மேவ வருந்தத் துவமென்றே மூன்றும் வேதம் விளம்பியதால்.

(இ-ள்.) எவன் திரிலோகங்களையும் இயக்குகின்றவனோ, எவன் யோகநிட்டையிலிருக்கு முனிவரால் எக்காலமும் துதிசெய்யப்படுகின்றவனோ,எவன் தனது

பெரிய ஒளிப்பிழம்பால்எப்பொருள்களையும் இனிதுபுலப்பட நன்குவிளக்குகின்றவனே அத்தலைவனே கிடைத்தற்கரிய மேலானதத்துவப்பொருள் என்று மூன்றாவதாகிய சாமவேதங் கூறிற்று. எ - று. (எ)

கண்ணீர வார மயிர்பொடிப்ப வுள்ளா நெகிழக் கசிந்துகசிந்
துண்ணீர் மையிறு லெஞ்ஞான்றுந் தனனை யுணரு முணர்வுடையோ
ரெண்ணு வழுத்தத் தன்னருளாற றன்னை யறிவிப பவன்யாரத்
தண்ணா கடுக்கை யோனெனன நான்காம் வேதஞ் சாற்றியதால்.

(இ-ள்.) ஆனந்தப்பாஷ்பஞ் சிந்தவும், உரோமஞ் சிலிர்க்கவும், மனம்நெக்குவிட்டு மிகவும் உருகி மனத்திலுள்ள அன்பினால் எக்காலத்திலும் தன்னையறிகின்ற பேரறிவுடையவர்கள் தியானித்துத் துதிக்க, தனது திருவருளால் தம்மையறியச்செய்பவன் யாரோ அவனே அந்தக்குளிர்ச்சிபொருந்திய கொன்றைமாலையணிந்த சிவபெருமான் என்று நான்காவதாகிய அதாவணவேதஞ் சொல்லிற்று. எ-று.

என்று வேத மொருநான்கு மருளா தினிதி னியம்பிடலு
மன்ற றுறுந் துளவோனுங கமலப பொகுட்டின் வானவனு
நனறு நனறு மறைநானகு நவின்ற தெனன நகைபுரியாக்
கன்று முளத்தி னிருடுங்கக் கழறுப் புன்சொற் கழறுவரால்.

(இ-ள்.) என்று ஒப்பற்ற நான்குவேதங்களும் மயங்காமல் நன்குகூறவும், மணங்கமழுந் துளவமாலையணிந்த திருமாலும், தாமரைக்கொட்டையில் வசிக்கும் பிரமதேவனும், நான்குவேதங்களுங் கூறியது மிக நன்றாயிருக்கின்றது என்று நகைத்துக் கோபங்கொண்ட மனத்தில் அஞ்ஞானமிரம்பலால், சொல்லத்தகாத இழிவாகிய சொற்களை (பின்வருமாறு) சொல்லத்தொடங்கினர். எ-று. (௯)

ஏற்றி னேறிச் சடைதாங்கி யீமத் தாடிப் பொடிபூசிக்
காற்று நுகருங் கறைமிடற்ற கவைநா வரவக் கச்சசைத்துப்
போற்றுங் கணங்கட் கொருமுதலாய்ப் பூவை பாகம் பிரியாதோன்
றேற்று தெவர்க்கு முள்ளுயிராய் நின்ற வாறென் சொல்வீரால்.

(இ-ள்.) இடபத்தை வாகனமாகக்கொண்டு, சடைமுடிதாங்கி, மயானத்தில் நடித்து,அம்மயானச்சாம்பலைத்தரித்து,விஷத்தைக்கண்டததில்வைத்து, வாயுபட்சணஞ்செய்யும் பிளவுபட்டநாவையுடைய பாம்பினைக் கச்சாகக்கட்டி, தன்னைத்துதிக்கின்ற (பதினெண்) கணங்களுக்கு ஒருதலைவனாகி, பெண்ணின் ஆத்தசரீரம் பிரியாதசிவன் யாவருக்கும் புலப்படாமல உயிாக்குயிராக எவவாறு இருக்கின்றான்; நீங்கள் சொல்லுங்கள். எ-று. (௧௦)

என்ன லோடு மறையனைத்து மீன்ற குடிலை முன்றோன்றிக்
கொனனே மொழிந்தீ ருமதுமுதுக் குறைவு மீதோ வெனநகைத்து
முன்னோன் பிரியாப் பரையினொடுந் தோய்ந்துந் தோயான் முழுமுதலா
மன்னோ னுருவ நும்முருப்போ லாக்க வமைந்த வுருவன்றே.

(இ-ள்.) என்று இவவாறு (பிரம விஷ்ணுக்கள்) சொல்லவும், வேதங்களையெல்லாந் தந்த பிரணவம் அவர்களுக்குமுன்வந்து அவலவார்த்தை கூறினீர்

உங்கள்பேரறிவும்இவ்வளவுதானோஎன்றுசிரித்துஅப்புராதனனாகியசிவபெருமான் பிரியாவிடையாகிய பராசத்தியுடன் கலந்தும் கலவாதவன்; முழுமுதற்கடவுளாகிய அப்பெருமானது திருவடிவம் உங்களுடைய வடிவத்தைப்போல (ஒருவரால்) உண்டுசெய்யப்பெற்ற திருமேனியல்ல. எ - று. (௧௧)

ஒன்றாய்ப் பலவாய் முழுமுதலா யுணராப் பொருளா யுணர்வதுவாய்
நின்று னவன்ற னனந்த வுருவம் பனையா நீவிரவன்
பொன்றாழ் கமலத் தாள்போற்றி யுய்ம்மி னெனலு மவர்ப்பிணித்துத்
தொன்றாய்த் தொடர்ந்த மலமூடத் தோன்று தாகச் செருக்குற்றார்.

(இ-ள்.) ஒன்றாகியும், பலவாகியும்,முழுமுதலாகியும், யாவராலு மறியாப் பொருளாகியும், அறியும்பொருளாகியும் விளங்குகின்ற அச்சிவபெருமானது ஆனந்தவடிவமே பராசத்தியாகும்;நீங்கள் அப்பெருமானது பொன்னிறச்சிறந்ததாமரை போன்ற திருவடிகளைத்துதித்துப்பிழையுங்கள் என்று சொல்லவும், இப்பிரமவிஷ்ணுக்கள் அநாதியே தம்மைத்தொடர்ந்துகட்டிய ஆணவமலத்தால் அறிவுதோன்றாமல் இறுமாப்படைந்தனர். எ - று. (௧௨)

அன்ன காலை யவர்நாப்பண் மம்மர்க் கிழங்காண் டகழ்ந்தெறிவான்
பொன்னங் கிரியைக் குழைத்தவுணர் புரமூன றெரிதத புரிசடையோன்
மின்னுங் கதிர்க ளொருகோடி யெழுந்தா லென்ன வெயிலகற்றித்
துன்னுஞ் சோதிப் பிழம்பாகிச் சுடர்விட் டெறிப்பத் தோன்றினால்.

(இ-ள்.) அழகிய மேருமலையை வில்லாகவளைத்து அசுரர்கள்வசித்த திரிபுரங்களையெரித்த புரிந்தசடையையுடைய சிவபெருமான், அவவாறு இறுமாந்த காலத்து அவ்விருவருக்கிடையில் அறியாமையெனனும் கிழங்கைக் கல்லியெறியும்படி, ஒளிவீசுகின்ற கோடிசூரியோதயமானாற்போல வெயில்வீசி விளங்குகின்ற நெருங்கிய சோதிவடிவமாகிக் கிரணங்கள்சிந்தும்படி எழுந்தருளினர். எ-று. ()

உயரு மண்டச் சுவரனைத்து முருவி நின்ற சுடர்ப்பிழம்பை
யயர்வி னேடு மலர்க்கிழவ னஞ்சா னதனை நோக்குதலு
முயலூர் புனிற்றுப் பிறைக்கொழுந்து மூரிச் சடையு மெண்டோளுங்
கயல்சேர் கண்ணி யொருபங்குங் கணணோர் மூன்றுங் கண்டதுவே.

(இ-ள்.) உயர்வாகிய அண்டப்பித்திவனாயினும் ஊடுருவிவிளங்கிய சுடர்ப் பிழம்பைப் பிரமதேவன் உன்மத்தங்கொண்டு பயப்படாமற் பார்க்கவும், முயற்களங்கம் பொருந்திய இளம்பிறைச்சந்திரனும், புரிந்தசடையும், எட்டுத் திருப்புயங்களும்,இரண்டு கயற்கெண்டைகள் சேர்ந்தாற்போன்ற உபயநேத்திரங்களையுடைய உமாதேவிபாகமும், ஒப்பற்ற முக்கண்களுமாகத் தோன்றியது. எ-று. (௧௪)

காண்ட லோடு மலர்க்கிழவ னுள்ள மதனிற் கனல்கொளுந்தித்
தூண்டு முனிவு பிடித்தூந்த வெனது புருவத் துணைநாப்ப
ணீண்ட சடையி னெடுந்தோன்றும் புதல்வ னலையோ நீயென்ன
மூண்ட வெகுளி வயிரவனை முக்கட் கனியாண் டளித்ததுவே.

(இ-ள் ) அவ்வாறு காணப்படவும், பிரமதேவன் மனத்தில் கோபத்தீப்பற்றித் தன்னையெழுப்புகின்ற இறுமாப்பானது பிடித்துச்செலுத்த,நீனது இரண்டு புருவங்களின மத்தியில் நெடியசடையுடன் உதித்த புத்திரனல்லவோ என்று சொல்ல, முக்கட்கனியாகிய சிவபெருமான் அதிகரித்த கோபத்தையுடைய வயிரவக்கடவுளை அங்கு உதிக்கச்செய்தனர். எ-று.

பிரமன் புருவத்திடையில் தோன்றியதாவது.

பிரமன் மூவுலகுஞ்சிருட்டித்த இறுமாப்பால் ஒருகாலத்திற் சிவபிரானை மறந்தனன். அதனாற் படைத்தற்றொழில் மாறியது பிரமன் பெருமானைவேண்டவும் அருளாமையால் மருளுற்றுக் கண்ணீர்சிந்த அந்நீர்த்துளி அலகையாயின அதுகண்டஞ்சிச்சோர்ந்த பிரமனுக்குச் சொப்பனவத்தையிற் பெருமான்காணப்பட்டு "நமது பதவியிலுள்ளோரை உம்மிடம் அனுப்புவோம்" எனத்திருவாய் மலர்ந்தருளியவகையே, அப்பிரமனது நெற்றியினின்றும் உருத்திரர் பதினொருவர் தோன்றிச் சிருட்டித்தொழிலை நிறைவேற்றினர். என்பது இதனை,

கந்தபுராணம்-அசுரகாண்டம்-உருத்திரர் கேள்விப்படலம்.

"நிற்றலு மவரை நோக்கி நெற்றியந் தலத்தி னீவி
ருற்றதை யெவன்கொ லென்ன வுன்செயன் முடியு மாற்றான்
மற்றெமை விடுத்தா னம்ப னதவின் வந்தே மென்றார்
பற்றலர் புரமூன் றட்ட பண்ணவன் வடிவங் கொண்டார்" —என்பதனு

னுணர்க. (௧௫)

இமையார் பரவு மேற்றெகினப் பாக னுள்ளச் செருக்கினையுந்
துமியாத் திரைப்பாற் கடற்சேர்பப னுள்ளச் செருக்குந் தொலைத்தியென
வமையா வெகுளிக் கனலகொளுந்த யலரோ னைந்தாக தலையதனைக்
கமைதீர காரி தன்னிடக்கை யுகிராற் கிள்ளிக் களிப்புற்றான்.

(இ-ள்.) தேவர்கள் துதிக்கின்ற ஆண் அன்னத்தை வாகனமாகவுடைய பிரமதேவனது மனச்செருக்கையும், நீங்குதலில்லாத அலைகள்பொருந்திய க்ஷீராப்தியை இடமாகவுடைய விஷ்ணுவினது மனச்செருக்கையும் ஒழிக்கக்கடவாய் என்று (சிவபெருமான்) திருவாய்மலர்ந்தருள, சாந்தம் நீங்கிய வயிரவக்கடவுள் அடங்காத கோபாக்கினி பற்றப்பிரமனது ஐந்தாவது சிரசைத் தமது இடத்திருக்கரத்தின் திருநகத்தாற்கிள்ளிச் சந்தோஷித்தனர். எ-று. (௧௬)

அண்ட முகட்டி னரசிருக்கு மலரோன் சென்னி யரிந்திடலுங்
கண்டு வெருவி யுலகளிக்குங் காயா வண்ணன் றொழுதேத்தக்
கெண்டை கிடந்து குழைபுரட்டு மதிவாண முகத்துக் கிள்ளைமொழி
வண்டு படிபூங் குழல்பாகன் மலர்த்தா ளயனும வாழ்த்தினனால்.

(இ-ள்.) அண்டகடாகத்துச்சியில் அரசுவீற்றிருக்கும் பிரமனதுசிரசைக் கிள்ளிவிடவும், உலகங்களைக்காக்கின்ற காயாம்பூநிறமமைந்த விஷ்ணுமூர்த்தி பார்த்துப் பயந்து வணங்கித் துதிக்க, சேற்கெண்டைகளிருந்து குண்டலங்களைப் புர

ட்டுகின்ற சந்திரன்போலும் ஒளிவாய்ந்த முகத்தையும், கிளியையொத்தசொல்லை யும், வண்டுகள்மொய்க்கும் மலாமாலைசூடிய கூந்தலையுமுடைய உமாதேவிபாகரா கிய சிவபெருமானது மலர்போன்ற திருவடிகளைப் பிரமதேவனுந் துதிசெய்தான்.

இறவா தென்றுந் தானாகி யிருக்கும் பவளத் தாழ்சடையோன்
பறவாப் பூவை வண்ணனுந்தண கமலத் தோனும பதைத்தாவி
துறவா வண்ண மினிதளித்தி தோன்றா லென்னக் குளிர்தூங்கு
பிறைவார் கண்ணி வயிரவனும் பெட்பி னோடு முனிவொழிந்தான்.

(இ-ள்.) அழியாமல் எக்காலத்துந் தானே பரமாகி விளங்குகின்ற பவ ளம்போற் சிவந்து நீண்டசடையையுடைய சிவபெருமான், வயிரவ! திருமாலும் பிரமனுந்துடித்து உயிர்நீங்காதவிதம் இனிதுகாப்பாயாக என்று அனுக்கிரகிக்க, குளிர்ச்சிமிகுந்த பிறைச்சந்திரனை கெடியமாலையாகவுடைய வயிரவக்கடவுளும் ஆசைகொண்டு கோபம் நீங்கினர். எ - று.

பூவைஎன்பது காயாமரம்-கிளி-குயில்-நாகணவாய்ப்புள் எனப்பல பொருள் பயக்கு மொரு பெயர்த்திரிசொல்லாதலின், அவற்றுள் ஏனைய விலக்கும்படி "பற வாப்பூவை" என்றார். (௧௯)

கங்கைப் பெருக்கா றுவட்டெடுக்குங் கமழ்பூங் கொன்றைச் செஞ் சடையோன், வெங்கட் கூற்றுந் தலைபனிப்ப வெகுளுங் காரி யயன்றலை யோ, டங்கைத் தாங்கிப் பனிரண் டைய மேற்று மணிச்சுடிகைச்,செ ங்கட் பாந்தண முடிக்கிடந்த வுலக மனைத்துந் திரிதியால.

(இ-ள்.) நீர்ப்பெருக்குடைய கங்காநதி புரட்டுகின்ற மணம்வீசுங் கொன் றைமலர்மாலைசூடிய சிவந்த சடையையுடைய சிவபெருமான் (சொல்லுகின்ற னர்) கொடிய கண்களையுடைய இயமனுந் தலைநடுங்கும்படி கோபிக்கும் வயிரவ! பிரமகபாலத்தை உள்ளங்கையிற்றாங்கிப் பன்னிரண்டுவருடகாலம் பிட்சையெடு த்து, மாணிக்கம்விளங்கும உச்சிக்கொண்டையுஞ் சிவந்தகண்ணையுமுடைய ஆதி சேடன் முடியில் விளங்கும் பூமிமுழுவதுந் திரியக்கடவாய். எ - று. (௧௩)

கற்றைக் கதிர்கால் வெண்ணிலவுக் கண்ணி வேய்ந்த காரிதனைப்
பற்றி மாதி னுருவொடுமோர் பாதம விசும்பின் மேற்சிலம்ப
வுற்றோர் பாதம புவிமிதிப்ப வுறைதி பிரம கத்தியென
நெற்றித் தனிக்கண் விடைபபாகன் றரும மோரந்து நிகழ்த்தினனால்.

(இ-ள்.) பிரமகத்தியே! கிரணத்தொகுதியைக் கக்கும் வெண்மைதங்கிய சந்திரனைச் சிரோமாலையாகவணிந்த வயிரவனைப்பிடித்துப் பெண்வடிவுடன் ஒரு பாதம் ஆகாயத்திலொலிக்கவும்,ஒருபாதம் பூமியைமிதிக்கவும் பொருந்தியிருக்கக் கடவாய் என்று ஒப்பற்ற நெற்றிக்கண்ணையுடைய இடபாரூடராகிய சிவபெரு மான் தருமமுறையுணர்ந்து திருவாய்மலர்ந்தருளினர். எ - று. (உ0)

அவனி பொதிந்த சிற்றுதரத் தண்ண றனக்கு மளப்பரிய
புவன மனைத்துந் தனித்துடைக்கும் புராரி நோக்கி விடைநல்கிப்
பவனங் கனனீர் புவிவெளியா யவற்றுட் டோயாப் பரஞ்சுடராஞ்
சிவனு மன்ப ரிதயமலர்க் கோயி ரூறுஞ் சேர்ந்தனனால்.

(இ-ள்.) அளவில்லாத எல்லாவுலகங்களையுந் தனிநின்று சங்கரிக்குஞ் சிவபெருமான, உலகங்களெல்லாந் திணிந்துள்ள சிறியவயிற்றையுடைய விஷ்ணுமூர்த்திக்கும் விடைகொடுத்து, காற்று-அக்கினி-நீர்-மண் - ஆகாயமுதலிய பூதங்களாகி அவற்றிற்கதீதப்பட்ட பரஞ்சுடராகிய சிவபெருமானும அடியாரது இதயதாமரையாகிய கோயில்கடோறு மெழுந்தருளினர். எ - று. (உக)

வடவை குமட்டி வெதிரொடுத்து வயங்குஞ் சூலப் படைதாங்கிப்
படியில விசும்பிற் பாதலத்திற் பலியேற் றெங்குந் தனிப்போகி
யொடிவில் கணங்க ளடிபோற்ற வுலகம பூத்த திருவுந்திக்
கடிசேர பசிய துழாய்மாலைக் கண்ண னுறையு முலகடைந்தான்.

(இ-ள்.) (அவவாறே வயிரவக்கடவுள்) வடவாமுகாக்கினியைக்கக்கிச் சிவிர்த்து விளங்குஞ் சூலாயுதம்பிடித்து, பூலோகத்திலுந் தேவலோகத்திலும் பாதாளலோகத்திலும்பிச்சையெடுத்து எங்கெங்குஞ்சென்று அழிவில்லாத கணங்களெல்லாந் தமது திருவடிகளை வணஙக, எலலாலோகங்களையும் பூத்தருளிய திருவுந்தியையுடைய வாசனைதங்கிய பசிய துளவமாலைசூடிய திருமால் வசிக்கின்ற வைகுந்தநகர மடைந்தனர். எ - று. (உஉ)

இதுவன் றதுவன் றென்பதல்லான் மறையு மறியா வெம்பெருமா
னெதிர்வந் தெளிதிற் றோன்றுதலு மிதய நெகிழ விழிபனிப்ப
மதுவுண் டறுகால் குடைந்தூதும வணடா மரையின் மாதினொடும்
கதுமென் றெழுந்து முகின்மேனிக் கண்ணன் காரி யடிவீழ்ந்தான்.

(இ-ள்.) இதுவல்ல அதுவல்ல எனககூறுதலன்றி வேதங்களுங் காணமுடியாத எமது பெருமான இலேசாகப் பிரத்தியட்சமாகித்தோன்றவும், மேகவாணராகிய திருமால் மனமுருகவும்,கண்களீர்துளிக்கவும்,வண்டுகள்தேனுண்டு குடைந்தூதுகின்ற வளமமைந்த தாமரையில்வசிக்கும் இலக்குமிதேவியுடன் விரைந்து சென்று வயிரவக்கடவுள் திருவடிகளிற் பணிந்தனர். எ - று.

"இதுவன் றதுவன் றென்ப தல்லான மறையு மறியா"—என்பதை,

"பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல வினையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங்கி டந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ற கூடன் மறுகிற்
பாதங்க ணோவ வளையிந்த ஞதி பகர்வாரை யாயு மவரே."—என்னுந் திருவிளையாடற் புராணத்தானுணர்க. (உங)

வீழ்ந்தா னெழுந்தான் மலர் தூவி விரைசேர் கொன்றை வேணியனைச்
சூழ்ந்தான் றுதித்தான் றுள்ளினன் சுருதிப் பொருள்கள் பலபாடித்
தாழ்ந்தா னுவகை பிடித்துந்தத் தழங்கு ஞானப் பெருங்கடலு
ளாழ்ந்தா னுலக மனைத்தினையு மயின்று னரவிற் றுயின்றானே.

(இ-ள்.) எல்லாவுலகங்களையும் உண்டு, சேஷசயனத்தில் யோகநித்திரை செய்யுந் திருமால் (இவவாறு) பணிந்தார்; எழுந்தார்; வாசனைதங்கிய கொன்றை சூடிய சடையையுடைய வயிரவக்கடவுளை மலர்சாத்திப் பிரதட்சணஞ்செய்தார்; தோத்திரம்பாடினார்; ஆநந்தக்கூத்தாடினார்; வேதவாக்கியங்களிற் பல

வெடுத்துச்சொல்லிப் பணிந்தார்; சந்தோஷமானது தன்னைப்பிடித்துச் செலுத்த ஒலிக்கின்ற பெரிய ஞானமாகிய கடலிலமிழ்ந்தார். எ - று.

"வினைமுற் றேவினை யெச்ச மாகலுங்-குறிப்புமுற் றீரெச்ச மாகலு முள வே" என்றபடி "வீழ்ந்தான் - எழுந்தான்" முதலியவற்றை முறையே "வீழ்ந்து - எழுந்து" என்று வினையெச்சங்களாக்கிப் பொருள்கூறுதலும் ஒன்று. (௨௫)

முப்பாழ் கழிந்து மனமிறந்து மோன மாகு நிலையதனுக்
கப்பா லாகுந் துரியவுரு வடைந்து வருதல கண்டனனாற்
செப்பார் முலைப்பொற் றிருவேயான் செய்த தவமென் னெனக்கினியா
ரொப்பார் நீயுந் தனிக்காண வுஞற்று தவமற் றென்கொல்லோ.

(இ-ள்.) செப்புப்போலுந் தனங்களையுடைய கமலையே! முக்குற்றங்க ணீங்கி,நினைத்தலற்று,மௌனமாகியநிலைமைக்குமேற்பட்டதான துரியப்பொருள் திருவடிவேற்றுவருதலைத் தரிசித்தேன்ஆதலால் யான்செய்தது எத்தகைய தவம்? இனி யாவர் எனக்குச் சமானமாவர்; நீயும் ஒப்பற்றுத் தரிசிக்கும்படி இயற்றிய தவம் என்னவோ? (அறிகிலேன் என்று மேலுங் கூறுகின்றனர் திருமால்.)

இன்னோ ருமை நவின்றோரு முருவ மெய்தார் யாங்காண
வன்னோ னுருவு தாங்கிவரு மிறும்பூ துளத்தி லடங்குவதோ
தொன்மா மறைக ளொருநான்குந் துதிக்கு மவனு மைந்தொழிலுந்
தன்னு லியற்றி யத்தொழிலிற் சார்பில் லானு மிவனுமால்.

(இ ள்.) இப்பெருமானது திருநாம (மந்திரத்தை)ச் செபஞ்செய்தோரும் திருவுருவத்தைத் (தரிசிக்க)ப் பெறார்கள்; அப்படிப்பட்ட பெருமான் திருவடி வேற்று நாம் தரிசிக்கும்படி எழுந்தருளிய அதிசயம் மனதில் அடங்குவதா? பழமையாகிய சிறந்த நான்கு ஒப்பற்ற வேதங்களுந் துதிக்கப்படுபொருளாயுள்ளவனும் (சிருட்டி - திதி - சங்காரம் - திரோபவம் - அனுக்கிரகம் என்னும்) பஞ்சகிருத்தியங்களையும் தன்னாலேநடத்தி அவற்றிற்கதீதப்பட்டவனும் இவ்வயிரவமூர்த்தியேயாம். எ - று. (௨௬)

பண்ணிற் கனிந்த குதலைமொழிப் பாவை பங்கன் றனைத்தமது
கண்ணிற் கண்டும் வீடுபெறார் விசும்பி னுறையுங் கடவுளர்மற்
றெண்ணி லிவர்தங் கதிநன்றே மனிதர் காணி லிருங்கதியி
னண்ணி யிடுவ ரவர்கதியே மேம்பா டுடைத்தா நன்னுதலே.

(இ-ள்.) நல்ல நெற்றியையுடைய திருமகளே! பண்ணோசையிலும் மதுரமாகிய மழலைச்சொல்லையுடைய உமாசமேதராகிய சிவபெருமானை, தேவலோகத்தில் வசிக்கும் அமரர் தமது கண்களால் தரிசித்தும் (இஷ்டபோகங்களை விரும்பிப்பெறுவரேயன்றி) மோட்சமடையார்கள்; ஆலோசிக்குமிடத்தில் இவர்கள் பதவி நன்றாகயிருந்தது. மானுடர்தரிசித்தால் பெரியபதவியிற் பொருந்தி வாழ்வார்கள் ஆதலால் அவர்கள் பதவியே சிறப்புடையதாகும். எ - று. (௨௭)

நாட்டங் குளிர்ப்ப வுண்ணெகிழப் பழிச்சிப் பழிச்சி நாத்தழும்பக்
கூட்டுண் டறுகால் விழைவயரக் குழைக்குங் கண்ணித் துழாய்மார்பன்

மீட்டுஞ் சென்றுங் கெயினர்பதி விழியுந் தனது விழிமலருஞ்
சூட்டுந் தெய்வத் தாமரையிற் றொழுது விழைவிற் சொலகின்றான்.

(இ-ள்.) வண்டுகள் கூட்டங்கொண்டு விருந்துண்ணும்படித் தேனபொருந்திய இலைகளுடைய துளவமாலையணிந்த மார்பராகிய திருமால், கண்கள்குளிர்ச்சியெய்தவும், மனமுருகவும், நாவானது தழும்பேறும்படி துதித்துத்துதித்து மீளவும்போய், வேடுவர் குலமன்னராகிய திருக்கண்ணப்பநாயனாரது திருக்கண்ணுந் தனது விழியாகிய தாமரையுந் தரித்த தெய்வீகமமைந்த கமலசரணங்களில் நமஸ்கரித்து ஆசையுடன் சொல்கின்றனர். எ - று.

எயினர்பதிவிழியணிந்தவதை-திருத்தொண்டர் புராணசாரம்.

"வேடரதி பதியுடுப்பூர் வேந்த னுகன விளக்கியசேய் திண்ணனார் கன்னி வேட்டைக், காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலரும் காய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தி யார்க்குத், தேடருமன பினிலாறு தினத்தளவு மளிப்பச் சிறுசிவ கோசரியுந் தெளியவிழிப் புண்ணீ, ரோடவொரு கண்ணப்பி யொருகண்ணப்ப வொழிகவெனு மருள்கொடரு குறகின் றாரோ.' —என்பதனானும்,

திருக்கண்ணப்பதேவர் திருமறம்.

"முக்க ணப்பனுக் கொருகணி துதிரந்—தெக்க ணத்திடை யிழிதர வக்கண மழுது விழுந்து தொழுதெழுந் தரற்றிப்—புனமருந் தாற்றப் போகா தென்று தன்னை மருந்தென்று மலர்க்க ணப்ப—வொழிந்தது மற்றை யொண்டிரு நயனம் பொழிந்த கண்ணீர்க் கலுழி பொங்க—வற்ற தென்று மற்றைக் கண்ணையும் பகழித் தலையா லகழ வாண்டகை—யொருகை யாலு மிருகை பிடித்து."— என வருங்கல்லாடதேவர் திருவாக்கானு முணர்க. (௨அ)

பொன்னஞ் சிகரி விழுதுவிட்ட போலுங் கொன்றைப் புரிசடையோய்
நின்னைக் கனவி னினைந்திடுவோ ரிடத்தும் பாவ நின்றிடா
தென்னே நின்னைக் கொடும்பாவந் தொடர்வ திதுவு முலகனைத்துங்
கொன்னே மருட்டி நீயிழைத்த விளையாட் டென்றே குறிக்கின்றேன்.

(இ-ள்.) அழகிய பொன்மலையானது விழுதுவிட்டாற்போன்ற கொன்றைமாலைசூடிய புரிந்த சடையையுடைய பெருமானே! தேவரீரைச்சொப்பனவத்தையிலாவது கருதுவோர் பக்கலும் பாவம் நிற்கமாட்டாது (என்றால்) தேவரீரைக் கொடியபாவமாகிய பிரமகத்திதொடருவது என்னகாரணமோ? இவ்வாறு செய்வதும் உலகத்துள்ளோரையெல்லாம் வீணுகமயக்கித் தேவரீர்செய்யுந் திருவிளையாடலெனவே ஆலோசிக்கின்றேன். எ-று. (௨௯)

கிழிய வுலக முழுதிடந்த கேழற் கோடு மழல்காலும்
விழியு மடங்க லீருரியும் விரைமென் கமலப் பொகுட்டுறைவோன்
கழியு முடைவெண் டலைதொடுத்த கண்ணித் தொடையும் புனைந்தாடும்
பழியன் றகல வெவ்விரதம் பயின்ற தெந்தாய் பகருதியால்.

(இ-ள்.) உலகமெல்லாம் பிளவுறும்படி தோண்டிய பன்றியின்கொம்பையும், நெருப்புப்பொறி சிந்தும் (மீனின்) கண்ணையும், சிங்கத்தின் சருமத்தையும்,

மணங்கமழும் மெல்லிய தாமரைக்கொட்டையில் வசிக்கும் பிரமனது (மாமிசங்) கழிந்த வெண்டலையாற்கட்டிய கண்ணியாகிய மாலிகையுந்தரித்து நடிக்கின்ற பெரும்பழிநீங்கும்படி அசசாவசங்காரகாலத்தில் எதுதவஞ்செய்தது எந்தையே! சொல்வாயாக. எ-று.

கேழற்கோடணிந்தது.

பொற்கண்ணனுகிய இரணியாக்ஷன் என்னும் அவுணன் பூமியைப் பாயாகச்சுருட்டி வயிற்றுள்வைத்துக்கொண்டு பூமியினகீழுள்ள பிலதுவாரத்தில் மறைந்திருக்க,திருமால் வராகவடிவேற்று அவனைக்கொன்று பூமியை முன்போல் விரித்து அகங்கரித்து, சர்வான்மாக்களும் அஞ்சும்படி கோபித்தனர். அதுகண்ட இந்திரன் - பிரமன்முதலானோர் திருக்கயிலையை யடைந்து சிவபெருமானைத் துதிக்க பெருமான் குமாரக்கடவுளை நோக்க, அவர் பன்றிவடிவுற்ற விணுவின் பக்கல்சென்று, அவ்வராகத்தி னிறுமாப்புநோக்கித் தமது திருக்கரத்திலிருந்த வேலாயுதத்தால் நெற்றியிற்குத்தி நிலததோடமுக்கிக் கொம்பைப்பறித்துச் சிவபெருமானது திருச்சந்நிதியில்வைத்தனர். தேவர்வேண்டுகோளின்படி பின்னொருகால் நாராயணன் செருக்கடையாவண்ணம் எம்பெருமான் அதனைத் திருமேனியில் தரித்துக் கொண்டனர். திருமால் செருக்கொழிந்து காஞ்சிநகரிற் சிவார்ச்சனைசெய்து **வராகபுராணம்** கூறிப் பண்டையவடிவுடன் வைகுந்தமடைந்தனர்-என்பது இதனை,

உபதேசகாண்டம் - வராகாவதாரச்சருக்கம்.

"பரந்த பாற்கடற் பாம்பணைப் பள்ளியான்
முரண்ட ருந்திறற பன்றியின மூதுருக்
கரந்து வையகம் யாவுங் கலக்கலா
லரந்தை பெற்று வெருக்கொண்ட தாருயிர்.

ஆடல் வேல்கொண் டமுக்கலுஞ் சோரிநீர்
பாட கனறது பாதலஞ் சேர்ந்ததா
லூடு புக்கிழிந் தின்னது ணைபிறைக்
கோடு பற்றிப் பிடுங்கினன கோதிலான்.

மாய மாய வராக வுருக்கழிந்
தாய மாய் னரனை யருச்சியாத்
தீய வாணவச் செய்கைச் செருக்கறப்
போயொ ழிந்து தனதுழைப் போயினன்."—என்பதனுலும்,

அழல்கானும் விழி புனைந்தது.

பிரமன்கையிலிருந்த வேதத்தைப்பறித்துக்கொண்டுபோய்ச் **சோமுகாசுரன்** கடலுக்குள் ஒளிக்க,திருமால் மச்சவடிவேற்று அவனைச்சங்கரித்து இறுமாப்பால் மகாமேருவைப்போன்ற திருமேனியோடு சத்தசமுத்திரங்களையுங் கலக்க, ஜலப் பிராணிகளுஞ் சர்வான்மாக்களுந் துனபுறுதலைககண்ட தேவர்கள் திருக்கயிலையடைந்து சிவபெருமான்பால் விண்ணப்பஞ்செய்ய, பெருமான் அருகிருந்த சாத்தாவை நோக்கி "விஷ்ணு மச்சவடிவோடடைந்திருக்குஞ் செருக்கையடக்குக" என்றருள, சாத்தா வலையர்வடிவுடன் சென்று தமது திருக்கரத்திருந்த வலை

யைச் சத்தசமுத்திரமும் நிரம்பும்படி வீசி, மச்சவடிவாகிய விஷ்ணுவைப்பிடித்து இருகண்களையும் பிடுங்கிச்சிவபிரான் திருமுன்வைத்தனர். பின்னொருகால் விண்டு செருக்கடையாவண்ணந் தேவா வேண்டுகோளின்படி அதனைத்தமது திருமேனியில்தரித்தனர். திருமால் செருக்ககன்று திருக்காஞ்சியிற் சிவலிங்கார்ச்சனைபுரிந்து **மச்சபுராணம்** ஓதிப் பழையவடிவுடன் வைகுந்தமடைந்தார். என்பது, இதனை,

உபதேசகாண்டம் - மச்சாவதாரப்படலம்.

“அலைத்த வார்புனற் சென்னியோ னுங்கவை யருளக்
கொலைத்த லைக்கொடுஞ் சூற்படைச் சாத்தனுங் குறுகி
வலைக்கு லத்தவ ருருவுகொண் டலைக்கடை வந்தா
னிலைத்த சிந்தையி னேகின னதற்கெதிர் நிமிர்ந்தான்.

எடுத்து வீசிய வலைகட லேழையு நிரப்பிப்
படுத்தி ழுத்தலும் வலையகப் பட்டது பாரார்
நடுக்க டற்புகுந் திருவிழி பறித்தன னடந்தான்
கடுத்த வெஞ்செருக் கழிந்தது மீனமாக் கடவுள்.”—என்பதனுலும்,

மடங்கலீருரி புனைந்ததாவது.

**இரணியாக்ஷன்** என்னு மசுரன் தானேபிரமமெனமதித்து இரணியகமோ வெனுஞ்சத்தமன்றி வேறென்றுங் காதிற்படாது அரசுசெய்கையில், அவன்புதல்வன் பிரகலாதனன்பால் திருமால் தன்னொரு கூறு நிறுத்தி எதிர்க்கச்செய்து தூணினின்று நாரசிங்காவதாரஞ் செய்து அவ்வசுரனைக்கொன்று அவனுதிரமுண்டு ஆரவாரிக்கையில் தேவர்கள் துதிக்க, அதனுல் கோபந்தணியாது இறுமாந்தனர். முனிவர் தேவர் முதலானோர் திருமகளைத் துதிக்க, அத்தேவியின் பிரார்த்தனைக்கும் இரங்காமை கண்டு பயந்த தேவர்கள் திருக்கயிலையடைந்து சிவபிரான்பால் முறையிட, பெருமான் வீரபத்திரக்கடவுளைப்பார்த்து “திருமால் நாரசிங்காவதாரத்துடன் கொண்டிருக்குஞ் செருக்கையடக்குக” என, **வீரபத்திரர்** சரபப்பட்சி வடிவேற்றுச்சென்று நாரசிங்கத்தை இரண்டு சிறகுகளாலே யமுக்கிச் சொண்டினுல் மேற்றோலையுரித்துச் சிவபிரான் திருமுன்னிலையில்வைத்தார்; தேவர் வேண்டுகோளின்படி விஷ்ணு இறுமாப்படையாதவிதம் பெருமான் அதனையணிந்தனர். திருமால் மமதைநீங்கிக் காஞ்சியில் சிவலிங்கப்பிரதிட்டைசெய்து பூசித்து **நாரசிங்க புராணம்** கூறிச் சுயவடிவுடன் வைகுந்தமடைந்தார் - என்பது இதனை,

உபதேசகாண்டம் - நாரசிங்காவதாரப்படலம்.

“சரபப் பேருரு வெடுத்தன னளவொழி தடக்கை
விரவித் திண்சிறை வெள்ளிடை புதைத்துற மீப்பாய்ந்
துரவுத் திண்பத மெட்டினுங் கிளைத்தவெள் ளுகிராற்
கிரணப் பொற்கிரி யெடுப்பினுங் கிழங்கெனக் கிழியும்.

கறித்து மிழ்ந்தது கரங்களைக் கதிர்முடிச் சிரத்தைக்
கொறித்து மிழ்ந்தது குருதிகொப் புளித்தது பஃறேன்

முறித்த முக்கிய திடிக்குர லெழுப்பிய முழக்கிற
செறித்த புனசெருக் கிழந்துயி ரிழந்தது சீயம்.''—என்பதனு முணர்க.

இச்சரிதங்களைக்(காஞ்சிபுராணம்) சிவபுண்ணியப்படலம்-மச்சீசப்படலம்-
நாரசிங்கீசப்படலங்களில் பரக்கக்காணலாம். (௩௦)

ஈறில் புவன மனைத்தினையு நுதற்கட் டழலி னெரியூட்டி
நீறு பூசிப் புறங்காட்டி னிணமவாய்ப் பிலகக் கொடியினமும்
பாறுந தொடரு முத்தலைவே றிரித்துப பவுரி கொணடாடு
மாறில் பழியைத் துடைத்த தெவ்வா றடியேற குணர வழங்குதியால்.

(இ-ள்.) முடிவில்லாத எல்லாவுலகஙகளையும் நெற்றிக்கண்ணின் நெருப்பால் எரித்து, (அவவாறெரிந்த) நீற்றைத்தரித்து,மாமசானத்தில் வாயினின்றுகொழுப்புச் சொரியுங காக்கைக்கூட்டமும் பருந்துகளும் பின்வருஞ் சூலாயுதத்தைச் சுழற்றிப் பவுரிக்கூத்தாடுகின்ற நீங்காதபழியை எவவாறு விலக்கியது? அடியேனுக்குத் தெரியச்சொல்லவேண்டும். எ - று. (௩௧)

மூட்டாட் கமலத் தயன்றலையொன் றரிந்த பாவ முடியாதேல்
மட்டார் துளவோ னுலகீன்ற மறையோன றலைகள் மழுப்படையின்
வெட்டா கின்று புவியனைத்தும விளியு முகாந்த முடிவதனில
வட்டாட் டயர்ந்த கொடுமைபழிகள் யாது நோறறு மாற்றினையால.

(இ-ள்.) முள்ளடியையுடைய தாமரையில்வசிக்கும் பிரமனது ஒரு தலையைக்கிள்ளிய பாவம் நீஙகாவிட்டால், வாசனைவீசுந துளவமாலையணிந்த திருமால் - உலகங்களைச் சிருட்டித்த பிரமன் ஆகிய இவாகளது தலைகளை மழுவாயுதததால் வெட்டி, உலகமுழுவதும் அழிகின்ற யுகமுடிவாகிய ஊழிகாலததில் வட்டமாகச் சுழன்று ஆடிய கொடியபாவங்களை என்னதவஞ்செய்து மாற்றினீர்.?

ஆத றன்னு லறம்பிறழா தைய மேற்கு மவாபோலப்
பாத மலாகள் சிவப்பூரப் போநத துனது பதமபிழையாத்
தீதி லடியேன் றவப்பயனென் றிறைஞ்ச லோடுஞ் செழுங்கமலப்
போதின் மடந்தை முழுமுதலாம புராரி யேற்பப பலியளித்தாள்.

(இ-ள்.) ஆகையால் தருமமுறைதவறாமல் பிச்சையெடுப்பவர் போன்று பாததாமரைகள் சிகப்புமிகும்படி எழுந்தருளியது, தேவீரது திருவடிப்பத்திதவறாத குற்றமில்லாத அடியேனது தவபபலன் எனறு கூறிப் பணியவும, செழுமைதங்கிய தாமரைமலரில் வசிக்கும் இலக்குமிதேவியாா, முழுமுதற்பெருமானாகிய வயிரவக்கடவுள் ஏற்கும்படி பிச்சையிட்டனர். எ - று.

வயிரவர் வைகுந்தமடைந்ததைப் பின்வருமாறுங் கூறுவர். அதாவது.

வயிரவக்கடவுள் பிரமன சிரசைக்கிள்ளியபின், சிவபெருமான் "அவர்கள் உயிரையாங்காமல் திருமாலாதியாருலகடைந்து உதிரப்பலிபெறுக" என, அவவாறே வயிரவர் வைகுந்தமடைந்து விண்டுவின் சேனாதிபதியாகிய விடுவச்சேனன் என்பானை சூலப்படையின முனையிற்சுழலும்படி குத்திக்கொண்டு திருமால் முன்செல்ல, திருமால் தனது மனைவியரிருவருடன் எதிர்கொண்டுபணிந்து நெற்

நரம்பைப் பிடுங்கிக் கபாலத்தில்விட, தாரையாக நூறுயிரவருட மொழுகியுங் கபாலம் நிறையவில்லை. உதிரமுழுவதும் நீங்கிய திருமால் மூர்ச்சித்துப் பூமியில்வி ழ, வயிரவர் உடலைத்தடவி யெழுப்பி "வேணடும்வரங் கேள்" என, விஷ்ணு "தேவரீபால் அன்பருளவேண்டும்" என, அவ்வாறே அருளி, அவர் வேண்டுகோ ளால் விடுவச் சேனனைவிடுத்து, தனது கபாலத்துள்ள உதிரத்தைக் கணங்களுக் குத்தர, அதனல் அவைசிறிது சிறிதேனும் பசிநீங்காமையால் "உலகத்தில் மன்னர் போர்க்களத்திற்சொரியும் உதிரமெல்லாங் கொள்க" என்றனா-என்பது இதனை,

காஞ்சிபுராணம் - வயிரவீசப்படலம்.

"பிச்சை தேரிய வருஞ்செயல் கேட்டனன் பெட்பொடும் விரைந்தெய்திப்
பச்சை மேனியோன மனைவிய ரிருவரும பாங்குற வெதிர் கொணடு
செச்சை நாண்மலாத் திருவடி வணங்கினன செமபுனற் பலியாரு
மெச்ச நெற்றியி னரம்பினைப் பிடுங்குபு விட்டனன் கபாலததுள்.

தாரை யாகிநூ றுயிர மாண்டன வொழுகியுந் தகுநெய்த்தோ
ரீர வெண்டலைக் கபாலததை நிறைததில திரததமுற் றறவோடும்
வீர மாதவ னிலமிசை மூர்ச்சித்து வீழ்ந்தன னதுகாலை
வார முற்றருள வயிரவன திருக்கையால வருடினன மயறீர்ந்தான்." என்பத
னு னுணர்க. (௩௩)

தண்ணந் துளவோ யெப்பொருணீ கேட்டி யெனினுந் தருகுவனென்
றண்ண லுரைப்ப வேதாந்த மறையு நினது கழலிணையென
கண்ணி னூடு நீங்காம லிருபபக் கருணை புரிதியென
வெண்ணெய் கமழுங் கனிபபவள மலர்ந்தீங் கிதனை விளம்பினனால்.

(இ-ள்.) குளிர்ச்சிவாய்ந்த அழகிய துளவமாலை தரித்த விஷ்ணுவே! நீ எவ்வரங் கேட்டாலுங் கொடுபபேன் என்று வயிரவமூர்த்தி யருள, வேதமுடிவில் சொல்லுகின்ற தேவரீரது உபயசரணஙகள எனகண்களுக்கு நீங்காமலிருக்கும் படி கிருபைசெய்யவேணடும் என்று நவநீதம் மணக்கின்ற செம்பவளம் போன்ற வாய்திறந்து இவவாறு கூறினர் (திருமால்.) எ - று. (௩௪)

மாசின் றிமைக்கு மணிவண்ணன் மலர்ந்த கமல முகநோக்கி
யாசில் வரமற் றவற்கருளி யள்ளற் பழனக் கருஞ்சேற்றின்
மூசு சுரும்புங் களிவணடு முட்டாட் கமலத் தடைகிடக்குங்
காசி நகரஞ் சென்றடைவா னடந்தான் கண்மூன் றுடையோனே.

(இ-ள்.) திரிநேத்திரஙகளையுடைய வயிரவபெருமான், களங்கமற்று வி ளங்கும் நீலமணிபோன்ற நிறத்தையுடைய திருமாலின அலர்ந்த தாமரைப்பூவை யொத்த முகத்தைப்பார்த்துக் குற்றமில்லாத அவவகையாகிய வரத்தை அவருக் குக்கொடுத்து, குழம்பாகிய வயலிலுளள கருஞ்சேற்றில் மொய்க்கினற சுரும் புகளும் மதர்தத வணடுகளும் முள்ளடிபொருந்திய தாமரையில் அடைகாக்குங் காசிக்ஷேத்திரமபோய்ச் சேரும்படி வழிக்கொண்டனர். எ - று. (௩௫)

காரோ துழக்கும் வயற்காசி நகரிற காரி யடைநதிடலும
வேரா வெருவிப் பிரமகத்தி வியன்பா தலத்தி னிடைபொளிப்ப

வீரா வுழுவை யுரிபோர்த்த வெம்மான் கரத்தி லென்ஞான்றுந்
தீராக் கபாலந் தூயின்றேன்கைப் பொருள்போற் புவியிற் சேர்ந்ததுவே.

(இ-ள்.) கருநிறமமைந்த எருமைகள் கலக்கும் வயல்களையுடைய காசிக்ஷேத்திரத்திலே வயிரவப்பெருமான் சேரவும், (அவரைப் பின்றொடர்ந்த) பிரமகத்தி வேறுபட்டுப் பயந்து பெரிய பாதாளத்தில் மறைய, புலித்தோலைக் கிழித்துரித்துப்போர்த்த வயிரவக்கடவுளதிருக்கரத்தில் எப்போதும் நீங்காதபிரமகபாலம், நிததிறைசெய்வான் கையிலிருந்த பொருள்போன்று (நழுவி) நிலத்திற்சேர்ந்தது.

உலக மனைத்து முழிதரலுற் றழல வொழியாக் கொடும்பாவ
மிலகு பிறைக்கீற் றணிமவுலி யிறைவன் காசி யெய்துதலும்
பிலமுற் றதனாற் பெருமான்கைத் துடியின் முழக்க முகிலென்னுக்
கலவ மஞ்ஞை நடம்புரியுங் காசி நகருக் கிணையுண்டோ.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற சந்திரசேகராகிய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான் வீற்றிருக்குங் காசிநகரமடையவும் உலகமுழுவதுஞ் சுழன்று வருந்தும்படி நீங்காத கொடிய பிரமகத்தியானது பிலத்துவாரத்தின்வழியே (பாதலலோகம்) சென்றபடியால், பெருமானது திருக்கரத்துள்ள தமருகவோசை மேகமுழக்கமென்று கலாபத்தையுடைய மயில்கள் நடிக்குங் காசிநகருக்கிணையான நகரமிருக்கின்றதோ.?

கையி லேந்து கபாலம்விழு மிடத்திற் காரி யொருதீர்த்தம்
வையம புகழ வினிதமைத்தாண் டிருந்தா னவனை வழுத்தாதார்
வெய்ய வினைதீர் காசிதனின் மேவா ரவனை வலம்வருவோர்
பொய்யில் கயிலை நெடுவரையிற் புராரி மருங்கு வீற்றிருப்பார்.

(இ-ள்.) கையிற் றாங்கிய பிரமகபாலம் விழுந்தவிடத்தில், வயிரவக்கடவுள் ஒரு தீர்த்தத்தை உலகத்தார் துதிக்கும்படி இனிதாக உண்டுசெய்து அவவிடத்தில் வீற்றிருந்தருளினார்; அவவயிரவமூர்த்தியைத் தோத்திரஞ்செய்யாதவர்கள் கொடியபாவந்தவிருங் காசிநகரத்திற் பொருந்தமாட்டார்கள்; அவவயிரவப்பெருமானைப் பிரதக்ஷணஞ்செய்வோர, பொய்மையில்லாத நெடிய கயிலாயகிரியில் சிவபிரான் பக்கல் (சாமீபபதவியுற்று) வாழ்நதிருபபார்கள். எ - று. ()

வழுவி லிந்தக் கதைமுழுதுங் கேட்போ ரெழுதி வைத்திடுவோர்
பழுதில் பொருள்க ளாராய்ந்து பயின்றோர் பததி செய்திடுவோர்
கொழுதி யினவண் டிசைமுரலுங் கொன்றை புனையுஞ் செஞ்சடையோ
னெழுதா மறைதேர் சேவடியி னிருப்பா ரென்ன வினிதிசைத்தான்.

(இ-ள்.) குற்றமில்லாத இச்சரிதமுழுவதுங் கேட்பவர்களும், (புத்தகமாக) எழுதிவைப்பவர்களும், தவறுதலில்லாத பொருளாராய்ச்சி செய்து அப்பியசிப்போர்களும், (அவர்பால்) அன்புசெய்வோர்களும், கூட்டமாகிய வண்டுகள்கொத்திப் பண்பாடுகின்ற கொன்றைமாலைசூடிய செவ்விய சடையையுடைய சிவபெருமானது, எழுதாமறையாகிய வேதங்களால் உணரப்பட்ட சிவநத திருவடிநீழலில் வீற்றிருப்பார்கள் என்று இனிதாகக் கூறினர். எ - று. (௩௪)

வயிரவன் தோன்றின அ - ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௮௪௬.

உ

சிவமயம்.

## முப்பத்திரண்டாவது,

## தண்டபாணி தோன்றின அத்தியாயம்.

வள்ளவாய்க் கமல வெள்ளிமண் டபத்து வாணுதற் கொழுநனின் றேத்த, வொள்ளிதின் ஞானப் பொருடெரிந் துரைக்கு முருள்பசுந் தாரி ளங் குமரன், பள்ளநீ ருவரி குடங்கையிற் கொண்டு பருகிய குறுமுனி கேட்பத், தெள்ளிதிற் றண்ட பாணிதன் சரிதை யனைத்தையுந் தெருளுற வுரைப்பான்.

(இ-ள்.) வட்டில்போலும் வாயையுடைய வெண்டாமரையாகிய வெள்ளி மண்டபத்தில், வீற்றிருக்கும் ஒளிவாய்ந்த நெற்றியையுடைய கலைமகள் கணவனாகிய பிரமன் துதிசெய்ய, மேன்மைதங்கிய ஞானப்பொருளை யுணர்ந்தோதிய உருளுகின்ற பசிய கடப்பமலர்மாலைசூடிய இளையபிள்ளையார், ஆழமாகிய நீர்நிறைந்த சமுத்திரத்தை உள்ளங்கையிலேற்று ஆசமனஞ்செய்த அகத்தியமுனிவர் கேட்கும்படி தெளிவாகத் தண்டபாணியின் சரித்திரமுழுவதும் நன்குவிளங்கச் சொல்லத்தொடங்கினர். எ - று. (க)

இலகுவெண் பிறைதோய் கந்தமா தனத்தி னிரத்நபத் திரனெனு மியக்கன், புலவுவேற் றடக்கை முழவுறழ் தடந்தோட் பூரண பத்திரன் றன்னை, யலகிலாத் தவஞ்செய் தளித்தனன் பின்ன ராய்பிழிக் குறுந்துளி பிலிற்று, மலரவிழ் கொன்றை மவுலியைப் போற்றி மருவரு முயர்கதி யடைந்தான்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற வெண்மைபொருந்திய சந்திரன் தவழும் கந்தமாதனகிரியில் இரத்தினபத்திரன் என்னும் இயக்கன், புலால்மணங்கமழும் வேலேந்தியவிசாலமானகையையும், முழவுபோன்ற பூரித்த தோளையுமுடைய பூரணபத்திரன் என்பேரனைக் குற்றமில்லாத நல்லதவத்தைச்செய்து பெற்ற பின்னர், ஆராய்கின்றதேன் நுண்டுளி சொரியும் முறுக்கவிழ்ந்த கொன்றைமலர்மாலை சூடிய சடையையுடைய சிவபெருமானைத்துதித்து, கிடைத்தற்கரிய உயர்வாகிய மோட்சத்தையடைந்தான். எ - று. (உ)

கங்கைநீர் வேணிக் கண்ணுதற் சாமி கழலிணை யினிதினிற் போற்றி, பொங்குநீர்த் தரங்கக் கடற்புவி புரக்கும் பூரண பத்திரன் றனக்குச், செங்கயல பொருவு மரிமதர் மழைக்கட் செய்யவாய்க் கனககுண் டலப பேர், மங்கைநற் றவஞ்செய் துலகெலாந் தழைப்ப வழங்கரி கேசனைப் பயந்தாள்.

(இ-ள்.) கங்காசலத்தையணிந்த சடையையுடைய நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானது இருசரணங்களை யினிதாகத்துதித்து, மிக்கநீரையுடைய அலைகள் பொருந்திய கடல்சூழ்ந்த பூமியைக்காக்கும் பூரணபத்திரனுக்கு, செவ்விய சேற்கெண்டையொத்த அரிபரந்துமதர்த்த குளிர்ச்சிதங்கிய விழியையும் சிவந்தவாயை

யுமுடைய கனககுண்டலமென்னும் பேர்பொருந்திய மனைவி நல்லதவங்களைச்செய்து உலகமுழுவதும் செழிக்கும்படிகொடுக்கும் அரிகேசன் என்பவனைப்பெற்றாள். எ - று. (௩)

பெறலருஞ் சிறப்பி னின்னெழிற் புதலவன் பிறையென வளர்தரு நாளிற்
கறைமிடற் றெந்தை பெயரலா லியாதுங் கருதலன் வெண்மணல குவியா
விறைதிருக் கோயி லமைத்துமற் றதனு ளிலிங்கமாண் டியற்றிவண் டூது
நறைமல ரென்னப் புற்பறித ததனி னுடொறு மருச்சனை புரியும.

(இ - ள்.) பெறுதற்கரிய சிறப்புவாய்ந்த இனிய அழகுடையபுதல்வனாகிய அரிகேசன் வளர்பிறைச் சந்திரன்போன்று வளருங்காலத்தில், ஸ்ரீகண்டத்தையுடைய சிவபிரானது திருநாமமல்லாமல் வேறொன்றையும் நினையான்; வெள்ளிய மணலைக்குவித்துச் சங்கரனது திருக்கோயிலகட்டி அம்மணலாலேயே ஆங்கு சிவலிங்கக்குறிசெய்து, வண்டுகளூதுந் தேன்பொருந்திய மலர்களென்று புல்லைப்பிடுங்கி அக்குறிமீது பூசித்து (விளையாடி) வருவான். எ - று. (௪)

இன்னுயிர்த் தோழர் வருகென வியம்பு போழ்தினு மெமபிரா னுமங்
தனாைமற் றிசைப்ப தன்றிமற் றோர்பேர் சாற்றல னவன்மலர்ப் பாத
முன்னவன் கோயி லலலது சூழா வாங்கவன் முளரியங் தடக்கை
பன்னக மசைத்த நரைவிடைப பாகன் பதமலா தருச்சனை புரியா.

(இ - ள்.) இனிய உயிர்போன்ற சிநேகரை வருகவென அழைக்குங்காலத்தும் எமது ரட்சகனது பெயரைச்சொல்லி யழைப்பதல்லது வேறொருபெயரையுஞ்சொல்வான் ; அவனது மலர்போன்ற கால்கள் முதற்பெருங்கடவுளாகிய எம்பெருமானது திருச்சந்நிதானமல்லது (பிறிதொன்றையும்) வலம்வரா ; தாமரையொத்த அவனது அழகிய விசாலமாகிய கைகள் சர்ப்பத்தைத்தரித்த வெள்ளிய இடபாரூடராகிய பரமபதியின்திருவடிகளையல்லாது அருச்சனைசெய்யா. எ - று.

பெண்ணொரு பாகன் புகழலா னுளும் பெட்பொடுஞ் செவிப்புலன் கேளா
கண்ணுத லன்றி நோக்கிடா கண்கள் கடவுளை யலதுளங் கருதா
தண்ணற னுமம் மன்றிநா வுரையா தஞ்சிறைத் தும்பிபாட் டயருந்
தண்ணறுங் கமலச் சேவடிக் கன்றி யாங்கவன் றலைவணங் கிடாதால்.

(இ - ள்.) உமாதேவிபாகராகிய பெருமானது கீர்த்தியையல்லாமல் ஒருபோதும் ஆசையுடன் செவிப்புலன் கேட்கமாட்டாது ; நெற்றிக்கண்ணையுடைய தலைவனையல்லது கண்கள்பார்க்காது ; மகாதேவனையல்லது மனம்நினையாது, சிவநாமமல்லது நாவானது (வேறு) கூறாது, உட்சிறகுகளையுடைய வண்டுகள் பண்பாடுங் குளிர்ச்சிதங்கிய நறிய தாமரைபோலுஞ் சிவந்த ஜெகதீசனது திருவடிகளுக்கல்லாமல் அவனுடைய சிரம்பணிதல் செய்யாது. எ - று. (௬)

எத்துணை யேனு முயன்றிரு நிதிய மீட்டலை யிரவுநண் பகலு
மத்தமு மறுகும் வளர்பிறைக் கொழுந்து மிலைந்தவ னடியினின் மருண்டு
பித்தர்போல் வாளா வன்னவ னுமம பிதற்றினை பேதுறு கின்ற
சித்தநீ யொழிதி யென்றுதன் றந்தை சீறலுஞ் சேட்செல வயர்ந்தான்.

(இ-ள்.) எவ்வளவானாலும் பிரயத்தனஞ்செய்து பெரிய செல்வத்தைத் தேடவில்லை; ஊமத்தமலரும், அறுகம்புல்லும், வளாகின்ற கலைகளையுடைய இளஞ்சந்திரனுந் தரித்த சிவபிரானது பாதங்களில் மயங்கி,இராக்காலமும் பகற்போதும், உன்மத்தர்போன்று வீணாக அச்சிவநாமங்களைப் பிதற்றுகின்றாய்; அறியாமையுடைய மனதை யொழியக்கடவாய் என்று தன்மீதா கோபிக்கவுந் தூரதேசம்போக ஆலோசித்தனன (அரிகேசன்.) எ - று. (எ)

ஆறுசெல் போதி லெவ்வழிச் சேறு மெனமன மலைத்திட மருளாத்
தேறின னுகி யளியராய் மெலிந்தோர் சேரிடங் காசியே யனறி [ருமை
வேறுள தாங்கொ லெனமனத் தெணணி விரைமலர்க் கறித்துமோட்டெ
தாறுதாழ் கதலிப் படுபழங் குதட்டுந தணவயற் காசிசென் றடைந்தான்.

(இ-ள்.) (அரிகேசன) வழிசசெல்கையில் எவ்விடம்போவோம் எனமனம் மயக்க மயஙகாமல் தேர்ச்சியடைநதவனுகி எளியவராக வருததமுற்றோர் சேர்தற்குரிய க்ஷேத்திரம் காசிநகரமேயல்லது வேறே ஒன்றிருப்பதாமோ? என்று மனதிலாலோசித்து, பெரிய வடிவுள்ள எருமைக்கடாக்கள் வாசனைபொருந்திய மலர்களையதுக்கி, குலைகள் தாழ்ந்த வாழையின சிந்திய பழங்களைக்குதட்டுகின்ற குளிர்ந்த வயல்சூழ்ந்த காசிநகரம்போய்ச் சேர்ந்தான். எ - று. (அ)

ஐம்புலக் குறுமபு முதலற முருக்கி யணிமல ரசோகநன் னிழலிற்
கம்பமற் றிருந்து தவஞ்செயுஞ் சிறுவன கருத்தினைக் கவுரிகண டுணர்ந்து
நம்பனை நோககி யருளென வீச னரைவிடை யிழிந்தரி கேசன் [தான
வெம்புமெய் குளிர்ப்ப முதுகுதை வரலும் விரைவினி லெழுந்தடி பணிந்

(இ-ள்.) ஐம்புலனகளாகிற பகையை வேரறவொழித்து, அழகிய மலர்களையுடைய அசோகமரத்தின நல்லநிழலில அசைவற்றிருந்து தவம்புரியும அரிகேசன் மனதைப் பார்ப்பதிதேவியார் கண்டறிந்து,சிவபெருமானைப்பார்த்து(அவனுக்குத்) திருவருள்புரியவேண்டும் என, பெருமான தவளநிறத்த இடபத்தில் (ஆரோகணித்துவந்து) இறங்கி அவனது (தவாக்கினியால) வேகின்ற உடல்குளிர்ச்சியெய்த முதுகைத்தடவவும், சீக்கிரத்திலெழுந்து திருவடிகளைச் சேவித்தான.

அணங்கர வுரியி னுணங்குநூற் கலிங்க மம்பகட் டிளமுலையசைத்த,
கணங்குழை முகத்துக் கன்னியோர் பங்கி லிருத்திய கறைமிடற் றெந்தை, வணங்கிய சிறுவற் களப்பிலா வரங்கண் மனமகிழ்ந் தினிதினி லளியாத், துணங்கையிட் டலகை சூழ்வருங் கதையு மளித்திவை யருளொடுஞ் சொல்வான்.

(இ-ள்.) அச்சந்தரும் பாம்புரிபோலசைகின்ற நூலாலாகிய கச்சை அழகிய பூரித்த இளமைவாய்ந்த திருத்தனங்களிற்றரித்த கூட்டமாகிய குண்டலமணிந்த திருமுகததையுடைய உமாதேவியாரை ஓர்பாகத்தில்வைத்த ஸ்ரீகண்டத்தையுடைய எமது தந்தையாகிய சிவபெருமான், தன்னைவணங்கிய அரிகேசனுக்கு அளவில்லாத வரங்களை மனமகிழ்ச்சி கொண்டினிதாகக் கொடுத்து, அலகைகள் துணங்கைக்கூத்தாடிப் புடைசூழ்ந்துவருந் தண்டாயுதத்தையுங் கொடுத்துக் கிருபையுடன் கூறுகின்றார். எ - று.

துணங்கை-ஓர்கூத்து; அது - "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத்-தொடக்கிய நடையது துணங்கை யாகும்."—எனபதாம். (௪௦)

சேட்டிளர் திங்கட் கண்ணியுங் கங்கைத் திரையுவட் டெடுத்தவார் சடையு, நாட்டமோர் மூன்று நானகுதிண் டோளு நஞ்சணி கண்டமும் பணைத்த, மோட்டிளங் கொங்கை மங்கையோர் பங்கு மூரியே றுயரிய கொடியும, பாட்டளி முரலுங் கொன்றையுங் காசிப பதியினி லிறந்தவர்க் களிப்பாய்.

(இ-ள்.) அழகிய பிறைச்சந்திரனாகிய சிரோமாலையும்,கங்காநதியின் அலைகள் ஊற்றெடுக்கின்ற நீண்டசடையும், மூன்றுகண்களும், நான்குவலியமைந்த புயங்களும், விஷத்தைத்தரித்த நீலகண்டமும், பூரித்த பெரிய இளமுலையுடைய மாதுபாகமும், வலிதங்கிய இடபக்கொடியும், இசைபாடும் வண்டுகளொலிக்குங் கொனறைமாலிகையும், காசிநகரிலுயிர் துறந்தோர்க்குக் கொடுத்துவருக. எ-று.

அருநதவக் கிழவ முன்னநீ தொட்ட வாவிநீ ராடியா ரேனும்,பெருந்தவ மிழைப்போ ரின்பவீ டடைவர் பிழைப்பருஞ சம்பிர மனேயும, விரிந்தநூற் கேள்வி முற்பிர மனேயும விடாதினி திருத்தியென் றுரையாக், கருந்தட நெடுங்கட் கண்ணியோர் பாகன் கயிலைமால வரைமருங் கடைந்தான.

(இ-ள்.) அருமையாகிய தவங்களுக்குரிய அரிகேசனே! நீமுன் தோண்டிய தடாகநீரில் மூழ்கி எவராளுலும் பெருந்தவஞ்செய்வோர் மோட்சவீட்டைப் பெறுவார்கள்; தவறுதலில்லாத சம்பிரமனேயும் பரந்த நூலாராய்ச்சியுடைய முற்பிரமனேயும்விடாது உன்னுடன் வைத்திருக்கக்கடவாய் என்று திருவாய்மலர்ந்து, கரியவிசாலமாகிய நீணடகண்களையுடைய பார்ப்பதிபாகராகிய சிவபெருமான பெரிய திருக்கயிலாயகிரியை யடைநதனர். எ - று. (௪௨)

இன்னநற் காதை கேட்டவர் துறக்கத் தெய்துவ ரெனவெடுத் தியம்பிக், கன்னலிற் பழுத்த கனிமொழித் துவர்வாய்க் கதிர்முலைக் குறக்கொடி கணவன், றெனனவன் மகிழச் செழுந்தமிழ்க் கவிதை பொழிதருந் தென்வரை முனிவ, மன்னிய ஞான வாவியின் றோற்றங் கேளென வகுத்தினி துரைப்பான்.

(இ-ள்.) பாண்டியன் களிப்பெய்தச்செழிய தமிழ்க்கவியாகிய மழையைப் பொழிந்த பொதியமலையிலிருந்த அகத்தியமுனிவனே! இந்த நன்மைவாய்ந்த சரித்திரத்தைக்கேட்டவர்கள மோட்சலோகத்திற் சேர்வார்கள் என் றெடுத்துக்கூறி, கற்கண்டைக்காட்டிலு முதிர்ந்த சுவையையுடைய சொல்லையும்,பவளம்போன்ற வாயையும்,ஒளிவீசுந் தனத்தையுமுடைய குறவர்குலப்பெண்ணாகிய வள்ளிநாயகி காதலராகும் ஸ்ரீமுருகக்கடவுள் நிலைபெற்ற ஞானதீர்த்தத்தின் உற்பத்தியுங் கேட்கக்கடவாய் என்றினிதாக எடுத்துச் சொல்லத்தொடங்கினர். எ-று. (௪௩)

தண்டபாணி தோன்றின அ - ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அ௯௪.

உ

சிவமயம்.

## முப்பத்துமூன்றாவது

## காசிப்படங்கண்ட அத்தியாயம்.

மலர்தலை யுலக மமமர்கோ யுழப்ப வான்பெயல் வறந்திடு காலை, யலகில்சீர்க் காசிப் பதியிலீ சான னருந்தவ மியற்றவந் தெய்தி, யிலகு வெண் டிங்கட் கண்ணியப பரனை யீரம்புன லாட்டுவான் கருதிக்,கொலை பழுத் தொழுகு முத்தலைப் படையாற் குளிர்புனல் வாவியொன் றகழ்ந் தான்.

(இ-ள்.) இடமகன்ற உலகத்திலுள்ளவர்களைத் துன்பமாகிய நோய்வருத்த மேகம்பொழிதல் குறைந்தகாலத்தில், குற்றமில்லாத சிறப்பையுடைய காசிநகரத் தில் ஈசானன் அருந்தவஞ்செய்யும்படி வந்தடைந்து, பிரகாசிக்கின்ற வெள்ளிய சந்திரனாகிய சிரோமாலையை யுடைய அழகிய சிவபிரானை, குளிர்ச்சிவாய்ந்த நீரா லபிஷேகிக்கக்கினைந்து,கொலைத்தொழில் மிகுந்து விளங்குஞ் சூலாயுதத்தால குளிர் ந்த நீரையுடைய ஓர் தடாகந் தோண்டினான். எ - று. (க)

ஆயிரந் தாரை யொழுகுபொற் குடமோ ராயிரத் தாயிர மேந்திப், பாயிருள் பருகி நிலவுகொப பளிக்கும பனிமதிக் கண்ணியம் பரனைத், தூயதண் புனலி லாட்டலு மனையோன் சுடாவிழி களிப்புறத் தோன்றி, யேயநின் மனத்தில் விழைந்தன தருவ லுரைத்தியென் றெமபிரா னிசை த்தான்.

(இ-ள்.) ஆயிரந்தாரைகள் சொரியும் அநேகமாயிரம் பொற்கும்பங்களைத் தாங்கி,பரவிய இருளையகற்றிச் சந்திரிகைகக்கும் குளிர்ந்தசந்திரனைச்சூடிய அழ கிய சிவபெருமானைப் பரிசுத்தம்வாய்ந்த குளிர்ந்தசலத்தினால் அபிடேகஞ் செய்ய வும்,அச் சிவபெருமான் ஒளிக்கின்ற கண்கள் மகிழும்படி காட்சியளித்து,பொருந் திய உனதுமனதில் விரும்பியவற்றைக் கொடுப்பேன் சொல்லுக என்று திருவாய் மலர்ந்தருளினர். எ - று. (உ)

மலவிரு ளிரிய நீற்றொளி பழுத்த மாணிக்க மலையினை நோக்கி, நிலவினைத் தெளித்துத் தேக்கிய தென்ன நீரமலி தடத்தினுக் குனபே, ருலகினிற் றழைப்ப வழங்குதி யெனலு மொழுகொளி மதிதொடு குடு மிச், சிலைவலா னதற்குச் சிறசிவ தீர்த்த மெனும்பெயர் தெரிந்துரைத் தனனால்.

(இ-ள்.) (ஆணவாதி) மும்மலங்களாகிய அந்தகாரநீங்க, திருவெண்ணீற் றின் பிரகாசமிகுந்த மாணிக்கமலைபோன்ற சிவபெருமானைப்பார்த்து, நிலாவைத் தெளித்து நிரப்பியதுபோன்ற நீர் மிகுந்த இத்தடாகத்துக்குத் தேவரீரது பேர் உலகில் விளங்கும்படி திருவருள் செய்யவேண்டும் என்று விண்ணப்பஞ்செய்ய வும்,ஒளிசொரியுஞ் சந்திரன்தவழும் மேருமலையைவில்லாகவுடைய சிவபெருமான் அத்தடத்துக்குச சிற்சிவதீர்த்தம் என்னும் பெயரை ஆலோசித்துரைத்தருளினர்.

சித்+சிவம்+தீர்த்தம்=சிற்சிவதீர்த்தம். சித்=ஞானம். (ங)

மணிதெளித் தனைய புனிதநீ ரதனின் மகிழ்வொடமே படிந்தவர் விட வாய்ப், பணவர வசைதவேர யெமதுதொல் லுலகிற் படாவரோன் றின் னுரை புகலாப், பிணிமுறுக் கவிழ விதழ்தேன் றுளிக்கும பிறைமுடிப் பிஞ்ஞக னகன்ற, னிணையறு முனிவ வன்றுதொட் டிதனை ஞானநீர் வாவியென் றிசைப்பார்.

(இ-ள்.) விடம்பொருந்திய வாயையுடைய படமமைந்த சாப்பாபரணனாகிய ஈசானனே! முத்துமணியைத் தெளித்தாற்போன்ற பரிசுத்தமாகிய சலத்தில் விருப்பத்துடன் மூழ்கினோர் எமது பழைமையாகிய சிவலோகத்திற் சேருவர் என்று இனியவசனங்கூறி, பொதிந்துள்ள முறுக்கவிழ்தலால் கொன்றைமலர்கள் தேனசிந்துஞ் சந்திரன் சூடிய சடையையுடைய சிவபெருமான் சென்றனர்; சமானமற்ற அகத்தியமுனிவனே! அதுமுதல் இத்தடாகத்தை ஞானதீர்த்தத்தடாகமென்று சொல்லுவர் பெரியோர். எ - று. (ச)

இன்னிளந் தென்றற் குழவியும் வழங்கு மிளம்பிறைப் பிள்ளையுந் தவழுந், தென்வரை நறிய சந்தனச் சாரன மருங்குறை செந்தமிழ் முனிவ, பொன்னுல குறையு மமரரும் விரும்பு புனிதநீர் ஞானவா வியினுக், குன்னருங் காதை யின்னுமொன் றுளது பேசுவன் கேட்டியென் றுரைத்தான்.

(இ-ள்.) இனிய இளமைவாய்ந்த தென்றலாகிய குழந்தையும் இளம்பிறையாகிய பிள்ளையுந் தவழுகின்ற பொதியமலையின் வாசனைதங்கிய சந்தனமரங்களையுடைய சாரலில்வசிக்கும் செவ்விய தமிழ்முனிவனாகிய அகத்தியமுனிவனே! தேவலோகத்திலிருக்கும் விண்ணவர்களும் இச்சிக்கின்ற பரிசுத்தமாகிய நீரையுடைய ஞானதீர்த்தத்துக்கு நினைத்தற்கரிய வேறோர் சரிதையுமிருக்கின்றது; சொல்வேன் கேட்பாயாக எனக் கூறினர் (ஸ்ரீமுருகக்கடவுள்.) எ - று. (ரு)

முருந்திள முறுவற் கடைசியர் குரவை முழக்கினி லெழுந்தபைங் கயல்கள், கருமபுறக் குடக்காய் நெட்டிலைப் போந்தைக் கவிழ்குலைக் கனியினைச் சிதறுந், திருந்துநல வளங்கூர் காசியின் மறைக டெரிதரு மருச்சுவா மிப்பே, ரருந்தவ னழகுக் கிணையிலா முறுவ லணங்கினை யினிதினிற் பயந்தான்.

(இ-ள்.) மயிலிறகினடியையொத்த இளமை பொருந்திய தந்தபந்தியையுடைய பள்ள ஸ்திரிகளது குரவைக்கூத் தொலியிற்பாய்ந்த பசிய சேல்மீன்கள் கரியபுறத்தையுடைய குடம்போன்ற காயையும் நெடிய இலையையுமுடைய பனைமரம் தலைகவிழ்ந்தகுலையிலுள்ள பழங்களைச்சிந்தும் திருந்தியநல்வளமிகுந்த காசிநகரத்தில் வேதப்பொருளையுணரு மருச்சுவாமியாகிய பேரையுடைய அரிய தவசிரேஷ்டன், அழகிற் சமானமில்லாத பல்வரிசையுடைய ஓர்பெண்ணை யினிதாகப் பெற்றான். எ - று.

குரவை - ஓர்வகைக்கூத்து—"குரவை யென்ப தெழுவர் மங்கையர் - செந்நிலை மண்டிலக் கடகக்கை கோத்து - தன்னிலை கொட்புகின் றுடலாகும்." (சு)

வே று.

முருகு வாய்மடுத் துண்டளி மூசிய
வரிவை பூங்குழ லாயிரஞ் செங்கதிர்ப்
பரிதி வானவற் கஞ்சியிப் பாரிடை
யிருளெ லாங்குடி யேறிய போலுமால்.

(இ-ள்.) வாசனையை வாயால்மடுத்துப்புசித்து வண்டுகள்மொய்க்கும் அப்பெண்ணின மலர்சூடிய கூந்தலானது, சிவந்த ஆயிரங்கிரணங்களையுடைய சூரியதேவனுக்குப் பயந்து இவ்வுலகத்தில் இருள்முழுவதுங் குடியேறியதுபோலும் விளங்கும். எ - று. (எ)

பொழிக ருமலர்ப் பூங்கணை பூட்டுபைங்
கழைகொல கூனற் கதிரிளந் திங்கள்கொல்
மழைம தர்க்கண் மடவரல் வாண்முகத்
தெழில்கு வித்தநு தற்கிணை யென்பவே.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய மதர்த்தகண்களையுடைய அம்மாதின் ஒளிதங்கிய முகத்தில அழகைக்கூட்டிய நெற்றிக்கு, தேன்சிந்தும் பொலிவமைந்த பஞ்சபாணங்களாகிய மலர்க்கணைகளைப் பூட்டுகின்ற பசிய கரும்புவில்லோ? வளைவாகிய கிரணங்களையுடைய இளஞ்சந்திரனோ? சமானம் என்பர். எ - று. (அ)

கொழுதி வண்டினங் கூட்டுணும் பூங்குழல்
பழுதில வள்ளைப் பசுங்குழை தீட்டினு
மொழுகு நீள்புரு வக்கொடி யொப்புற
வெழுது மேகொல் மலரய னின்னுமே.

(இ-ள்.) வண்டுகூட்டங்கள் கொத்தி விருந்துண்ணுகின்ற மலரணிந்தகூந்தலையும்,குற்றமில்லாத காதுகளிலணிந்தபசியகுண்டலங்களையும் எழுதினாலும் நீண்டொழுகும் புருவமாகிய கொடிக்குச் சமானமாக இன்னும் எழுத வல்லவனாவானோ, தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவன். எ - று. (கூ)

பள்ள நீருல கிற்பயில் வோருயிர்
கொள்ளை கொண்டுணக் கூற்றொளி விட்டொரு
வள்ளத் தாமரை மீது வதிந்ததே
கள்ளுண் கோதை முகத்துறை கண்களே.

(இ-ள்.) தேன்பொருந்திய மாலைசூடிய அப்பெண்ணின்முகத்தில் விளங்கும் கண்களானவை ஆழமாகிய கடல்சூழ்ந்த உலகத்திலுள்ளோரது உயிர்களைக் கொள்ளைகொண்டுண்ணும்படி இயமனைப்போல விளங்கி ஒப்பற்ற கிண்ணம்போன்ற தாமரையின்மீது தங்கியிருப்பதை யொக்கும். எ - று. (௰)

முல்லை மெல்லரும் பீன்ற முழுநெறி
யல்லி புல்லிய வாம்பலுண் டாமெனில்
வில்லெ றிந்து மிளிர்புரு வக்கொடி
வல்லி செங்கனி வாய்க்கிணை யாகுமால்.

(இ-ள்) முல்லையினது மெல்லிய அரும்புகளைப்பெற்றிருக்கின்ற மிருந்த வரிசையாகிய அலவிதழ்கள் சேர்ந்த அல்லிமலரிருக்குமானால், வில்லைசெயித்து விளங்கும் புருவமாகிய கொடியையுடைய அம்மங்கையினது சிவந்த ஆதொண்டைக் கனியையொத்தவாய்க்குச் சமானமாகும். எ - று.

இச் செய்யுள் இல்பொருளுவமையணி. (கக)

கணிக்கு மூன்றுல கத்துமிக் காரிகை
யணிக்கு நல்லெழில செய்யு மழகினுக்
கிணைக்கொ ணாதென் றெழுதிய ரேகைகொல்
மணிக்க ழுத்தின் வரையொரு மூன்றுமே.

(இ-ள்.) மதிக்கின்ற திரிலோகத்திலும் அழகுக்கு நல்ல அழகுசெய்கின்ற இக்கன்னிகையின் அழகுக்குச் சமானமாகப்பிறிதொன்றைக் கூறக்கூடாதென்று எழுதிய இரேகைகளோ. முத்தாபரணமமைந்த கழுத்தினிடத்தில் விளங்கிய ஒப்பற்ற மூன்றுகீற்றுகளும். எ - று. (கஉ)

இழுக்குத் தேனி னிளங்களி வண்டினம்
வழுக்கி வீழு மலர்க்குழல் தோட்கிணை
கழைக்க ருமபை யுரைக்குங் கவிகடம்
பழிக்குத் தீர்ச்சி பகர்ந்திட வொண்ணுமே.

(இ-ள்) மறதியையுண்பெண்ணும் தேனுற்களித்த இளமைவாய்ந்த வண்டுகூட்டங்கள் (நறவின்மிகையால்) கால்வழுக்கி விழுகின்ற மலர்சூடிய கூந்தலையுடைய அவளது தோளுக்குச் சமானமாக மூங்கிலையும் கரும்பையுஞ் சொல்லும் புலவரது குற்றத்திற்குத் தீர்வுசொல்ல முடியுமோ. எ - று. (கங)

காளை வண்டு சிமிறுங் களித்துணுந்
தாள தாமரை தாட்கிடைந் திட்டதால்
வாளை வென்ற மதர்விழி கைக்கிணை
நாளு நாமெடுத் தோதுத னன்றரோ.

(இ-ள்.) இளம்வண்டுகளும் சிமிறுகளும் களித்துத் தேனுண்ணும் தாளத்தையுடைய தாமரைமலர்கள் வாளாயுதத்தைச்செயித்த மதர்த்தகண்களையுடைய அப்பெண்ணின் காலுக்குத்தோற்றுவிட்டதால், கைகளுக்கு (அதனைச்) சமானமாக எப்போதும் நாமெடுத்துச் சொல்லுதல் நன்றாகுமோ? எ - று. (கச)

பண்ணெ றிந்த பனிமொழிக் கோல்வளை
தண்ணி லாவட மேந்து தடமுலை
வண்ணத் தூசின் மறைத்தில ரோலுயி
ருண்ணு மூண்ணு முலக மனைத்துமே.

(இ-ள்.) பண்ணோசையைத் தோற்கச்செய்த குளிர்ந்த மொழியுடைய அழகிய வளையலணிந்தஅவளது தண்ணிய சந்திரிகைவீசும் முத்துவடமணிந்த பூரித்த முலைகளை அழகிய வஸ்திரத்தால் மறைத்திராவிட்டால் உலகத்திலுள்ள எல்லாவுயிர்களையும் உண்ணும் உண்ணும். எ - று. (கரு)

அழகு பூத்த வணிமுலை யவ்வயிற்
ருெழுகு மென்மயிர்க் கோங்கெழில் வேனிலான்
விழைவி னுவிலை மீது மணிகுழைத்
தெழுது வல்லி யலதிணை யிலலையால்.

(இ-ள்.) அழகுமிகுந்த ஆபரணம்பூண்ட முலையையுடைய அவளது வயி ற்றி லொழுகுகின்ற மெல்லிய உரோமவரிசைக்கு,மிக்க வனப்புடைய மன்மதன் விருப்புடன் ஆலிலைமேல் கருமணியைக் குழைத்தெழுதிய கொடியல்லாமற் சமானமில்லை. எ - று. (௧௬)

தொழுத குந்திட் டுகைவினைத் தூயவ
ரொழுத நெஞ்சிடை யெண்ணவொண் ணுததாற்
பழுதில் ஞானப பரமபொருள் போன்றதே
மழைம தர்க்கண மடந்தை மருங்குலே.

(இ-ள்.) குளிர்ந்து மதர்த்தகண்களையுடைய அம்மங்கையின் இடை,வண ங்கத்தகுஞ் சித்திரமாகியதொழிலிற் கைதேர்ந்த பெரியோர் எழுதும்படி மனதில் நினைக்க முடியாததால், குற்றமில்லாத ஞானமயமாகிய பரம்பொருளை யொப்பாக விருக்கும். எ - று. (௧௭)

குருமணிப்பொற் கொடிஞ்சியத் தேர்கொலோ
விரைகொள் பூங்கணை வேந்தனத் தாணியோ
வுருவ வோடரிக் கண்ணி யொளிர்மணிப்
பருமநா தாங்கிய பையர வல்குலே.

(இ-ள்.) நிறம்வாய்ந்த மணிகள்பதித்த பொன்னுலாகிய கொடிஞ்சியையு டைய அழகியதேர்த்தட்டோ ; வாசனைகொண்ட மலர்ப்பாணங்களையுடைய மன் மதனது அத்தாணிமண்டபமோ ; ஊடுருவும்படியோடிய அரிபரந்தகண்ணையு டைய அப்பெண்ணின் விளங்குகின்ற மணியாலாகிய பருமந்தரித்த படத்தையு டைய பாம்புபோன்ற நிதம்பம். எ - று.

கொடிஞ்சி=தேர்மொட்டு. அத்தாணி=அரசிருக்கை. பருமம் = பதி னெண்கோவையணி. (௧௮)

பொன்னந் தூசு புனைந்த குறங்கினை
மன்னு மோடை மதக்களிற் றின்கரம்
வெந்நி டும்படி கண்டு விரிதலைக்
கன்னி வாழைக் கவின்குடி கொண்டவே.

(இ-ள்.) அழகிய பீதாம்பரந்தரித்த தொடையை நிலைபெற்ற நெற்றிப்பட் டமணிந்த மதஞ்சொரியும் யானையின்துதிக்கை முதுகுகாட்டும்படி விளங்குதல் பார்த்து,பரந்த தலையையுடைய இளமைவாய்ந்த வாழைகள் அழகிய இருப்பிடமா கக் கொண்டன. எ - று. (௧௯)

இன்ன பேரெழில் வாய்ந்த விளங்கொடி
பொன்னம் பூஞ்சிலம் பார்த்திடப் பொங்கர்வா

யன்ன மென்ன வொதுங்கி யணிமலா
மன்னு ஞானநல் வாவியி னுடியும.

(இ-ள்.) இப்படிப்பட்ட பேரழகமைந்த இளங்கொடிபோல்வாள்,பொன்னாற்செய்த அழகிய பொலிவுதங்கிய சிலம்பொலிக்க, சோலையில்வசிக்கும் அன்னமெனறு கண்டோர்சொல்லும்படி ஒதுங்கி நடந்து,அலங்கரிக்கும மலாகள் நிறைந்த நல்ல ஞானதீர்த்தத்தையடைந்தும். எ - று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (௨௦)

தூம மார்ந்த துகில்புனை கோலவளை
காமர் வாவிப் படிகள் கழுவியுந
தாம நாற்றியுந் தண்மலர் தூவியும்
யாம மும்பக லுமபுனைந் தேத்துநாள்.

(இ-ள்.) புகையூட்டிய வஸ்திரமணிந்த அழகமைந்த வளையல்சூடிய அந்நங்கை அழகிய ஞானதீர்த்தத்தின் திருப்படிகளைச் சுத்தஞ்செய்தும் மாலைசூட்டியும் குளிர்ந்தமலர்களைத் தெளித்தும் இரவும்பகலு மிவவாறு அலங்கரித்து வணங்கிவருங் காலத்தில். எ - று. (௨௧)

சந்த மூழ்கு தடமுலை புல்குவான்
சிந்தை செலலச் செழுமறை தேர்ந்துண
ரந்த ணாளரி லைங்கணை வேணிகர்
மைந்தர் யாரு மணமொழிந் தெய்தினர்.

(இ-ள்.) களபச்சந்தனத்தில் மூழ்கிய பரந்த அவளது முலைகளைத் தழுவும்படி மனங்கொள்ளுவதால், செழிய வேதங்களை நன்குணர்ந்த பார்ப்பனமாந்தரில், பஞ்சபாணங்களை யேந்திய மன்மதனை நிகர்த்த புருஷர்க ளெல்லாரும் விவாகந் தவிர்ந்து ஆங்கடைந்தார்கள். எ - று. (௨௨)

காத ளந்த கருந்தடங் கண்ணிதன்
றாதை தன்னுழைப் போந்து தனிமண
மாத ரித்தவர்க் காங்கு மறுத்தனன்
மேதை நெஞ்சம விதிமுறைச் செல்லவே.

(இ-ள்.) காதுவரையிலோடிய கரிய விசாலித்த கண்களையுடையஅவளது தந்தையாகு மருச்சுவாமியிடத்தில் வந்து ஒப்பற்ற விவாகம் பேச விரும்பினோருக்கு அறிவுடைய மனமானது விதியின் முறைக்கேற்பப் போவதால் அவன் அதற்குத் தடுத்தான். எ-று. (௨௩)

மஞ்சு தோயு மணிக்கொடி யோங்குய
ரிஞுசி முற்றிய காசியி னின்னெழில
செஞ்செ வேதனி நோக்கத்தென் சேடியில்
விஞ்சை மன்னவன் விண்ணிடைத் தோன்றினன்.

(இ-ள்.) மேகங்கள் படியும் அழகிய கொடிகள் கட்டிய மிகவுயர்ந்த மதிலால் முற்றுகைசெய்யப்பட்ட காசிநகரத்தின் இனிமைவாய்ந்த அழகை நேராக

ஒப்பற்றுக் காணும்படி தென்புறச் சேடியிலுள்ள வித்தியாதர அரசனொருவன் ஆகாயமார்க்கத்தில் வந்தனன். எ - று.

சேடி=வித்தியாதர நகரம். (௨௪)

மங்கு றோயு மணிக்கொடி மாடமுங்
கொங்கு லாவுகு ளிர்மலர்ச் சோலையு
மெங்கு நோக்கி யினிதுவந் தெய்தினன்
கங்கை மாநதி சூழ்தரு காசியின்.

(இ-ள்.) சிறந்த கங்கையாற்றாற் புடைசூழ்ந்த காசி க்ஷேத்திரத்தில் எங்குமுள்ள மேகங்கள் தவழும் அழகிய பதாகைகட்டிய மாளிகைகளும், மணங்கமழுங் குளிர்ச்சிவாய்ந்த பூஞ்சோலைகளும் பார்த்துக்கொண்டு இனிதாகக் களித்து வந்தான் அவ்வித்தியாதரன். எ - று. (௨௫)

எய்து விஞ்சைய னின்கனித் தொண்டையு
மைய செங்கழு நீரு மலர்ந்ததோர்
செய்ய தாமரை பூத்த செழுங்கொடி
கையின் மென்மலர் கொய்திடக் கண்டனன்.

(இ-ள்.) அவ்வாறு கண்டுவந்த வித்தியாதரன், இனிய கனியாகிய ஆதொண்டையும், புட்பித்த கரிய செங்கழுநீரும், ஒப்பற்ற செந்தாமரையும் விளங்குஞ் செழியகொடிபோல்வாள் தனதுகைகளால் மிருதுவாகிய புட்பங்கள் பறித்தலைக்கண்டான். எ - று.

தொண்டை - செங்கழுநீர் - தாமரை முறையே வாய்-கண் - ஏனைய உறுப்புக்களை யுணர்த்தின. கொடி—உவமவாகுபெயர். (௨௬)

தண்ணந் தாமரைத் தாக்கணங் கோவென
வெண்ண னெஞ்சமின் றெய்த லரிதெனப்
பெண்ணு ருக்கொ டுயிர்களைப் பெட்பொடு
முண்ணக் கூற்ற மொளிரிட் டுறைந்ததே

(இ-ள்.) குளிர்ச்சியமைந்த அழகிய தாமரைமலரில் வசிக்கும் இலக்குமியோ என்று கருதாதே. மனமே! இப்போது அடைத லருமையென்றெண்ணிப் பெண்வடிவால் பிராணிகளை விருப்பத்துடன உயிருண்ணும்படி இயமன் பிரகாசித்து விளங்கிய வடிவமே (இது என்று கருதுக.) எ - று. (௨௭)

என்னுஞ் சீறடி யிங்கிலங் தோய்ந்ததாற்
பொன்னெ றிந்த பொறிசுணங் கார்முலைக்
கன்னி பார்மக ளென்னுங் கலங்குறுந்
தன்னை யுமறக் குழுமிர் சாம்புமால்.

(இ-ள்.) என்று சொல்லுவான் ; சிறிய பாதங்கள் இப்பூமியிற் படிதலால் பொற்பிதிர்போற் பிரகாசிக்கும் புள்ளிவடிவாகிய தேமல் படர்ந்த முலைகளையுடைய இக்கன்னிகை நிலவுலகப்பெண் என்பான் ; மனங்கலங்குவான் ; தன்னை

மறந்துவிடுவான்; உயிர்சோருவான் (அவனைக் கண்டமாத்திரமே அவவித்தியாதரன்). எ - று. (உஅ)

வள்ளை வார்குழை யோவளர் கொங்கையோ
கள்ளம் பூத்த கருநெடுங் கண்களோ
வுள்ள மாழ்கி யுலையத் தடங்கையா
லள்ளி யள்ளியென் னருயி ருண்டதே.

(இ-ள்.) காதுகளிற் பூண்ட நீண்ட குண்டலங்களோ? வளருகின்ற முலைகளோ? வஞ்சனை மிகுந்த கருநிற மமைந்த நெடிய கண்களோ? நான் மனமயங்கி யலையும்படி, விசாலமாகிய கைகளால் அள்ளி யள்ளி எனது அருமையாகிய உயிரை உட்கொண்டது. எ - று. (உக)

நள்ளி ருட்பிணி விட்டன நாண்மலர்க்
கள்ள றாத கருங்குழல் கைசெயா
வள்ள வாய்மலர் வாவி படிந்துயிர்க்
கொள்ளை கொண்டன ளென்று குழையுமால்.

(இ-ள்.) கூரிய இருட் பிணிப்பு நீங்கின; புதிய மலர்களின் தேனொழியாத கரிய கூந்தலையுடைய இவள் (படிக்கரை) அலங்காரஞ்செய்து, கிண்ணம் போன்ற வாயையுடைய மலர்கள் நிறைந்த ஞானதீர்த்தத்தில் மூழ்கி எனது உயிரைக் கொள்ளைகொண்டாள் என்று மனந் தளருவான் எ - று. (௩௦)

ஆன்ற கேள்வியவ் விஞ்சைய னருயிர்
கான்று மாழ்கக் கடவுட் புனலபடிந்
தீன்ற தாதைதன் னில்வயி னெய்தினாள்
தோன்று கின்ற சுடர்க்கொடி போலவே.

(இ-ள்.) மிகுந்த ஆராய்ச்சியுடைய அவ்வித்தியாதரன் அருமையாகிய உயிர் கக்கித் துன்புறும்படி (அக்கன்னிகை) தெய்வீகம் வாய்ந்த ஞானதீர்த்த நீரில் மூழ்கி, தன்னைப் பெற்ற பிதாவாகுமருச்சுவாமிவீட்டுக்கு விளங்கும் பிரகாசமுடைய (மாணிக்கக்) கொடிபோலப் போயினள். எ - று. (௩க)

அஞ்செஞ் சீறடி யேகலு மாற்றல
னெஞ்ச மாழ்கியந் நேரிழை வைகிய
பஞ்ச ணைப்புறத் தெய்திப் படிதுயில்
விஞ்சை யோதி மிகவும் பெருக்கினான்.

(இ-ள்.) அழகுவாய்ந்த சிவந்த சிறிதாகிய பாதங்களை யுடைய அப்பெண் வீட்டுக்குப் போகவும் (அவ் வித்தியாதரன்) சகியாதவனாகி மனம்வருந்தி அம்மங்கைதங்கிய பஞ்சாலாகிய சயனத்தினருகடைந்து துயிலெழுப்புமந்திரஞ்செபித்து மிகுந்த நித்திரையை உண்டுசெய்தான். எ - று. (௩உ)

துயில்பெ ருக்கித் துணைமுலை தாங்கிய
மயிலி யற்குயி லைக்கொடு வான்றொடு

மெயில்வ ளைத்தந கர்க்கடந் தேகினன்
வெயிலசெய் பூங்கழல் விஞ்சையர் வேந்தனே.

(இ-ள்.) கிரணங்களை வீசும்பொலிவமைந்த வீரக்கழலணிந்த வித்தியாதர மன்னவன, இரண்டு முலைகளைச்சுமக்கும் மயிலின் சாயலுடைய குயில்போலும் பேசுகின்ற அப்பெண்ணை நித்திரைமிகச்செய்துஎடுத்துக்கொண்டுஆகாயமளாவிய மதில்சூழ்ந்த காசிநகரைத் தாண்டிச் சென்றனன். எ - று. (௩௩)

பொன்னங் கொம்பினை வவ்விப் புயறவழ்
தென்னங் குன்றிடை விஞ்சையன் சோதலு
மின்ன லங்கற் பெயரினன் வேலினன்
மன்னு சீற்றத் தரக்கன் வளைந்திட்டான்.

(இ-ள்.) அழகிய பொற்கொடிபோல்வாளைத் திருடிக்கொண்டு மேகங்கள் சஞ்சரிக்கும் வனப்பமைந்த தென்மலையாகிய பொதியகிரியில் வித்தியாதரனடையவும், வித்துருமாலையென்னும் பெயருடையவனும் வேலேந்தியவனுமாகிய நிலைகொண்ட கோபத்தையுடைய ஓரிராக்கதன் எதிரிட்டுக்கொண்டான். எ - று.

உயிரை நல்குதி யோநின் னுயிர்நிகர்
குயிலை நல்குதி யோகொடி யோயெனச்
செயிரி னேடும விழியழல் சிந்திட
வயிர வாட்படை வள்ளுறை நீக்கினன்.

(இ-ள்.) அடா கொடியவனே! உயிரைக் கொடுப்பையோ? அல்லது உனது உயிரையொத்த குயிலின குரலையுடைய மாதைக்கொடுப்பையோ?என்று கூறிக் கோபத்துடனே கண்கள் நெருப்புப்பொறிபறக்க வச்சிரவாளாயுதத்தின் வலிதங்கிய உறையைப் போக்கினன். எ - று.

வள்=வாளுறை. அவ்வாறு கூறின், வள்ளுறை—இருபெயரொட்டுப் பண்புத்தொகை யெனக. (௩௪)

எயிறு தின்றெதி ரேற்ற வரக்கனைத்
துயில்து றந்து சுடாக்கொடி காண்டலு
மயினெ டுங்க ணழிபுனல் கான்றிட
வுயிர்வெ துமபி யுயிர்ப்பொடு மாழ்கினள்.

(இ-ள்.) பற்கள் கடித்து நேரேவந்தெதிர்த்த இராக்கதனைச் சுடர்விடுங் கொடிபோல்வாள நித்திரைநீங்கி நோக்கவும், வேலைப்போலும் நீண்ட கண்களினின்றுந் துன்புறுகின்றகண்ணீர் சொரிய உயிர் துடிதுடித்துப் பெருமூச்சுடன வருத்தமுற்றாள். எ - று. (௩௫)

பஞ்சி யூட்டிய பங்கயச் சீறடி
யஞ்ச லஞ்ச லெதிர்ந்த வரக்கனைத்
துஞ்சு மாறு தொலைக்குவல் யானென
விஞ்சை வேந்தன் வெகுண்டெழுந் தானரோ.

(இ-ள்.) செம்பஞ்சுக் குழம்பூட்டிய தாமரைமலர்போலுஞ் சிவந்த சிறிய பாதங்களையுடையவளே! நீபயப்படாதே! எதிரவந்தஇராக்கதனை இறக்கும்விதம் உயிரொழிப்பேனென்று கூறிக் கோபித்து (போர்செய்ய) மேற்கொண்டனன் வித்தியாதர மன்னவன். எ - று. (௩௭)

உருவ வோடரிக் கண்ணி யுளங்கவர்
மருமம் போழ்ந்திட வாளி னெறிதலும
வெருவ வின்றி வெகுண்டுயர் விஞ்சைய
னிருதன் சென்னி நெரிதரக் குத்தினன்.

(இ-ள்) உருவும்படியோடிய அரிபரந்த கண்களையுடையவளது மனதைக் கவரும் மார்பானது பிளவுறும்படி வாளாயுதங்கொண்டு வீசவும், பயமில்லாமல் கோபித்து உயர்ந்த வித்தியாதரன், அவவிராக்கதன் சிரம் பொடியாகும்வண்ணம் புடைத்தான். எ - று. (௩௮)

ஞான வாவி நளிர்புன லாடிய
மானி னேக்கியை மாய்வுழிக் கண்டதாற்
கூனல் விற்கை யரக்கன் கொடுஞ்சிலை
வேனில வேளென விண்ணுல கெய்தினன்.

(இ-ள்.) ஞானதீர்த்தத்தின் குளிர்ச்சிதங்கிய நீரிலே (பன்முறை) மூழ்கிய மானபோன்ற கண்களை யுடையவளை இறக்குந் தறுவாயிற்பார்த்த விசேடத்தால் வளைவாகிய வில்லேந்திய கையையுடைய அவவரக்கன் கொடிய கரும்புவில்லேந்திய மன்மதன்போல (திவ்ய வடிவேற்றுத்) தேவலோக மடைந்தான். எ - று.

ஓவி யர்க்கு மெழுதவொண் ணுதபொற்
பாவை தன்பெயர் பாதி கிளககலு
மேவு காதலின விஞ்சையர் வேந்தனு
மாவி கூற்றுக் களித்தன னெனபவே.

(இ-ள்.) சித்திரக்காரரும் எழுதமுடியாத பொற்பதுமைபோல்வாளிடத்திற் பொருந்திய ஆசையோடு அவள் பெயரிற் பாதி சொல்லவும், வித்தியாதர மன்னனும் தனதுயிரை இயமனுக்குக் கொடுத்தனன். எ - று. (௪0)

மலையின் வீங்கிய மல்லலந் தோளிலென்
முலைதி ளைத்து முயஙக வெடுத்தலாற்
றலைவ னீங்கிவ னேயெனத் தாரகுழ
லலமந் தேங்கின ளாருயிர் நீங்கினள்.

(இ-ள்.) மலைபோலப் பூரித்த வளமமைந்த அழகிய புயங்களிலே எனது முலைகள் அழுந்திக் கலக்கவெண்ணி எடுத்துவருதலால் இவனே கணவனுவான என்று மாலைசூடிய கூந்தலையுடையாள் வருந்தி இரக்கமுற்று அருமையாகிய உயிர் துறந்தாள். எ-று. (௪௧)

சூத மீன்ற விளைகமழ் தூய்மலர்த்
தாத ளைந்த தளர்நடைத் தென்றலோ

பாதி வெண்மதி யோபடர் மாலையோ
கோதை யாருயிர் வாரிக் குடித்ததே.

(இ-ள்.) மாமரங்கள் தந்த மணம்வீசும் பரிசுத்தமாகிய மலரின் மகரந்தங்களிற் படிந்த மந்தகதியையுடைய தென்றற்காற்ருே வெள்ளிய அர்த்தசந்திரனே பரவிய அந்திப்பொழுதோ அப்பெண்ணின் அரிய உயிரை எடுத்துண்டது (அறிகிலேன.) எ - று.

"முத்துங களபமுந் தண்பனி நீரு முயங்குமலாத
தொதநுங் குளிரியுந தூய்மலர்ப் பாயலுஞ் சூழ்ந்துபுறங்
கத்துங் கடலுங் கதலியு மாவியுங் ககுலுமிப்
பத்தும் பெருமபகை யாயின வாமொரு பைந்தொடிக்கே." — என்னும் புகழேந்திப்புலவர் கருத்தின்படியே சூதம்-தென்றல்-சந்திரன்-மாலை முறையே மன்மதனுக்குக் கணை - இரதம் - குடைமுதலிய தசாங்கங்களுள் ஒவ்வொன்ருக விருத்தலால் கணவற்பிரிந்த நாயகிக்குப்பகையாக அவற்றுளெதுவோ அவளுயிரையுணடது என்ருர். (சஉ)

மலையும் வல்வில மலாக்கணை வேட்டுவர்
நலியு மாலையி ளுகிளந தென்றலம்
புலிவ ழங்கு பொதியப் பொருப்பின்வாய்த்
தலைவற் றீர்ந்த தமியளு முய்யுமே.

(இ-ள்.) போர்புரியும் வலிய கருமபு வில்லிற்பூட்டிய மலராகிய பாணங்களால் வேடுவர் வருந்தும் அந்திப்பொழுதில், மிக இளமைவாய்ந்த தென்றலாகிய அழகிய புலி சஞ்சரிக்கும் பொதியமலையிலே நாயகனிறந்த ஒன்றியானவளும் உயிாபிழைப்பாளோ? (பிழைக்கமாட்டாள்.!) எ - று. (சங)

நிலையி லாவுட லீத்தவவ் விஞ்சையன்
மலைய கேது வெனுமபெயர் மன்னவற்
கிலகு மாலிய கேது வெனும்பெய
ருலக மேத்த வொருமக வாயினன்.

(இ-ள்.) நிலைபெற்றிராத சரீரத்தையிழந்த அவவித்தியாதரன்,மலையகேது என்னும் பெயரையுடைய அரசனுக்கு, உலகத்திலுள்ளோர் முழுதும் துதிசெய்ய விளங்குகின்ற மாலியகேது எனனும் பெயரையுடைய ஒப்பற்ற புத்திரனுகத்தோன்றினன். எ - று. (சச)

தென்வ ரைக்க ணிறந்திடுஞ் சேயிழை
கன்னல் வேலிக் கருநட தேயத்து
மன்னன் மாதவப் பேற்றிற் கலாவதி
யென்னு நாமத் திளங்கொடி யாயினள்.

(இ-ள்.) பொதியமலையில் உயிர்விட்ட செம்மையாகிய ஆபரணங்களையணிந்த அப்பெண், கரும்பாலாகிய வேலியையுடைய கருநடதேசத்தரசனது சிறந்த தவப்பலனல் கலாவதி எனனும் பெயரோடு இளமைதங்கிய பொற்கொடிபோலத் தோன்றினள். எ - று. (சரு)

பதலை யார்ப்பப் பணில முழங்கிடப்
பிதிர்சு ணங்கணி பேரிள மென்முலைக்
கதிர்செய் முத்த முறுவற் கலாவதி
வதுவை யாற்றினன் மாலிய கேதுவே.

(இ-ள்.) மத்தளம் முழங்கவும் சங்கங்கள் தொனிக்கவும் பொற்பிதிர் போலுந் தேமல்பூத்த ஆபரணம்பூண்ட பூரித்த இளமைவாய்ந்த மெல்லிய தனங்களையுடைய ஒளிவீசும் முத்துமாலைபோலும் தந்தபந்திவாய்ந்த கலாவதி என்னும் பெண்ணை மாலியகேது மணஞ்செய்தான். எ - று.

பதலை=மத்தளம்; ஓர்கட்பறை; இது வாயகன்றபறை எனவுங்கூறுவர்.

பனிம திக்குடை வேந்தொடும் பல்பக
லினிய போகங்க ளியாவு நுகர்ந்துமென்
கனியி னின்சொற் கலாவதி யென்னுமவ்
வனிதை மூன்று மகவினை நல்கினள்.

(இ-ள்.) தண்ணிய சந்திரவட்டக்குடையுடைய மன்னனுடன் பலகாலம் இனிய இஷ்டபோகங்களையெல்லாம் அனுபவித்து,மெல்லிய (வாழை - பலா - மா என்னும்)முக்கனியிலும் மதுரமாகிய சொல்லையுடைய கலாவதி என்னுமக்காரிகை மூன்று குழந்தைகளைப் பெற்றனள். எ - று. (சஎ)

மழலை மென்சொன் மகாரொடும் வள்ளையங்
குழைபொ ருங்கட் குயின்மொழிக் கொமபொடு
மெழுவெ றிந்த வெறுழ்வலித் தோளினன்
விழைவின் ஞாலம் புரந்திடும் வேலையின்.

(இ-ள்.) மெல்லிய குதலைச்சொல்லையுடைய மக்களோடும்,வள்ளைக்கொடி போன்ற காதிலணிந்த அழகிய குண்டலங்களைமோதுகின்ற கண்பொருந்திய குயில் போலுஞ்சொல்லையுடைய கலாவதியோடும், எழுக்கோலைவென்ற மிக்க வலிவாய்ந்த தோளையுடைய மாலியகேது ஆசையுடன் உலகத்தைக்காத்துவருங்காலத்தில்.

வேறு.

கவைத்தா ளலவன் கிளைத்தகுழிக் கமஞ்சூன் மந்தி கவுளடுக்கச்
சுவைத்தாங் கெறிந்த நறும்பலவின் சுளைக ளேர்க்குங் காசிதனிற்
றவத்தா லெய்திக் கங்கைநதி படிந்து மீண்ட தனிமறையோ
ருவப்பாற் காசிப் படங்கொணர்ந்தாங் குய்த்தா ரவனு முளங்களித்தான்.

(இ-ள்.) பிளவுபட்ட கால்களையுடைய நண்டுகள் பறித்தகுழிகளை, நிறைவாகிய கருப்பம்வாய்ந்த பெண்குரங்குகள் கொடிறுவீங்கப்புசித்து எறிந்து விட்ட நறியபலாக்கனிச்சுளைகள் தூர்க்கின்ற காசிநகரத்தில்,(முன்னர் தாம் செய்த)தவப்பலனாற்சென்று கங்காதீர்த்தத்தில் மூழ்கித் திரும்பிவந்த ஒப்பற்ற வேதியர்கள், சந்தோஷத்துடன் காசிப்படம் ஒன்று கொண்டுவந்து (மாலியகேதுவின்பால்) கொடுத்தனர்; அவனும் (அதைப்பார்த்து) மனஞ்சந்தோஷித்தான். எ - று.

"கவுளொடுத்துச்சுவைத்து" எனப்பாடமாயின், அடக்கிவைத்திருக்குங் கொடிற்றினின் றெடுத்துண்டு - எனக்கொள்ளவும். குரங்குகள் உண்ணுமுன்னும் உண்டபின்னும், இனியுண்ணும்படி கொடிற்றிலடக்கிவைத்தல் வழக்கம். ()

கிடங்கிற் பூத்த கொடிக்குவளை குதட்டி மேதி கிடந்துயிர்க்குந்
தடஞ்சூழ் காசிப் படமதனைத் தாம வடிவே லிறைநோக்கி
வடந்தாழ் கொம்மை முலைக்கெய்த்த மருங்குற் களித்தி ரெனலோடும்
படந்தா ழலகுற் சிலதியர்கள் பணிந்தார் கொணர்ந்த படமளித்தார்.

(இ-ள்.) அகழியில் மலர்ந்த கொடிப்பூவாகிய குவளையை அதுக்கிக்கொண்டு எருமைகள் படுத்து மூச்செறியுந் தடாகங்கள் சூழ்ந்த காசியின் படத்தை, மாலையணிந்த கூரியவேலேந்தும் மாலியகேது தெரிசித்து, (நவமணி) மாலைகள் தொங்குகிற குவிவாகிய முலைச்சுமைக்கு இளைத்த இடையையுடைய கலாவதிக்குக் கொடுங்கள் என்று சொல்லவும், அரவப்படந்தோற்கும் நிதம்பத்தையுடைய தோழியர்கள் பணிந்து கொண்டுவந்த படத்தைக்கொடுத்தார்கள். எ - று. (ருo)

இருளை வகிர்ந்து முடித்தகுழ லிமையாக் கருங்கண் முலைப்பேதை
குருதி வடிவே லிறையளித்த கோதில் காசிப் படமதனை
முருகு விரிக்குங் காந்தளங்கை முகிழ்த்து வாங்கி முகமலர்ந்து
தெருளி னேக்கி விழிபனிப்பச் சிந்தை களிப்பத் தெரிந்தனளால்.

(இ-ள்.) அந்தகாரத்தைப் பிளந்து முடித்தாற்போன்ற கூந்தலையும்,இமைகொட்டாதகரிய கண்பொருந்திய முலையையுமுடைய கலாவதி, உதிரஞ்சொரியும் கூரிய வேலேந்திய மாலியகேது கொடுத்தனுப்பிய குற்றமற்ற காசிப்படத்தை, மணம்பரப்புங் காந்தண்மலர்போன்ற அழகியகையை மலர்த்திப்பெற்று முகமலர்ச்சிகொண்டு, (பூர்வ) ஞானத்தாற் பார்த்துக்கண்கள் நீர்த்துளிசிந்தவும் மனமகிழவும் தெரிந்துகொண்டாள். எ - று. (ருக)

காசிப்படங்கண்ட அ - ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் கூகo.

சிவமயம்.

முப்பத்துநான்காவது,

# கலாவதி பேறுபெற்ற அத்தியாயம்.

கன்னற் குதலை மொழிப்பேதை ஞானவாவி கண்ணுறலு
முனனைப் பிறப்பினுணாவனைத்துநதோனறத்தோனற முதுக்குறைவாற்
பொனனஞ் சிகரி நெடுஞ்சிலையெம் புனித னுறைபா லயமுதல
வின்ன தின்ன தெனைச்சுட்டிப் புத்தி மதியோ டிசைத்தனளால்.

(இ-ள்.) கற்கண்டுபோன்ற மதலைச்சொல்லையுடைய கலாவதி (அப்படத்தி லெழுதிய) ஞானதீர்த்தத்தைப்பார்க்கவும், பூர்வஜனனத்தின் உணர்ச்சி முழுவதும் (சிறிதுசிறிதாக) நன்குதெரிய, பொனமயமான அழகிய மேருவாகிய நெடிய வில்லேந்திய எமது சிவபிரானது திருச்சந்நிதானம் முதலியவற்றைப் பேரறிவினால் இது இது என்று காண்பித்துப் புத்திமதியுடன் (சமீபத்திலிருந்த தோழிகட்குக்) கூறினள். எ - று. (௧)

நங்கை மீரிப் படத்தெழுது ஞான வாவி முற்பவத்திற்
றங்கு மருடீர் பேருணாவுஞ் செய்தி யாவுந் தணவாம
லங்கை நெல்லிக் கனிபோல வனைத்துந் தோன்ற வளித்ததெனிற்
பொங்கு கடவுட் புனல்படிந்தோர் பெறும்பே றெவர்க்கும் புகலரிதால்.

(இ-ள்.) பெண்களே! இந்தப்படத்திற் சித்திரித்த ஞானதீர்த்தம் முற்பிறப்பிற் பொருந்திய மயக்கமொழிந்த பேரறிவும் நடக்கைமுதலியவும் நீங்காமல் கரதலாமலகம்போன்று எல்லாவற்றையுந் தெரியச்செய்தது எனறால, மிக்க தெய்வீகமமைந்த (ஞானதீர்த்த) நீரில் மூழ்கினோா அடையும பதவியை யாவர்க்குஞ் சொல்லுதலருமையாகும். எ - று. (௨)

என்று கூறிக் காசிநகர்க் கேகு மருத்தி பிடித்துந்தப்
பொன்றாழ் மணிமே கலையரற்றப் பொன்னஞ் சிலம்பு கிடந்தார்ப்ப
மின்றாழ் மருங்கு றுவணடேங்க விரைமென் கூநதல் சுவற்புரளச்
சென்றாள் வேந்தன் பூங்கழல்கள் பணிந்தா ளிதனைச் செப்புவாள்.

(இ-ள்.) என்றுசொல்லிக் காசிநகரத்திற்குப்போகும் ஆசையானது பிடித்துச்செலுத்த பொன்னாலாகிய மணிகள் பதிதத தாழ்வாகிய மேகலாபரணமொலிக்க, பொன்னாற்செய்த சிலம்புகளிருந்து சத்திக்கவும், மின்னலிறசிறந்த இடையானது ஒசிந்து வருந்தவும், வாசனைதங்கிய மெல்லிய கூந்தலானது பிடரியிற்புரளவும் போய் மன்னனது பொலிவுதங்கிய வீரக்கழலணிந்த பாதங்களில் வணங்கி இவ்வாறுசொல்லுவாள் (கலாவதி.) எ - று. (௩)

இமைதீர்ந் தொழிய வடவையன லெரிகட் பாந்தண் முடிக்கிடந்த
சுமைதீர்ந் தொழியத் தனிதாங்குந் தோளா யுனது நகருறையு
மமைவார் தடந்தோள் மடவியரி லளியன் விழைந்த வனைத்தினையுங்
கமையோ டளித்தாய் பெரும்போகந் துய்த்து நெடுநாள் களிபபுற்றேன்.

(இ-ள்.) (கண்டோர்க்கு) இமைகொட்டல் நீக்கிப்போகும்படி வடவாமுகாக்கினி போலெரிகின்ற கணைகளையுடைய அதிசேடன் முடியில் விளங்கும் உலகபாரம் விலகியொழியும்படி ஒப்பறுப்பரிக்கும் புயங்களையுடைய மன்னவனே! உனது நகரத்தில் வசிக்கும் மூங்கில்போலும் நீண்டுவிசாலித்த தோளையுடைய மாதர்களில் அடியேன் விரும்பியயாவும், அன்புடனே கொடுத்தனை; அதனால் பெருஞ்சுகங்களையனுபவித்து அநேககாலம் சந்தோஷித்தேன். எ - று. (ச)

இன்னும் விழைந்த தொன்றுளதீண் டளிப்பி னுரைப்ப லெனலொடு
மன்னன் மகிழ்வுற் றெனதுயிரும் வளரும் பொருளு மிவ்வரசு
நின்ன தாகு நீவேண்டி னிலவுக் கதிர்கான் முத்தநகைப்
பொன்னே யளியாப் பொருளுளதோ புகறி யெனலும் புகலுவாள்.

(இ ள்.) இன்னமும் விரும்பியது ஒன்றிருக்கின்றது; அதனையுங்கொடுக்க வரமளித்தாற் சொல்லுவேன் என்று கலாவதிகூறவும், அவள் கணவனாகிய மாலியகேது மனங்களித்து எனபிராணனும், அபிவிருத்தியாகுஞ் செல்வமும், இந்த அரசாக்ஷியும் உன்னுடையதேயாம்; சந்திரிகையாகிய கிரணங்களைக்கக்கும் முத்துப்போலும் பற்களையுடைய கலாவதியே! உனக்குத்தராதபொருளும் இருக்கின்றதோ கேட்பாயாக என்று கூறவும், கலாவதி சொல்லுவாள். எ - று. (௫)

தமர நெடுநீர்க் கழனிதொறும் வாளைப் பகடு தாவியுயர்
குமரிக் குடக்காய் முடத்தெங்கின் குலைகள் சிதறுங் காசிதனி
லமருந் திங்கள் வேணியனைப் போற்றற் கேக வருளுகெனக்
கமல மலரி னெழிலகவருங் கைகள் கூப்பி யுரைசெய்தாள்

(இ ள்.) ஒலிசெய்யும் நெடிய நீரையுடைய வயல்களிலெல்லாம் ஆண்வாளைகள் தாவிச்சென்று உயர்ந்த இளமைவாய்ந்த குடம்போன்ற காயையுடைய கோணிய தென்னைமரங்களின் குலைகளைச் சிதறுகின்ற காசிக்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் சந்திரசேகரராகிய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமானை (தரிசித்து) வணங்குதற்கு யாத்திரைசெல்ல அருளவேண்டும் என்று, கலாவதி தாமரைப்பூவின் அழகைக் கவருங்கரங்கள் குவித்துக் கூறினள். எ - று. (சு)

அரசு விழுங்குஞ் சுடரிலைவே லண்ண லணங்கி னுரைகேளாப்
பரிவி னோடு மனைக்கிழத்தி யில்லா வாழ்க்கை பழுதாகு
மெரிசெய் பூணாய் நின்னொடும்யான் வருவ லெனவ வினிதியம்பித்
தரையாள் வதற்குத் தன்மகவைத் தனிமா மவுலி சூட்டினனால்.

(இ-ள்.) அரசிலைபோல் வடிவுவாய்ந்த பிரகாசம் பொருந்திய அச்சவடிவமைந்த வேலேந்திய மாலியகேது, மனைவியின் வார்த்தையைக்கேட்டு, அன்புடனே இல்லாளில்லாத இல்வாழ்க்கை குற்றமுடையதாகும் (ஆதலின) ஒளிபரம்பும் பணிதரித்த கலாவதியே! உன்னுடன் யானும் வருவேன் என இனிதாகக்கூறி பூமியை அரசுசெய்தற்குத் தன் புதல்வனை ஒப்பற்ற சிறந்த கிரீடந்தரிப்பித்தான். எ - று.

உயிர்மேய்ந் துதிரத் தேக்கெறியு மொளிரும் வடிவேல் வயவேந்தன்
செயிர்தீர் புதல்வ னினிதளிப்பச் செம்பொன் கோடி பலவாங்கி

மயிலோ சாய லணங்கினொடு மடற்பூங் கமுக மிடமுறிடியக்
கயவாய் வாளைப பகடுழக்குங் காசி நகரிற் சென்றடைந்தான்.

(இ-ள்.)(பகைத்தோரது) உயிரைப்புசித்து இரத்தத்தைத் தேக்கெடுக்கும் பிரகாசிக்கின்ற கூரிய வேலேந்தும் வெற்றிதங்கிய மாலியகேது, குற்றமற்ற புத்திரன் இனிதாகக் கொடுக்க, செவ்விய பலகோடி பொன்பெற்று, மயில் போன்ற சாயலையுடைய கலாவதியுடன், மடல்கள்பொருந்திய பொலிவமைந்த பாக்குமரங்களின் மிடறு ஒடியும்படி கசங்களிலுள்ள ஆண்வாளைகள் கலக்குகின்ற காசிநகரத்திற்குப் போய்ச்சேர்ந்தான். எ - று. (அ)

குடச்சூற கமுகின் மிடறுமிழ்ந்த குளிர்பூம் பசுங்காய்க் குலைபொதிந்த
மடற்பூந் தேறல வழிந்தொழுகும் வயலசூழ் காசி வளநகரிற்
றொடிபபூங் கோதை கணவனொடு ஞான வாவி தொழுதாடிக்
கடிப்பூங் கொன்றை வேணியனபொற் கமல மலாத்தா ளினிதேத்தி.

(இ-ள்.) குடம்போற் பூரித்த கமுகமரத்தின் மிடறுனது தந்த, குளிர்ந்த பொலிவாகிய பசிய காயையுடைய குலைகள் திணிந்த மடல்வழியே பூந்தேன் வழிந்தொழுகும் வயல்புடைசூழ்ந்த காசியாகிய வளமமைந்த நகரத்திலே, வளையலணிந்த கலாவதி,புருஷனாகிய மாலியகேதுவுடன் ஞானதீர்த்தத்தைப் பணிந்து அதில் மூழ்கி, வாசனைதங்கிய கொன்றைமலர்சூடிய சடையையுடைய சிவபெருமானது பொன்னிறத்த தாமரைமலர்போன்ற திருவடிகளை இனிதாகவணங்கி. எ - று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (கூ)

ஞான வாவிப் படிமணியா னன்கி னியற்றிச் சோடசமா
தான மறையோர் தமக்களித்துத் தலைவற் பேணித் தவமாற்றி
யூனமின்றிக் காசிதனி லுறையுங் காலத் துமைபாகன்
மோன முனிவ னுருக்கொடவர் முன்ன ரெய்தி யிதுபுகல்வான்.

(இ-ள்.) ஞானதீர்த்தத்தின்படிகளை நவமணிகளால் நன்றாகக்கட்டி வேதியருக்குச் சோடசமகாதானங்களைக்கொடுத்து ஸ்ரீவிச்சுவநாதப்பெருமானைவணங்கித்தவஞ்செய்து குற்றமில்லாமல் காசிக்ஷேத்திரத்தில் வசித்திருக்குந்தறியில்,பார்ப்பதிபாகராகிய எமது பெருமான் மௌனமுனிவாதிருவடிவேற்று அவவிருவர் முன்னடைந்து இவவாறு சொல்லுவர். எ - று. (கo)

அடைநத வவரை யருகிருத்தி யருட்கண பரப்பி மெய்தடவி
மடந்தை பாகன் றாரகமா மறையாங் கவர்க்கு வழங்குதலும்
படர்ந்த சடையு நுதற்கண்ணும் பால்வெண் ணீற்று மெய்யொளியுந்
தடந்தோ ளெட்டுந் தனிதாங்கித் தளரா முததி வீடடைந்தார.

(இ-ள்.) சிவபெருமான் தம்மையடைந்த அவவிருவரையும் சமீபத்திலிருத்திக் கிருபாநோக்கஞ்செய்து உடலைப்பரிசித்து, சிறந்த தாரகமந்திரத்தை அவர்களுக்குபதேசிக்கவும், படர்ந்தசடையும் நெற்றிக்கண்ணும் பால்போலும்வெள்ளிய திருநீற்றையணிந்த சரீரப்பிரகாசமும் விசாலமாகிய எட்டுத்திருப் புயங்களும் ஒப்பற்றுப்பெற்று (சிவசாரூபமடைந்து) நீங்காத மோக்ஷவீட்டைப் பெற்றனர்.

பெருகு திரைநீர்ச் சிவதீர்த்தப் பெருமை யுரைத்தே மிதன்பெருமை
யுருகிக் கேட்போர் நவின்றிடுவோ ருலவாக் கதியி னடைவரெனத்
திருகு சினத்த வில்வலனைச் செற்ற கடவுண் முனிகேட்பக்
குருகு பெயர்க்குன் றறவெறிந்த சுடர்வேற் குமரன் கூறினனால்.

(இ-ள்.) மிக்க அலைகள் பொருந்திய நீரையுடைய ஞானதீர்த்தத்தின் புகழைக்கூறினேம்; இதன் கீர்த்தியைமனமுருகிச் சிரவணஞ்செய்வோரும் (பிறர்க்குப்) போதிப்போரும் கெடாதசிவகதியிற் சேருவர் என்று, மனதில் மிகுந்த கோபத்தையுடைய வில்வலனைக்கொன்ற தெய்வீகமமைந்த அகத்தியமுனிவர் கேட்கும்படி கிரவுஞ்சகிரியைப் பிளவுபடச் சங்கரித்த பிரகாசம் பொருந்திய வேலாயுத மேந்திய ஸ்ரீமுருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளினர். எ-று.

அகத்தியமுனிவர் வில்வலனைச் செற்ற சரிதம்.

சூரபன்மன் தங்கையான அசமுகி பெற்ற பிள்ளைகளாகிய வில்வலன், வாதாவி என்போர், வழிச்செல்லும் பெரியோரை விருந்துண்ணவழைத்து வாதாவியை ஆடாக்கிச் சமைத்து விருந்தூட்டிய பின்,வாதாவி விருந்துண்டோர் வயிற்றைப்பீறிக்கொண்டு வெளிவர அவர்கள் இறப்பர். இருவரும் அவ்விருந்தாளியைப் புசிப்பர் அவ்வாறு நிகழ்ந்து வருகையில், தென்றிசைநோக்கிச் செல்லும் அகத்தியமுனிவர் அவ்வகையே விருந்துண்டு முடிந்தபின் வாதாவி ஆடாகவயிற்றில் உருக்கொண்டு கலக்க, முனிவர் "ஜீர்ணபி" என்று வயிற்றைத்தடவி அவனைச் ஜீர்ணஞ்செய்தார். அது கண்டறிந்த வில்வலன் தன் தம்பியிறந்தமையாற் கோபித்து ஓர் தண்டாயுதமேந்தி முனிவரை எதிர்க்க, முனிவர் ஓர்தருப்பைப்புல்லைச் சிவபிரானது மழுப்படையாகவெண்ணிப்பிரயோகிக்கவில்வலன் இறந்துபோனான். என்பது. இதனை,

கந்தபுராணம் - வில்வலன் வாதாவி வதைப்படலம்.

ஊன்கொண்ட கறியாகி நுகர்வுற்ற வாதாவி யுயிர்போகி யுண்டவியல்பே
தான்கொண்டு முடிகென்று சடரத்தை யொருகாலை தமிழ்வல்ல முனிதடவலும்
கான்கொண்ட வெரிமண்டு சிறுபுன்பு தற்போன்று கடியோனு முடிவாகவே
வான்கொண்ட லெனவங்கண் முன்னின்ற வன்றம்பி மாய்வுற்றதுன்னி வருவான்.

மெய்க்கொண்ட தொன்ன லுருக்கொண்டு முனிதன்னை வெகுளுற்றெரூர்
தண்டமதனைக், கைக்கொண்டு கொலையுன்னி வருபோழ்தின் முனிவன் கரத்திற்
றருப்பையொன்றை, மைக்கண்டர் படையாக நினைவுற்று விடவில்வலன்றானு
மடிவெய்தவும், அக்கண்ட கக்கள்வ ருறையுற்ற விடநீங்கி யப்பால கன்றனனரோ.
என்பதனானுணர்க. (சஉ)

கலாவதி பேறுபெற்ற அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் கூஉஉ.

சிவமயம்.

முப்பத்தைந்தாவது,

# இல்லொழுக்கங் கூறிய அத்தியாயம்.

விரிந்த புவன கோடிகளின் விழையுந் தருமம் பொருளின்பம்
பொருந்த வரிய துயர்துறக்கம் பொருந்து நகரம் யாதென்னக்
குரும்பை தூங்கு முடத்தெங்கின் குலைகள் சிதறி யிளங்கமுகின்
கருங்கட் டேறல் முசுவருந்துங் காசி யலது பிறிதுண்டோ.

(இ-ள்.) பரவிய பல்லாயிரங்கோடி அண்டங்களிலுள்ளோரும் இச்சிக்கின்ற அறம் - பொருள் - இன்பம்-கிடைத்தற்கரிய உயர்ந்த மோட்சம் (ஆகிய இவற்றை) பொருந்திய நகரம் எதுவென்றால், குரும்பைகள் அசைகின்ற கோணிய தென்னமரங்களின் குலைகள் சிந்தி, இளங் கமுகமரங்களின் வலிய கள்ளாகிய தேனை முசுக்கள் உண்ணுகின்ற காசிக்ஷேத்திரமல்லாமல் வேறிருக்கின்றதோ.

குரும்பை=இளங்காய்; பிஞ்சு. (க)

அரிய விரதந் தவஞான மடங்காப் புலன்க ளுள்ளடக்கிப்
புரியும் யோக மியற்றியல்லாற் காசி நகரிற் பொருந்தவரி
தூரிய வினைகள் கலியுகத்தி லுஞற்ற லெவர்க்கு மொண்ணாதால்
விரியும் புகழோ யக்கரை யடையு மாறு விளம்புதியால்.

(இ-ள்.) இயற்றுதற் கரிய விரதம்-தவம்-ஞானம்-(இலேசாக) அடங்காத ஐம்புலன்களையும் உள்ளே யடக்கி இயற்றுகின்ற யோகம் (ஆகிய இவற்றைச்) செய்தல்லாமல் காசிக்ஷேத்திரத்திற் சேருதலருமை; பொருந்திய இவற்றைக் கலியுகத்திலே செய்து முடித்தல் எல்லாருக்கும் முடியாதாதலால் பரவிய கீர்த்தியை யுடைய ஸ்ரீமுருகக்கடவுளே! அந்நகரத்தைச் சேரும்விதம் (அடியேனுக்கு) அருளிச்செய்யவேண்டும். எ - று. (உ)

இழுக்கல் செல்லா வருந்தவமு மிழைக்கு நோன்புங் கலியுகத்தி
லொழுக்க மென்ப வொழுக்கத்து நின்றார் பெருமை யுரைப்பரிதாற்
பழுத்த தடவுச் சினைப்பலவின் பைம்பொற் சுளைவிண் டழிநறவின்
வழுக்கி மேதிக் கன்றுகளும் வயல்சூழ் காசி யடைகுவரால்.

(இ-ள்.) இடையிலே தவறிப்போகாத அரிய தவமும் அனுட்டிக்கும் விரதமும் கலியுகத்திலே நன்னடக்கையென்று சொல்லுவர்; நன்னடையி னடப்போர் சிறப்பையுரைத்த லரிதாதலால், பழுத்துள்ள பெருமைவாய்ந்த கிளைகளையுடைய பலமரத்தின் பசிய பொன்போன்ற சுளைகள் கிழிந்தொழுகுந் தேனாற் கால்வழுக்கி எருமைக்கன்றுகள் புரளும் வயல்சூழ்ந்த காசிநகரத்தை (அவர்கள்) சேர்வார்கள். எ - று. (ந)

கானத் துளவி னறும்படலைக் கண்ணி வேய்ந்த வயர்பன்றிக்
கூனற கோட்டி னேந்துலகி லொழுக்கம் விழுமி தெனக்குறித்த
ஞானப் பொருளே யவ்வொழுக்கம் வழுவா தெனக்கு நவிறியெனப்
பானற் கருங்கட் குறக்கொம்பின் கொழுந னதனைப் பகருமால்.

(இ-ள்.) புனத்திலுள்ள துளவத்தின் நறியவரிசையாகிய மாலைதரித்த பெரிய (திருமாகிய) பன்றியின் வளைந்த கொம்பாற் றூங்கிய பூமியில் ஒழுக்கமே சிறந்தது என்று உபதேசித்த ஞானப்பொருளாக விளங்கும் பெருமானே! அவ்வொழுக்கத்தை முறைதவறாமல் அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும் என்று (அகத்தியமுனிவர்) கேட்க, நீலோற்பலம்போலுங் கரிய கண்களையுடைய வள்ளிநாச்சியார் காதலராகும் ஸ்ரீ குமாரக்கடவுள் அதனைச் சொல்லத்தொடங்கினர்.

வே று.

ஒழுக்கமே நியமமென வுஞற்றும்வே தியரதனி
னிழுக்கினு ரெனினவரை யிகழ்ச்சிகூ றுவரெவரும்
விழுப்பமா மறைநெறியை விடுத்துளார் தமதுயிரும்
வழுக்குநீ ணரகினிடை மடுப்பரால் யமபடர்கள்.

(இ-ள்.) இல்லொழுக்கமே நியமமென்று செய்யும் அந்தணர் அந்நெறியிவிருந்து தவறுவாராயின் அவர்களை யாவரும் பழிகூறுவார்கள். மேன்மையாகிய வேதத்திற்கூறிய இல்லறதருமத்திற்குரிய நடையைக் கைவிட்டவர்களது உயிரை இயமதூதர்கள் நிணம்பொருந்திய பெரியநரகத்தில் மூழ்கச்செய்வார்கள். எ - று.

உயிர்க்குநன் குணர்வதல துடற்குநன் குணர்நெறியில்
பயிற்சியந் தணர்கள்பதை பதைப்பர்வெங் கொடுநரகின்
வியப்புறும் படியொழுகு மொழுக்கமென் பதுவிதியி
னியற்றருந் தருமநெறி யெவற்றினுந் தலைமையதே.

(இ ள்.) ஆத்துமத்திற்கு நன்மைதேடுவதல்லாமல் சரீரத்திற்கு நன்மைதேடுகின்ற வழியில் முயற்சியுடைய வேதியர்கள் வெவ்விய கொடுமைவாய்ந்த நரகத்தில் துன்பமுறுவார்கள். மேன்மையடையும்படி நடக்கின்ற இல்லொழுக்கமென்றுசொல்வது முறையுடன் செய்கின்ற அரிய தருமமார்க்கங்களெல்லாவற்றிலும் சிறப்புடையது. எ-று. (சு)

இயமமன் புறுநியம மெனுமிரண் டினுளியம
முயிர்புரந் திடல்பொறைபொய் யொழிதலின் புறுமொழிமெய்
பயில்புலன் றகைதல்மேன் மனனம்வெம் படுகொலைகள்
செயலொழிந் திடல்செவிதி னிலைசிறந் தனதெரியில்.

(இ-ள்.) இயமம் அன்புபொருந்திய நியமம் என்றுசொல்லப்படும் இருவகை மார்க்கங்களில், இயமமாவது உயிர்காத்தல் - சாந்தம் - பொய்யொழிதல் -

இனியவார்த்தை கூறல் - சத்தியம் - (விஷயங்களில்) உழல்கின்ற ஐம்புலன்களை த்தடுத்தல்-மேன்மையான விஷயங்களைச் சிந்தித்தல் - கொடுமைமிகுந்த கொலை செய்தலினின்று விலகுதலாகும். ஆலோசிக்குங்கால் இவையே சிறந்தன. எ - று.

நீதிசா னியமமக மோனநீள் புனல்படித
லோதன்மா தவவிரத மோவறு துணவொழிதல்
தீதிலா ரொடுமினிது சேர்தல்மே வியசவுசம்
யாதுமீ குதலிவைக ளியாவுமா மெனுமறைகள்.

(இ-ள்.) தருமமிகுந்த நியமமாவது யாகம் - மௌனம் - நெடிய தீர்த்த ஸ்நானம் - வேதபாராயணம் - பெரியதவம் - விரதம் - ஒழிதலில்லாத நோன்பு- குற்றமில்லாதவர்களுடன் நன்குகூடிவாழ்தல் - பொருந்திய சவுசம் - எல்லாவற் றையுங் கொடுத்தல் ஆகியஇவையாவு மாகும் என்று வேதங்கள் கூறும். எ-று. ()

தாதைமெய்ப் புதல்வருறு தாயர்மற் றெவருமுட
லேதமுற் றுயிரகலி லீமமட் டலதொருவர்
போதாக் கடவதிலர் போம்வழிக் குரியதுணை
யோதின்மற் றிலைவருமவி டாதுளுற் றிருவினைகள்.

(இ-ள்.) தந்தை - உண்மையாகிய மைந்தர் - தாய்கள் முதலிய எல்லாரும் சரீரம் பிரயாசையடைந்து பிராணன் நீங்கினால் மயானம்வரையி லல்லாமல் ஒரு வர் உடன்வரக்கடவரல்லர். (ஒருவர்தாம்) செல்லும்வழிக்கு உரித்தாகிய துணை யாவது சொல்லுமிடத்தில் ஒன்றுமில்லை; செய்கின்ற இருவினைகளே நீங்காமல் பின்தொடரும். எ - று.

வரும்விடா துளுற்றிருவினைகள்—என்பதை,

நாலடியார்.

"பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினை யன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு."—என்பதனு லுணர்க. (கூ)

பிறக்குமன் றினுமொருவர் பிரித்துடம் பொழியவுயி
ரிறக்குமன் றினுமொருவ ரெனிற்றெளிக் தினிதெவையு
மறக்கைதின் பொருளதென மனத்துணர்ந் தடைவரிய
அறக்கமிங் குறுநிலைமை சொலத்தகுந் துணிவுடைமை.

(இ-ள்.) ஜனிக்கின்ற காலத்தும் ஒருவர்; உடலைப்பிரித்து உயிரொழியும் படி மரிக்குங்காலத்தும் ஒருவர் என்றால் நன்குணர்ந்து இனிதாக எல்லாப்பற்றை யும் மறத்தலே உறுதிப்பொருளென்று மனதி லறிந்து கிடைத்தற்கருமையாகிய மோக்ஷத்தை யடையும் நிலைமையே சொல்லத்தக்க துணிவுடைமையாகும். எ-று.

தீவினைகள் புரிகொடிய பாவமுதல் சினவுபகை
யாவுநிலை திரியவெழு தாமறைகள் புகலுநெறி
மேவியினி தொழுகுமறை வேதியர்கள் முகிறடவு
காவுசெறி வளமருவு காசிநக ரடைகுவர்கள்.

(இ-ள்.) தீவினைச் சம்பந்தங்கள் செய்கின்ற கொடிய பாவமுதலாகிய மிக்க பகையெல்லாம் நிலைமாறும்படி, எழுதாக்கிளவி யாகிய வேதங்கள்சொல்லும் நன்மார்க்கத்திற் பொருந்தி இனிதாக நடக்கின்ற வேதமுணர்ந்த அந்தணர் மேகங்கள் தவழுஞ் சோலைகள் நெருங்கிய வளப்பமமைந்த காசிக்ஷேத்திரஞ் சேருவர்.

வேறு.

வைகறையிற் றுயினீங்கி யைங்கரனை மணிமிடற்று வரத ரேடு [ப்
செய்கனிந்த கருங்கூந்தன் மலைமகளைத் திருவினெடு நெடியோன் றன்னை
பைகலந்த பாம்பணையான் றிருவுந்தி பூத்தவனைப் பனுவன் மானை
மொய்கலந்த கொடுங்குலிசப் படையேந்து புரந்தரனே முதலி னேரை.

(இ-ள்.) புலரியில் நித்திரை யொழிந்து, ஐந்து திருக்கரங்களை யுடைய விநாயகக்கடவுளையும், நீலகண்டம்பொருந்திய சிவபெருமானுடனே செய்ப்பசை மிகுந்த கரிய அளகபாரத்தையுடைய பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாரையும், இலக்குமிதேவியாருடனே விஷ்ணுமூர்த்தியையும், படத்தையுடைய சேஷசயனத்திலுள்ள திருமாலின் திருவுந்திபூத்த நான்முகனேடு கலைமகளையும், போர் செய்யுங் கொடிய வச்சிராயுதமேந்திய இந்திரன்முதலான தேவர்களையும்.

இதுமுதல் எட்டுப்பாடல்கள் குளகம். (௯உ)

கங்கைமுதற் பெயராற்றைக் கலைதிரைப்பாற் கடன்முதலாங் கடலை வான்றேய், மங்குறவழ் திருச்சயில முதலான மால்வரையை வசிட்ட னாதி, பொங்குபுகழ் மாதவரை யருந்ததியே முதலாய புரைதீர் கற்பின், மங்கையரைக் கவினெழுகு முருப்பசியே முதலாய மடநல் லாரை.

(இ-ள்.) கங்கை முதலாகிய பெயரையுடைய புண்ணியநதிகளையும் ஒலிக்கின்ற அலைகளையுடைய க்ஷீராப்தி முதலிய (எழு) கடலையும், ஆகாய மளாவிய மேகங்கள் தவழும் ஸ்ரீசயிலம் முதலாகிய பெரிய மலைகளையும், வசிட்டன்முதலாகிய கீர்த்திமிகுந்த சிறந்த தவசிகளையும், அருந்ததி முதலிய குற்றமற்ற கற்பினையுடைய மாதர்களையும், அழகு பொருந்திய உருப்பசி முதலிய இளமைவாய்ந்த பெண்களையும். எ - று. (௯௩)

காசிமுதன் மாநகரைக் கவுத்துவமா மணிமுதலா மணியைக் காமர்
வாசமலி மந்தார முதலான செழுந்தருவை வரிவண் டார்த்து
மூசுநனைக் கவுளயிரா வதமுதலாங் கடகளிற்றை முறைவ ழாது
தேசுதிகழ் சனகன்முதல் யோகிகளைச் சேடன்முதல் வாள ராவை.

(இ-ள்.) காசிமுதலிய சிறந்த (சத்த) நகரங்களையும், மகத்துவமுள்ள கவுத்துவமணிமுதலிய மணிகளையும்,அழகிய வாசமிகுந்த மந்தாரம் முதலான செழுமைவாய்ந்த (பஞ்ச) தருக்களையும், கீற்றுகளையுடைய வண்டுகள் ஆரவாரித்து மொய்க்கின்ற குளிர்ந்த கதுப்பமைந்த அயிராவத முதலாகிய மதப்பெருக் குடைய (அட்ட) திக்கஜங்களையும், வேதமுறை தவறாது ஒளிவிளங்கும் சனகன்முதலிய யோகவான்களையும், ஆதிசேடன்முதலிய ஒளிதங்கிய (நவ) நாகங்களையும். எ-று.

இருக்குமுதற் பழமறையைப் பிரணவமே முதலாய வெழுத்தை
நீங்காத், திருக்கிளர்நா ரதன்முதலாந் தெய்வமறை முனிவரைத் தேனு
வாதி, யுரைக்குமுயர் பசுவையரிச் சந்திரனே முதலாய வுண்மை வேந்
தைக், குரைக்குநெடுங் கடல்வரைப்பிற் றதீசிமுதல் வரையாது கொடுத்
து ளோரை.

(இ-ள்.) இருக்குமுதலாகிய பழமையான (நான்கு) வேதங்களையும், பிரணவம் முதலாகிய (ஐம்பத்தோர்) அட்சரங்களையும், நீங்காத சிவஞானச்செல்வம் விளங்கும் நாரதன் முதலாகிய தெய்வீகம்பொருந்திய வேதமுணர்ந்த முனிவர்களையும்,காமதேனுமுதலாகச் சொல்லுகின்ற உயர்ந்த பசுக்களையும், அரிச்சந்திரன் முதலாகிய சத்தியந்தவறாத மன்னவரையும், ஒலிக்கின்ற நெடிய கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் ததீசிமுனிவர் முதலாக அளவில்லாது கொடுத்த கொடையிற் சிறந்தவர்களையும். எ-று. (கடு)

நவிற்றருங்கா யத்திரியே முதலாய மந்திரத்தை நறுந்தண் போது
துவைத்துவரி வண்டுழலு நந்தனமே முதலாய சோலை தன்னை
யுவப்புடனிந் திரனுகைக்கும் பரிமுதலாம் வாம்பரியை யுலகிற் றீர்த்த
மெவற்றினுக்கு மேலாய தந்தைதாய் மலரடியை யிதயத் தெண்ணி.

(இ-ள்.) சொல்லுதற்கரிய காயத்திரி முதலாகிய மந்திரத்தையும், நறிய குளிர்ச்சியுள்ள மலர்களை மிதித்துக் கீற்றமைந்த வண்டுகள் சஞ்சரிக்கும் நந்தவனம் முதலிய சோலைகளையும், களிப்போடு தேவேந்திரன் ஏறிச்செலுத்தும் உச்சிரச்சிரவம் முதலிய தாவிச்செல்லுங் குதிரைகளையும், உலகத்திலுள்ள எல்லாத் தீர்த்தங்களிலும் மேன்மையான பிதாமாதாக்களின் மலர்போன்ற பாதங்களையும், மனத்தில் தியானித்து. எ-று. (கசு)

நிணைகரின் புறத்தகன்று நானூறு விற்கடைபோய் நிருதி திக்கின்
வாணிலவு கதிரொழுகு முப்புரிநூல் வலச்செவியின் வயங்க வேற்றித் [க்
தோண்மிசையுத் தரியமுயர் சென்னிசுற்றிநிலத்திறெருதுரும்புசேர்த்தி
காண்வருநற் பகல்வடக்குங் கங்குலிடைத் தென்றிசையுங் கருதி நோக்கி

(இ-ள்.) (தான்வசிக்கும்) பெரிய பட்டணத்தின் வெளியேசென்று நானூறுவிற்கடை தாண்டி, நிருதிதிசையிலே வெள்ளிய சந்திரன்போலுங் கிரணங்கள் சிந்தும் உபவீதத்தை வலதுகாதில் விளங்கும்படி யேற்றி, தோளின்மீதுள்ள

போர்வையை உயர்ந்த சிரசிலே சுற்றி, பூமியிலே ஒரு துரும்பைப்போட்டு, காணக்கூடிய நல்ல பகலில் வடதிசையும் இரவில் தென்றிசையும் ளெண்ணிப்பார்த்து.

வில்=கோல் அதாவது நான்குமுழதூரம். (௧௭)

எறிவளிமுச் சுடர்கரைகோன் றிரங்குபுனற் செழுந்தரங்க மெண்டிக் காமான், மறையவர்மற் றிவர்தமமை நோக்காம லுவாநிலத்தின் மறுகின் மன்றி, னெறியதனி னிராமலுரை நிகழ்த்தாம லிருமலமு நீக்கிப் பின்னர்க், குறியதனை யிடக்கைகொடு பிடித்தெழுந்து மண்கவர்வான் குறித்துச் சென்றே.

(இ-ள்.) அடிக்கின்ற காற்று - (சூரிய சோ மாக்கினி யாகிய) மூன்று சுடர்கள்-கரையை மோதி ஒலிக்கின்ற நீரையுடைய செழிய அலைகள் பொருந்திய கடல்-அட்டதிக்குகள் - பெருமைதங்கிய வேதியர்-ஆகிய இவர்களைப் பாராது, சவர்நிலத்திலும் வீதியிலும் சபைக்குப்போகும் வழியிலும் உட்காராமல் வார்த்தையாடாது மலஜலவிசர்ஜனஞ்செய்து பிறகு கோசத்தை இடக்கரத்தாற் பிடித்துக் கொண் டெழுந்து (சவுசத்திற்கு) மண் கொணரும்படிப்போய். எ-று. (௧௮)

புழுவுளாத வெலியகழ்தல் புனலினிடைப் படுதலிவை போக்கிக் கற்றீர், பழுதறுமண் ணெடுத்திலிங்கத் தொருகாலேங் காற்குதத்திற் பதின்கா லாங்குக், கழுவுகரத் தினிவிரண்டு கரத்துமெழு காலொருகா லொருகாற் கா லின், மொழியுமிரு கரத்தின்மூக்கான் மணணில்வே தியர்சவுச முடித்தல் வேண்டும்.

(இ-ள்.) புழுவசித்தல் - எலிதோண்டல் - நீர்ப்படக்கரையிலிருத்தல் ஆகிய இத்தகைய மண்ணை நீக்கி, கல்லில்லாத குற்றமற்ற மண்ணை யெடுத்து, கோசத்தி லொருதரமும், குதத்தில் ஐந்துதரமும், கழுவுகின்ற கையில் பத்துதரமும், பின்னர் இருகையுஞ்சேர்த்து ஏழுதரமும்,ஓவ்வொரு காலிலும் ஓவ்வொருதரமும், சொல்லுகின்ற இருகையிலும் மீண்டும் மூன்றுதரமும் வேதியர் மண்ணைக்கொண்டு சவுசஞ் செய்யவேண்டும். எ-று.

குதம்=மலத்துவாரம். (௧௯)

மண்ணுறுமண் ணளவைநெல்லிக் கடுத்தான்றிற் பாதியென வகுப்பர் தெண்ணீரப், பண்ணுறுபாத் திரமிலதே லுறுபுனற்கோர் முழமாகப் பயிலு மெல்லை, நண்ணியிருந் தேசவுச முடித்திடுக சென்னிதனி னலங்கொள் கண்டத், தொண்ணிறவுத் தரியமணிந் தாசமனத் தொழின்முடிக்க வொண்ணு தன்றே.

(இ ள்.) அழகு செய்கின்ற சவுசமண்ணின் அளவு நெல்லிக்காய் - கடுக்காய் - தான்றிக்காய் - இவற்றிற் பாதி யென்று சொல்லுவர். தெள்ளிய நீர்மொண்டு சவுசஞ்செய்யும் பாத்திரங் கையிலில்லையானல், பொருந்திய சலத்திற்கு ஒரு

முழமாக வுள்ளவிடத்திலிருந்து சவுசக்கடன செய்யக்கடவர். சிரசிலும் நன்மை தங்கிய கழுத்திலும் பேரொளியையுடைய உத்தரீயந்தரித்து ஆசமனச்செய்கை செய்யத்தகாது. எ - று. (௨௦)

ஈங்கிவர்மண் ணுறுதொழிலி னிரட்டித்தல் பிரமசா ரியற்கெஞ் ஞான்று, மோங்கியவா னப்பிரத்தற் கதனிரட்டி யதனிரட்டி யுயர்சந் நியாசிக், காங்கிவைகள் பகற்பொழுதிற் கிருட்பொழுதுக் கதிற்பாதி யதருற்ரோர்க்குந், தீங்குறுநோ யாளர்க்கு மடவியர்க்கு நான்கிலொன்றாய்ச் செப்பு நூலே.

(இ-ள்.) இல்லறத்தார் மண்கொண்டு செய்யுஞ் சவுசத்தொழிலில் இருபங்கு பிரமசாரிகளுக்கும், எப்போதும் உயர்ந்த வானப்பிரஸ்தர்களுக்கு அப்பிரமசாரிகளிலும் இருபங்கதிகமும்,மேனமையாகிய சந்நியாசிக்கு அதிலும் இருபங்கதிகமுமாகும். இவை பகற்காலத்துக்குரியன. இராக்காலத்துக் கதிலரைப்பங்காகும். யாத்திரைசெய்வோர்க்கும் கொடிய வியாதியஸ்தாகளுக்கும் பெண்களுக்கும் நான்கிலொருபாகமாக நூல்கள் சொல்லும். எ - று. (௨௧)

வெண்ணிறவென் புமியிருந்தை சாம்பரொழி யிடமதனின் மேவிச்சூடு, நுண ணுளையில் புனல்வாங்கிக் குணக்கேனும வடக்கேனு நோக்கி முத்தீ,மண ணுமறை யவர்க்கிதையம் வாள்வேந்தாக் கணிமிடறவ் வணிகராஞேர்க், கண்ணமட வியரொடுபின் னவர்க்குவா யளவுசெல வருந்தல் வேண்டும்.

(இ-ள்.) வெள்ளிய நிறம்வாய்ந்த எலும்பு - உமி - கரி - சாம்பல் ஆகிய இவைநீங்கிய தானத்திற்சென்று,வெப்பமும் நுண்ணியநுளையுமில்லாத நீரைமொண்டு கிழ்த்திசையாகவாயினும் வடதிசையாகவாயினும் பார்த்து (காருகபத்தியம்-ஆகவனீயம்-தக்ஷிணாக்கினி ஆகிய)மூன்றக்கினியைவளர்க்கும் வேதியருக்கு இதையம் வாளேந்திய மன்னவர்க்கு அழகிய கழுத்து வைசியர்களுக்கு மேல்வாய் மாதர்களுடன் சூத்திரர்களுக்கு வாயினெல்லைசெல்லும்படிஉட்கொள்ளல்முறையாகும்.

இன்னணமுக் காற்புனலுண் டிருவிசும்பு தனிபார்த்தங் குட்ட மூலந்
தன்னிவிரு முறைபிதழ்க டைவந்து நடுவுவிரன் மூன்று தம்மான்
மன்னியிட வாய்தொட்டுத் தற்சனியங் குட்டத்தால் வலப்பான் மூக்கிற்
பின்னரிட மூக்கதனில் மறைபுகலு மூழ் முறையதனிற் பிறழா தொற்றி.

(இ-ள்.) இவ்வகையாக மூன்றுதரம் நீரை யுட்கொண்டு,பெரிய ஆகாயத்தை ஒப்பற்றுத் தரிசித்து, பெருவிரலடியால் இரண்டுதரம் உதட்டைத் தடவி இடையிலுள்ள மூன்று விரல்களாற் பொருந்தியிடவாயைத் தொட்டு, சுண்டுவிரல் பெருவிரல்களால் வலதுநாசியிலும் பிறகு இடதுநாசியிலும் வேதங்கள் சொல்லுகின்ற பழமையாகிய கிரமத்தினின்றுந் தவருமல் தொட்டு. எ - று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (௨௩)

அங்குட்ட மனுமிகைசேர்த் தணிவிழியி லஞ்செவியி லடைவிற் ரொட்டுத், தங்குற்ற சிறுவிரலோ டங்குட்டங் கூட்டியுந்தி தன்னி லொற்றிக் கொங்குற்ற மலர்த்தடக்கை யுரத்தமைத்து விரலனைத்துங் கூட்டிச் சென்னி, துங்கப்பொற் றோளிணைகள் முறைதொட்டின் னணமீட்டுந் தொடுதல் வேண்டும்.

(இ-ள்.) பெருவிரலும் ஆழிவிரலும் ஒன்றுகூட்டி அலங்காரமாகிய கண்ணிலும் அழகிய காதிலும் முறையாகத் தொட்டு, பொருந்திய சிறுவிரலுடன் பெருவிரலைச் சேர்த்துக் கொப்பூழைதொட்டு,வாசனை தங்கிய மலர்போன்ற விசாலமாகிய கையை மார்பில் வைத்து, ஐந்துவிரல்களையுஞ் சேர்த்துச் சிரம் பரிசுத்தமாகிய பொன்போன்ற உபயபுயங்கள் (ஆகிய இவற்றை) முறையே தொட்டு இவ்வாறே மறுபடியுந் தொடுதல்வேண்டும். எ - று. (உ௪)

தெருவினிடைப் போய்வரினுந் தும்மினுநீர்ப் படிந்திடினுந் தெண்ணீ ராதி, பருகினுந்தூ சணிந்திடினும விதிமுறைநற் கருமங்கள் பண்ணும் போதும், புரிதுயினீத் தெழுபோதும் யாதேனுந் தூய்மையில்லாப் பொருடொட் டாலு, மரிவையர்தோள் புணர்ந்திடினு மாசமனத் துறை முடிக்கிற் புனித ராவார்.

(இ-ள்.) (ஒருவர்) வீதியிலே போய்வந்தாலும், தும்மினாலும், நீரில் மூழ்கினாலும், தெள்ளிய நீர்முதலியவற்றை யுட்கொண்டாலும், வஸ்திரந் தரித்தாலும், வேதவிதிப்படி நல்லகாரியங்களைச் செய்யுங்காலத்தும், நித்திரை செய்வதில் நீங்கி எழுகையிலும்,எதுவானாலும் பரிசுத்தமில்லாத பொருள்களைப் பரிசித்தாலும்,மாதர்களது தோளிற் கலந்தாலும் ஆசமனத்துறை செய்துமுடித்தால்பரிசுத்தராவர்.

நவமியுவா நந்தையொடு ஞாயிற்றிற் பல்விளக்கி னவையுற் றோர்க, ளெவருமெழு குலத்தோடுங் கெடுகுவர்பன் மாசெறியுஞ் சருகின்றேனுந், தவறுபடு மெனவுரைத்த நாள்களினும்புனிதநறுந் தண்ணீர் வாங்கித்,துவரெறிவா யிடைப்பெய்து பன்னிருகாற் கொப்பளிக்கிற் றூய்மை யாமால்.

(இ-ள்.) நவமி - உருவா - நந்தை-இவற்றுடன் ஞாயிற்றில் எவரேனுந் தந்தசுத்திசெய்தால், குற்றஞ்செய்தவர்களாய் எழுகுலத்தோடும் கெடுவார்கள். பல்லின்கறையைப் போக்குஞ் சருகில்லாவிட்டாலும், குற்றம்வருமென்று கூறிய தினங்களிலுஞ் சுத்தமாகிய நல்லசலத்தைக் கொண்டு செந்நிறம்வீசும் வாயில்விட்டுப் பன்னிரண்டுதரம்கொப்பளித்தால் பரிசுத்தமாகும். எ-று.

உருவா என்பது அமாவாசை பௌர்ணமிகள். நந்தை என்பது சந்திரன் முதற்பக்கம். (உரு)

தடவுகிலே மாவிருப்பை யழிஞ்சில்வன்னி நாயுருவி தண்பூங் கொன்றை, கடுநாரந்தை குமிழ்வாகை யீந்துநறு விளிதுவர்ப்பாய்க் கடுவாய்ப் பாலாய்க், கொடுமுளுடைத் தாந்தருவிற் சிறுவிரலின் பருமைத்தாய்க்

கோட லின்றி, வடுவிலதாக் தருமுறித்து வயங்கொளிவெண் பற்கறை கள் மாற்றல் வேண்டும்.

(இ-ள்.) பெருமையாக நிற்கின்ற மா - இலுப்பை-அழிஞ்சில் - வன்னி - நாயுருவி - குளிர்ந்த மலர்களையுடைய கொன்றை - கடுக்காய்-நாரத்தை - குமிழ்-வாகை - ஈந்து - நறுவிலி முதலிய துவர்ப்பாகிக கசப்பாகிக் கொடிய முள்ளையுடையதாகிய மரத்திற் சிறுவிரலின துகனமுடையதாய்க் கோணுதலில்லாது குற்ற மற்ற மரக்கொம்பையொடித்து, ஒளிவிளங்கும்வெள்ளிய பற்களின் மாசுபோக்க வேண்டும். எ - று. (உஎ)

மதிக்கடவு ளினதிடத்து வைகினன்கோ டுயர்மரனே வாணாள் சீர்த்தி,நிதிக்கிழமை புதல்வரெழி லாற்றல்மனத் தூய்மையரு ணீதி ஞான, முதுக்குறைவோ டளித்தெனது முகநோக்கென் றருமறைகள் மொழியுந் நீதில், விதிப்படியி லுரைத்துநறுந் தருவொடித்து மணிமுறுவல் விளக்கல வேண்டும்.

(இ-ள்.) சந்திரபகவான் உன்னிடத்தில் வசிக்கின்றான் கொம்புகளுயர்ந்த மரமே! தீர்க்காயுள் - சிறப்பு - செல்வமுடைமை - புத்திரப்பேறு - அழகு - வல்லமை - மனப்பரிசுத்தம் - கிருபை - தருமம் - ஞானம் - பேரறிவு ஆதியவற்றைக் கொடுத்து என்முகத்தை நோக்குவாயாக என்று அரிய வேதங்கள் சொல்லுகின்ற குற்றமில்லாத விதியின்பிரகாரங் கூறி, நல்ல மரத்தில் (தந்தகாஷ்டம்) ஒடித்து அழகிய பற்களைக் கறை நீக்கவேண்டும். எ - று. (உஅ)

குற்றமில்பன் னிருவிரலி னளவையரு மறையோர்க்குக் கோடல் வேண்டு, மற்றையொரு மூவருக்கு மோரொருமெல் விரல்குறைதல் வகுத்த தாகுஞ், சொற்றநறுந் தருவினைவிற் போல்வளைத்து நாவழித்துத் தூய னாகிற், கற்றைநிலாக் கதிரெறிக்குங் கடவுண்மதிச் செல்வனுளங் கருணை கூரும்.

(இ-ள்.) அரிய வேதியருக்குத் (தந்தகாஷ்டம்) குற்றமில்லாத பன்னிரண்டு விரற்கடை யளவு கொள்ளவேண்டும். ஏனைய மூன்று வருணத்தவர்க்கும் மெல்லிய ஒவ்வொருவிரற்கடை (முறையே) குறைந்தது விதிக்கப்பட்டதாகும். சொல்லிய நல்ல தந்தகாஷ்டத்தை வில்லைப்போலவளைத்து நாவைவழித்துப் பரிசுத்தனானால், சந்திரிகையாகிய கிரணத்தொகுதியை வீசுஞ் செல்வனாகிய சந்திரபகவான்மனதிலே கிருபைகூருவான். எ-று. (உகூ)

தருப்பையெட்கோ மயத்தொடுமெண் தனிகொணர்ந்து புனிதமுறுந் தலத்திற் சேர்த்திப்,பொருப்புறழ்தோ ளுத்தரிய மருங்கசைத்துச் சிகைமுடித்துப் புனலிற் சேரா, விருக்குநவின் றெறிபுனல்தொட் டணிசிரத் தொன் றுந்திபின்மே லிரண்டு மூன்றுங், குனைக்குமுந்திக் கீழிருதாட் கிருமூன்று விதிமுறைமண் ணுரைத்தல் வேண்டும்.

(இ-ள்.) தருப்பை - எள் - கோமயம் - மண் (ஆகிய இவற்றைத்) தனித் தனி கொண்டுவந்து பரிசுத்தம்பொருந்திய இடத்தில வைத்து, மலையையொத்த புயத்திலுள்ள மேற்போர்வையை அரையிற் கட்டி, குடுமியை முடியிட்டு,சலத்தி லடைந்து வேதமந்திரமோதி எறிகின்ற நீரைத் தொட்டு அழகிய சிரசில் ஒருதர மும, கொப்பூழினமே லிரண்டுதரமும்,சொல்லுகின்ற உந்தியின் கீழே மூன்றுதர மும், இரண்டுகாலகளிலும அவவாறுதரமும் விதிமுறையாக மண்கொண்டு தேய்த் தல்வேண்டும். எ-று. (௬௦)

தழங்குபுன லெதிராடி யெழுந்துடலங் கோமயத்தாற் றைவந்தாங்கு
முழங்குதிரை நீராட மொழிந்தமறை யனைத்தினையு மொழிந்து மூழ்கிச்,
செழுங்கரத்தா லிமையவாகள் முனிவரர்தென் புலத்தவர்க்குதடென்ணீ
ராங்கு, வழங்கியகன் கரையேறி யுத்தரியந் தனைமறித்துப் பிழிந்து பின்
னர்.

(இ-ள்.) சததிக்கின்ற நீரில் எதிர்முகமாக நின்று மூழ்கி யெழுந்து சரீரத் தைக் கோமயங்கொண்டு தடவி, ஒலிக்கின்ற அலைகளையுடைய ஜலத்தில் மூழ் கச்சொல்லிய மந்திரமுழுவதும் ஜெபித்து ஸ்நானஞ்செய்து, செழிய கைகளால் தேவர்கள் - முனிவாகள் - பிதுரர்கள் ஆகிய இவாகளுக்குத் தெள்ளிய நீராகிய அருக்கியங் கொடுத்து விசாலமான கரையி லேறி வஸ்திரத்தை முறுக்கிப் பிழி ந்த பிறகு. எ - று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௬௧)

தூசுமருங் கினிலசைத்துத் தோளின்மே லுத்தரியந் துலங்கச் சேர்த்தி
மாசறுவெண் பூதியினை மார்பினணிந் துயர்தருப்பை வலக்கை சுற்றிக்
காசறுகா லைக்கடவ கடன்கழிக்க விவ்வணணங் கழித்தி டானேற்
றேசழிந்து பின்னவனுய மறுமையினு யாய்ப்பிறந்து திரிவன் மாதோ.

(இ-ள்.) (உலர்ந்த) வஸ்திரத்தை அரையிற் கட்டி, தோளின்மேலே அங்க வஸ்திரம் விளங்கப்போட்டு, களங்கமறற வெள்ளிய திருநீறறை மார்பிற்றரித்து உயர்ந்த தருப்பையை வலது அஸ்தத்து (ஆழி) விரலில் பவித்திரமாக அணிந்து குற்றமறற செய்யவேண்டிய காலைக்கடனைக் கழிக்கக்கடவன் ; இவ்வாறு செய்யா னுகில் ஒளிகுன்றி பின்வருணத்தவனுய் மறு ஜனனத்தில் நாயாய்ப் பிறவியெடுத் துழலுவான். எ று. (௬௨)

இன்னணநீர்க் கடன்கழித்துக் குணக்கேனும் வடக்கேனு மினிது நோக்கி
மன்னியமூச் சவித்துமுக்காற் பிரமகா யத்திரியை மனத்தி னோதிச்
சொன்னபிரா ணயாம மொருகாற்செய் திடிற்பாவந் தொலைந்து நீங்கும்
பன்னிருகா லஃதியற்றி லளப்பிலநாள் தவமபுரிந்த பலனுண் டாமால்.

(இ-ள்.) இவவகையாக நீர்க்கடனைக்கழித்துக் கீழ்த்திசையாயினும் வடதி சையாயினும் இனிமையாகப் பார்த்து,பொருந்திய சுவாசபந்தனஞ்செய்து,மூன்று

தரம் பிரமகாயத்திரிமந்திரத்தை மனதில் தியானித்து, சொல்லிய பிராணயாமம் ஒருதரஞ் செய்தால், பாவங்க ளவனைவிட் டொழிந்துபோகும். அதனைப் பன்னிரண்டுமுறைசெய்தால் எண்ணில்காலம் தவஞ்செய்த பலனுண்டாகும். எ-று.

பிராணயாமம் என்பது அட்டாங்கயோகத்தொன்று. அதாவது பிராணவாயுவை இரேசக பூரக கும்பகஞ்செய்தல். (௩௩)

அரத்தநிறத் துகிலசைத்துக் கண்டிகைமா லிகைசூடி யன்ன மூர்ந்தாங்,குரைத்தநறுஞ் செஞ்சாந்துஞ் செய்யபொலன் கலனுமணிந் துறையுமாதை, விரித்தமறை தொழுகாயத் திரியணங்கைப் பருவமிரு நான்குமேய, திருத்தகுநல் லுருவாக நினைத்திரவி யெழுமளவுஞ் செபித்தல் வேண்டும.

(இ-ள்.) செந்நிறமாகிய வஸ்திரமுடுத்தி (தாமரைக்) கண்டிகைமாலை தரித்து அன்னவாகனமேறி, அரைத்த வாசனைபொருந்திய செஞ்சந்தனமும், செம்பொன்னலாகிய ஆபரணமுமணிந்து வாழ்கின்ற மாதாகிய,பரந்த வேதங்கள் வணங்குங் காயத்திரியம்மையை எட்டுவயதுபொருந்திய அழகுதங்கிய நல்ல வடிவாகத் தியானித்துச் சூரியோதயமாகுமெல்லையுஞ் செபஞ்செய்யவேண்டும். எ-று. (௩௪)

இன்னணநின் றாயிரத்தெட் டோதியுவந் தானமுறை யினிதி னாற்றிப், பன்னுசிவ சங்கற்ப முதலான பழமறைகள் பகாதல் வேண்டுந், தென்வரைாயி னறுஞ்சாந்தத் தேய்வையும்வா லரிசியினொடு செய்ய பூவும், மன்னுபுன லொடுங்கூட்டி யருக்கியஞ்சேட் டிளங்கதிர்க்கு வழங்கல் வேண்டும்.

(இ-ள்.) இவ்வாறிருந்து ஆயிரத்தெட்டுமுறை செபித்துக் களித்து, வேதத்திற்கூறிய முறைமைப்படியே செய்யவேண்டிய கிரியைகளை இனிதாகச் செய்து, சொல்லுகின்ற சிவத்தியானம் முதலான பழமையான வேதங்களைப் பாராயணஞ் செய்யவேண்டும். பொதியமலையிற் பிறந்த வாசனைதங்கிய சந்தனமும் வெள்ளிய அரிசியுடன் சிவந்த மலர்களும் நிலைபெற்ற நீரோடுசேர்த்து, பெருமைவாய்ந்த இளஞ்சூரியனுக்கு அருக்கியங்கொடுத்தல்வேண்டும். எ-று. (௩௫)

ஓரிரண்டு மூன்றொன்றாய் வளர்தருப்பை தனைநீக்கி யொன்பா னேழைந், தேருடைய தருப்பைநுதி முதலுளதாய்க் கொண்டகில்சந் தெறிநீர் சேர்த்திச், சீர்கெழுதே வர்க்கொருகால் முனிவருக் கிருகால்நற் றிலமுங் கூட்டி, யார்வமொடு தென்புலத்தோர் தமக்குமுக்கால் பகர்நாளி லளித்தல் வேண்டும்.

(இ-ள்.) இரண்டு மூன்று ஒன்றாக வளர்ந்திருக்குந் தருப்பையை யொழித்து, ஒன்பது ஏழு ஐந்து (ஆக வளர்ந்த) அழகிய தருப்பையை முனையும் அடியும் உள்ளதாக எடுத்து, அகிலும் சந்தனமும் வீசுகின்ற நீருடன் கூட்டிச் சிறப்புமிகுந்த தேவர்களுக்கு ஒருதரமும்,முனிவர்களுக்கு இரண்டுதரமும், நல்ல எள்ளுடன் சேர்த்து ஆசையோடு பிதுர்களுக்கு மூன்றுதரமுஞ் சொல்லிய நாள்களில் அருக்கியங் கொடுக்கவேண்டும். எ-று. (௩௬)

அலங்குகதிர் வரகுழுந்து திரள்சுரைக்கா யெண்ணெயொடு மார்ந்த மூர, விலங்கொளிய வெள்ளுப்பு முன்னைநா ளடிசிலெழி லவரைப் பைங்காய், நலங்கெழுநூற் றுறைபடிந்தோ ரிவைநீக்கி யினிதருந்த நன்கி னட்ட, பொலன்கொள் முல்லை முகையடிசில் தன்னில்வயிச் சுவதேவம் புரிகு வாரே.

(இ-ள்.) அசைகின்ற கதிரை யுடைய வரகு - உழுந்து - திரட்சியாகிய சுரைக்காய் - எண்ணெயுடன் பொருந்திய அரிசி-விளங்குகின்ற ஒளியையுடைய வெள்ளுப்பு - முன்னாளிற் சமைத்த சோறு - அழகிய பசுமையான அவரைக்காய் (ஆகிய இவற்றை) நன்மைமிகுந்த நூற்கேள்வியிற் றேர்ந்தோர் ஒழித்து இனிதாக உண்ணக்கடவர். நன்றாகச் சமைத்த அழகுபொருந்திய முல்லையரும்பு போன்ற சோற்றினால் வயிச்சுவதேவஞ் செய்வார்கள். எ-று. (௧௭)

கடவுளர்பூ சனையாற்றி வெண்ணிலவுக் கதிரொறிக்குங் கலன்க டாங்கி, விடையிவர்ந்து பானிறமென் றுகிலசைத்து நறியமுகை விரிக்கும் வெள்ளை, மடலவிழ்தா ரணிந்தபய வரதமொடு மினிதிருக்கு மடந்தை தன்னை, யொடிவறுகா யத்திரியை யுள்ளுபுநண் பகற்கடன்றீர்த் துவப்பினோம்.

(இ-ள்.) தேவாராதனைசெய்து, வெள்ளிய சந்திரிகையாகிய கிரணங்களை வீசும் ஆபரணங்க ளணிந்து இடபத்தை வாகனமாகக்கொண்டு வெண்ணிறமாகிய மெல்லிய வஸ்திரந் தரித்து, வாசனைதங்கிய மொக்குகள் விகசிக்கும் வெள்ளிய இதழ்க ளவிழ்ந்த மாலைசூடி அபயஹஸ்த வரதஹஸ்தத்துடன் இனிதாக விளங்குகின்ற தேவியைக் குற்றமற்ற காயத்திரிமந்திரத்தைத்தியானித்து ஆசையுடனே உச்சிகாலக்கடன் கழித்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௧௮)

ஆதுலர்நல் விஞ்சைகற்போ ரடைந்துளோ ரறம்புரிதற் கைய மேற்போர், வேதமுறை யினிதுணர்வோர் பிரமசா ரியர்துறந்தோர் விருத்த ராகப், போதருவோர்க் குணவளித்துக் கொடிபதித ரிழிந்தோர்நாய் புலம்பு நோயர்க், கோதியமந் திரமுரைத்துக் கொடிமறுகி னிடைப்போதந் துய்த்தல் வேண்டும்.

(இ-ள்.) யாசகர் - நல்ல வித்தியாப்பியாசஞ் செய்வோர்-தன்னை யடைந்தவர்கள் தருமஞ்செய்தற்குப் பிச்சையெடுப்போர் - வேதங்களைக் கிரமத்துடன் நன்றாகத் தெரிந்தவர்கள் - பிரமசாரிகள் - துறவிகள் - வயோதிகர்களாக வருவோருக்கு அன்னங்கொடுத்து, காக்கை - பதிதர் - தாழ்ந்தோர் - நாய் - வருந்துகின்ற வியாதியஸ்தர்களுக்குச் சொல்லிய மந்திரத்தைச் சபித்துக் கொடிகளையுடைய வீதியிற்போய் அழைத்துவரவேண்டும். எ-று.

விஞ்சைகற்பா னடைந்துளோர் எனப் பாடமாயின் மாணுக்க னெனக்கொள்க. (௧௯)

மணிமறுகிற் போதந்தோ ரான்கறக்கும் போதளவும் வறியோர்த் தேடித், தணிவருநற் கேளிரொடுந் தையலொடு மக்களொடுந் தனதில் வைகிக், குணதிசையா யினும்வடபா லாயினும்பார்த் திருந்துபிடி மூன் ருற் கோதி, லணிபெறுநற் பலியாற்றித் தருப்பையினை யனுமிகையி லக லா தார்த்து.

(இ-ள்.) அழகிய வீதியிற்போய் ஒரு பசுகறக்குங்காலமளவு தரித்திரரைத் தேடிக் களிப்பையுடைய நல்ல உறவினருடன் மனைவியோடும் மைந்தரோடும் தனது வீட்டிற்குவந்து கீழ்த்திசையானும் வடதிசையானும் பார்த்து உட் கார்ந்திருந்து தருப்பையாகிய பவித்திரத்தை விரலிற் பொருந்த அணிந்து மூன்று பிடி உணவால் குற்றமில்லாத அழகுபொருந்திய நல்ல பலியையிட்டு, அதன்பின்.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (௪0)

அருமறைபா ஸிர்வலஞ்செய் தடிசில்தொட்டா போசனங்கொண் டன்பி னோடு, மூரியபிரா ணுகுதிசெய் தினியனநெய் யோடுமுத லுண்டு பின்னர்க்,கருணையொடு மெரிப்பனக ளுடனருந்தி யான்பால்முக் கனிகள் கூட்டி,விரைவினொடு பின்னருந்தி யுத்தரா போசனமும் விதியிறகொண்டு.

(இ-ள்.) அரிய வேதவிதிப்படி சலத்தைப் பிரதக்கணமாக விடுத்து அன் னத்தைப்பரிசித்து ஆபோசனஞ்செய்து ஆசையுடனேஉரித்தாகிய தனதுபிராண னுக்குஆகுதிசெய்து,இத்திப்பாகிய பொருள்களை நெய்யுடன்கூட்டி முதலிலே புசி த்து,பிறகு பொறிக்கறியுடன் கார்ப்பானவற்றை யுண்டு,பசுவின்பால் முக்கனிகளு டன்கலந்து துரிதமாகப்பிறகுதின்று உத்தராபோசன (மாகிய இரண்டாவதுபோ னச)மும் முறைப்படி வைத்துக்கொண் டருந்தி. எ-று. (௪௧)

மிகுந்தபுனல் பெருவிரலின் வழிவிடுத்து ரவுரவத்தின் மேவி னோர்கள்
மகிழ்ந்திடுக வெனப்புகன்று கைபூசி யாசமன மரபி னுற்றிப்
புகன்றபரத் தினைநினைந்து கால்கழீஇச் சனிவடவை புணரி வெய்யோ
னகரதனிலோரந் தயின்றவைக ளற்றிடுக வெனச்சபித்தங் கடைக்காய் [தின்று.

(இ-ள்) எஞ்சிய நீரைப் பெருவிரல்வழியாகவிட்டு ரவுரவமுதலிய நரகத திற்பொருந்தினோர் களிக்கக்கடவர் என்றுகூறிக் கையலம்பிக்கொண்டு ஆசமனம் முறையோடுசெய்து (வேதங்கள்) சொல்லிய பரம்பொருளைத்தியானித்துக் காலல ம்பிக்கொண்டு, சனி - வடவாமுகாக்கினி- கடல் - சூரியன், இவர்களை மனதிலே தியானித்து, புசித்தவைகள் நீங்குக என்று செபஞ்செய்து தாம்பூலந்தரித்து.

பொருவரிய விதிகாச புராணமிவை பயின்றுபகற் பொழுது போக்கிப்
பரிதியுய ரத்தவரை படுபொழுதிற் கடனதனைப் பரிலு மில்வி
னிரைபயிலுந் தொழுவினதி தனிவிரண்டா றடைவுழியி னீறு பூசி
மருவுசின கரத்தாற்றி லொன்றினுக்கொன் றனந்தபலன் வழங்குமாதோ.

(இ-ள்.) ஒப்புகூறற்கரிய இதிகாசபுராணங்களாகிய இவற்றிற்பழகிப் பக ற்காலங்கழித்து, சூரியன் உயர்வாகிய அத்தமயகிரியில் வீழ்கின்ற சாயுங்காலத் தில், மாலைக்கடனைச் சஞ்சரிக்கும் வீட்டில் பசுமந்தைகள்வசிக்குந்தொழுவத்தில் ஆற்றில் இரண்டுநதிகள் கலக்குமிடத்தில் சாந்துபூசி விளங்குங் கோயிலில்செய் தால் ஓரிடத்திற்கோரிடம் கணக்கில்லாத பலனைக் கொடுக்கும். எ - று.

இதிகாசம்:—இராமாயணம் - பாரதம் என இரண்டு. புராணம்:—மச்சம்- கூர்மம் - வராகம் - வாமனம் - பிரமம்-வைணவம் பாகவதம் - சைவம் - இலிங்கம் பௌடிகம் - நாரதீயம் - காருடம் - பிரமகைவர்த்தம் - காந்தம் - மார்க்கண்டே யம் - ஆக்கினேயம்- பிரமாண்டம் - பதுமம் எனப் பதினெட்டு. உபபுராணம்:— ஆதித்யம்-காந்தம்-சோமம் - கபிலம்-கௌசிகம் - சாம்பம் - சிவதன்மம் -தௌா வாதம் - நாரசிங்கம்-நாரதீயம் - பராசரீயம் - பாரக்கவம் -பிரமாண்டம் - மாரீசம்- மானவம்-வாசிட்டம் - வாயவியம் - வாருணம் எனப் பதினெட்டு. எ-று. (௪௩)

நீனிறமென் றுகிலசைத்து நீலநிறப் பொற்கலன்க ணிலவத் தாங்கி க், காறுெழுகு கரியமலர்த் தொடைசூடி யெறுழ்வலிய கருட ரூர்ந்து, ஞானமிகுஞ் சாமமறை வடிவாகு மணிநிறத்த நங்கை தன்னை, வானி டைமீ னெழுந்துணையு நினைந்துகா யத்திரியை வழுத்தல் வேண்டும்.

(இ-ள்.) நீலநிறமாகிய மெல்லியவஸ்திரமுடுத்து நீலநிறமமைந்த பொன்னு லாகிய ஆபரணங்கள் பிரகாசிக்கும்படி பூண்டு, வாசனைகமழுங் கரிய மலராலாகி ய மாலைதரித்து மிக்கவலியமைந்த கருடனை வாகனமாகக்கொண்டு, ஞானமிகச் செய்யும் சாமவேதவுருவாக விளங்கிய நீலரத்தினநிறமமைந்த தேவியை, ஆகாய த்தில் நக்ஷத்திரங்கள் உதயமாகுமெல்லையுந் தியானித்து, காயத்திரிமந்திரத்தைச் செபிக்கவேண்டும். எ - று. (௪௪)

முளிசினைய சமிதைகளிற் றீக்கருமமுறைமுடித்து முகமன் கூறி
யளிபெருக விருந்தினொடு மடிசினுகர்ந் தாசமன மினிதி னாற்றித்
துளவமுகில் குறுமுனிவன் முசுகுந்தன் கபிலனடி தொழுது சண்ட
வளியெறியுஞ் சிறைய கலுழன்மறைசெபித்தரனை வணங்கி யேத்தி.

(இ-ள்.) உலர்ந்த கிளைகளாகிய சமிதைகளால் அக்கினிகாரியத்தைக் கிர மத்துடன் நிறைவேற்றி உபசாரவார்த்தைகள்சொல்லி, கிருபைமிகும்படி விருந் தோடு அன்னம்புசித்து இனிதாக ஆசமனஞ்செய்து துளவமாலையணிந்த திரு மால் - அகத்தியமுனிவன் - முசுகுந்தன்-கபிலன் இவர்கள் திருவடிகளை வணங்கி, சண்டமாருதமாகிய ஊழிக்காற்றுவீசுஞ் சிறகையுடைய கருடமந்திரத்தைச்செபி த்துச் சிவபிரானைவணங்கித் துதித்து. எ - று. (௪௫)

இருண்மேய்ந்த மணிவிளக்கு நிறைகுடமுந் தலைமாட்டி னினிது வைத்து, முருகார்ந்த நறுந்தூமந் தவழுமல ரணையதனின் முடிவில் கற் பி, னுருவாய்ந்த வேடரிக்கண் மகளிரிரு முலையகலத் தொளிப்பச் செ

ம்பொற், றருவாய்ந்த பணைப்புயத்திற் றழீஇக்கொண்டு துயில்புரித றகை மைத் தாமால்.

(இ ள்.) இருட்டைப்போக்கிய அழகியதீபமும் பூரணகும்பமும் தலைப்புற த்தில் இனிதாகவைத்து வாசனை பொருந்திய நல்ல அகிற்புகை யூட்டிய புஷ்ப சயனத்தில், ஈறில்லாதகற்பையுடைய அழகமைந்த நீண்ட அரிபரந்த கண்ணை யுடைய மனைவியாரது உபயதனங்கள் தனது மார்பிலடக்கும்படி செம்பொன்னு லாகிய கம்பம்போன்ற இருபுயத்தாலும் தழுவிக்கொண்டு நித்திரைசெய்தல் தகு தியுடையதாகும். எ - று. (சுசு)

தானுறையு முவளகத்திற் கீழ்த்திசையிற் றலைவைக்கக் காதன் மா மன், வானுயர்பொன் மணிமாடத் துறைந்திடிற்றென் றிசையதனில் வை க்கச் சென்னி,யூனமில்வேற் றூருறையிற் குடபாலிற் றலைவைக்க வுதக்கி லென்றுங், தேனமரு நறுங்குஞ்சித் தலைவைத்துத் துயில்புரிதல் செவ்வி தன்றே.

(இ-ள்.) தான்வசிக்கும் உவளகத்தில் (நித்திரைசெய்கையில்) கீழ்த்திசை யில் தலைவைக்கவும்; ஆசைபொருந்திய மாமனூரது ஆகாயமளாவிய பொன்மயமா ன அழகிய மாளிகையிலிருந்தால் தென்றிசையில் சிரம்வைக்கவும்; குற்றமில்லாத அயலூரில்தங்கினல்மேற்றிசையில் தலைவைக்கவும்; வடதிசையில் வண்டுகள்பொ ருந்திய நல்லகுமியுடைய சிரசை ஒருநாளும்வைத்து நித்திரைசெய்தல் தகுதி யுடையதல்ல. எ - று.

உவளகம்=அந்தப்புரம் ஈண்டு படுக்கையறை. (சுஎ)

இல்லொழுக்கங் கூறிய அ-ம்.

முற்றிற்று.

---

சிவமயம்.

முப்பத்தாறுவது

# பிரமசரியங் கூறிய அத்தியாயம்.

தாளத் துவலை யரத்தச்செறுத் தங்கு நாடொட்
டுருவுற்று நீங்கிச் சுடலைக்க ணுறைதல் காறுந்
தெருளுற்ற தெய்வ மறையோர்முதற செப்பு மூன்று
வருணத் தவர்க்குங் கருமங்கள் வகுத்து ரைப்பாம்.

(இ-ள்.) சுக்கிலத்துளிகள் உதிரசம்பந்தமாகிய வயிற்றில் தங்கிய காலந் தொடங்கி உருப்பெற்று ஊனை விலகி மயானத்திற்குச்செல்லு மெல்லையும், ஞானம் பொருந்திய தெய்வீகமாகிய வேதியர்முதலாகச் சொல்லுகின்ற முக்குலத்தாருக்கும் (செய்தற்குரிய) கருமஙகளைப்பிரித்துச் சொல்லுவோம். எ - று. (க)

போரார் வேற்கண் மடமங்கையர் பூத்து வீங்கு
நீரா டியநாள் முதலாக நெறியி னோது
மீரா றுநாளிற் கருவவ்வயிற் றெய்தி னன்காஞ்
சீரார் மதியிற் செயத்தக்கன செய்து பின்னர்.

(இ ள்.) போர்புரிகின்ற வேலாயுதம்போன்ற கண்களையுடைய இளமை வாய்ந்த மாதர்கள் ரஜஸ்வலையாகி நீராடிய நாள் முதலாக முறையுடன் சொல்லுகின்ற பன்னிருதினஙகளில் அழகிய வயிற்றில் கருப்பமடைந்தால், நான்காவது சிறப்புப்பொருந்திய மாதத்தில் செய்யத்தக்கவற்றைச்செய்து முடித்து பிறகு.

நான்காமாதஞ்செய்வது புஞ்சவனம் அதாவது மலர்சூடல்.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (உ)

ஆறு மதியி லுயர்சீமந்த மாற்றி யெய்தாப்
பேறு மகப்பெற் றிடுங்காலையிற் பெட்பி னோடு
மாறு தகாதன் மகவின்முக நோக்கி நானச்
சேறு டியேற்போர்க் குயர்நீணிதி மாரி சிந்தி.

(இ-ள்.) ஆறுமாதத்தில் உயர்ந்த சீமந்தக்கிரியைசெய்து, கிடைக்காதபேறுகிய குழந்தையைப் பிரசவிக்குங்காலத்தில் பெருமையுடன் நீங்காத ஆசையையுடைய குழந்தையின் முகததைபபார்த்து, கஸ்தூரிக்குழம்பாடி, யாசகாகளுக்கு மேம்பட்ட மிக்க திரவியத்தை மழைபோற்சொரிந்து (தானஞ்செய்து) எ - று.

தோளா மணியன்ன வத்தோன்றலுக் கன்பி னோடு
நாளோர் பதினொன் றுபுகுந்துழி நாம நல்கித்

தாளான் பதிநான் கினிற்சந்தி மிதித்த பின்னர்க்
கேளோ டொரு மதிபிற்கிளர் அன்ன மூட்டி.

(இ - ள்.) முழுமணிபோன்ற அப்புத்திரனுக்கு ஆசையுடனே பதினொருதினங்கள் வந்தவுடனே நாமகரணஞ்செய்து, நான்குமாதத்தில் கால்களாற் சந்திமிதிக்கச் செய்தபிறகு, ஆறுமாதத்திற் சுற்றத்தாருடன் விளங்குகின்ற அன்னப்பிராசனஞ்செய்து. எ - று.

தோளாமணி=தொளையிடாதமணி; முழுமணி. (ச)

தத்தம் மறையின் வழியேசிகை தாங்க வைத்து
முத்தம் மெறிந்த முகிழ்மென்னகை மாத ரார்க்கு
மித்தன்மை யாய கருமம்மறையி னெறியி னாற்றி
மைத்தங்கு கோதை மணமாமறை யோடு செய்க.

(இ-ள்.) தங்கடங்களுக்குக்கூறிய வேதத்தின்முறைப்படியே சிரசில் குடுமிவைத்து முத்துமாலையைத் தோற்கச்செய்த அரும்பிய மெல்லிய தந்தபந்தியுடைய பெண்களுக்கும் இப்படிப்பட்ட கருமங்களை வேதக்கிரமமாகச்செய்துகரியகூந்தலையுடைய பெண்கள் விவாகம்சிறந்த வேதமுறையாற் செய்யக்கடவர். (இ)

ஆண்டேழி லெட்டின் மறையந்தணர்க் காகு மூந்நா
லாண்டோர் பதினொன் றினின்மன்னவர்க் காகு மென்ப
வேண்டூர் பருவ மிருநான்கொடு நான்கு சேரிற்
பூண்டாங் குதிண்டோள் வணிகர்க்குப் புனைதல் வேண்டும்.

(இ-ள்.) ஏழு அல்லது எட்டுவயதில் வேதமுணரும் அந்தணருக்கு உபவீதந்தரித்தலாகும். பதினொருவயதில் க்ஷத்திரியருக்கு ஆகும் என்று சொல்லுவர். இருநான்காகிய எட்டுடன் நான்குசேர்ந்த பன்னிரண்டுவயதில் ஆபரணமணிந்த வலியபுயங்களையுடைய வைசியருக்குத் தரித்தலாகும். எ - று. (சு)

ஐந்தாம் பருவத் தினுமாமறை யோர்க்கொ ராறில்
பைந்தா ரரசர்க் குரைப்பார்கற் பருவ மெட்டி
னந்தா தசெல்வ மலிகாய்கருக் காகு மென்ன
முந்தா ரணங்க ளொருநான்கு மொழிந்த வன்றே.

(இ—ள்.) சிறந்த வேதியருக்கு ஐந்துவயதிலும், பசிய வெற்றிமாலையணிந்த மன்னவருக்கு ஆறுவயதிலும், உலகத்தார் சொல்லுகின்ற கெடாத செல்வமிகுந்த வைசியருக்கு நல்ல எட்டுவயதிலும் (உபநயனம்) செய்தல்கூடுமென்று முற்பட்ட ஒப்பற்ற நான்குவேதங்களுஞ் சொல்லின. எ - று. (எ)

விழுப்பஞ்செய் காயத் திரிகன்கின் விளம்பி வேதம்
பழிப்பின்றி நாளும் பயிற்றித்தம் பண்பி னாய

வொழுக்கம் புணர்வித் ததன்பின்னவ் வொழுக்க மாக
வழுக்கின் றி நிற்ற னிலைமைப்படு மாண்ப தாமால்.

(இ-ள்.) பரிசுத்தஞ்செய்கின்ற காயத்திரிமந்திரத்தை நன்றாகச்சொல்லி வேதத்தைக் குற்றமில்லாமல் தினந்தோறும் பழக்கித் தங்களுக்குத் தகுதியாகிய நடக்கையைப் (பெற்றோர்) பழக்குவித்ததனபிறகு, (புத்திரர்) அத்தகைய நடக்கையாகத் தவறுதலில்லாம லிருத்தல் சிறப்புற்ற மாட்சிமையாகும். எ-று. (அ)

சொன்ன மறையி னுயர்ந்தோர்மனை தோறு மேற்ற
வன்னங் குரவ னருள்பெற்றல தார்த லாகா
தென்ன லமைத்த செழுஞ்சோறுபைந் தேனு நீப்பர்
கொன்னே யிரவி தனைநோக்குதல் கொள்கை யன்றே.

(இ-ள்) வேதங்களிற் சொல்லிய உயர்ந்தோர் வீடுகளிலெல்லாம் பிச்சையெடுத்த சோறு ஆசிரியனது உத்திரவுபெற்றல்லாமல் (பிரமசாரிகள்) உண்ணுதல் தகாது; முன்னுளிற்சமைத்த செழுமைதங்கிய சாதத்தையும் பசியதேனையும் விலக்குவா; சூரியனை வீணேபார்த்தால் நன்னடக்கையல்ல. எ-று. (௯)

ஆள்வேட் டமாடு நெடுங்கண்மட மாத ரம்பொற்
றாள்வேட் டலாகா தமர்கேளொடுங் துய்த்த லாகா
கோளேற் றபுலலர் குழுவுற்றுழிக் கூட லாகா
தாள்போற் றிநாளுங் குரவன்றனைத் தாழ்தல் வேண்டும்.

(இ ள்.) ஆடவரை வேட்டையாடுகின்ற நீண்ட கண்களையுடைய இளமைதங்கிய மங்கையரது அழகிய பொன்போன்றதோளை இச்சித்தல் கூடாது. பொருந்திய உறவினருடன் உண்ணலாகாது. தீமைதங்கிய அறிவீனர்கூடி யிருக்குமிடத்திற்சேர்தலாகாது. திருவடிகளைத் துதித்துத் தினமும் ஆசிரியனைவணங்க வேண்டும். எ-று. (௰)

காழ்கொண் டசந்தங் கமழ்தாரடைக் காயொ டாகா
வாழ்கின்ற வாவி யெவையேனும் வதைத்த லாகா
வூழ்கொண்ட தண்ட முரிமுஞ்சி யொழித்த லாகா
வீழ்கின்ற நெஞ்சம் விடயத்தின் விடுத்த லாகா.

(இ-ள்.) வயிரங்கொண்ட சந்தனத்தேய்வையும், மணம்வீசும் மாலையும், தாம்பூலத்தோடு தரித்தலாகாது. ஜீவித்திருக்கின்ற உயிர் எவையானும் கொல்லக்கூடாது. விதிவழிகிடைத்த தண்டம் - மான்றோல்-தருப்பைப்புல் (இவற்றை) நீக்கப்படாது. படிகின்றமனதைத் தாபத்திரயங்களில் விடக்கூடாது. எ-று. ()

மறையோர்கட் காண்டு பதி னாறு மறங்கி டக்கு
மெறிவே லரசர்க் கியலாண்டிரு பத்தி ரண்டு

நெறிசேர் வணிகர்க் கறுநான்கிவை நீங்கு மென்னின்
முறையன் றுசாந்தி புரிந்தன்றி முந்நூல்கள் சேர்த்தல்.

(இ-ள்.) வேதியருக்குப் பதினாறுவயதும், வீசுகின்ற வேலேந்திய மன்ன வருக்குப் பொருந்திய இருபத்திரண்டுவயதும், நன்னெறிபொருந்திய வைசியருக்கு இருபத்துநான்குவயதும் (ஆகிய) இவ்வயதுகள் கழிந்துவிடுமானால் பிராயச்சித்தஞ்செய்தல்லாமல் உபவீதந்தரித்தல் கிரமமல்ல. எ-று. (௧௨)

மறையோர்க்குத் தூய கலைநீடுரி புள்ளி மான்றோ
லறைவார் கழற்கால் வயவேந்தர்கட் காட்டு மென்றோல்
முறைசேர் வணிகர்க் கிவைமுப்புரி நூலி னோடும்
பொறிதுஞ் சுமந்தா ரகலத்திற் புனைதல் வேண்டும்.

(இ-ள்.) வேதியருக்குப் புனிதமாகிய கலைமானின் நெடிய தோலும், சத்திக்கின்ற நெடிய வீரக்கழலணிந்த காலையுடைய வெற்றிபொருந்திய மன்னவருக்குப் புள்ளிமான்றோலும், கிரமமாகிய வைசியருக்கு மெல்லிய ஆட்டுத்தோலும் ஆகிய இவை உபவீதத்துடன் இலக்குமி வசிக்கும் அழகிய மாலைபூண்ட மார்பில் தரித்தல்வேண்டும். எ-று. (௧௩)

ஒளிர்முஞ் சிமென்புற் சணம்போடு பருத்தி நுண்ணூல்
வளர்நான் மறையோர் முதல்மூவர் மருங்கி னார்ப்ப
களிசேர் தருப்பை யுயாதாதகி வில்ல நார்மற்
றளியோ டிவையு மணிந்தாலு மணிய லாமால.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற மெல்லிய முஞ்சிப்புல் சணல் பருத்தி இவற்றாலாகிய நுண்ணிய நூலினை வளர்கின்ற நான்குவேதங்களையுடைய அந்தணர்முதலிய மூன்று வருணத்தவரும் இடையிற் கட்டக்கடவர். கூட்டமாகிய தருப்பை உயர்ந்த ஆத்தி வில்வம் என்பவற்றின் நார் ஆனவற்றையும் ஆசையுடன் (அரைநாணாகத்) தரித்தாலும தரிக்கலாகும். எ-று. (௧௪)

ஒன்பா னமைந்த வொருமூன்று புரிய வாய
நன்பா லவெண்ணூல் சணம்பாட்டின் மயிரு நன்கி
தென்பார் முறையின் னவர்கட்குயர் தண்ட மோதி
னன்பா மருமா மறையோர்க்குப் பலாச மாகும்.

(இ-ள்.) ஒன்பது இழைகள்பொருந்திய மூன்றுபுரிகளுடையவாகிய நல்ல பாலையொத்த வெண்ணிறத்தநூலும் சணலும் ஆட்டின்மயிரும் நன்மையுடையது என்று சொல்லுவர், கிரமத்துடனே இவர்களுக்குக் கைத்தண்டு கூறுமிடத்து ஆசையாகிய அரிய பெருமைதங்கிய அந்தணருக்குப் பலாசத்தண்டு தகுதியாகும்.

வேந்தர்க்கு மேனை வணிகர்க்கும் பலாசம்வில்ல
மேந்தப் பணித்த விவைநீள மம்மூவ ருக்கு

மாய்ந்திட்ட சென்னி நுதலமூக்கி னளவையென்ப
தோய்ந்துற்ற கேள்வி மறையின்முறை போய தொல்லோர்.

(இ-ள்.) மன்னவருக்கும் மற்றைய வைசியருக்கும முறையே பலாசமும் வில்வமும் ஆகிய தண்டுகள் பிடிக்கும்படி கட்டளையிட்டுள்ளது. இவற்றின் நீளம் அம்மூன்றுவருணத்தவர்க்கும் முறையே ஆராய்ந்த சிரம நெற்றி மூக்கு இவற்றின் அளவு என்று சொல்லுவர், படியப்பெற்ற விசாரணையுடைய வேதமார்க்கத்திற் சென்ற மூதறிஞர். எ-று. (௧௬)

ஈன்ற ளவளை யனையார்மனை யைய மேற்றுண்
டான்றோர் புகழ வொருவேத மமைந்த பின்னர்ச்
சான்றோர் மதிப்பச் சமாவர்த்தன மாற்றி மிக்க
வான்றோய் பிறைவா ணுதல்மன்றல் முடித்தல் வேண்டும்.

(இ-ள்.) தாயையொத்தவர் வீடடிற் பிச்சையெடுத்துப் புசித்து மேலோர் மெச்சும்படி ஒரு வேதமுழுதும் வந்தபிறகு, புத்திமான்கள் மதிக்கும்படி சமாவர்த்தனஞ்செய்து, உயர்ந்த ஆகாயத்திற் சஞ்சரிக்கும் சந்திரன்போன்ற ஒளி வாய்ந்த முகத்தையுடைய பெண்ணை விவாகஞ்செய்யவேண்டும். எ-று. (௧௭)

விதியார் சமாவர்த் தனமாற்றினர் வேட்டி லாரேல்
மதியோ ரிகழ்வர் வளர்கன்ம மியற்ற லாகா
முதியோர் சொனான்காச் சிரமத்தின் முறை வழாது
வதியா தவரோ துறக்கத்தின் வதிந்தி டாதார்.

(இ-ள்.) வேதவிதி யமைந்த சமாவர்த்தனஞ்செய்தவர் மணஞ்செய்து கொள்ளாராகில் புத்திமான்கள் அவரை யவமதிப்பர். கனமகாரியங்களைச் செய்ய வொண்ணாது. பெரியோர்கள் சொல்லுகின்ற நால்வகையாகிய ஆச்சிரமத்திலும் இரமந்தவறாமல் உயிர் வாழாதவர்களே மோட்சத்தில் வாழாதவர்களாவார். எ-று.

முன்னுச் சிரமிக் குயர்தண்டொடு முஞ்சி மான்றோல்
மன்மா மகமில் லுறைவார்க்கு வனத்தி னோக்குத்
தொன்மா மயிர்வா ணகந்தாங்கல துறந்து ளோர்க்குக்
கன்மே யவாடை கழைதண்டடை யாள மாமால்.

(இ-ள்.) முற்பட்ட பிரமசாரிக்கு உயர்ந்த தண்டேடன் முஞ்சிப்புல் மான்றோலும், கிரகஸ்தருக்கு நிலைபெற்ற சிறந்த யாகங்களும், வனத்திலுள்ள வானப்பிரஸ்தருக்குத் தொன்மைவாய்ந்த சிறந்தமயிரும வெளளியநகமும் வளர்த்தலும், சந்நியாசிகளுக்குக் கல்லாடை மூங்கிற்றண்டுமே குறிகளாம். எ-று. (௧௯)

நல்வேதம் வேதப் பொருள்யாவு நவின்றுளோர்கள்
தொல்லா சிரியர் பொருள்கொண்டவை சொல்லு கிற்பா
ரொல்லா ததிங்கு தபநூறு முபாத்தியாய
ரெல்லா வினையு முடிப்போர்குரு வென்ப ரன்றே.

(இ-ள்.) நல்ல வேதமும் வேதப்பொருள் முதலியவும் போதித்தவர்கள் பழமையாகிய ஆசிரியர்கள்; பொன் பெற்று அவற்றைச் சொல்லுவிப்பவர்கள் கொடிய தீமையை அறவேயொழிக்கும் உபாத்தியாயர்கள்; எல்லாத்தொழில்களை யும் உபதேசித்து முடிவுசெய்வோர் குருவாவர் என்று மேலோர்சொல்லுவர்.

அருளமே வுதந்தை தனிலன்னை யதிக மாகுந்
தெருள்சேர் குரவற் பழிப்போரிடை சேர்த லாகா
மருளோ டிமன்னோர்ப் புறங்கூறுநர் வைமுள் ளேற்ற
விருணமா நிரயந் தனிற்பற்பக லெய்து வாரே.

(இ-ள்.) இருமைவாய்ந்த பிதாவைக்காட்டிலும் மாதா வுயர்வாகும்.ஞான ம்பொருந்திய ஆசாரியனைத்தூஷிப்போரிடங்கூடப்படாது. மயக்கத்துடனே (தா ய் தந்தை குரு) ஆகிய அம்மூவரையும் புறங்கூறுவோர் கூர்மைவாய்ந்த முள்ளாற் குத்த இருண்டிருந்த பெரிய நரகத்தில் பலகாலம் அடைந்திருப்பர். எ-று. (௨௧)

நற்றாய் புதல்வி யுடன்றோன்றிய நங்கை யேனு
முற்றோ ருழியிற் றனியெய்தி யுறைத லாகா
விற்றா னைவேந்தன குருமுன்னவன் மாமன் மேய
வற்பார் மகளிர்ப் பயந்தாளொடுந் தாய ராவர்.

(இ-ள்.) நன்மைபொருந்திய அன்னை - புத்திரி - உடன்பிறந்த சகோத ரியாகுனும் பொருந்திய ஓரிடத்தில் தனியாகப்போய் (பிரமசாரி அவர்களுடன்) வசித்தல் கூடாது. விற்படை யேந்திய மன்னவன்- குரு தமயன் - மாமன் (இவர் கள் மனைவியரும்) அன்புள்ள தன்மனைவியைப்பெற்றவளும் ஆக ஐவரும் தாயர் களாவார். எ - று. (௨௨)

ஓராழி வெய்யோ னுதயக்குவட் டுற்ற காலும்
பேரா துயிலுற் றுணராத பிரம சாரி
யாராம லற்றைத் தினநோற்ற லமைத்த தாகுஞ்
சீரார் மனைவாழ் குநர்செய்தி யுரைத்து மன்றே.

(இ-ள்.) ஒற்றைச்சக்கரம் பொருந்திய தேரையுடைய சூரியன் உதயகிரி யில் தோன்றிய அளவும் எழுந்திராமல் துயில்நீங்கித் தெளியாத பிரமசாரி, அன்று முழுதும் புசியாமல் விரதமிருத்தல்விதிக்கப்பட்டதாம். சிறப்புப்பொருந்திய இல் வாழ்வோரது தன்மையை இனி எடுத்துச்சொல்லுவோம். எ - று. (௨௩)

நன்மாண் புடைய மனையாண்மனை தன்னி னண்ணிற்
சொன்மாண் பனைத்துந் தொகுமாங்கவ ளெய்தி லாளே
லின்மாண் புறுதென் றுயர்வேத மிசைத்த வாற்றா
லன்னார் வடிவங் குணஞ்செய்தி யுறைய லுற்றேன்.

(இ-ள்.) நல்ல மாட்சிமைபொருந்திய பெண்சாதிவீட்டி லிருந்தால் ஒருவனுக்குச் சொல்லப்பட்ட பெருமை யெல்லாம் (சிறிது சிறிதாகக் குறையும். அவள் தன்னுடன் வாராளாகில் அவன் வீடு மேம்பா டடையாது என்று உயர்ந்த வேதங்கள் சொல்லியதன்மையால், அம் மங்கைமாரது உருவமும் குணமும் நடக்கையும் சொல்லப்புகுந்தேன். எ-று. (உச)

பிரமசரியங் கூறிய அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தல் ககஉ.

முப்பத்தேழாவது

## மகளிர் இலக்கணங் கூறிய அத்தியாயம்.

நன்னு கோத்திர மொன்றினி லுதித்துளோர் நலிதரு பிணியுற்றோர்
பெண்ணை லாதுயா னன்மகப் பெறுகிலாப பேதையர் வழிவந்தோர
மன்னி னிறவான் பழிபடு மரபினில் வந்துளோர் வரைபாந்தள்
விண்ணின் மீனதி பறவையின் பேருளோர் வேட்டிடல் விதியன்றே.

(இ-ள்.) ஒரே கோத்திரத்திற் பிறந்தவர்கள் - வருத்தத்தக்க வியாதியஸ்தர் - பெண்களை யல்லாமல் உயர்வாகிய நல்ல புத்திரரைப் பெறாத கீழோர்சந்ததியி லுதித்தோர் - பூமியில் நிலைபெற்ற பெரும் பழி பொருந்திய வமிசத்திலே தோன்றியவர்கள் - மலை - பாம்பு - நக்ஷத்திரம் - ஆறு - பக்ஷிகளாகிய இவற்றின் பேர்பெற்றவர்கள் ஆக இவ்வளவு மாதர்களை மணஞ்செய்தல் முறைமையல்ல.

இனிய மென்மொழி யுடையளாய்த் தன்னினு மிளையளா யெவரோடு
முனிவி கந்திடு குணத்தளாய்ப் பொருந்திய முயற்கறை யொழிந்தோங்கு
பனிசெய் வெண்மதி முகத்தளாய் மைந்தர்கள் பலரொடும் பிறந்தாளா
துனியி லாதநற் கன்னியை வேட்டிடல் தொன்மறை வழக்காமால். [யித்

(இ-ள்.) மதுரமாகிய மெல்லிய சொற்களை யுடையவளாகி, தன் வயதிற் குறைந்தவளாகி, யாவருடனும் கோபம் நீங்கிய சாந்தகுணமுள்ளவளாகி, முயற்களங்கம் நீங்கி மிக்க குளிர்ச்சியைத் தரும் வெண்ணிற மமைந்த சந்திரன்போலும் முகம்பெற்றவளாகி, புத்திரர் பலருடனே ஜனித்தவளாகி, துன்பமில்லாத நல்ல கன்னிகையை மணத்தல் பழமையாகிய வேதவழக்கமாகும். எ-று. (உ)

இழிந்த பன்குலத் தாதல்தன் குலத்தினு மியல்புற மேம்பட்டுக்
கழிந்த நற்குலத் தாதல்பொன் னனையவர் கவினுடை வடிவெல்லா
மொழிந்த நூல்வழி பிறழ்ந்தமெல் லுருவினர் முகிண்முலை முயக்குற்று
லழிந்து போகுநல் லுணர்வழ னிரயமு மாங்கவாக் கணித்தாமால்.

(இ-ள்.) தனது மரபைக்காட்டிலுந் தாழ்ந்த அற்பமாகிய குடியிலே பிறந்தாரும், இயல்பாகவே மேம்பட்டுச் சிறந்த நல்ல குடியி லுதித்தாரும், திருமகள் போன்ற மாதரது அழகமைந்த உருவமுழுதுஞ் சொல்லிய (சாமுத்திரிக) நூலினது மார்க்கத்திற் றவறிய மெல்லிய வடிவுடையாருமாகிய பெண்களது அரும்பிய தனங்களிற் புணர்ந்தால் அவ்வாடவருக்கு நற்புத்தி யொழிந்துபோம் (அன்றியும்) அக்கினிநரகமுஞ் சமீபமாகும். எ-று.

அக்கினிநரகம் என்பது அழற்பிரபை. அணித்தாம் என்பதனால் இம்மையிலேயே கொடுந்துயரடைவானென்க. (ங)

அரக்கிகை தந்தசெந் தாமரை யெனச்சிவந் தருப்பிய வியர்வின்றிப்
பெருத்த லஃகுத லின்றிமேல் லனிச்சமேய்ப் பெயர்ப்பினுந் துறைவாகி
யுருத்த வைமமைபோ லுள்ளடி யமைந்ததி னுருவனா கொடிமீனந்
தரித்த சக்கரம் வளைகுடை யெனமேனி றக்கமன் னவர்க்காமால்.

(இ-ள்.) அரக்கைச் செய்தத செந்தாமரையைப்போலச் சிவந்து, வெயர்வ அரும்புதலில்லாமல், பருத்தல் சிறுத்தலில்லாமல், மிருதுவாகிய அனிச்சமலரின மேல் மிதித்தாலும் வாடுவதா மிருதுதும்படி அச்சவடிவாகி உள்ளங்கால் பெற்று அதிற் பொருந்திய ரேகைகள் கொடி-மீன - சக்கரம - சங்கு - குடை இவைபோ லிருந்தால (அத்தனமையாகவுள்ள பெண) தந்தியாகியஅரசருக்கு மனைவியாக அமைவாள். எ - று. (௪

நடுவு மெலவிர லளவுமே னோக்கியோர் வளைநனி கிடந்தற்று
லடையு நற்றிருப பாந்தள்வெம் பேரெலி யாய்மயிரக் கழுகேபோ
லுடைய நீள்வரை கிடந்திடி னல்தர வொழிவுறாத் துயரமேவும
வடிவ மைந்தநற் பெருவிரல திரண்டெழில வாய்ந்திடிற் றிருவெய்துமே.

(இ-ள்.) மெல்லிய நடுவிரல்வரையில் மேல்நோக்கி ஓர் கீற்று விளக்கமுற்றிருந்தால நலல செலவம்வரும்; பாம்பு - கொடிய பெரிய எலி - ஆராய்ந்த மயிரையுடைய கழுகு இவைபோலவுள்ள நெடிய ரேகைகளிருந்தால தரித்திர நீங்காத துன்பம் பொருந்தும்; உருப்பெற்ற நல்ல பெருவிரலானது உருண்டு அழகுபெற்றிருந்தால் செலவ மடையும். எ-று. (௫

அனன மெலவிர லகன்றிடிற் கைமமையா நீண்டிடிற் றிருவஃகுஞ்
சொன்ன தன்மையி னன்றிமற் றேனைய தொகுவிர லறநோகின
மன்னு றுநதிரு நீளுமேற பிறனல மகிழ்ந்திடு நெருங்குற்று
வின்ன லுறற்கு தாசியாங் குறுகிடி லிறந்திடுஞ் சிலநாளில.

(இ-ள்) அப்படிப்பட்ட மெல்லிய விரல்கள் (ஒன்றற்கொன்று) விலகியிருந்தால் விதவையாவாள்; நீண்டிருந்தால செல்வங் குறையும்; சொல்லிய முறையில்லாமல கூட்டமாகிய அவ விரல்கள் மிக மெலிந்தால செலவம் பொருந்தாது: நீண்டிருந்தால் பரபுருஷசங்கத்தை விரும்புவாள்; நெருங்கியிருந்தால் துனபமபொருந்திய தாசியாவாள்; குறுகியிருந்தால் கொஞ்சகாலத்தில உயிர் துறப்பாள. எ - று (௬)

விரல்க ளொன்றினமே லொன்றுறிற் காதலன் விந்திடு மகன்றுனற்
பொருள கன்றிடுங் கடைவிர லிலத்திடை பொருந்திடா தெனிற்காதல்
பெருகு கேள்வனை யொறுத்திடுமே பெருவிரற் கடுத்தமேல விரனினி
னரிய நன்மண மாற்றுமுன் பலரொடு மன்புறப் புணர்கிற்பாள்.

(இ-ள்) கால் விரல்கள் ஒன்றின்மேலொன்றிருந்தால் கணவனிறப்பான்; பரவியிருந்தால் நலலசெல்வம் நீங்கிப்போம்; கடைவிரல் பூமியிற்படாது மேல்கிளம்பியிருந்தால் ஆசைமிகும் புருஷனை வெறுப்பாள்; பெருவிரலின் பக்கத்து

(இ-ள்.) வயிற்றிலுள்ள மெல்லிய மடிப்புகளுயர்ந்து நெடிய பல சுழிகளி ருப்பின் மலடாகித் தனபத்துடன் தனது கணவனை விட்டு வேறொருவனுடனு மசை யோகவிருப்பு முறு. காணயிக்காத தாசியாவாள்; குடம்போலும் மத்தளம்போ லும் பூரித்திருக்குமாறுல் கோசமடைந்து பிராணபதிக்கும் மனவருத்தமுறுமாறு எப் போதும் கொடியதனைப் புரிவாள். எ-று. (௧௯)

நீறு பூத்துயர் பூசணிக் காயென நிகழ்வெனை வயிறிருப்பின்
சோறு ளப்பில துய்த்திடு மகளிர்தற் றுயருறு மிகாலிற்
கூறு மாமலினக் கொழுந்தினைக் கொளுறிடும் விலாப்புடை தசைமெய்
யூறின் மெனமையாய நரம்பெழா தழகுறி னுலப்புறு திருமேவும்.

(இ-ள்.) சாம்பல்படர்ந்துயர்ந்த பூசணிக்காய் மேல் இவற்றைப்போலவயி றிருந்தால் அன்னம் அதிகமாகப்புசிப்பாள்; பருத்திருந்தால் துன்பமடைவாள், மி கத் தொங்கினால் சொல்லுகின்ற சிறந்த கணவனை யிழப்பாள். விலாப்புறம் சதைபெற்றுக் குற்றமில்லாத மிருதுவாகி நரம்புதெரியாமல் அழகுற்றிருந்தால் நீங்காத செல்வமடைவாள். எ-று. (௨௦)

நரம்பெ ழுந்துறு மயிரொடும் விலாப்புடை நண்ணுமே லவனூலி
னிரம்பி லக்கண முடையளா யினுந்திரு நீங்குமவ் வயிற்றின்கட்
பொருந்து நன்மயி ரொழுக்கற மென்மையாய்ப் பொழிகதி ருமிழ்நீலத்
திருந்து கோலெனக் கிடந்திடின் மலருறை திருவினுஞ் சிறப்பெய்தும்.

(இ-ள்.) விலாப்புறம் நரம்புதோன்றிப் பொருந்திய மயிருடனிருந்தால் அப்பெண் சாமுத்திரிகநூலிற் கூறிய லக்ஷணங்களெல்லாம் நிரம்பப்பெற்றவளா னாலும் செல்வமகலும்; அழகிய வயிற்றிற்பொருந்திய நல்ல ரோமவரிசைமுற்ற மிருதுவாய்ச் சொரிகின்ற கிரணங்களைவீசும் திருத்தமாகிய நீலக்கோல்போன் றிருந்தால் தாமரையில்வசிக்குந் திருமகளைப்பார்க்கிலும் கீர்த்தியடைவாள். எ-று.

மயிரொ ழுக்கமுள் வளைந்திடிற் கைம்மையா மம்மயிர் சிவப்பேறிற்
செயிரு றுங்குண மெய்திடு மிடையிடை சிதைந்திடிற் றிருநீங்கு
மியல்பொ டுஞ்சம மாய்மயி ரின்றிநல் லிதயமாழ்ந் திடாதாகி
னுயிரி னுஞ்சிறந் தினனுயிர்க் காதல னுவப்புறச் சிறப்பாமால்.

(இ-ள்.) வயிற்றில் ரோமவரிசை யுட்புறம்வளைந்தால் விதவையாவாள். அந்த மயிர் சிவந்திருந்தால் தீமைதங்கிய குணமடைவாள்; நடுநடுவே விலகியிருந் தால் செல்வமொழியும். நல்ல இதயமானது இயற்கையாயுஞ் சமானமாயும் மயி ரில்லாமலும் பள்ளமின்றியுமிருந்தால் தன்னுயிரைப்பார்க்கிலும் மேம்பட்ட இ னிய பிராணநாயகன் சந்தோஷிக்கச் சிறப்படைவாள். எ-று. (௨௨)

இதய மென்மயி ரணிந்திடிற் காதல னிறந்திடு மகலுற்றால்
மதன னங்கணை வருத்திடப் பலரையு மணந்தளி யிலளாகுஞ்
சிதைவி லங்குல மோரபதி னெட்டதாய்ச் சிறிதுயர்ந் திடினன்று
ததையு மென்மயி ரணிந்தறப் பருத்திடிற் சார்வருந் துயராகும்.

(இ-ள்.) இடையம் பருத்தானமயிர் பெற்றிருந்தால் கணவனிறப்பான்; பரவியிருந்தால் மன்மதனது பஞ்சபாணங்கள் துன்புறுத்தப் பலபேரையுங் கலந்து அன்பில்லாதவளாவாள். கெடுதலில்லாத பதினெட்டங்குலவளவாய்க் கொஞ்சம் உயர்ந்திருந்தால் நன்றாகும். நெருங்கிய மெல்லிய மயிருற்றதாய் மிகப்பரந்திருந்தால் கிடைத்தற்கரிய துன்பமடைவாள். எ-று. (௨௩)

வடங்கொள் வெம்முலை பணைத்தடி கனத்திணை வாய்ந்திடைவெளியின்றி
கடைந்த செப்பினிற் புடைபரந் தெழிறவழ் கண்கறுத் திடினன்றாந் [க்
தடங்கண் மங்கைதன் வலமுலை யுயர்ந்திடி லாண்பெறுந் தளராது
குடம்ப ழித்துய ரிடமுலை யுயர்ந்திடிற் பெண்பெறுங் குறிபபாமால்.

(இ-ள்.) மாலையணிந்த கொடியமுலைகள் பூரித்து அடியிற்பரந்து (ஒன்றற்கொன்று) சமமாகி, இடையிலே சந்தில்லாதுசேர்ந்து, கடைந்தெடுத்த செப்புபோல பக்கம்பரந்து அழகுவிளங்கும் முலைக்கண் கறுத்திருந்தால் நன்று. விசாலமாகிய கண்களையுடைய பெண்ணின் வலதுதனம் உயர்ந்திருந்தால் ஆண்குழந்தை பெறுவாள்; இளமாறாது குடத்தைச்சயித்து மேம்பட்ட இடதுதனம் உயர்ந்திருந்தால் பெண்குழந்தை பெறுங்குறியாகும். எ-று. (௨௪)

அடிக னத்துமேல வரவர சேர்ந்திடிற் சிறந்துநா ளழகெய்தும
வடிவ மின்றியே திரிகைபோற் பதிந்திடில வசைபடு குணனுறு
மொடிவில கண்ணிணை பருத்திடி னீண்டிடி லுயர்ந்திடி னுதியாழிற
கடின மாயற நீங்கிடு முலையெனிற் கனவினுந் தொடலாகா.

(இ-ள்.) அடிகனத்து மேல்நோக்கிப் போகப்போகச் சிறுத்திருந்தால் கொஞ்சங்காலம் அழகாயிருப்பாள்; உருவில்லாமற் சக்கரம்போலப் படிந்திருந்தால் தீமைபொருந்திய குணமுடையவளாவாள். ஒடிதலில்லாத முலைக்கண்கள் பெருத்திருந்தாலும் நீண்டிருந்தாலும் உயர்ந்திருந்தாலும் முனையழுந்தியிருந்தாலும் கெட்டியாய் முலை விலகியிருந்தாலும் சொப்பனத்திலுந் தொடக்கூடாது.

கழுத்த டிப்புறத் தென்பெழா தமைந்திடிற் றிருவுறுங் கவின்யாது
மொழித்து மேலெழுந் துயாந்துதாழ்ந் திடிற்றிரு வொழிந்திடு மழகார்ந்த
பழிப்பில் தோளிணை குறுகுத னீடல்மற் றின்றிமென் பணைபோல
விழுப்ப மெய்துறி னன்றுதோண் மயிருறிற கைம்மையாய் விடுமென்றே.

(இ-ள்.) கழுத்தின் கீழ்ப்பக்கம் எலும்புதோன்றாமலிருந்தால் செல்வமடையும்; கொஞ்சமும் அழகில்லாமல் மேல்நோக்கி யுயர்ந்தாவது தாழ்ந்தாவதிருந்தால் செல்வம்நீங்கும்; எழில்பொருந்திய குற்றமில்லாதஇரண்டுதோள்களும் குறுகுதலும் நீளுதலும் இல்லாமல் மெல்லிய மூங்கில்போலச் சிறப்புற்றிருந்தால் நல்லதாம். தோளின்மேல் உரோமங்களிருந்தால் விதவையாவாள். எ-று. (௨௫)

தோளி லென்புமே லெழுந்திடிற் கைம்மையா முலர்ந்திடிற் றுயரெய்துங்
கோளில் சந்துக டசைதது தோன் றுவெனிற் குற்றமொன் றிலதாகு
நீள்கை மூலமென் மயிரொடு முயர்ந்திடப் பருத்திட னெறியாகும்
வாள்கொள் செம்மயி ராழ்தனி ணரம்பொடு வழியும்வே றுறிற் றீதாம்.

(இ-ள்.) தோள்களின்மேல் எலும்புதெரிந்தால் விதவையாவள்; தோள்கள் வாடியிருந்தால் துன்பமடைவாள்; குற்றமில்லாத பள்ளமானவிடங்கள் தசையுள்ளவாய்த் தெரியாவாகில் சிறிதுங் குற்றமில்லையாம்; நெடிய கைமூலங்கள் உரோமமுற்றுயர்ந்து புரிததிருந்தால் கிலேசமாகும்; ஒளியையுடைய செம்மையான உரோமத்துடன் அழகாய் நெடியநரம்புகளோடு வெள்ளை வழிந்தால் கொடிதாகும். எ-று. (௰௭)

உலறு பன்மயி ரின்றிநீ ணரம்பொடென் புயர்ந்திடாக் கரநன்றாங்
குலவு பனமயி ரென்பொடு நரம்பெழிற் கொடியவெந் துயரெய்து
மிலகு தாமரை நனையெனப் பெருவிர லியைந்திடிற் சிறப்பெய்து
மலகில பெரொழி லங்கைமென் முயல்வயி றெனக் குழைவுற்றே.

(இ-ள்.) சிலம்புகின்ற பலரோமங்களில்லாமல் நெடிய நரம்புடன் எலும்புகள் மேலநோக்கியிராத கைகள் நல்லதாகும்; நெருங்கிய பல மயிர் எலும்புடனே நரம்புதோன்றினால மிகக்கொடியதுன்ப மடைவாள்; விளங்குகின்ற தாமரைமொட்டுபோலப் பெருவிரலிருந்தால் சீர்பெறுவாள்; குற்றமில்லாத மிக்க அழகுடைய உள்ளங்கை மிருதுவான முயல்வயிறுபோல இளகினதாய். எ-று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (௨௮)

அரத்த மூட்டிய செய்யபொற் றாமரை யகவித ழெனச்சேந்து
பொருத்து மெலவிர லிடைவெளி யின்றியே பொருந்திய வளைத்தாகி
யிருத்த லன்றுயா புறங்கையி னரம்பொடென்பெழா துமென்றசைமூடிப்
பெருத்துநீண்மயிரொழிந்தெழில்வாய்ந்திடிற் பெட்பொடுந்திருவெய்தும்.

(இ-ள்.) செந்நிறமூட்டிய சிவந்த பொற்றாமரையின் உள்ளிதழ்போலச் சிவந்து,இணைத்துள்ள மெல்லிய விரல்கள் நடுவில விலக்கற்றுச்சொல்லிய அளவையுடையதாய் இருப்பது நலம்; உயர்வாகிய பின்கையில நரம்புகளுடனே எலும்புகள்தோன்றாமல மெல்லிய சதையால் மறைந்து பெருத்து நெடியஉரோமமின்றி அழகுபெற்றிருந்தால் பெருமையுடனே செல்வமடைவாள். எ-று. (௨௯)

அங்கை நீள்வரை பலவுறிற் கைம்மையா மகன்றிடிற் றிருவஃகுந்
தங்கு நீணரம புயாந்திடி லிரக்குநீள் புறங்கையிற் றலைபெய்து
துங்க மாமயிர் செறிந்திடிற் காதலன் றொலைவனீ ணரம்பெய்திற்
பங்க முற்றுயர் நிரப்புற நாடொறும படுதுய ரிடைவீழும.

(இ-ள்.) உள்ளஙகையிலே நெடிய பல ரேகைகளிருந்தால் விதவையாவாள்; பரந்திருந்தால் அயிஸ்வரியங்குறையும்; பொருந்திய நீண்டநரம்புதோன்றினால் பிச்சையெடுப்பாள்; நீளமாகிய பின்கையில் மிகுந்து பரிசுத்தமான மயிர்கள் நெருங்கியிருந்தால் கணவனிறப்பான்; நெடிய நரம்பிருந்தால் துனபமடைந்து மிகத் தரித்திரமடைய எக்காலமும் அதிகரிக்கும் துக்கக்கடலிலாழ்வாள். எ-று. ()

இடைய றுதுறச் சேர்ந்திடத் தோன்றிடா தெழிறிகழ் வரையாவு
மிடையு றுதுசெங் கயலெனக் கிடந்திடின் விழுமிது கமலம்போல்

வடிவம் வாய்ந்திடி லரசரிற் கிழத்தியாய் மகப்பெறும் வளையாமை
குடைநி கர்த்திடில் விண்ணவர்க் கன்னையாய்க்குறைவில்சீர்பெறுமாதோ

(இ-ள்) நடுவேவிலகாமற் பொருந்தக்கூடி, காணப்படாமல் அழகுவிளங்கும் ரேகைகளெல்லாம் மத்தியிலின்றிச் சிவந்த கயற்கெண்டைபோல இருப்பின் சிறப்புடையது. தாமரைபோலுருவுற்றிருப்பின் மன்னவருக்கு மனையாட்டியாய் மைந்தரைப்பெறுவாள்; சங்கு ஆமை குடைபோலவிருந்தால் தேவர்களுக்குந் தாயாகி ஒருகுறைவுமில்லாத சிறப்புற்றிருப்பாள். எ-று. (௩௧)

கற்பு வாய்ந்திடுஞ் சுவத்திக நிகர்த்திடிற் கமழ்வலம் புரிநேரி
னொற்றை வெண்குடை மன்னவர்க் குரியளா முறுதுலை யெனச்சேரின்
மற்றை நாய்கர்தம மனைவியா நுகத்தொடு சகடமாம வடிவெய்தி
லற்பி னோடுநல் லுழவர்தம் மனைவியா யறமவளாத் திடுமன்றே.

(இ-ள்.) சுவத்திகம்போன் றிருந்தால் பதிவிரதைத்தன்மை யடைவாள்; மணங்கமழும் நந்தியாவர்த்தமலர் போன்றிருந்தால் ஒப்பற்றசந்திரவட்டக்குடையையுடைய அரசருக்கு உரிய மனைவியாவாள்; பொருந்திய துலாக்கோல்போலவிருந்தால் வைசியருக்குப் பாரியாவாள்; நுகத்தடி சக்கரம் போல விருந்தால் ஆசையுடனே நல்ல வேளாளரது இற்கிழத்தியாய்த் தருமங்களைச் செய்வாள்.

சுவஸ்திகம் என்பது அஷ்ட மங்கலத் தொன்று. (௩௨)

வேழம் வாம்பரி வில்விடை வச்சிரம வீசுசா மரந்தோட்டி
யாழி யொப்புறி னரசரிற் கிழத்தியா மாடல்வேல கதைசூலஞ்
சூழ்சு டர்க்கொலை வாளிவை போன்றிடிற் றொகுபொருட் குவையாவும்
வீழ்வ ளர்க்கெலா மகிழ்வுற நாடொறும் வேண்டுவ நனிநல்கும்.

(இ-ள்.) யானை - தாவிச்செல்லுங் குதிரை - வில் - எருது - வச்சிராயுதம் - வீசுகின்ற சாமரம் - அங்குசம் - சக்கிராயுதம் - இவைபோல ரேகைகளிருந்தால் மன்னவருக்கு மனையாட்டியாவாள்; போர்புரியும் வேலாயுதம் - கதாயுதம் சூலாயுதம் - கிரணங்கள் பொருந்திய கொலைசெய்யும் வாளாயுதம் இவைபோல இருந்தால் மிகுந்த பொருட்டொகுதியெல்லாம் தரித்திரர் யாவர்க்கும் களிப்புண்டாகும்படி தினந்தோறும் விரும்பியவையில் அதிகமாய்க் கொடுப்பாள். எ-று.

அரவ மொட்டகந் தவளைசெந் நாய்கழு கரற்றுவெங் கரம்பூனை
நரியு டற்றுதே ணிகர்த்திடி லருந்துயர் நண்ணுமங் குட்டத்தில்
வரைக ளிட்டிகை யளவுறிற் காதலன் மரித்திடு மெழில்வாய்ந்த
விரல்க ளொழுங்குறை நேர்ந்துறு சந்துகண் மிகுந்திடா வெனினன்றாம்.

(இ-ள்.) பாம்பு - ஒட்டை - தவளை - செந்நாய் - கழுகு - கத்துகின்ற கொடிய கழுதை - பூனை - நரி - துன்பப்படுத்தும் தேள் இவைபோன் றிருந்தால் அரிய துன்பமடைவாள்; பெருவிரலில் செங்கல்லறுக்குங் கருவிபோ லிருந்தால் கணவனிறப்பான்; அழகமைந்த விரல்கள் நேராக மெலிந்து பொருந்தியசந்துகள் மிகுந்தில்லாமல் (நெருங்கியிருந்தால்) நல்லதாம். எ-று. (௩௪)

மயிர்ந ரம்பெழுக் துயர்ந்தற வன்மையாய் வளைக்துநேர்ந் திடைநீங்கிற்
செயிர்வி ளைந்திடுங் கூருகிர் நீண்டிடிற் சிவந்திடிற சிறப்பாகும்
பயிலு நலவொளி யின்றியே பொனவைமையாய்ப பள்ளமாய் விளர்ப்புற்றாற்
றுயரு றுந்திடும் புள்ளியாய் விளர்ப்புறிற் றோயந்திடுமே பலரோடும்.

(இ-ள்.) மயிரும் நரம்புகளும் மேலெழுந்து தோன்றி மிகக் கெட்டியாய் வளைவுற்றுமெலிந்து இடையிற் சந்திருந்தால துன்பம உணடாகும் ; கூர்மையான நகஙகள் நீண்டிருந்தாலும் சிவந்திருந்தாலும் சிறப்படைவாள் ; விளங்குகின்ற நல்ல பொலிவற்றுப் பொன்னிற முடையதாயும் பள்ளமாக வெளுத்து மிருந்தால் பல ரோடுஞ் சேருவாள். எ - று. (௩௫)

முதுகு சேர்ந்திடு மென்புமென் றசையினின் மூடிநீண் மயிரின்றி
விதியி னலவெழில வாய்ந்திடி னனறுகூன மேவிவன் மயிர்வேய்ந்து
தசையு மென்பொடு நரம்பெழூர் துயர்ந்தறத் தாழ்ந்திடிற் றீதாகும்
பொதிந ரம்புகோ ணின்றிமென றசையினிற் பொருந்திடிற்சுவனன்றாம்.

(இ-ள்.) முதுகைச் சேர்ந்த எலும்புகள் மெல்லிய தசையினால் மறைந்து நெடிய உரோமமில்லாமல் கிரமப்படி நல்ல அழகுற்றிருந்தால் நலம்; கூன்பொருந்தி வலிய மயிருடையதாய் நெருங்கிய எலும்புகளுடன் நரம்புகள் மேலூற்றுத் தோன்றியும் மிகத் தாழ்வுற்று மிருந்தால் கொடியதாம் ; பிடரியில் திணிந்துள்ள நரம்புகள் கோணுதலில்லாமல் மெல்லிய தசையுடன் பொருந்தி (மேலே தெரியாது) இருந்தால் நல்லதாம். எ - று. (௩௬)

சிறுபு றத்தினி னரம்பெழில் வன்மயிர் சேரினீண் டிடிற்கோணி
லறவும் வற்றிடிற் றீதுமென் கழுத்துநா லங்குலத் தளவாகி
யுறுவ னபபொடுங் கன்னியங் கமுகெனத் திரணடொளிர் வரைமூன்று
பெறுத னன்றது குறுகிடிற் றாசியாம் பெருத்திடிற் கலன்போக்கும்.

(இ-ள்.) சிறிய பக்கங்களில் நரம்புகள் அழகிய வலிய மயிர்கள் நெருங்கியிருந்தாலும் நீண்டிருந்தாலும் கோணினாலும் மிகவும் வாடியிருந்தாலும் கொடியது; மெல்லிய கழுத்து நான்கங்குல அளவாகிப் பொருந்திய அழகுடன் இளமை தங்கிய கமுகமரம்போல உருட்சியுற்று விளங்குகின்ற மூன்று மடிப்புக ளுடைத் தாயிருத்தல் நல்லது; அது குறுகியிருந்தால் தாசியாவாள்; பூரித்திருந்தால் மங்கல்ய மிழந்து விதவையாவாள். எ - று. (௩௭)

உலர்ந்து நீண்டிடிற் குறுகிடின் மயிரொழி லுலப்பறு திருநீங்குங்
கலந்து நீண்மடிப் பெய்திடின் மலடியா காடினன் கவினெய்தி
நலஞ்சி றந்திரண் டங்குலத் தளவையாய்த் திரண்டிடி னன்றுரு
மலிந்து நீண்டிரு கூறதாய்ப் பருத்துவன் மயிருறிற் றீதாமால்.

(இ-ள்.) வாட்டமுற்றுநீண்டிருந்தாலும் குறுகியிருந்தாலும் அழகிய மயிர் பெற்றிருந்தாலும் கெடுதலற்ற செல்வமகலும் ; நீண்டமடிப்புகள் கலந்திருந்தால் மலடியாவாள்; ஆராயுமிடத்துச் சிறந்த அழகுபெற்று நன்மைமிகுந்து இரண்டங்

குல அளவுள்ளதாய் உருட்சிபெற்றிருந்தால் நல்லதாம் ; கனத்துநீண்டு இருபங்காகப் பூரித்து வலிய மயிர்கள் பொருந்தியிருந்தால் கொடியதாம். எ - று. (௩௮)

அனுர ரம்புறு மயிரிவை யொழிந்திடி லழகுறும் வளைந்தோங்கி
நனியி ளைத்தறக் குறுகிமென் மயிருறி னவையதாங் கபோலங்க
ளினிய வாய்த்தசைந் தாடியி னெழில்கவாந் தியைதனன் றெழிலுளுங்
கனிவு ருதறப் பள்ளமாய் மயிரொடுங் கடினமா யுறிற்றீதாம்.

(இ-ள்.) கன்னத்தில் நரம்புகள் - பொருந்தியமயிர் இவைதோன்றாதிருந்தால் அழகுபெறுவாள் ; வளைந்துயர்ந்து மிகவாடி அதிகக்குறைந்து மெல்லிய மயிரிருந்தால் குற்றமாகும் ; கன்னங்கள் இனியனவாகிச்சதைபெற்றுக் கண்ணாடியின் பொலிவைப்பெற்றிருத்தல் நல்லது ; ஒருபோதும் அழகுமிகாமல் மிகப்பள்ளமாய் மயிருடையதாய்க் கடினமுற்றிருந்தால் கொடியதாம். எ - று. (௩௯)

ஒளியு மிழ்ந்துநல் வட்டமா யெழிறிக ழுவாமதி யெனத்தோன்றி
னளின மென்மணம் வீசுவாண் முகமெனி னன்றுகீ ழிதழ்சேந்து
வளர்செ ழுந்துகிர்க் கடிகைபோற் றிரணடதி னடுவேஓர் வரைசேரிற்
களைக ணுயுல களித்திடு மரசரிற் கிழத்தியாய்க் களிகூரும்.

(இ-ள்.) ஒளிதங்கியமுகம் பிரகாசித்துக்கொண்டு நல்ல வட்டவடிவாய் அழகுவிளங்கும் பூரணசசந்திரன் போலக்காணப்பட்டு, மெல்லிய தாமரைமலரையொத்த மணஙகமழுமெனறுல் நல்லதாம். கீழுதடு சிவந்து வளர்கின்ற செழுமை தங்கிய பவளத்துண்டுபோலத்திரண்டு அதின் மத்தியில் ஓர் கீற்றிருந்தால், உலகத்தாருக்கு ஆதரவாகி இரட்சிக்கும் மன்னாமனைவியாய் மகிழ்வாள். எ - று. (௪௦)

பருத்து நாணெனச் சிறுத்திரண் டிதழெனப் பகர்ந்திடும் வரைமேவிற்
றிருத்த ணப்புறுங் கறுத்தறப் பருத்திடிற் கைம்மையாய்த் துயர்சேரும்
பொருத்து மேவிதழ் நடுச்சிறி துயர்ந்தெழில் பொருந்திடி னன்றாகும்
விரித்து லர்ந்துநீண் மயிரொடும் பொருந்திடின் மிக்கவெந் துயாகூரும்

(இ-ள்.) இதழ் கனத்துக் கயிறுபோற் சிறுத்து இரண்டென்று (கண்டோர்) சொல்லத்தகும் ரேகையிருந்தால் செல்வம்விலகும் ; கறுத்து அதிகக்கனமுற்றிருந்தால் விதவையாய்த்துன்பமடைவாள் ; பொருந்தியுள்ள மேலுதடு நடுவிலே கொஞ்சம் உயர்ந்து அழகுற்றிருந்தால் நல்லதாம் ; பரந்து ஈரமற்று நெடிய மயிருடன் விளங்கினுல் மிகக்கொடிய துன்பப்படுவாள். எ - று. (௪௧)

முருந்தெ திர்ந்துவெண் ணிலாக்கதிர் விரித்தொளிர் முத்தினை நிரைத்தென்னத், திருந்து வெண்பலெண் ணுன்கெனுந் தொகையவாய்ச் செறிந்திடி னன்றாகும், பரந்து யர்ந்துநீண டகன்றுபொன் னிறத்தவாய்ப் பசுமையாய்த் தெற்றித்துக், கரிந்து சிப்பிபோன் றிருந்திடிற் றுயரொடுங் கையற வுறுமாதோ.

(இ-ள்.) மயிலிறகின் அடியைச்செயித்து, வெள்ளிய சந்திரிகையாகிய கிரணங்களை வீசிப்பிரகாசிக்கின்ற முத்துக்களை வரிசையாக வைத்ததுபோலத் திருந்திய வெண்மைவாய்ந்த பற்கள் முப்பத்திரண்டு எனனுந்தொகையினவாகி நெருங்கி

யிருந்தால் நல்லதாகும்; பரவிமேம்பட்டு நெடிதாயகன்று பொன்னிறமுடையன வாகியும், பசுமையாகியும் தூரகதூரமாகியும் கருநிறமடைந்து இப்படிப்போலு மிருந்தால் துன்பத்துடன் தரித்திரமடைவாள். எ - று. (௪௨)

அணரி மேயபல் லுயர்ந்திடிற் றாயி றழிந்திடுந் தெற்றுகிற்
கணவன் வீகதிடு நீங்கிடிற் பலரொடுங் கலந்திடு நாச்சேந்து
தணிவின் மென்மையா யிருந்திடி னினியன நுகர்ந்திடுந் தழல்வெங்கட்
பணியி னுவென நுனிகவர்ந் தகன்றிடிற் படுதுய ருறுமாதோ.

(இ-ள்.) மேல்வாய்ப்புறத்திற் பொருந்திய பல் உயர்ந்திருந்தால் (அவளைப் பெற்ற) தாய் இறப்பாள்; இங்குமங்குமாக விருந்தால் புருஷனிறப்பான்; சந்துற் றிருந்தால பலருடனும் சேர்வாள்; நாவானது சிவந்து மிகமிருதுவாயிருந்தால் நல்லபோகங்களை யனுபவிப்பாள்; நெருப்புப்போன்ற கொடிய கண்களையுடைய பாம்பினது நாப்போல முனை இருபிளவாகி அகன்றிருந்தால் மிகத்துன்புறுவாள்.

நாவி ளர்த்திடிற் புனலின்வீழ்ந் திறந்திடு நனிகறுத் திடிற்சீறு
மோவ றப்பெருத் திடினிரப் பெய்திடு முயர்நதுநீண டிடினும்
யாவ தாயினும வனைவிகந் திருந்திடு மகன்றிடி விகல்செய்யு
மேவு கின்றவுண் ணுச்சிவந் திழுதென மென்மையா மெனினன்றே.

(இ-ள்.) நாவானது வெளுத்திருந்தால் சலத்தில் விழுந்திறப்பாள்; மிகக் கறுத்திருந்தால் (யாவர்மேலும்) கோபிப்பாள்; குறைதலற்றுப் பெருத்திருந்தால் யாசிப்பாள்; உயர்வாகி நீண்டிருந்தால் எப்போதும் எந்தச்சொல்லாயிருப்பினும் அங்கீகரித்தலினறித் தாழ்த்திப் பேசுவாள்; அகனறிருந்தால் சண்டைசெய்வாள்; பொருந்திய உண்ணாக்கு சிவநது நிணம்போல மிருதுவாயிருந்தால் நல்லதாம்.

இன்ன தன்மையி னன்றியுண் ணுவறத் தூற்றிநீண் டெழுந்தோங்கிப்
பொன்மை யாமெனிற் புறநக ரெங்கணும போக்கயாந் திடுமன்றி
வன்மை யாமெனிற் கள்வர்தம் மனைவியாம் விளாப்பின்மங் கலநீங்குந்
துனன ருங்கறுப் பெய்திடிற் கொழுநனைப் பிரிந்துவெந் துயர்கூரும்.

(இ-ள்.) இவ்வகையிலல்லாமல் உண்ணாவானது மிகச்சிலம்புற்று நெடிதாய் எழுந்தோங்கிப்பொன்னிறமா யிருக்குமானல் அந்நியதேசமெலாம் போவாள்; அவ்வாறன்றிக் கடினமாகவிருந்தால் சோரர்மனையாட்டியாவாள்; வெளுத்திருந்தால் விதவையாவாள்; அடைதற்கரிய கருநிறமடைந்தால் கணவனைநீங்கிக் கொடிய துன்ப மடைவாள். எ - று. (௪௫)

இலகு பொற்கொடி மூக்கினென் புட்சிறி துயர்ந்துசேந் தியலெள்ளின்
மலரின் வண்ணமாய் நீண்டுதாழ்ந் திராதுமேல் வரவா வுறநேர்ந்து
நிலவு மென்றுளை சிறுத்திரு புறங்களு நேர்பெறச் சமனுகி
லுலக மியாவையுங் கைதொழு தேத்திடு மொண்மலர்த் திருவொப்பாள்.

(இ-ள்.) விளங்குகின்ற பொற்கொடிபோன்ற மாதராதுமூக்கு எலும்புள்ளே சிறி துயர்ந்து சிவந்து எள்ளினது பூவைப்போன்று நெடிதாகித் தாழ்ந்திராமல்

மேலே செல்லச்செல்ல மிகக்குறுகி, பிரகாசிக்கின்ற மெல்லியதுவாரம் சிறிதாய் இருபக்கமும் ஒத்திருக்கச் சமானமாயிருந்தால் உலகத்துள்ளோரெல்லாம வணங்கித் துதிக்கும் ஒளிதங்கிய தாமரைமலரில வசிக்கும் திருமகளையொப்பாவாள்.

கருமை யாய்நுனி வளைந்திடை பள்ளமாய்க் கவிழ்ந்தறப் பருத்தோங்கி
யருண மாய்நுனி பருத்திடிற் கைம்மையாஞ் சிலதியா மடிப்புற்று
லுருவு தேய்ந்தறக் குறுகிடிற் கலதியா முறுகவுள் சுரித்தொணபற்
றெரிவு றாதுகண் ணிடுக்குறா திளநகை செய்திடி னிதாமால்.

(இ-ள்.) கருநிறமுடையதாய் முனைவளைவாகி, நடுவேபள்ளமாகிக்கவிழ்ந்து மிகப்பூரித்துயர்ந்தாலும், மிகச்சிவப்பாய் முனைகனத்திருந்தாலும் விதவையாவாள்; மடிப்புற்றிருந்தால் தோழியாவாள்; வடிவுதேய்ந்து மிகச்சிறுத்திருந்தால் மூதேவியாவாள்; பொருந்திய கதுப்பு மடிப்புற்று ஒளிவாய்ந்த பற்கள் தெரியாமல கண் சிறுக்காமல் புன்னகைபுரிதல் இனிதாகும். எ - று. (சஎ)

சொல்லு மாறல துறுநகை புரிந்திடிற் றூறுறுந் தும்முங்கான்
மெல்ல மெல்லென விருமுறை மும்முறை தும்முதல் விதியாகு
மல்ல தீதுகண் மணிகறுத் திமைகறுத் தயலிடம விளர்ப்பாகிச
சில்ல ரிக்கடை சிவந்துபைங் குவளையின் செவ்விவாய்ந் திடினன்றாம்.

(இ-ள்.) நூல்கள்சொல்லும் இவவாறன்றிப் பொருந்திய நகைசெய்தால் குற்றமடைவாள். தும்முகையில் ஒவவொன்றாக இரண்டுதரம் மூன்றுதரம் தும்முதல் கிரமமாகும்; அல்லாவிடிற்குற்றமாம். கணமணிகள் கறுப்பாய்க் கண்ணிமைகள் கறுப்பாய்ப் பக்கத்தில்வெளுத்து மெல்லியஅரிபரந்துள்ளகடைக்கண் சேந்து பசியகுவளைமலரின் தன்மைபொருந்தினல் நல்லதாம். எ - று. (சஅ)

கண்ணு யர்ந்திடி லாயுள்போம் வட்டமேற் கலந்திடும் பலரோடு
மண்ணல் யானையின் கண்ணிக ரமைந்திடி லகற்றுதல் குணனாகும்
வண்ண மென்புறு நிறமெனி னற்குணம வாய்நதிடா தறச்சேபபி
னுண்ணுங் காதல னுயிரினை யாழுமேற் சிலதியா யுழல்கிற்பாள்.

(இ-ள்.) கண்கள் உயர்ந்திருந்தால் உயிர்நீங்குவாள்; விருத்தமாயிருக்குமாயின் பல புருஷருடனும்சேருவாள்; பெருமைதங்கிய யானையினது கண்ணைப் போலிருந்தால் அவளை விலக்கிவிடுதல் நல்லதாம்; அழகிய மெல்லிய புறநிறமானால் நற்குணம்பெறமாட்டாள்; மிகச்சிவந்திருந்தால் கணவனுயிரைக்குடிப்பாள்; தாழ்ந்திருக்குமாயின் தோழியாகி வருந்துவாள். எ-று. (சகூ)

ஆன்க ணொப்புறிற் கலவியில விழைவுறு மாடுமே தியின்கண்ணே
போன்று மாறுகண் ணாகியு மிருந்திடிற் பொலிவில ளிடப்பாலி
னோன்று நோக்குறிற் சிலதியாம் வலப்புறத் தியைந்திடின் மலடாகு
நான்ற தேனிற மமைந்திடி விருகிதி நண்ணிவான் சிறப்பெய்தும்.

(இ-ள்.) பசுவின்கண்போலிருந்தால் புணர்ச்சியில் விருப்ப மடைவாள்; ஆடு-எருமை இவற்றின்கண்ணைப்போலும் வேறுபட்டகண்ணாகியுமிருந்தால் விளக்கமில்லாதவளாவள்; இடப்பக்கத்தில் சாய்ந்து பார்த்தால் தோழியாவாள்; வலப்

புறம் (சாய்வு) பொருந்தினால் மலடியாவாள்; துளிக்கின்ற தேனின்நிறம்பொருந்தினால் பெரியசெல்வத்தையடைந்து மிகுந்த கீர்த்திபெறுவாள். எ று. (௬௦)

இமையின் மென்மயிர பருத்தற நேர்ந்திடா தெழிலொடுங் கறுப்பெய்தி
னமையு நற்றிருப் பொன்மையாய்ப் பருத்திடை யிடைவெளி யுறிலாகா
சமர்மு கத்துவிற் போன்றற மென்மையாய்க் கருமைசார்ந் தெழிலாகி
யுமிழ்கதிர்க்கொடிபபுருவமற்றொன்றொடொன்றுறாதெனின்மிகநன்றாம்.

(இ-ள்.) கண்ணிமையில் மெல்லிய மயிர்கள் தடித்து, மிகக்குறுகாமல் அழகுடன் கறுத்திருந்தால் நல்ல செல்வம் பொருந்தும் ; பொன்னிறமாய்க்கனத்து நடுநடுவே விலகியிருந்தால் ஆகாது; போர்முனையிலுள்ள வில்லைப்போல மிக மிருதுவாய்க் கருநிறமுற்று அழகாய்க் கிரணங்கள் பொழியும் கொடிபோலப் புருவங்கள் ஒன்றோடொன்று கூடாதிருந்தால் அதிக நல்லதாம். எ - று. (௬௧)

புருவ மென்மயிர் பருத்துநீண் டிடையிடை யகன்றுபொன் னிறமாகி
விரவி யொன்றொடொன் றுற்றிடி லருந்துயர் மேவுமஞ் செவிநாப்ப
ணுருவ நன்சுழி யிருந்திடி னன்மக வுயிர்த்திடு முதிபயினறி
மருவு பன்மயிர் நரமபெழுந் துயர்ந்துமேல் வளைந்திடிற் றீதாமால்.

(இ-ள்.) புருவத்திலுள்ள மெல்லிய உரோமங்கள் கனத்து நெடிதாகி நடுநடுவே விலகிப்பொன்னிறமாகி (இரண்டு புருவமும்) ஒன்றோடொன்று கலந்திருந்தால் அரிய துன்பமடைவாள்; அழகிய காதின் மத்தியில் அழகிய நல்ல சுழியிருந்தால் நற்புதல்வனைப்பெறுவாள்; தோற்றமின்றிப் பொருந்திய பலமயிர்கள் நரம்புகள் எழுந்து தோன்றி மேனோக்கிவளைந்திருந்தாற் கொடியதாகும். எ - று. ()

நெற்றி மூவிர லகலமாய்ச் சின்மயிர் நெறித்திடு நரம்பின்றிக்
குற்ற மின்றிவெண் பிறையென விருந்திடிற் குலவிய திருவெய்து
முற்ற சொத்திக ரேகைசேர்ந் திடி லவ ளரியள்மன் னவாக்கென்ப
தெற்றி நீணரம் பொடுமயி ரணிந்திடிற் சேர்குவள் பலரோடும்.

(இ-ள்.) நெற்றியானது மூன்றுவிரலகலமாய், சிறிது ரோமங்களும் நெறித்திருக்கும் நரம்புகளுமில்லாமல், குற்றமில்லாது வெள்ளிய பிறைச்சந்திரன் போல விருக்குமாயின் பிரகாசிக்கின்ற செல்வமடையும். பொருந்திய சுவத்திகரேகையிருந்தால் அவள் அரசருக்குரியவளாவாள் என்று (பெரியோர்) சொல்லுவர். நெடிய நரம்புடன் மயிர்கள் தெற்றியிருந்தால் பலருடனுங்கூடுவாள். எ - று.

சொத்திகம்=சுவஸ்திகம் என்னும் வடமொழித்திரிபு. (௬௩)

ஒழுகி வார்ந்தொளிர் சீமந்த ரேகைநன் குற்றிடிற் சிறப்பெய்தும்
பழுதில் சென்னிமே லுயர்ந்தணி வட்டமா யழகுறிற் பலனெய்துங்
கழிய வீங்கிடின் விதவையா நீளுமேற் காமுறும பலர்பாலு
மெழில கன்றற விருந்திடி லியாவரு மிதழ்தர விரப்பாமால்.

(இ-ள்.) வரிசையாக நீண்டிருக்கும் சீமந்தரேகை நன்றாகப் பொருந்தியிருந்தால் சிறப்படைவாள். குற்றமில்லாத சிரசானது மீதுயர்ந்து அழகிய வட்டவடிவாயிருந்தால் பலனடைவாள் ; மிகக்கனத்திருந்தால் விதவையாவாள் ; நீண்டிருக்

தால் பலர் மேலும் இச்சைகொள்வாள்; அழகற்றுநீங்கியிருந்தால் யாவரும் பழிக்கும்படியாக யாசித்துக்கொண்டிருப்பாள். எ - று. (௫௪

கரிய மையினை நூற்றென வளர்ந்துமென் கடைகுழன் றறநேர்கின்
முருகு வாய்மடுத் தளிசிறம் பூத்தற முறைமுறை நெறிபபாகிப்
பெருக னீளுதல குறுகுதல் வளர்கடை பிளந்திட லிவையன்றிப்
பொருவில் மேன்மையாய் நெறித்திடி லளிமலாப பூங்குழ லினிதாமால்.

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கும் மலர்மாலைசூடிய அழகிய கூந்தலானது கருமையானமையைத் தேய்த்ததுபோல வளர்ந்து மிருதுவாகிய கடைகுழைந்து மிகச்சிறுத்திருந்தாலும், தேனுண்ணும்வண்டின் நிறம்விளங்கி வரிசையாக நேராயிருந்தாலும், பெருகல்-நீளுதல் - குறுகுதல்-வளர்கினற முனைபிளவுபடுதல் ஆகிய குற்றங்களற்று, சமானமில்லாத மேம்பாடுடையதாய் நெறித்திருந்தாலும் இனியதாம். எ - று. (௫௫)

கடைபி ளந்திடை வெளிவெளி யாயறக் கடினமாய்க் குழைவின்றி
வடிவ மின்றிமற் றுலறுசெந் நிறத்ததாய் வயங்குபொன னிறமாகிற
கொடிய வெந்துயா கிரப்புறு நெற்றியிற் கொடிநெடும புருவத்தி
னிடையின் வாய்ந்தசெம மறுவுள தாமெனி லெழுகடற் புவிகாக்கும்.

(இ-ள்) முனைபிளவுற்று நடுவே விலகி மிக உரத்ததாய்க் குழைதலற்று அழகில்லாமற் சிலமபுகின்ற செந்நிற முடையதாயும் விளங்குகின்ற பொன்னிற முடையதுமானால் கொடிதாகிய வெவ்விய துனபமிகும். நெற்றியிலே கொடிபோன்ற நீண்ட புருவத்தின மத்தியில பொருந்திய செந்நிறமான மறுவிருக்குமானல் சத்த சமுத்திரஞ் சூழ்ந்த தரணியைரக்ஷிப்பாள். எ - று. (௫௬)

இடப்பு றத்தினற் றழும்புமென் புள்ளிசேப் பெய்திய மறுவுண்டே
லடுக்கு நற்றிரு வலமுலை தனிற்றழும் பணிமறு வுளதாகிற்
கடற்பு விக்கொரு திலகமாம புதலவனவேற் கண்ணிய ரொருநால்வர்
வடததின் மெல்லிலை நலலெழில கவற்றிய வயிறுவாய்த் திடுமென்றே.

(இ-ள்.) இடப்பக்கத்தில் நல்ல வடு - மெல்லியபுள்ளி - செந்நிறமடைந்த மறு இவையிருந்தால் நலல செல்வம்வந்துசேரும்; வலது தனத்தில் வடு அழகிய மறு இவையிருக்குமாயின் கடல் சூழ்ந்த உலகத்துக்கொரு திலதம்போன்றபுத்திரனும், வேல்போலுங்கண்களையுடைய ஒரு நானகுபுத்திரிகளும் ஆலமரத்தின் மெல்லிய இலையினது நல்ல அழகைக்கிரகித்த தனதுவயிற்றிற்பெறுவாள். எ-று. (௫௭)

சேந்த நன்மறு மூக்கினுண் ணுதியிடைச் சேர்ந்திடி லுலகாளும்
வேந்தர் நன்மனைக கிழததியாக் கலவது மேவுறு முன்சொன்ன
காந்து நன்மறுக் கறுபபெனிற் றுயரொடுங் கைம்மையா மல்தென்னிற்
றேய்ந்த கேள்வரைப் பிழைத்தலர் தூற்றிட வேதிலா ரொடுந்தோயும்.

(இ-ள்.) மூக்கினுள்ளே முனையிற்சிவந்த நல்ல மறு பொருந்தியிருந்தால் பூமியை அரசுசெய்வாள்; மன்னவரது பட்டஸ்திரீகளுக்கல்லாமல் முன்சொல்லிய (மறு வடு முதலிய) வைகள் இருக்கமாட்டா; பிரகாசிக்கின்ற நல்ல மறு கறுத்

திருந்தால் துன்பத்துடனே விதவையாவாள் ; அவவாறல்லாவிடின் தன்னைக்கல ந்த கணவனைக்குற்றஞ்செய்து அலர்தூற்றும்படி அன்னியருடன் கலப்பாள்.

இடப்பு றத்தவாங் கைதனிற் கழுத்தினி விருசெவி தனிலேற்ற
கொடிற்றி னன்மறு வுடைத்தெனின் முன்னாநற் குமரனைப் பெறுகிற்பா
ளடிப்பு றத்தின்மே லெழிறிக ழூதிபி னளவுமெட் கொசுகேய்ப்ப
வடுத்த யங்கிடி னல்குர வுழந்துபின் வான்றுயர்க் கடல்வீழும.

(இ-ள்.) இடப்புறததி லுள்ளதாகிய கையிலும் கழுத்திலும், இரண்டுகாது களிலும் பொருந்திய கதுப்பிலும் மறுவிருக்குமாயின் முதலிலே நல்ல புதல்வனைப் பெறுவாள் ; புறங்காலின் மேலே அழகு விளங்கும் கொப்பூழ் வரையிலும எள் கொசுகு இவைபோல வடுக்கள்விளஙகினுல் தரித்திரமனுபவித்துப் பிறகு மிகுந்த துன்பககடலி லாழ்வாள். எ - று. (௫௯)

நுதலின் முத்தலைப் படைகிகா வரையுறி னுழைநுசுப் பகலல்குன்
மதர்வை நோக்கிய ராயிரா வழிபட மலாமக ளெனவைகு
மதும லாக்கையின் மார்பினி லுந்தியில வலஞ்சுழி யுறினன்று
முதுகி னல்வலஞ் சுழிவலப் புறததுறின் மொழிவாரன் கெனமாதோ.

(இ-ள்.) நெற்றியில் சூலாயுதமபோல ரேகையிருந்தால் நூலிழைபோன்ற இடையையும் பரந்த அல்குலையுமுடைய மதர்த்த கூர்மையாகிய கண்களையுடைய மாதர்கள் ஆயிரக்கணக்கிற்பணி செய்யத்திருமகள்போல வாழ்வாள் ; தேன்சொரியும் தாமரைமலர்போன்ற கையிலும் மார்பிலும் கொப்பூழிலும் நல்ல வலஞ்சுழியிருந்தால் நல்லதாம் ; முதுகின் வலதுபக்கத்தில் வலஞ்சுழியிருந்தால் நல்லதென்று சொல்லுவர் (பெரியோர்.) எ - று. (௬௦)

பிற்பு றத்தினில் வலஞ்சுழி யிரண்டுறிற் பெருகுமா யுளுநாளு
மற்பின் மீக்குயர் மக்களுங் கோடீய ரல்குலி னடிப்பாட்டிற்
பொற்பி னல்வலஞ் சுழியுறி னரசரிற் கிழத்தியாம புகலாங்க
ணுற்ற பாண்டிலஞ் சுழியுறி னுயுளு மைந்தரு முளவாமால்.

(இ-ள்.) பின்பக்கத்தில் இரண்டு வலஞ்சுழிகளிருந்தால் வாழ்நாளும், அன்பின்மேம்பட்டு விளங்கும் மக்களும் அதிகமாம்; வரம்புயர்ந்த அல்குலின் அடிப்பக்கத்தில் அழகிய நல்ல வலஞ்சுழியிருந்தால் அரசருக்கு மனைவியாவாள் ; சொல்லிய அவவிடத்தில் அழகிய பாண்டில்சுழி பொருந்தியிருப்பின் தீர்க்காயுவும் குழந்தைகளும் உண்டாகும். எ - று. (௬௧)

கடிதொ டங்கியேந் தல்குன்மட் டொருசுழி கிடந்திடிற் கணவன்சேய்
முடிவர் மென்கடி முதல்வயிற் றளவினு மொழிந்தநீள் சுழிமேவி
னுடைய காதல னிறந்திடு மாயிடைச் சுழியிரண் டுறுமாயின்
வடுவில் கன்னியங் கற்பழிந் தலர்புனை வம்பலர்க் கிடனுகும்.

(இ-ள்.) கடிதடமுதல் உயர்ந்தஅல்குல்வரையில் ஒரு சுழியிருப்பின் நாயகனும் மக்களும் இறப்பர் ; மெல்லிய கடிதடமுதல் வயிறுவரையில் சொல்லிய (அத்தகைய) நீண்டசுழியிருக்கின் தன்னையுடைய புருடனிறப்பான் ; அவவிடத்

திற் சுழிகள் இரண்டிருந்தால் பழிப்பில்லாத கெடாத அழகிய கற்பழிந்து அலர் தூற்றும் அயலோருக்கு இடமாவாள். எ - று. (௬௨)

கண்ணின் மென்சுழி யுடைத்தெனிற் கைமமையா மன்றெனிற் கற்பேகு
நண்ணு மூக்கினிற சுழியுறிற் கற்புறு நலங்கெழு செவிமீதில்
வண்ண வாருகுழல் வகிர்ச்சியில் வலஞ்சுழி வதியினு யகனுவி
யுண்ணு முச்சியி லொருசுழி யிருசுழி யுற்றிடிற் கலனபோக்கும்.

(இ - ள்.) கண்ணில மெல்லிய சுழியிருநதால் விதவையாவாள்; அல்லா விடின் கற்பழிவாள்; பொருந்திய மூக்கிற் சுழியிருந்தால் கற்படைவாள்; நன்மை மிருந்த காதின்மேலும அழகிய நீண்டகூந்தல் வகிவிலும் வலஞ்சுழி யிருந்தால் கணவனுயிரைக்குடிப்பாள்; உச்சியிலே ஒருசுழியாவது இரண்டு சுழியாவது பொருந்தினுல் மஙகல்யமிழப்பாள். எ - று. (௬௩)

நெற்றி மேல்வலஞ் சுழியுறி னவடனை நீக்குதல் குணனுகு
முற்று மென்சுழி வலமிட மாய்ப்பிட ரெய்திடி னோராண்டிற்
பெற்ற வின்னுயிர்க் கேள்வனை யிழந்திடும் பெட்பொடுந் துயில்போது
பற்க றித்திடிற் பலபல விலக்கணம பயினினுங் கொளலாகா.

(இ-ள்.) நெற்றியின்மேல் வலஞ்சுழியிருந்தால் அவளைநீக்கிவிடுவது நன்மையாகும்; பொருந்திய மெல்லிய சுழிகள் வலமாகவும் இடமாகவும் கழுத்திற்பொருந்தினுல் ஒருவருடத்தில் (தன்னைமணஞ்செய்யப்) பெற்ற இனிய உயிர்க்குச் சமானமான புருஷனையிழப்பாள்; அழகுடன் நித்திரைசெய்கையிற் பல்லைக்கடித்தால் பலவகையான உத்தமலக்ஷணங்களையுடையவளானுலும் மணஞ்செய்தல் கூடாது.

அரையின் மென்சுழி யுடையளேற் கன்னியங் கற்பினுக் கயலாவா, ளுரைசெய் நூன்முறை யிலக்கண மனைத்தையு மொருங்குவாய்ந் தன ளேனும், பொருவி னற்குணம் பொருந்துதல் வேண்டுமென் பூங்குழல் படைவாட்கண், டிருவ னூர்கட லிலக்கண முரைத்தன மணவினை தெரிகிற்பாம்.

(இ-ள்.) அரையிலே மெல்லிய சுழியையுடையவளாயின் கெடாத அழகமைந்த கற்புக்கு அன்னியமாவாள்; சொல்லுகின்ற சாமுத்திரிக நூலிற் கூறிய முறையே நல்லிலக்ஷண மெல்லாம் பொருந்தியவளானுலும் சமானமில்லாத நற்குணமமைதல் வேண்டும் (இதுவரையில்) மெல்லிய மலர்சூடிய கூந்தலையும் வாட்படைபோலுங்கண்களையும் பொருந்திய திருமகளையொத்த மாதரது இலக்கணங்களைச் சொன்னோம் (இனி) விவாகமுறையைத் தெரியச்சொல்லுவோம். எ - று.

மகளி ரிலக்கண முரைத்த அ - ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௪௦௫௮.

உ

சிவமயம்.

முப்பத்தெட்டாவது

## ஆசாரங் கூறிய அத்தியாயம்.

பிரமநற் றெய்வ மாரிடம் பிரசா பத்திய மாசுரம் பெட்பின்
மருவுகாந் தருவ மிராக்கதம் பசாச மெனமண மெட்டுள வவற்றுட்
கருதுமுற் பிரம மொருவனை யழைத்துக் கலனொடுங் கன்னியை யளித்த
லருளுமத் தெரிவை பயந்தசேய் மூவேழ் குலமுநற் கதியுற வளிக்கும.

(இ-ள்.) பிரமமணம் - நல்ல தெய்வமணம் - ஆரிடமணம் - பிரசாபத்திய மணம் - அசுரமணம் - நிந்தையில்லாமற்பொருந்தியகாந்தருவமணம் - இராக்கதமணம்-பசாசமணம் என்று மணங்களெட்டுவகையாகவுள்ளன. அவற்றில் நினைக்கின்ற முற்பட்டதாகிய பிரமமணமாவது ஒருவனை விளித்து ஆபரணங்களுடன் தனது கன்னிகையை மணஞ்செய்து கொடுத்தலாம்; அவவாறு கொடுத்த பெண் பெற்றபிள்ளை மூவேழுதலைமுறையும் நற்கதியையடையச்செய்வான். எ - று. (க)

மகவினை விதியி னூற்றுவித் தோர்க்கு மகட்கொடுத் தருளுதல் தெய்வம், புகலுமாங் கவள்சே யீரொழு மரபும் பொருவருங் கதியிடைப் புகுத்துந், தகைவினை னிரண்டு பகர்பொருள் கவர்ந்து தன்மகட் கொடுத்தலா ரிடமா, முகிழ்முலைப் புதல்வன் மூவிரு குலனு முறையினிற் கதியினுய்த் திடுமால்.

(இ-ள்.) தெய்வமணமாவது யாககருமங்களை முறையுடன் செய்வித்தவர்களுக்குப் பெண்ணைக்கொடுத்தருளுதலாம்; சொல்லுகின்ற அவளது புதல்வன் ஈரேழுதலைமுறையும் சமானமற்ற நற்கதியிற்சேர்ப்பான். ஆரிடமணமாவது தளர்ச்சியில்லாத இரண்டு பசுக்களும் சொல்லும்பொருளும் பெற்றுத்தன்மகளைக் கொடுத்தலாம்; அரும்பியமுலையையுடைய அப்பெண்பெற்றபுதல்வன் ஆறுதலைமுறையையும் கிரமத்துடனே மோட்சத்தில் விடுவான். எ - று. (உ)

அற்பொடு பிரசா பத்தியங் கேட்போர்க் கரிவையைப் பொருள்கொளா தளித்தல், கற்புடை யவள்சேய் மூவிரு குலனுங் கருதுநற் கதியிடைப் போக்குஞ், சொற்றவிக் கான்கு மறையவர்க் குரிய தொகுபொருள் விழைவொடுங் கவர்ந்து, பொற்றொடி நெடுங்கட் கன்னியை யளித்தலசுர மாமெனப் புகல்வார்.

(இ-ள்.) பிரசாபத்திய மணமாவது அன்புடனே பெண்ணைக்கேட்க வந்தவர்களுக்குப் (பரியமுதலிய)பொருள்பெறாதுகொடுத்தலாம்; கற்புடைய அம்மங்கைமகன் மூவிரண்டு தலைமுறைகளையும் விரும்பத்தக்க மோக்ஷத்திற் கனுப்புவான். மேற்சொல்லிய இந்த நால்வகைமணங்களும் வேதியருக்குத் தகுந்தனவாம். அசுரமணமாவது மிக்கபொருளை ஆசையுடனேபெற்றுப் பொன்னாலாகியவளையலை

*பணித்த நெடியகண்களையுடைய குமாரத்தியைக்கொடுத்தலாகுமென று (நூல்வல்லோர்) கூறுவர். எ - று. (௩)

கன்னியுங் காதற் குமரனுந் தம்மிற கலத்தல்காந் தருவமராக் கதந்தான், வன்மையிற் பற்றிக் கன்னியைக் கோடல வகுத்தவிம் மூன்றுமன்னவர்க்கா, முன்னரும் களவிற் களிபபினிற் றுயிலில முகிழ்முலைக் கன்னியைக் கலத்த, வின்னல்கூர் பசாச மணமிஃ தலகி லிகழ்ந்திடு மணமென விசைப்பார்.

(இ ள்.) காந்தருவமணமாவது பெண்ணும் ஆசையுடைய நாயகனும் தமக்குள்ளேயேசம்மதித்துச்சேருதலாம். இராக்கதமணமாவது பெண்ணைப்பலாத்காரமாகப் பிடித்துக் கைக்கொள்ளுதலாம். சொல்லிய இம்மூவகைமணமும் அரசருக்குத்தகுந்தனவாம். துன்பமிகுந்த பிசாசமணமாவது நினைத்தற்கரிய திருட்டினும் சந்தோஷத்திலும் நித்திரையிலும் அரும்பியமுலையையுடைய மடந்தையைக் கூடுதலாகும். இம்மணம் உலகத்துள்ளோர் யாவரும் தாழ்த்திச்சொல்லும் மணமென்று பெரியோர் சொல்லுவார்கள். எ - று. (௪)

மறையவர் முதல நால்வரூந தத்த மரபினிற் கன்னியை மணப்பி
னிறைமது துளிக்குங் காந்தளஞ் செங்கை பற்றுத னெறியதா மறையோ
ரறைகழ லரசர் கன்னியை வேட்பி னம்புகை பிடிக்கவே தியரு [பாம்.
மிறைவரும் வணிகர் மகளிரை மணப்பி னுழவுகோல் பிடித்திட வியல்

(இ-ள்.) வேதியர்முதலான நான்குவருணத்தவரும் தங்கடங்களது வமிசத்திலேஜனித்த கன்னிகைகளை விவாகஞ்செய்தால் மிகுந்த தேன்சொரியும் காந்தள்மலர்போலும் அழகிய சிவந்தகைகளைப்பிடித்தல் முறையாகும். அந்தணா ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த க்ஷத்திரியப்பெண்ணைமணந்தால் (கணவனும் மனைவியும் ஒவ்வொரு முனையாக) அம்பைக் கைபிடிக்கக்கடவர். அந்தணரும அரசரும் வைசியப்பெண்ணைவதுவைசெய்தால் உழவுகோல் பற்றுதல் இயற்கையாம். எ-று.

வேதியர் முதல மூவர்வே ளாளர் கன்னியை விதிமுறை வேட்பின்
மாதர்மென் றுகிலின் மென்றலை பிடித்தல் மறைநெறி வழக்கென வுரைப்
நீதியின் வழாத மணத்தினில் வேட்ட நேரிழை நன்மக வுயிர்க்குந் [பா
தீதுறு மணத்தின் வேட்டவ டது பயக்குறு சிறுவனை யுயிர்ப்பாள்.

(இ-ள்.) பிராமணர் முதலாகிய மூவரும் வேளாளர் குலத்திற்றோன்றிய குமரியைவிதிப்படி விவாகஞ்செய்தால் அழகிய மெல்லிய வஸ்திரத்தின் மிருதுவான முன்றுனையைக்கையாற்பற்றல் வேதத்திற்கூறிய கிரமமாகும் என று சொல்லுவர். நியாயவழியில்தவறாத மணத்தாற்கலந்த மனைவி சற்புத்திரனைப்பெறுவாள் கொடுமைபொருந்திய மணத்தாற்கலந்தவள் தீமைசெய்தல் பொருந்திய துர்ப்புத்திரனைப்பெறுவாள். எ - று. (௬)

பூத்துநீ ராடு நாள்முத லூலோர் புகன்றநாள் புணர்வது விதியாம்
வாய்த்தநற் கருப்ப மெய்திய ஞான்றும் புரந்தரன் மகளிருக் களித்த

வேற்றரும்வரத்தாற்புணாதலாமிறந்தோர்க்கிருங்கடன்கழிப்பியஞான்று
நீத்தநற் பகலும் பருவமோ டைந்தும புணாநதிடி னிரயமெய் துவரால்.

(இ-ள்.) மாதவிடாயாகி ஸ்நானஞ்செயயும் தினமுதலாக நூல்வல்லோர் சொல்லிய (பன்னிரண்டு) நாள்களில (மனைவியைக்) கலத்தல் வேதவிதியாகும். பொருந்திய நல்ல கருப்படமடைந்த காலததும் பெணகளுக்குத் தேவேந்திரன கொடுதத பெறுதற்கருமையாகிய வரததால் புணர்தல் நியாயமாகும். பிதுராகளுக்குப் பெருமைதஙகிய சிராாததமுதலிய கடன்கழிக்கும் நாட்களிலும், விலக்கப்பட்ட தினஙகளிலும் பஞ்சபருவஙகளிலும் சோநதால் நரக மடைவார்கள். எ று.

புரந்தரன் மகளிருக்களித்த வரமாவது.

இந்திரன் தனது குருவாகிய பிரகஸ்பதி முனிவனைக்காணுமெல்லையும் பிரமன் சூழ்ச்சியால துவஷ்டா எனபவன பெற்றபுதல்வனாகிய முச்சிரங்களையுடைய திரிசிரனாகியவிச்சுவவுருவன்என்னுமசுரனைக குருவாகக்கொண்டனன். இந்திரன் விச்சுவவுருவனைநோக்கி "தேவர் செல்வமிகும்படி ஒருயாகம்செய்க" என, விச்சுவவுருவன் "நல்லது" என்று சொல்லி, தேவர் செல்வங்குறைந்து அசுரர் செல்வமிகததக்க ஓர்யாகஞ்செய்தலை இந்திரன் அவன் சொல்லும் மநதிரத்தா லுணர்ந்து தன்கையிலிருந்த வச்சிராயுதத்தால் அவனது மூன்றுசிரங்களையும் வெட்டித் தள்ள, அவற்றுட்சோமபானஞ்செய்யுமுகம் காடையும், சுராபானஞ்செய்யுமுகம் ஊர்க்குருவியும், அன்னபானஞ்செய்யுமுகம் சிச்சிலியாகவும் பறந்தன. உடனே இந்திரனைப் பிரமகத்திபிடிக்கக்கண்ட தேவர்கள், மரம்-மண்-பெண்கள்-நீர் ஆகிய இவர்களிடத்திற்பாகித்துக்கொடுக்க, அந்நால்வரும் "இப்பிரமகததியைப் போக்கும்வகையாது?" என, தேவர்கள் "நீரில் நுரையாகியும், மண்ணில் உவராகியும், பெண்களிடத்திற் பூப்பாகியும், மரத்தில் பிசினியாகியுங் கழியக்கடவன" என, நால்வரும் "இப்பழியேற்ற எங்கட்கு எனனபலனவரும்?" என, தேவர்கள் "கருவுற்ற பெண்கள் பிரசவிக்குமெல்லையும் கணவன்தோளைச்சேரக்கடவர்; மண்ணை யெடுத்தகுழி அம்மண்ணாலேயே வடுவொழியக்கடவது; நீர் இறைக்குந்தோறும் ஊற்றெடுத்துப்பெருகுக; மரம் வெட்டப்படினும் தழையக்கடவது" என்று நீங்காத பலனையருளினர். அதனால் இந்திரன் பிரமகத்தி நீங்கினன் என்பது. இதனை,

திருவிளையாடற் புராணம.

"அப்பிடை நுரையாய் மண்ணி லருவருப் புவரா யம்பொற்
செப்பிளங் கொங்கை யார்பாற் றீண்டுதற் கரிய பூப்பாய்க்
கப்பிணர் மரததிற் காலும் பயினதாய்க் கழிக வெனறூர்
இப்பழி சுமந்த வெஙகட் கென்னல மெனறூர் பின்னும்.

கருவின் மாதர் கருவுயிர்க்கு மளவு முறையாற் கணவர்தோள்
மருவி வாழ்க மண்ணகழ்ந்த குழியு மதனால் வடுவொழிக
பொருவி னீரு மிறைதோறு மூறிப் பொலிக மரங்குறைபட்
டொருவி னுஞ் தழைகவென வொழியா நலனு முதவினர்."-

னும், இச்சரிதத்தொடர்ச்சியை ௫௩-வது பக்கத்தானுமுணர்க.

விதித்தநாட் களினுந் தம்மனை யலது பிறர்நலம் விழைந்திட லாகா
மதுக்குழன் மகளிர் பூத்தநாள் கழிப்பின் மற்றவீ ராறுநாட் களினு[ப்பிற்
முதித்திடும் புதல்வ னிரட்டையா நாளி னொற்றைநா ளிவைகளின் மண
புதுத்தளி ரழகு கவற்றுமா மேனிப் புதல்வியை யினிதினிற் பெறுவார்.

(இ-ள்.) (மாதர்முயக்கத்துக்கு) நூல்களில் விதித்துள்ள தினங்களினும் தமது மனைவியையல்லாமல் அன்னியர் சுகத்தை விரும்புதல் கூடாது. தேன் சிந்துங் கூந்தலையுடைய மங்கையர் மாதவிடாயான தினங்கள் சென்றால் அதற்கு மேல் பன்னிரண்டுநாட்களிலும் இரட்டையான நாள்களில் புணர்ந்தால் ஆண்குழந்தைகருப்பமடையும். ஒற்றையான நாட்களிற் கலந்தால் இளமைதங்கிய மாந்தளிரின் அழகையுடைய சிறந்த வடிவமைந்த பெண்குழந்தையைக் கருவுற்றுப் பெறுவார்கள். எ-று. (அ)

மூலமு மகமு முயங்குத லாகா மொய்கதிர்த் திங்களங் கடவுள்,
சாலநன குறுநாள் புருடனுண் மணப்பிற் றகைமைசா னன்மகவுயிர்க்கும்,
வேல்புரை தடங்கட் கன்னியைப் பொருள்கொண் டளித்தவன் மலப்பு
ழு விழுங்கி, யோலோடும் வெருவ மறலிதன் றூத ருரப்பவெந் நரகிடை
யுழப்பான்.

(இ-ள்.) மூலம்–மகம் ஆகிய நட்சத்திரங்களிற் சேருதல் கூடாது. நெருங்கிய கிரணங்களையுடைய அழகிய சந்திரபகவான் மிகுந்த கிரணங்களோடுகூடிய தினத்திலும் புருஷ நாளிலும் கூடினால் பெருமைமிகுந்த நற்புத்திரனைப் பெறுவாள். வேல்போன்ற பரந்த கண்ணையுடைய பெண்ணைப்பொருள் பெற்றுக்கொடுப்போன் மலத்திற்றோன்றிய கிருமியைப்புசித்து வருத்தத்துடனே பயப்பட இயமதூதர்கள் வலியுறுத்தும்படி கொடிய நரகத்தில் துன்பமனுபவிப்பான். எ-று.

வேட்டகந் தன்னிற் பொருள்கவர்ந் துண்டோர் வீழ்கலா நரகிடை
வீழ்வர், கோட்டமில் குணத்துக் கொழுநனு முள்ளக் குறிப்புணர்ந் தினி
யன செய்யும், வாட்டமின் முல்லை மனைவியு முறையு மில்லினு மினிது
கொல் மகிழ்ந்து, பாட்டளி துதையும் பசுந்துழா யலங்கற் பங்கயச் செ
ங்கண னுலகே.

(இ-ள்.) மாமன்வீட்டிலுள்ள பொருளைப்பெற்று அதனால் ஜீவனஞ்செய்வோர் வீழுதற்கரிய நரகத்தில் வீழ்வார்கள். கோணுதலில்லாத நற்குணமுடைய நாயகனும் மனக்குறிப்பறிந்து அவன் விரும்பியவற்றைச் செய்கின்ற குறைவில்லாத கற்பையுடைய நாயகியும் வாழ்கின்ற வீட்டைப்பார்க்கிலும், சந்தோஷித்துப் பண்பாடுகின்ற வண்டுகள்மொய்க்கும் பசிய துளவமாலையணிந்த செந்தாமரைக்கண்ணராகிய விஷ்ணுமூர்த்தியின் வைகுந்தபதவியும் இனிதாகுமோ? இனிதாகாது.

வாணிகம் புரியின் வாட்படை தாங்கி மன்னர்பா லிருநிதி கவரின்
வேணவா வோடும் விதித்திடா மணத்தில் வருமுலைக் கன்னியை வேட்பி
ஞணினற் பொருள்சே ரருமறை பயிலா நல்லசெய் தொழுகுநற் கருமங்
காணவாய்ப் புரியா தொழிந்திடிற் பதித ராகுவர் கலைமறை யவரோ.

(இ-ள்.) வேதங்களையுணரும் அந்தணர் வர்த்தகஞ்செய்தாலும், வாளாயுத மேந்தி அரசரிடத்தில் (இராணுவச்சேவகஞ்செய்து) பெரும்பொருள் தேடினாலும், ஆசைப்பெருக்கத்தால் தங்களுக்கு விலக்குள்ள விவாகத்தில் வளர்கின்ற தனங்களையுடைய பெண்ணை மணஞ்செய்தாலும், நல்லபொருள்கள் சேர்ந்துள்ள அரிய வேதாத்தியயனஞ்செய்யாத நன்மையையுண்டுபண்ணும் நற்காரியங்களைப் பிறர் காணும்படி செய்யாதொழிந்தாலும் வெட்கமில்லாதவருணச்சிரமதருமங்களை விட்டவராவார்கள். எ - று.

வேணவா=ஆசைப்பெருக்கம். (௬௧)

அரைப்பதா லழலி லிந்தனங் கொளுவி யவேதாற் றூர்ப்பதாற் குடத்திற், குரைப்புன னுளுங் கொணர்வதாற் கூன்வா யிரும்பினாற் கறிகுறைப் பதனு, னிரைத்திடும் பாவ மனைத்தையு நீக்கும் பஞ்சமா வெச்சமென் பதனு, லுரைத்தவவ் வேள்வி நாடொறும் விதியி னொழிவுறா தாற்றுத லியல்பே.

(இ-ள்.) அரைப்பதாலும், நெருப்பில் விறகுகளைச்சுட்டு எரித்தலாலும், தூர்த்தலாலும், பாத்திரத்திலே சத்திக்கின்ற நீரை எப்பொழுதும் முகத்தலாலும், வளைந்தவாயையுடைய அரிவாளால் கறிபதார்த்தங்களை வெட்டுவதாலும் உண்டாகிய மிகுபாவங்களையெல்லாம் சிறந்த பஞ்சவேள்விகள்நீக்கும் என்று (நீதிநூல்கள்) கூறுவதனால் சொல்லிய அவ் யாகங்களைத்தினந்தோறும் முறையுடனே நீங்காமற் செய்வது இயற்கையாகும். எ - று.

பஞ்சமாவெச்சம் என்பது மேற்செய்யுளில் விளங்கும். (௬௨)

சதுர்மறை பகர்தல் பிரமநன் மகமாந் தருப்பணம் பிதிர்மக மாகும்
விதிமுறை யோம மியற்றுத றெய்வ வெச்சமாம் விளம்புநற் பலிக
ளுதவுதல் பூத வெச்சமா முள்ள முவந்துதன் பாவினி தடைந்த
வதிதியர்க் களித்தன் மானுட வெச்ச மாகவைந் தெச்சமென் றறைவார்.

(இ-ள்.) நான்கு வேதங்களையும் அத்தியயனஞ்செய்தல் நல்ல பிரமயாகமாம். தருப்பணஞ்செய்தல் பிதுர்யாகமாம். விதிக்கிரமமாகஹோமம் (முதலிய அக்கினி காரியம்) செய்தல் தெய்வயாகமாம். சொல்லுகின்ற நல்லபலிகளையிடுதல் பூதயாகமாம். மனங்களித்துத்தன்னிடத்துக்கு இனிதாகவந்த அதிதிகளுக்கு (பிச்சைமுதலியன) உதவுதல் மானுஷயாகமாம் ஆக இவையே பஞ்சயாகங்களென்று (நூல் வல்லோர்) சொல்லுவர். எ - று. (௬௩)

பாலினிற் சோற்றிற் கிழங்கின்மென் புனலிற் பழத்தினிற் பண்ணலாஞ் சிரார்த்தஞ், சாலுநன் மனையி லதிதிவந் தெய்திற் றயாவினால் முகமனே டெதிரி, யேலநற் பூசை யவற்களித் திலனே லுடொறு மவனியற் றியதோர், சீலநற் றருமம் யாவையுங் கவர்ந்து செல்குவ னெனமறை தெரிக்கும்.

(இ-ள்.) பாலிலும் சோற்றிலும் கிழங்கிலும் மெல்லிய நீரிலும் பழத்திலும் சிரார்த்தம் (பிதுர்களுக்கு) செய்யலாம். பெருமை மிகுந்த தனது நல்லவீட்டில்

அதிதியொருவன் வந்தடைந்தால் தயவாய் உபசாரவார்த்தையுடனெதிர்சென்று அவனுக்கு மிருந்த நற்பூசைசெய்யாவிடில் தினந்தோறும் தான் செய்த ஒப்பற்ற ஆசாரம் நல்லதருமம் ஆகிய இவற்றின நல்லபலனையெல்லாம் கைப்பற்றிப் போவான் என்று வேதங்கள் உணர்த்துகின்றன. எ - று. (௧௪)

பசிபிடை யதிதி வரினவற் கடிசி லளித்தலாற் பலியிட லாகா,மெ
லிவுறு நோயா சிறுவர்சூன மகளிர் வேட்டோன் மனையினின் றெய்து,
மலைவறு குணத்துத் தனமக ளிவர்கட கடிசிலமுன் வழங்கிய பின்னுங்,
கலைவலார் போந்த வதிதியர்க் கடிசி லளிப்பது விதியெனக் கரைந்தார்.

(இ - ள்) நூற்கேள்விகளில் வல்லவர் பலியிடுகையில் அதிதியொருவன் வந்தால் அவனுக்கு அன்னமிட்டல்லாமல் பலியிடல்கூடாது. வருந்துகின்ற பிணியாளர்-பிள்ளைகள்-கருப்பமுள்ளபெண்கள்-கணவன்வீட்டிலிருந்துவந்த குற்றமற்ற குணத்தையுடைய குமாரத்திகள் ஆகிய இவர்களுக்குப் போசனம் முன்னே இட்டபிறகும் வந்த அதிதிகளுக்கு அன்னங்கொடுத்தல் முறை என்று (பெரியோர்) சொன்னார்கள். எ - று. (௧௫)

தேவர்தென் புலத்தோர் துறந்தவர்க் களித்த சேடநல் லமுதினு
மினிதாம, யாவரோ யெனினு மதிதிய ரிறந்தோ ரிமையவ ரீங்கிவர்க் கன
றிக், கூவலபோ லாழ்ந்த பாழ்வயி றதனிற கொட்டுதற் கமைததவெண்
சோறு, நாவுறை புழுவா மெனமறை யனைத்து நவின்றிடு மென்பர்நன்
குணர்ந்தோர்.

(இ - ள்.) தேவர் - பிதுரர் - துறவிகளாகிய இவர்கட்குப்படைத்தஉணவில் நின்ற மிச்சமானது நல்ல அமிர்தத்தினும் இனிதாகும். எத்தகையினராயினும் அதிதிகள்-பிதுர்க்கள் - தேவர்களாகிய இவர்கட்கு உதவுதற்கு அல்லாமல் கிணறு போலாழ்ந்ததாகிய பாழ்வயிற்றினுட் கொட்டும்படிக்குச் சமைத்த வெண்மை தங்கிய சோறானது நாவில்வசிக்கும் புழுவாகும் என்று வேதங்களெல்லாம் முறையிடும் என நன்றாகக் கற்றோர் சொல்லுவர். எ - று. (௧௬)

அந்தண ரரசர் வணிகர்நண் பகலு மந்தியும் வயிச்சுவ தேவஞ்
சிந்தைசெய் தியற்று றொனிலவ ரொழுக்கந் திறம்பலாற் பின்னவ ராகி
வெந்துய ருழந்து வரும்பிறப பதனிற் காக்கையாய் மெலிகுவர் விதித்த
விந்நற் கருமம் வழுவுறு தியற்றி னிமையவ ருலகில்வீற் றிருப்பார்.

(இ - ள்) பிராமணர் - க்ஷத்திரியர் - வைசியர் (ஆகிய மூன்று வருணத்தவரும்) நடுப்பகலிலும் சாயுங்காலத்திலும் கவனத்துடனே வயிச்சுவதேவம் செய்யாமற் போவாராகில் அவர்கள் நடக்கை தவறுவதனால் பின் வருணத்தவராய்க் கொடிய துன்பங்களை யனுபவித்து மறு பிறவியில் காக்கையாய் ஜனித்துவருந்துவர். விதிக்கப்பட்டுள்ள இந்த நற்காரியத்தைத் தவறுதல் வராமற் செய்தால் தேவருலகத்தில் (பிறவியடைந்து) வாழ்ந்திருப்பார்கள். எ-று.

வயிச்சுவதேவம் என்பது முன் விளக்கப்பட்டுள்ளது. (௧௭)

அட்டமி யாறுந் திதிபதி ஞன்கோ டள்ளிருள் பரப்பிய வுவாவின், விட்டிட வேண்டு மெண்ணெயும விதித்த மெனறசைப் புழுக்கலு மிவற்றின், மட்டவிழ் குஞ்சி முதலடி யிறுய் மயிர்வினை முடித்திட லாகா, தொட்டமேற் றென்றைக் கிள்ளினு நூலோர் தோமுறு மெனப்புகன் றனரால்.

(இ-ள்.) அஷ்டமி - சஷ்டி - சதுர்த்தசி - சேருடைய இருளைப் பரவச் செய்யும் அமாவாசை ஆகிய இத்திதிகளில் எண்ணெயிட்டுத்தலைமுழுகலையும், சொல்லப்பட்ட மெல்லிய மாமிசத்துடன் கூடிய உணவுகொள்ளுதலையும் ஒழித்துவிடவேண்டும். இத் திதிகளில வாசனைவீசும் சிகைமுதல பாதம்வரையும க்ஷெளரம் செய்துகொள்ளக்கூடாது (ஏனெனில) இத்தினங்களில வேறொன்றைக்கையாற் றொட்டுக் கிள்ளினும் குற்றம்வருமென்று (பெரியோர்) சொல்லினர். எ-று.

காலையின் மாலைப் போதின்வா ளரவங் கவ்விய பொழுதினீ ரிடையின் ஞாலநீ டிருள்சீத் தெழுகதிர் பார்க்கி னவைபுறு தனனிழல் புனலுட் சால்புற நோக்கல் துகிலபுனை யாது தணபுனல் படிதலான் கன்றை[ தாம். மா லுறக் கடத்தல் பொய்மமொழி பகர்தல மனததிடை நினைப்பினுந் தீ

(இ-ள்.) காலையிலும் மாலையிலும், ஒளிதங்கிய (இராகு கேதுவென்னும்) சர்ப்பங்கள் (சூரிய சந்திரர்களை) ப்பற்றிய (கிரகண) காலங்களிலும், சலத்திலும், உலகத்தில் மிகுந்திருக்கும் இருளை யொழிக்கின்ற சூரிய சந்திரர்களைப் பார்த்தால் தோஷம்வரும். தனது சாயலைச் சலத்தில் கிதானித்துக் காணுதல்-வஸ்திர மணியாமல் குளிர்ந்த தண்ணீரிலே மூழ்கல் - பசுவின்கன்றை ஆசையால் தாண்டிச் செல்லல் - பொய்ச்சொல் கூறுதல் ஆகிய இக்கருமங்களை மனதிற் கருதினும் குற்றமாம். எ-று. (௧௯)

இலங்குறற் கோயி லந்தணர் துறந்தோ ரிருநில வேந்தர்சொற் கவிஞ, ரலங்குநீர்க் கும்ப மையவி தயிர்நெய் யடிசிலான் மரபினி லுயர்ந்தோர், நலங்கெழு சதுக்கத் தயர்மர னரசு நன்னெறி யெதிர்ப்படி னவற்றை, வலங்கொடு போத னெறியென மறைநூல் வல்லவர் வகுத்துரைத் தனரால்.

(இ-ள்.) விளங்குகின்ற நல்ல தேவாலயம் - வேதியர் - துறவிகள் - பெரிய பூமியைக் காக்கும் அரசர் - சொற்றிறமுடைய புலவர் - அசைகின்ற நீர்க்குடம் - கடுகு தயிர் நெய் இவைகூடியுள்ள சாதம்-பசு-குலத்தாற் பெரியோர்-நன்மைமிகுந்த நாற்சந்தியிலுள்ள உயர்வாகிய அரசமரம் - ஆகிய இவை போகின்ற நல்லவழியில் எதிர்நேர்ந்தால் அவற்றைப் பிரதக்ஷணஞ்செய்து செல்லுதல் முறைமையென்று வேதநூலின் தேர்ந்தவர்கள் எடுத்துச் சொல்லினர். எ-று.

சதுக்கம்=நான்கு தெருக்கள் கலக்குமிடம். (௨௦)

மனைவியோ டடிசி றுப்த்திட லாகா மற்றவ ளயில்வுழி நோக்கிற் புனையிழை யறனில் மைந்தனை யுயிர்க்கும் பூத்தவ டனைத்தொட லாகா கனவினு மாகா வூன்றினல் மகத்தி னலலதை யருந்துபொற் கலத்தி னினியுயர் தவிசில வதிந்தினி துணட னன்கல வெனமறை நவின்ற.

(இ-ள்.) பெண்சாதியுடன் அன்னமுண்ணுதல்கூடாது. அவள் புசிக்கையிற் பார்த்தால் அலங்கரிக்கின்ற ஆபரணங்களை யணிந்திருக்கும் அம்மங்கை தருமநெறி தவறும் புதல்வனைப் பெறுவாள். மாதவிடாயுற்றிருப்பவளைப் பரிசித்தல் கூடாது. யாகத்திலே யல்லாமல் கனவிலேயும் மாமிசபக்ஷணஞ் செய்தல்கூடாது. உண்ணுகின்ற அழகிய கலத்தைக்காட்டிலும் மிக வுயர்ந்தபீடத்திலிருந்து இனிமையுடன் புசித்தல் நன்மையுடையதல்ல என்று வேதங்கள் கூறின. எ-று.

கொந்தழல் வாயி னூது தல் சீறி மன்னுயிர் குறைத்திடல் புனைந்த
வந்துகி லகன்ற மகளிரை நோக்க லந்தியுங் காலையுந் துயிறல்
சிந்தையுற் றருந்த றனிவழிச் சேறல் செங்கையாற் புனல்முகந் துண்ட
லிந்திர வில்லைக் காட்டுதல் தனிபோய் மடிமையா லிருந்துயில் புரிதல்.

(இ-ள்.) தீத்திரளை வாயால் ஊதுதல் - கோபித்து உயிர்க்கொலைசெய்தல் - தரித்திருக்கும் அழகிய சேலைநீங்கிய மாதர்களைப் பார்த்தல் - மாலையிலும் காலையிலும் நித்திரை செய்தல் - யோசித்துக்கொண்டு உண்ணுதல் - ஒன்றியாக வழிச்செல்லல் - சிவந்த கைகளால் நீரைமொண்டு பருகுதல் - இந்திரதனுசைக்காட்டுதல் - யாருமில்லாதவிடத்திற் சென்று சோம்பலால் மிகுந்த நித்திரைசெய்தல்.

இதுமுதல் ஆறுபாடல்கள் குளகம்.

கொந்தழல்=தீத்திரள். இந்திரவில்=மழைக்குறியாகவரும் வானவில்.

துயிலிடை யெழுப்பல் புன்னுக ரானை யோட்டுத றாங்கிருட் காலை
தயிர்நறு வெண்ணெ யெடுத்தமோர் பருகல் சாலவுந் துய்த்திடல் யாழிற்
பயிலுநா டகத்தின் மிகமனஞ் செலுத்தல் பகற்பொழு துறங்குதல் காலை
வெயிலிடை யிருத்த னகமயிர் கடித்தல விரிகுழ னடப்புழி யுளர்தல்.

(இ-ள்.) நித்திரைசெய்கையில் எழுப்புதல் - புல்லைத் தின்கின்ற பசுக்களைத் துரத்தல் - நித்திரைபொருந்திய இராக்காலத்தில் தயிர், நல்ல வெண்ணெயெடுத்த மோர் இவற்றைக் குடித்தல் - அதிகமாகப்புசித்தல் - வீணைகானத்திலும் நடிக்கின்ற கூத்திலும் அதிகமாக மனத்தை விடுத்தல் - பகற்காலத்தில் நித்திரை செய்தல் - காலைப்பொழுதில் இளம்வெயிலி லுலாவுதல் - நகத்தையும் மயிரையும் கடித்தல் - விரிந்த கூந்தலை உலாவுகையில் சிக்கெடுத்தல். எ-று. (௨௩)

அயலவ னயின்ற கலத்தினி லயிலல் பிறர்புனை மென்றுகி லணிதன்,
மயர்வுற வேற்றிற் பசுவினி லுயர்தன் மயானவெம் புகைபடச் சேறல்,
பயிலபுனல் படிந்த பின்னர்மெய் கையாற் றுடைத்தல்பண் பிகழ்ந்தவற்
கூடல், துயில்வுழி யறுவை யொழிந்திடல் கழகந் துன்னிவெஞ் சூதெறிந்தாடல்.

(இ-ள்.) பிறனொருவன் புசித்த உண்கலத்தி லுண்ணுதல் - அன்னியர் தரிக்கும் மெல்லிய வஸ்திரத்தை யணிதல்-மயக்கம் பொருந்தும்படி எருதிலாவது பசுவிலாவது ஏறிச்செல்லல் - கொடிய மசானப் புகை தன்மேற்படும்படி போதல்-பயிலுகின்ற நீரில் மூழ்கியபிறகு உடலைக் கையினால் துடைத்தல் - குணமழிந்தவ

னுடன் சேருதல் - நித்திரைசெய்கையில் துணி விலகல் - கழகத்திற் சென்று கொடிய சூதாதி கருவியை விசிறியாடுதல், எ-று.

அறுவை=வஸ்திரம். கழகம்=சூதாடுமிடம். சூது=பாய்ச்சிகை. (உச)

உடைந்திடு கலத்தி லுண்டலகை சென்னி காரண மின்றியே யுதற லடைந்தவா சனத்தைக் காலினா லகற்ற லகத்தினை யகத்தினு ளூர்ந்தல் குடங்கையி லடிசில் கொண்டினி தருந்தல் துலவிய பள்ளிமீ திருந்து தடம்புனல் பருக லுப்பத்திடல் செவித்த லின்றுதண் ணீர்குடித்திதல.

(இ-ள்.) உடைந்திருக்கின்ற உண்கலத்திற் புசித்தல் - நிஷ்காரணமாகவே கைதலை (முதலிய உறுப்புக்களை) உதறுதல் - உட்கார்ந்திருந்த பீடத்தைக் காலா லுதைத்துத் தள்ளல் - ஈரத்தைத் தேகத்தால் உலர்த்தல் - உள்ளங்கையில் அன்னத்தைக் கொண்டு இனிதாக உண்ணுதல் - பொருந்திய படுக்கைமேலிருந்து தடாகத்துநீரைக் குடித்தல் - புசித்தல்-மாமிசங்களைத் தியானித்தல் - நின்றுகொண்டு நீர் பருகல். எ-று. (உரு)

வாயிலல் லாத வழியிடைச் சேறல வாண்முக மங்கைமென் மலர்த்தாள், தோய்புனல புலரா துறங்கரு ளிணையிற் றொடுகழல் கிடப்பவா சமனை, மேய்வுறப புரிதல மிச்சிலோ டேக விரவினிற பாசட கருநதல, சேபதன் கைகால் முகத்தினிற் றெண்ணீர் சோத்துறுதின்னமுதருநதல.

(இ-ள்.) வாயிற்படியல்லாத வழியாகப்போதல - ஒளிவாய்ந்த முகம் உள்ளவளை மெல்லியமலாபோனறபாதம் (இவ்விடங்களிற்) பொருந்திய நீர் ஈரம் உலராமல (முன்னமே) தூங்குதல் - இரண்டு கால்களிலுமணிந்த பாதரட்சைகளிருக்க ஆசமனத்தைப் பொருந்தச்செபதல - எச்சிலுடன் செல்லுதல - இராக்காலங்களிற் பசிய இலைக்கறிகளை யுண்ணுதல் - சிவந்த தனது கை கால முதலிய இடங்களில் தெளிந்த நீர்கொண்டலமபாமல் இனிய உணவு புசித்தல. எ-று. (உகா)

வைதிக மறையைப் பின்னவாக் குரைதத லிருகையால் வன்றலை சொரிதல்,கையினல மெயயி லடிககடி புடைததல் கணமயிர் பறித்திடல மலசீ, ரெய்திமுன னோக்கல பிறர்மனை விழைதல பகைவர்பாற் சேவை செப திருத்தல,பொய்தவ றுரைத்தல் மடிமையி னொழுக றீதெனப் புகன்றனர் புலவோர.

(இ-ள்.) வேதமார்க்கமாகிய மந்திரத்தைப் பினவருணத்தவர்கட்குப் போதித்தல் - வலிய சிரசை இரண்டு கைகளாலும் சொரிதல - உடலில் அடிக்கடி கையா லடித்துக்கொள்ளுதல-கணமயிர்களைப் பிடுங்குதல் - (விசர்ஜனஞ்செய்த) மலசலங்களைப் போய் முனனே காணுதல் - பரதாரகமனஞ்செய்தல - சத்துருக்களிடம் உத்தியோகவிர்த்திசெய்து ஜீவித்தல் -குற்றமாகிய பொய்ம்மொழிகூறல்- சோம்பலாகவிருத்தல் (ஆகிய இவ்வொழுக்கங்களெல்லாம்)குற்றமுடையனவென்று கவிஞர்கள் சொல்லியிருக்கின்றனர். எ-று. (உஎ)

உருவினிற் குலத்திற் கல்வியிற் றிருவி லிழிந்துளார் தமையிகழ்ந் துரைத்தல், பெருகுவெம் பசியா லருந்திடா ரிடத்தி னருந்தலபெட்

பெவற்றினு முறுத, றிருநுவெஞ் சினத்தாற் குறளைகூ றுதலைம் பொறி யையு மடிக்கடி தீணடல,பரிவொடு தன்னைப் புகழ்தல்மா னுடரைப பா டுத றீவினை பயக்கும்.

(இ-ள்.) வடிவத்திலும் வமிசத்திலும் கல்வியிலும் செல்வத்திலும் குறைந் துள்ளவர்களைத் தாழ்த்திப் பேசுதல் - வளர்கின்ற கொடிய பசியுடன் உண்ணுதி ருப்போ ரெதிரிலே புசித்தல - எல்லாவற்றிலும் ஆசை கொள்ளுதல்-கூஷண பேதப் படுகின்ற கொடிய கோபத்துடனே கோட்சொல்லுதல் - ஐம்பொறிகளையும் அடிக் கடி தொடுதல் - ஆசைகொண்டு தற்புகழ்ச்சிசெய்தல்-நரர்களைப் புகழ்ச்சி செய்து பாடுதல் (ஆகிய இச்செய்கைகள்) பாவத்தையுண்டுசெய்யும். எ-று. (உஅ)

அருமறை மறையோர் கடவுள ரரச ரருநதவர் கற்புடை மகளிர், பொருவரு மிவரை யெளளுத லொருவன் போகுழித் தாள்பணிந் திறை ஞ்ச, லொருவர்தங் குற்ற முரைததிட லாகா வூருணி குளங்கிணற் றுடி, னிருகைமண வாரி யெறிந்திடா தொழியி னிவனறவ மகழ்ந்தவாக் கெய் தும்.

(இ-ள்.) அரியவேதஙகள் வேதியர் தேவர் மன்னர் அரியதவசிகள் கற்புள் ளமாதர்கள் முதலியஒப்பிலலாத இவாகளை அவமதிததல்-ஒருவன் வழிசெல்கை யில் காலில் வீழ்ந்து வணஙகுதல்-ஒருவரது குறறஙகளை எடுத்துச்சொல்லுதல் ஆ கிய இவைகூடாது. ஊருணி குளம் கிணறு இவைகளில் மூழ்கினுல் இரண்டுகை மண்ணைவாரி வெளியே போடாவிடின இவன செய்த தவம் அவற்றைத்தோண்டி னவர்கட்குப்போகும். எ-று.

ஊருணி=ஊரடுத்தகுளம்; ஊரார் குடிக்க நீர கொள்ளும் குளம். (உகூ)

இணங்குறு வாய்மை மெய்ம்மையே யெனினு மியமபொரு விண ங்குவ தெனினு, மணங்குநோய் செய்யும் பொய்சொலா தொழிக வறி ஞரோ டிணங்குக நாளுங், குணங்களே மொழிக வுளத்திலெஞ் ஞான்று நன்மையே குறிக்கொளல வேணடுமெ, பிணங்குவெஞ் சூதிற் குறளையிற் றாதிற் பெறுபொருள் கோடறீங் குறுமால.

(இ-ள்.) பொருந்தாத சொற்கள் உண்மையே யென்றாலும் சொல்லப்ப டாது. பொருந்துவவென்றாலும மனதை நலியச்செய்யும் துனபமாகிய பொய்ம் மொழி புகலாது விலக்கக்கடவர். புத்திமானகளுடனே கூடக்கடவர். நன்மை யையே சொல்லக்கடவர். மனதில் எப்பொழுதும் நற்கருமங்களையே ஆலோசித் தல் வேண்டும். பிணக்கை யுண்டுசெய்யுங் கொடிய சூதாடியும், கோள் சொல்லி யும்,தூதுசென்றும் பெற்ற பொருளைக் கொள்ளுதல் தீமை பயக்கும். எ-று. (௩0)

அழலையக் தணரைப் பசுவினை மிச்சி லடைந்துளோர் தீண்டிட லா கா, விழைவொடுஞ் சிரார்த்தம் புரிந்திடுந் தினத்தில் வேறறவன் சிரார்த் தத்தி னருந்திற், பழிபடு மிவனும் புரிந்தவன் றனக்குந் தீவினை பயக்கு றுங் கைவாய், கழுவுத லுண்ணுங் கலத்தினி லாகா தென்றனர் கலைபல தெரிந்தோர்.

(இ-ள்.) நெருப்பையும் வேதியனையும் பசுவையும் எச்சில்பட்டுள்ளவர்கள் தொடுதலாகாது. ஆசையுடன் சிராத்தஞ் செய்யுநாளில் அயலான் சிராத்தில் உணவு கொண்டால் பழிபெறுவான். உண்டவனுக்கும் செய்தவனுக்கும் பாவத்தை விளைவிக்கும். உணக்கைத்தி . கை எ பகளைக் கழுவலாகாதுவென்று பல நூல்களைக் கற்றறிந்தோர் கூறினார். எ - று. (௩௧)

காலமு மிடனுங் கோள்பவா மாண்புங் கருதிநற் றானமங் களிப்பிற்
சால்வுறு மளித்த பலனில மளித்தோர் தராதல முழுவது மபரிக்குந்
சீலமோ டன்ன மளிப்பவ ரளப்பில் செலவமுற் றிருகுரீ ரளிப்போர்
மாலுற விடாயி னெய்துறா வெள்ளி வழங்கினா வடிவன குறுவார்.

(இ-ள்.) காலமும் இடமும் எதிர்பாரது மாட்சிமையு மெண்ணி நல்ல தானங் கொடுத்தால் கொடுத்ததனாலாகிய பலன மிகுதியாகக் கிடைக்கும். பூதானங் கொடுத்தோர் உலக முழுவதையும் அரசுசெய்வர். ஆசாரத்துடன் அன்ன தானஞ்செய்பவர் அளவில்லாத செல்வமடைந்து வாழ்வார்கள். சலதானஞ் செய்பவர் மயக்கம்பொருந்தத தாகவிடா யடையமாட்டார்கள். வெள்ளியைத் தானங் கொடுப்போர் நல்லுருவடைவார்கள். எ று. (௩௨)

நறுநெய்பெய் தகளி தன்னெடுந் தீப நல்கினோர் சுடர்விழி யென்றுங், குறைபடா தொளிரு மாவினை யளிப்போர் குறுகிடார் மறலியூர் நாளு, முறுபொரு ளளிப்போ ரிரந்திடா ரொள்ளை யுதவினோர் நன்மகப் பெறுவர், மறுவறு மில்லங் கோவினன் களிபபோர் மதிதவழ் மாடமீ துறைவார்.

(இ-ள்.) நல்ல நெய்யை விட்டுள்ள அகலுடன சுடர்விளக்கைத் தானஞ் செய்வோரது கண்ணொளி ஒருபோதும் குறைவுறாது விளஙகும். கோதானஞ்செய்வோர் யமபுரத்தை ஒருபோது மடையமாட்டாாகள. பொருந்திய பொருளகளைத் தானஙகொடுப்போர் யாசிக்கமாட்டார்கள். எள்ளைத் தானமாகக் கொடுப்போர் நற்புத்திரரை அடைவார்கள். குற்றமற்ற வீட்டைக் கட்டி நன்றாகக் கொடுப்போா சந்திரன் தவழும் மாளிகையின்மேல் வசிப்பார்கள். எ - று. (௩௩)

கொய்யுளைப புரவி யளித்துளோர் தெய்வ விமானமூர் குவர்செழுங் கோட்ட, வெய்யவே றளித்தோா திருவொடும் வோலிவா மெல்லணை சிவிகைநன் களிப்போர், மையரி நெடுங்கண் மகளிரோ டுறைவர் வைகலு நெற்குவை யளிப்போர், பையரா வுச்சிச் சுடிகையிற் கிடந்த பாரவள மனைத்தையும் பெறுவார்.

(இ-ள்.) கத்தரிக்கின்ற புறமயிரையுடைய அசுவதானஞ்செய்வோர் தெய்வவிமானத்திலேறிச் செல்வர். செழிய கொம்புகளையுடைய கொடிய இடபதானஞ்செய்தோர் செல்வத்துடன் விளஙகுவர். மிருதுவான படுக்கை பல்லக்கு இவற்றை நல்லதானமாகக்கொடுப்போர் மைதீட்டிய அரிபரந்த நெடியகண்களையுடைய அமரமாதருடன் எக்காலமும் கூடிவாழ்வா. நெற்குவியலைத் தானமளித்தோர் படத்தையுடைய பாம்பின் உச்சிக்கொண்டையில் விளங்குகின்ற உலகத்திலுள்ள வளப்பங்களையெல்லாம் பொருந்துவார்கள். எ - று. (௩௪)

அஞ்சலென் றளிப்போ ருலகெலா மளிப்ப ரருமறைப் பொருள்ப யிற் றிடுவோர், எஞ்சலில் பிரம னுலகிலவீற் றிருப்ப ரிரும்பொருள் கொடுத்தநால் வேத, விஞ்சையைப் பயில வினிதளித் தோரும விரிஞ்சனுட் டுறைதவா ருலயம், நெஞ்சுவந் தீவோர் கொடுத்ததை யுவப்போர் நிரப்பெறி செல்வமெய் துவரால்.

(இ-ள்.) பயப்படாதே என்று அடைக்கலங்கொடுப்போர் பூமிமுழுவதும் அரசாளுவர். அரிய வேதப்பொருளைக் கற்பிப்போர் குறைவில்லாத பிரமதேவனது சத்திய வுலகத்தில் வாழ்வார்கள். மிகுந்த பொருளைக் கொடுத்து நான்குவேதவித்தைகளையும் கற்கும்படி இரக்ஷித்தோரும் பிரமலோகத்தில் வசிப்பார்கள். செல்வத்தை மனமகிழ்ந்துக் கொடுப்போரும் கொடுத்ததைக் கண்டு களிப்போரும் குறைவு நீங்கிய பெருஞ்செல்வ மடைவார்கள். எ-று. (கடு)

தான்புரி தவத்தைக் கொடையினைப் புகழிற் றழைவுறா தவ்வுமந் தணரை, வான்பட னுரைக்கில் வாழுநா ளுலக்கு மாலைசெஞ் சாந்தம் வெண் டயிர்பா, லூன்படு தசைநெல் வீடிவை வாளா வுறுமெனிற கொள்ளுத லுரித்தாத, தேன்பழங் கிழங்கு விறகிவை யிழிந்தோர் நல்கினும் வாங்குத றறனே.

(இ-ள்.) ஒருவர் தான் செய்த தவத்தையும் தானத்தையும் புகழ்ந்தால் அது மேலிடாமற் குறையும். வேதியரைச் சிறந்த குணபவாதங்கள் கூறினால் ஆயுள்குறுகும். மலர்மாலை - செஞ்சந்தனம் - வெண்மையாகிய தயிர்-பால் - நிணம்பொருந்திய மாமிசம் - நெல் - வீடு ஆகிய இவை சும்மா வருமானாற் பெற்றுக் கொள்ளுத லுரியதாம். தேன் - பழம் - கிழங்கு-விறகு ஆகிய இவற்றைக் கீழ்க் குலத்தோர் கொடுத்தாலும் வாங்குவது கூடும். எ-று. (கசு)

அடைக்கலம் புகுந்தோன் மயிரவினை யாளன் வழிவழி யடிமைபுக் கிடுவோன், குடத்தன செருத்த லானிரை மேய்ப்போன கூடிய நட்புளா ரிவர்கள், விடுக்கரு மன்பி னளித்தவா லரிசி கோடலாம விளம்பிய வனைத்தும், வடுப்படா மறையோர் முதலமூ வாக்கு நெறியென மறைமொழிக் திடுமால்.

(இ-ள்.) சரணாகதி யென்று வந்து சேர்ந்தவன் - க்ஷவரகன் - தலைமுறைகளாக அடிமைப் புகுந்தோன் - குடம்போன்ற பால்மடியையுடைய பசுமந்தை மேய்க்கும் ஆயன் - பொருந்திய சினேகன் ஆகிய இவர்கள் நீங்காத ஆசையோடு கொடுத்த வெண்மையாகிய அரிசியைக்கொள்ளுதலாகும். சொல்லிய இவையெல்லாம் குற்றமுறாத வேதியர் முதலாகிய மூன்று வருணத்தவர்கட்கும் முறைமையென்று வேதங்கள் சொல்லுகின்றன. எ - று. (கஎ)

உருமுமண் மாரி யுற்கைவீழ்ந் திடுநாள் சுழல்வளி யுற்றநா ளோர்பா
லெரிபடு நாளி லரையிருட் போதிற் பினனவ ரிருந்திடு மிடத்தி
லரசருக் கிடையூ றுற்றுழி யவாகட் கசுபம்வந் துற்றிடு நாளின்
மருவிய பதினன் கிருவா சுந்தை யட்டமி யோதல்மாண் பன்றே.

(இ-ள்.) இடி - மண்மழை - நட்சத்திரம் இவை விழுகின்ற தினங்களி லும், சுழல்காற்றடிக்கும் நாட்களிலும், ஒருபக்கத்தில தீப்பற்றிய தினத்திலும், அனையிருளாக வுள்ள காலத்திலும், கிழ்க்குலத்தார் வசிக்குமிடத்தும், அரசருக் குத் துன்பம் நேர்ந்த பொழுதும்,அவர்களுக்கு ஏதேனும அசுபங்கள்வந்து சம்பவி க்கையிலும், பொருந்திய சதுர்த்தசி - அஷ்டமி - அமாவாசை - அமாவாசை ஆகிய திதிகளிலும்) வேதமோதுதல் மாட்சிமையுடையதல்ல. எ - று. (௬௮)

பூசைநாய் தவளை பேரெலி கீரி புயங்கமற் றிடைபுகி னோதார
வேசரி யிகலி னொட்டக மரற்றின் விளம்பிடார் விரிதிரைப் புனலிற
பாசிலைத் தருவி லூர்தியி லிருந்தும பயின்றிடா ருவாகரு மத்துநர் தோர்.
தேசுற நடக்கும் பொழுதினும வேதம புகன்றிடார் நான்மறை தெரிந

(இ-ள்.) பூனை - நாய் - தவளை-பெரிய எலி - கீரிப்பிள்ளை - பாம்பு இவை இடையே வந்தால் ஓதமாட்டார்கள். கழுதை சண்டையிட்டாலும்,ஒட்டை அழு தாலும், விளம்பமாட்டார்கள். பரந்த அலைகளையுடைய நீரிலும், பசிய இலைகளையு டையமரத்திலும், வாகனத்திலு மிருந்து வேதாப்பியாசஞ் செய்யார்கள். அவர் கள் வேலை செய்கையிலும் ஒளிபொருந்த நடந்து செல்லுகையிலும் வேதம் படி யார் வேத நூலைக்கிரமத்துடன் கற்றறிந்தோர். எ-று. (௬௯)

இன்னன வொழுக்கம் வழுவுறா தியற்றி யீன்றதம புதல்வர்பா லு ளு, மன்னிய கரும மனைத்தையு மிருத்தி வளர்பிறைக் கொழுந்தினைப் பவளச், சென்னியின் மிலைந்த கடவுளை நினைந்து கானிடைச் செய்தவம் புரிக,வன்னது கூடா தெனிலுயர் காசி யடைதனன் முத்தியா மன்றே.

(இ-ள்.) இப்படிப்பட்ட ஆசாரங்களைத் தவறுபடாமற் செய்து, தாம்பெ ற்ற புத்திரரிடத்தில், தினமும் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் விடடு, கலைகள் வளருகின்ற இளம்பிறைச் சந்திரனைப் பவளம்போன்ற சிவந்த சிரசிற றரித்த சிவபெருமானைத் தியானித்து வனத்தி லிருந்து தவம் செய்யக்கடவர். அது செய்யமுடியாதென்றால் உயர்வாகிய காசிக்ஷேத்திரத்தைச் சேருதல் மோட்ச மளிக்கும். எ-று. (௭0)

ஆசாரங் கூறிய அ - ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧0௬அ.

உ

சிவமயம்.

முப்பத்தொன்பதாவது,

# இல்லறங் கூறிய அத்தியாயம்.

என்னலு முவந்து பொன்னிணர்க் கடுக்கை யீர்ஞ்சடை யிறைவன் வாழ் காசி, துன்னின ரொழுக்க நெறியினின் றோரக மேயவீ டடைகுவ ரென்று, முன்னமீ யுரைத்தா யுரைத்தவவ் வொழுக்க முழுவது முரைத் தருளென்று, தென்வரை முனிவன் கேட்கவஞ் சிறைய சேவலங் கொடியவ னுரைப்பான்.

(இ-ள்) என் றிவ்வாறு (ஸ்ரீமுருகக்கடவுள்) கூறவும், பொதியமலையிலு ள்ள அகத்தியமுனிவர் மனங்களித்து, பொனபோலும் கொத்தாகிய கொன்றை மலரைக் குளிர்ந்த சடையிற் சூடிய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான வீற்றிருக்கும் காசி க்ஷேத்திரத்தை யடைந்தவர்களும், நல்ல இல்லறவழியி லிருந்தவர்களும் பரிசுத்த மாகிய மோட்சலோகத்தைச் சேர்வார்களென்று தேவரீர் முன்னே திருவாய்மலர் ந்தருளினீர். சொல்லிய அவ்வில்லறத்தை முற்றும் உரைத்தருளவேண்டும் என்று கேட்க, அழகிய சிறகையுடைய சேவற்கொடி யேந்திய குமாரக்கடவுள் கூறு கின்றனர். எ-று. (௧)

கரியன விளர்த்த செய்யவா முள்ளி கார்மயிர்ப் பன்றியூர்க் குருவி
விரிசிறை யன்னங் குரண்டகே மியம்புட் கிளிகரிக் குருவிமென் றவலை
குரைகடற் படுமீ னிரைகவர் பறவை தோலடிப் புள்ளினங் கோழி
மருவிய பூவை மீனின மனைத்தும் வாய்மடுத் தருந்துத லாகா.

(இ-ள்.) கறுத்தும் வெளுத்தும் சிவந்துமிருக்குமுள்ளிகள் - கரிய மயிரை யுடைய பன்றி - ஊர்க்குருவி - விரிந்த சிறகையுடைய அன்னம் - கொக்கு - அழகிய சக்கரவாகப்புள் - கிளி - கரிக்குருவி - மெல்லிய தவலை-ஒலிக்கின்ற கட லிலுண்டாகிய மீனுணவுகொள்ளும் பறவைகள் - தோலையுடைய அடி வாய்ந்த பக்ஷிசாதிகள் - கோழி - பொருந்திய நாகணவாய்ப்பறவை - மீனசாதிகள் ஆகிய இவற்றை யெல்லாம் புசிக்கப்படாது. எ-று. (௨)

கரும்பினைத் தெற்ற கட்டியி னமைத்த கைவெலங் கறந்தபா லாடு
பொருந்துமொட் டகமற் றோர்குளம் பாய விலங்கிவை பொழிந்தபா லிர
விற், றிருந்துவெண் டயிர்நண் பகலிடை வெணணெய் நீக்குத றெய்வ
நன் மகத்தி, னருந்துத லன்றி யொழிகவூன் பொறிமான் றேவர்தென்
புலத்தவர்க் காமல்.

(இ-ள்.) கருப்பங்கட்டியாகிய தனிவெல்லம்-கறவையுடையதான ஆடு - பொருந்திய ஒட்டகம்-ஒரு குளம்பாகிய மிருகங்கள் ஆகிய இவைசொரிந்த பால்- இராக்காலத்தில் திருந்திய வெண்ணிறமமைந்த தயிர் - நடுப்பகலில் வெண்ணெய் முதலியவை நீக்கிவிடுதல் முறைமை. தேவர்களுக்குச் செய்யும் நல்ல யாகத்திற்

புசித்தலல்லாமல் மாமிசங்களை விலக்கக் கடவர். பொறித்த மானிறைச்சி தேவர்கட்கும் பிதுரர்கட்கு மாகும். எ - று.

பொறிமான என்பதற்குப் புள்ளியையுடையமான் எனினும் பொருந்தும்.

குறுமுய லுடும்பு கமடமுட் பன்றி கோதிலா வங்கருந் தினுமாம், பெறலருந் துறக்க மாயுள்வேட் டவர்கள் பிழைபடு மூன்றின லாகா, நறியன வேனும பழையன வருந்த னன்கல மகத்தினின் மருந்தி, லுறு முயி ருய்யு மிடத்தினி னிறந்தோர்க் கூட்டுழி யூன்றின வியல்பாம.

(இ-ள்.) சிறிய உருவுடைய முயல் - உடும்பு - ஆமை - முள்ளம்பன்றி ஆகியவற்றைப் புசித்தாலும் குற்றமில்லையாம். பெறுதற்கரிய மோட்சத்தையும் தீர்க்காயுவையும் விரும்பினோர் குற்றம்பொருந்திய மாமிசபட்சணஞ் செய்யபபடாது. நல்ல பொருள்களானாலும் பழையனவானால் அவற்றையுண்டல் நல்லதலல. யாகத்திலும், மருந்திலும், பொருந்திய உயிர் பிழைக்குந் தருணத்திலும், பிதுரர்கட்குஆகுதிசெய்கையிலும்மாமிசம் புசித்தல் இயற்கையாகும். எ - று. (௪)

அருமகத் தன்றி யூன்சுவைத் துடலம் வீக்குவோ னதற்குடன் படுவோன்,கருவியிற் குறைத்தோன் பகர்ந்துளோன் கொணர்ந்தோன் வியந்துளோன் கடுகென வேவுந், திருவிலி யதனை யட்டவ னிவர்க ளெண்மருந் தீநர கடைவார், பரிவி னூன் விடுத்தோர் நாடொறும் புரவி மகம்புரி பலன்பெறு குவரால.

(இ-ள்.) அரிய யாகத்திலல்லாமல் மாமிசம் புசித்து உடலைப் பெருக்குவோன்-அப்புலால் புசித்தற்குச் சம்மதித்தவன் - ஆயுதங் கொண்டு வெட்டி யுயிர் போக்கினோன்-செய்யெனச் சொன்னவன்-கொண்டுவந்தவன் -சந்தோஷித்தவன்-விரைவிலாகட்டும் என்று கட்டளையிடும் வறியவன்-அதனைச் சமைத்தவன் ஆகிய இவ்வெட்டுப்பெயரும் கொடிய நரகத்திற் சேருவர். இரக்கத்தால் மாமிசததை விலக்கினவர்கள் தினந்தோறும் அசுவமேதஞ் செய்தபலனை யடைவார்கள். எ று.

பிறரிடை யின்னு வியற்றிடிற் றமக்குப் பிழைப்பற வெய்துமென் பதனை, யறிகுன ரறிஞ ராதலா லுயிர்க ளனைத்தையுந் தம்முயிர் போல, நெறியினிற் கருத வினியவா மைந்து புலனையு நெறியலா வழியிற், பொறியினிற் செலுத்தா தடக்கனன் குணர்ந்த புலமையோ ரொழுக்கெனப் புகல்வார்.

(இ-ள்.) ஒருவருக்குத் துன்பஞ்செய்தால் தமக்கு முற்றுந் துன்பம் வருமென்பதனைத் தெரிந்துகொண்டவர்கள் விவேகிகளானபடியால்,எல்லாப்பிராணிகளையும் தமது பிராணனைப்போலக் கிரமமாக நினைத்தல் இனிமையுடையதாகும். ஐம்புலன்களையும் நல்ல மார்க்கமல்லாத தீயவழியிலும் ஐம்பொறிகளின் வழியாகவும் போகவிடாமல் அடக்குதல் நன்றாக ஆராய்ந்த புலமையுடையோரது நடக்கையாமென்று (பெரியோர்) சொல்லுவர். எ-று. (௫)

முயன்றுமெய் வருந்தா தரும்பொரு ளடையா மொழிந்தவப் பொருளினு லன்றி, பயின்றநற் கருமம் பொருந்துறு கரும மல்லது பயக்குறு

தரும, மியன்றநற் றருமத் தலலதை யின்ப மெய்துறு தின்பமு மடியிற், றுயின்றிடா தறஞ்செய் தலலது கூடா தாதலாற் றொடங்குக கருமம்.

(இ - ள்.) ஒருவன் பிரயத்தனஞ்செய்து சரீரம் பிரயாசை யுறாமல் அருமையான பொருள் வராது ; சொல்லிய அப்பொருளா லல்லாமல பழகிய நற்றொழில்வா தடையாது ; தொழிலல்லது தருமத்தை உண்டுசெய்யாது; செய்கின்ற நல்ல தருமமலலாது இனபம் வராது; அவ்வின்பமும் சோம்பலால் தூங்காது தருமச்செயல்புரிதலல்லது கைகூடாதுஆதலால் தத்தகதொழில்களைச்செய்ய (ஒவ்வொருவரும்) முயலக்கடவர். எ-று (எ)

வருமூலே யெழுத பெண்மகட் கொடுப்பின் மரபழிந் திடுமயிர் தோன்றுக, தெரிவையை யளிப்பின மணாதவ னிறக்குந் தெருண்டபி னளிப்பினு பகவனே, யருளிய தாதை பிறநதிடு மதனு லாய்பிழிக குறுந்துளி பிலிற்று, மு நகவிழ கூநத லனையவா முயக்க முறையல வெனமறை மொழியும்.

((இ-ள்) உருகின்ற மூலேதோன்றிய பின்னர் மகளை மணஞ்செய்துகொடுத்தால் (பெற்றோனை) வம்சம நசிந்துவிடும. (பெண்குறியில) மயிர் முளைத்த பெண்ணை (விவாகஞ் செய்து) தந்தால் மணநாயகன் உயிரிழப்பான். புஷ்பிணியான பிறகு கொடுத்தால் அவளைப் பெற்ற பிதா மரிப்பான. ஆனபடியால் ஆராய்கின்ற தேன நுணடுளி சொரியும் மணமகமழுங் கூந்தலையுடைய அப்படிப்பட்ட மாதர்களது போகம் சரியல்ல என்று வேதங்கள் கூறும. எ-று. (அ)

கனனியிற் பூத்த தன்மகட் கொடுபபின் யாவரு மறியவிக் கன்னி, முன்னரே பூத்தா ளெனவுரைத் தளிபபிற் றநதைபாற் பாவமுற் றுது, வன்னிபூப் புழியிற் பொருந்துறுஞ் சோமன் மயிரும் புழியுற மணக்கும், கின்னரன் மூலேதோன் றழியுறு மதன்முன மகட்கொடை நன்றெனக் கிளப்பார்.

(இ - ள்.) கன்னிப்பருவத்தில புஷ்பிணியான தனது புதல்வியை மணஞ்செய்து கொடுத்தால, பலரு மறியும்படி இப்பெண முன்னேயே புஷபிணியாய் விட்டாள் எனறு சொலலிக்கொடுத்தாற் பிதாவினிடம் பாவஞ்சேராது. புஷ்பிணியாகையில் அக்கினி கலபபான. (கடிதடத்தில) மயிரரும்புங்காலத்தில் சந்திரன் பொருந்தச் சேருவான். மூலே யெழுஙகாலத்தில் கின்னரன புணர்வான் (ஆதலால்) இ-றதிற்கு முனனரே பெண்ணை வதுவைசெய் தளித்தல் நல்வழக்கமென்று சொல்லுவர். எ - று. (கூ)

வெந்தழற் கடவுள் கின்னரன் சோமன் மேவலால் மதிதொறும் பூபபு வந்தடை தவினுல மகளிரொன் ஞான்றும் புனிதமா குவாமலர் மஞ்சஞ் சுந்தர மகளிர் வாண்முகஞ் சிவிகை யாசனந் தருப்பைதொன் மகத்திற் றந்தபாத் திரங்கட் குதயநற் காலம் புனிதமென் றுரைத்தனர் சான்றோர்.

(இ-ள்.) வெவ்விய தீத்தெய்வமாகிய அக்கினி கின்னரன் சந்திரன் (இவர்கள் மூவரும்) கலத்தலாலும், மாதந்தோறும் மாதவிடாய் வந்துகொண்டிருப்பதா

அம் மாதர்கள் எப்பொழுதும் பரிசுத்தமாவார்கள். புஷ்பம் - சயனம் - அழகிய பெண்களது ஒளிதங்கிய முகம் - பல்லக்கு - பீடம் - தருப்பை - பழமையாகிய யாகத்திலே கொடுத்த பாத்திரங்கள் ஆகிய இவற்றிற்கெல்லாம் நல்ல காலேப்போழுதே பரிசுத்தம் என்று மேலோர் சொல்லினர். எ-று. (௧௦)

கன்றினி தூட்டிக் கறந்ததீம பாலுங் கலவியின் மகளிரும் பறவை, தின்றதீம் பழனும வேட்டையின் ஞமலி கறித்திடு செய்யமென் றசையு, மொன்றிய மிச்சி லெனவிகழ்ந் துரையா ருணர்ந்துளோ ருறுகடன் பொருட்டு, நன்றுணர் வேள்வி வேட்டிடற் பொருட்டு நனிபொருள் வழங்கலன்ன ருமால்.

(இ-ள்.) கன்றை யினிதாக வுண்பித்துக் கறந்த மதுரம்பொருந்திய பாலும், புணர்ச்சிகாலத்திற் பெண்களும், பக்ஷிகள் தின்றுவிடுத்த தித்திப்பாகிய பழமும, வேட்டையாடுகையில் நாயானது கறித்திட்ட சிவந்த மெல்லிய மாமிசமும், பொருந்திய எச்சிலுடையன வென்று தெரிந்தோர் தாழ்த்திச் சொல்லமாட்டார்கள். நேர்ந்த கடனுக்காகவும், நன்றாக வுணர்ந்த யாகங்களைச் செய்தற்காகவும் மிகுதியாகிய பொருளைக்கொடுத்தல் நல்லதாம். எ-று. (௧௧)

பொங்குளைப் புரவி யாடிவற் றினுக்குப் புனிதமா முகம்பசு வினுக்குத், தங்குபிற் புறமே புனிதமங் தணர்க்குத் தாளிணை புனிதம்வே னெடுங்கண், மங்கையர்க் குடல முழுவதும் புனிதம் வருநதி வெண்கலஞ் செம்பு, துங்கமாம் பெருக்காற் சாம்பராற் புளியாற் றூய்மையா மென்பர் தூய் துணர்ந்தோர்.

(இ-ள்) வளர்கின்ற புறமயிரையுடைய குதிரை ஆடு இவற்றிற்கு முகம் பரிசுத்தமாம். பொருந்திய பசுவிற்குப் பின்பக்கமே புனிதம். வேதியர்க்கு உபய பாதங்களே சுத்தம். வேற்படைபோலும் நீண்ட கண்களையுடைய மாதர்களுக்குச் சரீரமுழுவதும் புனிதம். வருகின்ற ஆறு - வெண்கலம் - செம்பு (ஆகிய இவை முறையே) வெள்ளத்தினாலும், சாம்பராலும், புளியினாலும் பரிசுத்தமாகுமென்று நன்றாகக் கற்றறிந்தோர் சொல்லுவர். எ - று. (௧௨)

கொழுநரே தெய்வ மெனத்தொழு மகளிர் பரையொடுங் கூடிவீற் றிருப்பார், பழுதறு தந்தை தாய்தமர் துணைவ ரில்லெனிற் கன்னியா பரிவால், விழைவொடுந் தமது மரபினுக் கேற்ற வொருவனை வரித்திடல் விதியாம், வழுவுறக் கருப்ப மழித்தவர் கணவற் செகுத்தவர்த் தணப்பது மரபே.

(இ-ள்) கணவரே கடவுளென்று வணங்கும் கற்புள்ள மாதர்கள் உமாதேவியாருடன் கலந்து வாழ்ந்திருப்பார்கள். குற்றமற்ற பிதா - மாதா - சுற்றத்தார் சகோதரர் முதலானோரில்லையானால், பெண்கள் பரிவாகி ஆசையுடன் தமது குலத்திற்குத் தகுந்த ஒரு புருஷனை மணஞ்செய்துகொள்ளுதல் கடனாகும். பாவ

ம் சேரும்படி சூலை செகுத்தவர்கள் புருஷனைக்கொன்றவர்கள் இவர்களை (குடும்பத்திலிருந்து) நீக்கிவிடுதல் வழக்காகும். எ - று. (கங)

வலிதினி லொருவன் கன்னியங் கற்பின் மகளிரைப் புணர்ந்திடினவட்குப, பொலிவறு மாசு பூத்தவெற் றிழைக ளுழைதுகில புனைகென வழங்கி, நலிவொடும் வருந்த வடிசிலோர் பிண்ட நலகிநாள் கழித்துழி பூப்பிற, குலனொடு மவளைக் கூட்டுக கருப்பங் கொண்டிடி னீகுதல குணனே.

(இ-ள்.) ஒருவன அழகிய கெடாத கற்பினையுடைய மாதரைப் பலாத்காரமாகச் சேர்ந்துவிட்டால், அவளுக்கு விளக்கமற்ற அழுக்கடைந்த வெற்றிழைகளால் நுழைக்கப்பட்ட (சல்லாப்) புடவையை அணிகவென்று கொடுத்து, துன்பத்துடன் மனங்கலங்க ஓர்பிடி யன்னமிட்டுக் (கடக்கவேண்டிய) நாள்கள் சென்றபோது மாதவிடாயடைந்தால் அவளைக் குலத்துடன் சேர்த்துவிடக்கடவா. கருவுற்றிருந்தால் விலக்கிவிடுதல் குணமாகும். எ - று. (கச)

பின்னவர் தமது மரபின்வேட் டிடலாம் வணிகர்பின் னவருழைத் தமது, நன்மர பதனிற் கோடலா மரசர் தமமுழை நாய்கர்தம் மரபின், மன்னும்வே ளாளர் மரபினிற் கொளலா மறையவா வருணநான் கிடத்துங், கன்னியைக் கொளலாம் பின்னவள் மறையோர்க் கருமகப் பெறிற கதி யடையான்.

(இ-ள்.) சூத்திரர் தங்கள் குடியிலே விவாகஞ் செய்துகொள்ள லாகும். வைசியர் சூத்திரரிடத்தும் தங்கள் நல்ல மரபிலும பெண் கொள்ளலாம். க்ஷத்திரியர் தமது குலத்திலும் வைசிய குலத்திலும் நிலைபெற்ற வேளாள குலத்திலும் பெண்ணைக்கொள்ளலாம். வேதியர் நான்கு வருணத்தாரிடத்திலும் பெண்ணைக் கொள்ளலாகும். சூத்திரப்பெண் பிராமணனுக்கு அருமையான குழந்தையைப் பெற்றால் அவன் மோக்ஷமடையான. எ - று. (கரு)

குரவனைத் தாயைத் தந்தையை மனையைக் குற்றமில் புதல்வனை விருந்தை, யிரவுநண் பகலும வழிபடு வோனை யதிதியை யெரியினை யீங்குக், கருதுமோன் பதின்மர் தமமையு நாளுங் கருணைகூர்ந் தினிதளித்திடாது, மருவுமில வாழ்க்கை பூண்டுளோன் றன்னை மக்களுட் பதடியென் றுரைப்பார்.

(இ-ள்.) ஆசிரியனும், தாயும், தந்தையும், பாரியும், குற்றமில்லாத மகனும், விருந்தாளியும், இரவும் பகலும் வழிபாடு செய்வோனும், அதிதியும், ஓமாக்கினியும் ஆக இங்கு சொல்லுகின்ற ஒன்பதுபேரையும் தினமும் அன்புமிகுந்து இனிதாகக் காவாமல், பொருந்திய இல்வாழ்க்கையை மேற்கொண்டிருப்பவனை மனிதருக்குள்ளே பதர் என்று (நூல்வல்லோர்) சொல்லுவா. எ. று. (கசு)

விருந்தின ஞக வொருவன்வந் தெதிரின் வியத்தல்நன் மொழியினிதுரைத்த, திருந்துற நோக்கல் வருகென வுரைத்த லெழுதல்முன் மகிழ்

வன செப்பல், பொருந்துமற் றவன்ற னருகுற விருத்தல போமெனிற் பின்செல்வ தாதல், பரிந்தான் முகமன வழங்கலிவ் வொன்பா னொழுக் கமும் வழிபடும் பணபே.

(இ-ள்.) ஒருவன் விருந்தாளியாக வந்தடைந்தால் சந்தோஷித்தல்—நல்ல வார்த்தைகளை இனிதாகச் சொல்லுதல்—குளிர்ச்சிபொருந்தப் பார்த்தல்-வருகவென று கூறுதல்-பீடத்திலிருந்து எழுந்திருததல்-(அவன பேசு) முனனமே களிப்புண்டாகப் பேசுதல்—பொருந்திய அவனது சமீபத்திலிருத்தல்—போக எனக் கூறுவதானல் பின்னே சென்று வழிவிடுதல்-அனபுகொண்டு நலல உபசாரவார்த்தைகளை வசனித்தல் ஆகிய இவ் வொன்பதுவகைப்பட்ட நடக்கைகளும் உபசாரஞ்செய்யுங் குணங்களாம். எ - று. (கஎ)

தவிசுதாள் விளக்கப் புனறமக் கியன்ற வடிசில்பூந் தண்மலர்ப் பாய, லுவகையி னுறையு மிடனுகர் தெண்ணீ ரொணசுட ரெண்ணெய்வெள் ளிலைகா, யிவைகளொன் பதுந்தன் மனைவயி னடைந்தோர் மகிழ்வுற வினி தினி லளித்தல், நவையற வில்வாழ் வடைந்துளோன் பூண்ட கடனென நான்மறை நவின்ற.

(இ-ள்.) பீடம் - கால்கழுவ நீர்-தம்மாற் கூடிய அன்னம்-பொலிவமைந்த குளிர்ந்த மலர்ச்சயனம்-சந்தோஷத்துடன் வசித்தற்கு இடம் - குடித்தற்குத் தெளிந்த நீர் - ஒளியமைந்த சுடர்விளக்கு - எண்ணெய் — தாம்பூலம் ஆகிய இவ் வொன்பதும் தனது வீட்டிற்கு வந்தவர்கள் களிப்படையுமபடி இனிதாகக் கொடுத்தல் குற்றம் நீங்க இல்வாழ்க்கையைப் பெற்றுள்ளவன மேற்கொண்ட கடமையென்று நான்குவேதங்களும் கூறின. எ-று. (கஅ)

பிறர்மனை விழைதல் நிலைபிழைத் தொழுகல் பொய்ம்மொழி பிதற் றுதல் சீற்ற, மறுமிகு வயிரங் குறளையே லாத மொழியினை நவிலுதல் மாயை, நிறிபகர்ந் தொழுக லாயவொன் பானுங் கீழ்மையோ ரொழுக்க மில் வாழ்வி,னுறைநுந ரிவற்றை விடுகவென் றினிதி னுரைத்தனர் நூன் முறை யுணர்ந்தோர்.

(இ-ள்.) பரதாரகமனஞ்செய்தல் - நிலைதவறிநடத்தல்—பொய்வார்த்தை பேசுதல்—கோபம்—பாவமிகுந்த பகை—கோள்-தகாதவார்த்தைகளைச்சொல்லுதல்-மாயை - வஞ்சனைபேசி நடத்தல் ஆகிய இவ்வொன்பதும் தாழ்ந்தோர் நடக்கைகளாம். இல்வாழ்க்கையிலே வசிப்போர் இவற்றை விடக்கடவர் என்று நூல்களை முறையாகக் கற்றறிந்தோர் இனிதாகச் சொல்லினர். எ - று. (கசு)

அலைபுனல் படிதல் சந்திவந் தனைநல் லருமறை செபித்தறிக் கரும
மலர்தரு சாகை மறையினை நவிறல் மலர்கடு மிறைவனை வணங்க
விலகொளி யழலில் வயிச்சுவ தேவ மதிதிபூ சனையிறந் தோருக்
குலவுநீர் வழங்க லில்லுறை வோரிவ் வொன்பதுந் தினஞ்செய லுரித்தாம்.

(இ-ள்.) அலைகளையுடைய நீரில் மூழ்குதல் - சந்தியாவந்தனை - நல்ல அருமையாகிய மந்திரஜெபம் - (ஓமமுதலிய) அக்கினி காரியம் - பரந்த சாகைகளையுடைய வேதங்களைப் பாராயணஞ்செய்தல் - கடவுளை மலரா னருச்சித்துப் பணிதல் - ஒளி விளங்கும் அக்கினியில் வயிசுவதேவஞ் செய்தல் - அதிதிபூசை - பிதுர்த்தர்ப்பணம் ஆகிய இவ வொன்பதும் இல்வாழ்வோர் தினமுஞ் செய்தற்குரியனவாம். எ - று. (உ0)

மந்திரந் தன்னைப் பிரரவ மதித்தல் மகளிரைச் சேர்தல்வஞ் சனைதன்
நந்தலி லாயுள் பிறந்தநா ளில்லி லெண்ணிய குற்றநீ ணிதிய
முந்திய கற்பின மனைவிதன் குணங்கள் மொழிந்தவிவ் வொன்பது மாவி
சிந்துற வரினும் பிறரொடு மொழிதல் தீதென வுரைத்தனர் தெளிந்தோர்.

(இ-ள்.) மந்திரம்-தன்னை அயலோர் அவமதித்தல் - மாதரைக் கலத்தல்-தனது வஞ்சனை-தனது கெடுதலில்லாத ஜீவகாலம்-பிறந்தநாள் - வீட்டிற் பொருந்திய குற்றங்கள்-தனக்குள்ள பெரிய செல்வம் - சிறந்த கற்பினையுடைய மனையாட்டியின் குணங்கள் ஆகச் சொல்லிய இவ வொனபதும் உயிரழியும்படி சமையம் வந்தாலும் அனனியருடன் சொல்லுதல் கொடியதென்று (நூற்கேள்வியில்) தெளிந்தோர் சொல்லினர். எ - று. (உக)

தகுதிகொள் கடனக் கடனறனைத் தீர்த்தல தான்பொருள் கோடல்
பின் பகர்தல், மகளிரைக் கொடுத்தல் தன்னுடை யொழுக்க மரபினிற்
புரிந்ததன் பாவம, புகலரு மயலோர் நற்குண மென்னப் புகன்றவிவ்
வொன்பது மெவர்க்கு, மிகலற மறையா துரைத்திட லொழுக்கத் தியல்
பென மொழிவர்நன் குணர்ந்தோர.

(இ-ள்.) தனக்குத் தகுதியானது - பெற்றுக்கொண்டிருக்கும் கடன் - அந்தக் கடனை யொழிக்கும்வகை - தான பொருள்தேடும்வழி - பிறகு செலவிடுதல் - பெண்ணை (மணஞ்செய்து) கொடுத்தல் - தனது நடக்கை - தனது வமிசத்திற் செய்த பாவம் - சொல்லுதற்கரிய பிறரது நல்ல குணங்கள் என்று சொல்லிய இவ வொன்பதும் எல்லாருக்கும் பகைமை நீங்க ஒளியாமற் சொல்லுதல் நல்லொழுக்கத் தியற்கை யென்று நனறாகக் கற்றோர் சொல்லுவர். எ-று. (உஉ)

மெய்ம்மைநற் பொறைவெங் கொலைசெயா தொழுகல் மேவுமெக்
கரணமு மடக்கல், செமமைசேர் தூய்மை வரைவுறு தளித்தல சீற்றநீங்
குதல்கள வின்மை, யமமவென் றெவரு மாற்றுதல பரியா வருள்செய
லாயவொன் பானும், வம்மென வமர ரெதிர்புகுந் தழைப்ப வானிடை
விடுத்தது தாமால்.

(இ-ள்.) சத்தியவசனம் - நல்ல சாந்தம் - கொடிய கொலை புரியா திருத்தல் - பொருந்திய எல்லாக்கரணங்களையு மடக்குதல் - செம்மைதங்கிய பரிசுத்தம்-அளவுபடாது கொடுத்தல்-கோபத்தினின்றும் விலகல்-திருட்டில்லாமை-ஐயோ !

என்று எவரேனும் வருந்தற்கு மனமிரங்கி அருள்புரிதல் ஆகிய இவ் வொன்பதும் தேவர்கள் எதிர்கொண்டு வருகவென அழைக்க ஆகாயத்திற்கனுப்பியதூதாகும்

முகனெதி ரொன்றும் பிரியினமற் றென்று மொழிபவர் விழைவுறு தூத ரகன்றகேள் வியிலா ரருமருத் துவாக ளருமபொருள் கவருநா தூர்த்தர் புகலருந் தீமை புரிபவா மலலர் செருக்கினா புன்றொழிற் றீயோர். நிகழ்தரு மினையோ ரொன்பது பெயர்க்கு மீந்திடல் பழுதென விசைப்

(இ - ள்.) முகத்துக்கெதிரிலே ஒன்றும் பிரிந்தால் வேறொன்றுஞ் சொல்லு வோர்-விரும்பத்தகுந்த தூதர்கள்-பாரத நூற்கேள்வி யிலவாராகிய அரிய வைத் தியாகள் - அருமையாகிய பொருள்களைக் கிரகிப்போர் - காமுகர் - சொல்லுதற் கரிய தீச்செயல்செய்வோர் - மல்யுத்தக்காரர்கள் - கர்வமுடையவர் - இழிதொ ழில் புரியும் கொடியோர் ஆகிய இகழ்ச்சிபொருந்திய இவ் வொன்பதுபேருக்கும் கொடுத்தல் குற்றமென்று பெரியோர் சொல்லுவர். எ - று. (உச)

மாண்புடை யாளர் கேண்மையர் தத்தம வழிமுறை யொழுக்கினி லமர்ந்தோர், சேண்படு மிரப்பி னெய்தினோர் புரப்போர் தீர்ந்தவர் தந் தைதாய் குரவர், காண்டகு முதவி புரிந்துளோ ரினையோ ரொன்பதின் மருமுளங் களிப்ப, வேண்டுறு நிதிய மளிப்பின்மற் றொன்றே கோடியா மெனமறை விளம்பும்.

(இ-ள்.) மாட்சிமையுடையவர்கள் - சிநேகிதர்கள் - தமது வழிமுறையின கிரமத்தி லிருப்போர் - மிகுதியாகிய தரித்திரமுற்றடைந்தோர்-காப்பாற்றுவோர்- துறவிகள் - பிதா மாதாக்கள் - குரு - காணத்தக்க உபகாரத்தை முன செய்துள் ளோர் இப்படிப்பட்டவர்கள் ஒன்பதுபேரும் மனங்களிக்கும்படி வேண்டியவனை யிற் செல்வ மளித்தால் ஒன்று கோடியாகுமெனறு வேதஙகள் கூறுகின்றன.

தன்மனை யவளை யடைக்கலப் பொருளைத் தன்னுழை யடைந்து ளோன் றன்னை, மன்னுதன் மரபி னொழுக்கினை வைப்பை மனையவள் கொணர்ந்தவான் பொருளை, நன்மக வதனை யம்மக விருக்க நண்ணிய பொருளினைத் தினையு,மின்னுயிர் விடுக்கு மெனக்கொடுந் துயர மெய்தினு மீந்திட லாகா.

(இ-ள்.) தனது பெண்சாதியையும், தன்பால் அடைக்கலமாகவந் துள்ள பொருள்களையும், சரணடைந்தோனையும், நிலைபெற்ற தனது குலத்தின் நடக்கை யையும், பொருள்வைப்பையும், மனையாட்டி கொண்டுவந்த சிறந்த சீதனப்பொ ருள்களையும், நல்ல குழந்தையையும், அழகிய குழந்தையிருக்க அடைந்த எல்லா ப்பொருளையும் இனிய உயிர் துறக்குமென்று சொல்லும்படி கொடிய துன்பம டைந்தாலும் (பிறருக்கு) கொடுத்தலாகாது. எ-று. (உரு)

முன்னவ னிருப்பப் பின்பிறந் தோர்கள் வேட்பினில் வருமக முடிப்பி, னின்னல்கூர் நரகி னெய்துவர் முன்னோன் மூங்கையாய்ச் செவி

டனு யிருபபின், மன்னிய துறவு பூண்டிடிற் சேட்செ‌ன் றறிவுறு துறை யினமற் றவன்றன், பினனவ னினைய புரிவதற் குரிய னென்பா நூன் முறைதெரி பெரியோர்.

(இ-ள்.) தமையன் (விவாகமின்றி) இருக்கையில், தம்பியர் விருப்பத்தால் வருகின்ற மணஞ்செய்துகொண்டால் துன்பமிருந்த நரகத்தை யடைவார்கள்; (ஆனால்) மூத்தவன் ஊமையாகவாவது செவிடனுகவாவது இருந்தாலும், நிலைபெற்ற சந்நியாசம்பெற்றுக்கொண்டாலும், தூரதேசம்போய் இருப்பிடம் தெரியாது வசித்தாலும் அவனுக் கிளையவன இது செய்துகொள்வதற் குரியன் என்று நூல்களை முறையாகத் தெரிந்த பெரியோர் கூறுவர். எ - று. (உஎ)

துறந்துளோர் மகளிர் புணர்முலைப் போகந் துய்த்திடி னளப்பருங் காலு, மிறந்துழி மலத்திற புழுவதாய் நரகி னெய்துவர் பின்னவ ரிடத்தி, னறம்பயில விஞ்சை கறறுளோ ரவர்பா லருமபொரு ளேற்றுளோ ரவர்பாற், பெறும்பொரு ளதனுல் வேள்வியாற் றுநர்கள் பிழைப்பரு நரகி டைச் சேர்வார.

(இ-ள்.) துறவிகள் பெண்களது நெருங்கிய முலைகளைத் தழுவிச் சுகமனுபவித்தால் இறந்தபின்னா அளவில்லாத காலம் மலத்திற் புழுவாகப் பிறந்து நரகமடைவார்கள். கீழ்க்குலத்தோரிடத்தில் தரும மார்க்கமாகிய வித்தியாப்பியாசஞ்செய்தவர்கள்-அவர்களிடத்தில் அரிய பொருளைப் பெற்றோர்கள் - அவரிடத்திற் பெற்ற பொருளைக் கொண்டு யாகஞ்செய்தோர் (ஆகிய இவர்கள்) பிழைத்தற் கரிய நரகத்திற் சேருவார்கள். எ - று. (உஅ)

தெறுவியா லன்றிக் கையினு லடிசி லிடுதலேற் றருந்துத றீதா, முறைபிறழ்ந் திருப்புத் தெறுவியா லிடுவோர் மூழ்குவா கொடியபாழ் நரகி, னறியவென் றயின்றோர் மலநுகர்ந் தோராகள், நகையினை விரலி னுற் றேய்த்தோா, வறிதின்வெள் ளுப்போ டயின்றவ ராவின் றசையை வாய் மடுத்தவா போல்வார.

(இ-ள்.) தெறுவியாலல்லாமல் கையால் அன்னத்தைப் பரிமாறல்-கையிலேற்றுப் புசித்தல் தீயதாம். கிரமந்தவறி இரும்பாலாகிய தெறுவியால் அன்னமிட்டோர் கொடுமைதங்கிய பாழ்நரகத்திலே யாழ்வார்கள். (அவற்றை) நல்லனவென்று கூறி யுட்கொண்டோர் மலபக்ஷணிகளாவர். பல்லை விரலாற் றேய்த்தவர்கள் வறுமையினுலே வெள்ளுப்புடன் கூட்டித் தின்றவர்கள் (ஆகிய இவர்கள்) கோமாமிசத்தை யுண்டவர்களைப்போ லாவர். எ - று.

தெறுவி=அன்ன மெடுக்குங்கருவி. (உகூ)

கையினு லளித்த வுப்புநெய் தெண்ணீா கன்னலிற் கனிந்தபா லடிசி லைபமேற் றிவற்றை யருந்திலான் றசையை யருந்திய பாவம்வந் தடையும் மையில்வெண் சோறு நுகர்ந்தவர் வாயிற் பெய்தநீ ருமிழ்கலார் பருகிற் செய்யதம்முயிரைத்தென்புலத்தோரைத்தேவரைச்செகுத்தவ ராவார்.

(இ - ள்.) கையாலிட்ட லவணம் - நெய் - தெளிந்த சலம்-கற்கண்டுபோல மதுரமான பாற்சோறு ஆகிய இவற்றை ஐபமேற்றுப் புசித்தால் கோமாமிசத்தைத்தின்ற பாவம் வந்து சேரும். குற்றமில்லாத வெண்மைவாய்ந்த சோற்றைப் புசித்தவர்கள், வாயில் வார்த்த சலத்தை உமிழாதவராகிக் குடித்தால், செம்மையாகிய தமது உயிரையும் பிதுரரையும் தேவர்களையும் கொன்ற பாவிகளுக்கு நேராவார்கள். எ - று. (௰)

உண்டவ ரங்கை விளக்கிய பின்ன ருத்தரா போசனங் கொண்டால், மண்டுதீ நரகி னெய்துவர் பலராய் வழங்கிய போனக நுகரிற், றொண்டையங் கனிவாய் மகளிர்சீ மந்த விழைவினிற் றுய்ப்பினற் பசும்பொன், கொண்டுநூல் பயிற்று மவர்மனை யருந்திற் சாந்திரா யணங்கொளல் வேண்டும்.

(இ-ள்.) புசித்தவர்கள் அழகிய கையைச் சுத்தஞ்செய்தபிறகு இரண்டாவது முறை உணவுசெய்தால் நெருப்புமிருந்த நரகத்திலடைவார்கள். பலராக விருந்து அளித்த அன்னத்தை உட்கொண்டாலும், அழகிய ஆதொண்டைக்கனி போல வாயையுடைய மாதரது சீமந்த முகூர்த்தத்தில் சாப்பிட்டாலும், நல்ல பசும்பொன்னைப் பெற்றுக்கொண்டு நூல்களைக் கற்பிப்போரது வீட்டிலருந்தினாலும் சாந்திராயணவிரதஞ் செய்தல் வேண்டும். எ-று.

சாந்திராயணம் - என்பது முன் விளக்கப்பட்டுள்ளது. (௧௧)

தீதுறு கனவு காணில்வெங் கலரைத் தீண்டிலுண் டவையெதி ரெடுப்பின், மாதரை முயங்கி லபானவா யுவினை விடுக்கில்வண் புனலிடைப் படிக, யாதினுந் துறந்தோ ரருமகம் புரிந்தோர் பிரமசா ரியரொனு மிவர்க்குச், சூதக மிலலே பகவர்பாற் றென்பா னோக்கியே துய்த்திடல் வேண்டும்.

(இ-ள்.) தீய சொப்பனங்கண்டாலும், கொடிய கீழ்மக்களைத் தொட்டாலும், புசித்தவற்றை எதிரெடுத்தாலும், மங்கையரைப் புணர்ந்தாலும், அபானவாயுவைவிட்டாலும், வளப்பம் பொருந்திய நீரில் மூழ்கக்கடவர். எல்லாவற்றிலும் (ஆசைநீங்கித்) துறந்தவர்கள் - அரிய யாகங்களைச் செய்தோர் - பிரமசாரிகள் என்று சொல்லப்படும் இவர்கட்குச் சூதகமிடையாது, சிரார்த்த காலத்திலே பிதுரத்தேவராக விருக்கையில் தென்றிசை நோக்கியே புசித்தல்வேண்டும். எ-று.

எதிரெடுத்தல்=வாந்திசெய்தல். அபானவாயு = குதத்தினின்றும் கீழ் நோக்கிச் செல்லும் காற்று. பகவர்=தேவர். (௧௨)

சந்தியில் மரணும் பொருள்கவர்ந் தோது வித்தவன் றன்னையுந் தூய
செந்தழல் வேள்வி யூபமு மீமத் தடுக்கிய கட்டையுந் தீண்டி
னுந்துதண் புனலிற் றோய்கவான் றொழுவில் யாகசா லையிலுயர் முத்தீ
யந்தண ரிடத்திற் றேவரா லயத்தி லிருந்துமிழ்க் கழறொட லாகா.

(இ-ள்.) சந்தியிலிருக்கும் மரத்தையும், பொனபெற்று நூல் கற்பித்தோனையும், பரிசுத்தம்பொருந்திய சிவந்த அக்கினிகாரியமாகிய யாகத்திலுள்ள யூபஸ்தம்பத்தையும், மயானததில் அடுக்கின விறகையுந் தொட்டால் குளிர்ச்சிவாய்ந்த நீரில்மூழ்கக்கடவா. சிறந்த வணங்குதலிலும்,யாகசாலையிலும், உயர்வாகிய மூன்று தீயையுடைய வேதியரிடத்திலும், தேவாகோயிலிலும் இருக்கையில் (ஒருவரது) பாதங்களைத்தொடுதல் கூடாது. எ - று.

யூபம்=யாகப்பசுவைக்கட்டுந் தறி. (கக)

மண்டலங் கோட்டி யுண்கல னதன்மேல் வைத்தினி தயில்கமண் டலமு, மொண்டழல் மறையோர்க் குரித்துநாற் கோண மரசருக் குரித் துமுக் கோண, மெணடரு நாய்கர்க் குரித்துயர் வட்டம் பின்னவர்க் கிரும்புன றெளித்தல், கொண்டுதன் கையில் மடியினிற் கலம்வைத் துண் டறீ தெனமறை கூறும.

(இ-ள்.) மணடலஞ்செய்து அதன்மேல் பரிகலத்தை வைத்து இனிதாகப் புசிக்கக்கடவர். அம் மண்டலமும் ஒளிவாய்ந்த நெருப்பையுடைய வேதியருக்கு நாற்கோண முரியது. மன்னவருக்கு முக்கோணமுரியது. எண்ணத்தக்க வைசியருக்கு உயாவாகிய வட்டவடிவ முரியது. சூத்திரருக்குப் பெருமைதங்கிய நீா தெளித்த லுரியது. கையி லேற்று அல்லது கலத்தைத தன்மடியில் வைத்துக் கொண்டு உண்ணுவது தீது என்று வேதங்கள் சொல்லும். எ - று. (கச)

கட்டிலிற் பீடந் தனிலிருந் தருந்தல் கப்பரை தனிலுண லாகா
வுட்டெளி மறையோ ரளித்தசோ றமிர்தம் வேந்தர்சோ றுவந்தபா லடிசி
லெட்டிய ரளித்த வடிசில்நல் லடிசில் பின்னவ ரினிதிடு மூரல்
கொட்டிய குருதி யாதலாற் பின்னோ ரிடத்துணல் குறிப்பினு மாகா.

(இ-ள்.) கட்டிலிலும் பீடத்திலு மிருந்து உண்ணுதல் - மட்கலத்திற் புசித்தல் இவை கூடாது. மனந்தெளிந்த வேதியர் தந்த அன்னம் அமிர்தமாகும். மன்னவ ரளித்த சோறு சந்தோஷித்த பாற்சோறாகும். வைசியரிட்ட சோறு நல்ல சோறாகும் சூததிரர் இனிதாகக்கொடுத்த சோறானது சிந்திய உதிரமாகும். ஆனபடியால் சூததிரரிடத்தில புசித்தல் நினைத்தாலு மாகாது. எ - று. (கரு)

பொய்யுரை புகலிற் றீமையா மென்னப் புகன்றனர் புலமைநன் குணர்ந்தோர், ஐயநுண் மருங்குற் செய்யவாய் மகளிர் புலவியி லந்தண ராவி, யுய்யுமென் புழியி லாவினை யளிக்கு மிடத்தினி லோடரி நெடுங் கட், டையலார் மணத்திற் பொய்ம்மையு மெய்ம்மை தன்னினும் விழுமி தா மன்றே.

(இ-ள்.) பொய்ம்மொழி சொன்னால் குற்றமாமென்று நன்குணர்ந்த கவிஞர்கள் கூறினர். அழகிய நுண்ணிய இடையையும் சிவந்த வாயையுமுடைய மங்கையர் பிணக்கிலும், மறையோ ருயிர்பிழைக்குமென்னும் ததியிலும், பசுவினைத் தானங்கொடுக்குஞ்சமயத்திலும்,அரிபரந்த நெடிய கண்களையுடைய மாதர் மணத்

திலும் (ஆகிய இடங்களி) லெல்லாம் பொய்பேசுவதும் மெய்யைக் காட்டிலும் சிறந்ததாம். எ - று.

"பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின" என்று திருவள்ளுவநாயனாரும்,

"பொற்றொடி மணஞ்செய் போதும் புலவியை யொழிக்கும் போதும்
நற்குல மழியும் போதும் நல்லவர் தம்மைக் கொல்ல
அற்பர்கள் முயலும் போது மருஞ்சமர் விளையும் போதும்
முற்புக லேந்திடத்து மொழியலாம் நூறு பொய்யே" — எனப் பிறரும் கூறியிருப்பதற் கேற்ப "பொய்யுரை * * * விழுமிதாமன்றே" என்றார். (௩௰

பெருத்தண் புனலி னீந்துவோன் றியில் வெருவுறூ தடைபவனை பெட்பின, மரனிடை யுயர்ந்த கன்மிசை யிவர்வோன மைந்தனை மனை வியை விற்போ, னுறைபெறு மிவாக ளறுவருந் தமக்குத் தாமுயர் கதை யினைச் சுழற்றி, வெருவர வெதிரும பிறையெயிற் றழல்வாய் வெகுதிறற் கூற்றென லாவார்.

(இ - ள்.) குளிர்ந்த நீர்ப்பெருக்கத்தில் நீந்துகிறவன் - பயப்படாமல் நெருப்பைக் குறுகுவோன்-ஆசையால் மரத்திலும், உயர்ந்தகல்லின்மேலும் ஏறுவோன் - புத்திரனையும் பெண்சாதியையும் விலைக்குக் கொடுப்போன் ஆகச் சொல்லிய இவர்கள் ஆறுபேரும் தமக்குத் தாமே உயர்வாகிய கதாயுதத்தைச் சுழற்றிக்கொண்டு அஞ்சும்படி எதிர்க்கின்ற பிறைச்சந்திரன்போன்ற (வக்கிர) தந்தத்தையும், நெருப்புப்போன்ற வாயையும், வெவ்விய பராக்கிரமத்தையு முடைய எமனுவார்கள்.

சூளுற வுரைப்பின் மறையவர் தமது சத்திய மினிதுசூ ளுறுக, வாளினைத் தோளை மன்னர்சூ ளுறுக பொன்னினை வணிகர்சூ ளுறுக, வாளுநற் சூளுக் குரைத்தவை யெல்லாஞ சதுர்த்தர்சூ ளுறுகவான் றொழூவிற், கோளுறத் துயிறல் மறையினை வெளியிற் கூறுத றீமையா மன்றே.

(இ - ள்.) சபதம் பொருந்தச் சொன்னால் வேதியர் சத்தியம் செய்து சத்தியஞ்செய்யக்கடவர். க்ஷத்திரியர் வாளாயுதம் புஜம் இவற்றைத் தொட்டுச் சத்தியஞ்செய்யக்கடவர். வைசியர் பொன்னைத் தொட்டுச் சூளுரை கூறுக. சூத்திரர் மேற்குலத்தாருக்குக்கூறியவெல்லாம் தொட்டுச் சூளுரை கூறுக. பசுத்தொழுவிலேகுற்றம் பொருந்தத் தூங்குதலும், மந்திரங்களைப் பகிரங்கத்திற் சொல்லுதலும் கொடியவாம். எ - று. (௩௧)

மன்னவர் மன்னர் குமரரெந் நூலும் வழுவற வுணர்ந்தவே தியர்க ளுன்னிய குஞ்சி குறைப்பதற் கியைந்த விடத்தினிற் கருமத்திற் றொகுதி பொன்னினி தளித்து மயிர்வினை புரியா தொழிதலாம் பூண்கழிந் திடாத கன்னியர் தமக்கு மயிர்வினை வேண்டி லிருவிரன் மயிர்க்கடை களைக.

(இ - ள்.) அரசர்- அரசகுமரர், எல்லாச் சாத்திரங்களையும் பிழையறக் கற்ற அந்தணர் (ஆகிய இவர்கள்) நெருங்கிய தலைமயிர் களைவதற்குப் பொருந்தியவிடத்

தில், தாம் செய்தொழிலாற் றேடிய பொன்னை இனிதாகக் கொடுத்துத் தலைமழு க்காது நீங்குதல் தகுதியாகும். மங்கல்யமிழக்காத நங்கையருக்கு க்ஷவரம்செய்ய நேர்ந்தால் இருவிரலகலம் மயிரைக் கடைசியில் நீக்கக்கடவர். எ - று. (ருகூ)

தன்னுடை யொழுக்கந் திறம்பினோன் றன்னைத் தடிந்திடுங் கூற் றெனத் தருவான், பன்னிய சபதம் பயின்றிடான் முத்திப் பரவையிற் படிகுவான் றினமு, மன்னிய புலன்க ளடக்கினோ ருண்மை வழுவுறா தவர்தமை யுணர்ந்தோர், நன்னெறி யறிந்தோர் மனையறம் பூண்டோ ரெனுமிவர் வீடெண் ணுவரால்.

(இ-ள்.) தனது (வருணாச்சிரம) தருமந் தவறினவனை இயமன் தண்டிப் பானென்று தகுதியாகிய சிறந்த சபதஞ் செய்யாதவன் மோக்ஷமாகிய கடலில் மூழ்குவான். எப்போதும் ஐந்து புலன்களையும் புறஞ்செல்லாது காத்தோர் - சத் தியந் தவறாதவர்கள் - தம்மை யறிந்த ஞானிகள் - நன்மார்க்கத்தைத் தெரிந்தவ ர்கள் - இல்வாழ்க்கையி லுள்ளோர் என்று சொல்லப்பட்ட இவர்கள் மோக்ஷ வீட்டை யடைவார்கள். எ-று. (௩0)

இல்லறங் கூறிய அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ககருஅ.

சிவமயம்.

நாற்பதாவது,

## யோகநிலை யுரைத்த அத்தியாயம்.

நரைதிரை புகுத மைந்தரு மினிதி னன்மக வுயிர்த்தபின் ஞரு
மருவிய மனைவாழ் வொருவியிற் கிழத்தி தன்ஞெடும வளர்த்ததீ யோடு
மரின்மிடை கானம புகுதறன மனையை மைந்தாபா விருத்தியாண் டேக
லுரியமெல் லடகு மூலமார்ந் தைந்தா மெச்சமு மொழிந்திடா தாற்றல்.

(இ-ள்) நரை திரை வரும்படித் தனது புதல்வரும் இனிதாக நல்ல குழந்தைகளைப் பெற்றபிறகு, அதுவரையிலும் பொருந்திய இல்வாழ்க்கையை நீங்கி, பாரியாளுடனும் தான வளர்த்துவந்த வைதிகத் தீயுடனும், சிறுதூறுகள் நெருங்கிய வனத்திற் செல்லுதல்-(அல்லது) தனது மனைவியைப் புதல்வரிடத்தி லிருக்கச்செய்து அவ்வனத்துக்குப் போதல்-(உண்ணுதற்குத்) தகுந்த மெல்லிய இலைகளையும் கிழங்குகளையும் புசித்து ஐவகையாகிய யாகங்களையும் நீங்காமற் செய்தல்.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

நரை=மயிர் வெளுத்தல். திரை=உடலின் மீக்தோல்சுருங்குதல். வைதிக முறை யுடையோர் ஓர்கால் நெருப்பேற்றுஹோமகாரியஞ் செய்யின், தம்ஆயுள்வரையில் யாகமுதலியவற்றிற்கு மீண்டும் தீ வேண்டாது பாதுகாத்துக்கொள்ளவேண்டுதலின் "வளர்த்த தீ" யென்பது தம்மாற்செய்த யாகங்களில் அவியாது காத்த நெருப்பை என்க. (க)

விழெனக் கிடந்த புரிசடை மயிர்நீண் மெல்லுகிர் குறைத்திடாதொழுகல், கேழ்கிள ரிரவி படுந்துணை வனத்திற் றிரிந்துபின் கெழுமிருட் போதிற், றாழ்மனை போந்து துறந்துளோர் பிரமத் தொழுகுவோர் தமக்குணை வளித்துச், சூழ்வரைச் சார லைவன மாவி னழலினைத் துகளற வியற்றி.

(இ-ள்.) விழுதுபோல விளங்கும் புரிந்த சடையாகிய மயிரையும், நீண்டமிருதுவாகிய நகத்தையும் மழுக்காமல் வளர்த்திருத்தல் - (சிகப்பு) நிறம் விளங்காநின்ற சூரியன் அஸ்தமனமாகும்வரையில் கானகத்தி லுழன்று, பிறகு இருள்மிகும் இராத்திரிகாலத்தில், (ஆங்கு தன்னாற் செய்யப்பட்ட) தாழ்மனைக்கு வந்து, துறவிகள்-பிரமஞானமுற்றோர்களுக்கு அன்னம் பாலித்து, புடைசூழ்ந்திருக்கும் மலைச்சாரலிலுள்ள மலைநெல்லை அக்கினியால் (பதப்படுத்தி) குற்றம் நீங்க மாவைப் போற் செய்து. எ-று.

தாழ்மனை=பெருமையற்ற வீடு அதாவது பன்னசாலை, சிறுகுடிசை என்றபடி. ஐவனம்=மலைநெல். (உ)

இனியநுண் டேறல் மென்றசை முருங்கைக் காய்முதீ லிகழ்வன
லிகழ்ந்து, முனமினி தமைத்த வைப்பொடு காட்டில் விளைந்தவை முழு

வது நீக்கித், தனிகொணர் சாலி பல்லூர லாகத் தடிந்துண லல்லது கல வா, னனிபடக் குறைத்து மிசைகெற் கோட னுடொறுங்கொணாந்திட ல வேண்டும்.

(இ-ள்.) இனிப்பாகிய நண்ணிய மது - மெல்லிய இறைச்சி - முருககைக் காய் முதலிய விலக்கற்குரிய பண்டங்களை யொழிதது, முனனே இனிதாகச் சமைத்திருக்கும் பொருள்களுடன், நாட்டில் விளையும் திரவியம் யாவையும் விலக்கி, தானே கொண்டுவந்த நெலலைப் பல்லையே உரலாகக் கொண்டு குத்திப் புசித்தல் - அல்லாவிடின் கல்லினால் மிகப்பொடியாம்படி குத்திப் புசிக்கக்கடவர், (வானப்பிரஸ்தர்) நெல்லைக் கொண்டுவருதல் பிரதிதினமும கொணாதல்வேண்டும்.

அன்றெனிற் றிங்க ளொன்றினுக் கேனு மறுமதிக் கேனுமற் றியலா ன், டொன்றினுக் கேனு மைவன மீட்டிக கங்குலி னருந்துத லொழுக் கா, மின்றெனி லோாநா ளிடைவிடுத் தேனும பக்கமொன் றிடையொழித் தேனு, மன்றவோா திங்கட் கொருபொழு தேனு மருந்துத லருமறை வழக்கே.

(இ-ள்.) அல்லாவிடின் மாத மொன்றுக் காறனும், ஆறுமாதத்திற் காகிலும், பொருந்திய வருஷமொன்றுக்காகிலும (ஒருமுறை) மலைநெல்லைக் கொணாந்து இரவிற் புசித்தல் நல்லொழுக்கமாம். இல்லாவிடின் ஒருநா ளிடைவிட்டாகிலும, ஒரு, பக்ஷம் இடைவிட்டாகிலும், நிலைபெற ஒருமாதத்திற் கொருநாளாகிலும் புசித்தல் அரிய வேதத்தில் விதித்த முறையாகும். எ று.

"ஓர்நா ளிடைவிடுத்தேனும் பக்கமொன் றிடையொழிததேனும், மன்றவோர் திங்கட் கொருபொழுதேனு மருநதுதல்" என்பது — நாள் மாற்றி நாளாவது, பதினைந்து தினங்களாகிறபட்சத்துக கொருமுறையாவது, மாததிற் கொருமுறையாவதுஉண்ணுதல் எனக் கொள்க. (ச)

அல்லது சாந்தி ராயண நுகாக வலதட கருந்துக வன்றே
லெல்வியும் பகலு னோற்றுடல வாட்டி யிமையவா தெனபுலத் தோர்கள்
நல்லன புரிதற் கியற்றுக கருமத் தழலைநல லுயிரொடுஞ சேர்த்திக்
கல்வியல கானிற் றிரிவதே வானப பிரததாதங் கடனெனத் தருமால்.

(இ-ள்.) அல்லது சாந்திராயணவிரதம்போலப் புசிக்கக்கடவர்; அல்லது இலைகளைப் பட்சிக்கக்கடவர்; அல்லது இரவும்பகலும் விரதமிருந்து சரீரத்தை இளைக்கச்செய்து தேவர் பிதுரா நன்மையை யுண்டுசெய்தற்கு (வேண்டிய கருமங்களைச்) செய்யக்கடவர்; ஹோமத்தீயைஉயிருடன் கொண்டு மலையிலும் பொருந்திய வனத்திலும் சஞ்சரிப்பதே வானப்பிரஸ்த ஆச்சிரமமுற்றோாது கடமையென்று சொல்லத்தரும். எ - று. (ரு)

மேயழுக் கடனுந் தீர்த்தலாற் றுறத்த னீதியன் றெனமறை விளம்பு
மாயுனி னுன்காங் கூற்றினி னுன்கா மாச்சிர மந்தனி லொழுக்
லேய்வன வாகு மோரிடத் துறையா தெங்கணுத் திரிந்திடல் வேண்டு
மோய்வது தியானந் தூய்மையேற் றுண்ட றமியனு யுறைதலே யுசிதமாம்.

(இ-ள்.) பொருந்திய மூன்று கடன்களையுந் தீர்த்தல்லாமல் சந்நியாசம் பெறுதல் தருமமுறையல்ல என்று வேதங்கள் கூறுகின்றன. உயிர்வாழ் காலத்தில் நான்காவது பாகத்தில் நான்காவதாகிய சந்நியாசாச்சிரமத்தில் ஒழுகுதல் அமைந்தவாகும். அவர்கள் ஓரிடத்தில் வசிக்காமல் யாண்டு முழல்வேண்டும். நீங்காத பிரமத்தியானமும் பரிசுத்தமும் யாசிததுபபுசித்தலும் ஒன்றியாக வசித்தலுமே சந்நியாசிகட் குரிய ஒழுக்கங்களாம். எ று.

முக்கடன - தேவா - பிதுரர் - தென்புலததார் கடன்களாம். ஆயுளினுள் நாங் கூற்று என்பது மனிதாவயது நூறென்னுங் கணிதப்படி எழுபத்தைந்துக்கு மேல். (சு)

யானென தென்னுஞ் செருக்கெறிந் தியாண்டு முயர்மர நீழலி லிருக்க, வானுறை பிலிற்று மதியொரு நான்கு மருவுமோர் நகர்வயின் வதிக, வூனுடைப் புழுமென் முளையிவை மிதியா தொதுங்கல்மென் னகமயி ரொழித்தல், கான்வரைத் தண்டு கைவிடா திருத்தல முனிதல்செய் யாமைகொள் கடனே.

(இ-ள்.) யானென்னு மகப்பற்றும் எனதென்னும் புறப்பற்றுமாகிய செருக்ககன்று எவ்விடததாகிலும்உயர்ந்த மரத்தின்நீழலிலிருக்கக்கடவர். மேகமானது மழைத்துளி சொரியும் நான்குமாதங்களும் பொருந்திய ஓரூரின்கண் வசிக்கக்கடவர். மாமிசம் பொருந்திய புழுக்கள் மெல்லிய முளைகள் ஆகிய இவற்றை மிதிக்காது விலகி நடத்தல் - மெல்லிய நகத்தையு மயிரையு நீக்கல் - வனத்திலுள்ள மூங்கிற்கோலைக் கையினின்று விடா திருத்தல் - கோபங் கொள்ளாமை ஆகிய இவை சந்நியாசிகள் கொள்ளவேண்டிய முறையாம். எ-று.

வானுறைபிலிற்றுமொருநான்குமதியாவன - ஆவணி - புரட்டாசி-ஐப்பசி-கார்த்திகை. ஊனுடைப் புழு வென்பது அவை என்பு முதலியவை நீங்கியிருத்தலா லென்க. (எ)

மண்ணினிற் றருவில் வளர்சுரை யோட்டிற் பாத்திரங் கொள்ளுதல் வயங்கு,மொண்ணிறக் கற்றோய் துகிலினைப் புனைத லோர்பகலருந்தலில் வாழ்க்கை,நண்ணினர் யாது வழங்கினுங் கோட லன்னவர் நன்மனைக் கருமம், பண்ணிய பின்னர் பலிகொளன் மிகவு மருந்திடா தொழிதல்பண் பாமால்,

(இ-ள்.) மண்ணாலும் மரத்தாலும் வளர்கின்ற சுரையோட்டாலும் உண்கலங்கொள்ளுதல் - விளங்குகின்ற (சிவந்த) ஒளிதங்கிய நிறத்தையுடைய (காவிக்) கல் தோய்த்த வஸ்திரந் தரித்தல் - ஒருவேளையுண்ணுதல் - கிரகஸ்தர்கள் எதைக்கொடுத்தாலும் பெறுதல் - அவ்வில்வாழ்வோரது நல்ல வீட்டிற்குரிய தொழில்களைச் செய்தபிறகு பிச்சைகொள்ளுதல் - அதிகமாகப் புசியாது நீங்குதல் தகுதியாகும். எ-று.

ஒண்ணிறக்கல் தோய்துகில் என்பது காஷாயவஸ்திரம். (அ)

கருவிடை யெய்து துன்பமு நிலத்தின் கண்ணுறிற் கொடியவெங் கோயின் மருவுவெந் துயரு நரைதிரை யெய்தி வருந்திய துன்பமுங் கூற்று

லுருவினை யொருவுந் துன்பமு மீட்டுங் கருக்குழி யொன்றுறு துயரும்
வெருவர வெண்ணி யின்பவீ டதனின் மேவகன் குணர்வதே வேண்டும்.

(இ-ள்.) கருப்பத்தி லிருக்கையி லடையுந் துயரையும், பூமியிற்பிறந்தால் கொடிய வெவ்விய நோயாற் பொருந்திய மிக்க துயரையும், நரை திரைகளையடைந்து வருந்துகிற துயரமும், இயமனால் சரீரத்தை யொழியுந் துயரையும், திரும்பவும் கருக்குழியிற் பொருந்துகின்ற துயரையும் அஞ்சும்படி நினைத்து மோட்சவீட்டி லடைதற் குரிய வழியை நன்றாகத் தெரிதலே (யாவர்க்கும்) வேண்டுவது.

அழிவதிவ் வுடம்பு முதலிய வனைத்து மழிவுறா திருப்பதென் றான்றும், வழுவறு மான்மா வென்பதை யுணர்ந்து முத்தியின் மருவுதற்கியைந்த, விழுமிய கரும மியற்றுதல் வேண்டு மாங்கவை வேதமே முதலாம், பழுதறு கலைக ளனைத்தையு முணர்த லதன்வழி நின்றிடும் பான்மை.

(இ-ள்.) இவ் வுடல்முதலிய எல்லாப்பொருள்களும் அழியுந் தகுதியுடையன. எக்காலத்திலும் அழியாதிருக்குந் தகுதியுடையது குற்றமற்ற ஆன்மா என்னுமிதனை அறிந்து மோட்சத்திற் கலத்தற்குப் பொருந்திய சிறந்த நற்கருமங்களைச் செய்தல்வேண்டும். அவை வேத முதலாகிய குற்றமற்ற சாத்திரங்கள் யாவையும் அறிதல் - அதிற்கூறிய முறையே நிற்கும் நடை (என்பனவாம்). எ-று.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின் - நிற்க வதற்குத் தக" என்றார் நாயனாராதலின், "கலைக ளனைத்தையு முணர்த லதன்வழி நின்றிடும் பான்மை" என்றார். (கo)

மன்பெரு ஞானப் பொருணிலை யுணர வேண்டுநர் வழுவற வினிதி
னின்பவீ டளிக்கு நூல்பல கேட்ட லாங்கவை சிந்தைசெய்திருத்த
லன்பொடு மதனைத் தெளிதலட் டாங்க யோகமும் பயிறலவ் வியோக
மென்புநெக் குருகப் பலபகற் பயிலி னல்லதை யெய்துறா தன்றே.

(இ-ள்.) நிலைபெற்ற பெரிய ஞானப்பொருளின் தன்மையை அறிய விரும்புவோர் குற்றம் நீங்க நன்றாக மோட்சவீட்டைத் தரத்தக்க பல நூல்களைக் கேட்டல் - அவற்றைச் சிந்தித்துக்கொண்டிருத்தல் - ஆசையுடனே அதைத் தெளிதல்-எண்வகைத்தாகிய அங்கயோகங்களையும் பழகுதல்(வேண்டும்). அவ்யோகமும் எலும்புகள் நெக்குவிட்டுருகும்படி பல நாட்களிற் பழகினாலல்லது வரமாட்டாது.

இச் செய்யுளில் ஞானநிலையைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிஷ்டை என நால்வகையாக்கிக் கூறினர். அல்லதை என்பதில் ஐ சாரியை. (கக)

இந்திய விடயந் தன்னொடு சிவணல் யோகமென் பார்சிலர் சிலர்தஞ்,
சிந்தனை யுயிரோ டடைதல்நல் யோக மென்பரீ தன்றியுஞ் சிலர்தா, மூந்திய பிராண னபானனோ டடைத லென்பரிம் மொழிந்தவை யனைத்தும்,
மந்தமில் யோக மல்லநற் சீவன் பரத்துட னடைவதே யோகம்.

(இ-ள்.) சிலர் இந்திரியச்செய்கைகள் தன்னுடன் கலத்தல் யோகமென்று சொல்லுவர். வேறு சிலர் தமது சித்தம் உயிருடன் சேருதல் நல்ல யோகமென்று கூறுவர். இதுவல்லாமலும் பின்னுஞ் சிலர் முற்பட்ட பிராணன் அபானனுடன்

கூடுதல் (யோகமென்று) மொழிவர் இவையெல்லாம் சொல்லியசாதில்லாத யோக மல்ல (ஆனால்) நல்ல ஜீவாத்மா பரமாத்மாவுடன் இணைதலே யோகமாகும். எ-று.

பிராணன் அபானன் என்பவை தசவாயுக்களி னொன்று. அவை முறை யே இதயத்தியங்குவதும் உச்சர்க்கத்தலத்திடை நிற்பதுமாம். "எழுபத்தீ ராயிர நாடி யவற்றுள் - முழுபத்து நாடி முதல்" என்னும் ஔவை குறளின்படி தச வாயுக்களாவன :—பிராணன் - அபானன் - சமானன் - உதானன் - வியானன் - நாகன் - கூர்மன் - கிருகரன் - தேவதத்தன் - தனஞ்சயன என்பனவாம். (கஉ)

பயில்புறக் கரண மனைத்தையும் விளங்கு மூட்கர ணத்திடைப் படு த்தி, மயலுறு மனனைப் புற்கல னிடத்தி லொடுக்கிமேல் வயங்குசட் பாவ, மியறரு சடூரங் கோசமோ ராறு மியைதிடாப புற்கலன் றன்னை, யுயர்வுற வுயர்ந்த பரமபொரு ளதனிற் கூட்டுதல் யோகமென் றுபைபார்.

(இ-ள்.) (விஷயங்களிற்) பயில்கின்ற புறக்கரணங்களையெல்லாம், விளங் குகின்ற அந்தக்கரணங்களிடத் தொடுக்கி, மயங்குகின்றமனதை ஆன்மாவிலொடு ங்கச்செய்து, மேவிட்டு விளங்குகின்ற சட்பாவம் - சடூரம் - சட்கோசம் - இவற் றைப் பொருந்தாத ஆன்மாவை, மேம்பட்ட வுயர்வாகிய பரம்பொருளான பிரம த்தினிடத்திற் சேரச்செய்தலே யோகமென்று (நூல்வல்லோர்) கூறுவர். எ-று.

புறக்கரணம் அந்தக்கரணம் முன் கூறப்பட்டுள்ளன. புற்கலன்=ஆன்மா. சட்பாவமாவன:—சமம்-தமம் - உபாதி - சகித்தல் - சமாதானம் - சிரத்தை என் பன. சடூர மாவன:—அசனம் - பிபாசம் - சோகம் - மோகம் - ஜரை - மிருத்து என்பன. கோசம்=இடம். சட்கோசமாவன:—மூலாதாரம் - சுவாதிட்டானம் - மணிபூரகம் - அனாகதம் - விசுத்தி - ஆக்ஞை என்பனவாம்.

கருதரு மியோகம் பயின்றுகை வந்தோ ரல்லவர் பரத்தினைக் கா ணார், திரிதரு வளியை யடக்கின லலாது செவ்வனே மனநிலை பெறுதா, லொருவருஞ் சடங்க யோகுணர்ந் தல்லா லுண்மையை யுணர்வரி ததனால்,விரிதரு சடங்கயோகமும் விளங்க விளம்புவன் கேட்டியென் றுரைக்கும்.

(இ-ள்.) நினைத்தற்கரிய யோகசாதனஞ் செய்து தேர்ந்தவ ரல்லாதவர் பரம்பொருளைக் காணமாட்டார்கள். உழலுகின்ற வாயுவைப் பந்தித்தா லல்லாமல் செம்மையாக மனம்நிலைத்திருக்கமாட்டாதாதலால்,நீக்கற்கரிய சடங்கயோகத்தை யறிந்தாலல்லாமல் உண்மையையறித லருமை ; ஆனபடியால் பரந்த சடங்கயோ கமும் விளங்கும்படி சொல்லுவேன் (அகத்தியமுனிவனே !) கேட்பாயாக என்று (ஸ்ரீமுருகக்கடவுள்) திருவாய்மலர்ந்தருளுவார். எ - று.

"உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லா-முடம்பினி லுத்தமனைக் காண்." என்ற ஔவையார் திருவாக்கின்படி உடலிற் சடங்கயோகஞ் செய்தா லன்றி உண்மை தெரியாதென்றார். (கச)

ஆசனம் பிராணா யாமமெஞ் ஞான்று மழிவறு பிரத்தியா கார, மா நிலதா ரணைமெய்த் தியானகற் சமாதி வகுத்தகல் யோகமா றவற்றுட், பேசுமா சனங்க ளனைத்திடிற் பெருகும் பிழைப்பில்சித் திராசனம் விள

ங்குந், தேசுறு மியோக சாதனமென்ன விளம்புவர் யோகநூல் தெளிந்தோர.

(இ-ள்) ஆசனம் - பிராணயாமம் - எக்காலத்தும் அழிவற்ற பிரத்தியாகாரம் - குற்றமில்லாத தாரணை—உண்மையாகிய தியானம் - நல்ல சமாதி என்று பிரிக்கப்பட்ட நல்ல யோகங்கள் ஆறுவகைப்படும். அவ்வாறனுள் சொல்லுகின்ற ஆசனங்களுளாக்கப்புகின் விரியும் (ஆனதால) யோகநூலிற் றேர்ச்சியடைந்தோர் குற்றமில்லாத சித்திராசனமே விளங்குகின்ற ஞானம்பொருந்திய யோக சாதனமென்று கூறுவர். எ - று.

சாதனம்=தகுதி; சித்திசெய்வது. ஆசனம்=யோகஞ்செய்வோ ருட்காருமுறை. சித்திராசனம்—மனதுக்கிசைந்தவழியிருத்தல். இதைச் சுகாசன மெனவுங் கூறுவர்.

(கரு)

வலக்குறங் கதனி லிடப்பத மேற்றி வலப்பத மிடக்குறங் கேற்றல்,
சொலத்தகுங் கமல வாசன மதனிற் பின்னதாய்த் துணைக்கர மாற்றி,
நலத்தகு தாளிற் பெருவிரற் பிடித்தல் பெற்றபத் மாசன நவிலி, னுலப
பிலா சனங்க ளுளவவற றியைந்த வாசனத் திருத்தலே யுரித்தாம்.

(இ-ள்.) வலது தொடையில் இடதுகாலையேற்றி வலதுகாலை இடதுதொடையி லேற்றுதல் சொல்லத்தக்க பத்மாசனமாகும். அப்பத்மாசனத்தில் பின்புறமாக இரண்டு கைகளையும் (வலமிடம் இடம்வலமாக) மாற்றி நன்மைதங்கிய காலின் பெருவிரலைப் பற்றுதல் பெற்ற பத்மாசனமாகும். சொல்லுமிடத்திற் கணக்கில்லாத ஆசனங்க ளுள்ளன அவற்றுள் (தன் மனத்துக்கு) பொருந்திய ஆசனத்திலிருத்தலே உரியதாம். எ - று.

(கசு)

எதிபுனல் சாம்பர் கரியுமி கொசுகீ யென்புதீ யெய்திட மன்றங்,
குறுகருங் கானந் தொழுவிவற் றிருந்து யோகினைக் குறித்தலு மாகா,
நறுமணங் கமழும் புனிதமா மிடத்தி லமர்ந்திட னன்கென வுரைப்பார்,
சிறிதயின் றூககத் திரிதரல் குறைதல் பெருகுத லொழிந்துளோர் செயலாம்.

(இ-ள்.) கரையை மோதுகின்ற நீர் - சாம்பல் - கரி-உமி - கொசுகு - ஈ - எலும்பு - நெருப்பு இவை பொருந்திய இடமும், சபையும், செல்லற்கரிய வனமும் பசுத்தொழுவமுமாகிய இவ்விடங்களிலிருந்து யோகத்தைச் சிந்தித்தலுங் கூடாது. நல்ல வாசனைவீசும் பரிசுத்தமாகிய இடத்திலிருந்தியற்றல் நன்றென்று சொல்லுவர். சிறிது புசித்து நித்திரைமாறுதல் - நித்திரை குறைபடுதல் - மிகுதியாதல் (இவை யோகசாதனஞ் செய்தலில்) நீங்கினோர் செய்கையாம். எ - று. (கஎ)

வேறு.

மைவவா னிருந்து களங்கோட்டிச் செவ்வாய் மூடிக் கணகள்மூகிழ்த்
தொவ்வாப் புலன்க ளுள்ளடக்கி யுண்ணுப் புரைநா நுனியேற்றி
வைவா னெயிற்றோ டெயிறொன்றா தினிதின் வகுத்த வாசனத்தி
னிவ்வா றிருந்து மூவகைய பிராண யாம மியற்றுகவே.

(இ-ள்.) செம்மையாக வுட்கார்ந்து கழுத்தை வளைத்துச் சிவந்த வாயை மூடிக்கொண்டு கண்களைக் குவித்து (ஒன்றோடொன்று) ஒத்திராத ஐம்புலன்களையும் (புறஞ்செல்லாமல்) அடக்கி உண்ணாக்கின் துவாரத்தில் நாவின் முனையையேற்றி, கூரிய வெண்ணிறமமைந்த பல்லுடன் பல் படாமல் இனிதாக ஏற்படுத்திய ஆசனமுறையில் இவ்விதமாகவிருந்து மூன்றுவகைப்பட்டதாகிய பிராணாயாமஞ் செய்யக்கடவா. எ - று.

செவ்வான் என்பது நீட்டல் விகாரம்.

மூவகைய பிராணாயாமம் என்பது உத்தமம் மத்திமம் அதமமாகியமூவகைப்பட்டவை இவற்றில் முறையே ஒன்றற்கொன்று அரைப்பங்கு குறைந்திருக்கும். அவை பின்னர் வருமிடத்தில் விளங்கும். (கஅ)

புருவத் திடைநோக் கெத்துணைய காலமிருக்கும் பொருந்துடலின்
மருவும் வாயு வெத்துணைப்போ தடங்கி யிருக்கு மட்பகைஞர்
திரிகை போலெவ் வளவுமனந் திரியா திருக்கு மத்துணையும்
விரியுங் கால பயமவனை மேவா தென்று மறைகூறும்.

(இ ள்.) இரண்டு புருவங்களின் மத்தியில் எவ்வளவு காலம் பார்வையிருக்குமோ, பொருந்திய உடலிற் சஞ்சரிக்கும் வாயு எவ்வளவுகாலம் உள்ளடங்கியிருக்குமோ, மட்பகைஞர் திரிகையைப்போல மனம் எவ்வளவுகாலம் அலையாமவிருக்குமோ அவ்வளவுகாலமும் மிகுந்த யமபயமானது அவனுக்கு வராது என்று வேதங்கள் சொல்லுகின்றன. எ - று.

"புருவத்திடைநோக்கு" என்பதனை "நெற்றிக்கு நேரே நிறைந்த வொளிகாணில் - முற்று மழியா துடம்பு", "புருவத் திடையிருந்து புண்ணியனைக் காணி - லுருவற்று நிற்கு முடம்பு" என்றும், "வாயுவெத்துணைப்போதடங்கியிருக்கும்" என்பதனை "மயிர்க்கால் வழியெல்லா மாய்கின்ற வாயு - உயிர்ப்பின்றி யுள்ளே பதி", "வாயு வழக்க மறிந்து செறிந்தடங்கி - லாயுட் பெருக்க முண்டாம்", போகின்ற வாயு பொருந்திற் சிவமொக்கும் - தாழ்கின்ற வாயு வடக்கு" என்றும், "மட்பகைஞர் திரிகைபோல மனந்திரியாதிருக்கும்" என்பதனை "மாறு வெளியின் மனமொன்ற வைத்தபின் - போதக மாகு முடம்பு", சத்தமோடொன்றி மனமு மிறந்தக்கால் - முற்று மழியா துடம்பு", "அஞ்சு மடக்கி யறிவோ டிருந்தபின்—துஞ்சுவ தில்லை யுடம்பு" என்றும் வரும் ஔவையாரருளிய ஞானக்குறளின்படி காலபய மணுகாதென்றுர்.

மட்பகைஞர் திரிகை என்பது குயவர் தண்டசக்கரம். மண்ணை மிதித்து அத னுருவுதிரித்து வேறுபடுத்தலின் குயவர் மட்பகைஞரெனப்பட்டனர். மனம் விஷயவாதனை யேற்று இங்கு மங்குமாகக் கணபேதமுற்றுச் சுழன்று வருதலின் அதற்கு மட்பகைஞர் திரிகை உபமானமாக்கப்பட்டது. (கக)

இமைத்த லொருமாத் திரையதனை யீராறளவை கொண்டனவே
யமைத்த வசலைபச் செபகால மாங்கவ் வளவு மூச்சடக்கிச்
சமைத்த பிராணா யாமமறத் தாழ்ந்த திடைய திரட்டித்தல்
கமைக்க னுறைந்தோர் மூன்றுகொண்ட துயர்ந்த தென்னக் கழறினரால்

(இ-ள்.) கண்ணிமைத்தற்காலம் ஒருமாத்திரை. அம்மாத்திரைக் காலம் பன்னிரண்டளவு கொண்டது பொருந்திய அசபாமந்திரஜெபகாலமாகும். அவ்வளவுகாலம் சுவாசத்தைப் பந்தித்துச் செய்த பிராணாயாமம் மிகவும் தாழ்ந்தது நடுத்தரமானது அதி விரட்டிப்பாகும். அம்முதற்சொன்னதில் மூன்று பாகங்கொண்டது உயர்ந்தது என்று சாத்தத்திற் பொருந்தினோர் சாற்றினர். எ - று.

"இமைத்த லொரு மாத்திரை" என்பதை "இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை" என்ற சூத்திரத்தானுணர்க. அசபை என்பது அசபா என்னும் வடமொழித்திரிபு. இது வோர் மந்திரம். (உ0)

மூந்து பிராணு யாமத்தின் வேர்வு தோன்று மொழிந்ததற்பின்
வந்தபிராணு யாமத்தி னடுக்க மெய்து மற்றதன்பின்
சிந்தை தெளிந்தோ ரினிதியற்றும் பிராணு யாமந் துயர்செய்யு
மந்தி லதனைப் பயிலின்வேர் வருமபுந் துயர மடையாவால்.

(இ-ள்.) முற்பட்டதாகிய (தாழ்ந்த அல்லது அதம) பிராணாயாமத்தில் வெயர்வுண்டாகும்; சொல்லிய அதற்குப் பின்னிட்டதாகிய (நடுத்தர அல்லது மத்திம) பிராணாயாமத்தில் நடுக்கம்வரும்; அதற்குப் பின்னிட்டதாகிய மனந்தெளிந்தோ ரினிதாகச்செய்யும் (உயர்ந்த அல்லது உத்தம) பிராணாயாமத்தில் (முதலில் பலவகைத்தாகிய) துன்பங்களைச் செய்யும் அதனையே செய்யப்பழகினால் வேர்வரும்புதல் முதலிய துன்பங்களும் விலகும். எ - று.

"அந்தி லாஅங் கசைநிலைக் கிளவியென் - றாயிரண் டாகு மியற்கைத் தென்ப" என்பது சூத்திரமாதலின் அந்தில் ஈண்டு அசைநிலை. (உக)

இனைய வாறு மேன்மேலும் பயின்றோன் பனிதோ யிருவிசும்பின்
மனனில் விரைந்து காயமொடு மேகுமிதனை வலிதாற்று
மனையோன் வெங்கோய் பிடித்துழலு நாடிதூய்மை யுறினல்லாற்
றுனைவி லேகும் வளியடக்கல் கூடா தென்பர் தொன்னூலோர்.

(இ-ள்.) இவ்வகையாக மேன்மேலும் பழகினவன் குளிர்ச்சிதங்கிய பெரிய ஆகாயத்தில் மனோவேகத்தைக்காட்டிலும் துரிதமாய்ச் சரீரத்துடன் செல்லுவான்; இதனைக் கரேமாகச் செய்பவன் வெவ்விய வியாதிபற்றி வருந்துகின்றநாடி சுத்தமடைந்தாலல்லாமல் வேகத்துடன் செல்லும் வாயுவைப் பந்தித்தல் முடியாதென்று பழமையாகிய நூல்களிற் றேர்ந்த பெரியோர் சொல்லுவர். எ - று.

வலிதாற்றலாவது விடாதுசெய்தல். (உஉ)

மதியி விருநான் கிரேசித்து வகுத்த வீரெட் டினிதேற்றி
விதியின் வழுவா தெண்ணான்கு கும்பித் திலகு வெய்யோனிற்
பதினு றளவை விடல்வலத்து மிவ்வா றியற்றிப் பகர்முறையிற்
கதிர்சான் மதியின் விடுதலொரு பிராணு யாமங் கருதுகவே.

(இ-ள்.) சந்திரனில் எட்டங்குலம் இரேசித்து, அளவிட்ட பதினாறங்குலம் இனிதாகப் பூரித்து,முறையினின்று தவறாமல் முப்பத்திரண்டங்குலம் கும்பித்து விளங்குகின்ற சூரியனிற் பதினாறங்குலம் விடுதலும், வலப்புறமும் இவ்வாறே

செய்து சொல்லியமுறைப்படி கிரணகைள் மிருந்த சந்திரனில விடுதலும், ஒரு பிராணுயாமமாகும் என்று அறியக்கடவர். எ று.

மதி=சந்திரன். வெய்யோன=சூரியன். சண்டு முறையே இடைகலை பிங்கலைகள். இடதுமூக்கினின்று வருதலின் சந்திரகலை இடைகலையும், வலதுமூக்கினின்று வருதலின சூரியகலை பிஙகலையுமாம். இரேசகம்=பிராணவாயுவை வெளிவிடுதல். கும்பகம்=பிராணவாயுவைச் சமப்படுத்திஅடக்கல். பூரகம்=பிராணவாயுவை உள்வாஙகி நிறைத்தல்.

"மெள்ள விரேசித்து மெய்விமமிப் பூரித்துக் - கொள்ளுமின் கும்பங் குறித்து," "முன்ன மிரேசி முயலுபின் பூரகம் - பினனது கும்பம் பிடி" என்னும் ஞானக்குறளின்படி முதலில் ரேசகமும் பின்னர் பூரகமும் அதற்குமேல் கும்பகமுஞ் செய்யவேண்டும் என்றார். (உ௩)

இடையில் விதியா விரேசித்துப் பூரித் தியல்பிற் கும்பித்து
வடிவில மதியந் தனையெணணி வலத்தால் விடுக வலப்பாலி
னடையி னியல்பா விரேசித்துப் பூரித் ததனிற் கும்பித்துச்
சுடரோற் கருதி மதியின்விடிற ஷூய்தா நாடி மும்மதியில்.

(இ-ள்.) இடைகலையில் (மேற்கூறிய) முறைப்படியே இரேசித்து பூரித்துக் கிரமமாகக் கும்பித்து அருவகமாகச் சந்திரனைத் தியானித்துப் பிங்கலையால் விடக்கடவர். பிங்கலையில் முறைப்படி ரேசக பூரகஞ் செய்து அதுபோலவே கும்பகஞ்செய்து சூரியனைத் தியானித்து இடைகலையில் விட்டால் மூன்றுமாதகாலத்தில் நாடிசுத்தம் வரும். எ-று. (உச)

இன்ன வாற்று ஞடிதனைத் தூய்மை செய்யி னெறிவளியைத்
தன்னைச் சிறிது நீங்காம னிறுத்த லாகு மதுதரிப்பின்
வெங்கோ யடையா வயின்றவைகள் விரைவி னறுநான் மறைபுகலு
மன்னு நாதந் தெளிவெய்த மருளா தென்றுந் தோன்றுமால்.

(இ-ள்.) இப்படிப்பட்ட வகையால் நாடியைப் பரிசுத்தஞ்செய்தால் மோதுகின்ற வாயுவைச் சிறிதும் புறம்போகாமல் நிறுத்துதல்கூடும்; அது நின்றால் கொடிய வியாதிகள் வரமாட்டா; உண்ட பொருள்கள் துரிதத்திற் சீரணமாம்; நான்கு வேதங்களுஞ் சொல்லுகின்ற நிலைத்திருக்கின்ற நாதப்பொருள் ஞானம் விளங்க எக்காலமும் மயங்காமல் விளங்கும். எ று.

"அறிந்தடங்கி நிற்குமந் நாடிக ளோறுஞ் - செறிந்தடங்கி நிற்குஞ் சிவம்" என்பது ஔவைக்குறளாதலின் அதனைச் சுத்திசெய்தாலன்றி யோகசாதனங் கைகூடாதென்பார் "நாடிதனைத் தூய்மைசெய்யி னெறிவளியைத் தன்னைச் சிறிதுநீங்காம னிறுத்தலாகும்" என்றார். (உரு)

தெளிந்த விதியிற் பன்னிரண்டு பிராணு யாமஞ் செய்போது
விளம்பு பிரத்தி யாகார மதுபன் னிரண்டு செயும்வேலை
துளங்கல் செய்யாத் தாரணைமற் றதுபன் னிரண்டு சூழ்கால
மளந்த தியான மஃதீரா றளவை சமாதி செய்காலம்.

(இ-ள்.) கற்றோர் நன்குணர்ந்த முறைப்படி பன்னிரண்டு பிராணாயாமஞ் செய்கின்றகாலம் சொல்லுகின்ற பிரத்தியாகாரமாம். அப்பிராணாயாமம் பன்னிரண்டு செய்யுங்காலம் அசைதலில்லாத தாரணை. அத்தாரணை பன்னிரண்டுசெய்யுங்காலம் அளவுபடுத்திய சமாதிசெய்கின்றகாலமாம். எ-று. (உசு)

இவ்வா றுணர்ந்தோ ருயிர்க்குயிரா யெங்குமாகி யொன்றாகிச்
செவ்வாய் நின்ற பரம்பொருளைக் காண்பர் செந்நீர்த் தொளிபழுத்த
வெவ்வாய்க் கருவின் வந்தடையார் வினையோ ரிரண்டு மொருவியுயர்
மைவார் கொடிய மாயைகெடச் சுடர்போ னின்று வயங்குவரால.

(இ-ள்.) இவ்வகையாகத் தெரிந்தோர் உயிர்கட் குயிராகியும் சர்வ வியாபகமாகியும் ஏகமாகியும் செவ்வையாக விளங்கும் பரம்பொருளைத் தெரிசிப்பார்கள். உதிரத்தாலாகி யொளிமிகுந்த வெவ்வியவாயையுடைய கருப்பையில் வந்து சேரமாட்டார்கள். ஒப்பற்ற இருவினைகளையும் நீங்கி உயர்ந்த கருமையமைந்த நெடிய மாயையொழியச் சுடர்போல நின்று விளங்குவர் எ-று. (உஎ)

ஆமைபோல விந்தியங்க ளடக்கல் பிரத்தி யாகாரஞ்
சோம னண்ணத் ததோமுகமாய்த் துளிக்கு மமுதை யுந்தியிடைக்
காமர் முகமே னோக்கியம ரிரவி யருந்துங் கரைந்ததனை
யேம முறவே மாறியிடு கரணம் பயிலா தியையாதால்.

(இ-ள்.) ஆமை (தனது நான்குகால்களையும் ஒரு சிரசையும் உள்வாங்குதல்) போன்று பஞ்சேந்திரியங்களையும் அடக்குதல் பிரத்தியாகாரம். சந்திரன மேல்வாயிலிருந்து அதோமுகமாகத் துளிக்கின்ற அமிர்தத்தை, உந்தியில் அழகிய முகம் மேனோக்கிப் பொருந்திய சூரியன் உண்பான். சொல்லிய அதனை இன்பம் பொருந்த மாறிச்செய்யுங் கரணங்கள் பழகாமற் பொருந்தா. எ-று.

அதோமுகம்=கீழ்நோக்கியமுகம். மேனோக்கியமுகத்தை உத்துவாகிதமுக மெனக்கூறுவர். (உஅ)

சென்னி கீழாத் தாண்மேலா நின்று செவ்வா யினைக்காக்கை
மன்னு மூக்கிற் குவித்துநறுஞ் சீத வளியை யுறமாந்திற்
கொன்னே வருத்து நரைதிரைகள் கூடா வுணாத் துவாரத்தி
னன்னு வேற்றி யறுதிங்க ளமுத மருந்தி னரைவாரா.

(இ-ள்.) தலைகீழாகவுங் கால் மேலாகவும் (கீழ்மேலாக) நின்று, சிவந்த வாயைப் பொருந்திய காக்கையின் மூக்குபோலக் குவித்து நல்ல குளிர்ச்சியுற்ற வாயுவை யுட்கொண்டால் வீணாக வருத்துகின்ற நரை திரைகள் வரமாட்டா. உண்ணாவின் தொளையில் நல்ல நாவினை யேற்றி ஆறுமாதகாலம் அமுதமுண்டால் நரை வராது. எ-று. (உகூ)

சொன்ன வறுதிங் களின்மேலுந் தொடர்ந்தைம் மூன்று நாளினிதி
னன்ன வமுத மருந்திலவெலற் கரிய மிருத்து வினைக்கடப்பார்
மன்னு நாவா லுண்ணாக்கின் றுளையை நெருக்கி மதியாறு
தன்னே ரில்லாப் பனையைக்கினைக் திருப்பிற் கவிதை சார்ந்திடுமால்.

(இ-ள்.) சொல்லிய ஆறுமாதத்திற்கு மேலும் தொடர்ந்து பதினைந்து தினங்கள் இனிதாக அப்படிப்பட்ட அமுதமுண்டால் ஜெயித்தற்கரிய மரணாவத்தையை விலக்குவர். நிலைபெற்ற நாவினால் உண்ணாவின் தொளையை நெருக்கித் தனக்குச் சமானமில்லாத பராசத்தியைத் தியானித்து ஆறுமாதகால மிருந்தால் (திருவருளால்) கவிசெய்யும் வல்லபம் வரும். எ-று.

" ஓங்கார மான கலசத் தமிர்துண்ணில் - போங்கால மில்லை புரிந்து "

" ஊறு மமிர்தத்தை யுண்டியுறப் பாக்கில் - கூறும் பிறப்பறுக்கலாம் "

" மேலை யமிர்தத்தை விலங்காமற் றுனுண்ணில்-காலனை வஞ்சிக்கலாம்" என்னும் ஞானக்குறளின் கருத்திணங்க " அமுத மருந்தில வெலற்கரிய மிருத்து வினைக்கடப்பார்." என்றார். (௬0)

பருவ மொருமூன் றிவ்வாறு பயிலி னமுத வுருவாகு
மெரிவெம் பகுவாய்க் கரைமிடற்ற கார்க்கோ டகனறன் னெயிறனைத்து
முருவி யழுந்தக் கடித்திடினு மொழுகுங் கொடிய விடமேறு
மருவுஞ் சித்தி யீங்கிதுகை வந்தாற் பயில்க தாரணையே.

(இ-ள்.) இவ்விதமாக மூன்றுவருடகாலம் பழகினால் அமிர்தவடிவமாகும். தீப்போலும் வெவ்விய பிளவுபட்ட வாயையுடைய கார்க்கோடகனானவன் தனது பற்களெல்லாம் ஊடுருவி யழுந்தும்படி கடித்தாலும், அவற்றினின்றுந் துளிக்கின்ற கொடிய விஷமானது ஏறமாட்டாது. பொருந்திய இத்தகைய சித்தி கைவருமாயின பிறகு தாரணையிற் பழகக்கடவர். எ-று.

கார்க்கோடகன். காசிபரிஷிக்கும் அவன் மனைவியருள் கத்துருவைக்கும் பிறந்த அட்டநாகங்களுள் ஒன்று. அவையாவன:—வாசுகி - அனந்தன்-தக்கன் - சங்கபாலன் - குளிகன்-பதுமன் - மகாபதுமன் - கார்க்கோடகன் என்பன. " எயிறனைத்தும்" எனக் கூறியிருப்பினும் நாகங்களுக்கு நானகு பற்களிலேயே விஷமென்பர் மருத்துவ நூலார். அவை காளி - காளாஸ்திரி - யமன் - யமதூதன என்பன. ஒவ்வொருபல்லிலுமுள்ள துளைவழியாக விஷம் கடிவாயிலிறங்கும். அவ்விஷம் தொண்ணூற்றெட்டு விநாடியிலேறும். இதனை,—

" கடிவமரும் நாலெயிற்றுக்கும் - பெயர் சொல்வேன் - காளி காளாஸ்திரி யமன்யமதூதனும், மேல்வாயலகுதனில் - அரவுக்கு - விளக்கமாய் நாலுபற்கள் முளைத்திருக்கும், நாலுபற்குந் துளையிருக்கும் - கடித்திடில் - நச்சுப்பற் றுளைவழியாய் நஞ்சுகழன்று, வந்துகடிவாயி லிறங்கித் - தொண்ணூற்றெட்டு - மாத்திரையினின்றுடலில் மண்டியேறும் " என்னுஞ் சித்தராரூடத்தா லுணர்க. [இதன்வேகம் - குறி - தடை - மருந்து - மந்திரமுதலியவற்றை ஷை நூலிற் பரக்கக்காணலாம்.] (௬௧)

பூத மைந்தும் வெவ்வேறாய்ப் புகன்ற வாற்றி னுளத்தமைத்த
லேத மறுதா ரணையிவற்றிற் பூதா ரணைபொன் னிறமாகத்
தீதில் கோண நான்காகி லகர வெழுத்தி னெஞ்சிவணி
வேத னதிதெய் வதமாகப் புவியை யுதய மிசைதரித்தல்.

(இ-ள்) ஐம்பூதங்களையும் தனித்தனியாகச் சொல்லிய முறையால் மனத்தில் தரித்தல் குற்றமற்ற தாரணையாகும். இவற்றிற் பிரிதிவிதாரணை யென்பது பொன்னிறமாகத் தீதில்லாத நாற்கோணமாகி லகரவெழுத்தோ டொத்துப் பிரமன் அதிதேவதையாகப் பூமியை மனத்தினிடத்திற் றரித்தலாம். எ-று. (௩௨)

பிறையின் வடிவாய் வெண்ணிறமாய்ப் பேசும் வகர வெழுத்துடைத்தாய்
நறிய படலைத் துழாய் மாாபன் கடவு ளாக வைவயின்றி
யுறையு மிடத்தி லிங்கிதனை யமைத்தல சலதா ரணையென்ன
மறைதேர் முனிவர் மன்னுயிரின் மம்மர் தீர வகுத்தனரால்.

(இ-ள்.) சலதாரணை யென்பது பிறைவடிவமாய் வெண்மைநிறமுள்ளதாய்ச் சொல்லுகின்ற வகரவெழுத்தின வடிவுடையதாய், மணம்பொருந்திய துளப மாலையணிந்த மார்பராகிய விண்டு அதிதேவதையாகக் குற்றமில்லாமல் வசிக்குமிடத்தில் இதனைத்தரித்தலாம் என்று வேதமுணர்ந்த அந்தணர் நிலைபெற்ற ஆன்மாக்களின் மயக்கமொழியக் கூறினர். எ-று.

பிறைவடிவு - இருகோணம். (௩௩)

கோண மூன்று யுறச்சேர்ந்து ரகர வெழுத்தி னெடுங்கூடப
பேணுந் தெய்வ முருத்திரனுய்ப் பிறங்கு முண்ணு வதினிடையின்
மாண வினிதிற் றரித்திடுதல் வழங்கு மழறாு ரணையென்ன
யாணர் மறைக ளொருநான்கு முணர்ந்த மேலோ ரிசைத்தனரால்.

(இ-ள்.) சொல்லுகின்ற அழற்றாரணையென்பது முக்கோணமாய் மிகச் சிவந்து ரகரவெழுத்துட னொத்து வணங்கும் அதிதேவதை உருத்திரனாக விளங்குகின்ற உண்ணாக்கின் மத்தியில் மாட்சிமைப்பட, தீயைத் தரித்தலா மென்று அழகிய வேதங்க ளொருநான்கையும் அறிந்த மேலோர் கூறினர். எ-று. (௩௪)

ஆறு கோண மாய்க்கரிதாய் யகரவெழுத்தி னுேடமைந்தாங்
கீறில் மகேசன் றெய்வதமா யிருக்கும் தூய வெறுவளியைக்
கூறு புருவத் திடைதரித்தல் குலவும் வாயு தாரணையென்
றூறு ஞானக் கடற்படிந்த வுரவோ ரினிதி னுரைத்தனரால்.

(இ-ள்.) விளங்குகின்ற வாயுதாரணை யென்பது அறுகோணமாய், கருநிறமுடையதாய் யகரவெழுத்துடனொத்து, கெடுதலில்லாத மகேசன் அதிதேவதையாக இருக்கின்ற பரிசுத்தமாகிய வெறுவளியைச் சொல்லிய புருவத்தின் மத்தியில் தரித்தலாகுமென்று, ஊற்றெடுக்கும் ஞானசாகரத்திற் குளித்த மேலோர் இனிதாகக் கூறினர். எ-று. (௩௫)

வான மாவின் வாலதிபி னிறமாய் வட்ட வடிவாகி
யூன மில்லா அகரவெழுத் துடைத்தாய்த் தெய்வஞ் சதாசிவனு
யான பிரம ரந்திரத்திற் றரித்தோ ரஞ்சு நாழிகைகள்
மோன மாக வுயிர்சேர்த்தின் முத்திக் கபாடந் திறக்குமால்.

(இ-ள்.) ஆகாயமானது பகலின் வால்போலப்புகை நிறமுள்ளதாய் விருத்தாகாரமாகிக் குற்றமில்லாத அகரவெழுத்தோடொத்ததாய் அதிதேவதை சதாசி

வனைய்த் தியானித்துப் பிரமரந்திரத்தில் தரித்து ஐந்துநாழிகைக்காலம் மௌனமாக உயிரோடு சேர்த்தால் மோட்சத்திற் குரிய வழி திறந்துகொள்ளும். எ-று.

பூதா ரணையாற் றிரமெய்தும் புனற்று ரணையா னனேவெய்து
மோது மழற்று ரணையதனுற் றகன மெய்து முறுவளியின்
றீதி லுயர்தா ரணையதனுற் சீவ னழியா தாகாய
மாதா ரணையா வையுஞ்சமனப் படுத்து மென்றே வகுத்தனரால்.

(இ-ள்.) பிரிதிவி தாரணையால் உறுதிவரும். அப்புதாரணையால் ஈரம் வரும். சொல்லுகின்ற தேயுதாரணையால் தகனம் வரும். பொருந்திய வாயுவினது குற்றமில்லாத உயர்ந்த தாரணையால் பிராணமழியாது. சிறந்த ஆகாயதாரணை அவை எவற்றையும் சமானப்படுத்துமெனவே (பெரியோர்) கூறினர். எ-று.

பொருந்து தியான மெனவுரைத்தல் சிந்தை யாகும் புகல்சிந்தை
யருந்தத் துவத்தை யுளத்தெண்ணி யலையா திருத்தல் தியானமிகத்
திருந்து சகுண நிர்க்குணமென் றிரண்டாஞ் சகுணந் திகழுருவோ
டிருந்த வரனை மந்திரத்தா லேத்தி யிதயத் திருத்துவதே.

(இ-ள்.) பொருந்திய தியானமென்று சொல்லுதல் சிந்தித்தலாகும். சொல்லுகின்ற சிந்தனையாவது அரிய தத்துவத்தை மனதி லெண்ணிச் சலியாதிருத்தலாம். தியானமானது மிகத் திருந்திய சகுணமென்றும் நிர்க்குணமென்றும் இரண்டு வகையாகும் (அவற்றுள்) சகுணம் விளங்குகின்ற உருவுடனிருக்குஞ் சிவபெருமானை மந்திரத்தாற் றுதித்து மனதிலிருக்கச்செய்தலாம். எ-று. (சஅ)

பிரமந் தன்னை மந்திரங்கள் பேசா துளத்தி னினிதமைத்தன்
மருவ வரிய நிர்க்குணமாந் தியானந் தன்மாத் திரையைந்தும்
பொருவில் செவியா தியவைந்திற் பொருந்து மளவும் புகாறுமற்
றரிய தியான மவைநீங்கிற் சமாதி கால மெனவறைவார்.

(இ-ள்.) பரப்பிரமத்தை மந்திரங்கள் ஜெபிக்காமல் மனதில் இனிதாகத் தியானித்தல் பொருந்துதற்கரிய நிர்க்குணமாகும். தியானமாவது தன்மாத்திரை ஐந்தும் சமானமில்லாத செவிமுதலாகிய ஐந்திற் பொருந்துமெல்லையும், குற்றமற்ற அரிதாகிய தியானமாகும். அது நீங்குமாகில சமாதிகாலமென்று (நூல்வல்லோர்) கூறுவர். எ-று. (சக)

தன்மாத்திரை ஐந்தாவன:—சத்தம்-பரிசம்-ரூபம்-ரசம்- கந்தம் என்பன.

கடிகை யஞ்சு தாரணையின் காலந் தியான மறுகடிகை
யொடிவில் நாளோர் பன்னிரண்டு சமாதி கால மூப்பொடுநீ
ரடைதல் போல மனத்தினொடு மான்மாச் சேர்த்தல் சமாதியென்ப
வுடைய பிராணன் மனத்தொடுகூ டுதலுஞ் சமாதி யெனவுரைப்பார.

(இ-ள்.) ஐந்துநாழிகைப்பொழுது தாரணையினுடைய காலம். தியானத்தினுடைய காலம் ஆறுநாழிகையாம். கெடுதலில்லாத பன்னிரண்டுநாட்கள் சமாதியினுடைய காலம். லவணம் சலத்துடன் கலத்தல்போல மனத்தினுடனே ஆன்மாவைக் கூட்டுதல் சமாதியென்று சொல்லுவர். பிராணனை மனத்துடன்சேர்த்தலுஞ் சமாதியென்று (வேறுசிலர்) கூறுவர். எ-று. (ச0)

சீவ பரத்தின் சமத்துவமுஞ் சமாதி தண்மை தெறுவெம்மை
மேவ வரிய சுகதுக்க நீங்கி யான்மா வல்லதைவே
றியாவு மிலதென் றுயர்பரத்தி னெய்திச் சமாதி யிருப்போனை
நோவு தழனீர் படைவினைகள் வருத்தா வென்ன நுவன்றனரால்.

(இ-ள்.) சீவாத்மா பரமாத்மாக்களின் சமநிலையாதலுஞ் சமாதியாகும். குளிர்ச்சியும் தெறுகின்ற உஷ்ணமும், பொருந்தற்கரிய சுகமும் துக்கமும் விலகி ஆன்மாவையல்லது பிறிதொன்றில்லை யென்று உயர்ந்த பரத்தி னிலையை விரும்பிச் சமாதிசெய்கின்றவனை, வருத்துகின்ற தீ - நீர்-படை-வினைகள் முதலியவை துன்புறுத்தமாட்டா வென்று சொல்லினர் (மேலோர்). எ-று. (சக)

இனைய வாறு சமாதியினி லிருக்கும் யோகி தத்துவத்தைத்
துனைவிற் காணு மாங்கதுவு மனோவாக் கிவற்றாற் றொடர்வரிதாய்த்
தனியோர் பொருளா யிருக்குமதிற் சடங்க யோகங் கைவந்தோர்
கனிசேர் பாலிற் பால்சேர்ந்த தன்மை போலக் கலந்துறைவார்.

(இ-ள்.) இப்படிப்பட்ட வகையாகச் சமாதியிலிருக்கின்ற யோகி தத்துவத்தை விரைவில் தரிசிப்பான். அத்தத்துவமும் மனம் வாக்கு இவைகளால் எட்டுதற்கரிதாய் தனித்த ஒரு பொருளாக விருக்கும். அதில் சடங்கயோகத்திற் றேர்ந்தவர்கள மதுரமாகிய பாலிற் பால் சேர்ந்த தன்மைபோலக் கூடி வாழ்வார்கள்.

ஏற்ற மாமுத் திரையோடு நபோமுத் திரையுட் டியானமெனச்
சாற்று முத்திரை யரியசலந் தரமுத் திரைநன் மூலபெந்த
மாற்ற லுடையிம் முத்திரைக ளறிந்தோன் யோகி யாங்கவற்றிற்
போற்று மாமுத் திரையின்விதி யாருந் தெளியப் புகலுவாம்.

(இ-ள்.) தகுதியாகிய மகாமுத்திரையுடன் நபோமுத்திரை - உட்டியானமென்று சொல்லும் முத்திரை - அருமையாகிய சலந்தரமுத்திரை - நல்ல மூலபெந்த முத்திரை யென்னும் வலியுடைய இம்முத்திரைகளைத் தெரிந்தோன் யோகியாவான். அம்முத்திரைகளில் துதிக்கத்தக்க மகாமுத்திரையின் முறையை யாவரும் நன்குணரும்படிச் சொல்லுவாம். எ-று. (சங)

கூடு மாமுத் திரைவலக்கா னீட்டி யிடக்கால் குதத்தழுத்தி
நீடு தாளை யிருகையாற் பிடித்து நாடி வளைத்துநிறைந்
தோடு பிராணன் றனைமாறி மாறி விடுத லுவுலர்த்தல்
நாடி சோதித் திடல்மதிய மிரவி கூட்ட லெனநவில்வார்.

(இ-ள்.) கூடுகின்ற மகாமுத்திரையாவது வலதுகாலை நீட்டி இடதுகாலை மலவாயிலி லழுத்தி நெடிய கால்களை இருகரங்களாற் பற்றி, நாடிகளை வளைத்துக்கொண்டு நிறைவாகி யோடுகின்ற பிராணவாயுவை (இடைகலை பிங்கலைகளில்) மாறிமாறி விடுதல் - காலை யுலரச்செய்தல் - நாடிசோதனைபுரிதல் -இடைகலை பிங்கலைகளைக் கூட்டுதல் என்று சொல்லுவர். எ-று. (சச)

காலைக் கபாலத் தூடேற்றிப் புருவ நடுவி னோக்கமைத்து
மேவல் நபோமுத் திரைவயிற்றி னுதை னுபி மேலாதல்

நாவில் வெங்கிற் றூனுதல் பிராண வாயு தனைகிறுத்த
லோவி லுட்டி யானமிது பயின்றோர் வானத் துலாவுவார்.

(இ-ள்.) நாவைக் கபாலத்தின் மத்தியி லேற்றிப் புருவங்களி னிடையிற் பார்வையைப் பொருத்தியிருத்தல் கபோமுத்திரை. வயிற்றிலாவது நாபியின்மே லாவது குற்றமில்லாத முதலிலாவது பிராண வாயுவைக் கம்பித்தல் கெடுதலில் லாத உட்டியானமுத்திரை. இதனைப்பழகினோர் ஆகாயத்திற் சஞ்சரிப்பார்கள்.

வாயு வதனுல் நரம்புகளால் மலத்தை யிறுக்கிற் கீழ்வதிகத
தீயின் மதியத் தமுதொழுகா பிராண வளியுஞ் செல்லாது
மேய விதனைச் சலந்தரமுத் திரையா மென்ன விளம்பினரா
லாயு மறையின் பொருளனைத்துந் தமதா மென்னு மறிவுடையோர்.

(இ-ள்.) வாயுக்களாலும் நரம்புகளாலும் மலத்தை யிறுகச்செய்தால், கீழேயுள்ள அக்கினியால் சந்திரனிலிருந்து அமுத மொழுகாது. பிராணவாயுவும் புறம்போகாது. பொருந்திய இதனைச் சலந்தரமுத்திரையாகுமென்று,ஆராய்கின்ற வேதப்பொருள் முழுவதுந் தம்முடையதாகுமென்னும் புத்திமான்கள் கூறினர்.

குதியோ ரிரண்டால் யோனிதனை யிறுக்கிக் குதத்தை யுள்வாங்கி
விதியி னபான வாயுவினை மேலே யேற்றிற் பிராணனுக்கு
மெதிரு மபானன் றனக்குமியை பெய்து மலநீ ரெய்தாது
முதிருங் கிழவற் கிளமைவரு மூல பெந்த மிஃதாமால்.

(இ-ள்.) இரண்டு குதிக்கால்களால் யோனியை யிறுக்கி மலவாயிலை யுள் வாங்கிக் கிரமப்படி அபானவாயுவை மேலேறச்செய்தாற் பிராணவாயுவுக்கும் எதி ர்ப்படுகின்ற அபானவாயுவுக்குஞ் சம்பந்த முண்டாகும் மலஜலங்க ளடையாது (வயதுசென்று) முதிர்ந்த கிழவனுக்கு இளமைப்பருவம் வரும். இஃது மூலபெந்த முத்திரையாகும். எ-று. (௪௭)

மருவு பிராணன் மேலிழுக்க வபான வாயு கீழிழுக்கப்
பெருகு துயரின் வருந்தாது கூடு மவன்பே சரும்யோகி
பொருவி லகரத் தாற்போந்து சகரத் துட்போ மசபைதனை
யிருபத் தோரா யிரத்தறுநூ றுருவேற் றிடுதல் லுயர்சீவன்.

(இ-ள்.) பொருந்திய பிராணவாயு மேலிழுக்கவும், அபானவாயு கீழிழு க்கவும் மிகுகின்ற துன்பத்தால் வாதனையுறாமல் நிஷ்டைகூடுவோனே சொல்லு தற்கரிய யோகியாவான். சமானமில்லாத அகரவெழுத்தாற் பிறந்து சகரவெழுத் துக்குட் செல்லும் அசபாமந்திரத்தை இருபத்தோராயிரத்தறுநூறுருவை நல்ல ஜீவன் ஏற்கவேண்டும். எ-று. (௪௮)

கலைக ளனைத்துந் தெளிதலா மகளிர் விழைதல் கணமொன்றி
லுலக மியாவுந் திரிநதிடுதல் சிறுத்தல் பருத்த லுடலதனி
விலகு மொளிகண் மனந்தோனற லெவற்றின் பாடை களுமறித
லலகில் புவனந் தனித்தாங்க லாகாயத்தி னடைந்திடுதல்.

(இ-ள்.) சாத்திரங்களெல்லாவற்றையு முணர்தல் - மாதர் மோகனம் - ஓர் க்ஷணப்பொழுதில் உலகமுழுவதுஞ் சஞ்சரித்தல் - சூக்குமமாதல் - ஸ்தூலமா

தல் - சரீரத்தில் விளங்கும் ஒளி கண் மனம் தெரிதல் - எத்தேசத்துப் பாஷைக ளையு முணர்தல் - குற்றமில்லாத உலகத்தை யொப்பற்றுத் தாங்குதல் ஆகாயத் திற் சேருதல். எ-று.

இதுமுத லிரண்டு கவியு மொருதொடர்.

"ஒளிகண்மனந்தோன்றல்" என்பதற்குப் பிரகாசங்களை மனதிற்காண்டல் எனக் கூறுதலுஞ் சிலர் மதமாம்.

எவற்றின் பாடைகளு மென்றது,

"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகந்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம்வங்கங்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலந்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே." — என்றதுபோ

லப் பதினெண் பாஷைகளை யென்க. அன்றியும், விலங்கு - பறவை - முதலிய எல்லாப்பிராணிகளின நயனபாஷையும் எனவும் கொள்க. (சகூ)

சேணிற் பொருள்யா வையுங்காண்டல் செகத்து ளொளிக ளெளி
துணர்தல், மாணுற றுயர்யோ கியாக்கிவைக ளிடையூ றிவற்றின் மனஞ்
செலுத்தா,தியாணர்க் கோங்கின் முகிண்முலைய வேழை பாக னிணையடி
யைக், காணுற் றுள்ளங் கசிந்துருகி யிருப்போர் முத்திக் கடற்படிவார்.

(இ-ள்.) தூரத்திலுள்ள எல்லாப்பொருள்களையும் பார்த்தல் - உலகத்து ள்ள பிரகாசங்களையெல்லாம் இலேசாக அறிதல் ஆகிய இச்செய்கைகளெல்லாம் மாட்சிமைப் பெற்றுயர்ந்த யோகிகளுக்குத் தமது யோகசாதன இடையூறாகும் (ஆதலால்) இவற்றிலே மனதை விடாமல் அழகிய கோங்கரும்புபோன்ற திருத் தனங்களையுடைய பார்வதிபாகராகிய சிவபெருமானது உபயதிருவடிகளைத் தரிசி த்து மனமுருகியிருப்பவர் மோக்ஷக்கடலிற் குளிப்பார்கள். எ-று. (ருo)

இனைய வாற்று வியோகங்க ளியற்றி யுடல மிகவருத்தி
வினைதற் கரிய தனிமுத்தி நெறியி னடைக விதுவன்றித்
துனைவி லுடலம் வருந்தாது முத்தி யடையத் துணிந்தோர்கள்
கனைநீர்க் கங்கை சூழ்காசி யடைய வேண்டு மெனக்கரைந்தான்.

(இ-ள்.) இத்தகைய வழியால் யோகங்களைச்செய்து தேகத்தை மிகவும் வருத்தப்படுத்தி நினைத்தற் கரிதாகிய ஒப்பற்ற முத்தியுலகை முறையோ டடை யக்கடவர். இவ்வாறன்றிச் சரீரம் வருந்தாமல் விரைவிலே முத்தியுலகு சேரத் தீர்மானித்தவர்கள், ஒலிக்கின்ற நீரையுடைய கங்காநதியாற் சூழ்ந்திருக்குங் காசி நகரத்தைச் சேரவேண்டுமென்று (அகத்தியமுனிவருக்கு ஸ்ரீமுருகக்கடவுள்) திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (ருக)

யோகநிலை யுரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - கக அக.

உ

சிவமயம்.

நாற்பத்தோராவது,

## கால மறிவ துரைத்த அத்தியாயம்.

கறங்குதிரைப் புனற்கங்கை சூழ்கிடந்த காசிதனி
லிறந்துபடு நாளணித்தா யெய்துழியா யினுஞ்செல்கென்
றறைந்தனைமற் றிதுதெளியு மாறினிதி னறைகென்னச்
சிறந்தமுனி வரன்கேட்பச் சூர்தடிந்தோன் செப்புமால்.

(இ-ள்.) ஒலிக்கின்ற அலைகளையுடைய நீர்மயமான கங்காநதியாற் சூழ்ந்து விளங்குங் காசிநகரத்திற்கு இறந்தொழியுங்காலஞ் சமீபமாக அடைகையி லாயினுஞ் செல்லக்கடவதென்று திருவாய்மலர்ந்தருளினீர். இதனைத் தெளியும்வகை இனிதாக உரைத்தருளவேண்டுமென்று, சிறப்பமைந்தஅகத்தியமுனிவர்கேட்க, சூரபதுமனைச் சங்கரித்த ஸ்ரீமுருகக்கடவுள் சொல்லத்தொடங்கினர். எ-று. (க)

ஒழியாது பிங்கலையி னுயிர்ப்பொருநாண் முழுதொழுகி
னழிவாகு மூவாண்டி லாங்கதனி லிரண்டுநாள்
வழுவாம னடக்கிடுமேன் மரிக்கிடுவ னீராண்டிற்
கழிவானுண் டொன்றிலதி னுள்மூன்று கடிதோடில்.

(இ-ள்.) ஒருநாளெல்லாம் நீங்காமல் பிங்கலையிற் சரமோடினால் மூன்று வருடத்தில் மரணம்வரும். அப்பிங்கலையிலேயே இரண்டுதினங்கள் பிசகாமல் நடக்குமானால் இரண்டுவருடத்திலிறப்பான். அதிலேயே மூன்றுதினங்கள் விரைந்துசெல்லுமாயின் ஒருவருடத்தி லுயிர்துறப்பான். எ-று. (உ)

ஐயிருநா ளுபயத்திற் சரமோடி லறுமதியி
னுய்வதிலன் மூக்கொழிய வாயினிடை வளியோடின்
மெய்யினுயிர் நாண்மூன்றின் விட்டகலு மெனவுரைத்தார்
மையறுநூற் கடல்கடந்த மாண்புடைய மதிவல்லோர்.

(இ-ள்.) பத்துதினங்கள் இடைகலை பிங்கலைக ளிரண்டிலுஞ் சுவாசமோடினால் ஆறுமாதத்தின்மே லிருக்கமாட்டான். நாசியன்றி வாய்வழியே வாயு வோடினால் மூன்று தினங்களிலேயே உடலைவிட்டு உயிர் நீங்கும் என்று குற்றமற்ற சாத்திரக்கடலைக் கரைகண்ட மாட்சிமையுடைய புத்திமான்கள் சொல்லினர்.

தென்றிசையி லிரவிதடந் தேர்கடப்பிற் சென்மத்து
மன்றவுயர் திங்களுமே ழாமிடத்தில் வான்கதிரு
மொன்றிடினுட் டினகாலத் தொளிகுறுத்தும் பொற்கென்று
நின்றதோ ருருக்காணி னீங்குமுயிர் மூவாண்டில்.

(இ-ள்.) ஜென்மத்திலே நிலைபெற்ற வுயர்வாகிய சந்திரனும் சப்தமத்தில் சிறந்த சூரியனு மிருந்தாலும், தென்றிசையை நோக்கிச் சூரியனது பரந்த தேர்

நடப்பதாகவும், உஷ்ணகாலத்து வெயில் கறுத்தும், பொன்னிறமாகவுள்ள வேரொருவும் தோன்றினல் மூன்றுவருடத்தி னுயிர்நீங்குவான். எ று. (ச)

மும்மலமு மியல்புதிரிந் தறக்குறைபின் முடியுமுயி
ரமமவொரு பருவத்தி லாகாயந் தனிற்கரிய
மைம்மதவா ரணந்தோன்றின் மரிந்திடுவன் மதியாறிற்
றம்முடல மலையாம னிழலலையிற் சாவணித்தாம்.

(இ ள்.) மும்மலங்களு மியற்கை மாறி மிகக் குறையுமானல் ஒருமாதத்தில் உயிர்நீங்குவான். வானத்திலே கருநிறம் பொருந்திய மேகம்போல மதநீர் சொரியும் யானைவடிவு தோன்றினல் ஆறுமாதத்தில் இறப்பான். தமதுசரீர மசையாதிருக்கச் சாயை யசையுமானல் மரணம் சமீபமாம். எ - று. (ரு)

வாயினிடை நீர்ப்பெய்து வான்றுளிசிந் திடவுமிழின்
மேயதனுத் தோன்ருதேல் வீந்திடுவன் மதியாறி
லாயுளழிந் திடுங்கால மாறுமதி யளவையெனிற்
றூயநிற மோரைந்துஞ் சுவையாறு முறைபிறழும்.

(இ ள்.) வாயினிடத்தில் சலத்தை விட்டுப் பெரிய துளித்துளியாகச் சிந்தும்படி யுமிழ்ந்தால், பொருந்திய விற்போலக் காணப்படாதாயின் ஆறுமாதத்திற் செத்துப்போவான். உயிரொழியும் மரணகாலம் ஆறுமாதகாலமென்கையில் பரிசுத்தமான நிறங்க ளைந்தும் சுவைக ளாறும் நிலைதவறித்தோன்றும். எ று.

நிறம் ஐந்து :—வெண்மை - செம்மை - கருமை - பசுமை - நீலம்என்பன.
சுவை ஆறு:—தித்திப்பு - துவர்ப்பு - கார்ப்பு - புளிப்பு-உவர்ப்பு என்பன. (சு)

அருந்ததிநா நுதிதுருவ னணிமூக்கி னுதிமற்றைப்
பொருந்துமுயர் விணுபெதம புருவநடுக் கட்கடைகள்
திருந்திபிடு மாதுருமண் டலமாகு மிவைதெரியா
திருந்திடுமேற் சின்னளின் மறலிநகர்க் கெய்துவரால்.

(இ-ள்.) அருந்ததி நாவின் முனையிலும், அழகிய துருவன் மூக்கின்முனையிலும், பொருந்திய உயர்வாகிய விண்டுபதம் புருவநடுவிலும், திருத்தமுற்ற மாதுருமண்டலம் கட்கடையிலு முள்ளவாம். இவை தெரியாம லிருந்துவிடுமானல சிறிதுநாளில் இயமனது நகரத்தை யடைவார்கள். எ-று. (எ)

இதழ்நாக்கு மிடறிவைக ளீரமறப் புலர்ந்திடுமேல்
மதியாறி னமன்பகட்டின் மணியோசை கேட்பரா
லுதடுநாப் பல்லண்ண மொழுகுதா துறக்கறுப்பின்
சிதைவருயிர் மதியாறிற் றென்புலத்தோர் விருந்தராய்.

(இ-ள்.) உதடு - நாக்கு - நெஞ்சு ஆகிய இவ்விடங்கள் ஈரம் நீங்க வுலர்ந்திடுமாகில் ஆறுமாதத்திலே யமனது எருமைக்கடாவின் மணியோசையைக் கேட்பார்கள். உதடு - நாக்கு - பல் - மேல்வாய் - ஒழுகுகின்ற வீரியம் இவை மிகக் கறுத்திருந்தால் ஆறுமாதத்தில் தென்புலத்திலுள்ளோருக்கு விருந்தாளிகளாய் உயிரழிவார்கள். எ று.

தென்புலத்தோர் யமதூதர் என்க. (அ)

ஈர்வாளி னுயிர்புறத்த வோர்நிதலை யிடைவீழிற்
றீர்வருபிர் சின்னளிற் றிகழுரங்கை காலிவற்றி
னீராடிற் றேயாது நீங்குமேன் மும்மதியிற்
காராரவெம் பகடுகைக்கு மறலியூர் கடிதடைவார்.

(இ-ள்.) கூரிய வாளால் உயிர்போக்கிய ஒருவன் தலைமேல்விழுந்தால் சிறிதுநாளில் உயிர்நீங்குவர். விளங்குகின்ற மார்பு - கை - கால் இவ்விடங்களில் ஸ்நானஞ்செய்கையில் நீர்நனையாமல் விலகுமானால் கருமை பொருந்திய கொடிய எருமைக்கடாவைச்செலுத்தும் யமனுலகத்தை மூன்றுமாதத்திலும்விரைந்துசேருவர்.

சேற்றிடையின் மிதித்தவடிச் சுவடுசிதை வுறத்தோன்றி
னேறெருமைக் கடம்பாக னெய்துமூ ரணித்தாகு
மாற்றுநீர் கண்ணாடி நெய்நோக்கிற் றலையவற்றிற்
றோற்றிடா தெனிலாவி யொருமதியிற் றோற்பரால்.

(இ-ள்.) சேற்றினடுவில் மிதித்த பாதச்சுவடு சிதைவுற்றுக் காணின் எருமைக்கடாவைச் செலுத்தும் கொடிய யமன்வசிக்கும் (சையமினி) நகரம் சமீபமாகும். ஆற்றுநீர்-கண்ணாடி - நெய் இவற்றைப் பார்த்தால், அவற்றுள் தலை தெரியாமற்போமாகில் உயிரை ஒருமாதத்திலே இழந்துவிடுவர். எ-று. (கo)

இயற்கைமதி பிறழினிர விந்திரவிற் காணினுயர்
முயற்களங்க மதியிரவி யோரிரண்டாய் முன்றோன்றிற்
பயக்குறுநாண் பகலினுடுத் தெரிந்திரவு தெரியாதேல்
மயக்குநமன் றமரெதிரே வருவிருந்தாய்ச் செல்குவரால்.

(இ-ள்.) சுபாவபுத்தி தவறினும், இராக்காலத்தில் வானவில் தெரிந்தாலும், உயர்வாகிய முயற்களங்கத்தையுடைய சந்திரனும் சூரியனும் இரண்டிரண்டாய்த் தமக்குமுன் தெரிந்தாலும், சஞ்சரிக்கின்ற நடுப்பகலில் நட்சத்திரங்கள் தெரிந்து இராவில் தெரியாமற்போமாகிலும், (யாவனாயும்) மயக்குகின்ற யமதூதர்களுக் கெதிரே வருகின்ற விருந்தாகப்போவர். எ - று. (கக)

நாற்றிசையு மிந்திரவிற் றோன்றிடினன் பகலிடையிற்
றோற்றுறவெம் பேயாடிற் றுறுகல்லி னுயர்மரனி
லேற்றுயர்கந் தருவர்நக ரெதிர்ந்திடிலோர் திங்களினிற்
கூற்றமவ னுவிதனைக் குடியாம லொழியுமோ.

(இ-ள்.) நான்குதிக்குகளிலும் இந்திரதனுசு தெரிந்தாலும், நல்ல பகற்காலத்தில் கொடிய பேய்கள் உருத்தெரியும்படி கூத்தாடினாலும், நெருங்கிய மலையிலும் உயர்ந்த மரத்திலும் ஏறி உயர்வாகிய கந்தருவநகர மெதிர்வரக்கண்டாலும் ஒருமாதத்திலே அவனுடைய உயிரை இயமன் புசியாமல் விடுவானோ? (விடான்)

குடங்கையாற் செவிபுதைப்பிற் குமுறுமொலி கேளாதேற்
றடம்புயமு முடல்முழுதுந் தடிந்துள்ளோர் சாம்புவரோ
லொடுங்கியமெய் யினர்மிகவும் பருப்பரோன் மதியொன்றிற்
கடந்திடுவர் வைதரணி நதியினைத்தங் காற்புணையால்

(இ-ள்.) உள்ளங்கையாற் காதைமூடினால் குமுறுகின்ற ஓசைகேளாதாயினும், விசாலமான புயமும் சரீரமுழுவதும் பூரித்திருப்போர் இளைப்பாராயினும் இளைத்த சரீரமுடையோர அதிகமாகத் தூலமாவாராயினும்ஒருமாதத்திலே தமது இருபாதங்களால் வைதரணியாற்றைக் கடப்பார்கள். எ - று.

வைதரணி என்பது யமபுரத்திலுள்ள நதி. (கங)

தனதுநிழற் றென்றிசையிற் றனித்தோன்றி னுருமெறியுங்
கனைகுரல வெஞ்சினத்த கதமெரிகாற் செங்கணண
பனைவகிர்ந்த தெனப்பணைத்த படர்கோட்ட பகடூர்ந்து
துனைவில்வரு கொடுமறலி யெறிவலையிற் றுவக்குணபான்.

(இ-ள்.) தன்னுடைய நிழல் தெற்குத்திசையிலே ஒன்றியாகத் தோன்றினும், இடிபோற் கர்ச்சிக்கும் பெரிய குரலையுடைய வெவ்விய கோபங்கொண்ட வேகத்தோடு செல்லும் அக்கினியைக் கக்குஞ் சிவந்த கண்களையுடைய பனைமரத்தைப் பிளந்ததுபோலக் கிளைத்த நெடிய கொம்புகளையுடைய எருமையைச் செலுத்தி விரைவில் வருங் கொடிய யமன் வீசும் பாசக்கயிற்றிற் சிக்குண்டிறப்பான்.

பேய்பூதம் நரிகழுதை யவுணரிராக் கதர்பிறங்கு
மாய்தூவிக் கருங்காக்கை பருந்துகுரங் கடுபுலிசெந்
நாயேற வவைதமைத்தின் னக்கனவு நனிகாணின்
மாய்வரோர் பருவத்தின் மறலிகதைக் கிரையாக.

(இ-ள்.) பேய் - பூதம் - நரி - கழுதை - அசுரர் - இராக்கதர் - விளங்குகின்ற ஆய்ந்த மயிரையுடைய கருங்காக்கை - பருந்து - குரங்கு - கொல்லுகின்ற புலி-செந்நாய் ஆகிய அவற்றி லேறவாவது, அவை தம்மைத் தின்னவாவது நன்றாகக் கனவுகண்டால் ஒருவருடத்தில் யமனது கதாயுதத்துக்குப் பலியாகச் சாவர்.

அவைதமைத்தின்ன என்பதற்கு ஆகிய அவற்றின் மாமிசத்தைப் புசிக்க என்றுபொருள்கூறினு மமையும். (கரு)

செய்யமலர் செய்யவரி செஞ்சாந்த மிவைதமது
மெய்யிலணிந் திடக்காணில் விளம்புமதி யிருநான்கி
லுய்வதிலர் புற்றதனில் யூபத்தி லுயர்துகளிற்
கையறவோ டுயிர்துறப்ப ரவையேற்கக் கனுக்காணில்.

(இ-ள்.) செந்நிறமுள்ள பூக்கள் - சிவந்த அரிசி - செஞ்சந்தனம் - இவற்றைத் தமது உடலிலணியக் கனவுகாணில் சொல்லுகின்ற எட்டுமாதத்தில் பிழைத்தலிலராவர். அவற்றைவாங்கிக்கொள்ளக் கனவுகண்டால் புற்றிலாவது யூபத்தம் பத்திலாவது மிக்க துன்பத்திலாவது வருத்தத்துடனே உயிர் நீங்குவர். எ-று.

எண்ணெய்தலை முழுகமயி ரெறிந்திடவெங் கரமிவர
நண்ணருந்தென் புலத்தொருவர் கொடுபோக வுயிர்நடந்தோர்
மண்ணிபதம் மேலேற மூளிதருபுற் சுமக்கமற்றைக்
கண்ணருந்தீக் கனுக்காணி லோர்மதியிற் கழிவரால்.

(இ-ள்.) எண்ணெயிட்டுத் தலைமுழுகவாவது, மயிராற்றவாவது, கொடிய கழுதைமேலேறவாவது, செல்லற் கரிய தென்றிசையாக ஒருவர் அழைத்துப்

போகவாவது, இறந்தோர் உயிராயிருக்குந் தம்மே லேறவாவது, உலர்ந்த புற்சுமை தூக்கவாவது, இன்னும் இவைபோன்ற கொடிய கனுக்களையாவது கண்டால் ஒரு மாதத்தி லிறப்பார்கள். எ-று. (௧௭)

கரியகுறள் மடந்தைதனைப் புல்லவுயர் கருந்தாதி
லுருவமைந்த கதைதாங்கி பொழுதுகருந் துகில்வீக்கி
மருவுகரு நிறத்தொருவன் றனைக்காண வருகனவு
தெரிவுறக்கண் டவனுயி திங்களொன்றிற் கழிந்திடுமால்.

(இ-ள்.) கருநிறமுடைய குறுகிய வடிவமைந்த பெண்ணைக் கலக்கவும் உயரமாகிய மரத்தா அருப்படுத்திய கதாயுதத்தை யேற்று விளங்குகின்ற கரிய வஸ்திரமணிந்து,கருநிறம்பொருந்திய ஒருவன் தனைக்காணும்படி வருகின்றதுபோலக் கனவிற் றெரியக் கண்டால் அவனுயிர் ஒருமாதத்திலே நீங்கும். எ-று. (௧௮)

குரங்கிவர்ந்து குணபாலிற் செலவயரக் கொடுங்கனவு
தெரிந்திடக்கண் டிடிலரவி சிதைவர்நாண் மூவைந்தில்
விரும்பியளிக் குநரளியா விடின்மிகவு மளியாதோர்
பொருந்தவளித் திடினாவி பொன்றிடுவர் சின்னளில்.

(இ-ள்.) குரங்கின்மேலேறி மேற்றிசை நோக்கிப் போகத்தக்க கொடிய கனுப்படிப்படி கண்டால் பதினைந்து தினங்களில் உயிர் கெடுவர். விருப்பங்கொண்டு காப்பாற்றுவோர் காவாவிட்டாலும், மிகவுங் கெடுப்போர் மனம்பொருந்தக் காக்கத்தொடங்கினும் சிறிதுநாளில் உயிரழிவர். எ-று. (௧௯)

இன்னுமளப் பிலவாய விறந்துபடு குறியவற்றின்
மன்னியிடு குறியோர்ந்து வானதிசூழ் கிடந்தோங்கிப்
பொன்விழுது விட்டனைய புரிசடையோ னினிதுறையுங்
கன்னியெயில புனைகாசி கடிதினடைந் திடல்வேண்டும்.

(இ-ள்.) (இவையேயன்றி) இன்னும் அளவில்லாதனவாகிய இறந்துபோகும் (மரணக்) குறிகளுள்ளன அவற்றுள் தன்பால்நிலைத்திருக்குங் குறியின்பலனையறிந்து, ஆகாயகங்கையானது சூழ்ந்திருந்து, பொன்மலை விழுதுவிட்டதைப்போன்ற புரிந்த சடையையுடைய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான் இனிதாகவீற்றிருக்கும் அழியாத மதிலையுடைய காசிநகரத்தை விரைவிற் சேரல்வேண்டும். எ-று. (௨௦)

வேறு.

என்று மலையத் தமிழ்முனிவ னினிது கேட்பக் குருகுபெயர்க்
குன்ற மெறிந்த சுடரிலைவேற் குமர னுரைத்தா னெனத்தெரிந்து
மன்ற மறைக ளொருநான்காய் வகுத்த முனிவற் பணிந்து புலன்
வென்ற சூதன் முனிவருளந் தெருளு மாறு விளம்பினனால்.

(இ-ள்) என்றிவவாறு பொதியமலையிலுள்ள அகத்தியமுனிவர் இனிதாகக் கேட்கும்படி கிரவுஞ்சகிரியைச் சங்கரித்த பிரகாசம்பொருந்திய அச்சவடிவமைந்த வேலேந்திய ஸ்ரீகுமாரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளினர் என்று நிலைபெற வேதங்களை ஒருநான்காகப் பாகுபாடுசெய்த வியாசமுனிவரைத் தியானித்து ஐம்புலன்களையும் வென்ற சூதபுராணிகர் நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்களது உள்ளத்திலுணரும் வகையாகச் சொல்லினர். எ-று. (உக)

முன்னொருகாலத்தில் வேதங்கள் முறை தவறியிருந்தமையால் அவற்றை யாவர்க்கும் நன்குபுலப்படுத்துமாறு விஷ்ணுமூர்த்தியின் அபராவதாரமாக வியாசமுனிவர் தோன்றினர். அஃது அவராலேயே பாகுபாடுசெய்து இருக்கு - யசுர் - சாமம் - அதர்வணம் என நான்கு பிரிவுக ளாக்கப்பட்டது ஆதலானும், சூதபுராணிகா ஐம்புலன்களின் வழித்தாய் மனதைச் செலுத்தாதவரும், முன்னர் வியாசபகவானுற் கூறிய முறைப்படி சவுனகராதி நைமிசாரண்ணிய முனிவர்களுக்குரைப்போரு மாதலானும் "மன்ற மறைக ளொருநானகாய் வகுத்த முனிவற் பணிந்துபுலன் - வென்ற சூதன்" என்றார். (உக)

காலமறிவ துரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் கஉகo.

---

பூர்வகாண்டம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உத்தரகாண்டம்.

நாற்பத்திரண்டாவது,

## அவிமுத்தேசன் கதையுரைத்த அத்தியாயம்.

### கடவுள் வாழ்த்து.

**விச்சுவநாதர் துதி.**

சீர்கொண்ட மலரயனுந் திருமாலுங் காண்பரிய
வேர்கொண்ட பேரொளியை யெளியேன்ற னுள்ளத்து
நீர்கொண்ட காசியினு நிலவுபழ மறைக்கொழுந்தைக்
கார்கொண்ட மணிமிடற்றெங் கண்ணுதலை வழுத்துவாம்.

(இ-ள்.) சிறப்புப்பெற்ற தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், விஷ்ணுமூர்த்தியும் (முறையே அன்னமாகவும், பன்றியாகவும் உருவேற்று, திருவடியையும் திருமுடியையும் தேடி) காண்பதற்கரிதாகிய அழகுபொருந்திய ஒளிப்பிழம்பாக வுள்ளவரை, எளியேனது மனதிலும், கங்காசலத்தைத் தன்பாற்கொண்டிருக்குங் காசிக்ஷேத்திரத்திலும் விளங்குகின்ற பழைய வேதத்தின் கொழுந்தாக வுள்ளவரை, கருநிறமமைந்த நீலமணிபோன்ற ஸ்ரீகண்டத்தையுடைய நெற்றிக்கண்ணராகிய எமது ஸ்ரீவிச்சுவநாதப்பெருமானைத் துதிப்பாம். எ-று.

மலரயனும், திருமாலும் என்பவற்றிலுள்ள உம்மைகள் உயர்வுசிறப்பு. எளியேன்றனுள்ளத்தும் என்பதிலுள்ளது இழிவுசிறப்பு. காசியினும் என்பதிலுள்ளது இறந்ததுதழீஇய எச்சவும்மை. இந்நான்கும் எண்ணும்மைகளுமாம்.

"பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை" என ஸ்ரீஞானசம்பந்தப் பெருமானும், "பூவிற் சிறந்தது பொறிவாழ் பூவே" எனப் பிறருங் கூறியுளராதலின், தாமரையைச் "சீர்கொண்ட மலர்" என்றும், பிரமன் தாமரைமலரில் வசிப்பவனாதலின் "மலரயன்" என்றும், ஏனைய தேவர்போலன்றிப் பிரமவிஷ்ணுக்கள் தனித்தனியே பெருந்தேவர் மூவருள் ஒருவரும், முதற்றொழிலாகிய படைப்பும், காப்பும் முறையே செய்வோராதலின் "அயனுந் திருமாலும்" என்றும், சிவபெருமான் தன்றன்பர் ஞானக்கண்ணைக் கொண்டு தெரிசித்தற்குரிய ரன்றி, மமதை யுற்றோர் ஊனக்கண்ணாற் பார்த்தற் கரியராதலின் "காண்பரிய" என்றும், சிவபிரான் பிரமவிஷ்ணுக்களின் இறுமாப் பொழிய அக்கினிமலைவடிவமாக நின்ற

பொழுது சிவஞானமே திருவுருவும்,ஏனையமுச்சுடர்களாகிய சூரியசோமாக்கினிகளுக் கெல்லாம் ஒளிசெய்வது மாதலின் "ஏர்கொண்ட பேரொளியை" என்றும், உயர் விழிவு நோக்காது யாண்டும் எக்காலத்தும் சர்வபரிபூரண வியாபியாயிருத்தலின், நியேனுகிய என்னிடத்தும் நீங்கினுரில்லை யென்பார் "எளியேன்றன்னுள்ளத்தும்" என்றும், காசிநகரம் புண்ணியநதியாகிய கங்காசலத்தைத் தன்பாற் கொண்டதும், உலகுக்கெல்லாம் முதற்பெருங்கடவுளாக ஸ்ரீ அகிலேசனென்னுந் திருநாமத்தைக் காரணமாகப் பெற்ற சிவபெருமான் தன தடியார்க்கருள எழுந்தருளியுள்ளது மாதலின் "நீர்கொண்ட காசியினும்" என்றும், ஒளியும் மறைக்கொழுந்தும் சிவலிங்கக் குறியும் கண்ணுதலும் எனப் பலவகைத் தாகிய நிஷ்களமும் சகளமும் நிஷ்கள சகளமும் எனறு சொல்லப்படும் மூவகைத் திருமேனிகளை யேற்று இரணியகற்ப பிபீலிகாபரியந்தம் யாவுமாயிருததலின் "நிலவு" என்றும், அநாதியாக வுள்ளதுங் கீழோர் முதலானோர்க்கு மறைவாக வுள்ளதுமாதலின்,வேதம் "பழமறை" என்றும், அதன் முடிந்தஇடமாகிய உச்சியில்விளங்குவோனென்பார் "மறைக்கொழுந்தை" என்றும், ஆலால விஷத்தைத் தேவர்கள் பிழைக்கும்படி பெருமான் திருவமுது செய்கையில் அதற்கோர் சாக்ஷியாக யாண்டுங் கண்டததிலேயே யணிந்திருக்கவேண்டுமென்று தேவர்கள் பிரார்த்தித்தபடி நிறுத்திவைத்திருக்கும் கண்டம் நீலரத்தினம்போற் கருநிறம் பெற் றிருத்தலின் "கார்கொண்ட மணிமிடற்று" என்றும், "என்றுநீ யன்றுநா னுன்னடிமை" என்றூர்போல எமக்கெப்போதுஞ் சுதந்தரமுடையரென்பார் "எம்" என்றும், இரண்டு விழிகள் முகத்திற் பொருந்திய பல தேவர்போலன்றித் தமக்கென்ச் சுதந்தர விலக்கண மற்று ஆன்மாக்களின் உஜ்ஜீவனார்த்தமாகச் சூரிய சோமாக்கினி என்னும் முச்சுடர்களையே மூன்று நேத்திரங்களாக வுடையவனும் அவற்றுள் அக்கினி நேத்திரம் சூரபன்மனுதி அசுரரால் துன்புற்றிருந்த இந்திராதிதேவர் துயர் தொலையும்படி ஸ்ரீ முருகக்கடவுளைத் தந்து நெற்றியில் விளங்குவதால் "கண்ணுதலை" என்றும், "மனநின்பால் - தாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டி" என்ற திருவாசகத்தின்படி எம்பெருமானை வணங்கில் உலகு தனனைவணங்கு மாதலாலும், இவ்வுலகத்துள்ள யாவரையு நோக்கி "காகமுறவு கலந்துண்ணக் கண்டீர்" என்னுந் தாயுமானுர்போல் ஒன்றுகூட்டி, உளப்பாட்டுத்தன்மைப்பன்மையாக "வணங்குவாம்" என்றுங் கூறினுர்.

"உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினு—மொருதம் மெச்ச மீறுற முடியும்" என்றூற்போல "பேரொளியை", "மறைக்கொழுந்தை", "கண்ணுதலை" என இரண்டனுருபுக ளடுக்கி வினைமுற்றைக் கொண்டன.

இச்செய்யுளில யாம் என்னு மெழுவாய் எஞ்சிகின்றது. (க)

தேசுறு ஞான மளப்பினுள் யோகஞ் செய்திடி னலதுசேர் வரிதாற், காசியி னடைபிற் கணத்தினின் முத்தி யெய்தலா மெனக்கரைங் தனையான், மாசிலக் நகரின் விடாதுறை பரமன் கதையினை வழங்கென முனிவன், பேசலு மவுண ரிரத்தமுண் டொளிரும் பிறங்குவேற் குமரனுண் டுரைப்பான்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற ஞானமானது அளவில்லாதகாலம் யோகசாதனஞ் செய்தாலல்லாமல் அடைத லருமையாதலால், காசிக்ஷேத்திரத்தைச் சேர்ந்தால் இமைப்பொழுதில் மோட்சமடையலாமென்று திருவாய்மலர்ந்தருளினீர்; குற்றமில்லாத அக்காசிநகரத்தில் இடைவிடாது வீற்றிருக்கும் சிவபெருமானது சரித்திரத்தை ஓதியருளவேண்டுமென்று அகத்தியமுனிவர் சொல்லவும், அசுரரது உதிரத்தைக் குடித்துப் பிரகாசிக்கும் ஒளிவாய்ந்த வேற்படையேந்திய ஸ்ரீமுருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றனர். எ - று.

முதலிரண்டுவரிகளின் கருத்தை—இந்நூல்

யோகநிலையுரைத்த அத்தியாயம்.

"இனைய வாற்றால் யோகங்க ளிபற்றி யுடல மிகவருத்தி
நினைதற் கரிய தனிமுத்தி நெறியி னடைக வி துவனறித
துனைவி னுடலம் வருத்தாது முத்தியடையத் துணிந்தோர்கள்
கனைநீர்க் கங்கை சூழ்காசி யடைய வேண்டு மெனக்கரைந்தான்." என

வருவதனு னுணர்க.

"விடாதுறைபரமன்" என்பது பெருமான் ஒருக்கால் நீங்கினும் அவரது மனம் நீங்காமைபற்றி. "அந்நகரில் விடாதுறைபரமன்"—அவிமுத்தேசன் அல்லது அகிலேசன். அவிமுத்தம் என்பது காசி. அகிலேசன்எனினும் விச்சுவநாதன் எனினு மொக்கும். (உ)

மற்றைய தலங்க ளெவற்றினுந் தவத்தால் யோகினுன் மருவரு முத்தி, பெற்றிடல் வேண்டுங் காசியில் வாளா வுறைந்திடின் முத்தியாம் பெட்பி, னுற்றவ ணீங்கா வுறைதலே யோக மொரணமல ரிடுவதே தானங், கற்றையங் கதிர்கான் முத்திமண் டபத்தி விருப்பதே கருதருந் தியானம்.

(இ-ள்.) வேறெந்த ஸ்தலங்களிலும், தவத்தாலும் யோகத்தாலும், கிடைத்தற்கரிய மோட்சத்தைப்பெறல்வேண்டும். காசியிற் சும்மா வசித்திருந்தால் மோக்ஷமடையுந் தன்மையால் ஆங்கடைந்து அந்நகரைவிட்டு விலகாமல் வசித்தலே யோகம். (அங்குள்ள சிவலிங்கக்குறியை) ஒள்ளிய மலரானருச்சிப்பதே தானம். அழகிய கிரணத்தொகுதியைக் கக்குகின்ற முத்திமண்டபத்திலிருப்பதே நினைத்தற்கரிய தியானமாகும். எ - று.

முத்திமண்டபம் என்பது காசியிலுள்ள மண்டபங்களு ளொன்று ஆங்கிருந்து சிவத்தியானஞ் செய்யின் விசேஷபலனைக் கொடுக்கவல்லது. பின்வரும்(ங)

அளப்பருங் கால மைந்தழல் நாப்ப ணருந்தவம் புரிந்தவர் பெறும்பே, றுளத்திவின் புற்றுச் சிவநிசி யேகா தசியினி லுண்டிநீத் துறையிற், களிச்சுரும் பரற்றுங் கடுக்கையந் தெரியற் கண்ணுத லளிக்குமினபோல, வளத்தகற் காசி பிரிந்திறை வருந்துங் கதையினைக் கேளென வழங்கும்.

(இ-ள்.) எண்ணில்லாத காலம் பஞ்சாக்கினி மத்தியிலிருந்து இயற்றுதற்கரிய தவஞ்செய்தவர்க ளடையும் பலனை, மனக்களிப்படைந்து சிவராத்திரி ஏகா

தசிகாலங்களில் உணவை யொழித்து அங்கு வசித்திருந்தால், மதர்த்த வண்டுக ளொலிக்கின்ற அழகிய கொன்றைமாலை சூடிய நெற்றிக்கண்ணையுடைய ஸ்ரீ அகி லேசப்பெருமான் அனுக்கிரகிப்பார். அகத்தியமுனிவனே! நல்வளம்பொருந்திய காசிப்பட்டணத்தை உன்னைப்போல நீங்கிப் பெருமான்மனம் வருந்திய சரிதை யைக் கேளென்று குமாரக்கடவுள் சொல்லுவார். எ - று.

"பொங்குங்கங் காதரன்கா ளமயின்றே யொன்றும்
 புகலாம விருந்தனனோர் கணப்பொழுது புலவோர்
அங்கவனை யிடைவிடா தருச்சனைமுன புரிந்தா
 ரத்திதியே காதசியா மதித்ததிதி யதனிற்
புங்கவர்பா ரணம்புசித்தே பூர்த்தியுற்றா ரிதன்மேற
 பொருந்து திதி தனிவிமவான் பொற்கொடியை வைத்துச்
சங்கரன்கு லஞ்சுழற்றி நடித்தனனோர் யாமஞ்
 சதுமறைநூ லதுபிரதோ டம்மெனவே சாற்றும்."— என்னும் ஆகமத் திரட்டால் சிவராத்திரி - ஏகாதசி என்பவற்றை யுணர்க. மாதசிவராத்திரி பிரதோ டம் எனவும், வருடப்பிரதோடம் மகாசிவராத்திரி யெனவுங் கூறுவர். அன்றியும் பிரமவிஷ்ணுக்கள் சிவபிரானது அக்கினிஸ்தம்பமாகிய திருவுருவத்தை அடிமுடி தேடிய காலமும் சிவராத்திரி யெனபர். (௪)

அருமறைக் கிழவன் முன்னமோர் பிரம கற்பத்திற் சுவாயம்பு மனு வா, மொருபெருந் திகிரி மன்னவ னிறப்ப வறுபதாண டுறைபெய வின் றிப், பருவா லுழுந்தாங் குலகெலாங் காடாய்ப் பயின்மக மின்றிநன் னி லைமை, திரிதலுங் கமலப் பொகுட்டினி திருக்கு மறையவன் சிந்தையி னினைந்தான்.

(இ-ள்.) அரிய வேதங்கட்குரிய பிரமன் முன்னிகழ்ந்த ஒரு பிரமகற்பத் திற் சுவாயம்புமனுவாகிய ஒப்பற்ற பெரிய ஆக்ஞைசக்கரமுடைய அரசன் மரண மடைய, அறுபதுவருடம் மழைபெய்யாமல் வருத்தமுற்றுப் பூமிமுழுவதும் கா டாகிச் செய்கின்ற யாகங்களில்லாது, நல்லொழுக்கங்கள் மாறவும், தாமரைக்கொ ட்டையில் இனிதாக வீற்றிருக்கின்ற வேதியன் மனதி லாலோசித்தனன். எ-று.

ஆழியொன் றுருட்டி யுலகெலாம் புரக்கு மரசனை யின்றியிவ் வுல கக், தாழ்துய ருழந்த தெனமனத் தெண்ணித் தவறில்சீர் மனுகுலத் து தித்த, பூழிவெம் பரிதி யனையவேற் றடக்கை ரிபுஞ்சைய னென்றுல கேத்தும், பாழியந் தடந்தோண் மன்னவன் காசிப் பதியினிற் றவஞ்செய க் கண்டான்.

(இ-ள்.) பூமிமுழுவதும் ஒப்பற்ற ஆக்ஞைசக்கரத்தைச் செலுத்திக் காக் கத்தக்க மன்னவனை யுடைத்தாயிராமல் இவ்வுலகமானது மிக்க துன்பமுற் றலை இன்றது என்று தனது மனதில் நினைத்து, குற்றமில்லாத சிறப்பையுடைய மநுவ ம்சத்திற் றோன்றிய புழுதியடைந்த வெவ்விய சூரியன்போன்ற வேலேந்திய பர ந்த கையையுடைய ரிபுஞ்சயனென்று உலகத்தார் துதிக்கின்ற அழகிய வலியமை

ந்த பூரித்த புயங்கள் பொருந்திய அரசனொருவன் காசிநகரத்தில் தவஞ்செய்து கொண்டிருக்கப் பார்த்தான். எ-று.

பூழிவே லென்பது கொலைத்தொழிலின்றி மன்னன் தவத்திருத்தலால் மாசுபடிந்திருந்த வேலென்பதாம். (௬)

காண்டலு மரசன் றவத்தினை வியந்து கதிர்முடி துளக்கினான் முக த்தோன், மாண்டவிவ் வுலக மனைத்தையு நீயே புரந்திடல் வேண்டுமெற் றுனக்குத், தூண்டுதல் செய்யா மணிவிளக் கன்ன சுடரிழை யனங்க மோ கினியைச்,சேண்படர் பரிதி நிகர்மணிச் சூட்டுப் பஃறலைச் சேடன் வந் தளிப்பான்.

(இ-ள்.) நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் (ரிபுஞ்சயனைப்) பார்க்கவும் அம்மன்னனது தவத்திற்காக ஆச்சரியமுற்று, பிரகாசிக்கின்ற சிரசை யசைத்து, மாட்சிமைப்பட்ட இப் பூமிமுழுவதும் நீயே (அரசுபுரிந்து) காத்தல் வேண்டும். தூண்டுதல் செய்யாத மாணிக்கத் தீபம் போன்றபிரகாசம்பொருந்திய ஆபரணமணிந்த அனங்கமோகினி என்பவளை,ஆகாயத்திற் செல்லும் சூரியன்போ ன்ற மாணிக்கம்பொருந்திய உச்சிக்கொண்டை யமைந்த பல சிரங்களுள்ள ஆதி சேடன் வந்து உனக்குக் கொடுப்பான். எ-று. (௭)

மாயிரு ஞால மனுநெறி வழாது மன்னநீ காத்தலா னினக்காங், கா ய்மணிக் குப்பை தெய்வமென் சாந்த மைந்தரு நறுமல ரனைத்துஞ், சே யுயர் விசும்பி னமரர்கல் குதலா லுயர்திவோ தாஸனும் பெயரு, மேய் வுறுங் கலைகள் முழுவது மளித்தே மேம்பலோ டிருத்தியென்றிடலும்.

(இ-ள்.) அரசனே ! நீ சிறப்புற்ற பெரியஉலகத்தை மனுமுறை தவறாமற் காத்தலால் உனக்கு (குற்றமின்றி) ஆராய்ந்த நவமணிக்குவியல்-தெய்வமணங்கம ழும் மெல்லிய சாந்தம்-வாசனை வீசும் பஞ்சதருக்களின் புட்பம் முதலிய தேவ போகங்களெல்லாம், மிகவுயர்ந்த ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற தேவர்கள் கொடுத் தலால், உயர்ந்த திவோதாஸன் ஆகிய பெயரும் வரும். வேதமுதலிய கலைகளை யெல்லாம் நீ யறியும் வல்லபந் தந்தோம் ; பெருமையோடிருக்கக்கடவாய் என்று வரமளிக்கவும். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௮)

தாமரைத் தவிசி லரசுவீற் றிருக்குஞ் சதுமுகற் றொழுதியான் கே ட்ட, காமுறு வரமொன் றளித்தியே லுலகங் காக்குவ னெனவுள மகிழ் ந்து, யாமது தருது மென்னலு மமரர் விஞ்சையர் கின்னர ரியக்கர், தூம வெந் தழற்கண் ணுரகரிந் நகரந் துறந்துதம் பதிபுக வேண்டும்.

(இ-ள்.) தாமரைமலர்ப்பீடத்தில் கொலுவீற்றிருக்கும் நான்கு திருமுகங்க ளையுடைய பிரமதேவனைப் பணிந்து நான் கேட்கத்தக்க விரும்பிய ஒரு வரததை க்கொடுப்பாயாகில் பூமியை ரக்ஷிப்பேன் என்று ரிபுஞ்சயன் கூற, பிரமன் மனங் களித்து நாம் அதனையுங் கொடுப்போம் என்று சொல்லவும், தேவர்-வித்தியாதரர்-கின்னரர்—யக்ஷர் - புகையத்தக்க நெருப்புப்போன்ற கண்களையுடைய நாகர் முத லானவர் இக்காசிநகரத்தை விட்டுத் தமது நகரங்களைச் சேரவேண்டும். (௯)

என்றலும் வழங்கிச் சேட்டிளங் கதிரி னெரிகதிர் மணிமுடி சூட்டிக், குன்றுறழ் திணிதோள் மன்னவ னமரர் குழுவினைத் தனித்தனி நோக்கிச், சென்றுநும் பதியிற் சேர்கென முரச மறைதலுஞ் செழுமறைக் கிழவன், பொன்றிகழ் கடுக்கைப் புரிசடைப் பரம னினிதுறை திருநகர புகுந்தான்.

(இ-ள்.) என்று கேட்கவும், பிரமன் அவ்வரத்தைக் கொடுத்துப் பெருமைவாய்ந்த பாலசூரியன்போற் கிரணங்கள் வீசும் நவமணிகளிழைத்த கிரீடம் தரிப்பிக்க,மலையைப்போன்ற வலியதோளையுடைய ரிபுஞ்சயன் தேவர்கூட்டத்தைத் தனித்தனிபார்த்து உங்கள் நகரங்கட்குப்போய்ச் சேரக்கடவீர் என்று பேரிகை முழக்குவிக்கவும் செழிய வேதங்களையுடைய பிரமன் பொன்னையொத்த கொன்றைமாலை சூடிய புரிந்த சடையையுடைய சிவபெருமான் இனிதாக வீற்றிருக்கும் திருச்சந்நிதானத்துக்குட்சென்றான். எ-று. (௧௦)

அடிதொழு தேத்தும் விரிஞ்சன்முன் தோன்றி யலங்குநீர்க் காசியங் கடவுள், குடுமிவான் றோயு மந்தர மிழைத்த தருந்தவ மாங்கது குறுகி, யொடிவில்சீர் வரங்க ளுதவுதல் வேண்டு மொல்லையி லெழுகநீ யென்ன, விடையிவர்ந் தயன்மால் நந்தியே முதல விண்ணவர் சூழ்வர வெழுந்தான்.

(இ-ள்.) அசைகின்ற கங்கையாற் சூழ்ந்த அழகிய காசிநகரத்தில் வசிக்கும் ஸ்ரீ அவிமுக்தேசப்பெருமான் தமது திருவடிகளைப் பணிந்து துதிக்கும் பிரமனுக்குமுன் தோன்றி, ஆகாயமளாவிய சிகரங்களையுடைய மந்தரமலை அருந்தவஞ்செய்தது; அவ்விடஞ் சேர்ந்து கெடுத லில்லாத சிறப்பமைந்த வரங்களை அதற்கு அனுக்கிரகிக்கவேண்டும் விரைவி லெழுந்திருக்கக்கடவாய் என்று திருவாய் மலர்ந்தருளி, இடபவாகனத் தாரோகணித்து, பிரமன் - விண்டு - திருநந்திதேவர் முதலாகிய தேவர்கள் தம்மைப் புடைசூழ்ந்து வரும்படி எழுந்தருளினர். எ-று.

கண்களு மனனுங் காசியிற் கிடப்பக் கறைமிடற் றெந்தையாண் டேக, விண்புகு குடுமி மந்தரந் தாழ்ந்து மென்மலர் தூய்மகிழ்ந் தேத்தப், பண்கனிந்தொழுகு மென்மொழிபாகன் விழைந்தனபகர்தியென் றிடலு, மொண்சுட ராகி யாவது முணரு முனக்கியா னுரைப்பதொன் றுண்டோ.

(இ-ள்.) ஸ்ரீகண்டத்தையுடைய எமது தந்தையாகிய சிவபெருமான் திருநேத்திரமும் திருவுள்ளமும் காசிநகரத்தி லிருக்க வைத்து மந்தரகிரியையடைய, ஆகாயமளாவிய உச்சியையுடைய அம்மந்தரம்பணிந்து மெல்லிய மலர்களா லருச்சித்துத் துதிக்க, பண்ணேசையான து மிகுந்துவிளங்கும் மெல்லிய சொல்லையுடைய அன்னபூரணியம்மையாரப் பாகராகிய ஸ்ரீஅவிமுக்தேசப்பெருமான் (மந்தரமே!) நீ விரும்பியவற்றைக் கேள் என்று திருவாய்மலர்ந்தருளவும், ஒள்ளிய முச்சுடர்வடிவாகி எல்லாவற்றையு மறிந்த தேவரீருக்கு அடியேன் சொல்லவேண்டுவதொன்றிருக்கின்றதோ? இல்லை. எ-று.

அன்னபூரணி என்பது விசாலாக்ஷிக்குரிய ஒரு திருநாமம். (௧௨)

கங்கையம் புனல்சூழ் காசியம் பதியி லுறைவது போற்குசத் தீவிற், றங்குமென் னிடத்து முறைந்திடல் வேண்டும் யானுமத் தனிநகர் போலப், பொங்குசீ ரோடும் பொலிந்திடல் வேண்டு மென்றலும் பொழிகதிர் நிலவு, திங்களங் கண்ணிப் புரிசடை மறையோன் சிந்தைகூர்ந் திருந்திடு மெல்லை.

(இ - ள்.) அழகிய கங்காசலத்தாற் சூழ்ந்திருக்கும் சிறந்த காசிக்ஷேத்திரத்திலே தேவரீர் வீற்றிருப்பதைப்போல,குசத்தீவிற் பொருந்திய அடியேனிடத்திலும் வீற்றிருத்தல் வேண்டும்; நானும் அவவொப்பற்ற காசிநகரத்தைப்போல் மிகுந்த சிறப்புடன் விளங்கவேண்டுமென்று சொல்லவும், நிலவை வீசுகின்ற கிரணங்களையுடைய சந்திரனைச் சிரோமாலையாகத் தரித்த புரிந்த சடையையுடைய சிவபெருமான் சிந்தித்திருக்குங்காலத்தில். எ - று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (கச)

மலரயன் வணங்கி மதிவகிர் புனைந்த வரதநின் னருளினு வளிய, னுலகெலா மமைத்தேன் காக்குந ரின்றி யுறைபெயல் வறந்தன வதனு, லிலகுவேற் றடக்கை ரிபுஞ்சயன் காக்கப் பணித்தன னுங்கவ னிமையோ, ரலைபுனற் காசி யொரீஇத்தம பதியி லடைந்திடி லளிப்பனென் றறைந்தான்.

(இ - ள்.) கமலாசனத்துள்ள பிரமன் தொழுது, சந்திரன் பிளவைத் தரித்த சங்கரா! தேவரீரது கிருபையால் அடியேன் உலக முழுவதுஞ் சிருட்டித்தேன். அரசசெய்வோரில்லாமல் மழைவளங் குறைந்தது ஆகையால் விளங்குகின்ற வேலேந்திய பரந்த கையையுடைய ரிபுஞ்சய னென்பானை அரசசெய்யும்படி கட்டளையிட்டேன். அவன் அலைகள் பொருந்திய கங்காநதியாற் சூழ்ந்த காசிநகரத்தைவிட்டுத் தேவர்கள் தங்கள் நகரமடைந்தால் காப்பேனென்றான். எ - று.

அவ்வர மளித்தல் வேண்டுமென் றிறைஞ்ச மந்தர வரையினுக் களிப்பா, னிவ்விடத் துறைந்தேம் யாமுமாங் குறையு மிமையவர் தத்தம பதியிற், செவ்வனே யேகப் பணித்தன மென்னச் செங்கனிப் பவளவாய் மலர்ந்து, நவ்விமென் னோக்கி பங்கன்மால் வரைக்கு நல்வர மளித்தவ ணிருந்தான்.

(இ - ள்.) அந்தவரத்தை யனுக்கிரகித்தல் வேண்டுமென்று வணங்க, மெல்லியமானைப்போன்ற கண்ணையுடைய பார்வதிபாகராகிய சிவபெருமான், மந்தரகிரிக்கு அருள்செய்யும்படி யாம் ஈண்டிருந்தோம். அக் காசியில்வசிக்குந் தேவர்களைத் தங்க டங்கள் நகரத்திற்குச் செல்லக் கட்டளையிட்டோம் என்று செந்நிறம் பழுத்த பவளத்தையொத்த வாயைத் திறந்து திருவாய்மலர்ந்து, பெரிய மந்தரமலைக்கு நல்ல வரங்கள்கொடுத்து அவவிடத்து வீற்றிருந்தனர். எ - று. (கரு)

அன்றுதொட் டோங்கு மந்தர வரையு முத்திமால் வரையென வமர்ந்த, தின்றளிர் கவற்று மேகதெழின் மேனி யேழையோர் பாகனுங் காசி, யொன்றிநீங் குறுமெ வியாவரு முணரா திலிங்கமொன் றமைத்தவ

னூறலாற், பொன்றவழ் குடுமிப புரிசைசூழ் காசிக் கவிமுத்த மெனப் பெயா புனைநதாா.

(இ-ள்) உயர்வாகிய மந்தரகிரியும் அன்றுமுதல் பெரிய முத்திதரும் மலை யென விளங்கியது. இனிய மாந்தளிர்போன்ற பேரழகு வாய்ந்த திருமேனியை யுடைய உமாசமேதராகிய சிவபெருமானும் காசிநகரைப் பிரியாது பொருந்தி ஒரு வருமறியாமல் ஓர் சிவலிங்கக்குறியை ஆங்கு நியமித்து அதிற் சேர்ந்திருத்தலால் பொன்மயமான சிகரத்தையுடைய மதில்சூழ்ந்த காசிக்ஷேத்திரத்திற்கு அவிமுத் தமென்று பெரியோர் பெயர்தரித்தனர். எ-று. (கசு)

விளங்குமவ் விலிங்க மமைநததன் பின்னர் விரிஞ்சனே முதலியோ ரியாரும், துளங்கொளி யிலிங்கம் பற்பல வமைத்தாா சொன்னவவ் விலி ங்கத்தி னும, முளங்குழைந துதித்தோர் கருதினே ரியாண்டு சென்று தம் முயிரிறந திடினுங, களங்கனி யனைய கணடன்வாழ் காசி யிறந்தவர் பெறுங்கதி யடைவாா.

(இ-ள்.) பிரகாசிக்கும் அவ்விலிங்கம் ஏற்பட்டபிறகு பிரமன்முதலான தேவர்களெல்லாரும் ஒளிவீசும் அநேக சிவலிங்கக் குறிகளை யமைத்தார்கள். சொ ல்லிய அவ்விலிங்கங்களின் திருநாமங்களை மனமுருகித் துதித்தோரும் தியானித் தோரும் வெளிடத்திற்போய்த் தம துயி ரிறந்தாலும் களாப்பழம்போற் கறுத்த ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமான வாழ்கின்ற காசிக்ஷேத்திரத்திலிறந்தோர் பெறுங்கதியை யடைவார்கள். எ - று. (கஎ)

அவிமுத்தேசன் கதையுரைத்த அ-ம.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஉஉஎ.

---

நாற்பத்துமூன்றாவது,

## திவோதான னோட்டிற்படுத்த அத்தியாயம்.

விண்ணவ ரகன்று தம்பதியுறைய விரிபுனற் கங்கைசூழ் கிடந்த
வண்ணலங் காசி தனிற்றிவோ தான னரசுபூண் டளிக்குநா ளதனிற்
கண்ணுதல் முதலோ ரவனரசுரிமை கடிந்துவான் றெடுமெதிற் காசி
நண்ணிய துரைத்து மெனமுனி கேட்ப நாமவேற் பண்ணவ னுரைப்பான்

(இ-ள்.) தேவர்கள் (காசிப்பட்டணத்தை) நீங்கித் தங்க டங்கள் நகரத் திலே வசிக்க, நீர்ப்பெருக்கை யுடைய கங்காநதியாற் சூழ்ந்த பெருமை வாய்ந்த அழகிய காசிக்ஷேத்திரத்தில் திவோதானன் ராஜ்ஜியபாரந தாங்கிக் காத்துவருங் காலையில், நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் முதலானவர், அத்திவோதான

னது ராஜரீகத்தைக் கெடுத்து ஆகாய மளாவிய மதில்சூழ்ந்த காசிநகரத்தை யடைந்த வகையைச் சொல்லுவோமென்று அகத்தியமுனிவர்கேட்கும்படி, அச்ச த்தைத் தரும் வேற்படை யேந்திய ஸ்ரீ முருகக்கடவுள் சொல்லத்தொடங்கினர்.

நாகிளந் திங்க ணகைநிலா முகிழ்க்கு நளிர்சடை வானவன் முதலோர்
போகிய பின்ன ரிருநில முழுதும் பொதுவற வொருகுடை நிழற்றி
வேகவெஞ் சிலைக்கை மருவலர்க் கடந்து விரைவளந் தருமலர்ச் சோலை
மாகமூ டறுக்குங் கொடிநெடு வீதி மாநகர்க் காசியி னிருந்தான்.

(இ-ள்.) இளம்பிறைச்சந்திரன் பிரகாசிக்கின்ற நிலவை யரும்புகின்ற குளி ர்ச்சிதங்கிய சடையை யுடைய சிவபெருமான முதலான தேவர்கள் (காசிநகரத் தை நீங்கிச்) சென்றபிறகு, பெரிய உலகமுழுவதையும் தனக்கே சுதந்தரமாக ஓரோ குடையால் நிழல்செய்து, விரைந்து செல்லும் (அம்புகளைப் பூட்டுகின்ற) கொடிய வில்லேந்திய கையையுடைய சத்துருக்களைச் செயித்து வளப்பமமைந்த வாசனை தங்கிய பூஞ்சோலைகள் ஆகாயத்தை ஊடறுத்துச்செல்லுங்கொடிகள் கட் டிய பெரியதெருக்களையுடைய சிறந்த காசிநகரத்தில் வாழ்ந்திருந்தான். எ - று.

பொதுவற = யாவர்க்கும் பொதுத்தன்மையினின்று விலக. (உ)

செயிரிடைச் சீற்றப் பகைதரும விழிக்குந் தீமைகூ ரிதயமென் மல
ர்க்கும், வெயில்பொழிந் திமைக்கும வெங்கதிர்ப் பரிதி வேந்தனே போ
ன்றுமெஞ் ஞான்று, முயிரென வியந்து தன்னுழை யடைந்தோர்க் குய
ர்விசும பகடுகீண் டெழுந்த, முயலடை கிடக்கு முழுநிலாத் திங்கள் மு
தல்வனே போன்றும்வீற் றிருந்தான்.

(இ-ள்.) குற்றந்தங்கிய கோபமாகிய பகையைத் தருங்கண்களுக்கும், தீச் செயல் மிகுந்த இதயமாகிய மெலவிய (தாமரை) மலருக்கும் வெயிலைவீசிப் பிர காசிக்கின்ற சுடுகின்ற கிரணங்களை யுடைய சூரியதேவன் போன்றும், எப்போதும் உயிரைபபோற் களித்துத் தன்பாற்சரணடைந்தோர்க்கு உயர்வாகியஆகாயத்தின் அகடுகிழித் தெழுகின்ற முயற்களங்கம் விளங்குஞ் சோடசகலைகளோடுகூடிய சந்திரபகவான் போலவும் உயிர் வாழ்ந்திருந்தான. எ-று.

பகைஞர்களது கட்புலனுக் கச்சத்தையுண்டுசெய்தலால் சூரியன்போலும், சரணடைந்தோருக்குக் குளிர்ந்த பார்வையால் சந்திரனபோலும் விளங்கினுனெ ன்பது கருத்து. (௩)

குனிசிலைக் குடுமி குழையநாண் பிணித்துக் குருதிநீ ராட்டுவெம்
பகழி, முனிவினிற் றூங்கிக் கவைநெடுங் கோட்டு மூரிவெங் கடாக்களி
றுகைத்துத், தனிவிசும பளிக்கும் வானவ னென்பர் தரியல ருயிர்செகு
ப் பதனுற், கனைகுரற் புரிகோட் டெருமையே றுகைக்குங் கதழ்சின மற
லியென் றுரைப்பார.

(இ-ள்.) (உலகத்தாரது துன்பத்தை யொழித்துக்காத்தலால்) வளைகின்ற வில்லின்உச்சிகுழையும்படி நாணேற்றிட்டு,உதிரநீரில்மூழ்கச்செய்யும் கொடிய அம் பைக் கோபத்தோடுகொண்டு, பிளவுபட்ட நீண்ட (நான்கு) கொம்புகளையுடைய

வலியமைந்த கொடியமதஜலமபொழியும் ஐராவதத்திலேறி ஒப்பற்றதேவலோகத்தை ரட்சிக்கும் இந்திரனென்று சொல்லுவர்; சத்துருக்களுயிரைக் கொல்லுதலால (அத்திவோதானனை) ஒலிக்கின்ற குரலையும் புரிந்த கொம்பையுமுடைய எருமைக்கடாவை வாகனமாகக் கொண்ட மிருந்த கோபத்தையுடைய இயமனென்று சொல்லுவர். எ-று. (௪)

ஏற்றெதிர் கொடிய பகைநெடுங் கானிற் கெரிசுடா வழங்குதிக் கடவு, ளாற்றலவெம பாசத் தொன்னலர்க் கடந்த வென்றியா லாழ்கடற் கிறைவன், போற்றுமிவ் வுலகி லுயிரெலா முயிர்ப புரப்பவ னருமபொரு ளெவையு, மாற்றிடா தெவர்க்கு முதவலா லளகை மன்னவ னென்ன வீற் றிருந்தான்.

(இ-ள்.) எதிரேற்று வருகின்ற கொடிய பகையாகிய பெரிய வனத்திற்கு எரிகின்ற நெருப்பைக் கொடுக்கும் அக்கினிதேவன; பராக்கிரமம் பொருந்திய கொடிய பாசத்துச் சத்துருக்களை வென்ற ஜெயத்தால ஆழமாகிய கடலின்றலைவனை சமுத்திரராஜன்; துதிக்கின்ற இப்பூமியிலுள்ள மன்னுயிரையெல்லாம் தன்னுயிர்போற் காக்குந்திவோதானன் (தன்பாலுள்ள) அருமையான பொருள்களையெல்லாம் மதியாமல் யாவர்க்கும் கொடுத்தலால் அளகாபுரிக்கிறைவனை குபேரன் என்றுசொல்லும்படி வாழ்ந்திருந்தான். எ-று. (௫)

வாட்படை யுழுவர் கூற்றெனத் தெழிக்கு ஞாட்பினுட் பாரக்கரும பலத்தாற், கோட்புலிப் போத்தி னீருரி புனைந்த கூனபிறைக் கண்ணி யஞ் செல்வன், சேட்டிமைப் பரிதி யோட்டற நிவந்த திரள்வரைப புய வலி யதனாற், பாட்டளி துதையும பசுந்துழாய்ப் படலைப பங்கயச் செங கண்மா லனையான்.

(இ-ள்.) வாளாயுதமேந்திய போர்வீரர் யமனைப்போல விளங்குகின்ற யுத்தகளத்திற் பார்த்தற் கருமையான வலிமையால், பராக்கிரமமுடைய (நரசிங்கமாகிய) ஆண் சிங்கத்தின பெரிய தோலைத் தரித்த வளைந்த பிறைச்சந்திரனைச் சூடிய அழகிய உருத்திரபகவானையும், தூரத்திலிருந்து பிரகாசிக்கின்ற சூரியனது செலவைத் தடுக்கும்படி யுயர்ந்த திரண்ட விந்தபர்வதம் போன்ற புயவலியால பண்பாடும் வண்டுகள் நெருங்கும் பசிய துளபமாலையணிந்த செந்தாமரைக் கண்ணையுடைய (திரிவிக்கிரமாவதார மெடுத்த)விஷ்ணுமூர்த்தியையும் நிகரானவன்.

எண்ணிரு கலையா லுள்ளமே மாப்ப விருவிசும் பியங்கிய மதிபோல் [வர்
நண்ணரு மெண்ணெண் கலையொடு நிறைந்த விவர்க்கிணை நாகர்காந்தரு
பண்ணவ ருருவு கரந்துவந் தன்னேன் பணித்தன புரிகுவ ரென்று
லண்ணலஞ் சீர்த்தி யாயிரம் பகுவாய்ச் சேடனை யன்றியா ரறைவார்.

(இ-ள்.) சோடசகலைகளுடன் மனங்களிக்கும்படி பெரிய ஆகாயத்திற் சஞ்சரிக்கும் பூரணச்சந்திரன்போன்று, கிடைத்தற்கரிய அறுபத்துநான்கு கலைகளுடன் நிறைந்திருக்கும் இத்திவோதானனுக்கு நாகர்-கந்தருவர்-தேவர் முதலானவர்கள் தமதுருவை மறைத்து (வேற்றுவடிவுடன்) வந்து அவன் கட்டளையிட்ட

பணிகளைச் செயவார்களென்றால், அழகிய பெருமைவாய்ந்த அவன் கீர்த்தியை ஆயிரம் வாயையுடைய ஆதிசேடனையல்லாமல் வேறே யாவர் சொல்லவல்லவர்.

கனத்தலை புகை மொருந்துடை ந்தந்து நாளின்மென் கிள்ளையந் தீஞ்சொற், கனிந்தது கொழுந்து பச்சிளங் கழைத்தோட் கருங்கயல் மருட்டு வாட்டடங்கணை, மனங்கவ ருருவச் செழுங்கொடிப் பருவ வாளரக் கூட்டிதழ்க் கனிவா, பனங்கமோ கினிடைப் பைந்தலைச் செருகட்ட வாதிசேடன்வ தளித்தான்.

(இ-ள்) இவ்விலைமையாக உலகத்தை ஏகசக்கிராதிபத்தியஞ் செய்யுங் காலத்தில் பிருந்துவாகிய கிளிபோன்ற அழகிய மதுரம்பொருந்திய சொல்லையும், அழகுமிகுந்துவிளங்குகின்ற இளமைவாய்ந்த மூங்கில் போன்ற தோள்களையும், கரிய சேற்கெண்டையை மடக்குகின்ற ஒளிதங்கிய பார்வைகளையுடைய், கண்டோர் மனதைக் கிரகிக்கும் வடிவத்தையும், செழுமைவாய்ந்த கொடிபோன்ற பருவத்தையும், ஒள்ளிய அரக்கின செந்நிறமூட்டிய இதழையும், கோவைக்கனியையொத்த வாயையுமுடைய அநங்கமோகினியை, பசுந்தலைகளையுடைய சிவந்த உச்சிக்கொண்டைவாய்ந்த அழகுமிகுந்த ஆதிசேடன் மணஞ்செய்துகொடுத்தான்.

ஆங்கவ டனைவேட் டிளமுலைப போக மருந்திமற் றவணிகர் வனப்பிற், பூங்குழல் மாதர் பலரொடு முயங்கிப் பொற்பொடு புதல்வனைப் பயந்து, வாங்கிருஞ் சிலைத்தோட் புரவலன் புரப்ப மழைவளஞ் சுரக்குநன் னாட்டி, னீங்கரும பெருமை தன்னை யீங் கெவாக்கு மிற்றென கிகழ்த்து மா றரிதே.

(இ-ள்.) அப்போது அவளை மணஞ்செய்து இளமைதங்கிய தனங்களின் சுகத்தை அனுபவித்து, அவ்வனங்கமோகினிக்கொத்த அழகுவாய்ந்த மலர்மாலையணிந்த அளகபாரத்தையுடைய பலமங்கையரோடுஞ்சேர்ந்து அழகுள்ள புதல்வனைத் தனைப்பெற்று வளைந்த பெரிய வில்லேந்திய தோளையுடைய திவோதானன் அரசு செய்துகாக்க, மழைவளப்பம் அதிகரிக்கின்ற நல்ல நாட்டினது கெடாதபுகழை இத்தகையது என எத்தகையினருக்கும் இசைக்கும்வகை அரிதாகவேயிருக்கும்.

கிள்ளையங் குதலை மொழியினுங் கனிந்த கேழ்கிள ரமுதுறழ் தீஞ்சொ, லொள்ளிழை யவரி லருந்ததிக் கற்பின் வழுவினு ரொருவரு மில்லை, வெள்ளிவெண் புரிநூல விளங்குபொற் றடந்தோள் வேதியர் தம்மிலெஞ் ஞான்றுந், தெள்ளிதி னுணர்ந்து மறைவழி யொழுகுஞ் செய்தியிற் றிறம்பினே ரில்லை.

(இ-ள்.) அழகிய கிளியின் மழலைச்சொல்லைக்காட்டிலும் மதுரமான கிரம் விளங்குந் தேவாமிர்தத்தையொத்த இனிய வார்த்தையையுடைய ஒள்ளிய ஆபரணமணிந்த மாதர்களில் அருந்ததியை யனைய கற்புநிலையினின்றுந் தவறினவர்கள் யாருமேகிடையாது. வெள்ளியைப்போன்ற தாவள்யமாகிய உபவீதம்விளங்கும் அழகிய விசாலமான தோளையுடைய அந்தணர்களில் எப்போதும் தெளிவோடறிந்து வேதசம்பந்தமாகிய வைதிகமார்க்கத்தில் நடக்குந்தொழிலில் வழுவினவர்கள் (ஒருவரும்) இல்லை. எ-று. (௧௦)

அழன்முகம பழுத்த வாடகப் பசும்பொ னாரம்விற் றிருந்துவெங் கதிர்கா லொழுகொளித தடந்தோள் வேந்தரிற பணைத்த புயவலி யொ ழிந்துளோ ரிலலை, முழுதுணா கேள்வி புடைபபெருங் கேணமை வணி கரில மூதுல கனைத்தும, விழைதக வுடைய பொருணனி யீட்டும் வின யமவிட டுறைகுந ரிலலை.

(இ-ள்.) நெருப்பிற்பழுக்கக்காய்ச்சிய பசியஆடகப்பொன்னாலாகிய ஆரம் விளங்கியிருந்து மிகுந்த கிரணங்களைவீசும் ஒளிதங்கிய பரந்த தோளையுடைய மன்னவரில பூரித்த புஜபலபராக்கிரமங் கழிந்தோர யாவருமில்லை. யாவற்றையு மறியுங் கேள்வியையுடைய பெருமைவாய்ந்த நேசிக்கததகக வைசியரில பழை மையாகிய உலகமுழுவதும் விரும்பும்படி உடைததாகிய செல்வத்தை அதிகமா கத் தேடும் வினயத்தைவிட்டு வாழ்வோர் எவருமிலலை. எ-று.

வினயம்=வஞ்சகம். (கக)

கண்ணழற் சீற்றத் துளையெயிற் றகலவாய்க் கட்செவிப் பணமுடிக் கிட மண்மகள் பயந்த பின்னவர் தம்மிற் றமதிலை வழுவின ரில்லை [ந்த பெண்ணுநரல் வருணத தவருமற் றவரி னிழிந்துளோர் களுந்தம தியல்பி னண்ணுந ரன்றி யலலன புரிந்து தீநெறி நடக்குந ரில்லை.

(இ-ள்.) கோபாக்கினிதங்கிய கண்ணையும், துளைவாய்ந்த பற்கள்பொ ருந்திய பாம்பின் பணமுடியில்விளங்கிய பூமிதேவிபெற்ற சதுர்த்தராகிய வேளா ளரில் தமது குலாசாரத்தை நீங்கினவர்கள் கிடையாது. கணிக்கின்ற (பிராமணர் முதலிய) நான்குகுலத்தோர்களும், அவர்களில் தாழ்ந்த நான்குவருணத்தவாக ளும் தமக்கு விதித்த முறையிலிருப்போரன்றி விலக்கியவற்றைச்செய்து துர்வழி யிற் செல்வோர் எவருங்கிடையாது. எ-று.

"அவரினிழிந்துளோர்" என்பது அநுலோமர் - பிரதிலோமா - அந்தரா ளர் - விராத்தியர்முதலிய சங்கரஜாதிகளாகிய புறக்குடிகளை, அவருள் அனுலோ மர் உயர்குலத்தந்தைக்கும் இழிகுலத்தாய்க்கும் பிறந்தோர்; பிரதிலோமர் இழிகு லத் தந்தைக்கும் உயர்குலத்தாய்க்கும் பிறந்தோர். அந்தராளர் அநுலோமத் தந் தைக்கும் பிரதிலோமத்தாய்க்கும் பிறந்தோர். விராத்தியர் பிரதிலோமத்தந்தை க்கும் அனுலோமத்தாய்க்கும் பிறநதோராம். இதனை,

"உயர்ந்தநாற் குலத்தி லாண்பெண் ணுயர்விழி விரண்டுங் கூடி
யியங்கிய பிள்ளைப் பேரோ யனுலோம னென்று கூறும்
நயந்தவப் பெண்ணு மாணு நண்ணிய வுயர்வு தாழ்வில்
வியந்திடும் பிள்ளைப் பேரோ விரதப்பிரதி லோம ணுமே
பெருத்தவவ் வனுலோ மன்னே பிரதிலோம னென்ற பேரி
னுரைத்தவாண் பெண்ணில் வந்தே யுற்றவ னந்த ராள
னிரைத்தவர் மாறிக் கூடிப் பிறந்தவ னீண்ட பேரோ
விரித்தது வினவிக் கேட்கில் விராத்திய னென்னு நூலே" எனவருஞ்

சூடாமணியா னுணர்க.

"கட்செவி" என்பது ஏனைய பூதங்களைப்போலக் கண் வேறு காது வேறாக வுடைத்தாயிராமல் கட்புலனையே செவிப்புலனுமாகவுடையதுபாம்பாதலின், பாம்புகள் ஒருபொருளைக்காணுகையில் அதற்குரிய சத்தம் புலப்படாதென்றும், ஓரோசையைக்கேட்கையில் உருவு புலப்படாதென்றுஞ் சிலர் கூறுகின்றனர். ()

கொடைக்கட னிறுக்குந தடக்கைவே லுழுவ ரரக்குநா டெவற்றினுங் குறைபா டுடைப்பெருஞ் செல்வ ரவ்வநா வுறுமை யடைந்துளோ ரொருவரு மில்லை, விடற்கருங் கற்பின் மனைவியை யன்றிப் பிறர்மனை விழைகுந ரிலலை, யிடாக்கட றபுணை பாப பிறவிவே ரறுக்கு மகவிலா ருறைகுந ரில்லை.

(இ-ள்.) ஈகைத்தன்மையை நிலைநிறுத்திய விசாலமாகிய கையிலேந்திய வேலையுடைய திவோதாசனஅரசபுரியும் எல்லாநாடுகளிலுங்குறைவில்லாதுடைய பெருஞ்செல்வர்களேயல்லாமல், தரித்திரத்தால் துன்புறுவர்கள் ஒருவர் கூடக் கிடையாது. நீக்கற்கரிதாகிய கற்பினதனமையையுடைய தமதுபாரிகளையல்லாமல் பரதாரகமனஞ்செய்வோர் யாருமில்லை. துன்பக்கடலுக்கு ஒருதெப்பமாகப் பிறவியை வேரோடொழிக்குங் குழந்தைகளையின்றி வசிப்போர் எவருமில்லை. எ-று.

குழைமுகந் தூங்கு செம்மணிப் பசும்பொற் குண்டல வேதியர் காளு
மழன்முகத் தாற்று மருமகத் தன்றிச் செந்தசை யருந்துந ரில்லை
விழைவொடு பயந்தோர்ப் பழிச்சிடா ரில்லை வெங்கவ றாடுந ரில்லை [லை
கழிபெருங் குணத்துக் குரவனைப் பிழைப்போ ரரும்பொருள் கவருந ரில்

(இ-ள்.) குழைவாகிய முகமுடையதாய்த் தொங்குகின்ற செம்மணியாகிய மாணிக்கம் பதித்த பசும்பொன்னலாகிய குண்டலமணிந்த அந்தணர்கள் எப்போதும் அக்கினியைக்கொண்டு செய்யும் அரிய யாகத்திலல்லாமற் சிவந்த மாமிசத்தைப் புசிப்போர் யாவருமில்லை. பெற்றோரை ஆசையுடன வணங்காதவர்கள் ஒருவருமில்லை. கொடிய சூதாடுவோர் கிடையாது. மிகுந்த பெருமைதங்கிய குணமுடைய ஆசிரியனைத் துரோகஞ்செய்வோர் அரிய பொருளைத் திருடுவோரில்லை.

மழைமுகில் வறப்ப நிலமிசைப் பைங்கூழ் வாடுந ரில்லையெஞ் ஞான்றுங்
கழிபெரு நோயின் வருந்துந ரில்லை கனியினு மினியமென் மழலைக்
குழவியம் பருவத் திறக்குந ரில்லை குற்றமி லொழுக்கமே யன்றிப்
பழிபடு கரும மென்பது மறந்தும் பயில்குந ரில்லையப் பதியின்.

(இ-ள்.) அக்காசிப்பதியிலே மழைபொழிகின்ற மேகங்கள் வறத்தலால் பூமிமேல் பயிர் வாடுவோரில்லை. எப்போதும் மிகுந்த கொடிய வியாதிகளால் அவதிப்படுவோரில்லை. முக்கனியைப்பார்க்கிலும் மாதுர்யமாகிய மெல்லியமழலைச்சொல்பேசும் அழகிய குழந்தைப்பருவத்திலே மரிப்போர் யாருமில்லை. குற்றமில்லாத நல்லொழுக்கமேயல்லாமல் பழித்தல்பொருந்திய தொழிலென்பதை மறந்தாலுஞ் செய்துவருவோர் கிடையாது. எ-று. (கரு)

ஆறறி புலவர் தவத்துறை போய வந்தணர்த் தொழுவர்மற் றவரு [ரு
மூறொளி யோசை நாற்றமென் சுவையி னெழுகிடார்த் தொழுவர்மற்றவ

மீறிலா ஞானப் பெருங்கடற் படிந்தோரைப் பணிகுவ ரிவசத்தவத் தவரு நீறுபூத் தலர்ந்த நெடுநிலா நெற்றி நிகரறு முனிவரைத் தொழுவார்.

(இ-ள்) ஐம்பொறிக்கக்களை யுணர்ந்த கவிஞர்கள் தவத்துறைகளிற் படிந்த வேதியரைப் பணிவார்கள்; அவ்வேதியர்களும் ஊறு - ஒளி - ஓசை - நாற்றம்- மேவிய சுவை இவற்றினைப் பற்றிச் செல்லாத தொழுவார்கள்; அவர்களும் முடிவிலாத ஞானமாகிய பெரியகடலில் மூழ்கிய தவசிகளை வணங்குவார்கள்; சொல்லிய அத்தவத்தோரும் திருவெண்ணீறு பிரகாசித்து விளங்கிய பெரிய சந்திரிகை வீசும் நெற்றியையுடைய சமானமற்ற முனிவர்களைத் தாழ்வார்கள். எ-று. (கசு)

விழுதுவிட் டொழுகும் வெண்ணிலா முத்தம் விளிம்பெறிக தெரி மணி குயின்ற, மழகதிரப் பசும்பொ னெடுமுடி புனைந்து வலம்படு திகிரி யொன் றுருட்டி, யெழுகடல் வரைப்பு மின்னணம் வழாம லெண்பதி ஞாயிரம் பருவங், கழிபெருங் காதல் நிலமகளுவப்பக் களைகணு யினித ளித் தனனால.

(இ-ள்.) (கிரணங்களாகிற) விழுதுவிட்டு விளங்கும் தவளநிறத்து முத்துக்களால் ஓரஞ்செய்து மாணிக்கங்களைப் புதைத்த இளைய ஒளிவீசும் பசும்பொன்னாலாகிய நெடிய கிரீடந்தரித்து, வெற்றிசெய்யும் ஆக்கினைசக்கரத்தைச் செலுத்தி, சத்தசமுத்திரங்களாற் சூழப்பட்ட நிலவுலகமுழுவதும் இவ்வாறு முறைதவறாமல் எண்பதினாயிரவருடகாலம் மிகவும் அதிகரித்த ஆசையுடன் பூமிதேவிகளிக்கும்படி யாவர்க்கும் ஆதரவாகவிருந்து இனிதாக அரசுசெய்துவந்தான். எ-று.

விளிம்பெறிதலாவது ஓரத்திற் குச்சுகளாகத் தொங்கவிடுதல். (கஎ)

தீவிடங் கடைவாய் மடையுடைத் தொழுகு செம்மணிச் சூட்டரா முடி மேவரக் கிடந்த கனைகட லாடை வியனில முழுவது முவப்பக் [யின் கோவியல் வழாது பகைபுறங் கண்ட குருதிவேன் மன்னவன் காப்பப் பூவியல் பொதும்பர்க் கற்பக நீழல் விண்ணவர் புந்தியி னோர்ந்தார்.

(இ-ள்.) கொடிய விஷத்தைக் கடைவாயின்வழியாக மடையெடுத்துப் பாய்ந்தாற்போலச் சிந்துஞ் சிவந்த மாணிக்கத்தை உச்சிக்கொண்டையி னுடைய ஆதிசேடன் முடியிற் பொருந்தியிருக்கும் ஒலிக்கின்ற கடலை ஆடையாகவணிந்த பெரிய பூமியிலுள்ளோர் யாவரும் மனங்களிக்கும்படி இராஜநீதி தவறாமல் பகைமன்னரை முதுகுகண்ட உதிரஞ்சிந்தும் வேலேந்திய திவோதாஸன்அரசுசெய்துவர, மலர்கள்பொருந்திய கற்பகவிருட்சத்தின் நீழலில் வசிக்குந்தேவர்கள் தமது மனதில் ஆலோசிக்கத்தொடங்கினர். எ-று.

பொதும்பர்=மரச்செறிவு. (கஅ)

பூம்பொதிச் செங்கட் சுரும்புவாய் நெகிழ்ந்த புதுமலர்த் தாறுமேய்க் துறங்குந், தேம்படு நறிய தருமலர்ச் சோலைப் பனியிரு விசும்புறை தேவர், மேம்படு மிவன்ற னிருநிலக் கிழமை விலக்குவ மெனக்கர கமலங், கூம்பநாத் தழும்பு படமறை வடித்த தங்குலக் குரவனுக் குரைத் தனர்.

(இ-ள்.) அழகிய புள்ளிகளையுஞ் சிவந்த சுணைகளையு முடைய வல்லிகள் விகசித்த புதிய மலர்க்கொத்துகளில் (இருக்குந் தேனை) உண்டு துயின்றிடும், வாசனைவீசும் நல்ல பஞ்சதருக்களையும் மாளிகைகளையு முடைய குளிர்ச்சிபொருந்த பெரிய ஆகாயத்தில் வசிக்கும் தேவர்களை, மேம்பாடுடைய இத்திவோதானனது பெரிய இராச்சியபாரத்தைத் தாங்கும்படியென்று வையகத்து ஞானிகள் குவியவும் ஏதந்தழும்பேறவும் வேதங்களையுணர்த்திய தமது குருவாகிய பிரகஸ்பதி முனிவருக்குச் சொல்லினர். எ-று. (க௯)

விரிதலைத் தெங்கி னெடுமிலை போந்தை குடக்கனி விழுமுப் புடைக்கா
யருவிவீழ்ந் தென்னப் புனலறு தொழுகு மகன்பணைக் காசியி னுறைபூந்
திருவணை மார்ப னறத்துறை சிறிதுந் திறம்பல னவனுல களிக்கு மன்னா
பொருவருஞ்செங்கோ லிழுக்குற லற்ற தென்னென மதித்திருந்தா

(இ-ள்.) விரிந்த தலையையுடைய தென்னமரத்தின் முப்புடைக்காயும், நீண்ட இலையையுடைய பனையினகாயும், குடக்கனியும் வீழ்தலால் (அவை அறிவின்று சொரியும்) இரதநீரானது அருவியொழுகுவதுபோல நீங்காது பாயும் பரந்த வயல்களையுடைய காசிநகரத்தில் வசிக்கும் திருமகள்வாழும் பெரிய மார்பையுடைய திவோதானன தருமநெறியினின்று கொஞ்சமுந் தவறுனில்லை. அவன் உலகத்தைக்காக்கும் ஒப்பற்ற செங்கோல் குறையும்படிச் செயவதெங்ஙனம்? என்று மனதில் ஆலோசித்தான் (பிரகஸ்பதிமுனிவன). எ-று.

போந்தை=பனைமரம். முப்புடைக்காய்=மூன்றுபிளவுகளையுடையகாய்; தேங்காய். குடக்கனி=பலாப்பழம்; அது குடம்போலிருத்தலாலென்க. (உ0)

பண்ணவர் மவுலி வெயிறகதி ருரிஞ்சப் பழந்தழும் பிருந்த செவடிய
வண்ணலங் குரவ னாழற் கடவு ளின்றெனி லருமக முதல
வெண்ணருங் கரும மியற்றுமா றரிய வெரிக்குழா முழுவது மீண்டு
நண்ணுமா றியற்றி லன்னவன் புரியு நல்லற னிழுக்குமென றுரைத்தான்.

(இ-ள்.) தேவரது கிரீடங்களின் ஒளியாகிய சூரியன் உரிஞ்சுதலால பழமையாகிய தழும்புகள் விளங்கிய சிவந்த திருவடிகளையுடைய பெருமைவாய்ந்த அழகிய வியாழபகவான், பொருந்திய அக்கினிதேவன் இல்லாவிடின் அரிய யாக முதலிய நினைத்தற்கரிய புண்ணியகருமங்களைச் செய்யும்வகை அரிதாகும். (ஆதலின்) தீத்திரளையெல்லாம இங்குவரும்விதம் புரிந்தால் அத்திவோதானன் செய்யும் நல்ல புண்ணியங் குறையும என்று சொல்லினர். எ-று. (உக)

ஆயிரஞ் சுடிகை மணிவிளக் கேந்து மழல்விழிப் பாந்தண்மேற் கிடந்த
மாயிரு ஞாலத் தெரியெலா மழைத்தி யென்றுவண் டேறல்கொப்பளிக்கு
மீயுயர் பசும்பொற் கற்பக நீழல் வேந்தெடுத் துரைத்தலும் வினைவிற்
காயெரிக் கடவு ளிருநிலத் தெரிகள் யாவையுந் தன்னுழைக் கரந்தான்.

(இ-ள்.) ஆயிரம் உச்சிக்கொண்டைகளில் மாணிக்கத்தீபங்களை யேந்திய நெருப்புப்போன்ற கண்களையுடைய ஆதிசேடன்மேல் விளங்கிய பெருமைவாய்ந்த விசாலமாகிய உலகத்திலுள்ள நெருப்பையெல்லாம் அழைக்கக்கடவாயென்று வளப்பம்பொருந்திய தேன் ஊற்றெடுக்கும் மிக வுயர்ந்த பசிய பொன்மயமான

கற்பகவிருட்சத்தின் நிழலிலுள்ள தேவேந்திரன் கூறவும், சுடுகின்ற அக்கினிதே வன பெரிய பூமியிலுள்ள நெருப்புகளையெல்லாம் சீக்கிரத்திற் றனபால் மறைத்த னன. எ-று.

எரிக்கடவுள்=அக்கினிதேவன்; பாவகன். (௨௨)

கடற்பெரும் புவியி லெரியெலாஞ் செந்திக் கடவுட னுழைக்கரந் ததனாற், கொடைக்கடன் பூண்ட தாழிருந் தடக்கைக் கொற்றவேன் மன் னவற குறுகி, மடைத்தொழில வலலோ ரழலிலா மையினுல வான்படர் வெய்யவன் கதிரி, லடபபடு வனக ளமைத்தன மெனன வாசனுஞ் சிந் தையுற் றிருந்தான்

(இ-ள்.) கடல்சூழ்ந்த பெரிய நிலவுலகத்திலுள்ள தீமுழுவதுஞ் சிவந்த அக்கினிபகவானிடத்தி லொளித்துக்கொண்டதனல், ஈகைத்தன்மையை மேற் கொண்ட நீண்ட பெரிய விசாலித்த கையில் வெற்றிதரும் வேற்படை யேந்திய திவோதானனைச சமையற்றொழிலிற் றேர்ந்தோர் குறுகி, (அரசனே !) நெருப்பி ல்லாமையால் ஆகாயத்திற் செல்லுஞ் சூரியகிரணததிற் சமைக்கப்படும பொருள் களைமட்டுஞ் சமைத்தோம் என்று சொல்ல, திவோதானனும் மனக்கவலைகொ ண்டிருந்தான். எ-று (௨௩)

நமமுடை நகரி னழ லன்று நளிகடற பாரழ லெவையு
மம்மவோ வமரர் புணர்ப்பினுற் கரந்த வாமென வெணணுறு மேல்வை
சும்மைநீர் வேலி யுலகினி லமர்ந்த யாவருந் தொழுதகை யினராய்த்
தெம்முனை கடந்த சினவுவேற் றுனைச் செழுமணி வாயிலி னடைநதார்.

(இ-ள்.) ஆ! ஆ!! நமது காசிநகரத்திற் பொருந்திய நெருப்புமட்டுமல்ல; குளிர்ந்த கடல்சூழ்ந்த உலகிலுள்ள நெருப்புமுழுவதும் தேவர்கள் தந்திரத்தால் ஒளிந்தனவாக்கும் என்று எண்ணிக்கொண்டிருக்கையில், ஒலிக்கின்ற கடலை வே லியாகவுடைய பூமியில்வசிக்கும் எல்லோரும் கூப்பிய கையையுடையவர்களாய், பகைவரை யுத்தத்திற் செயிதத கோபிக்கும் வேலேந்திய சேனைகளிருக்கும் செ ழிய நவமணிகளாலாகிய வாயிற்படியில்வந்து சேர்ந்தனா. எ-று. (௨௪)

சுடுபொறி சிதறு மெரிமுகக் கடவு ளின்மையாற் றொடுகடல் வளா கத், தடையுநற கரும முதலவேள் விகளு மாற்றுத லொழிந்தன வெ ன்று, கடையளந் தறியா விடுதிறை கிடக்குங் கறறையஞ் சுடர்மணிப் பரூஉத்தாட், கொடிநெடு வாயில் காவலர்க் குரைத்துக் கொற்றவன் றன் னுழை விடுத்தார்.

(இ-ள்.) சுடுகின்ற பொறிகளைச் சிந்தும் அக்கினிதேவ னில்லாமையால் (சகரரால்) தோண்டப்பட்ட கடல்சூழ்ந்த பூமியில் உண்டாகும் புண்ணியகரும முதலிய யாகங்களுஞ் செய்த லொழிந்தனவென்று, இடங்கொண்டறியாத இட ப்பட்ட கப்பங்களிருக்கும் அழகிய கிரணத்தொகுதியையுடைய முத்துமணிகளா லாகிய பருத்த அடியையுடைய கொடிகள்கட்டிய நெடிய வாயிற்காப்போர்க்குக் கூறி (அவர்கள் மூலமாக) தமது வருகையை திவோதானனுக்கு அறிவித்தனர்.

நாக்கடை புரட்டித் தீப்பட வளைக்கு நகுமணிச் சுடிகைவா ளரவின், மேக்குறக் கிடந்த வுலகமோ ரேழும் விரிகதி ராழியொன் றுருட்டி, காக்குநின் கோயிற கடைப்புறத் திறுத்த தலைகென வாயிலோ ரகழறத், தீக்கடை யொழுகு சிறுகண்மா வியானைச் செம்மலுங் கோணர்கென விசைத்தான்.

(இ-ள்.) நாவின் முனையைப் புரட்டி நெருப்புப்பட வளைக்கும் பிரகாசமமைந்த மாணிக்கம்பொருந்திய உச்சிக்கொண்டையையுடைய ஒளிதங்கிய ஆதிசேடன்பேரில் விளங்குஞ் சப்த தீவுகளி லுள்ளோரும், பரந்த கிரணங்களையுடைய ஒரே ஆக்ஞசக்கரத்தைச் செலுத்தி ரட்சிக்கின்ற தேவரீரது அரண்மனையினது தலைவாயிலில் வந்திருக்கின்றனரென்று வாயிற்காப்போர் சொல்ல, நெருப்பைச்சிந்துங் கடையமைந்த சிறிய கண்கள்பொருந்திய பெரியயானையையுடைய அரசனும் ஈண்டு வரவழைக்க என்று கூறினன். எ-று.

நாவல் - இறலி - குசை - கிரவுஞ்சம் - புட்கரம் - தெங்கு - கமுகு இவையே சப்த தீவுகள். (உகூ)

வெயிலுடன் முளைத்துக் கிளைத்தபொற் கழற்கால் வேந்தர்கோன் பணித்தனன் வருகென், றுயர்மணிக் கொடிதோய் வாயிலோ ருரைப்ப வொல்லையின் வேத்தவை புகுந்து, செயிரறு கமல மலரடி தொழலுஞ் சிந்தையுற் றவர்முக நோக்கி, வயிரவாட் டடக்கை புடைத்துவெண் டரளவாணகை கோட்டிபி துரைப்பான்.

(இ ள்.) சூரியவெப்பத்துட னுதித்து இரண்டாகிய அழகிய வீரக்கழலணிந்தகாலையுடைய அரசர்பெருமானாகிய திவோதானன் வரக்கடவீரென்று கட்டளையிட்டனன் வாருங்கள் என்று, உயர்வாகிய முத்துக்கொடிகள் பொருந்திய வாயிற்காப்போர்கூறவும், விரைவில் அரசசபையிற்போய்க் குற்றமற்ற தாமரைமலர்போன்ற பாதங்களைப்பணிய, (திவோதானன) அவர்கள் முகத்தைப் பார்த்து மனம்வருந்தி வசிரவாளாயுதமேந்திய பரந்தகையைக் கொட்டி, வெள்ளிய முத்துப்போன்ற ஒளிதங்கிய நகைபுரிந்து இவ்வாறு சொல்லத்தொடங்கினன். எ-று. (உ௭)

ஈங்குநீர் போந்த தடுதழ லின்றி யென்பதை யுணர்ந்தனன் செந்தீ
நீங்கிலென் வருணன் வளியகன் றிடிலென் நீள்கதிர் மதிமறைந் திடிலெ
னுங்கவ ருருவ மனைத்தும்யா னாகி யளிக்குவல் வெருவலீ ரென்ன [னூல்.
வீங்குநீர் வேலி யுலகெலாம் புரக்கும் வேந்தர்கோன் விடைகொடுத் தன

(இ-ள்.) இவிடம் நீங்கள் வந்தது சமைக்கததக்க நெருப்பில்லாமையாலென்பதை அறிந்துகொண்டேன், சிவந்த அக்கினிபோனாலென்ன ; வருணனும் வாயுவும் (என்னு மிருவர்காரியமாகிய சலமும்-காற்றும்) விலகினு லென்ன ; நெடிய சூரியசந்திரரும் மறைந்தாலென்ன ; நானே அவர்களெல்லாருடைய வடிவங்களுமாகிக் காப்பேன். நீங்கள் பயப்படாதீர்களென்று, சமுத்திரத்தை அணையாகவுடைய உலகமுழுவதுங் காக்கின்ற மன்னர்மன்னனான திவோதானன் உத்தரவு கொடுத்தனுப்பினன். எ-று. (உஅ)

வெண்ணிலாக் கற்றை விளிம்புவிட் டெறிந்து விளங்குபூண் டியல
வரு தடந்தோ, ளண்ணலாங் ககன்ற வமரர்தம முருவ மனைத்துமா யருந்
தவப் பயத்தாற், கண்ணகன் ஞால முழுவதுந் தாமே களைகணா யளித்
தன னெனனி, னெண்ணருந் தவத்தி னின்றுளோர் பெருமை யாவரே
யிசைப்பரொன் றறைந்தான்.

(இ-ள்.) தவளநிறத்தையுடைய சந்திரிகையின் றொகுதியை ஓரத்தில் வீசிக்கொண்டு பிரகாசிக்கின்ற ஆபரணமசையும் பூரித்ததோளையுடைய திவோதானன், செய்தற்கரிய தனது தவப்பயனால், தனது நகரத்தினின்று நீங்கிய (அக்கினிதேவன்முதலிய) எல்லாத்தேவர்களதுவடிவங்களையுமெடுத்து இடமகன்ற உலக முழுவதுக்குந் தானே ஆதரவாகநின்று காப்பாற்றினனென்றால், நினைத்தற்கரிய தவச்செயலிலிருப்போரது மேன்மையை எவர்தான் சொல்லவல்லவர் என்று (ஸ்ரீ முருகக்கடவுள்) கூறினர். எ-று.

"என்னருந் தவத்தி னின்றுளோர் பெருமை யாவரோ யிசைப்பரொன் றறைந்தான்" என்பது கவிக்கூற்று. கவிக்கூற்றாவது நூல்செய்வோனது கருத்தாகிய நீதிவாக்கியம்.

அருந்தவமென்பதனை - காஞ்சிபுராணம்.

"தவமே மேலா நெறியாகுந் தவமே சிவனார் தமைக்காட்டுந்
தவமே துறக்க மடைவிக்குந் தவமே நரனைத் தேவாக்குந்
தவமே வலாரி திசைக்கிறைவர் சார்ங்க னயனு மாக்குவிக்குந்
தவமே கிடைப்பிற் கிடையாத துண்டோ வென்று சாற்றினனால்." (உக)

திவோதானனாட்டிற் படுத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧உ௩௬.

நாற்பத்து நான்காவது

## காசியின் சிறப்புரைத்த அத்தியாயம்.

கொண்டல் தவழ முகம்புலரா மதிதோய் குடுமி மந்தரத்தி
லண்டர் பெருமா னடைந்ததற்பி னுற்ற வாறு மவ்வரையின்
றண்டா வளனு முரைத்தியெனத் தமிழ்தேர் முனிவன் சாற்றிடலும்
புண்டோய் குருதி நெட்டிலைவேற் புத்தேள் முறுவல் பூத்துரைப்பான்.

(இ-ள்.) மேகங்கள் சஞ்சரித்தலால் முகமானதுமறையாத சந்திரமண்டலமளாவிய உச்சியையுடைய மந்தரகிரியிலே தேவநாயகராகிய சிவபெருமான் சேர்ந்ததற்குமேல் நிகழ்ந்தவகையும், அம்மந்தரமலையினது கெடாதவளப்பங்களும்

அங்கண் வானத் தினிதுறையு மமரர் குழுவு மரமடையரு
மங்கு றவழ்பொற் குவட்டிழிந்து மன்றற் சாரற் பளிக்கறையி
னங்கி விளையாட் டயர்தோறும் பரிந்து நீத்த தண்மலர்ப்பூங்
கொங்கு கமழு மந்தார மாலை நறவங் கொழித்திடுமால்.

(இ-ள்.) அழகிய இடமகன்ற ஆகாயத்தி லினிதாக வசிக்குங்கூட்டமாகிய தேவர்களும்,தேவமாதரும், மேகங்கள் தவழ்கின்ற அம்மந்தரமலையி லிறங்கி வாசனை பொருந்திய சாரலிலுள்ள பளிக்குப்பாறையிலிருந்து விளையாடல் புரியுந்தோறும் மனம்வருந்திநீக்கிய குளிர்ந்தமலராகிய பொலிவமைந்த மகரந்தப்பொடிமணக்கும் மந்தாரமாலையானது தேனைச் சொரியாநிற்கும். எ-று.

பரிந்து நீத்த தண்மலர் என்றது அமரரும் அரம்பாஸ்திரிகளுங் கூடி விளையாடுகையில் சேர்ந்த வூடலாற்கழித்தெறிந்த மலர்களை என்க. (௫)

குறுங்காற் குரம்பைக் கொடிச்சியர்பொன் றெழுகு குவட்டின் முகட்டேறி
நறுந்தேன் பிலிற்றுங் கற்பகத்தி னறவங் கமழு மலர்கொய்வார்
புறந்தாழ் கூந்த லரமகளிர் பொன்னந் தருவி னறியமலர்
துறந்தாங் கிழிந்து பசுந்தேறல் துற்றுஞ் செழுந்தண் மலர்கொய்வார்.

(இ-ள்) குறுகிய காலகளையுடைய சிறுகுடிலில் வாசஞ்செய்யும் குறிஞ்சிநிலமாதர்கள் பொன்பொடி சிந்தும் மலையுச்சியிலேறி வாசனை தங்கிய தேனைத் துளிக்குங் கற்பகவிருட்சத்தின் தேனமணம வீசும் புட்பங்களைக் கொய்வார்கள்; பின் புறந்தாழ்ந்து நீண்ட அளகபாரத்தையுடைய தெய்வப்பெண்கள் பொன்மயமான அழகிய கற்பகவிருட்சத்தின் பரிமளம் பொருந்திய மலர்களை வெறுத்துத் தேவலோகம்விட் டம்மலையிலிறங்கிப் பசிய தேன்சொரியுஞ் செழிய குளிர்ச்சிவாய்ந்தமலர்களை கொய்வார்கள். எ-று. (௬)

வேட்டம் படரு முடங்குளைமான் புனிற்றுக் குருளை விழிதுயில
மோட்டு முதுநீர்ப் பஃறலைய வருவி தூங்கு முகிறவழ்பொற்
கோட்டிற் றொடுத்த விறாலுமொளிர் குளிர்மா மதியு மினிதுணர்வான்
காட்டு கென்னக் குறமகளிர் தத்தங் கணவர்க் கைதொழுவார்.

(இ-ள்.) வேட்டைமேற் செல்கின்ற வளைந்த புறமயிரையுடைய மானின் இளங்கன்றுகள் தூங்கும்படி, உயர்வாகிய பழைய நீர்மயமான பல தலைகள் பொருந்திய அருவியாறுகள் வீழாநிற்கும். மேகங்கள் சஞ்சரிக்கும் அழகிய மலையிற்கட்டிய தேன்கூட்டையும்பிரகாசிக்கின்ற குளிர்ச்சிவாய்ந்த சிறந்தசந்திரனையும் நன்றாயறியும்படி காட்டுங்களென்று குறமாதர்கள் தங்கடங்களது நாயகரைக் கைகூப்பிவணங்குவர். எ-று. (௭)

சோலைக் கழைக்கண் டிறந்துகுத்த சுடர்வித் திலமு நெடுஞ்சுடிகை
யாலக் கொடுந்தீ யொழுகுதலை யெயிற்ற வரவின் பணமணியுங்
கோலச் செங்கட் கரும்போத்தின் கோட்டு முத்து மவன்றிநுரை
மாலைப் பெருக்கா யிரமுகத்த வருவி கொழிக்கு மருங்கெல்லாம்.

(இ-ள்.) நுரைவரிசையோடு தனதுபெருக்காகிய அநேகமுகங்கள் பொருந்திய அருவியாறுகள் சோலைகளிலுள்ள மூங்கில்கள் கணுக்கள் திறந்து சிந்திய

பிரகாசம்பொருந்திய முத்துக்களும், கண்ட உச்சிக்கொள்ளையையுடைய கொடிய விஷாக்கினி யொழுகும் தொன்கொடுந்திட பற்களையுடைய சர்ப்பங்களின் சிரோமாணிக்கங்களும், கோடையிய சிமய கல்களையுடைத்தகரிய பன்றிகளின கொம்பினின்றுதிர்ந்த முத்துக்களும்பரிக்கொண்டு, பக்கங்களிலெல்லாம் கொழிக்கும். எ-று.

முத்துச் சனிக்குமிடம் இருபது.

இரத்தினசருக்கம்.

“தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி
நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்றோ
கந்தரஞ் சாலி கழை கன்னல் ஆவின்பல் கட்செவிகார்
இந்து வுடும்பு கராமுத்த மீனு மிருபதுமே”—என்றுகூறிய முத்துச் சனிக்குமிடம் இருபதாதலால் என்றி கழையுங்கொண்டும் சொரிந்தமுத்துக்கள் என்பதை யுணர்க. (அ)

சினைப்பூ வேங்கை தொடுத்தவிறால் சிதையப் புனிற்றுப் பிறைக் கொழுந்தின், பனிக்கோ டுழக்க விழ்ந்தருவிப பசுந்தேன் குதிப்ப வெருக்கொண்டு, கனற்கண் சுழற்றும் பகட்டாளிப் பிணவு குருளை வாய்கவவிச், சுனைக்கட் குவளைக்கண்பரப்புந் துறுகன் முழையி னொளித்திடுமால்.

(இ-ள்.) மலர்களையுடைய வேங்கைமரக்கிளைகளிற் கட்டிய தேன்கூடுகள் உடையும்படி இளம்பிறைக்கொழுந்தின் குளிர்ச்சிதங்கிய கொம்புகள் தேய்க்கப் பசிய தேன் அருவிபோலிழிந்திரங்குதலால், தீப்போலுங் கண்களைச் சுழற்றும் ஆண்யாளிகள் பயமுற்றுத் தமது பெட்டைகளையும் குட்டிகளையும் வாய்ற கவவிக்கொண்டு மலைச்சுனையிற் குவளைமலராகிய கண்களைப் பரப்பிய துறுகற்களாலாகிய குகைகளில் ஒளித்துக்கொள்ளும். எ-று. (கூ)

கலைவெண் டிங்க ளிருநிதியங் கழைக்காற் கமலத் திருமடந்தை
மலர்மென் சினைப்பூங் கற்பகமான் வயங்குமொ கடவுண மணியமிர்த
மிலவச் செவ்வா யரமகளிர் யாவு மெழந்ீத் திரைசுருட்டுமே
புலவுக் கடலை மதித்தளித்த தென ஒழிதன்சீர் புகலவற்றோ.

(இ-ள்.) சோடசகலைகளோடு கூடிய வெண்மையாகிய சந்திரனும், (சங்கநிதி பதுமநிதிகளாகிய) இரண்டு நிதிகளும், ஒலிக்கின்ற (பாதசரமணிந்த) திருவடிகளையுடைய கமலையும், மலர்களையும் மெல்லிய கிளைகளையும் பொருந்திய கற்பகவிருட்சமும், காமதேனுவும், விளங்குகின்ற (கவுத்துவமென்னும்) தெய்வீகம் பொருந்தியமணியும், அமுதமும், இலவம்போன்ற சிவந்தவாயையுடைய அரம்பாஸ்திரிகளும், முதலிய எல்லாவற்றையும மோதுகின்ற ஈரமயமான அலைகள் மறியும் புலால்நாற்றம்பொருந்திய கடலை (இம்மந்தரமலை மத்தாகநின்று) கடைந்துகொடுத்ததென்று சொல்லுமிடத்து இதன் சிறப்பு எடுத்துக்கூறுந்தன்மையுடையதோ.

வேறு.

திருந்துபைங் கொடிக்கவண் முத்தஞ் சேர்த்திமென்
கருந்தினைப் பசுங்கிளி கடியு மங்கையர்

முருந்துநற் றகைமுழு நிலவென் றுமபல்மெல
ஒருமபினஞ் சினைதொறு மலர்ந்து காட்டுமால.

(இ-ள்.) திருந்திய பசமையாகிய கொடியாலான கவணியிலே முத்தாகிய கல்லைவைத்து எறிந்து, மென்மையான கரிய தினைப்பயிரில மேயும் பச்சைக் கிளிகளைத் துரத்துகிற குறமாதர்களின மயிலிறகினடியை யொத்த தந்தபந்தியைப் பூரணச்சந்திரனென்று கருதி ஆம்பற்செடிகளின மெல்லிய அரும்புகூட்டங்கள் சினைகளிலெல்லாம் விகசித்துக் காணப்படும். எ-று. (கக)

மடிசெவி நெட்டுடற் றறுகண் வாரணம்
படர்சினைக் கற்பகத் தொடித்த பைந்தழை
துடிபடிக் கயமுனி யோடுஞ் சூலிளம
பிடியின மருந்துறப் பெட்பி னலகுமால்.

(இ-ள்.) மடிந்த செவியையும் பெரிய உடலையும் அஞ்சாமையையுமுடைய யானைகள், பரவிய கிளைகளையுடைய கற்பகவிருட்சத்தினின்று முறிதத பசிய தழைகளை, உடுக்கைபோன்ற கால்களமைந்த யானைக்கன்றுகளுடன் கருவுற்ற இளமை வாய்ந்த பெண்யானைகள் உண்ணும்படி ஆசையோடுகொடுக்கும்.
கயமுனி = யானைக்கன்று. (கஉ)

மைத்திரு டுங்குவான் முழையின் வாளராப்
பைத்தலைக் கிடந்தொளிர் மணியைப் பையத்தன்
கைத்தலத் தெடுத்தலுங் கனலென் றஞ்சியே
துய்த்தலைச் செம்முக மந்தி சோருமால.

(இ-ள்.) கறுத்து இருள்மிகுந்த பெரிய குகைகளில் ஒளிதங்கிய பாம்பின் படமமைந்த சிரசிலிருந்து பிரகாசிக்கும் மாணிக்கத்தை, சிவந்தமுகம்பொருந்திய குரங்குகள் மெதுவாகத் தமது கையினிடத்தெடுக்கவும் நெருப்பென்று பயந்து புசிக்கக் கருதியதை விட்டு மனந்தளரும். எ-று. (கங)

களிக்கயல் மருட்டிய கருங்கண் மங்கையர்
பளிக்கறை முன்றிலி னுணக்கும் பைந்தினைக்
கிளிக்கவ ராதுளை கிளக்கு மோதையாற
றளிர்த்திடு முளிசினைத் தருக்கள் யாவுமே.

(இ-ள்.) சந்தோஷித்த சேற்கெண்டைகளை மயக்கிய கரிய கண்களையுடைய குறிஞ்சிநிலப்பெண்கள் பளிக்குப்பாறையாகிய முற்றத்தினிடத்தில உலர்த்துகின்ற பசிய தினைக்கதிரைக் கிளிகள் கவர்ந்து செல்லாமல்,அவற்றையோட்டு மிரைச்சலால், உலர்ந்த கிளைகளையுடைய மரங்களெல்லாம் தளிர்விட்டுத் தழையாநிற்கும். எ-று.
"கிளிக்கவ ராதுளை கிளக்கு மோதை" யென்பது ஆயாலோட்டல். (கச)

அகின்முரு டுருட்டிவீ ழருவிச் சாரலின்
முகிலினந் தவழ்தலு மூரி வேழமென்
றிகலொடுந் தொடர்ந்துசென் றேந்து கோட்டுவெம்
புகர்முகக் களிற்றினம போரி னேற்குமால்.

(இ-ள்.) அகிற்கட்டையை யுருட்டிக்கொண்டு வீழுகின்ற அருவியாறுகள் பொருந்திய மலைச்சாரலில் மேகக்கூட்டங்கள் தவழ்ந்து செல்லவும், உயர்ந்த தந்தத்தையுடைய கொடிய பன்னிகள் தங்கிய முகம்பொருந்திய யானைக்கூட்டங்கள், வலியமைந்த யானையென்றுகருதிப் படைகளைப்போலப் பின்றொடர்ந்துபோய்ச் சண்டைசெய்ய எதிர்க்கும். எ-று. (கரு)

குளகமைச் சுற்றிய குறமடந்தைய
ரிளமுலைச் சாந்திடை யிழுகி யேறிய
தளரநடைக் குழவியந் தென்றல் தாழ்சினைத்
துளிமதுக் கற்பகக் காவிற் றுஞ்சுமால்.

(இ-ள்.) குளகை இடுப்பிற்கட்டிய குறப்பெண்களின் இளமையாகிய முலைகளிற் பூசிய கலவைச்சாந்தினிடத்திற் காலழுக்கியேறிய தளர்ந்த நடையையுடைய அழகிய இளந்தென்றற்காற்றானது, தாழ்ந்தகிளைகளைப் பொருந்திய தேன்றுளிக்கின்ற கற்பகச்சோலையில் நித்திரை செய்யும். எ-று.

குளகு=இலையுண்ணும் மிருகத்தின் உணவு "இலைநுகா விலங்கு ணவே குளகென விசைக்கலாகும்" என்பது நிகண்டு. (கசு)

பூங்கழை மிடறுகாய்ந் தரற்றல் பொற்புடை
யோங்குயர் சாரலி னுறையுங் கின்னரர்
நீங்கருங் காதலி னீண ரம்புளர்
தூங்கிசை வீணையஞ் சுருதி போன்றதே.

(இ-ள்.) பொலிவமைந்த மூங்கில்கள் உச்சியிலுலர்ந்து ஒலித்தல், அழகுடைய மிகவுமுயர்ந்த மலைச்சாரலில் வாழுங் கின்னரகணங்கள் பிரிதலில்லாத ஆசையுடன் நெடிய நரம்புகளைத் தூண்டுகின்ற பேரோசையையுடைய வீணைவாத்தியத்தின் அழகிய சுருதியை யொத்திருக்கும். எ-று.

வீணையின் நரம்புகள் ஏழு. அவையாவன:—குரல்-துத்தம் - கைக்கிளை-உழை-இளி-விளரி - தாரம் என்பன. இவற்றை ஏழ்சுரமெனவுங் கூறுவர். இவற்றிேனாசையுவமைமுறையே மயில் - இடபம் - ஆடு-கொக்கு - குயில்-குதிரை-யானை எனவும், சுவையுவமைமுறையே பால்-தேன்-கிழான்-நெய் - ஏலம்-வாழை - மாதுளங்கனி எனவும், வாசனையுவமைமுறையே மௌவல்-முல்லை-கடம்பு-வஞ்சி செய்தல்-பொன்னுவிரை-புன்னை-எனவும், அக்ஷரம் முறையே ஆஅ - ஈஇ - ஊஉ-ஏஎ-ஐஇ-ஓஒ-ஔஉ- எனவும், மாத்திரைமுறையே நான்கு-நான்கு-இரண்டு - மூன்று-நான்கு மூன்று-இரண்டு எனவும், இவற்றிற்கிறைவர் முறையே விசுவாமித்திரன்-ஜமதக்கினி-சந்திரன்-சூரியன்-கௌதமன்-காசிபன்-ஈசன் எனவுங் கூறுவர்-இன்னுமிதைப்பற்றிய ஏனையபகுப்பும் விரிவும் மிடற்றோசையாய்ப் பாடுகையில் இவற்றின்பிறப்பிட முதலியனவும் இசைநூலிற் காண்க. (கஎ)

ஒருபுடை வெண்முகி லுறைய வான்றுளிக்
கருமுகி லொருபுடை கிடக்குங் காட்சியால்
மரகதக் கொடியினை வாமம வைத்தொளிர்
புரிசடை வானவன் போலும் பொற்பிற்றே.

(இ-ள்.) ஒரு பக்கத்தில் வெள்ளையாகிய மேகமிருக்கவும், மற்றொருபக்கத்தில் சிறந்தமழைத்துளிகள் சிந்தும் (சூல்கொண்ட) கறுப்பாகிய மேகமிருக்கவும் விளங்குங்காட்சியால், பச்சைக்கொடிபோன்ற உமாதேவியாரை இடப்புறம் வைத்துக்கொண்டு பிரகாசிக்கின்ற புரிந்த சடையையுடைய சிவபெருமானது (அர்த்தநாரீச்சுரமாகிய) திருவுருவம் போலும் அழகமைந்துள்ளது (அம்மந்தரமலை) எ-று.

நீனிற முகிறவழ் சார னெற்றியின்
மானிளம புனிற்றுமென் மறிகள் வைகிய
பானிறக் கதிர்விரி பளிக்குப் பாறைகள்
தூநிலா மதிபல தோன்றல் போலுமால்.

(இ-ள்.) நீலவர்ணமாகிய மேகங்கள் தவழும் மலைச்சாரலி னுச்சியில் மானின் இளங்கன்றுகளாகிய மெல்லிய மறிகள் வசிக்கின்ற வெண்ணிறத்தையுடைய கிரணங்களை விரிக்கும் பளிங்குக்கற்பாறைகளானவை, பரிசுத்தம் பொருந்திய நிலவைவீசும் பல சந்திரா பிரகாசித்தல்போலு மிருக்கும். எ-று.

பளிங்கு+பாறை=பளிக்குப்பாறை; இது வலித்தல் விகாரம் "மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற்-றம்மின வன்றொடர் ஆகா மன்னே." என்பது சூத்திரம். (கக)

முகிறவழ் சாரலின் முத்தந் தெள்ளிநீ
டகில்சுமந் ததிரிசை யருவி பாய்வன
விகலுடை யிராவணற் கிடைந்த தென்னெனத்
திகழொளிக் கயிலையைச் சிரித்தல் போலுமால்.

(இ-ள்.) மேகங்கள் சஞ்சரிக்கும் அம்மலைச்சாரலில முத்துக்களைக்கொழித்து, பெரிய அகிற்கட்டைகளைத்தாங்கி அதிரத்தக்க வோசையுடன் அருவியாறுகள் பாயுந்தோற்றமானது, வலிதங்கிய இராவணனென்னும் அரக்கனுக்குத்தோற்றுவிட்டதென்னவென்று கூறி, ஒளிவிளங்கும் திருக்கயிலாயமலையை நோக்கிச் சிரித்தலையொத்திருக்கும். எ-று. (உ0)

தாழ்வரைக் கிடந்தொளி தயங்கு பன்மணி
சூழ்சுடர் விண்ணின்மேற் றோன்று பொற்பினால்
வீழ்கதி ரோவியம் விசும்பிற் பூத்ததென்
றியாழ்மொழி யரம்பையர் வியந்தி சைப்பரால்.

(இ-ள்.) சிறுகுன்றுகளிலிருந்து ஒளிவிளங்கும் பல ரத்தினங்களாலாகிய சூழ்ந்துள்ள கிரணங்கள் ஆகாயத்தின்மேற் காணப்படுந்தன்மையால், வீணையோசையைப்போலுஞ் சொல்லையுடைய அமரமாதர்கள், விழுதுபோன்ற கிரணங்களாலாகிய சித்திரம் அந்தரத்தில் காணப்படுகின்றது என்று ஆச்சரியமுற்றுக்கூறுவர்.

இரவிகாந் தத்தழ லிடையி னண்பகல்
மருவியு மொளிர்மதி காந்த வான்றிரைக்
குரைபுனல் கங்குலிற் குளித்து நிற்றலாற்
பொருவரு மருந்தவம் புரிதல் போன்றதே.

(இ-ள்.) (அம்மந்தரமலையானது) சூரியகாந்தக்கல்லின் அக்கினியில் நல்ல பகற்காலமெல்லாம் பொருந்தியும், பிரகாசிக்கின்ற சந்திரகாந்தக்கல்லின் சிறந்த அலைபோலசை பொருந்திய நீரில் இராக்காலமெல்லாம் மூழ்கியிருத்தலால், சமானமில்லாத அரியதவத்தை (எப்போதும்) செய்கிறுத்தல்போல விளங்கும் எ-று.

சூரியகாந்தக்கல் சூரியனைக்கண்டால் நெருப்புப்பொறிகளை விடுவதும், சந்திரகாந்தக்கல் சந்திரனைக்கண்டால் நீர்த்துளிகள் சிந்துவதுமாம். "நிலைநின்-காலையம் பக்குக் கோடையிற்-கைம்மேனிமிர்த்துக் காலொன்று முடக்கி - யையைகை நெருப்பி னழுவத்து நின்றும்-மாரிநாளினும் வாடைநாளினும்-நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும் * * * அம்மை மத்தி யடைதற்பொருட்டுத்-தம்மைத்தாமே சாலவ மொறுப்பர்." என்றுகூறிய திருவெண்காட்டடிகள்வாக்கிணங்க வெயிலுள்ள பகலில் நெருப்பிலும், குளிருள்ள இரவில் நீரிலும் நிற்றலின், அம்மலை "அருந்தவம்புரிதல் போன்றது" எனப்பட்டது. (உஉ)

பாய்திரை யருவிகண் படுக்குஞ் சாரலிற்
சேயொளி விரிகதிர்ச் செல்வன் சேறலால்
மீயுயர் குடச்சுனை மலர்கள் மேற்புறக்
காய்கதிர்க் கரங்களா லலர்ந்து காட்டுமால்.

(இ-ள்.) அலையுடன் பாய்கின்ற அருவியாறுகள்கண்படுக்கின்ற அம்மலைச் சாரலில் சிவந்த பிரகாசத்தைப் பரவச்செய்யும் கிரணச்செல்வனாகிய சூரியன் செல்லுவதால், மிகவும் உயர்விடத்திருக்கின்ற குடம்போன்ற சுனையிலுள்ள மலர்கள், மேற்புறமாகக்காய்கின்ற கிரணமாகிய கைகளால் விகசித்துக் காணப்படும்.

சூரியனது காந்தியால் மலரவேண்டிய தாமரை முதலிய மலர்கள் அம்மலை யுயர்விலுள்ள சுனைகளிலிருத்தலாலும், சூரியமண்டலம் அம்மலைச்சாரலளவாயிருத்தலாலும், அவை சூரியனைச் சூழ்ந்திருக்குங் கிரணங்களில் மேற்பாகத்துள்ள கிரணங்களால் அலருமென்றார். (உ௩)

குடவரை நெற்றியிற் குருதி வெய்யவன்
படுதலு முதயமால் வரையிற் பாயொளிச்
சுடர்மதி வாயிடைத் தோன்று பொற்பினாற்
புடைமணி விசித்தமால் களிறு போலுமால்.

(இ-ள்.) மேற்றிசையிலுள்ள அஸ்தமனகிரியி னுச்சியிலே சிவந்த சூரியன் மறைவதும், (கீழ்த்திசையிலுள்ள) பெரிய உதயகிரியிலே பரந்த ஒளியையுடைய சுடராகிய சந்திரன் உதிக்கின்றதுமாகிய காட்சியால், (அம்மந்தரமலை) இருபக்கத்திலும் எறிமணிகள் கட்டிய பெரிய யானையைப்போன் றிருக்கும். எ று.

சூரிய சந்திரர் அம்மலையைத் தினமும் வலஞ்செய்து வருவோராதலின், முறையே மேற்கிலுங் கிழக்கிலுமுள்ள அஸ்தமனகிரி உதயகிரிகளில், மறையவும் உதிக்கவும் நிகழ்கையில், இடையிலுள்ள அம்மலை யானையாகவும், இருபுறத்துமுள்ள அவ்விருசுடர் இரண்டு மணிகளாகவும் உவமித்தா ரென்றுணர்க. (உ௪)

சினைமலர்க் கோட்டிடைத் தொடுத்த தேனிறால்
வினைபுரி வயிரவாட் புனிதன் மேற்செலக்
கனைதிரை யருவிசூழ் விலங்கல் காவலன்
புனைதரு கேடக மிருத்தல போன்றவே.

(இ-ள்.) மலர்கள் பொருந்திய மரக்கிளைகளிற் கட்டியதேன் கூடுகள் ஒலிகின்ற அலைகள்பொருந்திய அருவியாறுகள்சூழ்ந்துள்ள அம்மலைமன்னன் காத்தற்றொழில்செய்யும் வச்சிரவாளாயுதமேந்திய பரிசுத்தனாகியதேவேந்திரன்மேற் செல்லும்படி கையிற்பற்றிய கேடகம் விளங்குதல்போலுந்தன்மையுடையது. எ-று.

இனையமால் வரைதனி லிருவி சும்புறை
கனைகதிர்ப் பூங்கழ லமரர் கைதொழ
தனிமுத லுறைந்துநீர்த் தடங்கொள் காசியை
நினைதலு முறுதுயர் நிகழ்த்த லாவதே.

(இ-ள்.) இத்தன்மைத்தான பெருமை தங்கிய மந்தரமலையிலே பெரிய ஆகாயத்தில் வசிக்குஞ் சத்திக்கின்ற கிரணங்களையுடைய அழகிய வீரக்கழலணிந்த தேவர்கள் வணங்கும்படி, ஒப்பற்ற முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் வீற்றிருந்து, நீரையுடைய தடாகங்கள்பொருந்திய காசிக்ஷேத்திரத்தைக் கருதியதால், நேர்ந்த துன்பத்தைச்சொல்லல் கூடுமோ. எ-று. (உசு)

காசியைப் பிரிதலிற் கனற்றும் வெம்மையாற்
பூசிய சாந்தமேற் பொரிந்த தன்றுகொல்
மாசறு மிளமதிக் கண்ணி வார்சடை
யீசன்மேல் நீறெனு வின்னுஞ் சொல்வதே.

(இ-ள்.) காசிநகரத்தைவிட்டு விலகுதலாற் சுடுகின்ற உஷ்ணத்தினால் (பெருமான் தமது திருமேனியில்) அணிந்திருக்குங் கலவைச்சாந்து மேலே பொரிந்து விட்டது; அதையல்லவா குற்றமற்ற இளஞ்சந்திரனை மாலையாகத் தரித்த நெடிய சடையையுடைய சிவபிரான்பேரில் நீறுள்ளதென இப்போதும் (உலகத்தார்) சொல்வது. எ-று. (உஎ)

கரைபொரு கங்கைசூழ் காசி மாநகர்ப்
பிரிவெனு மழல்சுடப் பெய்த சேயிதழ்
மருமலர்த் தாமரை வலைய மெம்பிரா
னரவென நினைதலா லரவ மாயதே.

(இ-ள்.) கரையை மோதுகின்ற கங்காநதியாற் சூழ்ந்திருக்கும் பெருமை வாய்ந்த காசிநகரத்தின் பிரிவென்று சொல்லும் நெருப்பானது தகித்தலால், அணிந்திருக்கின்ற சிவந்த இதழ்களையுடைய வாசனை பொருந்திய தாமரைமலர்ச்சருள்களை எமது சிவபெருமான் பாம்பென்று நினைத்தலால் அரவமாயிற்று. எ-று.

நீற்றொளி மேனியன் காசி நீங்கிய
மாற்றருந் துயர்க்கனல் மாற்றற் கன்றுகொல்
ஈற்றிளந் திங்களைக் கிளருந் தெண்டிரை
யாற்றினைச் சடையின் றளவும் வைத்ததே.

(இ-ள்.) திருவெண்ணீற்றின் பிரகாசம் பொருந்திய திருமேனியையுடைய சிவபெருமான் காசிநகரத்தைப்பிரிந்த நீக்குதற்கரிய துன்பமாகிய அக்கினியை யொழித்தற்கல்லவோ, சிற்றாகிய பிறைச்சந்திரனையும், ஒலிக்கின்ற தெளிந்த அலைகளையுடைய கங்கையாற்றையும் தமது சடாமுடியில் இதுவரையிலும் அணிந்திருப்பது. எ-று. (௨௯)

எரிபுரு வாகிய வெந்தை மேனியு
முருகிநெஞ் சழிவுற வுடன்று சுட்டதால்
விரிபுனற் காசியை விடுபவின் யாவரே
பிரிவெனுந் தழலிடைப் பிழைக்க வல்லரே.

(இ-ள்.) தீவண்ணமாகிய திருவுருவையுடைய எமது தந்தையாகிய சிவபெருமானது திருமேனியும் உருகி மனம்வருந்தும்படி, பொங்கிச்சுட்டதன்மையால், பரந்த நீர்வளமுடைய காசிப்பட்டணத்தை விட்டு விலகினால், பிரிவென்னுந் தீயினின்றுந் தப்பிப்பிழைக்க வல்லோர் யாவர்! எ-று. (௩௦)

ஊழிவெங் கனலினை யொளித்த நீர்த்திரை
யாழ்கடல் விடத்தினைத் தரித்த வண்ணலும்
வீழ்புனற் காசியை விடுத்த வாற்றினாற்
றாழ்துயர்க் கனலையென் றரித்தி டாததே.

(இ-ள்.) கொடிய வடவாமுகாக்கினியையொளித்து வைத்திருக்கும் அலைகளையுடைய ஆழமாகிய கடலிற்றோன்றிய ஆலகால விஷத்தைத் தமது கண்டத்திலே தரித்துக்கொண்ட எம்பெருமானும், ஓடுகின்ற நீர்ப்பெருக்கையுடைய காசிநகரத்தைநீங்கிய தன்மையால் வருந்துகின்ற துன்பமாகிய தீயைத் தரித்துக்கொள்ளாதது என்ன காரணம்?. எ-று. (௩௧)

மலர்தலை யுலகுளோர் மருட்சி நீக்கிய
தலைவனுங் காசியைத் தணந்த வாற்றினால்
நிலைபெறு நெஞ்சக மருண்டு நின்றன
னலர்பசுந் தெரியலை யரவ மென்னவே.

(இ-ள்.) பரந்த இடத்தையுடைய உலகத்திலுள்ளாரது மயக்கங்களை விலக்கும் இறைவராகிய சிவபெருமானும் காசிக்ஷேத்திரத்தைப் பிரிந்த காரணத்தினால், கலக்கமற்று விளங்குந் திருவுள்ளம் மயங்கி, விகசித்தபசிய மலர்மாலையைப் பாம்பென்று கருதியிருந்தனர். எ-று. (௩௨)

மறைபயில் தக்கனன் மகளைத் தீர்துயர்
பெறலரும் வரைமகட் பெற்று நீங்கினேன்
அறைபுனற் காசியை யகன்ற வெந்துய
ருறையுமந் நகரல தொழிக்கு மோவெனும

(இ-ள்.) பெறுதற்கரிய பர்வதராஜகுமாரியாகிய பார்வதியை மணந்து, வேதங்களில் நன்குதேர்ந்த தக்ஷப்பிரசாபதியின் நல்லபுத்திரியாகிய தாக்ஷாயணியைப் (பூர்வத்தில்) பிரிந்ததனாலாகிய துக்கத்தை விலகினேன்; சத்திக்கின்ற

நீர்வளமுள்ள காசியைப் பிரிந்ததனாலாகிய மிக்க துக்கத்தைச்சொல்லுகின்ற அக் காசிநகரமேயன்றி (வேறெந்த நகரமாவது) ஓதிக்கமுடியுமோவென்று கூறுவார் (சிவபெருமான்.) எ-று.

தக்கன்மகளைப்பிரிந்து வரைமகளை யடைந்ததாவது.

சிவபெருமான் திருக்கயிலாயகிரியில் பிரம இந்திராதி சகலதேவர்களுடன் வீற்றிருக்கும் திருவோலக்கத்தில், பார்வதிதேவியார் எழுந்து சிவபெருமானை வணங்கி "எம்பெருமானே! அடியேன் தேவரீரைப்பணியாத தக்ஷன் மகளென்பதனாலாய தாக்ஷாயணி யென்னும்பெயரை நீக்கும்படியருளவேண்டும்" எனப்பிரார்த்திக்க, சிவபெருமான் "உமையே! இமோபர்வதராசன் உன்னைப் புதல்வியாக அடையும்படி தவஞ்செய்கின்றான். அவன்பாற் குழந்தைவடிவொடு சென்றுளாக. யாம்வந்து விவாகஞ்செய்வோம்" என்றனுக்கிரகிக்க, அவ்வாறே தேவியார் அம்மலைச்சாரலிலோர் தாமரைத்தடாகத்திற் குழந்தையாயிருந்து பர்வதராஜனாற் கண்டெடுத்து அவன் மனைவி மேனையால் வளர்க்கப்பட்டனள். பிறகு பெருமான் சத்தவிருடிகளால் மணம்பேசி, உமையை வதுவை செய்தனரென்பது. இதனை,

கந்தபுராணச்சுருக்கம்-உற்பத்திகாண்டம்.

"இறைவனே வரைவனைத்த காதலோய் நின்னை
யெண்ணாத தக்கன்மக ளென்னு நாமம்
பெற்றனனே லதுபரிப்ப வெருவினேனப்
பெயரகல வருடியெனப் பேச லோடுந்
தற்றுபொழு திமயமென்னுஞ் சயில வேந்தன்
றனமகளா யுனைப்பெறுவான் றவஞ்செய் கின்றான்
மற்றவன்பால் வளர்ந்திடுதி வந்தி யாம்பின்
மணத்துமென விடைகொடும வரையிற் சார்ந்தாள்.' எனவும்,

"வந்து பரனைப் பணிந்திடலும் வள்ள றவசி னிருந்தியென
வெந்தை யோடு முமையிருப்ப விமவா னடைந்த செழின்மனைவி
யுந்து கரக நீர்வார்ப்ப வுயர்மாற் கரிய வொளிர்பதத்தைப்
பந்த வினைக ளறவிளக்கிப் பரிந்து பூசை புரிந்தனனே.

பூசை புரிந்து நாரிகரம் புனிதன் கரத்திற் கொடுத்தானுக்
காசை பொருந்து மம்பிகையை யளித்தே னென்ன வறைந்திடலு
மேசி லிமையோர் புகழ்ந்தார்க ளிருவா கீத மிசைத்தார்கண்
மாசில் கணங்கள் முழவறைந்தார் மடவார் பலரோ வாழ்த்தெடுத்தார்"

எனவும், வருவனவற்றானுணர்க. (௯௯)

இன்ன லுற் றயர்வுறுங் காசி காசியென்
றுன்னுமக் காசியி னுலவு தென்றலவ்
தென்னுடை மேனியி லிழுகி யேகுமேல்
மன்னுயிர் தழைத்திடு மென்று மாழ்குமால்.

(இ-ள்.) துன்பப்பட்டுச் சோர்வடைவார்; காசி காசியென்று பலகாற் கருதுவர்; அக்காசிப்பட்டணத்திற் சஞ்சரிக்குந் தென்றற்காற்றானது வந்து எனது உடலின்மேலில் வீசிச்செல்லுமாயின், நிலைபெற்ற உயிர்பிழைக்குமென்று திருவாய் மலர்ந்து மனம் வருந்துவர் சிவபெருமான். எ-று. (௧௪)

விருப்பொடு வெறுப்பிலா வியனா சிரைத்தடம்
நிருப்பதிங் கெனையென நிமயப் பூங்கொடி
திருப்பவ ளக்கனி மலரச் செவ்விடாந்
பொருப்பவி லாதனை புகறல மேயினான்.

(இ-ள்.) விருப்பம் வெறுப்புமில்லாத பரிசுத்தராகிய எம்பெருமானே! இப்போது தேவரீர் கவலைகொண்டிருப்பது யாதுகாரணமென்று இமாசலபுத்திரியாராகிய பூங்கொடிபோன்ற உமாதேவியார் தமது அழகிய செம்பவளம்போன்ற திருவாய்மலர்ந்தருளவும், ஆகாயமளாவிய மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமான் விடையளிக்கத்தொடங்கினார். எ-று. (௧௫)

காசியைப் பிரிந்தவெந் துயரங் காழ்கொள
மாசறு மதிநுதல் வருந்தி னேனென
வீசனுங் குரைத்தலும் காசி காசியென
றாசலா டினள்வரை மகளு முள்ளமே.

(இ-ள்.) முயற்களங்கமற்ற பூரணச்சந்திரன் போன்ற முகத்தையுடைய உமையே! காசியைப்பிரிந்த கொடிய துன்பமானது மிகுதலால் மனவருத்தமுற்றேன் என்று சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளவும், (அதுகேட்ட) உமாதேவியாரும் காசி! காசி! என்று கூறி மனத்தளர்ச்சியுற்றனர். எ-று. (௧௬)

கவிழ்குலை நெட்டிலைக் கதலிக் காட்டிடைத்
தவழ்குட வயிற்றுசூற் சங்க மீன்றமுத்
தவிரொளி பரப்பிடு மந்தண் காசியி
னுவகையி னுறைவதற் குஞற்றென் றோதினாள்.

(இ-ள்.) கவிழ்கின்ற குலைகளையும் நெடிய இலைகளையுமுடைய வாழைத் தோட்டத்திலே தவழுகின்ற குடம்போன்ற வயிற்றையுடைய கருவுற்ற சங்குகள் பெற்ற முத்துகள், விளங்குகின்ற ஒளியைப் பரவச்செய்யும் அழகிய குளிர்ச்சி பொருந்திய காசி நகரத்திலே ஆசையோடு வாழ்வதற்கு (ஆகத்தக்க முயற்சியைத்) தேவரீர் செய்தருளவேண்டுமென்று (உமாதேவியார்) கூறினார். எ-று. (௧௭)

தாரணி தொழுந்திவோ தாஸன் றண்கடற்
பாரமுழு தளிகவெனப் பணித்த ஞான்றவன்
சீர்கெழு மமரர்பாற் சேரொ ணாதென
வோர்வரங் கேட்டன னுவந்து நல்கினேம்.

(இ-ள்.) உலகமெல்லாம் வணங்குந் திவோதாஸனைக் குளிர்ச்சி பொருந்திய கடல்சூழ்ந்த பூமிமுழுவதுங்காக்க வென்று கட்டளையிட்டகாலத்தில், அவன் சிறப்பு மிகுந்த தேவர்கள் காசி நகரத்தில் வரக்கூடாதென்று ஒருவரங் கேட்டான்; (அவனுக்கவ்வாறே) மனமுவந்து வரங்கொடுத்தோம். எ-று. (௧௮)

அன்றுதொட் டின்றள வவனி யாவையு
மன்றநல் லறநெறி வழாம லோமபினுன்
பொன்றுறு தவறவன் புரியி னலலதை
யொன்றுமே யாகிய வொழிக்கும் வண்ணமே.

(இ-ள்.) (அத்தகையபகோமளித்த) அன்றையதினமுத லிதுகாறும், உலக முழுவதும், நல்லதருமமார்க்கம்நிலைபெற, (கிரமம்) தவறாமற் காத்துவருகின்றான்; அழியததக்க குற்றத்தை அவன்செய்தாலல்லாமல், அவனது ராஜரிகத்தை விலக்கும் உபாயம் கைகூடுமோ? கூடாது ! எ-று.

அல்லதை யெனபதிவ ஐ சாரியை. (௩௯)

என்றுயர் மாலவரை யினிதி னீன்றருள்
பொனறவ மிளமுலைக் கோதிப பூங்குழ
லொன்றிய யோகினிச் சக்க ரத்துடன்
கொன்றைபம புரிசடைக் குழகன் கூறுவான்.

(இ-ள்.) என் றிவவகையாக, உயர்வாகிய பெரிய இமோபர்வத ராஜன் இனிதாகப்பெற்ற பொனபோனற தேமல்படர்ந்த இளமுலைகளையுடைய பார்வதி தேவியாருக்குக்கூறி, மலரணிந்த கூந்தலையுடையமாதர்கள் கூடிய யோகினிச்சக்கரத்தோடு, கொன்றைமலர்மாலை சூடிய அழகிய புரிந்த சடையையுடைய சிவபெருமான் சொல்லததொடங்கினர். எ-று. (௪0)

சக்கரம்=கிரகநடை.

அறந்திறம் பாதுல களிக்கு மன்னவன்
சிறந்தநன் மனுநெறி திறம்பிக் காசியைத்
துறநதிட வியற்றுமி னென்னத் தொக்கவர்
கறங்குநீர்க் கங்கைசூழ் காசி யெய்தினர்.

(இ-ள்.) தருமநெறி தவறாமல் உலகத்தை ரக்ஷிக்கின்ற திவோதானனெ ன்னுமரசன, மேம்பட்ட நல்ல மனுமுறைதவறிக் காசி நகரத்தைவிட்டு நீங்கும் படிச செய்யுங்கள் என்று (சிவபெருமான்) கூறவும், கூட்டமாகிய யோகினிகள் ஒலிக்கின்ற நீர்மயமான கங்கையாற்றினுற்சூழ்ந்த காசிப்பட்டணத்தைப்போய்ச் சேர்ந்தார்கள். எ று. (௪௧)

காசியின் சிறபபுரைத்த அ-ம.

முற்றிற்று.

ஆ திருவிருததம் - ௧௨௩௭.

சிவமயம்.

நாற்பத்தைந்தாவது.

# யோகினிகள் காசியையடைந்த அத்தியாயம்.

கன்னியெயில் சூழும்வளர் காசியை வியப்புற்
றுன்னலரு மாயைபுரி யோகினிகள் யாரு
முன்னையுரு மாறியுயி ரோகம்விளை விக்கும்
மன்னுபல நல்லுருவு கொண்டினிது வந்தார்.

(இ-ள்.) அழியாத மதில்படை சூழ் (தருமங்கள்) வளருகின்ற காசிக்ஷேத்திரத்தைக் கண்டாச்சரியப்பட்டு, நினைத்தற்கரிதாகிய மாயைகளைச் செய்யவல்லவர்களாகிய யோகினிகளெல்லாம் தமது பண்டையவடிவந் திரிந்து, பிராணிகளை இச்சையுண்டுசெய்யும் நிலைபெற்ற பலவகைப்பட்ட நல்ல வடிவங்களை யெடுத்து இனிதாக வந்தார்கள். எ-று. (க)

விண்ணவர்த மாருயிரும் வேரொடு பிடுங்குங்
கண்வலை யெறிந்திளைஞர் மேயகடை தோறும்
பண்ணொடு கொழுங்கனி பழுத்தனைய வின்சொல்
வண்ணமக ளாகியொரு வாணுத னடந்தாள்.

(இ-ள்.) ஒளிதங்கிய நெற்றியையுடைய ஒருபெண், தேவர்களது அருமையான பிராணனையும் அடியோடு கல்லத்தக்க கண்ணாகிய வலையை வீசி, வாலிபர் பொருந்திய இடங்களிலெல்லாம் பண்ணோசையுடன் கொழுமை வாய்ந்த பழுத்த கனியைப்போன்ற மதுரமாகிய சொல்லையுடைய ஒருவண்ணப்பெண் வடிவாகிச் சென்றாள். எ-று.

வண்ணமகள் = கோலஞ்செய்வாள். (உ)

காலனை யமர்க்குவரு கென்றுகடன் ஞாலத்
தோலைவிடு மைக்கணுயி ரோவிய நிகர்ப்பாள்
கூலமறு கிற்குமரர் கொள்கென நறுந்தண்
மாலைபகர் மாதரி னொருத்திதனி வந்தாள்.

(இ-ள்.) இயமனை யுத்தஞ்செய்தற்கு வரக்கடவாய் என்று கடல்சூழ்ந்த பூமியில் ஓலையனுப்புகின்றதுபோன்ற மை தீட்டிய கண்ணையுடைய உயிர் பொருந்திய சித்திரம்போன்றவளாகி இளைஞர்களே வாங்கிக்கொள்ளுங்கள் என்று வாசனைதங்கிய குளிர்ந்த பூமாலைவிற்கும்பெண்ணைப்போல ஒருத்தி யொப்பற்றுக் கடைவீதியில் வந்தாள். எ-று.

கூலம் = கடைவீதி. (ங)

முறத்திடுகெ ணற்குறி மொழிந்திடுவ னின்னே
பெறற்கரு மகப்பெறுவை பெட்பினுடன் முற்றுஞ்

சிறப்புடை மயிற்றொகை சிலிர்த்ததென வோதிக்
குறக்கொடி யெனத்தனி யொருத்திகுறு குற்றாள்.

(இ-ள்.) நெல்லை முறத்திற் போடுங்கள் குறிசொல்வேன்; இப்பொழுதே பெறுதற்கரிய குழந்தையை அழகுடன் பெறுவீர்கள் ; சரீரமுழுவதுமுள்ள சிறப்புப்பொருந்திய உரோமத்தொகுதிகள் (நன்னிமித்தங் காட்டற்பொருட்டு) சிலிர்ப்புற்றன என்று சொல்லிக்கொண்டு, குறப்பெண்போலச் சமானமற்ற ஒருத்தி வந்தனள். எ-று. (ச)

வேதியர்த முன்னணுகி மெல்லென நடந்தே
யேதமறு கற்புடைய ரேனுமவர் நும்மேற்
காதலுற மென்மொழி கரைந்திடுவ னென்போற்
றூதியரி லென்றொரு சுடர்த்தொடி புகுந்தாள்.

(இ-ள்.) அந்தணர் முன் குறுகி மெதுவாக நடந்து, குற்றமற்ற கற்புள்ள மங்கையர்களாலும் அப்பெண்களுங்கள் மீது ஆசைகொள்ளும்படி (மனங்கரை யத்தக்க) மிருதுவான வார்த்தைகளைப் பேசுவேன்; தூதுசெல்லும் பெண்களில் என்னைப்போ லொருவருமில்லை என்றுரைத்துக்கொண்டு, பிரகாசிக்கின்ற வளையல்களை யணிந்த ஒரு பெண் வந்தாள். எ-று. (ரு)

அந்தமறு விஞ்சையற வோரொடு பயின்றேன்
வந்தியர் மகப்பெறு மருந்துள துமக்குத்
தந்திடுவ லென்றுரைகள் சாற்றிமனை தோறும்
பைந்தொடி யொருத்திவிழை வோடுபடர் குற்றாள்.

(இ-ள்.) முடிவற்ற மந்திரங்களை, தேர்ந்த பெரியோரிடத்திற் பழகிக்கற்றிருக்கிறேன் ; மலடிகளும் பிள்ளைபெறத்தக்க ஔஷதமிருக்கின்றது ; (வேண்டுமானால்) அதனை யுங்கட்குக் கொடுப்பேன் என்று இதுபோன்ற வார்த்தைகள் சொல்லிக்கொண்டு, பசிய வளையலையணிந்தவளாகிய ஒருபெண் வீடுகள்தோறும் ஆசையுடன் சென்றாள். எ-று.

வந்தி=பிள்ளைபெறாதவள். (சா)

தையலொரு பாகனுறை யுங்கயிலை தன்னை
ஐயமற வெள்ளிவரை யாக்கினன்மு னென்று
வையகம னைத்தையு மருட்டிரத வாதஞ்
செய்யுமவ ளென்னவொரு சேயிழை புகுந்தாள்.

(இ-ள்.) உமாதேவியாரை ஒருபாகத்திலுடைய சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கயிலாயமலையைக் குற்றம்நீங்க வெள்ளிமலையாக முன்னொருகாலத்திற் செய்திருக்கிறேன் என்று கூறிக்கொண்டு, உலகமுழுவதையும் மயக்கும் இரசவாதஞ்செய்கின்ற பெண்ணைப்போல, செம்மையாகிய ஆபரணமணிந்த ஒருத்தி வந்தாள். எ-று.

இரதவாதம் - இரும்புமுதலிய உலோகங்களைத் தரிசவேதி பரிசவேதிகளாற் பொன்னாக்கச் செய்தல் ; இது கலைஞான மறுபத்துநான்கி லொன்று. (எ)

அங்கிபுனல் மாருத மடக்குவன் விசும்பிற்
றங்கிடுவன் மீள்வனொ ரிமைப்பொழுது தன்னிற்
கங்குலபகல் செய்துகதிர் மாறிவரு விப்பன்
பைங்கொடியன் னீரெனவொர் பாசிழை நடந்தாள்.

(இ-ள்) பசியகொடிபோன்ற இடையையுடைய மாதர்களே! நெருப்பு-நீர் - காற்று முதலாகிய பூதங்களைக் கட்டுவேன்; ஆகாயத்தி லிருப்பேன்; ஒருக்ஷணகாலத்திலே (அங்கிருந்து இவ்வுலகுக்கு) திரும்பிவருவேன்; இரவைப் பகலாகச் செய்து சூரிய சந்திரர்களை மாறிமாறிவரவழைப்பேன்என்று பசிய ஆபரணங்களை யணிந்த ஒருபெண் நடந்தாள். எ-று.

அங்கி புனல் மாருதம் என்றதனால் "ஒருமொழி யொழிதன் இனங்கொளற் குறித்தே." என்றபடியே ஏனைய பிருதிவி அப்புக்களையுங் கொள்க. "கங்குல் பகல் செய்து கதிர்மாறி வருவிப்பன்" என்பதற்கு இரவைப் பகலாகவும், பகலை இரவாகவும் மாற்றி, இரவிற் சூரியனையும் பகலிற் சந்திரனையும் பிரகாசங்கொடுக்கும்படி வரச்செய்வேன் என்று பொருள்கொள்க. (௮)

விண்ணவர் மணத்தினை விழைந்திடுதி ரேனு
மண்ணுலகின் வந்தவர் மணந்திட வருத்த
மெண்ணரிய விஞ்சைக ளியற்றிடுவ னென்னக்
கண்மலர் குளிர்ப்பவொரு காரிகை புகுந்தாள்.

(இ-ள்.) தேவர்கள் உம்மை விவாகஞ்செய்யவேண்டுமென்பதை விரும்பினீர்களாயினும், அவர்களே பூலோகத்தில் வந்து வதுவை செய்துகொள்ளத்தக்க வருத்தமெண்ணற்கரிய இலேசாகிய வித்தைகள் செய்வேன் என்றுகூறி,(தன்னைக் கண்டோரது) கண்மலர்கள் குளிர்ச்சியடையும்படிஒருயோகினிப்பெண் வந்தனள். எ-று.

காரிகை=அழகு; அது ஈண்டு அழகுடைய பெண்ணுக்காயது. (௯)

பாறுதொடர் வேலரசர் வந்துபடை விட்டான்
மாறழியும் வண்ணநவில் விஞ்சைபல வல்லேன்
றேறுநரல் லாவிவை தெளிந்திலர் தமக்குக்
கூறுகில னென்றொரு குலக்கொடி புகுந்தாள்.

(இ-ள்.) பருந்துகள் பின்றொடர்ந்துசெல்லும் வேற்படை யேந்திய மன்னவர் எதிர்த்துத் தமதுஆயுதங்களைப் பிரயோகித்தால், சத்துருக்கள் நீங்கும்விதஞ் செபிக்கத்தக்க மந்திரமுதலிய பலவித்தைகளில் தேர்ந்துள்ளேன்; ஆராய்ச்சியுடையோருக்கல்லாமல் இவற்றைத்தெளிவில்லாருக்குப்போதிக்கமாட்டேன்என்று சிறந்த கொடிபோன்ற ஒருபெண் வந்தாள். எ-று.

கூறுகிலன் என்பதில் கில் என்பது ஆற்றலுணர்த்தும் விகுதி. (௧௦)

கட்புல னுறாதுடல் கரப்பனெறி மைப்பின்
விட்புல மடந்தையரை மண்ணிடை விடுப்ப
னுட்பவனு வாவன்மலை யாவனென நொய்திற்
பெட்புரா பயிற்றியொரு பெண்கொடி நடந்தாள்.

(இ-ள்.) கண்ணாகிய புலனுக்குத தெரியாமற் சரீரத்தை மறைத்துவிடு வேன்; தேவலோகத்தில் வசிக்கும் மாதர்களை ஒரு க்ஷணப்பொழுதிற் பூலோகத் துக்குக் கொண்டுவந்துவிடுவேன். சூக்குமவடிவாகிய ஓரணுப்பிரமாணமாவேன்; மலையைப்போலும் பெரிதாகிய ஸ்தூலதேகமெடுப்பேன் என்று அழகுபொருந்திய வார்த்தைகளை இலேசாகச் சொல்லிக்கொண்டு கொடிபோலுமிடையை யுடைய ஒரு பெண் நடந்துவந்தாள். எ று. (கக)

எஞ்சலினி லத்திடை புதைத்தபொருள் யாவுங்
கஞ்சமல ரங்கையி னமைத்தகனி போல
வஞ்சனம வரைந்துதெரி விப்பனஃ தொன்றோ
விஞ்சையென வோதியொரு மெல்லிய லணைந்தாள்.

(இ-ள்.) பெரிய பூமியினிடத்திற் புதைபட்டுள்ள எல்லாப் பொருள்களை யும், தாமரைமலர்போன்ற அழகிய கையினிடத்தில் பொருந்திய (நெல்லிக்) கனி யைப்போல மைபோட்டுப்பார்த்தறிவிப்பேன். அது ஒன்றுதானோ என்னிடத்து ள்ள வித்தை யென்று சொல்லிக்கொண்டு, மெல்லிய தன்மையையுடைய ஒரு பெண் வந்தாள். எ-று.

அங்கை என்பதை அகம்+கை எனப் பிரித்து உள்ளங்கை யெனினுமொ க்கும். "அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்" என்றபடி. (கஉ)

வள்ளைபொரு காதிடை மலர்ந்தகுவ ளைக்க
ணள்ளியும தாருயிரை யுண்ணுமகல் வீரென்
றொள்ளிழையு நூபுரமு மொல்லெலன வொலிப்பத்
தெள்ளமிர்த மென்னவொரு சேயிழை நடந்தாள்.

(இ-ள்.) வள்ளைத்தண்டுபோன்ற காதுகளிலுள்ள விகசித்த குவளைமலர் போன்ற கண்கள் உங்கள் பிராணனை அள்ளிக் குடித்துவிடும்; ஆதலால் தூரமாக ச்செல்லுங்களென்று, ஒளிதங்கிய ஆபரணங்களும் பாதசரமும் ஒல்லென்று கலி க்கும்படி, தெளிந்த அமிர்தம்போலச் செம்மையாகிய பணிபூண்ட ஓர்பெண் நட ந்துவந்தாள். எ - று.

"வள்ளைபொரு காதிடை மலர்ந்தகுவளைக்கண்" என்பது காதுவரையில் ஓடி நீண்டிருக்கும் கண் என்பதாம். வள்ளையும் குவளையும் முறையே காதுக்கும் கண்ணுக்கும் உவமானமாக்கப்பட்டன. ஒல் என்பது ஒலிக்குறிப்பு; அநுகரண மெ ன்பர் வடநூலார். (கங)

கண்டவர் வியப்பவணி நீற்றொளி கனிந்த
புண்டர நுதற்கிடை புனைந்தினிய கற்றோய்
நுண்டுகி லசைத்துமிக நோற்றுடலம் வாட்டு
மொண்டொடிகொ லாமென வொருத்திபுகு கின்றாள்.

(இ-ள்.) பார்த்தோர் ஆச்சரியப்படும்வகையாக அழகிய திருவெண்ணீற் றின் பிரகாசமானது மிகுந்த திரிபுண்டரத்தை நெற்றியிலணிந்து, இனிதாகிய காவிக்கல்லின் சாயந்தோய்ந்த நுட்பமாகிய வஸ்திரமுடுத்து, அதிகமாக விரதங்க

நீண்ட செவ்வரிகளை யுடைய கருங்குவளைமலர் போலும் மைதீட்டிய பரந்த கண்ணையுடைய பாணினியென்று சொல்லும்படி பசிய வளையலை யணிந்த ஒரு யோகினிப்பெண் வந்தாள். எ-று.

மாடகம்=வீணையின் முறுக்காணி. பைந்தொடி-அன்மொழித்தொகை.

வேறு.

உருவ மின்னன கொண்டுடன்
பருவ மொன்று படுக்கவு
மருவு காசியின் வைகினோர்
தரும நீதி தணந்திலார்.

(இ-ள்.) இத்தன்மைத்தாகிய (பலவகைப்பட்ட) வடிவங்களை அதிசீக்கிரத்திற்கொண்டு, ஒரு வருஷகாலம் (தம்மாற்கூடிய விதமெல்லாம் பார்த்து) கழிக்கவும், (தருமம்) பொருந்திய காசி நகரத்தில் வசிப்போர்கள் (இவர்களது மாயைக்குட்பட்டுத் தமது) தருமமார்க்கமாகிய முறையினின்றும் நீங்கினாரில்லை. எ-று.

வடுக்கண் மங்கையோர் பங்கினன்
விடுத்த வேவல வியபபினால
முடித்தி லேமவன முன்னர்யா
மடுப்ப தென்னென வஞ்சினர்.

(இ-ள்.) மாவடுவைப்போன்ற திருநேத்திரங்களையுடைய பார்ப்பதிதேவியாரை ஒருபாகமாகவுடைய சிவபெருமான (நமமைச் செய்துமுடிக்கும்படி) அனுப்பியகட்டளையை ஆசையுடன் (நம்மாற்கூடிய முயற்சிசெய்தும்) முடித்தோமில்லை (ஆனபடியால்) நாம் அப்பெருமானதுதிருமுன்னர் எவ்வாறுசெல்வதென்று கருதிப் பயந்தனர். எ-று. (உ0)

அங்கண் யோகினி யன்னலார்
மங்கை பாகனை வாழ்த்துறு
கங்கை சூழ்தரு காசியிற
றங்கி மிக்க தவஞ்செய்தார.

(இ-ள்.) அவவிடத்தில் அவவாறெண்ணிய நலத்தையுடைய அந்தயோகினி மாதர்கள் விசாலாட்சியம்மையாா சமேதராகிய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமானை வாழ்த்தித்துதித்து, கங்காநதியானது புடைசூழ்ந்து விளங்குங காசிக்ஷேத்திரத்திலேயே வாழ்ந்திருநது மேம்பாடு பொருந்திய தவசெயலகளைப் புரிவாராயினர்.

இனைய ரிங்ஙன மெய்தலு
மனையர் நாம மருந்தவன்
வினவ லோடும் விளங்கவெஞ்
சினவு வேலிறை செப்பினன்.

(இ-ள்.) இத்தகையினராகிய யோகினிமாதர்கள் (திவோதாஸனனது அரசியலையொழிக்கமுடியாமல் தவம்புரிந்து) இவ்வாறு தவச்செய லடைந்தனரெனக் கூறவும், அவ்யோகினிகளின்பெயர்களை அரியதவவியாகிய அகத்தியமுனிவர்கேட்

கவும் அவை நன்றாகத்தெரியும்படி, கொடிய கோபத்தை யுடைய வேலேந்திய ஸ்ரீமுருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௨௨)

இன்னா நாம மியம்புயின்றோ
ரன்ன பூசனை யாற்றினோ
நன்ம காரொடு நாடொறு
மன்னி வாழ்வுற வைகுவார்.

(இ-ள்.) இத்தன்மைப்பட்டோராகிய யோகினிமாதர்களின் பெயர்களைச் சொன்னோரும், (அவர்கள் செய்ததுபோன்ற) அத்தன்மைத்தாகிய பூசையைச் செய்தோரும், நல்லகுழந்தைகளோடு (பலவகைத்தான வாழ்வுகளையும் இடையி லொழியாமல்) எக்காலமும் நிலைத்துப் பொருந்தவாழ்வார்கள். எ-று. (௨௩)

அரச ரித்தவ மாற்றிடிற்
செருவில வெற்றி திறம்பிலா
ருருவ மைந்தரொ டொன்றியே
பொருவில வாழ்வு பொருந்துவார்.

(இ-ள்.) மன்னர்கள் இப்படிப்பட்ட தவத்தைச் செய்தால் யுத்தகளத்தில் எதிர்த்த பகைவரைச் செயித்தலில் தவறமாட்டார்கள்; இராஜலக்ஷணம் அமைந்த உருவையுடைய புத்திரருடன்கூடியிருந்து சமானமில்லாத வாழ்வுகளைப்பொருந்தி ஜீவித்திருப்பார்கள். எ-று. (௨௪)

யோகினிகள் காசியையடைந்த அ-ம்.

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௯௨௧.

நாற்பத்தாறாவது,

## லோலாதித்தன் கதையுரைத்த அத்தியாயம்.

மன்னு தீம்புனல் வளங்கெழு காசியின் வேந்தன்
றன்றொ ழுக்கினைத் தவிர்க்கென விடுத்தயோ கினிக
ளின்னும் வந்தில ரென்கொலென் றிறையுளத் தெண்ணி
மின்னு செங்கதிர்க் கடவுளை நோக்கினன் விளம்பும்.

(இ-ள்.) நிலைத்திருக்கின்ற மதுரமாகிய நீர்வளம் மிகுந்த காசிநகரத்திற் கரசனாகிய திவோதாஸனது நல்லொழுக்கத்தை விலக்கக்கட்வீரென்று கட்டளையிட்டனுப்பியயோகினிப்பெண்கள் இதுவரையிலும் வரவில்லை; அஃதென்ன காரணமோ என்று ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான் திருவுள்ளத்திற் கருதி, பிரகாசிக்கின்ற சிவந்த கிரணங்களையுடைய சூரியனைப்பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றார். ()

அவற்றை ஆட்டுந் தொழிலில் வல்லமையொன்று செய்துவான ; மெய்யோரைப் போலிருந்து துன்புறுவான ; வேற்று சாடவிர்த்து மெய்யாயிருக்கிற தவத்தைச் செய்கின்றவர்களிலுள்ள முனிவர்களைப்போல வருவென்பான எ-று.

பாம்பின் விஷத்தை ஒக்கவொன்றுமில்லாதவன் என்னென்பது முனிவர்களின் குறிப்பிடம். தம்புடைமையிது என்று முன்கூறப்பட்டிருந்தது. (௫)

அருள்சுரந்துயர் தருமநூன் முறைபகர்ந் தறுக்
வருபயன்றனைத் தெருளுறக் காட்டினான் மறையின்
பொருடெரிந்தமெய்ஞ் ஞானியர் புரைதரும பொருவி
லிரதவாதியென் றியாவரும் வெருட்டுவா னெய்தும்.

(இ-ள்.) கிருபையிருந்து உபதேசிக்கிற தருமசாஸ்திரத்தின் கிரமங்களைப் போதித்து அதனாலடைகின்றபிரயோசனத்தை ஞானிக்ஷயமாகும்படி உணர்த்துகின்ற நான்கு வேதங்களின் உண்மைப்பொருளைத் தெரிந்த உண்மைஞானிகளைப் போல வருவான். சமானமில்லாத இரசவாதஞ்செய்வோனென்று கூறி எவர்களையும் மதிமயக்கும்படி அடைவான. எ-று. (௬)

மறைவ டித்துநாத் தழும்புறு முனிவரின் மருவும்
பிறையெ யிற்றிள நிலவுகொப் பளித்திடும் பேழ்வாய்ப்
பொறிய வற்பெரும் பாந்தள்மேற் கிடந்தபார் புரக்கு
மறைக ழற்கொழுங் குருதிவே லரசரி னுறையும்.

(இ-ள்.) வேதப்பொருளை வடித்தெடுத்து நாவானது தழும்பேறிய முனிவர்களைப்போலவிருப்பான் ; பிறைச்சந்திரனைபோன்ற கோரைப்பற்களால் இளஞ்சந்திரிகைவீசும் பிளவுபட்ட வாயையுடைய நெருப்புப்பொறிகளைக்கக்கும் பெரிய சர்ப்பமாகிய ஆதிசேடன்பேரில் விளங்கும் உலகத்தைக் காக்கின்ற சத்திக்கும் வீரக்கழலணிந்த கொழுமைதங்கிய உதிரந்தோய்ந்த வேலேந்திய மன்னர்போல வசிப்பான். எ-று. (௭)

அரும்பெ றற்குல வணிகரி னுவந்தினி தமரும்
விரும்பு வேட்கையின் மண்மகள் புதல்வரின் மேவுந்
திருந்து நான்மறை பயின்மறைச் சிறுவரிற் சேரும்
பொருந்து மில்லறந் திறம்பிலா மாந்தர்போன் றிருக்கும்.

(இ-ள்.) பெறுதற்கரிதாகிய சிரேஷ்டமான வைசியரை யொப்ப இனிதாகக் களித்திருப்பான் ; விரும்பத்தக்க ஆசையுடன் பூமிதேவியின் புதல்வராகிய வேளாளரை நிகராய்ப்பொருந்துவான் ; திருந்திய நான்குவேதங்களையும் அத்தியயனஞ்செய்து அப்பியாசிக்கின்ற வேதியச்சிறுவர்போன்று வருவான் ; புண்ணியம்பொருந்திய கிரகஸ்தாச்சிரமதருமந் தவறாத மனிதரை நிகராகவிளங்குவான.

பைங்க திர்க்கொடி படர்நெடுஞ் சாரல்சூழ் கானிற்
றங்கி நற்றவம் புரிகுநர் போன்மெனச் சாரும்
பொங்கி ருட்பிழம் பெறிசுடர் விரிபகற் போதுங்
கங்கு லுந்திரிக் தாற்றுநற் றவருருக் காட்டும.

(இ-ள்.) பசுமையாகிய மிளகுக்கொடிகள் படர்ந்த நெடிய மலைச்சாரல் சூழ்ந்துள்ள வனத்தில் வசித்து நல்ல தவங்களைச் செய்வார்போல வருவான்; மிகுந்த இருட்டொகுதியை விலக்குகின்ற சூரியகிரணங்கள் பரவும் பகற்பொழுதிலும் இராக்காலத்திலும் உழன்று செய்யும் நல்ல தவசிகளது வடிவம்போல (தன்னைக் காணப்போர்க்கு மாயையால) உருவுகாட்டுவான். எ-று. (கூ)

வேண்டு நலவுரு வின்னன வெய்யவ னெடுத்துச்
சேணடோ டுங்கொடிப் புரிசைசூழ் காசியிற் றிரிந்து
மாண்டு மூன்றள வறநெறி திறம்புதல் சிறிதுங்
காணடல செய்கில னுதவிற் கருதின னிருந்தான்.

(இ-ள்) விரும்பிய இத்தன்மைத்தான நல்ல வடிவங்களை (தனது வலிமையால்) எடுத்து, ஆகாயமளாவிய துவசங்கள் கட்டிய மதிலாற்சூழ்ந்த காசிநகரத்தில் மூன்றுவருஷகாலந்திரிந்தும், (திவோதாஸன) கொஞ்சமும் தருமமார்க்கத்தினின்று தவறுதல காணாததலால் (இனி என்னசெயவதென்று) ஆலோசித்துக்கொண்டிருந்தான் சூரியன். எ-று. (க0)

மூவி லைச்சுடர் முரட்படை யேந்திய முதல்வ
னேவல மற்றது முடித்திலன் காசிவிட் டினியான
போவ தெங்ஙனம புரிசடை வானவன் முனியின்
வேவ தல்லதை யாவரோ காக்குநர் விளம்பின்.

(இ-ள்.) மூன்று சிரங்களை யுடைய பிரகாசிக்கின்ற வலியமைந்த சூலாயுதத்தைத் தாங்கிய முதல்வராகிய சிவபெருமான் கட்டளையிட்ட அத்தொழிலைச் செய்துமுடித்தேனில்லை ; ஆனதால் இனி எவ்வாறு காசிநகரத்தைவிட்டு வருவது. புரிந்த சடையையுடை ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான் கோபித்தால் சாம்பலாவதல்லாமல் சொல்லுமிடத்திற் காப்போர் யாவர் ? (யாருமில்லை). எ று. (கக)

ஒருவ னேவலிற் றிரிகுநாக் கரும்புக ழுறுதாற்
றிருகு சீற்றவெம் புலியத ளாடையஞ் செல்வ
னருள்பெ றுக்கொடும பாவமிக் காசியி னமரின்
வெருவி யேகுமென் றிருந்தனன் கனைகதிர் வேந்தன்.

(இ-ள்.) ஒருவனது கட்டளையை மேற்கொண்டுழல்வார்க்குக் கிடைத்தற்கரிய கீர்த்திவராது? மிகுந்த கோபத்தையுடைய கொடிய புலித்தோலாடையணிந்த அழகிய ஸ்ரீ அகிலேசப்பெருமானது திருவருளையடையாத மிக்க பாவம் இந்தக் காசிநகரத்திற் பொருந்தியிருந்தால் பயந்து நம்மைவிட் டோடுமென்று கருதி அவ்விடத்திலேயே வசித்திருந்தான், மிகுந்த கிரணங்களையுடைய சூரியன்.

சேட்டி ளங்கதி ரிருள்படச் செங்கதிர் பரப்பு
மோட்டு நன்மணி முன்னுற விடுத்தறச் சிதைந்த
வோட்டை யங்கையிற் கோடலே போலுமொண் முத்தி
வேட்டு ளோருயர் காசிவிட் டயலிடம் விரும்பல்.

(இ-ள்.) தொண்டை கனத்துள்ள பசிய காய்களமைந்த குலையையும் விரிந்த தலையையுமுடைய கமுகமரங்களின் மடலுடைந்து தொங்கும்படி வாளை மீன்கள் பாய்கின்ற காசிக்ஷேத்திரத்தின் வடதிசையிலே, தெய்வீகம்பொருந்திய நல்ல நவமணிகளைத் தெளித்துவைத்தாற்போன்ற அழகிய தடாகக்கரையைச் சேர்ந்த உத்தராதித்தனது நல்ல சரித்திரத்தைச் சொல்லுவோம். எ-று.

இத்தடாகம் மணிகனனிகை எனக்கொள்க. (௧)

உலகெ லாமகிழ் விரதனென் றுளனொரு மறையோன்
கலவ மாமயி லிகாசுப விரதையைக் கலந்து
நிலவு மூலத்தி னுள்முதற் காறனி லிகரி
விலகு பேரெழிற் சுலக்கணை தனையினி தீன்றான்.

(இ-ள்.) பூமியிலுள்ளோரெல்லாம் விரும்பத்தக்க விரதனென்னும் பெயர்கொண்ட ஒரு வேதியனுண்டு. அவன் கலாபத்தையுடைய சிறந்த மயில்போலுஞ் சாயல்பொருந்திய சுபவிரதை யென்பவளை மணந்து, விளங்குகின்ற மூலநட்சத்திரத்தின் முதற்பாகத்தில் சமானமில்லாத பேரழகு வாய்ந்த சுலக்ஷணையென்னும் பெண்குழந்தையை இனிதாகப்பெற்றான். எ-று. (௨)

குங்கு மச்செழுங் கனிமெழுக் கெறிந்தமென் கோங்கிற
றங்கு பூண்முலை பிறையென வளருநா டன்னில
வெங்கொ டும்பிணி நலிதலிற் றந்தைவிண் புகுத
வங்க வன்றிரு மனைவியு மழலின்வீழ்ந் தவிந்தாள்.

(இ-ள்.) செழுமைமிகுந்த குங்குமக்குழம்பு பூசிய மெல்லிய கோங்கரும்புபோல் விளங்குகின்ற ஆபரணமணிந்த முலைகளையுடைய சுலக்ஷணை, பூர்வபட்சத்துச் சந்திரனைப்போல வளருங்காலத்தில், மிகக்கொடிய வியாதியானது துன்புறுத்தலால் தந்தையாகிய விரதன் மரிக்க, (அதுபற்றி) அவன் மனைவியாகிய சுபவிரதையும் அக்கினிப்பிரவேசமாய் உயிர் விட்டாள். எ-று. (௩)

மழலை மென்மொழி மைந்தரின் மையின்மற் றோர்க்கு
விழும நற்கடன் யாவையும் விதிமுறை யாற்றித்
தழுவு தற்கடங் காதுபார் தடமுலைக் கோதை
பொழுகொ ளிக்கதி ருத்தரா தபனுழை யெய்தி.

(இ-ள்.) ஒலிதிரபாத மெல்லிய சொல்லையுடைய புத்திரரில்லாமையால், தழுவுவதற்கடங்காமல் பூரித்துப்பரந்த முலைகளையுடைய சுலக்ஷணை இறந்த தாய்தந்தையர்கட்குச்செய்யவேண்டிய சிறப்பமைந்த நல்ல (அந்தியேஷ்டி முதலிய) கருமக்கடன்களையெல்லாம், நூல்களிற்கூறிய கிரமப்படிசெய்து, ஒளிவீசுங் கிரணங்களையுடைய உத்தராதித்தனுள்ளவிடத்திற்போய். எ-று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (௪)

அலங்கு தெண்டிரை யாமையின் கூன்புறத் தமர்ந்த
நிலங்க ளேழினு நிகரில்சீ ரருந்தவ மாற்றுங்

கலனசு யந்தபூங் கற்பகக் கொம்பரு டன்னை
வலஞ்செ யுந்தவம் பார்க்குமோர் தகரிள மறியே.

(இ-ள்.) அசைகின்ற தென்றல் வீசுஞ் சோலைகள் பொருந்திய கடலாற்சூழ்ந்த, அவனியின்கண் உயர்வாகிய முதன்மையுற்றிருக்கும் சத்தசோமங்களினும் சமானமில்லாத சிறப்புற்ற அரிய தவத்தைச்செய்கின்ற ஆபரணமணிந்த பொன்மேனியாகிய கூடிய கற்பகக்கொம்புபோலவாகிய சலக்ஷணையை நினைப்புடனுள்ள ஒரு செம்மறியாட்டுக்கடாவானதும் பிரதக்ஷணஞ்செய்யும்; பார்க்குக. எ-று. (ரு)

கற்றை யங்குளிர் வெண்ணிலாக் கதிர்பரந் தெறிக்கு
மொற்றை யங்குழை யண்ணலு முமையொடே போந்து
பொற்ற சும்பறழ் முலையினாள் விழைவொடும் புரியு
நற்ற வத்தினை நோக்கின னலமென வியந்தான்.

(இ-ள்.) குளிர்ச்சிவாய்ந்த வெண்மை தங்கிய சந்திரிகையாகிய கிரணத் தொகுதியை வீசி விளங்கும் அழகிய ஒற்றைக்குண்டலமணிந்த சிவபெருமான் பார்வதி தேவியாருடன் எழுந்தருளிவந்து, பொற்குடம் போன்ற தனங்களையுடைய சலக்கணை ஆசையுடனே செய்கின்ற உத்தமத தவத்தைப் பார்த்து நல்ல தென்று களிப்புற்றனர். எ-று. (சு)

அலங்கு பேரொளி யிளவெயில் வயிறுவாய்த் தன்ன
கலங்கி டந்தொளிர் கதிரிள வனமுலைக் கவுரி
துலங்கு பேரெழிற் கன்னியைத் தோழியா யெனக்கின்
றிலங்கு சாமரை யிரட்டுவா னருகென விசைத்தாள்.

(இ-ள்.) ததும்புகின்ற பெரிய ஒளியானது இளம்பிரகாசத்தைச் சூழ்கொண்டிருப்பதுபோல, ஆபரணங்கள் விளங்கிப்பிரகாசிக்கின்ற கிரணங்களையுடைய அழகிய இளமுலைகளமைந்த உமாதேவியார், பேரழகு விளங்கும் சலக்ஷணையென்னுங் கன்னியை எனக்குத் தோழியாக்கிப் பிரகாசிக்கின்ற சாமரையிரட்டும்படி இப்போது தரல்வேண்டுமென்று பெருமானைப்பார்த்துச் சொல்லினர். எ-று.

பேரொளி முலையாகவும் இளவெயில் கலங்களாகவும் உவமிக்கப்பட்டன. இது தனங்களினொளிமிகுதிபற்றி ஆங்கணிந்திருக்கும் ஆபரணங்கள் சிறிது பிரகாசித்தலாலெனக் கொள்க. (எ)

புரியு நற்றவ மொழிதிநீ புகன்றநல் வரங்கள்
விரைவி னல்குவ னெனவிடைப் பாகனுண் டுரைப்பத்
தருதி நல்வர மென்னிலித் தகரிள மறிக்கு
மரிய யற்கரி யாய்வரந் தருகென வுரைத்தாள்.

(இ-ள்.) சலக்ஷணையே! நீ செய்கின்ற நல்ல தவத்தை நிறுத்தக்கடவாய்! கேட்கின்ற நல்ல வரங்களைச் சீக்கிரமாக அனுக்கிரகிப்பேனென்று இடபாரூடராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளவும், பிரமவிஷ்ணுக்களுக் கறிதற்கருமையான பெருமானே! நல்ல வரத்தைக்கொடுப்பாயாகில் இந்தச் செம்மறியாட்டுக் கடாவுக்கும் வரங்கொடுக்க வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனள். எ-று.

மாசில் பூண்முலைக் கவுரிதன் றோழியாய் வருகென்
றூசில் நற்றவப் பூங்கொடிக் கவ்வர மளித்துக்
காசி மன்னவன் புதலவியாய்க் கயிலையில வருகென்
றீச னம்மறிக் கெய்துறா நலவர மீந்தான்.

(இ-ள்.) களங்கமில்லாத ஆபரணங்களையணிந்த தனங்களையுடைய பார்வதியினது தோழியாய் வரக்கடவாய்என்று குற்றமில்லாத நல்ல தவத்தைச்செய்த பூங்கொடிபோன்ற சுலக்ஷணைக்கு அந்த வரத்தைக்கொடுத்து, காசிராஜன் புத்திரியாகித்திருக்கயிலாயகிரிக்கு வரக்கடவாய்என்று அவவாட்டுக்கு அடையக்கூடாத நல்லவரத்தை யருளினர் சிவபெருமான். எ-று. (கூ)

இனைய நல்வர மளித்துமா லயன்றொழு தேத்துங்
கனைபொ லங்கழற் கடவுளுங் கயிலையி னகன்றான்
வினைபொ ழிக்குமிக் காதையை விழைவொடுங் கேட்டோர்
துனைவில் யாவரும பெறலருந் துறக்கவீ டடைவார்.

(இ-ள்.) இத்தகைமைத்தான நல்ல வரங்களை (சுலக்ஷணைக்கும் அவவாட்டுக்கும்) கொடுத்து, திருமாலும் பிரமனும் வணங்கித் துதிக்கும் சத்திக்கின்ற பொன்னுலாகிய வீரக்கழலணிந்த சிவபெருமானும் திருக்கயிலாயமலைக்குச் சென்றனர். தீவினையை விலக்கத் தக்க இச்சரிதத்தை ஆசையுடனேகேட்டவர்கள் யாவரும் பெறுதற்கரிய மோக்ஷவீட்டை விரைவிற் பெறுவார்கள். எ-று. (௰)

உத்தராதித்தன் கதையுரைத்த அ-ம்.
முற்றிற்று.

அ_ திருவிருத்தம் கஉசகூ.

நாற்பத்தெட்டாவது.

## சாம்பாதித்தன் கதையுரைத்த அத்தியாயம்.

மண்மகடன் பொறையாற்றித் திரைக்கடலி னறிதுயில்கூர் நெடிய மாயன்
கண்ணனென முழுதுலகுந் தேவகிதன் வயிறுதித்துக் காக்கு நாளி
லண்ணலங்தா மரைத்தவிசி னரசிருக்கு மறைக்கிழவ னருளி னீன்ற
பண்ணமையாழிசைபயிலுமுனிவனுயர் துவாரகையிற்பரிவிற்போந்தான்.

(இ-ள்.) பூமிதேவியின் பாரத்தை விலக்கி, அலைகள் பொருந்திய க்ஷீராப்தியிலே யோகநித்திரைசெய்கின்ற நெடிய திருமாலானவர், தேவகியின் வயிற்றிலே கிருஷ்ணவதாரமாகப்பிறந்து உலகமுழுவதையுங் காத்துவருங்காலத்தில், சிறப்பமைந்த அழகிய கமலாசனத்திற் கொலுவீற்றிருக்கும் வேதங்களுக்குரிய பிரமதேவன் ஆணையோடு பெற்ற பண்ணோசைபொருந்திய யாழ்வாசித்தலில் தேர்ந்த நாரதமுனிவர் மேன்மைதங்கிய துவாரகாபுரிக்கு அன்போடு வந்தனர். எ-று.

திருமால் திதிக்கடவுளாதலின், உலகிலுள்ள தீயோரைச்செகுத்துப் பூமி தேவியின் சுமையைக்குறைத்தலால் "மண்மகடன் பொறையாற்றி" எனவும், அவர் நித்திரை செய்யுமிடம பாற்கடலாதலின் "திரைக்கடலின்" எனவும், அத்தகைய நித்திரையும் ஏனையோர்போலத் தம்மை மறந்தன ருதலானும், உலகியாயங்களை யுணர்திறமுடைய தாதலானும் "அறிதுயிலகூர்" எனவும், பண்டைக் காலத்திற் பேருருவெடுத்தோனென்பது தோன்ற "நெடிய" எனவும் 'மாற்றரிதா யெவ்வுயிர்க்கு மயக்கஞ் செய்யு மாயைநினைக் களித்தனமெம் மிடப்பா னியே' என்னும் இந்நூலபிப்பிராயத்தின்படி யாவரையும் மாயைசெயய வல்லவராதலின "மாயன்" எனவும், கிருஷ்ணவதாரம் வசுதேவன் மனைவியாகிய தேவகியயிற்றிற் பிறந்து ஆயர்பாடியில் நந்தகோபன மனைவி அசோதையால் வளாக்கப்படுதலின் "கண்ணனெனத் தேவகிதன் வயிற்றுதித்து" எனவும், பிரலம்பன் கஞ்சன் முதலிய தீயோரையும் துரியோதனுதியரையும் கொன்று உலகுக்கு நன்மையுண்டு செய்தலின் "முழுதுலகுங் காக்குநாளில்" எனவும், பிரமதேவனெழுந்தருளியுள்ள தாமரைமலர் பூமியிலுள்ள மலர்போலாது ஆயிரமிதழ்களுடனே பொன்னிறமுற்று அழகும் பெருமையும் வாய்ந்திருத்தலின் "அண்ணலந் தாமரைத் தவிசின்" எனவும், ஆண்டிருந்து தமது படைப்புத்தொழிலை யியற்றுதலின் "அரசிருக்கும்" எனவும், நான்கு வேதங்களையும் நான்குவாயாலும் கூறினவனுதலின் "மறைக்கிழவன்" என்றும், நாரதமுனிவர் பிரமாவின் மானதத்தோற்றமுடைமையின் "அருளின்ற" எனவும், அம்முனிவர் பண்பொருந்திய மகதிவீணையிற்றேர்ந்தோராதலின் "பண்ணமையா ழிசைபயிலு முனிவன்" எனவும், துவாரகாபுரி முத்தி நகரங்களுளொன்றும் கிருஷ்ணமூர்த்தி வீற்றிருப்பது மாதலின் "உயர்துவாரகை" எனவும், நாரதர் அங்கே அவரைக்காண அன்போடு வந்தோராதலின் "பரிவிற் போந்தான்" எனவுங் கூறினர். எ-று. (க)

இருள்பருகி வெயில்கான்ற கடவுண்மணி கிடைந்திமைக்கு மிலங்கு திண்டோட், டிருமறுமார் பினன்புதல்வர் யாவருமம் முனிவனடி சென்னி சேர்ப்ப, வுருவின்மிக வேமாந்து சாம்பன்முனி வனைப்பணியா துறைதலோடும், புரிநரம்பி னிசைபயிலு முனிவன்மணி வண்ணனுழைப் போயினனே.

(இ-ள்.) இருளைக்குடித்து ஒளி வீசுகின்ற தெய்வீகம் பொருந்திய கவுத்துவமணியிருந்து பிரகாசித்து விளங்கும் வலியமைந்த திருப்புயங்களையுடைய கிருஷ்ணபகவானது மைந்தர்களெல்லாரும் அங்கு வந்த நாரதமுனிவனது பாதங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கவும், உருவத்தால் மிகவுமுயர்ந்த சாம்பன் அவரைவணங்காமலிருக்கவும், முறுக்கமைந்த நரம்புகள் பூட்டிய வீணைகானஞ்செய்யும் நாரதர் நீலமணிபோன்ற திருவுருவுடைய கண்ணபிரானிடஞ்சென்றனர்.

திருமறுமார்பினன் - ஸ்ரீவச்சம் என்னும் மறுவையுடைய மார்பர். (உ)

போந்தமுனி வரனுவப்ப வருக்கியபாத் தியமுதல பூசை நல்கி
யேந்தெழிலா சனமளிப்ப வாங்கதனின் மலரோனி லினிது வைகிக்
காந்துமணிச் சூட்டரவின் கண்பிதுங்க நடம்பயிலுங் கண்ண னேடுண்
மாய்ந்தசெழு மறைக்கிழவன் வேறிருந்தாங் கொருமாற்ற மறைத லுற்று

(இ-ள்.) (கிருஷ்ணமூர்த்தி) தன் பால்வந்த நாரதமுனிவர் களிக்கும்படி அருக்கியம்-பாத்தியம்-முதலாகச்சொல்லும் பூசைகளைச்செய்து உயர்வாகிய அழகிய பீடங்கொடுக்க, அதன்பேரில் பிரமதேவனைப்போல இனிதாக வீற்றிருந்து, பிரகாசிக்கின்ற மாணிக்கம் பொருந்தியஉச்சிக்கொண்டையையுடைய காளிங்கனென்னும் பாம்பின்கண் பிதுங்கும்படி நடனஞ்செய்தகிருஷ்ணமூர்த்தியினிடத்தில், செழுமையாகிய வேதங்களை யாராய்ந்த நாரதமுனிவர் அந்தரங்கமாக விருந்து ஒருவார்த்தைசொல்லத் தொடங்கினர். எ-று.

அரவின் கண்பிதுங்க நடம்பயிலுங் கண்ணனென்பது.

யமுனாநதிக்கரையிற்செல்லும் ஆயர்கள் பசுக்கூட்டங்களுடனே அங்கிருக்கும் விஷநீரைச் சுத்தசலமென்றுகருதிப் பானஞ்செய் திறந்தது கண்ட கிருஷ்ணமூர்த்தி தமது கிருபாநோக்கத்தால் அவர்களை விஷவேகந் தீர்த்தெழுப்பி அவர்கள் செய்த துதியைக்கொண்டு, அவ்விஷநீரிற்சென்று காளிங்கன்மீதுகாலூன்றி அவன் உடல் நடுங்கித் துன்புறும் வகையாக நடித்தார். அதனால் அக்காளிங்கன் மரணமடைவானென்பதையறிந்த அவன் மனைவியிருவரும் தமக்கு மாங்கல்யபிட்சையனுக்கிரகிக்கும்படி பிரார்த்திக்க அவர்கட்கிரங்கி கிருஷ்ணமூர்த்தி "காளிக! நீயுன்னுயிர் பிழைக்கவேண்டில் சமுத்திரத்திற்போய்ப்பிழைத்திரு" வென்று கூறி விடுத்தனர் என்பதாம் இதனை.

கூர்மபுராணம்-கண்ணனவதரித்த வத்தியாயம்.

"கண்ணனமுதம்பொழிகடைக்கணருளேக்கா
லுண்ணுமறலுற்றவிடம்யாவையுமொழிப்பத்
துண்ணெனவெழுந்திடையருந்தொறுவுநிற்ப
விண்ணவர்களண்ணலைவியந்தனர்துதித்தார்."

"விடமொழுகுமென்படகெருடுதனிமேவிக்
கடுவுடையெயிற்றினொடுகாளிகன்விரித்த
படமுழுதுமெல்லடிபதித்துமுகில்வண்ண
னடநவிலமெய்ந்நனிநடுங்கியயர்வுற்றான்."

"காளிகன்விழைந்துபுணர்கன்னியரவங்கள்
மீளிமையுடைக்குரிசில்மென்கமலமானுந்
தாளிணைவழுத்தவருடங்கியுயிருய்வா
னீள்கடலினேகெனவிடுத்துநிைகாத்தான்," என்பதனுணர்க. (ந)

தந்தையா யினும்விழைவிற் றன்னுடனே யொருவயிற்றிற் சார்ந்தாரேனு,மைந்தரா யினுமிகவும் வனப்புடைய ரெனிலவர்மேல் மடநல்லார்தஞ்,சிந்தைநடந் திடுமதனாற் சாம்பன்மலர்க் கணைவேளிற் செவ்வி வாய்ந்தோன், பைந்தொடியா ரினிதமரு முவனகத்திற் றனிவருதல் பான்மையன்றே.

(இ-ள்) பிதாவாயிருப்பினும் ஆசையோடு தன்னுடனே யொருதாய் வயிற்றிலே பிறந்த சகோதரர்களாயிருப்பினும், புத்திரர்களாயிருப்பினும் (ஆடவர்) அதிகமாகிய அழகுடையவர்களாயிருப்பார்களானால், இளமை தங்கிய மாதர்களது

மனம் அவர்கள்மேற் செல்லும் ஆனபடியால் (கிருஷ்ணபகவானே! நின்புதல்வனாகிய) சாம்பன் புஷ்பபாணங்களையுடைய மன்மதன்போலும் அழகமைந்தோனாதலின், பசிய வளையலணிந்த மாதர்கள் இனிதாகவசிக்கும் உப்பரிகையில் தனித்து வருவது தகுதியுடையதல்ல. எ று.

இச்செய்யுளின் கருத்தை-நீதிநெறி விளக்கம்.

"ஏந்தெழில் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையா கண்கவர் நோக்கத்தான—வாய்ந்த
நயமுடைய வின்சொல்லான கேளெனினு மாந்தாக்
கயலார்மே லாகு மனம்."—என்னுந் திருவாக்கா னுணர்க. (ச)

என்றுமொழிந் தனனேகிச் சின்னாளின் மீட்டுமவ ணெய்தி மாயக்.
கன்றுகொடு கனியெறிந்த காயாம்பூ மலர்வண்ணன கமல வாழ்க்கைப்,
பொன்றவழு முலைமாதர் பலரோடுந் தனித்துறையும்போது நோக்கிச்,
சென்றெமவ ருரைத்தியெனச் சாம்பனொடுமே யாழ்முனிவன் செபபினானே.

(இ ள்.) என்றிவ்வாறு நாரதமுனிவர் கூறிச்சென்று சிறிது காலங்கழித்துத் திரும்பவுமவ்விடம்வந்து, மாயமாகிய கன்றுக்குட்டியைக்கொண்டு விளவின் காயையெறிந்த காயாம்பூவண்ணராகிய கிருஷ்ணபகவான், தாமரைப்பூவில் வசிக்குந்திருமகள்போன்ற தேமல் படர்ந்த தனங்களையுடைய பலமாதர்களோடு, ஏகாந்தமாயிருக்குஞ் சமயம் பார்த்து, மகதிவீணையேந்திய நாரதமுனிவர் எமது வருகையைக் கிருஷ்ணமூர்த்தியிடம்போய்ச் சொல்லவேண்டுமென்று சாம்பனுடன் சொல்லினர். எ-று.

கண்ணன் கன்றுகொடு கனியெறிந்ததாவது

கம்சனால் நகரத்திலேயுண்டாகிய பல தொந்தரைகண்ட நந்தகோன், மைந்தரையும் அசோதையையும் அழைத்துக்கொண்டு பிருந்தாவனத்திலிருந்தனன். அப்போது கண்ணன் தன் அண்ணனாகிய பலராமனுடன் பசுமந்தைகளை மேய்த்துக்கொண்டிருக்குங்கால், அசுரனொருவன் இளங்கன்று வடிவாயிருக்கக்கண்டு அவனையெடுத்து அங்கிருந்த விளாமரத்தின்மேலெறிந்து விளாம்பழத்துடன் பூமியின் வீழ்ந்திறக்கச் செய்தனனென்பது. இதனை,

கூர்மபுராணம் - கண்ணனவதரித்த வத்தியாயம்.

"குறுந்தாம் பிணைத்த குழக்கன்றி னுருவா யசுரன கொடுங்காளிற்
செறிந்தான் றெனு மணிவண்ணன் செங்கட் கமல மலர்பரப்பி
யறிந்தோ ரிமைப்பி னிளங்கன்று குணிலாய் விளவின் கனியதனி
வெறிந்தான் விளவின் கனியோடும் வீழ்ந்தா னுவி யிழந்தானே." என்பதனுலுணர்க. (ரு)

சேறலரு மமையத்திற் சென்றிடினம் மிறைமுனியுஞ் சென்றி வேமேற், கூறலரும் வெகுளியொடுங் குலமனைத்தும் வைதுமுனி கொல்லுமென்னப், பாறுதொடர் கெட்டிலைவேற் சாம்பன்மணி வண்ணனுறை பன்

ளி முன்ன, ராறுவிலகி னளவையெனச் சேறலும் முனிவனுமாண் ட
டைந்தா னன்றே.

(இ-ள்.) பருந்துகள் பின்றொடர்ந்து வரும் நீண்ட அச்சவடிவாகிய வேலே
ந்திய சாம்பன, போகக்கூடாத சமயத்தில் உள்ளேபோனால் நமது பிதாகோபிப்
பார! போகாதிருப்போமாயின சொல்லுதற்கரிதாகிய சினங்கொண்டு நமது குலமு
முவதையுஞ் சபிததுமுனிவர் கொல்லுவார் என்றெண்ணிக்கொண்டு, கிருஷ்ண
பகவான் வீற்றிருக்கும் திருப்பள்ளியறைக்குச் சமீபத்தில் ஆறுகோல் தூரத்திற்
செல்லுகையில் அந்த நாரதமுனிவரும் அவனோடே யவவிடஞ் சென்றார். எ-று.

வேற்படையில் பகைவர் பிணந்தோய்ந் திருத்தலாலும், அதுமேலும் சத்
துருக்களைச் சங்கரிக்குமாதலாலும் பருந்துகள் பின்றொடர்தலின் "பாறுதொ
டர் கெட்டிலைவேல்" என்றார். (சு)

பாண்கிடந்து தேன்பிலிற்று மகதியாழ் முனிவரவு பார்த்த லோடு
நாணசுமக்க லாகாது வளைநதெனெ முகங்கோட்டி நகைவெண் டிங்கட்
பூணகிடந்த முலைமீதிற் போரவையசைத் தலரமளிப் புறத்தி னீங்கிச்
சேணபடரு நுழைமின்னின மடகலவார பொற்றூணஞ் சோர்துநின்றார்.

(இ-ள்.) பணணோசைவிளங்கித் தேன்றுளி சிந்தும் மகதிவீணையை யே
ந்திய நாரதமுனிவரது வருகையைப்பார்க்கவும், வெட்கத்தைச்சகியாமல் வளைந்தா
ற்போல முகம்வளைத்து,பிரகாசிக்கின்ற வெண்மைவாய்ந்த சந்திரனபோன்ற ஆப
ரணங்கள் விளங்கும் தனபாரஙகளின்மேல் உத்தரியம் போர்த்து, மலர்ச்சயன
த்தினின் றுவிலகி, ஆகாயத்திற் சஞ்சரிக்கும் நுண்ணிய மின்னல்போலும் ஒளிவா
ய்ந்த இளமைதங்கிய அம்மாதர்கள் அழகிய தூணைச்சேர்நது நின்றார்கள். எ-று.

தேன்பிலிற்று மகதியாழ் என்பதை அணிந்திருக்கும் மலாமாலையினின்று
தேன்றுளிக்கும் மகதியாழ்என்றாவது, தேன்போலுஞ் சுவையையுடைய இனிய
வோசையைத்தரும் மகதியாழ் என்றாவது பொருள்கொள்க. (எ)

அண்டமுகட் டரசிருக்கு மயனொடுபார் திருவுந்தி யலர்ந்த மாயன்,
பண்டருந்தீந் தொடைமகதி யாழ்முனிவ வருகவெனப் பரிந்து வெண்
ணெ, யுண்டகனி வாய்மலர வினிதளித்த வாசனத்தி லுறைத லோடும்,
வண்டுபடு கடாயானைச் சாம்பனுந்தன் றாதையடி வழுத்திப் போனான்.

(இ-ள்.) அண்டகடாகத் துச்சியிற் கொலுவீற்றிருக்கும் பிரமதேவனுடன்
உலகத்தைத் திருவுந்திக்கமலம் பூத்தளித்த திருமாலாகிய கிருஷ்ணபகவான், பண்
ணோசைதரும் மணமமைந்தமலர்மாலைசூடிய மகதிவீணை தாங்கிய நாரதமுனிவரே!
வருகவென்று (ஆயர்பாடியிலே) வெண்ணெயை வாரிப்புசித்த கொவ்வைக்கனி
போன்றவாயால் ஆசையுடன் சொல்லவும், இனிதாகக்கொடுத்த ஆசனத்தில் (நா
ரதமுனிவன்) இருக்கவும், வண்டுகள் மொய்க்கும் மதப்பெருக்கமைந்த யானையை
யுடைய சாம்பன் தனது பிதாவின் பாதங்களை வணங்கிச் சென்றனன். எ-று.

எழிலுடையோர் முகநோக்கி னழன்முகத்தி னிழுதென்ன மாதருள்
ளம், குழைபுமென யானைத்தல் குறிக்கொண்டா யிலைபோலுங் குவ

வுத் திண்டோள், மழவிடையி னீங்கடைந்த சாம்பனைக்காண் டலுமினை ய மடவார் நெஞ்சின், விழைவுகனிந் தொழுகியபோல வேர்வொழுகல் காணடியென விளம்பிப்போனான்.

(இ-ள்) அழகமைந்த ஆடவர் முகத்தைப்பார்த்தால் உலைக்களத்திற் சொரிந்த மெய்யைப்போல மங்கையர் மனமுருகுமென யான் முன்னர் கூறியதை ஆலோசிக்க வில்லைபோற் காணப்படுகின்றது. உருட்சியாகிய வலியமைந்த தோளையுடைய மழவிடைபோ லிங்குவந்த சாம்பனைப்பார்க்கவும், இம்மாதர்கள் தங்களது மனதிலுள்ள ஆசையானது பெருக்கெடுத் தொழுகியதுபோல அவர்களுடலில் வெயர்வுநீர் சொரிதலைப்பார்ப்பாயாக கிருஷ்ணமூர்த்தியே! என்று நாரத முனிவர் கூறிச்சென்றனர். எ-று. (௯)

மட்டலவு பசுந்துளவோன் றனித்துறையு மமைதிதனில் வந்த வாற் றாற், குட்டநோய்க் கடலகத்துக் குளித்தியெனச் சாம்பனுடன் கூற வன் னோ, னிட்டதழற் கொடுஞ்சாப மகன்றிடுமா றினிதருள்வுற் றிடுதி யென் ன, விட்டொளிர்பொற் கனைகழற்றாள் பணிதலுந்தன் னுளத்திதனை விரை வி னோர்ந்தான்.

(இ-ள்.) மணங்கமழும் பசிய துளவமாலையணிந்த கிருஷ்ணபகவான் ஏகாந்தமாயிருக்குஞ் சமயத்தில் வந்த காரணத்தினால், குட்டநோயாகிய துன்பக்கடலில் மூழ்கக்கடவாய் என்று சாம்பனோடு நாரதமுனிவர் சொல்ல, அச்சாம்பன் தனக்கு முனிவர் தந்த தீப்போலுங் கொடியசாபம் நீங்கும் விதம் இனிதாகக் கிருபைகூர வேண்டுமென்று, பிரகாசிக்கத்தக்க பொன்னாலாகிய சத்திக்கின்ற வீரக்கழலணிந்த கிருஷ்ணபகவானது பாதங்களைத்தொழவும், கிருஷ்ணமூர்த்தி தனது திருவுளத்திற் பின்வருமாறு விரைவில் உணர்ந்தனர். எ-று. (௧௦)

இழைத்திடுதீங் கனைத்துமிசை யாழ்முனிவன் புணர்ப்பென்ன வுள த்தி னெண்ணிக், கழைக்கரும்பு கணுவுடைக்குந் தேறலவழிந் தொழுகு வயற் காசி நண்ணித், தொழத்தகுசெங் கதிரோனை வழிபடினிந் நோய னைத்துந் தொலையு மென்று, தழைத்தகரு ணையினுரைப்ப வாங்கவனு மு த்திநகர் சென்று சார்ந்தான்.

(இ-ள்.) உண்டாகிய கொடுமைகளெல்லாம் நாரதமுனிவரது தந்திரமென்று (கிருஷ்ணபகவான்) தனது மனதிலறிந்து, கருப்பங்கோல்கள் கணுக்களினுடைக்குந்தேனானது வழிந்தோடுகின்ற வயல்களையுடைய காசியையடைந்து, வணங்கத்தக்க சிவந்த கிரணங்களையுடைய சூரியனை வழிபட்டால் இந்நோயெல்லாம் விலகுமென்று மிகுந்த கிருபையோடு கூற, அவ்வாறே அந்தச்சாம்பனும் முத்தி பயக்கவல்ல நகரமாகிய காசிக்ஷேத்திரத்தைப் போய்ச்சேர்ந்தான். எ-று.

கழைக்கரும்பு - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (௧௧)

மருவலா ருயிர்மாந்திப் பச்சிரத்தங் கொப்பளிக்கும் வைவேற்காளை, யிருள்விழுங்கி வெயிலுமிழு மிரவிபத மலர்க்கமல மிறைஞ்ச லோடும், பெருகியநோ யகன்றதவன் வழிபட்டவ வன்றுமுதல் பிறங்கும் வெய்

போற, கருள்புரியுங் கனைகதிர்ச்சாம் பாதித்த னெனும்பெயர்வ் தடை ந்த தனறே.

(இ-ள்.) சத்துருக்களுயிரைக்குடித்து, பசிய உதிரந் தேக்கெடுக்கின்ற கூர்மையாகிய வேலேந்திய காளைபோன்ற சாம்பன், இருளைவிலக்கி ஒளியைவீசுகின்ற சூரியதேவனது தாமரைமலர்போன்ற திருவடிகளைத் தொழவும், (முனிசாபத்தினபடி அவனுடலிற்) பெருகியிருந்த குட்டநோய் நீங்கியது. சாம்பன் வழிபடுதலினுல் விளங்குகின்ற சூரியனுக்கு அனறுமுதலாக, கிருபைசெய்கின்ற நிறைவாகிய கிரணங்களையுடைய சாம்பாதித்தனென்னும் பெயர்வந்தடைந்தது. எ-று. (கஉ)

பொருவருமிக் கதையனைத்தும் விழைவினொடு கேட்போரும் புகன்றுளோருந், திருமருவு பெருஞ்செலவத் தளகேச னெனவுலகிற் சிறந்து வாழ்வர், விரிதருகூ ரிருட்பருகு பயிற்சியா லன்பருள மேவு கின்ற, விருள்பருகு துருவவா தித்தனியற் சரிதைதனை யியமபல் செய்வாம.

(இ-ள்.) சமானமிலலாத இச்சரிதமுழுவதும் ஆசையுடனே கேட்டவர்களும், (பிறர் கேட்கும்படி) சொனனவர்களும், இலக்குமிகடாட்சம் பொருந்திய பெருஞ்செல்வத்துடன் அளகாபுரிக்கிறைவனுன குபேரன்போல வுலகத்திலே மேம்பட்டு வாழ்வார்கள். பூமியில் மிக்குப்பரந்த இருளையொழிக்குந் தன்மையுடன், அடியவரது மனதிற்பொருந்திய (அஞ்ஞானமாகிய) இருளைவிலக்கும் துருபாதித்தனது கீர்த்திபொருந்திய சரித்திரத்தை எடுத்துச்சொல்வோம். எ-று. (கங)

சாமபாதித்தன் கதையுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஙருகூ.

நாற்பத்தொன்பதாவது,

## துருபாதித்தன் மயூகாதித்தன்

### கதைகளுரைத்த அத்தியாயம்.

ஈனுக் குழவிப் பிறையலங்க லெம்மா னருளாற் குந்திவயிற்
றூனுச் செலவந் தழைத்தோங்க வைவர் பிறந்தா ராங்கவர்க்குத்
தானோர் மனையாய்ப் பாஞ்சாலன் புதல்வி யாகித் தழன்மகத்தின்
மீனேர் தடங்கட் டுரோபதையு மின்னுக் கொடிபோல வந்துதித்தாள்.

(இ-ள்.) (ஒருவர்வயிற்றிலும்) பிறவாத (பாற்கடலிற் றோன்றிய) இளம் பிறைச்சந்திரனை மாலையாகவணிந்த எமது சிவபெருமானது திருவருளால் குந்திதேவியின் வயிற்றிலே கிளைபெற்ற செல்வம் அதிகரித்தோங்கும்படி (தருமராஜன் பீமசேனன்-அருச்சுனன்-நகுலன் - சகாதேவனுகிய) பாண்டவர்களைவர் பிறந்தா

ர்கள். அப்பஞ்சபாண்டவர்கட்கு ஓரோமனைவியாக, பாஞ்சாலமன்னன் மகளாகி அவன் செய்த யாகாக்கினியில் மீனபோன்ற பரந்த கண்ணையுடைய துரெ...பதையும் மின்னற்கொடிபோல வந்து பிறந்தனள். எ-று.

அருளாற் குந்திவயிற் றைவர் பிறந்தார் என்பது.

குந்திபோசரில் சூரனென்பவனெபெற்ற குந்திதேவி விளையாட்டுப்பருவ...ற்றிருக்கையில் துருவாசமுனிவர் அங்குவரவே பிதா கட்டளையிட்டபடி ஒரு...ஷகாலம் அவர் களிக்கத்தக்க ஏவல்செய்தாள். அம்முனிவர் "பிரதையே! என விருப்பின்படிப் பணிசெய்வோர் உலகத்திலொருவருமில்லை. யானுன்னை வி...தேன். உனக்கோர்மந்திரம் போதிக்கின்றேன். நீ எத்தேவனைவிரும்பினும் அ...ர்கள் உடனே முன்றோன்றி, தம்மைப்போன்ற ஓர்புதல்வனைத்தருவர்" என...தேசித்துச் சென்றனர். பிரதையோ வீடுசென்று அம்மந்திரத்தைச்சோதிக்க ...முற்றத்திலிருந்தொருதரஞ்செபிக்க, சூரியன் பிரசன்னமாகிச் சேரும்படி ...கண்டு "கன்னி! கன்னி!" என்று கூறவும், பல நியாயங்களைச் சொல்விக்கலத்த லால் ஓர் பிள்ளைபெற்று, அதனால் தன தமரபுக்கிழுக்குவருமென்று பேடகத்திட்டு நதியில் விட்டனள். அப்பிள்ளை (கன்னன்) அதிரதனால் வளர்ந்து பரசுராமரால் ஆயுதத்தொழில் கற்றனன். பின்னர் அப்பிரதை பருவமெய்தக்கண்ட பிதா மண வோலைவிட மன்னர்பலருடன் பாண்டுவும் வந்தனன். பிரதை பாண்டுவை மணந் தாள். அதுகண்ட மத்திரன் தனது மகள் மாத்திரையையும் தானே மணஞ்செய் வித்தான். குந்தி-மாத்திரையாகிய இருவரையுங்கொண்டு பாண்டு வனவேட்டை யாடுகையில், மானுருவேற்றுக்கலவிசெய்திருந்த ஓர்முனிவனைப் பாணத்தாற்கொல்ல, அவன்வெகுண்டு "என்போல நீயுமுன் மனைவியைப்புல்லுகையிலிறக்க" என்ச்சபித்து உயிர்விடப்பெண் மானுருவாயிருந்த அம்முனிபத்தினியுந் தீயில் விழுந்திறந்தாள். அதுமுதல் மூவருந் தவம்பூண்டு வடதிசை சேருகையில் "புத்திரரில்லார் முத்தியடையார்" என்றுணர்ந்து பாண்டு குந்திக்குச்சொல்ல, அவள் கன்னனைப்பெற்றதொழியத் தனக்குள்ள வரத்தைச்சொல்லி "நீர் விரும்பின் புதல்வர் பெறுவேன்" என்றாள். பாண்டு அதற்கிசைய,முதலில் எமதருமன் வரும்படி மந்திரமோதி.அவனால் யுதிஷ்டிரன், பிறகு வாயுவால் பீமசேனன்,மூன்றாவது தேவேந்திரன்|அருளால் அருச்சுனன் இவர்களைப்பெற்றாள். அதற்குமேல் பாண்டுவின் விருப்பத்தால் அம்மந்திரத்தை மாத்திரை பெற்று இரட்டைப்பிள்ளைகள்வேண்டுமென்று சபிக்க அச்சுவினிதேவர் இருவரால் நகுலன், சகாதேவன் என்போர் பிறந்தனர் என்பது பாரதம். இதனை

ஆதிபர்வம்-சம்பவச்சருக்கம்.

"பிரதை தன்னையத் தபோநிதி வருகெனப் பெரிதுவந் தெனதேவ
லரிதெ னுதநீ யியற்றினை கெடுங்கட லவனிமேல் யார்வல்லார்
தெரிவை கேளெனச் செவிப்படுத் தொருமறை தேவரில் யார்யாரைக்
கருதி நீவர வழைத்தனை யவரவர் கணத்தினின் கரஞ்சேர்வார்.

"தம்மை யொப்பதோர் மகவையுந் தருகுவர் தவப்பய னெனப்பெற்ற
விம்ம றைப்பய னிம்மையி லுனக்குவந் தெய்திய தெனக்கூறி

யம்மு,னிப்பெருங் கடவுளுந் தபோவன மடைந்தன னவளுந்தன்
செம்ம னத்தொடு பயினறா மகனெனச் செல்வமா மனைசேர்ந்தாள" —

என்பதனுலறிக.

தழல்மகத்தில் துரோபதை யுதித்தாளென்பது.

அக்கினிஹோத்திர முனிவர்பால், துரோணரும் துருபதமனனனும் விற்போர்கற்கையில் இவர்களிருவருக்குமிருந்த நட்பின்மிகுதியால் 'யானபட்டம் பெறின் என் நகரிற்பாதியுனக்களிப்பேன்' என்று துருபதன் கூறினன. இருவரும் வில்வித்தையிற் றேர்நதபின, துருபதன் பிதாமரித்தலால் அரசனுயினன். துரோணர் தவச்செயலிலிருந்தனர். சிவகடாக்ஷத்தில் அசுவத்தாமன் என்னுங் குழந்தையுண்டாக அதற்குப்பாலின்மையால், 'நாடு கொடுப்பேனெனற நண்பன் ஒரு பசுகொடானு' என்று கருதித் துருபதனைக்காண, அவன புதுமனிதனைக்கண்டாற்போல்நடிகக, துரோணர் தன்னையறிவித்தும் உல்லங்கனஞ் செய்யதுகண்டு வெகுண்டு "உன நாடெட்டிஅமல்ல உன்னையுமென் சீடனுல் இரதக்காலிற் கட்டிக்கொண்டுபோவேன்" என்று சபதஞ்செய்துகொண்டு அஸ்தினபுரியை யடைந்து, அங்கு விற்குருவாகவுள்ள தனது மைத்துனன் கிருபாச்சாரியால வீடுமர் உத்திரவுபெற்று,பாண்டவர் துரியோதனுதியர்-கன்னன முதலானுருக்கு விற்போர்பயிற்ற அவாகளில் அர்ச்சுனனமேம்பட்டான். அவர்களைத் துரோணர் பார்த்து "குருகுலசிகாமணிகளே! நீஙகள் இனி எனக்குக்கொடுக்கப்போகிற குருகாணிக்கைக்குப் பிரதியாக யாகசேனன் எனனுந்துருபதன் என் பகைஞனுதலின, அவனைத் துன்புறுத்தி ஈண்டுகொண்டுவருக" என்று சொல்லவே, அவர்கள் நால்வகைச் சேனையுடன் புறப்பட்டுப் பகைஞனூயடைந்து போர்புரிகையில் அருச்சுனன துருபதனைப்பிடித்து அவனதுமுறிந்த வில்நாணுலதேரிற்கட்டிவந்து குருவின்முன் விட, துரோணர் "இப்போது நானுனக்கு அரசும் உயிருமளித்தேனபோ", என்றனர். அதனுல் துருபதன் வருந்தித் தன்னை யவமானப்படுத்திய துரோணரைக் கொல்ல ஓர் பிள்ளையும், அருச்சுனன் தோளுக் கியைந்த ஓர் பெண்ணும் பெறும்படி, யாகஞ்செய்ய அதினின்றும திஷ்டத்துய்மன் துரோபதை இருவரும பிறந்தனர் என்பது பாரதம். இதனை,

ஆதிபர்வம்-வாரணுவதச்சருக்கம்.

"வலையம் பிறழ முடிதயங்க மணிக்குண் டலம்பே ரழகெறிப்பச்
சிலையுங் கையு மெய்யும்வயக் திகழ்போர் வயிரக் கவசமுமாய்க்
கொலைசெய் சிங்கக் குருளைபொலங் குன்றிற் புறத்துக் குதிப்பதுபோற்
றலைவன் களிக்கத் தடங்தேர்மேற் றனைய னொருவன் றலைப்பட்டான்

பின்னுங் கடவு ளுபையாசன் பெருகிப் புறத்துச் சருவையினுன்
மன்னுங் கடலா ரமுதென்ன வயங்குஞ் சுருதி வயநலத்தான்
மின்னுங் கொடியை நிகர்மருங்குல் வேய்த்தோண் முல்லை வெண்முறுவற்
பொன்னும்பிறந்தாள் கோகனகப் பூமீ தெழுந்த பொன்போல்வாள்.

முற்றோன் றியதங் குலமுதலான் முரட்போர் முனிக்கு முடிவுமவன்
பிற்றோன் றியவக் கனனிகையால் விசயன் றனக்குப் பெருநலமு
முற்றோர்த் துள்ள மிகத்தருக்கி யுவந்தாங் கமைந்தா னுயர்மகத்தாற்
பெற்றோனை பெற்ற பெருமகப் பெற்றா தம்மிற் பெற்றோர்யார்" எனவ
ருவனவநறுணுணர்க. (௧)

கமலா சனத்தி லரசிருக்குங் கடவு ளோடு முலகீன்ற
விமையாப் பறவைக் கருமபாக னுலகை கலிபு மிகலரசர்
தமதா ருயிர்வெங் களைகடியத் தருமன் முதலோர்க் குறுதுணையா
வமையாா தடந்தோட் டேவகிதன் வயிறறி லினிதி னவதரித்தான.

(இ-ள்) தாமரைமலர்ப்பீடத்திற் கொலுவீற்றிருக்கின்ற பிரமதேவனுட னே எல்லாவுலகங்களையும் பெற்ற கணணிமையாக் கருடவாகனராகிய அரிய திருமால், பூமியிலுள்ளாரை வருத்துகின்ற வலியமைந்த மனனவரின் அரிய உயிராகிய கொடிய களையைக்களையும்படி, தருமராசன முதலாகிய பாண்டவருக்கு உண்மை பொருந்திய துணையாக மூங்கில்போன்ற பூரித்த தோள்களையுடைய தேவகிதேவியின் வயிற்றிலே இனிதாகக் கிருஷ்ணாவதாரஞ் செய்தனர். எ-று. (௨)

சுடுபொன் பழுக்குஞ் சுளைப்பலவின் கனிவாய் குதட்டித் துய்த்தலையக்
கடுவன் முதுகூ லிளமந்திக் கருத்துங் கழனி சூழ்கிடந்த
வொடிவில் வளங்கூர் பாஞ்சாலத் திறைவ னீன்ற வொண்ணுதலைக்
கொடுவெஞ் சினத்த சுழல்பன்றி யைவர் விழைவிற் கொண்டனரால்.

(இ-ள்.) நெருப்பிற் காய்ச்சிய பசும்பொன்போற் பழுக்கின்ற சுளைகளையுடைய பலாப்பழத்தை வாயிலதுக்கிக்கொண்டு புசித்தலை அழகிய ஆண்குரங்குகள், கருப்பமுதிர்ந்த இளம்வயதுளள பெண்குரங்குகளுக்கு உண்பிக்கின்ற கழனிகள் சூழ்ந்துவிளங்கும் குறைவில்லாத பெருவளமமைந்த பாஞ்சாலதேசத் தரசன (தவததாற் பெற்ற) ஒளிதங்கிய நெற்றியையுடைய துரோபதையை, மிக்க கொடிய கோபம்பொருந்திய கலக்கமில்லாமல் பாண்டவ ரைவரும் ஆசையுடனே மணஞ்செய்தனர். எ - று.

*துரோபதையை ஐவர் விழைவிற் கொண்டதாவது.

பாண்டுமன்னன் இறந்தபின்னர் ஐவருக்குத் துரியோதனனுதியரால் நிகழ்ந்த பல இடுக்கண்களைக் கண்ட வீடுமன் முதலானோர் இவர்க ளிருதிறத்தாரையும் பிரிக்க யோசிக்கையில், திருதராட்டிரன் ஓர் தபதியைக் கொண்டு வாரணவதம் என்றோர் நகரமியற்றி அதிலோர் அரக்குமாளிகை செய்வித்து அதில் பாண்டவர்களைக் குந்தியுடனே குடியேற்றி அரசுசெய்வித்தனன். ஒருநாள் அத்தபதி வீமசேனனைக் கண்டு, தான நியமித்த வஞ்சனைகளையும் விதுரன் வேண்டுகோளால் வனத்தளவு நிலவறையியற்றி நீபறித்தெறியத்தக்க ஓர் தூணை நிறுத்தியிருக்கிறேனென்றும், மந்திரியாயுள்ள புரோசனன் வஞ்சகனெனவுங் கூறிச்சென்றான். வீமன ஒருநாள் புரோசனனை அங்குசயனிக்கச்செய்துசமயம்பார்த்துத்தீயேற்றித்தாயையும் சகோதரரையும் கொண்டு, தூணைப்பறித்தெறிந்து வனமடைந்தான். விருந்தினராய்வந்த வேடர்களைவரும் தாயும் புரோசனும் இறந்திருக்கக்கண்டு உல

கத்தார் பாண்டவரும் தாயும் இறந்தனரென்று கொண்டனர். வீமன் அவ்வனத்தில் வசித்திருந்த இடும்பாசுரன் உயிரைத் தொலைத்து அவள் விருப்பின்படி இடும்பியை மணந்து கடோற்கசனைப் பெற்றனன். சிறிதுகாலம் கழிந்தபிறகு ஐவரும் தாயும் அந்தணர்வடிவேற்று வேத்திரகிய நகரம்போய் ஓர் வேதியர்வீட்டி லிருக்கையில வீமன் பகாசுரனைக் கொன்றனன். இஃ திவ்வாறிருக்க, பாண்டவர் அரக்குமாளிகையிலெரிந்துபோயினரென்று கேள்வியுற்ற துருபதன் தன்மகள் துரோபதை அருச்சுனனுக்கு மனைவியாகவேண்டியதையும் ஆகாயவாணி கூறியதையுமெண்ணி அவளுக்குச் சுயம்வரமென்று பலதேசங்களுக்கு ஓலைபோக்கியதால் அநேக மன்னவர் வந்தனர். துரியோதனன் கன்னன் சகுனி சல்லியன் முதற் பலரும் வந்திருந்தனர். இச்செய்தியை ஓரந்தணனாலறிந்த பாண்டு புத்திரர் தாயுடன் புறப்பட்டு, துருபதேயத்தை யடைந்து ஆங்கோர் குலாலன் மனையிற் குந்தியையிருத்தி, ஐவரும் அந்தண குழுவுடன் அரசமாளிகை யடைந்தனர். அரசனேவலால் தோழிகள் துரோபதையைச் சபையிற்கொண்டு வந்து இவரிவர் இவ்வித் தேச மன்னவரெனக் காண்பித்தனர். அப்போது அவள் தமயன் திருஷ்டத்துய்மன் “இதோ இருக்கிற வில்லைவளைத்து இதிலுள்ள மச்சயந்திரத்தைத் துளைப்போன் யாரோ அவனே என் தங்கைக்குரியான்” எனக் கேட்ட மன்னவர் பலரும் நான் நான் என்றெழுந்து வில்லைப்பார்த்துப் பயந்தும், தோள் நோகுமென்று கருதியும், எடுக்க முடியாமலு மொழிந்தனர். சல்லியன் வளைத்து நாணேற்ற முடியாமல் நாணேற்றத் தன் கையில் முறிந்து விழுந்தான். சராசந்தன் தோள் சோர்ந்தான். துரியோதனன் நான்கு விரற்கடை குறைய வளைத்தான். கன்னன் ஓர் மயிர் முனை மிச்சமாயிருக்க வளைத்து நாணேற்றமுடியாது வீழ்ந்தான். இன்னும் பலர் பலவகையாயினர். இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு பார்ப்பனத் தொகுதியிலிருந்த பாண்டவரில் பார்த்தன் எழுந்து திஷ்டத்துய்மனைப்பார்த்து “அரச! க்ஷத்திரியரே வில் வளைத்தற்குரியரோ? அன்றி அந்தணர் வளைத்து இலக்குவீழ்த்தினால் அக்கன்னிகை மணஞ்செய்து கொள்வாளோ?” என, அவன் செய்வாள் என, அருச்சுனன் அரசரெல்லாம் அஞ்சும்படி அவ்வில்லை யிலேசாகவெடுத்து நாணேறிட்டு மச்சயந்திரத்தைத் தொளைத்தனன். இவனே அருச்சுனனென்று மதித்துத் துரோபதை மாலைசூட்டினள். அருச்சுனன் துரோபதைகையைப் பற்றிக்கொண்டு சகோதரர் சூழ்ந்துவரப் புறப்படுகையில், சுயோதனனால்நேர்ந்தகலகத்தை விலக்கி, குயவன் வீட்டிலுள்ள தாய் பாலடைந்து வெளியே நின்று “அன்னையே! இன்றோர் ஐயம் பெற்றோம்” என, குந்தி விஷயமறியாளாய் உள்ளிருந்தபடியே “பிள்ளைகளே! ஐவரும் உண்ணுங்கள்” என்று கூறிப்பின்னர் புறம்பேவந்து பார்த்து என்னசெய்தேனென்று மனம்வருந்தி இது விதிவழி யென்றிருப்ப, ஐவரும் தாய்மொழியை மேற்கொண்டொழுகினர். வியாசமுனிவர் துருபதனுக்குநியாயங்கூறி அவ்வாறே ஐவருக்கும் மணஞ்செய்வித்தார். இது கேள்வியுற்ற திருதராட்டிரன் முதலானோர் மனம் வருந்தினர் என்பது பாரதம். இதனை,

ஆதிபருவம்-திரௌபதி மாலையிட்ட சருக்கம்.

“மன்மாரிற் பிறந்திருதோள் வலியா விந்த
மண்ணுளரு மவர்க்கன்றி மறைநூல் வாணர்

தொன்மரபிற் பிறந்தவரு மிலக்கு வீழ்த்தாற்
    சூட்டுமோ தொடையலிளந் தோகை யென்னத்
தன்மரபுக் கணிதிலக மான வீரன்
    தகவன்றோ மன்றலுக்குத் தாழ்வே யென்றான்
வின்மரபிற் சிறந்தநெடு வில்லை யன்ன
    மேருகிரி யெடுத்ததெனை வினைவிற் கொண்டான்.

கிளர்மகுட வயவேந்த ரனைவ ரெல்லாங்
    கிழாகத் தனிநெடுநாண் கிளர வேற்றித்
தளர்வுறுசா யகந்தொடுத்துக் கற்றோ ராருந்
    தனுநூலுக் காசிரியன் றானே யென்ன
வுளர்திகிரிச் சுழலிலக்கை யவையோர் தங்க
    ளூக்கமுடன் விழவெய்தா னுரவுத் தோளான்
வளருமருந் தவவேள்வி முனிவ ரார்த்தார்
    வாசநறு மலர்சொரிந்து வானோ ரார்த்தார்"—எனவும்,

"அன்றிலக் கெய்த கோவுந் துணைவரு மான வெம்போர்
வென்றுகொற் றவையோ டொக்கு மின்னிடைப் பொன்னுந் தாமுஞ்
சென்றுமட் கலஞ்செய் கம்மி செழுமனை முன்றி லெய்தி
இன்றுபெற் றனமோ வைய மென்செய்வ திதனை யென்றார்.

உள்ளிருந் தன்னை மைந்த ருரைத்தசொற் கேட்டுத் தேவர்
தெள்ளமு தென்ன மக்கள் சேரநீ ரருந்து மென்னுப்
புள்ளின மொலிக்கு மாலைப் பொழுதிவள் புறம்ப ரெய்தி
கள்ளவிழ் கூந்த லாளைக் கரும்பென விரும்பிக் கண்டாள" — எனவும்
வருவனவற்று னுணர்க. (௬)

நிலவு பொழிதண் மதிக்கவிகை நிழற்றி யரசர் திறையளப்ப
வுலக முழுதும் புகழ்தரும மொருகோ லோச்சி வருநாளி
லலகில் புணர்ப்பாற் சுயோதனன்சூ தாடி யவனி கவர்ந்திடலு
மிலகு மவுலி துறந்துசடை தாங்கிக் கானத் தெய்தினரால.

(இ-ள்.) கீர்த்திபெற்ற தருமராஜன் நிலவை வீசுகின்ற குளிர்ச்சிவாய்ந்த சந்திரவட்டக் குடையால் நிழல்செய்து, மன்னவர்கள் கப்பஞ்செலுத்த உலகமுழுவதும் ஓரேசெங்கோல் செலுத்தி வருங்காலத்தில், அளவில்லாத வஞ்சனையுடன் துரியோதனன் (தருமராஜாவோடு) சூதாடி ராஜ்ஜியத்தைக் கிரகித்துக்கொள்ளவும், விளங்குகின்ற கிரீடத்தை விலக்கிச் சடைமுடி தரித்து (அவர்கள் ஐவரும் துரோபதையும், துரியோதன் விருப்பின்படி) வனவாசஞ் சென்றனர். எ-று.

சுயோதன் சூதாடிய வனிகவர்ந்ததாவது.

தருமராஜன் அரசியற்றுவதை மனம்பொறாத துரியோதனன், சகுனிதந்திரப்படி ஓர் அரசிருக்கை மண்டபமியற்றி அதனைப் பாண்டவர்க்குக்காண்பிப்பதாக நியமம்வைத்து, திருதராட்டிரன் கட்டளையைக்கொண்டு விதுரன்போய்

அழைத்துவரச்செய்து அவர்கட்குக்காண்பித்துத் தருமராஜனைப்பார்த்து "பொழுதுபோக்காக மாமா சகுனியுடன் சூதாடுங்கள்" என. தருமன் "சூதாடுதல் கூடா" தென்றுகூறி, பிறகு இணங்கியாடியதில் பலபாக்கியம் நாடுநகரம் தம்பிமார் துரோபதை புதல்வர் முதலானோரையுமிழந்தனன் துரியோதனன் தன் தம்பி துச்சாதனனால் துரோபதையை மயிர்பிடித்துச் சபைக்கிழுத்துவரச்செய்து துகிலுரிவித்தான் துரோபதை கிருஷ்ணபகவானைத் தியானித்தலால் துகில்வளர்ந்தது பீமன் முதலிய நால்வருங் கோபங்கொள்வதறிந்த தருமன் அவர்களைப் பொறுக்கச்செய்தனன. "அவளைத் தொடைமீதுட்காரவை" என்ற சுயோதனனைத் துரோபதைபார்த்து "உன் தொடைவழியுயிர் நீங்கக்கடவாய்" என்று சாபமும் "என்னை யவமானப்படுத்திய இந்நூற்றுவரும் மாண்டாலொழிய விரித்த கூந்தலைமுடியேன்" என்று சபதமுஞ்செய்தாள் வீமன் "யான் இந்நூற்றுவரையுங் கொன்று துரியோதனனுதிரத்தைவாரிக் குடியாமுன் கையால்நீருண்ணுது தண்டாலடித்து மேலெழுந்தனைக் கொள்வேன" என்றும், அருச்சுனன் கன்னனையும், நகுலன் சவுபலனையும், சகாதேவன் சகுனியையுங் கொல்வோமென்று தனித்தனி சபதஞ்செய்தனர். இதுகண்ட திருதராட்டிரன் பாண்டவரையும் துரோபதையையும் பசப்பு வார்த்தைகளாற் சமாதானப்படுத்தி "பழையபடியுங்கள் நாடுநகரங்களைவைத்து வாழ்ந்திருங்கள்" என்றுகூற, இணங்காமல் "வனம்புகுவோ"மென, "பன்னிரண்டுவருடம் வனவாசமும் ஒருவருடம் அக்கியாதவாசமுஞ் செய்துவந்தால் உங்கள் நாட்டைப்பெறுவீர். அக்கியாதவாசஞ்செய்கையில் உங்களிருக்கை தெரிந்துவிட்டால் மீண்டும் வனம்போகவேண்டும்" என்றனர் அதநகியைந்து துரோபதை விருப்பின்படி மீண்டுஞ் சூதாடிப் பாண்டவர் துரோபதை புத்திரா முதலானோரை மீட்டுக்கொண்டு வனம்போயினர். என்பது பாரதம் இதனை.

சபாபர்வம் - சூதுபோர்ச்சருக்கம்.

"மாய மொன்று மெண்ண லாம னத்தின் மிக்க மாமனு
நீபு மின்று சூது கொண்டு நிகழ்வி லாச மயாவிரோ
வாய வென்றி யைய னில்வி லமுத மன்ன போனகம்
போய ருந்து மளவு மிங்கி ருந்து போது போகவே"— எனவும்.

"அரிவைபோ டகன்று நீவி ராவரு மடவி யெய்திச்
சுரர்தின மீரா றங்கட் டுன்னுதிர் மன்னு நாட்டி
னொருவரு மறியா வண்ண மொருதின முறைதி ருங்கள்
பெருவிற லரசும் வாழ்வும் பின்னுறப் பெறுதி ரெனறான்.

மறைந்துறை நாளி னும்மை மற்றுளோ ரீண்டு ளாரொன்
றறிந்திடின் மீண்டு மிவ்வா றரணிய மடைதி ரென்றான்
பிறந்தவிம் மாற்றங் கேட்டுப் பிதாமகன் முதலா யுள்ளோர்
சிறந்ததோன் றிதனி னில்லை யிசைந்ததே செய்மி னென்றார்." :—

எனவும் வருவனவற்றானுணர்க.

(ஙு)

உடுப்பு முகத்த கூன்கொழுவி னுழுத சாலி னிடைத்தவழ்ந்து
குடக்கூன் சங்க முத்துயிர்க்கும் வளங்கூர் காசிக் கோநகரில்

வடிக்கட் குவளை குழைதடவு மயிலஞ் சாயற் கரும்பெறிந்த
தொடித்தோட் கனிவாய்ப் பாஞ்சாலி யையவ ரோடுந் துன்னினளால்.

(இ-ள்.) உடும்புபோன்ற முகத்தையுடைய வளைவாகிய கொழுப்படையால் உழவர்க ளுழுத படைச்சாலின் வழியாய்த் தவழ்ந்து, குடம்போற் கூன் பொருந்திய சங்குகள் முத்துக்களை யீனுகின்ற வளப்பமிருந்த காசியாகிய சிறந்த நகரத்தில், தேனொழுகுகின்ற குவளைமலராகிய கண்கள் குண்டலங்களைத் தொடுகின்ற அழகிய மயிலின் சாயலையும், கரும்பின் சுவையைத் தோற்கச்செய்த சொல்லையுடைய சிவந்த வாயையும், வளையலையணிந்த தோளையு முடைய துரோபதை (தனது கணவராகிய) பாண்டவர் ஐவருடனே வந்தனள். எ-று.

உடும்பு+முகம்=உடும்புமுகம் - இது வலித்தல். கொழு=காறு - இது கலப்பையின் முனையில் இரும்பாற் செய்து ஏரோட்டுகையில் பூமியைப்பிளந்து செல்லச் செருகிய ஓர் ஆயுதம். வடி=தேன். வடிகுவளைக்கண் என்று கூட்டுக. ()

வடிவேல் நெடுங்கட் பாஞ்சாலி வயங்கு கதிரோன் றனைநோக்கி
யொடியாத் தவமாண் டியற்றுதலு முவந்தாங் கவள்துய்த் திடுமளவுங்
கடல்சூழ் கிடந்த வுலகனைத்துங் கனற்றும் பசியால் வருந்திடினு
மடிசி லுலவாப் பொற்குழிசி மகிழ்வி னோடு மளித்தனனால்.

(இ-ள்.) வடித்த வேற்படைபோலும் நீண்ட கண்களையுடைய பாஞ்சாலி பிரகாசிக்கின்ற சூரியனைப் பார்த்து, கெடாத பெருந்தவமொன்று அக்காசிநகரத்தின்கண் செய்யவும் (அதனாற் கதிரோன்) களிகூர்ந்து, அப் பாஞ்சாலி (தனது துன்பம் நீங்கி வயிறாரப்) புசிக்கு மெல்லையும், சமுத்திரஞ் சூழ்ந்துள்ள பூமியிலுள்ளாரெல்லாம் துனபுறுத்துகின்ற பசியால் பீடிக்கப்பட்டாலும், அன்னமானது குறையாதுள்ள ஓர் அழகியபாண்டத்தை ஆசையுடனே அவளுக்குக்கொடுத்தான்

பாஞ்சாலி-பாஞ்சாலதேசத்தரசனமகள். இது தத்திதாந்தநாமம். (௬)

அதனாற் றுருப வாதித்த னெனும்பேர் கதிரோற் காகியதிக்
கதையாற் றினமு நவில்வரவர் கனற்றும பசியி னுடல்வருந்தார்
மதிநூற் கடலின் றுறைபடிந்தோய் மயூகா தித்தன் கதையதனைப்
புதிதா யமிழ்தின் காவதுபோற் கேட்டி யென்னப் புகன்றிடுவான்.

(இ-ள்.) (பாஞ்சாலி வழிபட்டு அருள்பெற்ற) அக்காரணத்தால், சூரியனுக்குத் துருபாதித்தனென்னும் ஒரு பேர் உண்டாயிற்று. இச்சரிதத்தை நாள்தோறும் சொல்லுவோர் சுடுகின்ற பசியினால் சரீரம் வருந்தமாட்டார்கள். விவேகத்தை விளக்கும் சாத்திரக்கடலிற் றோய்ந்த அகத்தியமுனிவனே! மயூகாதித்தனது விருத்தாந்தத்தைப் புதிதாகிய தேவாமிர்தம் இங்கு உண்டாவதுபோலக் கேட்கக்கடவா யென்று ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

கதையதனை=கதையை. இது "யாத னுருபிற் கூறிற் றாயினும் - பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்" என்றபடியே உருபு வேறுபட்டுவந்த வேற்றுமைமயக்கம். (௭)

வேறு.

இருள்சீத் தொளிரேழ் பரிவெங் கதிரோன
பரிவா லுயர்பஞ் சநதக் கரைவா
யருளா லொரிலிங் கமமைத் திதயத்
தெருளா லுயர்பூ சனைசெய் தனனால்.

(இ-ள்.) இருளையொழித்துப் பிரகாசத்தைச் செய்கின்ற எழ்பரி (பூண்ட தேரை) யுடைய சுடுகின்ற கிரணங்கள் பொருந்திய சூரியன், ஆசையோடு உயர்ந்த பஞ்சநதத்தீர்த்தத்தின் கரையிலே அன்புகொண்டு ஓர்சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து மனோஞானத்தால் உயர்வாகிய பூசையைச் செய்தனன் எ-று.

சிவபுண்ணியத்தெளிவு.

"மானதமண டலங்கணிகம் பலகைபடம் பித்தி
வனைகதிசெத திரமிரதம் வேரமென வகுத்த
தானமிவை யோரெட்டு மொனறுக்கொன் றதிகந்
தண்படிகம வாணலிங்கஞ் சாற்றுமிவற் றதிக
ஞானமய லிலிங்கததி லரனைப்பூ சிப்போர்
கற்றீர்த்தந் தானமக மரும்பலங்க ளனைத்து
மீனமுறு பலபாவ மெரித்திடும்புண் ணியமு
மெய்திடுவ ரிவர்க்கொழிவாம் பாவவித மொழிவாம்."—என்றபடியே பூசிக்கத்தக்க ஸ்தானங்கள் எட்டனுள் சிவலிங்கமும் மானதபூஜையுமே சிறந்தன வாதலின் "இலிங்கமமைத் திதயத் தெருளா லுயர்பூ சனைசெய் தனனால்" என்றார். (அ)

ஆறே றியசெஞ் சடையந் தணனை
நூறா யிரம்யாண் டொர்நொடிப் பொழுதாய்
மாறா துயர்வான் றவமாற றுதலும்
வீறார் கதிரெங் கும்விரிந் தனவே.

(இ-ள்.) கங்காநதியானது விளங்குகின்ற சிவந்த சடையையுடைய சிவபெருமானை, நூறாயிர வருடகாலம் ஒருக்ஷணப்பொழுதாகக்கருதி இடையிற்றவறாமல் மேம்பட்ட சிறந்த தவத்தைச் சூரியன் செய்யவும் (அதனால்) பெருமை பொருந்திய தவாக்கினி உலகமுழுவதும் பரந்து சென்றன. எ-று. (கூ)

அரிதா யதவம் புரியா தவன்மேல்
விரிவெங் கதிரண் டமவிழுங் குதலாற்
றருநீ ழலில்வா னவர்தா னவர்வான்
றிரியா துடல்வெந் துதிகைத் தனரால்.

(இ-ள்.) செய்தற்கருமையானதாகிய தவத்தைச்செய்யும் சூரியனது மேலே பரவியுள்ள சுடுகின்ற கிரணங்கள் அண்டத்துச்சியை மறைத்தலால், கற்பகவிருட்சத்தின் நிழலிலேவசிக்கின்ற தேவர்களும், அசுரர்களும் ஆகாயமார்க்கமாக உலவமாட்டாதவர்களாய்ச் சரீரம்வெந்து மயங்கினார்கள். எ-று.

தவஞ்செய்கையில் கிரணங்கள் யாதெனின், தவத்தின் மிகையாற்றோன் றிய தவாக்கினியே யாமெனை றுணர்க. (௧௦)

மதிதாழ் தருசெஞ் சடைவா னவன்வெங்
கதிரோன் முனடைந் துறுகா தலினு
லெதுநீ தருகென் னவிசைப் பினுமற்
றதுநல் குவனென் னவுரைத் திடலும்.

(இ-ள்.) சந்திரனைச்சூட்டிய சிவந்த சடையையுடைய சிவபெருமான் சூரி யபகவானுக்கு முன் எழுந்தருளிக் காட்சிதந்து பொருந்திய ஆசையுடனே எதை க்கொடுவென்று நீ வரங்கேட்டாலும், அதனை (நீ விரும்பியவகையே) அனுக்கிர கஞ்செய்வேனென்று திருவாய் மலர்ந்தருளவும். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௧௧)

விடயங் களில்நெஞ் சம்விடா மையின்யான்
னொடிகின் றதறிந் திலனென் மையனென்
றடைகின் றபரம் பொருளா தவனைத்
தடவத் தனன்மே னிதளிர்ப் புறவே.

(இ-ள்.) (பஞ்சேந்திரியங்களுமொப்ப) தவஞ்செய்கின்ற சூரியன் விஷய வாதனையில் மனத்தைச் செலுத்தாமையால், நான் சொல்கின்றதின் சத்தத்தைக் கேட்டானில்லை என்று கருதிச் சமீபிக்கின்ற பரம்பொருளாகிய சிவபெருமான் சூரியனை உடல் தளிர்க்கும்படி (தமது திருக்கரத்தால்) தடவிக்கொடுத்தனர். ()

செய்யுந் தவம்விட் டிருள்சீத் தொளிரு
மெய்வெங் கதிர்வா னவன்முன் னணுகி
மெய்யங் கையினீ வவிழித் தருளால்
மையுண் டொளிர்கண் டனைவாழ்த் தினனால்.

(இ-ள்.) இருளையொழித்துப் பிரகாசிக்கின்ற நெருக்கமாகிய வெவ்விய கிரணங்களையுடைய சூரியனுக்கு முன்னர்சென்று சிவபெருமான் தமது திருக்க ரங்களால் அவனுடலைத்தடவத் திருவருளால் செய்துகொண்டிருந்த தவத்தை விட்டு விழித்துக்கொண்டு, கருநிறம் பெற்று விளங்குகின்ற ஸ்ரீகண்டத்தையு டைய சிவபெருமானை வாழ்த்தித் துதித்தான். எ-று. (௧௩)

விண்ணோ ருமகிழ்ந் துவியப் பவெனைப்
பண்ணார் மொழியோ டெழிச் சவினென்
கண்ணா கவிருத் தியெனக் கழறு
வெண்ணார் புரமட் டவனே கினனால்.

(இ-ள்.) சூரியனே! தேவர்களும் களிப்புற்று ஆச்சரியமடையும்படி, பண் ணோசைபொருந்திய சொற்களால் என்னைத் துதிசெய்தாய் அதனால் இதுமுதற் கொண்டு என் கண்ணாக விருக்கக்கடவாய்என்று திருவாய்மலர்ந்து தன்னைத்துதி யாத அரக்கர் வசித்திருந்த திரிபுரத்தைத் தகனஞ்செய்த பெருமான் அந்தர்த்தா னமாயினர். எறு. (௧௪)

வேறு.

இலகு பேரொளி கிளைத்தலா லெரிபுன லுடுத்த
உலகின் மேல்மயூ காதப னெனும்பெய ருற்ற
தலகில் கேள்வியோய் நற்கடோற் காதபன் கதையை
நிலவு மாறுனைக் குவனது கேளென நிகழ்த்தும்.

(இ-ள்.) விளங்குகின்ற பெரிய வொளியானது பிரகாசித்தலால், அலைகள் மோதுகின்ற கடலாடைதரித்த பூமியின்பேரில் (சூரியனுக்கு) மயூகாதித்தனென்னும் பெயர்வந்தது. குற்றமற்ற கேள்வியையுடைய அகத்தியமுனிவனே! நல்ல கடோற்காதித்தன் சரித்திரத்தை விளங்கும் வகையாகச்சொல்லுவேன். அதனைக் கேளென்று ஸ்ரீ முருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (கரு)

அருபாதித்தன் மயூகாதித்தன் கதைகளுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கரு௭௪.

ஐம்பதாவது,

## கடோற்காதித்தன் கருடேசன் கதைகளுரைத்த அத்தியாயம்.



அரும கம்புரிந தாற்றல்சால் தக்கனுக் கருளால்
பொருவில் பேரெழில் வினதைகத் துருவெனப் புகலு
மிருவர் நற்குலப் புதல்விய ருளரியைந் தவனா
விரியு நான்மறைப் பொருடெரி காசிபன் வேட்டான்.

(இ-ள்.) செய்தற்கரிய யாகங்களைச்செய்த தவவலிமை மிகுந்த தக்ஷப்பிரசாபதிக்குத் திருவருளாற் சமானமில்லாத பேரழகுடைய விநதையென்றுங் கத்துருவென்றுஞ்சொல்லப்படும் நற்குலப்புத்திரிகள் இருவரிருந்தனர். நான்கு வேதங்களின் பொருளையும் உணர்ந்த காசிபப்பிரமா மனச்சம்மதங்கொண்டு அவ்விரண்டு கன்னியரையும் விவாகஞ் செய்துகொண்டான். எ-று.

வினதை என்பாளுக்குச் சுபநூணையென்று மறுநாமமுமுண்டு. (க)

உலைவு கம்பழுத் துடைந்தற வொழுகிய பசும்பொற்
கலன ணிந்தபூங் கொம்பனு ரிருவருங் காவி

னிலகு நாண்மலர் கொய்தலுங் கத்துரு வென்பாள்
விலகி வில்லுமிழ் பூண்முலை வினதையோ டுரைப்பாள்.

(இ-ள்.) உலைக்களத்திற் பழுக்கக்காய்ச்சியடித்த விளக்கமுற்ற பசும்பொன்னாலாகிய ஆபரணங்கள் பூண்ட பூங்கொம்புகளைத்த அவவிருமங்கையரும், சோலையிலேயுள்ள புதிய மலர்களைக்கொய்துகொண்டிருக்கவும், கத்துருவென்று சொல்லப்படும் பேருடையவள் விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற பணிபூண்ட முலைகளையுடைய வினதையென்பவளுடன் சொல்லுகின்றாள். எ-று.

நாண்மலர் என்பது அன்றலர்ந்த பூக்கள். (உ)

தேவர் கோனிவர் புரவியிந் நிறமெனத் தெரிப்பி
னேவ லின்னுழைச் செய்குவன் யானஃ தியம்பிற்
காவி யுங்குழை யுங்கடக் தெறியும்வாட் டடங்கட்
பூவை யென்னுழை யேவல்நீ செய்கெனப் புகன்றாள்.

(இ-ள்.) தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன் ஏறிச்செல்லும் (உச்சைச்சிரவமென்னும்) குதிரை இன்னவர்ணமுடையதென்று தெரிவித்தால் உன்னிடத்தில் (நீ கட்டளையிட்ட) ஏவல்தனைச்செய்வேன். அல்லது அதை நான் சொன்னால், காவிமலரையும் குண்டலத்தையும் செயித்து ஒளிவீசும் வாள்போன்ற பரந்த கண்ணையுடைய வினதையே! நீ என்னிடத்தில் (நான் கட்டளையிட்ட) ஏவலினைச் செய்யவேண்டும் என்று சொல்லினள். எ-று. (ங)

அண்ணல் வானவர்க் கிறைவனூ ரடுதிறற் புரவி
வெண்ணி றத்ததென் றணிநுதல் வினதைதேர்ந் துரைப்பப்
பண்ணு லாங்கனி மென்மொழிக் கதிர்முலைப் பாவா
யெண்ணின் மற்றது கரிதெனக் கத்துரு விசைத்தாள்.

(இ-ள்.) பெருமைபொருந்திய தேவர்கள் தலைவனான இந்திரன் ஏறுகின்ற (பகைவரைக்) கொல்லும் வல்லமையுடைய உச்சைச்சிரவம் வெண்மை நிறமுடையதுஎன்று அழகிய நெற்றியையுடைய விநதையென்பவள் உணர்ந்துசொல்ல, பண்ணோசையிருந்த மெல்லிய சொல்லையும் ஒளிதங்கிய தனங்களையுமுடைய விநதையே ! ஆலோசிக்குமிடத்தில் அது கருநிறமுடையது எனக் கத்துரு வென்பவள் சொன்னாள். எ-று. (ச)

ஈது காண்டுமென் றற்றைநா ளில்வயி னேகி
மாதர் வாணுதற் கத்துரு வானவர்க் கிறைவன்
காதல் கூர்தரு புரவியைக் கருமைசெய் திவணீர்
போது கென்றுதா னுயிர்த்தவா ளரவொடும் புகன்றாள்.

(இ-ள்.) இதனைக் கண்டறிவோமென்று அன்று வீட்டிற்குப்போய் அழகிய ஒளிவாய்ந்த நெற்றியையுடைய கத்துருவென்பவள், தேவேந்திரனது ஆசைமிகுந்த உச்சைச்சிரவத்தை நீங்கள் கருநிறமுடையதாகச்செய்து இங்கேவாருங்கள் என்று தான்பெற்ற புதல்வர்களாகிய ஒளிவாய்ந்த சர்ப்பங்களோடு சொல்லினள்.

ஐயநுண்ணிடையென்பதற்கு உண்டோயில்லையோவென ஐயமுறத்தக்க நுண்ணிய இடையெனப்பொருள் கோடலுமமையும். இதனை "ஐயநுண்ணிடை" எனவரும் பொருநராற்றுப்படைக்கு நச்சினார்க்கினியரெழுதிய உரையானுணர்க.

வயிற லைத்தெறி விரிசிறைச் சூட்டுவா ரணங்கூய்த்
துயிலெ ழூப்பிய காலையிற் பெயர்திவெஞ் சுடாகால்
வெயில வன்றிரைக் குடகடற் குளித்திடின் மீள்தி
யயர்தி யெற்பயந் துறுதுய ரென்னென வறைவாள்.

(இ-ள்.) வயிற்றிலடித்து விசிறுகின்ற விரிந்த சிறகையும் கொண்டையை யுமுடைய சேவல்கள் கூவி நித்திரையினின்றெழுப்பிய விடியற்காலையில் எழுந்து செல்கின்றாய். உஷ்ணமாகிய கிரணங்களை விடுகின்ற சூரியன் அலைகள்பொருந்திய மேற்கடலில் (அஸ்தமனகிரியிலே) மறைந்தால் (அதன்மேல்) திரும்பிவருகின்றாய், தளர்ச்சியுற்றிருக்கின்றாய் என்னை மகனாகப்பெற்றும் உண்டாயிருக்கிற துன்பம் யாது என, (தாயைக்கருடன் வினவ, வினதை) சொல்லுகின்றாள். (கஉ)

மாதர் யாழிசை மருட்டுமென் மழலையந் தீஞ்சொற்
பேதை கத்துரு வென்றன ளென்னுரை பிழைத்த
தாத லாலவட் கடிமைபூண் டழுங்கின னெனனுக்
காதல் கூர்ந்தினி துயிர்த்தவெங் கலுழனுக் குரைத்தாள்.

(இ-ள்.) அழகிய வீணாநாதத்தை மயக்கமுறச்செய்யும் மெல்லிய இனிய மதுரம்பொருந்திய சொல்லையுடைய பெண்ணாகிய கத்துருவென்பவள் (என்னோடு கொண்ட சபதத்தில்) வெற்றியடைந்தாள். என வார்த்தை தவறுற்றது ஆனபடியால் அவளுக்கு ஏவல்செய்து துன்புறுகின்றேன் என்று ஆசைமிகுந்து இனிதாகப் பெற்ற வெவ்விய கருடனாகிய மைந்தனுக்கு விநதை எடுத்துச்சொல்லினள். எ-று.

பூவை யன்னவ ளினிதருள் புதல்வர்பா லடைந்து
தேவ ரும்பெறற் கரும்பொரு ளாயினுந் தெரிந்தே
யேவல் யான்செயா தொழித்திடிற் றருகுவ லென்ன
வாவி யன்னவென் னன்னைபோ யுரைத்தியென் றறைந்தான்.

(இ-ள்.) என்னுயிரை நிகர்த்த தாயே! திருமகள்போன்ற கத்துருவென்பவள் இனிதாகப்பெற்ற பிள்ளைகளாகிய பாம்புகளிடம்போய், நான் ஏவல் செய்யாமல் நீக்கிவிட்டால், தேவர்களுக்கும் கிடைத்தற்கரிய பொருளாயிருந்தாலும் அதனை யறிந்துகொண்டுவந்து கொடுப்பேனென்று சென்று கூறக்கடவாய்என்று (கருடன் விநதையுடனே) சொல்லினன். எ-று. (கச)

கலுழ னல்லுரை கேட்டலுங் கதுமெனப் போகி
யிலகு வாளெயிற் றரவுகட் கியம்பலு மிமையோ
ருலகி லின்னமிர் தளித்திடில் விடுதுமென் றுரைப்ப
மலர்பெய் வார்குழல் வினதைதன் மைந்தனுக் குரைத்தாள்.

(இ-ள்.) கருடன்கூறிய நல்ல வசனத்தைக்கேட்கவும், விநதை விரைவாகப்போய், ஒளிவிளங்கும் பற்களையுடையபாம்புகளோடு (கருடன்சொல்லிய விஷ

யத்தை) அறிவிக்கவும், (பாம்புகள்) தேவலோகத்திலேயுள்ள இனிய அமிர்தத்தை க்கொண்டுவந்துகொடுத்தால் விட்டுவிடுவோமென்றுரைக்க,மலர்களணிந்த நீண்ட கூந்தலையுடைய விநதையென்பவள் (அவர்கள் கருத்தை) தன் குமாரனாகிய கருடனுக்குத் தெரிவித்தாள். எ-று (௧௫)

அகல்வி சும்புறை யமிழ்து கொல கொணர்வதற் கரிய
திகழுமெ வெம்பசி தணிப்பதற் கருளுதி யென்னத்
தகர்ம ருப்பினிற் றிருகுவிற் றாடியில வேடர்
துகிர்ப டர்ந்திரைத் தொடுகடற் கரையினிற் றிருக்கார்.

(இ-ள்.) பரந்த ஆகாயத்திலுள்ள தேவாமிர்தமோ கொண்டுவருதற்கருமையானது? கொதிக்கின்ற கொடிய பசியையடக்குதற்கு இரையருள் செய்வாயாக என்று கருடன்கேட்க, (விநதை சொல்லுகின்றாள்) ஆட்டுக்கொம்புபோல் முறுக்குற்றுத்தொங்குகின்றதாடியையுடைய வில்லேந்தியவேடர்கள்,பவளங்கள் உண்டாகின்ற அலைகள்பொருந்தியசமுத்திரக்கரையில் கூட்டமாக விருக்கின்றனர். எ-று.

இதுமுத விரண்டுகவிக ளொருதொடர்.

தொடுகடல் - வினைத்தொகை இதற்குச்சகரரால் தோண்டப்பட்ட கடல் என்பது பொருள். (௧௬)

அனைய ராருயி ரருந்திவெங் கனற்பசி யாற்றித்
துனைவி லேகுதி யவருழைச் சுருதிநூல் முனிவன்
றனைவி ழுங்கலே விழுங்கினின் மிடற்றிடைத் தழல்போற்
கனலு மற்றவன் றனையுமிழ்ந் தேகுதி கடிதின்.

(இ-ள்.) அவவேடர்களது அருமையாகிய வுயிரையுண்டு, கொடிய அக்கினிபோன்ற பசியைத்தணித்து விரைவாக (அமுதங்கொண்டுவரும்படி) செல்லக்கடவாய், அவவேடருட்னே வேதநூல்களையுணர்ந்த அந்தணனை (அறியாமல்) விழுங்காதே; தவறிவிழுங்கினால் உனதுநெஞ்சில் தீப்போற்சுடும் (அக்குறியறிந்து) அவனைச்சீக்கிரத்தில் துப்பிவிட்டுப் போகவேண்டும். எ-று.

கருடன் இதைகேட்டபோது தன் பிதாயாண்டிருப்பரென வினவினதும் அதற்கு வினதை அவர் கந்தமாதனகிரியில் தவஞ்செய்கிறாரெனக் கூறியதுமாகப் பாரதங்கூறும். இதனை.

ஆதிபர்வம்-காருடச்சருக்கம்

"கந்த மாதன விலங்கலி னுந்தையார் கசிவான்
முந்து நற்றவ மாற்றினன் வாரிதி முனையிற்
பந்த வேடரொண் ணிறநதவர் பயிலுவர் பருகி
யந்த நல்லமு தேக்கிவா வெனவரு ளளித்தே."—என்பதனு னுணர்க.

என்று கூறிய வன்னைத னிணையடி வணங்கிக்
குன்றம் யாவையுஞ் சிறைதரு வளியிடைக் கொட்ப

மன்ற நீடுயர் பொன்வரை வான்சிறை பரப்பிச்
சென்ற தாமெனச் சென்றன னெறுழ்வலிக் கலுழன்.

(இ-ள்.) என்றிவ்வாறுரைத்த தாயாகிய விநதையின் உபயபாதங்களைப்பணிந்து, மலைகளெல்லாம சிறகுளால் வீசிறிய காற்றிற் சுழலும்படி, நிலைபெற மிகவுமுயர்ந்துள்ள பொன் மலையாகிய மேருபர்வதமானது பெரிய ரெக்கையை விரித்துப் பறந்துசென்றதுபோல மிக்க வலியமைந்துள்ள கருடன் (அமிர்தங் கொண்டுவரவும் இரையுண்ணவுங்கருதி) ஆகாயத்திற் பறந்து சென்றனன். எ-று.

விரித்த வாயினை விண்டொடர் வரைமுழை யென்ன
வுருத்த வெஞ்சின வேடராங் கொருங்கடைந் திடலுங்
கருத்தி னுன்மறை கிடந்தவன் புகுதலுங் கனற்ற
வருத்தி யோடவன் றனையுமிழ்ந் தெயினரை யயின்றான்.

(இ-ள்.) திறந்திருக்கின்ற வாயை ஆகாயமளாவிய மலைக்குகைபோல அங்காத்து, கண்டோர் அஞ்சத்தக்க கொடிய கோபத்தையுடைய வேடர்கள் கடற்கரையிலே கும்பலாகக்கூடி, அவ்வாய்க்குள்ளே வரவும், மனத்தினால் வேதங்களைக் கற்ற ஓர் வேதியன் (அவர்களுடனே) வாய்க்குள் புகுதலால் தொண்டையில் சுட (அதுகண்ட கருடன், தாய்சொல்லிய விஷயத்தை நினைத்து) அவ்வந்தணனை ஆசையுடனே உமிழ்ந்து வேடுவரைப் புசித்தான். எ-று.

இவ்வகையாக வேடர் கூட்டத்தைப் புசித்தும் பசிதணியாத கருடன், தன் தாய் சொல்லியபடியே பிதாவாகிய காசிபப்பிரமாவைக் கந்தமாதனகிரியையடைந்து கண்டு, அமுதத்தைத் தேவலோகத்தினின்று பெற்றுவரத்தக்க வரத்தைப்பெற்று "என் பசியைத்தணிக்கவேண்டும்" என்றுகேட்க, காசிபர் "விசுவாவசுவெனுமந்தணன், தன்தம்பிகேட்ட சகோதரபாகத்தைகொடாமல் யானையாகுக வென்றுசபிக்க,இளையோன் தமையனைக் கூரும மாகுகவெனப் பதில்சாபங்கொடுத்தான். இவர்களிருவரும் அவ்வாறு பிறவியடைந்தும் பகைமை நீங்காது கடலிற் போர்செய்கின்றனர் அவர்களையுண்டு பசியாறுக" என, கருடன் ஆகாயத்திற்பறந்து அவவிரண்டையுங்கண்டு அவற்றைத் தூக்கிக்கொண்டு ஓர் வனத்திலுள்ள பெரிய ஆலமரக்கிளையிலுட்கார, அது தாங்கமாட்டாமல் நூறியோசனைப் பரப்போடு முறிந்து பூமியில்விழ, அதிலோரங்குலவளவுள்ள வாலகில்லியர் தவஞ்செய்தல்கண்டு அஞ்சி கந்தமாதனமடைந்து பிதாவின்பால் சொல்லி அவரால் வாலகில்லியர்களை விடுப்ப அவர்கள் வியந்து சென்றனர். கருடன் இமாசலத்தருகில் நிர்மானிடகிரியில் ஆலமரக் கிளையை விட்டு அவ்விரண்டையும் இமோற்கிரியிற் கொண்டு போய்ப் புசித்துப் பசிதணிந்தான் என்பது பாரதவரலாறு இதனை.

ஆதிபர்வம் - கந்தமாதனச்சருக்கம்.

"தந்தை தன்னிரு தாள்களிற் றன்சிர முறுத்தி
யிந்த வான்பிணி நீக்குவ தெவ்வண மிதில்வாழ்
வுந்து வேதியர் நீக்குவ தெவ்வண முரைத்த
முந்து நல்லுரை யெவ்விடத் திருந்தனு முறையே.

என் றுரைத் துளமைந்தனுக் கிருடியு மிரங்கி
வென்றி மிக்குள வாலகில் லியர்சினை விடுத்துச்
சென்றி டத்திரு வுளங்கொடு செங்கர முகிழ்த்தா
னன்று மற்றவர் மைந்தனை வாழ்த்திவிட் டகன்றார்.

நானி லத்திடை பனிக்கிரிக் கொருபுடை நணிக்கர்
மானி டக்கிரி யுளதவண் வடசினை விடுத்து
மான நற்கிரி யிமயமே லிருந்திடு வண்மைய
போன கதியினைப் புசிக்கநீ யெனறனன் புனிதன்" என்பதனுலுணர்க.

ஏழ்த டங்கிரி யேழ்கட லேழுல வரைப்பும
பாழி யஞ்சிறைக் காற்றினுற பருவர லெய்த
வூழி வெங்கனல சிறையொடு புகுந்ததென றும்பர்
மாழ்கி நெஞ்சழிந் தலமர வானகத் தடைந்தான்.

(இ-ள்.) விசாலமாகிய ஏழுபர்வதங்களும் சப்த சமுத்திரங்களும ஏழுலகங்களும், பெருமைதங்கிய அழகிய சிறகின் காற்றினுல் துன்பமடைய கொடிய பிரளயகாலாக்கினி சிறகுகொண்டு பறந்துவந்ததென் றுகருதிக்கலங்கி மனம்வருந்தித் தேவர்கள் துன்புறும்படி தேவலோகத்தை யடைந்தான் (அமுதங்கொண்டுவரும்படிச் செல்கின்ற கருடன்). எ-று. (௨௦)

அடைந்த வான்சிறைக் கலுழனை யடர்த்துமென் றெண்ணி
மிடைந்து வானவர் சூழ்வர விண்ணவர்க் கிறைவன்
றொடர்ந்து வண்டினம படுகவுட் சூழிமா முகத்த
கடங்கொள் சீற்றவெங் கனல்விழிக் களிற்றின்மேற போந்தான்.

(இ-ள்.) அவவாறு தேவலோகத்திற்கு வந்த பெரிய சிறகுகளையுடைய கருடனை எதிர்த்துப் போர்புரிவோமென்று கருதி, தேவர்கள் நெருங்கிச் சூழ்ந்துவர, தேவேந்திரன் வண்டுக்கூட்டங்கள் பினறொடர்ந்துமொய்க்கின்ற கன்னத்தையுடைய படாம்கட்டிய சிறந்த முகத்தையுடைய மதப்பெருக் கமைந்த கோபமாகிய கொடிய அக்கினியைச்சிந்தும் கண்களையுடைய ஐராவதமெனனும் பட்டத்துயானைமேல் (போர்க்கோலங்கொண்டு) புறப்பட்டான். எ-று.

சூழி=யானையின் முகபடாம் (௨௧)

விண்ண வர்க்கிறை கடவிய வெஞ்சினக் கடாத்த
வண்ண வங்கரி முதலிய வூர்திக ளனைத்து
முண்ண டுங்கிமெய் பதைபதைத் தொழிந்திடக் கலுழன்
கண்ண கன்சிறைக் காற்றினுற் களத்திடைக் கவிழ்ந்த.

(இ-ள்.) அமரர்கட்குத் தலைவனுகிய இந்திரன் ஏறிச்செலுத்திய மிகுந்த கோபத்தையும் மதசலத்தையுமுடைய சிறப்புற்ற அழகிய ஐராவதம் முதலாகிய (ஏனைய தேவர்களேறிவந்த) வாகனங்களெல்லாம் மனங்கலங்கி உடல்நடுங்கி யொழியும்படி கருடனது இடமகன்ற பெரிய சிறகுகளினின் றுண்டாகிய காற்றுவேகத்தினுல் (ஒன்று கூடிவந்த) போர்க்களத்தில் வீழ்ந்தன. எ-று. (௨௨)

ஈறில் வானவர் நடவிய வூர்திகள் யாவுஞ்
சூறை நீள்வளிப் பட்டமென் சருகெனச் சுழன்று
வேறு வேறுபோய் வீழ்தலும விரிசிறைக் கலுழ
னூறு தீஞ்சுவைத் தெள்ளமிர் துறையுளி லுற்றுன.

(இ-ள்.) (கற்பகாலத்திலன்றி) மரித்தலில்லாத தேவர்கள் ஏறி நடத்தி வந்த வாகனங்களெல்லாம் பெரிய சுழல்காற்றி லகப்பட்டுக்கொண்ட மெல்லிய சருகுபோல, சுழன்று தனித்தனியே சென்று (பூமியின்பேரில்) விழுந்துவிடவும், பரந்த சிறகுகள்பொருந்திய கருடன் ஊற்றெடுக்கின்ற மதுரம்பொருந்திய உருசியையுடைய தெளிவாகிய அமிர்தமானது உள்ளவிடத்தில் சேர்ந்தனன். எ-று.

தணிவ ருஞ்சினத் தழல்விழித் தாழ்சிறைக் கலுழ
னணுகு மெல்லணுப் புகுதினு நூறுநூ றாகத்
துணிசெ யும்படி சுழல்வர மயன்முன மமைத்த
மணிநெ டுஞ்சுட ராழியை நோக்கினன் மருணடான்.

(இ-ள்.) தணிதலில்லாத கோபத்தையும், தீப்பொறி சிந்தும் விழியையும், நெடிய சிறகுகளையுமுடைய கருடன், நுண்மையாகிய மெல்லிய அணுக்கள் உட்புகுந்தாலும் அனேகநூறு துண்டுகளாய்க் கண்டிக்கும்படி சுழல,தேவதச்சன் பூர்வத்தில் நிருமித்துவைத்த அழகிய பெரிய சோதிமயமான சக்கரத்தைப்பார்த்து மதிமயங்கினன். எ-று.

அணு என்பது கண்ணுற்காணற்கரிய ஓர் சிறுதுண்டு.

அருந்து மாறமிர் தெடுத்திடற் கடைந்தன னல்லன்
பொருந்து கற்புடை மகளிரைப் பொருவில்தந் தையினை
வருந்தி யீன்றநல் லன்னையை மகிழ்ந்தினி தளிப்பான்
புரிந்த பாவமும் பூத்திடா தீதென வெண்ணி.

(இ-ள்.) யான் புசிக்கும்படி இவ்வமிர்தத்தை யெடுத்துக்கொண்டு போக வந்தேனில்லை. (ஆனல் என் தாய் செய்யும் ஏவலை விலக்கற்குவந்தேன்) நன்மை பொருந்திய கற்புடைய மாதரையும், சமானமில்லாத பிதாவையும், (பத்துமாதஞ் சுமந்து) வருத்தமுற்றுப் பெறறெடுத்த மாதாவையும் ஆசைகொண்டு இனிதாகக் காப்பாற்றுவோன் (அதினிமித்தமாகச்) செய்யும் தீவினைகளும் துனபுறுத்தா என்று இதனை மனதிற்கருதி. எ-று.

இது முதலிரண்டு பாடல்கள் குளகம்.

புனிற்று வெண்பிறைக் கண்ணியன் பூங்கழ லன்றி
மனத்தின் மற்றொரு கடவுளை வழிபடே னுயி
னினைப்ப தற்கரு முருவொடு நிகழ்ந்திடல் வேண்டு
மெனக்க ருத்திடை யெண்ண லு மவ்வுரு வியைந்தான்.

(இ-ள்.) தாவள்யமான இளம்பிறைச் சந்திரனை மாலையாகத்தரித்த சிவபெருமானது பொலிவமைந்த வீரக்கழலணிந்த திருவடிகளையன்றி வேறொரு கடவுளை மனதினாலேயும் வழிபாடுசெய்யாதவனுனல்,நானிப்போது எண்ணுதற்கு மரு

மையாகிய (மிகச்சிறிய) வடிவத்துடனே யிருக்கவேண்டுமென்று தனது மனதில் நினைத்தவுடனே அத்தன்மைத்தான உருவம் பொருந்தினன் கருடன். எ று. ()

அணுவு மால்வரை போன்மெனு நுண்ணுரு வதனுற்
பணிசெய் நேமியுட் புகுந்தியந் திரப்பொறி பறித்துத்
தணிவ ருஞ்சுவைத் தெள்ளமு தட்டிய தசுமபைத்
துணிவொ டுங்கவர்ந் தேகினன் வானவர் துயர.

(இ - ள்.) அணுப்பிரமாணத்தையும் மலையைப்போலெண்ணத்தக்க, அதி நுட்பமாகத் தனக்குண்டாகிய உருவத்துடன், (எப்போதுஞ்) சுழன்றுகொண்டிருக்குஞ்சக்கரத்துக்குள் நுழைந்து, யந்திரத்தின் பொறியைப் பறித்துவிட்டு, தெவிட்டாத சுவையையுடைய தெளிந்த அமிர்தத்தை நிரப்பிய குடத்தைத் தைரியத்துடன் கைப்பற்றிக்கொண்டு தேவர்கள் துனபுறும்படி சென்றனன். எ-று.

அவிரொ ளிப்பசும் பொன்னிலத் தமரர்கள் யாருந்
துவர்ப டுந்திரைப் பாற்கட லமளியிற் றுயில்வோன்
குவலை யம்பொதி குணைகழற் செய்யதா மரையை
யுவகை யிற்றெழு தடிகள்கேட் டருள்கவென் றுரைப்பரீர்.

(இ-ள்.) ஒளிபரந்த பசிய பொன்னுலகமாகிய தேவலோகத்திலுள்ள அமரர்களெல்லாம் பவளங்களை வீசுகின்ற அலைகள் பொருந்திய பாற்கடலாகிய க்ஷீராப்தியிலே (சேஷ) சயனத்தின்பேரில் (யோக) நித்திரைசெய்கின்ற திருமாலினது உலகங்களையளந்த ஒலிக்கின்ற வீரகண்டாமணிதரித்த சிவந்த தாமரை போன்ற பாதங்களை ஆசையோடுபணிந்து, பெருமானே ! கேட்டருளவேண்டுமென்று கூறுவாராயினர். எ று.

திருமால் திதிக்கடவுளாதலின் தேவர்கள் பணிந்து அடிகள் என்று விளித்தார் என்க. (உஅ)

இமிழ்த டங்கடல் கடைந்துநீ யெமக்குமுன் னீந்த
வமிழ்தம் யாவையுங் கவர்ந்தன னொமமையு மடாத்தான்
கமலை கேள்வவென் றுரைத்தலுங் கைம்மலர் கவியா
வுமிழ்செ ழுங்கதி ராழியோ னஞ்சலென் றுரைத்தான்.

(இ-ள்.) திருமகள் நாயகராகிய விஷ்ணுமூர்த்தியே ! பிரகாசிக்கின்ற பரந்த திருப்பாற்கடலைத் தேவரீர் பூர்வத்திலே கடைந்து அடியேங்கட்குக் கொடுத்த அமுதமுழுவதையும் (குடத்துடனே ஒருவன்) எடுத்துக்கொண்டு எங்களையும் துன்புறுத்தினன் என்று முறையிட்டுச்சொல்லவும்,கையாகிய தாமரையை அபயமாகக்காட்டி, செழுமையாகிய கிரணங்களைச்சிந்துஞ் (சுதரிசனமென்னும்) சக்கராயுதமேந்திய திருமால் பயப்படாதீர்களென்று கூறினர். எ-று. (உகூ)

அலகில் சூழ்ச்சியால் வெல்குவ தன்றிமற் றவனை
விலகி வில்லுமிழ் படையினுல் வெலற்கரி தென்ன
வுலகெ லாம்வயிற் றொருபுடை யிடத்திய வுர்வோன்
கலுழன் முன்னர்வந் தெய்திமற் றினையன கழறும்.

(இ-ள்.) சமஸ்த லோகங்களையும் வயிற்றின் ஒருபக்கத்திலடக்கிய வலியோனாகிய விஷ்ணுமூர்த்தி, குற்றமில்லாத தந்திரத்தினால் வெல்லவேண்டுவதல்லாமல் அவ்வமுதங்கொண்டு போகிறவனை, விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற ஆயுதங்களால் ஜெயித்தல் அருமையென்றெண்ணி, கருடனுக்கு முன்னேவந்து தோன்றி, பின் வரும இதத்தன்மைத்தான வார்த்தைகளைச் சொல்லுவார். எ று. (கo)

வயிர வாட்படை யுழவனை வென்றுவா ளமிர்தச்
செயிரி லின்னமு தெடுத்தனை போகிய திறலாற்
பயில்கொ டுஞ்சிறைக் கலுழயா முவந்தனம் பகர்தி
யியையு மோர்வரந் தருதுமென் றிசைத்தன னெடியோன்.

(இ-ள்.) வச்சிரவாளாயுதமேந்திய தேவேந்திரனை வாட்போரினால்வென்று குற்றமில்லாத இனிய அமிர்தகும்பத்தை எடுத்துக்கொண்டவனாகிச் செல்கின்ற பராக்கிரமத்தோடு விளங்குகின்ற கொடியசிறகுகளையுடைய கருடனே! (உனது வல்லமை மிகுதிக்காக) நாம் களித்தோம். நீ விரும்பிய ஒரு வரத்தைக் கொடுப்போம் சொல்வாயாக என்று நெடிய திருமாலானவர் கூறினர். எ று. (கக)

மருவு யிர்த்தபூந் துளவினோய் வரமிரண் டுனக்குத்
தருவ னீதால வேண்டுவ தென்னெனச் சாற்றுந்
திருகு சீற்றவெங் கலுழனைச் செங்கண்மா னோக்கி
விரைவி னவ்வரந் தருகென வியப்பொடு முரைத்தான்.

(இ-ள்.) வாசனை வீசும் அழகிய துளவமாலையணிந்த விஷ்ணுமூர்த்தியே! யான் உமக்கு வேண்டிய இரண்டு வரங்களைக் கொடுப்பேன், நீ எனக்குதவவேண்டியது என்னவிருக்கிறது என்று சொல்லுகின்ற பெருங்கோபத்தையுடைய கொடிய கருடனை, சிவந்த தாமரைமலர்போன்ற விழிகளையுடைய திருமால்பார்த்துச் சீக்கிரத்தில் அவ்வரங்களைத் தருவாயாகவென்று ஆசையுடன் கேட்டனர். எ-று.

கேட்ட நல்வர மளிப்பல்யான் கிளத்தென வென்னைத்
தோட்ட டத்தினிற் சுமப்பதோர் வரமமிழ் தாவிற்
கூட்டி டாதவை யொழிப்பதோர் வரமென முகுந்தன்
வேட்டி ரத்தலு மளித்தனன் வெகுசினக் கலுழன்.

(இ-ள்.) நீ கேட்ட நல்லவரங்களை யான் கொடுப்பேன் கேள்என்று கருடன் சொல்ல, என்னைத் தோளின்பேரில் சுமந்து (வாகனமாக) நிற்பது ஒருவரமும் (நீ கொண்டுபோகும்) அமிர்தத்தைப் பாம்புகட்கு உண்பிக்காமல் அவற்றை விலக்குவது ஒருவரமும் வேண்டுமென்று திருமால் விரும்பிக்கேட்கவும், கொடிய கோபத்தையுடைய கருடன் அவ்வாறே வரங்கொடுத்தனன். எ-று.

கருடன் அமிர்தமெடுத்துக்கொண்டு திரும்புகையில் தேவர்கள் வேண்டுகோளால் திருமால் எதிர்க்க இருவருக்கும் பலநாள் நிகழ்ந்தபோரின் இருவரும் தோல்வியடையாமைநோக்கித் திருமால் வரங்கொடுப்பேனெனத் தந்திரஞ்செய்ததாகக் கூறுவது காஞ்சிபுராணம்.

முத்தீசப் படலம்.

"ஏழ லேக்கிய முக்கா ளிருவரும்
தாழ்வொன் றினைறிச் சமாபெரி தாற்றுதி
யாழி மாய னகமகிழ்ந் தன்புகூர்
பாழி வெஞ்சிறைப் பார்ப்பினை நோக்கியே.

வன்டுள் வேந்தனின் வீர மகிழ்ந்தன
னென்பு டைவரங் கொள்ளென வீங்கிய
னுனபெ ருந்திறற் குன்மகிழ்ந் தேன்மற்றென்
றன்பு டைவரங் கொள்ளெனச் சாற்றினுன." என்பதனுலுணாக.

மாய வன்கொள வரமிரண் டினிதினின் வழங்கிக்
காய்சி னத்தவா ளரவொடுங் கத்துரு வுவப்பத்
தூய தீஞ்சுவை யமிழ்தினைத் துனைவினிற் கொடுபோய்த்
தாயின் வெஞ்சிறை விடுத்தனன றடஞ்சிறைக் கலுழன்.

(இ-ள்.) திருமால் (விரும்பிக்கேட்டாற்போல)கொள்ளும்படி அத்தகைய இரண்டுவரங்களையும் இனிதாகக்கொடுத்து, பெருங்கோபத்தையுடைய ஒளிவாய்ந்த பாம்புகளுடன் கத்துருவானவள் களிப்படையும்படி, பரிசுத்தம் பொருந்திய மதுரமாகிய சுவையையுடைய அமிர்தத்தை விரைவிற்கொண்டுபோய், தாயாகிய விநதையின் கொடிய சிறையிருந்தேவல் புரிதலை விடுவித்தனன். விசாலமான சிறகுகளையுடைய கருடன். எ-று. (௩௪)

இனிய தெள்ளமு தரவின முணத்தரு கெனலும
புனித முள்ளவர்க் கல்லது பொருந்துறா தென்னத்
துனைவின் வாளராத் தூயநீ ராடுவா னகல
வனைய பொற்குடந் தருப்பைமேல வைத்தன னகன்றான்.

(இ-ள்.) இனிமையாகிய தெள்ளிய அமிர்தத்தைப் பாம்பு கூட்டங்கள் உண்ணும்படி கொடு என (கத்துரு) கூறவும், பரிசுத்தமுடையவர்களுக்கல்லாமல் அஃது உண்ணப்படாதென்று (கருடன்) கூற, ஒளிதங்கிய பாம்புகளெல்லாம் சீக்கிரத்தில் பரிசுத்தமாகிய நீராடும்படிசெல்ல, அமுதம்பொருந்திய பொற்கும்பத்தைத் தருப்பைச் சுருணையின்பேரில் வைத்துப்போயினன் (கருடன்) எ-று. ()

அண்ண லஞ்சிறைப் புள்ளர சேகலு மமுதைத்
தண்ணங் தாமரைத் தாக்கணங் கிளமுலைச் சாந்த
மண்ணு நீள்புயத் தண்ணறன் கையினுல் வவ்வி
விண்ண வர்க்கிறை மகிழ்ந்திட விரைவினி லளித்தான்.

(இ-ள்.) பெருமைவாய்ந்த அழகிய சிறகையுடைய பட்சிராஜனுகிய கருடன் செல்லவும், குளிர்ச்சிதங்கிய அழகிய தாமரைமலரில் வசிக்கும் திருமகளின் இளந்தனங்களிற்பூசிய கலவைச்சாந்தம்படியும் நெடிய புயங்களையுடைய விஷ்ணுமூர்த்தியானவர் அவ்வமிர்தத்தைத் தமது கரத்தாலெடுத்துக்கொண்டுபோய் தேவேந்திரன் களிப்பெய்தும்படி சீக்கிரத்திற் கொடுத்தனர். எ-று. (௩௬)

கரிய மேனியன் செய்பதா மரைத்தடங் கணணன்
விரைவி னின்னமி ரெடுத்துவிண் போகிய துணரா
தரவம யாவையு மவவுழி யடைந்து தெள் ளமிர்தம
பருக நேடலுங் காணகலா தாருயிர் பதைத்த.

(இ-ள்.) நீலநிறமமைந்த திருமேனியையுடைய பரந்த செந்தாமரைக்கண்ணனாகிய திருமால் இனிய அமிர்தத்தைச் சீக்கிரத்திலெடுத்துக்கொண்டு தேவலோகஞ்சென்றதை யறியாமல், பாம்புகளெல்லாம (நீராடிப்பரிசுத்தமாகி) அவ்விடத்தில்வந்து தெள்ளிய தேவாமிர்தத்தைக் குடிக்கும்படித் தேடிப்பார்க்கவும் காணாமல் அருமையாகிய உயிர் பதைத்தன. எ-று

கருடன் அமுதெடுதது வருகையிலேயே விஷ்ணுமூர்த்தியின் சூழ்ச்சியால இந்திரன பினதொடர்ந்துவநது அமிர்தத்தை யெடுததுக்கொண்டு போயினனென்பது. பாரதம்.

அமுதங்கொணர்ந்த சருக்கம்.

"அவ்வண்ணம் வரமுதவி யாசி கூறி யமரரெலா மிகமகிழ்ந்தா ரரியு மீண்டான்
மைவண்ண மகவானு மருவ மாகி வரவயினன் புவிசாரநதே யமுதங் காட்டி
யுய்வண்ணத் தாயேவல் விலக்கி யாங்க ணுறுதருப்பை மிசையமிர்த முற்று நீவிர்
மெய்வண்ணஞ் சுசியாய்வந் தருந்து மெனறே விளம்பியிவ னன்னையுடன் மீண்டு
[போனான்."

"மற்றவனுங் ககன்றிடலுஞ் சேட னாதி மாசுணங்க ணீராடி வருவான் போனார்
கற்றமக பதியணைந்தே யமுதந் தன்னைக் கவர்ந்தகன்று ககனத்திற் காவ லாக்கிக்
குற்றமற வினிதிருந்தான் பினனர் மீண்ட குமரரமு தினைக்காணார் குறைந்துவாடி
யுற்றதருப் பையைநாவான் மேனி நீவ வுரகங்கட் கிருநாவென் றுற்ற தம்மா."—
என வருவனவற்றா னுணர்க. (௬எ)

உருத்து நெஞ்சழன் றுண்ணுமின் சுவையமு திருந்த
தருப்பை பன்முறை நக்கலாற் றழல்விழிப் பாம்பின்
விரித்த நாக்கடை பிளந்திரண டாயின வினதை
யருத்தி கூர்ந்துபுள் ளரசொடுங் காசியி னடைந்தாள்.

(இ-ள்.) கோபித்து மனங்கொதித்து, உண்ணத்தக்க இனிய சுவையோடு கூடிய அமுதங்கொண்டுவந்து வைத்திருந்த தருப்பைப்புல் மணையைப் பலதரம் நக்குதலால், தீப்போன்ற விழியையுடைய பாம்புகளின் விரிவாகிய நாவினது முனைகள் பிளவுற்று இரண்டு நாக்குகளாயின. வினதையானவள் ஆசைமிகுந்து பட்சிராஜனாகிய கருடனென்னும் தன் புத்திரனோடு காசி க்ஷேத்திரத்திற்குச் சென்றாள். எ-று. (௬அ)

அடைந்து நற்கடோற் காதபன் றனைவழிப் படலால்
மடந்தை நாமம்வெங் கதிரவற் காயது வலத்தாற்
படங்கொள் சேடனைப் பறித்துமே லணிந்தவெங் கலுழன்
தொடர்ந்த வன்பின லிலிங்கமொன் றமைத்தடி தொழுதான்.

(இ-ள்.) அவ்வாறு காசிநகரத்தைக் குறுகி நல்ல கடோற்கதித்தனை வழிபடுதலால், அம்மங்கையினுடைய சூரியனுக்கு இருபுடையமைந்த ஆதிசேடனைத் தனது வல்லமையாற் பிடித்துச் சட்டத்தினணிந்துகொண்டிருக்கும் வெவ்விய கருடன் நீக்கமற்ற அன்போடு அங்கோர் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கினான். எ-று. (௩௯)

கலுழ னுற்றிய காமரு தவத்தினை வியந்து
நிலவு தூங்கிளம் பிறையணி நீள்சடைக் கடவு
ளலகில் நல்வர மளித்தன மடியரிற் சிறந்தோ
னுலகு பூத்தசெந் தாமரை யுந்தியங் கடவுள்.

(இ-ள்.) கருடனசெய்த அசைவற்ற தவத்திற்குக் களித்து, சந்திரிகைவீசுகின்ற இளம்பிறையைப் பட்டணிந்த செவ்விய சடையையுடைய சிவபெருமான் குற்றமில்லாத நல்ல வரங்களைக்கொடுத்து (பின் வருமாறு திருவாய்மலர்ந்தருளுகின்றார்) நமது அடியார்களிலெல்லாம் மேம்பட்டவன் (யாரெனில்) எல்லாவுலகங்களையும் (உந்திக்கமலத்தால்) பூத்தளித்த அழகிய திருமால். எ-று.

" கடம்பவனச் சொக்கருக்குக் கண்ணன்றான வேறோ
இடம்பெரிய கண்ணொன்றை யீந்தான்—உடம்பதனிற்
சொம்பாதி யானான் சுமக்க வெருதானான்
அம்பானான் றேவியுமா னான்."—என்னும் காளமேகப்புலவர் கருத்தின்படி திருமால் சிவபெருமானுக்குக் கண்மலர் சாத்தியும், அவருடலி னொருகூறும் அம்பும் சத்தியுமாயும் நிற்றலின் 'நம்மடியரிற் சிறந்தோ - னுலகு பூத்தசெந் தாமரை யுந்தியங் கடவுள'—என்றார். (௪0)

ஆங்க வற்குநீ யூர்தியா யடைதுமென் றறைந்த
தீங்கி னல்வர முவந்தனஞ் செல்கெனக் கலுழன்
வீங்கி னன்றடம் புயமுளங் குளிர்ப்புற விழிநீர்
தூங்க மெய்ம்மயிர் சிலிர்ப்புறத் தொழுதிவை சொல்வான்.

(இ-ள்.) அத் திருமாலுக்கு வாகனமாக வருவோமென்று கூறிய குற்றமில்லாத நல்ல வரத்திற்குக்களிகொண்டோம்; செல்லக்கடவாயென்று (சிவபெருமான்) திருவாய்மலர்ந்தருள, கருடன் தன்பருத்த புயங்கள்பூரித்து மனம் குளிர்ச்சியெய்தும்படி கண்களில் ஆநந்தபாஷ்பஞ் சொரியவும் உடலிலுள்ள உரோமங்கள் புளகிக்கவும் வணங்கி இவ்வாறு சொல்லுகின்றான். எ-று. (௪௧)

ஐய நின்னுடை யடியர்தம் மடியர்பூங் கமலச்
செய்ய சேவடி சென்னியிற் சூட்டுத லடியற்
கெய்தி நின்றதோர் கடனென விருகரங் கூப்பி
மையில் பாற்கடற் றுயின்றவன் மருங்குசென் றடைந்தான்.

(இ-ள்.) ஐயனே! தேவரீரது அடியார்க்கடியர்களது தாமரைப்பூப்போலுஞ் செவ்வையாகிய சிவந்த பாதங்களைச் சிரமேற் றரித்துக்கொள்ளுதல், காயே

னுக்கு உண்டாயிருக்கின்ற ஒரு கடமையாகும் என்று இருகைகளையுங்குவித்து வணங்கி, குற்றமில்லாத திருப்பாற்கடலில் யோகநித்திரைசெய்யுந் திருமால் பக்கலில் போய்ச்சேர்ந்தனன். (கருடன்) எ - று. (௪௨)

கடோற்காதித்தன் கருடேசன் கதைகளுரைத்த அ - ம.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௪௧௬.

௨
சிவமயம்.

ஐம்பத்தோராவது,

## அருணாதித்தன் முதலாதித்தர்

### கதைகளுரைத்த அத்தியாயம்.



கல்லெ னார்ப்புடைக் கருங்கடல் குடங்கையிற் கவரா
விலவ லன்றனைச் சினவிய விருந்தவ முனிவ
மல்கு சீரரு ணதபன் கதையினை வகுத்துச்
சொல்வல் கேளெனக் குருதிவேற் பண்ணவன் சொல்லும்.

(இ-ள்.) கல்லென்கின்ற ஆரவாரித்தலுடைய கரியசமுத்திரத்தை உள்ளங்கையிலேந்தி, வில்வலனைக் கோபித்துக்கொன்ற பெரியதவத்தையுடைய அகத்தியமுனிவனே! கீர்த்திமிகுந்த அருணாதித்தன் சரித்திரத்தை விளக்கிச்சொல்லுவேன் கேட்பாயாகவென்று, உதிரந்தோய்ந்த வேற்படையேந்திய ஸ்ரீ முருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ - று.

அகத்தியர் சமுத்திரத்தைக் கையிலேற்று ஆசமனஞ்செய்ததும், வில்வலன்-வாதாவிகளை வதைத்ததுமாகிய சரிதங்கள் முன்கூறியுள்ளன. ஆங்கவற்றைக் கண்டுகொள்க. (௧)

காமர் பேரெழிற் கத்துரு காசிப னருளால்
நாம மைந்தரோர் நூற்றுவர்ப் பயந்தன ணலங்கொள்
வாம மேகலை வினதையு மம்முனி வரத்தா
லேம நல்லெழிற் புதல்வரோர் மூவரை யீன்றாள்.

(இ-ள்.) (கண்டோரால்) விரும்பத்தகும் பேரழகுடைய கத்துருவென்பவள் (தனது கணவனாகிய) காசிபமுனிவரது கருணையால், அச்சத்தைத் தரும் புதல்வர்கள் ஒரு நூறுபேரைப் பெற்றாள்; (அதுகண்ட அவள் சகோதரியும் சக்களத்தியுமாகிய) நன்மைபொருந்திய அழகிய மேகலாபரணமணிந்த வினதையென்

பவளும் அக்காசிபமுனிவரது கடாட்சத்தினால், இன்பந்தரும் கல்வழகுடைய மூன்று மைந்தர்களைப் பெற்றாள். எ-று. (உ)

அறைபு மக்களோர் மூவரிற் கூகைமூத் ததனாற்
பறவை வேந்தெனை வைத்திடுட பரமெனச் சூழ்மி
யுறவ ரற்றலா றுறுபகற் கண்டோர் விடுத்த
லிறைமை பூண்பது தகாதெனத் தெளிவுக் சினமே.

(இ-ள்) சொல்லுகின்ற பிள்ளைகள் ஒரு மூன்றனுள் கூகை மூத்ததாதலால் அதனைப் பட்சிராஜனென்று நியமிக்கவும், வினைய பறவைகளெல்லாம் கூடி, இரத்திகமாக இறைதலாலும் பகற்காலத்திற் கண்தெரியாத குருடனாதலாலும் இதற்கு அரசத்தன்மை மேற்கொள்ளாது தகுதியுடைத் தன்றென்று தடுத்து விட்டன. எ-று. (ங)

முன்ன ளித்ததன கூகையை யிகழ்ந்தியி முனிவால்
மன்னு மாயிரம் வருடமுஞ் செல்லுமுன் வலிதிற்
பின்ன ளித்ததன் முட்டையை யுடைத்தனள் பிறங்கித்
துன்னு மென்குறங் கொழிந்திடத் தோன்றின னருணன்.

(இ-ள்) (விநதையென்பவள்) முதலிற்பெற்ற தனது கூகைப்பிள்ளையை (பறவைகள்) தாழ்த்திக்கூறிய கோபத்தால், நிலைபெற்ற ஆயிரவருடகாலமும் கழிவதற்குமுன்னரே இரண்டாவது ஈன்றதன முட்டையைப் பலாத்காரமாக வுடைத்தாள்; விளங்கி நெருங்கிய மெல்லிய தொடையின்றி அருணன் (அம்முட்டையினின்று) தோன்றினன். எ-று (ச)

சீற்ற மிக்குள வருணனுங் கன்னியைச் சினவி
யாறற வட்குநீ சிலதியாய் வைகெனச் சாப
மேற்றல் தீருவ தென்றெனு மற்றையிம முட்டை
தோற்று மைந்தனின் றுயரொழித் திடுமெனச் சொன்னான்.

(இ-ள்) (தனது அவயவங்கள் நிரம்பப் பெறுமுன் முட்டையை யுடைத்தமையால்) கோபமதிகமாகவுள்ள அருணன் தனது தாயாகிய விநதையைக் கடிந்து, நீ புனசக்களத்தியாகிய கத்துருவைக்குத் தோழியாயிருக்கக்கடவாய் என்று சபிக்க, விநதை இச்சாபமேற்றலின் விமோசனகால மெப்போதென்று கேட்க, அருணன் (இன்னும்வெளிப்படாதுள்ள) மூன்றாவது முட்டையினின்று பிறக்கும் புதல்வன உன் வருத்தத்தை விலக்குவானென்று கூறினன். எ-று.

இம்மூன்றாவது முட்டையினின்று தோன்றிய கருடன் தாய்ச்சிறையை அமுதங் கொணர்ந்தளித்து விடுவித்தானென்பது முன்னத்தியாயத்திற் காணக.

விநதை சிறையிருக்கையிலேயே காசிபமுனிவரருளால் கருடனைப் புதல்வனாகப் பெற்று அவனுக்குத் தனது துன்பத்தைக் கூறினதாகக் காஞ்சிபுராணங் கூறுகின்றது.— இதனை முத்தீசப்படலம்.

"ஆசின மெய்த்தவ மாற்றி யரும்பெறற்
காசி னனருள் பெற்றுக கழலினை
மாசி லாத மகவென வன்றனை
பேசி ஞானம மகற்கித டெற்றிட."—என்பதனுணர்க. (ரு)

இனைய கூறிநற் காசியின் விரைவினி லெய்திக்
கனைகதிர்ச்சுடர்ப் பழிச்சலுங் கதிரவ னீன்றி
யெனது தேர்விடு பாகனீ யாகுதி யென்ன
வனைய வாற்றினு லாதவற் கவன்பெய ரறைந்தார்.

(இ-ள்.) இவ்வகைச்சொன்னவார்த்தைகளைச் சொல்லி நல்ல காசிநகரத்திற்கு விரைவிற்சென்று பிரகாசிக்கின்ற கிரணங்களையுடைய சூரியனை வழிபடவும், சூரியன் (அருணனுக்குப்)பிரசன்னமாய், நீ எனது தேரைச்செலுத்தும் சாரதியாகுக என்று வரங்கொடுக்க, அக்காரணத்தினாலே சூரியனுக்கு அவன் பெயராகிய அருணாதித்தன் எனப்பெரியோர் சொல்லினார். எ-று. (சு)

அருணை வெங்கதிர்க் கதையினைத் தெருளுற வுரைத்தேங்
கருணை யாலவிருத் தாதபன் கதையினைக் கேளென்
றுருவ வாணகைக் குறமகள் முலைமுக டுழக்குந்
தெரியல் தாழ்புயன் குறுமுனிக் கினையன செப்பும்.

(இ-ள்.) வெவ்விய அருணாதித்தன் சரித்திரத்தை விளங்கும்படி யுபதேசித்தோம். ஆசையுடனே விருத்தாதித்தன் விருத்தாந்தத்தையுங் கேட்பாயாகவென்று, அழகிய ஒளிவாய்ந்த தந்தபந்தியையுடைய குறவர்குலப் பெண்ணாகிய வள்ளிநாச்சியாரது தனபாரங்களிற்கலக்கின்ற கடப்பமலர் மாலையணிந்த புயங்களையுடைய ஸ்ரீ குமாரக்கடவுள் அகத்தியமுனிவருக்கு இவ்வகையாகத் திருவாய் மலர்ந்தருளுகின்றார். எ-று (எ)

கன்னி யம்பெடை வண்டொடு ஞிமிறுகண் படுக்கும்
புன்னை யம்பொழில் சூழ்தரு காசியிற் பொருவில
பன்னு கேள்விய னருமறைக் கடலிடைப் படிந்தோன்
மன்னு நாமமும் விருத்தனென் றுளனொரு மறையோன்.

(இ-ள்.) கெடாத அழகுடைய பெண்வண்டுகளுடன் ஆண்வண்டுகள் துயில்கின்ற அழகிய புன்னைமரச்சோலைகள் சூழ்ந்துவிளங்குங் காசி க்ஷேத்திரத்தில், சமானமில்லாமற் சொல்லுகின்ற விசாரணையையுடையவனும், நான்குவேதமாகிய சமுத்திரத்தில் மூழ்கினவனும் நிலைபெற்றுள்ள விருத்தனென்னும் பெயருடையவனுமாக ஒரு பிராமணனிருந்தான். எ-று. (அ)

தமர வெண்டிரைக் கங்கையந் தடங்கரை தன்னிற்
குமரி வண்டினங் கூட்டுணுங் கமலநா யகனை
யமர நெஞ்சகத் திருத்திமெய்த் தவம்புரிந் ததனாற்
றிமிர மேய்ந்தொளிர் செங்கதிர்ச் செல்வன்வந் தடைந்தான்.

(இ-ள்.) சப்திக்கின்ற தாவள்யமாகிய அலைகளையுடைய அழகிய கங்கா தீரத்தின் விசாலமாகிய கரையிலே இளமைவாய்ந்த வண்டு கூட்டங்கள் கூட்ட

மாகி விருத்தன்றனின்ற (தேன்பொருந்திய) தாமரைமலரின் தலைவனாகிய சூரியனை மனதில் விற்றிருக்கும்படி தியானித்து, உண்மையாகிய தவத்தைச்செய்த காரணத்தினால், அந்தகாரத்தை யடக்கிப் பிரகாசிக்கின்ற சுவர்த கிரணங்களையுடைய சூரியபகவான (விருத்தனென்னும் பெயரையுடையவன்) வந்து தோன்றினன்.

தாள தாமரை நாயகன் றாளினை வணங்கிக்
காளை பட்டு நவத்தறு கென்றதுங் கதிரோன்
வேளை யுற்று நவாத்தனை விருத்தனென் றுரைப்ப
நாளு நல்விருத் தாதப னென்றுபேர் நவின்றார்.

(இ-ள்.) தாளத்தையுடைய தாமரையாகிய மலருக்கு நாயகனாகிய சூரியனது இரண்டு பாதங்களையும் பணிந்து, அக்கிப இளமைப்பருவம் (அழிபடுவதற்கு முன்) அருளென்று விருத்தனிடம் இரந்ததுமே, (சூரியன்) விரைவில் மனமகிழ்ந்து, அவனை நல்ல வடிவத்தைக்கொடுத்தனன். அவ்விருத்தன் களித்து வணங்கியதால் எப்போதும் நன்மை தங்கிய விருத்தாதித்தனென்னும் பெயர் சொல்லினர். (மேலோர்). எ-று. (௪௦)

ஆசில் நல்விருத் தாதபன் கதையினி துரைத்தேங்
கேச வாதபன் கதையினைக் கிளக்குவ மென்னத்
தேசு பூத்தொளிர் செந்தமிழ் முனிவரன் கேட்ப
வாச வன்சிறை விடுத்தவேற் பண்ணவன் வழங்கும்.

(இ-ள்.) குற்றமில்லாத நல்ல விருத்தாதித்தன சரித்திரத்தை இனிதாகச் சொன்னோம். இனிக் கேசவாதித்தனது சரித்திரத்தைச் சொல்லுவோமென்று, ஞானமானது பிரகாசித்து விளங்குஞ் செந்தமிழ் முனிவராகிய அகத்தியமுனிவர்கேட்கும்படி, இந்திரனது சிறையைவிடுத்த வேற்படையையேந்திய ஸ்ரீ இளையபிள்ளையார் திருவாய்மலர்ந்தருளுவார். எ-று.

வாசவன = இந்திரன. ஈண்டு இந்திரன மகனசயந்தனை யுணர்த்தியது. வாசவன் சிறைவிடுத்த வேற்பண்ணவ னென்பது.

சூரபன்மனது துன்பத்தைச் சகியாத இந்திரன், தன் மனைவி இந்திராணியைச் சீகாழியில் அரிகரபுத்திரன் காவலில் விடுத்து, தேவர் பலருடன் திருக்கயிலையையடைந்து சிவபெருமான யோகத்திருத்தலால் திருநந்திதேவர் கட்டளையிட்டபடி தரிசிக்கமுடியாது கொள காத்துக்கொண்டிருந்தான். ஒருநாள் சூரபன்மன் சகோதரியாகிய அசமுகி யானவள் தன்முகிபோடு வந்து, தவஞ்செய்திருக்கும் புலோமசையைக் கண்டு சூரபன்மனுடன சேர்ந்திருவென றழைக்க, அவள் தடுத்தலால், கையைப்பற்றி இழுத்துக்கொண்டு செல்லுகையில், அரிகரபுத்திரன் ஏவலாளராகிய வீரமாகாளர் கண்டு அசமுகி கையை வெட்டிவிட்டு இந்திராணியை விடுவித்தனர். அசமுகி தன சகோதரனாகிய சூரபன்மனிடம் நடந்ததைச் சொல்ல, சூரன் பிரமதேவனால் அவள் கையை முன்போற் செய்து மகன் பானுகோபனுக்கு விடைகொடுக்க, அவன் சதுரங்கசேனையுடனே தேவலோகத்தை நோக்கிச் சென்றான். இச்செய்தியைத் தேவர்களாலறிந்த இந்திரனமகன்

சயந்தன் தன் தாய் - தந்தை - குரு முதலானோர் ஒருவருமில்லையே யாது செய்வோமென்று ஐராவதத்திலேறிப் பல தேவர்களைத் துணைகொண் டெதிர்த்துப் போர்புரிந்து ஆற்றாதவனாய் யானைமேல் மூர்ச்சையாயினான். அப்போதவனைக் கட்டிக்கொண்டு அமராவதியைக் கொளுத்திவிட்டுச் சூரபன்மனுக்குமுன் விட்டு இந்திரனையும் இந்திராணியையுங் காணே னென்று நிகழ்ந்தவை கூற, சூரன் களித்துப் பானுகோபனைத் தழுவிக்கொண்டு மனைக்கனுப்பிவிட்டு, சயந்தனையும் தேவரையும் சிறையிவிட்டனன். பிறகு ஸ்ரீ முருகக்கடவுள் வீரவாகு தேவரைத் தூதுபோக்கிப் புத்திசொல்லியுங் கேளாமையால் அசுரர்களையெல்லாங் கொன்று தேவர்களோடு சயந்தனைச் சிறைநீக்கினார் என்பது. இதனை,

கந்தபுராணச் சுருக்கம் - அசுரகாண்டம்.

"தந்தையை வணங்கி நின்று சசியெனு மடந்தை யோடு
மிந்திரன் றனையுங் காணே னேனைய வானோர் தம்மை
யுந்துசீர்ச் சயந்தன் றன்னை யொல்லைகொண் டேற்றே னாரைச்
செந்தழற் கிந்தே னென்னத் திருமகற் றழுவிக் கொண்டான்." எனவும்

ஷை யுத்தகாண்டம்.

"அனைவர்க்கு மவற்கொண்டெச டங்கானது செய்தான்
அறுமாமுக னடல்வாகுவை யருளோடுதெ ரிந்தே
மனமுற்றிடு துயரத்தொடு சிறையின்புடை வாழும்
மகவான்மகன முதலாகிய வானோர்களை நந்தம்
முனமுய்க்குதி யெனமுன்புற வுய்த்தானவர் தொழுதே
மொய்த்தார்மிகு சூரியினை முன்னீர்கொள நல்கிச்
சினமெற்றிய பூதப்படை விண்ணோர்புடை சூழச்
செந்திற்பதி வந்தானருள் சிந்தித்திடு கந்தன்."—எனவும் வருவனவற்று னுணர்க. (கக)

காம்பி னுனிரா குவித்தசெந் தாமரைக் கண்ணன்
பூம்பு னற்றிரைக கங்கைசூழ் காசியிற் போந்து
கூம்பு கையினன் குலைழந்திடு மனத்தின னாகி
யேம்பல் மீக்கொளப் பழிச்சிமெய்த் தவம்புரிந் திருந்தான்.

(இ-ள்.) புள்ளாங்குழலோசையால் பசுமந்தையைப் (பூர்வத்திற்) சேர்த்த சிவந்த தாமரைமலர்போன்ற கண்ணையுடைய திருமால் அழகிய அலைகள்பொருந்திய நீரையுடைய கங்கையாற்றாற் சூழ்ந்த காசிக்ஷேத்திரத்தில்வந்து குவித்தகையையும் உருகிய மனதையுமுடையவராகி ஆசையதிகரிக்கும்படி வணங்கி (சிவபெருமானைநோக்கி) உண்மையாகிய தவஞ்செய்துகொண்டிருந்தனர். எ-று.

காம்பு=மூங்கில். ஈண்டு முதற்பொருளின்பெயர் ஊதுகுழலாகிய சினைப்பொருளுக்காயது. ஆதலின் முதலாகு பெயரெனவும், ஊதுகுழலாகிய பொருளின் பெயர் ஊதுதலாகிய தொழிலுக்காயதால் தொழிலாகு பெயரெனவுங் கூறலாம்.

திருமால் காம்பி ஞனிமை குவித்ததாவது.

கிருஷ்ணவதாரத்தில் கூதிர்ப்பருவத்திலே ஒருநாள் மழைபொழிகையில் பசுக்கள் சிதறியதால், ஒரு பெரிய ஆலமரநிழலிற் போய் ஒருகாலை நிலத்திலூன்றி ஒருகாலை மாறிப்பெருவிரலூன்றி நின்று முகஞ்சிறிது கோடிப்புல்லாங்குழல் வாசித்தனர். அதனால் பசுமந்தைகள் பண்டுபோற கூடின. அவ்வனத்தில் வசித்த பறவைகள், விலங்குகளெல்லாங் களித்தன. அவ்வோசைகேட்ட கோவியர் கிருஷ்ணமூர்த்தியை நாடிவந்தனர். கண்ணன்பலவடிவெடுத்து அவர்களுடன் சோலையில் கூடினதென்பதாம். இதனை,

கூர்மபுராணம்-கண்ணனவதரித்த அத்தியாயம்.

"திருவே யன்னார் வேயிசை தத்தஞ் செவியோரா
முருகார் சந்தச் சேறணி பொம்மன முலைதாங்கி
யருகா நிற்கும் நுண்ணிடை யகதோ விறமென்னு
விருதாள் பற்றி நூபுர மார்ப்ப வெதிர்புக்கார்.

வேயா லாவின் பின்றொடர் செங்கண் விடைமீட்டான்
காயா மேனிக் கண்ணனு மம்மென் முலைதாங்கி
தேயா நிற்குஞ் சிற்றிடை யார்தஞ் செயலுன்னி
மாயா வேடத் தெண்ணரி தாகும் வடிவுற்றான்.

மாதவி யந்தண் சோலையில் மன்றற் புளினத்திற்
றாதவிழ் முல்லைப் பந்தரின் வெற்பிற் றனிபெய்தி
வேதமு மின்னங் கண்டறி யாதோன் வெளிநின்றே
போதரி யுண்கட் கோவிய ரோடும் புணர்குற்றான்."—என்பதனானுணர்க.

சேவு யர்த்தவன் சேவடி சிந்தைசெய் திருந்த
பூவை மேனிய னருந்தவம் பொலிவொடு நோக்கி
வாவு மேழ்பரி நிறுவிவான் செல்லுயர் பரிதி
யோவி லன்பொடு மிருநிலத் தவனுழை யுற்றான்.

(இ-ள்.) இடபத்தைக் கொடியாகவுயர்த்திய சிவபெருமானது சிவந்த திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருந்த காயாம்பூவண்ணராகிய திருமாலின் அருமையாகிய தவத்தை அழகோடு பார்த்து, தாவிச்செல்கின்ற ஏழுபரி (பூண்டரதத்தை) நிறுத்தி ஆகாயமார்க்கத்திற்போகின்ற உயர்வாகிய சூரியன், கெடாத ஆசையுடனே பெரிய நிலவுலகத்தில் அத்திருமாலினிடம் வந்தனன். எ-று.

சிவபெருமானைச் சேவுயர்த்தவனென்பது.

முன்னொரு தேயுப்பிரளயத்தில் தருமதேவதை தானும் அழியும்படி நேரிடுமே யென்றஞ்சி, சிவபெருமானைச் சேர்ந்தால் பிழைத்திருக்கலாமென்று துணிந்து இடபவடிவெடுத்துப்போய் எம்பெருமானே! அடியேனை வாகனமாக்கிக்கொள்ளவேண்டுமென்று பிரார்த்திக்க, பெருமான் அதன்வேண்டுகோளுக்கிரங்கி வாகனமாகக்கொண்டனர் என்பதாம். இதனை,

கந்தபுராணம் - தக்ஷகாண்டம் - ததிசியுத்தரப்படலம்.

"பெருகு தேயுப் பிரளய மன்னதில்
தருமம் யாவினுக் குந்தனித் தெய்வதம்
வெருவி யாமிவண் வீடுறு மேயினிப்
புரிவ தேதெனப் புந்தியி னோர்ந்ததே.

ஆறு லாஞ்சடை யண்ணலைச் சேர்வனே
வீறி லாதென துய்ந்திடு வேனெனாத்
தேறி யேயறத் தெய்வதஞ் செங்கணு
னேற தாயொ ரெழிலுருக் கொண்டதே."—என்பதனு னுணர்க.

ஆல முண்டமைக் கண்டனை யகத்தினு லிருத்திச்
சால மெய்த்தவம் புரிந்திடு தாமரைக் கண்ண
னேல்வை நோக்கிவந் திறைஞ்சிய விரவியைக் காணு
ஞால நீடிருள் சீப்பவ நடந்ததென் னென்றான்.

(இ-ள்.) ஆலாலவிஷத்தைப் பானஞ்செய்த நீலகண்டராகிய சிவபெருமானை மனதிலெழுந்தருளச்செய்து மிகுதியாகிய மெய்த்தவஞ் செய்யும் செந்தாமரைக் கண்ணராகிய திருமால், சமைய மறிந்து தன்னை வணங்கிய சூரியனைப் பார்த்து, உலகத்தின பேரிருளையொழிக்குங் கதிரோனே! நடந்த விருத்தாந்தம் யாதென்று வினவினர். எ-று. (கச)

அலகி லாமுது மறைபயி லந்தண னோடு
முலகம் யாவையும் பூத்தரு ளுந்தியங் கடவு
ளிலகு பேரொளிப் பிரமநீ யினக்கெவ ரிறைவர்
புலன வித்தருந் தவமெவன் புரிகுவ தென்றான்.

(இ-ள்.) குற்றமில்லாத பழமையாகிய வேதங்களைப் பயிலும் பிரமதேவனுடனே சமஸ்தலோகங்களையும் அழகிய திருவுந்திக்கமலத்திற் பூத்தருளிய அழகிய திருமாலே! தேவரீரே விளங்குகின்ற ஒளிப்பிழம்பாகிய பிரமமாவீர்; தேவரீருக்குத் தலைவர்யாவர்? ஐம்புலன்களையுமொடுக்கி அரிதாகிய தவத்தைச்செய்வது என்னகாரணம்? என்று (சூரியன் விஷ்ணுவைக்) கேட்டனன. எ-று. (கரு)

உலகி னீடிருள் யாவையு மொழிக்குமின் மேனி
யலகில் பேரொளி யகத்திரு ளகன்றிலை போலு
மலர்செ ழுங்கதிர் வானவ மாய்ந்துமாய்த் துதிக்கு
நிலையில் யாக்கையெம் பிரமமென் றெங்ஙன நினைந்தாய்.

(இ-ள்.) உலகத்திலுள்ள இருட்டொகுதியையெல்லாம் நீக்குகின்ற உன்னுடைய வுருவம் களங்கமில்லாத பெரும்பிரகாசமாயிருந்தும், மனத்திலுள்ள (அஞ்ஞானமாகிய) அந்தகாரம் நீங்கினுயில்லைபோற் காண்கின்றது. பரந்த செழுமையாகிய கிரணங்களையுடைய சூரியனே! இறந்திறந்து பிறக்கின்ற நிலையில்லாத (க்ஷணபங்கமுடைய) சரீரமமைந்த நாம் பிரமமென்றெவ்வாறு கருதினை? எ-று.

மாய்ந்து மாய்ந்துதிக்கும் நிலையில் வாழ்க்கையென்பதை

" அல்லலாந் தொழில்ப டைத்தே யடிக்கடி யுருவெ டுத்தே
மல்லன்மா ஞாலங் காக்க வருபவர் கடவு ளென்னில்
தொலலையாம் பிறவி வேலை தொலைத்திடா திருணீங காது
நல்வது மாயை தானும் நானென வந்து நிற்கும்."

எனனும் தாயுமானுர் திருவாக்கானும், பிறந்திறந்தொழிவார் தம்போன்று பிறந்திறந்தொழிவாரைப்பணிந்து பிறவியை நீக்கல் கூடாதாதலின் ஒரு காலத்தும் பிறப்பில்லாப் பெருந்தகையையே பணியவேண்டுமென்பார,

" யோனிவழி யேயுதித்தவ யோனிவழி யேகினைத்தவ
யோனிவழி யேயொடுங்கு மூமர்காள்—யோனிவழி
வாரா வொருவனையே யாதித்தால் யோனிவழி
வாரா வகையருளு வான." என்னும் வள்ளலார் திருவாக்கானுமுணர்க.

அண்டம யாவையும் படைத்தளித் தாங்கவை துடைக்கும்
பண்டை நான்மறை முடியுறை பசுபதி யவன்றன்
றொண்டர் நாமெலா மவனடி தொழுதவ ரன்றோ
வுண்ட பேதமை யொழிந்துயர் பவக்கட லுறுதார்.

(இ-ள்.) பழமையாகிய நான்கு வேதங்களின் உச்சியிலுள்ள சிவபெருமானே!(எண்ணில்லாத) அண்டங்களையெல்லாம் சிருட்டித்து அவற்றைக்காத்து அழிக்கின்ற தலைவர்; அவருக்கு நாம்யாவரும் அடியார்கள. அப்பெருமானது திருவடிகளை வணங்கினவர்களல்லவோ தம்மைப் பொதிந்துள்ள அஞ்ஞானமலத்தை விலகி, அதிகரிக்கின்ற பிறவிக்கடலையடையாதவ ராவர். எ-று. (கஎ)

பொருவ ருஞ்சிவ பூசனை புரிந்துளோர் தாளில்
மருவு நுண்டுகள் வளியினல் வந்துமேற் படினும்
வெருவும் வெவ்வினை யவன்பெயா விளம்பின ரன்றோ
கருவ டைந்துபோந் தன்னையர் கதிர்முலை யுணுதார்.

(இ-ள்.) ஒப்புகூறுதற்கரிய சிவபூசையைச்செய்த அடியார்களது பாதங்களிற்பொருந்திய நுண்ணிய தூசுகள் காற்றடித்தலால் வந்து சரீரத்தின்மேற்படிந்தாலும், கொடிய பாவங்களெல்லாம் அஞ்சியோடும்; அப்பெருமானது திருநாமங்களைச் சபித்தவர்களல்லவோ (மீண்டும்) கருப்பாசயப்பையைச் சேர்ந்து (உலகத்திற்பிறந்து) வந்து தாய்மார்களது ஒளிபொருந்திய முலைப்பாலைக் குடியாதவராவர்.

ஆத லாலிவ ணிலிங்கமொன் றமைத்துய ரன்பாற்
போது தூய்வழி படுகென மாதவன் புகலக்
காதல் கூர்ந்துவெங் கதிரவ னிலிங்கமொன் றமைத்துத்
தாது லாநறுந் தண்மலர் தூய்வணங் கினனுல்.

(இ-ள்.) ஆனபடியால், (முத்திநகரமாகிய) இக்காசிக்ஷேத்திரத்தில் ஓர் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து, மிகுதியாகிய அன்புடன் மலர்களானருச்சித்து வழிபடக்கடவாயென்று திருமால்கூற, கொடிய கிரணங்களையுடைய சூரி

யன் ஆசைமிக்கு (அவர் சொல்லியவகையே) ஓர் சிவலிங்கக் குறியைத்தாபித்து, மகரந்தப்பொடியமைந்த வாசனைதங்கிய குளிர்ச்சிபெற்ற மலர்களாற் பூசித்துப் பணிந்தான். எ-று. (கக)

கேச வன்புகன் றிடுதலாற் கேசவா தபனென்
றூசில் நாமமொன் றடைந்ததக் கதிரவன் றன்னை
வாச நாண்மது மலர்கடுய்த் தினமவழுத் திடுவார்
பேச ருங்கொடு வினையொழிந் துயாகதி பெறுவார்.

(இ-ள்.) கேசவன் (சிவார்ச்சனைசெய்யும்படி) கூறிய காரணத்தினால் கேசவாதித்தனென்று குற்றமில்லாத பெயர் ஒன்று (சூரியனுக்கு) வந்துசோந்தது; அக்கேசவாதித்தனை வாசனைதங்கிய புதிய தேனைபொருந்திய மலர்களாற் பூசித்துத் தினமும் துதிசெய்வோர்கள், தீவினைச்சம்பந்தமொழிந்து, சொல்லுதற்கரிய உயர்வாகிய நற்கதியை யடைவார்கள். எ-று. (உ0)

இன்ன வாறுயர் கேசவா தபன்கதை யிசைத்தோம்
பன்னு சீர்விம லாதபன் கதையினிப் பகாவே
முன்ன ருந்தவ மாற்றிய முனிவகே ளென்ன
மின்னு நக்கவேற் புங்கவன றெருளுற விளம்பும்.

(இ-ள்.) இத்தன்மையாக உயர்வாகிய கேசவாதித்தன் சரித்திரத்தைக் கூறினோம். சொல்லுகின்ற சிறப்பமைந்த விமலாதித்தனது விருத்தாந்தத்தை இனிமேற் புகலுவோம். நினைத்தற்கரிதாகிய தவங்களைச்செய்த அகத்தியமுனிவனே! கேட்பாயாகவென்று, மின்னலானது சிரித்தாற்போன்ற வேலாயுதமேந்திய ஸ்ரீ முருகக்கடவுள் நன்கு விளங்கும்படி திருவாய்மலாந்தருளுகின்றார். எ-று.

விமல னென்றுள னொருவன்மற் றவன்முனம் விழைந்து
தமனி யச்சுளை பழுத்தமென் குடக்கனி தகர்ந்தாங்
குமிழ்ந றைப்பசுந் தேறல்வான் றிரையலைத் தொழுகு
கமழு றுந்துறைக் கங்கைசூழ் காசியி னடைந்தான்.

(இ-ள்.) பூர்வத்திலே விமலனென்னும் பெயர்பெற்றொருவனிருந்தான். பொன்போன்ற சுளைகள் பழுத்த மெல்லிய பலாப்பழமானது வெடித்து அதனொலொழுகும் வாசனைதங்கிய பசிய தேனைச் சிறந்த அலைகள் அடித்துக்கொண்டோடும் மணமமைந்த கரைத்துறைகளையுடைய கங்காநதியாற் சூழ்ந்த காசிமாநகரத்திற்கு அவன் ஆசைகொண்டு போயினன். எ-று. (உஉ)

கொய்யு ளைப்பசும் புரவியூ ரிரவிமெய் குளிர்ப்பச்
செய்ய நாண்மலர் தூய்வழி படுதலுஞ் செங்கேழ்
வெய்ய வன்றொழு தேத்திய விமலன்முன் றோன்றி
யுய்யு மாறுநீ வேண்டிய கேளென வுரைத்தான்.

(இ-ள்.) கத்தரிக்கின்ற புறமயிரையுடைய பச்சைப்புரவிகளை ஏறுகின்ற சூரியனது சரீரங் குளிர்ச்சியெய்தும்படி, சிவந்த புதியமலர்கொண் டருச்சித்து வழிபாடு செய்யவும், செவ்வொளிவாய்ந்த தினகரன் தன்னைப்பணிந்து துதிக்கும்

விமலனுக்கு முன் பிரத்தியட்சமாகி நீயுச்சிவிக்கும் வகையாக விரும்பிய வரங்களை க்கேளென்று கூறினன். எ-று. (உக)

விட்டி லங்கொளி வெங்கதிர்ச் செல்வவெம் மரபிற்
குட்ட நோயுறா தருளென விரத்தலுங் குழைந்து
மட்டு லாஞ்செழுந் தாமரை நாயகன் வழங்க
முட்டில செல்வமோ டேகினன் முழுதுணர் விமலன்.

(இ-ள்.) ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற வெவ்விய கிரணங்களையுடைய சூரியனே! எமது வமிசத்தில் குட்டநோய் வராமற் கிருபைசெய்யவேண்டுமென்று விமலன் யாசிக்கவும், வாசனைதங்கிய செழுமைவாய்ந்த தாமரைமலருக்கு நாயகனாகிய சூரியன் மனங்கசிந்து (அவ்வாறே) வரங்கொடுக்க, வேதமுழுவதுமுணர்ந்த விமலன் குறைவில்லாத செல்வத்தோடு சென்றான். எ-று. (உச)

விமல னேத்தவி னுயர்விம லாதப னெனும்பேர்
திமிர மேய்கதிர்ச் செல்வனுக் கியைந்ததென் றுரைப்பக்
கமல மேயகங் காதபன் கதையறை கெனவேற்
குமரன் மாதவக் கிழமைசால் முனியொடுங் கூறும்.

(இ-ள்.) விமலன் துதித்தகாரணத்தால் உயர்வாகிய விமலாதித்தனென்னும் பெயர் இருளையடக்கிப் பிரகாசத்தை யுண்டுபண்ணும் சூரியனுக்கு வந்தது என்று திருவாய்மலர்ந்தருள, தாமரைகள் பொருந்திய கங்காதித்தன்கதையையும் ஓதியருளவேணடுமென்று அகத்தியமுனிவர் கேட்க, வேற்படையேந்திய ஸ்ரீ குமாரக்கடவுள் சிறந்த தவத்துரிமை மிகுந்த அகத்தியமுனிவரோடு திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (உரு)

நெய்யு றைத்துவாய் காய்ந்தவெங் குடிமிகெட் டிலைய
செய்ய வேலுடைப் பகீரதன் சிறந்தவா னதியை
வைய கத்திடைக் கொணர்ந்தஞான் றேத்துவான் வந்த
வெய்ய வன்றனக் கப்பெயர் மிகவிளம் பினரால்.

(இ-ள்.) நெய்பூசி முனையில் பழுக்கக் காச்சிய கொடிய தலைகளையுடைய நீண்ட அச்சவடிவாகிய சிவந்த வேற்படை தாங்கிய (அயோத்திகாட்டரசனை) பாகீரதன் சிறப்பமைந்த ஆகாயகங்கையை (கபிலமுனிவர் கோபத்தாற் சாம்பராய்க்கிடந்த தனது மூதாதைகள் அறுபதினுயிரவரும் கதியடையும்படி) பூலோகத்தில் கொண்டுவந்தகாலத்தில் ஆங்கடைந்தசூரியனுக்கு (கங்காதித்த னென்னும்) அந்தப்பெயரை மேன்மையாகக் கூறினர். எ-று.

"நெய்யுரைத்து வாய்காய்ந்த வெங்குடுமி" முனை பழுக்கக்காச்சி விஷத்தோயல் செய்தது. செய்யவேல் என்பதைப் பகைவர் குருதிதோய்ந்து சிவந்த வேல் எனக் கொள்க. (உசு)

ஈது சொற்றனம் யமாதபன் கதையினி திசைப்பே
மாத வத்துறை போகிய பழமறைக் கிழவ

காதன் மீக்கொளக் கேண்மதி யென்றுபூங் கடப்பந்
தாது மொய்த்தபைந் தெரியல்சூழ் தடம்புயன் சாற்றும்.

(இ-ள்.) (கங்காதித்தன் காதை யாகிய) இதனைக் கூறினோம். இனி யமாதித்தன் சரித்திரத்தையுங் கூறுவோம். சிறந்த தவத்துறைகளிற்சென்ற பழமையாகிய வேத முணர்ந்த அகத்தியமுனிவனே ! ஆசை மேம்பட்டுக் கேட்பாயாக வென்று, மகரந்தப்பொடிகளையுடைய பசிய கடப்பம்பூமாலையை யணிந்த பூரித்த (பன்னிரண்டு) திருப்புயங்களையுடைய ஸ்ரீமுருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (உஎ)

தெறுசி னத்தவெங் கூற்றமோர் செஞ்சுடர்க் கதிரை
யறைபு னற்றிரைக் கங்கைசூழ் காசியி னமைத்துப்
பெறல ருந்தவம் புரிந்துவேண டியவரம பெறலான்
மறைது தித்திடும் யமாதப னெனப்பெயர் வகுத்தார்.

(இ-ள்.) அழிக்கத்தக்க கோபத்தையுடைய கொடிய இயமதருமன், சிவந்த கிரணங்களை யுடைய ஒரு சூரியனை, சத்திக்கின்ற நீர்மயமான அலைகள் பொருந்திய கங்காநதிசூழ்ந்துள்ள காசிக்ஷேத்திரத்திலே பிரதிட்டை செய்து, அடைதற்கரிய தவமியற்றி, தான்விரும்பிய வரங்களைப்பெற்றகாரணத்தினால், வேதங்களாலே புகழப்படும் யமாதித்தன் என்று (பெரியோர் சூரியனுக்குப்) பெயரிட்டனர். எ-று. (உஅ)

இன்ன வாறுபன் னிருசுடர்க் காதையு மிசைத்தே
மன்னு மிக்கதை யுரைத்துளோர் மகிழ்வுறக் கேட்டோர்
பன்ன கத்தின்வெம் பஃறலைப் பணமணி யணிந்து
பொன்னி ணர்ப்பசுங் கற்பக நீழலிற் பொலிவார்.

(இ-ள்.) இந்த வகையாகத் துவாதசாதித்தராது சரித்திரங்களையுஞ் சாற்றினோம். நிலைபெற்ற இச்சரிதங்களை (பிறருக்குச்) சொன்னவர்களும், ஆசைபொருந்தக் கேட்டவர்களும், சர்ப்பத்தினது கொடிய பலதலைகளிலுள்ள மாணிக்கம் (பதித்த ஆபரணங்கள்) பூண்டு, பொன்போன்ற பூங்கொத்துக்களையுடைய பசிய கற்பகவிருக்ஷத்தின் நிழலிலே விளங்கி வாழ்வார்கள். எ-று. (உகூ)

அருணாதித்தன் முதலாதித்தர் கதைகளுரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் கசசரு

உ

சிவமயம்.

ஐம்பத்திரண்டாவது,

# பிரமன் வேள்விசெய்த அத்தியாயம்.



பவளத் தாற்றுக் குலைக்கமுகம் படப்பை தொறு மிடறுளைந்து
தவள முதுசூற் குடவயிற்றுப் பணில முழுங்குங் காசிதனிற்
குவளை நெடுங்கட் செங்கனிவாய் மகளிர் பலரைக் கூரிருள்சீத்
தவிர்செங் கதிரை விடுத்தனமீங் கன்னோ ரின்னு மடைந்திலரால்.

(இ-ள்.) பவளம் போன்ற தாறுகளாகிய குலைகள் பொருந்திய பாக்கு மரங்களையுடைய வயல்களிலெல்லாம், வெண்மையாகிய கருப்பமுதிர்ந்த குடம் போன்ற வயிற்றையுடைய சங்குகள் கருவுயிர்த்து இறைகின்ற காசிநகரத்திலே (அரசுபுரியுந் திவோதாஸனது செங்கோலமுறை தவறச்செய்யும்படி) நீலோற்பல நிகர்த்த நீண்ட கண்களையும், சிவந்த கொவ்வைக்கனிபோன்ற வாயையு முடைய பல யோகினிகளையும், மிக்க இருளையொழித்துப் பிரகாசிக்கின்ற சிவந்த கிரணங்களையுடைய சூரியனையும் அனுப்பினோம். அவர்கள் இங்கு (இதுவரையில் திரும்பி) வரவில்லை. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் ஒருதொடர்.

ஈங்கு என்பது பெருமான் மந்தரமலையிலிருப்பதால் அம்மலையை யுணர்த்தி நின்றது. (க)

இன்னு மெவரை விடுப்பதென வெண்ணி யெண்ணி நிவந்தோங்கு
பொன்னங் குடுமி வரைகுழைத்துப் புரமூன் றெரித்த புரிசடையோன்
கன்னித் துளவோன் றிருவுந்திக் கடவுட் கமல மினிதுயிர்த்த
பன்னு மறைநான் முகத்தொருவன் றன்னை நோக்கிப் பகர்ந்திடுவான்.

(இ-ள்.) மேனோக்கி யுயர்ந்த அழகிய மேருமலையின் முகடு குழையும்படி வளைத்துத் திரிபுரதகனஞ் செய்த புரிந்த சடையையுடைய ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான், இன்னும் (காசிநகரத்திற்கு) யாரையனுப்புவது என மிகவுமாலோசித்து, இளமையாகிய துளவமாலையணிந்த விஷ்ணுமூர்த்தியின் தெய்வீக மமைந்த திருவுந்திக்கமலமானது இனிதாகப்பெற்ற வேதங்களை யோதுகின்ற நான்கு முகங்களையுடைய பிரமதேவனைப் பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுவார். எ-று.

பிரமன் நான்குவேதங்களையும் நான்கு வாய்களாற் கூறியதாக வுரைத்தல் வழக்காதலின் ‘பன்னு மறைநான் முகத்தொருவன்’ என்றார். (உ)

புள்ளுஞ் சுரும்புங் கலித்தமலர்ப் பொதும்பர் தோறும் பூங்கமுகின்
வெள்ளிப் பாளை மடல்பொதிந்த மிடறு திறந்து தேன்குதிப்பத்
துள்ளிக் கயல்பாய்ந் துழக்குமகன் பணைசூழ் காசித் தொன்னகரிட்
டுள்ளத் துயர மீதூர வெவ்வா றிங்க னுறைகுவமால்.

(இ-ள்.) பறவைகளும் வண்டுகளும் ஒலிக்கின்ற பூஞ்சோலைகளிலெல்லாம் அழகிய கமுகமரங்களின் வெண்மையாகிய பாளைகள் மடல்களிற் றிணிந்த மிட

றுடைத்துத் தேன் சொரிதலால், சேற்கெண்டைகள் குதித்துப் பாய்ந்து கலக்கு கின்ற விசாலமாகிய வயல்கள் சூழ்ந்த காசியாகிய பழைய நகரத்தை விட்டு விலகி மனவருத்த மதிகரித்துயர (நாமெல்லாம் இம்மேருமலையிலே) எவவாறு வசித்திருப்போம். எ-று. (கூ)

வேந்து விழுங்கி வாய்சிவந்த வெள்வே லோடு முழுதுலகு
மேந்து தடந்தோட் டிவோதானன் செங்கோல் கோட வியற்றுகென
வாய்ந்த வுவகை மீதூர மங்கை பாகன் கழல்பணிந்து
பூந்தண் கமலப் பொகுட்டுறையும் புத்தேள் காசி நகரடைந்தான்.

(இ-ள்.) பல மன்னவரைப் புசித்து வாய் சிவந்துள்ள தாவள்யமாகிய வேற்படையுடன் உலகமுழுவதையுந் தாங்குகின்ற விசாலமாகிய புயங்களையுடைய திவோதானனது செங்கோல் கோணும்படி செய்யக்கடவாயென்று கட்டளையிட, அழகிய குளிர்ச்சி வாய்ந்த தாமரைக்கொட்டையில் வசிக்கும் பிரமதேவன் பொருந்திய அன்பு மிகுதலால், அன்னபூரணியம்மையார் சமேதராகிய ஸ்ரீஅகிலேசப்பெருமானது திருவடிகளை நமஸ்கரித்துக் காசிக்ஷேத்திரஞ் சென்றனன்.

அரிய மறைதேர் நரைக்குடுமி யந்த ணாள னிவனெனுமோ
ருருவு தாங்கி யுலைமுகத்தி னெழுகு பசும்பொற் கலன்கிடந்து
பரிதி கோடி யெழுந்தபெரும் பான்மை போலக் கதிரெறிக்கும் [தான்.
வரைகொண் மார்பிற் றிவோதான னென்போ னிருக்கை மருங்கடைந்

(இ-ள்.) (பிரமன்) அருமையாகிய வேதங்களைப் பயின்ற நரைத்த குடுமியை யுடைய (வயோதிக) பிராமண னிவனென்று சொல்லத்தகும் ஒருருவேற்று, (பொற்கொல்லனது) உலைமுகத்திற் காய்ந்த பசும்பொன்னாலாகிய ஆபரணந்தரித்து, கோடிசூரியோதயமானாற்போலக் கிரணங்கள் வீசும் மலைபோன்ற மார்பினையுடைய திவோதானனென்னும் மன்னனது மாளிகையைக் குறுகினன். எ-று.

முரசு முழங்குங் கடைத்தலைவாய் முன்றிற் புறத்தி லிடுதிறைகொண்
டரசு கிடந்து மூச்செறியு மம்பொற் கோயின் மருங்கெய்திப்
புரசை யானை மன்னவன்பாற் போகி யுலக முழுதீன்ற
விரைசெய் கமலப் பொகுட்டுறையும் புத்தே ளாசி விளம்பினனால்.

(இ-ள்.) பேரிகை முழங்குகின்ற கடைவாயில் முற்றத்தின் பக்கவில் பகைமன்னவர் தாம் கொடுக்கும் கப்பங்களை வைத்துக்கொண்டு காத்திருந்து பெருமூச்சுவிடும் அழகிய பொன்மயமான அரண்மனையிற் சென்று நெற்றிப்பட்டமணிந்த யானையையுடைய திவோதானனிடத்திற் போய், உலகத்தையெல்லாம் படைத்த வாசனைபொருந்திய தாமரைக் கொட்டையில் வசிக்கும் பிரமதேவன் ஆசீர்வசனங் கூறினன். எ-று. (சு)

கழிந்த மூப்பி னரைக்குடுமி மறையோன் றன்னைக் கண்ணுறலு
மெழுந்து தொழுதா சனம்வழங்கி யெங்கா டெவ்வூ ரெப்பேரோன்
றழுந்து மன்பி னுடனரச னினிது வினவு மனைத்தினையு
மொழிந்து விதியிற் புரவிமக முடிப்பான் புகுந்தே னெனவுரைத்தான்.

(இ-ள்.) மிகுந்த விருத்தத்தன்மையும் நரைத்த சிகையு முடைய வேதி யனைத் திவோதாஸன் பார்த்தவுடனே, (சிங்காசனம் விட்டு) எழுந்து பணிந்து ஆசனமளித்து (அதிலிருக்கச்செய்து) நீர் எந்தநாட்டினர்? என்னவூரினர்? யாது பேருடையவர்? என்று மிகுந்த அன்புடனே இனிதாகக் கேட்கும் எல்லாவற் றிற்கும் பிரமன் (மறுமொழி) உரைத்தது, அசுவமேதயாகம் வேதக்கிரமமாகச் செய்யும்படி வந்தேனென்று கூறினன். எ-று. (ஏ)

புலவு சிவாப் புதுப்போர்வை யந்த ணாளன் மகிழ்பூப்பக்
கலின வயவெம் புரவிமகங் கடிதி னீரைந் தாற்றுவித்தா
னலகி னிதிய மிடுதிறைகொண் டரசு வழங்கு நெடுமுன்றி
லுலக மேத்துந் தனித்திகிரி யுரவோ னரசா பெருமானே.

(இ-ள்.) அளவில்லாத செல்வத்தை இடப்பட்ட கப்பமாகக்கொண்டு அரசுதவுகின்ற நெடிய முன்றிலினிடத்தில் உலகத்தார் துதிசெய்கின்ற ஒப்பற்ற ஆக்கிஞைசக்கரத்தையுடைய வலியோனாகிய திவோதாஸனென்னும் மன்னர்மன்னன், தசைகழியாத புதிய (யானைத்தோலைப்) போர்வையாகவுடைய சிவபெருமான் களிப்பெய்தும்படி, வெற்றி பொருந்திய கொடிய கடிவாளம்பூண்ட பத்து அசுவமேதயாகங்கள் செய்வித்தான். எ-று. (அ)

கடவுட் கமல வட்டவணைக் கடவுள் புரவி மகமீரைந்
தடைவி னாற்றி யுருத்திரப்பேர் மடுவி னாடி யதன்கரையி
லொடிவில் பிரமேச்சுரமெனுமோ ரிலிங்க மமைத்தாங் கொண்மலர்தூய்
சுடர்வே லரசன் முறைதிறம்பல் நோக்கி யானைத் தொழுதிருந்தான்.

(இ-ள்.) தெய்வீகந்தங்கிய தாமரையாகிய வட்டமான பீடத்தில் வீற்றிருக்கும் பிரமதேவன் பத்து அசுவமேதயாகங்கள் முறையேசெய்து, உருத்திரமடுவென்னுந் தீர்த்தத்தில் மூழ்கி அம்மடுக்கரையிலே கெடுதலில்லாத பிரமேச்சரமென்னும் ஒரு சிவலிங்கக்குறியைப் பிரதிட்டைசெய்து அவ்விடத்தில் ஒள்ளிய மலர்களானருச்சித்து, பிரகாசிக்கின்ற வேற்படைதாங்கிய திவோதாஸன் நீதி தவறுஞ் சமயம்பார்த்துக்கொண்டு சிவபிரானை வணங்கியிருந்தனன். எ-று. (க)

கொழுதி வரிவண் டிசைமுரலுங் குமிழ்க் கமலத் துறையுமறைக்
கிழவ னரசின் கோல்கோட வியற்று தழல்கட் கிளர்பொறிய
வுழுவை யசைத்தோன் முனமெவ்வா றுறுவ தென்ன வுளம்வெருவி
வழுவில் காசி வளநகரின் றென்பா லினிது வதிந்தனனால்.

(இ-ள்.) கீற்றமைந்த வண்டுகள் கிண்டிக்கொண்டு பண்பாடும் இனந்தாமரையில் வசிக்கும் வேதங்களுக்குரிய பிரமதேவன், திவோதாஸனது செங்கோல் முறைதவறச்செய்யாமல், தீப்போன்ற கண்ணையும் விளங்குகின்ற புள்ளிகளையு முடைய புலித்தோலைத்தரித்த சிவபெருமானது திருமுன்னர் எவ்வாறு செல்வதென்று மனம்பயந்து, கெடுதலில்லாத வளமமைந்த காசிநகரத்தின் தென்பாரிசத்தில் இனிதாக வாழ்ந்திருந்தான். எ-று.

உழுவையசைத்தோனென்பது, தாருகாவனத்து ரிஷிகள்செய்த அவிசாரஹோமத்தினின் றெழுந்து தம்மீதுவந்த புலியைச் சிவபெருமான் சங்கரித்து அதன் தோலையணிந்தனரென்பது. இது சிவபெருமானியற்றிய பராக்கிரமங்களுளொன்று இதனைச் சார்த்தூலஹதமென்பர் வடநூலார். (௪0)

பிரமன் வேள்விசெய்த அ-ம்.

முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - ௧௪ ௫௫.

ஐம்பத்துமூன்றாவது,

## சிவகணங்கள் காசியையடைந்த அத்தியாயம்.

அனன மூர்ந்த மறைக்கிழவன் வாரா தொழிந்தா னுதவினு
வின்னு மறிது மெனக்கடவு ளேற்றை யுயர்த்த வெமபெருமான்
மின்னி னகுவேற் பிரசங்கு கன்னனந்தி சோமன்விறற்
கன்ன னந்தி சேனன்மகோ தரன்பிங் கலன்குக் குடன்காளன்.

(இ-ள்.) அன்னத்தை வாகனமாகச்செலுத்திய வேதன் இதுவரையில் வராமற் போய்விட்டான; ஆனபடியால் இன்னும் பார்ப்போமென்று, தெய்வீகமமைந்த இடபத்தைக் கொடியாகவுயர்த்திய எமது சிவபெருமான் கருதி, மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற வேலேந்திய பிரசங்குகன்னன்-நந்தி-சோமன் - பராக்கிரமமுடைய கன்னன்-நந்திசேனன்-மகோதரன்-பிங்கலன்-குக்குடன்-காளன்.

இதுமுதல் மூன்று பாடல்கள் குளகம். (௧)

இச்செய்யுளிலுள்ள பெருமான் என்னும் எழுவாய் மூன்றாவது செய்யுளிலுள்ள விடுப்பவென்னும் வினையெச்சப்பயனிலை கொண்டது.

குண்டோ தரன்பஞ் சாக்கனியல் வாணன் மயூரன் கோகன்னன்
தண்டா விழுச்சீர்த் திலகன்னன் றால கன்னன சுகன்சாகன்
புண்டோய் கதிர்வேல் வீரபத்திரன் வீரா தன்பார் பூதிவரி
வண்டார் தெரியற் கவத்திசது முகனு சாடி வளர்சுமுகன்.

(இ-ள்) குண்டோதரன்-பஞ்சாக்ஷன் - வலிதங்கியவாணன்-மயூரன்-கோகன்னன் குறைவில்லாத மேம்பட்ட சீர்த்தியையுடைய திலகன்னன் - தாலகன்னன்-சுகன்-சாகன் - புண்படும்படி பாய்கின்ற ஒளிவாய்ந்த வேலேந்திய வீரபத்திரன்-வீராதன்-பார்பூதி - கீற்றமைந்த வண்டுகள்மொய்க்கும் மாலைசூடிய கவத்திசதுமுகன்-ஆசாடி-மேன்மை வளர்கின்ற சுமுகன். எ-று.

கேமமாலி காலசிங்கன் றுருமன் கிராத னெனவுணர்க்கு
காம வடிவேற் கணநாதர் தம்மை விடுப்ப நறுங்கூந்தற்

றேமென் கிளவி யொருபாகன் மலர்த்தாள் போற்றிச் சிறந்தோங்கு
காமர் கடவுட் புனற்கங்கை சூழுங் காசி கடிதடைந்தார்.

(இ-ள்.) கேமமாலி-காலசிங்கன்-தருமன்-சிராதன் என்று சொல்லப்படும் பெயர்களையுடைய கூர்மையாகிய வேலேத்தாங்கிய சிவகணத்தலைவர்களை அனுப்ப, (இயற்கையாகவே) தெய்வமணங் கமழும் அளகபாரத்தையும் தேன்போன்ற இனிய சொல்லையுமுடைய உமையம்மையாரை ஒரு பாகமாகவுடைய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமானது தாமரைபோன்ற திருவடிகளைவணங்கி, சிறப்புற்றோங்கிய அழகிய தெய்வீகம்பொருந்தியகங்காதீர்த்தஞ்சூழ்ந்த காசிநகரைவிரைந்துசேர்ந்தனர்.

"காமவடிவேல்" என்பதற்கு அச்சந்தரும் வடித்த வேற்படை யெனப் பொருள்கூறினு மொக்கும். (௩)

மாய வுருவிற் புகுந்தரசர் மகுட கோடி யுழுதுதழும்
பாய கழற்கால் வேந்தன்முறை திறம்பல் காணா ராதலினுற்
காயுஞ் சினவெவ் விடங்கனிந்த கரிய மிடற்றெங் கண்ணுதன்முன்
போயென் னுரைப்ப தெனமாழ்கி மெலிந்தார் புந்தி தனிலோர்ந்தார்.

(இ-ள்.) மாயாசரீரமுற்றவர்களாகிப் (பட்டணத்திற்) பிரவேசித்து, கணக்கில்லாத மன்னவரது கிரீடங்கள்படிந்து தழும்பேறிய வீரக்கழல்தரித்த காலையுடைய திவோதாஸன் நீதிதவறுதல் கண்டாரில்லை யாகையால், சுடுகின்ற கோபம் பொருந்திய கொடிய ஆலகாலமானது விளங்கிய திருநீலகண்டத்தை யுடைய எமது சிவபெருமானது சந்நிதானத்திற்சென்று யாது சொல்வது என மயங்கி வருந்தினவராகி மனத்திலாலோசிக்கத் தொடங்கினர் (சிவகணநாதர்கள்). எ று. (௪)

உடனும் வேண்டு முருவெடுத்து மடிகள் பணித்த வோர்வினைய
முடியே மடைந்த கொடும்பாவம் யாதில் நீங்கு மெனவுன்னிப்
படவா ளரவ கங்கணத்தோன் படிவ மமைத்துப் பரிவினொடுங்
கடிமா மலர்தூய் வணங்கினுறு கொடிய வினையுங் கட்டறுமால்.

(இ-ள்.) உடனே நாம் ஆகவேண்டிய பலவுருவங்களையேற்றும் பெருமான் கட்டளையிட்ட ஒரு தொழிலைச்செய்து முடியாமற்போனோம்; (அதனால்) நமக்குக் கிடைத்த கொடிய பாவம் எவ்வாற்றானொழியும் என்றாலோசித்து, படமமைந்த ஒளிதங்கிய நாககங்கணத்தையுடைய சிவபெருமானது திருவுருவத்தைப் பிரதிட்டை செய்து ஆசையோடு வாசனைவீசுஞ் சிறந்த மலர்களாலருச்சித்துப் பணித்தால் இப்போது சேர்ந்த தீவினைச்சம்பந்தமுங் கட்டுவிட்டொழியும். எ று. (௫)

யாவ ரேனுஞ் சிவபூசை செய்வா ராகி லவரிழைத்த
மேவ வரிய கொடுவினைக ளனைத்து நீங்கி வீடடைவா
ரோவில் விரதந் தவம்வேள்வி யாற்று வோரி லொண்மலர்தூய்ப்
பூவை பாகன் றனைப்பணியு மவர்மே லன்பு புரிந்திடுமால்.

(இ-ள்.) எவர்களாயிருப்பினுஞ் சிவார்ச்சனைபுரிவாரானால், அவர்கள் பூர்வத்திற்செய்த அடைதற்கரிய தீவினைகளெல்லாம் விலகி மோட்சத்தைப் பெறுவர். கெடுதலில்லாத விரதங்களையுந் தவங்களையும் யாகங்களையுஞ் செய்வோரைக்

காட்டினும், ஒளிவாய்ந்த பூக்களைக்கொண்டு அருச்சனைசெய்து தம்மை வணங்குகின்ற அடியாராபேரில்உமாசமேதராகிய எம்பிரான் அன்பு அதிகரிப்பர். எ-று. (௬)

பனிவெண் டிங்கட் கண்ணிபுனை பரனை யாட்டும் புனலுகர்ந்தோன்
வினை யினீங்கு மப்புனலிற் படிந்தோன் வீங்கு திரைக்கங்கைப்
புனலி னாடும் பலன்கடிதி னடையு மெனத்தம் பெயர்புனைந்து
தனிவே றிலிங்க முறையமைத்துப் பூசை புரிந்து தாமிருந்தார்.

(இ - ள்.) தண்ணிய வெண்ணிற மமைந்த சந்திரனைச் சிரோமாலையாகத் தரித்த சிவபெருமானைத் திருவபிஷேகஞ்செய்த (நிர்மாலியமாகிய) ஜலத்தைப்பானஞ்செய்தவன் தீவினைச் சம்பந்தத்தினின்றொழிவான. அவ்வபிடேகநீரில் ஸ்நானஞ்செய்தவன் மிகுந்த அலைகளையுடைய கங்காசலத்தில்மூழ்கிய புண்ணியத்தை விரைவிற்பெறுவான் என்று கருதி, தத்தமது பெயரைத்தரித்துத் தனித்தனியே ஓரிலிங்கத்தைக் கிரமமாகப் பிரதிட்டைசெய்து அருச்சித்துக்கொண்டிருந்தனர் (சிவகணத்தலைவர்கள்). எ-று. (௭)

கருணை கூர்ந்து சிவகணத்தின் காதை யுரைத்தே மாங்கவரி
லருளின விளங்கு கவத்தீசன் பெருமை விளங்க வறைந்திடுதும்
பெருமா தவத்தின் றுறைபோய முனிவ கேட்டி யெனப்பிறங்கு
குருதி நெடுவேற் கருந்தடங்கட் குறமான் கொழுநன கூறிடுமால்.

(இ - ள்.) ஆசை மிகுந்து சிவகணங்கள் காசியை யடைந்த சரிதத்தைச் சாற்றினோம். இனி அவ்வாறு வந்த கணநாதர்களில் இருடையோடு விளங்கும் கவத்தீசனது பெருமையை நன்குணரச்சொல்லுவோம்; சிறப்பமைந்த பெரிய தவத்துறைகளிற் சென்ற அகத்தியமுனிவனே! கேட்கவேண்டுமென்று, உதிரந் தோய்ந்த நெடிய வேலாயுதத்தையுடையவரும், கருமைவாய்ந்த பரந்தவிழிகளையுடைய வள்ளிநாயகியார் கணவருமாகிய ஸ்ரீ குமாரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று.

"குருதிநெடுவேற்கருந்தடங்கட்குறமான்" என்பதில் 'குருதிநெடுவேல்' என்பதை கடைசிவந்து நீண்டு வேல்போலுமிருத்தலால் கண்ணுக்கு உவமையாகக் கொள்ளினும் பொருந்தும்.

சிவகணங்கள் காசியையடைந்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ - திருவிருத்தம் - ௬௪௬௫

சிவமயம்.

ஐம்பத்துநான்காவது,

# அலகை தேவனாகிய அத்தியாயம்.

கவத்தி யென்னுங் கணாத னொருவ னுளனுங் கவனரிய
தவத்தின மிக்கோன் பத்திரேசன் றனக்கு வடபா லொழிவரிய
பவத்தின் றுயர்வே ரறுத்திடுமோ ரிலிங்க மமைத்துப் பசுந்தேனிற்
சுவைத்தண புனலவா வியுமகழ்ந்து தொடங்கற் கரிய தவம்புரிந்தான்.

(இ-ள்.) கவத்தியென்று சொல்லப்படும் கணாத னொருவனிருந்தான்; அவன் செய்தற்கரிய தவங்களில் மேம்பட்டவன; ஒழிதற்கரிய பிறவித் துன்பத்தை வேரோடு கல்லும ஓர் சிவலிங்கமூர்த்தியைப் பத்திரேசலிங்கப்பெருமானுக்கு வடபுறத்திலே தாபித்து, பசிய தேன்போலும் உருசியை யுடைய குளிர்ந்த நீர்பொருந்திய ஓர் தடாகமும் பிரதிட்டை செய்து தொடங்குதற்கு மரிதாகிய தவத்தைச் செய்தனன். எ-று. (க)

அன்ன விமலோ தகவாவிக் கரையி லிரண்டாம் யுகமதனிற்
பனனு மறைதேர் கவத்தீசன் பாதம் வணங்கி வான்மீகி
யென்னு மறையோ னுற்றரிய தவங்க ளாற்றி யிருந்திடலு
முன்ன மழல்கட் பிறையெயிற்ற மூரலபே யொன்று தோன்றியதால்.

(இ-ள்.) அப்படிப்பட்ட பரிசுத்தமாகிய தீர்த்தக்கரையில், இரண்டாவதாகிய திரேதாயுகத்தில், சொல்லுகின்ற வேதங்களாலே யுணரப்பட்ட கவத்தீசலிங்கப்பெருமானது திருவடிகளைப் பணிந்து வான்மீகியென்னும் பெயரையுடைய வேதியன் (யாவராலுஞ்) செய்தற்கரிய தவங்களைச் செய்துகொண்டிருக்கவும், நெருப்புப்போன்ற கண்ணையும், பிறைச்சந்திரன போன்ற வக்கிரதந்தத்தையு முடைய வலியமைந்த ஒருபேய் அவனுக்குமுன்னே காணப்பட்டது. எ-று. (உ)

ஒட்டி யுலர்ந்த கொடிறுமடிப் புற்ற மூக்கு நீள்கழுத்தும்
விட்டு நெறித்த குஞ்சியுமேல் விரிந்த வுதடுங் குழிந்துபுழை
பட்ட செவியு மென்பொடுதோல் பயின்ற வுடலும பசுங்குருதி
கொட்டு பகுவாய் முழங்குமிடிக் குர லு மாகக் குறுகியதால்.

(இ-ள்.) ஒட்டியுலர்ந்திருக்கின்ற கதுப்பும், மடிப்புகள் பொருந்திய நாசியும், நீண்ட கழுத்தும், நெருக்கற்றுச் சரிந்திருக்குந் தலைமயிரும், மேற்புறம் பரந்துள்ள உதடும், குழியுற்றுத் தொளைபட்ட காதும், எலும்புடனே தோல்தோன்றுஞ் சரீரமும், பச்சை உதிரத்தைச் சொரிகின்ற பிளவுபட்ட வாயும், கர்ச்சிக்கின்ற இடிபோன்ற குரலுமாக (அப்பேய்) வந்தது. எ-று. (௩)

அலகை யின்ற நிலைநோக்கி யாரை நீயிக் கடைந்தெவன்
மெலிவு செயுமிவ் வுருவியைந்த தெவ்வா றிவைநீ விளம்புகெனக்
குலகான் மறையோன் வினவுதலுங் கோதா விரியின் றீரத்தி
நிலவு பிரதிட் டானமெனுந் தொல்லை நகர மொன்றுளதால்.

(இ-ள்.) அவ்வாறு நிற்கும் அலகையின்தன்மையைக்கண்டு, நீ யாவன்? இங்கு வந்தகாரணம் யாது? துன்புறுத்துகின்ற இப்பேயுருவமைந்த நிமித்தமென்ன? நீ இவற்றைச் சொல்லுகவென்று, சிறந்த நான்கு வேதங்களையுமுணர்ந்த வான்மீகி யென்னும் வேதியன் கேட்டவுடன் (பேய் சொல்லுகின்றது) கோதாவிரிநதிக்கரையில் பிரதிஷ்டானமென்னும் பழய நகரமொன்றிருக்கின்றது.

அன்ன நகரி லுவந்துறையு மந்த ணாளன் புண்ணியநீர்
மன்னி யாடு மவருழைச்சென் றிலலென் றிரந்த வாறதனு
லின்ன வுருவ மெய்தியது கெடுநா ளுணவற் றுடற்றுபசி
வெந்நோய் வருத்த நீர்வறந்த நிலத்தி லிருந்து மெலிந்தேனால்.

(இ-ள்.) அப் பிரதிஷ்டானநகரத்திலே களித்துவாழ்கின்ற பிராமணன்; புண்ணிய தீர்த்தத்தில் நிலைபெற்று மூழ்குகின்றவர்களிடத்திற் போய் இல்லையென்று யாசித்தகாரணத்தினால் இத்தன்மைத்தான வடிவம்வந்தது. அநேகதினங்கள் அன்னமில்லாது துன்புறுத்தும் பசியாகிய கொடியநோய் வருத்தும்படி தண்ணீர் வற்றிய (பாலை) நிலத்திலிருந்து வருந்தினேன். எ-று. (ரு)

தெறுவெங் கதிராற் பொழிபுயலாற் றேம்பி யாடை சிறிதுமின்றி
யுறையு நாளிற் புனிதமிலலா னுறுநீர்ப் படியான் கடன்கழியான்
மறையோ னொருவன் வரநோக்கி யிவன்பா லுறையின் மகிழ்ந்துணவு
பெறலா மென்னும் வேட்கையுளம் பிணிப்ப வவனுட் புகுந்தனனால்.

(இ-ள்.) உடற்றுகின்ற வெவ்விய கிரணங்களையுடைய சூரியனாலும், பெய்கின்ற மழையாலும் வருந்தி, கொஞ்சமும் வஸ்திரமில்லாமலிருக்குங்காலத்தில், பரிசுத்தமில்லாதவனும் நீரில் மூழ்காதவனும் காலக்கடனைக் கழியாதவனுமாக ஒரு வேதியன் வரப்பார்த்து இவனிடத்திலிருந்தால் களித்து இரைபெறலாமென்கின்ற ஆசையானது மனத்திலுண்டாக அவனுக்குள்ளே பிரவேசித்தேன். எ-று.

என்னை யொழித்தோர் வணிகனொடு மீட்டு பொருட்குக் காசிநகர்
தன்னில் மறையோன் செலவயரச் சார்தல் செல்லா தவனிழைத்த
முன்னை வினையி னெடும்புறத்து நின்றே னன்று முதலாகப்
பன்னு மறையோன் வரும்வருமென் றூங்கு வழிபார்த் துறைந்தேனால்.

(இ-ள்.) அவ்வந்தணன் என்னை விலக்கி ஒரு வசியனுடன் தேடுகின்ற பொருளுக்காக காசிநகரத்திற்குப்போக, யான் உடன்போக முடியாமல் அவன் செய்த பூர்வவினையுடனே வெளியில்நின்றுவிட்டேன்; அதுமுதற்கொண்டு சொல்லிய அவ்வேதியன் திரும்பிவருவான் வருவானென்று வழியைப்பார்த்துக்கொண்டிருந்தேன். எ-று. (எ)

முளிபுற் கனலும் வெங்கானில் முதிர்வெம் பசித்தீ மிக்ககன
லளியன் றுயரா லுநெய்தி யிருக்கு மேல்வை யருங்கங்கைத் [லும்
தெளிதண் புனற்கா வடிகொணர்ந்தோர் தீதின் மறையோ னெதிர்ப்பட
களிதூங் குள்ளத் தொடுமெவனைத் தின்பான் கடிதி னருக்கடைந்தேன்.

(இ-ள்.) உலர்ந்த புல்லுகள்விளங்கும் கொடியவனத்தில், அதிகரிக்கின்ற வெவ்விய பசியாகிய மிகுந்த அக்கினியால் வருந்தினவனுகித் துன்புற்றிருக்குங்கா

லத்தில் அரிய கங்காநதியின் தெளிவாகிய குளிர்ச்சிதங்கிய தீர்த்தக்காவடியெடுத்துக்கொண்டு குற்றமற்ற ஓர் பிராமணன் எதிர் தோன்றவும் ஆசைமிக்க மனத்துடன் அவனை யுண்ணும்படி அடியேன் விரைவில் சமீபித்தேன். எ-று. (௮)

அடைந்த போழ்திற் சிவசிவவென் றந்த ணாள னறைந்திடலுந்
தொடர்ந்த கொடிய வினையனைத்துந் துறந்தேன் றூய னாதற்பின்
மடந்தை பாகன் காசிதனில் வந்தே னின்னைக் கண்ணுற்றேன்
படர்ந்த மறையோ யிவ்வுருவ மொழித்தி யென்னப் பணிந்ததுவே.

(இ-ள்.) அவ்வாறு பட்சிக்கச்சென்றகாலத்தில், அவ்வந்தணன் சிவசிவவென்றுச்சரிக்கவும், சம்பவித்திருந்த பாவமுழுவதும் விலகினேன்; பரிசுத்தனானபிறகு பார்ப்பதிபாகராகியசிவபெருமானது காசிக்ஷேத்திரத்தில்வந்துசேர்ந்தேன்; தேவரீரைத்தரிசித்தேன்; சாகைகளாகப்பரவிய வேதத்தையுணர்ந்த முனிவரே! இப் பேயுருவத்தை விலக்குவீராகவென்று கூறி (அப்பேய்) வணங்கிற்று. எ-று.

எரிகால் சுழலகட் பேயிதனை யியம்ப லோடும் வான்மீகி
யருள்கூர்ந் திந்த வுருவகல்வான் விமலோ தகத்தி னூடுகெனத்
தெருள்சேர் முனிவ புனல்முதல தீண்டிற் பேயி னுடல்கடுங்க
வொருவா துடற்றும் வயிரவன்ற னாணை யெனத்தாழ்ந் துரைத்ததுவே.

(இ-ள்.) நெருப்பைச்சொரியுஞ் சுழல்கின்ற கண்ணையுடைய பேய் இவ்வார்த்தைகளைச்சொல்லவும் வால்மீகி கிருபைமிகுந்து இவ்வடிவு நீங்கும்படி விமலோதக தீர்த்தத்தில் மூழ்கக்கடவாய் என்று சொல்ல, ஞானம் பொருந்திய முனிவனே! நீர்முதலானவற்றைப் பரிசித்தால் பேயுருநடுங்கும்படி நீங்காது துன்புறுத்தும். இஃது வயிரப்பெருமான்பேரி லாணைப்படி சத்தியம் என அப்பேய் வணங்கிக் கூறியது. எ-று. (௧௦)

கூறு மலகை யுரைகேட்ட முனிவன் கூற்று முளம்வெருவு
நீறு நல்க வடிதொழுது நிலவு வுடலெங் கணும்பூசித்
தேறு புனலி னூடதனுந் தெய்வ வுருவாய் விமானத்தின்
ஏறி முனிவன் றனைப்பழிச்சி யிமையோ ருலகத் தெய்தியதே.

(இ-ள்.) இதனைச்சொல்லிய பேய்வார்த்தைகளைக்கேட்ட வான்மீகிமுனிவன், யமனும் மனநடுங்கத்தக்க திருவெண்ணீற்றைத்தர, (அவ்வலகை,முனிவன்) பாதத்தில் வணங்கிப்பெற்று, தேகமெங்கும் விளங்கச் சணணித்துச் சிறந்த தீர்த்தத்தில் மூழ்கவும், தெய்வவடிவேற்று விமானத்திலேறி, வான்மீகமுனிவனைத் துதித்து, வானுலகத்தை யடைந்தது. எ-று. (௧௧)

அலகை யுருவ மொழித்ததனா லதன்பேர் வாவிக் கடைந்ததிந்த
நிலவு கதையை நவின்றோர்கள் கேட்டோர் நெஞ்சம் வெருக்கொள்ள
வுலகி லலகை நலியாது விடுத்தோர் மீளா துறைந்ததனு
விலகு கணிச்சி யையங்கரனை விடுத்த காதை யியம்புவாம்.

(இ-ள்.) அலகைவடிவம் (அதில் மூழ்கி) நீங்கினதால் (அலகை தீர்த்தமென்று) அத்தடாகத்திற்கு அலகையின்பேர்வந்தது. நிலைபெற்ற இச்சரித்திரத்தைச் சொன்னவர்களும் கேட்டவர்களும் மனநடுக்கமெய்தும்படி உலகத்திலே அலகை

கள் துன்புறுத்தாது. விளங்குகின்ற மழுப்படையேந்திய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான் (யோகினிகள்-சூரியன்-பிரமன் முதலாகக்) காசிக்கு அனுப்பினவர்கள் திரும்பிவராது அங்கிருந்த காரணத்தினால் ஐந்து திருக்கரங்களை யுடைய ஸ்ரீ மூத்த பிள்ளையாரை யனுப்பிய சரிதையை இனிச் சொல்லுவோம். எ-று. (கஉ)

அலகை தேவனாகிய அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-கசஎரு.

---

உ

சிவமயம்

ஐம்பத்தைந்தாவது,

## கணபதி காசியையடைந்த அத்தியாயம்.

விடுத்த கரும முடியாதே மெவ்வா றடைது மெனவெருவி
யடுத்து முனம்யாம் விடுத்தோர்கள் மீளா துறைநதா ரவ்வுழிபோய்த்
தொடுத்த கருமம் வழுவாது முடித்தி யென்ன விருடேங்கு
கடுத்தாழ் கண்ட னைங்கரனை யினிதி னோக்கிக் கட்டுரைத்தான்.

(இ-ள்.) அனுப்பிய காரியத்தை முடியாதவர்களாகிய நாம் எவ்வாறு (பெருமான் முன்னர்) செல்வோமென்றஞ்சி, ஒருவர்பின் னொருவராக நாம் முன் அனுப்பிய யோகினிமுதலானோர் திரும்பிவராமலிருந்தனர், நீ(அதுபோலன்றி) அக்காசி நகரமடைந்து (திவோதாஸன் செங்கோல் கோணச்செய்தலாகிய) மேற்கொண்ட தொழிலைத்தவறாமல் முடிக்கக்கடவாயென்று, கருமைமிகுந்த காளகண்டத்தையுடைய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான், ஐந்து திருக்கரங்களையுடைய ஸ்ரீ விநாயகமூர்த்தியை இனிதாகப்பார்த்து உறுதியாகக் கூறினர். எ-று. (க)

கதிர்கா லொற்றைப் பிறைக்கிழவன் கழறு மாற்றந் தலைக்கொண்டு
மதநீர்க் கலுழிப் பேரியா றுழங்கு கோட்டு வரையெழுந்து
பொதிவா யவிழ்க்கும பசும்பாளை பொழிந்த தேறல் வழிந்தொழுக
முதுநீர்க் கங்கைப் பெருக்கெடுத்து முழங்கு காசி யடைந்ததுவே.

(இ-ள்.) கிரணங்களைப்பொழிகின்ற இளம்பிறைச்சந்திரனைச்சூடிய சிவபெருமான் கட்டளையிட்ட ஆணையைச் சிரமேல்வகித்து, மதநீராகிய கலங்கலையுடையபெரிய ஆற்றைபொழுக்கும் கொம்புகளையுடைய மலைபோன்ற ஸ்ரீகணேசப்பெருமான் எழுந்து, கட்டுகள் வாயவிழ்கின்ற பசிய பாளைகள் சொரிந்த தேன் பாய்ந் தொழுகலால், பழமையாகிய நீரையுடைய கங்காநதியின் பெருக்கு மிகுந் தொலிக்கும் காசிக்ஷேத்திரத்தை யடைந்தனர். எ-று. (உ)

எண்ண முரைக்கு மறையோனிற் பகற்போ தெல்லா மெவர்கடையு
நண்ணி யுரைக்கு மிரவெல்லாங் கனவு காட்டு நனிகதிராற்
றண்ணங் கமல மலர்போதிற் றனிவந் திரவு கண்டகனு
வண்ண மீதென் றவரவாத முள்ளமவியப்ப வகுத்துரைக்கும்.

(இ - ள்.) பிறர் கருத்துக்களையெடுத்துக் கூறும் (சோதிடமுணர்ந்த) பிராமணன் போன்று பகற்காலமுழுவதும் எவர் வீட்டிலும் பிரவேசித்துத் திருவாய் மலர்ந்தருளுவார் ; இராக்கால முழுவதும் (ஒவ்வொருவருக்கும்) சொப்பனங்களை மிகுதியாகக் காண்பிப்பார் ; குளிர்ச்சிபொருந்திய அழகிய தாமரைகள் சூரியவொளியால் மலர்கின்ற காலையில் ஒப்பற்றுவந்து இராத்திரிப்பொழுதிலுண்டாகப் பார்த்த கனவின் றன்மை இத்தகையினதென்று அவரவர்களது மனங்களிக்க விரித்துக்கூறுவார் (ஸ்ரீ விக்கினேசுரர்) எ - று.

[இதுமுதற் பன்னிருபாடல்களால் விநாயகப்பெருமான் காசியி லியற்றிய திருவிளையாடலைச் சொல்கின்றனர்.] (௩)

கோழிகூவித் துயிலெழுப்புங் காலைச் சேற்றிற் குளித்தெழவு
மாழ்தண் புனலின மூழ்கிடவுங் கனவு கண்ட ராங்கதனாற்
பாழி நெடுந்தோண் மன்னவரா லிடியாற் பயம்வந் தெய்துமெனக்
காழ்கொண் டுளகா மனத்தினரு மூழையச் சிலர்பாற் கட்டுரைக்கும்

(இ - ள்.) சேவல்கள் கூவி நித்திரையினின் றெழுப்பிய விடியற்காலத்தில் சேற்றிலே முழ்கி யெழுந்திருக்கவும், ஆழமாகிய குளிர்ந்த நீரிற் குளிக்கவும் சிலர்கள் கனக்கண்டார்கள் ; அக்கனவினால் வலியமைந்த நெடிய தோள்களையுடைய மன்னராலும் இடியாலும் துன்பம்வந் தடையுமென்று, வயிரமுற் றருகாத மனமுடையவர்களும் உருகும்படி சிலரிடத்தில் உறுதியாகக் கூறுவா. எ - று. (௪)

கற்றோய் கலிங்க மசைத்துமயிர் குறைத்தோ னொருவன் கங்குலின்வா
யுற்றான் கெதிரக் கனவுகண்ட வாற்றாற் றுன்ப முறுதியெ'ன
மற்றூன் கொருவன் பாற்போகி வழங்குஞ் சிலர்பாற் போயிரவு
பொற்பார் கதிரைக் கண்டதனாற் றுயர்வந் தடையு மெனப்புகலும்.

(இ - ள்.) காவிக்கல்லின் சாயந் தோய்த்த வஸ்திரமணிந்து தலைமழுக்கிய ஒருவன் இரவில் வந்து எதிர்ப்படக் கனவுகண்ட தன்மையால், துன்ப மடைதல் சாதமென்று ஒருவனிடத்திற் போய்ச் சொல்லுவர் ; வேறு சிலரிடஞ் சென்று அழகுபொருந்திய சூரியனை இரவிற் புலப்படக்கண்டதனால், துயரம்வந்து சம்பவிக்கும் என்று கூறுவர். எ - று. (௫)

கடவுண் மதியைச் சுடர்வெய்யோன் விழ்த்த கனவு கண்டதனு
லடையுந் துயர மிக்கவென் றுறையுஞ் சிலர்பாற் பல்விழவுங்
கொடியோ னொருவன் மயிர்பற்றிக் கொடுபோ கவுநீர் கண்டதனு
லொடிவில் கிளைஞ ரொடுமுடிவீ ரென்று சிலரோ டோதிடுமால்.

(இ - ள்.) சந்திரபகவானைக் கிரணங்கள் பொருந்திய சூரியன் தாழ்த்தியதாகச் சொப்பனம்பெற்றகாரணத்தினால் இக்காசிநகரமுழுவதும் துக்கப்படுமென்று

சிலரிடத்திற் சொல்லுவர்; (வாயிலுள்ள) பற்கள் சிந்தவும் நீயோனாகிய ஒருவன் தலைமயிரைப் பிடித் திழுத்துக்கொண்டு போகவும் நீங்கள் கனவுகண்டதனால், கெடுதலில்லாத சுற்றத்தாரோடு மரணமடைவீர்களென்று சிலருடனுரைசெய்வார்.

கொண்டல் விளையாட் டயர்மாடக் குடுமி தொடுத்த கொடிவீழக்
கண்ட கனவா லிந்நகரந் துறந்து போதல் கடனென்னு
மண்டு திரைநீர்க் கடலிவ்வூர் வளையக் கண்ட வாற்றாலொன்
றுண்டோர் மதியி லிந்நகர முறைவோர் துன்ப முழப்பரெனும்.

(இ-ள்.) மேகங்கள் விளையாடல் செய்யும் மாளிகையின் சிகரத்திலே கட்டிய துவஜங்கள் சாய்ந்து விழுவதாகக் கண்ட கனவினால், இக் காசிநகரத்தை யொழிந்து செல்லுதல் முறைமையென்று (சிலருடன்) சொல்லுவர்; அலைகள் மிக்க நீரையுடைய சமுத்திரம் இவ்வூரைச் சுற்றிக்கொள்ளக் கனவுகண்டதனால், இக் காசிப்பட்டணத்தில் வசிப்போர் ஒருமாசத்துக்குள் துன்புற்று வருந்துவரென்று கூறுவர். எ று.

அந்நகரத்திலுள்ள மாளிகைகள் மேகமண்டல மளாவி நிற்றலின், அவை அங்கு தங்குவதும் தவழ்வது நோக்கி விளையாடும் பாவனையாகக் கொண்டு "கொண்டல் விளையாட் டயர்மாடம்" என்றார். (எ)

அன்னுண் கலிங்க மருங்கசையா வறன்மென் கூந்தற் சுவற்புரளக்
கன்னற் குதலை யக்நீஞ்செ லொருத்தி கலுழக் கனக்கண்ட
தென்னே கடவுட் காசியைவிட் டகறு மென்ன விருந்தேங்கிப்
பொன்னங் கமல மயிலழுத தென்னச் சிலர்பாற் புகுந்துரைக்கும்.

(இ-ள்.) அழகிய மெல்லிய ஆடையை இடையிலுடுத்து, கருமணற்படிவு போன்ற மெல்லிய அளகபாரமானது பிடரிமேற்புரள, கற்கண்டு போலும் மதுரம் பொருந்திய அழகிய குதலைச் சொல்லுடைய ஒருத்தி விசனப்படக் கனவுகண்டதென்னவென்றால், தெய்வீகம் பொருந்திய காசிநகரை விட்டு நீங்குவோமென்று கருதி வருத்தமுற்று, அழகிய தாமரைமலரிலுள்ள மயிலின் சாயலையுடைய இலக்குமிதேவி அழுததாகுமென்று (வேறு) சிலரிடம்போய்ச் சொல்லுவர். எ-று.

செக்கர்மாலைப் பிறைக்குழவி நிலவு தூங்கு செஞ்சடையெம்
முக்கட் பெருமான் சினகரத்தின் முடியொன் றுடையக்கங்குலின்வாய்ப்
புக்க கனவு கனைடனிராற் சின்னா ளையிலிப் புனைநகாவாழ்
மக்கள் யார்க்கும் வெருவெய்து மென்று சிலர்பால் வருத்துரைக்கும்.

(இ-ள்.) செவ்வானந் தோன்றும் மாலைக்காலத்தி லுதிக்கின்ற இளம்பிறைச்சந்திரன் விளங்குகின்ற சிவந்த சடையையுடைய திரிநேத்திரங்கள் பொருந்திய எமது சிவபெருமானது திருக்கோபுரத்தின் சிகரமொன் றுடைந்துபோக, இரவில் உண்டான கனவு கண்டவ ராலகையால், சிறிதுதினங்களில் அழகிய இக் காசிநகரத்தில் வசிக்கின்ற மனிதர்களெல்லாருக்கும் (பலவகைத்தான) அச்சமடைய நேரிடுமென்று சிலரோ டெடுத்துச் சொல்லுவர். எ-று. அ

என்று கொடுந்தீ வினைக்கனவு காட்டிப் பின்னு மியங்கிடுகோ
ணின்ற நிலைகூ றுவலென்னுச் சிலரை நோக்கி நிகழ்பாவ
மொன்று கிரக மனைத்துமொரு ராசி யதனி லுறைந்தவற்றாற்
சென்று படுமிந் நகர்லுயிர் யாவு மென்னச் செப்பிடுமால்.

(இ-ள்.) என் றிவ்வாறு கொடிய தீச்செயல்களை விளைக்குஞ் சொப்பனங் களைக் காண்பித்தது மேலும், சஞ்சரிக்கின்ற நவக்கிரகங்க ளிருக்குந் தற்கால நிலை யை யுரைப்பேனென்று சிறிதுபேரைப் பார்த்து, விளங்குகின்ற பாவக்கிரகங்க ளெல்லாம் ஒருராசியிலேயே தங்கியிருக்குங் காரணத்தால், இக்காசிநகரத்தி லுள் ள உயிர்களெல்லாந் துயருழந் தழியுமென்று கூறுவர். எ-று. (௧௦)

ஓடியாத் தவஞ்செ யிருடிகளோ ரெழுவ ருறைமண் டலம்போழ்ந்து
குடபாற் போகி யொழுகொளிய தூம கேது குறுகியதாற்
கடல்சூ ழுலகங் கொளக்குறையா வளங்கூர் காசி நகாபுரக்கு
மடல்வேல் மன்னற குறுதுயருண் டென்று சிலரோ டறைந்திடுமால்.

(இ-ள்.) நீங்காத தவங்களைப் புரியுஞ் சப்தவிருடியர் வாழ்கின்ற மண்ட லத்தைப் பிளந்துகொண்டு மேற்றிசையாகச் சென்று விளங்கும் பிரகாசத்தை யுடைய தூமகேது தோன்றிய தன்மையால், சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ளோ ரெல்லாங்கொண்டாலுங் குறைவுபடாதவளப்பமிகுந்த காசிப்பட்டணத்தைஅரசு செய்யும் வலியமைந்த வேலேந்திய அரசனுக்குத் துன்பம் வருமென்று வேறு சிலருடன் சொல்லுவார். எ-று.

தூமகேது என்பது வால் நட்சத்திரம். இது தோன்றுவது மன்னருக்குத் தீமைவிளைக்குங்குறி யென்பர். (௧௧)

நெடுநீர்ப் பரவை யுடுத்தவகன் ஞால நடுக்க நிகழ்ந்ததனாற்
கடை தூங் கொளிரபொற கதிர்மணி நாக் கறங்கா துறங்கு மணிக்கோயிற்
சுடர்கால பசும்பொன் மணிமுகடு வேய்ந்த தொடித்தோட் புரவலற்கிங்
கடையாத் துயாவந் தடையுமெனச் சிலர்பாற் போகி யினிதறையும்.

(இ-ள்.) பரந்த நீர்மயமான கடலாடையையுடைய பெரிய உலகிற்பூகம்ப முண்டானதால், கடைவாயிலிற் கட்டிய ஒளிவீசும் பொன்மயமான இரணங்களை யுடையஆராய்ச்சிமணிநாவசையாமல்தூங்குகின்ற அழகிய மாளிகையிலுள்ளஒளி வீசும் பசும்பொன்னாற் செய்து நவமணிகள் மேலே பதித்த வாகுவலய மணிந்த தோள்களையுடைய (திவோதான னென்னும்) அரசனுக்கு வரக்கூடாத துன்பம் வந் தடையும் எனச் சிலரிடஞ் சென்று நன்றாகச் சொல்லுவர். எ-று. (௧௨)

கடல்வாய் மடுத்து நிமிர்ந்தெழுந்த கமஞ்சூற் கொண்டல் துளிதூங்கு
நெடுவான் பூத்த வுற்கமொன்று மன்றித தடவு நிலைத்தருவின்
வடபா னினறுந் தென்பாலாய் வீழ்ந்த வாற்றால் மன்பதைகள்
படர்கூரந் திடுமோர் புதுமையிஃ தென்று சிலர்பாற் பரிந்துரைக்கும்.

(இ-ள்.) சமுத்திரநீரைப் பானஞ்செய்து மேற்கொண் டெழுந்த நிறைவா கிய சூல்கொண்ட மேகமானது மழைத்துளிகளைத் துளிக்கின்ற நெடிய ஆகாயத்தி

உண்டாகிய ஓர் நட்சத்திரம் நிலைபெற்ற இப் பரந்த மரத்தின் வடபுறமிருந்து தெனபுறமாக விழுந்ததன்மையால் மனிதர்கள் துன்ப மிகுவார்கள்; இஃதோ ரற்புதமென்று சிலரிடத்திலே இரக்கங்கொண் டுரைப்பார். எ-று.

உற்கம் = விண்வீழ் கொள்ளி.

(கங)

இரவுக் குறும்பு தலைபெயர விருண்மேய்ந் தெழுவெங் கதிர்ப்பரிதி
யுரவுத் திரைநீக் கடன்முகட்டி னுதித்த பின்னர் முளிசினைவான்
மருவிற் சுழலகட் கொடுங்கூகை சார்ந்து குணபால் நோக்கியுளம்
வெருவக் குளறிற் றிஃதென்னோ விளைக்குமென்னுச் சிலர்க்குரைக்கும்.

(இ-ள்.) இரவாகியகுறும்பொழியும்படி அந்தகாரத்தையடக்கி யுதிக்கின்ற சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியன் வலிதங்கிய அலைகளையுடைய நீர்மயமான கீழ்க்கடலுச்சியில் உதயமானபிறகு, உலர்ந்த கிளைகளையுடைய பெரிய மரத்தில், சுழலுகின்ற கண்ணையுடைய ஆந்தை இருந்துகொண்டு கீழ்த்திசை பார்த்து மன நடுங்கக் கிளை கொட்டிற்று. இதுவென்ன வுண்டுசெய்யுமோ வென்று (ஸ்ரீகணே சப்பெருமான்) வேறு சிலருக்குக் கூறுவர். எ-று.

(கச)

கணபதி காசியை யடைந்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசஅகூ.

ஐம்பத்தாறுவது,

## கணபதி திவோதாசனைக் கண்ட அத்தியாயம்.

இன்ன வாறு மன்பதைக ளுள்ளம் வெருவ வெடுத்தியம்பா
வன்ன நகரந் துறந்துசிலர் போக வியற்றி யவர்போய
பின்னர் முதுமூப் புடையமறைக் கிழவ னாகிப் பிறங்குகதிர்ப்
பொன்னங் கழற்கால் வயவேந்த னுறையு மனையிற் புகுந்துரைக்கும்.

(இ-ள்.) இந்த வகையாக (ஸ்ரீ மூத்தபிள்ளையார்) பிரஜைகள் மனத்தில் அஞ்சும்படி (துர்நிமித்தங்களை) எடுத்துக்கூறி அப்படிப்பட்டகாசிநகரத்தை விலகிச் சிறிதுபேரை (வேறிடங்களில்) செல்லச்செய்து அவர்கள்போனபிற்பாடு அதிக விருத்தத்தன்மை யுடைய வேதியவடிவுடையராகி, ஒளிவீசுகின்ற அழகிய பொன்னாலாகிய வீரகண்டாமணி தரித்த கால்களையுடைய வெற்றிபொருந்திய திவோதாசன் வசிக்கும் மாளிகையினுட் பிரவேசித்து (பின் வருமாறு) திருவாய்மலர்ந் தருளுவார். எ-று.

(க)

கதிர்முத் துரிஞ்சு முலைக்கருங்கட் காமர் கன்னி நீபயந்த
புதல்வ ரொருநூற் றுவருளராங் கவரில் மூத்தோன் போரினிலேற்

றெதிரு முரவோன் கவினவயப் புரவி யிவர்ந்து வீழ்ந்தனனென்
மதியி னுரைத்தே துளதோவென் றொருத்தி யோடு மகிழ்ந்துவாக்கும்.

(இ-ள்.) கிரணங்களைச் சொரியும் முத்துமாலைகள் பூண்டிருக்குந் தனங்களையும், கரிய கண்களையுமுடைய அழகிய பெண்ணே! நீ பெற்ற புத்திரர்கள் நூறு பேருண்டு. அவர்களில் ஜேஷ்டன், யுத்தத்திலே (அஞ்சாமல்) எதிர்த்துப் போர் செய்யத்தக்க வலியன்; கடிவாளம்பூண்ட வெற்றிபொருந்திய குதிரையேறி விழுந்தான் இஃதென் மதியாற் கூறினேன். உள்ளதுதானோ? என்று, ஒருத்தியுடன் சந்தோஷித்துரைப்பார். எ-று. (௨)

வள்ளற் பசுந்தார் மதிக்கவிகைச் செங்கோல் வேந்தன் மார்பணிந்த
வெள்ளிக் கதிர்கா லிப்பியின்வாய் வெடித்த பருமுத் தணிதொடையுன்
னுள்ளத் துவகை மீதூர நெருக லளித்தா னுளதுகொ லென
றள்ளிக் கொளலா மிருட்கூந்த லொருத்தி பாற்சென் றறைந்தேகும்.

(இ-ள்.) பசிய மாலையையும், சந்திரவட்டக்குடையையும், செங்கோலையுமுடைய வள்ளலாகியதிவோதானராஜன் மார்பிலணிந்திருந்தவெள்ளியைப்போல ஒளிவீசுஞ் சங்குகள்பெற்ற பருத்த அழகிய முத்துமாலையை உன்மனதில் ஆசையதிகரிக்கும்படி நேற்றுனக்குக்கொடுத்தனன் இந்த உள்ளதுதானோ? என்று, அள்ளிக்கொள்ளத்தக்க இருண்மயமான கூந்தலையுடைய ஒருத்தி யிடத்திற்போய்ச் சொல்லிச் செல்லுவர் எ-று. (௩)

தழுவ வடங்காத் தடங்கொங்கைக் கமஞ்சூற் கொண்ட ருழ்குழலாய்
மழலைத் தீஞ்சொன் மகப்பெறுவை யென்ன வொருத்தி யுடன்வழங்குங்
கழும முடித்த கருங்கூந்த லொருத்தி யோடு காவலன்றன
விழைவு நோக்கி லெஞ்ஞான்று நின்மே லாகு மெனவிளம்பும்.

(இ-ள்.) தழுவுதற்கடங்காத பூரித்தமுலைகளையும், சூல்கிறைந்த மேகத்தங்கினையொத்த கூந்தலையுமுடையவளே! மதுரமாகிய மழலைச்சொல்லையுடைய குழந்தை பெறுவாய் என்று ஒருத்தியோடு கூறுவர். அரசனது ஆசையைப்பார்த்தால் எப்போதும் உன் பேரிலிருப்பதாகுமென்று செங்கழுநீர் மலர்மாலை சூடிய அளகபாரத்தையுடைய ஒருத்தியுடன் ஓதுவார். எ-று. (௪)

என்றிவ் வாறு தனிக்கவிகை வேந்தற் குரிய வேழையர்பாற்
சென்று பிழையா துண்மையினி துரைப்ப மகிழ்ந்து சின்னுளிற்
பொன்றுழ் திதலைப் பொம்மன்முலை லீலா வதியென் றுலகுபுகழ்
மன்றற் கோதை வேல்வேந்தற் கந்த ணுளன் வரவுரைத்தாள்.

(இ-ள்.) என்றிவ்வகையாக ஒப்பற்ற குடையையுடைய திவோதானனுக்குள்ள மனைவிமாரிடத்திற் போய்த்தவறுமல் உள்ள விருத்தாந்தங்களை நன்றாகச் சொல்ல, பொன்போன்ற தேமல்பூத்தபூரித்த குசங்களையுடைய லீலாவதியென்று உலகிலுள்ளார் புகழும் மலர்மாலை சூடிய கூந்தலையுடையவள் சிறிது தினங்களிற் களித்து, வேற்படைதாங்கிய மன்னனாகிய திவோதானனுக்கு (இத்தகைய அற்புதச் செய்கைதனைக் கூறும்) வேதியனது வருகையைத் தெரிவித்தாள். எ-று. (௫)

பீர்பூத் தலர்ந்த பொம்மன்முலைப பேதை மறையோற் கொணர்தியென
போரவேட் டுறங்காக் களிறுழுவன் புகல மறையோன் புகுநதிட லுங்[ப்
காராவாய் துளிவேட் டினிதுவளர் பைங்கூ ழெனனக் கலைகணு
யார்மாட் டினுமங் கவரவாதம முயிரபோ லெனறு மளிததேனலை.

(இ-ள்.) சண்டையை யிச்சித்துக் கணுறகக கொள்ளாத யானை யை யுடைய திவோதாஸன் பசலைநிற மிகுந்து பரநது பூரித்த முலைகளையுடைய லீலாவதீ! அவ்வேதியனைக் கொண்டுவாவென்று சொலல, அநதணவடிவுற்ற ஸ்ரீ மூத்தபிள்ளையார் வரவும், மேகததினின்று வரும் நீர்த் துளியை விரும்பி இனிதாக வளர்கின்ற பயிரைப்போல யாரிடத்திலும் ஆதரவாக நின்று அவரவாக ளுயிரைப் போல எப்போதுங் காத்தேன். எ-று. (௬)

பன்னு மறைகள் விளையாடுஞ் செந்நா முனிவர் பதமலரோ
யின்னும் வழிபா டியறறுவதே யலலாற் பிறிதொன் றுற்றுகிலே
னன்ன வெனக்கிந் நிலக்கிழமை யகலவா னுள்ள மடைநததிது
முன்னி யுணர்த்து கெனமறையின் பொருடோ வாழ்க்கை முனிகூறும்.

(இ-ள்.) சொல்லுகின்ற வேதங்கள் பயிலும் சிவநத நாவையுடைய முனிவர்களது பாததாமரையே இன்னும் வழிபாடுசெய்வ தல்லாமல் வேறொன்றும் யான் செய்கிறதில்லை. அததனமைப்பட்ட எனக்கு இப்பூமியின் சுதந்தரததை விலக்கும்படி மனதில் (விரக்தி) தோன்றியது. இதனை ஆலோசிததுச் சொல்ல வேண்டுமென்று திவோதாஸன கூற, வேதததின பொருளை யுணருணாநத வாழ்வையுடைய முனிவர் கூறத்தொடஙகினர். எ-று. (௭)

மதியி னமரர் குலக்குரவ னருளால் வானின் மதிக்கடவு
ளுதவு கொடையி லளகையர்கோ னொளியாற் செங்கேழ்ச் சுடர்ப்பரிதி
யெதிரு மமரிற் கொடுங்கூற்றம பொறையில் ஞால மிரங்குதிரை
முதுநீ ராடைப் புவிபுரக்கு முறையிற் சிறந்த மனுவாமால.

(இ-ள்.) புத்தியிலே தேவர்களது சிறந்த ஆசிரியராகிய பிரகஸ்பதிமுனிவர்; கிருபையிலே ஆகாயத்திலுள்ள சந்திரபகவான்; (யாசித்தோர்க்கு) உதவுகின்ற ஈகையில் அளகாபுரிக்கிறைவனை குபேரன; பிரகாசத்தில் செநநிறமமைந்த கிரணங்களையுடைய சூரியன்; எதிர்க்கின்ற யுததத்தில் கொடிய யமன்; சாந்தத்தில் பூமிதேவி; ஒலிக்கின்ற அலைகளையுடைய பழைய கடலாடை யுடுத்த பூமியைக் காக்கும் முறையில் சிறந்த மனுவென்று உன்னைச்சொல்லலாம். எ-று.

மும்மைத் தொழிலு மியற்றுதலான் மூவ ரென்ப முழுதுலகு
மம்ம தாக மகற்றுதலாற் புயலென் றிசைப்ப வார்வமொடுங்
கைம்மா மலரிற் றிருவுறைந்தாள் முகத்திற் கலைமா மகளிருந்தாள்
வெம்மை விடுகின் முனிவுமொழி யமிாத நினைப்போல வேறுளரார்.

(இ-ள்.) (ஆக்கல்-காத்தல்-அழித்த லென்னும்) மூவகைத்தொழிலையுஞ் செய்வதனால் (பிரமா-விஷ்ணு-உருத்திரனாகிய) திரிமூர்த்திகளுமாமென்று உலகினுள்ளாரெல்லாருஞ் சொல்லுவர்; தாகத்தை விலக்குவதனால் மேகம் என்பர்; ஆசையு

டன் கையாகிய சிறந்த தாமரைமலரில் திருமகளிருக்கின்றாள்; முகத்தில் சிறந்த கலைமகளாகிய சரசுவதி யிருக்கின்றாள்; நின் கோபச்சொற்கள் கொடிய விஷம்; உன்னைப்போல அமிர்தமாக வேறே யாவரிருக்கின்றனர். எ-று. (௯)

ஆத லாலிவ் வுலகமுழு தாளுந் திகிரி யரவோய்நின்
நீதி யுளத்தி னிடைக்கிடந்த செய்தி புணர்ந்தே னின்றுமுத
லோது நாளோ ரிருநான்கிற் குணபா லின்று மொருமறையோன்
போது மவனுன் றிறமெலலாம விளங்க வருளாற் புகனறிமொல.

(இ-ள்) ஆனபடியால் இந்தப் பூமிமுழுவதும் அரசுசெய்யும் ஆக்ஞைசக்கிரத்தை யுடைய வலியமைந்த அரசனே! குற்றமில்லாத உன துள்ளத்தில் எண்ணிய செய்தியை யறிந்தேன. இன்றுமுதலாகச் சொல்லுகின்ற எட்டுத் தினங்களில், கீழ்த்திசையிலிருந்து ஒரு வேதியன் வருவான்; அவன உன துவல்லமையையெல்லாம் புலப்படுமபடி கிருபையுடன சொல்லுவான. எ-று. (௰)

எள்ளல் செய்யா தவன்மாற்றங் கோடி யென்ன வினிதியம்பி
யள்ளற் பழன வயற்காசி நகரி லுறைவோ ரடல்வேந்தி
னுள்ளத் துயிரிற் பிரியாத மகளி ருவப்ப முனமுறைந்த
வள்ளற் றனத் தான்மாலை வேணடும வணண மமைத்திருந்தார்.

(இ-ள்.) அவ்வேதியன் வார்த்தையை இகழ்ச்சி செய்யாமல் ஏற்றுக்கொள்க்கடவாயென்று இனிதாகக் கூறி, சேறுகிய வயல்களை யுடைய காசிநகரத்தில் வசிப்போராது பராக்கிரமம்பொருந்திய திவோதானராஜனது உயிர்போலப் பிரியாதிருக்கின்ற மாதர்கள்மகிழும்படி முன்னிருந்த சிவபெருமான் விஷயமாக அவனைத் திருத்திவைத்திருந்தார் (ஸ்ரீகணேசப்பெருமான்). எ-று. (௧௧)

கணபதி திவோதானனைக்கண்ட அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௫௦௦.

---

ஐம்பத்தேழாவது,

## விஷ்ணு காசியையடைந்த அத்தியாயம்.

கரையெறிந் தொழுகிக் கருந்திரை புரட்டுங் காளிந்தி யெனக்கடாங் கவிழ்க்கும், பொருசினத் தறுகட் கரிமுக னின்னும் போந்தில னென மனந் திகையா, மருதிடைத் தவழ்ந்து கோவிய ராடை கவர்ந்துவான் குருந்தின்மே லிவர்ந்த, திருமறு மார்பன் வாண்முக நோக்கித் திங்களங் கணணியோ னுரைக்கும்.

(இ-ள்.) கரையைமோதிச் சென்று,கருமையாகிய அலைகளைச் சுருட்டுகின்ற காளிந்திநதியென்று சொல்லும்படி மதநீரைச்சொரியும்,போர்செய்யுங் கோபத்

தையும் அஞ்சாமையையுமுடைய யானைமுகமுள்ள கணபதி இன்னும் திரும்பி வர வில்லையென்று மனமருண்டு, மருதமரத்தின் நடுவே (தன்னை யசோதைகட்டிய உரலோடு) தவழ்ந்து சென்று, (ஜலக்கிரீடை செய்யுங்) கோபிகாஸ்திரீகளது சேலைகளைக் கவர்ந்துகொண்டு, பெரிய குருந்தமரத்தின்மேலேறிய விஷ்ணுமூர்த்தியினது ஒள்ளிய முகத்தைப்பார்த்து, அழகியசந்திரனை மாலையாகத்தரித்த சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுவார். எ-று.

திருமால் மருதிடைத் தவழ்ந்தது.

கிருஷ்ணாவதாரத்தில் ஆயர்வீடுகளிற் சென்று கோவியர் வைத்துள்ள தயிர்ப்பாண்டங்களை மத்தா லெறிந் துடைத்தும், கன்றுகளை யவிழ்த்துவிட்டுப் பசுவின்பாலுண்ணச் செய்தும் இதுபோன்ற பல குறும்புக ளியற்றி விளையாடி வருகிற காலததி லொருநாள், தமது பாதத்தால் தயிர்க்குடங்களை யுதைத் துருட்டித் தாயாகிய அசோதை கண்டாற் கோபிப்பா ளென்று கருதி, மற்றொரு வீடு சேர்ந்து அவ்வீட்டி லுள்ள வெண்ணெயுறி எட்டாமையால் உரலின்மே லேறிப் பானையைக் கல்லா லடித்து வெண்ணெய் விழுகையில் கையா லேந்தி யுட்கொண்டு, தம்முடன் வந்த நந்தனருக்கும கொடுத்துப் பூனைக்கும் பகிர்ந்தனர். வெளியினின்று வந்த அசோதை தயிர்க்குழிசி யுடைத்துச் சென்ற கண்ணனைக் காற்சுவடுவழி சென்று கண்டறிந்து உதடு மடித்துப் பயமுறுத்தி உரலில் தாம்பினாற் கட்டினள். அக்காலத்தில் குபேரன் புதல்வராகிய நளகூபரன் மணிக்கிரீவனென்போர் நாரதமுனிவர் சாபத்தால் மருதமரமாக நிற்றலின், அம் மரங்களி னிடையே கிருஷ்ணபகவான் தம்மைப் பிணித்த உரலோடு தவழ்ந்து சென்றதால் அம் மரங்கள் சாய்ந்து அவர்க ளிருவரும் தமது பண்டைய வடிவொடு பரவித் தமது பதியையடைந்தனர். அதுகண்ட அசோதை கண்ணனைக் கட்டவிழ்த்து மனைக்குக் கொண்டுபோயினள் என்பது. இதனை,

கூர்மபுராணம் - கண்ண னவதரித்த அத்தியாயம்.

"வடித்தசெழு மறைதேடிக் காணாத மணிவண்ணன்
அடிச்சுவடு தனிச்சென்றாங் கையனைக்கண் டீங்கனிவாய்
மடித்துறுக்கி யெத்தேவு மறியாத மழைமுகிலைப்
பிடித்தனனை நெடுந்தாம்பி னுரலோடும் பிணித்தனளால்.

உரலினொடுந் தனிபோகி மணிவண்ண னோரிரண்டு
மருதினிடைத் தவழ்போழ்தின் மலைமுறிந்தா லெனமுறிந்து
தரைகுழிய வீழ்ந்தவைகள் வீணைமுனி சாபம்போய்
அரியநள கூபரனு மணிக்கிரீ வனுமானார்."—என்பதனானும்,

திருமால் கோவிய ராடை கவர்ந்து குருந்தின்மே லிவர்ந்தது.

ஒருநாள் கோவியர் கூட்டங்கொண்டு யமுனாநதியை யடைந்து ஆபரணங்களையும் ஆடையையும் களைந்து கரைமீது வைத்துவிட்டுச் சிறிதுபொழுது ஜலக்கிரீடை செய்துகொண் டிருக்கையில்,கிருஷ்ணபகவான் ஓர் விளையாட்டாக அவர்கள் சேலைகளையெடுத்துக்கொண்டு ஓர் குருந்தமரத்தின்மேலேறினர். கோவியர்

நீராடி முடிந்து தமது சேலைகள் காணாராய்க் கண்ணபிரானைக்கண்டு தமக்கு வஸ்திரமளிக்கும்படி வேண்ட, நீங்கள் கரையேறி வந்து கையைச் சிரமேற் குவித்தாலளிப்பேனென்று பல விநோதங்கள் செய்து பின்னர் சேலையைத் தந்தனர் என்பது. இதனை,

கூர்மபுராணம் - கண்ண னவதரித்த அத்தியாயம்.

"ஓவியத் துறைகை வல்லோ ரெழுதொணா வுருவம் வாய்ந்த
தூவிமா மஞ்ஞை யன்னார் தண்புன றோய்பு மேல்வைப்
பூவைபோல் வனப்பு வாய்ந்த பூந்துழா யலங்கற் றோளன்
கோவிய ராடை வாரிக் குருந்தின்மீ திவர்ந்தா னன்றே."—என்பதனு

முணர்க. (க)

முன்னர்யாம் விடுத்த கணங்கள்போ லீயு முளரியந் தவிசின்மென் பெடையோ, டன்னமவீற் றிருக்கும வளவயற் காசி நகர்வயி னமாநதிடா தாங்கு, மன்னிய வேந்தின் மனுமுறை திறம்பும் வண்ணநீ புரிதியேற் போதி, யென்னலும் வணங்கி யிருகரங் கூப்பி யெந்தையைப் போற்றியீ துரைப்பான்.

(இ-ள்.) யாம் முன்னனுப்பிய கணநாதர் (முதலானோர்)போல நீயும் அழகிய தாமரைத் தவிசின்பேரில் மெல்லிய பெட்டையோடு அன்னங்கள் வசிக்கும் வளப்பம்பொருந்திய வயல்களையுடைய காசிநகரத்தில் இருந்துவிடாமல், ஆங்கு நிலைபெற்றிருக்கும் (திவோதாச னென்னும்) அரசன் மனுநீதிதவறி நடக்கும்வகை நீசெய்வதானால் போகக்கடவாய் என்று சிவபெருமான் திருவுள்ளஞ்செய்யவும், (திருமால்) ஸ்ரீ விச்சுவநாதப்பெருமானைப் பணிந்து இரண்டுகைகளையுங் குவித்துத் துதித்து இவ்வாறு சொல்லுவார். எ று. (உ)

அண்ணலின் கமலச் சேவடிப் போதி லன்புபூண் டொழுகுந ருளத்தி, னெண்ணிய கரும முடிவது சாத மெம்பிரான் முகமலர்க் தேவ, நண்ணுசீ றடிய னியற்றுதற் கரிதொன் றுளதுகொ லெனவுரை நவின்று, புண்ணியத் துளவத் துயல்வரு தடந்தோட் புங்கவன் போகுதற் கெழுந்தான்.

(இ-ள்.) எம்பெருமானே! தேவரீரது தாமரைபோலுஞ் சிவந்த திருவடிகளில், அன்பினை மேற்கொண்டு நடப்போர் மனதிலெண்ணியகாரியங்கள் கைகூடுவது சத்தியம்; தேவரீரோ முகமலர்ச்சிகொண்டு கட்டளையிடுவதானால், அன்பு பொருந்தியசிறிய அடியேனாகிய நான் செய்துமுடிப்பதற்கருமையானது ஒன்றிருக்கின்றதா என்று மறுமொழியுரைத்து, புண்ணியவுருவாகிய துளவமாலை யசைகின்ற விசாலமாகிய புயங்களையுடைய விஷ்ணுமூர்த்திசெல்லும்படி யெழுந்தனர்.

வள்ளிதழ்க் கமலப் பொகுட்டில்வீற் றிருக்கு மணங்கொடும் வடவரை பொருவும், புள்ளர சோடும் பூவைபோல மேனிப் புங்கவ னருளொடும் போகி, யள்ளலஞ் சேற்றி லாமைகண் படுப்ப வருஞ்சிறைத் தும்பிதா லாட்டும், வெள்ளநீர்ப் பழனம் விளிம்புதத் தோங்கு காசியில் விரைவின்வந் தடைந்தான்.

(இ-ள்.) நெருக்கமாகிய இதழ்களையுடைய தாமரைக்கொட்டையில் எழுந்தருளியிருக்கும் இலக்குமியோடும், மகம்மேருவைப்போன்ற பட்சிராஜனாகிய கருடனோடும், காயம்பூவைநிகர்த்த திருமேனியையுடையதிருமால் ஆசையுடன் சென்று,அழகிய பெருஞ்சேற்றிலே ஆமைகள் நித்திரைசெய்ய,நுண்ணிய சிறகுகளமைந்த தும்பிகள் தாலாட்டுகின்ற வெள்ளமாகிய நீர்ப்பெருக்கையுடைய வயல்கள் சுற்றிலும் கரையாகவுடையதாய் உயர்ந்த காசிநகருக்குச் சீக்கிரத்திற்போய்ச் சேர்ந்தனர். எ-று. (ச)

மணிதெளித் தனைய வான்புனற் றடத்தின் மாதவன் றாள்விளக் குதலா
லணிகிளர் வாவிக் கன்றுதொட் டுயர்பா தோதக மென்பவெவ் வழற்கட்
பணியர வுச்சி நடித்தவன் றனது படிவமொன் றமைத்தனன் கரையிற்
றணிவரு மாதி கேசவ னெனும்பேர் சாற்றினன் பூசனை புரிந்தான்.

(இ-ள்.) முத்துமணிகளைத் தெளித்துவைத்தாற்போன்ற சிறந்த நீரையுடைய தடாகத்தில், திருமால் தமது பாதங்களைக் கழுவியதால், அழகுவிளங்குகின்ற அத்தீர்த்தத்திற்கு அதுமுதற்கொண்டு திருவடிதீர்த்தம் என்று பெரியோர் பெயர்சொல்லுவர்; கொடிய தீப்போலுங்கண்களையுடைய காளிங்கனென்னும் பாம்பின்சிரசின்பேரில் நடனஞ்செய்த திருமால் தனதுருவம் ஒன்றை அதன் கரைமேல் உண்டுசெய்து, சாந்தம்பொருந்திய ஆதிகேசவன் என்று நாமமிட்டு அருச்சனைசெய்தனர். எ-று. (ரு)

தண்மலர் கஞலும் பாற்கடல் நேமித் தாமரை யணங்குசெங் கமலப்
புண்ணிய நரநா ராயண நார சிங்கமாம் பெயரொடும் புணர்த்த
வண்ணலத் தீர்த்த மளப்பருங் காசி யணிநக ரெங்கணு நோக்கி
லெண்ணிடு மளவில் வேற்றிட மின்றி யெங்கணுந் தீர்த்தமா யியையும்.

(இ-ள்.) குளிர்ச்சி வாய்ந்த மலர்கள் நெருங்கிய க்ஷீராப்தியி லுதித்த வட்டமாகிய தாமரைமலரில் வீற்றிருக்கும் திருமகள், புண்ணியசொரூபமாகிய நரநாராயணனும் நாரசிங்கமுமாகிய திருநாமங்களோடு கூடிய திருமால், அழகிய செந்தாமரைமலர்களையுடைய தீர்த்தங்கள், இவற்றின புகழ் அளவிடற் கரிய காசியாகிய நகரமெங்கும் பார்க்குமிடத்தில், வெற்றிடமில்லாமல் எவ்விடத்தும் கணக்கில்லாத பரிசுத்தமாகவே விளங்கும். எ-று. (சு)

ஆதிகே சவனென் றமைத்தவவ் வுருவி லமர்ந்திருந் தவற்றிலோர் கூற்று
லேதமில் புத்த வுருவொடு நாமம் புண்ணிய கீர்த்தியென் றிசைப்பக்
காதல்மீ தூரக் கலுழனும் விநைய கீர்த்தியாம் பெயரொடுங் கடிதிற்
போதரக் கமல மயிலும்விஞ் ஞான கௌமதிப் பெயரொடும் போத.

(இ-ள்.) ஆதிகேசவனென்று பேரிட்டுப் பிரதிட்டை செய்த அப் பிம்பத்தில் வீற்றிருந்து, அவரதுகலைகளில் ஒருகலையினால்,குற்றமில்லாத புத்தவடிவுடன் புண்ணியகீர்த்தியென்று யாவரும் பெயர்சொல்லவும்,ஆசை அதிகரிக்கும்படி கருடனும் விநயகீர்த்தியாகிய பெயர்கொண்டு விரைவில் வரவும், தாமரைமலரில்

வசிக்கின்ற மயிலின்சாயலையுடைய இலக்குமியும் விஞ்ஞானகௌமுதி யென்னும் பெயருடனே வரவும். எ-று

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௭)

காசியம் பதியி னெய்தியக் ககரிற் கண்ணிலார்க் கிழந்தகண் கொடுத்துந்
தேசுடைப் புதல்வ ரிலவர் தமக்குத் தேமொழி மைந்தரை யளித்து
மாசுடை மூப்பின் வருந்தினர்க் கிளமை வழங்கியு மாழ்கடல் வரைப்பி
னாசறு குரவர் திலதமென் றெவரு மறைந்திட மதிமருட் டினரால்.

(இ-ள்.) அழகிய காசிப்பட்டணத்திற் சென்று அந்நகரத்திலே வாழுங் கணணில்லாத குருடர்களுக்கு அவர்கள் இழந்துவிட்ட கண்ணொளியைக் கொடுத்தும், கீர்த்திதங்கிய குழந்தைகளை யுடைத்தாயில்லாத மலடர்களுக்கு மதுரம் பொருந்திய சொல்லையுடைய பிள்ளைகளை யுண்டாக்கித்தும், குற்றமாகிய விருத்தத்தன்மையால் வருத்தமுற்றவர்கட்கு வாலிபசையை யளித்தும், ஆழமாகிய கடல்சூழ்ந்த பூமியில குற்றமற்ற ஆசாரிய சிரேஷ்டன் என்று யாவருஞ் சொல்லும்படி புத்தியை மயக்கினர் (திருமால்.) எ-று (௮)

ஆக்குந ரில்லை சகமெலா மநாதி யரும்பெறற் பூதமோர் நான்கு, நீக்கமற் றியையி னுருவமா மடைக்காய் நீறொடு பொருந்திலாங் கவற்றாற், சேக்குமா போல வறிவுறு மலது சிவனென் றுரைப்பதோர் தில்லை, தாக்கணங் கனையரா பூந்துகில் நெகிழ்ததுத் தழுவலே தவறில்பே ரின்பம்.

(இ-ள்.) சிருட்டிகர்த்தா வென்போர் யாருமே கிடையாது. உலகமுழுவதும் அநாதியே யுள்ளது. பெறுதற்கரிய நான்குபூதங்களும் பிரிதலற்றுக் கூடுமானால் ஒருவடிவம் பெறும். அடைக்காய் நீற்றோடு கூடினால், அம்மூன்றின் சம்பந்தத்தாலுஞ் சிவக்குந்தன்மை போல, அறிதல் உண்டாகும் அல்லாமல் சிவனென்று சொல்லப்படும் ஒரு பதார்த்தமில்லை. திருமகள்போன்ற மாதரது மெல்லிய சேலையை யவிழ்த்துச் சேருதலே குற்றமில்லாத பேரின்பமாகும். எ-று

அநாதி=ஒருகாலத்தி லுண்டாகாதது. பூதம் நான்கு என்றது ஆகாயம் நீங்கிய ஏனையநான்கினை. அடை காய்=வெற்றிலை பாக்கு. நீறு=சுண்ணம். வெற்றிலை பாக்கு சுண்ணத்துடன் கூடியவழி சிகப்பேறுதல்போல நான்குபூதங்களும் ஒன்றுகூடியவழி அறிவு ஜனிக்குமென்பது புத்தசமயக் கோட்பாடு.

இதுமுதல் நான்குசெய்யுட்களால் திருமால் காசிநகரத்துள்ளாரை மதிமயக்கஞ் செய்யக்கருதிப் போதிக்கும் வகையைக் கூறிவருகின்றார். (௯)

கலைவலீ ரொருவற் களித்தவின் னடிசில் மறுமையில் வருமெனக் கரைக்கீர், மலமதாய்க் கழிந்த தெவ்வண நுமக்கு வருங்கொல்மற் றுதலா லளித்தல், நிலவிய தரும மன்றது விடுத்தல் நெறியதா நுமதுடல் வருந்த, வலகிலேன் பியற்றல கொலைத்தொழில் போலு மாதலி னவை விடுத் திடுமின்.

(இ-ள்.) சாஸ்திரங்களில் தேர்ந்தவர்களே! ஒருவனுக்கு (பசிதீரும்படி) கொடுத்த இனிய சோறானது மறு ஜனனத்திலவர் தருவதென்று சொல்கின்றீர்கள்; மலமாகி (வயிற்றினின்று) ஒழிந்தது அது எத்தன்மையாக உங்கட்கு வரும்? ஆதலால் ஒருவருக்கொருவர் கொடுத்தல் நிலைபெற்ற தருமமாகாது அதை யொழித்தலே முறையாகும். உங்கள் சரீரம் வருந்தும்படி குற்றமிலலாத விரதங்களை யாச்சிரயித்தல் கொலைத்தொழிலைச் செய்தலையொக்கும் ஆனபடியால் அவ்விரதாதிகளை (இனியிராமல்) விட்டுவிடுங்கள். எ-று. (௬௦)

துன்புழந் துடலம் வருந்தல்பாழ் நரகந் தோகைய ரொடுமருஞ் செல்வத், தின்புறல் துறக்க மென்பானன் குணர்ந்தோர் மாலயன் முதலெறும் பீறாய், நன்குறு முயிர்கள் தோன்றுத லொழிதல நடந்ததோ ராருயிர் செகுத்துப், புனபுலா லருந்தி யருமகம புரியும புலவிர்காள் பூத்திடா தருமம.

(இ-ள்.) துன்பப்பட்டு, சரீரப்பிரயாசை யடைதலே கொடிய நரகமும், மாதர்களுடன அடைதற்கரிய செல்வத்தை யடைந்து களித்திருத்தலே மோட்சமுமென்று நன்றாகக் கற்றறிந்தோர் சொல்லுவர். பிறத்தலும இறத்தலும் நிகழ்கின்றதாகிய-ஒரு அரிய வுயிரைக்கொன்று இழிவாகிய மாமிசத்தைப்புசித்து அரிய யாகங்களைச் செய்கின்ற புலவர்களே! விஷ்ணு பிரமன் முதல் எறும்பீறுதியாக நன்மைபொருந்திய பிராணிகள் உங்கட்கு தருமசிந்தை உண்டுபண்ணாது. எ-று.

உயிரொலாந் தனதுள் ளுயிரென வோம்பா தொன்றின துயிரினைக் குறைத்துச், செயிரறு வேள்வி யாற்றுதல தீதா மென்றிவை போல்வன செப்பிப், புயலுறு குடுமிப் புரிசைசூழ் காசி யுறைகுநர் புந்தியை மருட்டி, மயர்வுறு புத்த ரிழிதரு மொழுக்கின் மனஞ்செல வயாநதிடப் புணர்த்தான்.

(இ-ள்.) மன்னுயிரையெல்லாந் தனக்குள்ளே யிருக்கும் உயிரைப்போலப்பாதுகாவாமல்,பிறிதொன்றின் பிராணனை வதைத்து, குற்றமற்ற யாகங்களைச் செய்தல் கொடிதாகும் என்று இத்தகையினபோன்ற தப்பபிப்பிராயங்களைக்கூறி, மேகங்கள்தவழுஞ் சிகரத்தையுடைய மதில் புடைசூழ்ந்த காசிநகரத்தில் வாழ்வாரது மதியைக்கலக்கி, மயக்கம்பொருந்திய புத்தமதத்தவரது தாழ்வாகிய நடக்கையில் மனஞ்செல்லும்படி தந்திரஞ் செய்தனர் (திருமால்) எ-று. (௬௨)

அற்புடன் கவுந்தி யுருவொடு மலர்மே லரசுவீற் றிருக்குமா ரணங்குங், கற்புடை மகளிர் மனைதொறு நுழைந்து காதலன் வரும்வரு மென்ன, வெற்பெழுந் தியங்க நோற்பதென் னென்று மிளமையில் லாதுவேட் டவர்பாற், பொற்புறு நலத்தை யளித்திடா ரன்றே புவிக்கொரு பாரமாய்ப் புகுந்தார்.

(இ-ள்.) தாமரைமலரில் எழுந்தருளியிருக்குந் திருமகளும் ஆசையோடு கவுந்திவடிவேற்று, கற்புடையமாதர்கள் வாழ்கின்ற வீடுகள்தோறும் நுழைந்து (பிரிந்துசென்ற) காதலன் வருவான் வருவானென்று எலும்புகள் மேல் தோன்றி

சொல்லிய விஷயத்தைத் திவோதானன் மனதிற் கருதவும், வேதநூ லுணர்ந்த அந்தணன் வடிவாகிய திருமால் அவனுக்குப் புலப்பட்டனர். எ-று. (கசு)

விஷ்ணு காசியை யடைந்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஙிகசு.

ஐம்பத்தெட்டாவது,

# திவோதானன் முத்தியடைந்த அத்தியாயம்.

தோன்றிய மறையோன் சேவடிக் கமலந் தொழுதுமுத் தொழில்புரி வதற்குச், சான்றுமா புயிரக ளனைத்துமா யிருந்த தாமரைக் கண்ணனீ யென்ன, வான்றவென் னறிவா லுணர்ந்தன னமரர்ப புணர்த்ததுமறி ந்தன னுலங், கான்றவா ளரவிற கிடந்தபா ரனைத்துங் களைகணு யின்ற ள வளித்தேன்.

(இ-ள்) தன்முன் னெழுந்தருளிய வேதியனது சிவந்த திருவடித் தாம ரையை வணங்கி மூவகைத்தாகிய கிருத்தியங்களைப் புரிதற்குச் சாக்ஷியுமாய், எல் லாவுயிர்களுமாய் விளங்குகின்ற கமலநேத்திரராகிய திருமால தேவரீரோ யென்று மேம்பட்ட எனது ஞானத்தினு லறிந்தேன ; தேவர்கள ஆலோசித்ததுந் தெரிந் துகொண்டேன்: விஷத்தைக் கக்குக ஒளிவாய்ந்த ஆதிசேடன்பேரில் விளங்கும உலகிலுள்ளோருக் கெல்லாம ஆதாரவாகநின்று இற்றையவளாயி விரட்சித்தேன.

அட்டமா யோகம் பயின்றவை யனைத்து மாணவப பயிரினை வளர் ப்ப, விட்டதோ ரொருவி னியைந்தன விமையோர யாரையு மிகந்தவென் பாவம், விட்டகன் றிடவுன் சேவடிக் கமலம வெளிற்றறி வுடையவென் றலைமேல், மட்டவிழ் படலைப் பசுந்துழாய் முகுந்த வைததிடல வேண்டு மென் றிரந்தான்.

(இ-ள்.) மணஞ்சொரியும் பசிய துளவமாலையணிந்த விஷ்ணுமூர்த்தியே! எண்வகைததான சிறந்த யோகம பழகினவையெல்லாம மமதையாகிய பயிரை வளர்க்கும்படி விதைத்த வொருவகை யெருவாகப் பொருந்தின; தேவர்களெல்லா ரையும் பகைத்த எனதுபாவம் (அடியேனை) விலகி யொழியும்படி தேவரீரது சிவ ந்த திருவடித்தாமரையை வெள்ளிய அறிவுடைய எனது சிரமேற் சூட்டியருள வேண்டும் என்று திவோதானன் யாசித்தான். எ-று. (உ)

மாவலி ததீசி வாணன்முப் புரத்தோர் தக்கன்மா தவம்பல விழை த்துந், தேவரை யிகந்த வாற்றினு றுயரஞ் சேர்ந்தனர் யானுமங் கது போல், தாவரும் விசும்பி னமரரை யிகந்த பிழையினு லென்னுழைச் சார்ந்த, பாவம்விட் டகற்றுந் தத்துவ மெனக்குப் பணித்தியென் றடிம லர் பரவி.

(இ-ள்.) மாவலிச்சக்கரவர்த்தி - தந்திருளிமன் - வாணாசுரன் - திரிபுராதிகள் - தக்ஷப்பிரசாபதி (முதலாயினோர்) செய்த பலவகைத் தவங்களைச் செய்தும், தேவர்களைப் பகைத்த காரணத்தினால் துன்பமடைந்தனர்; அடியேனும் அவர்களையொப்ப, கிடைத்தற்கரிய சாக்ஷோபதிக்கும் தேவர்களைப் பகைத்த குற்றத்தினால் அடியேனடைந்த பாவத்தையொழித்து நீங்கத்தக்க தத்துவமுறையை எனக்குக் கட்டளையிடவேண்டுமென்று திருமாலினது திருவடித் தாமரைகளைத் துதிசெய்து. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௩)

இலகொளி மணிச்சூட் டரவின்மே லுலகத் தெண்பதி னாயிர வருடந், தொலைவிலம் பேரின்பந் துய்த்தன னீண்டு மதனையே துய்ப்பதை யலலாற், கலைவலாய் வேறொன்றுங் காணகிலே னிங் கருங்கடல் கடப்பதற் கின்னே, மலர்தலை ஞானப் பெரும்புணை யருளால் வழங்குக வென வழுத் திடலும்.

(இ-ள்.) எல்லா நூல்களிலும் வல்ல திருமாலே! ஒளிவிளங்கும் மாணிக்கத்தையுடைய உச்சிக்கொண்டைவாய்ந்த ஆதிசேடன் (சிரசின்)மேலுள்ள பூமியில் எண்பதினாயிரவருடமெல்லை, அளவில்லாத பெருஞ்சுகத்தை யனுபவித்தேன்; மறுபடியும் அனுபவித்ததையே யனுபவிப்பதன்றி வேறொன்றும் பார்த்தேனில்லை. ஜனனமாகிய வலிய சமுத்திரத்தை நீந்துவதற்கு இப்பொழுதே பரந்த ஞானமாகிய பெரிய தெப்பத்தைக் கிருபையுடன் அனுக்கிரகிக்கவேண்டுமென்று திவோதாஸன் சொல்லவும். எ-று. (௪)

அறநெறி பிழையா திருங்கலம் புரந்த வலங்கல்வே லரசனுக் கின்று மறைநெறி பிறழ்ந்த நெறியினைப் புகறல் தகாதென வணிதுழாய் முகுந்த, னிறைபரஞ் சுடரா யசலமா யொன்று மிலையா யுயிர்க்குயி ராகி, யுறைதரும் பொருளி னுண்மையை வேந்த னுளங்கொள விரித்துரைத் தனனால்.

(இ-ள்.) தருமமார்க்கந் தவறாமற் பெரிய உலகத்தை ரக்ஷித்த வெற்றிமாலை யணிந்த வேற்படை தாங்கிய அரசனான திவோதாஸனுக்கு இப்போது வேதமுறையினின்று பிசகிய வழியைப் போதித்தல் சரியல்லவென்று கருதி, வளப்பந்தங்கிய துளவமாலை சூடிய திருமால், எங்கும் நிறைந்த மேம்பட்ட சுடர்வடிவாகியும், அசைவற்றதாகியும், ஒப்பற்றதாகியும், மலரகிதமாகியும், உயிருக்குளுயிராகியும் வசிக்கும் வஸ்துவாகிய பரம்பொருளினது உண்மையிலக்கணங்களைத் திவோதாஸனது மனதிற் புலப்படும்படி நன்குவிளக்கி யுபதேசித்தனர். எ-று.

கங்கையங் கரையி னிலிங்கமொன் றமைத்து வழிபடிற் கறைமிடற் றணிந்த, மங்கையோர் பங்க னருளினா லின்று முதலெழு நாளினி லவணங்கு, பொங்கொளி விமானங் கணங்கள்கொண் டுன்பாற் போந்திடு மெனவுரை புகன்று, கொங்கலர் துளவத் தெரியல்மால் பஞ்ச நதக்கரை குறுகின னிருந்தான்.

(இ-ள்) அழகிய கங்கைக்கரையில் ஒரு சிவலிங்கக்குறியைப் பிரதிட்டை செய்து அதனை வழிபாடுசெய்தால், விஷத்தைக் கண்டத்தில் தரித்த பார்ப்பதி பாகராகிய சிவபெருமான கிருபையினாலே, இன்றுமுதல் ஏழுதினங்களுள் விளங்குகின்ற ஒளிமிகுந்த தெய்வவிமானத்தைச் சிவகணங்கள் தாங்கி யுன்பால் வரும் என்றுபதேசித்து,மகரந்தப்பொடியுடன இதழவிழ்ந்த துளவமாலை யணிந்த விஷ்ணுமூர்த்தியானவர் பஞ்சநதத்தீர்த்தக்கரையை யடைந்தனர். எ-று. (௬)

கலைபயில் கேள்வி யமைச்சரைக் கூவிக் கனைகடற் கருந்துகி லசைத்த, மலர்தலை யுலக மனைத்தையும் விழைவால் வளர்சய மாஞ்சயன காக்க, விலகொளி மவுலி கவித்துமென் றெண்ணி யீர்மபுனற் கங்கைநீராட்டி, விலைவரம் பறியா வெயிலமணி யிமைக்கும விழுததகு கதிர்முடி புனைந்தான.

(இ-ள்) நீதிநூல்களிற் பழகிய கேள்வியையுடைய மந்திரிமாரை யழைத்து, சத்திக்கின்ற சமுத்திரமாகிய கரிய வஸ்திரமுடுத்த இடமகன்ற உலகமுழுவதும் ஆசையுடன் வளாகின்ற சயமாஞ்சயன் அரசுசெய்யும்படி ஒளிவிளங்குங் கிரீடந்தரிப்போமென் றாலோசித்துக் குளிர்ச்சிவாய்ந்த கங்காசலத்தால் மங்களஸ்நானஞ் செய்வித்து,விலையளவிட்டறியாத கிரணங்களையுடைய நவமணிகள் பிரகாசிக்கின்ற மேம்பாடு தங்கிய ஒள்ளிய மகுடாபிஷேகஞ்செய்தனன். (திவோதாஸன்)

மைந்தனை மவுலி சூட்டிய பின்னர் வளர்புனற் கங்கையின் வடபா
லிந்திர திருவி னிளம்பிறைக் கண்ணி யிறைவனுக் காலய மியற்றிச்
சிந்தையி னுவந்து தன்பெய ராலோர் சிவலிங்க மாயிடை யமைத்துக்
கொந்தலா மலர்தூ யொன்னலாக் கடந்த கொற்றவன் வழிபடு மேலவை.

(இ-ள்.) சத்துருக்களைசெயித்த வெற்றியையுடைய திவோதாஸன், புதல்வனாகிய சயமாஞ்சயனுக்கு முடிசூட்டினபிறகு, நீர்ப்பெருக் கமைந்த கங்காதீரத்தின் வடதிசையிலே, வளர்கின்ற இளம்பிறைச்சந்திரனைச் சூடிய சிவபெருமானுக்கு இந்திரபோகம்போலத் திருக்கோயில கட்டுவித்து மனக்களிப்பு கொண்டு தனது பெயரினால் ஒரு சிவலிங்கக் குறியை அவவிடத்திலே தாபித்துக் கொத்துக்களாகிய மலர்களைக்கொண் டருச்சித்து வழிபாடுசெய்துவருகையில். எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (அ)

ஆழிவெண் டிரையி னறிதுயி லமரு மைம்படைக் கடவுள்முன் னுரைத்த, வேழுநற் றினமுங் கழிந்தபின் முக்க ணிறையவன் றன்னருளதனாற், பாழியந் தடந்தோட் கணங்கள்செங் கதிர்கால் பரிதியோர் கோடி சேர்ந் தென்னச், சூழ்சுட ரிமைக்கு மொழுகொளி விமானந் துங்கவேல் மன்னன்முன் கொணர்ந்த.

(இ-ள்.) க்ஷீராப்தியின் தாவள்யமாகிய அலைகளில் யோகநித்திரைசெய்திருக்கும் பஞ்சாயுதங்களையுடைய திருமால் முன் கூறிய நல்ல ஏழுநாட்களுஞ் சென்றபிறகு, திரிநேத்திரங்கள் பொருந்திய சிவபெருமானது கிருபையினால், பெருமைதங்கிய அழகிய பூரித்த புயங்களையுடைய சிவகணங்கள் சிவந்த கிரணங்களைச் சிந்தும் ஒரு கோடிசூரிய ருதயமானாற்போல, நெருங்கிய ஒளிவீசும் பிரகாசம்பொ

ருந்திய தெய்வவிமானம் பரிசுத்தமாகிய வேலேந்திய திவோதாஸன்முன் கொண்டு வந்தன. எ-று. (௯)

நெற்றியங் கண்ணு நிலவுவெண் பிறைதாழ் வேணியு நீலமென் மிடறு, மொற்றைவெண் குழையு மழுப்பிரிந் திலமயமா னேந்திய வொண்மலர்க் கரமுங், கற்றையங் கதிர்கால் மழுப்படை தாங்கு கரமுமாய்ச் சிவனுரு வமைந்து, வெற்றிவேல் மன்னன் கதிர்மணி யிமைக்கு மவிமானமேல் மகிழ்ச்சியோ டிவர்ந்தான்.

(இ-ள்.) அழகிய நெற்றிக்கண்ணும், சந்திரிகை யுடைய இளம்பிறை விளங்குஞ் சடையும், மெல்லிய திருநீலகண்டமும, வெண்ணிறமாகிய ஒற்றைத் தோடும், அதி யிளமை வாய்ந்த மானைத் தாங்கிய ஒள்ளிய தாமரைமலர் போன்ற கையும், அழகிய கிரணத்தொகுதியை வீசும் மழுவாயுதத்தைத் தரித்த கையும் ஆகிய (இத்தகைய) சிவசாரூபமடைந்து, வெற்றியைத்தரும் வேலையுடைய திவோதாஸன் நவமணிகளால் ஒளிவிளங்குந்தெய்வவிமானத்திற் களிப்போடேறினன.

விஷ்ணுவின் பஞ்சாயுதங்க ளாவன:—சங்கு-சக்கரம்-கதை-கட்கம்-கோதண்டம் என்பனவாம். (௰)

அரம்பையர் கவரிக் குழாம்புடை யிரட்ட வயனொடு முனிவர்வாழ்த் தெடுப்பப், புரந்தரன் முதலோர் பூமழை பொழியப் பொறிவரி வண்டின் முரலு, நரந்தநா றைம்பாற் றிலோத்தமை முதல கூத்தியர் தனித்தனி நடிப்பக், கருந்தடங் கணணி பங்கன்வீற் றிருக்குங் கயிலையி னடைந்துவீற் றிருந்தான்.

(இ-ள்.) தேவமாதர் சாமரைத் தொகுதிகளை இருபுறமும் வீசிறவும், பிரமனொடு முனிவர்கள் வாழ்த்தவும்,இந்திரன்முதலிய அமரர் புஷ்பமாரிவருஷிக்கவும், புள்ளியையும் கீற்றையு முடைய வண்டுகூட்டங்கள் ரீங்காரஞ் செய்யவும் நரந்தமணம் வீசுங் கூந்தலையுடைய திலோத்தமைமுதலாகிய நாட்டியப்பெண்கள்தனித்தனி நடனஞ்செய்யவும், கருமை வாய்ந்த பரந்த கண்ணையுடைய பார்ப்பதிபாகராகிய சிவபெருமான் வீற்றிருக்குந் திருக்கயிலாயகிரியைச் சேர்ந்து இனிதாக வாழ்ந்திருந்தான். எ-று.

ஐம்பால் என்பது ஐந்துவகையாக முடியு மியல்பை யுடையது. அவையாவன:—குழல்-கொண்டை-சுருள்-பனிச்சை-முடி. அவற்றுள், மயிரைச் சுருட்டி முடித்தல் குழல், பக்கத்தில் முடித்தல் கொண்டை, பின்னே செருகல் சுருள், பின்னிவிடுதல் பனிச்சை, மயிரை யுச்சியின் முடித்தல் முடி யென்பர். (௧௧)

இன்னநற் காதை யுரைத்தவர் கேட்டோ ரினிதென வுவந்தவர் யாரு, மொன்னலர்க் கடந்து கடல்விளிம புடுத்த வுலகெலா மொருகுடை நிழற்றிப், பொன்னெடுந் திகிரி திசைதிசை யுருட்டிப் புவியத னசைத்தவ னுறையு, மின்னவிர் குடுமிக் கயிலைமால் வரையில் வினணவ ரேத்த வீற் றிருப்பார்.

(இ-ள்.) இந்த நல்ல சரித்திரத்தைச் சொன்னவர்களும் கேட்டவர்களும் (பிறர் சொல்லக்கேட்டு) நன்றெனக் களித்தவர்களும் ஆகிய வெல்லோரும், சத்துருக்களை வென்று கடல்புடைசூழ்ந்த பூமிமுழுவதும் ஒரு குடையால் நிழல்செய்து பொன்மயமான பெரிய ஆக்கினைசக்கரத்தைத் திக்குக டோறுஞ் செலுத்தி, புலித்தோலை ஆடையாகத் தரித்த சிவபெருமான் வாசஞ் செய்யும், மின்னலை வீசுகின்ற சிகரங்களையுடைய பெரிய திருக்கயிலாயகிரியில் தேவர்கள் பணியும்படி வாழ்ந்திருப்பார்கள். எ-று. (கஉ)

திவோதாஸன் முத்தியடைந்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கருஉஅ.

---

ஐம்பத்தொன்பதாவது,

## பஞ்சநதத்தின் வரலாறுரைத்த அத்தியாயம்.

அரிமதர் நெடுங்க ணவிர்குழை தடவு மாய்ச்சியர் பிணித்ததாம் போடு, மருதிடைத் தவழ்ந்த மாயவன் பஞ்ச நதத்திடை வைகிய வாறும், பெருகுநீர் வாவிக் கப்பெயர் புணர்ந்த பெற்றியு மினிதுகே ளென்னக், குருகுபேர்க் குன்ற மெறிந்தவே லுழவன் குறுமுனி மகிழ்வுற வுரைப்பான்.

(இ-ள்.) அரிபரந்து மதர்த்த நீண்ட விழிகள், ஒளிவாய்ந்த குண்டலங்களைத்தடவுகின்ற ஆய்ச்சியர் (உரலிற்) கட்டிய கட்டுடன் மருதமரங்களின் நடுவே தவழ்ந்து சென்ற திருமால், பஞ்சநததீர்த்தத்தருகில் வாழ்ந்திருந்த வகையையும், நீர்ப்பெருக்கை யுடைய பஞ்சநதத்திற்கு அந்தப் பெயர்வந்த காரணமும் இனிதாகக் கேட்கக்கடவா யென்று, கிரவுஞ்சகிரியைச் சங்கரித்த வேற்படைதாங்கிய ஸ்ரீசுப்பிரமணியமூர்த்திகள் அகஸ்தியமுனிவர் மனங்களிக்கும்படி சொல்லத்தொடங்கினர். எ-று. (க)

அருமறை தெளிந்த பிருகுவின் மருமா னருமறைச்சிரசெனும் பெயரோ, னுருவமூ றோசை நாற்றமோ டிரத முற்றிடா துளத்தினை யடக்கி, வெருவரா கோற்கு மமைதியின் மதியில் வேல்கிடந் தனையவோ டரிக்கட், டெரிவையின் னகத்திற் சுசியென வுரைக்குஞ் சேயிழை யவ்வழி யடைந்தாள்.

(இ-ள்.) அருமையாகிய வேதப்பொருளிற் றேர்ச்சியுடைய பிருகுமுனிவனது புதல்வனாகிய வேதசிரசென்னும் பெயருடையவன் ரூபம்-ஸ்பரிசம் - கந்தம்-சத்தம்-ரசம் - (முதலிய) வழியே மனதைச் செலுத்தாமல் உள்ளத்தைக் காத்து, (கண்டோர்) அஞ்சத்தக்க தவஞ்செய்துகொண் டிருக்குங்காலத்தில், பூர

ணச்சந்திரனுக்குள் வேற்படை யிருந்தாற்போன்ற அரிபரந்த கெடிய கண்கள் (பொருந்தியமுகத்தை) உடைய தேவலோகத்துப்பெண்ணாகிய சசியென்று சொல்லப்படுஞ் செம்மையாகிய ஆபரணங்களையணிந்த ஒருத்தி ஆங்கு வந்தனள் எ-று.

முகத்தைப் பூரணச்சந்திரனும், கண்ணை வேற்படையுமாக வுவமித்து "மதியில் வேல்கிடந் தனைய" என்றார். (உ)

முத்தரிச் சிலம்பு தவளைவாய்ச் சதங்கை முறைமுறை பூசலிட் டேங்கப்
பைத்தபாம் பல்குன் மேகலை யிரங்கப் பாணிகா வண்டினந் துதைந்து
மைத்தவழ் குழலின் முரலமுன் போந்த வாணுதல் மதிமுக நோக்கிப்
பித்தரின் மயங்கி யருமறை முனிவன் பேதுற லுற்றுமாழ் கினனால்.

(இ-ள்.) முத்தாகிய அரிகளையுடைய சிலம்பும்,தவளை வாயோசைபோன்ற ஒலியை யுடைய சதங்கைமாலையும் முறைமுறை யாகச் சண்டைசெய்தொலிக்கவும், படத்தையுடைய பாம்பைப் போன்ற நிதம்பத்தி லணிந்த மேகலாபரணஞ் சத்திக்கவும், வண்டு கூட்டங்கள் நெருங்கிக் கருமைவாய்ந்தகூந்தலிற் பண்ணோசை நிகர பாடவும், தனக்குமுன்னேவந்த ஒளி தங்கிய நெற்றியை யுடைய சசியென்பவளது பூரணச்சந்திரனொத்த முகத்தைப் பார்த்து உன்மத்தரை யொப்ப மனங்கலங்கி அரியவேதங்களைப்பயின்ற வேதசிரசென்பவன் (காமநோயால்) துன்புற்று வருந்தினன். எ-று.

அரி=சிலம்பின் பருக்கை. (ங)

வடுவகிர் நெடுங்கட் பேதையம் முனிவன் மயங்குதல் நோக்கியுள் வெருவிக், கொடிநடுக் குற்ற தெனவுட னடுங்கக் கோடில்மென் மலர்க் கரங் கூப்பி, யடியனே னடிகள் தவம்புரி யிடத்தி னடைந்தவிப் பிழை பொறுக் கெனவும், விடயமோ ரைந்து மடக்கிய முனிவன் விளங்கிழை மகிழ்வுற வுரைப்பான்.

(இ-ள்.) மாவடுவின் வகிர்ச்சியை நிகரான நீண்ட விழிகளையுடைய அம் மங்கை அவ்வேதசிரசென்னும் முனிவன மயக்குற்றது கண்டு மனத்திற்பயந்து, பூங்கொடி அசைதலடைந்தாற்போலச் சரீரம் நடுக்க மெய்தும்படி,குற்றமில்லாத மெல்லிய தாமரைமல ரொத்த கைகளைக்குவித்து,அடியேன் தேவரீர் தவஞ்செய்யு மிடத்தில் வந்த இக்குற்றத்தை க்ஷமிக்கவேண்டுமென்று கூறவும், ஐம்புலச்சேட்டைகளையு மடக்கியுள்ள முனிவன், பிரகாசிக்கின்ற பணிபூண்ட அச் சசியென் பாள்களிப்பெய்தும்படி சொல்லத்தொடங்கினன். எ-று. (ச)

தண்ணறுங் கமலத் தாசுவீற் றிருக்குந் தாக்கணங் கனையபூங் குழ லாய், வெண்ணெய்செந் தழல்வாய்ப் பெய்திடி னுருகும் விழைவொடு மாந்தர்தம் முள்ள, மொண்ணுதல் மகளிர் மதிமுகஞ் சிறிது காணினு மொள்ளிழை யவரை, யெண்ணினு மவாசொற் கேட்பினு முருகு மென் றிடி னுரைக்குமா றெவனோ.

(இ-ள்.) குளிர்ச்சிவாய்ந்த வாசனையமைந்த தாமரைப்பூவிற் கொலுமுகங் கொண்டிருக்குந் திருமகள்போன்ற மலர்சூடிய கூந்தலையுடையாளே ! வெண்

ணையானது சிவந்த தீயில் விட்டாலுருகிப்போம்! புருஷரின் மனமானது ஒளிவாய்ந்த நெற்றியையுடைய பெண்களது பூரணச்சந்திரன்போன்ற முகத்தைச்சிறிது பார்த்தாலும், பிரகாசிக்கின்ற ஆபரணந்தரித்த அம்மடவாரை ஆசைகொண்டு நினைத்தாலும், அம்மங்கையர் வார்த்தையைச்செவிகொடுத்தாலும் உருகுமென்று சொன்னால் அதனைப்பற்றிச் சொல்லவேண்டுவதென்ன. எ-று. (ரு)

ஆதலா லுள்ளம் வெருவலை நீயீண் டடைதலா னிலையினின் றிழிந்த, தாதுவைத் தரித்தி யென்றலு மதனைத் தரித்தெழில் முழுவது மமைந்த, போதரி நெடுங்கட் புதல்வியை யீன்று முனிவரன் பொருந்துசாலையினிற், றீதற விருத்தி மின்னிவர்ந் தென்னச் சேணுயர் விசும்பிடைச் சென்றாள்.

(இ-ள்.) ஆனபடியால் மனதிலஞ்சாதே! நீ யிங்கு வந்தமையால் இடம் விட்டுத்தவறிய வீரியத்தைத்தரிக்கக்கடவாய் என்று (வேதசிரச) கூறவும், (சுசி) அவ்வாறே யதனைத்தரித்து, இலக்கண முழுது மமைந்த அரிபரந்த மலர்போன்ற நெடிய கண்களையுடைய ஓர் புத்திரியைப்பெற்று, அம்முனிவன் வசிக்குந் தவச்சாலையிற் குற்றமின்றி யிருக்கும்படி விடுத்து மின்னல் ஏறினாற்போல, மிகவும் உயர்வாகிய தேவலோகத்தை யடைந்தாள். எ-று. (சு)

ஆங்கவ ளேகத் தனிக்கிடந் தழுத புதல்வியை யங்கையி னெடுத்துத்
தீங்கெறி முனிவன் மான்முலை யூட்டித் தீதற வளர்த்தலு மவட்கு
நீங்கரும் பருவ மெட்டிறந் ததனால் நிரைவளை முன்னிவாட் டடங்கட்
பூங்கொடி வதுவை யாற்றிடு காலம் போந்தது புகறியென் றிடலும்.

(இ-ள்.) அவ்வகையாகச் சுசியென்பவள் செல்லலால், ஒன்றியாயிருந்து அழுகின்ற புத்திரியைக் குற்றமற்ற (வேதசிரசனென்னுமுனிவன்) அழகியகைகளாலெடுத்து, மானினது முலைப்பாலையுண்பித்து நன்றாகவளர்த்து வரவும், அப்பெண்ணுக்கு நீங்கற்கரிய எட்டுவயதுகள் கழிந்தமையால், வரிசையாகிய வளையலை யணிந்த ஒள்ளிய பரந்த கண்ணையுடைய பூங்கொடிபோன்ற மகளே! உனக்குக் கடிமணப்பருவம் வந்தது; ஆலோசித்து (உன்கருத்தைச்) சொல்லக்கடவாயென்று அம் முனிவன் சொல்லவும். எ-று. (எ)

அளப்பருங் குணங்கட் கொருவனுய்த் தரும மனைத்தையு முணர்ந்தவ னுளனேற், றுளக்கற வளித்தி யென்றவ ளுரைப்பத் தூயநற் றவம் புரிந் தல்லா, லுளத்திடை நினைத்த் கொழுநனைப் பெறுத லரிதென மு னிவர னுரைப்ப, விளக்கொளி யென்னச் சுடர்விடு மேனி விளங்கிழை தவம்புரிந் தனளால்.

(இ-ள்.) அளவிடற்கரிய நற்குணங்களுக்கொருவனுமாகியும் புண்ணியமார்க்கங்களையெல்லாம் அறிந்தவனுமாக விருப்பானாகில், கலக்கமின்றி (என்னை யவனுக்கு மணஞ்செய்து) கொடுப்பாயாக என்று அக்கன்னிகை கூற, பரிசுத்தமாகிய நல்ல தவங்களைச்செய்தாலல்லாமல் நீயுன் மனதிற் கருதியவகையான கணவனை யடைதலருமையென்று (பிதாவாகிய) வேதசிரசு சொல்ல, தீபத்தின் பிரகாசம்

போல ஒளிவீசும் மேனிவாய்ந்த விளங்குகின்ற ஆபரணம்பூண்ட அப்பெண் தவஞ்செய்யத் தொடங்கினள். எ-று. (அ)

கனிபடு கிளவி யருந்தவ நோக்கிக் கமலமென் பொகுட்டில்வீற் றிருக்கு, முனிவர னெய்தி யானுநீ வேட்ட தளிக்குவல் மொழிகெனச் சிறந்து, புனிதமாம் பொருள்க ளெவற்றினும யானே புனிதமாம் படியருள் கென்ன, வனையநல் வரங்க ளளித்துயர் விசும்பி னருமறை வானவ னகன்றான்.

(இ-ள்.) மதுரமாகிய சொல்லையுடைய அக் கன்னிகையின் செய்தற்கரிய தவத்தைக்கண்டு, பங்கயமலரின் மெல்லிய கொட்டையில் வாழ்ந்திருக்கும் பிரமதேவன் (அவள் முன்) வந்து, நீ விரும்பியதனை யான் கொடுப்பேன சொலக்கடவாயென்று கூற, (சிசி) மேம்பட்டுப் பரிசுத்தமாகிய எல்லாப் பொருள்களினும் நானே பரிசுத்தமாகும்படி கிருபைசெய்யவேண்டுமென்று இரப்பவும், பிரமதேவன் அத்தன்மைத்தான நல்ல வரங்களைக்கொடுத்து உயர்வாகிய சத்தியலோகத்தையடைந்தான். எ-று. (கூ)

எரிமணிப் பசும்பொற் கலன்கிடந் திமைக்குமிளமுலை யருந்தவ மாற்றி
முருகுவாய் மடுத்து மூசிவண் டரற்று மொய்ம்மலர்க் காவினெய் துதலு
முருவவா ணுதலு மொளிர்மதி முகமு மோடரி நெடுங்கணுந்தாங்க [னே
மருவுமோர்கொடியென றடைந்துநற்றருமன் மம்மர்நோயுழந்துமாழ்கின

(இ-ள்.) பிரகாசிக்கின்ற மாணிக்கங்கள்பதித்த பசும்பொன்னலானபணிகளிருந்து ஒளிசெய்யும் இளமைவாய்ந்த தனங்களையுடைய அக்கன்னிகை அரிய தவத்தைச்செய்து (வரம்பெற்று) வண்டுகள் தேனுண்டு மொய்த்து ரீங்காரஞ்செய்யும் நெருங்கிய மலர்கள்பொருந்திய சோலையில் வரவும், அழகிய ஒளிபொருந்திய நெற்றியும், பிரகாசிக்கின்ற பூரணச்சந்திரன்போன்ற முகமும், நீண்டு அரிபரந்த நெடியவிழிகளும் உடைத்தாயிருத்தலால், ஓர் பொற்கொடியென்று நன்மைவாய்ந்த தருமனென்போன் சமீபித்துக் காமநோயால் துன்புற்று வருந்தினன்.

அனிச்சமென் மலரின் மிதிப்பினுஞ் சேக்கு மந்தளிர்ச் சீறடி நோவக்
கனிப்பொறை சுமந்த கற்பகக் கொடியிக் காவிடைப் புகுந்ததென் றவத்
றனிப்பல னருகு மிருதடந் தோளிற் றழுவுதி யெனவிரந் தெய்த [தின்
முனிக்குரைத் தவன்றன ருளினு லன்றி முயங்குதல் புரிகிலே னென்றாள்.

(இ-ள்.) மெல்லிய அனிச்சம் பூவின்மேல் மிதித்தாலும் கன்றத்தக்க தளிர்போன்ற சிறிய பாதங்கள் நோவும்படி, (தனங்களாகிய) பெருஞ்சுமையைத்தாங்கிய கற்பகக்கொடிபோல்வாளே ! நீ இவ்வனத்தில் வந்தது என் தவத்தின் ஒப்பற்றபலனாகும்; பூரித்த உபயதோள்களில் என்னை பிணையக்கடவாய் என்று யாசித்துச் சமீபிக்கையில், (அக்கன்னிகை என் பிதாவாகிய) வேதசிர முனிவருக்குக்கூறி அவர்விருப்பினாலல்லாமற் கலத்தல் செய்யேனென் றுரைத்தாள். எ-று. (கக)

மாழையுண் கண்ணி மறுத்தன ளாக மதிமருண் டணங்கினை நோக்கி[பத்
யாழினோர் புணர்ப்பின் மேவுதல் தருமத் திழுக்குறு தெனவினி திசைப்

தாழ்குழ லதற்கு மறுத்தலு மோங்கித் தழுவுதற் கடங்குறு தெழுந்த
கேழ்கிளர் பொமம விளமுலே வலிதிற் புலவினன் கெடலருந தருமன.

(இ-ள்.) அழகுவாய்ந்த விழிகளையுடைய அக்கன்னிகை மறுத்தமையால் தருமன் மதிமயக்கமுற்று அவளைப்பார்த்துக் காந்தர்வப் புணர்ச்சியாற் கூடுதல் தருமமார்க்கத்தினின்று தவறுபடாது என்றினிதாகக்கூற, நீண்ட அளகபாரத்தையுடைய அப்பெண் அதற்கு இணங்காதிருக்கவும், கையாற்பிடித்தற்கடங்காமல் உயர்ந்தெழுந்த நிறம்விளங்கும் பூரித்த இளமைவாய்ந்த தனங்களைப் பற்றிப் பலாத்காரமாகத் தழுவினன் கெடுதலில்லாத தருமன். எ-று.

"யாழினோர் புணர்ப்பு" என்பது காந்தர்வமணம் அஃது எண்வகை மணங்களுளொன்று; அவையாவன:—பிரமம்-பிரசாபத்தியம்-ஆரிடம்-தெய்வம்-காந்தருவம்-ஆசுரம்-இராக்கதம்-பைசாசமென்பன. அவற்றுள் பிரமசாரிக்குக் கன்னியைத் தீமுன் னளிப்பது பிரமமணம் எனவும், நாயக னுறவினர் வேண்ட நாயகியினத்தா ருடன்பட்டு அவளைத் தீமுன்னளிப்பது பிரசாபத்தியமணம் எனவும், பசுக்க ளொன் றிரண்டு பெற்றுக் கன்னியைத் தீமுன் னளிப்பது ஆரிடமணம் எனவும், வேள்வியால் வந்த கன்னியைத் தீமுன் னளிப்பது தெய்வமணம் எனவும், கொடுப்பாருங் கேட்பாரு மின்றி யிருவருந் தனியிடத் தெதிர்ப்பட்டுத் தாமே கலப்பது காந்தருவமணம் எனவும், பெண்ணுக்குப் பணிபூட்டிச் சுற்றத்தாருக்கு வேண்டும் பொன்னளித்துக் கொள்வது அசுரமணம் எனவும், பெண்ணும் பெண்ணினத்தாரு முடன்படாமல் வலிதிற் கொள்வது இராக்கதமணம் எனவும், நித்திரை செய்வாளைச் சேருவது பைசாசமணம் எனவுங் கூறுவர். (கஉ)

வலிதினீ யென்னைத் தழுவிய வாற்றால் வால்வளை நித்திலங் கொழிக்கு, மொலிதிரை நதியா யொழுகெனச் சாப முரைத்தலுந் தருமன்மெய் புழுங்கி, யலர்முலே நின்னை யிரக்கவு நெஞ்சங் குழைந்திடா வாற்றினு லன்ற, சிலையெனக் கிடத்தி யெனவுளம் வெருவிச் சேயிழை தந்தைபாலடைந்தாள்.

(இ-ள்.) நீ என்னைப் பலாத்காரமாகத் தழுவிய காரணத்தினால், வெள்ளிய சங்குகளீன்ற முத்துக்களைக்கொழித்து ஒலிக்கின்ற அலைகள்பொருந்திய நதியுருவாய்ச் செல்கவென்று (அக்கன்னிகை) சாபமிடவும், தருமன் உடல்நடுங்கி, பரந்த முலைகளையுடையாளே! நான் உன்னைவேண்டியும் மனமிளகாததன்மையாற் பரந்த பாறைவடிவாக விருக்கக்கடவாயென்று பிரதிசாபமிட, செம்மையாகிய ஆபரணமணிந்த அப்பெண் மனமஞ்சிப் பிதாவின்பக்கலிற் சென்றாள். எ-று. (கங)

வந்தவை யனைத்துந் தவத்தினு லுணர்ந்து மறைமுனி மகள்முக நோக்கிச்
சந்திர காந்தச் சிலையதாய் மதியின் கதிர்களாற் றண்புனல் பெருகி
யுந்துதென் டிரைநீ ரொழுகிய தூத பாவையென் றுரைக்குமா நதியாய்ச்
சிந்துநீர்த் தரங்கத் தருமமா நதத்திற் சிறப்பொடுஞ் சென்றுசேர் குதியால்

(இ-ள்.) வேதங்களில் வல்லவனுகிய முனிவன் நிகழ்ந்தவற்றை யெல்லாந் தனது தவவலிமையாலறிந்து புத்திரி முகத்தைப்பார்த்து, நீ சந்திரகாந்தக்கல்லா

இச் சந்திரனது கிரணங்களால் குளிர்ந்த நீர்பெருகிச் செலுத்துகின்ற தெள்ளிய அலைகள்பொருந்திய நீர்மயமா யொழுகுந் தூதபாவையென்று பெயர்சொல்லத்தக்க சிறந்த நதியாகி, அலைகளை வீசுகின்ற நீரையுடைய தருமமாநதத்திற் பெருமையுடன்போய்க் கலக்கக்கடவாய். எ-று.

தருமன் அம்மங்கை சாபத்தால் நதியாயொழுகியதே தருமமாநதம். நதம்-ஆண்யாறு. (கச)

நின்னுடை முனிவா லந்தமெய் யொழுகு தருமனு நீயும்வேண்டுழிப்[ரியச்
னென்னுடைத் தவத்தால் முன்னுரு வெய்தி யிவைகவென் றினிதருள் பு
கன்னலிற் கனிந்த குதலையந் தீஞ்சொற் கன்னியு நதியுரு வெடுத்து
மன்னிய தரும நதத்தொடு முள்ள மகிழ்வுற வந்துகூ டினளால.

(இ-ள்.) உனது கோபத்தால் அந்நதியுருவடைந்த தருமனும் நீயும் விரும்பியபோது எனதுதவமேம்பாட்டாற் பண்டையவடிவமடைந்து சேரக்கடவீர்கள் என்றினிதாகக் கிருபைசெய்ய, கற்கண்டுபோலும் இனிய மதுரம்பொருந்திய அழகிய குதலைச்சொல்லையுடைய அக்கன்னிகையும் நதிவடிவுதாங்கி, நிலைபெற்ற தருமமாநதத்துடனே மனமகிழ்ச்சிகொண்டு வந்து சேர்ந்தனள். எ-று. (கரு)

பரிதியஞ் செல்வன் றவம்புரிந் திடலும் பாய்கதி ரொடும்வெயர் வெழுந்து
கிரணைமா நதியா யொழுகிய துயர்ந்த தருமமா நதங்கிளர் கங்கை
யருள்புரி தூத பாவைவான் கிரணை யமுனையென் றைந்துமா நதியு
மொருவழிப் படலாற் பஞ்சமா நதமென றுறுபெய ராயதிவ் வுலகில்.

(இ-ள்.) சூரியன் தவஞ்செய்யவும், பொழிகின்ற கிரணங்களுடனே வேர்வைதோன்றிச் சிறந்த கிரணைநதியாகவொழுகியது ; உயர்வாகியசிறந்ததருமமாநதமும், விளங்குகின்ற கங்கையும், கிருபைபுரிகின்றதூதபாவையும், சிறந்தகிரணையும், யமுனையுமென்றுசொல்லப்படும் ஐந்து சிறந்த நதிகளும் ஒனறு கூடுதலால், பஞ்சமாநதமென்று இவ்வுலகத்திற் பொருந்திய (அத்தீர்த்தத்திற்கு) பெயருண்டாயிருக்கின்றது. எ-று. (கசு)

விரிபுனற் றருமந் தவமுயர் தூத பாவைசொல் விந்துநற் றீர்த்த
மருவிய பஞ்ச நதமென முன்னை யுகமுதல் வான்முறை வழங்கும்
பொருவறு நாம மிந்நத மதனிற் படிந்துளோர் பூதமோ ரைந்தி [பார்.
னுருவுடை யாக்கை யெடுத்திட செய்தா முத்திவீட் டுறைந்தினி திருப்

(இ-ள்.) பரந்த இத்தீர்த்தமானது தருமமுந் தவமுமுயர்ந்த தூதபாவை சொல்லுகின்ற நல்ல விந்துதீர்த்தம். பொருந்திய பஞ்சமாநதமென்று கிருதயுகமுதற்கொண்டு கிரமமாகப் பெயர்வழங்கும். சமானரகிதமாகிய பெயரையுடைய இத்தீர்த்தத்தில் மூழ்கினவர்கள் ஐம்பெரும் பூதங்களின் வடிவமாகிய வுடலை (மீண்டும்) பெற்றுத் துன்பமடையாமல், மோட்சவீட்டில் இனிதாக வாழ்ந்திருப்பார்கள்.

பஞ்சநதத்தின் வரலாறுரைத்த அ-ம்.

முற்றிற்று,

---

ஆ திருவிருத்தம் - கஉசரு.

உ

சிவமயம்.

அறுபதாவது,

# விந்துமாதவன் றோன்றிய அத்தியாயம்.

---

தாற்றிளங் கமுகின் வாளைபாய்ந் துழக்கத் தமனியப் பாளைவாய்க் கீறி
யூற்றிருந் தொழுகும் பச்சிளந் தேற லுயர்வரை யருவியிற் றூங்கு
மாற்றெறி காசி வளநகர் பஞ்ச மாநதக் கரையில்தெண் டிரைய [ன்.
பாற்கட லதனி லுளமகிழ் சிறப்பப் பசுந்துழாய் முகுந்தன்வீற் றிருந்தா

(இ-ள்.) குலைகளையுடைய இளங்கமுகமரங்களில் வாளைமீன்கள் கலக்குதலால், பொன்போன்ற பாளைகள் வாய்பிளந்து ஊற்றெடுத்தொழுகின்ற புதிதாகிய பசியதேன்,உயர்ந்த மலையினின்றிறங்கும் அருவிபோலொழுகுகின்ற சமானமற்ற காசியாகிய வளப்பமமைந்த நகரத்தில் பஞ்சமாநதத் தீர்த்தக்கரையில் தெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்கடல்போல மனக்களிப்பு அதிகரிக்கத் துளபமாலை யணிந்த திருமால் எழுந்தருளியிருந்தனர். எ-று. (க)

முக்குறும் பதனை வேரொடும் பிடுங்கி மூச்சவித் தருந்தவம் புரியு
மக்கினி விந்து வெனும்பெயர் மறையோ னாயிர கோடியா தபரிற் [தி
கக்குசெங் கதிர்கால கவுத்துவ மணிந்த கண்ணனை நோக்கிமண் பொதிந்
செக்கர்மென்கமலச்சேவடிப்போதுசென்னியிற்சூட்டினன்றொழுதான்.

(இ-ள்.) (ஆணவமுதலிய) மூவகைக்குற்றங்களை யடியோடொழித்து, (பிராணவாயுவைக்) கும்பித்து அரிதாகிய தவத்தைச்செய்கின்ற அக்கினிவிந்து வெனும் பெயரையுடைய வேதியன், ஆயிரங்கோடி சூரியர்போல, ஒளிவீசுஞ் சிவந்த கிரணங்களைக்கக்குங் கவுஸ்துவாபரணமணிந்த திருமாலைநோக்கி, திரிலோகங்களும் பொதிந்துள்ள மெல்லிய செந்தாமரைபோலுஞ் சிவந்த திருவடிகளைச் சிரசில்வகித்து வணங்கினன். எ-று. (உ)

இளங்களிச் சுரும்பு ஞிமிறுமுண் டாற்று மீர்ந்துழாய் நறுமலர் தூவி
யுளங்கசிந் துருக விருகணீர் வார வொழிவறு முவகைமீ தூரக்
களங்கனி யனைய கண்ணகோ விந்த வென்றுகை கூப்பின ரன்றோ [ன்.
வளங்கனிந்தொழுகும் பொன்னுலகளிக்கும் வானவராவரென்றிசைத்தா

(இ-ள்.) இளமைதங்கிய மதர்த்தவண்டும் ஞிமிறும் தேனுண்டு ஒலிக்கின்ற குளிர்ந்த துளவத்தாலருச்சித்து,மனங்கரைந்துருகவும்,இருகண்களில் ஆநந்தபாட்பஞ் சிந்தவும் அளவில்லாத களிப் பதிகரிக்கவும், களாப்பழம் போலுங் கரிய திருமேனியையுடைய கண்ணா ! கோவிந்தா! என்றுஜபித்துக் கைகளை அஞ்சலி செய்தவர்களல்லவோ வளப்பமிக்கு விளங்கும் பொன்னுலகத்தைக்காக்குந் தேவர்களாவரென்று கூறினன் (அக்கினிவிந்து). எ-று. (௩)

இனையநற் றுதிகள் பலவெடுத் தோதி யிதயநெக் குருகினின் றேத்து, முனிவனை நோக்கி விழைந்தன தருவ லென்றலு முனிவர னுவந்து,

புனையுகின் ஞமம் விந்துமா தவனென் றிவ்வுழிப் பொருந்துதி யென்ன,
வினையகல் வரமாங் களித்திருந் தவத்தோ னகமகிழ்ந் திடவிவை யுரைப்
பான்.

(இ-ள்.) இத்தன்மைத்தான நல்ல பலதோத்திரங்களையெடுத்துக்கூறி மனங்கசிந்துருகி நின்று துதிக்கின்ற அக்கினிவிந்து முனிவனைப்பார்த்து நீ விரும்பியவற்றைக்கொடுப்பேன் என்று (திருமால) கூறவும் முனிவன்களித்துத்தரிக்கின்றதேவரீரது திருநாமம் விந்துமாதவனென இவ்விடத்தில் வீற்றிருக்கவேண்டுமென்று யாசிக்க, அப்படிப்பட்ட நல்லவரத்தைக்கொடுத்து, பெரியதவத்தைசசெய்த அம்முனிவன் மனங்களிக்கப் பின்வருமாறு சொல்கின்றார். எ-று. (௪)

கார்த்திகை மதியி லிருட்குறும் பெறியுங் கடவுடேர்தோன்றிய தென்னப்
பூத்தலைச் சேவல் கூய்த்துயி லெழுபபு புலரியிற் பஞ்சமா நதத்தை[மறவி
யேத்தினர் படிந்தோர் கொடியவெஞ் சினத்த வெருமையே றுகைத்திடு
யாத்திடும் பாசத் திடைச்சிமிழ்ப் பெய்தி யஞருறா ரெனமறை யறைந்த.

(இ-ள்.) கார்த்திகை மாதத்தி லிருட்பகையை விலக்குஞ் சூரியபகவானது ரதமுதித்ததென்று கொண்டைபொருந்திய தலையையுடைய சேவல்கள் கூவி, நித்திரையினின் றெழுப்புகின்ற விடியற்காலத்திலே, பஞ்சமாநததீர்த்தத்தைத் துதித்தோரும், அதில்மூழ்கினோரும் மிகக்கொடிய கோபத்தையுடைய எருமைக்கடாவை வாகனமாகக் கொண்ட யமதருமன் கட்டுகின்ற பாசத்திற் சிக்கித்துன்பமடையாரென்று வேதங்கள் கூறுகின்றன. எ-று. (௫)

உரைத்தகார்த் திகையில் யாவையு முண்ணு தொழிந்திட லுறுதே
னிற் கனிபா, லருந்தியி னருந்த லன்றெனி லொருபோ தருந்திட லாகும்
வெண் கலத்திற், றிருத்திய வடிசி னுகர்ந்திடல் தீதா மெண்ணெய்யைத்
தேனிவை யருந்தா, திருத்தனன் காரு மம்மதி முழுது மிலைதனி லருந்துத
லியல்பாம்.

(இ-ள்.) சொல்லிய கார்த்திகைமாதத்தில் எவற்றையும் புசியாது விலக்கக்கூடாதாகையால், பழம் பால் முதலியவற்றை ஆசையுடன் உண்ணுதல் அல்லது ஒருபொழுது புசித்தல் தகுதியாகும். வெண்கலப்பாத்திரத்திற் சமைத்த அன்னம் உட்கொள்ளுதல் கெட்டதாம். எண்ணெய்-பசிய தேன் இவைபோல்வன உண்ணுதிருப்பது நலம். அம்மாதம் முழுவதும் (உண்கலத்தைவிலக்கி) இலையிற் புசித்தல் விதியாகும். எ-று. (௬)

அன்னதோர் திங்க ளளவையும் புலால்நீத் தருளொடு மவுனமா யருந்திற்
பன்னிரு மதியு மருந்திடா தொழித்த பலனுறு மாங்கவை யருந்தின்
மன்னிய மீனுய் மலத்துறு புழுவாய் வருபிறப் பதனில்வந் துதிப்பார்
கொன்னுனை வைவே லரசரு மந்த மதியிலூன் குறைத்துணல்விரும்பார்.

(இ-ள்.) அந்தவொருமாதமட்டும் புலாலுணவொழித்து ஆசையுடன் மவுனமாகப்புசித்தால் பன்னிரண்டுமாசங்களும் (புலாலை) உண்ணுது விலக்கியபலன் வரும். (அவ்வாறன்றி) அவற்றைத்தின்றால் இவ்வுலகிற் பிறக்கவும் மலத்திற்புழுவாகவும் பிறப்பார்

திய புழுவாகவும், மறு ஜனனத்திற் பிறவியடைவார்கள். (பகைவரைச்) சங்கரிக்கி ன்ற கூர்மையாகிய முனையையுடைய வேலேந்திய மன்னவரும் அம்மாதத்தில் மாமிசத்தைக்கொன்றுதின்ன இச்சிக்கமாட்டார்கள். எ று. (எ)

வெண்கல மதனில் நறுநெய்பெய் தளிப்பின் வேதியர்க் கின்னமு தூட்டி,னெண்பதக் கோடு பொன்னினி தருளி னெழிறிகழ் நீறுபூத் தொ ளிரும், கணகவர் வனப்பிற் பூசணிக் காய்நல் லுழுந்திவை கருணையின் வழங்கின், வணசிலைப் புருவ வரம்பையர் கொம்மை வனமுலை திளைப் பவீற் றிருப்பார்.

(இ-ள்.) வெண்கலப்பாத்திரத்தில் வாசனைபொருந்திய நெய்யைச்சொரி ந்து தானஞ்செய்தாலும், அந்தணருக்கு இனிய அன்னங்கொடுத்தாலும், பதக்கு என்னுடனே பொன்னை நன்றாகக் கொடுத்தாலும்,அழகு விளங்கும் நீறுபூத்துப் பிரகாசித்துக் கண்டோர் கண்ணொளியைக்கவர்கின்ற பூசணிக்காய்நல்லஉழுந்து இவற்றை ஆசையுடனே தானங்கொடுத்தாலும் வளமமைந்த வில்லைப்போன்றபுரு வம்வாய்ந்த அமரமாதரது குவிவாகிய அழகிய முலைகளிற்கூடி வாழ்ந்திருப்பார்கள்.

பதக்கு=இரண்டு குறுணி. இஃதோர் முகத்தலளவைப்பெயர். எள்+பத க்கு=எண்பதக்கு தொல்காப்பியம் புள்ளி மயங்கியல் கஉ-ரு. "வேற்றுமையல் வழியெண்ணெனுணவுப்பெயர் - வேற்றுமையியற்கைநிலையலுமுரித்தே" என்ப தற்கெழுதிய உரைவிசேடத்தானுணர்க. (அ)

கடவுளா லயத்து ணறுநெய்பெய் தகளிக் கனைசுடர் விளக்கமாட் டினரச், சுடர்புனை விளக்க மனத்திருள் கடிந்த தூமறை வேதியர்க் களி த்தோர், உடல்சினத் தறுகட் படர்மருப் பெருமை யூர்ந்தவெம் மறலியூ ரடையார், விடுசுடர் பரப்பு ஞானமெய்ச் சுடர்சேர் வெறுவெளி யத னில்வீற் றிருப்பார்.

(இ-ள்.) தேவாலயத்தில் நல்ல நெய்யைவிட்ட அகலாகிய மிகுந்த பிரகா சத்தையுடைய விளக்குகளை மாட்டினவர்களும்,ஒளிபொருந்தியஅத்தகையவிளக் கை மனத்திருளொழிந்து பரிசுத்தமாகிய வேதமுணர்ந்தஅந்தணர்களுக்குக்கொடு த்தவர்களும்,துன்புறுத்துகின்ற கோபத்தையும் அஞ்சாமையையும் பரந்தகொம்பு களையுமுடைய எருமைக்கடாவிலேறிய கொடியஇயமனதுஉலகத்தை யடையமா ட்டார்கள். நிறைந்த ஒளியைப்பரவச்செய்யும் உண்மைஞானச் சுடராகிய எம்பெ ருமானெழுந்தருளியுள்ள சுத்தவெளியில் வீற்றிருப்பார்கள். எ-று. (கூ)

சிறந்தவிம் மதியிற் பொருந்திய வேகா தசியினிற் கண்படை யுறு மல், நிறைந்தநெய் விளக்க மேற்றியைம் புலனு நெறிபிற ழாதுளத் தட க்கிக், கறந்ததீம் பால்கொண் டுளமகிழ்ந் தாட்டிக் கடிமலர் தூயனைத் தொழுவோர், நறுந்திரை புரட்டும் பாற்கட லதனி னுன்முக னுயுள்வீற் றிருப்பார்.

(இ-ள்.) சிறப்பமைந்த இக்கார்த்திகைமாதத்தில்,பொருந்திய ஏகாதசியிற் கண்மூடாது நெய்நிறைந்த விளக்கேற்றி, பஞ்சேந்திரியங்களும் முறைபிறழா

மல் மனத்தையடக்கி, (பசுவைக்) கறந்த மதுரமாகிய பாலைக்கொண்டு மனமகிழ்ச்சியாய் அபிடேகித்து, மணமமைந்த மலர்களானருச்சித்து என்னை வணங்குவோர் நல்ல அலைகளைச்சுருட்டுகின்ற திருப்பாற்கடலில் ஒரு பிரமகற்பகாலம் வசித்திருப்பார்கள். எ-று. (௧0)

பொருவரு மாதி யுகமுதல் நான்கு மாதிமா தவன்புக லனந்தன், மருவிய திருமா தவனுயர் விந்து மாதவ னெனும்பெயர் வழங்கு, மருமறை முனிவ வெம்முடை யடிய ரெனுமனச் செருக்கினு லரனைப், பரவிடா திகழ்ந்தோ ருலப்பிலாக் கொடிய பாழ்நர கிடைக்குடி யிருப்பார்.

(இ-ள்.) சமானமில்லாத முதலாவதாகிய கிரேதாயுகமுதல் நான்கு யுகங்களிலும், மாதவன்-அநந்தன் - தருமமாதவன்-விந்துமாதவன் என்னும் பெயர்கள் வழங்குகின்றன. அரிய வேதங்களையுணர்ந்த முனிவனே! எமது அடியார்களென் கிறமனச்செருக்கினால் சிவபெருமானைத் துதியாமலிகழ்ந்தவர்கள் நீங்காத கொடிய பாழ்நரகத்திற் குடியாக விருப்பார்கள். எ-று.

கிரேதாயுகத்தில் மாதவன், திரேதாயுகத்தில் அநந்தன், துவாபரயுகத்தில் தருமமாதவன், கலியுகத்தில் விந்துமாதவன் என முறையேயுகங்கடோறும் திருமாலுக்கு அவ்விடத்திற் பெயர்கள் வழங்கிவந்தன என்பதாம். (௧௧)

விந்துமாதவன் றோன்றிய அ-ம்.

முற்றிற்று.

திருவிருத்தம்-கஙுஙக.

---

அறுபத்தொன்றாவது,

## விந்துமாதவன் அக்கினிவிந்துவுக்குத்

### தீர்த்தமகிமையுரைத்த அத்தியாயம்.

---

பொருதிரைப் பாதோ தகக்கரை யதனிற் பொருந்திய சங்கமேச் சரனை யருளொடும் வழிபட் டாதிகே சவனென் றமர்ந்தன மவ்வுரு முதலாப் பெரிதுணர் வுடையோர் வழிபடு பிரயாகை மாதவ னிறதாய்ப் பிறங்கு மிருபதின் மேலு மூன்றுமா தவனு மெய்திகல் லுருவெடுத் திருப்போம்.

(இ-ள்.) மோதுகின்ற அலைகளையுடைய பாததீர்த்தக்கரையின்மேல் வீற்றிருக்கின்ற சங்கமேச்சரனை ஆசையால் வழிபாடுசெய்து ஆதிகேசவனென்னும் பெயரோடு பொருந்தினேம்; அவ்வடிவமுதலாக, அறிவின் மிகுதியுடையவர்கள் பணிகின்ற பிரயாகை மாதவனிறுதியாக விளங்குகின்ற இருபத்துமூன்று விஷ்ணுமூர்த்தங்களாயடைந்து நன்மை விளைவிக்குந் திருவுருவங்களைப் பூண்டிருக்கின்றேம். எ-று. (௧)

வளமலி கங்கா கேசவன் முதலாய் வயங்கவிச் சந்திர கம்ப
மளவையும் மணிகன் னிகையென வுரைப்ப ரவ்வழி யான்றவம் புரிய

வளமகிழ்ந் தீச னளப்பருஞ் செல்வ முதவின னந்தநற் றடமே [றும்.
தளவவெண் மூரற் பேதையாய்ப போந்த வுருவுசாற் றுவலெனச் சாற்

(இ-ள்.) வளப்பமிகுந்த கஙகாகேசவன் முதலாக விளங்குகின்ற அரிச்சந்திரகம்ப மிறுதியாக மணிகன்னிகை யென்று (பெரியோர்) சொல்லுவர். அவ்விடத்தில் யான் தவஞ்செய்ததால்,சிவபெருமான் மனக்களிப்புற்றுஅளவில்லாத பாக்கியத்தை யனுக்கிரகித்தனர். அந்த மணிகன்னிகையாகிய நல்ல தீர்த்தமே, முல்லைமுகையனைய வெள்ளிய தந்தபங்திவாய்ந்த பெண்ணுருவாய்வந்த வடிவத்தைச் சொல்லுவேனென்று திருமால் சொல்லத்தொடங்கினர். எ று (உ)

மாதுளங் கனியொன் றிடக்கையிற்றுங்கி வலக்கையி னுற்பலந் தரித்துத்
தீதற விளங்கு மிருகரங் கூப்பித் திருநுதற் கண்ணொடும் வெள்ளைப்
போதுலாங் கமல முத்துவெண் டுகூ புனைந்தியற் பன்னிரு பருவப்
பேதையா மணங்கை வழுத்தின ரன்றோ பிறவிவே ரறுத்திடும்பெரியோர்

(இ-ள்.) மாதுளங்கனி யொன்றினை இடதுகரத்தில் வைத்துக்கொண்டு வலதுகரத்திற் கருநெய்தற்பூவைப்பற்றிக் குற்றமற்று விளங்குகின்ற இருகரங்களையுங்குவித்து, சிறந்த நெற்றிக்கண்ணுடன், வெண்டாமரைக்கொடியிற்புட்பித்த மலரும், முத்தும், வெள்ளிய வஸ்திரமுமணிந்து பன்னிரண்டுவயது பொருந்தியுள்ள பெண்வடிவமைந்த தேவியைத் துதித்தவர்களல்லவோ பிறவியை வேரோடொழிக்கும் மேலோராவர். எ று. (ங)

அன்னநல் லுருவம் பொன்னினு லியற்றி யருச்சனை பண்ணுந ரணங்கி
னின்னருள் பூத்த மூலமந் திரமூன் றிலக்கமோ தினர்மல மொருவித்
தன்னிலை யுணர்ந்து பெறலரு முத்தி சார்குவர் சக்கரத் தடத்தில் [வார்
முன்னர்யானமைத்த விலிங்கபூசனைசெய் துறைந்துளோர்முத்தியிற் சேர்

(இ-ள்.) அத்தன்மைத்தான நல்ல உருவத்தைப் பொன்னாற்செய்து அருச்சனைசெய்பவர்களும், அத்தேவியின் இனிய கிருபைமிகுந்த மூலமந்திரத்தை மூன்றிலட்சமுருச் செபித்தவர்களும்,ஆணவாதி மலங்களைநீங்கி, தமது ஆன்மநிலையையறிந்து அடைதற்கரிய மோட்சத்தைப் பெறுவார்கள். சக்கரதீர்த்தத்தில் முன்னே யான் பிரதிட்டைசெய்த சிவலிங்கத்தைப் பூசித்துக்கொண் டிருப்போரும் முத்தியுலகத்திற் கலப்பார்கள். எ-று. (ச)

மடல்வயி றுடைய வண்டினக் துவைக்கும் வளமணி கன்னிகைத்
தடத்தின், குடபுல மதனி லுளதுபா சுபதக் குண்டுநீர்த் தடமதி லாடிப், படவர வரையி லசைத்துநின் றுடும் பசுபதி சனைப்பணிக் திடுவோ, ரடைவதற் கரிதாய் விளங்குபா சுபத யோகத்தை யெளிதினி லடைவார்.

(இ-ள்.) மடல்கள் வயிறுபிளக்கும்படி வண்டுக்கூட்டங்கள் மிதிக்கின்ற வளப்பம்பொருந்திய மணிகன்னிகைத் தீர்த்தத்தின் மேற்றிசையில் ஆழமாகிய நீரையுடைய பாசுபத தீர்த்தமொன்றுண்டு. அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து படமமைந்த சர்ப்பத்தையரையில் (கச்சாகத்) தரித்துக்கொண்டு கிருத்தஞ்செய்யும்

பசுபதேச்சரனை வணங்கினவர்கள், கிடைத்தற் கரிதாக விளங்குகின்ற பாசுபத யோகத்தை இலேசாகப்பெறுவார்கள். எ று. (ரு)

உரைத்ததன் வடபா லுருத்திர வாச மெனுந்தட முளததிற் படிந்தோர்
திருத்தக வுலகில் விளங்குவர் முத்தித் தீர்த்தமொன் றுங்குள ததனி
லருத்தியி னுடி முத்திவா னவனைப் பணிந்திடி லருமபெறல் வீட்டி [பார்.
னிருத்திடு மதன்மேற் குள்ளதோர் தீர்த்த மதனபெய ரவிமுத்த மென்

(இ-ள்.) சொல்லிய அப்பாசுபததீர்த்தத்திற்கு வடதிசையிலே உருத்திர வாசமெனனுந் தீர்த்தமுள்ளது. அத்தீர்த்தத்தில் மூழ்கினவர்கள் உலகத்திற் செல்வமிகுந்து வாழ்ந்திருப்பாாகள் அவ்விடத்திலேயே முத்திதீர்த்தமென் றொன்றிருக்கின்றது. அதனில் ஆசைகொண்டு ஸ்நானஞ்செய்து முத்தீசப்பெருமானை வணங்கினுல், பெறுதற்கரிய மோட்சலோகத்திலிருக்கச்செய்யும். அம்முத்தி தீர்த்தத்திற்கு மேற்றிசையிலே வேறோர் தீர்த்தமிருக்கினறது. அதன்பெயர் அவிமுத்த மென்று கூறுவார்கள். எ று. (சு)

ஆங்கதன் புனலிற் படிந்தவி முத்த வாதியை மலர்கடுய்த் தொழுவோர்
நீங்கரு மின்பந் துய்ப்பரத் தலேயி னீடொளித் தாரகப் பெயரி
னோங்குயர் தீர்த்த முளததின் மூழ்கி யுவப்பொடுந் தாரகக் கடவுள்
பூங்கழல் வணங்கிற் றாரகப் பிரம மறையினைப் புங்கவன் புகலும்.

(இ-ள்.) அந்த அவிமுத்ததீர்த்த நீரில்மூழ்கி அவிமுத்தீசப்பெருமானைப் பூக்களைக்கொண்டு பூசிப்போர் ஒழியாத சுகத்தை யனுபவிப்பார்கள். அவ்விடத்திற் கீர்த்திமிகுந்த தாரகப்பெயரால் உயர்வுதங்கிய தீர்த்தமொன் றிருக்கின்றது. அத்தாரகதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஆசைகொண்டு தாரகேசப்பெருமானுடைய பொலிவுதங்கிய திருவடிகளைப்பணிந்தால் அவர்களுக்குத் தாரகப்பிரமமந்திரத்தைச் சிவபெருமான் உபதேசிப்பர். எ-று.

தாரகப் பிரமமந்திர மென்பது சிவபெருமானது ஏகாக்ஷர மகாமந்திரம். இஃது காசியிலிறப்போர் செவியி லெம்பெருமா னுபதேசிக்கத்தக்கதென் றுணர்க.

அவ்வுழிக் கந்த வாவியொன் றுளதா லதன்புன லாடிவாட் டடங்
கட், கொவ்வையங் கனிவாய்க் குறமகள் கொழுநற் றொழுதவர் கொடுங்
துயர்ப் பிறவிப், பவ்வம்விட் டொழிவர் துண்டிவா வியினிற் படிந்துயர்
துண்டியைங் கரன்றன், றெய்வமென் கமலச் சேவடி பணிவோர் சிந்தை
யின் விழைந்தன பெறுவார்.

(இ-ள்.) அவ்விடத்திற் குமாரதீர்த்தமொன் றிருக்கின்றது. அதன் நீரில் மூழ்கி, ஒளிவாய்ந்த பாந்தகண்ணையும் கொவவைக்கனிபோலும் அழகியவாயையுமுடைய குறவர் குலப்பெண்ணாகிய வள்ளிநாயகியார் கணவரான முருகக்கடவுளைப்பணிந்தவர்கள்,கொடிய துன்பமாகியபிறவிக்கடலைவிலகி யொழிவார்கள். துண்டிதீர்த்தத்தில் மூழ்கி, உயர்வாகியஐந்துதிருக்கரங்களையுடைய துண்டிவிநாயகரது தெய்வீகம்பொருந்திய மெல்லிய தாமரைமலர்போன்ற சிவந்த பாதங்களைத் தொழுதவர்கள் மனதில் விரும்பிய போகங்களையடைவார்கள். எ-று. (அ)

அன்னதன் றென்பால் விளங்குறு பவானி தீர்த்தமொன் றுளததி ன் மூழ்கிப், பொன்விழு தொட்டிக் கிடந்தெனப படர்ந்த புரிசடைப் பவானியை வணங்கின், முன்னரும பிறவி தொலையுமோர் ஞான வாவி யொன் றுளததின் மூழ்கி,மன்னுஞானேசற்பணிந்திடின் மரண காலையின் ஞானம்வந் தடையும்.

(இ-ள்.) அப்படிப்பட்ட துண்டிதீர்த்தத்திற்குத்,தென்றிசையிலே விள ங்குகின்ற பவானிதீர்த்தமொன்றிருக்கின்றது. அதில் ஸ்நானஞ்செய்து பொன் விழுதுவிட்டிருந்தாற்போன்ற படர்ந்த புரிவாகிய சடையையுடைய பவானியம் மையைப்பணிந்தால் எண்ணுதற்கரிய பிறவிப்பிணி யொழியும். ஒப்பற்ற ஞானதீர் த்தமொன்றிருக்கின்றது அதில் மூழ்கி, அங்குள்ள ஞானேசப்பெருமானை வணங் கினால் மரணகாலத்தில் ஞானம்வந்து சம்பவிக்கும். எ-று. (க)

பொருகடல் குடித்துங் குடித்தெதி ரொடுத்தும் புயல்கிடந் துறங்கு தண் சோலை, விரைவளந் தருநீர்க் கங்கைசூழ் காசி விண்ணவ ருறையு ளின் றென்பால், மருவிய தெறிநீர் மாதவ தீர்த்த மதுபடிந் தென்னையும் வணங்கி, னருளின்வை குண்டத் தினிதுவீற் றிருப்ப ரதன்பல னுரைக் குமா றரிதால்.

(இ-ள்.) மோதுகின்ற சமுத்திரநீரைப் பானஞ்செய்தும், குடித்ததைச்சக் திசெய்தும் மேகங்கள்தங்கித்துயில்கின்ற குளிர்ந்த சோலைசூழ்ந்த வாசனைபொருந் தியவளப்பந்தரும் நீர்மயமான கங்காநதி புடைசூழ்ந்த காசிநகரத்தில் தேவர்வாச த்திற்குத் தென்புறத்தில், அலைகள் தங்கிய மாதவதீர்த்தம் பொருந்தியுள்ளது. அம்மாதவ தீர்த்தத்திலாடி என்னையும் பணிந்தால், ஆசையுடன் வைகுந்த பதவி யில் இனிதாக வாழ்ந்திருப்பார்கள். அத்தீர்த்தத்தின்பலனை (எவராலுங்) கூறுத லருமையாம். எ-று. (கo)

அத்தலைச் சிறந்த பிதாமக தீர்த்த மொன்றுள தலங்குநீ ராடிப்
பைத்தலைத் துத்தி வாளர வணிந்த பிதாமகே சனைவழி படுவோர்
முத்தியி னடைவர் பகீரத தீர்த்த மொன்றுள தாங்கதின் மூழ்கி
மைத்தவழ் மிடற்றுப் பகீரதக் கடவுட் பணிந்தவர் வானவ ராவார்.

(இ-ள்.) அவ்விடத்தில் மேம்பட்ட பிரமதீர்த்தமொன்றிருக்கின்றது. அசைகின்றஅந்நீரில்மூழ்கிப் பொறிகள்வாய்ந்த படம்பொருந்திய தலையையுடைய ஒளிதங்கிய சர்ப்பத்தைஆபரணமாகத்தரித்த பிரமேச்சுரனை வழிபடுவோர் முத்தி யிற் கலப்பார்கள். அங்கேபாகீரததீர்த்தமொன்றிருக்கின்றது. அப்பகீரத தீர்த்தத் திலாடி நீலநிறம்விளங்கும் ஸ்ரீகண்டத்தையுடைய பகீரதேசப்பெருமானை வணங் கினவர்கள் தேவர்களாவார்கள். எ-று.

பிதாமகன்=பிரமன். (கக)

மறைமுழு துணர்ந்தோர் பரவுமார்க் கண்ட தீர்த்தமொன் றுங்குள ததனி, னிறைபுன லாடிக் கறைமிடற் றணிந்த மார்க்கண்ட நிருமலன் றனையில், நறுமலர் தூவி விழைவுடன் றொழுவோர் நாகின வெருமையே

றுகைக்குந், தெறுசினத் தறுகண் மறலிவெவ் வலேயிற் சிமிழ்ப்புறு துல
கில்லீற் றிருப்பார்.

(இ-ள்.) வேதமுழுவதுந் தெரிந்தவர்கள் துதிக்கின்ற மார்க்கண்டதீர்த்த மொன்று அவவிடத்திலிருக்கின்றது. அதின் நிறைவாகிய நீரில் ஸ்நானஞ்செய்து ஆலாலவிஷத்தைக் கண்டத்திற்றரித்த மார்க்கண்டேசரது திருவடிகளில் வாசனை பொருந்திய மலர்கள் சாத்தி அன்புகொண்டு பணிவோர்கள், இளமைதங்கிய எருமைக்கடாவை வாகனமாகச்செலுத்துங் கொல்லுகின்ற கோபத்தையும் அஞ்சாமையையுமுடைய இயமனது கொடிய பாசத்திற்கட்டுப்படாமல் உலகத்தில வாழ்ந்திருப்பார்கள். எ-று. (கஉ)

இன்னன கடவுட் டீர்த்தமுற் றுரைப்பிற் பலவுள விவையெலா மோங்கி, மன்னிய மணிகன் னிகைதனைத் தினமும் வணங்கும்வை குண்டமா தவன்பூங், கன்னியம் படலேப பசுந்துழாய் வீர மாதவன காலமா தவன்மற், றுன்னருந் தசாவ தாரமூர்த் திகளுங் காசியெங் கணுமினி துறைவார்.

(இ-ள்.) இப்படிப்பட்ட தெய்வீகமமைந்த தீர்த்தங்கள் முழுவதுஞ் சொல்லப்புகுந்தால் எண்ணிறந்தன வுண்டு. இவையாவும், தம்மெவற்றினுமுயர்ந்து மேம்பட்டமணிகன்னிகை தீர்த்தத்தைத்தினமும்பணிந்து கொண்டிருக்கும், வைகுந்தமாதவனது பொலிவுதங்கிய அழகிய பசிய துளிராகிய துளவமாலையணிந்த வீரமாதவன்-காலமாதவன்-முதலிய கிடைத்தற்கரிய தசாவதாரமூர்த்திகளும், காசிப்பட்டணமெங்கும் இனிதாக வாழ்வார்கள். எ-று. (கக)

காரண ரைஞ்ஞூற் றுவர்கள்முப் பதின்ம ராமைமி னுருவுகண் ணினர்க ளோரிரு பதின்மர் மீனுரு வமைந்தோ ருயர்ந்தகோ பாலர்நூற் றெண்ம ராருயிர் குறையா வருந்தவத் தமண ராயினர் சிறந்தமுப் பதின்மர்
ஏர்பெறு பாசி ராமர்நூற் றொருவ ரிராமரோர் துளவணி பெருமான்.

(இ-ள்.) காரணர் ஐந்நூற்றுவர் - கூர்மரூபந்தரித்தவர்கள் முப்பதின்மர்கள்-மச்சவடிவேற்றவர்கள் இருபதுபேர்கள் - உயர்வாகிய கோபாலர்கள் நூற்றெட்டுபேர்-பொருந்திய உயிரைக்கொல்லாத அரிய தவத்தையுடைய பவுத்தவுருவுற்றவர்கள் சிறந்த முப்பதின்மர்கள் - அழகு பொருந்திய பாசிராம வடிவுடையவர்கள் நூற்றொருவர்கள். இராமவடிவினரும், ஒப்பற்ற துளவமாலேசூடிய விஷ்ணுமூர்த்தியும். எ-று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (கச)

தீயுமிழ் குருதி கெட்டிலேச் சூல மேந்திய சிவகண மறுநூ
றாயிர மிவர்கள் காசிமா நகர மளிக்குந ரைம்படைக் கடவுள்
மாயவன் காவற் கணங்களு மறுநூ றாயிரம் வான்பெருங் கதையும்
பாயிருட் பிழம்பு பருகுவெஞ் சுடர்கால் கேமியுந் தாங்குபு பரிக்கும்.

(இ-ள்.) நெருப்பைச்சொரியும் உதிரந்தோய்ந்த நீண்ட அச்சவடிவாகிய சூலாயுதம்பிடித்த சிவகணங்களும், அறுநூறாயிரம்பேர். இவர்கள்யாவரும் சிறந்த காசிநகரத்தைக் காவல் செய்பவர்கள். பஞ்சாயுதமேந்திய திருமாலின் காவற்கண

ங்களும் அறுநூறாயிரமாகும். மிகப் பெரிதாகிய கதாயுதமும், பரவிய இருட்டொகுதியை யொழிக்குஞ் சிறந்த ஒளிவீசுகின்ற சக்கராயுதமுந் தாங்கிக் காவல்செய்வார்கள். எ-று. (சரு)

கனைகதிர்த் திகிரிக் கேசவன் முதலாய்க் கண்ணனீ ருவறு நான்கு,
புனைதுழா யலங்கல் மாதவ ருளராங் கவர்திறம் யாவரோ புகல்வார், என
வெடுத் தியம்புங் காலையி னிறைவன் வரவுபார்த் திடமுனம் விடுத்த,
தனிநெடும் பணைத்தோட் கொடுஞ்சிறைக் கலுழன் போந்தடி பணிந்தி
வை சாற்றும்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற கிரணங்களை வீசுஞ் சக்கரப்படைதாங்கிய கேசவன் முதலாகக் கண்ணன் இறுதியாக அலங்கரிக்கின்ற துளவமாலை தரித்த விஷ்ணுமூர்த்திகள் இருபத்துநால்வரிருக்கின்றனர்; அவர்கள்புகழையெவர்தான் சொல்லவல்லவர் என்று (விந்துமாதவனென்னும் பெயர்பூண்ட திருமால் அக்கினிவிந்துவுக்கு) எடுத்துக்கூறுஞ்சமயத்தில், ஸ்ரீவிச்சுவநாதப்பெருமானது வருகையைப்பார்க்கும்படி தான் முன்னனுப்பிய, ஒப்பற்ற நெடிய மூங்கில்போன்ற புயங்களையுங் கொடிய சிறகுகளையுமுடைய கருடன் திரும்பி வந்து பாதங்களிற்பணிந்து இவவாறு சொல்கின்றான். எ-று. (சசா)

ஆயிரங்கோடி பரிதிவான் பூத்த தாமென வலர்கதிர் பரப்பி
மீயுய ரேற்றுக் கொடிமணிச் சுடர விளங்கொளி விமானமேற் பொலிந்து
பாயிரு விசும்பி னமரரேத் தெடுப்பப் பல்லியந் துவைத்திட வாதி [ன்.
நாயகன் வருதல் காண்டியென் றுரைப்ப நோக்கின னுகணைத் துயின்றோ

(இ-ள்.) ஆயிரங்கோடி சூரியர்கள் ஆகாயத்திலுதயமானாற்போல, பேரொளியைவிசி, மிகவுமுயர்வாகிய இடபக்கொடிவிளங்க, ஒளிவீசும் விமானத்திலிவர்ந்து, விசாலமாகிய பெரிய வானுலகில் வசிக்குந்தேவர்கள் தோத்திரஞ்செய்யவும், பலவாச்சியங்கள் கோஷிக்கவும் முதற்பெருங்கடவுளாகிய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான் எழுந்தருளுவதைப் பார்ப்பாயாக வென்று கூற, சேஷசயனத்தில் யோகநித்திரைபுரியுந் திருமால் பெருமானைத் தரிசித்தனர். எ-று. (சஎ)

விந்துமாதவன் அக்கினிவிந்துவுக்குத் தீர்த்தமகிமையுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சருஎசு.

---

உ

சிவமயம்.

## அறுபத்திரண்டாவது,

## விச்சுவநாதர் காசியையடைந்த அத்தியாயம்.

செய்ம்முகங் கமழுஞ் செம்முகத் திகிரி நீனிற வணணனின் றேத்த
மைம்முகி லகடு கிழித்தெழூங் தோங்கு மணிமதிற் காசிமா நகரிற்
செம்மணிச் சுடிகை வாளரா வசைத்த தெய்வநா யகனடைந் திடலு
மம்மவாங் குற்ற செய்திக ளனைத்து மறையென முருகவே ளறையும்.

(இ-ள்.) செய்ம்மணம் வீசுகின்ற செந்நிறமமைந்த சுதரிசனப்படையேந்திய நீலநிறம்வாய்ந்த திருமேனியையுடைய திருமால் எழுந்து துதிசெய்ய, கரிய மேகத்தின் வயிற்றைப்பீறிக்கொண்டு உயர்ந்தோங்கிய அழகிய மதில்சூழ்ந்த சிறந்த காசிநகரத்தில், மாணிக்கத்தை உச்சிக்கொண்டையிற்பொருந்திய ஒள்ளிய சர்ப்பத்தை அரையிற்கட்டிய மகாதேவனாகிய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான் எழுந்தருளவும், அங்குநிகழ்ந்த விருத்தாந்தங்களெல்லாந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று (அகத்தியமுனிவர்) வினவவும்,ஸ்ரீ முருகக்கடவுள் உபதேசிக்கத் தொடங்கினார். எ-று. (க)

இருவிலங் கடந்த வொருதனி முளரி யீர்ந்துழாய் முகுந்தனு மொருகோட்
டருவிவீழ்ந் தென்ன விறைகடாங் கவிழ்க்கு மைங்கரக் கடவுளு முவந்து
பரிதியஞ் செல்வ னருமறைக் கிழவன் கணங்கள்யோ கினியிவர் பலரும்
விரவினர் சூழ மூரட்படைச் சூலவிண்ணவன் றன்னுழை யெதிர்ந்தார்.

(இ-ள்.) பெரிய வுலகங்களையீன்ற ஒருஒப்பற்ற (திருவுந்திக்) கமலத்தையுடைய பசிய துளவமாலையணிந்த திருமாலும், அருவியாறிழிந்தாற்போன்றநிறைவாகிய மதசலத்தைச்சொரியும் ஒற்றைக்கொம்பையுடைய ஐந்து திருக்கரங்கள் பொருந்திய ஸ்ரீ விநாயகக்கடவுளுங் களிப்புற்று, சூரியன்-அரிய வேதங்களுக்குரியபிரமன் - சிவகணங்கள் - யோகினிமாதர் முதலாகிய இவர்கள் பலருந் தம்மைச் சூழ்ந்துவர, வலியமைந்த சூலாயுதமேந்திய சிவபெருமானிடம் எதிர்கொண்டு சென்றனர். எ-று. (உ)

களிற்றுரி போர்வை யந்தணன் வருதல் காண்டொறுங் காண்டொ
றுந் தத்த,முளத்திடையுவகை மீக்கொள வணங்கி நிற்றலு மொருதனிக்
கடவுள், தளிர்த்தபே ரன்பி னைங்கரன் றன்னைத் தழுவின னுச்சிமோந்
திருப்பத், தெளித்தநான் மறையோன் வலத்துமா விடத்துஞ் செம்மலே
யேத்தின ரிருந்தார்.

(இ-ள்.) (கயாசுரனென்னும்) யானையின்தோலைப் போர்வையாகவுடைய சிவபெருமான் வருவதைப் பார்க்கப்பார்க்க, தங்கடங்களது மனதிற் பேரானந்தம் அதிகரித்தலால், (அவர்கள்யாவரும்) பணிந்து எதிர்நிற்கவும், ஒப்பற்ற ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான்,தோன்றிய பெருவிருப்புடன் மூத்தபிள்ளையாரைத் (தமது திருக்கரத்தினால்) தழுவிக்கொண்டு உச்சிமோந்திருக்கையில், தெளிவுபடுத்திய நான்கு

வேதங்களையுமோதிய பிரமதேன் வலப்புறமும், விஷ்ணுமூர்த்தி இடப்புறமுமாக நின்ற மாணிக்கமலைபோன்ற பெருமானைத் துதித்திருந்தார்கள். எ-று. (௩)

மற்றுமாங் கிருந்த சிவகண முதல வானவ ரியாரும்வெங் கதிர்கா, லொற்றையங் குழையோ னினிதருட் கடைக்க ணோக்கமுற் றுவந்தன ரிருப்ப, முற்றுணர் கேள்வி மறைகொணான் முகத்து முப்புரி நூலணி முனிவன், கற்றையஞ் சடிலத் தண்ணல்மென் மலர்ப்பூங் கழலிணை பணிந்திவை கழறும்.

(இ-ள்.) இன்னும் அவவிடத்தில் வந்திருந்த சிவகணங்கள் முதலாகிய தேவர்களெல்லாஞ் சூரியகிரணத்தைவீசும் அழகிய ஒற்றைக்குண்டலந்தரித்த எம்பெருமானது திருபைதங்கிய கடைக்கண்பார்வைபெற்றுக் களிப்புற்றவர்களாய்நிற்கவும்,முழுவது முணர்ந்தகேள்வியையும் நான்கு வேதங்களையும் பொருந்திய நான்குமுகங்களையுமுடைய உபவீதமணிந்த பிரமதேவன், அழகிய சடைக்கற்றையமைந்த பரமபதியின் மெல்லிய மலர்போன்ற பொலிவமைந்த உபயபாதங்களை வணங்கி இவவாறு சொல்லுகின்றனன். எ-று. (௪)

நெஞ்சகம் வெருவக் கரமலர் கூம்ப நிருமல னருண்முக நோக்கிக்
கஞ்சமா மலரி னரசுவீற் றிருக்கு முனிவரன் கருணையங் கடலே
வெஞ்சுடர் வடிவேல் விறற்றிவோ தானன் விழுமியன் றவறிழைத் திலனு
லஞ்சின னவன்ற னரசுகோல் கோட வியற்றுறு தாங்கிருந் தனனால்.

(இ-ள்.) மனநடுங்கவும், கையாகிய தாமரைகள் குவியவும், மலரகிதராகிய சிவபெருமானது திருவருள்பொழியுந் திருமுகத்தைப் பார்த்து, சிறந்த தாமரை மலரில் கொலுவுற்றிருக்கும் பிரமன், அழகியகிருபாசமுத்திரமே! வெவவியகிரணங்களைவீசும் கூர்மையாகிய வேற்படையேந்திய வலிய திவோதானன் சிறப்புற்றவன்; குற்றஞ்செய்தானில்லை யாதலால், அவனது ராஜரீகத்தை முறைதவறச்செய்யமுடியாமல் இருந்து விட்டேன் (தேவரீரது கட்டளையை நிறைவேற்றாமையால்) அச்சமுற்றேன். எ-று. (௫)

அடிகளும் மேவல் முடித்திடாத் தீமை யகன்றிடப் பாம்பின்மேற் கிடந்த,படிமுழு தேத்து மிலிங்கமொன்றமைத்துப்பழிச்சினனெனவுரை பகர்ந்து, கடிகமழ் செய்ய நறுமலர் தூவி வணங்கலுங் கறைமிடற் றெந்தை, யொடிவினின் பூசை யுவந்தனம் வெருவா துறைதியென் றருளொடு முரைத்தான்.

(இ-ள்.) எம்பெருமானே! தேவரீரது கட்டளையைச் செய்துமுடியாத அபராதம் விலகும்படி ஆதிசேஷன் மேலுள்ள உலகமுழுவதுந் துதிசெய்யுஞ் சிவலிங்கக்குறியொன்று பிரதிட்டைசெய்து துதித்தேன் எனப்பிரமன் கூறி, மணம் வீசுஞ் செம்மையாகியநல்ல மலர்களைப்பெய்துபணியவும், நீலகண்டத்தையுடைய எந்தையாகிய ஸ்ரீ விச்சுவநாதப் பெருமான் கெடுதலில்லாத வுனது பூசைக்காக க்களித்தோம் அஞ்சாதிருக்கக்கடவாயென்று கிருபையுடன் திருவாய் மலர்ந்தருளினர். எ-று. (௬)

எண்ணருங் கணங்க ளாதபன் முதல யாரையுந் தனித்தனி நோக்கிப் [மா
புண்ணொடு பழகிவெண்ணிணந் தோய்ந்தபோருதிறற்கணிச்சியெம்பெரு
னண்ணலங் காசி நகரினி லிலிங்க மமைத்தினி திருத்தலி னுவந்தே [ன்.
முண்ணடுக் கெய்தி வெருவலென் றருளா லுரைத்துமா தவனையு முவந்தா

(இ-ள்.) கணக்கில்லாத சிவகணங்கள் சூரியன முதலிய எல்லாரையுந் தனித்தனி கிருபாநோக்கஞ் செய்து, புண்ணுடன் பழகி வெண்மையாகியகொழுப்புத் துவைந்துள்ள சண்டைசெய்யும் வலிய மழுவாயுதத்தையுடைய எமதுசிவபிரான், சிறப்பமைந்த அழகிய காசிக்ஷேத்திரத்திற சிவலிங்கப்பிரதிட்டைசெய்து இனிதாக வசித்திருந்ததாற் களித்தோம்; மனநடுக்கமடைந்து அஞ்சாதீர்கள் என்று கிருபையுடன திருவாய்மலர்ந்து திருமாலையுஞ் சந்தோஷித்தனர். எ-று. (எ)

இன்னண மிருக்கு மமைதியி லெவரு மேத்துகோ லோகம்விட் டிழிந்து
மன்னிய சுநந்தை சுமநசை சுசீலை சுரபிபத் திரையென வயங்கும் [யா
பன்னருஞ் சீர்த்தித தேனுவோ ரைந்தும புகுந்துதீம பான்மழை பொழி
பொனமலர் கஞலும் வாவிக ளனைத்தும பொலிவுறப் பெருக்கிய வன்றே.

(இ-ள்.) இப்படி யிருக்கின்றசமயத்தில், யாவருந்துதிசெய்யுங் கோலோகத்தினின்றிழிந்து புகழ்நிலைத்த சுநந்தை-சுமநசை-சுசீலை-சுரபி - பத்திரையென்று பெயர் விளங்குஞ் சொல்லுதற்கரிய சிறப்பையுடைய பசுக்களைந்தும் வந்து மதுரமாகிய பால்மழைபொழிந்து,பொன்போன்ற (கிறமமைந்த தாமரை) மலர்கள் பிரகாசிக்குந் தடாகங்களையெல்லாம் விளக்க முறும்படிப்பெருக்கின. எ-று. (அ)

ஆங்கது நோக்கி யிதன்பெயர் கபில தீர்த்தமென் றழல்மழுப் படையோன்
றீங்கற வுரைப்ப விண்ணவ ராடித் தர்ப்பணஞ் செய்தலுஞ் சிறப்பி
னோங்கிய கருணை யக்கினிச் சுவததர் பஞ்சத ரொழிவிலாச் சியபர்
பாங்குறு மரபிற் சோமிப ரென்னும பண்ணவர் பிதிர்க்கள்வந்தடைந்தார்.

(இ-ள்.) அதனைப்பார்த்து இதன்பெயர் கபிலதீர்த்தமென்று நெருப்பைச்சொரியும் மழுவாயுதமேந்திய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான் நன்றாகக்கூற, தேவர்கள் மூழ்கித் தருப்பணம் (முதலியவற்றைச்) செய்யவும், சிறப்புற்றோங்கிய கிருபையுடைய அக்கினிச்சுவத்தர்-பஞ்சதர்-கெடுதலில்லாத ஆச்சியபர்-நன்மைபொருந்திய மரபில்வந்த சோமிபர் என்று சொல்லுந் தேவர் பிதிர்க்கள் அங்கேவந்து சேர்ந்தனர். எ-று. (கூ)

பண்ணவர் பிதிர்க்கள் திங்களங் கண்ணிப் பரமனை நோக்கியிப் புனலின்,மண்ணியா டோர்தந் தொடருறு பிதிர்க்கள் வான்கதி யதனிலெஞ்ஞான்று, நண்ணுதல் வேண்டு மெனவரங் கேட்ப வளித்திடு மேல்லையினந்தி, விண்ணுயர் குடுமிக் கொடிஞ்சியந் தடந்தேர் விரைவினிற் புகுந்ததென் றுரைத்தான்.

(இ-ள்.) தெய்வப்பிதிர்கள் அழகிய சந்திரசேகராகிய சிவபெருமானைப்பார்த்து, இத்தீர்த்தத்தில் நிலைபெற்று மூழ்கினவர்களது சம்பந்தமாகிய பிதுரர் சிறந்த நற்கதியிலே எக்காலமும் வாழ்ந்திருக்கவேண்டும் என்று வரங்கேட்க, (சிவபெருமான் அவ்வாறே வரந்) கொடுக்குஞ்சமயத்தில், திருநந்திதேவர் ஆகாயமளா

விய கொடிஞ்சியையுடைய அழகிய விசாலமான இரதம் விரைவில் வந்திருக்கின் றதென்று கூறி விண்ணப்பித்தனர். எ-று. (கo)

உலகெலாம் பூத்த வுந்தியங் கடவு ளொளிர்மணிமலர்க்கரந் தாங்க,
மலர்செழுங் கமலப் பொகுட்டுறை பிரமன் வாசவன் சாமரை யிரட்ட,
வலகிலபல் கணங்கள் வணங்கியேத் தெடுப்ப வந்தர துந்துமி முழங்க,
விலகொளிக் குடுமிக் கொடிஞ்சியந் தேரி னெம்பிரான் விரைவினி லிவர்ந்தான்.

(இ-ள்.) சமஸ்தலோகங்களையும் பெற்ற அழகிய உந்திக்கமலத்தையுடைய திருமால் பிரகாசிக்கின்ற அழகிய தாமரைமலர்போன்ற திருக்கரந்தாங்கவும், செழுமைதங்கிய தாமரைமலர்க்கொட்டையில் வசிக்கும் பிரமதேவனும் இந்திரனுஞ் சாமரைவிசிறவும், அளவில்லாத பல கணங்களும் பணிந்து தோத்திரஞ் செய்யவும், தேவதுந்துமி முழங்கவும் ஒளிவிளங்குஞ் சிகரத்தையுங் கொடிஞ்சியையுமுடைய அழகிய தேரில் எமது சிவபெருமான் விரைவாக ஆரோகணித்தனர்.

கொடிஞ்சி=தேர்மொட்டு. (கக)

ஓரெழு கோடி யைங்கரர் கோடி வயிரவ ரொன்பது கோடி [கோடி
சீர்கெழு மெண்டோ ணீலிகள் மயின்மேற் செல்லும்வே லுழவரெண்
யேர்பெறு மியக்க ரொன்றரைக் கோடி யிசைநவில் கின்னரர் கோடி
கூர்நுதிப் பிறைப்பற் புயங்கமோர் மூன்று கோடிதா னவரிரு கோடி.

(இ-ள்.) ஐந்து திருக்கரங்களை யுடைய விநாயகமூர்த்திகள் ஏழுகோடி-வயிரவர் ஒருகோடி - சிறப்பு மிகுந்த எட்டுப் புயங்கள் பொருந்திய நீலிகள் ஒன்பதுகோடி - மயில்வாகனத்தின்மேற் செல்கின்ற வேலாயுத மேந்திய ஸ்கந்தர் எட்டுக்கோடி-அழகு பொருந்திய யக்ஷர் ஒன்றரைக்கோடி - இசைபாடுகின்ற கின்னரர்கள் கோடி-கூர்மையாகியமுனையை யமைந்த பிறைபோன்ற வக்கிரதந்தங்களையுடைய பாம்புகள் மூன்றுகோடி - அசுரர் இரண்டுகோடி. எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (கஉ)

முப்பது கோடி மேலுமுக் கோடி வானவர் முனிவரெண் பான்மேல்
வைப்புறு மாறு யிராமனை வாழு முனிவரு மத்துணை வகுத்துச்
செப்புறு கணமோர் கோடிமே லிருபா னாயிரந் திவவியாழ் வல்லோ
ரொப்பிலெண் பதினா யிரரறு பதினா யிரவர்வா னுறைந்தகூத் தியரே.

(இ-ள்.) தேவர் முப்பத்துமூன்றுகோடி-முனிவர்கள் எண்பத்தாறாயிரம். இல்லறத்துடன் வசிக்கின்ற முனிவர்களும் அவ்வளவு - வகைப்படுத்திச்சொல்லத்தக்க சிவகணங்கள் ஒருகோடியே யிருபதினாயிரம் - தடவுகின்ற வீணைவல்ல சமானமில்லாத தும்புருவர் எண்பதினாயிரவர் - தேவலோகத்தில் வசிக்குங்கடனப்பெண்கள் அறுபதினாயிரவர். எ-று. (கங)

எயுறற் சேடி யுறையும்விஞ் சையர்க ளிரண்டுநா றாயிரத் தொருபா
னாயிரர் காம தேனுவெட் டிலக்கங் காருட மகளிரா றிலக்க
மியுபர் வரையெண் ணாயிரஞ் சிறந்த வான்பதி விளம்புமுந் நூறு
பாய்திரைக் கடலே ழெண்டிசைக் கரியைம் பத்துமூ வாயிர நதிகள்.

(இ-ள்.) பொருந்திய நல்ல சேடியில் வசிக்கும் வித்தியாதரர்கள் இரண்டு லட்சத்து ஒருபதினாயிரம்பேர் - காமதேனுக்கள் எட்டிலட்சம் - கருடப்பெண்கள் ஆறிலட்சம் - மிகவு முயர்ந்த பர்வதங்கள் எண்ணாயிரம் - சிறந்த தேவநகரங்கள் முந்நூறு - பரந்த அலைகளையுடைய சமுத்திரங்கள் ஏழு - அட்டதிக்கயங்கள் எட்டு - நதிகள் ஐம்பத்தாறாயிரம். எ று.

சேடி என்பது வித்தியாதரனூர். (கஎ)

யாவருஞ் சூழ்ந்து வணங்கினர் போத வென்னையா ளுடையவெம் பெரு
பாவடிக் களிறு பாய்கதிர்ச் செந்நெற் கழனியிற் பகட்டின வாளை [மான்
தாவமுட் குடக்கூன் சங்கினம் வெருவித் தடந்தொறு மலறிமுத் துயிர்க்
காவுடுத் தோங்கு கங்கைநீர் வேலிக் காசிமா நகரில்வந் தடைந்தான். [குங்

(இ-ள்.) ஆகிய வெல்லோருந் தம்மைப் புடைசூழ்ந்து பணிபவராகி வர, என்னை யடிமையாகக் கொண்ட எமது ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான், பரந்த அடியையுடைய யானைகள் பாய்கின்ற கதிர்களையுடைய செந்நெல் பொருந்திய வயல்களில் இளமைதங்கிய ஆண் வாளைமீன்கள் தாவுதலால் நமுன் பொருந்திய குடம்போன்ற வளைவாகிய சங்குகூட்டங்கள் பயந்து தடாகங்கடோறும் இறைச்சலிட்டு முத்துக்களை யீனுகின்ற சோலையையுடையதா யுயர்ந்த கங்காசலத்தை வேலியாயுடுத்த சிறந்த காசிநகரத்தில்வந்து சேர்ந்தனர். எ-று. (கஅ)

இனையநற் காதை கேட்குநர் கவின்றோ ரெழுதினோ ரினிதென வியந்தோர்
பனைவகிர்ந் தன்ன படர்மருப் பெருமை யூர்திதன் பதியினிற் புகாது
கனைகடல் வயிறு குழையமத் தெறிந்து கடவுளர்க் கின்னமு தீந்த
புனைதுழா யலங்கற் பண்ணவன் காணாப் பூங்கழல் நீழல்வீற் றிருப்பார்.

(இ-ள்.) இப்படிப்பட்ட நல்ல சரித்திரத்தைக் கேட்போரும் சொல்வோரும் எழுதுவோரும் நன்றென்று களித்தோரும், பனையைப்பிளந்தாற்போன்றநெடியகொம்பையுடைய எருமைக்கடாவை வாகனமாகக் கொண்ட இயமனது நகரத்திற்செல்லாமல், ஒலிக்கின்ற (திருப்பாற்) கடலின் வயிறு குழையும்படி (மந்தரமலையாகிய) மத்தாற் கடைந்து தேவர்களுக்கு இனியஅமுதத்தைக்கொடுத்தஅலங்கரிக்கின்ற துளவமாலை யணிந்தவிஷ்ணுமூர்த்தியுங்கண்டறியாத அழகிய (சிவபெருமானது) திருவடி நீழலில் வாழ்ந்திருப்பார்கள். எ-று.

"பண்ணவன்காணா" என்பதில் உயர்வுச்சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. பண்ணவனுங்காணா எனவிரியும். (ககூ)

விச்சுவநாதர் காசியை யடைந்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - கருஅக.

சிவமயம்.

அறுபத்துமூன்றாவது,

## விச்சுவநாதர் முனிவனை யளித்த அத்தியாயம்.

கூந்தலம் பிடிசூழ் களிறுபாய் கழனிக் குரைபுனற் காசிமா நகர்விட்
டேந்தெழிற் குடுமி மந்தரத் தெய்து நாள்முத லிற்றைநாள் காறுங்
காந்துமுத் தழலசெய் சைசிட முனிவன் கருதரும் யோகினி லமர்ந்தா
னாய்ந்த நூற்கேள்விநந்தியீண் டவனைத்தருதியென் றமலனுங்கறைந்தான்.

(இ-ள்.) அழகிய கூந்தலையுடைய பெண் யானைகளும் ஆண் யானைகளுஞ் சூழ்ந்து பாய்கின்ற கழனிகளையுடைய சத்திக்கின்ற நீரையுடைய சிறந்த காசிநகரத்தைவிட்டு, அழகுபொருந்திய சிகரங்களையுடைய மந்தரபர்வதத்திலடைந்ததினமுதற்கொண்டு, இன்றையவரையில், தகிக்கின்ற (காருகபத்திய முதலிய) மூவகைப்பட்ட அக்கினிகளைச் செய்யும் சைசிடமுனிவனென்பவன் எண்ணுதற்கரிய யோகததி லிருக்கின்றான். ஆராய்ந்த நூற் கேள்விகளை யுடைய நந்தீ! இங்கவனைக் கொண்டுவா வென்று சிவபெருமான் திருவாய்மலர்ந் தருளினர். எ-று.

கூந்தல் = யானைக்கழுத்தடிமயிர். (க)

நந்தியாண் டெய்தி யோகினி லுறங்கு நான்மறைக் கிழவன்மெய்
குளிர்ப்பக்,கொந்துலாங் கமலப் போதினிற் றடவிக் கொன்றையந் தொ
டையலெம் பெருமான், வந்திடப் பணித்தா னெனலுமம் முனிவன் வல்
விசை வளியின்வந் தெய்திச், சந்தணிந் தோங்கு தடமுலைக் கவுரி தன்
னொடு மிறைவனைத் துதித்தான்.

(இ-ள்.) திருநந்திதேவர் அவ்விடஞ் சென்று, யோகநித்திரை புரியும் நான்கு வேதங்கட்கு முரிய சைசிட முனிவனது உடல் குளிரும்படி, கொத்தாகிய தாமரைப்பூவினால் தடவி யெழுப்பி, அழகிய கொன்றைமாலை சூடிய எமது சிவபெருமான் தன்பால் வரும்படி கட்டளையிட்டனர் என்று கூறவும், அந்த முனிவன் மிகுந்த விசையுடன் வருகின்ற வாயுவேகமாக வந்து சேர்ந்து, சந்தனக்குழம்பு பூசிப் பூரித்துயர்ந்த குசங்களையுடைய உமாபிராட்டியாருடன் சிவபெருமானைத் துதி செய்தனன். எ-று. (உ)

தாமரைத் தெரிய லான்மறைக் கிழவன் றவத்தினை வியந்துநீ வேட்ட
காமரு வரமின் றளிப்பலென் றெறிநீர்க் கங்கையந் திரையலை புரட்டுந்
தேமலர்ச் சடையோ னுரைப்பநின் கமலச் சேவடிப்போதிலெஞ்ஞான்று
மேமுறு மிதயத் தும்பிநீங் காம லிருந்திட வேண்டுமென் றிசைத்தான்.

(இ-ள்.) தாமரை மலர்மாலை யணிந்த நான்கு வேதங்களையு முணர்ந்த சைசிடமுனிவனது தவத்தை வியந்து பேசி, நீ விரும்பிய அழகியவரத்தை யின்றுனக்குக் கொடுப்போமென்று, அழகிய கங்காநதி அலைகளை வீசுந் தேன்பொருந்திய கொன்றைமலர் சூடிய சடாபாரத்தையுடைய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான் திருவாய்மலர்ந் தருள, (சைசிடமுனிவன்) தேவரீரது சிறந்த திருவடிகளாகிய

தாமரைகளில் எப்போதும் அன்புதங்கிய மனமாகிய தும்பி நீங்காமலிருக்கவேண்டு மென்று கூறினன். எ-று. (கூ)

இருள்புறந் துரக்கு மிளகிலாத் திங்க ளிர்ஞ்சடை யந்தண னுவந்து
பொருவருந் தவத்தோ யெற்றொழு தன்றி நுகர்கில னெனுநெறி பூண்ட
பரிசினுல் வேட்ட வரமுனக் களித்தேம் நமதுதாள் பணிந்துல கேத்த
மருவரு முத்தி பெறுகுவை யோகா சாரிய னென்னவும் வாழ்தி.

(இ-ள்.) அந்தகாரத்தைத் தூரத்திலேவிலக்குஞ் சந்திரிகைவீசுகின்ற இளம்பிறையை முடித்த குளிர்ந்த சடையை யுடைய சிவபெருமானுவந்து, சமானமில்லாத தவத்தை யுடையவனே! என்னைப் பணிதலல்லாமல் உணவேனென்கிற விரதத்தை மேற்கொண்ட தன்மையால் இச்சித்த வரத்தை (அவ்வாறே) உனக்குக் கொடுத்தோம்; நம்முடைய பாதங்களை வணங்கி உலகத்தார் துதிசெய்யும்படி கிடைத்தற் கரிய முத்தியுலகடைவாய்; யோகாசாரியனெனவும் வாழக்கடவாய். எ-று. (ச)

நின்னுடைப் பெயராற் போற்றுமிவ் விலிங்க நீடுகெவருடமூன் றிதனை, முன்னினர் பணிந்தோர் யோகமெய் திடுவருலகெலா முத்தியெய்துவதற், கன்னநல் லிலிங்கத் துறைதும்யா மென்ன வரம்பல வருந்தவற் களித்துக், கன்னன்மென் றனைய குதலையந் தீஞ்சொற் கவுரியோர் பங்கன்வீற் றிருந்தான்.

(இ-ள்.) உனது பெயரால் (பிரதிட்டைசெய்து) துதிக்கும் இச் சிவலிங்கக்குறி நீடூழி வாழக்கடவது; மூன்றுவருடகாலம் இதனைத் தியானித்தோரும் வணங்கினோரும் யோகமார்க்கத்தை யடைவர்; உலகிலுள்ளாரெல்லாம் மோட்சமடையும்படி அந்த நல்ல இலிங்கத்தில் யாம் வீற்றிருப்போமென்று பல வரங்களை அருந்தவஞ்செய்த சைசிட முனிவனுக்குக் கொடுத்து, கரும்பை மென்றாற்போன்ற அழகிய மதுரம் பொருந்திய குதலைச் சொல்லை யுடைய பார்ப்பதிபாகராகிய சிவபெருமான் வீற்றிருந்தனர். எ-று. (௰)

விச்சுவநாதர் முனிவனை யளித்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கருகச.

சிவமயம்.

அறுபத்துநான்காவது,

## விச்சுவநாதர் காசியின் சிறப்பு

### முனிவருக்குரைத்த அத்தியாயம்.



எரிதிரை புரட்டு பூம்புன லசியும் வரணையு மியைந்துழி முதலாய்க்
கறைமிட றணிந்த சங்கமேச் சுரமீ ருகிய கடவுணற் றீர்த்தத்
துறையுந ராகி யருந்தவ மியற்றி யுணர்வரும் யோகினி லமர்ந்த [தார்.
மறைபயில் வாழ்க்கை முனிவரர் யாரு மணிமிடற் றெந்தைபா லடைந்

(இ-ள்.) கரையை மோதுகின்ற அலைகள் வீசும் பொலிவமைந்த நீரையுடைய அசியும், வரணையுங் கூடிய இடமுதலாக, விஷத்தைத் திருமிடற்றிலணிந்த சங்கமேச்சுராலய மிறுதியாகிய தெய்வீகமமைந்த நல்ல தீர்த்தங்களில் வாழ்வோராகி அரியதவங்களைச்செய்து அறிதற் கருமையான யோகநிலையி லிருக்கும், வேதமுறையே யொழுகும் வாழ்க்கையையுடைய எல்லா முனிவர்களும் திருநீலகண்டத்தையுடைய எமது தந்தையாகிய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமானிடஞ் சேர்ந்தனர். எ-று.

அசியும் வரணையும் கூடுதலின் காசிக்கு வாரணாசி யென ஓர்பெயர். (க)

அருட்கடன் பூண்ட வறுதொழிற் செல்வ ரடைதலு மவர்முக நோக்கிப், பொருப்புவிற் குனித்த புரிசடைப் பெருமா னினிதினி னருந்தவம் புரிந்தீண், டிருத்திரோ வெனலும் வானவர் மகுட கோடிக ளிறைஞ்சிடு பொலந்தாட், டிருத்தகு கமலஞ் சென்னியிற் சூட்டிச் சிந்தைநைந் தேத்தினர் புகல்வார்.

(இ-ள்.) அருளையே கடமையாக மேற்கொண்ட (ஓதல்-ஓதுவித்தல் - வேட்டல் - வேட்பித்தல்-ஈதல்-ஏற்றலென்னும்) ஆறு தொழில்களையமைந்த வேதியர்கள் வரவும், அவர்களது முகத்தைப்பார்த்து, மேருமலையை வில்லாகவளைத்த புரிந்தசடையையுடைய சிவபெருமான் நன்றாக அருந்தவங்களைச்செய்து இக்காசியி லிருக்கின்றீர்களோவென்று வினவவும், தேவர்களது கணக்கில்லாத கிரீடங்கள் தாழும் அழகிய திருவடியாகிய சிறப்பமைந்த தாமரையைச் சிரத்திலணிந்து மனமுருகித்துதித்தாராகிச் சொல்கின்றனர். எ-று. (உ)

வேத்தரா மகுடத் துச்சியிற் பரிக்கும் விரிகடல் மாநில முழுது,மேத்துநல் வளங்கூர் காசிமா நகரி னுண்டுக ளெறிவளி புடைபடச், சேர்த்துளார் மேற்சென் றறினுமூ விலைவேற் செல்வரா யுறைவரிந் நகரி, னீத்திடா துறைவார்க் கின்பமே யலது நிகழ்வதொன் றுளதுகொ லென்றார்.

(இ-ள்.) ஆதிசேடன் கிரீடத்தின்பேரிற் சுமக்கும் பரந்த கடலாடையுடுத்த பெரிய உலகிலுள்ளாரெல்லாந் துதிக்கின்ற நல்ல வளப்பமிகுந்த சிறப்பமைந்த காசிநகரத்தின் நுண்ணிய தூசுகள் வீசுகின்ற காற்றின் விசையால் சமீபித்துள்ளார்பேரில்வந்து பட்டாலும், சூலாயுதமேந்திய சிவபெருமானது திருவுருவமை

ந்தவர்களாய் வாழ்வார்கள். இந்தக் காசிநகரத்திலிருந்து நீங்காமல் வாசஞ்செய்ப வர்கட்கு (தேவரீரது திருவருளால் எக்காலத்தும்) சுகமேயன்றி நடக்கத்தக்க வேறு ஏதேனு முண்டோ வென்று கூறினர். எ-று. (ஃ)

தீங்கரும் பெருத்திற் றாங்குதே னிறுவிற் சினைவராற் கன்றுபாய்க் துழக்கும், பூங்கதிர்க் கழனி விளிம்புடுத் தோங்கு பூம்புனற் காசிமா நகரி, னீங்கரு மனபுற் றருந்தவ மாற்றி நீவிரிங் கிருத்தலால் வேட்ட, யாங்கடி தளித்து மெனநிலாக் கொழிக்கு மிளமதிக் கண்ணியோ னிசைத்தான்.

(இ-ள்.) மதுரந்தங்கிய கரும்பங்கோலின்முனையிலுள்ள தேன்கூடுதேனிற் சூல்கொண்ட இளவரால்கள்பாய்ந்து கலக்குகின்ற அழகிய கதிர்களமைந்த வயல் கள்சூழ்ந்துவிளங்கும் பொலிவுதங்கிய நீரையுடைய சிறந்த காசிக்ஷேத்திரத்தில், கெடாத அன்புள்ளவர்களாகி இயற்றற்கரிய தவங்களைச்செய்து நீங்கள் ஈண்டுவா ழ்ந்திருப்பதால், விரும்பியவரங்களை நாம் விரைவி லனுக்கிரகிப்போமென்று சந்தி ரிகைவீசும் இளம்பிறையைச் சிரோமாலையாகவுடைய பெருமான் திருவாய்மலர் ந்தருளினர், எ-று. (ச)

பண்ணுலாங் கிளவி பங்கவூன் பொதிந்த பழிபடும் யாக்கைபோ மளவு, மண்ணலங் காசி யுறைந்திடல் வேண்டு மன்றியும் யாங்களின் டமைத்த, வொண்ணிற லிலிங்கத் துறைந்திடல் வேண்டு மெனவிரு காங் குவித் திறைஞ்சி, யெண்ணுறு தவத்து மறைபயில் முனிவர் யாவருந் த னித்தனி யிசைத்தார்.

(இ-ள்.) பண்ணோசை பொருந்திய சொல்லையுடைய பார்ப்பதிபாகரே! மாமிசந்திணிந்த குற்றந்தங்கிய உடல்நீங்குமெல்லையும் அழகியசிறப்புற்ற காசியில் வாழ்ந்திருத்தல் வேண்டுவது; அல்லாமலும் நாங்கள் ஈங்குப்பிரதிட்டைசெய்த ஒள் ளியநிறமமைந்த சிவலிங்கக்குறியில் தேவரீர் வீற்றிருத்தல்வேண்டும் என்று இர ண்டு கைகளையுங்குவித்து வணங்கி மதிக்கத்தக்க தவத்தையுடைய வேதங்களிற் பழகிய முனிவர்களெல்லாம் தனித்தனி சொன்னார்கள். எ-று. (ரு)

தீயுமிழ் தறுகட் படவர வசைத்த செம்மலு முவக்தொரு பதினெண் ணாயிரத் தறுநூற் றெண்பதின் மேலு மைந்துடை யந்தணர் தமக்குப் பாயிரு விசும்பி னமரரு மறியாப் பதத்தொடு மவ்வர மளித்து மீயுயர் குடுமி யிமயமீன் றெடுத்த விளங்கிழை தன்னொடு மறைந்தான்.

(இ-ள்.) நெருப்பைச்சொரியும் அஞ்சாமையுடைய படமமைந்த சர்ப்ப த்தைத்தரித்த சிவபெருமானும் மனக்களிப்புற்றுப் பதினெண்ணாயிரத் தறுநூற் றெண்பத்தைந்து (என்னுந்தொகையையுடைய) முனிவர்களுக்கு, பரவியபெரிய சுவர்க்கத்திலவசிக்குந் தேவர்களுமறியக்கூடாத (உயர்வாகிய) பதவியுடனேஅவர் கள் விரும்பிய வரத்தையுங்கொடுத்து, மிகவும் உயர்ந்த சிகரங்களமைந்த இமா சலமன்னன்பெற்ற பிரகாசிக்கின்ற ஆபரணமணிந்த பார்ப்பதியாரோடும் அந்தர் த்தானமாயினர். எ-று. (சு)

வருபெருந் தவத்து நான்மறைக் கிழவர் யாவரு முளமகிழ் கூர, வ ருளொடு மமைத்த விலிங்கபூ சனைசெய் தன்பொடு மினிதுவீற் றிருந்

தார், பொருவிலிக் காதை யுரைத்துளோர் கேட்டோ ரெழுதினோ ருள
மகிழ் பூத்தோர்,விரிகட லுலக முழுவது மேத்த வெளிதினில் வீடுபெற்
றுறைவார்.

(இ-ள்.) அதிகரிக்கின்ற சிறந்த தவத்தையுடைய நான்கு வேதங்களையுமு
ணர்ந்த (ஏனைய) முனிவரெல்லாம் மனக்களிப்புமேம்பட ஆசையோடு தாபித்த
சிவலிங்கங்களைப் பூசைசெய்துகொண்டு பக்தியோடு இனிதாக வாழ்ந்திருந்தார்
கள். சமானமில்லாத இந்தச்சரித்தத்தைச்சொன்னவர்களும் கேட்டவர்களும் எழு
தினவர்களும் (கேட்டு அல்லது வாசித்து) மனமகிழ்ச்சி யிருந்தவர்களும் பரந்த
கடல்சூழ்ந்த உலகமெல்லாந் துதிக்கும்படி இலேசாக மோக்ஷலோக முற்று வாழ்
வார்கள். எ-று. (எ)

விச்சுவநாதர் காசியின்சிறப்பு முனிவருக்குரைத்த அ-ம்,

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கக௯0க.

அறுபத்தைந்தாவது,

# பராசரலிங்க முதலான லிங்கங்களின்

## கதையுரைத்த அத்தியாயம்.

பிருகுநா ரணர்மார்க் கண்டர்மாண் டவியர் பராசரர் பெருந்தவ மதங்க
ரருணர்கா பாலி மருத்துவர் குலாலர் காலவர் வச்சரா ரீதர் [சூழ்
பொருவிலம் முனிவர் முதலியோ ரமைத்த விலிங்கமை யாயிரம் புடை
மருமல ரிதழி புனைந்தசேட் டேசன் கதையினைக் கேளென வழங்கும்.

(இ-ள்.) பிருகு-நாரணர் - மார்க்கண்டேயர் - மாண்டவியர் - பராசர்-பெ
ரிய தவத்தையுடைய மதங்கர் - அருணர் - காபாலி - மருத்துவர் - குலாலர் - கா
லவர் - வச்சர் - ஆரீதர் முதலிய சமானமில்லாத அம்முனிவர்கள் பிரதிஷ்டை
செய்த சிவலிங்கமூர்த்தங்கள் ஐயாயிரம் புடைசூழ்ந்துள்ள, வாசனைதங்கிய கொ
ன்றைமலர்மாலை சூடிய சேட்டேசன் சரித்திரத்தைக் கேட்பாயாகவென்று (அக
த்தியமுனிவரை நோக்கி ஸ்ரீமுருகக்கடவுள்) திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

வேறு.

மைம்மலர்க் கூந்த றாழ வால்வளை வாய்விட் டார்ப்ப
வம்மவோ மருங்கு ளென்மெ னடிச்சிலம் பலறி யேங்கப்
பொம்மல்வெம் முலையிற் றாழ்ந்த நுண்டுகிற் போர்வை சோர
வெம்மையா ளுடைய வன்னை யெழில்செய்பங் காடி னாளே.

(இ-ள்.) மலர் சூடிய கரிய கூந்தல் தொங்கவும், வெள்ளிய வளையல்கள்
வாய்விட் டொலிக்கவும், ஐயோ இடை வருந்துமென்று திருவடியிற்பூண்ட சிலம்

புகன் பயந்து இறைச்சவிடவும், பூரித்த வலிய திருத்தனங்களி லசைத்த மெல்லிய போர்வையாகிய உத்தரியஞ்சோரவும், எம்மையடிமையாகவுடைய தாயாகிய உமாதேவியார் (முன்னொருகாலத்தில்) அழகியபந்து விளையாடினள். எ-று. (உ)

கந்துகம் புடைத்த முத்திக் கரும்பினை வியந்து நோக்கிச்
சிந்தைமா ழாந்து தீய விருள னுற் பலனென் றோதும்
வெந்திற லசுரர் நெஞ்சின் விழைவினு ஓருவ மாறி
யெந்தைதன் கணங்கள் போல விறைவிமுன் னெய்தி னுரே.

(இ-ள்.) கந்துகமடித்துத்திருவிளையாட்டியற்று முத்தியளிக்கவல்லகரும்பு போன்ற உமையம்மையை ஆசைகொண்டுபார்த்து மனம்வருந்திக் கொடிய இருளன் உற்பலனென்று சொல்லும் மிக்க வலியமைந்த அசுரர்கள் மனவிருப்பத்தொடு வேற்றுருவெடுத்து, எமது தந்தையாகிய சிவபெருமானது கணங்களைப் போலத் தலைவியாகிய பார்ப்பதிதேவியாருக்குமுன் சென்றனர். எ-று.

கந்துகம்=பந்து. (ந)

ஆங்கவர் போந்த மாய மறிந்தினி கிலவு காலும்
பூங்கதிர்த் திங்கள் வேணிப் புங்கவன் கண்ணிற் காட்டத்
தீங்குறு மசுர ராவி சென்றிட வாரந் தாழ்ந்த
கோங்கிள முலையாள் செங்கைப் பந்தினு லெறிந்து கொன்ருள்.

(இ-ள்.) அவ்வா றவர்கள் வந்த மாய்கையை யுணர்ந்து, இளநிலவு சொரியும் அழகிய கிரணங்களையுடைய சந்திரனைச் சடையிற்றரித்த சிவபெருமான் திருக்கட்குறிப்பால் (தேவியாருக்குக்) காண்பிக்கவும், கொடுமைதங்கிய இராக்கதர் உயிர்போய் முடியும்வகையாக, முத்துமாலையணிந்த கோங்கரும்பு போன்ற இளமைதங்கிய தனங்களையுடைய தேவியார் சிவந்த கையிலேந்திய பந்தினுல் வீசிக் கொன்றனர். எ-று. (ச)

வெந்திற லசுர ராவி வீட்டிய பொன்னம் பந்து
கந்துகேச் சுரனென் றோது மிலிங்கமா கியதிக் காதை
சிந்தையி னுணர்ந்தோர் கேட்டோர் பவக்கடல் சேரா ரென்னி
லந்தநல் லிலிங்கங் கண்டோர் பேற்றினை யறையொ ணுதால்.

(இ-ள்.) பராக்கிரம மமைந்த கொடிய அசுரர்களுயிரைத் தொலைத்த அழகிய பொன்னுலாகிய பந்து, கந்துகேச்சுரனென்று சொல்லும் இலிங்கவடிவமாயிற்று. இச்சரித்திரத்தை மனதிற்சிந்தித்தவர்களும் விசாரித்தவர்களும் பிறவிசாகரத்தை யடையமாட்டார்களென்றுசொன்னுல், அப்படிப்பட்ட நல்ல சிவலிங்கக் குறியைத் தெரிசித்தோரது பதவியை (எத்தகையினராலும்) சொல்ல முடியாதாகும். எ-று. (ரு)

அவ்வழி நிகழ்ந்த காதை யொன்றுள தறைவல் கேட்டி
தெவ்வடு பிரக லாதன் மாமன்வெஞ் சினவு வைவே
லெவ்வமி லோசை போய துந்துமி கிருத னென்போ
னவ்விய மவித்த நெஞ்சத் தமருக் கமி னுற்ருன்.

(இ-ள்.) அவ்விடத்தில் நடந்த சரிதம் ஒன்றிருக்கின்றது ; சொல்வேன் கேட்பாயாக. பகைஞரைக் கொல்லத்தக்க பிரகலாதனனது மாமனும், கொடிய கோபத்தையுங் கூர்மையாகிய வேலையு முடைய சமானமில்லாத கீர்த்திதங்கிய துந்துமி என்னும் பெயர்பெற்றோனுமாகிய அசுரன், பொறுமைவிலக்கிய மனத்தையுடைய, தேவர்களிடத்திற் சண்டைசெய்து சகியாதவனும். எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (சு)

விண்ணவர் வலியுஞ் சீரும் விளைவதெவ் வாறென் றுள்ளத்
தெண்ணின னாகி நாளு மெரியினை யூட்டி யுண்ணு
மண்ணுறை தேவர் தம்மால் வந்ததம் மறையோர்ச் செற்றால்
நண்ணரு மாற்ற லெல்லாம் நடந்திடு மென்ன வோர்ந்தான.

(இ-ள்.) தேவர்களுக்குள்ள வல்லமையுங் கீர்த்தியும் உண்டாவதற்குக் காரணம் யாதென்று மனதிற் கருதினவனாகி, எக்காலமும் யாகத்தீயைவளர்த்துப் புசிக்கின்ற அந்தணர்களால் வருவதாம்: அவ்வேதியரைக்கொன்றால் கிடைத்தற்கரிய பராக்கிரமமுழுவதுஞ் செல்லுமென்று தனக்குள்ளேயாலோசித்து உணர்ந்தனன் துந்துமி. எ-று.

மண்ணுறைதேவர்=பூமியில்வசிக்கும்தேவர்கள் ; பிராமணர். நாளும் எரியினையூட்டலாவது யாககாரியஞ் செய்யத்தொடங்கினோர் முதலில் தாம்கொண்ட அக்கினி அவியாவண்ணம் பாதுகாத்து நித்தியஹோமஞ் செய்தல் வேண்டும். இத்தகையினரோ வானப்பிரஸ்த ஆச்சிரம முற்றுத் தனித்தாவது மனைவியோடாவது வனம் புகுகையில் இவ்வக்கினியை விட்டுவிடாமல் உடன்கொண்டு செல்வர்.

மாசறு தவத்தின் மிக்க மறைபயில் முனிவர் யாரு
மாசினி வருக்கை போழ்ந்து கவிழ்தலையரம்பை செற்றுப்
பாசிலைப் பதுமத் தோட்டிற் பகட்டிள வாளை துஞ்சுங்
காசியி னுறைவோ ரென்னத் தன்னுருக் கரந்து புக்கான்.

(இ-ள்.) குற்றமற்ற தவத்துறைகளில் மேம்பட்ட வேதாப்பியாசமுடைய இருடிகளெல்லாம், பலா - மா - (முதலிய மரங்களைப்) பிளந்து,பரந்த தலையையுடைய வாழைகளைவெட்டிப் பசிய இலைகள்பொருந்திய தாமரைஇதழ்களில் இளமைவாய்ந்த ஆண்வாளைமீன்கள் துயில்கின்ற காசிநகரத்தில் வசிப்பவர்களைப்போல்தன் வடிவமாறிச் சென்றனன் (துந்துமி). எ-று. (அ)

நீரிடைக் கரந்து வேத முனிவரைக் கொல்லு நீலக்
கார்தவழ் காவி னெய்திக் கண்ணுறு மவரைக் காயு
மூர்வயி னதிதி போல வுறைந்தவ ருயிரை யுண்ணும்
போர்கெழு தறுகட் சீயப் போத்தெனத் தகைய நீரான்.

(இ-ள்.) போர்த்தொழிலில் மிகுந்த அஞ்சாமையுடைய ஆண்சிங்கம் போன்ற தன்மைவாய்ந்த துந்துமி என்போன் ஜலத்தில் ஒளித்து (நீர்க்கடன் செய்யவருகின்ற) வேதமுணர்ந்த அந்தணரைக்கொன்றும், நீலநிறமமைந்த மேகங்கள் தவழ்கின்ற சோலையிலிருந்து தன்னைப் பார்ப்பவர்களை வதைத்தும், நகரத்திலே அதிதியைப்போல் வசித்து ஆங்குள்ளோர் உயிரைக்குடித்தும் வந்தனன்.

"வினைமுற் றேவினை யெச்ச மாதலும், குறிப்புமுற் றீரெச்ச மாதலு முள வே" என்றபடி, கொல்லும் காயும் என்னும் வினைமுற்றுக்கள் வினையெச்சப்பொருளை உணர்த்தின. (௯)

இன்னணந் திரியு நாளிற் சிவநிசி யெய்த லோடும்
பொன்னவிர் கடுக்கை வேணிப் புனிதனைப் போற்றல் செய்யும்
பன்னரு மறையோர் முன்னர்ப் பாய்சினக் குருதிப பேழ்வாய்க்
கொன்னுனை யெயிற்ற வெங்கட் கோளரி யெனனச் சென்றான்.

(இ-ள்.) இவ்வாறு (பலரையுந் துன்புறுத்தி) உழலுங்காலத்து, சிவராத்திரிப்புண்ணியகாலம் வரவும், பொன்போல விளங்குகின்ற கொன்றைமாலை தரித்த சடையையுடைய சிவபெருமானைத் துதிக்கின்ற சொல்லுதற்கரிய வேதியர்க்கு முன், பாய்கின்ற கோபத்தையும் பிளவுபட்ட வாயையும் (எதிர்த்தோரை) கொல்லத்தக்க கூர்மைவாய்ந்த பற்களையுமுடைய வலிய புலியைப்போற் சென்றனன் (துந்துமி) எ-று. (௧௦)

கொல்லிய வெதிர்ந்த கூற்றிற் குறுகிய வசுர ரேற்றை
யெல்லொளி யிலிங்க நாப்ப ணீர்ஞ்சடை யெண்டோள் முக்கட்
டொல்லைமா மறையோன் றோன்றிச் சுடர்மணிக் கரங்க டம்மால்
மல்லலந் தடந்தோள் பற்றி யாருயிர் மாய்த்திட் டானே.

(இ-ள்.) உயிர் கொள்ளும்படி யெதிர்த்துவந்த யமனைப்போல் சமீபித்த, அசுரர்குலச் சிங்கமாகிய துந்துமியைச் சூரியன்போலும்பிரகாசம்வாய்ந்த கந்துகேசமென்னுஞ் சிவலிங்கக் குறியின் நடுவிலிருந்து குளிர்ந்த ஜடையையும் எட்டுத் திருப்புயங்களையும் திரிநேத்திரங்களையுமுடைய சிறப்பமைந்த பழைய வேதப் பொருளாக உள்ள ஸ்ரீ விச்சுவநாதப்பெருமான் தோன்றி, பிரகாசிக்கின்ற நவமணிகளமைந்த (ஆபரணம்பூண்ட) திருக்கரங்களால் அழகிய வளப்பமிருந்த விசாலமாகிய தோள்களைப்பிடித்து உயிர் வீழ்த்தினர். எ-று. (௧௧)

அறுதொழில் முனிவர் யாரு மடல்கெழு மவுணற் செற்ற
பிறைமுடிப் பெருமான் றாளிற் பெய்ம்மலர் மாரி சிந்தி
யிறைவவீண் டுறைதல் வேண்டு மென்னலு மதற்கு நேர்ந்தான்
கறையனற் புயங்கம வீக்கு கனைகழற் புனிதன் றானே.

(இ-ள்.) அறுவகைத்தொழில்களையுடையமுனிவர்களெல்லாம் வல்லமையிருந்த துந்துமியைக் கொன்ற சந்திரசேகரராகிய சிவபெருமானது திருவடிகளில் (தேன்)சொரியும் புஷ்பவருஷம்பெய்து, தலைவனே! இவ்விடத்தில் தேவரீர் வீற்றிருக்கவேண்டும் என்று பிரார்த்திக்கவும், விஷாக்கினியைக் கக்குஞ் சர்ப்பத்தைக் (கச்சாகக்) கட்டிய ஒலிக்கின்ற வீரக்கழல் தரித்த பெருமான் அதற்குச் சம்மதித்தனர். எ-று. (௧௨)

அன்றுதொட் டுலகஞ் சேட்டேச் சுரன்றனை யன்பி னோடு
மின்றிக ழெயிற்றுப் பேழ்வாய் வியாக்கிரேச் சுரனென் றோது
மென்றவிக் காதை கேட்டோர் பயின்றுளோ ரெவரும் வான்றோய்
பொன்றிகழ் குடுமிச் செம்பொற் பொருப்பில்வீற் றிருப்ப ரன்றே.

(இ-ள்.) அதுமுதல் சேட்டேசப்பெருமானை உலகத்துள்ளாரெல்லாம் மின்னலை வீசுகின்ற பற்களையும் பெரியவாயையு முடைய வியாக்கிரசம்ஹார மூர்த்தியென்று ஆசையுடன் சொல்லுவர் எனக் கூறிய இச்சரித்திரத்தைக் கேட்டவர்களும் சொன்னவர்களும் ஆகாய மளாவிய பொன்மயமான சிகரங்களையுடைய செம்மையாகிய திருக்கயிலாயகிரியில் வாழ்ந்திருப்பார்கள். எ-று.

வியாக்கிரம்=புலி. (௯௩)

பராசர விலிங்கமுதலான விலிங்கங்களின் கதையுரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௬௧௪.

---

அறுபத்தாறுவது,

## சயிலேசன் முதலான விலிங்கங்களின்

### கதையுரைத்த அத்தியாயம்.

கரும்பன மொழியாள் பங்கிற் கடவுள்சேட் டேசன் றென்பா
லரம்பையர் போற்றும் லிங்க மொன்றுள ததனின் பாங்கர்ப்
பெரும்புனல் வாவி யொன்றுண் டதனிடைப் படியப் பெற்றோர்
விரும்பிய யாவு மெய்தி வீடுல கடைவ ரன்றே.

(இ-ள்.) கரும்பை யொத்த சொல்லையுடைய பார்ப்பதிதேவியைப் பாகத்திற் கொண்ட சேட்டேசப்பெருமானுக்குத் தென்புறத்திலே அரமகளிர் துதி செய்யுஞ் சிவலிங்கக்குறியொன் றிருக்கின்றது. அதன்பக்கத்தில் மிகுந்த நீர்மயமான தீர்த்தம் ஒன்றிருக்கின்றது. அத் தீர்த்தத்தில் மூழ்கப்பெற்றவர்கள் இச்சித்த காமியார்த்தங்களையெல்லாம் அடைந்து மோக்ஷலோகத்திற் சேர்வர். எ-று.

வாசுகீச் சுரன்க பாலி வயிரவன் பிதாம கேசன்
ஏசில்கார்க் கோட கேச னிடபேசன் கவுமா ரீச
ஞசில்கங் காத ரேசன் கந்தரு வேச ஞதி
யோசைபோ மிலிங்க மாங்குப் பற்பல வுண்டு மாதோ.

(இ-ள்.) வாசுகீச்சுரன் - காபாலி - வயிரவன் - பிதாமகேசன் - குற்றமில்லாத கார்க்கோடகேசன் - ருஷபேசன் - கௌமாரீசன் - களங்கமில்லாத கங்காதரேசன் - கந்தர்வேசன் முதலிய கீர்த்திபொருந்திய எண்ணிறந்தனவாகிய சிவலிங்கங்கள் அங்கே விளங்குகின்றன. எ-று. (௨)

மண்டுதீம் புனல ரூத வரணையங் கரையில் வைகிக்
கொண்டல்கண் படுக்குஞ் சோலைக் குளிர்புனற் காசி தன்னை
முண்டனங் குண்ட னேச மெனுமிரண் டிலிங்க மூற்று
மண்டரோத் தெடுப்ப காளு மருள்புரிந் தளிக்கு மன்றே.

(இ-ள்.) மதுரமாகிய நீர்ப்பெருக் கொழியாத வரணைநதியின் அழகிய கரையில் வீற்றிருந்து, மேகங்கள் சஞ்சரிக்கின்ற சோலைகள் சூழ்ந்த குளிர்ச்சியமைந்த நீர்வள மமைந்த காசிக்ஷேத்திரமுழுவதும், முண்டனேசம் - குண்டனேசம் என்னும் இரண்டுசிவலிங்கக்குறிகள் தேவர்கள் துதிசெய்யும்படி எக்காலத்தும் கிருபைசெய்து காவல்புரியும். எ-று. (௩)

அத்தலை நிகழ்ந்த காதை யொன்றுள தறைவல் கேண்மோ
மைத்திரு ணெங்குஞ் சாரல் வான்றொடு குடுமி நெற்றி
வித்தக விமய வேந்தை வேட்கைமீ தூர நோக்கித்
தத்தரி நெடுங்கட் செவ்வாய் முகிழ்முலை மேனை சாற்றும்.

(இ-ள்.) அவ்விடத்தில் நடந்த விருத்தாந்தம் ஒன்றுண்டு அதனைச் சொல்வேன் கேட்பாயாக: கருநிறமுற்று இருள் சஞ்சரிக்கின்ற சாரலையும், ஆகாயமளாவிய சிகரத்தையும் அறிவையுமுடைய இமாசலமன்னனைப் பரந்த அரிகளையுடைய நெடிய கண்ணையும் சிவந்த வாயையும் அரும்பிய தனங்களையும் பெற்ற மேனை யென்பவள் ஆசை அதிகரிக்கப்பார்த்துச் சொல்லுவாள். எ-று. (௪)

ஓட்டினி லைய மேற்றுண் டூர்பெய ரின்றி யீமக்
காட்டிடை வதிந்து சாம்ப ரணிந்துவெங் கரித்தோல் போர்த்த
நாட்டமூன் றுடைய பித்தற் களித்தநங் கைகை செய்தி
கேட்டில மெங்க ளுள்ளொன் றுணர்ந்தது கிளத்து கென்றாள்.

(இ-ள்.) ஓட்டிற் பிச்சையெடுத் துண்டு ஊர் பே ரில்லாமல் மயானத்தினிடத்தில் வாழ்ந்து சாம்பலைப் பூசிக் கொடிய யானைத்தோலைப் போர்வையாகக் கொண்ட மூன்று கண்களை யுடைய பித்தனாகிய சிவனுக்குக் கொடுத்த நமது உமையம்மையின் சங்கதிகளை (இதுவரையிலும்) கேட்டேமில்லை. அவள் எங்கிருக்கிறாளென்று நீ அறிந்ததைச் சொல்வாய் என்றாள். எ-று.

ஓடு=பிரமகபாலம். இஃது நான்முகன் இறுமாப் பொழிய வயிரவனாற் கிள்ளப்பெற்றது. தாருகவனத்து முனிபத்தினிகள் கற்பின் மிகுதியால் மமதையுற்றபோது அதனை விலக்குவான் கருதி, பிட்சாடனத் திருவுருவங்கொண்டு சென்றமையின் "ஓட்டினி லையமேற் றுண்டு" என்றும், ஜனனபூமியும் பிதா மாதாக்களு மின்றிச் சுயம்புவாகத் தானுவென்னும் பெயர்க்குரிய இலக்கணமாய் விளங்குபவராதலின் "ஊர்பெய ரின்றி" என்றும், சர்வசம்ஹாரகாலத்தில் எஞ்சிநின்ற பொருளாய், அப்பெருந்தேவர்கள் இறந்த மயானத்தில் நடிப்பவராதலின் "ஈமக்காட்டிடை வதிந்து" என்றும், பவுரிக்கூத் தாடிய பின்னர் வேதன்முதலானோரைச் சூலநுதியிற்கொண்டு தீவிழியால் பஸ்மித்து அவர்கள் கதியடைதலையும் ஏனையோர் தமது மகிமை யுணர்தலையுங் கருதி அச்சாம்பரை யணிதலின் "சாம்பரணிந்து" என்றும், தனக்கஞ்சியோடிய தேவர்களைப்பின்றொடர்ந்து சென்ற யானைவடிவான கயாசுரனை யுரித்துச் சர்மத்தைப் போர்வையாகக்கொள்ளுதலின் "வெங்கரித்தோல் போர்த்த" என்றும், சூரியசோமாக்கினிகளை மூன்று விழிகளாக உடைமையின் "நாட்டமூன் றுடைய பித்தன்" என்றும் கூறினர்.

சேட்டிளம் பரிதி யென்னச் செழுமணிக் குப்பை செம்பொன்
மோட்டிளங் குரும்பை யென்ன முகிண்முலை மகளிர் வெள்ள
மூட்டாக் குண்ட பொற்றூ சுலப்பில கொண்டு தெண்ணீர்
வாட்டமில் வரணை சார்ந்தான் வளங்கெழு மிமய வேந்தே.

(இ-ள்.) சிறப்பமைந்த பாலசூரியன்போன்ற செம்மையாகிய மாணிக்கக் குவியலும், செம்பொன்னும், பூரித்த இளங்குரும்பைபோன்ற அரும்பிய தனங்களையுடைய மாதர்கூட்டமும், செந்நிற மூட்டிய பீதாம்பரங்களும், அளவில்லாதனவாகக் கொண்டு தெளிந்த நீர்வற்றுதலில்லாத வரணாநதியை யடைந்தான் வளப்பமிகுந்த இமோபர்வதராசன். எ-று. (சு)

கன்னியம் புரிசை சூழ்ந்த காசியி லிறந்து ளோர்கள்
பொன்னவிர் கடுக்கை வேணி புனைநதிள மறிமா னேந்தி
யின்னமு தருக்குந் தூய விளமிலாக் கணணி வேய்ந்து
மின்னவிர் விமான மீது மிடைந்தனர் போகக் கண்டான்.

(இ-ள்.) அழியாத அழகிய மதில்சூழ்ந்த காசிநகரத்தில் உயிர்நீங்கினவர்கள் பொன்னைப்போல விளங்குங் கொன்றைமாலையும், சடைமுடியும், இளமைதங்கிய மானுந் தரித்து இனிய அமுதகிரணத்தைச் சிந்துகின்ற பரிசுத்தமாகிய இளம்பிறைச்சந்திரனைச் சிரோமாலையாகச் சூடி ஒளிவீசும் தெய்வவிமானத்தின்மேல் கூட்டங்கொண்டவர்களாகி (சொர்க்கலோகத்திற்கு) போகப்பார்த்தான் பர்வதராஜன். எ-று. (எ)

ஊடலிற் பிரித்த வோர்காழ் முத்தமு முயிரை யன்னார்
கூடலிற் பரிந்து சிந்துங் குருஉச்சுடர் மணியுந் தூற்றி
நீடொளி பரப்பு வான் மீனென விலவு கான்று
சேட்மை மறுகு தோறுங் கிடப்பன தெரியக் கண்டான்.

(இ-ள்.) மாதர் பிணங்குகையில் வெறுத்துவிட்ட ஒப்பற்ற ஆணிமுத்துக்களும், உயிரைப்போன்ற அம்மங்கையர் சையோகவிருப்பிற் களித்துச் சிந்திய நிறம்விளங்கும் மணிகளும் எங்கும் நிறைந்து, பேரொளியைப் பரவச்செய்யும் ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைப்போலச் சந்திரிகையை வீசி, பெருமைதங்கிய தெருக்களிலெல்லாம் விளங்குவனவாயிருத்தலைப் பார்த்தான். எ-று. (அ)

நறைமலர்த் தருக்க ளெல்லாங் கற்பக நதியி னூட
வுறைதரு மடவார் யாரு முருப்பசி முதலா மாதர்
சிறைபடு புனல்க ளெல்லாங் கங்கைநீர் திகழு முன்றிற்
கறவைகள் யாவுந் தேனு வெனவுளங் களிப்பக் கண்டான்.

(இ-ள்.) தேன்சிந்தும் மலர்களையுடைய மரங்களெல்லாங்கற்பகமரங்கள், ஆற்றில் ஸ்னானஞ்செய்யப்புகும் மங்கையரெல்லாம் உருப்பசி முதலிய அமரமாதர்கள், அணைகட்டப்பட்டுள்ள நீர்முழுவதுங் கங்காஜலம், விளங்குகின்ற முற்றத்திலுள்ள கறவைப் பசுக்களெல்லாங் காமதேனுக்களென்று மனக்களிப்படையப் பார்த்தனன் (பர்வதராசன்). எ-று. (கூ)

சிறந்தொளிர் குடிக ளியாவுஞ் சிவகண மாவி நீங்கி
யிறந்துளோர் திங்கள் வேணி யெம்பிரா னுருவு கொள்வர்
மறந்துமிந் நகாக்கு வேத னொப்புமை வகுக்கு மேயென்
றறங்கிடந் தொழுகு சிந்தை யலமா நோக்கி நின்றான்.

(இ-ள்.) மேம்பட்டு விளக்கும் பிரஜைகளெல்லாஞ் சிவகணங்கள். உயிர் நீங்கி இறந்தவர்கள் சந்திரசேகரராகிய எமது சிவபெருமானது சாரூப்பியத்தைப் பெறுவர். இக்காசிநகரத்திற்கு மறந்தாலும் பிரமதேவன் சமானப்பொருள் ஒன்றுசெய்வானோ என்றெண்ணித் தருமங் குடிகொண்டு விளங்குகின்ற மனமயங்கப் பிரமித்துப் பார்த்தான். எ-று. (௩௦)

பாவடிப் பரும யானைப் பகட்டெழின் மார்பன் முன்னர்
மாவடு நோக்கி பங்கன் வளநகர்க் கங்கை யாடிக்
காவடி கொணர்வோன் றன்னைக் கண்ணிணை களிப்ப நோக்கி
யோவறு தவத்தோ யிந்நாட் டரசெவ னுரைத்தி யென்றான்.

(இ-ள்.) பரந்த அடியையும் கல்லணையையும் பொருந்திய ஆண்யானைச் சேனையுடைய அழகிய மார்பினனாகியபர்வதராஜன் தனக்குமுன் மாவடுபோன்ற கண்ணையுடைய பார்வதிபாகராகிய சிவபெருமானது வளப்பந்தங்கிய காசிநகரத்தில் கங்காஸ்நானஞ்செய்து தீர்த்தக்காவடிகொண்டு வரும் ஒருவனை இருகண்களும் களிக்கக்கண்டு, குறைவில்லாத தவத்தையுடையவனே! இந்நாட்டுக்கு அரசன் யாவன்சொல்லுக என்று வினவினான். எ-று. (௩௧)

அமைவரு முலக மெல்லா மமைத்தளித் தழிக்கு மேலோ
னிமயமென் கொடியி னோடு மீண்டர சமைக்குஞ் செய்தி
கமையுடை யிமய வேந்த கருதிலை போலு மென்னத்
தமரவெண் டிரையி னோங்கு முவகையங் கடலுட் டாழ்ந்தான்.

(இ-ள்.) சாந்தகுணமுடைய இமாசலமன்னனே! உன்பெண்ணுதற்கிய எல்லா உலகங்களையுஞ் சிருஷ்டித்து இரட்சித்துச் சங்கரிக்கின்ற மேலோனாகிய சிவபெருமான் இமயமலையிற்றோன்றிய மெல்லிய பூங்கொடிபோன்ற உமாதேவியாருடன் இவ்விடத்தில் அரசுசெய்யும் விஷயத்தை யோசிக்கவில்லைபோலும் என்று கூற, சப்திக்கின்ற வெண்ணிறமாகிய அலைகள் பெற்றுயர்ந்த அழகிய ஆனந்தக்கடலில் மூழ்கினன். எ-று.

உலகமெல்லா மமைத்தளித் தழிக்குமேலோ னென்பதை

"சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு மறைக்கோவுந் தழங்கால் குலமங்கேந்து மம்மானுந் தத்தமது தொழிறலைநின் றாற்றச் செய்தோர் பங்கேந்து பெருமாட்டி விழிகளிப்ப விருமுனிவர் பணித்த போற்ற கொங்கேந்து மணிமன்றுள் குனித்தருளும் பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்" :—என்னுங் காஞ்சிபுராணத்தாலுணர்க. (௩௨)

பன்னகப் பள்ளி மேய பாற்கடல் துயின்று ளோர்க்கு
முன்னமூர்க் தவற்கு மற்றை யமரர்க்கு மறியோ ணாத

முன்னவ னாகி யங்கண் முழுதுல களிக்கு மூர்த்திக்
கென்னையா மளிப்ப தென்ன நாணொடு முள்ளத் தெண்ணி.

(இ-ள்.) க்ஷீராப்தியில் வீற்றிருக்கின்ற (சேஷ) சயனத்தில் யோகநித்திரைசெய்யும் விஷ்ணுமூர்த்திக்கும் அன்னத்தை வாகனமாக உடைய பிரமதேவனுக்கும் மற்றைய தேவர்களுக்கும் அறிதற்கரிய முழுமுதற்கடவுளாகி அழகிய இடமகன்ற உலகமுழுவதையும் ரக்ஷிக்கின்ற கடவுளுக்கு நாம் கொடுப்பதாகிய பொருள் யாதிருக்கின்றது என்று வெட்கத்துடன் மனதில் நினைத்து. எ-று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம். (கங)

கிதியறை திறந்த தென்ன நெடுநிலை மாட மோங்கி
மதிவழிம் பிடறுங் காசி மாநகர் தன்னில் வெய்யோன்
புதையிருட் குப்பை சீத்துப் புகுமுனிப் பொருளி னலோர்
சிதைவறு கடவுட் பைம்பொற் சினகர மியற்று கென்றான்.

(இ-ள்.) பொக்கிஷத்தைத் திறந்தாற்போல் நீண்ட அடுக்குகளையுடைய மாளிகைகள் உயர்ந்து சந்திரனைவழியிடறச்செய்யுஞ் சிறந்த காசிநகரத்தில், சூரியன் மிகுந்த இருட்டொகுதியை யொழித்து உதயமாகுதற்கு முன்னர் (யான் கொண்டுவந்திருக்கும்) இப்பொருளினாலே கெடுதலற்ற பசிய பொன் மயமான ஒரு தேவாலயஞ்செய்யக்கடவாயென்று (விச்சுவகன்மனைநோக்கி) சொல்லினன் (பர்வதராஜன்) எ-று. (கச)

இலைத்தொழில் பூண்செய் திண்டோ ளிமயவேந் துரைக்கு மாற்றந்
தலைக்கொடு கடவுட் டச்ச னியற்றிய கோயில் தன்னில்
நிலைத்தலை விளங்கு பாவ சயிலமென் றிசைநீங்கா
துலப்பறு திருவின் மிக்க விலிங்கமொன் றமைத்து வப்பால்.

(இ-ள்.) அச்சவடிவாகத் தொழில்செய்த ஆபரணமணிந்த வலிய தோள்களையுடைய இமாசலமன்னன் கூறிய வார்த்தையைச் சிரமேற்கொண்டு தேவதச்சனாகிய விச்சுவகன்மன் நிருமித்த திருச்சந்நிதானத்தில், பூமியில் விளங்கும் பாவசயிலமென்றும் கீர்த்திகுறையாமல் கெடுதலற்ற செல்வத்தின் மேம்பாடுள்ள ஓர் சிவலிங்கக்குறியைக் களிப்போடு பிரதிட்டைசெய்து. எ-று.

இது முதல் மூன்றுபாடல்கள் குளகம். (கரு)

மங்குல்வாய் துடைக்குஞ் சோதி மண்டப மொன்று தூய
திங்கள்வெண் மணியிற் செய்து தன்பெய ரதனிற் றீட்டி
யங்கதி ரெழுதல் முன்னர் பஞ்சமா நதத்தி னாடித்
தங்கிய கோயில் முன்னர் மணியெலாங் குவித்துத் தாழா.

(இ-ள்.) மேகங்கள் தவழ்ந்துசெல்லுஞ் சோதிமயமான ஓர் மண்டபத்தைப் பரிசுத்தமான வெள்ளிய சந்திரன்போன்ற முத்துமணிகளாற்செய்து தன் பெயரையதனில் எழுதிவைத்து அழகியசூரியோதய மாகுதற்கு முன்னரே சிறந்த பஞ்சநதத்தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, விளங்குகின்ற ஆலயத்தின் திருமுன்னர் (தான் கொண்டுவந்த) இரத்தினங்களையெல்லாங் குவித்துப் பணிந்து. எ-று.

துளிமுகில் கடல்வாய் கொண்டு சூலுளைக் தலறுஞ் சாரற்
குளிர்பனி தூங்குஞ் செம்பொற் குமிதா மிமய வேந்த
னிளநிலாக் கொழிக்குந் திங்க ளிர்ஞ்சடைப் பெருமான் பங்கில்
வளரிள முலையை யீன்ற மன்னவன் போயி னுனே.

(இ-ள்.) நீர்த்துளிகளைச சிந்தும் மேகங்கள் சமுத்திரத்தில் நீரேற்றுச் சூல்கொண்டு கர்ச்சிக்கின்ற சாரலையுடைய குளிர்ச்சிவாய்ந்த பனியிருந்த செம் பொன்னுலாகிய சிகரங்களையுடைய இமோத்கிரிமன்னனும், இளஞ்சந்திரிகை வீசும்பிறையைக் குளிர்ந்த சடையிற்றரித்த சிவபெருமானது வாமபாகத்துள்ள வளர்கின்ற இளமைவாய்ந்த தனங்களையுடைய உமையம்மையை யீன்றவனுமாகிய பர்வதராஜன தன்னிச்சைவழியே சென்றனன். எ-று. (௧௭)

எண்டிசைப் பரப்பு மேய விருண்முகங் கிழிக்கும் வெய்யோன்
கண்டுயி லெழுப்பத் தோன்றுங் காலையி லிமய வேந்த
னண்டரும் வியப்பச் செய்த வாலய நோக்கிக் குண்டன்
முண்டன னென்போர் செங்கை முகிழ்த்தன ரிறைஞ்சிப் போனுர்.

(இ-ள்.) பரவிய அட்டதிக்குகளிலும் பொருந்திய இருளைவிலக்குஞ் சூரி யன் (உலகத்தாரை) நித்திரையினின் றெழுப்பும்படி யுதிக்கின்ற விடியற்காலத் தில் குண்டன் - முண்டன னென்போர், இமாசலமன்னன் தேவரும் ஆச்சரியப்ப ம்படி யியற்றிய திருக்கோயிலைக் கண்டு, தமது சிவந்த கைகளைக்குவித்து வண ங்கிச் சென்றனர். எ-று. (௧௮)

பாட்டளி துவைப்ப விண்டு பருமுகை வெடித்த மன்றற்
சேட்டிளங் கொன்றை யோடு திங்களங் கண்ணி வேய்ந்த
நாட்டமூன் றுடைய பெம்மான் வரணைமா நதியின் வெய்யோ
னேட்டற நிவந்த செம்பொற் சினகரம் புதிதோன் றுண்டால்.

(இ-ள்.) பண்பாடும் வண்டுகள் மிதித்தலால் முறுக்குடைந்து பெரிய அரு ம்புகள் மலர்ந்த வாசனைதங்கிய சிறந்த இளங்கொன்றை மலருடன் அழகிய சந்தி ரனைச் சிரோமாலையாகத்தரித்த திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானே! மகத் துவம்பொருந்திய வரணையாற்றின் புறத்திலே சூரியன் வழிபடுதும்படி யுயர்ந்த செம்பொன்னுலாகிய திருக்கோயில் ஒன்று புதிதாக விருக்கின்றது. எ-று. (௧௯)

யாதெனை வறித நேற்றே மென்றுபூங் துணர்மங் தாரப்
போதரித் தொழுகு தீத்தப் பொருதிரைக் கங்கை சூழு
மேதகு காசி காப்போர் மேருவிற் குனித்த மேலோன்
பாதமென் கமலஞ் சென்னி சூட்டினர் பணிந்து சொன்னுர்.

(இ-ள்.) அஃதியாவரியற்றியதென்று அறிந்தேமில்லையென்று அழகிய மந் தார மலர்க்கொத்துக்களை அரித்துக்கொண் டொழுகும் மோதுகின்ற அலைகளை யுடைய வெள்ளமாகிய கங்கையாறு சூழ்ந்த சிறப்புற்ற காசிநகரத்தைக் காவல் புரிவோர், மேருமலையை வில்லாகவளைத்த சிவபெருமானது திருவடியாகிய மெல் லிய தாமரைகளைச் சிரசிற்றரித்து வணங்கிக் கூறினர். எ-று. (௨௦)

மூதல கனைத்துந் தானு முன்னவ னறியான் போன்று
மாதொடு விரைவி னெய்தி வான்றொடு குடுமி நெற்றி
மீதுயர் பசும்பொற் றிண்டே ரினிதிழிந் திமய வேந்தன்
கோதற வினிது செய்த மணிமதிற் கோயில் புக்கான்.

(இ-ள்.) பழமையாகிய எல்லாவுலகங்களுந் தானாகவுள்ள முழுதற்கடவுளாகிய சிவபெருமான் தெரியாதவர்போல உமாதேவியாரோடு சீக்கிரமாக எழுந்தருளி ஆகாயமளாவிய சிகரத்தையுடைய மிகவுயர்வாகிய பசும்பொன்னாலியற்றிய வலிய இரதத்தினின் றினிதாகவிழிந்து, இமாசலமன்னன் (சிற்பநூலிற் கூறியவகையே) குற்றமற நன்றாகவியற்றிய அழகிய மதில்சூழ்ந்த திருக்கோயினுட் பிரவேசித்தனர். எ-று. (உக)

புகுதலு நிலவு திங்கள் மணியினா லமைத்த பொற்பார்
திகழொளி யிலிங்க நோக்கிச் செதாரி மழைக்கட் கூந்தன்
முகிழ்முலை யமைத்தார் யாரே மொழிகென வதனிற் றீட்டு
நிகரில்வா சகத்தைச் சுட்டி நின்னுடைத் தாதை யென்றான்.

(இ-ள்) உள்ளேபுகவுஞ் சந்திரகாந்தக் கல்லினாற்செய்த அழகுபொருந்திய ஒளிவிளங்குஞ் சிவலிங்கமூர்த்தத்தைப்பார்த்து, பரந்த அரிகளையுடைய விழியையும் மேகம்போன்ற கூந்தலையும் அரும்பிய முலையையுமுடைய உமாதேவியார், இதனைச் செய்வித்தவர்யாவர்? திருவாய்மலாந்தருளவேண்டுமென்று வினவ, அவ்விடத்திலெழுதப்பட்ட சமானமில்லாத வாசகத்தைக் காண்பித்து உனது பிதாவாகிய இமாசலமன்னன் என்று விடையளித்தனர். எ-று. (உஉ)

என்னலு மகிழ்ச்சி பொங்கி யிறைவவீங் கிருத்தி யார்க்கு
முன்னரி தாய முத்தி யளித்துநா மென்ன முன்னோன்
அன்னகல் லிலிங்கந் தன்னி லமர்ந்தன னியம்பு காதை
தன்னையார் பயின்றோர் கேட்டோர் யாவரு முத்தி சார்வர்.

(இ-ள்.) என்று சிவபிரான் திருவாய்மலர்ந்தருளவுங் களிகூர்ந்து, தலைவனே! நாம் இங்கெழுந்தருளி யிருக்கவேண்டும்; யாவருக்குங் கிடைத்தற்கரிதாகிய மோட்சத்தைக்கொடுப்போம் என்று (உமாதேவியார்) கூற, சிவபெருமான் அத்தகைய சிவலிங்கக்குறியில் வீற்றிருந்தனர். சொல்லிய இச்சரித்திரத்தை வாசித்தோர் கேட்டோர் முதலிய யாவரும் முத்தியுலகத்தை யடைவார்கள். எ-று.

சயிலேசன் முதலான லிலிங்கங்களின் கதையுரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கூகசு

உ

சிவமயம்.

அறுபத்தேழாவது,

# இரத்தினேசன் கதையுரைத்த அத்தியாயம்.

வார்மது துளிக்குங் கொன்றை மலர்புனை யிரத்தி னேசன்
சீர்கெழு காதை தன்னைத் தெளிவுறப் புகல்வ னென்னக்
கார்வயி றுடைய நீண்ட வரைபகக் கதிர்வேல் தொட்ட
போர்கெழு குமரன் கும்ப முனிமகிழ் பூப்பச் சொல்வான்.

(இ-ள்.) தேன்சொரியுங் கொன்றைமலர்மாலை தரித்த இரத்தினேசப்பெருமானது சிறப்புமிகுந்த சரித்திரத்தைத் தெளிவுபொருந்தக் கூறுவேனென்று, மேகத்தின் அகடுகிழியும்படி யுயர்ந்த கிரவுஞ்சகிரி பிளவுபட, ஒளிவாய்ந்த வேற்படையைச் செலுத்திய போர்வலிமிகுந், ஸ்ரீ முருகக்கடவுள் அகத்தியமுனிவர் சந்தோஷமதிகரிக்கும்படி திருவாய்மலர்ந்தருளுவார். எ-று. (க)

பணவர வசைத்த வேணிப் பரமனை யுமையா ளுேக்கி
மணியினு லமைத்த வின்ன விலிங்கத்தின் வரலா றெல்லாந்
துணிவுற வுரைத்தி யென்னத் தொழுதலு மியம்ப லுற்றுன்
பிணிமுறுக் கவிழ்ந்து தீந்தேன் பெய்ம்மலர்க்கொன்றை யோனே.

(இ-ள்.) படமமைந்த சர்ப்பங்களைத்தரித்த சடாபாரத்தையுடைய சிவபெருமானை உமாதேவியார் பார்த்து, இரத்தினங்களாலாகிய இச்சிவலிங்கக் குறியின் விருத்தாந்தமுழுவதும், மனுேநிடமுண்டாகும்படி யோதியருளவேண்டுமென்று கூறிப்பணியவும், திணிந்த முறுக்குகளுடைந்து மதுரமாகிய தேனைச்சொரியுங் கொன்றைமலர்சூடிய சிவபெருமான் (தேவியாருக்கு) கூறத்தொடங்கினர்.

கடைக்குழை யெறிந்து மீண்டு கயலென மிளிரும் வேற்கண்
மடக்கொடி யினக்கு நுந்தை வழங்குவான் கொணர்ந்த செங்கேழ்ச்
சுடர்க்கதிர் மணிகள் யாவு மிவ்வுழிச் சொரிந்தா னன்னேன்
றடுப்பருந் தவத்தா லீண்டோ ரிலிங்கமாய்ச் சமைந்த தாமால்.

(இ-ள்.) முனையினுற் குண்டலங்களைத்தாக்கித் திரும்பி, சேல்மீன்போல விளங்கும் வேலையொத்த கண்ணையுடைய இளமைதங்கிய பூங்கொடி போல்வாளே! உனக்குன்பிதா (ஆகிய பர்வதராஜன்) கொடுக்கும்படி கொண்டுவந்த செக்கிறம் விளங்கும் கிரணங்களையுடைய இரத்தினங்களையெல்லாம் இவ்விடத்திற் பெய்தனன். அக்குவியல் அவனது அழிதலற்ற தவவலிமையால் இங்கே சிவலிங்க வடிவமாய் உண்டாயிற்று. எ-று.

இப்பாடலிலுள்ள சரிதத்தை முன் அத்தியாயத்திற் காண்க. (உ)

உன்னுடைத் தந்தை யுய்த்த பொன்னினு லுலக மீன்ற
மின்னகல் லிலிங்கம் வைகச் சினகர மியற்று கென்ன
வன்னதன் னருட்க ளுேக்க மடைந்துயர் தெய்வத் தச்சன்
பொன்னவிர் குடுமி நெற்றிச் சினகரம் புனைந்தா னன்றே.

(இ-ள்.) எல்லாவுலகங்களையும் பெற்ற உமையே! உனது பிதாசேர்த்திய பொற்குவியலால், இத்தகைய நல்ல சிவலிங்கப்பெருமான் வீற்றிருக்கத் திருக்கோயில் கட்டுகவென்று கட்டளையிட, உயர்வாகிய தெய்வதச்சன் தனது ஞான திருஷ்டியால், பொன் மயமாக விளங்குஞ் சிகரத்தை யுடைய நெற்றிவாய்ந்த கோபுரமுதலியவற்றை நிருமித்து வைத்தனன். எ-று. (ச)

கன்னலிற் கனிந்த தீஞ்சொற் கன்னியிவ் விலிங்க நோக்கில்
முன்னரே யுளதா முந்தை தருமணி மொய்த்த வாற்று
லன்னகன் மணியி னும மடைந்தநித் தலேமி கழ்ந்த
பன்னருங் காதையொன்று கேளெனப் பகர லுற்றுன.

(இ-ள்.) கற்கண்டைப்பார்க்கிலும் மிகுந்த மதுரமாகிய சொல்லையுடைய கன்னியே! யோசித்துப்பார்க்கையில் இவ்விலிங்கமூர்த்தம் பூர்வத்திலேயே யுள்ளதாகும். உனதுதந்தைகொண்டுவந்த நவமணிகள் அதனைச்சூழ்ந்த தன்மையால் அத்தகைய இரத்தினங்களின் பெயரையடைந்தது. இவ்விடத்தில் நடந்த சொல்லற்கரிய சரிதமொன்று கேட்பாயாகவென்று (சிவபெருமான்) திருவாய்மலர்ந்தருளுகின்றனர். எ-று. (ரு)

கவின்குழைத் தெழுது மேனிக் கலாவதி யெனுமோர் கூத்தி
பவங்கெட வளிக்கும் ரத்தினே சுரன்முனம் பரிவி னேடு
முவங்துளங் களிப்ப தாய சிவநிசி யுற்ற காலைச்
சிவந்தடி மலர்க ணேவச் சீர்வழா தாடி னளே.

(இ-ள்.) அழகையே குழைத்துச் சித்திரித்த மேனியையுடைய கலாவதியென்று சொல்லப்படும் ஓர் நடனப்பெண், பிறவியொழியும்படி யனுக்கிரகிக்கும் இரத்தினேசப்பெருமான் திருமுன்னர் ஆசையுடன் விருப்புற்று மனங்களிக்கத் தக்க சிவராத்திரி யுற்றதினத்தில், பாதமாகிய மலர்கள் சிவப்புற்று நோம்படி (பரத நூலிற்கூறிய) சீர்தவறுமல் நடனஞ் செய்தனள். எ-று. (சு)

சிவநிசி தன்னி லெம்மு னுடிய திறத்தால் மற்றப்
பவமது தனிலி ரத்தின வல்லியாம் பழிப்பில் பேராய்க்
கவிரிதழ் முத்த மூரற் கலாவதி யென்னுங் கூத்தி
நவையில்கந் தருவ வேந்த னன்மக ளாயினளே.

(இ-ள்.) முருக்கம்பூவை நிகர்த்த அதரத்தையும் முத்துப்போன்ற தந்தபந்தியையுமுடைய கலாவதி யென்னும் நடனப்பெண் சிவராத்திரிகாலத்தில் எமது சந்நிதானத்தில் நிருத்தஞ்செய்த புண்ணியவசத்தினுல், மறுபிறவியில் இரத்தினவல்லியாகிய இகழ்தலில்லாத நாமமுற்றவளாய்க் குற்றமில்லாத காந்தருவ ராஜாவின் நல்ல புதல்வியாகப் பிறந்தனள். எ-று. (எ)

ஆயதி னரிவை நல்ல வணிகிளர் நரம்பு வீக்குந்
தூயமென் றிவவு நல்யாழ் விஞ்சையின் றுறைகள் போகி
மீயுயர் விசும்பு மண்ணும் வனப்பினை வியந்து போற்றச்
சேயரி நெடுங்கட் செவ்வாய்த் திருந்திழை வளரு நாளில்.

(இ-ள்) ஆனபடியால் இரத்தினவல்லி நல்லழகு விளங்கும் நரம்புகளாற் கட்டிய பரிசுத்தமாகிய மெல்லிய தடவுகின்ற நல்ல வீணைவாசிக்கும் வித்தையின் மார்க்கங்களிற் பழகி, மிகவுமுயர்வாகிய தேவலோகமும் பூலோகமும் அழகைச் சிலாகித்துத் துதிக்க, செவ்வரிபரந்த நீண்ட கண்ணையுஞ் சிவந்த வாயையுந் திருந்திய ஆபரணங்களையுமுடைய அவள் வளர்ந்து வருகையில். எ-று. (அ)

தாமரைத் தடங்கட் செவ்வாய்ச் சந்திர லேகை தீஞ்சொற்
றேமல ரனங்க லேகை சித்திர லேகை யென்னுங்
காமர்தோ ழியர்க ளோடுங் கலைமகள் பாதம் போற்றி
நாமநல் லிஞ்சை யாவும் நலனுற வுணர்ந்தா ளன்றே.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற பரந்த விழியையுஞ் சிவந்த வாயையுமுடைய சந்திரலேகை-மதுரமான சொல்லையுடைய தேன்சிந்தும் மலர்சூடிய அநங்கலேகை-சித்திரலேகையென்று பெயர் சொல்லும் அழகிய தோழிமாருடன் சரஸ்வதியம்மையின் திருவடிகளைப்பணிந்து அஞ்சத்தக்க நல்ல இசைஞானமுழுவதும் நன்மைபொருந்த அறிந்தவளாயினள். எ று. (கூ)

பொற்பினுக் கிணைமற் றில்லாப் பொம்மல்வெம் முலையி னுடன்
முற்பவத் துணர்வு தோன்றத் தோழியர் மூவ ரோடு
மற்பினிற் றினமுங் காசி யடைந்தெமை வழிபட் டல்லால்
விற்கொடும் புருவ வாட்கண் விளங்கிழை நுகர்தல் செய்யாள்.

(இ-ள்.) அழகுக்கு வேறே சமானமில்லாத பூரித்த வலிய முலைகளையுடைய இரத்தினவல்லி, தனது பூர்வசனனத்தின் உணர்ச்சிவரலால், தோழிமார் மூன்றுபேருடன் ஆசையோடு நாடோறுங் காசிக்ஷேத்திரம் வந்து எம்மை வழிபாடுசெய்தலல்லாமல் விற்போல வளைவாகிய புருவத்தையும் வாளாயுதத்தை யொத்த கண்ணையுமுடைய பிரகாசிக்கும் பணிபூண்ட அப்பெண் உண்ணமாட்டாள்.

இன்னணஞ் செல்லு நாளோர் கங்குலி னெறிவே லுண்கட்
பொன்னவிர் கோதை பாட வுளமகிழ் பூத்து நின்பேர்
மன்னவ னொருவ னின்னைக் கனவினில் மணக்கு மன்னோ
னுன்னுடைக் கொழுந னமென் றொருவர மளித்திட் டேமால்.

(இ ள்.) இவ்வாறு நிகழ்ந்துவருங்காலத்தில், எறிகின்ற வேலாயுதம்போன்ற விழிகளையுடைய பொன்போற் பிரகாசிக்கும் மாலைசூடிய அப்பெண் ஒருநாளிரவிற் பாடுகையிற் களிகூர்ந்து உனது பேர்கொண்ட அரசனொருவன் உன்னைச் சொப்பனத்திற் கலப்பான். அவனே உனது நாயகனாகுமென்று ஒருவரத்தை அனுக்கிரகஞ் செய்தோம். எ-று. (கக)

அவ்வரம் பெற்ற தன்மை தோழியர்க் கிசைப்ப வன்னோ
ரெவ்வமில் தவத்துப் பெற்றா யிவ்வா மென்ன வோதிக்
கொவ்வைவாய் முகிழ்மென் கொங்கைக் கொழுமணி வல்லியோடுந்
தெய்வநாண் மலர்க்கொம் பன்னார் தம்முறைச் சேர்ந்தா ரன்றே.

(இ-ள்.) அப்படிப்பட்ட வரத்தைப்பெற்ற தன்மையைத்தோழிமாருக்குச் சொல்ல, இவ்வரத்தைக் கேடில்லாத தவத்தினாற்பெற்றாய் என்றுகூறித் தெய்

வீகம்பொருந்திய அன்றலர்ந்த பூங்கொம்பு நிகர்த்த அம்மங்கையர், கொவ்வைக் கனியைப்போன்ற வாயையும் அரும்பிய மெல்லிய தனத்தையுமுடைய செழித்த இரததினவல்லியுடன் தம்மிடஞ்சென்றனர். எ-று. (௧௨)

ஆயிரங் கதிர்கள் வீசி யலைகடன் முகட்டிற் றோன்றிப்
பாயிருட் பிழம்பு சீக்கும விரிகதிர்ப் பரிதி வேந்தன்
மீயுயர் குடபால் வெற்பின் வீழ்தலும் வேலை சூழ்ந்த
மாயிரு ஞால முண்ண வந்தது மாலைக் கூற்றம்.

(இ-ள்.) ஆயிரங்கிரணங்களை வீசிக்கொண்டு அலைகள்பொருந்திய சமுத்திரத்தின் உச்சியிலுதித்து, பரவிய இருட்டொகுதியை யொழிக்கின்ற மிகுந்த பிரகாசத்தையுடைய சூரியபகவான் மிகவுமுயர்ந்த மேற்றிசை மலையாகிய அஸ்தமயகிரியில் மறையவும், கடல்சூழ்ந்த பெரிய பூமியையெல்லாம் உண்ணும்படி மாலைக்காலமாகிய யமன் வந்தான். எ-று.

மாலைப்பொழுதை யமனுக்குக் கூறினமையின் அவனியற்கைபோல் "மாயிரு ஞாலமுண்ண வந்தது மாலைக்கூற்றம்" என்றார். (௧௩)

பானிலாச் சொரியு மந்தண் பச்சிளங் குழவித் திங்கள்
வானுலாய்த் திரித னோக்கிக் காதல்மீ தூர மாழ்கி
வேனிலான் பகழி பாய மெல்லணைப் புறத்து வீழ்ந்து
கானுலா மலர்மென் கூந்தற் கண்படை பொருந்தி னாளே.

(இ-ள்.) பால்போலும் வெள்ளிய நிலவை வீசுகின்ற அழகிய குளிர்ச்சிவாய்ந்த பசிய இளம்பிறைச் சந்திரன் ஆகாயத்திற் றவழ்ந்து செல்லுதல்கண்டு, ஆசை அதிகரிக்கத் துன்புற்று மன்மதனது புஷ்பபாணங்கள் பாய்தலால் மெல்லிய சயனத்தின்பேரில் விழுந்து, மணம் வீசும் மலர்கள் சூடிய மெல்லிய அளகபாரத்தையுடைய இரத்தினவல்லி (தன்னை மறந்து) நித்திரைசெய்தனள். எ-று.

சந்திரனைக் கண்ட காமுகர் சையோகவிருப்பமுறுவராதலின் "திங்கள் வானுலாய்த் திரிதனோக்கிக் காதல்மீதூர மாழ்கி" என்றும், சையோக விருப்புற்றுத் தனித்துள்ள ஸ்திரீ புருஷர்களை மன்மதன் மலர்க்கணை துன்புறுத்துமாதலின் "வேனிலான் பகழிபாய மெல்லணைப் புறத்து வீழ்ந்து கண்படை பொருந்தினாள்" என்றுங் கூறினார். (௧௪)

சூழ்சுடர்க் கற்றை காலுந் துளங்கொளி யிரத்தின சூடன்
காழிருட் கங்குன் மேய கனவினி லழகு வாய்ந்த
பாழியந் தடந்தோள் வெற்பிற் பணைமுலை யொடுங்கப் புல்லி
யாழினோர் புணர்ப்பி னின்பக் கடலகத் தழுந்தி னாளே.

(இ-ள்.) நெருங்கிய கிரணத்தொகுதியைக் கக்கு மொளி மிகுந்த இரத்தினசூடனென்பவன், இருள் மிகுந்த இரவிலுண்டாகிய சொப்பனத்திலே, அழகுபொருந்திய பூரித்த பெரிய தோளாகியமலையிலே இரு குசங்களு மழுந்தும் வகையாகத் தழுவி, காந்தருவப் புணர்ச்சியால் இன்பசாகரத்தில் மூழ்கினள் (இரத்தினவல்லி.) எ-று.

இரத்தினசூடனென்பவன் நாகலோகத் தரசனொருவன். (௧௫)

கனவெனக் கருதா தின்பக் கடலிடைத் திளைத்து நாணி
நனவென விழித்த லோடும் நள்ளிருட் பிழம்பு நீங்கிப்
பனியிரு விசும்பிற் செங்கேழ்ப் பரிதியஞ் செல்வன் றோன்றப்
புனைசெய்மே கலையாள் காமம் பொறுக்கலாள் புழுங்கி நைந்தாள்.

(இ-ள்.) கனவென்றெண்ணாமல் இன்பக்கடலிற் குளித்து, நாணமுற்றவளாகி நனவுபோல (சாக்கிராவஸ்தை வந்து) விழித்துக்கொள்ளவும், நிறைவாகிய இருட்கூட்டம் விலகிக் குளிர்ச்சி வாய்ந்த பெரிய ஆகாயத்தில் செந்நிறம் பொருந்திய அழகிய சூரியன் உதயமாக, அலங்கரிக்கின்ற மேகலாபரணமணிந்த இரத்தினவல்லி காமவிச்சை பொறாளாகி மனம்வருந்தித் துன்புற்றாள் எ-று.

வேறு.

தோளா மணியனைய தூமுறுவற் செங்கனிவாய்த்
தாளார் கமலமலர்த் தாக்கணங்கு கண்டகனைக்
கேளா மவர்பாற் கிளப்பதற்கு நாணிமிக
வாளா வவரோடுங் காசிநகர் வந்தடைந்தாள்.

(இ-ள்.) தொளையிடாத (முத்து) மணியை நிகர்த்த பரிசுத்தமான பல்வரிசையும், சிவந்த (ஆதொண்டைக்) கனிபோன்ற வாயையுமுடைய அடிவாய்ந்த தாமரைமலரில் வசிக்குந் திருமகள் போல்வாள், தனக்குற்ற சொப்பனத்தை, உறவினராக வுள்ளவரிடத்தில் இயம்புதற்கு வெட்கமுற்று அதிகமாக ஒன்றும் பேசாமல் அவர்களுடன் கூடிக் காசிநகரத்தைவந்து சேர்ந்தனள். எ-று. (கஎ)

திங்கள் வடிம்பிடறு தெய்வச் சினகரத்தின்
மங்கையர்சென் றெய்தி மணியீசன் றாள்போற்றிக்
கங்கை நதிக்கரையிற் கார்வண் டிசைபாடிக்
கொங்குலவும் பூந்தேறல் கூட்டுண்ணுங் காவடைந்தார்.

(இ-ள்.) சந்திரனது விளிம்பு இடறுந் தெய்வீக மமைந்த கோயிலில் அம்மாதர்கள் போய்ச் சேர்ந்து இரத்தினேசப்பெருமானது திருவடிகளைத் துதித்து, கங்காநதியின் கரையருகே கறுத்த வண்டுகள் பண்பாடிக்கொண்டு மகரந்தப் பொடிகள் பொருந்திய மலர்களிலுள்ள தேனை விருந்துண்ணுகின்ற சோலையைச் சேர்ந்தனர். எ-று. (கஅ)

திங்கள் மணியின் விளிம்படுத்த தீரத்துக்
கொங்குலவு வாவியிடைக் கூந்தற் பிடியாட
வெங்கட் கடாங்கவிழ்க்கும் வேழம் புழைக்கரத்தாற்
கங்கைப் புனல்வாரி யாட்டுவது கண்ணுற்றாள்.

(இ-ள்.) சந்திரகாந்தக்கல்லினாலாகிய ஓரத்தை யமைத்த தீரத்தில் மகரந்தந்தங்கிய தீர்த்தத்தில், கழுத்தமயிரையுடைய பெண்யானை மூழ்க, அஞ்சாமையுடைய மதசலஞ் சொரியும் ஆண்யானை தனது துதிக்கையினாற் கங்காசலத்தை மொண்டு மூழ்குவிப்பதைப் பார்த்தாள் (இரத்தினவல்லி). எ-று.

புழைக்கை= துவாரம்பொருந்திய கை. (கக)

கண்டாள் நெருனற் கனவு தனைநினைந்தாள்
விண்டாளுள் ளாவி வெதும்பினுள் வெய்துயிர்த்தாள்
வண்டார் குழல்சோர வாட்டடங்கண் ணீர்வாரத்
தண்டாது நாற்றுந் தளிரணைமேற் சாம்பினாள்.

(இ ள்.) (இரத்தினவல்லி யதனைக்) கண்டு, முன்னாள் (இரவு) நிகழ்ந்த கனவை யெண்ணி வாய்விண்டு, மனமும் உயிரும் வெதும்பி, பெருமூச்சு விட்டு, வண்டுகள் மொய்க்குங் கூந்தல் சோரவும், ஒளிவாய்ந்த பரந்த கண்களில் நீர்சொரியவும், குளிர்ந்த மகரந்தங்கள் சிந்தும் மாந்தளிராகிய சயனத்தின்மேல் சோர்ந்தனள். எ-று.

கண்டாள் - நினைந்தாள் - விண்டாள் - வெதும்பினுள் - உயிர்த்தாள் என்பவற்றை வினையெச்சங்க ளாக்கிக்கொள்க. (௨௦)

கள்ளநோய் செய்யுங் கருந்தடங்கட் காரிகைத
னுள்ளநோய் தேரா ருறுதுயா மென்கொலென
வள்ளவாய்த் தாமரையின் மாமயிலைத் தோழியர்கள்
மெள்ளவே தாங்கி விழிகலுழ்ந்தி தோதுவார்.

(இ ள்.) கள்ளநோய் செய்கின்ற கறுத்த விசாலமான விழியையுடைய இரத்தினவல்லியின் மனவியாதியை யுணராராகி, நேர்ந்த துன்பம்யாதோ வென்று, வட்டில் போன்ற வாயையுடைய தாமரைமலரில்வாழும் இலக்குமிநிகர்த்த மயிலின் சாயலுடையவளை, தோழிமார்கள் மெல்ல வெடுத்துக் கண்ணீர் சிந்தி இவ்வாறு சொல்கின்றனர். எ-று.

வள்ளம்—கிண்ணம்.

ஐயோ கமலத் தணங்கன்னாய் நிற்பிரிந்து
முய்வோ மெனவோ கிடந்தா யெனவோதிக்
கையோடு கைநெரித்துக் காவிநெடுங் கண்ணீர்கண்
மையோ டொழுக வயிறலைத்து மாழ்கினார்.

(இ-ள்.) ஐயோ! தாமரைமலரில் வீற்றிருக்குந் திருமகள்போன்ற இரத்தினவல்லியே! உன்னைப் பிரிந்தும் நாங்கள் உயிர்பிழைப்போமென்று கருதியோ இவ்வா றிருக்கின்றாயென்று கூறி, கையுடன்கையை நெரித்து, நீலோற்பலநிகர்த்த நெடிய கண்ணினின்று நீர்த்துளிகள் (ஆங்கு தீட்டிய) மையோடு ஒழுகும்படி வயிற்றிலடித்துக்கொண்டு துன்புற்றனர் (தோழிகள்). எ-று. (௨௨)

தென்னம் பொதியிற் செழுஞ்சந் தனத்தேய்வை
யின்னிளம்பூந் தென்ற லிழுகமேற் பூசுதலுந்
தன்னை மறந்து தழல்போல் வெய்துயிர்க்குங்
கன்னி முலைமேற் கனல்பிழிந்தா லொத்ததே.

(இ-ள்.) தென்றிசையிலுள்ள அழகிய பொதியமலையிற் றோன்றிய செழுமைதங்கிய சந்தனத்தினது தேய்வை, இனிய பொலிவமைந்த இளந்தென்றல் இழுகும்படி மேலே பூசவும், தன்னை மறந்து தீப்போற் பெருமூச்சு விடுகின்ற இரத்தினவல்லி முலைகளின்பேரில் நெருப்பைப் பிழிந்தாற்போன் றிருந்தது.

சந்தனத்தேய்வை என்பது அரைத்த சந்தனம். தன்னைமறத்தல்=அவசமாதல்; ஸ்மரணை தப்புதல். (உக)

ஆறணிந்த சென்னி யமலன்றன் னைத்தொழுத
பேறிதுவோ வென்று பெருந்தடங்க ணீர்வார
நீறு புனைந்த நிமலன் றனையாட்டு
தேறுகுளிர் வாசநறுந் தெண்ணீர் தெளித்திட்டார்.

(இ-ள்.) கங்கையாற்றைச் சூடிய சிரசை யுடைய நின்மலராகிய சிவபெருமானை வணங்கிய பலன் இதுதானோ வெனக் கூறி, பூர்த்த பெரிய விழிகளில் நீர் சொரியும்படி, திருவெண்ணீறு தரித்த சிவபெருமானை யபிடேகித்த, துன்பந் தீரத்தக்க வாசனை கமழுந் தெளிந்த நல்ல சலத்தைப் புரோக்ஷித்தனர் (தோழிகள்). எ-று. (உச)

தெய்வநறுந் தெண்ணீர்ச் சிறுதிவலை மேற்படலு
மையொழுகு வேற்கண் மயல்நீங்கி வார்காந்தட்
கையின்முக வேர்துடைத்துக் கையற்று நாணினொடுந்
தொய்யின்முலை மூடித் துயிலெழுந்தாள் போலெழுந்தாள்.

(இ-ள்.) தெய்வீக மமைந்த நல்ல அபிடேகசலத்தின் சிறுதுளி மேலே படவும்,மைதீட்டிய வேலாயுதம்போன்றகண்களையுடைய இரத்தினவல்லி மயக்க மொழிந்து நெடிய காந்தள் மலர்போன்ற கைகளால் முகத்திலுள்ள வெயர்வையைத் துடைத்து, செய்தலொன் றற்று வெட்கத்துடன், தொய்யில் எழுதிய தனங்களை (போர்வையால்) மறைத்து நித்திரைசெய் துவிழித்தாளைப்போலெழுந்தனள்.

திவலை=துளி. கையறல்=செயல்நீங்குதல். தொய்யில்=குங்குமக்குழம்பால் மன்மதனது பஞ்சபாணம்போன்று மார்பிலெழுதுங் கோலம். (உரு)

மின்னேர் மருங்குல் விளைந்த துயர்க்கடப்பா
டென்னே மறையா தியம்பு கெனவிரப்பத்
தன்னே ரிலாத தனிரியல்நாண் மீதூரப்
புன்மூரல் கோட்டிக் கனவின் றிறமபுகல்வாள்.

(இ-ள்.) மின்னல் நிகர்த்த இடையையுடையாளே! நிகழ்ந்த துன்பம் விட்டுப் பிரிதல் என்னகாரணம்? ஒளியாமற்சொல்லவேண்டுமென்று (தாதிமார்) வேண்ட, தனக்குச் சமானமில்லாத மாந்தளி ரனைய மேனியுடைய இரத்தினவல்லி நாணம் மிக அதிகரிக்க, புன்சிரிப்பு சிரித்துக் கனவின் தன்மையைச் சொல்லத்தொடங்கினள். எ-று.

கடப்பாடு=விட்டுப்பிரிதல். (உசு)

கங்குலிடை நின்பாற் கனவிற் கலக்குமவன்
கொங்குண் குழலாய் கொழுநனெனக் காகுமெனத்
திங்கள் மவுலி யுரைத்த திறநினைந்து
தங்குமலர்ப் பூவணைமேற் சாய்ந்து துயில்கூர்ந்தேன்.

(இ-ள்.) மலர்த்தாதுக்கள் பொதிந்த கூந்த லுடையாளே! இராப்பொழுதிற் சொப்பனவத்தையில்உன்னைத் தழுவுகின்றவன் உனக்குக் கணவனாவான்

என்று சந்திரசேகரராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய வரத்தின்றன் மையைக் கருதி, வாசனை தங்கிய அலர்ந்த புஷ்பசயனத்திற் படுத்து நித்திரை செய்தேன். எ-று. (உஎ)

பூங்கணைவே ளன்னு னொருவன் பொதியவிழ்ந்து
தேங்கமழும் வாசமலர்ச் சேக்கைதனில் வந்தெய்திப்
பாங்கிமீ ரென்றோள் நலனுண்டு மையவே
நீங்கினை போலேயென் னெஞ்சூடு புக்கொளித்தான.

(இ-ள்.) தோழிகளே! மலர்ப்பாணங்களையேந்திய மன்மதனை நிகர்த்தவ னொருவன், முறுக்குடைந்து தேனசிந்தும் வாசனையுடைய புஷ்பசயனத்தில்வந் தடைந்து, எனதுதோள்களின் சுகத்தை யனுபவித்து மெதுவாய்ப் போய்விட்ட வனைப்போல எனது மனத்துட்புகுந் தொளித்துக் கொண்டான். எ-று.

ஊடு=உள்; இஃது ஏழனுருபுகளு ளொன்று. (உஅ)

மின்னே ரிடையீர் நனவென்று கண்விழித்தேன்
என்னு யகனை யெனதுயிரைக் கண்மணியைப்
பொன்னு ரமளிப் புறந்தேடிக் காணுமற்
கொன்னே தளர்ந்து கொடுந்துயரங் கூர்ந்தனனால்.

(இ-ள்.) மின்னலை யொத்த இடை வாய்ந்த தோழியரே! நனவென்றெ ண்ணிக் கண்ணைத்திறந்தேன்; எனது தலைவனும் என்னுயிரும் என் கண்ணினு ள்ள கருமணியுமாகிய அப்புருஷனைப் பொன்மயமான படுக்கையெல்லாந் தேடிக் காணுதவளாய் வறிதில் மனந்தளர்ந்து கொடுமையாகிய துன்பமிகுந்தேன். எ-று.

சந்தாடு கொம்மைத் தடமுலையீர் கூரிருள்வாய்
வந்தாவி கூட்டுண்ட மால்யானைச் சேவகன்றன்
செந்தா மரையாள் திளைக்கு மணிமார்ப
மந்தோயா னின்னு மணையப் பெறுவேனே.

(இ-ள்.) சந்தனக்குழம்புபூசிய குவிவாகிய பரந்த முலையையுடைய மாத ர்களே! மிகுந்த இருளில் வந்து என்னுயிரை விருந்தாகக் கொண்ட பெரிய யானைபோன்ற சுத்தவீரனது, செந்தாமரையில் வாழும் விஜயலட்சுமி விளங்கும் அழகிய மார்பினை ஐயோ யான் இன்னுமொருதரந் தழுவச் சமயம்பெறுவேனே.

எண்ணார்க் கடந்த வெறுழ்வலிப்பொற் றிண்டோளுந்
தண்ணார் மதிமுகமும் வாளா வொருதமிய
னுண்ணீர்மை கொண்ட வொளிர்தாள வாணகையுங்
கண்ணா வின்னமும்யான் காணப் பெறுவேனே.

(இ-ள்.) சத்துருக்களைச் செயித்த மிகுந்த வலியமைந்த அழகு வாய்ந்த பூரித்த புயங்களும், குளிர்ச்சிபொருந்திய சந்திரன்போன்ற முகமும், வீணாய் ஒரு அடியேனது உள்ளத்தின் தன்மையைக் கிரகித்துக்கொண்ட பிரகாசமமைந்த முத்துமாலைபோன்ற ஒள்ளிய தந்தபந்தியும் என் கண்களிற் புலப்படும்படி யான் இன்னுமொருமுறை பார்க்கப் பெறுவேனே. எ-று. (ஙக)

நந்தா விளக்கனைய நன்னுதலீ ரித்துயரந்
தநதாவி கொண்ட வருளுக்கு தான்கிடக்கக்
கந்தாடு கோபக் கடாயானை மன்னவனற
ணநதா ரகல மறகக வறியேனல்.

(இ-ள்.) (ஒளி) குன்றாத (மாணிக்கத) தீபத்தை யொத்த நல்ல நெற்றியையுடைய தாதியர்களே! இவவகைப்பட்ட துன்பத்தைக்கொடுத்து (பண்டமாற்றாக) என்னுயிரைக் கைக்கொண்ட கிருபாநோக்க மிகுதலால், கட்டுத்தறியை முறிக்கின்ற மதசலஞ் சொரியும் யானையை யுடைய அவ்வரசனது அழகிய மாலை தரித்த மார்பை மறக்க வகையறிந்தேனில்லை. எ-று. (கஉ.)

உள்ளங் கவர்ந்தென் னுளத்தூடு புக்கொளித்த
கள்வன் றனையெனக்குக் காட்டா தொழிவீரேல
துள்ளுங் கயல்போற் றுணைவிழியீ ரிவவுலக
மெள்ளும் படியா னிறந்துபா டெய்துவனல்.

(இ-ள்.) குதிக்கின்ற சேற்கெண்டை நிகாத்த உபய கண்களையுடைய பெண்களே! என் மனதைக் கொள்ளைகொண்டு என் நெஞ்சினுட் புகுந்து மறைந்த வஞ்சகனை என் கண்களுக்குக் காண்பியாமற் போவீராகில், இவ்வுலகத்தா ரிகழும்படி நான் உயிர்நீங்கித் துன்புறுவேன். எ-று.

தன்னெஞ்சினுள் ளிருந்துங் கண்ணுக்குப் புலப்படா னாதலின் 'கள்வன்' என்றாள். (கங)

எவ்வுலகத் துள்ளா னெனினு மிமைப்பளவிற்
செவ்வி மதிமுகத்துச் செம்மல்தனைக் காட்டீரேல்
கவ்வி விழியீர் நடக்குமென தாவியென
மெய்வெதும்பி மாழ்கி விளிகுற்றாள் போல்வீழ்ந்தாள்.

(இ-ள்.) மான்போன்ற விழியையுடைய மாதர்களே! எந்த வுலகத்தில் இருப்பவனானாலும் ஒருக்ஷணநேரத்தில்அழகிய சந்திரன்போன்ற முகத்தையுடைய அவ்வரசனைக் காட்டாமற் போவீராகில் என் னுயிர் போமென்று சொல்லி, உடல் வெதும்பித் துன்புற்று இறந்தாள்போல (மூர்ச்சித்து) விழுந்தாள். எ-று.

வேறு.

சந்திர லேகையென் றுரைக்குந் தையலு
மந்தமில் வனப்புடை யனங்க லேகையுஞ்
செந்திரு நிகரெழிற் சித்திர லேகையு
முய்ந்திவள் பிழைக்குமா றுள்ளத் தெண்ணினர்.

(இ-ள்.) சந்திரலேகை யென்று பெயர் கூறும் பெண்ணும், முடிவில்லாத அழகையுடைய அநங்கலேகையும், செவவையாகிய திருமகள்போன்ற வனப்புடைய சித்திரலேகையும், (ஆகிய தோழியர் மூவரும்) இத் துன்பத்தினின்று இரத்தினவல்லி நீங்கிப் பிழைக்கும் வகையாக மனத்தி லாலோசித்தனர். எ-று.

வனையுமூன் றுலகினுள் மன்னர் யாரையும்
புனையுமென் படத்திடைப் பொறித்துக் காட்டினுற்

கனவிடை வந்துயிர் கவர்ந்து போயினு
னினையனென் றியம்புமென றெழுதல மேயினர்.

(இ-ள்) அழகிய (சுவர்க்க-மத்திய - பாதலமாகிய) திரிலோகங்களிலுள்ள எல்லா அரசனையும், அலங்கரிக்கின்ற மெல்லிய படத்தி லெழுதிக் காண்பித்தால், கனவிலே தோன்றி அவளுயிரைக் கொண்டுபோனவன் இம் மன்னவனென்று இரத்தினவல்லி கூறுவாளென்றுநினைத்துப் படமெழுதுதல் தொடங்கினர்.

இந்திரன் முதலிய வமரர் யாரையும்
புந்தியாற் படமிசைப் பொறித்துக் காட்டினள்
மந்தர வரையென வளர்ந்து வீங்கிய
சந்தணி பூண்முலைச் சந்திர லேகையே.

(இ-ள்.) மந்தரமலை யென்று சொல்லும்படி வளர்ந்து பூரித்த சந்தனக் குழம்புபூசிய ஆபரண மணிந்த முலைகளையுடைய சந்திரலேகை யென்பவள், தேவேந்திரன் முதலாகிய எல்லாத் தேவர்களையுந் தனது புத்தி சூக்ஷ்மத்தாற் படத்தின்மே லெழுதிக் காண்பித்தனள். எ-று. (௬எ)

மலர்தலை யுலகுறை மன்னர் யாரையு
மிலகொளிப் படத்திடை யெழுதிக் காட்டினள்
விலகிவில் லுமிழ்வட மணிந்து வீங்கிய
வலர்முலைத் திருநுத லனங்க லேகையே.

(இ-ள்.) விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற தாழ்வடம்பூண்டு பூரித்து (அடி) பரந்த தனங்களையும் அழகிய முகத்தையு முடைய அநங்கலேகை யென்பவள், இடமகன்ற பூலோகத்தில் வசிக்கும் எல்லா அரசர்களையும் ஒளிவிளங்குகின்ற படத்தில் வரைந்து காண்பித்தனள். எ-று. (௬அ)

அவிரொளிப் பாதலத் தரசர் யாரையு
மிவர்வுறப் படத்திடை யெழுதிக் காட்டினள்
கவிரிதழ்ப் பணைமுலைக் காமர் வேல்விழித்
திவவுயாழ் மருட்டுசொற் சித்திர லேகையே.

(இ-ள்.) முண் முருக்கமலர் போன்ற அதரத்தையும் பணைத்த முலையையும், அழகிய வேல்போன்ற விழியையும், தடவுகின்ற வீணையோசையை மருட்டிய சொல்லையு முடைய சித்திரலேகை யென்னுந் தோழி, ஒளி விளங்கும் பாதல லோகத்தில் வாழும் மன்னர் யாவரையும் ஆசைப் பெருக்க மதிகரிக்கப் படத்திற் சித்திரித்துக் காட்டினள். எ-று. (௬௯)

பழுதறு சந்திர லேகை பண்பினு
லெழுதிய படத்திடை யமரர் யாரையுந்
தொழுதனள் மனநிலை துணிந்தி லாளென
வழுதன ளுயிர்த்தன ளன்றி யென்செய்வாள்.

(இ-ள்.) குற்றமற்ற சந்திரலேகை யென்பவள் அறிவின்றன்மையால் எழுதிய படத்திலுள்ள எல்லாத் தேவர்களையும் (இரத்தினவல்லிதண்டு) வணங்கி

னள். மனநிலைமை துணிந்தாளில்லையென்று அழுதனள். பெருமூச்சு விட்டனள் அவ்வாறல்லாமற் பிறிதென் செய்வாள். எ-று. (சூ0)

அண்ணலம் பொலங்கொடி யனங்க லேகைதா
னுண்ணிதிற் றீட்டிய படத்தை நோக்கினள்
மண்ணுறை வேந்தரென் றறிவு மாழ்கினு
ளெண்ணம்வே றுற்றபின் னியைதல யாவதே.

(இ-ள்.) பெருமைவாய்ந்த அழகிய பொற்கொடிபோன்ற அநங்கலேகை நுட்பமாக வரைந்த படங்களைக்கண்டாள். (இதிலுள்ளவர்கள்) பூலோகத்தில் வசிக்கும் ராஜாக்களென்று மதிமயங்கினள் மனம்வேறுபட்டபிற்பாடு (எவ்வளவு சிறந்திருப்பினும்) எதனிடத்து மனம் பொருந்தும்? (ஒன்றிலும் பொருந்தாது.)

தீதறு சித்திர லேகை தீட்டிய
பாதலத் துறைதரு பாந்தள் வேந்தரு
ளேதமி லழகுடை யிரத்தின சூடனைக்
காதலால் விழிமலர் களிப்ப நோக்கினள்.

(இ-ள்.) குற்றமற்ற சித்திரலேகையென்னுந் தோழி சித்திரித்த பாதலலோகத்தில் வாழுஞ் சர்ப்பராசர்களுள், குற்றமில்லாத (உத்தம) லக்ஷணமுடைய இரத்தின சூடனை, ஆசையுடன் கண்களாகிய மலர்கள் சந்தோஷிக்கும்படி (தான் காணத்தேடியவகையே இரத்தினவல்லி) பார்த்தனள். எ-று. (சூஉ)

அருத்தியிற் கண்ணினு லனங்க லேகைக்குத்
திருத்தகு பூண்முலைச் சித்திர லேகைதான்
வரைத்தவிப் படத்திடை மன்னன் மேலிவள்
கருத்தெனச் சந்திர லேகை காட்டினள்.

(இ-ள்.) ஆசையுடனே கண்குறிப்பால்அநங்கலேகைக்கு, சிறப்புற்ற ஆபரணமணிந்த முலையையுடைய சித்திரலேகையெழுதிய இப்படத்திற் சித்திரித்த நாகராசன்பேரில் இந்த இரத்தினவல்லியின் மனம் விருப்புற்றிருக்கின்றதென்று சந்திரலேகை சைகைசெய்து காண்பித்தனள். எ-று. (சூ௩)

மாணிழை மனநிலை யுணர மங்கையர்
காண்வரு படத்தினைக் கைவி ளீக்கலும்
வேணவா வொடுமுளம் விரக மீக்கொள
நாணினள் முனிந்தனள் நகைத்து மாழ்கினள்.

(இ-ள்.) சிறந்த ஆபரணங்களையணிந்த இரத்தினவல்லியின் மனநிலைமையையறியும்படி அத்தோழிமார், பார்க்கத்தக்க அச்சித்திரப்படத்தைக் கைவிருந்து வாங்கிக்கொள்ளவும், அதிக ஆசையுடன் மனதில் மோகவிகார மதிகரித்தலால் வெட்கமுற்றுக் கோபித்துச் சிரித்துத் துன்புற்றனள். எ-று. (சூச)

கனவிடைக் கண்டவன் வடிவங் கண்டியா
மினையனென் றறிவுற வியற்றுந் தெய்வமே
வினைகுழல் மின்னிடைக் கூட்டு மையலால்
இனைவழி யேயென நிகழ்த்தி னாரோ.

(இ-ள்.) அலங்கரிக்கின்ற கூந்தலையுடையாளே! சொப்பனத்தில் நீபார்த்த மன்னவனது உருவத்தை நாங்கள் கண்டு இப்படிப்பட்டவனென்று அறிந்து கொள்ளும்படி கடவுளே துணைசெய்வர். உன்னிடத்தி லுண்டாகிய மையல் நோயினால் எண்ணமுற்று வருந்தாதே என்று (அத்தாதிமார்) கூறினார்கள். எ-று. ()

**வேறு.**

இன்ன கூறிமட மாதர் காசியின கன்று தம்பதியி னேகலு,மின்னு நக்கபிறை வாளெ யிற்றனழல விட்டு யிர்த்தமுழை வாயினன்,கொன்னு னைப்பகழி காலும் வெஞ்சிலைகு னித்த கையனெதிர் தோன்றினன், றுன்னு போரிவிமை யோரை வென்றுயாசு வாவெ னும்பெயர்ப டைத்துளான்.

(இ-ள்.) இத்தன்மைத்தான தைரியவார்த்தை களைச்சொல்லி இளமைவாய்ந்த அம்மங்கையா (இரத்தினவல்லியுடன) காசிக்ஷேத்திரத்தைவிட்டு, தமது நகரத்தைச்சேரவும், மின்னல் வீசினாற்போன்ற ஒளிவாய்ந்த வக்கிரதந்தமுடையவனும், தீச்சொரியும் மூச்சுவிடுகின்ற குகைபோனற வாயையுடையவனும், (எதிர்ததோரை) கொல்லுகினற கூர்மையாகிய அம்பைச்சொரியுங் கொடிய வில்லைவளைத்த கையையுடையவனுமாகிய நெருங்கிய யுத்தத்தில் தேவரைச்செயித்துச் சுவாவென்னும் பெயர்வகித்தவன் எதிர்ப்பட்டனன. எ-று. (சசு)

மென்று வாளெயிறு தின்று கண்ணினிடை வெவ்வ ழற்சிகைகொளுந்தவோா, குன்று கால்கொடுந டந்த தென்னவரு கொற்ற வாளசுர ரேறனன்,கன்று நெஞ்சினிடை காம வெங்கனல்க னற்ற வண்டுகறி கற்றிடு, மன்ற லுறுகுழல் மாதா நால்வரையும் வவ்வி வானினிடை யேகினன்.

(இ-ள்.) வெள்ளிய பற்களைக்கடித்து, கண்களிற் கொடிய அக்கினிக்கொழுந்து விட்டெரிய ஓர் மலை கால்பெற்று நடந்துவந்தாற்போல வருகின்ற வெற்றிதரும்வாளேந்திய அசுரகுல ஆண்சிங்கமாகிய சுவாவென்பவன், கோபங்கொண்ட மனதிற் கொடிய காமாக்கினிதகித்தலால், வண்டுகள் கறித்தல் கற்றுக்கொள்ளத்தக்க மணம்வீசும் அளகபாரத்தையுடையஅப்பெண்கள் நான்குபேரையும் எடுத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றனன். எ-று. (சஎ)

அன்ன காலையி லலக்க ணெய்திகனி யஞ்சி வஞ்சிரிக ரங்கவார்
மின்னு டங்குவது போன டுங்கியுளம் விமமி விம்மிவிழி நீருகப்
பொன்னெ டுஞ்சிகரி கால்வ ளைத்துயர்பு ரங்க னற்றுமணி யீசனே
கன்னன் மென்குதலை பங்கின் மேவிவளர் களைக ணேயெனவ ரற்றினர்.

(இ-ள்.) அத்தறுவாயில் துன்பமெய்தி மிகவும் பயந்து வஞ்சிக்கொடிபோன்ற அக்கன்னியர் மின்னல் அசைவதுபோல நடுங்கி மனம்விம்மிக்கண்களில் நீர்த்துளி சிந்தும்படி, நெடிய பொன்மலையாகிய மேருபர்வதத்தைக் காலினால் (வளைத்து வில்லாக) வளைத்து உயர்வாகிய திரிபுரங்களையெரித்த இரத்தினேசப்பெருமானே! கற்கண்டுபோன்ற மெல்லிய மழலைச்சொல்லையுடைய பார்வதி தேவியாரைப் பாகத்தில்வைத்து வளர்கின்ற ஆதாரவேயென் றுகூறியழுதனர். எ-று. ()

தஞ்ச மின்றிமணி யீச வென்றுரைசெய் தைய லார்குதலை மெல்லவே
யஞ்செ விப்பட லு மஞ்ச லஞ்சலென் றிரத்ன சூடனவ ணெய்துரு [நீ
வெஞ்ச மர்த்தொழிலின் வல்லை யேலமர்வி ளைத்தி யென்முனமெ திர்ந்து
யுஞ்சு போவதரி தென்று வெற்றிவளை யூதி வாளமரு டற்றினான்.

(இ-ள்.) ஆதரவில்லாமல் இரத்தினேசப்பெருமானே யென்றுகூப்பிட்ட பெண்களின் மதலைச்சொல் மெதுவாகத்தனது அழகிய காதுகளிற்கேட்கவும், அஞ்சாதீர்கள் ! அஞ்சாதீர்கள் ! என்று இரத்தினசூடன் (ஆகிய நாகலோகமன்னன்) அங்கடைந்து, கொடிய போர்த்தொழிலிற் சமர்த்தனாயிருந்தால் சண்டை செய்கவென்றுகூறி, (அசுரனுக்கு) முன்னேசென்றுதடுத்து, நீ பிழைத்துப் போவதருமையென்று வெற்றிச் சங்கத்தைத்தொனித்து வாட்போர் செய்தனன்.

உருத்த வெஞ்சமரி லெய்தி னோருயிர ருந்தி மென்றசையொ ழிந்திடா
தரத்த முண்டொளிரு வெஞ்சி னக்கதைய ழன்று தானவன்வி டுத்தலுந்
தரித்த செங்கைவடி வாள்வி திர்த்தமரா தலைப னிப்பவுரு மேறுபோற்
சிரத்தின்மீ துவருகதையை நூறு துணிசெய் துபோரிடைசெருக்கினான்.

(இ-ள்.) கோபித்த கொடிய யுத்தத்தில் அடைந்தோருயிரையுண்டு மெல்லிய மாமிசமொழியாது செக்கிறமுற்றுப்பிரகாசிக்கும் வெவ்வியசினத்தையுடைய கதாயுதத்தைக்கொதித்து அசுரன் விடவும், (இரத்தினசூடன்) சிவந்த கையிற் பிடித்த கூர்மையாகிய வாளையசைத்துத்தேவர்கள் சிரமசைக்க இடியேறுபோல, தன் சிரசின்பேரில் வருகின்ற கதாயுதத்தை நூறு துண்டுகளாக்கி யுத்தத்தில் இறுமாப்புற்றனன். எ-று. (௫௦)

எறிந்த வெங்கதைசி தைந்து வீழ்தலுமி லங்கு வாளெயிறு தின்றுதன்
மறங்க னிந்தவரி விற்கு ழைத்துமழை போல வெங்கணைவ ழங்கலு
மறங்கொள் சிந்தைபெறு ரத்ன சூடனழ லம்பி னாலவை யறுத்துமே
பிறங்கு கின்றபிறை வாய்நெ டும்பகழி பெய்த வன்றனுயிர் வவ்வினான்.

(இ-ள்.) (சுவாவென்பவன்) விடுத்த கொடிய கதாயுதம் துணிபட்டு விழவும், விளங்குகின்ற ஒளிவாய்ந்த பற்களைக் கடித்து கோபமிகுந்த வரிக்கட்டுகளமைந்த வில்லைவளைத்து மழைசொரிதல்போல் வெவ்விய பாணங்களைப் பிரயோகிக்கவும், கோபங்கொண்ட மனத்தையுடைய இரத்தினசூடன் அக்கினியாஸ்திரத்தினால் அவற்றை யறுத்துத்தள்ளி, விளங்குகின்ற நெடிய அர்த்தசந்திராஸ்திரத்தைச் செலுத்தி அவ்வசுரனது உயிரைக் கொன்றனன். எ-று.

பிறைவாய் நெடும்பகழி - பிறைச்சந்திரன்போன்ற வாயையுடைய நீண்ட அம்பு. (௫௧)

சுவாவெ னுங்கொடிய தான வன்றலைது ணிந்து மண்ணிலிடை வீழ்தலு
முவாம தித்திருமு கத்தி னீருமது பேரு மூருமுரை யாமின்
அவாமி குந்தவுண னும்மை வவ்வியதெ வன்கொ லன்பின்மணி யீசனுந்
தவாத பேரொளியி னும மோதியிடு தன்மை யெங்ஙனென வோதினான்.

(இ-ள்.) சுவாவென்று பெயர்சொல்லுங் கொடுமை வாய்ந்த அசுரனது தலை துணிந்து பூமிபேரில் விழவும், பூரணச்சந்திரன்போன்ற அழகிய முகத்தை

யுடைய பெண்களே! உங்கள் பேரும் வாசஸ்தானமும் (இன்னவையென்று) சொல்லுவீராக. அசுரன் அதிக ஆசைகொண்டு உங்களைத் தூக்கிக்கொண்டு போனது யாதுகாரணமோ? அன்புடனே மணியீசன் என்னு மழியாத ஒளிப்பிழம்பின் திருநாமத்தைக் கூறிய தன்மையும் யாதோ? என்று (இரத்தினருடன் அப் பெண்களை) வினவினன். எ-று. (ருஉ)

கனவில் வந்துறம ணந்தெ ஞருயிர்க வர்ந்த கள்வனுமி வன்கொலா
நனவில் வந்தெமையெ டுத்த வல்லசுர னுமை றப்பொருது கருணையாற்
றுனைவில் நம்முயிர ளித்த கோனுமிவ னென்று தோழியரு ணர்ந்திட
வனைக ருங்குழல்ம டந்தை கண்கொடுவி ளம்ப மற்றவர்வி ளம்புவார்.

(இ-ள்.) என்கனவிற்பொருந்தும்படி வந்துகூடி அருமையாகிய உயிரைக் கொள்ளைகொண்ட கள்வனு மிவனாகும், சாக்கிராவத்தையில் வந்து நம்மைத் தூக்கிய வலிய அசுரனது பயமொழியும்படி சண்டைசெய்து கிருபையோடு விரைவில் நமது உயிரைக் காத்த தலைவனும் இவன்தானென்று தோழிமா ரறியும்படி, அலங்கரிக்கின்ற கருமையாகிய கூந்தலையுடைய இரத்தினவல்லி கண்ணினாற் குறிசெய்து சொல்ல அத்தோழிமார் மூவருஞ் சொல்லத்தொடங்கினர். எ-று. (ருங)

மென்க ருப்புவரி வில்லு மைங்கணையும் விட்டு வந்தவெழில் வேனிலாய்
மன்பெ ருங்கருணை யாழி ஞேரில்வசு பூதி யென்றுரைசெய் மன்னவ
னின்பு றும்புதல்வி யிவட னுமமுமி ரத்தின வல்லியிவ ளுக்கியா
மன்பி னேவல்புரி தோழி மாரெனவ னங்க லேகையுரை யாடினள்.

(இ-ள்.) வரிக்கட்டுகளையுடைய மெல்லியகரும்புவில்லையும் ஐந்து (புஷ்ப) பாணங்களையும் ஒழித்துத் தோன்றிய அழகிய மன்மதனே! நிலைபெற்ற பெரிய கிருபையுடைய காந்தர்வகுலத்திலுதித்த வசுபூதியென்று சொல்லப்படும் அரசனது ஆசைபொருந்திய புத்திரியாகும் இப்பெண். இவள்பெயரும் இரத்தினவல்லியாகும்; யாங்கள் இக் கன்னிகைக்கு ஆசையோடு ஏவற்பணிகளைச் செய்யும் தோழிகள் என்று அநங்கலேகையென்னுந் தாதி பேசினள். எ-று.

வேனிலான்=வேனிற்காலத்திற் குரியன்; அதாவது அக்காலத்திலே தனது விஜயத்தை மிகுதியாகக் காட்டுவோன். (ருச)

தந்தை யேவல்கொடு காசி யீசனடி தாழு நாளிலொரு நாளிவட்
கெந்தை யுன்கனவில் நின்பெ யர்க்குரிசி லெய்து மற்றையவ னின்புறுஞ்
சிந்தை கூர்கொழுந னுகு மென்றுயர் திருந்து நல்வரம ளித்ததும்
வந்து கங்குலின்ம ணந்த வாறுமிவள் மம்மர் நோய்மிக வுழந்ததும்.

(இ-ள்.) பிதாவாகிய வசுபூதியின் உத்திரவைக்கொண்டு காசியில் வீற்றிருக்கும் இரத்தினேசப்பெருமானது திருவடிகளை வணங்கிவருங்காலத்தில், ஒருநாள் இவளுக்கு உன் சொப்பனத்தில் உன் பெயருடைய மன்னவன் வருவான். அவனே இன்பந் தங்கிய ஆசைமிகுந்த கணவனாகுமென்று எந்தையாகிய சிவபெருமான் சிறந்த நல்ல வரத்தை யனுக்கிரகித்ததும், (அவ்வாறே) வந்து இரவிற் கலந்தன்மையும் (அதுமுதல்) இக்கன்னிகைகாமநோயால்அதிகத்துன்புற்றதும்.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (ருரு)

மண்ணில் விண்ணில்விரி பாத லத்திலுறை மன்ன ரியாரையும்வ
ரைந்தியாங், கண்வ ழுக்குபட மன்பி னேடுமெதிர் காட்ட நாகருல கத்
தில்வா, ழுண்ணல் மேல்மனம்வி ழைந்த தும்பதியி னடையு மேல்வைத
னி லசுரர்கோ, னுண்ண டுங்குறவெ டுத்த வாறுமொளிர் சித்திர லேகை
யுரை யாடினுள்.

(இ-ள்.) பூலோகத்திலுந் தேவலோகத்திலும் பரந்த பாதலலோகத்திலும் வசிக்கின்ற எல்லா அரசர்களையும் நாங்களெழுதி, கண்கூசத்தக்க சித்திரப்படங்களாக ஆசையோடு எதிர்காட்டலால், நாகலோகத்தில் வாழ்கின்ற அரசராகிய உம்மிடத்தில் விருப்புற்றதும், எங்கள் நகரத்தை யடையுங்காலத்தில் இராக்கதத் தலைவன் (நாங்கள்) மனநடுங்கும்படி எடுத்த வகையும் (இவையென்று) சித்திரலேகையென்னுந் தோழி கூறினள். எ-று. (௫௬)

செயிர்வி ளைத்தவசு ரேச னுருயிர்செ குத்த லக்கணுறு மெங்கட
முயிர ளித்ததிறல் மன்ன நின்குலமு மூரு நின்பெயரு மோதென
வயிர்ப டைத்தமதன் வாளி யாலுளம யங்கி மத்தினெறி பட்டவெண்
டயிரொ னச்சுழலு நெஞ்சி னேடுமுயர் சந்திர லேகையுரை யாடினுள்.

(இ-ள்.) துன்பத்தை யுண்டுசெய்த அசுரர் தலைவனது அரிய உயிரைக் கொன்று, பிரயாசைப்பட்டுக்கொண்டிருந்த எங்களது பிராணனை ரக்ஷித்த பராக்கிரமமுடைய மன்னவனே! உன்னுடைய குடிப்பிறப்பும் ஊரும் உனது பெயருஞ் சொல்லவேண்டுமென்று, மன்மதனது கூர்மைதங்கிய வலிய பாணத்தினுல் மனமயக்குற்று, மத்தினுலெறியப்பட்ட வெண்மையாகிய தயிரைப்போலச் சுழல்கின்ற மனத்தோடு உயர்வாகிய சந்திரலேகையென்பவள் மொழிந்தனள். எ-று.

வேறு.

பின்னேதுவ னவைகண்கவர் பிறைவாணுதல் மடவீர்
பன்மாமலர் களுலுந்தட மிதனிற்படி குற்றால்
முன்னேதிய ரத்னேசனு முன்றோன்றுவ னென்ன
நன்மாமணி யனையாருமந் நளிர்வாவிப டிந்தார்.

(இ-ள்.) (கண்டோர்) கண்ணெளியைக் கவர்கின்ற பிறைச்சந்திரன்போன்ற ஒளிதங்கிய நெற்றியையுடைய மாதர்களே! நீங்கள் கேட்டவற்றைப் பின் சொல்லுகிறேன்! சிறந்த பலமலர்கள் பிரகாசிக்கும் இத்தடாகத்தில் மூழ்கினுல், முன்னே கூறிய இரத்தினேசனும் உங்கள்முன்னே காணப்படுவானென்று கூற, நல்ல மாணிக்கத்தையொத்த அம்மங்கையரும், அக்குளிர்ச்சிதங்கிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தனர். எ-று. (௫௮)

வண்டோவிடு குழல்மங்கையர் வாவிப்புனல் மூழ்கித்
தண்டாமரை யுறைவாளென வெழுபோழ்துயர் தடனு
மெண்டோளுடை ரத்னேசனி லங்குஞ்சின கரமுங்
கண்டார்துனி முகில்கண்ணுறு மயிலாமெனக் களித்தார்.

(இ-ள்.) வண்டுகள் ரீங்காரஞ்செய்யும் அளகபாரத்தையுடைய பெண்கள் தடாகநீரிற் குளித்து, குளிர்ந்த தாமரைப்பூவில் வாழுந் திருமகள்போல எழுகின்ற

காலத்தில் உயர்ந்த தீர்த்தமும், எட்டுத் திருப்புயங்களையுடைய இரத்திநேசப் பெருமான் வீற்றிருக்குந் திருக்கோயிலுங் கண்டவர்களாகி, நீர்துளிக்கும் மேகத்தைப்பார்த்த மயிலைப்போலச் சந்தோஷித்தனர். எ-று. (ருகூ)

எங்குற்றன மெங்கெய்தின மென்றென்றுவி யப்புற்
றங்கட்டிரு வன்னாரினி துறையும்மமை தியினிற்
றிங்கட்டிரு நுதலாருறு செயனாரத னறைய
வங்கக்கட னிகர்கேள்வியன் வசுபூதிய டைந்தான்.

(இ-ள்.) எங்கேபோனோம் எங்கேவந்தோம் என்று கருதி ஆச்சரியமடைந்து அவ்விடத்தில் இலக்குமிபோன்ற அம்மாதர்கள் இனிதாக விருக்குஞ் சமயத்தில், சந்திரன்போன்ற அழகிய முகத்தையுடைய அப் பெண்களுள்ள நிலைமையை நாரதமுனிவர் தெரிவிக்கலால், கப்பல்தங்கிய கடல்போல (மிகுந்த நூற்) கேள்வியை யுடைய வசுபூதியென்பவன் அங்கு வந்தனன். எ-று.

வசுபூதி-இரத்தினவல்லியின்பிதா. (சுo)

வந்தெய்திய தன்றாதைம லர்ப்பாதம்வ ணங்கி
யந்தாமரை மயிலன்னவ ளடிநோக்கின ணிற்பக்
கொந்தார்சடை யிரத்னேசனி னருளாலலர் கோதா
யுய்ந்தாய்கொலெ னக்கைகொடு புறநீவியு வந்தான்.

(இ-ள்.) வந்தடைந்த தனது பிதாவின் மலர்போன்ற பாதங்களைப் பணிந்து அழகிய தாமரையில் வசிக்கும் மயிலின் சாயலையுடைய திருமகள் போன்ற இரத்தினவல்லி தன்அடியைப் பார்த்துக்கொண்டிருக்க, பூங்கொத்துகள் பொருந்திய சடையையுடைய இரத்தினேசப்பெருமானது இனிய திருவருளால் உஜ்ஜீவித்தனையா அலர்ந்தமலர்மாலையணிந்த மகளே ! என்று, கையால் முதுகைத்தடவிக் களித்தான் (வசுபூதி.) எ-று.

"மக்கள்மெய் தீண்ட லுடற்கின்பம் மற்றவர் - சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு" என்றார் நாயனாராதலின் "கைகொடு புறநீவி யுவந்தான்"—என்றார்.

மடமானுயிர் நிகர்தோழியர் வசுபூதிமுன் னெய்தி
யடல்கூர்விடை ரத்னேசனின் னருளாலிருள் கங்குற்
கிடைசேர்கன வினில்வந்தது மசுரேசனை யெறிவெம்
படையாலுயிர் கவர்குற்றது மிவனுமெனப் பகர்ந்தார்.

(இ-ள்.) இளமைவாய்ந்த மானையும் உயிரையு மொத்த தோழிமார் மூவரும் வசுபூதிராஜனுக்கு முன்னடைந்து, வலிமிகுந்த இடபவாகனராகிய இரத்தினேசப்பெருமானது இனிய திருவருளால் இருள்மயமான இரவில் நிகழ்ந்த கனவில் வந்ததும், (தம்மை வழியிற் றூக்கிய) அசுரேசனை யெறிகின்ற கொடிய அஸ்திரத்தினால் உயிரைக்கொன்றதும் இப்புருடன்தானென்று சொல்லினர். எ-று.

பேராண்மையு மழகுஞ்சிலை வேள்பெண்மைய வாவுந்
தாராரிணி தோளுந்திகழ் தடமார்பமு நோக்கி

யாராமிவ னெனுமாசைகொ டன்னேனுழை யெய்தி
யூர்பேர்குல முறைசொல்கென வசுபூதியு ரைத்தான்.

(இ-ள்.) மிகுந்த ஆற்றலும், லாவண்யமும், (கருப்பு)வில்லேந்திய மன்மதனும் பெண்தன்மையை யிச்சிக்கத்தக்க மாலையணிந்த வலிய புயங்களும், விளங்குகின்ற விசாலமாகிய மார்பையுங் கண்டு, இவன் யாரோவென்று அன்புகொண்டு அந்த இரத்தினசூடனிடஞ்சென்று, உனது ஊர்-பேர்-குலம்- வரன்முறை (முதலியவற்றைச்) சொல்லவேண்டுமெனறு வசுபூதி யென்பவன் கேட்டனன்.

நின்னுமதி கர்க்கும்பெயர் நிலவுபபிறை நுதலோர்
மின்னுள்வரு மொருதானவ னவளைககொடு விரைவிற்
றன்மாநகர் புகுமற்றவன் மடியத்தலை துணியா
பொன்னாரணி பிதிரசிந்திள முலையாளி புரபபாய்.

(இ-ள்) உனது பெயரைப்போன்ற பெயர்வகித்த, சந்திரிகைவீசும் இளம்பிறைபோன்ற நெற்றியை யுடைய மின்னலைநிகர்த்த ஓர் பெண் வருவாள்; அவளை (வழியிலே) ஓரசுரன் எடுத்துக்கொண்டு துரிதமாகத் தனது பெரியநகரத்திற்குச் செல்லுவான்; அவனிறக்கும்படி சிரத்தைச் சேதித்துப் பொன்னிறமாகிய அழகிய தேமல் படர்ந்த இளமை வாய்ந்த தனங்களையுடைய அப்பெண்ணினுயிரை ரக்ஷிப்பாய். எ-று.

இதுமுத விரண்டுபாடல்கள் ஒருதொடர். (௬௪)

அவணின்குல மனையாமென வவிர்செஞ்சடை முக்கட்
குவிமென்முலை பங்கன்பகர் கனவின்பொருள் குறியா
விவாவெள்விடை ரத்னேசனை நாடோறுமி றைஞ்சுந்
தவமெய்ப்பய னெய்திற்றென வன்போடிவை சாற்றும்.

(இ-ள்.) அவள் உனது குலபத்தினியாவாளென்று பிரகாசிக்கின்ற செவவிய சடையையும் திரிநேத்திரங்களையும், குவிவாகிய மெல்லிய தனங்க ளமைந்த பார்ப்பதிபாகத்தையுமுடைய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய சொப்பனப் பலனையுணர்த்தி, தாவள்யமாகிய இடபத்தை ஆரோகணிக்கும் இரத்தினேசப் பெருமானைத் தினந்தோறும் பணியுந் தவத்தின் உண்மையாகிய பலன்வந்தடைந்தது என்று ஆசையுடன் இவ்வாறு சொல்கின்றனன். எ-று. (௬௫)

வேறு.

மணியறை திறந்த தன்ன பாதல நகரில் வைகும்
பணியர வரசிற் சங்க சூடனும் பழிப்பில் வேந்தற்
கிணையுறு குமரன் யான்மற் றென்பெய ரிரத்ன சூட
னணிகொள்கத் தருவ தேயத் தடல்கெழு மரச வென்றான்.

(இ-ள்.) மாணிக்கப் பேழையைத் திறந்தாற்போன்ற பாதாளவுலகத்தில் வாழ்கின்ற படமமைந்த நாகராசர்களிற் சங்கசூடனாகிய பழித்தலில்லாத மன்னவனுக்குச் சமானமற்றபுதல்வன் யான்; எனது பெயரோ இரத்தினசூடன்; அழகு

பொருந்திய காந்தருவதேசத்துப்பராக்கிரமமிகுந்தஅரசனே! (இஃதென்வரலாறு) என்று கூறினன், எ-று.

சங்கசூடன முன்னொருகாலத்திற் காசிக்ஷேத்திரத்திலே வீரேசப்பெருமான் திருச்சந்நிதானத்திற் சென்று, தனது சிரோமாணிக்கத்தால் அபிடேகஞ் செய்து பெரும்பதவியடைந்தானென்றோர் சரித முளது. அதனை இந்நூல் சிவசர்மா தெய்வலோகங்கொண்ட அததியாயம்.

தின்னரமா தொருத்திதன துயிர்க்குயிரா யினிதுறையுங் கேளவ னோடு
மின்னிசையாழ் பயின்றீசன் சரணடைந்தாள் "எழிறசங்க சூட னென்னும்
பன்னகவேந் தொளிகெழுதன் பணுமணிநீ ராஞ்சனஞ்செய் பரிசு தனாற்
றுன்னரிதா யணித்தாகும பேரின்பக் கடல்படிந்து துளைந்தா னன்றே"— என்ப தனு னுணர்க. (கூகூ)

அணங்கரா வணிகொள் பூங்கச் சசைத்தரத் னேசன் முன்னர்
மணங்கமழ் குழலி ரத்ந வல்லியை மகிழ்வி னோடு
கிணங்கொள்வே லிரத்ன சூடற் குதகமோ டளித்தா னோரா
ருணங்கிநின் றிரங்கு முனறி லுயாவசு பூதி தானே.

(இ-ள்.) அச்சந்தரும் நாகத்தை அழகுதங்கிய அரைக்கச்சாகக் கட்டிய இரத்தினேசப்பெருமான் திருமுன்னர், வாசனைவீசுங் கூந்தலையுடைய இரத்தின வல்லியென்னுந் தனது குமாரத்தியை ஆசையுடன், மாமிசந்தங்கிய வேலேந்திய இரத்தினசூடனுக்கு நீர்விட்டுத் தாரைவார்த்துக்கொடுத்தான். பகைஞர்கள் நடுங்கியிருந்து வணங்குகின்ற முற்றத்தையுடைய உயர்வாகிய வசுபூதி யென்போன்.

முருகுவாய் மடுத்துண் டாடி மூசிவண் டரற்றும் பைந்தார்
மருகனைப் புதல்வி யோடும வான்றொடு குடுமி நெற்றிப்
பருமணிக் கதிர்கள் கான்று பாயிருட் பிழம்பு சீக்குந்
திருவநீண் மாட மோங்கு தன்னகர்க் கொண்டு சேர்ந்தான்.

(இ-ள்.) வண்டுகள் தேன்குடித்து வெறியாடி மொய்த்து ரீங்காரஞ்செய்யும் பசிய மலர்மாலை சூடிய மருகனாகிய இரத்தினசூடனை, புத்திரியாகிய இரத்தினவல்லியுடன் ஆகாயமளாவிய சிகரத்தையுடைய, பருத்த நவமணிகள் கிரணங்களை வீசி, பரவிய இருட்டொகுதியை விலக்குகின்ற செல்வமோங்கிய மாளிகைகள் விளங்குந் தனது நகரத்துக்குக் கொண்டுபோயினன (வசுபூதி). எ று. (கூஅ)

குளிர்மதி பொருவு சங்கங் குடவயி றலறி யார்ப்ப
களிர்கட லனைய கேள்விக் கணிதர்கள் கமைத்த நாளி
லளிபடு மலர்க்கோ தைக்கு நம்பிக்கு மழல்சான் றாகக்
களிமகிழ் தூங்க வின்பக் கடிமணம் புரிவித் தானே.

(இ-ள்.) குளிர்ச்சிவாய்ந்த சந்திரன்போன்ற வெள்ளிய சங்குகள், குடம்போன்ற வயிறலைந்து முழங்கவும், ஒலிக்கின்ற சமுத்திரம்போன்ற நூற்கேள்வியையுடைய சோதிடர் நன்றாக நியமித்த முகூர்த்தத்தில், வண்டுகள்மொய்க்கும்

கூந்தலையுடைய இரததினவல்லிக்கும் இரத்தினசூடனுக்கும் அக்கினிசாட்சியா ய்ச் சந்தோஷமதிகரிக்க இன்பந்தங்கிய மணவினையைசசெய்வித்தனன் (வசுபூதி).

திதி-வாரம்-யோகம்-நக்ஷத்திரம்-கரணம் ஆகிய பஞ்சாங்கத்தையும் கணி ப்போராதலின் சோதிடர் கணிகர் எனப்பட்டனர். நம்பி=புருடரிற் சிறந்தவன. கடிமணம்=காவலையுடைய விவாகம். (௬௯)

திருநுத லநங்க லேகை சித்திர லேகை யோரேழ்
தரைபுகழ் வனப்பின் மிக்க சந்திர லேகை யெனனு
மரிவையர் தந்தை மார்தம் மருளினால் ரத்ன சூடற்
குரியவிற கிழமை பூண்டாங் குயிரென வொழுகு நாளில்

(இ-ள்.) அழகிய முகத்தையுடைய அநங்கலேகை - சிதகிரலேகை - ஒப்பற்ற சப்தலோகங்களும் புகழ்கின்ற அழகுமிகுந்த சந்திரலேகையென்று பெ யருற்ற மாதர்கள் (தஙக டங்களது) பிதாக்களின் விருப்பத்தின்படி இரத்தின சூடனுக்குச் சுதந்தரமுடைய மனைவிமாராகி உயிர்போல வாழ்ந்திருக்குங்காலத் தில். எ-று.

இற்கிழமை=மனைக்குரிமை. (௭0)

மீயுயர் வெள்ளி வெற்பின் விஞ்சையர் வேந்தன் செங்கேழ்ப
பாயொளிப பரிதி மாாபின் மருகற்குப் பரிவி னோடுங்
காய்சினக் களிறு திண்டேர் கலினவாம் புரவி வெள்ள
மாயிர கோடி செமபொன் கொள்கென வருளி னானே.

(இ-ள்.) மிக வுயர்ந்த வெள்ளிமலையாகிய கயிலாயத்தின் வித்தியாதர மன்னன், செந்நிறந் தஙகிய பரவிய பிரகாசம்பொருந்திய சூரியனபோன்ற மார் பினையுடைய மருமகனாகிய இரத்தினசூடனுக்கு, கொல்லத்தக்க கோபம்பொ ருந்திய யானையும் வலிய ரதங்களும் தாவிச்செல்லுங் கடிவாளமபூண்ட குதிரைத் தொகுதியும், ஆயிரஙகோடி செம்பொன்னுங் கொள்ளவேண்டுமென்று அன்புட னே (வரிசையாக) கொடுத்தனன். எ-று. (௭௧)

கந்தடு புழைக்கை நால்வாய்க் காய்சினக் களிறு போல்வான்
சிந்துரத் திலத நெற்றித் தெரிவையர் நாலவ ரோடு
மந்திரன் பகலென் றோரா தாய்கதிர்க் கற்றை காலு
மிந்திர பவன மன்ன தன்னகாக் கேகி னானே.

(இ-ள்.) கட்டுத்தறியை முறிக்கின்ற துதிக்கை பொருந்திய தொங்குகி ன்ற வாயையுடைய கொல்லத்தக்க கோபமமைந்த யானையொத்த இரத்தினசூ டன் சிந்துரப்பொட்டணிந்த நெற்றியையுடைய மங்கையர் நால்வருடனே, இர வென்றும் பகலென்றுந் தெரியாமல் ஆராய்கின்ற கிரணததொகுதியை வீசும் இந்திரபவனத்தை நிகாத்த தனது (பாதலலோக) நகரத்தை யடைந்தனன்.

இந்திரபவனம்=தேவலோகம். (௭௨)

ஏர்குடி யிருந்த மாத ரிளமுலைப் போக மாந்தி
யார்வமோ டளப்பில் கால மளப்பரும் போகந் துய்த்து

வாரற கிமிர்ந்து வீங்கு வனமுலை மகளி ரோடுங்
கார்மிடற் றெந்தை செம்பொற் கழலிணை யெய்தி ஞனே.

(இ-ள்.) வனப்புவிளங்கும் பெண்கள் (நால்வரது) இளந் தனங்களின் சுகத்தை யனுபவித்து, ஆசையுடனே எண்ணில்லாத காலம் விசேடமாகிய இஷ்டபோகங்களை நுகர்ந்து, கச்சிறும்படி அண்ணாந்து பூரித்த அழகிய குசங்கள் வாய்ந்த மனைவிமாருடனே, நீலகண்டத்தையுடைய எமது தந்தையாகிய சிவபெருமானது செம்பொன்னாலாகிய வீரக்கழலணிந்த உபயபாதங்களிற் கலந்தனன் (இரத்தினருடன்). எ-று. (எஙு)

திவள்மதிக் குழவி வேய்ந்த சென்னிரத் னேசன் காதை
துவரிதழ் வளைக்கை நலலாய் சொற்றன நீயு முன்னைப்
பவமதிற் றக்க ணீயவ் விலிங்கமொன் றமைத்தாய் பாங்கி
னவிரொளி யம்பி கேச னம்பிகை யாயி னேமால்.

(இ-ள்.) பவளம்போன்ற அதரத்தையும் வளையை யணிந்த கையையுமுடைய உமையே! விளங்குகின்ற இளம்பிறைச்சந்திரனைச்சூடிய சிரசை யுடைய இரத்தினேசப்பெருமானது சரித்திரத்தைச் சொல்லினோம். நீயும் முன் ஜனனத்தில் தாக்ஷாயணி. அப்பெயராலோர் சிவலிங்கம் பிரதிட்டை செய்தனை; அதன் பக்கத்தில் (நாமிருவரும்) ஒளிவீசும் அம்பிகேசன் அம்பிகை எனப் பெயர்கொண்டு விளங்கினோம். எ-று.

தக்கன்மகள் தாக்ஷாயணி. இது தத்திதாந்தநாமம். (எச)

வரைமுகம் புழுங்க வைவேல் மாட்டிய வயிரத் திண்டோள்
முருகனுங் குளனிக் காதை முறையினிற் பயின்றோர் கேட்டோ
ருரைபகர்ந் திடுவோ ரன்பி னெழுதினோ ருவப்போர் யாரும்
புரவிநன் மகநூ றுற்றும் புங்கவன் போல்வா ரென்றான்.

(இ-ள்.) (கிரவுஞ்ச) பர்வதத்தின் பொலிவு குன்றும்படி கூர்மையாகிய வேலாயுதத்தைப் பிரயோகித்த வலிதங்கிய புயங்களையுடைய முருகன் ஆங் கிருக்கின்றனன். இச்சரித்திரத்தைக்கிரமமாகப்படித்தவர்களும் கேட்டவர்களும் சொன்னவர்களும் ஆசைகொண்டு ஏட்டி லெழுதினவர்களும் சந்தோஷித்தவர்களும் (முதலிய) எல்லோரும், நன்மையைத் தரும் நூறு அஸ்வமேதயாகங்கள் செய்த தேவேந்திரனைப்போல வாழ்வார்களென்று (சிவபெருமான்உமாதேவியாருக்குத்) திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (எடு)

இரத்தினேசன் கதையுரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஎகக.

உ

சிவமயம்.

அறுபத்தெட்டாவது,

## கிருத்திவாகேசன் றோன்றிய அத்தியாயம்.

சிறையளி குடைந்து பாடும் பூங்குழற் செல்வி யோடு
மிறைவன்வார் கங்கை வேணி யிலங்குரத் னேசன் காதை
யறைதரு மமைதி தன்னி லரியயன் முதல தேவர்
முறையிடு மோதை கேட்டு முழுமுதல் மூரல் பூத்தான்.

(இ-ள்.) சிறகுகளையுடைய வண்டுகள் கிண்டி ரீங்காரஞ் செய்யும் பூமாலை யணிந்த கூந்தலையுடைய உமாதேவியாருடன் சிவபெருமான், நெடிய கங்கை யாற்றைத் தரித்த சடைவிளங்கும் இரத்தினேசப்பெருமானது சரிதத்தைத் திருவாய்மலர்ந்தருளுஞ் சமயத்தில், திருமால் பிரமன் முதலிய தேவர்கள் (தமக் குற்ற குறைகளைக் கூறி) முறையிடுகின்ற பேரோசையைத் திருச்செவி சாற்றி, முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் புன்னகை செய்தனர். எ-று. (க)

அண்டநீள் சுவரி னெல்லை யளக்துணை ரளவு கோலிற்
கொண்டலி னகடு போழுங் கூர்நுதி மருப்பிற் றுகி
மண்டம ரழுவ நீந்துந் திறன்மகி டாசு ரன்றன்
றிண்டிறற் புதல்வ னருங் கயாசுரன் சீற்ற மேலான்.

(இ-ள்.) அண்டகடாகத்தின் நெடிய சுவரை யளந்து ஆராயவல்ல அள வுகோல்போல மேகத்தின் வயிற்றைப் பீறுங் கூர்மைவாய்ந்த முனைதங்கிய தந்தங் களையுடையவனும், நெருங்கிய போர்க்கடலை நீந்துகின்ற வலிதங்கிய மகிடாசுர னது பராக்கிரமமுடைய புத்திரனாகிய கயாசுரனென்னுங் கோபமேலீடுடைய வன். எ-று.

அழுவம் = கடல். (உ)

மாசுறு பவன்றன் மேனி யளவினை வகுத்து நோக்கி
யோசனை புகலி னென்பா னுயிர முளதா மன்னோன்
வீசிய கரத்தி னுற்ற விசைநெடுங் காற்றின் மோத்துண்
டாசையங் கிரிகள் மெல்லென் சருகெனப் பரக்கு மன்றே.

(இ-ள்.) குற்றம் பொருந்திய கயாசுரனுடைய உடலின் விஸ்தீரணத் தைக் கணக்கிட்டுப் பார்த்தாற் சொல்லுமிடத்து ஒன்பதினாயிரம் யோசனையுள்ள தாகும். அக்கயாசுரன் வீசிய கையினுண்டான வேகத்தோடு கூடிய பெருங்காற்றி னால் மோத்துண்டு அழகிய அஷ்டகுல பர்வதங்கள் மெல்லிய சருகுகள்போலப் பறந்தோடும். எ-று. (ங)

அன்றவ னுயிர்ப்புத் தாக்க வன்றுகொல் கடல்க ளேழு
மின்றள வொழியா தேங்கி யரற்றுவ திருள்கால் சீத்து
மின்றிகழ் மவுலி தாக்க விளங்குறு திங்கள் முன்னங்
கன்றிய தன்றோ வின்னுங் களங்கமா யிருந்த தம்மா.

(இ-ள்.) அக்காலத்தில் அவ்வசுரனுடைய சுவாசம் தாக்குதலால், சப்த சமுத்திரங்களும் அன்றுமுதலல்லவோ இதுவரையில் நீங்காமல் வருந்தி இரைச்ச லிடுவது. இருளை அடியோடொழித்து மின்னலைவீசுகின்ற கிரீடம் மோதுதலால் பிரகாசிக்கின்ற சந்திரன் பூர்வத்தில் கன்றிப்போனதல்லவோ இப்போதுங் களங் கமாக விளங்குவது. எ-று. (ச)

ஆடகச் செம்பொன் குன்ற மங்கையி னள்ளி யேந்திப்
பீடுற விதுகொல் லீசன் வில்லெனப் பிடித்த தென்னு
மோடைமால் கரிக ளெட்டு மொருகையிற் பற்றி வீசுஞ்
சேடனைப் பறித்துக் கச்சிற் பாரமேற் சிக்கவார்க்கும்.

(இ-ள்.) பொன்மலையாகிய செவ்விய மேருகிரியை உள்ளங்கையி லேந் தி யெடுத்துஇதனையல்லவோ சிவபெருமான் பெருமை பொருந்த வில்லாகப் பிடி த்ததென்று சொல்லுவான். நெற்றிப்பட்டமணிந்த பெரிய திக்கஜங்களெட்டை யும் ஒரு கையிற்பிடித்து (பந்துபோல) எறிவான். ஆதிசேடனைப் பிடுங்கிக் கச்சு போலப் பருத்த மரத்தடியிற் சிக்குண்ணும்படி கட்டுவான். எ-று. (இ)

மடிசெவிப் புழைக்கை நால்வாய்க் கயாசுரன் வாங்கு தெண்ணீ
ருடைதிரைக் கடல்க ளேழுங் குளப்படி யென்னவுன்னு
மடியினைப் பெயர்க்குந் தோறு மாழியங் குன்றஞ் சூழ்ந்த
படிமுது குளுக்கித் தாழ்ந்து பாதலத் தொளிக்கு மன்றே.

(இ-ள்.) மடிந்த செவிகளையுந் துதிக்கையையுந் தொங்குகின்ற வாயையு முடைய கயாசுரன் வளைவாகிய தெள்ளியநீரையுடைய மறிகின்ற அலைகள் பொரு ந்திய சத்தசமுத்திரங்களும் குளப்படி யென்று நினைப்பான். அடிகளைத் தூக்கு ம்பொழுதெல்லாம் அழகிய சக்கரவாளகிரியாற் சூழ்ந்த உலகம் முதுகு குலுங்கித் தாழ்ந்து பாதலலோகத்தில் மறையும். எ-று. (கூ)

கருநிறச் செங்கட் பேழ்வாய்க் கயாசுர னமரினேற்ப [லோ
வருவதெத் திசையிற் கொல்லோ வெனமலர்ப் பொகுட்டின் மே
லொருமுக மதனால் நான்கு திசைகளு மொருங்கு நோக்கற்
கரிதென வெண்ணி யன்றோ நான்முக மாயி னானே.

(இ-ள்.) கரிய மேனியும் சிவந்த கண்ணும் பிளவுபட்ட வாயு முடைய கயாசுரன் சண்டைசெய் தெதிர்க்கவருவ தெத்திசையாலோ வென்று, தாமரை மலர்க்கொட்டையின்பேரில் வசிக்கும் பிரமதேவன் ஒரு முகத்தினால் நான்கு திக் குகளையும் ஒன்றாகப் பார்த்தற்கு அரியதென்று கருதியல்லவோ நான்குமுகங்களை யுடையவனாயினான். எ-று. (எ)

அண்ணலங் கமலப் புத்தே ளாழியோன் வெருவி யோடக்
கண்ணழல் கதுவிச் செந்தீ வடவையிற் கனன்று கால
விண்ணுரு மேறு கோடி வீழ்ந்தென வுரறி முக்கட்
பண்ணவ னுமையி னோடு மிருந்துழிப் படர்ந்திட்டானே.

(இ-ள்.) பெருமைவாய்ந்த அழகிய தாமரைமலரிலுள்ள சதுர்முகனும், சுதரிசனத்தையுடைய திருமாலும் அஞ்சியோடும்படி, கண்ணினின் றெறியுந்

தீயானது, சிவந்த நெருப்பாகிய வடவாமுகாக்கினிபோல எரிந்து சிந்தவும், ஆகாயத்திலுள்ள கோடி இடியேறுகள் விழுந்தாற்போன்று கர்ச்சித்து, திரிநேத்திராகிய சிவபெருமான் உமாதேவியாரோடு வீற்றிருக்குமிடத்திற்குச் சென்றனன். (கயாசுரன்) எ று. (அ)

வெருவலீ ரமர ரென்று விடைக்கொடி யுயர்த்த வெந்தை
கருவரை நடந்த தெனனக் கயாசுரன் வருதல் நோக்கி
யெரியுமிழ்ந் தூன்வாய் பிலகி யிலகுமுத் தலைய வேலிற்
குருதியார் கலியிற் பொங்கக் குததிமே லேந்தி னுனே.

(இ-ள்) இடபக்கொடியைப் பிடித்த எந்தையாகிய சிவபெருமான், தேவாகளே! அஞ்சாதீர்களென்று திருவாய்மலர்நது, கரியமலை (கால்கொண்டு) நடந்தாற்போலக் கயாசுரன் வருவதுபார்த்து, தீயைச் சிந்தி மாமிசத்தை வாயிற் கக்கி விளஙகுஞ் சூலாயததததில உதிரஞ் சமுததிரம்போற் கொப்புளிக்கும்படி குத்தி மேலே தூக்கிக்கொண்டனர். எ-று. (௯)

கடையுக முடிவி னின்று களிநடம் புரியு மெந்தை
விடமுமிழ் சூலமீதில் வேலைசூழ் ஞாலம் போர்க்குங்
குடையெனக் கிடந்த வீரன நெஞ்சகங் குழைந்து தீய
வடையலா புரந்தீ யூட்டு மண்ணலை யேத்தி னுனே.

(இ-ள்.) கடைப்பட்ட யுகாந்தவிறுதியில் (எஞ்சிநின்ற பொருளாக) நின்று ஆநந்தத்தாண்டவ மியற்றுஞ் சிவபெருமான் விஷத்தைக் கக்குஞ் சூலாயுதத்தினமேரில், கடல்சூழ்ந்தஉலகததைப்போர்க்குங் குடைபோல விளங்கிய வீரனுகிய கயாசுரன மனஙகுழைந்து, கொடிய பகைஞரது திரிபுரங்களை அக்கினிக்கு உண்பித்த சிவபெருமானைத் துதிசெய்தனன். எ-று. (௧0)

மாண்டபே ரன்பா லெமமை வழுத்தலின் மகிழ்ச்சி கூர்ந்தேம்
வேணடுவ கேட்டி யென்ன விளமபலு மவுணா கோமா
ஞணடகை யெனது புன்றோல மணத்தொடு மேன்மைத் தாய
காண்டகு போரவை யாகக் கருணையிற் புனைதல் வேண்டும்.

(இ-ள்.) மாட்சிமைப்பட்ட பேரனபுகொண்டு எம்மைத் துதித்தமையால் உள்ளக்களிப்பு மிகுநதோம். நீ விரும்பிய வரஙகளைக் கேட்பாயாகவென்று சிவ பெருமான் வினவவும், அவுணாகுலத்தோன்றலாகிய கயாசுரன், ஆண்டன்மையுடைய பெருமானே! அடியேனது இழிவாகிய சருமத்தை வாசனையுடன் மேன்மைதஙகிய விரும்பத்தக்க போர்வையாகத தேவரீர் கிருபையோடு தரித்தல் வேண்டும். எ-று. (௧௧)

என்னுடை மெய்யு மீங்கோ ரிலிங்கமா யமர்தல் வேண்டு
முன்னவ வென்னு மீசன் முகமலர்ந் தளித்தல் செய்தான்
பன்னக மணிச்செஞ் சூட்டிற் கிடந்தபார் பரவி யேத்த
வன்னது கிருத்தி வாகே சுரமென வமர்ந்த தாமால்.

(இ-ள்.) முதல்வனே! அடியேனது சரீரமும் ஈண்டொரு சிவலிங்கக் குறியாய் வீற்றிருத்தல் வேண்டுமென்று கூறவும், சிவபெருமான் முகமலர்ச்சி

கொண்டு அவவாறே அநுக்கிரகித்தனர். ஆதிசேடனது மாணிக்கந்தங்கிய சிவந்த உச்சிக்கொண்டையில் விளங்கும் உலகத்தார் துதித்து வணங்க, அஃது கிருத்திவாகேசமூர்த்தமாகப் பொருந்தியது. எ-று. (கஉ)

காலவே லசுரன் மெய்யிற் கழிந்துமண் கீண்ட வாற்றாற்
சூலபா டனமென் றோதுந் தீர்த்தமுந் தோன்றிற் றென்று
மாலைவெள் ளருவி தாழு மலைமகள் மகிழ்ந்து கேட்ப
நீலவெங் கரித்தோல் போர்த்த நிருமல னிகழ்த்தி னானே.

(இ-ள்) காலவேலாயுதமாகிய சூலப்படை கயாசுரனுடலிற் கழிந்து பூமியைத் தோண்டினதன்மையாற், சூலபாடனமென்று சொல்லுந் தீர்த்தமுந் தோனறியதென்று, மாலைபோலத் தாவள்யமாகிய அருவியாறொழுகும் இமோற்கிரி மன்னன் மகளாகிய உமாதேவியார் சந்தோஷித்துக் கேட்கும்படி, நீலநிறமமைந்த வெவ்விய யானைத்தோலைப் போர்வையாகக்கொண்ட மலரகிதராகிய, சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (கந)

நீறுபூத் திளவெண் டிங்கள் நிலாக்கதிர் பரப்பு நெற்றி
மீறிலா தோங்கு முக்கட் கிருத்திவா கேசற் கன்பிற்
சாறயர் கால யேற்று மடிசிலுண் பதற்குச் சார்ந்த
பாறுவெங் கழுகு காக்கை முதலிய பறவை தாமே.

(இ-ள்.) திருவெண்ணீறு விளங்கி, வெண்மைவாய்ந்த இளம்பிறைச் சந்திரன் நிலவாகிய கிரணங்களை வீசும் நெற்றியையுடைய அழிவிலலாதுயாந்த திரிநேத்திரராகிய, ஸ்ரீகிருத்திவாகேசப் பெருமானுக்கு ஆசையோடு திருவிழாவியற்றுகையில், பலியிடும்நிவேதனத்தைப் புசிப்பதற்குப் பருந்து, கொடியகழுகு,காக்கைமுதலிய பறவையினங்கள் வந்து சேர்ந்தன. எ-று. (கச)

எறுழ்வலிப் பறவை காக்கை யாவையு மிரியச் சீறி
மறுகியுண் ணடுங்கி யந்த வாவியில் வீழ்த லோடு
நிறைதரும் பனிவெண் டிங்க ணெடுநிலா வுதறு தூய
சிறையுடைப் பவளச் செங்கா லன்னமாய்த் திரிந்த வன்றே.

(இ ள்.) மிகுந்த வல்லமையுடைய காக்கை முதலிய பறவைகளெல்லாஞ் சிதறுண்ணும்படிக் கோபித்து மயங்கி உள்ளமருண்டு அந்தத் தடாகத்தில் விழவும், நிறைவாகிய குளிர்ச்சிதங்கிய வெள்ளிய சந்திரனது மிகுந்த கிரணங்களைச் சிந்தும் பரிசுத்தமாகிய சிறகுகளையும், பவளம்போன்ற செவ்விய கால்களையுமுடைய அன்னப்பறவைகளாய் மாறின. எ று. (கரு)

அன்றுதொட் டன்ன வாவி யாகிய தத்தனைச் சூழக்
குன்றவிற் கார்த்தி காய னேச்சுரன் முதலாய்க் கூறும
பொன்றிகழ் கடிக்கை மாலை புனைசிவ னேச மீறு
மொன்றிய விலிங்க மோதி லயுதமா யுளாப்பர் மாதோ.

(இ ள்.) அன்றையதின முதற்கொண்டு (அத்தடாகம்) அன்னவாவியெனப் பெயருடையதாயிற்று. அத்தீர்த்தத்தைச்சூழ்ந்து, மலைவில்லேந்திய கார்த்தி

காயனேச்சுர முதலாக, பொன்மயமான கொன்றைமாலையைத் தரித்த சிவனேச மிறுதியாகக் கூடிய இலிங்கமூர்த்திகளைத் தொகைசொல்லப்புகின் பதினாயிரமாகக் கூறுவா (மேலோர்) எ-று. (சஅ)

கிருத்திவாகேசன் ரேன்றிய அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சஎஉஎ.

அறுபத்தொன்பதாவது

## தூர்க்கன் அரசாட்சி அத்தியாயம்.

அரம்பையர் காந்தட் செழுமலாக் கரத்தி னலங்குசா மரைபொதி யவிழ்ப்ப, விரும்பின ராகி யரியயன் முதல விண்ணவ ரினிதினேத் தெடுப்பக், கருநதடங் கண்ணி தன்னொடு மமலன் கருணைகூ ருருத்திர வாசத், திருந்திடு மேல்வைச் சிலாதரன் புதல்வன் கைதொழு தீங்கிவை யுரைப்பான்.

(இ-ள்.) தேவமாதரது செங்காந்தளாகிய செழுமைதங்கிய மலர்போன்ற கைகளால் அசைக்கின்ற சாமரைக்கட்டவிழவும், திருமால் பிரமன் முதலாகிய தேவர்கள் விருப்பமுற்றோராகி இனிதாகத் தோத்திரஞ்செய்யவும், கருநிறம்பொருந்திய விசாலமாகிய விழிகளையுடைய உமாதேவியாருடன் சிவபெருமான் கிருபைமிகுந்த உருததிரவாசத்தில் வீற்றிருக்குஞ் சமயத்தில், சிலாதரமுனிவர் புத்திரராகிய நந்தியெம்பெருமான் கைகுவித்து வணங்கி இவவாறு சொல்லுகின்றனர். எ-று. (க)

மூவகை யுலகில் முத்திகூ ரிலிங்க முழுவதுங் கொணர்ந்தன னென்னுச், சேவடி தொழலு மொன்பது கோடி தூர்க்கையுங் கொணர்கெனச் செப்பத், தாவிலன் போடுங் கொணர்ந்தன னென்று தண்டமிழ் முனிவரன் கேட்ப, மாவடு மருட்டு மதர்வைமென் னேக்கின் வள்ளிகா தலன் மகிழ்ந் திசைத்தான்.

(இ-ள்.) திரிலோகத்திலும் மோட்சமளிக்கத்தக்க சிவலிங்கமூர்த்திகளையெல்லாங் கொண்டுவந்தேனென்று (திருநந்திதேவர்) கூறி, சிவந்ததிருவடிகளைப் பணியவும், நவகோடி தூர்க்கைகளையுங் கொண்டுவருகவென்று சிவபெருமான் ஆக்ஞாபிக்க (நந்திபகவான்) குறைவில்லாத ஆசையுடன் கொண்டுவந்தனர் என்று, இனிய தமிழ்முனிவராகிய அகஸ்தியர் கேட்கும்படி, மாவடுவை மயக்கிய மதர்த்த கூர்மைவாய்ந்த மெல்லிய விழிகளையுடைய வள்ளிநாயகியார் தலைவராகிய ஸ்ரீ குமாரக்கடவுள் களித்துக் கூறினர். எ-று. (உ)

பாற்குடந் தூங்கு மடியிள மேதி பாசடைத் தாமரை குதட்டித்
தாற்றிளங் கதலிப் படப்பைசாய்த் துறங்குந் தணவயற காசிமா நகரம்
போற்றிமூ வுலகுந் தழைத்திட வினிது புரந்தருள் சொப்பனேச் சுரிக்கு
மேற்றிசை வதிந்த துர்க்கைதன் காதை வளம்பெற வேலிறை விளம்பும்.

(இ-ள்.) பாற்குடந் தொங்குகின்ற மடியையுடைய இளமைதங்கிய எருமைகள், பசிய இலைகளையுடைய தாமரைக் கொடியை யதுக்கி, இளந்தாறுகளமைந்த வாழைக் கொல்லைகளைச் சாய்த்துத் துயிலசெய்யுங் குளிர்ந்த வயல்சூழ்ந்த சிறந்த காசி க்ஷேத்திரத்தை, மூவுலகத்தாருந் துதித்துக் களிக்கும்வண்ணம் இனிதாகக் காத்தருளும் சொப்பனேச்சுவரிக்கு மேலைத்திசையில வசிக்குந் துர்க்கையின் சரித்திரத்தை ஓதியருளவேண்டுமென்று அகத்தியமுனிவர் கேட்க, வேலாயுதமேந்திய ஸ்ரீமுருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுவார். எ-று.

சொப்பனேச்சுவரியென்றது சத்திபீடங்கள் அறுபத்துநான்கனுள் ஒன்றாகிய சொப்பனேச்சுரிபீடத்தில் வீற்றிருக்குஞ் சத்தியையென்க. (ங.)

ஊன்படு திகிரி திசைதிசை யுருட்டி யுறுவலிச் சுரிகழுத் தாமைக்,
கூன்புறத் தமர்ந்த வுலகமோர் மூன்றுந் தனகொடுங் கோலநனி செலுத்தி
வான்படு செல்வ முழுவதும வவ்வி வானவர்க் கிறையவன் முதல
தேன்படுதெரிய லெண்டிசைப்பாலா திருவெலாந் தனித்தனிகவர்ந்தான்.

(இ-ள்.) (எதிர்த்த சத்துருக்களின்) மாமிசம்பொருந்திய ஆக்கிஞைச்சக்கிரத்தைத் திக்குகடோறுஞ் செலுத்தி, வலிதங்கிய குறுகிய கழுத்தையுடைய (விஷ்ணுவாகிய) ஆமையின் வளைந்த முதுகிற்பொருந்திய மூவுலகங்களிலும், தனது கொடுங்கோலரசாட்சியை மிகுதியாகச்செலுத்தி, தேவலோகத்திலுள்ள போகங்களையெல்லாங் கைக்கொண்டு, தேவேந்திரனமுதலாகிய தேன்சொரியுங் கற்பக மாலையணிந்த அஷ்டதிக்குப் பாலகர்களது செல்வத்தையெல்லாம் ஒவ்வொன்றாகக் கொள்ளைகொண்டனன். (துர்க்கன்.) எ-று.

திருமால் உலகமூன்றையுங் கூர்மவடிவுகொண்டு தாங்காநிற்றலின் "ஆமைக் கூன்புறத் தமர்ந்த வுலகமோர் மூன்று" என்றார். (ச)

அண்டநீண் முகட்டி லரசுவீற் றிருக்கு மருமறை வடித்தவந் தனனும், வண்டுவீழ்ந் தாற்றுந் தண்டுழாய் முகிலு மணிநெடு வாயிலோர்க் குறுகித், திண்டிற லவுணர்க் கிறையொடெம் வரவு செப்பென முகமனன் கியம்பித், தண்டளிர்க் குடங்கைத் தலையணையாகத் தமனிய முன்றிலிற் றுயில்வார்.

(இ-ள்.) நெடிய அண்டகடாகத்துச்சியிற் கொலுவீற்றிருக்கின்ற அரிய வேதங்களைத் தெளிவுபடுத்திய பிரமதேவனும், வண்டுகள்மொய்த்து ரீங்காரஞ்செய்யுங் குளிர்ந்த துளவமாலையணிந்த மேகவர்ணராகிய திருமாலும்,(துர்க்கனது) அழகிய பெரியவாயில் காப்பாளரையடைந்து, பெருவலிதங்கிய அசுரர் தலைவனுடன் எமது வருகையைக் கூறுதியென்று நல்ல உபசாரவார்த்தைகளையோதி, குளிர்ந்த தளிர்போன்ற உள்ளங்கையைத் தலையணையாகவைத்துப் பொன்மயமான முன்றிலிற் சயனிப்பார்கள். எ-று. (டு.)

அலங்குளேயரிமா னனேயவாளவுண ஞணையாங் கொடுந்தழற் கஞ்சி, யிலங்கொளி மழுங்கிப் பரிதியங் கடவு ளீரங்கதிர் மதியெனத் திரியும், விலங்கிவில் லும்மூழ் கோணிலே திரிந்த ஞான்றினு மவுணர்கோன் விள ம்பிற், கலங்குதெண் டிரைநீ ரொணடுகொண் டெழுந்து கரியமைம் மு கிறுளி தூற்றும.

(இ-ள்.) அசைகின்ற புறமயிரையுடைய ஆண்சிங்கத்தையொத்த வாளே ந்திய துர்க்கனது ஆக்கினையாகிய கொடிய அக்கினிக்குப் பயந்து, அழகிய சூரிய பகவான் விளங்குகின்ற ஒளிமழுங்கி, குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன் போல உலாவுவான். விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற (நவக்) கிரகங்கள் தமது நிலே திரிந்தகாலத்திலுந் தூக்கன் கட்டளையிட்டால், கலங்குகின்ற தெள்ளிய அலேகள் பொருந்திய சமுத்திரஜலத்தை முகந்து மேல்தோன்றிச் சூல்கொண்ட கரியமேக ங்கள் மழைத்துளிகளைச் சொரியும். எ-று. (சு)

அறந்தலே வணங்க வந்தண ராற்று மருமக முழுவது மொளிப்ப
மறந்தலே யெம்பப வஞ்சமும பொய்யு நாடொறும் நாடொறும வளர
விறந்தன மென்ஞ மெய்ம்மைநின் றேங்க வீகையு ஞானமு மிறப்பக்
கறங்குதெண் டிரைசூ ழுலகமோ ரேழுங் கலியுளங் களிப்புறக் காத்தான்

(இ-ள்.) தருமதேவதை தலேவணங்கவும், வேதியரியற்றும் அரிய யாககரும ங்கள்முற்றும் மறையவும், பாவந் தலே தூக்கவும், சூதும் பொய்யும் நாளுக்குநாள் அதிகரித்து வளரவும், நாமிறந்தோமென்று சத்தியம் (செயலற்று) நின்று வருந் தவும், (யாசிப்போர்க்குக்) கொடையும் ஞானமும் இறக்கவும், சத்திக்கின்ற தெள் ளிய அலேயையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த சத்தலோகங்களும் கலிபுருஷன் சந் தோஷிக்கும்படி அரசுசெய்துவந்தான். (துர்க்கன்.) எ-று. (எ)

விண்ணவ ரியக்க ரவுணர்கந் தருவர் விஞ்சைபர் நாகர்வல் லரக்கர்
மண்ணுறை வேந்த ருடற்றுவா ளமரி லாருயிர் மாய்ந்திடா வணணங்
கண்ணுத லளித்த வரத்தினன் செருவிற் கருதலர்க் கசனியே றனைய
வண்ணலஞ் சுடர்வே லவுணர்கோ னுலக மறங்கெட வளிக்குநா ளதனில்.

(இ ள்.) தேவர்கள், இயக்கர், அவுணர், கந்தருவர், வித்தியாதரர், நாகர், வலியமைந்த அரக்கர், நிலவுலகத்தில் வசிக்கும் மன்னர் (ஆகிய இவர்கள்) புரிகி ன்ற வாட்போரினல் அரிய உயிரொழியாவகையாகச் சிவபெருமான் அநுக்கிர கித்த வரத்தையுடையவனய், போர்முனையிற் சத்துருக்களுக்கு இடியேறுபோ ன்ற அழகிய பெருமைதங்கிய பிரகாசத்தோடுகூடிய வேலேந்திய துர்க்கன் பூமி யில் தருமமழியும்படி அரசுசெய்துவருகையில் எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

கண்ணுதல் - ஏழாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொ ழித்தொகைக் காரணப்பெயர். (அ.)

அள்ளிதழ்க் கமல வெள்ளிமண் டபத்தி லரும்பெற லரசுவீற் றிரு க்கு, மொள்ளிழை கேள்வற் குரைத்துமயா மென்ன வோடையம் புகா

முகப் பரூஉத்தாள், வெள்ளைமால யானைப் பாகனே முதல விண்ணவர் யாரும்வந் தெய்திக், கள்ளயர் வுயிர்க்கு நறுமலர் தூவிக் கரமலர் குவித் திவை புகல்வார்.

(இ-ள்.) நெருக்கமாகிய இதழ்களையுடைய தாமரைமலராகிய வெள்ளிம ண்டபத்திற் பெறுதற்கரிய அரசுவீற்றிருக்கின்ற ஒள்ளிய ஆபரணமணிந்த நாம கள் கேள்வனாகிய நான்முகக்கடவுட் குரைப்போமென்று, நெற்றிப்பட்டமணிந்த அழகிய புள்ளிவாய்ந்த முகத்தையும், பருத்த காலையுமுடைய வெண்மையாகிய பெரிய (ஐராவதமென்னும்) யானையை வாகனமாகக்கொண்ட இந்திரன் முதலா கிய தேவர்களெல்லாம் வந்தடைந்து தேன்சொரியும வாசனைதங்கிய நல்லமலர்க ளானருச்சித்துக் கையாகிய மலர்களைக்கூப்பி இவவாறுகூறுகின்றனர். எ-று. (௯)

உடல்சினத் தறுகட் டுர்க்கனென் றுரைக்கு மொருவனின் றேற்றமு ருடற்று, மடலினுக் காற்று தடைந்தன மெந்தை யஞ்சலென் றளித்தரு ளெனலு, மடலவிழ் கமலப் பொருட்டுநோன் முகத்தோன் வணடுழாய் முகுந்தனோ டேகிக, கடகளிற் றுரிவை காணடக வணிந்த கண்ணுதல் கடைப்புறத் தடைந்தார.

(இ-ள்.) எமது தந்தையாகிய பிரமதேவனே! துன்புறுத்துகின்ற கோபத் தையும், அஞ்சாமையையுமுடைய துர்க்கனெனறு சொல்லும் ஓரிராக்கதன் இன் றெதிர்த்துப் போர்புரிந்த வல்லமைக்குச் சகியாமல் தேவரீரையடைந்தோம்; அஞ் சாதீர்களென்று காத்தருளவேண்டுமெனறு கூறவும், இதழ்கள் விகசித்த தாம ரைமலர்க் கொட்டையில் வசிக்குஞ் சதுமுகன் வளமமைந்த துளவமாலை யணிந்த விஷ்ணுமூர்த்தியுடன் சென்று, மதசலமபொழியும் யானையின் சருமத்தை யாவ ருங் காணும்படித்தரித்த சிவபிரானது திருச்சந்நிதானத்தின் தலைவாயிலில் வந்து சேர்ந்தனர். எ-று. (௧0)

கந்தடு களிற்றி னீருரி போர்த்த கண்ணுதல் முன்னரெம் வரவு நந்திபோ யுரைத்தி யெனவடி தொழலு நளிர்நிலாப பூங்கதி ரெறிக்குஞ் சந்திர மவுலிக் குரைத்தலு மீணடுத் தருகென வாங்கவன் புகுத்த வெந்தைதாள் வணங்கி யரியயன் முதல விண்ணவ ரேத்தின ரிசைப்பார்.

(இ-ள்.) கட்டுத்தறியை முறிக்கின்றயானையினது பெரிய தோலைப் போர் வையாக்கிய சிவபெருமானது திருச்சமுகத்தில் எமது வருகையைத் தேவரீர்சென் றுரைக்கவேண்டும் திருநந்திதேவரோ! என்று திருவடியைப்பணியவும், குளிர்ந்த நிலவாகிய அழகிய கிரணங்களை வீசுகின்ற சந்திரனைச் சடையிற்றரித்த சிவபிரா னுக்கு (திருநந்திதேவர்) விண்ணப்பிக்கவும், (பெருமான்) அவர்களை ஈங்கு கொண ர்கவென ஆக்ஞாபிக்க (அவ்வாறே) அந்நந்திதேவர் (அவர்களை) உட்செலுத்த, திரு மால் பிரமன் முதலிய தேவர்கள் சிவபெருமானது திருவடிகளை வணங்கித் துதி த்துக் கூறுவாராயினர். எ-று. (௧௧)

கவிழ்குலை யரம்பை முகிலக டணவுங் கமுனிசூழ் காசியெம் பெருமா னவுணரிற் கொடிய தூக்கனல் மிகவும் வருந்தின மளித்தரு ளென்ன

வுவணமீ துயாத்தோன் முதலிய வமர ருரைத்தலும் வெருவனீரொன்னுப்
புவனகோ டிகளு மீன்றசிற றுதரப் பூவையை நோக்கியீ துரைப்பான்.

(இ-ள்.) தொங்குகின்ற குலையையுடைய வாழைமரங்கள் மேகத்தின்வயி ற்றைத்தடவுங் கழனிகள் சூழ்ந்த காசி க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் எம்பெருமானே! அசுரர்களிற்கொடியவனாகிய துர்க்கனென்பவனால் மிகவுந் துன்புற்றோம், காத்தருளவேண்டுமென்று, விண்ணப்பித்து, கருடனைக் கொடியாக வுயர்த்திய திருமால் முதலான தேவர்கள் கூறவும், சிவபெருமான நீங்களஞ்சாதீர்களென்று திருவாய்மலர்ந்து, புவனகோடிகளையும்பெற்ற சிறிய வயிற்றையுடைய உமாதேவியாரைப்பார்த்து இவ்வாறு சொல்லுகின்றனா எ-று. (கஉ.)

குழைமுகந் தடவி யையரி பரந்து குமிழ்மிசை மறிந்தருள் கொழிக்கு
மழைமதா நோக்கி துர்க்கனு மவுணன மடிந்திட வாளம ருடற்றிப
பழமறைக் கிழவன் முதலபுத் தேளிர பருவரல் துடைத்தரு ளெனலுங்
கழையுறழ் தோளி விழியருள் பரப்பிக் காளராத் திரியைநோக் கினளால்.

(இ-ள்.) குண்டலத்தையளாவி அழகிய அரிபரந்து குமிழமலரின்மேலில் மறிந்து திருவருள்கொழிக்கின்ற குளிர்ச்சிதங்கிய மதர்த்த கண்களையுடைய உமையே! துர்க்கனாகிய அசுரன் இறக்கும்படியாய் வாட்போர்புரிந்து, பழமையாகிய வேதங்களுக்குரிய பிரமன் முதலாகிய அமரர்களது துன்பத்தை நீக்கியருள வேண்டுமென (சிவபெருமான்) திருவாய்மலர்ந்தருளவும், மூங்கிலை நிகர்த்த தோள்களையுடைய உமாபிராட்டியார் கிருபாநோக்கஞ்செய்து காளராத்திரி (யென்னுஞ் சத்தி) யைப் பார்த்தனர். எ-று. (கங.)

ஐந்தரு நீழல் நிரையுளே யரிமா னணைமிசை யாசுவீற் றிருக்கு
மிந்திரன் முதல வமரர்தம் பதங்கள் வவ்விய யாவையும வழங்கி
யுய்ந்துபோ குதலோ வாளம ரழுவத் துன்கிளைப் பரபபொடு மாவி
சிந்தியேகுதலோகருத்தெனவவுணற்குரைத்திவண்சேர்கெனவிடுத்தாள்.

(இ-ள்.) பஞ்சதருக்களின் நிழலில், வரிசையாகிய புறமயிரையுடைய சிங்காதனத்தின்மேலிற் கொலுக்கொண்டிருக்கும் வாசவன் முதலிய வானவரது பதங்களிற் கைப்பற்றிய எல்லாவற்றையும் (அவரவர்கட்கு முன்போற்) கொடுத்து உயிர்தப்பிப்போகுதலோ, (அல்லது) வாட்போர்செய்யுங்களத்தில் உனது உறவினர்த் தொகுதியுடன் உயிரழிந்திறத்தலோ உனதெண்ணமென்று, அசுரனாகிய துர்க்கனுக்குக்கூறி ஈண்டு வரக்கடவாயென் றாக்ஞாபித்து, (உமாதேவியார் காளராத்திரியை) அனுப்பினர். எ-று. (கச.)

மாந்தளிர் பொருவு மங்கலும்மேனி மாதுமை யீங்கிவை யுரைப்பக் [வை
காந்தண்மென் முகையின் முகிழ்விரல் குவித்துக் காளராத் திரியெனும் பூ
யேந்திளங் கொம்மை வனமுலை தாங்கி யிடுகிடை வருந்துமென் றேங்கிப
பூந்தளிர் கவற்று சீறடிச் சிலம்பு பூசலிட் டரற்றவே கினளால்.

(இ-ள்.) மாந்தளிர்போன்ற பிரகாசிக்கின்ற அழகிய திருமேனியை யுடைய உமாதேவியார் இவ்வாறு கூற, காளராத்திரியெனும் பெயரையுடைய சத்தி

யானவள் மெல்லிய காந்தளின் மொக்குகளைப்போன்ற அரும்பிய கைவிரல்களைச் சேர்த்து (பணிந்து) பூரித்த இளமைவாய்ந்த குவிவாகிய அழகிய தனங்களைச் சுமந்து நுண்ணியஇடை துன்புறுமென்று ஏக்கமுற்று, பொலிவமைந்த தளிர் போன்ற சிறிய பாதங்களிற் பூண்ட சிலம்புகள் சண்டைசெய்தொலிக்க (துர்க்கன்பாற் றூதுசொல்லும்படி தேவியார் கட்டளைப்படி) போயினள். எ-று. (கரு.)

மழைதவழ் குடுமிப் புரிசையிற் றெடுத்த மணிநெடுங் கொடிகள் வான் முகட்டிற், குழவிவெண் டிங்கட் கூன்புறந் தடவுங் குளிர்புனற் காசியி னீங்கி, முழவுகண் டுயிலா வளநகர்க் கேகி மொய்புகைப் படலம்வி ண் புதைப்ப, வழல்விழிப பகுவா யவுணர்கோ னுறையும் வேத்தவை சென்றணு கினளால்.

(இ-ள்.) மேகங்கள் தவழுஞ் சிகரத்தையுடைய மதில்களிற் கட்டிய அழகிய நீண்ட துவஜங்கள் ஆகாயமுகட்டிலுள்ள இளமைதங்கிய வெண்மைவாய்ந்த சந்திரனது கூன்புறத்தைத் தடவுகின்ற குளிர்ந்த நீர்வளந்தங்கிய காசிக்ஷேத்திரத்தை விட்டு மத்தளவோசை நீங்காத வளமமைந்த நகரத்தை யடைந்து நெருங்கிய புகைவரிசை ஆகாயமறையத்தக்க தீப்போன்ற விழியையும், பெரிய வாயையுமுடைய அவுணர்குலத் தலைவனாகிய துர்க்கன் கொலுவீற்றிருக்கும் ராஜசபையைப் போய்ச் சேர்ந்தனள் (காளராத்திரி.) எ-று. (கசு)

கண்ணிமை கரிய வழல்பட விழிக்குங் காய்சினத் தவுணனை நோக்கி, அண்ணல்மால் யானைப் புரந்தரன் முதலா மாதிரத் தரசுவீற் றிருக்கும, விண்ணவர் செல்வ மளித்தியோ வமரின் விளிதியோ நின்னுளத் தமைந்த, வெண்ணம்யா தெனன வணங்குனாத் திடலு மெழினல நோக்கின னுரைப்பான்.

(இ-ள்.) கருமைவாய்ந்த கண்ணிமைகளினின்று தீப்பொறி சிந்த விழிக்கின்ற பெருங்கோபத்தையுடைய துர்க்கனைப் பார்த்து, பெருமைதங்கிய சிறந்த ஐராவதத்தையுடைய தேவேந்திரன் முதலாகிய அட்டதிக்குகளிற் கொலுவீற்றிருக்குந் தேவர்களது செல்வங்களைக் கொடுப்பையோ, போரில் இறப்பையோ, உன் மனதிற் பொருந்திய கருத்தென்னவென்று காளராத்திரி சொல்லவும், (துர்க்கன் அப்பெண்ணினது) பேரழகைப் பார்த்துக் கூறுவானாயினன். எ-று. (கஎ)

ஆன்றமூ வுலகி னிவ்வுரு வமைந்த வணங்கினைக் கண்டிலன் மேனாட், டோன்றுநற் றவத்தா லீங்கினி தடைந்த தோகையைப் பற்றுமினனலுங், கான்றுவெவ் விடங்கால் கண்ணர்களு சுகத்தர் கதிர்மணி வேத்திரக் கரத்த, ரேன்றவட் பற்ற நின்மினென் றவுணர்க் கிறைவனை நோக்கியீ துரைப்பாள்.

(இ-ள்.) அகன்றுள்ள திரிலோகங்களிலும், இத்தகைய ரூபலக்ஷணமுற்ற பெண்ணை (இதுகாறும்) பார்த்தேனில்லை. முற்காலத்தில் (யான்செய்த) தோன்றிய நல்ல தவப்பலனால் இவ்விடத்தில் இனிதாகவந்த இவளைப் பிடியுங்களென்று (துர்க்கன்) கூறவும், எரிந்துகொண்டு கொடிய விஷத்தைக் கக்கும் தன்மையுடையவரும், மார்ச்சட்டை தரித்தவர்களும், பிரகாசிக்கின்ற அழகிய பிரம்பைக் கை

யிற் பிடித்தவர்களுமாகிய அசுரர்கள் (அக்கட்டளையை) ஏற்றுக் காளராத்திரியைப் பிடிக்க, (அப்பெண்) இருங்களென்று துர்க்கனை நோக்கி இவவாறு சொல்லுவாள். எ-று. (கஅ)

தீதுபூத் தலர்ந்த சிந்தையோய் நீதி லரசர்நற் செய்தொழி லிழுக்கித், தூதியர்க் கவாதல செவ்விதோ வென்றுத் தூநிலா மணிநகை கோட்டிக், காதலுண டென்னி லாதிநா யகிபாற் கன்னியர் பலருளர் கவர்வான், போதியேற் போதி முத்தலைப் படைகின் புலவுவாய் மடுக்குமற் றென்றாள்.

(இ-ள்) தீமை மிகுந்துவிளங்கிய மனமுடையவனே! குற்றமற்ற மன்னவர் செய்யத்தக்க நற்கருமங்கள் தவறித் தூதமாதர்களைக் கைவசப்படுத்தல் அழகுடையதாகுமோ வென்றுகூறி, பரிசுத்தம்பொருந்திய சந்திரிகைவீசும் முத்துமாலைபோலும் மந்தகாசஞ்செய்து, ஆசையிருக்குமாகில உமாதேவியாரிடத்திற் பல கன்னியரிருக்கின்றனா கொண்டுவரும்படி போவாயாகிற் போகக்கடவாய். சூலாயுதம் உனதுமாமிசத்தைப் புசிக்குமென று (காளராத்திரி) ஓதினள். எ-று. (கசு)

கற்றிரள் புரையுந் தடம்புயன் வெகுண்டு கதிரிள வனமுலை யணங்கைப், பற்றுமி னென்ன நிலவுகஞ் சுகியர் படர்ந்தனர் தொடர்ந்துபற் றுதலும், வெற்றிவே லென்னக் குழைபொரு தலைக்கும் விழிக்கடை சிறிதுசேப் பூரக், கொற்றவன் விடுத்த வெஞ்சின வவுணர் குலத்தொடுஞ் சாம்பரா யினரால்.

(இ-ள்.) மலையை நிகாத்த விசாலமாகிய புயங்களையுடைய துர்க்கன் கோபித்து, ஒளிவீசும் இளமைதங்கிய அழகிய முலையையுடைய இப்பெண்ணைப் பிடியுங்களென்று சொல்லவும், பிரகாசிக்கின்ற கஞ்சுகிகள் விரைந்து தொடர்ந்து பிடிக்கவும், (காளராத்திரி தனது வெற்றியைத் தரும்) வேலாயுதம்போன்று குண்டலங்களைப் போர்செய் தலைக்கின்ற கட்கடைகள் சிறிது சிவப்படைய, துர்க்கன் செலுத்திய கடுங்கோபத்தையுடைய அசுரா கூட்டத்துடன் சாம்பராயினர்.

கஞ்சுகி = சட்டை தரித்தவர்கள். (உ0)

அவுணர்கோன் விடுத்த சுரேந்திர தபனன் மகப்பகை யனுமிரு காக்கன், றவலருந் தேவ கம்பன்வா ளுரோமன் முதலிய தானவத் தலைவர், ருவரியங் கடலின் மூன்றரைக் கோடி தானையோ டெருத்தனர் வளையக், கவர்முலைத் துவர்வாய்க் காளராத் திரிவெவ் வுயிர்ப்பினுற் றிசைதொறுங் கவிழ்ந்தார்.

(இ-ள்.) அசுரேந்திரனுகிய துர்க்கன் செலுத்திய சுரேந்திரதபனன்- யாகப்பகையன் - மிருகாக்கன் - கெடுதலில்லாத தேவகம்பன் - வாளேந்திய உரோமன் முதலிய இராக்கதத்தலைவர், அழகிய உவர்நீர்க்கடல்போல மூன்றரைக்கோடி சேனையுடன் கோபித்து முற்றுகைசெய்துகொண்டு, கிளைத்த தனத்தையும் பவளம்போன்ற வாயையுமுடைய காளராத்திரியின் கொடிய சுவாசவேகத்தால் அவர்கள் அட்டதிசைகளிலுங் குப்புற்று விழுந்தனர். எ-று. (உக)

களத்திடைத் தானை கவிழ்தலுங் காணுக் கட்கனல் வடவையிற் பொங்க, வுளத்திடை வெகுளி மீக்கொள முன்ன ருலவுகஞ் சுகியரை நோக்கி, யளப்பருஞ் சேனை யாவையு மீண்டுத் தருதிரென் றவுணர்கோ னறையத், துளக்கறு வரையு நெடுநில வரைப்புந் துளங்குறத் தானை தொக் கனவே.

(இ-ள்.) போர்க்களத்திற் சேனைகள் கவிழ்ந்ததும் அதனைப்பார்த்து, கண்ணிலிருந்து தீயானது வடவாமுகாக்கினிபோ லதிகரிக்கவும், மனதிற் கோபமேலிடவும், தன்முன்னே திரிகின்ற கஞ்சுகிகளைப்பார்த்து, அளவில்லாத எனது சேனைமுழுவதையும் இவ்விடத்திற்குக் கொண்டுவாருங்கள் என்று அசுரேசனுகிய துர்க்கன் கட்டளையிட, அசைவற்ற மலையும் பெரிய பூவுலகமும் அசைவுறும்படி சேனைகள் வந்துசேர்ந்தன. எ-று. (உஉ)

துர்க்கன் அரசாட்சி அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஎசக.

எழுபதாவது,

## துர்க்கன் படையெழுச்சி அத்தியாயம்.

ஆயிரங் கோடி தானைகா வலர்நூற் றறுபது கோடிபொற் றடந்தேர், காய்சினக் களிறுங் கலினவாம் பரியுங் கோடியற் புதமெனக் கணிப்பர், மாயிரு ஞாலம் வளைகடற் பரப்பின் மணலுரை யிடற்குமாற் றுதேல், பாய்புலிப் போத்திற் றிறலகெழு வயவர் வெள்ளத்தின் பரப்பையா ருரைப்பார்.

(இ-ள்.) சேனைத்தலைவர் ஆயிரங்கோடி. பொன்மயமான பரந்த இரதங்கள் நூற்றறுபதுகோடி. கொல்லுகின்ற கோபத்தையுடைய யானைச்சேனையும், கடிவாளம்பூண்ட தாவிச்செல்லுங் குதிரைச்சேனையும் கோடி அற்புத மென்று கணக்கிடுவார்கள். பெருமைதங்கிய விசாலமாகிய உலகத்தைச் சூழ்ந்த கடற்பரப்பிலுள்ள மணலை யொப்புசொல்லுதற்கும் முடியாதாகில், பாய்கின்ற ஆண்புலி போன்ற வல்லமை மிகுந்த காலாட்களாகிய வெள்ளத்தின் தொகையை எவர் கணக்கிட்டுரைக்கவல்லவர். எ-று. (க)

இன்னனாற் படையோ டவுணர்கோன் முனிவுற் றெழுதலு மெழில் கன்னித் தொழுகு, மின்னிளங் கொடிபோல் விசும்பிடைப் படர்ந்து மேவரு மூலகெலா மீன்ற, வன்னைமுன் னெய்தித் துர்க்கன்வெம் போரேற் றடைந்தன னென்னக்கரங் குவித்தாள், கன்னலிற் கனிந்த மென்மொழித் துவர்வாய்க் காளராத் திரியெனு மணங்கே.

(இ-ள்.) இப்படிப்பட்ட நால்வகைத்தாகியசேனையுடன் துர்க்கன் கோபங்கொண்டு புறப்படவும், கறகண்டுபோல மதுரமாகிய மெல்லிய சொல்லையும் பவளம்போன்ற வாயையுமுடைய காளராத்திரி யென்னுந் தெய்வப்பெண், அழகு மிகுந்துவிளங்கும் இளமின்னற்கொடிபோல ஆகாயமார்க்கமாகச் சென்று, கிடைததற்கரிய எல்லாவுலகங்களையும்பெற்ற தாயாகிய பார்ப்பதிதேவியார் சந்நிதானத்திற்போய், துர்க்கன் கொடிய போர்க்கோலங்கொண்டுவந்தனனென்று கூறிக் கைகூப்பி நமஸ்கரித்தாள். எ-று.

நாற்படை=சதுரங்கசேனை. இரதம் - கஜம் - துரகம்-பதாதி யென்பன.

மும்மையி னுலகின் மலவிருளிரிய மொய்சுடர்ப் பரப்பொளி விளக்கி, னெம்மையா ளுடைய வன்னைவீற் றிருத்தல் நோக்கிய புன்றொழி லவுண, னமமவீங் கிவளைப புணர்பபினு லாற்ற லமைதியாற் றருதிரே லமரர்,தம்முடைச் செல்வ மளிப்பலயா னென்னத் தானைகா வலர்க்கினி துரைத்தான்.

(இ-ள்) மூவகைத்தாகிய வுலகத்தின் அஞ்ஞானமாகிய விருள் ஒழியும்படி, சுடர் நெருங்கிய ஒளியைப் பரப்பும் (மாணிக்கத்) தீபமபோன்று, எம்மையாளாகவுடைய உமாதேவியார் எழுந்தருளியிருத்தலைப் பார்த்த இழிதொழில் பூண்ட துர்க்கன், ஆ! ஆ! இவளைத் தந்திரத்தினாலாவது பராக்கிரமத்தினாலாவது கொண்டுவருவீராகில், யான் (அதறகுப் பதிலாக) தேவர்களது செல்வத்தை யளிப்பேனென்று சேனைத்தலைவர்கட்கு இனிதாகக் கூறினன். எ-று. (ங)

என்றலு மவுணன் மந்திரத் தலைவ ரிருகரங் கூப்பின ரிசைப்பார்
குன்றெடுத் தாயர் கோநிரை காத்துக் குவலயம் பொதிந்தசே வடியோ
னுன்றனி யாணை கடக்கல னாகி யுலகெலா மினிதுனக் களித்துப்
பொன்றினன் போல விரிதிரை புரட்டு பாற்கடற் புறத்துறங் கினனால்.

(இ-ள்.) என்றிவவாறு துர்க்கன் சொல்லவும், ஆலோசனைத் தலைவர்கள் இரு கைகளையுங் குவித்துக் கூறுகின்றனர்: (தலைவனே!) கோவர்த்தன கிரியை யெடுத்து (குடையாகப்பிடித்து) இடையராது பசுமந்தையை ரக்ஷித்து, உலகமுழுவது மடங்கிய பாதத்தையுடைய மகாவிஷ்ணு, உனது ஒப்பற்றகட்டளையைக் கடக்கமாட்டாதவனாய்ச் சமஸ்தலோகங்களையும் உனக்கினிதாகக்கொடுத்து இறந்தவன்போலப் பரந்த அலைகளைப் புரட்டுகின்ற க்ஷீராப்தியில் நித்திரை செய்துகொண்டிருக்கின்றனன். எ-று. (ச)

கடவுண்மா மணியுங் கற்பகத் தருவுங் கறவையும் வளரிரு நிதியு, மடல்கெழு வயிரப் படையினோன் செல்வ மனைத்தையுங் கவர்ந்தன மன்றித், தொடுகடற் கிறைவன் நீர்மலி சிவிறிக் குறுந்துளி தூற்றிநின் றுழலும், படர்வளிக் கிறைவன் கால்செய்சாந் தாற்றி பற்றினன் பைப்பையத் திரிவான்.

(இ-ள்.) தெய்வீகம்பொருந்திய சிறந்த சிந்தாமணியும், கற்பகவிருக்ஷமும், காமதேனுவும், எடுக்குந்தோறும் வளர்கின்ற (சங்கநிதி, பதுமநிதி யென்னும்) இருவகை நிதியுமாகிய வலிமிகுந்த வச்சிராயுதத்தைத் தாங்கிய இந்திரனது செல்வ

முழுவதையுங் கொள்ளைகொண்டோம். அல்லாமல், வருணன் நீர்மிகுந்த விசிறி யாற் சிறுதுளி தூற்றிநின்றிருப்பான்; வாயு காற்றை யுணவெண்ணும் சாந்தாற்றி பற்றி மெல்லமெல்லத் திரிகின்றனன். எ று. (௫)

தொகேடற்கிறைவன்=சகரராற் றோண்டப்பட்ட சமுத்திரத்திற்குத் தலை வன். படர்வளிக்கிறைவன்=விரைந்துசெல்லுங் காற்றுக்குத் தலைவன். சாந்தா ற்றி=சிற்றாலவட்டம். சிவிறி-விசிறி. இலக்கணப்போலி.

ஆரழற் கடவுள் மடைத்தொழிற் புரியு மருமபெற லிருநிதிக் கிழவன்
சீர்கெழு நிதிய முழுவது நினக்குத் திறையளந் தகனகடைத் துயிலுங்
கூர்மருப் பெருமை யேறிவர் கடவுள் குற்றுடை வாள்சுமந் துழலுங்
காரிருள் சீக்குங் கனைகதிர்ப் பரிதி கடிகையி னளவையோர்ந் துரைக்கும்.

(இ-ள்.) நெருப்புக்கிறைவனாகிய அக்கினி சமையற்றொழில் செய்கிறான். பெறுதற்கரிய பெருஞ்செல்வத்தையுடைய குபேரன் சிறப்புமிகுந்த செல்வ முழு வதையும் உனக்குக்கப்பமாகக்கொடுத்து விசாலமாகிய தலைவாயிலிலுறங்குகிறான். கூர்மையாகிய கொம்புகள்வாய்ந்த எருமைக்கிடாவை யேறுகின்ற இயமன் சிறிய வுடைவாளைச்சுமந்துதிரிகிறான். கறுத்த இருளையொழிக்கின்ற, மிகுந்தவொளியை யுடைய சூரியன் நாழிகையின் கணக்கை யறிந்து சொல்லுகின்றான். எ-று. (௬)

அரவநல் லணிமெய்ப் பூச்சுவெண் சாம்ப ராடைதோ லையமே யுணவு
நிரைகவர்ந் திடுது மென்னிலீ சான னினிதமர் நெடுநகர் வரைப்பி
னரைமுதிர் கிழவே றொன்றுள தென்றே விடுத்தன மாயினின் னேவல்
புரியுநர்க்கரி தொன்றுளதுகொலென் றுபொருகடற்றானையோ டெழுந்தார்.

(இ-ள்.) பாம்புகளே நல்ல ஆபரணம்; வெள்ளியசாம்பலே உடலிற் பூசுங் களபம்; தோலே உடை; யாசித்துக்கிடைத்ததே ஆகாரம்; பசுமந்தையைக் கைப் பற்றுவோமென்றால் ஈசானன் இனிதாகவீற்றிருக்கும் நகரத்தில் முதிர்ந்தநரைதங் கிய கிழவெருது ஒன்றேயிருக்கிறதென்றெண்ணி விடுத்தோமானால், தேவரீரது ஏவற்றொழில் செய்வோருக்குச் செய்தற்கரிய கருமமொன்றிருக்கிறதோ வென்று, போர்செய்யுஞ்சேனைசமுத்திரத்துடன் எழுந்தனர் (சேனைத்தலைவர்.)எ-று. (எ)

உடுக்கண முதிரத் திசைசெவி டெறிய வொற்றைவெண் சங்கநின் றலற
வெடித்துய ரண்ட கோடிக ளிடிய வெங்குரல் முரசமார்ப் பெடுப்ப
வடித்தலம் பெயர்க்குந் தொறுமுயர் சேட னாயிரம பணமுடி யுளுக்கிப
படித்தலநெளியப் பரந்தெழுதுகளிற பரவைதூர்ந்திடவெதிர்படர்ந்தார்.

(இ-ள்.) நக்ஷத்திரகூட்டமுதிரவும், அட்டதிக்குஞ் செவிடுபடவும், தாவ ளியமாகிய ஒற்றைச்சங்கந் தொனிக்கவும், உயர்வாகிய அண்டகோடிகள் வெடிப ட்டிடியவும், வெவ்விய குரலையுடைய பேரிகை ஆரவாரிக்கவும், கால்களைப்பெயர் த்துவைக்குந்தோறும் உயர்வாகிய ஆதிசேடனது ஆயிரம் பணமுடிகளும் குலுங் கிப் பூமிபாரந்து நெளியவும், பரவிக் கிளம்பிய தூசியினாற் சப்த சமுத்திரங்களுந் தூரவும், (நால்வகைச்சேனையோடும்) எதிர்சென்றனர் (அசுரர்கள்) எ-று. (அ)

கடையுக முடிவி னுலகமோ ரேழுங் கவர்ந்திடக் கரைக்குறும் பெ
றியா, வுடைதிரைப் பரவை நடந்தெனப் படருமுயர்பெருந் தானையை
நோக்கி, விடைவல னுயர்த்தோ னிடமருங் கொளிரும வேற்றடங் கண்
ணிதன் மெய்யி, னடலகெழு சத்தி பறபல கோடி தோற்றுவித் தமர்க்கெ
திர் விடுத்தாள்.

(இ-ள்.) இடபத்தை வலப்புறத்திற் கொடியாக வுயர்த்திய சிவபெருமா
னது வாமபாகத்தில் விளங்கும் வேல்போற் பரந்த கண்ணையுடைய பார்ப்பதிதே
வியார், யுகாந்தமுடிவிலே சபதலோகங்களையும் தன்வசமாக்க, கரையாகிய குறும்
பையெறிந்து மறிகின்ற அலைகளையுடைய சமுத்திரம் நடந்தாற்போல்வருகின்ற
மிகப்பெரிய சேனையைப்பார்த்து, தமது திருமேனியினின்று வலிமிகுந்த அநே
கங்கோடி சத்திகளைச் சிருட்டிசெய்வித்து (அசுரரோடு சண்டைசெய்யுமபடி) எதி
ரேயனுப்பினர். எ-று. (௯)

விடுத்தெதி ரேற்ற சத்திக ளனைத்தும் விறலகெழு தானையங் கட
லை, மடுத்துவாய்ப் படுத்து வடவையிற் சுவற்றி வாகையந் தெரியல்வே
ய்ந்தனவா, லெடுத்தபே ரணட மங்கையி னள்ளி யினியமாங் கனியினிற்
பிழிந்து, குடிப்பினுங் குடிக்கு மென்னிலித் தானைக் குரைகடல் கடக்கு
மா றரிதே.

(இ-ள்.) எதிர்விடுத்தெதிர்தத சத்திகள் யாவரும், வெற்றிமிகுந்த அழகிய
சேனசமுத்திரத்தைச் சங்கரித்து வாயில்விட்டு வடவாமுகாக்கினிபோல வறளச்செ
ய்து அழகிய வாகையாகிய வெற்றிமாலையைத் தரித்தனர். பெரிதாகிய அண்டங்
களை உள்ளங்கையிலெடுத்து இனிய மாங்கனியைபபோலப் பிழிந்து குடித்தாலுங்
குடித்துவிடலாமென்றால் இச்சேனையாகிய சத்திக்கின்ற சமுத்திரத்தைக் கடப்
பது (அவர்கட்கு) அருமையாகுமோ. எ-று. (௧௦)

வேறு.

தன்னுடைப்படை யுடைதல்கண்டுறு தறுகண்வெஞ்சின வவுணர்கோன்
மின்னு நக்கவொள் வாள்வி திர்த்திணை விழிபு கைந்தழல சிந்தவே
கொன்னு னைக்கணை பெய்த வாவமவி சித்து வெஞ்சிலை கொண்டுவான்
றுன்னு பொற்கொடி கட்டு தேர்மிசை சுடரு நாணுற வேறினன்.

(இ-ள்.) அஞ்சாமைதங்கிய கொடியகோபத்தையுடைய அசுரேந்திரனாகிய
தூர்க்கன் தனதுசேனைகள் பின்னிடுதலைப்பார்த்து, மின்னல் வீசினாற்போல ஒளி
தங்கிய வாளாயுதத்தை யசைத்து, இருகண்கள் புகைந்து தீப்பொறிசிதற, கொல்
லத்தக்க கூர்மையாகிய அம்புகளையுடைய அம்பறாத்தூணி கட்டிக்கொண்டு வில்
லைக்கையிலேந்தி, ஆகாயமளாவிய பொற்கொடிகள் கட்டிய இரதத்தின்மேல்
சூரியனும் நாணமடையும்படி ஏறினன். எ-று. (௧௧)

ஏறு தேரொலி யுருமு நாணுற வெறியு நாணொலி காய்சினத்
தாறு பாய்கரி பிளிறு பேரொலி தார்வ யபபரி யேவிவெம்
பாறு தாழ்புடை மன்ன ரேவிய படைகள் போம்வழி குருதிநீ
ராறு பாயொலி திரைநெ டுங்கட லாவ நாணவொ லித்தவே.

(இ-ள்.) ஏறிச்செல்லுகின்ற இரதவோசையும், இடியும் வெட்கமடையும் படி எறிகின்ற (விற்களின்) நாணோசையும், கொல்லத்தக்க கோபத்தையுடைய அங்குசம் பாய்கின்ற யானைகள் காச்சிக்கின்ற பெரியவோசையும், வெற்றிமாலை சூடிய குதிரைகளைச் செலுத்திக் கொடிய பருந்துகள் தாழ்கின்ற ஆயுதங்களை யுடைய அரசர்கள் செலுத்திய அஸ்திரங்கள் செல்லும்வழியே உதிரநீர் ஆறாகப் பாய்கின்றவோசையும், (ஒன்றாகூடி) அலைகள் பொருந்திய பெரிய கடல்முழக்க மும் பின்னிடும்படி முழங்கின. எ-று. (கஉ)

வேலெ ழூப்படை யசனி தோமரம் விசிகம் வாள்கதை கப்பணஞ்
சூல மாவிசி விற்று மாரியொ ருங்கு விட்டெதிர் தூவலுங்
கால காலனி டத்தின் மேவிய கருணை மாமழை பொழிதரும்
பால லோசனை விற்ப ழூத்துமிழ் பகழி யாலவை மாற்றினாள்.

(இ-ள்.) வேலாயுதம், எழூவாயுதம், வச்சிராயுதம், இருப்புலக்கை, அம்பு, வாள், கதை, கப்பணம், சூலம் (ஆகிய இவற்றை) மழைத்துளிகளைச்சிந்தும் மேகத் தைப்போல (துர்க்கன்) எதிர்விடுத்தனுப்பவும், காலகாலராகிய சிவபெருமானது வாமபாகத்திற பொருந்திய சிறந்த கிருபாமழையைச்சொரியுந் திருநெற்றிக்கண் ணையுடைய பார்ப்பதியம்மையார் ஒளிமிகுந்து சொரிந்த அஸ்திரங்களால் (துர்க் கன் விடுத்த பலபடைகளை) மாற்றினர். எ-று.

கப்பணம்-இருப்பு நெரிஞ்சின்முள்; கைவேல். (கங)

பண்ணு லாவிய மழலை மென்மொழி படைகள் யாவும கற்றவெங்
கண்ண ழற்பொறி கதுவ நீள்புகை காலும் வெஞ்சின வவுணர்கோன்
விண்ணு ளோருயிர் நாளு நாளும் விழுங்கி வெண்ணிண முடையறா
வண்ண லஞ்சுடர் வேலவி டுத்தலு மஞ்சி வானவ ரோடினார்.

(இ-ள்.) பண்ணோசைதங்கிய மெல்லிய மழலைச்சொல்லையுடைய உமாதே வியார் (தன்பேரில் அசுரன்செலுத்திய) எல்லா ஆயுதங்களையுமொழிக்கவும், கொடிய கண்கள் நெருப்புப்பொறி சிந்தும்படி மிக்க புகைபடும் பெருங்கோபத்தையு டைய அசுரோசனாகிய துர்க்கன், ஆகாயவாசிகளாகிய அமரருயிரைத் தினந்தினம் புசித்து வெள்ளியநிணத்தின் புலால்நாற்றம்நீங்காத பெருமைதங்கிய அழகிய ஒளி யோடு கூடிய வேலாயுதத்தைச் செலுத்தவும், தேவர்கள் பயந்து ஓட்டம்பிடித் தனர். எ-று. (கச)

அஞ்சல் வானவ ரொன்று செங்கை யமைத்த ணங்கர வார்த்திடும்
வஞ்சி நுண்ணிடை யவுணர் கோனெறி வேலை வாள்கொடு மாற்றவே
நஞ்சு மிழ்ந்தெரி நேமி தேவர் நடுங்க வஞ்சன்வி டுத்தலும்
வெஞ்சி னக்கதை யொன்று கொண்டது விளிய மோதிவி லக்கினாள்.

(இ-ள்.) தேவர்களே! பயப்படாதீர்களென்று, அழகிய சர்ப்பாபரணம் பூண்ட வஞ்சிக்கொடியைப்போன்ற நுண்ணிய இடையையுடைய உமாதேவியார் தமது சிவந்த திருக்கரத்தாலமர்த்தி, துர்க்கன் செலுத்திய வேலாயுதத்தை வாளா யுதத்தினால் மாற்றவும், வஞ்சகனாகிய துர்க்கன் விஷத்தைக்கக்கி எரிகின்ற சக்கரா

யுதத்தை அமரர் அஞ்சும்படி விடவும், (உமாதேவியார்) பெருங்கோபத்தையு டைய ஒரு கதாயுதத்தைக்கொண்டு அச்சக்கரமழிய அடித்துவிலக்கினர். எ-று.

கொற்ப மூத்துமிழ் நேமி நூறு படுத்தல் கண்டு சினங்கொளீஇ
மற்ப மூத்துயர் தோளி ளுெருவாளி தொட்டிது காவென
வற்ப மூத்தளி கிண்டு மென்மல ரமமெ லோதிந கைத்துநீள்
விற்ப மூத்துமிழ் வெங்க டுங்கணை யொன்று கொண்டு விலக்கினாள்.

(இ-ள்.) கொலைத்தொழில் மிகுந்து விளங்குஞ் சக்கராயுதத்தைப் பொடி யாக்குதலைப் பார்த்துக் கோபங்கொளுவி, மறபோர்மிகுந்த புயங்களையுடைய தூர் க்கன் ஓரஸ்திரத்தைப் பிரயோகித்து, இதைக் காத்துக்கொள் என்றுசொல்ல, கருநிறமிகுந்த வண்டுகள்கிண்டும் மெலவிய மலர்சூடிய அழகிய மிருதுவாகிய கூந் தலையுடைய உமாதேவியாா சிரித்து, பேரொளிவீசும் மிகக்கொடிய அஸ்திரமொ ன்றினால் அதை விலககினர். எ-று. (கசு)

ஆல கால முயிர்ப்ப தேழ்கட லடைய வற்றவ யின்றெழுங்
கால வெங்கன லொடுபி றந்தது கழிபு லால்முடை கமழ்வது
கோலும் வெஞ்சம ரதனில் வானவர் குருதி வேலைகு டிப்பதாஞ்
சூல மொன்று விடுத்த ணங்கெதிர் நின்று தோள்புடை கொட்டினான்.

(இ-ள்.) ஆலகாலவிஷத்தைச் சொரிவதும், சத்தசமுத்திரங்கள் முழுவ தும் வறளக் குடித்தெழத்தக்க, கொடிய ஊழித்தீயுடன் ஜனித்ததும், மிகுந்த புலால்நாற்றத்தை வீசுவதும், வெவவிய போர்முனையில் தேவர்களது உதிரக் கடலை யுண்பதுமாகிய ஒரு சூலாயுதத்தைத் (தூர்க்கன் உமாபிராட்டியார்பேரிற்) செலுத்தி, தேவியாருக்கெதிர்நின்று தோள்களைக் கொட்டி ஆர்ப்பரித்தான்.

பாறு சூழ்வர வல்கை கோடி படர்ந்து முன்செல வெண்ணிணச்
சேறு பூசிய திர்ந்து வானுரு மேறு பற்பல சிந்தியே
மாற டர்த்திடு சூல மெய்தலு மங்கை சூலம் விடுத்தவன்
வேறும் யாமெனு மாசை யோடெதிர மேவு சூலம்வி லக்கினாள்.

(இ-ள்.) பருந்துகள் சூழ்ந்துவரவும், கோடி அலகைகள் விரைந்து முன் செல்லவும், வெண்மைமிகுந்த நிணத்தொய்யிலெழுதிக் கர்ச்சித்து ஆகாயத்தி லுள்ள ஆண் இடிகள் அநேகஞ் சிதறிப் பகைவரைக் கொல்லுஞ் சூலப்படை வர வும், உமாதேவியார் தமது சூலாயுதத்தை விடுத்து, தூர்க்கன் தாம் வெல்லுவோ மென்னு மாசையுடன் செலுத்திய சூலத்தைத் தடுத்தனர். எ-று.

வேறும் என்பதில் வெல் பகுதி. (கஅ)

விலக்க ருங்கதை யொன்று கொண்டு வெகுண்டெ டிர்ந்திக லவுணர்கோ
னலக்க ணெய்த வடிக்க வெங்கதை யாயி ரந்துக ளாதலுஞ்
சிலைக்கொ டும்புரு வக்க ருங்குயில் செஞ்சி லம்புபு லம்பவோர்
மலர்ப்ப தங்கொடு தைப்ப வங்கவன் மண்ணில் வீழ்ந்தும யங்கினான்.

(இ-ள்.) தடுத்தற்கரிய கதாயுத மொன்றினைக்கொண்டு கோபித்து எதி ர்த்துப் போர்செய்யுந் தூர்க்கன், துன்புறும்படியடிக்க, கொடிய கதை ஆயிரந்

துண்டுகளாக முறியவும், வில்லைப்போல வளைந்த புருவத்தையுடைய கரிய குயில் போன்ற பார்ப்பதியம்மையார் செவ்விய பாதசரஞ் சத்திக்கும்படி மலர்போன்ற ஒரு திருவடியைக்கொண் டுதைக்க, அத்தூர்க்கன் நிலத்தில் விழுந்து மூர்ச்சைய டைந்தான். எ-று. (௧௯)

வெய்ய வாளசு ரேசன் வீழ்தலும் வெம்ப ரித்திரள் வெள்ளமு
மையல் மாமத யானை வெள்ளமு மள்ள ரெண்ணறு வெள்ளமுங்
கொய்யு ளைப்பரி பண்ண மைத்தெதிர் குலவு தேர்நிரை யாவையு
மையை யேவிய சத்தி சென்றொர ணாக்க ணத்தில றுத்ததே.

(இ-ள்.) கொடியவாளாயுதமேந்திய தூர்க்கன் (நிலத்தில்) விழவும், வெவ்வி ய குதிரைத்தொகுதியாகிய வெள்ளவும், மதமயக்கம்பொருந்திய பெரிய யானை வெள்ளமும், காலாட்களின் கணக்கில்லாத வெள்ளமும், கத்தரிக்கின்ற புறமயி ரையுடைய குதிரைகள் கல்லணைபூட்டி எதிர்நடக்குந் தேர்வரிசையுமாகிய எல்லா வற்றையும் உமாதேவியார் அனுப்பிய சத்தியானது சென்று அரைக்ஷணத்தில் அழித்தது. எ று. (௨௦)

தூர்க்கன் படையெழுச்சி ஆ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௪௯௯.

எழுபத்தோராவது,

## தூர்க்கன் வதை அத்தியாயம்.



ஐயை சேவடி யாலு தைப்பவ லக்க ணுற்றெழு மவுணர்கோன்
வெய்ய சேனைகள் யாவு மின்றிவி ளிந்த வாறும னக்கொளா
மைய வார்குழ லையை யோடமா மலையு மாறரி தென்னவெம்
பைய ராவின் வெருண்டு விண்ணின மறைந்து பாய்கணை தூவினான்.

(இ-ள்.) உமாபிராட்டியாரது திருவடியா லுதைக்கலால், துன்புற்றெழு ந்த அசுரேசனாகிய தூர்க்கன், தனதுவலிதங்கிய சைந்நியங்களெல்லாமில்லாமல் இறந்தவகையை மனதிற்கொண்டு, நெடிய கறுத்த கூந்தலையுடைய பார்ப்பதி யம்மையாருடன் போர்செய்யும்விதம் அருமையானதென்று, கொடிய விடத்தை யுடைய பாம்புபோற் பயந்து ஆகாயத்தி லொளித்துப் பாய்கின்ற பாணங்களைத் தூண்டினான். எ-று. (௧)

ஆலி மாமழை தூவி வானெழு மசனி யேறென வதிர்தலும்
வேலை யேழும் விழுங்கு தீமுக வெய்ய வாளியின் மாற்றினாள்
காலன் வெங்கிட வமர்மு ருக்கிய கருதி றத்திக லவுணர்கோன்
மாலவு ணக்குல நூறு கோடி பிடுங்கி நின்று வழங்கினான்.

(இ-ள்.) (துர்க்கன்) பெரிய கல்மழைபொழிந்து ஆகாயத்திற்றோன்றிய ஆணிடிபோலக் கர்ச்சிக்கவும், (உமாதேவியார்) சப்தசமுத்திரங்களையுங் குடிக்கின்ற அக்கினிமுகத்தையுடைய கொடிய பாணங்களால் நீக்கினர். இயமன் புறமுதுகிடடோமெம்படி சண்டைசெய்த கருநிறத்தையுடைய வலிய அசுரேசன் பெரிய மலைக்கூட்டங்கள் நூறுகோடி பறித்து (தேவியாரபேரில்) எறிந்துநின்றனன்.

விடுத்த மால்வரை யாவு நுணபொடி யாகி மண்ணிடை வீழ்தரத்
தொடுத்த பல்கணை கோடி கோடி யிமைப்பி னின்றெதிர் தூவினுள்
மடித்த வாயின னெயிறு தின்றழல் மாரி சிந்திடு கணணினன்
பிடித்த விலலின னன்னை முன்னொரு பெய்ம தக்களி றாயினன்.

(இ-ள்.) (துர்க்கன்) விடுத்த பெரியமலைகளெல்லாம் நுண்ணிய பொடியாகிப் பூமியில்விழ, (உமாபிராட்டியார் வில்லில்) தொடுத்த பலகோடாகோடி அஸ்திரங்களை க்ஷணப்பொழுதில் எதிாநின்று தூவினர். மடித்த வாயையுடையவனும், பற்கடித்து நெருப்புமழையைச் சொரியுங் கண்ணையுடையவனும், கையிலேந்திய வில்லையுடையவனுமாகிய துர்க்கன் தேவியார் திருமுன்னே மதநீர் சொரியும் ஒரு யானைவடிவாயினன். எ-று. (௩)

பாற்றி னம்பல கோடி சூழ்வரு பருமயானைமு றச்செவிக்
காற்றி னுயர் குடுமி மால்வரை கால்கி ளர்ந்திட வழிகடா
மூற்றி ருந்துய ரருவி பாய்தர வுரறி வந்தெதிர் மலைதலுஞ்
சீற்ற வாளி னெடும்பு ழைக்கை சிதைந்து வீழ்தர வெட்டினன்.

(இ-ள்.) பருந்துக்கூட்டங்கள், பலகோடிகள் சூழ்ந்துவரும், நெற்றிப்பட்டமணிந்த யானையின் முறம்போன்ற காதின் காற்றினால் உயர்வாகிய உச்சியையுடைய பெரிய மலைகள் அடிபெயரவும், வழிகின்ற மதசலம் ஊற்றெடுத்து உயர்வாகிய அருவியாறுபோலப் பாயவும், பெருங்கோபமுற்று எதிர்வந்து செருச்செய்யவும், (உமையம்மையார்) கோபங்கொண்ட வாளாயுதத்தால் நெடிய துதிக்கை சிதையுண்டு விழும்படிக்கு வெட்டித்தள்ளினா. எ-று.

பருமம்=நெற்றிப்பட்டம். (௪)

ஓடை மால்கரி யுருவ வீழ்தலு முலகம் யாவும் வெருக்கொள
வாட கக்கிரி யடிபெ யர்ந்திட வகன்ம ருப்பின சைத்துமேல்
நீடு யிர்ப்பினி லெழுக டற்புன னிலைபெ யர்ந்துய ரடைகளைப்
பாடு கொன்றிட மைநி றத்தப கட்டின் வெவ்வுரு வாயினன்.

(இ-ள்.) முகபடாமணிந்த பெரிய யானைவுரு வழிந்துவிழவும், சமஸ்த லோகங்களுமஞ்ச மேருமலை அடிபெயரும்படி பெரிய கொம்பினால் அசைத்து, மேல்நோக்கியெழும் நெடுஞ்சுவாசத்தினாற் சத்தசமுத்திரத்திலுள்ள நீர் இடமாறி உயர்வாகிய கரையையழிக்கத்தக்க மேகநிறம்பொருந்திய கொடிய எருமைக்கடாவடிவேற்றனன். எ-று. (௫)

பகட்டின் வெவ்வுரு வொழிய முத்தலை வேல்ப ணித்தலு மவுணன்வான்
முகட்டெ ழுந்துகை யாயி ரங்கதிர் முடிக ளாயிர மாகியே

தகட்டி தழ்க்கம லப்போ குட்டுறை சதுமு கத்திறை தன்னொடு
மகட்டி னேழுல குமப டைத்தரு ளன்னை முன்ன ரடைந்தனன்.

(இ-ள்.) கொடிய எருமைக்கிடாவின் வடிவமழியும்படி (உமாதேவியார்) சூலாயுதத்தைச் செலுத்தவும், துர்க்கன் ஆகாயத்துச்சியிற் றோன்றி அச்சவடிவாகிய இதழையுடைய தாமரைக்கொட்டையில் வசிக்கும் நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவனுடன் ஏழுலகங்களையும் (அவற்றிலுள்ள ஆன்மகோடிகளோடு) வயிற்றிலிருந்து பெற்ற ஈச்சுவரியார்முன் கைகளாயிரம்,பிரகாசிக்கின்ற முடிகளாயிரமாகிச் சென்றனன். எ-று. (சு)

ஆயி ரம்படை யாயி ரங்கர மிசையெ டுத்தட லவுணர்கோன்
மாயி ரும்புவி மறைய வீசலு மங்கை வானிலெ ழுந்துபோய்க்
காயும் வெங்கதிர் கதுவ வெய்யக னற்கொ டுங்கணை யொன்றினாற்
றீய னுருயிர் வவ்வி னுள்மலர் சிந்தி வானவர் துள்ளினர்.

(இ-ள்.) ஆயிரம் ஆயுதங்களை ஆயிரங்கைகளிலெடுத்து அசுரேசனாகிய துர்க்கன், பெரிய விசாலமாகிய உலகம் மறையத்தக்கதாய் வீசவும், அம்மையார் ஆகாயமார்க்கத்திலெழும்பிச்சென்று காய்கின்ற கொடிய கிரணங்கள் பற்றும்படி வெப்பமான நெருப்பைத்தரத்தக்க கொடிய அஸ்திரமொன்றினால் தீயனாகிய துர்க்கனது அரிய உயிரைக் கொன்றனர். தேவர்கள் மலர்மாரிசொரிந்து களிப்பாற் றுள்ளி யாடினர். எ-று. (எ)

உலகம் யாவுமி யற்றி மீள வொடுக்கி யோருரு வாகிமற்
றலகி லாவுரு வெய்தி முக்குண மாகி முச்சுட ராகிநீ
டிலகு பேரொளி யாய்நி றைந்தரு ளிறைவி யென்றிரு செய்யதாண்
மலர்வ ணங்கி முகுந்த னாதிய வமரர் மற்றிது கூறுவர்.

(இ-ள்.) எல்லா வுலகங்களையுஞ் சிருட்டித்து மீண்டும் லயப்படுத்தி ஏக வடிவமாயும் எண்ணில்லாத திருவுருவாயும், (ரஜஸ், தமஸ், சத்துவமென்னும்) முக்குணமாகியும், (சூரிய சோமாக்கினியென்னும்) முச்சுடராகியும், நெடிதாய்விளங்கும் பேரொளிப்பிழம்பாய் வியாபித்தருளும் தலைவியே யென்று துதித்து, செவ்விய இரண்டு பாததாமரைகளைவணங்கி மாயவன்முதலிய வானவர் (பின்வரும்) இக்கவசத்தைக் கூறுவாராயினர். எ-று. (அ)

துர்க்கன் வதை அ-ம்.

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் கஎஎ.

சிவமயம்.

எழுபத்திரண்டாவது

## வச்சிர பஞ்சரகவச அத்தியாயம்.



அங்கையிற் கரகந் தாங்கும் பிரமாணி யருளி னோடுந்
துங்கமென சென்னி காக்க வயிணவி துகளி லாக
மெங்கணுங் காக்க செய்ய வேந்தெழி லுருத்தி ராணி
தங்குமெண் டிசையு மன்பு தழைத்திட வினிது காக்க.

(இ-ள்.) அழகிய கையில் (அமுத) கலசத்தையேந்திய பிரமாணி கிருபையுடன் எனது பரிசுத்தமாகிய மெல்லிய சிரசைக் காக்க. வயிணவி குற்றமில்லாத உடல்முழுவதுங் காக்க. செம்மையாகிய அழகுதங்கிய உருத்திராணி, நிலவிய அஷ்டதிக்குகளிலும் அன்புமிகும்படி நன்முகக் காக்கக்கடவள். எ-று.

காக்க என வருமிடந்தோறுங் காக்கக்கடவள் எனக் கொள்க.

பிரமாணி-பிரமனதுசத்தி. வயிணவி,உருத்திராணிமுதலாக இக்கவசத்தில் இனிவருந் திருநாமங்கள் சத்தியினுடைய மாயைகாரியத் திருவிரு விசேடத்தாலெய்திய பலநாமங்களெனக. அவையொவ்வொன்றும் விரிப்பிற் பெருகுமாதலின் விடுத்தாம். (௧)

கொன்னுனைச் சூலி சென்னி மயிரினைக் குறித்துக் காக்க
மன்னுவெண் பிறைதாழ் சென்னி வயங்கொளி நெற்றி காக்க
பன்மயிர்ப் புருவ நாளும பரிவொடு முமையாள் காக்க
வென்னையாள் முக்க ணீச னிறைவிகண் ணிணைகள் காக்க.

(இ-ள்.) கொல்லத்தக்க முனையையுடைய சூலமேந்தியவள் சிரத்திலுள்ள உரோமத்தைக் குறிப்பிட்டுக் காக்க. நிலைபெற்ற வெள்ளிய பிறைச்சந்திரனை யணிந்த சிரசையுடையவள் ஒளிவிளங்கும் நெற்றியைக் காக்க. உமையாள் பல மயிர்கள்பொருந்திய புருவத்தைத் தினமும் ஆசையுடன் காக்க. என்னை யாளாகக்கொண்ட திரிநேத்திரங்களையுடைய ஈச்சுவரி இருகண்களைக் காக்க. எ-று. (௨)

வயமிகு மிமய வலவி மூக்கினை மகிழ்ந்து காக்க
செயையொடு விசையை மேல்கீ ழிதழினைச் சிறந்து காக்க
வயிலுடைச் சுருதி தூய வஞ்செவி காக்க தண்ணென்
பயின்மல ருறையுஞ் செலவி பலவினை யுவந்து காக்க.

(இ-ள்.) வெற்றிமிகுந்த இமாசல மன்னன் புதல்வி களிப்புடன் மூக்கைக் காக்க. ஜெயையும், விஜையையும் மேல் கீழ் இதழ்களை மிகுந்து காக்க. வேலாயுதமேந்திய சுருதியென்பவள் பரிசுத்தம்பொருந்திய அழகிய காதுகளைக் காக்க குளிர்ச்சிதங்கிய தாமரை மலரில்வசிக்கும் நாராயணி பல்லை விரும்பிக் காக்க. எ-று.

சண்டிமென் கபோலங் காக்க தவளநாண் மலரின் வைகு
மொண்டொடி நன்னுக்காக்க விசையைமங் கலைமற் றெவ்வாக்

கண்கவர் நாடி காக்க காத்தியா யனியெஞ் ஞான்று
முண்டக மலரிற் றூய முகத்தினைச் சிறந்து காக்க.

(இ-ள்) சண்டியென்பவள் மெல்லிய கபோலத்தைக காக்க. புதிய வெண்டாமரையில் வசிக்குஞ் சரச்சுவதி நல்ல நாவைக் காக்க. விஜையை மங்கலைகள் இணையில்லாத கண்ணைக் கவரத்தக்க (காந்தாரி) நாடியைக் காக்க. காத்தியாயனி தாமரைமலர்போற் பரிசுத்தமாகிய முகத்தை யெப்போதுஞ் சிறப்புடன்காக்க.

**காந்தாரி** எனபது கண்ணிற் பொருந்துகின்ற நாடி. (௪)

காளமுண டிருண்ட நீல கண்டிமென் கழுத்துக் காக்க
கோளில்பூ தார சத்தி சுவற்புறங் காக்க கூர்மி
நீளொளிச் சந்தி காக்க வயிந்திரி நெறியி னோடிரு
தோளிணை காக்க பத்மை துணைமல ரங்கை காக்க.

(இ-ள்.) விஷபானஞ்செய்து கறுத்த ஸ்ரீகண்டத்தையுடையவள் மெல்லிய கழுத்தைக் காக்க. குற்றமில்லாத பூதாரசத்தி முதுகுப்புறத்தைக் காக்க. கூர்மி ஒளியிருந்த சந்திகளிற் காக்க. அயிந்திரி முறையுடன் இருதோள்களையுங் காக்க. பதுமையென்பவள் இரண்டு மலர்கள்போன்ற உள்ளங்கைகளைக் காக்க.

கமலைகை விரல்கள் காக்க விரசைகை யுகிர்கள் காக்க
திமிரமுண் டொளிரும் வெய்யோன் மண்டலத் துறையுஞ் செல்வி
யெமதிரு வாகு மூலங் காக்கவா னவர்க ளேத்த
வமிர்தல கரிநா ளுளு மகன்மணி மாபங் காக்க.

(இ-ள்.) கமலையானவள் கைவிரல்களைக் காக்க. விரசையென்பவள் கைநகங்களைக் காக்க. இருட்குறும்பை யடக்கிப் பிரகாசிக்குஞ் சூரியனது மண்டலத்திலுள்ள செல்வி எமது இரண்டு அக்குள்களைக்காக்க. தேவர்கள் துதிசெய்யும்அமிர்தலகரி தினந்தினம் விசாலமாகிய அழகிய மார்பினைக் காக்க. எ-று. (௬)

தரித்திரி யிதயங் காக்க தயித்தியர்ச் செகுப்போள் மிக்க
கருத்தொடு முலைகள் காக்க சகத்தினி லிறைமை பூண்டோள்
திருத்தகு வயிறு காக்க திகழ்தபோ கதிதன் னுள்ளத்
தருத்தியி னுந்தி காக்க வசைவளர் முதுகு காக்க.

(இ-ள்.) தரித்திரி இதயத்தைக் காக்க. தயித்தியசம்ஹாரி மிகவிருப்புடன் தனங்களைக்காக்க. உலகத்தில் தலைமைபூணடவள் அழகியவயிற்றைக் காக்க. விளங்குகின்ற தபோகதி தன்மனதில் ஆசையுடன் கொப்பூழைக் காக்க. அசையென்பவள் வளர்கின்ற முதுகைக்காக்க. எ-று. (௭)

கருதரு விகடை காக்க கடிதடம் பாமை வாய்ந்த
குருமணிச் சகனங் காக்க குகாரணி குய்யங் காக்க
வருட்ர வரும பாய கந்தினி யபானங் காக்க
தெருளுடை விபுலை யென்றுஞ் சிறப்புடைக் குறங்கு காக்க.

(இ-ள்.) எண்ணுதற்கரிய விகடை கடித்தலத்தைக்காக்க. பாமையென்பவள் செந்நிறம்பொருந்திய சகநத்தைக் காக்க. குகாரணி யென்பவள் குறியைக்

காக்க. இருமையைபாலிக்கும்படி யெழுந்தருளும் அபாயகநதினி அபாநதலைதக்காக்க. ஞானத்தையுடைய விபுலை சிறப்புடைய புஷ்டத்தையெப்போதுங்காக்க.

கடிதலம்=யோனி. (அ)

வளிதைமென் முழந்தாள் காக்க வியற்சபை கணைக்கால காக்க
களிதரு கோரை வாய்ந்த பரட்டினைக காக்க மிக்க
வளிகொள்பா தலத்திற் செலவோ ளணிகெழு புறநதாள் காக்க
வொளிர்நகம் விரலகள் சந்திரி யுக்கிரி யுவந்து காக்க.

(இ-ள்.) இலவிதை மெல்லிய முழங்கால்களைக் காக்க. (அன்பு) பொருந்திய சபையென்பவள் கணைக்கால்களைக் காக்க. சந்தோஷந் தருங் கோரை பரட்டினைக் காக்க. மிகுந்த அன்புகொண்ட பாதலத்திற் செலபவள் அழகு மிகுந்த புறங்காலகளைக் காக்க. சந்திரி, உக்கிரி யெனபோர பிரகாசிக்கும் (கால்) நகத்தையும், விரல்களையுங் களித்துக் காக்க. எ-று. (கூ)

தலத்துறை மடந்தை யுள்ளங் காலிணை காக்க தண்ணென்
மலர்த்திரு மனையைக் காக்க வயங்குகேத் திரதை யோங்கி
யுலப்பில்கேத் திரங்கள் காக்க பிரியகரை யொழிவ ருது
நலத்தகு மக்க டம்மை நன்குறக் காக்க வன்றே.

(இ-ள்.) உலகில் வாழும் மடந்தையென்பவள் இரண்டு உள்ளங்கால்களையுங் காக்க. குளிர்ச்சிதங்கிய மலரில்வசிக்கும் இலக்குமி வீட்டினைக் காக்க. விளங்குகின்ற கேத்திரதையென்பாள் சிறந்து கெடுதலில்லாத நிலங்களைக்காக்க. பிரியகரை நீக்கமின்றி நன்மைமிகுந்த மக்களை மேம்படக் காக்க. எ-று. (கo)

உயர்சனு தனியெஞ்ஞான்று மொழிவறு மாயுள் காக்க
மயர்வறு சீர்த்தி யாவு மாதேவி காக்க மிக்க
செயிரறு தருமம யாவுந் தனுத்திரி சிறந்து காக்க
வியல்புடைக குலத்தை வாய்ந்த குலதேவி யினிது காக்க.

(இ-ள்.) உயர்வாகிய சனுதனி எக்காலத்துங் கெடுதலில்லாத உயிர்வாழ்நாட்களைக் காக்க. மகாதேவி மயக்கமற்ற சிறப்பையெல்லாங் காக்க. தனுத்திரி குற்றமற்ற தருமங்களையெவலாம் மிக மேம்பாடுற்றுக் காக்க. பொருந்திய குலதேவி இயற்கைக்குணமமைந்த குலத்தை நனகுறக் காக்க. எ-று. (கக)

சற்கதிப் பிரதை நல்லோ ரியைபினைத் தயாவிற் காக்க
விற்கொடும் போரி னீரில் வெளியினில வனத்திற் சூதி
லிற்புற மதனி லோங்கு சாவாணி காக்க வென்னுப்
பொற்றரு மலர்க டூவிப் புங்கவ ரேத்தி னரே.

(இ-ள்.) நற்கதியை யுதவும் பிரதை நல்லவ ரிணக்கத்தைத் தயவோடு காக்க. உயர்வாகிய சர்வாணி விலலேந்திய கொடிய யுத்தத்திலும் ஜலத்திலும் வெற்றவெளியிலும் அரண்யத்திலும் வனத்திலும் சூதாட்டத்திலும் வீட்டிலும் வீட்டுப்புறத்திலும் காக்க வென்று, கற்பகவிருட்சத்தின் மலர்களா லருச்சித்துத் துதித்தார்கள் தேவர்கள். எ-று. (கஉ

அந்தளிரப் புரையுஞ் செய்ய வடிமல ரிறைஞ்சி யேத்து
மிந்திரன் முதலி னோரை யெழுகென நோக்கி நீவிர்
சிந்தையுற் றுரைத்த வச்சிர பஞ்சரஞ் செபிக்கி லாகம்
வெந்திடக் கனற்றுந் தீய வெப்புநோ யொழியு மன்றே.

(இ-ள்.) அழகிய மாந்தளிரைப் போன்ற சிவந்த திருவடித்தாமரைகளை நமஸ்கரித்துத் துதிக்குந் தேவேந்திரன் முதலானவர்களை (நிலத்தினின்று) எழுந்திருங்களென்று திருவாய்மலர்ந்து திருக்கண்சாத்தி, நீங்கள் துன்புற்றுச்சொல்லிய வச்சிரபஞ்சர கவசத்தை (எவரேனும்) செபித்தால், உடல்வேகும்படி சுடுகின்ற கொடிய சுரநோய் விலகும். எ-று. (கங)

இனியினிக் கவசந் தன்னை யெட்டுரு முறையி னோதிப்
புனிதநீ ரருந்தி லுந்திப் பொருந்துநோ யனைத்துந் தீருங்
கனையிருட் கங்குற் போதிற் கவசநன் கோதி யேகிற்
றுனைவுறு குறுந்தாட் பூதம் பேயிவை தொடர்ந்தி டாவால்

(இ-ள்.) இக்கவசத்தை நன்ருக முறையுடன் எட்டுருச் செபித்துப் பரிசுத்தமாகிய சலத்தைக் குடித்தால் வயிற்றிற் பொருந்திய வியாதிகளெல்லாம் விலகும். இருள் மிகுந்த இராக்காலத்தில் இக்கவசத்தை நன்ருக உச்சரித்துச் சென்ருல், துன்பம் பொருந்திய குறுகிய காலையுடைய பூதம் பேய் இவைகள் பின்வர மாட்டா. எ-று. (கச)

பொறையுயிர்த் திடாது நோயிற் புலம்புவோர்க் கினிது நீவி
ரறையுமிக் கவசந் தன்னை யருகிருந் தோதித் தூய்தாய்
நறியதண் புனலை யோதி யளித்திடி னவையி லாத
சிறுவரை விரைவின் மிக்க சிறப்பொடு முயிர்ப்பர் மாதோ.

(இ-ள்.) பிரசவிக்காமற் கருப்பவாதனையால் அழுவோருக்கு நீங்கள் இனிதாகச் செபிக்கின்ற இவ்வச்சிரபஞ்சர கவசத்தைச் சமீபத்திலிருந்து செபித்துப் பரிசுத்தமாகிய குளிர்ச்சிதங்கிய நல்லசலத்தை ஓதிக்கொடுத்தால், (அக்கற்பிணிகள் வாதனைநீங்கி) குற்றமில்லாத குழந்தைகளைச் சீக்கிரத்தில் மிகுந்த மேம்பாட்டுடன் பெறுவார்கள். எ-று. (கரு)

களிறுவீழ் ஞாட்பிற் கூறுங் கவசமோர்ந் தினிதி னோதி
னொளிரும்வேற் பகைஞர் தானை யுடைந்துவெந் கொடுத்து நீங்கும்
வெளிறிலிக் கவச மோதி மென்புன லளிக்கிற் றீஞ்சொற்
றளர்நடைப் புதல்வர்க் கென்று முறுபிணி சார்ந்தி டாவால்.

(இ-ள்.) யானைக ளிறக்கும் யுத்தகளத்தில், சொல்லுகின்ற இக்கவசத்தை யறிந்து இனிதாகச் செபித்தால் பிரகாசிக்கின்ற வேலேந்திய சத்துருசேனை கலைந்து புறமுதுகுகாட்டியோடும். வெளிப்படுதலில்லாத இக் கவசத்தைச் செபித்து நல்லசலத்தைக் கொடுத்தால், மதுரமாகிய சொல்லையுடைய தளர்நடை வாய்ந்த பிள்ளைகளுக்கு எப்போதும் வரத்தக்க வியாதிகள் அடையமாட்டா. எ-று. (கசு)

இனையநற் கவசந் தன்னை யாரெடுத் தியம்பு கின்றா
ரனையவர் தமையென் னேடுஞ் சத்திக ளளிக்கு மென்னுப்
புனையிழை யமரர் வேட்ட நல்வர மளித்துப் பொங்குங்
கனையிருட் பிழமபு சீக்குந் தன்னுழைக் கரந்து போனாள்.

(இ-ள்) இத்தன்மைத்தான வச்சிரபஞ்சர கவசத்தை எவர்கள் எடுத்துக்கூறுகின்றவர்களோ அவர்களை என்னுடன் சத்திகள் காக்கும் என்று திருவாய் மலர்ந்தருளி, அலங்கரிக்கின்ற ஆபரணமணிந்த தேவர்கள் விரும்பிய நல்ல வரங்களையநுக்கிரகித்து, மிகுந்த இருட்டொகுதியை யொழிக்குந் தன்னிடத்தில் அந்தர்த்தானமாயினர் (உமாதேவியார்.) எ-று. (௧௭)

துற்கனைக் கொன்ற வாற்றால் துர்க்கையா யினளிம் மானைப்
பொற்பின்மங் கலவா ரத்திற் புகலசதுர்த் தசியின் மிக்க
வற்பொடுங் கன்னித் திங்க ணவமியட் டமியிற் போற்றப்
பற்பல துயரு நீங்கிப் பார்முழு தாள்வ ரன்றே.

(இ-ள்) துர்க்கனைச் சங்கரித்ததன்மையால், துர்க்கையென்னும் பெயருற்றனள். இத் தேவியை அழகிய மங்கலவாரத்திலும், சொல்லுகின்ற சதுர்த்தசித் திதியிலும், புரட்டாசிமாதத்தில் நவமி அட்டமிகளிலும் மிகுந்த ஆசையோடுந் துதித்தால், அவர்கள் (தங்கட்குற்ற) பலவகைத்தான துன்பங்களும் விலகி உலக முழுவதையும் அரசாளுவர். எ-று. (௧௮)

ஆயிரங் கண்ணி யன்ன முகத்தின ளன்ன கையள்
பாய்பரி யூர்தி வெய்ய வயோமுகி தொனிகை பண்பிற்
றீயவெம் பிணத்தின் மேலோள் விச்சுவை கௌரி செப்பு
மேயவொன் பதின்மர் காசி வியனக ரளிப்ப ரன்றே.

(இ-ள்.) சஹஸ்ரவிலோசனி - சஹஸ்ரானனி - சஹஸ்ரபுஜை - பாய்ந்து செல்லுங் குதிரைவாகனம்பெற்றஅஸ்வாரூடை-கொடிய அயோமுகி-தொனிகை-தீமைதங்கிய பிரேதாசனி - விச்சுவை - கௌரி என்று சொல்லும் பெயர்கள் பொருந்திய நவசத்திகள் பெரிய காசிநகரத்தைக் காக்கின்றனர். எ று. (௧௯)

வயிரவ ரெண்ம ரெண்ணெண் கூளிகள் வரம்பில் பூதஞ்
செயிரில்தே வியர்க ளுள்வர் தேம்பொதி நறவ மாநதிக்
குயில்குடைந் தாடுஞ் சோலைக் குண்டக மூடுத்த செம்பொ
னெயில்கட நோங்கு காசி நகரினி தளிப்ப ரன்றே.

(இ-ள்.) அஷ்ட வயிரவர்கள் - அறுபத்துநான்குகூளிகள் - கணக்கில்லாத பூதங்கள் - குற்றமற்ற (ஒன்பது) சத்திகள் (ஆகிய) இந்நால்வகையாரும், வாசனை தங்கிய தேனைக் குடித்து குயில்கள் குடைந்து விளையாடுகின்ற சோலைசூழ்ந்த ஆழமாகிய அகழியை ஆடையாகவுடைய செம்பொன்னாலாகிய மதில்விளங்கும் உயர்ந்த காசிநகரத்தை இனிதாகக் காக்கின்றனர். எ-று. (௨௦)

இன்னநற் கதையைக் கேட்போர் பயின்றுளோ ரெழுதி வைப்போர்
துன்னருந் துன்ப நீங்கி யளப்பரும் போகந் துய்த்துக்

கன்னலிற் கனிந்த தீஞ்சொ லரமபையர் கவரி நீழற்
பொன்னுல கினிது காக்கும் புரந்தரன் போல வாழ்வார்.

(இ-ள்.) இத்தன்மைத்தான (துர்க்கசம்ஹாரமாகிய) நல்ல சரிதையைக் கேட்டவர்களும், வாசித்தவர்களும், (ஏட்டில்) எழுதிவைத்தவர்களும், அனுபவித்தற்கரிய துன்பங்களையொழிந்து, எண்ணில்லாத இஷ்டபோகங்களைப்பெற்று, கற்கண்டுபோலும் மதுரமாகிய சொல்லையுடைய தேவமாதர் (கையிற்பற்றி விசிறும்) சாமரைக்கற்றையினிழலில் தேவலோகத்தை நன்றாக ரக்ஷிக்கும் இந்திரன் போல உயிர்வாழ்வார்கள். எ-று. (உக)

வச்சிரபஞ்சர கவச அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் கஎகூஅ.

---

எழுபத்து மூன்றாவது

## ஓங்கார விலிங்கத்தின் கதையுரைத்த அத்தியாயம்.

கூன்பிறை முடித்த சென்னிக் கூத்தன்வண் டறைந்து பாடுந்
தேன்படு கூந்தல கேட்பத் திரிலோசனத் துரைத்த காதை
வான்படு தவத்தின் மிக்க மறைமுனி கேட்டி யெனன
வூன்சுவைத் தொளிரும் வைவேற் பண்ணவ னுரைக்கு மன்றே.

(இ-ள்.) வளைவாகிய பிறைச்சந்திரனைச்சடையிற்சூடிய சிவபிரான், வண்டுகளிறைச்சலிட்டுப்பாடுகின்ற தேன்சொரியுங் கூந்தலையுடைய உமாபிராட்டியார் கேட்கும்படி, திரிலோசனத்திற் கூறிய சரிதையை, மேம்பாடுதங்கிய தவத்தில் மிகுந்த வேதங்களையுணர்ந்த அகஸ்தியமுனிவனே! கேட்பாயாகவென்று, (அசுரரது) மாமிசத்தைச் சுவைத்துப் பிரகாசிக்கின்ற கூர்மைவாய்ந்த வேற்படைதாங்கிய ஸ்ரீமுருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளத் தொடங்கினர். எ-று.

கூத்தன்—ஆன்மாக்களைக் கூத்தாடச்செய்வோன்; அல்லது சந்தியா நிருத்தம், சதாநிருத்தம், காளிதாண்டவம், கவுரிதாண்டவம், பவுரிக்கூத்து முதலியவற்றைச் செய்வோன்; சிவன். (க)

அவ்வுழி விரசை பீட மொன்றுள ததனின் பாங்கர்ச்
செவ்விதின் முத்தி நல்குந் திரிலோசன விலிங்க முண்டாற்
கவ்வைநீர்க் கங்கை தன்னிற கருதுபிப் பிலமென் றோதுந்
தெய்வநீர்ப் பெருக்க ளூத தீர்த்தமொன் றுண்டு மாதோ.

(இ-ள்) அவ்விடத்தில் விரசைபீடம் (என்னுஞ் சத்திபீடம்) ஒன்று இருக்கின்றது. அச்சத்திபீடத்தின்பக்கத்தில், செம்மையாக மோட்சத்தைக் கொடுக்கின்ற திரிலோசனவிலிங்கம் வீற்றிருக்கின்றது. ஒலிக்கின்ற நீர்ப்பெருக்கமைந்த

கங்காதீரத்தில் எண்ணத்தக்க பிப்பிலமென்று சொல்லுகின்ற தெய்வீகம்பொருந்திய நீர்ப்பெருக்கொழியாத ஒரு தீர்த்தமிருக்கின்றது. எ-று. (உ)

அரசராற் சித்தர் தமமா லரக்கரா லமைத்த லிங்க
முறைசெயிற் பத்து நூறு மோவிபுனற் கங்கை யாற்றிற்
றெரிவரி தாகச் சிதத ரமைத்தரு ளிலிங்கஞ் செப்பிற்
குருமணி பூணசெய் தோளாய் கோடியா றுகு மன்றே.

(இ-ள்.) மனனவராலும்,சித்தர்களாலும், அசுரராலும் பிரதிட்டைசெய்யப்பட்ட சிவலிங்கமூர்த்தங்களைத் தொகையிட்டுச்சொன்னால் ஆயிரக்கணக்காகும். சத்திக்கின்ற ஜலத்தையுடையகங்காதீரத்தில், தெரிதற்கரிதாகச் சித்தர்கள் ஸ்தாபித்த இலிங்கங்களைத் தொகைசொன்னால் செந்நிறந்தங்கிய மாணிக்கங்களாற் செய்த ஆபரணமணிந்த தோளையுடைய உமையே! ஆறுகோடியாகும். எ-று. (௩)

என்னுடை யன்பர் தம்மா லியற்றிய லிலிங்கம் யாவு
முன்னியித் துணையென் றுரைத முடிவில விவற்றின் மாளாப்
பன்னருந் துறக்க நாளும் பணிநதவாக் குவந்து நல்குந்
தொன்மைய லிலிங்கம் யாவுங் கேட்டியென் றினிது சொல்வான்.

(இ-ள்.) என்னுடைய அடியவர்களாற் செய்வித்த சிவலிங்கக் குறிகளையெல்லாம் இவ்வளவினவென்றெண்ணிச் சொல்ல முடியா. இவ்விலிங்கமூர்த்தங்களில், சொ◦லுதற்கரிய நீங்காத மோட்சபாக்கியத்தை எக்காலமுந் தம்மை வணங்குவோருக்குக் களித்துக்கொடுக்கினற பழமையாகிய இலிங்கங்களை யெல்லாங் கேட்பாயாகவென்று (சிவபெருமான) இனிதாகச் சொல்லத்தொடங்கினர், எ-று.

வாய்ந்தவோங் கார லிஙகந் திரிலோசனன் வளர்மா தேவ
னேந்தெழிற் கிருத்தி வாச னிரத்னேச னியற்சநதி ரேச
ஞய்ந்தசீ ரவிமுத் தேச னருட்டரு மேசன் காமற்
காய்ந்தகா மேசன் விச்சுவ கன்மேசன் மணிகர் ணேசன்

(இ-ள்.) (அருள்) பொருந்திய ஓஙகார லிங்கம், திரிலோசன லிங்கம், (கீர்த்தி) வளர்கின்ற மாதேவலிங்கம், அழகுமிகுந்த கிருத்திவாசேசலிங்கம், இரத்தினேசலிங்கம், சந்திரேசலிங்கம், ஆராய்கின்ற சீர்த்தியையுடைய அவிமுத்தேசலிங்கம், அருள்புரியுந் தருமேசலிங்கம், மன்மதனையெரிதத காமேசலிங்கம், விசுவகன்மேசலிங்கம், மணிகர்ணேச லிங்கம். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் ஒருதொடர். (௫)

விளங்குகே தாரம் விச்சுவ நாதன்வீ ரேச னென்ன
வுளங்கனிந் தோதி லிங்க மொருபதி னொன்குண் டாகும்
வளங்கொள்கா சியினி லினன லிலிங்கங்கள் வதிநத வாற்று
லளந்துணர் வரிய முத்திக் கேத்திர மாய தன்றே.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற கேதாரலிங்கம் - விச்சுவநாதலிங்கம் - வீரேசலிங்க மென்று மனமுருகித் தியானிக்கத்தக்க சிவலிங்கமூர்த்தங்கள் பதினொன்று உண்டாயிருக்கின்றன. வளப்பம்பொருந்திய காசிநகரத்தில் இத்தகைய சிவலிங்

கக்குறிகள் பொருந்திய தன்மையால், அஃது அளவிட்டறிதற்கரிய முத்திக்ஷேத்திரமாக விருக்கின்றது. எ-று. (௬)

அண்டர்கோன் றொழுஞா னேச னமுதேச னலங்க லேசன்
றண்டீசன் மகேசன் சொர்க்கத் துவாரேசன் றார கேச
னெண்டிறல் நந்தி கேச னருணேசன சோதி ரூப
னெண்டிசை புகழ்வி ருத்த காடேச னெழிற்பிர மேசன்.

(இ-ள்.) தேவர்கட்கிறைவனாகிய இந்திரன் பணிகின்ற ஞானேசன் - அமுதேசன்-அலங்கலேசன் - தண்டீசன - மகேசன - சொர்க்கத்துவாரேசன் - தாரகேசன் - பராக்கிரமமிகுந்த நந்திகேசன் - அருணேசன - சோதிரூபன் - அட்டதிக்குகளி லுள்ளோரும்புகழ்கின்ற விருத்தகாடேசன-அழகிய பிரமேசன், எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் ஒருதொடர். (௭)

அருள்விருக் கேசன் முத்தித் துவாரேச னெனவ மைந்த
வொருபதி னைங்கி லிங்க முறைந்தன வவைகள் செங்கேழ்க்
குருமணி குயின்ற செம்பொற கொடிநெடு மாட மோங்கி
யிருவிசும் பிடருங் காசி மாநகாக் கிதயமெனபார்.

(இ-ள்.) அருள்பாலிக்கும் விருக்ஷேசன் - முத்தித்துவாரேசன் என்று பெயர்கள்பொருந்திய பதினைந்துலிங்கங்கள் விளங்குகின்றன. அவ் விலிங்கங்கள் செந்நிறம்விளங்கிய மாணிக்கங்களாற் சமைந்த செம்பொன்னாலாகிய கொடிகள் கட்டிய நெடிய மாளிகைகள் உயர்ந்து, பெரிய ஆகாயவழியை இடருகின்றசிறந்த காசிநகரத்திற்கு இதயமென்று (மேலோர்) கூறுவா. எ-று. (௮)

சரமகேச் சுரனீ சானன் புரோக்கன்வியாக் ரேசன் சாற்று
மிரணிய கருப்பன் சேட்ட னுபசாந்த னுக்கி ரேசன்
பரவுசம் புகனி வாசன் சயிலேசன் பயிலநா கேசன்
பொருவில்மத் திமகே சன்சீர் பொருந்துசொல் லீச னென்ன.

(இ-ள்.) சரமகேச்சுரன்-ஈசானேசன் - புரோக்ஷேசன - வியாக்கிரேசன் - சொல்லுகின்ற ஹிரணியகருப்பேசன் - சேட்டேசன் - உபசாந்தேசன்-உக்கிரேசன் - துதிக்கின்ற சம்பு - கனிவாசன் - சயிலேசன் - சொல்லுகின்ற நாகேசன் - சமானமில்லாத மத்திமகேசன-சீர்தங்கிய சொல்லீசனென்று. எ று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௯)

இலிங்கமோர் பதினைன் குண்டா லீங்கிவை யனைத்து மோரேழ்
தலம்புகழ் காசிக் கோங்கு தத்துவ் மெனப சென்ன
வலங்கிலைச் சூல மேந்து மண்ணல்சாற் றுதலு மன்பின்
விலங்கிவில் லுமிழும் பைம்பொன் விளங்கிழை யுமைக்கு மன்றே.

(இ-ள்.) சிவலிங்கமூர்த்திகள் பதினைல்வருளர். இக் குறிகளெல்லாம் சத்த லோகங்களும் புகழ்கின்ற காசி க்ஷேத்திரத்திற்குத் தத்துவங்களெனக் கூறுவர் என்று, பிரகாசிக்கின்ற அச்சவடிவாகிய சூலாயுதத்தைத் தரித்த சிவபெருமான்

திருவாய்மலர்ந்தருளவும், விட்டுவிட்டு ஒளிசெய்கின்ற பசிய பொன்னாலாகிய பிரகாசிக்கின்ற ஆபரணமணிந்த உமையம்மையார் அன்புடன்சொல்கின்றனர். எ-று.

கடல்வயி றலறி யீன்ற நஞ்சமுண் டமரர்க் காத்த
வடல்விடைப் பாக விவ்வா றறைந்தனை யன்றி யின்னும்
படரொளி யிலிங்கம யாவுந் தனித்தனி பகர்தி யென்ன
மடவர லினிது கேட்ப மழுவலா னுரைக்கு மன்றே.

(இ-ள்.) சமுத்திரத்தின் வயிறுளைந்து பெற்ற ஆலாலவிஷத்தைப் புசித்து தேவர்களைரக்ஷித்த பராக்கிரமந்தங்கிய இடபவாகனராகிய எம்பெருமானே! இவ்வகையாகத் திருவுளம்பற்றினீர்; இவையன்றி யின்னும், பரவிய ஒளியையுடைய இலிங்கமூர்த்தங்களெல்லாவற்றையும் தனித்தனித் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று, உமையம்மையார் இனிதாகக் கேட்க, மழுப்படையேந்திய சிவபெருமான் கூறத்தொடங்கினர். எ-று. (கக)

ஈற்றுளைந் தலறி வெள்வாய் வலம்புரி யீன்ற முத்தம்
பாற்கதிர் மதியென் றாம்பற் பருமுகை வெடிக்கு மந்தண்
சேற்றகல் வயல்சூழ் காசித் திருநகர் தன்னில் முன்ன
மாற்றருந் தவமொன் றாதி யந்தண னாற்றி னானே.

(இ-ள்.) கருப்பவாதனையுற்று இரைச்சலிட்டு வெள்ளிய வாயையுடைய வலம்புரிச்சங்குகள் பெற்ற முத்தங்களை, தாவள்யமான கிரணங்கள்பொருந்திய சந்திரனென்றுகருதி ஆம்பலினது பருத்த அரும்புகள் வெடிக்கும் அழகிய குளிர்ச்சிவாய்ந்த சேருகிய அகலமான வயல்சூழ்ந்த சிறந்த காசி க்ஷேத்திரத்தில் முற்காலத்திலே யியற்றுதற்கரிய ஒருதவத்தைப் பிரமதேவன் செய்தனன். எ-று.

யுகமொரு நூறு தீரா யோகினி லுறங்கு வேத
னகமல ரதனி லோங்கு மலங்கொளி யொன்று தோன்றி
நிகரில்பா தலங்க ளேழுங் கடந்தத னிலையில் மீட்டும்
புகுதலு முலகம் போர்க்கும பொங்கொலி யெழுந்த தன்றே.

(இ-ள்.) நூறு யுகங்கள் கழிந்து யோகநித்திரை செய்கின்ற பிரமதேவனது இதயதாமரையில் அசைந்தோங்கிய பேரொளி யொன்று தோன்றி, சமானமில்லாத பாதாளலோகங்கள் ஏழையுந் தாண்டி, அது ஜனித்தவிடத்தில் திரும்பவும் லயப்படவும், சமஸ்த லோகங்களையும் மூடத்தக்க பேரொலியொன்றுண்டாயது. எ-று. (கஉ)

பொங்கொலி யெழுதல் கேட்டுப் பொறிபுல னடக்கி யாற்றுந்
துங்கநல் விரத நீங்கிச் சதுமுகன் றனைவி னோக்கச்
செங்கண்மா லுருவா யாதி வேதகா ரணமாய்ச் சீர்த்தி
தங்குசாத் துவித மாகு மகரமுன் சாதல் கண்டான்.

(இ-ள்.) நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன்,மிகுதியாகிய ஓசையானது எழுந்ததைக் கேள்விப்பட்டு, பொறி புலன்களை யடக்கிச் செய்கின்ற பரிசுத்தமாகிய நல்ல விரதாநுஷ்டானத்தை விலகி வினாவாய்ப் பார்க்க, சிவந்த தாமரைமலர் போன்ற கண்களையுடைய திருமால்வடிவமாய் (இருக்கு என்னும்)

முதல்வேதத்திற்குக் காரணமாய், சிறப்புதங்கிய சாத்துவிதகுணமாகிய அகார வாச்சியம் முன்னே ஜெனிக்கக்கண்டனன். எ-று. (கச)

இராசத குணத்தி ரண்டாம் வேதகா ரணமாய் வேதன்
பராவரு முருவ முற்றோர் படிவமா யனைத்து மாகி
விராயபே ருலக மீன்ற வன்னையாய் விளங்கு மென்றுத்
தராதல் முழுதும் போற்று முகாரமுன் சாரக் கண்டான்.

(இ-ள்.) இராசதகுணமுடையதாய் இரண்டாவதாகிய (யசுர் என்னும்) வேதத்திற்குக் காரணமாய், பிரமனுகிய வணங்குதற்கரிய திருவுருவம்பெற்று ஒரு வடிவமாயும் எல்லாமாகியும் பரவிய பெரிய உலகமுழுவதையும் பெற்ற தாயாகியும் பிரகாசிக்குமென்று, உலகத்தார் யாவரும் துதிசெய்யத்தக்க உகாரவாச்சியம் தன்முன் பிறக்கப்பார்த்தனன் (பிரமதேவன்.) எ-று. (கரு)

சாமகா ரணமாய் தோற்ற ஞெழிற்குயர் தலைமைத் தாகிக்
காமனை யெரித்த முக்கட் கடவுடன் வடிவு போன்று
தோமற விளங்கு மிக்க தாமத குணத்திற் றேன்று
நாமநூல் மறையோ ரேத்து மகாரமு னண்ணக் கண்டான்.

(இ-ள்.) (மூன்றுவதாகிய) சாமவேதத்திற்குக் காரணமாய் (சிருட்டிமுதலியவற்றைச்) செய்தலாகிய தொழிலுக்கு உயர்ந்த தலைமையுடையதாய், மன்மதனைத் தகனஞ்செய்த திரிநேத்திரங்களையுடைய சிவபிரானுரது திருவுருவத்தைப் போன்று, குற்றம் நீங்கப் பிரகாசிக்கின்ற மிகுந்த தாமதகுணத்துடன விளங்குகின்ற அச்சத்தைத் தரும் சாஸ்திரங்களையுணர்ந்த வேதியர்கள் துதிக்கின்ற மகார வாச்சியம் தன் எதிரில்வரக்கண்டனன். எ-று. (கசு)

உலகெலா மோங்கு சத்தப் பிரமமா யுவமை யின்றி
யலகில்பே ரின்ப மாகி வாக்கினுக் காதி யாகி
யிலகொளி விரிக்குந் தூய விச்சுவ வுருவா யென்றுந
தொலைவிலா னந்த மாகு நாதமுன் றேன்றக் கண்டான்.

(இ-ள்.) சமஸ்தலோகத்திலும் உயர்வாகிய சத்தப்பிரமமாகியும், சமானமில்லாமலும், குற்றமில்லாத பேரின்பமயமாகியும், (வைகரியாதி) வாக்குகளுக்குப் பிறப்பிடமாயும், பிரகாசிக்கின்ற பேரொளியைப் பரவச்செய்யும் பரிசுத்தமாகிய விச்சுவரூபமாயும் எக்காலத்திலும் கெடுதலில்லாத ஆநந்தமயமாகியும் விளங்கும் நாதமானது தன்முன்னே தோன்றத் தெரிசித்தனன் பதுமன். எ-று. (கஎ)

காரண மனைத்துந் தோன்றுங் காரண மாகி யெங்கும்
பூரண மாகி யோங்கும் பிரமமாய்ப் பொலிந்து நின்ற
வேர்பெற விளங்கித் தோன்றும் விந்துவை நோக்கி யெங்கும்
சீர்கெழு பிரண வத்தைத் தெருளுற வேத்து மன்றே.

(இ-ள்.) காரணங்களெல்லாம் பிறக்கத்தக்க மூலகாரணமாகியும், சர்வபரிபூரணமாகியும், உயர்வாகிய பிரமஸ்வரூபமாகியும் பொலிவுற்று நின்ற அழகோடு விளங்குகின்ற விந்துவை (பிரமதேவன் தன் முன்னடையக்) கண்டு, எவ்விடத்

தும் சிறப்போடு விளங்குகின்ற பிரணவமந்திரத்தினுல் ஞானமடையத் துதிசெய்கின்ருன். எ று. (௧அ)

உலகெலா மளிக்கு மாற்ரு லோமெனும் பெயர தாயிற்
றலகறு கரும வாரி யகன்கரை கடத்த றன்ரு
விலகுதா ரகமென் ருேதும் பெயரொடு மியைந்த தென்ரு
மலாதலே யுலகம் பூத்த மறையவன பழிச்சு கின்ருன்.

(இ-ள்.) உலகமுழுவதையுங் காக்குந்தன்மையால் ஓம் என்னும் பெயருடையதாயிற்று. குற்றமற்ற கன்மசாகரத்தின் பரந்தகரையைத் தாண்டுந்தன்மையால், விளங்குகின்ற தாரகமென்று சொல்லப்படுந் திருநாமத்தோடு பொருந்தியுள்ளது என்று இடமகன்ற பூமியை (அதிலுள்ள ஆன்மகோடிகளுடன்) ஈன்ற, பிரமதேவன் தோத்திரஞ்செய்யத்தொடங்கினுன். எ-று. (௧௯)

ஓங்கார வுருவா யோது மெழுத்ததா யோங்கா ராதி
நீங்கரும் வன்னந் தோன்று நிலையதா யுயிர்கள் யாவுந்
தாங்கியு மதனுட் டோயாச் சதாசிவ மாகி நான்காக
நீங்கறு மறையாய் நாத விந்துவாய்ச் சிவம தாகி.

(இ-ள்.) ஓங்காரமாகிய பிரணவவடிவாகியும், சொல்லுகின்ற அக்ஷரங்களாகியும், ஓங்காரமுதலாகிய நீங்குதலில்லாத வன்னங்கள்பிறக்கின்ற நிலைமையதாகியும்,சர்வான்மாக்களையுங்காத்தும் அவைகளிற்ருேயாது (அதீதப்பட்டும்)விளங்கும் சதாசிவப்பொருளாகியும், நான்காகிய கெடுதலில்லாத வேத மாகியும், நாதவிந்துக்களாகியும், சிவமாகியும். எ-று.

இதுமுத லாறுபாடல்கள் ஒருதொடர். (௨௦)

அகரமா யுகர மாகி மகரமா யழிவொன் றின்றிப்
பகர்வரும் பவராய்த் தூய சர்வராய்ப பிரம மாகிப்
புகலருங் குணக்குன் ருகிப் புவனகோ டிகளும பூத்த
நிகரறு துரிய மாகி நிருமல மாகி நின்ருய்.

(இ-ள்) அகரமாகியும், உகரமாகியும், மகரமாகியும், கெடுதல் சிறிதுமில்லாமலும், பவனொன்றுந் திருநாம முடையவராயும், பரிசுத்தமாகிய சர்வமயராகியும், பிரமமாகியும், சொல்லுதற்கரிய குணக்குன்றமாகியும்,அண்டகோடிகளையெல்லாந் தந்தருளிய சமானரகிதராகிய துரியப்பொருளாகியும், அமலராகியும் நின்றவரோ !.

குறுமையாய் நெடுமை யாகிக் குணங்குறி யுருவ மில்லாச்
சிறுமையாய்ப் பருமை யாகிச் சித்துரு வாகி நான்கு
மறைபுக விளைய ராகி விருத்தராய் வண்ண மைந்தா
யறிவரு முதாத்த மிக்க வனுதாத்தஞ் சொரித மாகி.

(இ-ள்.) குறுகியதாகியும், நெடியதாகியும், குணம் - குறி - வடிவமில்லாச் சிறியதாகியும், பெரியதாகியும் ஞானவுருவாகியும், நான்குவேதங்களுங் கூறுகின்ற பாலியராகியும், வயோதிக ராகியும், ஐந்துவகைப்பட்ட நிறமுடையராகியும், அறிதற்கரிய உதாத்தம்-மேம்பட்ட அநுதாத்தம்-சொரிதமாகியும். எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (௨௨)

எடுத்தலே படுத்தல் மிக்க நலிதல்மூக் கிதழ்நாப் பல்லோ
டடுத்திடு மண்ணஞ் சார்ந்து பிறந்தவக் கரங்க ளாகி
நடத்தலோ டிருத்த லென்னும பாவக னண்ணி நண்ணுக்
கடுத்திகழ் மிடறற ராகிக் களைகணு யருவ மாகி.

(இ-ள்.) எடுத்தல் - படுத்தல் - மேம்பட்ட நலிதல் (ஆகிய) தொழிலால், நாசி-உதடு-நா-பல்-மேல்வாயுடன் கூடிப் பிறந்த அக்ஷரரூபமாகியும், நடத்தலுடன் இருத்தல் என்கிற பாவனையைப் பொருந்தியும், பொருந்தாமலும், ஆலாலவிஷம் விளங்குகின்ற ஸ்ரீகண்டத்தையுடையராகியும், யாவர்க்கும் பற்றுக்கோடாயும், அருவமாகியும். எ-று. (உங)

இதயமண் டபத்தி னீங்கா விறைவனு யகோர மாகிச்
சதியுரு வாகித் தாள முவந்துறை தலைவ னாகி
விதியினில் நிருத்த கீத வாச்சிய விஞ்சை யோர்க்குங்
கதியினை யளிப்போ னாகிக் கருதுபல் கலையு மாகி.

(இ-ள்.) இதயமாகிய மண்டபத்தினின்று பிரியாததலைவராகியும், அகோரமாகியும், சதியுருவாகியும், தாளங்களைக் களித்து வாழ்கின்ற இறைவராயும், (பரத நூலிற் கூறிய) விதிமுறையுடன் நடன சங்கீத வாத்தியமுதலிய வித்தையில் வல்லவர்களுக்குஞ் சற்கதியை யநுக்கிரகிப்போனாகியும், நினைக்கத்தக்க பலவகைப்பட்ட கலாபேதமாகியும். எ-று. (உச)

மலரய னாகி யாவும் வகுத்துமால் வடிவ மாகி
யுலகெலாங் காத்து முக்க ணொருவனு யொடுக்கிப் பின்னு
மலகிலா வுருவ மாகி யேகமா யனாதி யாகி
யிலகுபே ரொளியே யெந்தா யென்றெடுத் தேத்தல் செய்தான்.

(இ-ள்.) தாமரைமலரில் வசிக்கும் பிரமனாகி எல்லாவற்றையுஞ் சிருட்டிசெய்து, விஷ்ணுவின் உருவமாகி உலகமுழுவதையும் இரட்சித்து, திரிநேத்திரங்களையுடைய ஒப்பற்ற உருத்திரனாய்ச் சங்கரித்து,இதுவேயன்றிக் கணக்கில்லாத உருவமாகியும் ஏகமாகியும் அநாதியாகியும் விளங்குகின்ற பேரொளிப்பிழம்பேயென்று (பிரமன்) எடுத்துத் தோத்திரஞ்செய்தனன். எ-று. (உரு)

வேறு.

உள்ள நெகிழ விழிபனிப்பப் பழிச்சிப் பழிச்சி யுவந்தேத்து, மள்ளற் கமலப் பொகுட்டுறையு மலரோன் முன்ன ரருள்புரிவான, கொள்ளை யினவண் டிசைபயிலக் கொழுந்தேன் பிலிற்று நறுங்கொன்றை, வள்ள லிலிங்கத் திடையினிது வந்து தோன்றி மகிழ்ந்துரைப்பான்.

(இ-ள்.) மனமுருகவும் கண்கள் நீர்துளிக்கவும் பணிந்துபணிந்து களித்துத் துதிக்கின்ற, கருஞ்சேற்றில் தோன்றிய தாமரைக்கொட்டையில் வசிக்கின்ற பிரமதேவனுக்கு முன்னின்று திருவருள்செய்யும்படி, கூட்டமாகிய வண்டினங்கள் பண்ணோசைகற்கும்படி மதர்த்ததேனைச் சொரிகின்ற நல்ல கொன்றைமாலை சூடிய சிவபெருமான் இலிங்கமூர்த்தத்தினின்று நன்றாகவந்து பிரசன்னமாகிச் சந்தோஷித்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றனர். எ-று. (உசு)

விழைந்த கேட்டி யெனவமலன் வினவ லோடு மலர்க்கிழவன்
றழைந்த வுவகை மீதூரத் தணடிற் பணிந்து கதிருமிழுங்
குழந்தை மதிதாழ புரிசடையெங் குழகா நினது குற்றடியேன்
பழங்க ணகல விவ்விலிங்கத் திருத்தி யென்னப் பகர்ந்தனனால.

(இ-ள்) விரும்பியவரங்களைக் கேட்பாயாகவென்று சிவபெருமான் வினவவும், கமலாசனன் மிகுந்த களிப்புஅதிகரித்ததால, தறிபோல் (சாஷ்டாங்கமாக) விழுந்து சேவித்துச் சந்திரிகையைச சொரிகின்ற இளம்பிறைச்சந்திரனை யணிந்த புரிந்தசடையையுடைய எமதுபெருமானே! தேவரீரது சிற்றடியேன் குற்றங்கள் விலக இச்சிவலிங்கக்குறியில் வீற்றிருந்தருளவேண்டுமெனறு (பிரமதேவன்) பிரார்த்தித்தனன். எ-று. (உஎ)

அனைய நோக்தே யிவ்விலிங்கத் தகலா தடைவ விதனுமம்
வினைக டீர்க்கு மோங்கார விலிங்க மென்ன விளமபிடுக
வனையு முலக முழுதமைக்கும வரமு மளித்தேம பிதாமகனென்
றினிதி னெவருமப பணிநதேத்தும பேரு முனக்கே யீநதனமால்.

(இ-ள்.) அவ்வாறே செய்தற்கிணங்கினேன. இச்சிவலிங்கக்குறியினின்று நீங்காமற் பொருந்தியிருப்பேன். இச்சிவலிஙகத்தின்பெயர் சகலபாவங்களையுமொழிக்கும் ஓஙகாரலிங்கமென்றுசொல்லக்கடவது. அலங்கரிக்கின்ற உலகமுழுவதையுஞ் சிருட்டிசெய்யத்தக்க வரத்தையு முனக்குக் கடாக்ஷித்தோம். பிதாமகனென்று இனிதாக யாவரும் வணங்கித் துதிக்கும்பதவியும் உனக்கேகொடுத்தோம்.

உரவுத் திரைநீர்த் தடக்கங்கை யோங்கா ரேசன் றிருமுன்னர்
மருவு போழ்தி லுயா காசி மச்சோ தரியா மவவேலைப
பரவி யாடு மவர்பேற்றை யானே பகர்வே னெனவோதிக்
குரவ முயிர்க்கு நறுகூந்தல் கொழுந னிலிங்கத் திடைமறைந்தான்.

(இ-ள்.) வலிய அலைகள்பொருந்திய நீரையுடைய விசாலமாகிய கங்கையாறானது ஓங்காரேசப்பெருமானது திருமுன்னா அடைகையில், உயர்வாகிய காசிமச்சோதரியெனப் பெயருடையதாகும். அத்தீர்த்தத்திலே துதித்து மூழ்குவோரது பதவியை யானேசொல்லத்தக்கவன்என்று திருவாய்மலர்ந்து, தேன்சொரிகின்ற வாசனைதங்கிய அளகபாரத்தையுடைய உமாதேவிநாயகராகிய சிவபெருமான் அந்தர்த்தானமாயினர். எ-று. (உகூ)

குடிலைக் கடவுள் காதையினைக் குழைந்து கேட்போா புறங்காட்டி
லடலை பூசிக் காளியுட னுடும் பரமன் பேரருளாற்
கடல்வாய் வெருவத் தனிக்கடைந்த காயா வண்ணன் றிருவுந்தித்
தடமீன் றெடுத்த நான்முகத்தோ னுறையு முலகிற் சார்குவரால்.

(இ-ள்.) ஓங்காரவிலிங்கத்தின் சரித்திரததை மனமுருகிக் கேட்பவர்கள், மயானத்தில் நீற்றினை உத்தூளனஞ்செய்து, காளியோடு தாண்டவஞ்செய்த சிவபெருமானது பேரருளால், சமுத்திரமானது கலங்கும்படி மர்த்தனஞ்செய்த காயாம்பூவண்ணராகிய திருமாலின்திருவுந்திக்கமலம்பெற்றெடுத்த சதுமுகப்பிரமன் வசிக்கின்ற சத்தியலோகத்திற்சேர்வார்கள். எ-று.

"காளியுடனுடும்பரமன" என்பது.

தேவர் வேண்டுகோளின்படி உமாதேவியார் மலைச்சாரலை யடைந்து நிசு ம்பன்-சும்பன் என்னு மசுரரைக்கொலலத் தவவடிவேற் றிருக்கையில், சண்டன் முண்டன் எனபோா "சும்பனிடஞ் சேர்க" எனக் கூற, விமலை வெகுண்டதால் அம்மையார் தோளினின்றோா சததியுஞ் சில சேனையுந் தோன்றி அவவிருவரை யுஞ் சங்கரித்தனர். நிசும்பனுஞ் சும்பனும் அதுகண் டெதிர்க்க சத்தமாதர்களாற் சேனையைச் சங்கரித்துத தாமே யவ விரு தானவரையு மொழித்தனர். அவவிரு வர் சகோதரியாகிய தூரோதி யெனபாள் மகன் இரத்தபீசன் தன தடலினின்று துளிக்கும் உதிரத்துளி யொன்றிற்குத் தனனைபபோல ஓரசுரன் தோன்றத்தக்க வரமேற்றவன். அவன தனது மாதுலா மாய்ந்தமைக்கு வருநதி யெதிர்க்க, பார்ப் பதியம்மையார் சினங்கொணடு தோளினினறு காளியைச் சனிப்பித்து, உதிரத் துளி சிறிதும் பூமியில் விழாமல் கைககபாலத் தேற்று உண்ணப் பணித்து, ஒரு நொடியி லுயிர்மாய்த்தனா. காளிக்குச் சண்டி யென்று பெயரும் தெய்வீகமுந் தந்து, அமரர் துயரகறறிக் கயிலையடைந்தனா.

சண்டி பலரையுந் துன்புறுதநித் திருவாலங்காடு சேர்ந்து வாழ்ந்திருந்த னள். அவள் செய்யுந் தீமையை நாரதமுனிவர் சிவபிரானிடஞ்சேர்ந்து விண்ண ப்பிக்க, தேவதேவன் "அவளையடக்குவோ" மென்று ஆலவனமடைந்தனர். காளி ஆரப்பரித்துப் போர்க்கோலங்கொண்டுவநது கண்டு பயந்து "நிருத்தயுத்தஞ் செ ய்தும்" என விணஙகி, தேவர்களும் முனிவர்களும் கண்டுகளிக்கப் பலவகை வா த்திய முழஙக நடித்து ஓர் திருவிளையாடலாற் காற்சிலம்பை வீழ்த்தித திருத்தா ளினாலே யெடுத்துத் திருச்செவியில் மாட்ட ஊர்த்ததாணடவஞ்செய்து அவள் மமதையை மாய்த்தனர். முஞ்சிகேசமுனிவர் கார்க்கோடகமுனிவர் இருவரும் நெடுங்காலந் தவத்திலிருந்த விருப்பின்படி நடனதெரிசனஞ் செய்து களித்தனர். இறைவர் காளியை ஈண் டிருவெனப் பணித்துத் தாமும் அவ வடாரண்யத்தில் ஊர்த்ததாண்டவமூர்த்தியாய் வீற்றிருக்கின்றனர் என்பதாம். இதனை,

திருவாலங்காட்டுப் புராணம்.

"இன்சுவை பொழியுஞ் சாய லபினய மிலங்கச் செவவாய்
புன்சிறு முறுவல் பூப்பப் புரணவா ணந்தம் பூரித்
தன்புறு மவையோ ருளள மயர்தர வியங்கட் கேற்ப
வின்படு நடனங் காளி யோடரன் விளைத்த வேலை." என்பதனு னுணர்க.

இச் செய்யுளி னுள்ள ஏனைய சரிதங்கள் முன்னும் பின்னும் வந்துள்ளன ஆங்குக் கண்டுகொள்க. (௯0)

ஓங்காரவிலிங்கத்தின் வரலாறுரைத்த அ - ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯௨௨௮.

சிவமயம்.

எழுபத்துநான்காவது,

# ஓங்காரவிலிங்கத்தின் சிறப்புரைத்த அத்தியாயம்.

பன்னு மறைக ளினிதேத்தும் பதும கற்பத் தினிற்றமன
னென்னு மறையோ னொருவனுளன வடநூற் கலைக ளினிதுணர்ந்து
தன்மா னொழுக்க நெறிகடவாப் பரத்து வாசன் றரும்புதல்வ
னன்னோன் காதை கேட்டியென முருகன் முனியோ டறைந்திடுமால்.

(இ-ள்.) சொல்லுகின்ற வேதங்கள் இனிதாகத் துதிசெய்யும் பத்மகற்பத்திலே தமனனென்னும் வேதியனொருவ னிருந்தனன். வடநூற்கலைகளை நன்றாகத் தேர்ந்து தனது மாட்சிமைப்பட்ட ஆசாரமார்க்கத்தில்முறைதவறாத பரத்துவாசமுனிவர் பெற்ற புத்திரன்; அவனது சரிதையைக் கேட்பாயாகவென்று ஸ்ரீகுமாரக்கடவுள் அகத்தியமுனிவருடன் திருவாய்மலர்ந்தருளத் தொடங்கினர். எ-று. (௧)

முன்னூல் வினைய முற்றியபின் முனிவன் சிறுவன் முதுக்குறைவா
லென்னே மனைவாழ்க் கையிற்புகுதின் முத்தி யெய்தா தெய்துதினங்
கொன்னே கழிப்பி னுயிர்போகுங் காலங் குணித்த லரிதென்றுத்
தொன்மா மறைதேர் முத்திதனி லடையும் வினைய்க்தொடங்குவன்யான்.

(இ-ள்.) உபவீதந்தரித்தல் முடிந்தபிறகு பரத்துவாசமுனிவர் புதல்வனாகிய தமனன் பேரறிவோடு (எண்ணுகின்றான்) என்ன செய்வது, இல்வாழ்க்கையிற் பிரவேசித்தால் மோட்சம்வராது; நமக்குக்கிடைத்த உயிர்வாணாட்களை வீணாகக் கழித்தாற் பிராணம் நீங்கும். மரணதசையைக் கணக்கிட்டறிதல் அருமையென்றுணர்ந்து பழைமையாகிய சிறந்த வேதங்களால் தேர்கின்ற மோட்சத்திற் சேருந்தொழிலை யான் ஆரம்பிப்பேன. எ-று.

இல்வாழ்வோர்க்கு மண் பெண் பொன்முதலிய ஈஷணுத் திரவியங்களில் இச்சை நீங்காமையால் மோட்சமடைதல் கூடாததலின் "மனைவாழ்க்கையிற் புகுதின் முத்தியெய்தாது" என்றும், "உறங்குவதுபோலுஞ் சாக்காடுறங்கி-விழிப்பதுபோலும் பிறப்பு" என்னுந் திருவள்ளுவநாயனர் கருத்தின்படி, மரணம் இமைப்பில்வருமாதலின் "உயிர்போகுங்காலங்குணித்தலரிது" என்றுங் கூறினர். (௨)

அருமா மறையோர் தவமியற்றுஞ் சாலை யடைந்து மலங்குதிரை
பொருநீர்க் கடவு ணதிபடிந்தும புவிக ளனைத்தும் வலம்வந்துந் [ன்னர்ப்
தெருளு ஞானப் பொருளுண்மை யுரைப்போர்ப் பெறாது திகைத்துமு
புரியுந் தவத்தா லிவரவந்திக் கரையி லினிது பொருந்தினனால்.

(இ-ள்.) அருமையாகிய சிறந்தஅந்தணர் தவஞ்செய்கின்ற யாகசாலையையடைந்தும்,அசைகின்ற அலைகளையுடைய மோதுகின்ற நீர்மயமான கங்காநதியில் மூழ்கியும், உலகமுழுவதும் பிரதக்கணஞ்செய்தும், அறிவுவிளங்கும் ஞானப்பொருளினது உண்மையை யுபதேசிக்கும் போதகாசிரியனை யடையாமல் மயங்கி,

பூர்வசனனத்திற்செய்த நல்ல தவப்பலனால் அவந்தியின் கரையிலே இனிதாக வாழ்ந்திருந்தனன். எ-று. (௩)

அழிவி லமர கண்டகமென் றுரைக்குந் தீர்த்தத் தகன்கரையில்
குழவி மதியின் கோடுழக்குங் கொன்றை நனைவிண் டிழிபசுந்தேன்
மழையூற் றிருக்குஞ் சடாமவுலி யோங்கா ரேசன் வளர்கோயில
விழைவி னோக்கி யுளங்களிப்ப விரைவி னங்குச் சென்றடைந்தான்.

(இ-ள்.) கெடுதலில்லாத அமரகண்டகமென்று சொல்லப்படும் தீர்த்தத்தின் விசாலமாகிய கரையிலே, பிறைச்சந்திரனது கொம்புகள் உழக்குங் கொன்றைமலர்கள் வாய் விண்டு சொரியுங் குளிர்ச்சிதங்கிய தேனமழையானது ஊற்றெடுக்குஞ்சடாமுடியையுடைய ஓங்காரேசப்பெருமானது (சீரத்தி) வளருகின்ற திருக்கோயிலை ஆசையோடு தரிசித்து மனங்களிப்படைய விரைவாக ஆங்குப்போய்ச் சேர்ந்தனன் (தமனன்). எ-று.

கோயில்—இலக்கணபபோலி. (௪)

மலமோர் மூன்று மெறிந்ததற்கு நெறியி னமைத்த வரைபோல
நிலவு திரிபுண் டரமிலங்க நீறு பூத்த மெய்மழுது
மிலகு மணிகண் டிகையொளிர வியலா கமத்தி னுணர்வரிய
வலகி லுண்மைப் பொருள்கேட்போர்க் கறையுங் குரவன்றனைக் கண்டான்.

(இ-ள்.) (ஆணவாதி) மும்மலங்களையும் நீக்கியதற்கு முறையோடு ஏற்படுத்திய இரேகைகள்போன்று பொருந்திய திரிபுண்டரம் விளங்கவும், வெண்ணீறு சண்ணித்த உடல்முழுவதும் விளங்கும் உருத்திராக்கமணி கண்டிகை ஒளிசெய்யவும், பொருந்திய ஆகமங்களில் (சொல்லப்பட்டு) அறிதற்கரிய குற்றமில்லாத உண்மைப்பொருளைத் தம்பாற்கேட்கும் மாணுக்கர்க்குப் போதிக்கும் ஞானசிரியனைத் (தமனன்) தரிசித்தனன். எ-று. (௫)

கண்ணுற் றுள்ள மகிழ்வெய்தக் கரக முனிவன் றுடொழலு
நண்ணு கின்ற நீயாரை நம்பி யென்ன விளம்புதலு
மண்ணல் முனிவ மறைபயிலுந் தமன னென்பே னருஞ்சித்தி
யெண்ணி யுதக மிகப்புடமிட் டருந்தித் திரிந்து மெய்திலனால்.

(இ-ள்.) (தமனன்) தரிசித்து மனங் களிப்படைய கரகமுனிவரது திருவடிகளைப் பணியவும், (முனிவர்) ஈங் கடைகின்ற நீ யாவன்? நம்பி! என்று வினவவும், (தமனன் சொல்லுகின்றான்) பெருமை தங்கிய முனிவரோ? யான் வேதங்களை அப்பியசிக்கும் தமன னென்னும் பெயருடையவன். அரிய காயசித்திபெறக் கருதி, மருந்துகளைப் புடமிட்டுப் புசித்து, (புண்ணியபூமிகளில்) சஞ்சரித்தும் (அதனை) அடைந்தேனில்லை. எ-று. (௬)

கூற்றின் பருவா யெனத்திறந்த முழைஞ்சு தோறுங் குறுகியிருந்
தாற்றற் கரிய யோகனைத்தும் புரிந்துஞ் சித்தி யடைந்திலனால்
தோற்றற் கரிய பாசுபதத் தோன்றால் நினது தாளடைந்தேன்
சாற்றற் கரிய சித்தியினிப் பெறுவான் றுருதி யெனத்தொழுதான்.

(இ ள்.) இயமனது பிளவுபட்ட வாயைப்போலத் திறந்திருக்கும் மலைக் குகைகளிலெல்லாம் போய்த் தங்கி, செய்தற்கரிய யோகங்களையெல்லாஞ்செய்தும், சித்தியடைந்தேனில்லை. காட்சிதருதற்கரிய பாசுபதவிரதத்தை மேற்கொண்ட முனிபுங்கவரோ! தேவரீரது திருவடிகளைச்சரண்புகுந்தேன். சொல்லுதற்கு அரியசித்திகளை இனி (அடியேன்) அடையும்படி அருள்தரவேண்டும் எனக்கூறிப் பணிந்தான் (தமனன்) எ-று.

பசுபதி சம்பந்தம்-பாசுபதம். இது தத்திதம். பெறுவான் என்பதில் வான் எதிர்கால வினையெச்சவிகுதி யெனக் கொள்க. (எ)

மாசில் புதல்வ வருஞ்சித்தி யெளிதின் மருவ வேண்டுதியேற்
றேசில் கரும மூளிபுறகான் றெறுதீ யாகிப் பவக்கடலின்
வீசு தரங்கப் புனல்சுவற்றும் வடவை யாகி மிகவிளங்குங்
காசி நகர மல்லாது கருது மிடமற் றொன்றுண்டோ.

(இ-ள்.) களங்கமில்லாத மைந்தனே! அருமையாகிய சித்தியை இலேசாக அடையவேண்டு மானல், குற்றமில்லாத காரியமாவது, உலர்ந்த புல்லையுடைய வனத்தைத் தகிக்கின்ற அக்கினியாகியும், பிறவியாகிய சமுத்திரத்தின் எறிகின்ற அலைகளாகிய நீரை வறளச்செய்யும் வடவாமுகாக்கினியாகியும், மேம்பட்டுப் பிரகாசிக்கின்ற காசிக்ஷேத்திரமல்லாமல் (அதனை யடைவதற்கு) நினைக்கத் தக்க ஸ்தானம் பிறிதொன் றிருக்கின்றதோ? இல்லை. எ-று.

தன்னை யடைந் துபதேசம் பெற வுதித்த மாணக்கன் ஆசிரியனுக்கு மகனாதலாலும், அவனும் பக்குவமலனாக விருத்தலாலும் "மாசில் புதல்வ" என விளித்தனர். (அ)

பொலந்தா மரையி னிதழ்குதட்டிக் கணைக்காற் குவளைப் போதருந்தி
யிலஞ்சி மேய்ந்த மோட்டெருமை யிறைஞ்சிப் பழுத்த கதிர்ச்செந்நெற்
கலங்கற் கருஞ்சேற் றகல்வயலிற் றுயிலுங் காசி தனிலிதழி
யலங்கல் வேணி யோங்கார விலிங்க மினிதி னமர்ந்துளதால்.

(இ-ள்.) அழகிய தாமரையி னிதழ்களை யதுக்கி, கணைக்கா லவாக வுயர்ந்த நீலோற்பலமலர்களைப் புசித்து, தடாகத்தில் விளையாடிய பெரிய எருமைக்கடாக்கள், (தலை) சாய்ந்து பழுத்த மிகுந்த கதிர்வாங்கிய செந்நெற்பயிரையுடைய கலங்கலாகிய கருஞ்சேறுதங்கிய பரந்த வயல்களில் கண் துஞ்சுகின்ற காசிநகரத்தில், கொன்றைமலர்மாலைசூடிய சடையையுடைய ஓங்காரவிலிங்கமானது இனிதாகப் பொருந்தியுள்ளது. எ று.

இலஞ்சி=தடாகம். (கூ)

அன்ன வீசன் றுள்போற்றி யடையாச் சித்தி யடைந்தோரை
யின்ன ரென்ன வொருநாவா லியம்ப வற்றோ வத்தலையின்
முன்ன நிகழ்ந்த காதை மற்றொன் றுளது முனிவ கேட்டியெனப்
பன்னு மறைநூற் றுறைபடிந்த பாசு பதனுண் டுரைத்திடுவான்.

(இ-ள்.) அத்தன்மைத்தான ஓங்காரேசப் பெருமானது திருவடிகளைத் துதித்து (யாவரும்) பெற்றிராத இஷ்டசித்திகளைப் பெற்றவர்களை இவ்வளவினரோ

ன்று எனது ஒருநாவினாலே கணக்கிட்டுச் சொல்ல முடியுமோ. அவ்விடத்திலே பூர்வத்தில் நடந்த ஒரு சரித்திர மிருக்கின்றது. தமனமுனிவனே! கேட்பாயாக வென்று, சொல்லுகின்ற வேதநூலின் மார்க்கங்களில் நன்காராய்ந்த பசுபதிவிரதம் பூண்ட முனிவர் அப்பொழுது கூறத்தொடங்கினர். எ-று. (௧௰)

தாற்றுக் கமுகின் மிடறழிந்து தீந்தே னொழுகத் தாவிவயற்
சேற்றிற் கயவா யிளவாளை விளையாட் டயருஞ் செழுங்காசிக்
கூற்றை யுதைத்த குடிலேசன் கோட்டந் தன்னி லொருதவளை
யேற்றிக் கழித்த வெண்சோற்றை யருந்தி வலம்வந் தினிதுறையும்.

(இ-ள்.) குலைகள் பொருந்திய பாக்குமரங்களின் மிடறு சாய்ந்து மதுரம் பொருந்திய தேன் சொரிதலால், வயலிற் பொருந்திய சேற்றில் வாழ்கின்ற பிளவுபட்ட வாயையுடைய இளமைதங்கிய வாளைகள் தாவிப் பாய்ந்து விளையாடலைச் செய்கின்ற செழுமை வாய்ந்த காசி க்ஷேத்திரத்தில் இயமனை யுதைத்த ஓங்காரேசப்பெருமானது திருக்கோயிலில், ஒரு தவளையானது (பெருமானுக்கு) ஏற்றிக் கழித்த வெண்மையாகிய சோற்றைப் புசித்துப் பிரதக்ஷணஞ்செய்து இனிதாக வாழ்ந்திருக்கும். எ-று. (௧௧)

திருந்து மதிதாழ் செஞ்சடையோற் கேற்றிக் கழித்த செழுஞ்சோற்றை
யருந்துங் கொடிய தீவினையா லலறுங் கொடிய குரற்காக்கை
யிருந்த தவளை தனைக்கவர்ந்து பொருவில் காசிப் புறத்தேகிப்
பொருந்து பசியிற் கூர்வாயாற் குத்திப் போழ்ந்து தின்றதுவே.

(இ-ள்.) அழகிய சந்திரன் தவழ்கின்ற செவ்விய சடையை யுடைய ஓங்காரேசப்பெருமானுக்கு நிவேதனஞ்செய்த நல்ல அன்னத்தைப் புசித்துவருங் கொடிய தீவினைச்சம்பந்தத்தினால், அலறுகின்ற கொடிய குரலையுடைய ஓர்காகம் அவ்வாறிருந்த தவளையைக் கவர்ந்துகொண்டு சமானமில்லாத காசிநகரத்தின் வெளியே சென்று, பொருந்திய பசியுடன், தனது கூர்மைவாய்ந்த வாயினாற் குத்திப் பிளந்து புசித்துவிட்டது. எ-று. (௧௨)

திருமா லியமுன் னருந்தியவெம் பாவத் தாலு நிகரில்முக்கட்
பெருமான் கோயில் வலம்வந்த பேற்றி னாலு முயர்தவளை
விரிநீர்க் கங்கை விளிம்புடுத்த காசி நகரிற் குயில்முகமாய்
மருவார் தெரியல் தொடப்போன்றன் மகளாய் வந்து தோன்றியதே.

(இ-ள்.) நிருமாலியத்தை முன்னாளிற் பட்சித்த கொடிய பாவத்தினாலும், சமானமில்லாத திரிநேத்திரங்களை யுடைய சிவபிரானாரது திருச்சந்நிதானத்தைப் பிரதட்சணஞ்செய்துவந்த புண்ணியத்தினாலும், உயர்வாகிய தவளையானது பரந்த நீரையுடைய கங்காநதியை அணையாகப் பொருந்திய காசிக்ஷேத்திரத்தில் குயில்முக முடையவளாய் மணந்தங்கிய நெடிய மலர்மாலை கட்டுவோனது பெண்ணாக வந்து பிறந்தது. எ-று. (௧௩)

கருமபிற் கனிந்த சரமேழு கிராம மூன்று கற்றுணர்ந்தோர்
விரும்பத் தகுமூற் சனைபொருபத் தொன்பான் விளம்பு நாற்பான்மேற்

பொருந்து மொன்பான் ருனமுயர் புருட ராக மாறவற்றிற்
பிரிந்தோ ரொன்றிற் கைந்தாமபெண் டகைய ராக முப்பதுவே.

(இ-ள்) கரும்பைக்காட்டிலும் மதுரமாகிய ஏழுசுரங்கள் - மூன்று கிராமங்கள்-இசைநூலைக் கற்றறிந்தவர்கள் விரும்பத்தக்க ஒரு பத்தொன்பது மூற்சனைகள் - சொல்லுகின்ற நாற்பத்தொன்பது ஸ்தானங்கள் - உயர்வாகிய ஆறு புருஷராகங்கள் - அவ்விராகங்களிற் பிரிந்து ஓவ்வொன்றிற் கைந்தாகிய பெண்தன்மை இராகங்கள் (ஆறைந்து) முப்பது. எ-று (கச)

தேசி கற்கும் விசேடத்தாற் சேரு மறுபத் தஞ்சுலகில்
பேசு தாள நூற்றொன்றத் துணைய ராகம் பெரிதுணர்ந்தோள்
மாசில் தவத்து மாதவியென றுலக மேத்த வருமடந்தை
காசி நகரு ளோங்காரக் கடவுள் வியப்ப நடம்புரிவாள்.

(இ-ள்.) கற்கின்ற வித்தியாவிசேடத்தினால் உண்டாகும் அறுபத்தைந்து வகைப்பட்ட தேசிப்பண். உலகிற் சொல்லுகின்ற தாளம் நூற்றொன்று. அவ்வகைய அளவினைவாய்ந்த இராகத்தில் மிகவும் தேர்ந்தவளாகிய, குற்றமில்லாத தவத்தையுடைய மாதவி யென்று உலகத்தார் துதிசெய்யத்தக்க அக்கன்னிகை காசிக்ஷேத்திரத்தில் ஓங்காரேசப்பெருமான் திருவுள்ளக்களிப்பெய்த நடனஞ் செய்துவருவாள். எ-று

மாதவி-கோவலன் காதற்பரத்தை. (கரு)

பொருந்து மிடப ஞாயிற்றிற் புரைதீர் பதினன் கினிலுணவொன்
றருந்த லின்றி விழிதுயிலா தாடி யமுதங் கனிந்தொழுகு
நரம்பு தடவங் கிசையெழுப்பி நாதற் பாடி வைகறையி
லிருந்த யாங்க ளெல்லோருங் காண விலிங்கத் திடைமறைந்தாள்.

(இ-ள்.) பொருந்திய வைகாசிமாதத்தில், குற்றம்நீங்கிய சதுர்த்தசித்திதியில் ஓர்வகை யுண்டியையு முட்கொள்வ தொழிந்து, நித்திரைசெய்யாமல் நிருத்தஞ்செய்து அமுதம்போல இனிமை மிக்குள்ள (வீணைவாத்தியத்தின் ஏழ்வகைத்தான) நரம்புகளைத் தடவி ஓசையெழுப்பித் தலைவராகிய ஓங்காரேசப் பெருமானைத் துதித்துப்பாடி,விடியற்காலையில் அங்கிருந்த நாங்கள் யாவரும் பார்க்கும்படி அவ் விலிங்கமூர்த்தத்தில் மறைந்தனள். எ-று. (கசு)

அனைய குடிலே சனைவணங்கி லடையா முத்தி யாமென்னத்
துனைவின் முனிவன் றமனனொடுந் துகடீர் காசி நகரெய்தி
வினையின் றொடர்ச்சி கட்டறுக்கும் விமலற் பழிச்சி யெவ்வுலகுங்
கனைவெங் கதிரிற் சுடரெறிக்குங் கடவு ளிலிங்கத் தடைந்தனனால்.

(இ-ள்.) அவ்வண்ணமாகிய ஓங்காரேசப்பெருமானைப் பணிந்தால், கிடையாத மோக்ஷம் (இலேசாக) வருமென்று கூறி, விரைவாக அப் பாசுபதமுனிவன் தமனனுடன் கூடி, குற்றமொழிந்த காசிப்பட்டணத்தை யடைந்து, பாவத்தொடக்காகிய பிணிப்பினை யறுக்கின்ற நிமலராகிய ஓங்காரேசப்பெருமானைத் துதித்து, சமஸ்தலோகத்திலும் வேகத்தோடு செல்லும் வெவ்விய கிரணங்களையுடைய சூரியனைப்போல ஒளிவீசுகின்ற தெய்வீகம்பொருந்திய அச்சிவலிங்கக் குறியில் இரண்டறக் கலந்தனன். எ-று. (கஎ)

பிணிவா யவிழ்ந்த செழுங்கமலம் பெய்த தேறல் கூட்டுண்டு
துணிநீர்க் கயத்துட் கருங்கெண்டை துள்ளுங் காசி வளநகரில்
பணிவார் சடையெங் குடிலேசன் காதை கேட்போர் பயின்றோர்கள்
அணிமா சித்தி முதலாய கைவந் திறைவ னடிசேர்வார்.

(இ-ள்.) செழுமை வாய்ந்த வாய்முறுக்கவிழ்ந்த தாமரையின் மலர்கள் சொரிந்த தேனை விருந்துண்டு, தெளிந்த நீரையுடைய குளங்களில், கரிய சேல் மீன்கள் துள்ளுகின்ற காசியாகிய வளப்பம்பொருந்திய நகரத்தில் வீற்றிருக்கும், சர்ப்பத்தை யணிந்த நெடிய சடையை யுடைய எமது ஓங்காரேசப்பெருமானது சரிதத்தைக் கேட்டவர்களும் வாசித்தவர்களும், அணிமா முதலிய சித்திகளிற் கைவந்தவர்களாய்ச் சிவபிரானது திருவடி நீழலிற் கலப்பார்கள். எ-று.

அணிமாமுதலிய சித்திகள் எட்டு. அவையாவன:—அன்மாப்போலாதலாகிய அணிமா - மகத்துவமடைதலாகிய மகிமா - தன்னுடற் கண்டிப்பின்றாய்க் கண்டிப்புள்ளவற்றை யுருவவல்லனாதலாகிய கரிமா - இலகுத்துவமாதலாகிய இலகிமா - வேண்டுவன அடைதலாகிய பிராத்தி - நிறைவுள்ளனாதலாகிய பிராகாமியம்- ஆட்சியுள்ளனாதலாகிய ஈசத்துவம் - எல்லாம் தன்வசமாக்கவல்லனாதலாகிய வசித்துவம் என்பனவாம். (௧௮)

ஓங்காரவிலிங்கத்தின் சிறப்புரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௮௪௬.

---

உ

சிவமயம்.

எழுபத்தைந்தாவது,

## திரிலோசனவிலிங்கந் தோன்றிய அத்தியாயம்.

உரைசால் சிறப்பின் மறைபாவு மோங்கா ரேசன் றிருமுன்னர்
விரசா பீட மொன்றுள்தாங் கதற்கு விரிநீர்த் திரைக்கங்கை
கரைகொன் றிரங்கு புனல்யமுனை கடவுட் டெண்ணீர்ச் சரச்சுவதியா
மரவப் பெயர்யா றொருமூன்றும் வைக றோறு மாட்டுமால்.

(இ-ள்.) கீர்த்தி மிகுந்த சிறப்பை யுடைய வேதங்கள் துதிக்கின்ற ஓங்காரவிலிங்கத்தின் திருமுன்னே விரசாபீடம் (என்னுஞ் சத்திபீடம்) ஒன்றுண்டு. அதற்குப் பரந்த நீரையுடைய அலைகள் பொருந்திய கங்கை - கரையைக் கரைத்து ஒலிக்கின்ற நீர் மிகுந்த யமுனை - தெய்வீகம்பொருந்திய தெளிந்த சல மமைந்த சரச்சுவதியாகிய சத்திக்கின்ற பெரிய மூன்று நதிகளும், நாடோறும் அபிடேகஞ் செய்விக்கும். எ-று. (௧)

ஆங்க ணுயர்பிப் பிலதீர்த்த முளதொன் றதனி லாடிலென்றும்
நீங்க வரிய பிரமகத்தி சேரா திமய நேரிழைக்கங்
கோங்கு சுடர்க்கண மூன்றளித்த வாற்று லுலக முவக்தேத்துந்
தேங்கொள் கடுக்கை வேணியற்குத் திரிலோ சனப்பே ரெய்தியதால்.

(இ-ள்.) அவ்விடத்தில் உயர்வாகிய பிப்பிலதீர்த்தமொன் றிருக்கின்றது. அதில் ஸ்நானஞ் செய்தால் எப்பொழுதும் ஒழியாத பிரமகத்தி (முதலிய பெரும் பாவங்கள்) சேரமாட்டா. இமயவல்லியாகிய உமாதேவியாருக்கு உயர்வாகிய சுடர்மயமான திரிநேத்திரங்களை அங்கு அநுக்கிரகித்த தன்மையால், உலகத்தார்களித்துத் துதிக்கின்ற தேன்பொருந்திய கொன்றைமாலை தரித்த சடையை யுடைய சிவபெருமானுக்குத் திரிலோசனப்பெருமானெனப் பெயரெய்தியது. எ. று.

லோசனம்=கண். (௨)

ஈச னேசம் பீஷ்மேசந் துரோணேச் சுரமவான் மீகேச
மாசில் புகழ்சே ரச்சுவத்தா மேசம வால கிலலேச
மாசி லிலிங்கந் தற்சூழ வமர்ந்த குடிலேச் சுரத்தினிடைப்
பேசுங் காதை யொன்றுளது முனிவ கேட்டி யெனப்பேசும்.

(இ-ள்.) ஈசானேச்சரம் -பீஷ்மேச்சுரம் - துரோணேச்சுரம் - வான்மீகேச்சுரம் - குற்றமில்லாத புகழ்தங்கிய அச்சுவத்தாமேச்சுரம்-வாலகில்லேச்சுரம் முதலாகிய களங்கமில்லாத சிவலிங்கமூர்த்தங்கள் தன்னைப் புடைசூழ வீற்றிருக்கும் ஓங்காரேச்சுரத்தினிடத்தில் சொல்லத்தக்க சரிதம் வேறொன்றிருக்கின்றது. அகத்தியமுனிவனே! கேட்பாயாகவென்று (ஸ்ரீ குமாரக்கடவுள்) திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ. று. (௩)

திரிலோசனவிலிங்கந்தோன்றிய அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-௩௮௪௯.

---

௨

சிவமயம்.

எழுபத்தாறாவது,

## திரிலோசனவிலிங்கத்தின் சிறப்புரைத்த அத்தியாயம்.

உலக மேத்துரா சேந்திர கற்பத்தி னோங்கி
விலகி வில்லுமிழ் விண்டொடர் சினகர மீதில்
நிலவு செம்மணிக் கண்ணவொள் ளகிற்புகை நிறத்த
குலவு வெண்சிறைப் புறவுதன் பெடையொடுங் குறுகும்.

(இ-ள்.) உலகத்தார் துதிக்கின்ற இராசேந்திரகற்பத்தில், விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற உயர்ந்து ஆகாயமளாவிய (திரிலோசனேசப் பெருமானது திருச்

சந்நிதானத்தின்) திருக்கோபுரத்தின்பேரில், விளங்குகின்ற மாணிக்கம்போன்ற கண்ணையும், ஒள்ளிய அகிற்புகைபோன்ற நிறத்தையும், பிரகாசிக்கின்ற வெண்மையாகிய சிறகையுமுடைய ஓர் புருவானது பேடுடன்கூடி வசிக்கும். எ-று. ()

குழைந்த வெண்மதி கோடுதேய்த் துயர்சின கரத்தி
னழுந்து மென்றுகள் சிறகர்மெல் வளியினு லவித்தும்
விழைந்த வன்பொடு பூசனை நோக்கியும் வியப்பால்
தொழுந்த வத்தினோர் தம்மொடு கோயில்சூழ் போந்தும்.

(இ-ள்.) வளைந்த வெண்மைதங்கிய சந்திரனது கொமபுகளைத் தேய்க்கும்படி யுயர்ந்த திருக்கோபுரத்தின்பேரிற் படிந்துள்ள மெல்லிய தூசுகளை (அப்புருக்கள் தமது சிறகின் மிருதுவாகிய காற்றினால் துடைத்தும், விரும்பிய ஆசையுடன் அங்குநடக்கும் நித்திய நைமித்திய பிராயச்சித்த முதலியவற்றைத் தரிசித்தும் அன்புடனே வணங்குகின்ற தவசிகளுடன் திருச்சந்நிதானததைப் பிரதக்ஷணஞ்செய்தும். எ-று. (உ)

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

உறையு நாளில்மற் றொருபக லொழுகொளிச் செங்கட்
புறவு போதரல் காண்டலு முளமகிழ் பூப்பச்
சிறையு டைப்பருந தொன்றுவெம் பசிப்பிணி தீர்ப்பான்
பெறுதும் யாமுண வின்றெனப் பெரிதுவந் ததுவே.

(இ-ள்.) (இவவகையாக) வசித்திருக்குங்காலத்தில், ஒருநாள், ஒளிவீசுகின்ற சிவந்த கண்ணையுடைய புருக்கள்வருவதைப் பார்க்கவும், மனக்களிப்புமேம்பட, சிறகினைவாய்ந்த ஓர் பருந்து தனது கொடியபசிநோயைத் தீர்த்துக்கொள்ளும்படி நாமின்று உணவாகப் பெறுவேமென்று (அப் புருக்களைக் கண்டு) மிகுதியுஞ் சந்தோஷித்தது. எ-று. (௩)

படரு மஞ்சிறைப் புறவினை நலிந்துயிர் பருகு
மிடன றிந்துவெம் பருந்துமற் றதற்கய லிருப்ப
மடந டைப்பெடை கண்டுதன் புறவொடு மாழாந்
துடன டுக்குற வெய்துயிர்த் துரைத்திடு மனறே.

(இ-ள்.) பறந்து செல்லும் அழகிய சிறகையுடைய புருக்களைத் துன்புறுத்தி உயிர்கொல்லும் வகையை யுணர்ந்து, கொடிய பருந்து அவ்விடத்தின் சமீபத்தில் தங்கியிருக்க, இளமைவாய்ந்த நடையையமைந்த பெண்புரு அதனைப்பார்த்துத் துன்புற்றுச் சரீரம் நடுக்கும்படி பெருமூச்சுவிட்டுத் தனது நாயகனோடு சொல்லுகின்றது. எ-று. (௪)

வெய்ய வான்பகை யெறும்வளி விரிசிறைப் பருந்தோன்
றெய்தி நாமிவ ணுறைத்தது நோக்கியே கியதென்
செய்யு மோவென வெனதுள மலமரத் திகைத்த
துய்யு மாறினி யுனற்றுக வெனவுரைத் ததுவே.

(இ-ள்.) மிக்க கொடும்பகையையும், அதிகரித்தவல்லமையையும், பரந்த சிறகையுமுடைய ஓர் பருந்துவந்து நாமிங்குவாழ்ந்திருப்பதைப் பார்த்துச் சென்றது. அஃது யாதுசெய்யுமோவென்று என்மனந் துன்புற்றுக் கலங்குகின்றது. (அப்பருந்தினின்று) பிழைக்கும் வகையை இனிச் செய்யவேண்டுமென்று (தனது கணவனுடன் பெண்புறு) கூறிற்று. எ-று. (௫)

பட்டின மண்டிலம் வியாடிகம் பட்டிகங் கரண்டை
தடாதி வங்குசங் கிசனிசண் டனமுட் டனம்
விடாவ ருங்கதி பறவைகட் கெட்டுள விளம்பி
னடாத தொன்றிலை யெனக்கிவை ப்யின்றினி தறிந்தேன்.

(இ-ள்.) பட்டினமண்டிலம் - வியாடிகமண்டிலம் - பட்டிகமண்டிலம் - கரண்டைமண்டிலம் - தடாதிவங்குசமண்டிலம் - கிசனிமண்டிலம்-சண்டன மண்டிலம் - முட்டனமண்டிலமாகிய நீங்காத அரிய எட்டுவகைக்கதிகள் பறவைகட்குள்ளன; சொல்லுமிடத்தில் எனக்குக் கூடாதது ஒன்றுமில்லை; இவற்றிலெல்லாம் பழகி நன்றாக்த் தேர்ந்திருக்கின்றேன். எ-று. (௬)

யாவ தென்முனை மெதிர்ந்தம ரேற்றுயிர் சுமந்து
போவ தென்னுடை யாற்றனீ யுணர்ந்திலை போலு
மேவ ருந்துய ருழந்தெவன் விளம்புவ தென்ன
வாவி யன்னதன் பெடையினை யாற்றிவைத் தியதே.

(இ-ள்.) எப்பறவை என்முன்னின்றெதிர்ந்து போர்புரிந்து உயிர்கொண்டு திரும்பிச் செல்லும் ஆற்றலுடையது; எனது பராக்கிரமத்தை நீ அறிந்தாயில்லை போலுங்காணப்படுகின்றது; கிடைத்தற்கரிய துன்பமுற்றுச் சொல்வது என்ன காரணம்? என்று (ஆண் புறு) தனது உயிர்போன்ற பேட்டைத் துன்பந்தவிர்த்துத் தங்கியிருந்தது. எ-று. (௭)

சேட்டு வெங்கதிர் குடகடற் படுதலுஞ் சிறந்த
மோட்டு வெம்பொறிக் கொடுஞ்சிறைப் பருந்திட முன்னிப்
பேட்டொ டுந்தனிப் புறவுபே ருவகையி னுறைந்த
கூட்டின் வாய்ப்புறத் தெதிர்ந்தறை கூவிய தன்றே.

(இ-ள்.) பெருமைதங்கிய சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியன் மேற்கடலில் அஸ்தமிக்கவும், சிறப்புமிகுந்த வலிதங்கிய புள்ளிகளையுடைய கொடிய சிறகமைந்த பருந்தானது சமயத்தைக்கருதிப் பெட்டையோடுதனித்து அப்புறுவானது பெருங்களிப்புடன் வாழ்ந்திருக்குங் கூட்டின் வாயெதிரில் நின்று அறைகூவியது. எ-று.

அறைகூவல்=போர்க்கழைத்தல். (௮)

ஆற்ற லுண்டெனில் விரைவினில் வருகென வறைந்த
பாற்றொ டும்புற வேற்றமர் புரிதலும் பருந்து
சீற்ற மீக்கொளப் புறவினைக் கவர்ந்துசென் றிடலுங்
காப்பு றந்தனிற் காமரும் பேடைகொத் தியதே.

(இ-ள்.) வல்லமையிருக்குமாகிற் சீக்கிரத்திற் போர்செய்ய வரக்கடவா யென்றுகூறிய பருந்தினுடனே ஆண்புறுவானது யெதிர்ந்து சண்டைசெய்யவும், பருந்து கோப மதிகரிக்கப் புறுவைப் பற்றிக்கொண்டுபோகவும், ஆசை பொருந்திய பெண் புறுவானது (பருந்தின்) காற்பக்கத்திலேகொத்தியது. எ-று. (௯)

காறொ டார்ந்திள மடப்பெடை கொத்தலுங் கலங்கிப்
பாறு வாய்வெரீஇ விடுப்பவீழ் புறவொடும் படர்ந்து
தாறு பாய்கவுட் களிறுசாய்த் திழிமதக் கலுழி
யாறு பாய்புன லயோத்திமா நகரடைந் ததுவே.

(இ-ள்.) இளமைதங்கிய அறியாமையுடைய பெண்புறுவானது பருந்தின் காலைத் தொடர்ந்து கொத்தலும், அப்பருந்து கலங்கி வாய்வெருவி விட்டுவிட, விழுந்த ஆண்புறுவுடன் பறந்துபோய், (வாழை - பலாமுதலிய) குலைகளைப்பாயும் யானைகள் கன்னத்தினின்று பொழிகின்ற கலங்கலாகிய மதசலம்பாயும் நீர்ப்பெருக்கமைந்த சிறந்த அயோத்தியாபுரியை யடைந்தது. எ-று.

வாய்வெருவுதல்=அயர்ச்சியில் வாய்குளிறுதல்.

"மடப்பெடை (தான்) கொத்தலும் பாறுவிடுப்ப,வீழ்புறவொடும் படர்ந்து அயோத்திமாநகரடைந்தது." எனக்கூட்டுக. (௧௦)

எருத்தி றைஞ்சுபைங் காய்க்குலைக் கதலிசாய்த் தீர்ந்தண்
குருத்த ரம்பையங் காடெறிந தணிமலர் குதட்டி
யொருத்தல் மேதிகண் படுவய லயோத்தியி னுறையா
வருத்தி கூர்பெடை யொடும்புற வாவிநீத் ததுவே.

(இ-ள்.) பிடர்சாய்ந்த பசியகாய்கள் தங்கிய குலையையுடைய வாழைமரங்களைச் சாய்த்து, குளிர்ச்சி தங்கிய குருத்துக்கள் பொருந்திய அழகிய வாழைத்தோட்டத்தை யழித்து, அழகிய மலர்களை யதுக்கி எருமைக்கடாக்கள் துயில்கின்ற வயல்சூழ்ந்த அயோத்திநகரத்திலிருந்துஆசைமிகுந்தபெண்புறுவுடன் ஆண்புறு உயிர் நீங்கி யிறந்தது. எ-று. (௧௧)

அண்ணல் மாநக ரயோத்தியி னுவிநீத் ததனுல்
வண்ண வான்சிறைப் புறவுகந் தருவமா நகரில்
நண்ணு சீர்த்திமந் தாரதா மனுக்குநன் மகனு
யுண்ண யந்துல கேத்திட வுதித்ததை யன்றே.

(இ-ள்.) பெருமைதங்கிய சிறந்த அயோத்திப்பட்டணத்தில் உயிர்நீங்கிய புண்ணியத்தால், அழகிய பெரிய சிறகையுடைய புறுவானது, சிறப்பமைந்த காந்தர்வலோகத்திற் சிறப்புப்பொருந்திய மந்தாரதாமனென்பவனுக்கு நற்புதல்வனாய் உள்ளங்களித்து உலகத்திலுள்ளோர் துதிக்கும்படிப் பிறந்தது. எ-று. (௧௨)

மழலை மென்மொழிச் செய்யவாய் மகன்வளர் நாளில்
விழைவி னேடுகல் விஞ்சைகள் முழுவதும் பயின்று
குழவி வெண்பிறைக் கண்ணிதாழ் புரிசடைக் குழகன்
கழல்ப ணிந்திடல் வேண்டுமென் றுவந்துளங் களித்தான்.

(இ-ள்.) மெல்லிய மழலைச்சொல்லைப் பேசுகின்ற செவந்த வாயையுடைய புத்திரன் வளர்ந்துவருங்காலத்தில், ஆசையுடனே நல்ல வித்தைகளெல்லாங் கற்று, வெண்மையாகிய இளம்பிறைச்சந்திரனைச் சிரோமாலையாகச் சூடிய தாழ்ந்த புரிந்த சடையையுடைய சிவபிரானுடைய திருவடிகளை நமஸ்கரித்தல்வேண்டுமென்று விரும்பி மனக்களிப்புற்றனன். எ-று. (கங)

அன்ன வன்பெயர் பரிமளா லயனவன் றினமும்
பொன்னி றத்தசெம் புறக்கனி கனிந்துதேன் பொழியுங்
கன்னி வாழையம் படப்பைசூழ் காசியி னடைந்து
மன்னு சீர்க்குடி லேசனைப் போற்றினன் வருமால்.

(இ-ள்.) அப் புத்திரன் பெயரோ பரிமளாலயன். (அவ் வரசகுமாரன்) நாடோறும் பொன்மயமான செவ்விய மேற்புறத்தையுடைய பழங்கள் கனிந்து தேனைச் சிந்துகின்ற அழகிய இளவாழைத் தோப்புகள் சூழ்ந்துள்ள காசிக்ஷேத்திரத்தைச் சேர்ந்து, சிறப்புதங்கிய ஓங்காரேசப்பெருமானைத் துதித்துவருவான்.

புல்லு காதலி னிறந்தமென் பேட்டினப் புறவுங்
கொல்சி னத்தவா ளரவுறை கோநகர் புரக்கு
மெல்லொ ளிக்கதி ரிரத்னதீ பன்றனக் கிரத்ன
வல்லி யென்றொரு புதல்வியா யுதித்தது மன்னோ.

(இ-ள்.) மணக்கின்ற ஆசையுடனே உயிர்நீங்கிய மெல்லிய பெண்புறாவும் (எதிர்த்தோரைக்) கொல்லுகின்ற கோபத்தையுடைய ஒளிவாய்ந்த சர்ப்பங்கள் வாழ்கின்ற சிறந்த நாகலோகத்தைக் காக்குஞ்சூரியப்பிரகாசம்போன்ற ஒளியையுடைய இரத்தினதீபனென்னும் அரசனுக்கு இரத்தினவல்லி யென்றொரு புதல்வியாய்ப் பிறந்தது. எ-று. (கடு)

அஞ்ச னக்குழும் பொழுகிவார்ந் தெனத்திக ழைம்பால்
வஞ்சி யன்னவட் கிருவர்தோ ழியருள மகிழ்ந்து
பிஞ்சு நாண்மதி முடித்துநின் றாடிய பெருமான்
கஞ்ச மாண்மல ரடிதொழு கருத்தின ளாகி.

(இ-ள்.) அஞ்சனச் சேறுனது ஒழுகி நீண்டது என்று சொல்லும்படி விளங்குகின்ற கூந்தலையுடைய வஞ்சிக்கொடி போன்ற இரத்தினவல்லிக்குத் தோழிமார் இருவ ரிருந்தனர். (அப் பெண்) மனங்களித்து, இளம்பிறைச்சந்திரனைச் சிரத்திற் சூடி நிருத்தஞ் செய்கின்ற சிவபெருமானது புதிய தாமரைமலர் போன்ற திருவடிகளை வணங்கும் மனமுடையளாய். எ-று.

இதுமுதல் ஐந்துபாடல்கள் குளகம்.

ஐம்பால் = ஐந்துவகையாக முடிக்குந் தன்மையுடைய கூந்தல். அவையாவன:—முடி - கொண்டை - சுருள் - குழல் - பனிச்சை என்பன. அவற்றுள், மயிரை உச்சியின் முடித்தலை முடி யெனவும், பக்கத்தில் முடித்தலைக்கொண்டை யெனவும் பின்னேசெருகலைச் சுருளெனவும், சுருட்டி முடித்தலைக் குழலெனவும், பின்னிவிடுதலைப் பனிச்சையெனவுங் கூறுவர். (கசு)

வேளை வென்றகட் கடைசியர் குரவையின் வெருவி
வாளை யம்பகட் டேற்றினம் வால்விசை முருக்கிப்
பாளை வாய்கமு குடைந்துதேன் குதித்திடப் பாயுங்
கோளில் வான்புனல் வளங்கெழு காசியிற் குறுகி.

(இ-ள்.) மன்மதனைச் செயித்த விழிகளையுடைய பள்ளஸ்திரீகளது குரவைக்கூத்திற்குப் பயந்து, அழகிய ஆண்வாளைக்கூட்டங்கள் தமது வாலை விசையுடன் முருக்கி, கமுகுவிருட்சத்தின் பாளைகள் வாய்திறந்து தேனைச் சொரியும்படி பாய்கின்ற குற்றமில்லாத சிறந்த நீர்வளமிகுந்த காசிநகரத்திற் சென்று. எ-று.

“குரவை யென்ப தெழுவர் மங்கையர்—செந்நிலை மண்டிலக் கடகக்கை கோத்துத்-தந்நிலை கொட்பநின் றாடலாகும்” என்றபடியே, குரவை யென்பது ஏழுமாதர்கள் ஒருவரோ டொருவர் கைகோத்துச் சுழன்று விளையாடும் ஓர்வகையாட்டம். (௧௭)

எரிதவழ்ந்தெரி முரட்படைச் சூலவேலேந்துங்
கருணை யங்குடி லேசன்மென் கழலிணை பணிந்து
புரிந ரம்பிரங் கிசையெழீஇப் புகழ்ந்துபொற் கோயில்
திருமெழுக்கெறிந் தொழுகொளிச் செஞ்சுட ரேத்தி.

(இ-ள்.) தீ மிகுந் தெரிகின்ற முத்தலை வேலென்னும் வலிய சூலாயுதத்தைத்தாங்கிய அழகிய கிருபாமூர்த்தியாகிய ஓங்காரேசப்பெருமானது மெல்லிய உபயதிருவடிகளை வணங்கி, புரிந்த நரம்புகளிரங்கும் (வீணை) கானத்தையெழுப்பி (பாடிப்) புகழ்ந்து, பொன்மயமான திருச்சந்நிதானத்தைத் திருமெழுகிடுதல் செய்து, ஒளிவீசுஞ் செவ்விய திருவிளக் கேத்தி. எ-று. (௧௮)

எழின லங்கடக் தேந்திள வனமுலைப் பேதை
யொழுகு நாளினே ரிடபஞா யிற்றினி லுவந்து
தொழுத குந்திரி திகைதனிற் றுயிலுண லொழிந்து
விழுது வீழிருட் போதெலாம் விதந்துபாட் டயர்ந்து.

(இ-ள்.) அழகி னிலக்கணங்களைப் பெற்றுப் பூரித்து இளமை வாய்ந்த நிறந்தங்கிய தனங்களையுடைய இரத்தினவல்லி (இத்தகைய சிவபணிவிடை) செய்துவருகையில், ஓர் வைகாசிமாதத்தில் விரும்பி வணங்கத்தக்க திரிதிகைத் திதியில் நித்திரை ஆகாரங்களை நீங்கி, இருள்மிகுந்து விளங்குகின்ற இராத்திரி முழுவதுங் களித்துப் பாடிக்கொண்டிருந்து. எ-று. (௧௯)

துயில்-உணல் என்பவை ஈண்டு முதனிலைத் தொழிற்பெயர்கள். துயிலல் உணல் எனப் பொருள்படும்.

இருட் புறங்கடிந் தெரிசுடர்ப் பரிதியங் கடவுள்
மருவு காலையின் வானதி படிந்துநான் மறையோர்க்
குருவ நல்லமு தூட்டியின் னமுதவர் துண்டு
பொருவில் தோழியர் தம்மொடுங் கண்படை புரிந்தாள்.

(இ-ள்.) இருளை யெப்பக்கத்திலும் ஓதுக்கிப் பிரகாசிக்கின்ற கிரணங்களையுடைய அழகிய சூரியபகவான்புறப்படுகின்ற உதயகாலத்தில், சிறந்த கங்கையில்

மூழ்கி, நால்வகையாகிய வேதங்களை யுணர்ந்த அந்தணருக்கு நல்ல திருவமுதினை யுண்பித்து, தானும் இனிய உணவை யுட்கொண்டு, சமானமில்லாத தோழிமாருடன் துயின்றனள். எ-று. (உ0)

அமுத மூற்றிருந் தொழுகிய வவிர்மதிச் சடையு
முமிழ்செ ழுங்கதிர் நீறுபூத் திலகிய வுருவு
மிமய மால்வரைப் பூங்கொடிக் கீந்தவோ ரிடனுங்
கமழ்ந றுந்துணர்க் கொன்றையுங் காரிருட் களனும்.

(இ-ள்.) அமுதகலைகள் ஊற்றெடுத் தொழுகுகின்ற பிரகாசிக்கின்ற சந்திரனைத்தரித்த சடையும், செந்நிறம்வீசும் சூரியன் திருவெண்ணீறுபூத்து விளங்கினாற்போன்ற திருவடிவமும், பெரிய இமாசலத்திற் றோன்றிய பூங்கொடி போன்ற உமாதேவியாருக் கருளிய வொப்பற்ற வாமபாகமும், பரிமளிக்கின்ற நல்ல கொத்தாகிய கொன்றைமாலையும், திருநீலகண்டமும். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (உக)

கறைய னற்றுளை யெயிற்றவெம் புயங்ககங் கணமும்
பொறிவ ரித்தெறு தழல்விழிப் புலியத ளுடையு
மறியு டைப்பொலந் தாமரைத் தடக்கையும் வயங்க
விறைவ னுங்குறை யிலிங்கத்தி னின்றுதோன் றினனால்.

(இ-ள்.) விஷந் தங்கிய துளைபொருந்திய நெருப்புப்போன்ற பற்களையுடைய கொடியசர்ப்பகங்கணமும், புள்ளிகளையும் வரிகளையுமுடையதாய்க் கொல்லுகின்ற தீப்போன்ற விழியையுடைய புலித்தோலாகிய ஆடையும், மானையேந்திய அழகிய தாமரை மலர்போன்ற விசாலமாகிய திருக்கரங்களும் விளங்கும்படி சிவபெருமான் அங்குவீற்றிருக்குஞ்சிவலிங்கக்குறியினின்று பிரத்தியக்ஷமாயினர்.

கொல்லும் வேலினைக் குருமணித் தடறமைத் தென்னப்
புல்லு நீளிமை பொருந்திடக் கண்படை புரியும்
வலவி யன்னவ ரெழுகென மழுவலா னுரைப்ப
வில்லு மிழ்ந்தவே லுறைகழித் தாலென விழித்தார்.

(இ-ள்.) கொல்லுகின்ற வேலாயுதத்திற்குச் செம்மணியாகிய மாணிக்கத்தால் உறைபூட்டினாற்போல, கலக்கின்ற நெடிய இமைகள் பொருந்தக் கண்கள் துயிலும் வல்லிக்கொடிபோன்ற மங்கையர்களே! எழுந்திருங்களென்று, மழுப்படை யேந்திய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருள, வில்லினின்று தோன்றிய வேலானது உறை நீக்கினாற்போலக் கண்விழித்தனர். எ-று. (உஉ)

அவிழ்ந்த பூங்குழ லங்கையிற் றிருத்திமென் றூசு
குவிந்த மென்முலை முகட்டினிற் குலவுறச் சேர்த்திச்
சிவந்த கண்மதர் நீங்கலுந் திருவுரு நோக்கி
யுவந்து பாடின ராடின ருவகையிற் குளித்தார்.

(இ-ள்.) (அம் மங்கையர்) அவிழ்ந்தொழுகிய மெல்லிய அளகபாரத்தை அழகிய கைகளாலே திருத்திக்கொண்டு, மிருதுவாகிய உத்தரியத்தை குவிந்த

இளமுலேயி னுச்சியிலிருக்க அணிந்து, செவ்விய கண்களின் மதர்ப்பொழியவும், (எம்பெருமானது) திருவுருவத்தைத் தரிசித்து, மனமகளித்துப் பாடினார்கள்; கூத்தாடினார்கள்; ஆநந்தத்தில் மூழ்கினார்கள். எ-று. (உச)

ஐய னுமங்க ளளப்பில வெடுத்தெடுத் தோதி
மையுண் கண்ணியர் மலரடி தொழுதுவீழ்ந் தெழலுஞ்
செய்ய தாமரைச் செழுமலர்த் தடங்கையா லெடுத்துப்
பைய ராவணி வேணியா னின்னன பகர்வான்.

(இ-ள்.) மை தீட்டிய விழிகளையுடைய அம்மங்கையர் சிவபிரானது திருநாமங்களைக் கணக்கில்லாதனவாக எடுத்துத் துதித்து, மலர்போன்ற திருவடிகளைப் பணிந்து நமஸ்கரித் தெழுதலும், படமமைந்த பாம்பை யணிந்த சடையையுடைய சிவபெருமான், செந்தாமரையாகிய செழித்த மலர் நிகர்த்த பெரிய திருக்கரங்களா லெடுத்து இவ்வகையாகத் திருவுள்ளம் பற்றுகின்றார். எ-று. (உரு)

உருவப் பூண்முலை யோடரி பரந்தவேல் விழியீர்
பொருவில் சீர்த்திமந் தாரதா மன்றரு புதல்வன்
பரிம ளாலய னெனப்பகா விஞ்சையற் புணர்ந்தாங்
கிருவி சும்புறை யிந்திர திருவொடு மிருப்பீர்.

(இ-ள்.) அழகிய ஆபரணமணிந்த குசங்களையும், நெடிய அரிபரந்த வேல்போன்ற கண்களையுமுடைய பெண்களே! சமானமில்லாத சிறப்பையுடைய மந்தாரதாமன் பெற்ற மைந்தனாகிய பரிமளாலய னென்று சொல்லும் வித்தியாதரனைக் கலந்து, பெரிய தேவலோகத்திலுள்ள இந்திரபோகத்துடன் வாழக்கடவீர்.

விஞ்சை வேந்தொடுங் காசிமா நகரிடை மேவி
யஞ்சொ லீருயர் முத்தியி லடைதிர்முற் பவத்தின்
னெஞ்சு வந்தெமை வழிபடு மடியர்நீ ரென்னப்
பிஞ்சு காண்மதி மிலைச்சிய பிஞ்ஞக னுரைத்தான்.

(இ-ள்.) அழகிய சொல்லையுடைய மெல்லியரே! வித்தியாதர மன்னனாகிய பரிமளாலயனுடன் சிறந்த காசிநகரத்திற் சேர்ந்து உயர்வாகிய மோட்சத்திற் கலக்கக்கடவீர்கள். நீங்கள் முற்பிறப்பில் மனங்களித்து எம்மை வழிபட்ட அடியர்கள் என்று, புதிய பிறைச்சந்திரனை யணிந்த சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (உஎ)

முற்ப வத்தினெஞ் செய்தியு முதல்வநின் மலர்த்தா
ளற்பி னல்வழி பட்டது மறைதியென் றமுதிற்
சொற்ப மூத்தபூங் கொடியனார் தொழுதுரைத் திடலுங்
கொற்ப மூத்தவெங் கணிச்சிவா னவ்விவை கூறும்.

(இ-ள்.) முழுமுதற்கடவுளே! பூர்வ ஜனனத்தில் எங்களது விர்த்தாந்தமும், தேவரீரது தாமரைமலர்போன்ற திருவடிகளை அன்போடு பூசித்தவகையும், உரைத்தருளவேண்டுமென்று, தேவாமிர்தம்போன்ற சொல்லையுடைய பூங்கொடியொத்த அம்மாதர்கள் வணங்கிக் கூறவும், கொலைத்தொழில்மிகுந்த கொடிய மழுப்படையேந்திய சிவபெருமான் இவ்வகையாகக் கூறுகின்றனர். எ-று. (உஅ)

நெறிப டுங்குழ லிரத்தின வல்லியாம் நீயும்
பறவை சூழ்வரு குருதிவேற் பரிமளா லயனும்
புறவு ருக்கொடெங் கோயிலின் முற்பவம் பொருந்தி
யுறைத வத்தினு லயோத்தியி னுறைந்துயி ருலந்தீர்.

(இ-ள்.) நெறிதலமைந்த கூந்தலையுடைய இரத்தினவல்லியாகிய நீயும், பறவைகள் புடைசூழ்ந்துவரும் உதிரந்தோய்ந்த வேலேந்திய பரிமளாலயனும், புறா வடிவத்துடன் எமது சந்நிதானத்தில் முன் பிறவியில் பொருந்தி வாழ்ந்த தவப்பலனால் அயோத்திநகரத்தில் வசித்து உயிர் கழிந்தீர்கள். எ-று.

நெறிபடுங் குழ லென்பது சுருண்ட அளகம். (உ௯)

திருவ நீணக ரயோத்தியி னவிதீர்ந் ததனல்
மருவு ரத்னதீ பன்றரு புதல்வியாய் வந்தாய்
பொருவில் செல்வமந் தாரதா மன்றரு புதல்வன்
பரிம ளாலய னுமென வுதித்தது பரிவால்.

(இ-ள்.) செல்வமிக்க அயோத்தியாபுரியில் நீங்களிருவரும் உயிர்துறந்த காரணத்தினல்,(சீர்த்தி)பொருந்தியஇரத்தினதீபன்பெற்ற பெண்ணாகப்பிறந்தாய். சமானமில்லாத செல்வம் பொருந்திய மந்தாரதாமன் பெற்ற மைந்தனாகிய பரிமளாலய னென்று சொல்லும்படி தகுதியுடன் பிறந்தது. எ-று. (௩0)

காமர் பூங்குழற் கலாவதி பிரலாவதி யென்னுந்
தாம வார்குழல் நின்னுடைத் தோழியர் தங்க
ளேம முற்றமுற் பவங்களு மியம்புவ லென்ன
நாம வெந்திறற் கணிச்சியோன் விழைவுற நவிலும்.

(இ-ள்.) அழகிய மலர்சூடிய கூந்தலையுடையாளே! கலாவதி பிரலாவதி யென்று சொல்லும் மாலைதரித்த நெடிய அளகத்தையுடைய உனதுதோழிகளது இன்பம்பொருந்திய முற்பிறப்புகளையுங் கூறுவேன் (கேட்பாயாக) என்று, அச்சத்தைத்தரும் கொடிய பராக்கிரமத்தையுடைய மழுப்படைதாங்கிய சிவபெருமான் அவர்கள் களிப்படையத் திருவாய்மலர்ந்தருளுவர். எ-று. (௩௧)

முற்ப வத்தின்மூன் றும்பவந் தன்னில்மற் றிவர்கள்
தப்பில் நான்மறை விளம்புசா ராயணன் றனக்காங்
கொப்பில் பேரெழின் மக்களா யினிதுவந் துதித்தார்
செப்பு தம்பெயர் கவுதமை பவானியாய்ச் சிறந்தார்.

(இ-ள்.) முற்பிறப்பின் மூன்றும்பிறப்பில், இவ் விருமாதர்கள் குற்றமில்லாத நான்கு வேதங்களுங் கூறுகின்ற சாராயண னென்பானுக்குச்ச மானமில்லாத பேரழகு வாய்ந்த பெண்களென்று இனிதாக வந்து தோன்றினர். (அச்சன்மத்தில்) சொல்லுகின்ற தங்கள்பெயர் கவுதமை பவானி யென்பனவாம் மேம்பட்டார்கள். எ-று. (௩௨)

ஏழில்கு விந்தன விளமூலை மகளிரைத் தந்தை
யழகு வாய்ந்தகா சயனனுக் களித்தன னவனும்

கழைமி டைந்தவெங் கானிடைச் சேறலுங் கனன்று
புழைகொள் பற்கொடும் பாந்தளாற் பொன்றின னன்றே.

(இ-ள்.) அழகு திரண்டாற்போன்ற இளமைவாய்ந்த தனங்களைத்தாங்கிய இப்பெண்களை, இவர்கள் பிதா அழகுபொருந்திய நாசயன னென்பானுக்கு (மணஞ்செய்து) கொடுத்தான். (நாசயனன் ஒருநாள்) மூங்கில்கள் நெருங்கிய கொடிய காட்டிற் செல்கையில், கோபமுற்றுத் துவாரம்பொருந்திய பல்லையுடைய கொடிய சர்ப்பத்தா லிறந்தனன். எ-று, (கூக)

கணவன் வீதலுங் கரும்பெனத் திரண்டதோண் மகளிர்
வணரி ருங்குழல் குறைத்துடல் மாசொடும் பழக
வணிது றந்துநோன் பாற்றுழி யருந்துவான் மற்றோர்
பணிவ ருந்தவப் பள்ளியிற் பரிவொடு மடைந்தார்.

(இ-ள்.) கரும்பென்று (கண்டோர்) கழறத்தக்க உருட்சியாகிய தோள்களையுடைய கன்னிய ரிருவரும் தமது கணவன் (அராத்தீண்டி) இறக்கவும், வளைவுற்ற நெடியகூந்தலை மழுக்கி, உடல் அழுக்குப்படிய, ஆபரண மணிதலை நீங்கி, விரதமிருக்கையில் உண்ணும்பல்ன் புபணிகரிய வேறோர் தவச்சாலையில் அன்புடன் சென்றனர். எ-று.

இச்செய்யுளிற் கூறப்பட்ட செயல்கள் கற்புடைய மாதர் தொழிலாதலின் இவற்றின் விருத்தாந்த நியாயங்கள் கற்பிலக்கணங் கூறிய அத்தியாயத்தில் முன் வந்துள்ளன. ஆங்குப் பரக்கக் காண்க. (நுச)

ஊன்க ழிந்திட நோற்பவர் பொங்குய ரரம்பைக்
கூன்பு றக்கனி காவினிற் கொண்டதீ வினையால்
மான் கவற்றிய கண்ணியர் மற்றைய பிறப்பிற்
கான்ப டர்ந்திடு செம்முகக் கருங்குரங் காகி.

(இ-ள்.) உடலிளைக்கும் வகையாய் விரதமிருக்கும் இருவரும், மிகவுமுயர்வாகிய வாழைமரத்தின் வளைந்த முதுகையுடைய பழத்தை, அச் சோலையில் உட்கொண்ட பாவத்தினால்,மானை மருட்டிய விழியையுடைய மாதர்க ளிருவரும் இரண்டாம்பிறப்பில் வனத்தில் ஓடுகின்ற செவந்த முகத்தையுடைய கருங்குரங்குகளாகத் தோன்றி. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (நுடு)

அணிது றந்தனர் நெறிவழா தாற்றுநல் வினையா
லிணையில் காசியி லுதித்தன ரிவருடைப் பதியும்
பணியின் வீந்துநற் றாதைதாள் பணிதலிற் புறவாய்
மணிமி டற்றிறை காசியின் வந்தவ தரித்தான்.

(இ-ள்.) அழகு நீங்கி, நல்வழி தவறாமற் செய்த புண்ணியவசத்தினாலே, சமானமில்லாத காசி க்ஷேத்திரத்திற் பிறந்தனர். இவர்கள் கணவனாகிய நாசயனனும் பாம்பினா லிறந்து நல்ல தந்தையின் பாதங்களைவணங்கியகாரணத்தினால்,புறவாக நீலகண்டத்தையுடைய சிவபெருமான் வீற்றிருக்குங் காசிநகரத்தில் வந்து பிறந்தான். (நுசு)

அனைய ருங்கவர் தமக்குமூன் றும்பவத் தன்பன்
வனைக ருங்குழல நினக்குமுற பவத்துயர் மணுள
னினிதின் மூவர்க்கு மிப்பவ மதனில்முன் புகன்ற
கனைக ருங்கழற் காளையே காதல னுவான்.

(இ-ள்) அலஙகரிககின்ற கரிய கூந்தலையுடைய இரத்தினவல்லியே! அந்தப் பரிமளாலயன் அம்மாதாகட்கு மூன்றும்பிறப்பிற் கணவன்; உனக்கு முறபிறப்பில் வாய்ந்த பெருமைதஙகிய நாயகன; உஙகள் மூவருக்கும் இந்தப் பிறப்பில், முன்கூறிய சத்திக்கினற வலிய வீரக்கழ லணிந்த காளைப்பருவமுடைய அவனே இனிமையோடுகூடியபுருஷனுவான. எ-று. (கூஎ)

ஈது நிற்கமுன் னுரைத்தன குரங்குக ளொழிநீர்த்
தீதில் காசியில் திரிலோசனன கோயிலிற் சிறந்து
மீது யர்ந்தபொற் பழுமரத திருநதுமவெண் டிரைய
கோதில நீரிடைக குளிததுமக் கோயிலசூழ் போந்தும்.

(இ-ள்.) இஃது இம்மட்டு மிருக்க: முன்சொல்லப்பட்டனவாகிய குரங்குகள் மோதுகினற நீரையுடைய குறறமிலலாத காசிநகரத்தில், திரிலோசனப் பெருமானது திருக்கோயிலில, சிறபபுறறு மேனேக்கி யுயர்ந்த அழகிய பழுமரத்தில வாழ்நதிருநதும, வெண்மையாகிய அலைகளையுடைய குற்றமில்லாத நீரில்மூழ்கியும், அச் சந்நிதானத்தை வலம்வநதும். எ-று.

பழுமரம்=ஆலமரம்; அல்லது பழுத்தமரம். (கூஅ)

உறையு நாளினி லையமேற் றுண்பவ னொருவன்
சிறைசெய் கணணியி லவைறறினைச் சிக்கயாத் தேகி
யறைபு னற்செழுங் காசியி லூட்டுவித தயின்று
மறுபு லத்தினி லடைதலு மிறநதன கவிகள்.

(இ-ள்.) (அக்குரங்குகள் இவவாறு) உயிர்வாழுங் காலத்தில், பிச்சையெடுத்துப் புசிப்பவனுகியவொருவனது (மிருகஙகளைப்) பிடிக்கினற வலையில்அகப்பட, (அவன) அவறறைக் கட்டிக்கொண்டு சென்று, ஒலிக்கின்ற நீர்வளமமைந்த செழுமைதஙகிய காசிநகரததில் ஆட்டுவித்து (அதனுற் கிடைத்த பிச்சையைப்) புசிதது, மறுதிசை சேரவுங குரஙகுக ளிறந்தன. எ-று. (கூகூ)

காசி மாநகர்க் கடவுள்பொன் முனறிலிற் கவினும்
பாசி லைப்பழு மரத்திடைப் பயினறநற் றவத்தா
லோசை போகிய வுரகவேந் துளமகிழ் சிறபப
வாசி னலலெழிற் புதல்விய ராயின வனறே.

(இ-ள்.) சிறந்த காசிநகரத்தில் வீற்றிருக்குஞ் சிவபெருமானது பொன்மயமான முற்றத்தில், அழகுவாய்ந்த பசிய இலைகளையுடைய பழுமரத்தில வாழ்ந்திருந்த நல்ல தவத்தினுல், (அப் பெண்குரஙக ளிரண்டும்) கீர்த்தி மிகுந்த நாகராசன் மனக்களிப் பதிகரிக்க, குற்றமில்லாத உத்தமலக்ஷணம் வாய்ந்த புத்திரிக ளாய்ப் பிறந்தன. எ-று. (சுo)

சுணங்கு பூத்தெழி லரசுவீற் றிருந்தணி சுமந்து
வணங்கு நுண்ணிடை தேய்த்துபா வருமுலைப் பேதா
யணங்க ராவரு ளமுதுறழ் சாயல்வார் வணடின்
கணங்கொள் வார்குழ லனையரிக் கன்னிய ராவார்.

(இ-ள்.) தேமல் படர்ந்து அழகுடன்கொலுவீற்றிருந்து ஆபரண மணிந்து துவளுகின்ற நுண்ணிய இடையைத் தேய்த்து உயர்ந்து வளருகின்ற முலைகளையுடைய இரத்தினவல்லியே! சாப்பராசன் பெற்ற அமுதம்போன்ற சாயலையும் நெடிய வண்டுக்கூட்டம் மொய்க்கின்ற நீண்டகூந்தலையுமுடைய அவர்கள் இப்போது கூறிவந்த மங்கையர்க ளாவார்கள். எ-று. (சக)

மருவு தோழிய ரிருவரு நீயும்வான் சிறப்பிற்
பரிம ளாலயன் றோணல நுகர்ந்துபல காலந்
திருவொ டும்பொலிந் தெறிபுனற் காசியிற் சேர்ந்து
பொருவி லாதுயர் முத்தியிற் பொருந்துவீ ரென்று.

(இ-ள்.) (அன்பு)பொருந்திய இரண்டு தோழியர்களும் நீயும் மிக்க சிறப்பினையுடைய பரிமளாலயனது தோளிற் (தழுவிக்கலவிச) சுகத்தை யனுபவித்து, அநேக காலமட்டும் செல்வத்தோடு விளங்கி மறிகின்ற நீரையுடைய காசிப்பட்டணத்தை யடைந்து சமானமில்லாமல் உயர்வாகிய மோக்ஷலோகத்திற் சேர்வீரகளென்று. எ-று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம். (சஉ)

வரம ளித்துயர் கடவுளவ் விலிங்கத்தின் மறைந்தா
னரிப ரந்தவேற் கணணியா தமபந் யடையா
வுரிய தந்தைதாய்க் கரனருள் வரமினி துரைத்துப்
பொருவில காமநோய் கைமிக வைகுறு போழ்தன.

(இ-ள்.) வரங்கொடுத்து, உயர்வாகிய சிவபெருமான் அந்தத் திரிலோசன விலிங்கமூர்த்தத்தில் அந்தர்த்தானமாயினர். அரிபரவிய வேல்போன்ற கண்ணையுடைய அக்கன்னியர் (மூவரும்) தமது நகரஞ் சார்ந்து, பெருமான பிரசாதித்த வரத்தை தமக்குரிய பிதா மாதாக்களுக்கு இனிதாக விசைத்து, இணையில்லாத மதநோய் அதிகரிக்க வாழுங்காலத்தில. எ-று. (சங)

இடப ஞாயிறுங் கெய்தலு முக்கணெம் பெருமாற்
கொடிவில் நலவிழா வுற்றுழி நோக்குவா னுரகர்
முடிவில் நலலெழி லியக்கர்விஞ் சையர்முதல் யாரு
மடையு மேல்வைமந் தாரதா மனுமவ ணடைநதான்.

(இ-ள்.) வைசாகமாதம்வரவும், திரிலோசனேசராகிய சிவபெருமானுக்குக் கெடுதலில்லாத நல்ல திருவிழாநிகழுகையில், தரிசிக்கும்படி நாகரும் நீங்காத நல்ல அழகுடைய யக்ஷர் விஞ்சையர் முதலாகிய யாவரும வந்துசேருகையில், மந்தார தாமனும் (அவர்களோடு திருவிழாமகோற்சவத்தைத்தரிசிக்கும்படி) ஆங்கு வந்து சேர்ந்தனன்.

சுரும்பு வீழ்தரு மலர்க்கணை தூணியோ டகற்றிக்
கரும்பு நீத்தவிற் காமனே யனையநின் மகற்கெ
னரும்பு மென்முலை மகட்கொடுப் பேனென வருளாற்
பொருந்து பேரெழி லிரத்னதீ பன்றனி புகன்றான்.

(இ-ள்.) வண்டுகள்மொய்க்கின்ற மலர்ப்பாணங்களை அம்பறாத்தூணியுடனே நீக்கிக் கருப்புவில்லையொழித்த ஒளிதங்கிய மன்மதனேபோன்ற உனது மைந்தனுக்கு, அரும்புகின்ற மெல்லிய தனத்தையுடைய எனது (இரத்தினவல்லியென்னும்) குமாரியைக் கொடுப்பேனென்று, பேரழகு பொருந்திய இரத்தினதீபன் ஆசையோடு (மந்தாரதாமனுடன்) சொல்லினன். எ-று. (௪௫)

அனைய கேட்டமந் தாரதா மனுமுக மலர்ந்து
கனைக ருங்கழல் வேந்தொடுங் கருணையி னேற்ப
பனிசெய் வெண்மணி கிடந்ததோட் பரிமளா லயற்குப்
புனைசெய் மேகலை மகளிரை நன்மணம் புணர்த்தார்.

(இ-ள்.) அதனைக் கேட்டுக்கொண்ட மந்தாரதாமனும் முகமலர்ச்சிகொண்டு, சத்திக்கின்ற வலிய வீரகண்டாமணிதரித்த இரத்தினதீபனுடன் அன்புகொண்டு அங்கீகரிக்க, குளிர்ச்சிசெய்கின்ற வெள்ளிய முத்துமாலைகள் விளங்குந் தோளையுடைய பரிமளாலயனுக்கு அழகுசெய்யும் மேகலாபரணமணிந்த அப்பெண்கள் மூவரையும் நன்முறையாக மணஞ்செய்வித்தனர். எ-று. (௪௬)

பகழி மாட்டிய வரிசிலைப் பரிமளா லயனு
மகினறும்புகை முகந்தவ ழம்மலர்க் கோதை
மகளிர் மூவரோ டடைந்துதன் கோநகர் வைகிப்
புகழி னிந்திர திருவொடும் பொலிந்தினி திருந்தான்.

(இ-ள்.) அம்புபூட்டிய வரிக்கட்டமைந்த வில்லேந்திய பரிமளாலயனும் நல்ல அகிற்புகையையுண்டு விளங்குகின்ற அழகிய மலர்மாலை சூடிய மங்கையர் மூவருடன் சென்று தனது சிறந்த நகரத்தில்வசித்து, கீர்த்தியோடு இந்திரபோகத்தைப் பெற்று விளங்கி இனிதாக வாழ்ந்திருந்தான். எ-று. (௪௭)

வில்வி ழுங்கிட வீங்குதோட் பரிமளா லயன்சீர்
மல்ல லம்புனற் காசியின் மீண்டும்வந் தெய்தி
யெல்லொ ளிக்கதிர் திரிலோசன விலிங்கத்தை யேத்தி
நல்லி சைத்தொடை நரம்புளர்ந் துறைந்திடு நாளில.

(இ-ள்.) வில்லைவிழுங்கும்படி பூரித்த தோளையுடைய பரிமளாலயன் சிறந்த வளமமைந்த அழகிய நீரையுடைய காசிக்ஷேத்திரத்தில் மறுபடியும் வந்துசேர்ந்த, சூரியன்போற்பிரகாசிக்குங் கிரணங்களையுடைய திரிலோசனவிலிங்கத்தைத் துதித்து. நல்ல இசையோடுகூடிய பாடல்களை வீணையிற்பாடி (தோத்திரஞ்செய்து) வசித்திருக்குங்காலத்தில். எ-று. (௪௮)

நல்லொ ளிச்சுடர் முக்கணு யகன்மலர்த் தாளிற்
பில்கு தேங்குழற் கலாவதி பிரலாவதி யிரத்னு

வல்லி யோடும்வேற் பரிமளா லயனனி மறைந்தான்
சொல்லு மிக்கதை கேட்டவர் துறக்கஞ்சேர் ணுவரால்.

(இ-ள்.) ஒளிசெய்கின்ற நல்லசோதிமயமாகிய திரிலோசனப்பெருமானது திருவடித்தாமரையில், தேன்சொரியுங் கூந்தலையுடைய கலாவதி-பிரலாவதி- இரத்தினவல்லி (ஆகிய மூன்று) மனைவியருடன் வேலேந்திய பரிமளாலயன் (இரண்டறக்) கலந்தனன். சொல்லிய இச்சரித்திரத்தைக் கேட்டவர்கள் மோக்ஷலோகத்தைச் சேர்கத்வார்கள். எ-று. (௪௬)

திரிலோசனலிங்கத்தின் சிறப்புரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - ௧௮௬௮.

---

எழுபத்தேழாவது

# கேதாரலிங்கத்தின் கதையுரைத்த அத்தியாயம்.

இருகோட்டுப் பிறைதவழு மீர்ஞ்சடையெங் கேதாரத் திறைவன் செய்தி, பொருகோட்டு மதமலையி னதள்புனைந்து நின்றாடும் புனிதன் முன்னர், வருகோட்டு முலையுமையாட் குரைத்தபடி மாதவத்தோய் மகிழ்ந்து கேளென், றொருகோட்டுக் கடாக்களிற்றின் பின்னுதித்த வேற் கடவு ளுரைக்கு மன்றே.

(இ-ள்.) இரண்டு கொம்புகளமைந்த இளஞ்சந்திரன் தவழுகின்ற குளிர்ந்த சடையையுடைய எமது கேதாரலிங்கத் தலைவரது சரிதத்தை, போர்செய்கின்ற தந்தங்கள் தங்கிய மும்மதம் பொழிகின்ற மலைபோன்ற (கயாசுரனென்னும்) யானையினது தோலை ஆடையாகத் தரித்து, (தனித்து விளங்கும் பரம்பொருளாக) நின்று, (ஆனந்த)நடனஞ்செய்கின்ற பரிசுத்தராகிய சிவபிரான் முற்காலத்திலே, வளருகின்ற வட்டமாகிய தனங்களையுடைய உமாதேவியாருக்கு உபதேசித்த முறையே சிறந்த தவத்தையுடைய அகத்தியமுனிவனே! களிப்புற்றுக் கேட்பாயாக என்று, ஒற்றைக்கொம்பு வாய்ந்த (இருவகை) மதம் பொழிகின்ற யானையாகிய விநாயகக்கடவுளுக்குப் பின்தோன்றிய வேற்படை தாங்கிய ஸ்ரீசுப்பிரமணியசுவாமிகள் சொல்லத்தொடங்கினர். எ-று.

இளஞ்சந்திரன் இருபுறத்தும் வளைந்துள்ளதாதலின் அதனை "இருகோட்டுப்பிறை" என்றும், சிவபிரான் சந்திரசேகரரும், தண்ணிய கங்கையைச் சடாடவியிற் றரித்தோரும், எம்மைக் கிருதார்த்த ராக்குவோரும், கேதாரத்தில் வீற்றிருப்போரும், யாவர்க்கும் இறைவரு மாதலின் "பிறைதவழுமீர்ஞ்சடை யெங் கேதாரத் திறைவன்" என்றும், அவரைப்பற்றி யீண் டுறையக் புக்கது சரிதமாதலின்"செய்தி" என்றும், யானையானது கோறல்புரியத்தக்க கோடுகளுடையதும்,

அருவியாற்றைச்சொரியும் மலையைப்போல மதஜலம்பொழியும் கரியபெரியவுருவுடையது மாதலின் "பொருகோட்டுமதமலை" என்றும்,அத்தகைய கயாசுரனென்னும் யானையையெமதிறைவர் சம்ஹரித்து அதன்சருமததை ஆடையாகத் தரித்தமையின்"மதமலையினதள்புனைந்து" என றும், இறப்புபிகழ்வெதிர் வென்னு முக்காலத்துந் தோன்றி யழிகின்ற பல தேவர்போன்றன்றி, அஜேசுமவாதி ஆன்மாக்களைத் தம்மிடத்தினின் றுற்பவிக்கச்செய்தும்,மீண்டும் அத்தோற்றியஅடைவே தம்பால் லயப்படுத்தியும், தாம்நிர்விகாரமாக விளங்குவோராதலின் "நின்று" என்றும், சர்வாண்டங்களும் மஹாசம்ஹாரகாலத்தில் நிலைகுலைந்தழியத் திருமால் முதலிய பெருந்தேவரு மிறந்த மஹாமயானத்தில், தமது சத்தியே உமாபிராட்டியாராக ஓர்பா லிருக்கப் பவுரிக்கூத்தாடுவோ ராதலின் "ஆடும்" என்றும், இருவினைக் கீடாக ஆன்மாக்களைப் படைத்து, தநுகரண புவனபோகங்களைப் புசிக்கச்செய்து சிருட்டியாதி தொழில்கள்புரிந்தும், சர்வபரிபூரணராக விளங்கியும், பரிசுத்தராகவேநிற்றலின் "புனிதன்" என்றும், பண்டொருகாலத்தில் இச் சரித்திரம் இறைவர் இமயவல்லிக் கிசைத்ததாதலின் "முன்ன ருமையாட் குரைத்தபடி" என்றும், மகாருஷிகள் யாவரினும் அகத்தியமுனிவர் சிறந்தவரும், சிவகுருநாதராகிய குமாரக்கடவுளே தமக்குஆசிரியராக அமையத்தக்க தவமுதிர்ச்சியுடையோருமாதலின் "மாதவத்தோய்" என்றும், இறைவர் திருவாக்கையே ஈண் டெடுத்துரைத்து மாதலின் அஃது கிடைத்தற்கரிய பொருளாகக் களித்துக் கேட்கவேண்டுமென்பார் "மகிழ்ந்துகேள்" என்றும், இரு கொம்பினை யுடைய உலகத்திலுள்ள இயற்கையானைகட்கும், நாற்கோட்டினை வாய்ந்த ஐராவதமென்னும் இந்திரனது பட்டத்து யானைக்கும், இரண்டாயிரந் தந்தங்கள் பொருந்திய ஐராவண மென்னும் ஸ்ரீ கைலாயத்திலுள்ள யானைக்கும் இறைவராக ஒற்றைக் கொம்புடன் அங்குசபாசஞ் செங்கையிற்கொண்டு விளங்குவோர் விநாயகராதலின் "ஒருகோட்டுக்களிறு" என்றும்,பரஞானம் அபரஞானம் என்னும் இருவகை மத முடையராதலானும்,உத்தமாங்கம் யானைவடிவமாதலாலும்,அம் மூத்தபிள்ளையாரை "கடாக்களிறு" என்றும், குமாரக்கடவுள் விநாயகக்கடவுளுக்குப் பின் தோன்றி இளையபிள்ளையாரென் றியற்கைத்திருநாம முடையராதலின் "களிற்றின்பின் னுதித்த கடவுள்" என்றும்,சூரபன்மனுதி தீயோரைத்தொலைத்த சத்தியாகிய வேற்படையைத் திருக்கரத்திற்றுங்கி நிற்பதால் "வேற்கடவுள்" என்றும், அறுமுகக்கடவுள் ஈண்டு அகத்தியமுனிவர்க்கு உபதேசிக்குங் கிரமமாதலின் "உரைக்கும்" என்றுங் கூறினர்.

அன்று - ஏ - அசைகள்.

இச் செய்யுளிலுள்ள சரிதங்கள் முன்னும் பின்னும் வந்துள்ளன வாதலின் விளக்காது விடுத்தாம். ஆங்கு வந்துழிக் காண்க. (க)

பாசடைத்தா மரைமலரும் பாவகா மடுவினிடைப் படிந்து போகித்
தேசுடைய கேதாரத் திறைவனிரு பாதமலர் சிந்தித் தேத்திப் [கின்
பூசனைசெய் திடிலோங்கு பொலங்குடுமிச் சினகரத்தின் பொலிவு நோக்
மாசுடைய பவக்கடலின் கரைகடந்து முத்திநெறி மருவு வாரே.

(இ-ள்.) பசுமையாகிய இலைகளையுடைய தாமரைக்கொடிகள் மலர்கின்ற பாவகரதீர்த்தத்தில் எவரேனும் மூழ்கிச் சென்று ஒளிபொருந்திய ஸ்ரீ கேதாரவி லிங்கப்பெருமானது உபய பாதமாகிய மலர்களைத் தியானித்துத் துதித்துப் பூசை செய்தாலும், உயர்வாகிய பொனமயமான சிகரத்தையுடைய திருவாலயத்தின் அழகினைத் தரிசித்தாலும், அவர்கள் குற்றந்தங்கிய ஜனனசாகரத்தின் கரையைக் கடந்து மோட்சமாகிய மார்க்கத்தைப் பொருந்துவர். எ-று.

பாவகரம் என்பது கேதாரேச்சுரப்பெருமான் திருச்சந்நிதானத் தருகிருக்கும் தீர்த்தம். (உ)

ஆங்குநிகழ் காதையொன்றுண் டறைகுவல்கேண் மதிமேனு ளகில
மூய்ய, வோங்குமிரா சேந்திரகற் பத்திலிர ணியகருப்ப னென்ன வோ
துந், தீங்கறுநன் மாதவத்துப் பாசுபதா சிரியனுள னன்னோன் செம்பொ
ற், பூங்கழல்கள் வசிட்டன்முதல் மாணுக்கர் பலதினமும் போற்றி வாழ்
வார்.

(இ-ள்.) அக் கேதாரேச்சுரத்தில் நடந்த சரிதமொன் றுளது. (அதனையுஞ்) சொல்வேன் கேட்பாயாக. முற்காலத்தில் உலகிலுள்ளோர் உஜ்ஜீவிக்கும் படி உயர்வாகிய இராஜேந்திரகற்பத்திலே இரணியகருப்பன் என்று பெயர்கூறுகின்ற குற்றமற்ற நல்ல சிறந்த தவத்தையுடைய பாசுபதாசிரியன் (ஒருவன்) இருந்தான்; அவ் விரணியகருப்பனது செம்பொன்போலும் அழகிய பாதங்களை வசிட்டன் முதலாகிய சீடர்கள் எக்காலமும் துதித்துவாழ்ந்திருந்தார்கள். எ-று.

பசுபதி ஸம்பந்தம்-பாசுபதம்: அதாவது சைவம். (௩)

ஆறணிந்த செஞ்சடையோன் சேவடிக்கீழ்த் தொழும்புசெயு மன்ப ராகி
நீறணிந்து கண்டிகைமா லிகைபுனைந்து கங்கைநதி நெறியி னாடி
மாறுசெய்முக் குறும்பெறிந்து வளர்சடா முடிபுனைந்து மவுன மாகி
வேறடிசி னுகாரம லையமேற் றினிகருநதி மேவ லோடும்.

(இ-ள்.) கங்காநதியை யணிந்திருக்குஞ் செவ்விய சடையையுடைய சிவபெருமானது செவந்த திருவடியில் அடிமைத்திறம்புரியும் அடியார்களாகி, திருவெண்ணீறு தரித்து, உருத்திராக்கமாலை யணிந்து, கங்காதீரத்திற் கிரமப்படி ஸ்நானஞ்செய்து, (ஆன்மாவைக்) கணபங்கப்படுத்துகின்ற மூவகைக் குற்றங்களையுங் களைந்து, வளர்கின்ற சடைமுடி தரித்து, மவுனமுடையராய், வேற்றுணவைப்புசியாமல் யாசித்து இனிதாக வுண்டுகொண்டிருக்கவும். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

"ஈன்று ளவனை யனையார்மனை யையமேற் றுண்டு" என இந்நூலிலேயே கூறியவண்ணம் ஈண்டும் "வேறடிசில் நுகராம லையமேற் றினிதருந்தி" என்றார் மற்றவையும் முன்சொற்ற பிரமசரியங் கூறிய அத்தியாயத்திற் காண்க. (ச)

ஆங்கவரிற் குரவனடி யிருபோதுந் தொழுதேத்தி யறம்வ ழாது
தீங்கறுநன் மாதவத்து வசிட்டமுனி பாவகரத் தெண்ணீ ராடிப் [வி
பூங்கதிர்கான் றொளிபரப்பும் வெண்டிங்கட் பசுங்கண்ணி புனையுஞ் செவ்
யோன்கொளிய சிவலிங்க மெஞ்ஞான்றுந் தொழுதேத்தி யொழுகுநாளின்.

(இ-ள்) அவவா றொழுகிவருகின்ற மாணுக்காகளில், ஆசார்யரது பாதங்களை (காலை மாலை யாகிய) இரண்டுபோழ்திலும் வணஙகித் துதித்து, (பிரமசாரிய் ஆச்சிரம) தருமந்தவறாமல், குற்றமற்ற நலல சிறப்பமைநத தவத்தையுடைய வசிட்டமுனிவன தெள்ளிய நீரையுடைய பாவகரதீர்த்தத்தில மூழ்கி, அழகியகிரணஙகளைக் கக்கிப் பிரகாசத்தைப பரவச்செய்கினற வெளளிய சந்திரனைப் பசிய சிரோமாலையாக வணிநத அழகுமிகுந்து பிரகாசிக்குஞ் சிவலிஙகமூர்த்தத்தை எக்காலத்தும் வணங்கித துதித துவருங்கால ததில. எ று. (ரு)

அறங்கெழுநூற் றுறைபோய மாணுக்கா பலரோடு மருளான் மும்மைக்
குறும்பெறிந்த பாசுபதா சிரியனிபற் கேதாரங் குறுகல வேணடிக்
கறங்குகுரா லுளையரிமான் சிறுகுருளை கவிழ்தலைய வருவி யோலி [னே.
னுறஙகுமுயா பொலன்குடுமி யிமயநெடுஞ் சாரலின்வா யொதுங்கி ஞ

(இ-ள்.) தருமமாாக்க மிகுந்த நூலாராய்ச்சியில் தேர்ச்சியடைந்த சீடர் பலருடன (ஆணவாதி) மூவகைக குற்றஙகளை யெறிநத பாசுபதாசிரியனுகிய இரணியகருப்பமுனிவரன் ஆசையுடன சிறப்புப் பொருந்திய கேதாரேச்சுரத்தை யடைதல் விருமபி, கர்ச்சிக்கினற குரலையும் பிடரிமயிரையுமுடைய சிங்கங்களின் சிறியகுட்டிகள் இறங்குகினற தலையையுடைய அருவியாற்றின் ஓசையால் தூங்கும் உயர்ந்த பொற்சிகரங்கள்பொருந்திய பெரிய இமயமலைச்சாரலில் ஒதுங்கினன். எ-று. (சு)

அருளினிர ணியகருப்ப முனிவரன்போ யிலிங்கவடி வாகி யோங்கு
திரைபொருது கரைகடக்குங் கேதார நதியினறுந தெண்ணீர் மாநதிக்
கரையினிருந்த லுமாவியொழிநதனன்வான் குடுமிநெடுங் கைலை நின்றும்
பொருவிலகணமவிமானமொடு போநதவனை யினிதேற்றிப் போயவனரே.

(இ-ள் ) இரணியகருப்பமுனிவன் ஆசையுடன் சென்று சிவலிங்கவுருவமாகி, உயாவாகிய அலைகள வீசிக் கரையைக் கடக்கின்ற கேதாரநதியினது நலல தெளிவாகிய சலததைக் குடித்து அந் நதிக்கரையி லிருக்கையில், உயிர்நீங்கினன. பெரிய சிகரத்தையுடைய நெடிய கைலாயகிரியிலிருந்து, ஒப்பிலலாத சிவகணங்கள் தெய்வவிமானததுடன் வநது அப் பாசுபதாசிரியனை இனிதாக அதில் ஏறறிக்கொண்டுசென்றன. எ-று. (எ)

அருள்புரியுங் கடவுள்முனி யிறநதெளிதிற் கைலைவரை யடைத லுேக்கித்
தெரிவரிய சுடரிலிஙக மெவற்றினுமிக் கேதாரஞ் சிறநத தென்று
விருவினைவே றறநோற்ற வசிட்டமுனி கேதாரத திறைவற் போற்றி [ல்.
விரிபுனற்கா சியினடைந்து யாணடுதொறுமபோய்ததொழுது மீளுநாளி

(இ ள்.) (தனனையடுத்தோர்க்குக்) கிருபைசெய்கின்ற தெய்வீகம்பொருந்திய இரணியகருப்பமுனிவன் (அவவிடத்தில்) உயிர நீஙகி, இலேசாகத் திருக்கைலாயகிரியை யடைந்ததைப் பார்த்து, காண்டற்கரிய பிரகாசம்பொருந்திய சிவலிங்கக்குறிக ளெல்லாவற்றினும் இக் கேதாரவிலிஙகமே சிறந்ததென்று, இருவினைகளின் முதலறும்படி தவஞ்செய்த வசிட்டமுனிவன் கேதாரேசபபெருமானைத் துதித்து, பரந்த நீர்ப்பெருக் கமைந்த காசிக்ஷேத்திரஞ்சேர்ந்து, வருடந்தோறுஞ் சென்று தரிசித்துத் திரும்பிவாழுங்காலத்தில். எ-று.

இருமுத விரணபொடல்கள் குளகம்.

யாண்டு - இச்சொல இக்காலத்து ஆண்டு என வழங்குகின்றது.

"ஆவோ டல்லது யகர முதலா" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாராத லின், யாறு, யாடு, யானை, யாண்டு என்பவை ஆறு, ஆடு, ஆனை, ஆண்டு என்பவற் றினுஞ் சிறப்புடையனவெனக்கொள்க. (அ)

தண்டூன்றித் திரைகவுள்வா னரைமுடிய முதிர்கிழவுத் தன்மை யாதல், கொண்டாகந் தளர்ந்துமுயர் கேதாரத் தடைதுமெனக் குறித் தனேக்கித், தண்டாவன புடைமுனிவர் வரைகடந்து போதலரி தென வுந்தாழா, துண்டாலம பழுத்தமிடற் றிறையருளால வசிட்டமுனி யொ ருப்பட் டானே.

(இ-ள்.) (தானே நடக்க ஏலாமல்) தடியை யூன்றிக்கொண்டு, திரைந்த கன்னமும், வெள்ளிய நரைதங்கிய சிகைமுடியுமுடைய (வயது) முதிர்ந்த கிழப்ப ருவம்வருதல்கொண்டு உடல் (வன்மை) தளர்ச்சியுற்றும், உயர்வாகிய கேதாரத்தி ற்குச் செல்வோமெனறு குறித்தலைக் கண்டு, குறைவிலலாத அன்பினையுடைய முனிவர்கள் மலையைத் தாண்டிச்செலவது அருமையென்று கூறவுந் தடையுறா மல், விஷபானஞ்செய்து நீலநிறமிக்க ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானது திருவருளால் வசிட்டமுனிவன (அக் கேதாரேசத்தைத் தரிசிக்க) சம்மதப்பட்ட னன். எ-று.

திரைதல்=உடலின மீந்தோல் சுருங்குதல்.

கிழவுபழுத் தனையவுட லருந்தவத்தோன் கேதாரத் திறத்த லெண் ணி, விழைவுறுநன் மனவலியை யினிதோர்ந்து கனவினிடை விரைவிற் போந்து, பழமறையோ யிவ்வுழியாம படரந்தனமவ் வுழியேக லென்னப் பண்பால, தழைசெவிய மதமலையி னுரிபோர்த் தவனோடு முனிவன் சாற்றும்.

(இ-ள்) கிழத்தன்மையே பழுததாற்போன்ற வுடலையுடைய அரிய தவ சியாகிய வசிட்டமுனிவன் கேதாரஸ்தலத்தில் மரிப்பதற்குக் கருதி, விரும்புகின்ற நல்ல மனோதிடத்தை இனிதாகத் தெரிந்து (சிவபெருமான் அவனது) கனவில் விரைந்துவந்து, பழமையாகிய வேதங்களை யுணர்ந்தவனே! யாம் ஈண் டெழுந் தருளினோம்; ஆண்டுச் செல்லவேணடாம் என்று திருவாய்மலர்ந்தருள, வசிட்ட முனிவன் பரந்த செவியை யுடைய மதமபொழியும் மலைபோன்ற கயாசுரனது பெரிய சருமத்தைப் போர்த்த சிவபிரானுடன் செப்புகின்றான். எ று. (௰)

வரமளித்தி யெனிலென்றன் மாணுக்கா யாக்குமருள் வழங்கு கென்னப்
பொருதிரைநீர்க் கங்கைபுனை காபாலி யார்க்குமருள் புரிய வேண்டிக்
கருவிமுகில் கிடந்துறங்கு மிமயமால் வரைதுறைந்து காசி யெய்திப்
பரவுகாதி வினையகறறும பாவகர தீர்த்தத்திற பரிவிற் சேர்ந்தான்.

(இ-ள்.) (தேவரீர்) வரம் அநுக்கிரகிப்பீராகில், அடியேனது சீடர்களெல் லாருக்கும் திருவருள் பாலிக்கவேணடும் என்று விண்ணப்பிக்க, எறிகின்ற அலை கள் பொருந்திய நீர்மயமான கங்காநதியைச் சூடிய சிவபெருமான் எல்லாருக்குந்

திருவருள் புரியவேண்டி, உலகிற்கு முதற்காரணமாகிய மேகங்கள் தங்கி யுறங்குகின்ற பெரிய இமோற்கிரியை நீங்கிக் காசிப்பதியை யடைந்து, துதித்தோரது தீவினைச் சம்பந்தங்களைப் போக்குகின்ற பாவகரதீர்த்தத்தில் ஆடையுடனே அடைந்தனர். எ-று.

காபாலி=(பிரமனது) கபாலத்தைக் கையிற் றாங்கினவர்; சிவபிரான். (கக)

ஆதலா லித்தீர்த்த மாடுகின்றோர் முத்திநக ரடைதல் திண்ணம்
காதலாற் றென்புலத்தோர் கடன்கழிப்பிற் பெறலரிய கதியிற் சேர்வ
ரீதலா லதன்வடபா லிந்திரத்துய்ம் மினனென்னும் வழுதி கண்ட
தீதிலபே ரொளியிலிங்க மொன்றுளதாங் கதன்சீர்த்தி செப்ப லாமோ.

(இ-ள்.) ஆனபடியால் இப் பாவகரதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவர்கள் மோக்ஷலோகத்திற் சேருதல் சத்தியம். (இத் தீர்த்தத்தில்) ஆசைகொண்டு பிதுரரது கடன்களைச் செய்தால் அடைதற்கரிய நற்கதியிற் சேர்வார்கள். இதுவேயன்றி அப்பாவகரமடுவின் வடதிசையில் இந்திரத்துய்ம்மனென்னும் பாண்டிமன்னன் பிரதிட்டைசெய்த குற்றமில்லாத பேரொளிப்பிழம்பாகிய சிவலிங்கமொன்றுண்டு. அதன சிறப்பை எடுத்துச் சொல்லமுடியுமோ (சொல்லமுடியாது) எ-று. (கஉ)

ஆங்கதன்றென் பாற்சிறந்த நீலகண்டேச் சுரமுளதாங் கதனின் பாங்கர், வாங்குசிலை விப்பிரவா கெனுமவழுதி தனையீன்ற மடமா னேக்கின், கோங்கின்முகை கவற்றுமுலைச் சித்திராங் கனையமைத்த கோதில் சீர்த்தித், தீங்ககற்றி யருள்கொழிக்குஞ் சித்திராங் கதலிங்கஞ் சிறப்பின் வைகும்.

(இ-ள்.) அந்த இந்திரத்துய்ம்மேசத்தின் தென்பக்கலில், சிறப் பமைந்த நீலகண்டேச்சுரம் உளது. அந்நீலகண்டேசத்தின் பக்கத்தில் வளைந்த வில்லையேந்திய விப்பிரவாகு வென்னும் பாண்டியனைப் பயந்த இளமைதங்கிய மான்போன்ற பார்வையும், கோங்கரும்பு போன்ற குசத்தையு முடைய சித்திராங்கனை யென்பாள் பிரதிட்டைசெய்த குற்றமில்லாத சிறப்போடு கூடிய சித்திராங்கத லிங்கம் பாவங்களை யொழித்துக் கிருபை புரியும் மேம்பாடுடன் விளங்குகின்றது.

அம்பரிடேச் சுரங்கானாஞ் சனஞ்சயமேச் சுரமிவைக ளாங்கு வைகும், வம்பவிழ்பூங் கொன்றைபுனை வார்சடையோ னிறைவியொடு வழங்கு மாறு, கமபமறு தவமுனிவ வுரைத்தனமிக் காதைதனைக் கற்றோர் கேட்டோர், உமபர்மலர் தூஉய்ப்பழிச்ச வொருமூன்று கண்ணினொடு முறைந்து வாழ்வார்.

(இ-ள்.) அம்பரீஷேஸ்வரம் - கானாஞ்சனேஸ்வரம் - ஐய்மேஸ்வரம் - ஆகிய இவை அவ்விடத்தில் வீற்றிருக்கின்றன. வாசனையோ டலர்ந்த கொன்றை மலர்மாலையணிந்த நீண்ட சடையையுடைய சிவபெருமான் உமாதேவியாருடன் திருவாய்மலர்ந்தருளியவகையே, யாமுங்கூறினோம். கலக்கமற்ற தவத்தையுடைய

அகத்தியமுனிவனே! இச்சரிதத்தைப் படித்தவர்களும் கேட்டவர்களும், தேவர்கள் மலர்மாரிவருஷித்துத் துதிக்கும்படி ஒப்பற்ற திரிநேத்திரங்களுடன பொருந்தி வாழ்வார்கள். எ-று. (௧௪)

கேதாரவிலிங்கத்தின் கதையுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௬௧௨

எழுபத்தெட்டாவது

## தருமேசவிலிங்கத்தின் சிறப்புரைத்த அத்தியாயம்.

பின்னருமிவ் விலிங்கத்தி னுயர்ந்ததெது வெனவுமையாள் பேச வெந்தை, முன்னருரைத் திடுகாதை கேட்டியென வருந்தவத்தின முனியை நோக்கித், தென்னதென வரிவண்டுஞ் சுரும்புமிசைபாட்டயாத் தேறல் நல்கு, நன்மலர்ப்பூங் கடப்பந்தார் துயலவருதோட் குமரனிவை நவிலு மாதோ.

(இ-ள்.) இவ்விலிங்கங்களி னுயர்ந்தது யாது? என்று உமையம்மையார் மீண்டும் வினவ, எமது தந்தையாகிய சிவபெருமான் முற்காலத்தில் திருவாய்மலர்ந்தருளிய சரித்திரத்தைக் கேட்பாயாக என்று, அரிய தவத்தையுடைய அகத்தியமுனிவரைப் பார்த்து, தென்னதென வென்று கீற்றுகள் பொருந்திய வண்டுகளும் சுரும்புகளும் இசைப்பாடல் செய்யும்படி தேன் துளிக்கின்ற நல்ல மலர்களாலாகிய அழகிய கடப்பமாலை யசைகின்ற திருத்தோள்களையுடைய முருகக்கடவுள் இவ்வாறு திருவுள்ளம் பற்றுகின்றனர். எ-று.

தென்னதென வென்பது அநுகரணம். (௧)

கனைகுரலேற் றெருமையுடைக் கொடுங்கூற்ற மாங்குவந்து கருணையோடும், பனிபடர்கா லையிற்புனலிற் குளித்துமழைக் காலமழை படவே நின்றும், முனிதருவெந் தெறுகோடைக் கைந்தழலி னடுநின்று முடிவில காலம், வினையறுநற் றவமாற்ற வாங்கவனமுன் புரிசடையோன் வெளிப்பட்டானே.

(இ-ள்.) வெடிபடு தொனியையுடைய எருமைக்கடாவை வாகனமாகக் கொண்ட கொடிய இயமன் அவ்விடத்திற்கு வந்து, ஆசையுடனே பனிக்காலத்தில் நீரில்மூழ்கியும், மாரிகாலத்தில் மழையிலே நின்றும், கொடுமைமிக்க கோடைகாலத்தில் பஞ்சாக்கினிமத்தியில் நின்றும், அநேகங்காலம் தீவினைதொடக்கொழியும் நல்லதவத்தைச் செய்ததால், புரிந்த சடையை யுடைய சிவபெருமான் அவ்வியமனுக்கு முன்னே வெளிப்பட்டுக் காட்சிதந்தருளினர். எ-று. (௨)

மன்பெருநற் றவமாற்றிப் பலகாலு முணவொழிந்து வருந்தி நோற்ற, வெண்பெருமியர்க் கையைமகிழ்ந்தே மெழுகென்னக் கொடுங்கூற்ற

மெழுத லோடு, மன்புடைய சராசரங்க ளெவற்றினுக்கு மிறைவனீ'ய
வைமெ லாகின், றென்புலத்திற் புகுந்திழைத்த வினைவழியின் னருளொ
டும்போய்ச் சேர்க வன்றே.

(இ-ள்.) நிலைபெற்ற பெரிய நல்ல தவத்தைச்செய்து, அநேக காலம் ஆகா ரம்நீங்கி வருத்தமுற்றுத் தவஞ்செய்த எலும்புகள் தெரியப்பெற்ற சரீரத்தைக் (கண்டு) களிப்படைந்தோம்; எழுந்திருக்கக்கடவாய் என்று (சிவபெருமான்) இசைக்க, கொடிய இயமன் எழுந்திருக்கவும், அன்புதங்கிய சரம் அசரமாகிய எல்லாவற்றிற்கும் நீயே தலைவன்; அவை முற்றும் உனது தென்றிசையிற்சேர்ந்து, தாம் செய்த இருவினைக்கிடாக உன் கருணையிற்போய்ச் சேரக்கடவன. எ-று. (௩)

ஒழிவரிய கொடும்பாவ நெடுங்காலம் புரிந்துமொரு போது சிந்தை
விழைவொடுதெண் டிரைபுரட்டு தருமவா வியிற்படிந்து விதியி னின்பேர்
மொழிதருமேச் சுரன்பாதம் பணிந்திடுவோர் பெறலரிய முத்தி சேர்வர்
தொழுதகநீ பழிச்சியவித் துதிகேட்டோர் நமதுபதந் துனைவிற் சேர்வார்.

(இ-ள்.) நீங்குத லரிதாகிய மகாபாவங்களை அநேக காலஞ்செய்தும், ஒரு காலத்தில் மனவிருப்பத்துடன் தெள்ளிய அலைகள் சுருட்டுகின்ற தருமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து கிரமப்படி உன்பேராற் சொல்லுந் தருமேஸ்வரரது திருவடிகளை வணங்குவோர் அடைதற்கரிய மோக்ஷத்தை யடைவார்கள். வணங்கத்தக்க நீ தோத்திரஞ்செய்த இத்தோத்திரங்களைக் கேட்டவர்கள் விரைவில் நமது உபய திருவடிகளிற் கலப்பார்கள். எ-று. (௪)

அணிகிளர்கார்த் திகைமதியிற் சுக்கிலபக் கத்தினிலட் டமியில் மேய
வுணவொழிந்து வருங்கங்குற் றுயில்துறந்து தருமேச னுயர்பொற் றாளிற்
பணிவருபூ சனைபுரிந்தோர் கொடியபவக் கடல்கடப்பர் பரிவா லின்னு
மிணையில்வரங் கேட்டியென வீர்ஞ்சடையோன் மெய்தடவக் தியம்பி னு
ஞனே.

(இ-ள்) அழகு விளங்குங் கார்த்திகைமாதத்தில், சுக்கிலபக்ஷத்தில் வருகின்ற அஷ்டமித்திதியிலே, பொருந்திய ஆகாரம்விலகி, அன்றிரவில் வருகின்ற நித்திரையொழிந்து தருமேஸ்வரரது உயர்வாகிய அழகிய திருவடிகளில் வணங்கத்தக்க பூசைசெய்தோர்கள் கொடுமைதங்கிய பிறவிக்கடலைக் கரை காண்பார்கள்; ஆசையுடனே இன்னும் ஒப்பில்லாத வரங்களைக்கேட்பாயாகவென்று குளிர்ந்தசடையையுடைய சிவபெருமான் (யமதருமனது) உடலைத் தடவித் திருவாய் மலர்ந்தருளினர். எ-று. (௫)

தருமேசவிலிங்கத்தின் சிறப்புரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ககசஎ.

உ

சிவமயம்.

எழுபத்தொன்பதாவது.

# கிளியின் கதையுரைத்த அத்தியாயம்.

என்பெழுந்த யாக்கையினைத் தைவரலுங் குளிர்ப்பெய்தி யிதய நெக்கார்
கன்புகனிந் தூற்றிருப்ப மறலியிரு கரங்கூப்பி யைய கேண்மோ
வன்சிறைய பருந்தொன்றிக் கிளிப்பார்ப்பின் றந்தையுயிர் வவ்வி யேகுந்
துன்பமுயிர் பிடித்துந்த வுயிர்த்தபெடை யின்னுயிருந் துறந்த தன்றே.

(இ-ள்.) எலும்புதோன்றிய (இயமனது) சரீரத்தைச் (சிவபெருமான்) தடவவும், குளிர்ச்சியடைந்து மனமுருகி, அன்பு பழுத்து ஊற்றெடுக்கும்படி இயமதருமன் இருகரங்களையுங் குவித்து, ஐயனே! கேட்பாயாக; வலிய சிறகமமைந்த ஒருபருந்தானது இக்கிளிக்குஞ்சின் தந்தையை உயிர்வவ்விச்சென்ற துக்கம் பிராணனைப் பற்றிவருத்த, இதனைப்பெற்ற பெண்கிளி தனது இனிய உயிரையுங் கழிந்தது. எ-று. (சு)

அன்றுமுத லின்றளவு மெனைநோக்கி யமர்ந்தவிவை யன்பி னோடு,
முன்றனருள் புரிதியெனக் கொடுமறலி யுரைத்திடலு முவகை பூப்ப, மி
ன்றிரித்தா லெனக்கிடந்த விரிசடையோன் கிளிப்பார்ப்பை வியந்து பாராப், பொன்றலரும் வரந்தருதுங் கேண்மினெனப் பார்ப்பினமும புகலுமாதோ.

(இ-ள்.) இக்கிளிக்குஞ்சுகள் அன்றையதின முதலிதுகாறும் என்னையே பார்த்துக்கொண்டு பொருந்தின; ஆசையுடனே தேவரீரது திருவருள் புரியவேண்டும் என்று கொடுமைதங்கிய இயமன் விண்ணப்பஞ் செய்யவும், களிப்புமிகும்படி மின்னலைத் திரித்தாற்போலப் பிரகாசிக்கின்ற விரிந்த சடையையுடைய சிவபெருமான் கிளிப்பிள்ளைகளைச் சந்தோஷித்துப்பார்த்து அழிவில்லாத வரத்தைக் கொடுப்போம். கேட்பீராகவென்று திருவாய் மலர்ந்தருள, அக்குஞ்சுகளும் கூறத்தொடங்கின. எ-று. (உ)

புன்மையா மிப்பறவை வடிவெடுத்து நினதுபத மெளிதிற் போற்ற
வென்னதவ மிழைத்தனமற்றதனின்வரம் யாதெனினெம் மிறைவகேட்டி
மின்னகுவேற் கொடுங்கூற்ற மிழைத்ததவ நோக்கியதான் மெய்ம்மைகூர
முன்னைவரு பவமனைத்தும் விளங்கியவெம் பாலவற்றை மொழிதுமன்றே.

(இ-ள்.) தலைவரே! இழிவாகிய இப்பறவை யுருவமேற்றுந் தேவரீரது திருவடியை இலேசாகத்துதிக்க எத்தகைய தவத்தைச் செய்தோம். அதனைக்காட்டிலும் வரம்யாதென்றாற் கேட்பீராக; மின்னலை வீசுகின்ற வேற்படையேந்திய கொடிய இயமதருமன் செய்ததவத்தைத் தரிசித்ததால் உண்மை மிகும்படி பூர்வத்திலுண்டாகிய பிறவிகளெல்லாம் எமக்கு விளங்கின. அவற்றைக் கூறுகின்றோம் (கேட்பீராக). (ஙு)

பானிலவு கொப்பளிக்கும் பனிமதிக்கோ டுழுதுநறை பாய்வண் டூ
தும், தேனுகர்பூங் கொன்றையணி வேணியோய் நிற்பணிந்த திறத்தால்
முன்னம், வானுறையு மமரர்களாய்க் கடைவளைக்குங் கரும்புருவ மதர்
வே லுண்கட், கானுலவு நறுங்கூந்த லரம்பையர்தோள் புணர்ந்து சின்
னாள் களித்தல் செய்தேம்.

(இ-ள்,) வெள்ளிய சந்திரிகையைக் கக்குகின்ற குளிர்ச்சிதங்கிய சந்திர
னது கொம்புகளில் உறைந்து தேன் சொரிகின்றதும், ஊதுகின்ற வண்டுகள் தே
னைப்புசிக்கின்றதுமாகிய அழகியகொன்றைமலர்மாலையணிந்த சடாமுடியையுடை
ய சிவபெருமானே! தேவரீரை வணங்கிய பலனால் பூர்வத்தில் ஆகாயத்தில் வசிக்
கும் தேவர்களாய்க் கடைசியில் வளைக்கின்ற கரிய புருவத்தையும் மதர்த்த வேல்
போன்ற மையூட்டிய விழியையும் இயற்கைமணம் வீசுகின்ற நல்ல கூந்தலையு
முடைய அரம்பாஸ்திரீகளது தோள்களைமருவிச் சிறிதுகாலம் களித்திருந்தோம்.

மின்பயில்வேற் றானவராய் விஞ்சையரா யியக்கரா யரக்க ராகி
மன்பதையில் வேந்தராய்த் தண்புனலிற் கொடுங்கானில் வாழ்வ தாகி
யன்பினளிக் குநராகிக் கேடுசூழ் பவராகி மற்று மாகித் [மால்.
துன்பமுறு மியாக்கைபல வெடுத்தளவில் கோடிபவந் தொலைத்திட் டே

(இ-ள்.) மின்னலை வீசுகின்ற வேற்படையேந்திய இராக்கதராகியும், வித்
தியாதரராகியும், யக்ஷராகியும், அரக்கராகியும், மானுடரில் மன்னவராகியும்,குளி
ர்ந்த சலத்திலும் கொடிய வனத்திலும் வாழ்கின்ற பிராணிகளாயும், ஆசையுடன்
காப்போராகியும், தீமை நினைப்போராகியும், பிறவகையாகியும், துன்பம்பொருந்திய
எண்ணில்லாத சரீரங்களையெடுத்துப் பலகோடி பிறவிகளை யொழித்தோம். எ-று.

இவ்வாறு பலகோடி பவத்துழன்று முண்மையறி வின்றி மற்றொன்
றொவ்வாத பேரின்பக் கடற்படியா தருந்துயர முழன்றே மீங்குச்
செவ்வான்வெண் மதிபுனைந்த தருமேச னடிபணிந்த செய்தி யானும்
வெவ்வாய கொடுங்கூற்றம் புரிதவநோக் கியதானும் வினைக டீர்ந்தேம்.

(இ-ள்.) இவ்வகையாக எண்ணில்லாக்கோடிப் பிறவிகளாலலைந்தும் உண்
மை யறிவில்லாமல்,சமானரகிதமாகிய பேரின்ப சாகரத்திற்குளியாமல் அரிய துன்
பத்தை யடைந்தோம். செவ்வானத்தில் தோன்றும் வெள்ளிய பிறைச்சந்திரனைய
ணிந்த தருமேசரது திருவடிகளை இவ்விடத்தில்வணங்கிய தன்மையாலும் வெவ்
விய வாயையுடைய கொடிய இயமதருமன் செய்ததவத்தைத் தரிசித்ததாலும் தீ
வினைகளை யொழிந்தோம். எ-று. (௬)

மீயுயர்வா னவர்க்கிறைவன் விழைபுமரும் பெறற்றிருவும் வேண்
டேமெங்கட், கேயவுணர் வுடைஞான நெறிகாட்டி யடைகரைகொன்
றிரங்கு தெண்ணீர், பாயுநெடுந் திரைக்கங்கை சூழ்கிடந்த வியன்காசிப்
பதியில் வைகித், தீயகொடும் பவக்கடலின் கரைகடப்பா னிறப்பவருள்
செய்தல் வேண்டும்.

(இ-ள்.) மிகவும் உயர்வாகிய தேவேந்திரன் விரும்பத்தக்க பெறுதற்கரிய
செல்வமும் யாங்கள் விரும்பினோமில்லை. அடியேங்களுக்குப் பொருந்திய அறிவி

லையுடைய ஞானமார்க்கத்தைக் காண்பித்து, அடைக்கின்ற கரையையழித்து ஒலிக்கின்ற தெள்ளிய நீர் பாயும் நெடிய அலைகள் பொருந்திய கங்காநதி சூழ்ந்து விளங்கும் பெரிய காசிக்ஷேத்திரத்தில் யாங்கள் வசித்து, மிக்க கொடிய பிறவிக் கடலின் கரையைக் கடக்கும்படி மிகுதியாகிய திருவருள் புரியவேண்டும். எ-று

மறைமுதல பலகலையின் கரைகடந்து பூம்பொகுட்டு மலரின் மேலோ ரர்
ஞறைபுனல்வான் றுறையுறையு மஞ்சிறைய மடவன்ன மலங்குதெண்ணீ
முறைபடிந்து செலவயரு மகளிர்நடைக் கழிந்தொதுங்கு முடிவி லின்ப
நிறைதருகா சியினிறத்தல் முத்தியா மெனப்பலகா னிகழ்த்தி ஞனே.

(இ-ள்.) வேதமுதலிய பல நூல்களின் கரையைக்கடந்து, அழகிய கொட்டையையுடைய தாமரை மலரின்மேல் வீற்றிருக்குஞ் சதுமுகன் ஒலிக்கின்ற நீரையுடைய சிறந்த துறையில்வாழ்கின்ற அழகியசிறையையுடைய இளமை தங்கிய அன்னமானது அசைகின்ற தெள்ளிய (கங்கா) சலத்தில் கிரமமாக ஸ்நானஞ்செய்துசெல்லுகின்ற மாதர்களினது பாதநடைக்குத்தோற்று ஒதுங்குகின்ற முடிவில்லாத இன்பம்நிறைந்த காசிப்பட்டணத்தில் உயிர் துறத்தலே மோட்சம் (அடையும்வழி) ஆகுமென்று பலமுறை யுரைத்தனன். எ-று.

பூம்பொகுட்டு மலர்என்பது தாமரை. "மலரின் மேலோன் காசியினிறத்தல் முத்தியாமென நிகழ்த்தினன்" எனக்கூட்டுக. (அ)

தடவுவெண்ணெய் வாய்மடுத்துப் பொதுவர்மனை வளர்ந்தருளுந்
துளவத் தாரோன், கடவுண்மர கதப்புரவித் தேரோற்கவ் வாறுரைத்தா
ன் கதிரோன் ருனுங், கெடலருமா தவம்புரியாக் கியவர்க்க ரொடுமஃ
தே கிளத்தி னன்வெள், விடையுயர்த்தோன் காசிமுத்தி நகரெனமந் தர
த்துமைக்கு விளம்பி ஞனே.

(இ-ள்.) பெருமையாகிய வெண்ணெயைப்புசித்து யாதவர் வீட்டில் வளர்ந்தருளிய துளவமாலையணிந்த கிருஷ்ணமூர்த்தியும், தெய்வீகம் பொருந்திய பச்சைக்குதிரைகள் பூட்டிய இரதத்தையுடைய சூரியனுக்கு அவ்வாறுகூறினர். சூரியனும் கெடுதலரிதாகிய சிறந்த தவத்தைச்செய்யும் யாஞ்ஞவர்க்ய முநிவருடன் அதனையே சொல்லினன். வெள்ளிய இடபத்தைக்கொடியாக வுயர்த்திய சிவபெருமான் காசிக்ஷேத்திரமே முத்திபயக்கவல்ல நகரமென்று ஸ்ரீமந்தர பர்வதத்தில் உமாதேவியாருக்கு உரைத்தருளினர். (கூ)

இச் செய்யுளிற்கூறிய சரிதங்கள் யாவும் முன்வந்துள்ளன. ஆங்குக் கண்டுகொள்க.

பிள்ளைவண்டின் கணங்கோடி துதைந்தாடி விருந்தயரப் பெருகு
வாசக், கள்ளொழுக முகையவிழ்க்குங் கருங்காவி வளவயல்சூழ் காசி
யென்று, மெள்ளரிய பேரின்பத் துறைகெழுநன் முத்திநக ரென்ன வோ
ரார், தெள்ளருநான் மறைப்பொருளும் விரித்தருளும் வியாதமுனி செ
ப்புமன்றே.

(இ-ள்.) இளமைதங்கிய கோடிக்கணக்காகிய வண்டுக்கூட்டங்கள் நெருங்கி விளையாடி விருந்துண்ணும்படி வாசனைதங்கிய தேன் ஊற்றெடுத்து ஒழுக மொட்

டுகளை முறுககவிழ்க்கினற கருநெய்தல் பொருந்திய வளப்பமமைந்த வயல்கள் புடைசூழ்ந்த காசிப்பட்டணம் எப்பொழுதும் உயாவாகியபேரினபமார்க்க மிருந்த நல்ல முததிநகரமென்றறிந்து, தெள்ளிய அருமையாகிய நான்கு வேதப்பொருளை யும் விரித்து உரைசெய்த வியாதமுனிவர் விளம்பினா. எ-று. (௧0)

முயலரிய மாதவத்து ரோமசனே முதலான முனிவர் யாருஞ்
செயிரறுநன முத்திநகா காசிமா நகரமெனத் தெளிந்தார்யாமும்
புயல்படிந்து குடித்தகடற் புனலகுமட்டி யெதிரொடுத்துப் பொங்கர்தோ
துயிலுமிய லானந்த கானனமே முத்தியெனத் துணிந்திட் டேமால.[றுந்

(இ-ள்.) எத்தனித்தற்கு மருமையாகிய சிறந்த தவததையுடைய உரோமசர்முதலிய முனிவாகளா யாவரும் குற்றமற்ற நல்ல முத்திக்ஷேத்திரம் சிறந்த காசிநகரமேயென று உணாந்தார்கள்; (ஆகையால்) மேகங்கள் வீழ்நதுகுடிதத கடல் நீரைக் குமட்டி (வாய்வழி) எதிரொடுத்துச் சோலைகடோறும் உறஙகுகின்ற ஆனந்தகானனமே மோக்ஷம் (பயக்கவல்லதெனறு) யாஙகளுந துணிவு கொண்டிருக்கின்றோம். எ-று.

எதிரொடுத்தல் = சந்திசெய்தல்; வாந்திபண்ணுவது. ஆனந்தகானனம் என்பது காசிநகரத்திறகுரிய திருநாமங்களு ளொன்று. உரோமசமுனிவர் - இவர் அநேககோடி கற்பங்களாகச் சீவித்திருக்கும் ஓர் மகாமுனிவர்; அநேக பிரமவிஷ்ணுக்களிறப்பின் இவருடலினின்றொரு ரோமமுதிரும். இதனை,

திருவொற்றியூர்ப்புராணம் - திருநடனச் சருக்கம.

"களப்படு சந்திர ரிரவி நாகர்கள்
வளப்பமா ரிநதிர ரனேகர் மாண்டபின
றுளக்கமாய் நான்முக னொருவன் றுஞ்சுவான்
அளக்கலில விரிஞ்சர்க ளனேகர் பொனறிடில்.

முடிவனோர் முகுந்தனம் முகுநத ரெண்ணிலார்
மடிவுறில நம்முடை வடிவ மெஙகணும்
படியுரோ மஙகளிற் பழியு மொனறிது
நெடியவன ேனார்களாற் சிறிது நீஙகிற்றால"—என்பதனானுணர்க.

தெரிவரிய வுலகமொரு மூன்றினுமுக் காலநிகழ் செய்தியாவு, மரிய யன்மா தவமுனிவ ரமலநீ பவகதோறு மறைந்த வாறும், பொருவிலண்ட கோளகையி னிகழ்வனவு மங்கைநெலலிக் கனியே போலத், தருமலிங்கம் போற்றியதால் தெரிகின்ற வுண்மையுணா தன்மை யானேம்.

(இ-ள்.) காண்டற்கரிதாகிய திரிலோகங்களிலும் (இறப்பு நிகழ் வெதிரென்னும்) முக்கால நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும், திருமால் - திசைமுகன் - சிறந்த தவத்தையுடைய முனிவாகள் - பரிசுத்தராகிய தேவரீர் - அடியேங்கள் ஜனனங்கடோறும் சாற்றியவும், சமானமில்லாத அண்டகோளகையில் நடக்கின்றவற்றையும் உள்ளங்கையி லேந்திய நெல்லிக்கனிபோல, தருமலிங்கத்தைத் துதித்த காரணத்தால், அறியத்தக்க உண்மையுணர்ச்சியை யுடையவர்களானோம்.

என்றுபத மலர்வணங்கிக் கிள்ளையிளம் பார்ப்பினிதி னிசைத்த லோடுங்
குன்றவரிச் சிலைகுனித்து முப்புரநதீ யூட்டியபொற் குழகன் கூறு
மன்றவுல கொருமூன்றி லரசிருக்கை காசியலால் மற்று முணடோ
பொன்றவழா லயஞ்சிறந்த வானந்தக கிழங்கின்முளை பூத்த தாமால்.

(இ-ள்.) என்றிவவகையாக (இறைவரது) திருவடித்தாமரையைப் பணிந்து இளமை வாய்ந்த கிளிக்குஞ்சுகள் இனிமையாகக் கூறவும், கட்டுக ளமைந்த மலையாகிய விலலைவளைத்துத் திரிபுரத்தில் அக்கினியை யூட்டிய அழகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுகின்றார். உலககஙகள் ஒருமூன்றிலும் நிலைபெற (நம்முடைய) அரசிருக்குந்தானம் காசிநகரமல்லாமற்பிறிதொன றுமிருக்கின்றதோ? பொன்மயமாகிய அததிருக்கோயில சீர்த்திபெற்ற ஆநநதமாகிய கிழஙகின் முளையிலிருந்தே விளங்குவதாகும். எ-று. (கரு)

பழமறைக ளுணர்வரிய பிரமமெனும் பொருள்யாமே பணிந்து நம்பால், விழைவுறுமவார்க் கருள்புரிவா னித்தலத்தி னுருவுகொடு மேவி னேமிப், பொழிகதிர்வா னுயர்குடுமிச் சினகரததின் றென்றிசையிற் பொருவி லாத, தொழுதகுநன் மணடபமொன் றுளததனி லெஞ்ஞான்றுந் துன்னி வாழ்வேம,

(இ-ள்.) பழமையாகிய வேதங்களும் அறிதற் கருமையான பிரமமெனப் பேசப்படும் பொருள் யாமேயாம். வணங்கி எம்மிடத்தில் அன்புடையவர்களுக்கு அனுக்கிரகஞ் செய்யும்படி இக்காசிததலத்தில் உருவம்வகித்துப் பொருந்தியிருக்கின்றோம்; இந்தக் கிரணங்களைச்சிந்தும் ஆகாய மளாவி யுயர்ந்த சிகரத்தையுடைய திருக்கோயிலின் தெனறிசையிலே ஒப்பிலலாத வணஙகத்தக்க நல்ல (முத்தி)மண்டபமொன் றிருக்கின்றது. அத் திருமண்டபத்திலே எககாலத்தும் பொருந்தி வாழ்ந்திருப்போம். எ று.

வே று.

மருவு முத்திமா மண்டப மாதியா
முறைசெய் மண்டபம் யாவினு மோங்கிய
விரைசெய் பீட முதல்வியன பீடத்துந்
தரும பீட மூபாநதது சாற்றுங்கால

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய முததிமண்டபம் முதலியவாகச் சொல்லப்பட்ட மண்டபங்கள் எல்லாவற்றிலும், உயாவாகிய விரசாபீடம் முதலாகிய பெருமைதங்கிய சத்திபீடஙகளிலும், (இயமதருமராஜனால் பூசிக்கப்பட்ட) தருமபீடமே சொல்லுமிடத்தில் உயாந்ததாகும். எ று.

விரைசெய் பீடம் என்பது விரசாபீடத்தை. இது சத்திபீடங்கள் அறுபத்துநான்கனு ளொன்று. இது முன்வந்துள்ளது. ஆங்குக் கண்டுகொள்க. (கசு)

இன்ன மென்கிளிப் பிள்ளைகள் யாவையு
மன்ன பீடத் தமர்ந்த பரிசினால்
மன்னு மென்னுல கத்தினில் வாழ்ந்ததன்
பின்னர் முத்தி பெறுவன கிண்ணமால்.

(இ-ள்.) (இயமதருமனே!) இந்த மெல்லிய கிளிக்குஞ்சுகளெல்லாம், அத் தகைச்சிறப்பினைவாய்ந்த தருமபீடத்தில் (இதுவனாயில்) பொருந்தியிருந்த தன்மையால், நிலைபெற்ற எனது உலகத்தில் (சிறிதுகாலம்) வாழ்ந்திருந்தபின்னர் மோட்சமடைவது சத்தியமாகும். எ-று. (கசு)

என்று கூற்றுக் கிறைவ னிசைப்புழி
மன்ற வீசன் வடிவொடு கிள்ளைகள்
குன்ற வில்லுடைக் கூத்தன் கயிலையிற்
பொன்ற யங்கு விமானத்துப் போயவால்.

(இ-ள்.) என் றிவ்வகையாக இயமதருமனுக்குச் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளியபொழுது, அம்பலத்தெழுந்தருளிய அண்ணலது திருவுருவத்துடன் கிளிப்பிள்ளைகள் மேருமலையை வில்லாகவுடைய இறைவரது திருக்கைலாயகிரிக் குப் பொன்மயமான தேவவிமானமேறிச் சென்றன. எ-று.

ஈசன் வடிவொடு=சிவசாரூப்பியங் கொண்டு. (கஎ)

கிளியின் கதையுரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-கக௩௪.

---

எண்பதாவது,

## மனோரதத்திரிதிகை விதியுரைத்த அத்தியாயம்.

கொழுதி வண்டின முரன்றுபாட் டயர்தரு கொன்றைதேத் துளிதூற்ற
விழுது விட்டபூந் துகிரொனக் கிடந்தொளிர் விரிசடைப் பெருமானீ
பழுதி லாதுயர் மனோரதத் திரிதிகை நோற்பவை பகரொன்னத்
தொழுது கூறினள் சில்லரி யொழுகிய துணைமலர்த் தடங்கண்ணாள்.

(இ-ள்.) வண்டுகூட்டங்கள் கொத்தி இசைகூட்டிப் பாடுகின்ற கொன்றைமலர்மாலை தேன்றுளிகளைச் சிந்தும்படி, விழுதுகள் விட்டிருக்கின்ற அழகிய பவளம்போலப்பிரகாசித்து விளங்கும் விரிந்த சடையையுடைய எம்பெருமானே! தேவரீர் குற்றமில்லாம லுயர்ந்த மனோரதத்திரிதிகை விரதத்தை யாச்சிரயிக்கும் வகையைத் திருவாய்மலர்ந்தருளவேண்டும் என்று, வட்டமாகிய அரிபடர்ந்த உபயதாமரைமலர்போன்ற விசாலமாகிய கண்களையுடைய (விசாலாக்ஷி) அம்மையார் பணிந்து வினவினர். எ-று.

மனோரதம்=மனஸ்+ரதம். அதாவது இஷ்டசித்தி. (க)

பூண்சு மந்தபொற் கொடியெனக் கவினிய புலோமசை விழைவோடு
மாண்சு மந்தநற் றவம்பல வாற்றியும் விழைந்தன மருவாமல்

பாண்க ணிந்துதே மனழுபொழிந் தாலெனப் பாட்டயர்ந் தனளீசன் [ன்
கோண்பி றைக்கெழில் கொடுத்தவா ணுதலுளங் குறித்தது புகலென்று

(இ-ள்.) ஆபரணங்க ளணிந்த பொற்கொடிபோல அழகுவாய்ந்த இந்திராணி ஆசையுடனே மாட்சிமைதங்கிய நல்ல தவங்கள் பலவற்றைச்செய்தும், விரும்பியவற்றைப் பொருந்தாமல், பண்ணோடு பழுத்துத் தேன்மாரி சொரிந்தாற்போலக் கானஞ்செய்தனள். சிவபெருமான், (பிரசன்னராய்) கோணிய இளஞ்சந்திரனுக்கு அழகினைத்தந்த ஒளிதங்கிய நெற்றியையுடையாளே! மனத்திற் கருதியதை (வெளியிட்டு என்னிடம்) சொல்வாயாக என்றனர். எ-று. (உ)

என்று கூறலுந் திதலைப்பூத் தழகுவாய்ந் தீர்க்கிடை புகாதோங்கிக் [ள்
குன்றி ணண்டெனப் பணைத்திரு மாந்தெழு குவிமுலைக் கொடிபோல்வா
மன்ற நன்மக மளப்பில புரிந்துயர் வானவர்க் கிறைபாய
வென்றி மன்னவன் குலமனைக் கிழத்தியா யினிதிருந் திடல்வேண்டும்.

(இ-ள்) எனச் சிவபெருமான் கேட்கவும், தேமல்படர்ந்து அழகுற்று ஓர் ஈர்க்கும் நடுவே புகவொட்டாமற் பருத்து மலைகளிரண்டுபோலக் கிளைத்து நிமிர்ந்தெழுகின்ற குவிவாகிய குசங்களையுடைய கொடிபோன்ற புலோமசை, நிலைபெறும்படி நல்ல யாகங்கள் எண்ணில்லாதன வியற்றி உயர்வாகிய அமரர்கட் கரசனாகிய வெற்றிபொருந்திய வாசவனுக்குப் பட்டத்து மனைவியா யினிதாக இருந்திடல்வேண்டும். எ-று. (ங)

பொற்பின் மேவரு மெவ்வுரு வேண்டினும் பொருந்துதல் தரவேண்டு
மற்பின் மேவிய காதல னிறந்துழிக் கைம்மையா குதலின்றிக்
கற்ப ழிந்திட லொழிந்துநற் கன்னியாய்க் கணவனைப் பெறல்வேண்டுங்
கொற்ப தொழுத்தொளிர் கணிச்சியோ யெனவவள் கூறலு மிறைகூறும்

(இ-ள்) (அன்றியும்,) அழகுடன் பொருந்துதற்கரிய எத்தகைய வடிவம் விரும்பினும் அடைதலைக் கொடுக்கவேண்டும். அன்புடன் கூடிய நாயகன் உயிர் துறப்பினும் விதவைத்தன்மை யடைதலில்லாமலும், கற்பழிந்துபோத லில்லாமலும், நல்ல கன்னிகையாக (மீண்டும்) நாயகனைப் பெறுதல்வேண்டும். கொலைத்தொழில்மிகுந்து விளங்குகின்ற மழுப்படை யேந்திய மகாதேவா! என்று இந்திராணி யிசைக்கவும், சிவபிரான் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (ச)

வரத மோர்கர மபயமோர் கரஞ்செப வடமொரு கரமாகப் [ரோ
பொருவின் மோதக மொருகரத் தமைத்தெழில் பூத்தொளிர் பணைமென்
னிருப தாமருட் கவுரியோ டழிகவு ளொறுழ்வலிக் கடாயானை
யுருவ மேவுமா சார்விநா யகற்றொழில் விழைந்தன வுறுமென்றான்.

(இ-ள்.) வரதம்பொருந்திய ஓர் திருக்கரமும், அபயம்பொருந்திய ஓர் திருக்கரமும், ஜெபமாலை யேந்திய ஓர் திருக்கரமும், ஒப்பில்லாத மோதகமேந்திய ஓர் திருக்கரமுமாகக்கொண்டு அழகுவிளங்கிப் பிரகாசிக்கின்ற கிளைத்த மெல்லிய திருப்புயங்கள் இருபதினையுடைய அருள்புரியுங் கௌரியுடன், மிக்க வலியையுடைய மதசலம்பொழியும் யானைவடிவமமைந்த ஆசார்விநாயகனைப் பணிந்தால் விரும்பியவை கைகூடுமென்று திருவாய்மலர்ந்தருளினர். எ-று.

வரதம் - அபயம் என்பவை முறையே வலது அஸ்தத்தின் விரல்கள் மேனோக்கியும் இடதுகையின விரல்கள் கீழ்னோக்கியும் நிறக, உள்ளங்கை பார்ப்போா கண்ணுககுப் புலப்பட நிறுத்தும குறிகள். (௫)

அன்ன நோன்பினை யாற்றுநல விதியெனக் கறைந்திடு கெனலோடு
மன்னு சித்திரைத திஙகளில வளாமதி மருவிய பக்கத்தில்
முன்னி யேத்துமூன றாநதிதி வருவதன முன்னைநா ளருள்கூருந்
தன்னை யேத்தியக கஙகுலவா யுணவினைத தவிாந்துவை கறைபபோதில்

(இ-ள்.) அத்தகைய விரதத்தை ஆச்சிரயிக்கத்தக்க நல்ல மாாக்கத்தை அடியேனுக்குப் போதிக்கவேண்டுமென்று அயிராணி சொல்லவும், (சிவபெருமான் சொல்லுகின்றார்) நிலைபெற்ற சித்திரைமாதத்தில், சந்திரன் வளர்தல்பொருந்திய பூர்வபக்ஷத்தில் நினைத்துத்துதிக்கின்ற திரிதிகைத் திதியானது வருதற்கு முன்னாகிய துதிகைத் திதியில இனிமைமிகுந்த தம்மைத்துதித்து அவ் விரவில் ஆகாரத்தை நீக்கி விடியற்காலத்தில். எ-று.

இதுமுதல் பதினொருபாடல்கள் ஒருதொடர். (௬)

துயிலெ ழுந்துமாக் கடம்புநா யுருவிபே ரீந்துமா துளைதோமில்
செயலை யத்திநீள் கதிர்நல ஞாவலவெண பிச்சியின திரள்கொமபி
னிவைவ கொணடுவெண் பற்கறை தீர்த்தெதிா காலையிற் கடனாற்றிப்
பயிலு மாலையம பொழுதினிற் புனிதநீா படிநதுவெண டுகிலசுற்றி.

(இ-ள்.) நித்திரையினின்று விலகி யெழுந்து, மா - கடம்பு - நாயுருவி - பேரீந்து - மாதுளை - குற்றமில்லாத அசோகு - அத்தி - நீண்ட கதிர்களையுடைய நல்ல நாவல் - வெண்பிச்சி இவற்றின திரட்சியாகிய கொம்புகளில் கூடுமானவற்றை (தந்தகாஷ்டமாக) கொண்டு, வெள்ளிய பற்களின் மாசு நீக்கி, அடுத்த காலைப்பொழுதிற் செய்யவேண்டிய கடன்களை முடித்து. வருகின்ற சாயுங்காலத்திற் பரிசுத்தமாகிய சலத்தில் மூழ்கி, வெள்ளியவஸ்திரமணிந்து. எ-று. (௭)

செய்ய சந்தனங் காருகில மானமத மரிசனஞ் செழுஞ் சாந்தந்
தொய்யில் நீணமர மஞ்சள்பத மாக்கமெய்த தோமிலசிந் தூரமேற்ற
வைய தேவதா ருவினொடு மூரோசனை யிவற்றினல லிருட்போதின்
மையல் யானையா முகத்தனைக் கௌரியை வான்முறை வழாதாட்டி.

(இ-ள்.) செவ்வையாகிய சந்தனம - வைரமுடைய அகில் - மான்மதம் - மஞ்சள் - கலவைச்சாந்தம் - தொய்யிலெழுதத்தக்க நீண்ட மரமஞ்சள் - பத்மாக்கம் - குற்றமில்லாத சிந்தூரம் - அழகிய தேவதாரு - உரோசனை ஆகிய இவற்றினால் நல்ல இராத்திரிக்காலத்தில், மதமயக்கம்பொருந்திய யானையினது சிறந்த முகத்தையுடைய விநாயகக்கடவுளையும் கௌரியையும் (சிவாகமங்களில் விதித்துள்ள) கிரமப்பிரகாரம் முறைதவறாமல் அபிடேகித்து. எ-று. (௮)

இவைய லாதிரு கூறுகுங் குமமலர் மான்மத மிருகூறு
நவையில் சாந்தமுக் கூறொரு கூறொளிர் நறைகமழ் கருப்பூரம்
குவவில் மற்றத னுறுபெய ரியக்காமென் குழம்பதா மிஃதாட்டி
னுவகை செய்யுமெக் கடவுளு மென்பதா லுவந்திவற் றினுமாட்டி.

(இ-ள்.) (ஈண்டெடுத்துக்கூறிய) இவையேயன்றி, இரண்டுபங்கு குங்கு மப்பூவும், இரண்டுபங்கு மான்மதமும், மூன்றுபங்காகக் குற்றமில்லாத கலவை ச்சாந்தும், பிரகாசிக்கின்ற வாசனைவீசும் பச்சைக்கற்பூரம், ஒருபங்குங் கூடினால் அக் குழம்புக்கு உரிய பெயர் மெலலிய இயக்கர் குழம்பாகும். இதனு லபிடேகி த்தால் எத்தகையதேவரும் களிகொள்வர் என்று சொல்லப்படும் ஏற்பாட்டினுல், இவ் வியக்கர் குழம்பினுலும் சந்தோஷித்து அபிடேகித்து எ-று.

மான்மதம்=கத்தூரி. (கூ)

பிண்டி பாதிரி மல்லிகை யலரிதேன் பிலிறறுசண பகங்கோங்கங்
கண்டல் தாமரை வலம்புரி குமரிமென் கடிகமழ் செழுநீலம்
வண்ட றுமலர் தூவிமென் சருக்கரை வயிறறுறு மடையேல
முண்டு மூந்திஞல நெய்யினு லமைத்தவை யுவப்பொடு மினிதூட்டி.

(இ-ள்.) அசோகு-பாதிரி - மல்லிகை - அலரி-தேனைச்சிந்துகின்ற சண்ப கம்-கோங்கு- தாழை - தாமரை-நந்திபாவர்த்தம் இளமைதங்கிய மெல்லிய மணம் வீசுகின்ற செழிய நீலோற்பலமுதலாகிய வண்டுகள் நீங்காத மலர்களானருச்சித்து மெல்லிய சருக்கரையை யுள்ளே பொருந்திய அடை - ஏலம் பொருந்தி உழுந்தி னுலும் நெய்யினுலும் செய்துமுடித்த பண்ணியங்கள் (இவற்றை) களிப்போடு இனிதாக உண்பித்து (அதாவது நிவேதனஞ்செய்து). எ - று. (கo)

புகல ருக்கிய முதலிய யாவையும் புரிந்துபூ சனையாற்றி
மகிழ்சி றந்தரு மறையவாக் கின்றன வழங்கியாங் கவர்க்கேற்ற
துகள றப்பரிக் தட்டன கூழினு லமைத்தவை தான்றுய்த்து
திகழு நன்மதி தோறுமிவ் வாறுநோற் றுண்டுசென் றியலகாலே.

(இ-ள்.) (ஆகமங்கள்) கூறுகின்ற அருக்கிய முதலிய எல்லாவற்றையுஞ் செய்து, பூசையியற்றி, ஆநந்த மிகுந்து அரிய வேதமுணர்ந்த அந்தணருக்குத் தம்மாற் கூடியவளவில் அவர்கட்குத் தக்கவற்றைத் தானஞ்செய்து, குற்றநீங்கிய வகையாய் விரும்பிச் சமைத்தனவாகிய உணவினுல் இயற்றியவையுண்டு, விளங் குகின்ற நல்லமாதங்கள்தோறும இவவண்ணமாக விருந்து ஓர்வருடஞ்சென்ற பொழுது. எ று.

மதி=சந்திரன். சந்திரன் வளர்ந்து தேய்தலே ஓர்மாதமாகலின் மாதமெ ன்றும். திங்களென்பதும் இவவாறே வரும். (கக)

முன்ன ரோதிய திதியினிற் கங்குலின் முறைவழா தருச்சித்து
நன்னி லத்தினின் மெழுக்கெறிந் ததனிடை நவையிறீக் கருமங்கள்
சொன்ன சாமவே தத்திரு மறையினுற் றுகளிலெண முதலாக
மன்னு தானிய மெட்டினூற் றெட்டென வழங்குமா குதிபண்ணி.

(இ-ள்.) முன்னெடுத்துச் சொல்லிய திதியின் இரவில் கிரமந்தவறாமற் பூசைசெய்து, நல்ல பூமியில் (பசுவின் சாணத்தினுல்) மெழுகி, அவவிடத்தில் குற்றமில்லாத அக்கினிகாரியத்தைச் சொல்லிய சாமவேதமாகிய சிறந்த மறை முறையே, தூசில்லாத எள்முதலாக நிலைபெற்ற எண்வகைத்தானியங்களில் நூற் றெட்டு என்று சொல்லும் ஆகுதிசெய்து. எ-று.

நூற்றெட்டு ஆகுதி இதனை அஷ்டோததரஸதாகுதி யென்பர் வடநூலார்.
ஆகுதி = ஓமததீயில் நெய்யைச் சொரிதல்.
எள் முதலிய எண்வகைத் தானியம் - நெல் நீங்கியவை. (௧௨)

பொருவில் விச்சுவப் பூசைநின் னருள்பெறு புதல்வனோ டினிதாற்றும்
விரத நற்பலன் வழங்குதல் வேண்டுநல் வேழமா முகத்தோயீங்
கருள்செய் நினனுடை யன்னையோ டிதன்பல மென்னவீழ்ந் தடிபோற்றி
மருவு லாநறு மலர்கடூய் மும்முறை மகிழ்வொடும வலஞ்செய்து.

(இ ள்.) (தாயே!) சமானமிலலாத விஸ்வபூஜையைத் தேவரீரது திருவருள்பெறுகின்ற விநாயகருடன இனிதாகசெயகின்ற (மனோரததிரிதிகை) விரதத்தின் நலல பலனைக் கடாக்ஷித்தல்வேண்டும; சிறந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளே! கிருபைபுரிகினற தேவரீரது தாயாருடன் இவவிரதததின் பயனை யனுக்கிரகஞ்செய்வீராக என்று (நிலமிசை) வீழ்ந்து திருவடிகளைததுதித்து, மணம்வீசுகின்ற நல்ல மலர்களானருச்சிதது மூனறுதரம் ஆசையுடனே பிரதக்ஷிணஞ்செய்து. எ று. (௧௩)

விரத மாற்றுவித் தருளிய குரவனைப் பன்னிதன் னொடுமெல்லென்
பொருவில் கட்டிலி னிருத்திநல் லணியொடும பூசனை யினிதாற்றிப்
பரிவி னன்குடை தொடுகழ லாடிநற் பாற்பசு விவைநல்கி
யருளி னோடுபின் சென்றுநற் குரவனை விடுத்தகன் மனையெய்தி.

(இ ள்.) விரதத்தைச் செய்வித்த ஆசாரியனை மனையாட்டியுடனே, மிருதுவாகிய சமானமில்லாத கட்டிலின்பேரிலிருக்கச்செய்து, நல்ல ஆபரணங்களுடன பூசையும் இனிதாகச் செய்து, ஆசையுடன் நல்ல குடையும் (காலில்) தொடுக்கின்றபாதரட்சையும் கண்ணாடியும் நலலகறவைப்பசுவுமாகிய இவற்றைக் கொடுத்து, அன்புடனே பின்சென்று நல்ல ஆசிரியனை (மனைக்கேக) விடுத்து (தனது) பெரியவீட்டை யடைந்து. எ-று.

அணியாற்றி = அழகுசெய்து, அல்லது ஆபரணம்பூட்டி. (௧௪)

அள்ளி ருட்கரும் போதகன் றிட்டபி னய்பிழி மலர்க்கூந்தல்
வள்ளை வார்குழைப் பன்னிரு கன்னியர் மைந்தரத் துணையோரை
யுள்ளு வப்புற வெண்ணெயி னூட்டுவித் தினனமு தினிதூட்டித்
தள்ள ரும்பெருங் கிளையொடு மாரமு தருநதிடல தகைமைத்தே.

(இ-ள்.) இருளதிகரித்த இராப்பொழுது கழிந்தபிறகு (வண்டுகள்) ஆராய்கின்ற தேன்பொருந்திய மலர்மாலைசூடிய கூநதலையும், நெடிய குண்டலங்களணிந்த வள்ளைக்கொடிபோனற காதினையு முடைய சுமங்கலிகள் பன்னிருவரையும் அவ்வளவினராகிய பாலரையும் மனக்களிப்புண்டாக எண்ணெயிட்டு முழுக்காட்டுவித்து இனியஉணவை நன்றாகஉண்பித்து, நீக்குதற்கரிய பெரிய சுற்றத்தாருடன் அருமையாகிய அன்னத்தைப் புசித்தல் தகுதியுடையது. எ-று. (௧௫)

கருங்கட் கன்னியர் நோற்றிடின் விழைவுறு கணவரைப் பெறுகிற்பார்
திருந்து காளையர் நோற்றிடின் வருமுலைத் தெரிவையர் தமைச்சேர்வர்

பொருந்து மங்கல மடந்தைய ராறறிடிற் புதல்வரைப் பெறுவார்பூண
பரிந்த மங்கைபர் நோற்றிடின மறுமையிற் பழிப்பில்கா தலற்சேவார்.

(இ-ள்.) (இவ் விரதத்தை) கரிய கண்களையுடைய கன்னிப்பெண்கள் ஆச்சிரயித்தால் தாம் விரும்பிய நாயகரை யடைவார்கள். அழகினையுடைய ஆடவச்சிறுர் ஆச்சிரயித்தால் தனங்கள் தோன்றிய மாதரை மணப்பார்கள்; மங்கல நாண்பொருந்திய சுமங்கலிகள் அநுஷ்டித்தால் சற்புத்திரரைப் பெறுவார்கள்; மாங்கல்யமிழந்த விதவையர் நோற்றால மறு ஜனனத்தில் குற்றமில்லாத கணவனைக் கூடுவார்கள். எ-று. (கசு)

பன்னு நான்மறை முனிவர ராற்றிடிற் பலகலைத் துறைசெல்வார்
மன்ன ராற்றுறி னொருகுடை நீழலின் மண்முழு தினிதாள்வார
பொன்ன வாங்குல வணிகராற் றுறினள வறிவரு பொருள்செய்வார்
பின்னு ளோரிஃ தாற்றிடி னுளத்திடை விழைந்தன பெறுகிற்பார்.

(இ-ள்.) சொல்லுகின்ற நான்குவேதங்களை யுணர்ந்த அந்தணர் (இவ்விரதத்தை) இயற்றினால் பல சாஸ்திரங்களின் துறைகளை யுணர்வார்கள்; அரசர் ஆச்சிரயித்தால் உலகமுழுவதையும் ஒருகுடைநீழலில் இனிதாக அரசுபுரிவார்கள்; பொன்னை விரும்புகின்ற சிறந்த வைசியர் அநுஷ்டித்தால் அளவிட்டறிதற்கரிய பொருளையடைவார்கள்; சூத்திரர் இவ்விரதத்தை ஆச்சிரயித்தால் மனத்தில் விரும்பியவற்றைப் பெறுவார்கள். எ-று. (கஎ)

செய்ப தாமரைத திருமக ளோற்றுமுன் செங்கண்மால் தனைச்சேர்ந்தாள்
மைய வேலவிழி யருந்ததி நோற்றுயா வசிட்டனன் மனையானு
ளைய நுண்ணிடைக் கொடியநு சூயைநோற் றத்திரி தனைபபெற்றுள்
தொய்யில வெம்முலை யிமமுறைநோற்கெனச் சொற்றனன் மழுவலலான்

(இ-ள்.) செவந்த தாமரைமலரில் வசிக்கும் இலக்குமிதேவி (இவ்விரதத்தை) முன்செய்து செந்தாமரைபோலுங் கண்ணையுடைய திருமாலைக் கூடினள்; மதர்த்த வேல்போன்ற விழியையுடைய அருந்ததிநோற்று உயர்வாகிய வசிட்டமுனிவனது நல்ல பதிவிரதையாயினள்; அழகிய நுண்ணிய இடையையுடைய அநசூயை யநுஷ்டித்து அத்திரிமுனிவனை (கணவனாக) அடைந்தாள்; தொய்யிலெழுதிய வெவ்விய தனங்களையுடைய சசியே! இவ்வகையாக (நீயும்) நோற்கக்கடவாயென்று மழுப்படை தாங்கிய மகாதேவர் திருவாய்மலர்ந்தருளினர். எ-று.

அழகு கண்படு வனமுலை சுமந்தற வலசுநுண் ணிடைச்செவ்வா
யெழுதுவா ணுதற் புலோமசை நோற்றுளத் தியைந்தயா வையும்பெற்றுள்
விழைவி னிக்கதை கேட்டவர் பயின்றவ ரெழுதினர் விருப்புற்றோர் [மே.
தொழுது வாழ்த்துநர் பேற்றையோர் நாவினுற் சொல்லுதற் கெளிதா

(இ-ள்.) அழகுபடிந்திருக்கின்ற குசங்களைத் தாங்கி மிகவும் வருந்துகின்ற நுண்ணிய இடையையும் செவந்த வாயையும், எழுதிய ஒளிதங்கிய புருவத்தையுமுடைய இந்திராணி (அம்மனோரதத்திரிதிகைவிரதத்தை) நோற்று மனத்திற் பொருந்திய எல்லாவரங்களையும் அடைந்தனள். ஆசையுடன் இச்சரித்திரத்

தைக் கேட்டவர்களும் படித்தவர்களும் எழுதினவர்களும் சந்தோஷித்தவர்களும் வணங்கித் துதித்தவர்களும் அடையும் பலனை ஒரு நாவினால் எடுத்துச்சொல்லுதற் கெளிதாகுமோ (எளிதாகாது) எ-று. (கக)

மனோரதத்திரிதிகை விதியுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககூ௫௬.

உ

சிவமயம்.

எண்பத்தொன்றாவது,

## தூர்த்தமன் கதையுரைத்த அத்தியாயம்.

குரைதிரைக்கடல் குடங்கையி னேந்துபு குடித்த
வரும றைப்பொரு டெரிந்தரு ளகத்திய முனிவ
தரும தீர்த்தநற் கதையினைச் சாற்றுவ னென்னப்
பொருவின் மாமுத றடிந்தவேற் புங்கவன் புகலும்.

(இ-ள்) ஒலிக்கின்ற அலைகளையுடைய சமுத்திரத்தை உள்ளங் கையிலேற்று ஆசமனஞ்செய்த அரிய வேதத்தின் (உண்மைப்) பொருளை யுணர்ந்தருளிய அகத்திய முனிவனே! தருமதீர்த்தத்தினது நல்லசரிதத்தினைச் செப்புகின்றேன்; (கேட்பாயாக) என்று, சமானரகிதமாகிய மாமரவடிவுகொண்ட சூரபன்மனைச்சம் ஹரித்த வேற்படையேந்திய ஸ்ரீ முருகக்கடவுள் திருவாய் மலர்ந்தருளுகின்றார்.

ஏந்துபு என்பது செய்புஎன்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம்.

ஏந்து கோட்டயி ராவதப் பொருபக டிவர்வோன்
காந்து வெம்படை விருத்திரா சுரனுயிர் கவரச்
சார்ந்த வெவ்வினை தீருமா றுரையெனத் தாழா
வாய்ந்த நான்மறைக் குரவனை யேத்தின னறைந்தான்.

(இ-ள்.) வளைவாகிய (நான்கு) கொம்புகளையுடைய ஐராவதமாகிய போர்புரியும் (வெள்ளை) யானையை ஏறிச்செல்லும் இந்திரன் எரிகின்ற வெவ்விய ஆயுதந் தாங்கிய விருத்திராசுரனது உயிரை (தவஞ்செய்கையில்) கவர்தலால், தன்னை யடைந்த பிரமஹத்தி நீங்குமாறு உரைத்தருள வேண்டுமென்று, நான்கு வேதங்களையும் ஆராய்ந்தறிந்த பிரகற்பதி முனிவரைப்பணிந்து துதித்துக்கூறினன். எ-று.

கொழும டற்பிணி நெகிழ்குடச் சூற்கமு கெருத்தி
னுழுந ரோதையின் வெருவிய வாளைபாய்ந் துழக்கப்
பழைபர் சேரியிற் கட்குட முடைந்தெனப் பசுந்தேன்
பொழியு நீள்வயற் காசியிற் செல்கெனப் புகன்றான்.

(இ-ள்.) மதர்த்த மடல்களின் கட்டுகள் நெகிழும்படி குடம்போற் குல் கொண்ட பாக்குமரங்களின்பிடரியிலே, பயிர்த்தொழில் பயில்வோரது பேரிரைச் சலாற் பயந்த வாளைமீன்கள் பாய்ந்து கலக்குவதால், பழையர் சேரியில் கட்பானை யுடைந்தாற்போல, பசுமையாகிய தேனைச்சொரியும் நெடிய வயல்களையுடைய கா சிக்ஷேத்திரத்திற்குச் செல்கவென (வியாழபகவான் மேகவாகனனுக்கு) விளம்பி னன். எ-று.

பழையர்=கள்விற்போர். சேரியென்பது ஊர்சேர நிற்கும் ஓர் சிற்றூர். ஈண்டுச் சில ஜாதியர் ஊர்சேரார் வாழ்வர். (ங)

அளியு ழப்பரு முகைவெடித் தலர்ந்தசெங் கமலத்
துளிம துப்பரந் தொழுகலாற் றுமற விளைந்த
களிறு பாய்கதிர்ச் செந்நெலங் கழனிசூழ் கிடந்த
வ்ளர்பு கழ்ச்செழுங் காசியை வாசவ னடைந்தான்.

(இ-ள்.) வண்டுகள் உளர்தலின பருத்த மொக்குகள் வெடித்து மலர்ந்த செந்தாமரை மலரின் தேன்துளிகள் பரவி யொழுகுதலால், குற்றமறப் பயிராகிய யானைகள் பாயத்தக்க கதிரையுடைய செந்நெற்பயிர் பொருந்திய அழகிய கழனி கள்சூழ்ந்து விளங்கும் கீர்த்திவளர்கின்ற செழுமைதங்கிய காசிப்பட்டணத்தைச் சேர்ந்தனன் இந்திரன், எ-று. (ச)

விரிசு டர்ப்பசுங் கதிரெறித் தவுண ருன் விழுங்கிக்
குருதி கொப்பளித் தழலுமிழ் வயிரவாட் குரிசில்
பொருத டங்திரைக் கங்கையம் புனல்படிந தாடி
யருட ருந்தரு மேசன்முன் னருந்தவம் புரிந்தான்.

(இ-ள்.) பரந்த பிரகாசம்பொருந்திய பசிய கிரணங்களைவீசி, அசுரரது மாமிசத்தை யருந்தி, உதிரத்தைக் கொப்பளித்து, நெருப்பைக் கக்குகின்ற வச்சி ரவாளாயுதமேந்திய வலாரி எறிகின்ற பரந்த அலைகளையுடைய அழகிய கங்காசல த்தில் மூழ்கி ஸ்நானஞ்செய்து, கிருபை பாலிக்கின்ற தருமேசப் பெருமானது திரு ச்சந்நிதானத்தின் முன்னர் அருமையாகிய தவத்தைச்செய்தனன். எ-று. (ரு)

புரியு நற்றவ முவந்தனன் புரந்தர நீயித்
தரும வாவியிற் படிகெனத் தழங்குநீ ராடிப்
பிரம கத்திவிட் டொழிதலும் பின்னுகற் போற்றிப்
புரசை யானைவே லிந்திரன் வானிடைப் புகுந்தான்.

(இ-ள்.) இந்திரா! நீ இயற்றிய நல்ல தவத்திற்குக் களித்தனன். இத்தரு மதீர்த்தத்தில் மூழ்குகவென்று (சிவபிரான்) திருவாய் மலர்ந்தருள, சத்திக்கின்ற தருமதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து பிரமகத்திவிட்டு நீங்கவும், சிவபிரானைத் துதித்து, நெற்றிப்பட்டமணிந்த ஐராவதத்தை யேறுகின்ற வேற்படையேந்திய தேவேந்திரன் தேவலோகத்திற்குச் சென்றான். எ-று. (சு)

முருகு தாழ்குழற் புலோமசை முலைமுக டுழக்குந்
தெரியல் மார்பினன் மீட்டுமா தவரொடுந் தேங்கொள்

விரித லைப்பசுங் கமுககல் விசும்பக டுடைப்பக்
கருவி மாமழை பொழிபுனற் காசியி னடைந்தான்.

(இ-ள்.) தேன்பொருந்திய பரந்த தலையையுடைய பசிய பாக்குமரங்கள் அகன்ற ஆகாயத்தின் வயிற்றைக்கிழித்தலால், உலகிற்கு முதற்காரணமாகிய சிறந்த மழைபொழியும் காசிநகரத்தை, மணங்கமழும் நீண்ட அளகபாரத்தையுடைய இந்திராணியின முலைமுகட்டினைக் கலக்குகின்ற (கற்பகமலர்) மாலையணிந்த மார்பையுடைய இந்திரன் சிறந்த தவசிகளோடும் திரும்பவும் சேர்ந்தான்.. எ-று.

முகடு=உச்சி.

பாக்குமரங்கள் ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு செல்லுதலால், மேகங்கள் எப்பொழுதும் வருஷித்துக்கொண் டிருக்கும் என்பார். "கமுககல் விசும்பக டுடைப்பக் கருவி மாமழை பொழிபுனற் காசி" எனறார். (எ)

சுடரும் வெண்மதி வனைசடைத் தாரகேச் சுரற்குக்
குடபு லத்தினிற் றன்பெய ரான்மகிழ் கூர்ந்து
படர்செ ழுஞ்சுட ரிலிங்கமொன் றமைத்தனன் பரிவா
லடர்செய் வேல்விழிச் சசியுமாண டிலிங்க மொன் றமைத்தாள்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற வெள்ளிய சந்திரனையணிந்த சடைமுடியுடைய தாரகேச்சுரருக்கு மேற்றிசையிலே (இந்திரன்) தனது பெயரால் களிமிகுந்து படர்ந்த செழுமைதங்கிய பிரகாசத்தோடு கூடிய சிவலிங்கக் குறியொன்றைப் பிரதிட்டை செய்தனன். எதிர்க்கின்ற வேலாயுதம்போன்ற கண்ணையுடைய இந்திராணியும் ஆசையோடு அவ்விடத்திலேயே ஓர் சிவலிங்கக்குறியைத் தாபித்தனள்.

அத்தி ரிப்பெயர் முனிவர னமைத்தரு ளிலிங்க
முத்த வெண்குடை யெண்டிசைப் பாலரு முறையின்
வைத்த லிங்கஞா னேச்சுரம் வளர்தர ணீசந்
தத்து வேச்சுர மிவைமுதல் தணப்பிலா துறையும்.

(இ-ள்.) (இவையே யல்லாமல்) அத்திரியென்னும் பெயரையுடைய முனிசிரேஷ்டன் பிரதிட்டை செய்தருளிய சிவலிங்கம்-முத்துநிகர்த்த வெள்ளிய (சந்திரவட்டக்) குடையையுடைய அஷ்டதிக்குப் பாலகரும் முறையாக ஸ்தாபித்த சிவலிங்க மூர்த்திகள் - ஞானேச்சுரலிங்கம் - (கீர்த்தி) வளர்கின்ற தரணீச்சுரலிங்கம் - தத்துவேச் சுரலிங்கம் - இவை முதலாக (பல சிவலிங்கக் குறிகள் ஆங்கு) கணக்கில்லாது விளங்கும். எ-று. (கூ)

## வேறு.

இன்னுமாங் கொருகாதை நிகழ்ந்துளது கேட்டியென வியம்பு மோங்கு, பொன்னெடுமால் வரையின்றெடு முரணியெதி ரியலிந்தப் பொருப்பின் சாரல், செக்கெல்வளர் கரும்பேய்க்குங் கழனிதொறுந் திங்கள்வடிம் பிடறி நீண்ட, கன்னல்கமு கெழில்காட்டு முயர்கதம்ப சிகரமெனு நகரொன் றுண்டால்.

(இ-ள்.) இதுவேயன்றி அவ்விடத்தில் வேறோர் சரித்திரமும் நடந்துள்ளது; கேட்பாயாகவென்று (அகத்திய முனிவரை நோக்கி அறுமுகக் குரிசில்) அருளசெய்கின்றார். உயர்வாகிய பெரிய நீண்ட பொன்மலையாகிய மேரு பர்வதத்தோடு பகைத்தெதிர்த்த விந்தகிரியின சாரலிலே, கரும்பை யொக்குஞ் செந்நெற்பயிர் வளர்கின்ற வயல்களிலெல்லாம், சந்திரனது வழியை யிடறச்செய்து நீண்டு வளர்ந்த கரும்புகள் பாக்குமரங்களின் சாயலைக் காண்பிக்கத்தக்க உயர்வாகிய கதம்ப சிகரமென்று சொல்லப்படும் ஓர் நகரமுள்ளது. எ-று. (கo)

அந்நகரந் தனிபுரப்போ னுடல்சினத்தி னிகலிமிக வமரி னேற்ற, மன்விழுங்கித் தேக்கெறியு நெட்டிலைவேல வலனுயர்த்த மதன னென்பான், றன்னுயிர்போற் செயற்கரிய தவமாற்றி யினிதீன்ற தனயன் போரி, லொன்னலாவெண ணிணமருந்தி யுறைபுகுவேற் றூர்த்தமனென் றொருவ னுண்டால்.

(இ-ள்.) அந்தக் கதம்பசிகர நகரத்தை ஒப்பற்று அரசபுரிவோன் உடற்றுகின்ற கோபத்தினுற் பகைத்து மிக்க யுத்தத்திலெதிர்த்த அரசனைப் புசித்துத் தெவிட்டுகின்ற நீண்ட அச்சவடிவாகிய வேலாயுதத்தை வெற்றியோடுதாங்கிய மதனனென்பவன்; செய்தற்கரிய தவங்களைச் செய்து தன் பிராணன்போல் இனிதாகப் பெற்ற புதல்வன் போர்க்களத்தில சத்துருக்களது வெள்ளிய கொழுப்பையுட்கொண்டு உறையிற் புகத்தக்க வேலாயுதமேந்திய தூர்த்தம னென்று ஒருவனிருநதான். எ-று.

வலனுயாத்த எனபதற்கு வலப்புறத்தி லுயர்த்திப் பிடித்தவெனக் கூறுதலுமொக்கும்.

உறை=படைக்கூடு. (கக)

தாதுதோய்ந் தினவண்டு துதைநறுந்தார்த் தூர்த்தமனுந் தாவில் வேந்தன
நீதுபூத் தருளவிந்த சிந்தையன்வெங் கொடுங்கோலன நிளமு மிக்க
வேதிலா மனைவிழையு மிழுதையரு மறையினெறி யிகழ்நத தீயோன்
போதுதூய்ச் சங்கரனைப் புணடரிகக் கண்ணனைப் போற்றல செயயான்

(இ-ள்.) மகரந்தப்பொடிகளில் மூழ்கிக் கூட்டமாகிய வண்டுகள மொய்க்கின்ற நல்ல மாலையணிந்த தூர்த்தமனுகிய கெடுதலில்லாத அவ்வரசன தீமைமிகுந்து கிருபை யொழிந்த மனமுடையவன்; மிகக் கொடுங்கோ லரசாட்சி புரிவோன்; ஒவ்வொருநாளும பரதார கமனஞ்செய்யும அறிவில்லான்; அரிய வேதவொழுக்கங்களை விலகிய தீயவன்; சிவபிரானையும் செந்தாமரைபோலுங கண்ணையுடைய திருமாலையும் மலர்களா னருச்சித்துத் துதி செய்யாதவன். எ-று.

இழுதை - அறிவென்பது சிறிதும் நுழைதற்கு ஓர் புரையுமில்லாத முழுமகன்.

இச்செய்யுளில் "தாதுதோய்க் கிளவண்டு துதைந்தாடுந் தூர்த்தமனுந் தார்கொள் வேலான்" எனவும் பாடாந்தரம். (கஉ)

சிற்றினஞ்சேர்ந் திடுவதன்றி விழுமியோர் குழுவினிடைச் சேர்தல் செய்யான், முற்றுமிருங் குடிகூவப் பொருள்வவ்வி முதுக்குறைவி லுளத்த னுகிக், கற்றவரைத் தானடித்துக் கல்லாத புல்லருரை கசிந்து கேட்

குங், கொற்றவனவ் வுலகு தனை தடிப்படுத்திக் கொடுங்கோன்மை புரிபு நாளில்.

(இ-ள்.) கீழோர் கூட்டத்தைச் சேர்வதல்லாமல் அறிஞர் குழாத்தில் (ஒருபொழுதும்) சேராதவன்; பெரியகுடிகளாயுள்ளோர் யாவரும் ஓலமிடும்படி பொருள்தேடி, பேரறிவில்லாத மனமுடையவனும்க் கல்விமான்களையடித்து (அகற்றி) நீதிநூல் வாசியாத இழிஞர் சொல்லை மனமுருகிக் கேட்கத்தக்க அரசன். அத்தூர்த்தமன் அவ்வுலகத்தைத் தனதாக்கினைக் குட்படுத்திக்கொடுங்கோலரசுபுரிந்து வருங்காலத்தில். எ-று.

நியாயமில்லாத வழியில் அளவில்லாமலும் முறையில்லாமலும் பொருள் கொள்வோனாதலால் "குடிகூவப் பொருள்வவவி" என்றார். (கங)

வேட்டைமேல் மனஞ்செலுத்தி வலைஞரொடு மரில்பரந்த வெங்கானெய்திக், கோட்டுவா ரணமுதல குறுமுயலீ ருயெவையுங் கொன்று மற்றோர், காட்டினே கலுமரிய கல்லதரி னெறிபிழைத்துக் கழற்கால் வேந்த, னுட்டமூன் றுடையபிரான் காசிநகர்க் கணித்தாக நண்ணி னானே.

(இ-ள்.) வீரக்கழலணிந்த காலையுடைய தூர்த்தமனென்னு மரசன் வேட்டையாடுதலில் மனத்தைவிடுத்து வேடுவருடன் சிறு தூறுகள் பொருந்திய வெவ்விய வனத்திற்சென்று, தந்தங்களையுடைய யானைமுதலாகச் சிறிய முயலிறுதியாக எல்லாவகைப்பட்ட மிருகங்களையும் இம்சித்து, வேறொரு காட்டிற்குச் செல்லவும், நடத்தற்கரிதாகிய கல்வழியில்முறைதவறி, திரிநேத்திரங்களையுடைய ஸ்ரீவிச்சுவநாதப் பெருமான் எழுந்தருளிய காசிநகரத்திற்குச் சமீபமாகச் சென்றனன்.

வலைஞர் என்பது நுளையர் பரதரிருவர்க்கும் பொதுப்பெயராக விருப்பினும், ஈண்டு "கானெய்திக் கோட்டுவாரண முதலகுறு முயலீரு யெவையுங்கொன்று" எனக்கூறினமையான், நுளையரை நீக்கிவேட ரெனக்கொள்க. (கச)

அகில்முருடு கையரிக்கொண் டொழுகுபுனற் காசிநக ரமலன் செய்ய துகிர்விழுது விட்டனைய தூய்சடைமேற் கங்கைநதித் துவலை மாந்தி வகிர்மதியி னமுதளவி வருந்தென்றல் தூர்த்தமன்மெய் வருடி யேகப் பகர்வரிய துயரினொடு மொழிவரிய பாவமும்வேர் பறிந்த வன்றே.

(இ-ள்.) அகிற் குறட்டினைக் கையினால் அரித்துக்கொண்டு பாய்கின்ற நீர்வளம்பொருந்திய காசிநகரத்தில் வீற்றிருக்கும் நின்மலராகிய சிவபெருமானது செவ்விய பவளமானது விழுது விட்டாற்போன்ற பரிசுத்தமாகிய சடையின் பேரிலுள்ள கங்காசலத்தின் சிறு துளியைக்குடித்து இளஞ்சந்திரனது அமுதகலையோடு கலந்து வீசுகின்ற தென்றற் காற்றானது தூர்த்தமனது சரீரத்தைத் தடவிச்செல்ல, சொல்லுதற்கரிய (அவனது) துன்பத்துடனே நீங்குதலில்லாத பாவமும் வேரோடும் ஒழிந்தன. எ-று.

முருடு=பெரிய விறகு. கையரிக்கொண்டு=கையாற்றடவி;
வகிர்மதி=பிளவுபட்ட சந்திரன்; சந்திர துண்டம். (கரு)

பொரியரைய தேமாவின் பூந்துணர்ப்பைந் தாதாடிப் பொதிவாய் விண்ட
விரிதலைய வொண்டோட்ட பொலம்பொகுட்டுத்தாமரையின் விளரிபாடி
வரியளிகண் படுகழனி விளிம்புடுத்த காசிவள நகரின் பாங்கர்
தருமலிங்க மினிதுறையுஞ் சினகரங்கண் டியர்பரியி னிழிந்து தாழ்ந்தான்

(இ-ள்.) பொருக்கு வெடித்த அடியையுடைய தேமாமரங்களினது பூங்கொத்துக்களின் பசிய மகரந்தப்பொடிகளில் மூழ்கி, முறுக்கவிழ்ந்த பரந்த தலையையுடைய ஒள்ளிய இதழ்கள் பொருந்திய அழகிய கொட்டைதங்கிய தாமரைப் புட்பத்தில் இசைபாடி, கீற்றுகள் பொருந்திய வண்டுகள் துயில்புரியுங் கழனிகளை ஓரத்தில் (ஆடையாக) உடுத்த வளப்பம்பொருந்திய காசிநகரத்தின் பக்கத்திலே தருமேசப்பெருமான் இனிதாக வீற்றிருந்தருளும் திருக்கோயிலைக்கண்டு உயர்வாகிய குதிரையி விருந்திறங்கிப் பணிந்தனன் (துர்த்தமன்) எ-று.

விளரி என்பது ஏழிசையினென்று ; இது மிடற்றுற் பிறப்பது. இசையென்றும் - பண்ணெனினு மொக்கும். (கசு)

வளர்தரும பீடமிரு கண்ணுறலும் பேரறிவு வந்து தோன்றத் [ற்றிக்
தளர்விறெடு முன்செய்த கொடுங்கோன்மை தனைநினைந்து தலைவற்போ
களிமதவா ரணங்கூந்த விளம்பிடிக்குக் கற்பகநாண் மலர்ப்பூங் கொம்பிற்
குளகருத்தக் கைநீட்டும் விந்தமால் வரைச்சாரல் குறுகி னானே.

(இ-ள்.) கீர்த்திவளர்கின்ற தருமபீடத்தை இருவிழிகளாலுங் காணவும், பேரறிவு (துர்த்தமனுக்கு) வந்து ஜனிக்கவும், பூர்வத்திற்செய்த கொடுங்கோலரசாட்சியை வருத்தத்துடன் நினைத்து, சிவபெருமானைத் துதித்து, மதம்பொழியுங் களிகொண்ட ஆண்யானையானது பிடரிமயிரையுடைய பெண்யானைக்கு அன்றலர்ந்த மலர்களையுடைய கற்பகவிருக்ஷத்தின் அழகிய கொம்பினின்று குளகினை (பறித்து) உண்பிக்கத் துதிக்கையை நீட்டுகின்ற பெரிய விந்தமலைச்சாரலை யடைந்தனன். எ-று.

குளகு=இலைநுகர் விலங்கி னுணவு ; மிருகங்களுண்ணத்தக்கதழை. ()

பொன்னகரம்வளமனைத்தும்பொறுக்கரிதாய்ப் புவியினிடைப் போந்த போலுந், தன்னகரி னிடையெய்தித் தனையனையங் நகர்காக்குந் தலைவ னுக்கித், தொன்மறையோர்க் களப்பரிய நிதிவழங்கிக் கொடியோரைத் துரந்து பின்னுங், கன்னல்மருள் செழுஞ்சாலிக் கழனிவிளிம் புடுத்தோங்கு காசி சேர்ந்தான்.

(இ-ள்.) தேவநகரமானது தனது வளப்பங்களையெல்லாம் பொறுத்தற்கரியதாய் நிலவுலகத்தில் வந்துவிட்டதுபோலும் (விளங்குகின்ற) தனது (கதம்பசிகரமென்னும்) நகரத்திற் சென்று, மைந்தனை அம் மாநகர்புரக்கும் மன்னவனாக (இராச்சியாபிஷேகஞ்) செய்து, பழமையாகிய வேதமுணர்ந்த அந்தணருக்கு அளவில்லாத செல்வத்தைத் தானஞ்செய்து, தீயோரை (நகர்கடக்க) ஓட்டி, கரும்பென்று மயங்கத்தக்க செழுமையாகிய நெற்பயிர்பொருந்திய வயல்களைப் புடையுடுத் துயர்ந்த காசிக்ஷேத்திரத்திற் பின்னுஞ் சென்றனன் (துர்த்தமன்) எ-று.

பொன்னகரம்=அமராவதி. (கஅ)

தருமேசன் ருள்வணங்கிச் சின்னாளிற் றூர்த்தமனு முத்தி சார்ந்தா
னொருவாது தீவினைக ளுலப்பிலவாற் றுகரோனுங் காசி யெய்திற்
கருவாழி படிகிலரிக் கதைகேட்டோர் பயின்றுளோர் கருதல் செய்தோர்
மருவாரபூங் கடுக்கையணி யிறைவனடி சேர்வரென வழங்கி னானே.

(இ-ள்.) தருமேசப்பெருமானது திருவடிகளைப்பணிந்து (வாழ்ந்திருந்து) தூர்த்தமனுஞ் சிறிதுகாலத்தில் மோட்சமெய்தினன். அளவில்லாதனவாகிய பாவ கருமங்களை நீங்காமற் செய்வோரானலும், காசிநகரமடைந்தால், பிறவியாகிய கடலில் மூழ்கமாட்டார்கள். இச்சரிதத்தைக் கேட்டவர்களும் வாசித்தவர்களும் நினைத்தவர்களும், வாசனைபொருந்திய அழகிய கடுக்கைமாலை சூடிய சிவபிரானது திருவடி (நீழலி)ற் கலப்பார்களென்று (ஸ்ரீகுமாரக்கடவுள் அகத்தியமுனிவருக்கு) திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (கக)

தூர்த்தமன் கதையுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கக௭௨.

---

உ

சிவமயம்.

எண்பத்திரண்டாவது,

## கங்காளகேது வதை அத்தியாயம்.

வீரேசன் காதையின்னும் விளம்புகவென் றருந்தவத்தோன் வினவலோடுஞ், சூர்மாள வேற்பணித்த தோகைமயிற் பாகனிவை சொல்லு முன்னம், பாரேழு மதிநெடுவெண் குடைநிழற்றி வெயிலுமிழ்வெம் பரிதி போலு, மோராழி தனிசெலுத்து மித்திரசித் தெனவுளனே ருரவுத் தோளான்.

(இ-ள்.) வீரேசப்பெருமானது சரித்திரத்தை இன்னும் திருவாய் மலர்ந்தருளவேண்டும் என்று, அரிய தவசியாகிய அகத்தியமுனிவர் கேட்கவும், சூரபன்மனிறக்கும்படி வேலாயுதத்தைச் செலுத்திய கலாபத்தையுடைய மயில்வாகனக் கடவுளாகிய ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிகள் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளுகின்றார். பூர்வத்திலே சத்தலோகங்களையும் சந்திரன் போன்ற நெடிய வெண்குடையானிழல்செய்து, வெயிலைக்கக்குகின்ற வெவ்விய சூரியனைப்போலும் ஒப்பற்ற ஆக்கினைசக்கரத்தைஒப்பற்றுச்செலுத்தும் வலிதங்கிய தோள்களையுடைய மித்திரசித் தென்று ஒருவனிருந்தான். எ-று. (க)

புவனகோ டிகளுமொரு புடைகிடத்துஞ் சிற்றுதரப் பூவை வண்ணன்
குவலயமே ழும்பொதிந்த குளகழற்சே வடிக்கமலப் போதை நீங்கா

வுவகைவரி யளியலர்த்து மிதயமலர் தனிலடக்கு முரவோ னூம் [ன்
பவமொழிய விரைகமழும் பாசிலைத்தண் டுளவோனைப் பணிதல் செய்தா

(இ-ள்.) கணக்கில்லாத புவனங்களையும் ஒருபுறத்தில் (அடக்கி)வைக்குஞ் சிறியவயிற்றையுடைய காயாம்பூவண்ணராகிய திருமாலின் ஏழுலகமும்பொதிந்த ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த செவந்த பாதங்களாகிய தாமரைமலரை, நீங்காத களிப்போடு கீற்றுகள்பொருந்திய வண்டுகள் விகசிக்கச்செய்யும் இதயதாமரையில் அடக்கத் தக்கவலியோன்; பிறவிவிலகும்படி மணம்வீசும் பசிய இலையாகிய குளிர்ந்த துளவமாலையணிந்த விஷ்ணுமூர்த்தியை எப்பொழுதும் வணங்கிவந்தான்.

திருமால் உலக முண்டோ ராதலாலும், திரிவிக்கிரமாவதாரங் கொண்டபொழுது மூவுலகுமளந்தோராதலாலும், அவரை "புவனகோ டிகளுமொரு புடையிடத்துஞ் சிற்றுதரப் பூவைவண்ணன்" என்றும், "குவலய மேழும் பொதிந்த குரைகழற்சேவடி" என்றுங் கூறினர். (உ)

அண்ணலளித் திடுமுலக மனைத்துமிரு போதுமுய ரன்பி னோடுங்
கண்ணமா தவமுகுந்த கேசவவச் சுதவென்னக் கழற லன்றி
யெண்ணம்வே றிலரோகா தசியெய்திற் ருய்முலையி னிறங்கு தீம்பா
லுண்ணுரு தான்கன்று மெனிலறிஞர் செய்தவமென் னுரைக்கு மாறே.

(இ-ள்.) மித்திரசித்து அரசுபுரியும் இராச்சியத்திலுள்ளோர் யாவரும் இரண்டுபொழுதிலும் மிகுந்த ஆசையோடும் கண்ணா! மாதவா! கேசவா! அச்சுதா! என்று கூறுதலல்லாமல் வேறொரு எண்ணமுடையவரல்லர். ஏகாதசித் திதி வருமாகில் பசுவின்கன்றும் தன் தாய்முலையினின்று இறங்கும் மதுரமாகிய பாலைக்குடியாது என்று சொன்னால் விவேகிகள்செய்யுந் தவத்தை எடுத்துச்சொல்லும் வகையாது? எ-று.

இருபோது=காலை மாலை. (ங)

இன்னணநீ தியினுலக மினிதளிக்கு மேல்வையினி லிசைத்தே னூறத்
தென்னதென வெனமுரலு மகதியாழ் பயில்முனிவன் சினவு வைவேல்
மன்னன்முன மெய்துதலு மருக்கியபாத் தியமுதல வழங்கி யேத்திப்
பொன்னடித்தாமரைநோவப்போந்ததெவனெனமுனிவன் புகலலுற்றான்

(இ-ள்.) இவ்விதமாக நீதியுடனே உலகத்தை இனிதாகரக்ஷித்து வருங் காலத்தில் இசையாகிய தேன் ஊற்றெடுக்கும்படி தென்னதென வென்று ஒலிக்கின்ற மகதிவீணையை வாசிக்கும் நாரதமுனிவர் கோபிக்கின்ற கூர்மையாகிய வேலாயுதமேந்திய மித்திர சித்தென்னுமரசன் சமுகத்தில் எழுந்தருளவும், அருக்கியம் - பாத்தியம் - முதலியவற்றைக்கொடுத்துத் துதித்துப் பொன்போலுந் திருவடித் தாமரைகள் நோவத்தக்கதாய் (ஈண்டு) எழுந்தருளியது என்ன (புண்ணியம்) என்று (உபசாரவார்த்தைகள்) சொல்லவும், நாரதமுனிவர் கூறத்தொடங்கினர்.

யாழினோர் குலத்திறைவன் றவப்பேற்று வினிதீன்ற மயிலஞ் சாயல்
மாழைமா மருணோக்கி னெழின்மலைய கந்தினியைக் கபால கேது

காழுலா மனத்தனருள் கங்காள கேதுவெனு மவுணன் வவ்விப்
பாழிவாய்க் கொடும்பாந்த ளரசிருக்கும் பாதலத்திற் படர்ந்தா னன்றே.

(இ-ள்.) வீணையேந்திய காந்தர்வர் குலத்தரசன் தனது தவப்பயனால் இனிதாகப்பெற்ற அழகியமயிலின் சாயலையும், மாவடுவை மருட்டிய கண்ணையுமுடைய சிறப்பமைந்த மலையகந்தினியென்பவளை, கபாலகேதுவெனனும் வைரந்தங்கிய மனமுடையான் ஈனற கங்காளகேதுவென்னும் அவுணன் திருடிக்கொண்டு, அகலமாகிய வாயையுடைய கொடுமைதங்கிய சர்ப்பராசனுகிய நாகேந்திரன் அரசுசெய்கின்ற பாதலலோகத்திற்கு (எடுத்துக்கொண்டு) போயினன். எ-று. (ரு)

இயக்கர்கோ னிதியறையி னெழிற்கதவந் திறந்ததெனப் புலவர் யாரும்
வியக்குநீள் வளங்கிடந்த சமபகா பதியதனின் மேவு போழ்திற்
பயக்குமோ ரேழுலகும படைத்தளிக்கு மாடகே சுரனைப பாடி
நயக்குமா றினிதுத்தி யாநகரில யானுமிக நண்ணி னேனால்.

(இ-ள்.) இயக்கர் தலைவனுகிய குபேரனது பொக்கிஷத்தின் அழகிய கதவைத்திறந்தாற்போல, தேவரெல்லாரும் ஆச்சரியமெய்தத்தக்க நெடிய வளம் விளங்குஞ் சம்பகாபதியென்னும் நகரத்திற்செல்கையில், சிருட்டிக்கின்ற ஒப்பற்ற சத்தலோகங்களையும் படைத்துக் காத்துவரும் *ஆடகேசுரரைத் தோத்திரஞ்செய்து களிக்கும்படி யானும் அச்சம்பகாவதி நகரத்திற்போயச் சேர்ந்தேன்.

அநாசிருதர் - அநாதர் - அநந்தர் - வியோமரூபர்-வியாபகரென்னும் மூர்த்திகளைவரும், பராசத்தியாதி ஐவகைச்சத்திகளைக்கொண்டு முறையே சிவசாதாக்கியம் கன்மசாதாக்கியம்-கர்த்துருசாதாக்கியம் - மூர்த்திசாதாக்கியம் - அமூர்த்திசாதாக்கியங்களால் அசுத்தபஞ்சகிருத்தியங்களை நடாத்துவர். இவருள் அநாசிருதருக்குப் பிரமனளவாகவும், அநாதர்க்கு விஷ்ணுவளவாகவும்,அநந்தர்க்கு உருத்திரனளவாகவும், வியோமரூபர்க்கு மகேச்சுரனளவாகவும், வியாபகர்க்குச் சதாசிவனளவாகவும் வியாத்தி. மேற்கூறிய ஐவருள் வியாபகருடைய மூர்த்திபேதமான ஆடகேசுரர் பாதாளலோகாதிபதியாய் ஆங்குள்ளவர்தொழ எழுந்தருளுவர் (சு)

எய்துகின்ற வெனைநோக்கி யெழின்மலைய கந்தினியொன் றுரைத்தா ளே
மைதவழு முயர்குடுமிக் கந்தமா தனத்தின்மகிழ்ந் தாடு மென்னைப் [ங்கி
பைதலுறக் கவர்ந்திங்குப படர்ந்தனனிப பதகனடல் பழுத்த தன்கை
வெய்யதழல் வெமபடையி னன்றியே திலாபடையின்விளிதலசெய்யான்

(இ-ள்.) (ஆடகேசுரரைப் பணியும்படி) செல்கின்ற என்னை அழகியமலையகந்தினி யென்பாள்கண்டு மனவருத்தத்துடன் ஒன்றுசொல்லினள். (அஃதென்னெனில்) மேகங்கள் தவழும் உயர்வாகிய உச்சியையுடைய கந்தமாதனபர்வதத்தில் மகிழ்ந்து விளையாடிக்கொண்டிருந்த அடியேனைத் துன்பமுறும்படி அபகரித்துக்கொண்டு இந்நகரிற்கு வந்தனன் ; இப்பாவியோ வலிமிகுந்த தனது கையிலேந்திய கொடிய அக்கினியைக்கக்கும் வெவவிய சூலாயுதத்தினலல்லாமல் அயலாரது ஆயுதங்களால் இறவான். எ-று. (எ)

* ஆடகேசுரரது வைபவத்தைபபறறி நூதனமாக அச்சிடப்பட்டிருக்கும் **சிவபராக்கிரமத்தில் ௬-வது முகலிங்கப்** பிரபாவத்திற் காண்க.

காளைவரி வண்டரற்று மந்தார மாலைபுனை கவுரி முன்னந்
தாளிலமுழு துலகளந்தோ னன்பனினை மணக்குமெனச் சாற்றி னுளவ்
வாளரியன்னுனொருவனடையிலவன்படையவன்கையளிப்பேனென்னப்
பாளைவிரி கமழ்கூந்தற் படர்முலைகூறினளென்னப் பகர்ந்தான் மன்னே.

(இ-ள்.) வரியமைந்த இளவண்டுகள் மொய்க்காத மந்தாரமாலைதரித்த உமாதேவியார் பூர்வத்தில், திருவடியால் திரிலோகத்தையுமளந்த திருமாலடியவன உன்னை மணஞ்செய்வானென் றுதிருவாய்மலர்ந்தருளினர். அத்தகைய ஆண் சிங்கத்தையொத்த ஒருவன் இங்குற்றால்,இக்கங்காளகேதுவின்படையை அவன் கரத்திற் கொடுப்பேனென்று பாளைபோல்விரிந்த மணம்வீசுங் கூந்தலையும் படர்ந்த முலையையுமுடைய மலயகந்தினி சொல்லினள் என்று, நாரதமுனிவர் நவின்றனர். எ-று.

தேவர்கள் அணியும் மலர்மாலைகள் வண்டுகள்மொய்க்கும் இயல்புடையன வல்லவாதலின் "காளைவரி வண்டரற்று மந்தார மாலை" எனறார். (அ)

அங்கரி னெய்துநெறி யுரைத்தியென மித்திரசித் துரைப்ப வோங்கி
மன்னுகல னெறிவர்ந்து வாரிதியி னிடையேகி வைய மீதோர் [ன
கன்னிதனு வொடுமேபோந்து வினைபுரிந்தோன் கருமபலன றுய்க்கு மென்
வின்னிசைபா டினனேயு நிறைமதிநா ளவ்வழிநீ யேகு கென்றான.

(இ ள்.) (முனிபுங்கவரே!) அங்கரத்திற்குச் செல்லும் மார்க்கத்தை உபதேசித்தருள்வீராக வென று மித்திரசித்து வினவவும், (நாரதமுனிவர்) உயர்ந்து நிலைபெற்ற ஓர்மரக்கலமூர்ந்து கடலினடுவேசென்று, பூமியின்மேல் ஓர் வலி தங்கிய வில்லுடன் வந்து வினைபுரிந்தோ னதன கருமபலனை நுகர்வானென்று இனிய இசைபாடும் நாரதமுனிவர் சந்திரன் நிறைவாகவுள்ள பூரணையினன்று நீ அவ்வழியே செல்கவெனச் செப்பினர். எ று. (௯)

யாழ்பயிலு மறைமுனிவ னேகுதலு முலகனைத்து மெயிற்றி னேந்தி
யாழியொரு கரத்தமைத்த குறுங்கழுதத வெண்பன்றி யளிப்ப வோங்கு
தாழ்திரைய கருங்கடலி னிடையேகிச் சம்பகா பதியிற் சாரா
வேழுயாமே னிலைமுகப்பிற் றனித்துறையு மடவரலை யினிது கண்டான்.

(இ-ள்.) மகதியாழ்வாசிக்கும் வேதமுணர்ந்த நாரதமுனிவர் (இவவாறு கூறிச்) செல்லவும், உலகங்களையெல்லாம் ஓர் கொம்பினுலே தாங்கி, (சுதரிசனமென்னுஞ்) சக்ராயுதத்தை ஓர் திருக்கரத்தேற்ற குறுகிய கழுத்தையுடைய வெண்பன்றி வடிவேற்ற மாயோன்புரத்தலால் உயர்கின்ற நெடியஅலைகளையுடைய உவர்க்கடலின் நடுவேசென்று சம்பகாபதி நகரத்தைச்சார்ந்து உயர்வாகிய எழுநிலை மாடத்தின்மேல் வாழ்கின்ற மலயகந்தினியை யினிதாகக்கண்டனன் (மித்திரசித்து). எ-று.

திருமால் கடலு ளமிழ்ந்த பூமியைச் சுவேதவராகமூர்த்தியாகச் சென்று நிறுத்தினவராதலானும், அவவா றமிழ்த்திய இரணியகசிபைச் சங்கரித்த சக்ராயுதத்தைத் தாங்கினவராதலாலும், அவரை "உலகனைத்து மெயிற்றி னேந்தி-யாழியொரு கரத்தமைத்த குறுங்கழுத்த வெண்பன்றி" என்றார். (௧0)

வேறு.

உலக மூன்றினு ணல்லெழி லொருங்கெடுத் தினிதின்
மலரின் மேலையோன் மனத்திஞல வருத்தவோ வியங்கொல்
சிலைகொள் வேனில்வே ளினியதெள் ளமுதினிற் றீட்டி
நலமி றைந்தபூங் கொடிகொலமற் றெனவுள நயந்தான்.

(இ-ள்.) தாமரைமலரினமேல் வசிக்குஞ் சதுமுகன் மூவுலகங்களிலு முள்ள நல்ல அழகினை யொன்றாகவெடுத்து இனிதாகத் தனது மனதினுல் நிருமித்த சித்திரமோ! (கருப்பு)வில்லைத்தாங்கிய வேனிற்காலத்திற்குரிய மன்மதன் தெள்ளிய இனிதாகிய அமுதத்தில்தீட்டி நன்மைமிகுந்த பூங்கொடிதானே! வேறெதுவோ! என்று கருதி மனங்களித்தான் (மித்திரசித்து.) எ-று. (கக)

அருப்பு மென்முலை தாங்கிய வணிமயி லனையாள்
கருப்பு வில்லொளித் தெய்திய காளையை நோக்கி
விருப்ப மீக்கொளப் போந்ததென் வேந்தநிற் காணி
னுருப்ப வெஞ்சினத் தவுணர்கோ னுயிர்குடித் திடுமால்.

(இ-ள்.) கோங்கரும்புபோன்ற மெல்லியகுசத்தைத் தாங்கிய அழகிய மயிலின்சாயலையுடைய மலையகந்தினி, கரும்புவிலலை மறைத்துவந்த காளைப்பருவமுடைய (மதனன்போன்ற) மித்திரசித்தைப்பார்த்து, அரசனே! ஆசையதிகரிக்கும்படி (இவ்விடம்) வந்த தென்னகாரணம்? உனனைக் கண்டால் மிக்க கொடுங்கோபத்தோடு கங்காளகேதுவென்னும் அவுணர்தலைவன் உயிர்செகுப்பான். எ-று.

பொருவில தன்கையிற் படையினு லலதுயிர் பொன்றான்
தருவல நின்கையி லவன்படை தறுகணவா ளவுணன்
வருமு னிவ்வயின் மறைந்துறை யெனவுரை வழங்க
வெருவல மாதெனப் பகர்ந்தவ ணுறைந்தனன் வேந்தன்.

(இ-ள்.) சமானமில்லாத தனதுகையிலுள்ள படையாலல்லாமற் சாகமாட்டான். (ஆதலால) அவனது சூலாயுததலை உன்கையிற் கொடுப்பேன். அஞ்சாமையையுடைய கஙகாளகேது வருமுனனரோ இவவிடததில் மறைந்திருப்பாயாக வெனறு (மலையகநதினி) மறுமாறறங கூற, பெணணே! அஞ்சாதேயெனறு மித்திரசிதது விளமபி அவவிடத்திருந்தனன். எ-று. (கஉ)

அலரி மண்டல மத்தமே வுறுதலு மவுணன்
புலவு மேய்க்தெரி சூலவே றிரித்தனன் போந்து
கலவ மாமயில் கடிமண நாளையென் றியம்பி
மலர டுத்தபூந் தவிசின்மே லினிதுகண் வளர்ந்தான்.

(இ-ள்.) சூரியமண்டலம் (மேற்கடலில்) அஸ்தமிக்கவும், கங்காளகேதுவென்னும் அவுணன் புலாலுணவு புசித்து எரிசிந்துஞ் சூலாயுதத்தைச் சுழற்றிக்கொண்டுவந்து, தோகையையுடைய சிறநத மயில்போல்பவளே! நாளையதினமே விவாகம் என்று சொல்லி, மலர்கள்பரப்பிய அழகிய சயனத்தின்பேரில் துயினறனன். எ-று.

"கலவ மாமயில் கடிமண நாளையென் றியம்பி" என்பதற்கு மலையகந்தினி மணம் நாளைப்பொழுதெனக் கருதி எனப் பொருள்கூறலு மமையும். (கச)

முயலொ ழித்தவெண் மதிநிகர் முகத்தினு ளவுணன்
றுயிறல் நோக்கிவெஞ் சூலவெம் படையினைத் தாங்கி
யயலு றைந்தவே லுழவனை யழைத்தனள் கொடுப்ப
வெயிலு மிழ்ந்திடத் துளக்கினன் விடுநகை புரிந்தான்.

(இ-ள்.) முயற்களங்கத்தை நீக்கிய தாவள்யமான (பூரண) சந்திரன்போன்ற முகத்தையுடைய மலையகந்தினி, கங்காளகேது கண்டுயில்வதுகண்டு வெவ்விய சூலமாகிய கொடிய ஆயுதத்தைத் தூக்கிக்கொண்டு, அருகில் (மறைந்து) இருந்த வேற்படை தாங்கிய மித்திரசித்து என்பானை யழைத்துக்கொடுக்க, அவன் வெயில்வீசும்படி யசைத்து (வீராட்டகாசமாகச்) சிரித்தான். எ-று. (கரு)

வேறு.

பாய்கரி யொருத்தல்தன தாருயிர் பதைப்பச்
சீயமு ரறிக்கடிது சேர்குவ தெனப்போய்
நீயமர் விளைப்பவெழு வாயென நிகழ்த்திக்
காய்சின மிகத்தனது காலினி லுதைத்தான.

(இ-ள்.) (பகைஞரைப்) பாய்கின்ற ஆண்யானையின் அருமையாகிய உயிர் பதைக்கும்படி, சிங்கமானது ஆர்ப்பரித்து விரைவாகச் செல்வதுபோலச் சென்று நீ செருச்செய்ய எழுந்திருப்பாயென்று கூறி, எரிகின்ற கோபம் மேலிடத் தனது காலினாலே (கங்காளகேதுவை) யுதைத்தனன் (மித்திரசித்து). எ-று. (கசு)

கூர்துயி லொழிந்தவுணர் கோமக னகைத்துப்
போரசெய வெனக்குநிகர் நீகொல்பொறி யறவோய்
சேர்கென வுரைத்துமுடை சேரித ழதுக்கி
வார்கனை கழற்குரிசின மார்பினி லடித்தான்.

(இ-ள்.) அசுரேந்திரனாகிய கங்காளகேது மிக்கநித்திரையை விலகிச் சிரித்து, சண்டையிட வெனக்குச் சரியானவன் நீயோ, அறிவில்லாதவனே! (போர்புரிய) வரக்கடவாய் என்று கூறி, புலால் நாற்றம் பொருந்திய உதட்டைக்கடித்து, ஒலிக்கின்ற நெடிய வீரக்கழலணிந்த மித்திரசித்து மன்னவனது மார்பிலடித்தனன். எ-று. (கஎ)

கோமக னுருத்தசனி போலெதிர் கொதித்துக்
காமரு தடக்கைகொடு வாய்குருதி கக்கத்
தோமுறு குணத்தவுண னுருயிர் துடிப்ப
வேமுற வுரப்பியரி யேறென வடித்தான்.

(இ-ள்.) மித்திரசித்து சினந்து இடிபோலப் பொங்கி யெதிர்த்து அழகிய விசாலமாகிய கையினால், குற்றம்பொருந்திய குணத்தையுடைய துர்த்தமன் வாயினின்று உதிரஞ்சிந்தவும், அருமையான உயிர் பதைக்கவும், ஏமாப்புறும்படி மதட்டி ஆண்சிங்கம்போல் அடித்தனன். எ-று. (கஅ)

காவல னடிப்பவிழு காரிரு ணிறத்தன்
மேவரு மயக்கொழிய வேறுணர்வு பெற்றே
மூவுலகு கைக்கொளமுன் மாணுரு வெடுத்து
மாவலிமு னுற்றதிரு மாலென நினைத்தான்.

(இ-ள்.) மித்திரசித்து அடித்தலால் விழுந்த கரிய இருள்போன்ற நிறத்தையுடைய கங்காளகேது, பொருந்தற்கரிய அவசமொழிந்து மீண்டும் அறிவுற்று, திரிலோகங்களையும் பெறும்படி முற்காலத்தில் பிரமசாரி வடிவேற்று மாவலிச்சக்ரவர்த்திபால் அடைந்த திருமாலென்று கருதினன். எ-று. (கக)

ஆளரி நிகர்க்குமட லோயடு சினத்தின்
வாளமரு டற்றிவரு வாகைபெறு நர்க்கே
நீளரி மதர்க்கணுரி யாளென நிகழ்த்தித்
தோளிணை புடைத்தமரர் சோர்வுற வெதிர்த்தான்.

(இ-ள்.) ஆளுதலையுடைய சிங்கத்தையொத்த பராக்கிரமசாலியே! கொல்லத்தக்க கோபத்தோடு வாட்போர்புரிந்து வெற்றிமாலையணிந்தவர்கட்கே நீண்ட அரிபரந்த மதர்த்த கண்ணையுடைய மலையகந்தினி உரியவளாவாளென்று கூறி, இருதோளையுந் கொட்டி, தேவர்களுஞ் சோர்வெய்தும்படி யெதிர்த்தான். எ-று.

மாலுயர் துணைக்கமல வார்கழல் வழுத்தி
வேலைபுடை சுற்றுமெழு மேதினி புரப்போன்
காலனும் வெருக்கொள விடாதுதழல் கக்குஞ்
சூலமெதிர் விட்டவுண னுருயிர் தொலைத்தான்.

(இ-ள்.) விஷ்ணுமூர்த்தியின் உயர்வாகிய உபயதாமரைபோன்ற நெடிய பாதங்களைப் பணிந்து, கடல்புடைசூழ்ந்த சப்தலோகங்களையும் இரட்சிக்கும் மித்திரசித்து, இயமனும் அஞ்சும்படி நீங்காது நெருப்புப்பொரிகளைச் சொரியும் சூலாயுதத்தை யெதிர்செலுத்திக் கங்காளகேதுவின் அரியவுயிரை யழித்தனன். எ-று.

வீறுயர் சினத்தவுணன் வீதலு மிசைத்தே
னூறுமக தித்திவவி யாழ்முனிவ னுற்றே
சீறடி மழைக்கண்வளர் தேமொழி தனக்கு
மாறில்குரி சிற்கும்விதி யால்மண முடித்தான்.

(இ-ள்.) உயர்வாகிய பெருஞ்சினத்தையுடைய கங்காளகேது இறக்கவும், இசையாகிய தேன் ஊற்றெடுக்கும் மகதிவீணையை வாசிக்கும் நாரதமுனிவர் (அவ்விடம்) வந்து, சிறிய அடியையும் குளிர்ந்த கண்ணையும் மதுரம் வளர்கின்ற சொல்லையுமுடைய மலையகந்தினிக்கும் பகைமையென்பதில்லாத மித்திரசித்துவுக்கும் விதிமுறையுடன் விவாகஞ் செய்வித்தனர். எ-று. (உஉ)

மேவுமண முற்றியபின் யாழ்முனி விடுத்த
தாவில்வழி பற்றியலர் தாமரை முகத்தோர்
பாவையொடு மிக்கவெழு பாரினி தளிப்போன்
காவண நிறைந்துவளர் காசிநக ருற்றான்.

(இ-ள்.) பெருமை மிகுந்த ஏழுலகங்களையும் இனிதாகக் காக்கும் மித்திரசித்து பொருந்திய மணவினைமுடிந்தபிற்பாடு, நாரதமுனிவர் அனுப்பிய கெடுதலில்லாத வழியைப்பற்றி, பரந்த தாமரைபோலும் முகத்தையுடைய மலையகந்தினியுடன் பந்தல்கள் நிறைந்து வளர்கின்ற காசிநகரத்தைச் சேர்ந்தனன். எ-று.

கங்காளகேதுவதை யுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசுகூ௫.

உ

சிவமயம்.

## வீரேசன்றோன்றிய அத்தியாயம்.

கோழுழை யரம்பை யீன்ற கூன்புறக் கனியி னோங்கு
தாழைமுப் புடைக்காய் சிந்து தண்வயற் காசி யெய்தி
வாழுநா ளனில பீட்டத் திரிதிகை மரபி னாற்றப்
பாழியந் தடந்தோள் வேந்தே பணியெனப் பாவை சொற்றாள்.

(இ-ள்.) வழுவழுப்பாகிய அடியையுடைய வாழைமரங்கள் தந்த வளைந்த புறத்தினையுடைய (கதலிக்) கனியுடனே, தென்னமரங்கள் முப்புரிவையுடைய காய்களைச் சொரியும் குளிர்ந்த வயல்கள் பொருந்திய காசிநகரமடைந்து வாழுங் காலத்தில், வலிதங்கிய அழகிய விசாலமான தோளையுடைய அரசனே! அபீஷ்டத்திரிதிகை விரதத்தை முறைப்படிசெய்யக் கட்டளையிடவேண்டுமென்று மலையகந்தினி கூறினள். எ-று.

"விழவுகண்ணுறல்மேதகுநோன்புறல்
பழுதிற்றூநதியாடுதல்பண்ணவர்த்
தொழுதுபோற்றுதறேமறுகற்பினோர்
கொழுநரேவலினன்றிக்குறிக்கொளார்."— என இந்நூல் கற்பிலக்ஷண முரைத்த அத்தியாயத்திற் கூறியதற்கேற்ப, அபீஷ்டத்திரதிகை விரதமாற்றப் பணிபெறக் கணவனை யிரந்தனள் என்பதாம். (க)

பொன்னவாஞ் சுணங்கு பூத்த புணர்முலை சுமந்த கோதா
யன்னநோன் பாற்று கின்ற விதியினை யறைதி யென்னக்
கன்னல்மென் றனைய தீஞ்சொற் காந்தளஞ் செங்கை கூப்பி [ள்.
மன்னகே ளென்னச் செவ்வாய் மலர்க்கையிற் புதைத்துச் சொலவா

(இ-ள்.) பொன்னும் விரும்பத்தக்க தேமல்படர்ந்த நெருங்கிய முலைகளைத்தாங்கிய மலையகந்தினியே! அத்தகைய அபீஷ்டத்திரிதிகைவிரதத்தை அநுஷ்டிக்கும் முறைமையைச் சொல்லக்கடவாய் என்று (மித்திரசித்து) வினவ, கற்

கண்டை மென்றூற்போன்ற மதுரமாகிய சொல்லையுடைய மலையகந்தினி காந்தள் மலர்போலும் அழகிய செவந்த கையைக்குவித்து, அரசனே ! கேட்பாயாகவென. செவவிய வாயை மலர்போன்ற கையினுற்பொத்திச் சொல்வா ளாயினள். எ-று.

மார்கழித் திங்க டன்னில் வளர்பிறை யெய்து காலைச்
சீர்கெழு மூன்றும் பக்கத் துணவொழித் திலங்கு செம்பொற்
பூரண கும்பம வைத்துப் புகன்றவா லரிசி பெய்த
வேர்கெழு செப்பு வள்ள மெழில்பெற வதன்மேற் சேர்த்தி.

(இ-ள்.) மார்கழிமாதத்திலே சந்திரன்வளர்கின்ற பூர்வபக்ஷத்திலே சிறப்புமிகுந்த திரிதிகைத்திதியிலே ஆகாரத்தை நீக்கி, பிரகாசிக்கின்ற செமபொன்னுலாகிய பூர்ணகும்பத்தை நிறுத்தி, (ஆகமங்களிற்) கூறிய ஒள்ளிய அரிசியைப் பெய்த அழகுதங்கிய செப்புக்கலயத்தை அழகுபெற அதன்மேல் வைத்து. எ-று.

விலைவரம் பறியாப் பூம்பட் டதன்மிசை விளங்கச் சேர்த்தி
யலரிதழ்க் கமலம் வைத்தாங் கதன்மிசை நான்கு பொன்னல்
முலைசுரந் தொழுகு தீம்பான் முருகனுண் டுறைய வைகு
மலைமக ளுருவு செய்து மற்றதன் மீது சேர்த்தி.

(இ-ள்.) விலையளவு (யாராலும் கணக்கிட்டு) அறியப்படாத பொலிவமைந்த பட்டாடையை அதன்பேரில் விளக்கமுறச் சாத்தி, விகசித்தஇதழ்களையுடைய தாமரைமலர் சூட்டி, அதன்மேல் (ஆடகம் - கிளிச்சிறை - சாதரூபம்-சாம்பூநதம் என்னும்) நால்வகைப் பொன்னினுலும், முலைகளினின்றுஞ் சுரந்தொழுகுகின்ற மதுரமாகிய பாலை முருகப்பிரான் உண்டுகொண்டிருக்க வீற்றிருக்கும் உமாதேவியார் திருவுருவத்தை யியற்றி அதன்மேல் வைத்து. எ-று. (௪)

தென்வரை யுயிர்த்த பூங்கேழ்ச் சந்தனத் தேய்வை யாட்டிப்
பன்மலர் தூவித் தூபங் கமழ்வித்துப் பரிவி னேடு
மின்னமு தனைய வன்னந் தீங்கனி முதல வேற்றித்
துன்னிருட் கங்குல் முற்றுங் கண்படை துறந்து வைகி.

(இ-ள்.) பொதியமலையானது பெற்ற அழகிய நிறமமைந்த சந்தனத்தேய்வையால் அபிடேகித்து பலவகை மலர்களானருச்சித்துத் தூபமிட்டு, ஆசையுடனே இனிய அமிர்தத்தைப் போன்ற அன்னம்-மதுரமாகிய பழவர்க்கம் - முதலியவற்றை நிவேதித்து, இருள் மிகுந்த இராமுழுவதும் நித்திரைசெய்த லொழிந்திருந்து. எ-று.

சந்தனத்தேய்வை=அரைத்தசந்தனம். (௫)

ஓர்முழ வகல நீள முற்றதோர் குண்டந் தன்னிற்
சீர்கெழு நெய்யி னுதல் தேனினி னுதல் தோய்த்த
வேர்கெழு கமலப் போதோ ராயிர மினிதி னேடுதிச்
சார்வரு சாம வேத மறைகொடு தழலிற் பெய்து.

(இ ள்.) ஒருமுழவகலமும் நீளமும் பொருந்திய ஓர் ஓமகுண்டத்திலே சிறப்புமிகுந்த நெய்யிலாவது தேனிலாவது தோய்த்த அழகு நிறைந்த ஓராயிரந்

தாமரைமலர்களை இனிதாகக் கையிற் றாங்கி, சேருதற்கரிய சாமவேத மந்திரத்தி ளுல் அக்கினியிலிட்டு. எ-று. (௬)

புனிற்றிளங் கபிலை நான்கு பொன்னினு லமைத்த விம்பங்
கனைத்துவண் டிமிரும் பைம்பொற் கமலமென் பட்டி னேடு
மனைத்தையுங் குரவற் கீந்தாங் கமலனை யுமையைத் தூய
மனத்திடை யிருத்தி மாசில் புதல்வனை வழங்கென் றேத்தி.

(இ-ள்.) மிகவும் இளமைதங்கிய கபிலைப்பசு நால்வகைப்பொன்ஞற் செய்து(மேற்கூறிய) வுருவம் - வண்டுகள் கனைத்து ரீங்காரஞ்செய்யும் பசிய பொற் றாமரை - மெல்லிய பட்டாடை - (ஆகிய இவற்றுடன்) எல்லாவற்றையும் ஆசிரியனுக்களித்து, சிவபிரானையும் உமாதேவியாரையும் பரிசுத்தமாகிய மனதில் தியானித்து, குற்றமில்லாத சற்புத்திரனை அநுக்கிரகஞ் செய்வீர்களென்று துதித்து.

கருனையான் பொழிந்த தீம்பால் கன்னலங் கட்டி கொட்டி
யருமறை யந்த ணாள ராயிரர்க் கடிசி லூட்டிப்
பரிவினே டவர்தஞ் சேடம் பாரண முறையிற் செய்தல்
விரதமென் றுரைப்ப வேந்தன் விளங்கிழை யோடு நோற்ருன்.

(இ-ள்.) பொரிக்கறி - பசுவானது சொரிந்தமதுரமாகிய பால்-கற்கண்டு (முதலியவற்றைப்) படைத்து அரிய வேதமுணர்ந்த அந்தணர் ஆயிரம்பேருக்கு அன்னம்புசிப்பித்து, ஆசையுடனே அவர்கள் உண்டு மிகுந்தவற்றைக் கிரமப்படி பாரணமாகப் புசித்தல் (மேற்கூறிய அபீஷ்டத்திரிதிகை) விரதமென்று மலையகந் தினிகூற, விளங்குகின்ற ஆபரணமணிந்த அவளுடன் மித்திரசித்து அவ்விரதத்தை ஆச்சிரயித்தான். எ-று. (அ)

நோற்றலு மகிழ்ந்து தோன்று மலைமக டன்னை நோக்கித்
தோற்றிய ஞான்று தன்னிற் றுறக்கமுற் றிவண்மீண் டெய்து
மாற்றலின் வனப்பின் மிக்க காளையாம் பருவ மாகி
நீற்ஜெளி பழுத்த மேனி நிமலனுக் கன்ப ஞகி.

(இ-ள்.) அவ்விருவரும் நோற்கவும், களிப்புற்றுப் பிரசன்னமாகிய பார்வதிதேவியாரைப்பார்த்து, உதித்ததினத்திலேயே மோக்ஷலோகஞ் சென்று திரும்பவும் இவ்விடத்திற்குவரும் வல்லமையினும் சௌந்தர்யத்தினும் மேம்பட்ட காளைப்பருவமடைந்து, திருவெண்ணீற்றின் பிரகாசமிகுந்த திருமேனிவாய்ந்த மலரகிதராகிய சிவபெருமானுக்குப் பக்தனுகி. எ-று.

இதுமுத விரண்டுபாடல்கள் குளகம். (௯)

விளங்குமோர் புதல்வன் றன்னை யளித்திடல் வேண்டு மென்ன
வுளங்கனிந் தன்னை நல்கி யுயரிரு விசும்பிற் போஞ
ளிளங்களி வரிவண் டார்க்கு மீர்ங்குழல் கருப்ப மெய்தி
வளங்கெழு மூல நாளின் மைந்தனை யினிதி னீன்ருள்.

(இ-ள்.) விளங்கத்தக்க ஒருமைந்தனை அநுக்கிரகஞ் செய்யவேண்டும் என்று பிரார்த்திக்க, (சர்வலோகங்கட்குந்) தாயாகியசங்கரியார் மனமுருகி (அவ்

வாறே வரம்) பாலித்து உயர்வாகிய பெரிய தேவலோகஞ் சென்றனர். இளமைவாய்ந்த களித்த வண்டுகளொலிக்கும் குளிர்ந்த (மலர்மாலையணிந்த) கூந்தலையுடைய மலையகந்தினிகருப்பக்குறி யடைந்து, வளப்ப மிகுந்த மூலநக்ஷத்திரத்தில் இனிதாகப் புத்திரனைப் பெற்றனள். எ-று. (கo)

கணிகரிம் மைந்தன் வைகிற் காவல னிறக்கு மென்னப்
பிணிமுறுக் குடைந்து தீந்தேன் பெய்ம்மலக் கோதை மாழ்கிப்
பணியர வல்கு லல்லீர் பஞ்சமுத் திரையாம் பீடத்
தணிகெழு விகடை கையி னிம்மக வளித்தி ரென்றாள்.

(இ-ள்.) (சோதிடராகிய திதி - வாரம் - நக்ஷத்திரம் - யோகம் - கரணம் ஆகிய ஐந்தின் பலனையுங்) கணக்கிட்டு (பலன்) கூறுவோர் இப் புத்திரன் ஜீவித்திருப்பானாகில் அரசனிறப்பான் என்று சொல்ல, பிணிப்பாகிய முறுக்குக ளவிழ்ந்து மதுரமாகிய தேனைச் சொரியும் மலரணிந்த கூந்தலையுடைய மலையகந்தினி மனம்வருந்தி (தோழியரைப் பார்த்து) பாம்பின் படம்போன்ற கடிதடமமைந்த மாதர்களே ! இச்சிசுவைப் பஞ்சமுத்திரைப்பீடத்திலே அழகுவிளங்கும் விகடையென்னுஞ் சத்திகையிற் கொடுப்பீராக வென்றனள். எ-று. (கக)

மழைமதர் நெடுங்கண் சோர வருமுலை பொழிந்த தீம்பா
லிழைதவழ் புதல்வன் மேனி யெங்கணு நனைப்ப வீன்ற
குழவியைக் கொடுப்ப வாங்கிக் கோதையர் விரைவி னேகி
விழைவன யாவு நல்கும் விகடைமுன் வைத்து மீண்டார்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய மதர்த்த நெடிய கண்கள் (நீர்) சோரவும், வளர்கின்ற தனங்கள் சொரிந்த மதுரமாகிய பாலானது ஆபரணம் விளங்கும் புத்திரனது சரீரமுழுவதையும் நனைக்கவும், (மலையகந்தினி தான்) பெற்ற மைந்தனைக் கொடுக்க, அத்தோழியர் வாங்கிக்கொண்டு விரைந்துசென்று, விரும்பிய வரங்களை யெல்லாங் கொடுக்கும் விகடை (யென்னும் சத்திவீற்றிருக்கும் பீடத்தின்) முன்வைத்து வந்துவிட்டனர். எ-று. (கஉ)

அருள்பொழி விகடை யந்த வரும்பெறற் புதல்வன் றன்னைப்
பரவுயோ கினிகள் கையிற் கொடுத்துநீர் பரிவி னோடு
மிருவிசும் புறையு மாத ரெழுவர்பா லெய்தி யன்னா
ருரையினை யறிந்து வம்மி னென்றலு முவந்து போனார்

(இ-ள்.) கிருபை பொழிகின்ற விகடாசத்தி பெறுதற்கரிய அந்தப்புத்திரனை, துதிக்கத்தக்க யோகினிமாதர்கையிற் கொடுத்து நீங்கள் அன்புடனே பெரியதேவலோகத்தில் வசிக்குஞ் சப்தமாதர்களிடஞ் சென்று, அவர்களது வாய்மொழியைத் தெரிந்து வாருங்களென்று கூறவும், (அவ் யோகினிகள்) களித்துச் சென்றார்கள். எ-று.

சத்தமாதர்களாவார்:—அபிராமி-மாயேஸ்வரி-கௌமாரி-நாராயணி-வராகி இந்திராணி-காளி என்பார். (கங)

போயவ ரெழுவர் கையிற் புதல்வனைக் கொடுத்த லோடு
மேயவப் புதல்வன் மெய்யி லிலக்கணங் கிடக்கை நோக்கி
மாயிரு ஞாலங் காக்கு மன்னவ னுகு நீரிச்
சேயினை முன்னர் வைகும் பீடிகை சேர்த்து கென்றார்.

(இ-ள்.) (அவ்வாறே குழந்தையை யெடுத்துக்கொண்டு) போன யோகினிப்பெண்கள் சத்தமாதர்கள்கையிற் புத்திரனைக்கொடுக்கவும், (அழகு) பொருந்திய அப்புதல்வனது சரீரத்தில் நல்லிலக்ஷணங்கள் இருப்பதைப்பார்த்து (இப்பிள்ளை) பெருமைதங்கிய பெரிய உலகத்தை ரட்சிக்கும அரசனாகும் (ஆதலால்) நீங்கள் இச்சிறுவனை முன்னிருந்த விகடாபீடத்திற் சேர்ப்பீராகவென்று சொன்னார்கள்.

தாளதா மரையின் மேவுந் தாக்கணங் கனையார் மீண்டு
வாளொளி விரிக்குஞ் செம்பொற் பீடமேல் வைத்தலோடுங்
காளையாம பருவ மெய்திக் கன்னல்வில் லொளித்து வந்த
வேளென வுலகம் யாவு மேத்திட விளங்கி னானே.

(இ-ள்.) நாளத்தையுடைய தாமரைமலரில் வீற்றிருக்குந் திருமகள்போன்ற அவ யோகினிப்பெண்கள் பேரொளிவீசும் செவ்விய பொன்போன்ற விகடாபீடத்தின்மேல் திரும்பவும் (அப்பிள்ளையை) வைக்கவும், காளைப்பருவமடைந்து கரும்புவில்லை மறைத்துப் போந்த மன்மதன்போல உலகததிலுள்ளோரெல்லாம் துதிக்கும்படி விளங்கினான். (அச் சிறுவன்) எ-று. (கரு)

ஆலைபாய் துழனி தன்னி லாய்பிழி தூற்று தண்பூஞ்
சோலைவாய் மலரின் வைகுந் தூங்கிசை வண்டுந் தேனு
மாலைவா யவிழ்ந்த வாமபல் மலரிடை யொளிக்குங் கன்னல்
வேலிசூழ் காசி தன்னில் மெய்த்தவ மாற்றி னானே.

(இ-ள்.) கரும்பாலைகள் பாய்கின்ற இரைச்சலால், ஆராய்கின்ற தேனைச் சிந்துங் குளிர்ச்சிதங்கிய அழகிய சோலையிற் பொருந்திய புட்பங்களில் வாழ்கின்ற இசைபாடும் வண்டுகளும் தேனும் வரிசையாக விகசித்த அல்லிமலரில் மறைந்து வசிக்கத்தக்க கரும்புவேலிகள் (நாற்புறமுஞ்) சூழ்ந்து விளங்குங் காசிக்ஷேத்திரத்திலே அரிதாகிய தவத்தைச்செய்தனன (அச்சிறுவன.) எ-று. (கசு)

அருந்தவக் கிழமை நோக்கி யண்ணலஞ் சுரும்புந் தேனும்
விருந்தயர் கொன்றை நாறும விரிசடைப பெருமா னெய்திப்
புரிந்தநின் றவத்தா லன்பு பூத்தனம் விழைந்து கேட்ட
வரந்தரு குவமென் றோத மைந்தனு மகிழ்ந்து சொல்வான்.

(இ-ள்.) பெருமைபொருந்திய அழகிய சுரும்பும் தேனும் விருந்துண்ணத்தக்க கொன்றைமலர் மணம்வீசும பரந்த சடையையுடைய சிவபெருமான் அருமையாகிய (அசசிறுவனது) தவவுரிமையைப் பார்த்து ஆண் டடைந்து, (இதுகாறுஞ்) செய்தஉனது தவததிற்கு அன்புமிகுந்தோம். விரும்பிக்கேட்ட வரங்களைப் பிரசாதிப்போம் என்று திருவாய்மலர்ந்தருள, அச்சிறுவனுங் களித்து விண்ணப்பிக்கின்றான். எ-று. (கஎ)

புனிற்றிளந் திங்கட் கணணிப் பூஞ்சடைப் புனித கேட்டி
தனிச்சுட ராய வினன விலிங்கத்திற் றழைந்த வன்பாற்
பனிப்பிறை வடந்தாழ் கொமமை வனமுலைப் பனாயி ஞோடு
மனைத்துல கமுகின் றேத்த வமர்ந்திடல் வேண்டு மென்ருன்.

(இ-ள்.) இளம்பிறைச்சந்திரனை மாலையாகவணிந்த அழகிய சடையையுடைய சிவபெருமானே! கேட்பீராக; ஒப்பற்ற சுடர்வடிவாகிய இந்தச் சிவலிங்கக்குறியில் மிகுந்த அனபோடு,குளிச்சியைவீசுகின்ற (முத்து) மாலையணிந்த குவிவாகிய அழகிய தனங்களையுடைய உமாபிராட்டியாருடன் சர்வலோகமுந் துதிசெய்யும்படி எழுந்தருளியிருததல் வேண்டும் என்று விண்ணப்பித்தான். எ-று.

பனிப்பிறைவடம் என்பதற்கு, குளிர்ந்த பிறைச்சந்திரன் போன்ற முத்து வடம் எனப் பொருள்கூறினும் பொருந்தும். அது வெண்மையாய்ப் பிறைச்சந்திரன்போல வளைவுற்றிருத்தலி னெனக. (௧அ)

அண்ணலிவ் விலிங்கந் தனனி லமர்வன்யா னிதன்பேர் யாரு
நண்ணும்வீ ரேச னென்றே நவில்கவிக் காசி தன்னின்
மண்ணுறு தீர்த்த கோடி வயங்கொளி விரித்துத் தோன்று
மெண்ணறு மிலிங்கம் யாவு மிதற்கிணை யியம்பொ ணுவால்.

(இ-ள்.) பெருமைதங்கிய இச்சிவலிங்கமூர்த்தத்தில் யாம்வீற்றிருப்பேம்; இதன் திருநாமத்தை யாவரும விரும்புகின்ற வீரேசனென்று சொல்லக்கடவர்; இக் காசிக்ஷேத்திரத்தில் அழகு பொருந்திய கணக்கில்லாத தீர்த்தங்கள் - விளங்குகின்ற பிரகாசம்பொருந்தித்தோன்றும் எண்ணில்லாத சிவலிங்கக்குறிகள் முதலிய எவையும் இவ்வீரேசலிங்கத்திற்கு ஒப்புசொல்லமுடியா. எ-று. (௧௯)

கொலைபழுத் தழல்வாய் காய்ந்து குருதிகொப் பளிக்கும் வேலோ
யலைகட லாடை சுற்றி யாயிரம படத்திற் றுஞ்சு
மலர்தலை யுலகம் யாவும் வரம்பிற ளளித்து மாயா
விலகொளி யாகி நின்ற வென்னுழை யுறைதி யென்ருன்.

(இ-ள்.) கொலைத்தொழில் மிகுந்து நெருப்பிற்காய்ந்து உதிரத்தைக்கக்குகின்ற வேலாயுதத்தையுடையாய்! அலைகள்பொருந்திய சமுத்திரத்தை ஆடையாகவுடுத்து (ஆதிசேடனது) ஆயிரம்பணமுடிகளின் பேரில் விளங்கும், இடமகன்ற வுலகமுழுவதும் எண்ணில்லாத காலமிறவாமற்காத்து விளங்குகின்ற கீர்த்தியுடன் வீற்றிருக்கும் என்னிடத்தில வாழக்கடவாய். எ-று. (௨௦)

வேறு.

போது லாமலர்க கொன்றைதாழ் புரிசடைப் புனித
வாதி கேசவ தீர்த்தமே முதலலை புரட்டு
தீதில் பூம்புனற் பகீரத தீர்த்தமீ ருக
வோது தீர்த்தமோரந் துறையென வமலனுண் டோத்தான்.

(இ-ள்.) காலத்தில் மெல்ல மலர்கின்ற கொன்றைமலராகிய மாலைசூடிய புரிந்த சடையையுடைய சிவபெருமானே! ஆதிகேசவதீர்த்தம் முதலாக அலைவீ

சுங் குற்றமில்லாத அழகிய நீரையுடைய பகீரததீர்த்த மிறுதியாகச் சொல்லத்தக்க தீர்த்தங்களைக் கண்கிட்டுரைக்க வேண்டுமென்று (உமாதேவியார்) கேட்க, சிவபிரான் திருவாய்மலர்ந்தருளுவர். எ-று. (உக)

வீரேசன் றோன்றிய அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ0கசு.

உ

சிவமயம்.

எண்பத்துநான்காவது,

## துருவாசர் வரம்பெற்ற அத்தியாயம்.

சொன்னமறை யின்பொரு டுணிந்துரை செயென்ன
வன்னமிவர் வேதனை யருஞ்சிறையில் வைத்தோன்
தென்வரையின் மீதிலுறை தெய்வமுனி யன்புற்
றின்னுமொரு காதைநனி கேளென விசைப்பான்.

(இ-ள்.) (அவனாற்) சொல்லிய வேதத்தின் (உண்மைப்) பொருளைத் தீர்மானித்துச் சொல்கவென்று, அன்னவாகனத்தி லேறுகின்ற பிரமதேவனை (வினாவி, அவன் அஃதுணராமையால்) அரிய சிறையிலிட்ட ஸ்ரீ முருகப்பிரான் பொதியமலையின்மேல் வாழ்கின்ற தெய்வீகம்பொருந்திய அகத்தியமுனிவனே! ஆசைகொண்டு இன்னுமொரு சரிதத்தை நீ நன்றாகக் கேட்பாயாகவென்று திருவாய் மலர்ந்தருளுகின்றார். எ-று.

வேதம் ஈப்வரவாக்கியமாக விருப்பினும் அறுமுகப்பெருமான் அயனை நோக்கி நினக்கு வேதம்வருமோவென வினவியபொழுது, பிரமன் அறிவே னென்றுரைத்த அந்தக் காரணத்தினால், "சொன்ன" என்றும், வேதம் சில கீழ்மக்கட்கு மறை பொருளாகப் போற்றப்படுதலின் அதனை "மறை" என்றும், ஒரு நூல்கற்போனே அதன்பொருளை யுணரவேண்டுதலின், பாராயணஞ் செய்து படைப்புத் தொழில் புரியும் பதுமனாகிய நீ அதனபொருளை யிசைத்தல் அதிக அவசியமென்பார் "மறையின் பொருடுணிந்துரைசெய்" என்றும், பிரமதேவன் தனக்கு வாகனமாக அன்னப்பறவையைப் பெற்றோனும், நானகு திருமுகங்களிலுள்ள நானகு வாய்களால் நான்குவேதத்தையும் நவின்றோனுதலாலும "அன்னமிவா வேதனை" என்றும், அவ்வாறு வினவியபொழுது அஃதறியாது மயஙகிய அலரோனை 'குட்டினைய நான்குமாமுகங்களுங் குலுங்க' எனவும், "காலிற்றளைபூட்டி" எனவுங்கூறும் கந்தபுராணத்தின்படி, சிரநான்கு குலுங்கக்குட்டித் தாளாலுதைத்துக் காலில் விலங்கிட்டுக் கடுஞ்சிறைபுகுவித்தவர் கந்தசுவாமியாதலின் அவரை "வேதனையருஞ் சிறையில்வைத்தோன்" எனவும், உமாதேவியார் பர்வதராஜபுத்திரியாகத் திருக்கோலங் கொண்டபொழுது அத்தேவியாரைத் திருமணம்புரியச் சிவபிரான்

சர்வாடம்பர பூரவமாய்ச் சமஸ்ததேவா முனிவர் முதலானோருடன் இமயமலைசேர வடமுனைதாழ்ந்து தென்றிசையுயர்ந்தும் உலகழியு நிலையாகவுற்றது கருதி அவவிடரொழியும்வண்ணம் அகஸ்தியமுனிவனை நோக்கி நீ தென்றிசையெய்தின் உலகு பண்டுபோலாமெனப் பணிப்ப அவர் கட்டளைகடவாராய்ப் பாண்டிநாடுறு. பொதியாசலத்தமர்ந்தன ராதலின் அவ்வகத்தியபகவானை "தென்வரையினமீதுறைமுனி" என்றும், அகஸ்தியர் ஏனைய இருடியர்போலின்றி விந்தகிரியையடக்கியும், வாதாவிவில்வலனைச் சங்கரித்தும், குற்றாலத்துத் திருமாலைப்பெருமான வடிவாக்கியும், இந்திரன வேண்டுகோளுக்கிரங்கிக் கடலேழையுங் கையிலேற்று ஆசமனீயஞ்செய்தும், தமிழ்க்கடவுளாகியும், இத்யாதி பல அற்புதங்களைச்செய்தும் விளங்குதலின் "தெய்வமுனி" என்றும், சிவசரிதங்களைச் சிரவணஞ்செய்வோா அன்பின்மனமாய் மனமுருகி நிற்கவேண்டுதலின் "அன்புற்று" என்றும், இதன முன்னர் பலசரிதங்களைக் கேட்டிருத்தலின் "இன்னுமொரு காதை" என்றும், இதையும் நன்குகக்கேட்கவேண்டுமென்று திருவாய்மலாந்தருளினமையின் "நனிகேளெனவிசைப்பான" என்றுங் கூறினார்.

இச்செய்யுளிலுள்ள சரிதங்கள் முன்னும்பின்னும் விரவிக்கிடந்தனவாதலின ஆங்குக் கண்டுகொள்க. (க)

பாசடை மலர்ப்பழன வாளைகுதி பாய
வாசினி வருக்கைபி னிழிந்துசுளை வீழுங்
காசிநக ரின்பெருமை கண்டுளம் வியந்து
மாசடை வனைந்ததுரு வாசனவண் வந்தான்.

(இ-ள்.) பசுமையாகிய இலைகளையுடைய மலர்கள்பொருந்திய வயல்களிலுள்ள வாளைமீன்கள் குதித்துப்பாய்தலால் பலாமரங்கள் வான்மழையைப்போல சுளைகளைவீழ்த்துகின்ற காசிப்பட்டணத்தின் சிறப்பைப்பார்த்து மனங்களித்து,பெரிய சடையைதரித்த துருவாசமுனிவர் அவ்விடத்திற்கு வந்தார். எ-று. (உ)

ஈசனுறை யாலய மியற்றிமகிழ் வோடு
மாசற விளங்குமொரி லிங்கமும மைத்துப்
பூசனை புரிந்தினிது போற்றியுல கேத்தத்
தேசுடை முனிக்கடவுள் செய்தவ மிழைத்தான்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருக்கத்தக்க திருச்சந்நிதான மொன்றுண்டு செய்து சந்தோஷத்துடனே விளங்குகின்ற ஓர் சிவலிங்கக்குறியையும் அதிற்பிரதிட்டைசெய்து (பெருமானை) அருச்சித்து, இனிதாகத்துதித்து உலகினர் பரவும்படி ஞானம்பொருந்திய தெய்வீகமடைந்த துருவாசமுனிவர் செய்யத்தக்க தவத்தைச் செய்தனர். எ-று.

இச் செய்யுளின்படியே.

"கருவாசனைகடக்குங்காசிநகாத்தனனில
துருவாசவேதமுனிதொல்லாகமத்தின
பெருவாய்மையாற்றனபெயாவிளங்கவீசன
ஒருவாவிலிங்கவொளியுருவங்கண்டான்." —என்றார் பரஞ்சோதி முனிவர்திருவிளையாடற் புராணத்தில். (ங)

ஆயிர நெடும்பக லருந்தவ மிழைத்தும
பாயும்விடை வானவன வெளிப்படுதல் காணுன
தீயொழுகு வெவ்விழி சிவந்துபுகை மண்டக்
காய்சினமிகுத்துமுனி காசியை முனிந்தான.

(இ-ள்.) நெடிய ஆயிரநாகாலம் செய்தற்கருமையாகிய தவத்தைச்செய்தும், பாய்ந்து செல்லும் வேகத்தையுடைய இடபவாகனராகிய சிவபெருமான் பிரத்தியட்சமாதலைப் பெறுராகி, நெருப்புப்பொறிகள் சிதறும் கொடிய கண்கள் செவப்புற்று, புகைமிகும்படி பொங்குகின்ற கோபமதிகரித்துத் துருவாசமுனிவர் காசிக்ஷேத்திரத்தைக் கோபித்தார். எ-று. (ச)

புகைப்படலம் விண்ணகர் புதைப்பமற மெய்தா
வெகுட்சியி னெழுந்துரைசெய் மெய்த்தவனை நோக்கி
வகுத்தவன் வணங்கிய விலிங்கமகிழ் கூர
நகைப்பநகை யீசனென நாமநவில் கின்றார்.

(இ-ள்.) புகைவரிசை தேவலோகத்தை மறைக்கப் பிணக்குற்றுக்கோபத்தோ டெழுந்து கூறுகின்ற உண்மையாகிய தவத்தையுடைய துருவாசமுனிவனைப்பார்த்து, அவன் பிரதிஷ்டைசெய்து துதித்த சிவலிங்கக்குறியானது சந்தோஷமிகும்படி சிரித்தகாரணத்தினுலே நகையீசனென்று (மேலோர் அதற்குப்) பெயர் கூறுகின்றனர். எ-று. (ரு)

முத்தியருள் காசியை முனிந்தமுனி யாவி
துய்த்திடுது மென்றுகண நாதர்நனி துன்னிக்
கைத்தல மெடுத்தன ரெதிர்ந்திடுதல காணு
மைத்தவழ் மிடற்றிறை விலக்கினன் வழுஙகும்.

(இ-ள்.) மோட்சத்தைப்பாலிக்கும் காசிநகரத்தைக் கோபித்த துருவாசமுனிவருயிரை யுண்போமென்று சிவகணத்தலைவர்கள் நெருங்கிக் கூடி, தமது கைகளைத்தூக்கி எதிர்க்கச்செல்வதைக் கண்டு கருநிறம் விளங்கும் ஸ்ரீ கண்டத்தையுடைய சிவபெருமான் அவர்களைவிலக்கித் திருவாய்மலர்ந்தருளுவர். எ-று.

எண்ணரிய மாதவ மிழைத்தமுனி கேண்மோ
நண்ணரிய காசியைமு னிந்துவிடல நம்பால
கண்ணிய வரந்தருது மென்றுகதி ருக்கட்
புண்ணவ னுரைபபமுனி வர்க்கிறை பழிச்சி.

(இ-ள்.) நினைத்தற்கு அருமையான சிறந்த தவத்தைச்செய்த துருவாசமுனிவனே! கேட்பாயாக. சேருதற்கரிதாகிய காசிநகரத்தை முனிந்துவிடாதே; நம்மிடத்தில் (நீ யடையவேண்டுமென்று) நினைத்தவரத்தைக் கடாட்சிப்போம் என்று, பிரகாசிக்கின்ற திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளவும், முனிவர் தலைவராகிய துருவாசமுனிவர் துதிசெய்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (எ)

காசியைமு னிந்ததனை நாணிமெய்க லங்கி
மாசறும திக்குழவி வைத்தசடை யெம்மா
னேசலுறு தீவினை யிழைத்ததுபொ றுக்கென்
றூசில்முனி வன்புகல வண்ண லுரை செய்வான்.

(இ-ள்.) காசிநகரத்தைச் சினந்த காரணத்தால் நாணமுற்று மனக்கலக்க மெய்தி, களங்கமற்ற பிறைச்சந்திரனைச் சூடிய சடைமுடியையுடைய எமது சிவ பெருமானே! யான் ஏசுதல்பொருந்திய பாவச்செயல் புரிந்ததை மனம்பொறுக்க வேண்டுமென்று, குற்றமில்லாத துருவாசமுனிவர் விண்ணப்பிக்க, சிவபிரான் திருவாய்மலர்ந்தருளுவர். எ-று. (அ)

நீயினித மைத்தருளி லிங்கநிக ரற்றோ
யேயபெயர் காமநலி லிங்கமென லாக
மேயமடு வன்னபெயர் மேவுகவெ னாமுன்
பாயும்விடை மீதிவர் பண்ணவன் மறைந்தான்.

(இ-ள்.) சமானமற்ற துருவாசமுனிவனே! நீ இனிதாகப் பிரதிட்டைசெ ய்தருளிய சிவலிங்கக்குறிக்குப் பொருந்திய திருநாமம் நல்ல காமலிங்கம் என்று சொல்லுவதாக; பொருந்திய தீர்த்தமும் (காமமடுவென்று) அத்தகைப்பெயரையே அடைகவென்று அனுக்கிரகித்து உடனே பாய்ந்து செல்லும் ரிஷபவாகனத்தையு டைய சிவபெருமான் அந்தர்த்தானமாயினர். எ-று. (கூ)

மிக்கசனி வாரமதின் மேவுபதின் மூன்றும்
பக்கமுறு கங்குல்முக மென்புனல் படிந்து
முக்கணம லன்சரண முன்னினர் வணங்கிற்
செக்கமல மென்னவொளிர் செய்யகழல் சேர்வார்.

(இ-ள்.) சிறப்புமிகுந்த சனிவாரத்தில் திரயோதசித்திதிபொருந்திய மா லையில், மெல்லிய (காமமடுத்) தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து மூன்றுகண்களையு டைய மலரகிதனாகிய சிவபெருமானது திருவடியைத் துதித்துவணங்கினால் செந் தாமரைமலர்போலும் விளங்குகின்ற செவ்விய (அப்பெருமானது) திருவடிநீழலிற் கலப்பார்கள். எ-று. (க0)

சனிப்பிரதோஷ மகிமையைப் பிரமோத்தரகாண்டத்திற் பரக்ககாண்க.

துருவாசர் வரம்பெற்ற அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ0உகூ.

---

சிவமயம்.

எண்பத்தைந்தாவது,

## விச்சுவகன்மேசலிங்கந் தோன்றிய அத்தியாயம்.

உயர்விச்சுவ கருமேசனி யற்கதையு ரைத்து
மயிலொத்திரு குழைமேவி யலைக்குங்கய லுண்கண்
முயலற்றொளிர் மதிவாணுதல் முகிழ்மென்முலை யென்றுக்
கயிலைத்தட வரைமீதுறை கருணைக்கடல் கூறும்.

(இ-ள்.) வேற்படை போன்று இருகுண்டலங்களைப் பொருந்தி, அலைக்கின்ற கயற்கொண்டையை வென்ற கண்ணையும், முயற்களங்க மொழிந்து பிரகாசிக்கின்றசந்திரன்போன்ற வெள்ளிய நெற்றியையும் அரும்புகின்ற மெல்லிய தனங்களையுமுடைய உமையே! உயர்வாகிய விச்சுவகன்மேசலிங்கத்தினது (பெருமை) பொருந்திய சரித்திரத்தைக் கூறுவாம் என்று திருக்கைலாயமாகிய விசாலமான பர்வதத்தின்பேரில் வீற்றிருக்குங் கிருபாசமுத்திரமாகிய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளுகின்றார். எ-று. (க)

மலரோனிகர் தோட்டாவருள் மகன்வானிக ரெனவே
பலர்கேள்வியன மறைநூலின ஞசானடி பேணிக்
கலையாவையும வளர்திங்களின் விதியிற்பயில காலைப்
புலனைந்தையு நெறியுய்த்திடு மாசானிவை புகல்வான்.

(இ-ள்.) பிரமதேவனை யொத்த தோட்டா வென்பவன் பெற்ற மைந்தன்; ஆகாயத்தை யனைய பரந்த நூற்கேள்வி யுடையவன்; வேதப்பொருள் உணர்ந்தவன்; ஆசிரியனது திருவடிகளைப்பணிந்து, சாஸ்திரங்க ளெல்லாவற்றையும் வளர்பிறைச் சந்திரன்போலப் பழகிவருகையில், ஐம்புலன்களையும் நல்வழியில் (ஒருங்கு) செலுத்திய ஆசான் இவ்வகையாகக் கூறுகினறார். எ-று.

தோட்டாவென்பது த்வஷ்டாவென்றும் வடமொழித்திரிபு. (உ)

புனையுஞ்சுடு மண்ணானனி புனைவித்தெழி றிகழப
பனிநீண்மழை யணுகாதொளி பழகாதுயர் வாக
வினையினறிறம வலலோர்கள்வி யப்புற்றனர் கூற
மனையொன்றுவ குப்பாயென மறையோனுரை செய்தான்.

(இ-ள்.) அலங்கரிக்கின்ற சுடுமண்ணினாலே அழகுவிளங்க நன்றாக வியப்பப்பட்டு, பனி-நெடிய (தாரையாகச்சொரியும்) மழை (முதலியன) பெய்யாமலும், (சூரியசந்திராதி) சுடர்கள் சஞ்சரியாம லுயர்வாகவும், சிற்பத்தொழிலிற் றேர்ச்சியுற்றவர்கள் ஆச்சரியப்பட்டுச் சொல்லவும் ஓர் வீட்டினை யியற்றித் தருகவென்று வேதியனாகிய குரு கூறினன். எ-று. (ங)

துளிதூங்கிய குளிர்காலையில வெச்சென்றுயர் தருமென்
றளிரீன்றிடு வேனிற்கடை தணணென்றமர் குவதாய்க்
களிசேர்ந்திட வணிகஞ்சுக மருள்வாயெனக் கரைந்தா
ளளிசோதர மறைதோதரு மாசானுயர் மனையாள்.

(இ - ள்.) பனித்துளிகள் சிந்தும குளிர்காலத்திலே சுடுகையாயும் உயர் வாகிய மரங்கள் தளிர்களை விடுகின்ற வேனிற்காலத்திலே குளிர்ச்சியாயும் இருப்ப தாய்ச் சந்தோஷமுண்டாக அணியத்தக்க ஓர் கஞ்சுகத்தை எனக்குக் கொடுப்டா யென்று கிருபையுண்டாகும்படி வேதங்களில் தோந்த பிரகஸ்பதி முனிவரது மனை வியாகிய தாரை கேட்டனள். எ-று.

கஞ்சுகம் = சட்டை ; ஈண்டு ரவிக்கை எனக்கொள்க (௫)

பாரின்மிகை செல்கின்றதொர் பரிசாமென வொழுகு
நீரின்மிசை செலவுஞ்செலிற் சேற்றின்னிலை பெறவும
வாரின்றியு நெகிழாமர வடிகல்குதி யென்றான்
கூர்கேள்வியன் மறைதேர்தரு குரவன்றிரு மகனே.

(இ-ள்.) தரையின்மேல் நடக்கின்றதோர் தன்மைபோல ஓடுகின்ற சலத் தின்பேரிற் செல்லவும், (அவ்வாறு) சென்றால் சேற்றிலே (அழுந்தாது) நிலைபெற்று நிற்கவும், வாரில்லாமலிருப்பினும் காலினின்று நெகிழாத (தனமையும்வாய்ந்த) மிதியடியொன்றை யெனக்குக்கொடுவென்று கூர்மையாகிய நூற்கேள்வியையு டையவேதநூலாராய்ந்த ஆசாரிய குமாரன் சொல்லினன. எ-று. (௬)

கரமார்வளை மணிமேகலை யொருகாழணி முத்த
மெரியின்றியு மடுகின்றதொர் பசுமட்கல மெவையு
மொருதாருவி லொருகான்மிசை யுறையுந்தனி மனையுந்
தருகென்றனள் மறைதேர்தவ முனிவன்பெறு தையல.

(இ-ள்.) அத்தங்களி லணியத்தக்க வளையல்-மணிகளாலாகிய மேகலாபர ணம் - அழகிய ஒப்பற்ற ஆணிமுத்து-நெருப்பில்லாமலுஞ் சமையல் செய்யத்தக்க ஒரு மட்பாத்திரமுதலிய வெல்லாமமைந்த ஒருமரத்தில் ஒருகாலினமேல்வசிக்கும் வீடு ஆகிய இவற்றைக் கொடுக்கவேண்டுமென்று வேதமுணர்ந்த பிரகற்பதி முனி வர் குமாரி கூறினள். -எ-று. (௭

இவ்வாறவர் மொழிகின்றவை யெவையும்பழு தின்றி
யவ்வாறினி தருள்கின்றன னெனவோதின னாகி
வெவ்வாயர வரிமானுறை கானிற்றனி மேவி
யொவ்வாததை யெவ்வாறருள் வோமென்னவு ணர்ந்தான்.

(இ-ள்.) இவவகையாக அவர்கள் கூறுகின்றவை யெல்லாவற்றையும் தவ றில்லாமல், அவ்வண்ணமே நன்றாகக் கொடுக்கின்றேன் என்று சொன்னவனாய், கொடிய வாயையுடைய சர்ப்பங்களும் சிங்கங்களும் வசிக்கத்தக்க வனத்திற்கு ஒன்றியாகச்சென்று (செய்துமுடிக்கச்) சாத்தியப்படாத பொருள்களை யெத் தன்மையாகக் கொடுப்போமென்று அவன் ஆலோசித்தனன். எ-று. (௭)

மாசற்றவன் மருளெய்தவொர் மறைமாமுனி யெய்தி
யாசுற்றதென் மதலாயென் வவனுற்றனவ யறையக்
காசிப்பதி தனின்மேவிய கருணைக்கட லாகு
மீசற்றொழி னல்லாதிவை யெய்தப்பெற லாமே.

(இ-ள்.) களங்க மற்றவனாகிய அவன் மயங்கி யிருக்கவும், வேதங்களில் வல்ல ஓர் முனிவர் ஆண்டடைந்து, குழந்தாய்! வருத்தமுற்றது யாது காரணம்? என்று வினவ, அச்சிறுவன் நடந்த வரலாற்றைச்சாற்ற, காசிக்ஷேத்திரத்தில் வீற்றிருக்கின்ற கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீ விச்சுவநாதப் பெருமானைப் பணிந்தாலல்லாமல் இத்தகைய பொருள்களை அடையக்கூடுமோ. எ-று. (௯)

பாலுக்கழு சிறுவற்குயர் பாலாழி யளிக்குஞ்
சூலப்படை முதலவன்கழல் தொழவேகுதி யெனலுஞ்
சால்புற்றரு மறைநூல்பயில் தவமாமுனி யோடுங்
காலப்புயல வறவாதுயர் காசிப்பதி யுற்றான்.

(இ-ள்.) (காமதேனுவினிடம் தானருந்திய) பால் வேட்கையால் புலம்பிய (வியாக்கிரபாத முனிவர் பிள்ளையாகிய) உபமன்னியருக்கு உயர்வாகிய திருப்பாற்கடலைப் பிரசாதித்த சூலாயுதத்தையுடைய சிவபெருமானது திருவடிகளைப் பணியும்படி செல்கவென்று கூறவும், அரிய வேதநூல்களை மிக்குப் பழகிய சிறந்த தவத்தையுடைய அம்முனிவருடன, காலமழை தவறாமல் (வருஷித்து வளங்கள்) மிகுகின்ற காசிநகரத்தை யடைந்தனன். எ-று. (௯)

கரைகொன்றெறி திரைசிந்திய கங்கைப்புன லாடி
யரிநான்முக னிமையோர்தொழு சிவலிங்கம மைத்து
நரைசேர்விடை யிவர்வேதிய ஞமங்கண விறதி
விரைநாண்மலர் தூவித்தவம் விழைவோடு புரிந்தான்.

(இ-ள். கரையைக்கரைத்து வீசுகின்ற அலைகளை யெறியும் கங்கையாற்றின் சலத்தில் மூழ்கி, திருமால் - பிரமன் - தேவர்கள் (முதலானோர்) பணியத்தக்க சிவலிங்கக் குறியைப் பிரதிட்டைசெய்து, வெண்மைவாய்ந்த இடபத்தை யாரோகணிக்கும் சிவபிரானது திருநாமங்களை யுச்சரித்து மணம்பொருந்திய புதிய மலர்களானருச்சித்து ஆசையுடனே தவஞ்செய்தனன் (விச்சுவகன்மன்.) எ-று. (௧0)

செய்யுந்தவ நெறிகண்டுயர் திருமாலய னறியா
வையன்றவ நெறிபோகிய சிறுவன்முன மணுகி
யெய்துந்தவ மொழிநல்குதும் விழைகின்றவை யென்ன
வையம்புகல் தொழில்யாவையும் வலைவானருள் கென்றான்.

(இ-ள்.) உயர்வாகிய விஷ்ணு மூர்த்தியும் பிரமதேவனும கண்டறியாத சிவபெருமான் (விச்சுவகன்மன்) செய்யுந் தவமார்க்கத்தைப் பார்த்து, தவமார்க்கத்திற்சென்ற சிறுவனாகிய விஸ்வகன்மன் முன்னடைந்து நீ புரியுந் தவச்செயலை விலக்கக்கடவாய்; விரும்பிய வரங்களைக் கொடுப்போம் என்று திருவாய்மலர்ந்தருளவும், உலகினர் கூறுந் தொழில்களையெல்லாம் சிருட்டி செய்வோனாகிய விச்சுவகன்மன் (அவ்வாறே) திருவருள் பாலிப்பீராக வென்றனன். எ-று. (௧௧)

மற்றோர்விதி யெனயாவையும் வகுக்குந்தொழில் தந்தேங்
கற்றோர்புகழ் தருவிச்சுவ கன்மன்னெனு நாம
முற்றாயுபா குரவன்மனை மகள்மைந்தனு வப்பாற்
சொற்றாரெவை யவையன்பொடு சோராமல ளித்தேம்,

(இ-ள்.) வேறோா பிரமதேவனென்று சொல்லும்படி எல்லாப் பொருள்களையுஞ் சிருஷ்டிக்குஞ் செயல்வன்மை யநுக்கிரகித்தோம்; கற்றறிந்தவர்கள் புகழ்கின்ற விஸ்வகன்மாவெனும் பெயர்பெற்றவனே! உயர்வாகிய குரு-குருபத்தினி-குரு குமாரத்தி - குருமைந்தன் (ஆகிய இவர்கள்) களிப்போடு என்ன சொன்னார்களோ அவற்றைக் குறைவுறமற் கிருபையுடனே கொடுத்தோம். எ-று. (௧௨)

மலரோனிகர் மதலாயிவண் வழிபட்டவி லிங்கத்
தலர்தூவினர் வினையாவும றுப்போமென நல்கி
யிலகாண்மலர் நிகர்வாய்மயி லொருபங்கிலி ருக்குங்
கலைநாண்மதி புனைவேணிய னவற்றாடு கரந்தான்.

(இ-ள்.) பதுமாசனனை யொப்பாகிய பாலா! இவ்விடத்தில் நீ வழிபாடு செய்த சிவலிங்க மூர்த்தத்தில் மலர்களா னருச்சித்தோரது தீவினைச் சம்பந்தங்களையெல்லாங் கட்டறுப்போம் என வரமளித்து, அன்றலர்ந்த இலவமலர்போன்ற வாயையுடைய மயிலின் சாயல்பொருந்திய உமாபிராட்டியார் ஒரு பாகத்திலிருக்கப்பெற்ற புதிய கலைகள் வளருஞ் சந்திரனைத்தரித்த சடையையுடைய சிவபெருமான் அச்சிவலிங்கக் குறியில் அந்தர்த்தான மாயினர். எ-று. (௧௩)

சிற்பத்தொழில் விதிபோகிய சிறுவன்கடி தேகி
யற்பிற்குரு முதலோர்தமை யலர்தூவிவ ணங்கிப்
பொற்புற்றிட நனிபன்னிய பொருள்யாவும்வ ழங்கிக்
கற்பத்தினு மழியாதுயர் காசிப்பதி யுற்றான்.

(இ-ள்.) சிற்பநூற்றொழில் செய்விதிகளில் தேர்ச்சியடைந்த சிறுவனாகிய விஸ்வகன்மா விரைந்துசென்று, அன்புடனே குரு முதலானவர்களை மலரணிந்து பணிந்து, அழகுபொருந்த நன்றாகக் கூறிய எல்லாப்பொருள்களையும் (அவரவர் விருப்பின்படி) கொடுத்து, கற்பகாலத்திலும் அழியாது உயருகின்ற காசிப்பட்டணத்தை (மீண்டும்) அடைந்தனன். எ-று. (௧௪)

ஈரேழென முன்னோதுமி லிங்கத்துறு காதை
வாரேறிள முலைமென்னகை மடவாயுரை செய்தேஞ்
சீர்சால்கதை கற்றோர்தெளி வுற்றோருரை செய்தோர்
பாரோர்தொழ வுயர்வாழ்வுப டைத்தோங்குவ ரென்றான்.

(இ-ள்.) பதினான்கென முன்னே (தொகைப்படுத்திக்) கூறிய சிவலிங்கங்களின் (புகழ்) பொருந்திய சரிதத்தை, கச்சணிந்த இளமை தங்கிய தனத்தையும் மெல்லிய தந்தபந்தியையுமுடைய வுமையே! உபதேசித்தோம். சிறப்புமிகுந்த

இச்சரிதங்களை வாசித்தோரும் தெளிந்தோரும் (பிறருக்கு) எடுத்துச் சொன்னோரும், சத்தலோகத்தாராலும் பணியும்படி உயர்வாகிய (மோக்ஷ) வாழ்வுற்று மேம்படுவோர்கள் என்று சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளினர். எ-று. (௪௫)

விச்சுவ கன்மேசலிங்கந் தோன்றிய அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ0௪௪.

எண்பத்தாறுவது,

## தக்கன் வேள்வி செய்த அத்தியாயம்.

இன்னுமீ ரேழுள லிங்க மென்றனை
யன்னவை யனைத்தினுட் டக்க னுற்றிய
மின்னிவ ரிலிங்கத்தின் கதைவி ளம்பெனத்
தொன்முனி கேட்டலு முருகன் சொல்லுமால்.

(இ-ள்.) இன்னும் பதினான்கு சிவலிங்கக் குறிகளிருக்கின்றன வென்று திருவாய்மலர்ந்தருளினீர்; அவை யெல்லாவற்றுள்ளும் தக்கன் பிரதிட்டைசெய்த மின்னலை வீசுஞ் சிவலிங்கமூர்த்தத்தின் சரிதத்தைத் திருவாய் மலர்ந்தருளவேண்டும் என்று, பழமையாகிய அகஸ்தியமுனிவர் கேட்கவும், ஸ்ரீ முருகக்கடவுள் உபதேசிக்கத் தொடங்கினர். எ-று. (௧)

அயிலெயிற் றழல்விழி யணங்க ராவணைத்
துயில்புரி பாசடைத் துளவ மாலொடு
முயர்விசும் புறைதரு தக்க னாதியோர்
புயறவழ் கயிலையம் பொருப்பி னெய்தினர்.

(இ-ள்.) கூர்மையாகிய பல்லையும், நெருப்பைச் சொரியும் விழியையுமுடைய துன்பத்தைச் செய்யுஞ் சேஷசயனத்தில் (யோக) நித்திரை புரியும் பசிய துளவமாலையணிந்த திருமாலுடன் உயர்வாகிய தேவலோகத்தில் வசிக்கின்ற தக்கன் முதலானவர்கள் (முன்னொரு காலத்தில்,) மேகங்கள் தவழ்கின்ற அழகிய கைலாயகிரியை யடைந்தனர். எ-று. (௨)

பாயொளிப் பருமணி முகடு வேய்ந்துயர்
வாயிலி னெய்தியெம் வரவு கூறென
நாயகற் றொழுதன னந்தி கூறலும்
நீயவர்த் தருகென நிகழ்த்தி னனரோ.

(இ-ள்.) பாய்கின்ற பிரகாசத்தையுடைய பருத்த நவமணிகளால் உச்சி மூடப்பட்டு உயர்ந்திருக்கின்ற திருவாயிலை யடைந்து எமது வருகையைத் (திருச்சந்நிதானத்தில்) தெரிவித்தருளவேண்டும் என்று (திருநந்தி தேவருடன்) செப்ப,

நந்தியெம்பெருமான் அவ்வாறே பரமபதியைப் பணிந்துவிண்ணப்பஞ் செய்யவும் சிவபிரான் நீ யவர்களைக்கொண்டு வருகவெனத் திருவாய் மலர்ந்தருளினர். எ-று

மாவடு நோக்கியோர் பங்கன் மாமலர்ச்
சேவடி தேவர்காள் பணியச் செல்கெனப்
பூவைபோன் மேனியான் முதல புங்கவ
ரியாவரு மடைந்தன ரிறைவற் போற்றினர்.

(இ-ள்) தேவர்களே! மாவடுவைப்போன்ற விழியையுடைய உமாபிராட்டியாரை ஓர் பாகமாகக்கொண்ட சிவபெருமானது சிறந்த மலர்போன்ற செவ்விய திருவடியைப் பணியும்படி செல்லக்கடவீர் என்று நந்தியெம்பெருமான் இசைக்கவும், காயாம் பூவைப்போன்ற திருமேனியையுடைய திருமால் முதலாகிய தேவர்களெல்லாரும் (மஹாசந்நிதானத்தினுட்) சென்று சிவபெருமானைத் துதித்தனர். எ-று. (ஊ)

கணணனை வருகெனக் கழறி னானல
ரண்ணலை நோக்குறா முடிய சைத்தன
னணணுவா சவற்கெதிர் முறுவ லலகினான்
விண்ணவா யாரையும விழியி னோக்கினான்

(இ-ள்.) (சிவபெருமான் அவ்வாறுவந்த தேவர்களில்) விஷ்ணுவை நோக்கி வருகவென்று வாய்மலர்ந்தருளினர். தாமரை மலரில வசிக்குஞ் சதுமுகனைத் திருக்கண்ணோக்கஞ் செய்து சிரமசைத்தனர். சமீபித்து வருகின்ற இந்திரனுக்கு எதிர்முகமாகத் திருப்புந்நகை புரிந்தனர். தேவர்களெல்லாரையும் தமது திருவிழியால் கடைக்கணித் தருளினர். எ-று.

இறைவர் இவ்வாறியற்றியது அவரவரது தாரதம்மிய பரிபாகத்திற்குத் தக்கபடி யெனக்கொள்க. (ஞ)

மேவலர்க் கடந்துவில் விழுங்கு வீங்குதோட்
பூவைபோல மேனியா யுந்தி பூத்திடு
மூவுல கனைத்தையு முறைபி றழ்ந்திடாக்
காவல்செய் தளித்தியோ களைக ணாயென்றான்.

(இ-ள்.) பகைஞரைச் செயித்து வில்லையடக்கிய பூரித்த புயங்களையுடைய காயாம்பூவையொத்த திருமேனிவாய்ந்த மாதவா! நினது உந்திக்கமலம் பூத்த மூவுலகமுழுவதையும் (எம்மாற்கூறிய வேத) முறைதவறாமல் ஆதரவாகநின்று காத்திரட்சிக்கின்றனையாஎன்று சிவபெருமான் வினவினர். எ-று.

வில்விழுங்கு வீங்குதோள் என்பது வில்லைத் தோளில்மாட்டி யிருப்பின் அஃது பூரித்த புயமாதலின் வில்லை வெளியே தெரியவொட்டாமல் மறைக்கவல்லதாதலின என்க. (சு)

ஐயநின் னருளினா லுலகம் யாவையு
மூய்யுமா றளித்தன னென்ன வோதினான்

மையணி மிடற்றிறை யருள மான்முத
லெய்தினோ ரியாவரும விடைகொண டேகினர்.

(இ-ள்.) ஐயனே! தேவரீரது திருவருளால் எல்லாவுலகங்களையும் உச்சிவி க்கும் வகையாகக் காத்து வருகின்றேனென்று (திருமால்) கூறினர், கருமை நிறம பொருந்திய அழகிய கண்டத்தையுடைய சிவபெருமான் (அவரவர்கள் எண்ணிய வரங்களை யெண்ணியவகையே) அநுக்கிரகஞ்செய்ய, அச்சுதன் முதலாக ஆண்ட டைந்த அமரரெல்லோரும் உத்திரவுபெற்று (தத்தம்விருப்பின்படி) சென்றனர்.

போதரு நெறிதனிற் றக்கன் புன்மையாற்
றீதுறு நெஞ்சினன் செயிர்தத நோக்கினன்
மாதுல னென்னவு மதித்தி லானெனக்
கோதறு மீசனை யிகழ்ந்து கூறுவான்.

(இ-ள்.) (அமரர் யாவரும் அவவாறு அநுக்கிரகம்பெற்று) திரும்பிவரும் வழியில், கொடிய மனமுடையோனும், கோபித்த விழியுடையோனும் (ஆகிய) தக்ஷப்பிரசாபதி தன்னை மாமனெனக் கருதி மதித்தானில்லையென்று, குற்றமற்ற சிவபெருமானை அறிவின்மையால் நிந்தித்து (பினவருமாறு) பேசத்தொடங்கி னன். எ று. (அ)

தாயிலி தந்தையுந் தமரு மற்றிவன்
பேயொடு சுடலையி னடிக்கும பித்தன்வெங்
காயெரி நெற்றியி னுமிழுங் கண்ணினன்
பாய்புலி முடையதள சைக்கும பானமையோன்.

(இ-ள்.) இச்சிவனே தாயில்லாதவன் - பிதாவும் சுற்றத்தவரும் இல்லா தவன் - பேயோடு மாமயானத்தில் நிருத்தஞ்செய்யும பயித்தியக்காரன் - கொடு மை வாய்ந்த எரிகின்ற நெருப்பைச் சொரிகின்ற நெற்றிககண்ணையுடையவன் - பாய்கின்ற புலியினது முடைநாற்றம்பொருந்திய சருமததை ஆடையாகத் தரி க்குந்தன்மையை யுடையவன். எ று.

இதுமுதற் பத்துச்செய்யுட்களால் தக்ஷப்பிரசாபதியின் கோபத்தை விள க்குகின்றார்.

"எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தோந்ஞ் சோணேச—னில்விற்
பிறந்தகதை யுநகேளேம் பேருலகில் வாழ்ந்துண்
டிறந்தகதை யுநகேட் டிலேம்"—என்றபடியே பெருமான் பிறப்பிலி யாதலின் "தாயிலி தந்தையுந் தமரு மற்று" என்றும், சர்வசம்ஹாரகாலத்தில் காளி கூளி வேதாள முதலியன களிக்க, பெருந்தேவரிறந்த மாமயானத்தில் நிரு த்தஞ்செய்தலின் "பேயொடு சுடலையி னடிக்கும்" என்றும், மனைவியாதி சுற்ற த்தவரில்லாதிருப்பினும் தனக்கெனச் சுதந்தரமாகிய சுகப்பேற்றினை விரும்பாது நிற்றலின் "பித்தன்" என்றும், சூரிய சோமாக்கினிகளாகிய முச்சுடர்களை மூன்று விழிகளாகக் கொண்ட நமது கடவுள் நெற்றியினிடத்தே அக்கினியை விழியாகக்கோடலின் "காயெரி நெற்றியி னுமிழுங் கண்ணினன்" என்றும், தா

ருகவனத்துப் பிக்ஷாடனத்திருவுருவேற்றுப் பலியேற்கச் சென்று அவவிருடிபன்னியர் கற்பையழித்தபொழுது, அவவிருடியர் செய்த ஆபிசாரவேள்வியில் தோன்றி அம்முனிவரால் முனிந்து செலுததப்பட்ட புலியை வலிமாய்த்து வதைத்து அதன் தோலை யாடையாகத் தரித்தமையின் "பாய் புலி யதளுடை யசைக்கும் பான்மையோன்" எனவுங் கூறினர். பதனிடாததோலாதலின "முடையதள்" எனப்பட்டது.

இப் பெற்றி யறியாத் தக்கன் தூஷணையாக இழிவுபடுத்திக் கூறினன். அஃ தவனதறியாமையெனக் கொள்க. (௬)

குணங்குடி கோததிரங் குலமொன் றிலலவ
னணங்குநோய் செய்திடு மரவப் பூணினன
மணங்கமழ் பூச்சினை நீத்து வனமுடைப
பிணஞ்சுடு சாமபாமெய்ப பூசும பெறறியோன்.

(இ-ள்.) குணம் - குடி - கோத்திரம் - குலம (முதலியவற்றுள் தனக்குரியதாக) ஒனறுமில்லாதவன - துன்பததைச் செயகினற சாப்பாபரணத்தையணிந்தவன் - வாசனைவீசுகின்ற கலவைச்சாந்தை யகறறி வலிய புலால்நாற்றம் பொருந்திய பிரேதத்தைச் சுட்ட சாம்பரை உடலிலணியுந் தன்மையையுடையோன், ௭-று.

"குலமிலான் குணமிலான்" என்றபடியே குணமுதலாகச் சொல்லப்படுவன ஓன்றுமற்றவராதலின் "குணங்குடி கோததிரங குலமொன் றில்லவன்" என்றும், பாம்புகள் துன்பமுறுற்றவலல பிராணியாதலின் "அணஙகுநோய் செய்திடு மரவம்" என்றும், திருமாலின் வாகனமாகிய கருடனுக்கஞ்சித தம்பாலடைக்கலம் புக்க அரவங்களையும், தாருகவனத்து முனிவா ஆபிசாரஹோமத்தில் தோன்றி அவர்களால் அனுப்பப்பெறற அராககளையும், கடிசூத்திரம கங்கணம் புஜக்கட்டு உபவீத முதலிய அணிகளாக அணிந்திருப்பமையின் "அரவப்பூணினன்" என்றும், கந்தம் பயக்குஞ் சந்தனம் புனுகு கத்தூரி முதலியவற்றை மெய்யிற் பூசுவது வழக்கமாகவிருப்ப, எமதிறைவா அத்தகைப் பொருளைத் தம தருமைத் திருமேனியி லணியாது திருமால பிரமன முதலிய தேவாதுமுடைநாற்றம் பொருந்திய உடல்களைச் சர்வசம்ஹார காலத்திற் பிரேதங்களாககி மஹாநடனஞ் செய்து திருநெற்றியில விளங்குந் தீவிழியினல் பற்பஞ் செய்து உடலிற் பூசுதலின் "மணங்கமழ் ... ... சாம்பர்மெய்ப்பூசும் பெற்றியோன்" என்றுங கூறினர்.

அருந்துவ தலைகட னஞ்ச மூர்தியாய்ப்
பொருந்துவ தொருகிழ வேறு போர்ப்பது
கருங்களிற் றுரிவையூன் கழிந்த வெண்டலை
திருந்திய தாமரை செங்கை கொண்டதே..

(இ-ள்.) (அந்தச் சிவன்) உண்பது அலைகள்பொருந்திய பாற்கடலிற்றோன்றிய விஷம். வாகனமாகக் கொள்வது ஒரு கிழத்தன்மை பொருந்திய எருது. போர்த்துக்கொள்வது கரிய யானைத்தோல். திருத்தமாகிய செந்தாமரைமலர் போன்ற செவந்த கையில் தாங்கியது மாமிசமொழிந்த வெண்டலையோடு, ௭-று.

பூர்வம் க்ஷீராப்தி மர்த்தனஞ்செய்ததேவர் அதனிற்றோன்றிய ஆலால விடத்துக்கஞ்சி ஐயன்பால் முறையிடப் பலகோடி பிராணிகளையும் பாதுகாக்க அதனை யாபோசனஞ் செய்தமையின் " அருந்துவ தலைகட னஞ்சம் " என்றும், குதிரை யானை தேர் முதலிய ஊர்திகள் எண்ணில்லாதன வுலகத்தி லிருப்பவும் முன்னோர் தேயுப்பிரளயத்தில் இறவாதிருக்கத் தம்மை யாசித்த தருமதேவதை யை வாகனமாகக் கொண்டும், திரிபுர தகன சமயத்தில் தேவர்களூற்ற இறுமாப் பகல அவர்கள் இயற்றிக் கொடுவந்த இரதம் அச்சு முறிய அச்சுதன் " தடமதில் களொருமூன் றுந் தழலெரித்தவங்காளில் இடபமதாய்த்தாங்கினன் றிருமால்காண் சாழலோ" யென்றபடி இடப வடிவேற்றிறைவனைத் தாங்கினமை யானும், " ஊர்தியாய்ப் பொருந்துவ தொருகிழ வேறு" என்றும், கயாசுரன் எனனும் யானைவடி வேறற அசுர னொருவனது உயிரை மாய்த்து அத் தோலையுரித்துத் தான் கொண்ட உக்கிரப பெருவடிவின்மேற் போர்த்தலின " போர்ப்பது கரு ங்களிற்றுரிவை " என்றும், தன்னைப் பார்த்துச் சிரித்த மலரோனது நடுச்சிர த்தை நகநுதியாற் கொய்து அதனைக் கபாலமாகக் கையிலேற்றிருப்பதால் " ஊன்கழிந்த வெண்டலை செங்கை கொண்டதே " என்றுங் கூறினர். (கக)

மறையவ னுமெனி லொழுக்க மாறினா
னிறையெனி லளித்திடா தீறு செய்குவ
னிறைபொருள் வணிகனே லிரக்கு நீரமையா
னறைவது மறையினற் சதுர னலலனே.

(இ-ள்.) (இவனதியற்கையால் எவவருணப்பவோனென் று பரியாலோசிப் போம்) வேதியனோவென்றால் (யாகாதிகாரியங்களைச் செய்யாமல்) ஆசாரதருமக் தவறினவன். க்ஷத்திரியனோவென்றால் (குலத்தியற்கைப்படி) இரட்சிக்காமல் சம் ஹாரகாரியஞ் செய்கின்றான். செல்வ மிகுந்த வைசியனோவெனறால் (செல்வமி ன்றிப்) பிச்சையெடுக்கும் பெற்றியுடையோன். வேதத்தினால் சொல்வது சூத்தி ரனல்லன். எ-று.

பிராமணன் முதலிய நான்கு வருணங்களில் இவனை எதிலே சேர்க்கலா மென்றாலுஞ் சரிப்படமாட்டான் என்பது கருத்து. (கஉ)

பிரமசா ரியுமலன் றடங்கட் பேதைதோள்
மருவலாற் பொருபடை சுமநத வாறறினா
லரியமா தவனல னரிலவெங் கானிடைத்
திரிதலா லிலலறஞ் செய்து ளோனலன்.

(இ-ள்.) விசாலமாகிய கண்ணையுடைய பெண்ணின் தோளைக் கலத்த லாற் பிரமசாரியு மல்லன்; போர் செய்கின்ற ஆயுதத்தைத் தாங்கியதன்மையா ல் செய்தற்கரிய சிறந்த தவத்தைச்செய்தோனு மல்லன்; பருக்கைக்கற்கள் பொ ருந்திய கொடிய வனத்திலே சஞ்சரிப்பதனால் கிரகஸ்தாச்சிரமததி லிருப்போ னு மல்லன். எ-று.

இவன் குலமில்லானாயினும் எவ்வகையாச்சிரமியிற் சேர்வன் என்த் தனி த்தனி யெடுத்துப் பேசுங்கால் நால்வகையினுள் ஒன்றிலுஞ் சேர்தற் குரிய னல்லன் என்பதாம். (கங)

கோணனாண் மலரவன் றலைகு றைத்தலான்
யாணர்நற் றருமநூ லியைந்த வானலன்
வாணுத லொருபுற மாய வாற்றினு
லாணலன் பெண்ணல னலியு மல்லனால்.

(இ-ள்.) கோணுதலுடைய புதிய மலரில் வசிக்கும் பிரமதேவனது சிரத்தைக் குறைத்தலால் அழகிய நல்லதருமசாஸ்திரஙகளிற் பழகினவனல்லன். ஒளி வாய்ந்த நெற்றியையுடைய கௌரியை ஒருபுறம் பொருந்தியவகையினால் ஆண் வடிவ முடையனுமல்லன். பெண்வடிவுடையவனுமல்லன் (அவ்விரண்டுமெல்லாத) அலியுருவமுடையவனுமல்லன். எ-று.

அலியென்பதைப் பேடென ஒருசாரார் கூறுவர். அஃதொவ்வாது "பெண் மைவிட்டாணவாவுவ பேடாண்பா- லாண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பா- லிருமையு மஃறிணை யன்னவு மாகும்" எனக்கூறியிருப்பினும், ஆண்டன்மை நீங்கிப் பெண்டனமை யவாவுவதைப் பேடென்றும், பெண்டன்மையொழிந்து ஆண்டன்மை யவாவுவதை அலியென்றும் கூறவேண்டுவது முறை. இதனால் பேடு - அலி யென்பன வெவவேறு பதங்களாயின. இச்செய்யுளில் அலியென்பதற்கு ஆணும் பெண்ணு மன்மையாகிய தோருருவெனக் கோடல்வேண்டும். (கச)

அலகிலெவ் வுலகமு மழியு நாளினின்
மலரயன் வெண்டலை மாலை யென்பணிந்
திலகுமுத் தலையவேல் திரிவித் தெங்கணு
முலவலாற் புனிதனென் றுரைக்க வொண்ணுமோ.

(இ-ள்.) குற்றமில்லாத எல்லாவுலகங்களு மழிகின்ற சர்வசம்ஹாரகாலத்தில், பதுமாசனத்திலுள்ள நான்முகனது (தசை நீங்கிய) வெண்டலைகளாலாகிய மாலையையும், (கங்காளமென்னும் முதுகந்தண்டு) எலும்பையுந் தரித்து, பிரகாசிக்கின்ற மூன்று சிரங்களையுடைய சூலாயுதத்தைச்சுழற்றிச் சமஸ்தலோகங்களிலுஞ் சஞ்சரித்தலாற் பரிசுத்தனென்று சொல்வது கூடுமோ. எ-று. (கரு)

எவ்வலி கொண்டிவ னென்னைக் காண்டலுஞ்
செவ்விதி னெழுந்திலன் சிறப்புஞ் செய்தில
னவ்வலி யறிந்தனன் யான ளித்திடும்
மௌவலங் கோதையை மணந்து பெற்றதே.

(இ-ள்.) எத்தகைய வல்லமையினால் என்னைப் பார்த்தவுடனே இவன் சீக்கிரமாக எழுந்திருந்தானில்லை; மரியாதையுஞ் செய்தானில்லை. அந்த வல்லமையையும் அறிந்தேன், (அதாவது) யான் பெற்ற அழகிய முல்லைமல ரணிந்த கூந்தலையுடைய தாக்ஷாயணியை விவாகஞ் செய்துபெற்றதேயாம். எ-று.

"யானளித்திடுங் கோதையை மணந்த"—என்பது

— பண்டொரு பகலிற் பதுமன் தனது சத்தியவுலகத்திலிருக்கையில் அவனது மாநதபுத்திரர் பதின்மரில் தக்கன் தந்தையைப் பணிந்து "எந்தையே! பெருந்தேவர் மூவருள்தலைவனாகவும் எல்லா வுயிர்கட்கும் உயிருமாகவுமுள்ளவன் யாவன்" என வினவ, பிரமன் "மைந்தனே! சங்கரனே நீ வினவியமுதல்வன்"

என மறுமாற்றங் கூற, தக்கன் "சிருட்டியாதி மூவகைத் தொழிலிற் சங்கார மொன்றினை யியற்றுஞ் சங்கரன் ஏனைய விருதொழில் புரியும் நுங்கட்குத் தலைவனாத லெங்ஙனம்? என, எண்கணன் "சர்வசம்ஹாரகாலத்திலே எல்லாவற்றையுந் தன்னிட மொடுக்கி மீட்டும் படைப்போனாதலாலும், எம்முள் அந்தர்க்கதமாகவிருந்து சிருட்டி திதிகளைச் செய்விப்பவனாதலாலும் இறைவனாவான்" எனத் தேற்றினன். தக்கன் அதுகேட்டு மனத்தடுமாற்றம் நீங்கி மாநததீர்த்தக்கரையில் ஆயிரவருடம் அருந்தவஞ் செய்தனன். சிவபெருமான் அவன் தவத்திற் கிரங்கிக் காட்சியளித்து "உன் மனதில் விரும்பியதென்"? என வினவ, தக்கன் பணிந்து "திரிலோகங்களும் என் கட்டளையில் நிற்கவும், தேவரீரைப் பணிவோர் என்னைப் பணியவும், உமாதேவியார் என் புதல்வியாயுதிப்பவும், தேவரீர் வேதியவடிவாய் வந்து மணம்புரியவும் வரமருளவேண்டும்" என வேண்டினன். சிவபிரான் அவ்வாறே யருள்செய்து அந்தர்த்தானமாயினர். இதுநிற்க.

பின்னொரு காலத்தில் ஸ்ரீ கைலாயகிரியிற் சிங்காதனத்தில் இறைவரோடொக்க வீற்றிருந்த உமாதேவியார் எழுந்து இறைவரைப்பணிந்து "தேவரீரது உண்மைநிலையை உபதேசித்தருளவேண்டும்" என, சிவபெருமான் "உமையே! செயல் குண உருவங்களைப் பொருந்தோம். சர்வ வியாபகமாக விளங்குவோம்." உருவம் அருவம் உருவருவங்களைப் பொருந்துவோம்" என, உமாதேவியார் "உருவமுடையே மல்லமென்றும் பலவுருவ முடையேமென்றுங் கூறுவ தென்ன" என, ஐயன் "அவை நம தருள்வடிவம்" என்றறைய, அம்மை "ஆயின் அவை என் வடிவங்களே" என்றிசைப்ப, பெருமான் "நம்முன்னே யுன்னை வியந்தனை. உன்னிடத்தும் ஏனையோரிடத்தும் யாமே நின்று தொழில்படுத்துகின்றோம். அல்லாவிடில் அகில முழுவதும் அறிவு நீங்கிச் சடமாயிருக்கும் அதனை யறிக" என்று, திருமால் திசைமுகன் முதலிய தேவருள்ளத்திற் பொருந்தி அறிவினையளிக்குஞ் செயலை நீங்கிக் கணப்பொழுதிருக்க அகிலான்மாக்களுஞ் சடமாயிருப்பதைக் கௌரிகண்டு கடவுளைப் பணிந்து "எளியே னிசைத்ததை யெண்ணுமல் எவரையும் எழுப்பியருளவேண்டும்" என்றிரப்ப, இறைவர் கருணையுடன் எல்லோரையும் எழுப்பினர். விண்டு முதலாயினோர் உணர்வுற்றுத் துயில்நீங்கினோர் போன்றெழுந்து "எளியேங்கள் எண்ணில்காலம் அறிவிழந்து செய்கடன் மறந்தோம். அப் பாவம் நீங்கும்வகையை யருளவேண்டும்" என, தலைவர் "அப்பாவம் உமையிடத்ததன்றி யுங்களிடத்ததல்ல" என ஓதி யகற்றி, ஈஸ்வரியை நோக்கி "நீ தக்கன் மகளாய்த் தரணிமேல் தோன்றுதி; யாம் வந்து மணஞ்செய்வோம்" என்றுருஞ்ஞாபித்தனர். தக்கன் தன் மனைவி வேதவல்லியுடன் மாசி மகத்தில் காளிந்திநதியில் நீராடச்சென்றபொழுது அன்னையார் ஆண்டோர் வலம்புரிவடிவாயிருப்ப, தக்கன் அவ்வலம்புரியைக் கையிற்றாங்கப் பெண்குழந்தையாகக் களிகொண்டு வேதவல்லி கையிற் கொடுத்து ஊரை யடைந்தனன்.

அம்மையார் ஐந்துவயதடைந்து தந்தையை நோக்கி "சிவபிரான் தன்னை மணஞ்செய்யத் தவம்புரிவேன்" என்று விடைபெற்றுத் தவத்தில் நெடுநாளிருந்தனர். பெருமான் தேவியார்தவத்தைச் சோதித்து மணஞ்செய்து கைலாயமடைந்தனர் என்பதாம். (கசு)

ஒழுகொளி யுரோணியை யுவந்து நாடொறும்
விழையுமற் றவர்தமை வெறுத்த திங்களைப்
பழியொடுந் தேய்ந்துடல் பதைப்ப வெவ்விய
மொழியினல் மாற்றரு முரண டக்கினேன்.

(இ-ள்.) (எனது குமாரத்திகள் இருபத்தெழுவரில்) ஒளிசொரியும்ரோகணியை விரும்பி, தினந்தோறும் (தனனை) இச்சிக்கத்தக்க ஏனைய இருபத்தாறு மனைவிமாரையும் மனவெறுப்புற்ற சந்திரனைப் பழிச்சொல்லோடு தேகந்தேய்ந்து பதைக்கும்படி கொடிய சாபத்தினல் நீக்கற்கரிதாகிய அவனது வலிமையையடக்கினேன். எ-று. (கஎ)

ஆங்கவன் போலிவ ணுற்றல் தீதறத்
தீங்குரைத் துலகெலா மிகழ்வ செய்வலென்
றோங்கிய வுளத்தொடு மும்ப ரர்தியோர்
பாங்கினிற் சூழ்வரப் பதியி னெய்தினன்.

(இ-ள்.) அவவண்ணந் துயருற்ற சந்திரன்போலவே (மற்றோர் மருகனகிய) இச்சிவனது வல்லமையும் பாழெய்தும்படி (இவனையும்) உலகத்தாரெல்லாம் தாழ்வாகப் பேசி யிகழத்தக்க காரியங்களைச்செய்வேன் என்று கோபித்தமனதுடன் தேவர்முதலானர் தன் பக்கத்தில் சூழ்ந்துவரத் தக்கன் தனது நகரத்தை யடைந்தான். எ-று.

தக்கன் வசித்து அரசிருக்கும் நகரம் தக்கமாபுரி: இது பிரமதேவனல் நிருமித்துக் கொடுக்கப்பட்டது. (கஅ)

வேறு.

எஞ்ச லின்றி யருமகமொன் றியற்ற நின்றே னதுகாண்பா
னஞ்ச வருவெஞ் சமருழக்கும வயிரப் படையோன் முதலமரர்
பஞ்சி சூழ்ந்து மணியிமைக்கும் பல்கா ழல்குன் மகளிரொடும்
விஞ்சு பெருமா தவரோடும வருகென் றோலை விடுத்தனனல்.

(இ-ள்.) செய்தற்கரிய ஓர் யாகத்தை (யாதொரு) குறைவுமில்லாமற் செய்துகொண்டு வருகின்றேன்; அஞ்சும்படி வருகின்ற கொடிய போர்புரியும் வச்சிராயுததத்தையுடைய இந்திரன் முதலாகிய தேவர்கள்- ஆடையணிந்து பல மணிகள் பிரகாசிக்கின்ற கடிதடத்தையுடைய அரம்பாஸ்திரீகள் - சிறந்த பெருந்தவமுடைய முனிவர் ஆகிய இவர்களுடன் அவ் யாகத்தைக் காணும்படி வரவேண்டுமென்று (தக்ஷப் பிரஜாபதி) திருமுக மனுப்பினன். எ-று. (கக)

விடுத்த வோலை கண்ணுறலும் விளிம்பு நிலவுஞ் சுடர்த்தரள
மடுத்த மௌலிப் பொலங்கழற்கா லமர ரியக்கர் கந்தருவர்
வடித்த மறைதேர் முனிக்கிழவர் பரிதி வேந்தன் மதிக்கடவுள்
கடுத்தாழ் மிடற்றெங் கண்ணுதலை யொழிந் தோர் யாருங் கடிதடைந்தார்

(இ-ள்.) (தக்கன் இவ்வாறெழுதித் தூதுவர்பால்) அனுப்பிய ஓலையைப் பார்த்தவுடன், ஓரத்திலே பிரகாசிக்கின்ற கிரணத்தையுடைய முத்துமாலைகட்

டிய கிரீடத்தையும், அழகிய வீரகண்டாமணி தரித்த காலையுமுடைய தேவர்-யக்ஷர்-காந்தர்வர் - தௌளிய வேதப்பொருளை யுணர்ந்த முனிசிரேஷ்டர் - சூரிய தேவன்-சந்திரபகவான் (முதலிய) ஸ்ரீகண்டத்தை யுடைய எமது சிவபெருமானை நீக்கினேனொழிந்த எல்லாரும் விரைந்து (தக்கமாபுரி) வந்துசேர்ந்தனர். எ-று. (உ0)

மின்கொப் பளித்து வெயில்கான்று விலையி லாத வடஞ்சுமந்து [யனை
பொன்கொப் பளிக்கும் பொறிசுணங்கார் பொம்மன் முலைத்தன் புதல்வி
மன்கொப் புளிக்கு நெட்டிலைவேன் மதிய முதல மருகர்தமை
யன்புற் றவரோ டளவளாய் முறையின் வரிசை வழாதாற்றி.

(இ-ள்.) மின்னலைக் கக்கி (இள) வெயிலை வீசுகின்ற விலையறியப்படாத முத்துத்தாவட மணிந்து பொன்போலும் பிரகாசிக்கின்ற தேமற்புள்ளிகள்பொருந்திய பூரித்த முலைகளையுடைய தனது குமாரத்திகளையும், தலைமையையுடைய நீண்ட அச்சவடிவாகிய வேலேந்திய சந்திரன்முதலிய மருகர்களையும், ஆசையுடனே அவரவர்களோடு அளவளாவி முறையாக வரிசைமுதலியவற்றைத் தவறுமற் செய்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

தன்புதல்விய ரென்றது ஈண்டுக் கூறியது தருமன் முதலியருஷிகட்களித்த இருபத்து மூன்று பெண்கள்- சந்திரனுக்கு மணஞ்செய்வித்த அச்சுவினி முதலிய இருபத்தேழுபெண்கள் முதலானோர். விரிவு கந்தபுராணந் தக்ஷகாண்டத்திற் கண்டு கொள்க. (உக)

தவளக் களிற்றுப் பெருமபாகன் முதலேழ் திசையிற் றலைவரொடு
முவணப் புள்ளேற் றொருபாக னுறையுஞ் சுவேதத் தீவடைந்து
குவளைத் தடங்கட் செங்கமலை கொழுந வெமது மகங்காத்தற்
கவணுற் றிடுதி யெனநெடுமால் தக்க னோடு மடைந்தனனால்.

(இ-ள்.) தாவள்யமாகிய ஐராவதத்தி லேறுகின்ற பெருமை தங்கிய இந்திரன் முதலாகிய ஏழு திசைக்காவலருடனே, வெற்றிபொருந்திய கருடப்பறவையிவரும் திருமால்வசிக்கின்ற சுவேதத்தீவை யடைந்து, நீலோற்பலம்போன்ற பரந்த விழிகளையுடைய செந்தாமரைமலரில் வசிக்குந் திருமகளுநாயகா! எம்முடைய யாகத்தை ரக்ஷித்தற்பொருட்டு (தேவரீர்) ஆண் டெழுந்தருளவேண்டும் என்று (தக்கன்) கூற, விஷ்ணு அத் தக்கனுடன் (அவ்வாறே தக்கமாபுரியைச்) சார்ந்தனர். எ-று.

ஏழ்திசைத் தலைவரென்றது ஈசானனை நீங்கவென்க்கொள்க. (உஉ)

அண்ணல் சேவ லேற்றெகினத் தருமா மறையோ னரனின்றி
வெண்ணெய் கமழுங் கனிபபவள வாயான் காக்கும் வேள்வியையாங்
கண்ணுற் றிடுது மெனவடைந்தான் ததீசி முதல கலைவல்லோ
ரெண்ணிற் றக்கற் குறுதிமொழி கூறல்வேண்டு மெனவடைந்தார்.

(இ-ள்.) பெருமை பொருந்திய ஆண் அன்னத்தை வாகனமாகவுடைய அருமையாகிய சிறந்த வேதங்களை யோதிய பிரமதேவன் (இதனை யறிந்து) சிவ

பிரானில்லாமல் நவநீதம் மணக்கப்பெற்ற செம்பவளம்போன்ற வாயையுடைய மாதவன் காக்கின்ற யாகத்தை நாம் பார்ப்போமென்று கருதிச் சென்றனன். ததீசிமுனிவர் முதலாகச் சொல்லப்பட்ட சாஸ்திரங்களில் வல்லவர்களாகிய பெரியோர் தக்கனுக்குக் கணக்கில்லாத உறுதிவார்த்தைகளை யுரைத்தல்வேண்டுமென் றுன்னி வந்தனர். எ-று.

எண்ணில் எனபதற்கு யோசனையில்லாத வெனப் பொருள் கோடலு மொன்று. (உந)

புலனைக தவித்த ததீசிமுனி பொற்பார் சாலை தனிலெய்தி
யுலக மனைத்து மொருதிகிரி யுருட்டுந் தக்கன் மனச்செருக்கு
நிலவுக் கதிர்கா லொழுகொளிய நிழற்பூண் சுமந்த பொம்மன்முலைக்
கலவ மஞ்ஞை யனையவவன் மக்க டமையுங் கண்ணுற்றான்.

(இ-ள்.) ஐம்புலன்களையும் புறஞ் செல்லாதடக்கிய ததீசிமுனிவர் அழகு பொருந்திய யாகசாலையிலடைந்து, சமஸ்தலோகங்களிலும் ஒப்பற்ற ஆக்ஞைசக்கரத்தைச்செலுத்துகின்ற தக்கனது மனோகாவத்தையும், சந்திரிகையாகிய கிரணத்தைக்கக்கும் ஒளிவீசுகின்ற நிழல்செய்யும் ஆபரணமணிந்த பூரித்த முலைகளையுடைய தோகைவாய்ந்த மயில்போலுஞ் சாயல்பொருந்தியஅவனது புதல்வியரையும் பார்த்தனர். எ-று. (உச)

அளத்தற் கரிய சிறப்பெய்திச் செம்மாந் துறையு மமரரைத்தம்
முளத்தின் மகிழ்ச்சி மீதோங்க வுறைபு மருகர் தமைநோக்கிக்
களிப்புற் றிருக்குந் தக்கன்முகங் காணக் கடவுண் மறைக்கடலுட்
டிளைக்குந் தெய்வத் ததீசிமுனி யுறுதி மொழிகள் செப்புவனால்.

(இ-ள்.) அளவிடுதற் கரிதாகிய சிறப்புற்று இறுமாந்திருக்கின்ற இமையவரையும், தமது மனதில் களிப்பு மேலோங்க விளங்குகின்ற மருகர்களையும் பார்த்துச் சந்தோஷித்திருக்கின்றதக்கன் முகத்தைக் காணவும், தெய்வீகம் பொருந்திய வேதமாகிய கடலின் மூழ்கிய மகிமைதங்கிய ததீசிமுனிவர் தக்கனுக்குச் சிலஉறுதிமொழிகள் சொல்லத்தொடங்கினர். எ-று. (உரு)

கடவுட் டழல்க ளொருமூன்று முருவோ டமர்ந்த காயாம்பூ
வடிவிற் றிகழு நெடுமாயோன் வேள்வி யளிப்பான் வந்திருந்தா
னொடிவில் கேள்வி யந்தணனுங் குரவ னாகி யினிதுறைந்தான்
படியேழ் புகழும் பிருகுமுனி பிரமத் துவமாய்ப் பாங்கமர்ந்தான்.

(இ-ள்) தெய்வீகம்பொருந்திய ஒப்பற்ற (காருகபத்தியம் - ஆகவனீயம் - தக்ஷிணாக்கினி - யென்னும்) முத்தீயும் தத்தம் வடிவத்தோடு பொருந்தின. காயாம்பூவை யொத்த திருமேனியுடன் விளங்கும் நெடியோனாகிய திருமால் யாகத்தைக் காக்கும்படி வந்திருந்தனர்; கெடுதலில்லாத நூற்கேள்வியையுடைய பதுமனும் ஆசிரியனாக இனிதுவீற்றிருந்தனன்; ஏழுலகத்தாரும் புகழத்தக்க பிருகுமுனிவர் பிரமத்துவமாய்ப் பக்கத்திருக்கின்றனர். எ-று. (உசு)

அருநான் மறைக ளொருநான்கும் வாணி யோடு மடைந்தமலர்த்
திருமா தீங்கு வதிந்தோர்க்குச் சிறப்புச் செய்யுந் தடஞ்சினைய
தருவோ ரைந்தும் வேள்விக்குத் தகுவ யாவுந் தனிவழங்கும்
பொருவில் செருத்தற் குவிமுலைய புனிற்று வவிகள் மிகாலகும்.

(இ-ள்.) அரிய நால்வகைப்பட்ட ஒப்பற்ற நான்குவேதங்களும் சரஸ்வதியுடனே வந்துள்ளன; தாமரைமலரில் வசிக்குந் தாக்கணமகு இவண்வந்துள்ளோர்க்குச் சகல சிறப்பையு முண்டுசெய்வள்; விசாலமான கிளைகளை யுடைய ஒப்பற்ற பஞ்சதருக்களும் யாகத்திற்குத் தகுதியாகிய உபகரணங்க ளெல்லாவற்றையுந் தனித்தனி கொடுக்கும்; ஒப்பில்லாத பால்மடியையும் குவிவாகிய முலைகளையு முடைய இளமை தங்கிய காமதேனு அவிர்ப்பாகங்களை மிகுதியாக வளிக்கும். எ-று.

தருவோரைந்து எனக்கூறியதற்கேற்ப ஆவென்பதைக் காமதேனுவென்னக் கொள்ளப்பட்டது.

செருத்தல் = பால்மடி. (உஎ)

பொருவி லமரர் முதலெவையும் பூத்த புகழ்க்கா சிபன்முதல
மருகர் யாருந் தத்தமது மனைவி யோடும் வந்திருந்தார்
கருதி னெவையு மினிதியற்றுந் தெய்வத் தச்சன் கதிரொறிக்கு
முருவப் பைம்பூண் மாடமுத லனைத்து மொழியா தியற்றுவனால்.

(இ-ள்.) சமானரகிதராகிய தேவர்முதலாய வெல்லாவற்றையும் பெற்ற கீர்த்தியை யுடைய காசிபர் முதலாகிய மருகரெல்லாரும் தங்க டங்களது மனைவிமாருடன் வந்திருக்கின்றனர்; நினைத்தால் (நினைத்தவணமே நிமிஷத்தில்) நிருமிக்கின்ற விஸ்வகன்மன் ஒளிவீசுகின்ற அழகினை வாய்ந்த பசும்பொன்னாபரணம் மாளிகை முதலிய யாவும் நீங்காதியற்றுவான். எ-று. (உஅ)

இன்ன வாற்று னன்கெனினு மீச னொழிந்த வீச்சாலை
கொன்னே யுயிர்போம் வெற்றுடலைக் கட்டி லேற்றிப் பலர்குழுமிப்
பொன்னின் மணியிற் கைவலலோர் புனைந்தாற் போலு மஃதன்றேல்
மன்னு மோரி பேய்ஞமலி வழங்கு சுடலை யாமென்றான்.

(இ-ள்.) இவ்வகைச் சிறப்புக்களால் நன்குவிளங்குவதென்றாலும் ஈசனை நீங்கிய இவ்வியாகசாலை, வீணே யுயிர்போன (பிரேதமாகிய) வெற்றுடலை மஞ்சத்திலேற்றிப் பலர்கூடி, பொன் மணி முதலியவற்றிற் கைதேர்ந்த அலங்கரிப்போர் அழகுசெய்தாற்போலும்; அல்லாவிடில் நிலைபெற்ற நரிகள் - பேய்கள் - நாய்கள் திரிகின்ற மயானத்தை யொக்கும் என்று (ததீசிமுனிவர்) கூறினர். எ-று. (உகூ)

தோளா மணியி னிரைகவற்றுந் தூய்மென் முறுவற் றிருவினொடுந்
தாளா லுலக மூழுதளந்தோன் முதலோர் மேய சாலையினை
வாளா சுடலை யெனவுரைத்தாய் மதியி லோயிங் குன்மாற்றங்
கேளா தொழிவேற் குறுதிமொழி கிளக்கு மாறென் னெனமுனிந்தான்.

(இ-ள்.) தொளையிடாத முத்தும்மணியின் மாலையைப் போன்ற பரிசுத்தமாகிய மெல்லிய தந்தபங்தியைவாய்ந்த திருமகளுடன், திருவடியால் மூவுலகத்தை

யும் (திரிவிக்கிரமாவதாரங்கொண்டு) அளந்த விஷ்ணுமூர்த்தி முதலானோர் பொருந்தியிருக்கும் யாகசாலையை மயான மென்று வாளாக் கூறினை. அறிவில்லாதவனே! இப்பொழுது உன் வார்த்தையைக் கேளாது அகலுவேனாகிய எனக்கு உறுதிமொழிகளைச் சொல்லுவது யாதுகாரணமென்று கோபித்தான் (தக்கன்).

தோளாமணி - முழுமணியெனக்கொள்க. (௯௦)

முனியுந் தக்கன் முகநோக்கி முறுவல் பூத்த முகத்தினனாய்
கனைவண் டிமிரும் பசுந்துளவோ னுறையுஞ் சாலை புறங்காடாய்
நினைய லென்ன வுரைத்ததெவ னிகழ்த்து நெடியோன் றனையன்றோ
தனிநான் மறையு மெந்தைபுணர் நான்காஞ் சத்தி யெனச்சாற்றும்.

(இ-ள்.) கோபிக்கின்ற தக்ஷப்பிரசாபதியின் முகத்தை (ததீசிமுனிவர்)பார்த்து, புன்சிரிப்புக்கொண்ட முகமுடையவராய், ரீங்காரஞ் செய்கின்ற வண்டுகள் பண்பாடும் பசிய துளவமாலை யணிந்த திருமால் வீற்றிருக்கின்ற யாகசாலையை மயானமாகக் கருதாதே யெனக் கூறிய தென்னகாரணம்? சொல்லுகின்ற நெடியோனாகிய விண்டுவையல்லவோ ஒப்பற்ற நான்கு வேதங்களும் எமது சிவபெருமான் கலக்கின்ற நான்காவது சத்தியென்று விளம்புகின்றன. எ-று. (௯௧)

புரவி மகநூ றினிதாற்றும் புத்தேள் விசும்பு புரப்பதெல்லா
மரனை வழிபட் டடைந்தவிந்த வாற்றா லன்றோ கொடுமறலி
பரவு வேள்வி காப்பனெனப் புகர்ந்தாய் தொழுமார்க் கண்டனுயிர் [ல்.
விரைவிற் கவர்போ தவன்றாளால் விளிந்தா னெவன்கொல் விளம்புதியா

(இ-ள்.) நூறு அசுவமேதயாகங்களை யினிதாகவியற்றிய இந்திரன் இமயவ ருலகையிரட்சிப்பதெல்லாஞ் சிவமூர்த்தியை வழிபாடுசெய்து (வரம்) பெற்ற இந்த வகையினா லல்லவோ? கொடிய இயமதருமன் துதிக்கத்தக்க யாகத்தைக் காப்பானென்று கழறினை; வணங்குகின்ற மார்க்கண்டேயமுனிவர் பிராணனை விரைவாகக் கவருகையில் அச் சிவபெருமானது திருவடியால் (உதையுண்டு) இறந்தவன் எவனோ இசைப்பாயாக. எ-று. (௯௨)

அளத்தற் கரிய நிதிக்கிழவ னமலன் றுணைவ னுலகிறந்
களத்தி லமைத்த பதினொருவர் கடவு ளுருவம் பெற்றுள்ளோர்
விளக்குஞ் சுடர்க ளொருமூன்று மன்னோன் விழிகள் மறைநான்குந்
துளக்க மில்லாப் பிரமமென மடவோ யாரைச் சொல்லுமால.

(இ-ள்.) பேதைமைக்குணமுடையவனே! அளவிடற்கு முடியாத நவநிதிகளையுடைய குபேரன் சிவபெருமானது தோழனாவான். கருமைநிறத்தைக் கண்டத்திற் பொருந்திய ஏகாதச உருத்திரர்கள் சிவபெருமானது திருவடிவையடைந்துள்ளவர்கள். (உலகிலுள்ள பொருள்களைக் கட்புலன்களுக்கு) தெரியச் செய்யும் முச்சுடர்களும் அப்பெருமானது திருவிழிகள். வேதங்கள் நான்கும் கெடுதலில்லாத பிரமமென்று யாரை எடுத்துப் பேசுகின்றது? எ-று.

முன்னொருகாலத்தில் பிரமதேவன் பலகோடி ஜீவராசிகளையும் உலகத்தையும் படைத்து இறுமாப்புற அவனுக்குச் சிருஷ்டித்தொழில் பிறழ்ந்தது. அதனால் அவன் மனம் வருந்திக் கண்களில் நீரைச் சொரிய அந் நீர்த்துளிகள் அலங்கயா

ய்த் துன்புறுத்தின. பதுமன் பிறிதொன்றுஞ் செய்யமாட்டாதவனாய்ச் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்தனன். அப்பொழுது பெருமானருளால் பிரமாவின் இரு புருவங்கட்கிடையே சிவசாரூபங்கொண்ட ஏகாதசருத்திரர் தோன்றினர். இவர்கள் நீலலோகிதரெனப்படுவர். இவர்கள் பிறழ்ந்த சிருட்டித்தொழிலை நிலைபெறச் செய்தனர். ஈண்டு "ஆலநிறங் களததி லமைத்த பதினொருவர் கடவுளுருவம்பெற்றுள்ளோர்" என்றது மேற்கூறிய நீலலோகிதரை. (௩௩)

எல்லா வுயிர்க்கு முயிராகி யேக மாகிப் பலவாகிச்
சொல்லா நின்ற நீயாகி யானாய் நின்ற சுடாக்கொழுந்தை
யல்லாற் பொருளொன் றுளதாங்கொ லவன்சீ ரறிஞ ரறிவதன்றிக்
கல்லா வெளிற்றுப் புல்லறிவோர்க் கறிய லாமோ கழறுதியால்

(இ-ள்.) எல்லாச் சீவான்மாக்கட்கும் உரிய பரமான்மா வாகியும், ஒன்றேயாகியும், அநந்தமாகியும், எடுத்துச்சொல்லுகின்ற நீயாகியும், யானாகியும் விளங்குகின்ற சுடர்க்கொழுந்தாகிய சிவபெருமானை யல்லாமற் பரம்பொருள் (பிறிது) ஒன்றிருக்கின்றதோ? அப்பெருமானது புகழை ஞானிகளே யறிவரல்லது, (ஞானநூல் களைக்) கல்லாத அற்பமாகிய வெளிற்றறிவுடையோர்க்கு அறிதல் கூடுமோ? பேசுவாயாக. எ று. (௩௪)

பொருளிற் றீர்ந்த புன்கவியும் புதல்வர் வழங்காப் பாழ்மனையு
மருளிற் றீர்ந்த வெற்றுடலு மனபற் றணந்த வனிதையரும் [ட்டும்
வருமென் முலையார் தமையொழிந்த மனைவாழ்க் கையும்வெண் டிரைபுர
விரிநீர்ப் பேர்யா றிலத்தொழுக விளங்கா தோங்கு வியன்பதியும்.

(இ-ள்) (அகமும் புறமுமாகிய) பொருளினின்று நீங்கிய அற்பமாகிய பாடலையும், குழந்தைகள் சஞ்சரியாத பாழாகிய வீட்டையும, கிருபையென்பதில்லாத வீண் சரீரத்தையும், நாயகனைப் பிரிந்த நங்கையையும்,வளர்கின்ற மெல்லிய குசங்களையுடைய மனைவியை நீங்கிய இல்வாழ்க்கையையும், தெள்ளிய அலைகளைப்புரட்டுகின்ற பரந்த நீரையுடைய பெரிய ஆறுக ளிலந்தொழுகும்படி விளங்காதுயர்ந்த பெரிய நகரத்தையும். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

"பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல - சொல்லாற் பொருட்கிடனாக வுணர்வினில் - வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்" என்றதனால், அகப்புறப்பொருள்கட் கிடனாக நிற்றலே கவியாதலின் அதனிற் றீர்ந்ததைப் "புன்கவி" யென்றும், பிள்ளைகள் வாழ்தலே வீட்டுக் கழகாதலின், அவரை யற்றிருத்தலைப் "பாழ்மனை" என்றும், மாந்தர் மன்பதைகளைக் கருணைகொண்டு நடத்த வேண்டுதலின் அஃதொழிந்தாரை "வெற்றுடல்" என்றும், மாதருக்குக் காதலரே உடல் பொரு ளாவிக ளாதலின் அத்தகைத் தலைவனை யிழந்த தையல் பயன் பெறாள் என்பார் "அன்பற்றணந்த வனிதையர்" என்றும், மங்கைப்பருவமுதல் மாதருக்குக் குசங்கள் வளரு மியற்கையுடைய தாதலின் "வருமென் முலையார்" என்றும், "பாழே-மடக்கொடி யில்லா மனை" என்ற ஔவையார்போல் ஈண்டு "முலையார் தமையொழிந்த மனைவாழ்க்கை" என்றும், "ஆறில்லா வூருக் கழகு

பாழ்" என்றார்போல் "பேர்யாறலைத்தொழுகவிளங்காதோங்கு வியன்பதி" என்றும், பயனில்பொருள்களை யடுக்கி யுவமானித்துக் கூறினர். (கஞ)

கொடையி லாதான் வாழ்வுமறை கூறு மறையோ னல்லொழுக்கு
மடைவிற் றருபபை வனையாம லாற்றுங் கடனு மெள்ளின்றி
யுடைய கிழமைத் தென்புலத்தோர்க் கூட்டமே புனலும் போலுநரை
விடையோ னன்றி நீயாற்றும் வேள்வி யென்ன வெகுண்டுரைத்தான்.

(இ-ள்.) (எற்றோரிடத்தில்) ஈகைக்குணமில்லாதவன் (செல்வத்தோடு) உயிர்வாழ்வதையும், வேதத்தைப் பாராயணஞ்செய்யாத அந்தணனது நல்லொழுக்கத்தையும், கிரமப்படி தருப்பையணியாதுசெய்யும் கருமங்களையும், எள்ளில்லாமல் உரிமை பொருந்திய பிதுரர்கட்கு உண்பிக்குந் தருப்பணநீரையும்போன்றிருக்கும். வெண்மையாகிய இடபவாகனத்தையுடைய சிவபெருமானையன்றி நீ செய்யும் யாகம் என்று (ததீசிமுனிவர் தக்கனை நோக்கி) கோபித்துக் கூறினர். எ-று.

"போலுநரைவிடையோனன்றி நீயாற்றும் வேள்வி" என்பதனை மேலைச் செய்யுளிலும் இறுதியிற் கூட்டுக.

தருப்பை என்பது ஆகுபெயராய்ப் பவித்திரத்தை யுணர்த்தியது.

நரைவிடை என்பதற்குக் கிழவெருது எனப் பொருள்கூறலுமொன்று.

தழைவேய் குரம்பைத் தவப்பள்ளித் ததீசி யுரைப்பத் தக்கன்வெகுண்
டழல்வாய் விதியி னினிதாற்றுங் கரும மதன்பே றளிக்குமென்
மொழித லோடுஞ் செய்கருமஞ் சடமா முதல்வன் சான்றாகி
யொழிவி லதன்பே றளிக்குமெனக் கடவுண் முனிவ னுரைத்தனனால்.

(இ-ள்.) தழைகளா லலங்கரிக்கப்பட்ட சிறுகுடிலைத் தவப்பள்ளியாகவுடைய ததீசிமுனிவர் (இவ்வாறு) கூறவும், தக்ஷப்பிரசாபதி சினங்கொண்டு, கிரமப்படி அக்கினியால் இனிதாகச்செய்கின்ற யாககருமம் அதன் பலனைக்கொடுக்குமென்று சொல்லவும், தெய்வீகம்பொருந்திய ததீசிமுனிவர் (யாகாதி) செய்கருமங்கள் சடப்பொருளாம். கடவுள் சாட்சியாக நின்று கெடுதலில்லாத அதன் பிரயோசனத்தைக் கொடுப்பானென்று சாற்றினர். எ-று. (கஎ)

கருமஞ் சடமவ் விறைசான்றா யதன்பே றளிக்கு மெனக்கரைந்தா
யுரைசெய் தெய்வஞ் சான்றலது பயன்றா வாதா லுறுவித்து
மருவுங் காலந் தனிற்றோன்றி வளர்ந்து பய்னல் குதல்போல
விரியுங் கரும காலத்திற பயன்க டாமே விளைத்திடுமால்.

(இ-ள்.) (ஏ ததீசிமுனிவரே) யாககருமம் சடமென்றும், அத்தலைவனே சாட்சியாக நின்று அதன் பிரயோசனத்தைக் கொடுப்பானென்றும் இயம்பினீர்; நீர் சொல்கின்ற தெய்வமானது சாட்சியேயல்லாமல், பலனை நுகரச்செய்யா தாதலால், பொருந்திய விதையும் முளையத்தக்ககாலத்திலே முளைத்துப் பயிராய்ப் பலன்கொடுத்தல்போல விரிந்த செய்கருமங்களும் (அவ்வவற்றிற் குரிய) காலத்திலே பலன்களைத் தாமே உண்பெண்ணும் (என்று தக்கன் சாற்றினன்). எ-று. (கஅ)

என்ன லோடு முறைபிறழா தியற்றுங் கருமங் காலத்தின்
மன்னு பலநீ யளிக்குமென்றா யவன தருளின் றேன்மடவோய்

சொன்ன கருமம விதிமுறையி னியற்றி யிடினும் பயன்றாவா
தன்னோ னருளால் விதியின்றி யாற்று கினுமப் பயனளிக்கும்.

(இ-ள்) என்றிவ்வகையாகத் தக்கன் சொல்லவும், (ததீசிமுனிவர்) அறிவில்லாதனே! கிரமந்தவறாமற் செய்கின்ற அக்கினிகாரியமே நிலையாகியபலனை (அதற்குரிய) காலத்திலே கொடுக்குமென்று நீ சொல்லுகின்றனை; அப்பூபகவத்கடாட்ச மில்லையானால் நீ சொல்லிய யாககருமத்தை விதிப்படியே செய்துமுடித்தாலும் பலன்கொடாது. அப்பெருமானது கிருபையினாலே வேதவிதிதவறிச் செய்தாலும் அந்தப்பிரயோசனத்தைக் கொடுக்கும். எ று. (௩௯)

மண்ணிற் றெளித்த வித்தனைத்துந் தத்தங் காலம் வரிற்றோன்றி
நண்ணும் பலன்க ளளிக்குமென நவின்றாய் கால வுருவாகிக்
கண்ணு மதனைத் தோற்றுவித்துங் கரும பலன்க ளினிதளித்து
முண்ணின் றியற்று மொருபொருளே யதனி னுறைந்து முறையாதால்.

(இ-ள்) நிலத்தில் விதைத்த விதைகளெல்லாம் தத்தமக்குரிய (விளை)காலம் வந்தால் முளைத்து (பயிராகி) ப் பொருந்தியபலன்களைக்கொடுக்குமென்று இயம்பினை; காலத்திற்குந் தக்க வடிவாகி எண்ணுகின்ற அவ்விதையை முளைக்கச்செய்தும் செய்கருமங்களின் பலன்களை இனிதாகக் கொடுத்தும் (எல்லாவற்றிற்கும் சூட்சமபூதனாக) உள்ளேயிருந்து செய்கின்ற ஒப்பற்ற பரம்பொருளே யதனிடத்தில் இருந்தும் இராமலு மிருக்கும். எ-று. (௪0)

என்று கூறி யுலகனைத்து மீன்று காத்துத் துடைத்தவற்றை
மன்ற மறைப்பித் தருள்புரியும வரத னின்றி மகமபுரிவோய்
பொன்று யல்லை யெனவோதித் ததீசி பொருவில் துருவாசன்
மின்றாழ் சடிலத் தவத்துங்கன் சவனன் முதலோா விரைந்தகன்றார்.

(இ-ள்.) என்று (இவ்வகையாகப் புத்திகளைச்) சொல்லி, சமஸ்தலோகங்களையுஞ் சிருட்டித்து இரட்சித்துச் சங்கரித்து அவ்வுலகிலுள்ள ஆன்மாக்களைத் திரோபித்து அநுக்கிரகஞ் செய்கின்ற சிரேட்டராகிய சிவபெருமானை யின்றி யாகஞ்செய்யுந் தக்ஷப்பிரசாபதியே! நீ அழியாதிராய் என்றுசபித்துத் ததீசிமுனிவர் சமானமில்லாத துருவாசமுனிவர் - மின்னல்போலப் பிரகாசிக்கும் நீண்ட சடையையுடைய தவத்தைச் செய்த துங்கமுனிவர் - சவனமுனிவர் முதலாகிய ருஷிசிரேஷ்டர் சீக்கிரத்தில் (அவ யாகசாலையை விட்டு) நீங்கினர். எ-று. (௪௧)

கோணைக் களிற்றி னிடர்களைந்தோன் முதல வமரர் கூட்டுண்ண
மாணுற் றுள்ள மகிழ்தூங்கத் தக்கன் மகமாற் றிடுமேல்வை
யாணர்க் கமல மலர்ப்பொகுட்டி னுறையும் புத்தே ளினிதீன்ற
வீணைக் கிழவ னிவர்ந்தோங்கு வெள்ளிப் பொருப்பிற் செலவயர்ந்தான்.

(இ-ள்.) துன்புற்ற (கஜேந்திரனென்னும்) யானையினது இடுக்கண்தீர்த்தொழுகிய திருமால் முதலிய தேவர்கள் விருந்துண்ணவும், மாட்சிமைகொண்டு மனக்களிப்பு மிகவும் தக்கன் யாகஞ்செய்யுங்காலத்திலே, அழகிய தாமரைமலர்க்கொட்டையில் வாசஞ்செய்யும் பிரமதேவன் இனிதாகப் பெற்ற மகதிவீணை தாங்

கிய நாரதமுனிவர் மேனோக்கி யுயாகின்ற வெள்ளிமலையாகிய திருக்கைலாயத்திற்குச் சென்றனர். எ று.

இவர்ந்தோங்கு வெள்ளிப்பொருப்பு—எனபதனை

திருவிளையாடற்புராணம்.

“ புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்
பரந்த வானபதஞ் சக்கரப் படையுடை பகவன
வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநாள்
உரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ வோங்கல்.”—எனபதனு னுணர்க.

தக்கன் வேள்விசெய்த அ-ம.

முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் ௨௦அ௨,

---

எண்பத்தேழாவது,

## தேவி தக்கன் வேள்விச்சாலை யடைந்த அத்தியாயம்·

கத்திகைக் கொன்றையங் காடு சாடிமேற்
றத்துநீர் வேணியங் கடவுள் சார்கரு
மைத்தவழ் வெள்ளிமால் வரையின் யாழுடை
வித்தக முனிவரன் மேவி னனரோ.

(இ ள்.) மாலையாகிய அழகிய கொன்றைக்காட்டினை யலைத்துக்கொண்டு மேலே தாவுகின்ற (கங்காநதியின்) சலத்தையுடைய சடைபொருந்திய அழகிய சிவபெருமான் பொருந்தியுள்ள மேகங்கள் தவழ்ந்துசெல்கின்ற பெரிய வெள்ளிமலையில் வீணையேந்திய ஞானஸ்வரூபியாகிய நாரதமுனிவர் சென்றனர்.

கத்திகை=பூமாலை ; அல்லது சிறுகொடி. (௧)

புவனகோ டிகளெலாம் பூத்த பேதையோ
டவிர்மதி புனைசடை யண்ணல் காதலிற்
கவறெறிந் தாடுதல் நோக்கிக் கைதொழாத்
திவவியாழ் முனிவரன் செப்பன் மேயினன்.

(இ·ள் ) பல்லாயிரகோடி யண்டங்களையும் பெற்ற உமாதேவியாருடன், பிரகாசிக்கின்ற சந்திரனைத் தரித்த சடையையுடைய சிவபெருமான் ஆசையாகக் கவறெறிந்தாடுதலை, தடவுகின்ற மகதி வீணையையுடைய நாரதமுனிவர் கண்ணுற்றுக் கைகுவித்துப் பணிந்து சொல்லத்தொடங்கினர்· எ·று.

கவறெறிதல் = தாயம்போடல். கவறு=சூதாடுகருவி ; சொக்கட்டான் பாய்ச்சிகை,

“ உலகெலாங் கமலத் தானோ டுணறசிற் றுதர வல்லி” என இந்நூலாசிரியர் கூர்மபுராணத்திற் கூறியவாறே ஈண்டும் “புவனகோ டிகளெலாம் பூத்த பேதை” என்றார். (௨)

மாலுடனுலகெலாம் வயிறு வாய்த்தருள்
பாலலோசனிகினைப பயந்து ளோனுயா
நீலமால் வரையக னெற்றிச் சாரலிற்
கோலினனெருமகங் கொடிது போலுமால்.

(இ-ள்.) மாயனோடு வையகத்தையெல்லாம் பெற்றருளிய நெற்றிக்கண்ணையுடைய உமாபிராட்டியே! உன்னைப் பெற்ற தந்தையாகிய தக்கன உயர்வாகிய பெரிய நீலகிரியினது சாரலுக் கருகே ஓர் யாகஞ்செய்கின்றான். (அதனை யாலோசிக்குமிடத்தில்) கொடுமை பயக்கத் தக்கதுபோலு மிருக்கின்றது. எ-று.

இதுமுதல் மூன்றுகவிகள் ஒருதொடர்.

பாலலோசனி=நெற்றியிற் கண்ணையுடையவள். (௩)

உன்னுட னொருவயிற் றுதித்த மங்கைய
ரன்னவர் கொழுநர்மற் றமரர் யாவரு
மன்னின ருந்தைநல் வரிசை யாற்றிடப்
பன்னருஞ் சிறப்பொடும் பரிந்து வைகினார்.

(இ-ள்.) (தாயே!) உனனோடு ஓரேவயிற்றிற் பிறந்தவர்களாகிய (கங்கை முதலாகிய) மங்கையர்களும், அம்மாதர் காதலாகளும், மற்றுமுள்ள தேவர்களும் யாவரும், அங்கு நிலைத்திருக்கின்றனர். உன் பிதாவாகிய தக்கன் நல்ல வெகுமானங்களை (அவர்கட்குக்) கொடுக்க, சொல்லுதற் கரிதாகிய சீர்த்தியுடனே ஆசையாக வீற்றிருக்கின்றனர். எ-று. (௪)

உடல்சினக் கணிச்சிவா ளவனை யுநதைவெம
படிறுரைத் திகழ்தலுந் ததீசி பைதலுற்
றடுசினத் தோடும்வை தகல யான்செவிப்
புடைபுதைத் திங்கெடுமெ புவியிற் போந்தனன்.

(இ-ள்.) போர்புரிகின்ற கோபத்தையுடைய மழுப்படையேந்திய மகதேவனை உனது தந்தையாகிய தக்கன் வெவ்விய பொய்கூறி இகழ்ச்சிசெய்யவும், ததீசிமுனிவர் மனத்துன்பமுற்றுக் கொல்லத்தக்க கோபத்துடனே வசைமொழியுரைத்து நீங்க, அடியேன் காதுகளை (கைகளால்) மூடிக்கொண்டு இந்தப் பெரிய கைலாயநகருக்கு வந்தேன். எ-று.

படிறு=பொய்; வஞ்சம். எண்டு நிந்தையெனக் கொள்க. (௫)

என்றுநா ரதனுரைத் தேகு மேல்வையிற்
பொன்றவ ழிளமுலைப் புரிமென் கூந்தலாள்
குன்றவிற் குரிசிலை நோக்கிக் கோதறு
மன்றலஞ் சேவடி வணங்கிக் கூறுவாள்.

(இ-ள்.) என்றிந்தப்பிரகாரம் நாரதமுனிவர் நவின்று (தம திச்சையின்படி) செல்லுகையில், பொன்போலுந் தேமல் படர்ந்த இளமைவாய்ந்த தனங்களையும் புரிந்த மெல்லிய கூந்தலையுமுடைய பார்வதிதேவியார் மலைவில்லேந்திய மகேச்சுரரைப் பார்த்து, குற்றமற்ற வாசனைதங்கிய அழகிய செவந்த திருவடிகளைப்பணிந்து விண்ணப்பஞ்செய்கின்றனர். எ-று. (௬)

எந்தையாற் றுறுமக நோக்கி யெய்துவன்
நந்தருள் விடையெனத் தையல கூறலும
பந்தணை மெல்விரற் பாவை யீங்கிது
சிந்தைசெய் திடலென விறைவன் செப்பினுன்.

(இ-ள்.) (எம்பெருமானே!) எனது தந்தையாகிய தக்ஷப்ரசாபதி செய்கின்ற யாகத்தைக் கண்ணுற்று வருகினறேன். விடையளித் தருள்செய்யவேண்டும் என்று ஈச்சுவரியார் இசைக்கவும், பந்துகளைப்பற்றிய மெல்லிய விரல்களையுடைய *தாக்ஷாயணியே! இப்பொழுது இக்கருமததைக் கருதவேணடாம் என்று கண்ணுதல் திருவாய்மலர்ந்தருளினா. எ-று.

* தாக்ஷாயணி = தக்ஷன்மகள். இது தத்திதாந்தநாமம். (எ)

இழித்துரை புகன்றன னெனையை நினையு
மழைததிலன் கேட்டைநாள் நவமி யன்றியும்
பழித்திடு சனிவிதி பாதஞ் செலவதுங்
கிழக்கவ ணேகுறிற் கேடுண டாமென்ருன்.

(இ ள்.) என்னையும் நிந்தித்துப் பேசினுன. உன்னையும் அழைத்தானில்லை. (இன்றையதினமோ) கேட்டை நக்ஷத்திரம் - நவமி திதி-அல்லாமலும் பழிக்கத்தக்க சனிவாரம்-விதிபாதயோகம். நீ செல்லவேண்டிய திசையுங் கிழக்கு. அவவிடததிற்குப் போவாயாகிற் கெடுதிசம்பவிக்கும் என்று சிவபெருமான் தாக்ஷாயணிக்குச் சாற்றினர். எ று.

"ஆதிரை பரணிகார்த் திகை யாயில்ய முப்பூரங் கேட்டை
தீதுறு விசாகஞ் சுவாதி சித்திரை மகமீ ராறு
மாதனங் கொண்டார் தாரார் வழிநடைப பட்டார் மீளார்
பாய்தனிற் படுத்தார் தேரார் பாம்பின்வாய்த தேரை யாமே."—என்றபடியே இப் பன்னிரண்டு நக்ஷத்திரங்களிலும் கடனவிடுதல் பிரயாணஞ்செய்தல் நோயுறுதல தீமை பயக்குமாதலின "கேட்டைநாள" என விலக்கினா. அன்றியும் இதனை,

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

திருக்கோளறுபதிகம்.

"ஒன்பதொ டொன்றொ டேழு பதினெட்டொ டாறு முடனாய நாள்க ளவைதா மன்பொடு நல்ல நல்ல வவைநல்ல நல்ல வடியா ரவர்க்கு மிகவே" — எனனும் தேவாரத்தில், மூன்றுவது சரணததிற பிரயாணத்துக் காகாத பன்னிரண்டு நக்ஷத்திரங்களையுங் குறித்திருக்கின்றனர். அதாவது நக்ஷத்திரங்களின் முதலுற்பத்தி கிருத்திகையாம். ஆதலி னதனை முதலாகக்கொண்டு கணக்கிடுகையில், ஒன்பதாவது நக்ஷத்திரம் பூரம் — ஒன்றென்றது கிருத்திகை - ஏழு ஆயிலியம்—பதினெட்டு பூராடம் - ஆறுமுடனாய நாள்க ளென்றது மேற்கூறிய நான்கும், அவைஅல்லாத எட்டு நக்ஷத்திரங்களுமாம். அவையாவன பூரட்டாதி - மகம்-கேட்டை - பரணி-சுவாதி - விசாகம் - ஆதிரை - சித்திரை எனவும் வருவனவற்றானுணர்க. (அ)

முழுநெறிக் குவளைமென் முகைநெ றிந்தன
மழைமதர் நெடுங்கணிற் சிவப்பு வாய்ந்திட
விழைதவ ழிளமுலைக் கோதை யெந்தைதா
டொழுதன னருள்பெறா டினிவோ டேகினாள்.

(இ-ள்.) முழுச்செம்மை வாய்ந்த குவளைமலரின் மெல்லிய மொட்டு விகசித்ததுபோன்று,குளிர்ச்சிதங்கிய மதர்த்த நெடிய கண்களிற் செம்மைநிறம் பொருந்தும்படி, ஆபரணங்கள் விளங்கும் இளமைதங்கிய தனங்களையுடைய உமாதேவியார் எமது தந்தையாகிய சிவபெருமானது திருவடிகளில் நமஸ்கரித்து, அவரது திருவருளைப்பெறாமல் விரைந்து(தக்ஷயாகத்தைக் காணும்படி) சென்றனர். எ-று.

முழுநெறிக்குவளை—செங்குவளை. (கூ)

குணில்பொரு பல்லியங் குழறி யார்ப்பெழப்
பணிதரு முயர்கணம் பாங்கு சூழ்வர
மணியொளிர் விமானமவிட் டிழிந்து வாணுத
லணிகெழு சாலையி லடைதன் மேயினாள்.

(இ-ள்.) குறுந்தடியா லடிக்கப்பெற்ற பல வாச்சியங்கள் ஒன்றோடொன்று கலந் தொலிக்கவும், வணங்கத்தக்க உயர்வுதங்கிய பதினெண் கணங்கள் பக்கத்திற் சூழ்ந்துவரவும், நவமணிகள் பிரகாசிக்கின்ற விமானத்தினின்றிறங்கி ஒள்ளிய நெற்றியை யுடைய உமையம்மையார் அழகுமிகுந்த (தக்ஷனது) யாகசாலையிலடைந்தனர். எ-று.

குணில்=பறையடிக்குங் கோல். அல்லது ஓர்பறை. பறையெனக்கொண்டால், குணில் முதலாகிய அடிக்கத்தக்க தோற்கருவிகள் எனப் பொருள்கொள்க. (கo)

வெண்ணெய்மெய் பூசிமெல் விரன்ம டக்கியோ
ரண்ணலங் கருங்கலை யுரிவை கையமைத
தெண்ணிரு சடங்கிக ணடுவ ணெய்திய
நண்ணருந் தந்தையைத தாயை நண்ணினாள்.

(இ-ள்.) வெண்ணெயை உடலிற்பூசி மெல்லிய விரல்களை மடக்கிக்கொண்டு பெருமைபொருந்திய அழகிய கருமானுரிவினைக் கையிற்றாங்கி யுள்ள பதினாறு சடங்குகளின் நடுவில் அடைந்திருக்கின்ற கிடைத்தற்கரிய தந்தையாகிய தக்ஷனையும், தாயாகிய வேதவல்லியையும், தாக்ஷாயணியாகிய தேவியார் கண்டனர். எ-று.

நண்ணருந் தந்தை - என்பதற்குப் பொருத்தமில்லாத் தந்தையெனப் பொருள்கொள்க. கெட்ட பாம்பை நல்ல பாம்பு என்றாற்போல எதிர்மறை யிலக்கணையெனினும் பொருந்தும். (கக)

நண்ணிய புதல்வியை யுளக யப்புறாக்
கண்ணொடு தொடுத்தென நோக்கிக் காதலான்
மண்ணமை திரள்புயத் தந்தை மாட்சியாற்
பண்ணிய சிறப்பினைப் பகர வொண்ணுமோ.

(இ-ள்.) (தாம் அழையாதிருந்தும்,தானே) வந்தடைந்த புத்திரியாகிய தாக்ஷாயணியை மனவிருப்பில்லாத கண்ணுடன் கலந்தாற்போலப் பார்த்து ஆசையுடனே அழகமைந்த திரண்ட தோள்களையுடைய பிதாவாகிய தக்கன் பெருமையோடியற்றிய சிறப்புகளை எடுத்துச்சொல்ல (எவராலாயினும்) முடியுமோ? (முடியாது) எ-று. (கஉ)

சிறந்துளீ ரித்துணைச் சிறப்பை யென்னொடும்
பிறந்துளோராப் புகுந்துழி யழைத்துப் பேணுவா
னறிகிலீர் மருகரை யழைத்த போதினின்
மறந்தனீர் போலுமே மழுவ லானையே.

(இ-ள்.) சிறப்புற்று விளங்குந் தாய் தந்தையர்களே! இவ்வளவு மிகுதியாகிய சிறப்பினை என்னுடனொக்கப் பிறந்தவர்கள்போல அவர்கள் வந்தகாலத்தி லழைத்து விரும்பச்செய்ய அறியாமற் போனீர்கள். உங்கள் மருகர்களை யெல்லாம் வரவழைத்த காலத்திலே மழுப்படையேந்திய எனது நாயகனை மறந்துவிட்டீர்கள் போலும். எ-று. (கங)

என்னலுஞ் சுணங்குபூத் தெழில்கு வித்துயர்
பொன்னவி ரிளமுலை பூத்த கொம்பனை
யுன்னுடைக் குற்றமன் றுன்னை யீந்துளோன
றன்னுழைத் தவறினைச் சாற்றக் கேட்டியால.

(இ-ள்.) என்றிவ்வகையாக (தாக்ஷாயணி வருத்தத்துடன்) சொல்லவும் (தக்கன் சாற்றுகின்றான்) தேமல்படர்ந்து அழகே திரண்டு உயர்ந்த பொன்போற் பிரகாசிக்கின்ற இளமைதங்கிய தனங்கள் விளங்கும் பூங்கொம்பை யொத்த எனது மகளே! (அவ்வாறு உங்களை விளியாது விடுத்தது) உன்னுடைய குற்றமல்ல. உன்னை மணஞ்செய்து கொடுத்த சிவனிடத்திலுள்ள குற்றங்களையெல்லாங் கூறுவேன் கேட்பாயாக. எ-று. (கச)

உலகெலாம் படைத்தளித் தொழிக்கும் பண்ணவன்
கலைமதிக் கீற்றணி கடவு ளாமென
மலரய னெனதுள மருட்டிக் கூறலா
லலர்முலை நின்னையா னவனுக் கீந்தனன்.

(இ-ள்.) எல்லா வுலகங்களையுஞ் சிருட்டித்துக் காத்துச் சங்கரிக்கும் பரம்பொருள் சந்திரனது கலைக்கீற்றினை யணிந்த சங்கரனுமென்று, தாமரை மலரிலுள்ள (எனது தந்தையாகிய) சதுர்முகன் எனது மனதைப் பிரமைப்படுத்திச் சொல்லினன் ஆனபடியால், பரந்த தனபாரங்களையுடைய தாயே! உன்னை யான் அவனுக்கு (அறிவின்மையால்) மணஞ் செய்துகொடுத்தேன். எ-று. (கரு)

அடலைமெய் பூசுவ தரவம் பூண்பது
கடல்விட முண்பது கபால மேந்துவ
துடல்சின நரைவிடை யூர்வ தன்னவன்
மடவரல் வேள்வியில் வருதற் பாலனோ.

(இ-ள்.) மகளே! மயானச்சாம்பல் உடலிற் பூசுவது (ஆகிய பூச்சு). சர்ப்பங்களை அணிவது (ஆகிய ஆபரணம்). பாற்கடலிற் றோன்றிய ஆலகாலவிஷம்

உண்பது (ஆகிய உணவு), பிர்மகபாலம் (கையினிடத்து) ஏந்துவது (ஆகிய பிக்ஷா பாத்திரம்), போர்புரிகின்ற கோபத்தையுடைய வெண்மைதங்கிய எருது ஏறுவது (ஆகியவாகனம்), அப்படிப்பட்ட (இழிதொழில்பூண்ட)வன் யாகத்திலேவருதற்கு ரியவனுவானோ? ஆகான், எ-று. (கசு)

என்றலுந் தீயவ னீன்ற யாக்கைநீத்
தொன்றிய நல்லுரு வுறைவல யானெனப்
பொன்றலபோ லுடலமென் போர்வை நீக்கினள்
மன்றரு ழிமயமால வரையிற் றோன்றினாள்.

(இ-ள்.) என்று தக்கனியம்பவும், உமாபிராட்டியார் கொடியோனுகிய இவன பெற்ற சரீரத்தை யொழித்து நனமைபொருந்திய வுடலோடு யான் உயிர் வாழ்வேன என்று, இறத்தல்போலச் சரீரத்தின் மெல்லிய போர்வையை நீக்கினவ ளாகி, வாசனை வீசுகின்றபெரிய இமோற்கிரியிலே (பாவதராஜ புத்திரியாராகப் பா ரவதி யென்னும் பெயருடன்) திருவவதாரஞ் செய்தனர். எ-று.

இச்செய்யுளின் சரிதத்தைக்கந்தபுராணம் பின் வருமாறு கூறும். அதாவது

திருமருவு கயிலைமிசைக் கனகமான
சினகரஞ்சேர் மணடபததுச் சிறந்த சீயப்
பொருவிலெழி லணைமீது கணைமீ ஞட்டப்
பூவையொடு புரமெரிததோன் பொருந்து போதின்
முருகுமலாக் குழலுமையா ளெழுந்து நாதன
முணடகதது ளிணைவணஙகி முன்னு நின்று
குருகுவளைக் குலநெருஙகு கரஙகள் கூபபிக்
குமுதவாய் திறநதினைய கூற லுற்றாள்.

இற்றைவரை வரைவளைத்த காத்தோய் நினனை
யெண்ணாத தக்கனமக ளென்னு நாமம்
பெற்றனன்மே லதுபரிப்ப வெருவி னேனப்
பெயரகல வருடியெனப் பேச லோடுந
தறறுபொழி விமயநெடுஞ் சைல வேந்தன
றன்மகளா யுனைப்பெறுவான றவஞ்செய் கின்றான
மற்றவனபால் வளாநதிடுதி வந்தி யாம்பின
மணத்துமென விடைகொடிம வரையிற சோந்தாள். என்றபடி

பின்னொருகாலததில், திருக்கைலாயகிரியில் நவரத்தினமண்டபத்திலே சி ங்காதனத்தினபேரில் இறைவரோடொப்ப வெரோ யாதனத் திருந்த உமாதேவி யார் எழுந்துஇறைவரைப்பணிந்து "தேவரீரைப் பணியாத தக்கன்மகளென்பத னுலாகிய தாக்ஷாயணி யென்னும் பெயரையும், அவனுற் போஷித்துவளர்த்த வு டலையும் மாறுமாறு வரமருளவேணடும்" எனப் *பிரார்த்திக்க, சிவபெருமான் "பெண்ணே! இமயமன்னன் நின்னை மகளாகப்பெறத் தவஞ்செய்கின்றான். அவன்பால் குழநதைவடிவுகொண்டு சென்று வளர்ந்துவருக. பின்னர் யாம்வந்து மணஞ்செய்வோம்" என்று கட்டளையிட, தேவியார் அக்கட்டளையை மேற்கொ ண்டு ஐயனைப் பணிந்து விடைகொண்டு வெள்ளிமலையை விலகி இமாசலமுற்றுக் குழந்தையாயி ருந்தனர். பர்வதராசன் கணடு தன் அபீஷ்டம் நிறைவேறிய தென்றுதன் மனைவி மேனையால் பால் முதலிய வளித்து வளர்த்துப் பரமனுக்கு மணஞ்செய்வித்தனன்.—என்பதாம். (கஎ)

நண்ணுறு காலையி னுஞ லங்தெனப்
பண்ணவர் யாவரும மையு ளெய்தினர்
மண்ணக நடுங்கின வரைய சைந்தன
விண்ணுரு மதிர்ந்தன மின்னும் வீழ்ந்தவே.

(இ-ள்.) (தாக்ஷாயணி யித்தகைய மாறுபாடு) பொருந்திய காலத்திலே, (ஊழிகாலத்திற்கு ஆகவேண்டிய) காலங்கழிந்தனவென்று தேவர்களெல்லோருந் துன்பமடைந்தனர். பூலோகமுழுவதும் நடுக்கமெய்தின. (அசலமாகிய) மலைகள் சலித்தன. ஆகாயத்திலுள்ள இடிகள் முழங்கின. மின்னலும் விழுந்தன. (இத்தகைய துர்நிமித்தங்கள் நிகழ்ந்தன.) எ-று. (கஅ)

சூறையப் பெருவளி சுழன்றெ ழுந்தன
பாறுவீழ்ந் தமரர்பொன் முடியிற் பாய்ந்தன
வூறுசெங் குருதிவெண் ணுரைதூ ளித்தன
கூறுமுத் தழல்சிகைக் கொழுந்துற் றில்லையால்.

(இ-ள்.) சூறையென்று சொல்லப்படும் பெருங்காற்றுகள் (எல்லாவற்றையும்) சுழற்றிக் கொண்டெழுந்தன. பருந்துகள் விழுந்து தேவர்களது பொன்னாலாகிய கிரீடங்களிற் பாய்ந்தன. காயத்திலுண்டாகுஞ் செவ்விய உதிரமானது வெள்ளிய நுரைகளைத் தூளித்தன. சொல்லுகின்ற (காருகபத்தியமுதலிய) மூன்று (யாக) அக்கினிகளும் உச்சியிலே கொழுந்து விட்டெரியவில்லை. எ-று. (கக)

ஆடகக் குழிசிபெய் யவிகள் யாவையும்
பாடுறு ஞமலிகள் பற்றி வவ்வின
சேடுயர் பரிதியை நோக்கிச் செவ்வனே
கூடுறு நரிக்குழா நனிகு ழைத்தவே.

(இ-ள்.) பொற்குழிசிகளிலே பெய்திருக்கின்ற அவிப்பாகங்களை யெல்லாம் கெடுதல் பொருந்திய நாய்கள்பற்றிக் கவ்விக்கொண்டன. ஆகாயத்தில் உயர்ந்து செல்கின்ற சூரியனைப்பார்த்துத் தொகுதியாகிய நரிக்கூட்டங்கள் செம்மையாக மிகுதியும் ஊளையிட்டன. எ-று. (உ0)

மன்னிய தீமையை நோக்கி மாயனு
மென்னுறு மோவென வுள்ளத் தெண்ணினு
னந்நிலை நோக்கிய தக்க னந்தணீர்
நன்மக மியற்றுதி ரெனக் வின்றனன்.

(இ-ள்.) (இவ்வகையாக) உண்டாகிய துர்நிமித்தங்களை (ஒவ்வொன்றாகப்) பார்த்து விஷ்ணுமூர்த்தியும் என்ன விபரீதம் விளையுமோவென்று மனதிற்கலக்கமெய்தினர். அந்த நிலைமையைப்பார்த்த தக்ஷப்பிரசாபதியோ வேதியர்களே! நல்ல யாகத்தை (யோசனை யற்றுத் தடைசெய்யாமல்) நடத்துவீராகவென்று (சிறிதும் அச்சமின்றிச்) செப்பினன். எ-று. (உக)

தேவி தக்கன் வேள்விச்சாலை யடைந்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உகOச.

உ

சிவமயம்.

எண்பத்தெட்டாவது,

# தக்கன் வேள்வியை யழித்த அத்தியாயம்.

அன்ன வேலையின் மெல்வளி தைவரி னமுதி
னின்ன ரம்பிரங் கிசையெழு மகதியாழ் முனிவன்
பொன்னி னார்ப்பசுங் கொன்றைபைந் தேன்றுளி பொழியுஞ்
சென்னி வானவன் கயிலைமால் வரையினிற் சென்றான்.

(இ - ள்.) அப்படிப்பட்ட காலத்திலே, மெல்லிய காற்று வீசுதலினால் அமுதத்தைக்காட்டிலும் இனிய நரம்புகள் ஒலிக்கும் ஓசையெழுகின்ற மகதிவீணை தாங்கிய நாரதமுனிவர் பொன்போன்ற பூங்கொத்துக்களையுடைய பசிய கொன்றைமாலையானது புதியதேன் றுளிகளைச் சிந்துகின்ற சிரத்தையுடைய சிவபெருமான் வீற்றிருக்கும் பெரிய ஸ்ரீ கைலாயகிரியை யடைந்தனர். எ-று. (க)

ஒள்ள ழற்சிகை தவழ்தர நெட்டுயிர்ப் பெறிந்து
வெள்ள நீரிடைக் கண்மணி நீந்திட விழித்துத்
தள்ள ருந்துய ரோர்வடி வெடுத்தெனத் தாழா
வள்ள லோடிவை யாழ்முனி மென்மெல வழங்கும்.

(இ - ள். நாரதமுனிவர் ஒளிவாய்ந்த அக்கினிக்கொழுந்துவிடப் பெருமூச்செறிந்து பிரவாகமாகிய கண்ணீரிலே கண்மணிக ளிரண்டும் நீந்தும்படி விழித்து, நீக்கற்கரிய துன்பமே யோர் வடிவெடுத்ததுபோல வணங்கிக் கிருபாமூர்த்தியாகிய சிவ பெருமானுடன் (பின்வருமாறு) மெல்ல மெல்ல விண்ணப்பிக்கத் தொடங்கினர். எ-று. (உ)

விரிக திர்ப்பசுந் திங்களங் கண்ணியெம விமல
திருவில தக்கனிற் பழித்தவெந் தீமொழி கேளா
வுருவி ரண்டினிற் றொன்றுரு வொழித்துனர் வரிதா
மருவ மாயின ளுலகெலா மீன்றரு ளன்னை.

(இ - ள்.) பரந்த கிரணங்களையுடைய பசிய சந்திரனை அழகிய சிரோமாலையாகக் கொண்ட பரிசுத்தராகிய எமது சிவபிரானே! சிவஞானச் செல்வமில்லாத தக்கன் தேவரீரை நிந்தித்த வெவ்விய கொடுஞ்சொல்லை எல்லாவுலகங்களையுமீன்ற தாயாகிய ஈஸ்வரியார் கேட்டு, இருவடிவங்களாகப் புலப்படுந் திருவுருவத்தை விலக்கி அறிதற்கருமையாகிய அருவமாயினர். எ-று.

"தன்னின் னென்பவற் றீற்றுவ வன்மையோ - டுறழுநின்னீ றியல்பா முறவே" என்னுஞ் சூத்திரத்தில் உறவே யென்றமிகையால் "வழிபடு தெய்வ நிற்புறங்காக்க" என்றாற்போல "நிற்பழித்த" என ஈண்டு "இயல்பின் விகாரம்" என்னுஞ் சூத்திரவிதி யேற்றது.

உருவி ரண்டினிற் றொன்றுரு வென்றது உயிரொன்று முடலிரண்டுமாக விளங்குதலாலும், சிவபிரானது சத்தியே உமாதேவியாதலாலும். எனக்கொள்க. ()

என்று கூறிட வனையவ ளிறந்துபா டெண்ணி
நன்று நன்றெனப் பண்ணவ னகைபுரிந் திடலுங்
குன்ற மேழ்கட லண்டகோ டிகணிலை குலைந்து
பொன்று காலமே போன்றதச் சீற்றமார் புகல்வார்.

(இ-ள்.) என்று நாரதமுனிவர் சொல்லவே, அத்தாக்ஷாயணியினது மரித்தலை மனங்கொண்டு சிவபெருமான் நன்று நன்றென்று சிரிக்கவும் (அட்டகுல) பர்வதங்களும் சப்தமகா சமுத்திரங்களும் பல்லாயிரங்கோடி யண்டங்களும் (தத்தமது) நிலைகுலைந்து (மகாசங்காரம் வந்து யாவரும்) அழிகின்ற ஊழிகாலமே யொத்திருந்தது. அக்கோபத்தை யாவர்தான் எடுத்துக் கூறவல்லவர் ? எ-று. (சு)

அண்ட கோளகை முகட்டினின் மணிமுடி யறைய
வெண்டி சாமுக மெறும் வலித் தடம்புய மளப்ப
மண்டு செங்கதிர் வடவைகட் கடைதொறும் வழங்கக்
கொண்ட சீற்றத்திற் றோன்றினன் கூற்றின்வெங் கூற்றம்.

(இ-ள்.) அண்டகடாகத் துச்சியில் அழகிய கிரீடமானது ஒலிக்கவும், எட்டுத்திசைப் புறத்தையும் மிகுந்த வலியையுடைய பூரித்த புயங்கள் அளக்கவும், நெருங்கிய செவந்த கிரணங்களைப் பொருந்திய வடவாமுகாக்கினி கட்கடைகடோறுஞ் சிந்தவும், மேற்கொண்ட கோபத்துடனே இயமனுக்கோர் கொடிய இயமனாக விளங்கும் வீரபத்திரக்கடவுள் திருவவதாரஞ் செய்தனர். எ-று.

உக்கிரவிஸ்வரூபத்தோடு பெருமானது கோபத்தினின்று வீரபத்திரர்தோன்றினர் என்பது கருத்து. (ரு)

கூற்றி னுருயிர் குடித்தபொற் குரைகழல் வணங்கி
யாற்றல் சால்பெரும் புவனங்கண் முழுவது மள்ளி
வீற்று வீற்றவாய் விழுங்குகோ விண்ணவர் பதங்கள்
மாற்று கோபெரும் புறக்கடல் முகந்துவாய் மடுக்கோ.

(இ-ள்.) கூற்றுவனது (அழித்தற்கு) அரிதாகிய பிராணனை வதைத்த பொன்னுலாகிய சப்திக்கின்ற வீரகண்டாமணி யணிந்த திருவடியைப்பணிந்து (வீரபத்திரர் விளம்புகின்றனர்) பெருமைபொருந்திய பெரிய அண்டங்களை யெல்லாமெடுத்து வட்டம் வட்டமாக விளங்கும் வாய்களிற்பெய்து விழுங்கவேண்டுமோ ? தேவர்களது பதவிகளை மாற்றிவைக்கட்டுமோ? பெரும்புறக்கடலை மொண்டு பருகட்டுமோ ? எ-று.

இதுமுதல் மூன்று கவிகள் ஒருதொடர் (சு)

மண்ண ருந்துகோ மண்பொதி புனலைவாய் மடுக்கோ
தண்ண றும்புனல் பொதிதழல் விழுங்குகோ தழல்சூ
ழுண்ண லம்பெருங் காற்றினை நுங்குகோ வவைசூழ்
விண்ண யின்றகட் டொருபுடை கிடத்தினன் விடுக்கோ.

(இ-ள்.) உலகை யுண்ணட்டுமோ? நிலத்தைச் சூழ்ந்திருக்கும் (சமுத்திர) ஜலத்தைக் குடிக்கட்டுமோ? குளிர்ச்சிவாய்ந்த நல்ல (சமுத்திர) ஜலத்திற் பொதிந்திருக்கும் (வடவாமுக) அக்கினியைப் புசிக்கட்டுமோ? நெருப்பைச் சூழ்ந்து

எரியச்செய்கின்ற பெருமைவாய்ந்த அழகிய பெருங்காற்றினை விழுங்கட்டுமோ? அவற்றையெல்லாம் சூழ்ந்து நிற்கும் ஆகாயத்தைப் புசித்துவயிற்றினோர் பக்கவில் அடக்கிவிடுக்கட்டுமோ? எ-று.

"மண், மண்பொதிபுனல், புனல்பொதிதழல், தழல்சூழ்காற்று, (மண்ணு திய) அவை சூழ்விண் "எனவுங் கூறியது எற்றுக்கெனின், பிருதிவி அப்புவிலும், அப்பு தேயுவிலும், தேயுவாயுவிலும், வாயு ஆகாயத்திலும் தோன்றி அத்தோன்றிய அடைவே லயமடைவதியற்கை எனக்கொள்க.

பஞ்சபூதங்களையும் வயிற்றிலடக்கட்டுமோ வென்பது கருத்து. (எ)

உலகம் யாவையு முண்டவன் றனையெடுத் துண்கோ
கலைமு தற்பெய ரளவில்பல் காலமுங் கலக்கோ
பொலன்மு கட்டுயர் மேருவைத் துகள்படப் புடைக்கோ
கொலைசெ யுங்கொடுங் கூற்றுடல் பிழிந்துயிர் குடிக்கோ.

(இ-ள்.) எல்லாவுலகத்தையு மயின்ற மாதவனை யெடுத்து வாய்மடுக்கட்டுமோ? கலைமுதலாகச் சொல்லப்பட்ட அளவில்லாத பல காலவளவைகளைக் கலக்கிவிடட்டுமோ? அழகிய உச்சியையுடைய உயர்வாகிய மேருபர்வதத்தைப் பொடியாகப்போம்படி அடிக்கட்டுமோ? (பிராணிகளை யெல்லாம்) கோறல்புரியும் கொடிய எமனது உடலைப் பிழிந்து உயிரை யுண்ணட்டுமோ? எ-று.

பரமாணு இரண்டுகொண்டது அணு. அது மூன்றுகொண்டது திரிசரேணு. அது மூன்றுகொண்டது துடி. அது மூன்றுகொண்டது வேதை. அது மூன்றுகொண்டது லவம். அது மூன்றுகொண்டது நிமிஷம். அது மூன்றுகொண்டது கணம். அது ஐந்துகொண்டது காட்டை. அது பதினைந்துகொண்டது லகு. அது பதினைந்துகொண்டது கன்னல் அல்லது கடிகை. அது இரண்டுகொண்டது முகூர்த்தம். அது பதினைந்துகொண்டது பொழுது. அது இரண்டுகொண்டது தினம். அது பதினைந்துகொண்டது பட்சம். அது இரண்டுகொண்டது திங்கள். அது இரண்டுகொண்டது இருது. அது மூன்றுகொண்டது அயநம். அது இரண்டு கொண்டது ஆண்டு என்று சொல்லப்படும். ஆண்டு அல்லது வருடம் நூறுகொண்டது மாநுடர் ஆயுள்காலம். மேற்கூறிய மாநுஷநாள் முப்பதுகொண்டது தென்புலத்தோர்க்கு ஒருநாள். அவ்வழியெய்திய திங்கள் பன்னிரண்டுகொண்டது தேவர்க்கு ஒருநாள். அவ்வகைய நாள்கள் கூடிய ஆண்டு பன்னீராயிரங் கழிந்தால் தேவர்க்கோர் ஊழியாம். நால்வகை யூழி யாயிரஞ் சென்றாற் பிரமனுக்கு ஒருபகல். அவ்வகைய நாட்களாலாகிய ஆண்டு நூறு பிரமனது ஆயுள்காலம். அவ்வகையபிரமர் ஒருகோடிய ிறப்பின் திருமாலுக்கு ஒருபகல். அவ்வகைய நாட்களாலாகிய ஆண்டு நூறு விண்டுவின்காலம்.

இன்னும் விரிப்பிற் பெருகும். அகலம் புராணத்துட் காண்க. கலையென்பதைப் பரமாணு எனக்கொள்க. (அ)

பணித்தல் யாதெனத் தொழுதலும் வீரபத் திரகேள்
தணிப்ப ருந்திறற் றக்கனீண் மவுலியஞ் சென்னி
துணித்து மற்றவ னுற்றிய வேள்வியுந் தொலைத்துக்
கணித்த பேருல கனைத்தையுங் கனற்றிட லென்றான்.

(இ-ள்.) (தேவரீர் அடியேனைச் செய்யும்படி) கட்டளையிடுவது யாது? என்று விண்ணப்பித்து நமஸ்கரிக்கவும், வீரபத்திரா! கேட்பாயாக. அடக்குதற் கரிதாகிய ஆற்றலையுடைய தக்கனது நெடிய கிரீட மணிந்த அழகிய சிரத்தைச் சேதித்து அவன் செய்த யாகத்தையும் அழித்து (விடுக. ஆனல்), அளவுபடுத்திய பெரிய வுலகமுழுவதையும் எரித்துவிடாதே என்று சிவபெருமான் ஆக்கியா பித்தனர். எ-று. (௯)

என்ன லோடுமவ் வீரபத் திரனெனு மிறைவன்
மின்னு நக்கவா ளெயிற்றினர் வியனிலஞ் சுமந்த
பன்ன கத்தினில வீக்கிய கச்சினர் படையா
தன்னை யொப்பவ ரளப்பிலா ருயிரடயினிற் றந்தான்.

(இ-ள்.) என்று சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளவும், அந்த வீரபத்திர ரென்னுந் திருநாமத்தினையுடைய தலைவர், மின்னலைவீசுகின்ற ஒளிதங்கிய பல்லை யுடையவர்கள்-பெரிய நிலவுலகத்தைத் தாங்கும் நாகங்களைக் கட்டிய கச்சாக வுடையவர்கள்-சேனையாகத் தம்போன்றவர்களை யுடையவர்கள் (ஆகிய) எண்ணிடப்படாதவர்களைத் தமது சுவாசத்தினின்றும் தோன்றுவித்தனர். எ-று. (௰)

கூன்பு றத்தசெங் கட்கரும் பன்றிவெண் கோடு
மூன்க ழிந்தமோட் டாமையின் புறத்தவெள் ளோடுங்
கான்ப ழுத்தபைந் துளவினேன் கழித்தவெண் டலையும்
வான்பொ றுத்துயர் முடிதொறு முடிதொறும் வயங்க.

(இ-ள்.) வளைவாகிய முதுகையுடைய செவ்விய கண்ணமைந்த கறுப்பு நிறம்பொருந்திய பன்றியின் தாவள்யமான கொம்பையும், மாமிசமொழிந்த பெருமைதங்கிய யாமையின் முதுகிலுள்ள வெள்ளிய வோட்டையும், மண மிகுந்த பசிய துளவமாலையணிந்த திருமாலின் உடலினின்று கழிந்த வெண்டலையோட்டையும், அண்டமுகட்டை யளாவும்படி யுயர்ந்த ஆயிரம் முடிகளிலும் விளங்கத்தரித்தும். எ-று.

இதுமுதல் ஏழு பாடல்கள் குளகம்.

பன்றிவெண்கோடு-ஆமைவெள்ளோடு என்னு மிவற்றையணிந்த சரிதங்களைச் சிவபராக்கிரமத்தில் முறையே வராஹசம்ஹாரம்-கூர்மசம்ஹார கட்டங்களிற் கண்டுணர்க. இவையும் துளவினேன் கழித்த வெண்டலையெனபதும் முன்விளக்கப்பட்டுள்ளன. சிவமூர்த்தங்களாகிய இலிங்கம்முதல் சிஷ்யபாவ மீறாகவுள்ள அஷ்டாஷ்டமூர்த்தங்களுள் வீரபத்திரமூர்த்தமு மொன்றாகலின், சிவபெருமானது திருமேனியைப்போல காளகண்டம் -சதுர்ப்புஜம் - மான் - மழு - கங்கை - திங்கள் - சர்ப்பகங்கணம் - புலியதளுடை முதலியன இவவிறைவர்க்கு முண்டெனக்கொள்க. ஆயிரஞ்சிரமும் ஈராயிரங் கரமும் வீரபத்திரர்க் குளவாகலின் "முடிதொறு முடிதொறும்" என்றார். (கக)

குருதி நீர்படிக் தாடுவெங் கணிச்சிவேல் குலிசம்
பரிதி வாளெழுத் தோமரங் கப்பணம் பலகை
யெரிக விழ்க்குமுத் தலையவே லிவைமுதற் படைகள்
பொருவி றோள்களீ ராயிரந் தரித்தனன் பொலிய.

(இ-ள்.) உதிரவெள்ளத்தில் மூழ்கிக் குளிக்கின்ற கொடிய மழுப்படை - வேலாயுதம் - வச்சிராயுதம் - சூரியகாந்தியை வீசும் வாளாயுதம் - எஃகினாற்செய்த வுலக்கை - கைவேல் - கேடகம் - நெரிப்பைச் சொரியும் மூன்று சிரத்தையுடைய வேலாகிய சூலப்படை - இவைமுதலாகிய (போர்க்குரிய இரண்டாயிரம் வகைப்பட்ட) ஆயுதங்கள் சமானமில்லாத ஈராயிரந் தோளில் தரித்துவிளங்கவும். எ-று.

தோமரம்=இருப்புலக்கை. ஈண்டு எழுத்தோமர மென்றது எஃகும் ஓர்வகை யுயர்ந்த விரும்பாதலின் எனக் கொள்க. கப்பண மென்பதற்குக் கைவேலேயன்றி இருப்புநெருஞ்சின்முள் என்றும் கவசமென்றும் பொருள்கோடலுங்கூடும்.

நீறு பூத்தொளிர் நெற்றியங் கட்கடை பொழிதீ
பாறு சூழ்வரு படைதொறும் படைதொறு முமிழ்தீ
யீறு செய்துல கொளித்திட வேந்திய தெறுதீ
மாறு கொண்டுசெந் தழற்சிகை மாலையிற் றவழ.

(இ-ள்.) திருவெண்ணீறு விளங்கிப் பிரகாசிக்கும் நெற்றியிலுள்ள அழகிய கட்கடைகளினின்று சிந்துகின்ற (கோபத்) தீயும், பருந்துகள் சூழ்ந்துவரத்தக்க எல்லாப் படைகளினின்றுங் கக்குகின்ற அக்கினியும், உலகத்தையெல்லாம் முடிவுசெய்து அழிக்கும்படி (திருக்கரத்து) ஏந்திய (ஊழித்தீயையொத்த) மழுப்படையாகிய அக்கினியுடன் பகைமைகொண்டு செவவிய அக்கினிக்கொழுந்தை வீசுகின்ற மாலைபோல விளங்கவும். எ று.

செந்தழற்சிகைமாலையிற்றவழ என்பதற்குச் செம்மைநிறம்பொருந்திய தீயான்று (பிரமவிஷ்ணுக்களின்) சிரோமாலையோடு பிரகாசிக்க என்றுவது செந்தழல் என்பதனைச் சிகை யென்பதற்கு விசேஷணமாகவாவது கொள்ளவுந்தகும். ()

படக மாகுளி முடுகுபே ரிகைவயி ராம்பை
குடவ யிற்றுவெண் சங்கினங் குடமுழா முதல
வெடிப டத்தனி யதிர்ந்துவான் வெளிமுக டுடைந்து
கடையு கத்தெழு கடலுடைந் தரலெனக் கறங்க.

(இ-ள்.) படகம் - ஆகுளி - முடுகிச்செலுத்தும் பேரிகை-வயிர் - ஆம்பை-குடம்போன்ற வயிற்றையுடைய வெள்ளிய (வெற்றிச்) சங்கங்கள், குடமுழாமுதலிய வாச்சியங்கள்-வெடிபடும்படி ஒப்பற்று அதிர்ந்து ஆகாயவெளியின் உச்சியானதுடைந்து யுகாந்தத்திலே சத்தசமுத்திரங்களும் பெருக்கெடுத்துவந்ததுபோல முழங்கவும். எ று.

படகம்=இரணபேரிகை. ஆகுளி=சிறுபறை. வயிர்=ஊதுகொம்பு. ஆம்பை=இரட்டைப்பேரி. மற்றவை வெளிப்படை. (கச)

மற்ப ழுத்ததிண் டோளுடைத் திறன்மணி மானுங்
கொற்ப ழுத்தவெம் முரட்படை நந்தியுங் குழைந்த
விற்ப ழுததுமிழ் வெங்கணைச் சண்டனும் விரிந்த
வற்ப ழுத்தமெய்க் காளியு மதிர்ந்துமுன் னடப்ப.

(இ ள்.) மல்யுத்தத்திற் பழகிய வலிய தோள்களையுடைய மணிமானும், கொலைத்தொழில் மிகுந்த வெவ்விய வலிதங்கிய ஆயுதமேந்திய நந்தியும், வளைந்த

வில்லானது பழுத்துச் சிந்துகின்ற வெவ்விய பாணங்களையுடைய சண்டனும், பர ந்துள்ள இருணிறமிகுந்த சரீரத்தையுடைய காளிகாதேவியும் ஆர்ப்பரித்து (வீர பத்திரப்பெருமானுக்கு) முன்செல்லவும். எ-று.

மணிமான் - நந்தி - சண்டன் முதலானோர் சிவகணநாதர். காளியம்மை வீர பத்திரர் மனைவி. தேவியார் கோபாக்கினியால் வீரமாகாளி தோன்றினள் என வும், இறைவர் கட்டளைப்படி வீரபத்திரர் மனைவியாகக் கொண்டனர் எனவும், சிலநூல்கள் கூறும். (கரு)

வெருவ ருந்திறல் வாளினர் வேலினர் வெகுளி
னொருவ ரண்டங்கள் யாவையு மொருங்குவாய் மடுக்கும்
பொருவி லாற்றலர் பொருப்புறழ் தோளினர் பொங்கி
யிரும ருங்கினு மெண்ணருங் கணத்தொடர்ந் தேக.

(இ-ள்.) அஞ்சத்தக்க வல்லமையுடைய வாளேந்தியவர்கள் - வேலைத்தா ங்கினவர்கள்-ஒருவர் கோபமுற்றால் எல்லா அண்டங்களையும் ஒன்றாக வாய்ப்பெ ய்துண்ணும் ஒப்பில்லாத பராக்கிரம முடையவர்கள் - மலையைப் போன்ற தோளை யுடையவர்கள் (ஆகிய) கணக்கில்லாத கணநாதர்கள் கோபம்பொங்கி இருபக்கங் களிலுந் தொடர்ந்து செல்லவும். எ-று. (கசு)

அலரி மண்டலம் வீழ்தரு மத்தமால் வரையும்
பொலன்கு கட்டுயர் மேருவும் புணரிசூழ் வரையு
நிலைகு லைந்திடச் சேடனு நெடுமுது குளுக்க
மலைந டந்தென நடந்தனன் வயங்கெழு வீரன்.

(இ-ள்.) சூரியமண்டலம் வீழ்ந்துமறையும் பெரிய அஸ்தமயகிரியும், அழ கிய சிகரத்தையுடைய உயர்வாகிய மேருமலையும், சமுத்திரத்தைச் சூழ்ந்த (சக்ர வாள) கிரியும் (முதலாகிய அசலங்களெல்லாம் தத்தமது) நிலைதடுமாறி (சலித்து) நிற்கவும், ஆதிசேடனுந் தனது நெடிய முதுகை யசைக்கவும், பர்வதமானது (அ டிபெயர்த்து) நடந்தாற்போல வெற்றிமிகுந்த வீரபத்திரக்கடவுள் நடந்தனர்.

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே" என்றபடி அத்தகி ரியைக் கூறியதனால் அதற் கேற்ப உதயகிரியையும், மேருமலைக் கேற்ப அஷ்ட குலபர்வதங்களையும் சக்கரவாளத்தைக் கூறினமையின் அதற் குட்பட்ட எல்லாப் பர்வதங்களையுங்கொள்க. (கஎ)

மிடைந்து சேனைமுன் னடத்தலும் விரிதுகட் படலம்
படர்ந்து தெண்டிரை பொருமெழு கடல்திடர் படுத்தி
மடந்தை பாகனை யிகழ்ந்துயர் மகவினை புரிவா
னடைந்த வானவர் கட்புலஞ் செம்மிய தன்றே.

(இ-ள்.) (சிவகணச்) சேனைகள் நெருங்கி முன்னே நடக்கவும், பரந்தெ ழுந்த தூசாலாகிய படலம் பரவி, தெளிவாகிய அலைகள் மோதுகின்ற சத்தசமுத்தி ரத்தையும் மேடாக்கி, பார்ப்பதிபாகராகிய சிவபிரானை நிந்தித்து உயர்வாகிய யாகச் செயலை யியற்றும்படி சேர்ந்துநின்ற தேவர் தொகுதியின் கட்புலனை மூடியது.

அறைக ருங்கழற் கொடிப்படை யார்ப்பொலி கேளாச்
சிறகர் வண்டுளர் பசுந்துழாய்ச் செங்கண்மான் முதலோர்

முறைதிறம்பியிவ் வுலகெலா முதலொடு முடியு
மிறுதி யின்றென நினைவுழிச் சேனைசென் றிறுத்த.

(இ-ள்.) ஒலிக்கின்ற வலிதங்கிய வீரகண்டாமணி - துவசங்கள் - சேனைகள் ஆகிய இவற்றின் ஆரவாரம்பொருந்திய வோசையைக் கேட்டு வண்டுகள் சிறகினை யுதறுகின்ற பசிய துழாய்மாலை சூடிய செவ்விய விழிகளையுடைய திருமால் முதலாகிய தேவர்கள், முறைதவறி இவவுலகமுழுவதும் அடியோடழியுஞ் சர்வசம்ஹாரகாலம் இன்றுதான் (வந்து சம்பவித்தது) என் றெண்ணுகையில், (வீரபத்திரரது) சேனைகள் சென்று சேர்ந்தன. எ-று.

உலகத்திற்குக் காலவளவை அநாதியே யிறைவராற் கூறப்பட்டுளதாதலின், அத்தகைய காலஞ் சமீபியாமலே ஊழிவரும்போ லிருத்தல் நோக்கிக் கூறினரென்பார் "முறைதிறம்பி ...... இறுதியின்று" என்றார். (௧௯)

சேட்டி ளங்கதிர்ச் செல்வன தொளிகெடச் சிரிக்கு
மோட்டு மாமணிச் சாலையின் மொய்சுடர்த் தெறுதீ
யூட்டி னார்சிலர் சிலர்மணி யூபங்க ளொடித்தார்
வீட்டி னார்சில ரமரரைச் சிலரவி மிசைத்தார்.

(இ-ள்.) பெருமைதங்கிய இளங்கிரணங்களையுடைய சூரியனது பிரகாசமுங் கெடும்படி ஒளிசெய்கின்ற உயர்வாகிய பெரிய நவமணிகள் பதித்த யாகசாலையில், சில சேனாவீரர்கள் நெருங்கிய சுடர்செய்து கொல்கின்ற தீயூட்டினார்கள். சில சேனைத்தலைவர்கள் அழகிய யூபஸ்தம்பங்களை யொடித்தெறிந்தார்கள். சில சேனாநாயகர் தேவர்களைக் கொன்றார்கள். சில சேனாபதிகள் அவிப்பாகங்களைப் புசித்தார்கள். எ-று.

யூபஸ்தம்பம் என்பது யாகசாலையில் யாகப்பசுவைக் கோறல்புரியுமுன் கட்டிவைக்கும் ஓர் கட்டுத்தறி. (௨0)

அண்ட கோளகை முகட்டினிற் சிலர்தமை யடித்தார்
மண்டு தீம்புனற் கடலிடைச் சிலர்தமை மடுத்தா
ரெண்டி சைக்கரி பற்றினர் சுற்றின ரெறிந்தார்
கொண்ட லேழையு மழலெழ முறுக்கினர் குடித்தார்.

(இ-ள்.) (வேறு சிலவீரர்கள்) அண்டகடாகத்துச்சியில் (விழும்படி) சிலரை (பந்துபோல்) விசிறினார்கள்; நிறைவாகிய மதுரம்பொருந்திய நீர்மயமான சமுத்திரத்திலே சிலரை வீழ்த்தினார்கள்; அஷ்ட திக்கஜங்களையும் பிடித்து (கரகரவெனச்) சுழற்றிவிடுத்தார்கள்; சத்தமேகங்களையும் நெருப்பெழும்படிப் பிழிந்து (தாகந்தணியக்) குடித்தார்கள். எ-று.

எண்டிசைக்கரிகளாவன :— ஐராவதம் - புண்டரீகம் - வாமனம் - குமுதம் அஞ்சனம் - புட்பதந்தம் - சார்வபூமம் - சுப்பிரதீபம் என்பன. இவைமுறையே கிழக்காதி வடகிழக்கீறாக எட்டுத்திசைகளிலும் உள்ளன.

கொண்டலேழாவன :—சம்வர்த்தம் - ஆவர்த்தம் - புஷ்கலாவர்த்தம் - சங்காரித்தம் - துரோணம் - காளமுகி - நீலவருணம் என்பன. இவைமுறையே மணிநீர் - பொன் - பூ - மண் - கல் - தீ இவற்றைப் பொழியத்தக்கன.

தீம்புனற்கடல் என்பது சத்தசமுத்திரங்களில் தூரத்துள்ள சுத்தநீர்க்கடல் எனக்கொள்க. (உக)

ஓங்கு முத்தழ லவித்தனர் சிலர்சில ரோடி
வீங்கு தூணிடை யாத்தபல் பசுக்களை விடுத்தார்
பாங்கி னிற்சில ரியக்கர்கின் னரர்பதை பதைத்து
மூங்கை போலுற நாவினை முதலொடு மறுத்தார்.

(இ-ள்.) சில கணங்கள் உயர்கின்ற மூவகைப்பட்ட யாகாக்கினிகளை யவித்தார்கள்; சிலர் விரைந்துசென்று பூரித்த யூபஸ்தம்பங்களிற் கட்டிய பல யாகப்பசுக்களை (கட்டவிழ்த்து) விடுத்தார்கள்; நடுவே சிலர் யக்ஷ கின்னரர்களைப் பதைபதைத்து ஊமைகள்போலாக அவர்களது நாக்களை அடியோடறுத்தெறிந்து விட்டார்கள். எ-று. (உஉ)

குடங்கை யிற்சில ரேழ்கட லள்ளினர் குடித்தார்
விடங்க விழ்த்திடச் சேடனை வேரொடும் பிடுங்கிப்
படங்கி ழித்தனர் சூட்டுடைப் பருமணி பறித்து
வடங்க ளாமெனக் கோத்தனர் மார்பினி லணிந்தார்.

(இ-ள்.) சிலர் குடம்போன்ற தமது கைகளால் ஏழுசமுத்திரங்களையும் அள்ளிக்குடித்தார்கள்; விஷநீரைச் சொரியும்படி ஆதிசேடனை அடியோடு பறித்து அவனதுபடத்தைக் கிழித்தார்கள். (ஆயிரம்) உச்சிக்கொண்டையிற் பொருந்திய பருத்த மாணிக்கங்களைப் பறித்துத் தாவடம்போலக் கோவைசெய்து தமது மார்பில் தரித்தார்கள். எ-று. (உ௩)

பாழி மால்வரை முழுவது மடியொடும் பறித்துப்
பூழி பட்டிடச் சிலர்விர னுதியினிற் புடைத்தா
ராழி வெற்பினை யகழ்ந்தெடுத் தொருகுறட் பூதக்
தாழ்த டக்கையிற் கங்கண மெனத்தரித் ததுவே.

(இ-ள்.) சிலர் அகலமாகிய பெரிய மலைகளையெல்லாம் அடியோடகழ்ந்தெடுத்துப் புழுதியாகும்படி விரல் முனைகளால் அடித்தார்கள். ஒரு குறுகிய பூதமானது கடலைச்சூழ்ந்திருக்கின்ற சக்ரவாளகிரியைத் தோண்டியெடுத்துத் தொங்குகின்ற விசாலமான கையிலே கங்கணமென்று (கண்டோர்) சொல்லும்படி யணிந்துகொண்டது. எ-று. (உச)

அனைய காலையி னடுகளத் தாரம ரேற்றுக்
கனை கடாக்களி செருக்கலிற் கண்படை பெறாத
பனைநெ டுங்கரத் தடலயி ராவதப் பகட்டின்
புனையெ ருத்தமேற் றோன்றினன் வயிரவாட் புனிதன்.

(இ-ள்.) அக்காலத்திலே கொலைசெய்யும் போர்க்களத்திற் பொருந்திய யுத்தஞ்செய்து, நிறைவாகிய மதசலம்பொழியுங் களிப்புடைய அகங்காரத்தினால் நித்திரைசெய்யாத பனைமரம்போன்ற நெடிய துதிக்கை யமைந்த வலிதங்கிய ஐராவதமாகிய (வெள்ளை) யானையின் அழகிய முதுகின்பேரில் வச்சிரவாளாயுதமேந்திய தேவேந்திரன் (போர்க்கோலங்கொண்டு) தோன்றினன். எ-று. (உரு)

வயிர வாட்படை விண்ணவன் மண்டமர்க் கெழலுஞ்
செயிரு டைக்கொடுந் தழற்கிறை தெண்கடற் செல்வ
னுயிர்கு டிக்கும்வெங் கூற்றுவ னிருதிவேந் தலவை
வெயிலவி ரிக்கும்வே லியக்கர்கோ னோடமர் விளைத்தார்.

(இ-ள்.) வச்சிரவாளாயுதமேந்திய இந்திரன் போர்புரிய நெருங்கிவரவும், கோபத்தையுடைய கொடிய நெருப்புக்கிறைவனாகிய அக்கினி-தெள்ளிய சமுத்திரத்தைத் தனதாகவுடைய வருணன்-(ஜீவான்மாக்களின்) பிராணனை வதைசெய்துண்ணுங்கொடிய இயமன் - நிருதிமன்னன் - வாயு - வெயிலைக்கக்குகின்ற வேலாயுதந்தாங்கிய யக்ஷர்தலைவனாகிய குபேரன் - ஆகிய இவர்களும் பெரும்போர் புரிந்தார்கள். எ-று.

ஓடு=நீளுதல். ஈண்டு மிகுதி எனப்பொருள் (௨௬)

மரக தப்பசும் புரவியூர் வயங்கொளித் தடந்தேர்ப்
பொருவி லாதபர் பொழிகதிர்த் திங்களங் கடவுள்
வெருவ ருந்திறன் மருத்துவர் விறல்கெழு வசுக்க
ளிருவி சும்புறை தேவர்மற் றெவருமேற் றெழுந்தார்.

(இ-ள்.) மரகதரத்தினம்போன்ற பச்சைநிறந்தங்கிய எழுபுரவியைச் செலுத்துகின்ற ஒளிதங்கிய விசாலமான தேரையுடைய சமானமில்லாத சூரியர் - நிலவைச்சிந்துகின்ற அழகிய சந்திரபகவான் - அஞ்சத்தக்க வல்லமைவாய்ந்த மருத்துக்கள் - பராக்கிரமமிகுந்த அஷ்டவசுக்கள் முதலாகிய பெரிய தேவலோகத்தில் வாழ்கின்ற தேவர்கள் எல்லாரும் போர் மேற்கொண்டெழுந்தார்கள். எ-று.

ஏற்றெ ழுந்துவாய் காய்ந்தொளிர் வெந்தழ லிறைக்கும்
பாற்றி னஞ்சுழல் பரிதிவேல் தோமர முசுண்டி
யூற்றி ருந்துசெங் குருதிகொப் பளிக்குமொண் பகழி
யாற்றல சால்கண நாதர்மேல் விடுத்துநின் றார்த்தார்.

(இ-ள்.) (இமையவர் இவ்வாறு அமர்) மேற்கொண்டெழுந்து, முனைகாய்ந்து, பிரகாசிக்கின்ற கொடிய நெருப்பைச்சிந்துவதும், பருந்துகூட்டங்கள் (பின்பற்றிச்சென்று) சுழலத்தக்கதுமாகிய ஒளிபொருந்திய வேலாயுதம் - இருப்புலக்கை-முசுண்டி - ஊற்றெடுத்துச்செவ்விய உதிரத்தையொழுக்குகின்ற ஒள்ளிய அம்புகள் (ஆகிய) இவற்றை வலிமிகுந்த சிவகணத்தலைவர் மீதிற்பிரயோகித்து எதிர்நின்று ஆர்ப்பரித்தார்கள். எ-று. (௨அ)

கைம்மு கந்தெறி நாணிடிக் குரலொலி கலிப்பத்
தெம்மு கந்தலை பனிப்புறக் கொடுங்கணை சிந்த
வம்ம வோவெம தாற்றலன் றுயதென் றழன்று
கொம்மை கொட்டினன் நந்திவெள் விடையுயர் கொடியோன்.

(இ-ள்.) கையினால் தெறிக்கின்ற (வில்) நாணானது இடியின் கர்ச்சனைபோல ஒலிப்பவும், போர்க்களத்தில் (உற்றோர்) சிரநடுக்கமெய்தவும் கொடிய அஸ்திரங்களைச்சொரிய, ஆ! ஆ! எமது வல்லமை நன்றாகமுடிந்தது என்று கோபித்துக் கைகொட்டினன். வெள்ளிய இடபத்தை யுயர்த்திக் கொடியாகப்பிடித்த நந்தியெனப் பெயரிய நாயகன். எ-று. (௨௯)

கைம்முகம் எனபதில முகம் என்னும் ஏழனுருபு கருவிப்பொருளதாகிய மூன்றனுருபினிடத்து நின்றது. "யாத னுருபிற் கூறிற் ருயினும் - பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும" என்ருராகலின. கைம்முகம் எனபதற்குக் கையால் எனபது பொருள். (உக)

செந்த சைப்புல வொழிந்திடா திடிக்குலஞ் சிதறு
மைந்து டைக்கொடுங் குலிசம்வா னவர்க்கிறை வழங்க
நந்தி யேந்திய வெந்திறற் கணிச்சிமுன் னண்ணி
வெந்து சாம்பராய் வீழ்தலு மகபதி வெகுண்டான்.

(இ-ள்.) (பகைஞரது) செவவிய மாமிசத்தின்புலால் நாற்றமருமல் இடிக் கூட்டஙகளைச் சிந்துகின்ற வலிமையுடைய கொடியவச்சிராயுதத்தைத் தேவர் தலைவனுகிய இந்திரன பிரயோகிக்க, (அஃது) நந்தி நாதன கையிற்பற்றிய கொடிய வலியுள்ள மழுப்படை முன்குறுகி (அதன வெப்பத்துக்காற்ருமல்) எரிந்து சாம்பலாகி விழவும, இநதிரன் கோபித்தனன். எ-று. (௩௦)

கொற்ற வெஞ்சிலை குழைபசீள் குடுமிகாண் கொளுவி
யறற மிலகணை யமராகோன் பொழிதலு மையன்
பற்றி யாங்கவ னடலயி ராவதப் பகட்டைச்
சுற்றி வாய்வழி குருதிநீர் சொரிதரப் புடைத்தான்.

(இ-ள்.) வெற்றிபயக்குங் கொடிய வில்லான துவளையும்படி நெடிய உச்சிகளில் நாணேறறிச் சோர்வில்லாத அம்புகளை இந்திரன் (மழைபோலச்) சொரியவும, நந்தி நாயகன அபபொழுது அவனது வலிதங்கிய ஐராவதமென்னும் யானையைப் பிடிததுசசுறறி வாயினின்று உதிரவெள்ளம ஓடும்படி அடித்தனன். எ-று.

புயலு கைத்தெழு மமரர்கோன் போரினுக் காற்ருன்
குயிலு ருக்கொடு பறததலு நஞ்சுகொப் பளிக்கு
மயிலெ யிறறவெம பஃறலை யரவகங் கணத்தோன்
பயிலகொ டுஞ்சிறை யங்கையாற பற்றினன் பறித்தான்.

(இ-ள்.) மேகத்தை வாகனமாக ஏறிச்செலுத்தும் இந்திரன் சமர்செய்யச் சகியாதவனுய், குயில் வடிவங்கொண்டு பறந்தோடிப்போகவும், விஷநீரைக் கக்குகின்ற கோரைப்பல்லையுடைய வெவவிய பலதலைகள் பொருந்திய சர்ப்பகங்கணந்தரித்த நந்திநாயகன் (அவவிந்திரக் குயிலை) பிடித்துப் பறக்கின்ற கொடிய சிறகுகளைத் தமது அழகியகையினுற் பறித்துவிட்டனன். எ-று.

நாகஙகட்குள்ள காளீ-காளாஸ்திரி - யமன - யமதூதன் என்னும் நான்கு கோரைப்பற்களே விஷமுடையனவென்றும, அவற்றில் தொளைகளிருக்குமென்றும், ஒருவனைத்தீண்டியவுடனே அதன் விஷப்பையிலிருக்கும் விஷமானது அந் நான்கு பற்களின் தொளைவழி கடிவாயிலிறஙகுமென்றும் கூறுவது ஆயுள்வேத நூலார் கூற்று ஆகலின் "நஞ்சுகொப் பளிக்கு மயிலெயிற்றவரவம்" எனப்பட்டது. (௩௨)

ஏழ்த டங்கிரி யேழ்கட லேழ்பெருந் தீவும்
பாழி வாயிடைப் புகுத்தியும் பசிகெடா தழலுங்

காழ்நி றத்தன கூளிவெங் கனலிநா வேழும
போழ்ப டுமபடி குறைத்துயா கொடிற்றிடைப் புடைத்த.

(இ-ள்.) விசாலமாகிய சத்தபர்வதங்களேயும் சத்தசமுத்திரங்களேயும் பெரிய சத்தத்வுகளேயும் பெரியவாயிற்புகவிடுத்தும்பசிதணியாமல், (எதைப்புசிக்கலாமென்று) அலைகின்ற ஒளிபொருந்திய நிறத்தையுடைய பூதமானது அக்கினிதேவனது ஏழுநாக்களேயும் பிளவுபடும்படி யறுத்துத்தள்ளி, உயர்வாகிய கன்னத்திலறைந்தது. எ-று.

அக்கினிதேவனுக்கு நாவேழெனக் கூறப்பட்டுள்ளது. அவவேழும் ஈண்டறுபட்டன வென்க. அக்கினியின கைகளேயறுத்ததாகவுஞ் சில நூல்கள் கூறும. "எழுநா-வானத் தமரிந்தார்' என்றா புலியூர் வெண்பாவிலும். (௩௩)

செங்கட் கார்நிற மேதியின றிரண்மருப பொடித்து
வெங்கட் கூற்றினைப் பிடித்தழல விழியிணை பிதுஙக
வங்கைப் பாசத்திற் கழுத்தினி லிறுக்குற வாரததுத
துங்க மௌலிநுண் டுகள்படத் துகைத்தனன் சண்டன்.

(இ-ள்.) சண்டனென்னுங கணநாதன் செவந்த கண்ணேயுங் கரியமேனியையுமுடைய எருமைக்கடாவின் திரட்சியாகிய கொமபைமுரிதது, கொடுங்கண்ணனுகிய யமதருமராஜனைப் பிடித்து நெருப்பைச்சிந்தும் இருகணகளும் பிதுங்கும்படி அழகிய கையிலேந்திய பாசக்கயிற்றினுற் கழுத்திலே இறுக்கிக்கட்டி, பரிசுத்தமாகிய கிரீடமானது நுணணியபொடிகளாகும்படி உதிர்ததனன.

எருமை-எமனதுவாகனம். (௩௪)

மங்குல் வாய்திறந் துண்டெழும் வார்கடற் கிறைவன்
பங்கி பற்றிநீ ணிலத்திடைப் பதைத்திட வீழ்ததி
யங்க வன்றனி வயிற்றினை யுகிரினு லகழ்ந்து
தங்கு மீருள்வாய்ப் பெய்ததோர் தழலவிழிப பூதம்.

(இ-ள்.) கனலைக்கக்குங் கண்ணேயுடைய ஓர்பூதமானது, மேகங்கள் வாயங்காத்து (நீரைப்) புசித்தெழுகின்ற நெடிய வாரிதிக்கிறைவனுகிய வருணனது சிகையைப்பிடித்துப் பெரிய மண்ணின்மேற் பதைப்புறத்தள்ளி அவனது ஒப்பற்றவயிற்றை நகத்தாற்றோண்டி (கிழித்து) பொருநதிய ஈருளைவாயிற் போட்டுக்கொண்டது. எ-று.

ஈருள் எனினும் ஈரலெனினுமொக்கும். அதாவது பித்திருக்குந் தானம்.

திருகு சீற்றமால் விடையிவர் செல்வனே யின்றிப
புரியும் வேள்வியிற் புகுந்தினிப் போதியோ வென்று
நிருதி யைப்பிடித் தொருகையா லழுந்துற நெருக்கிக்
குருதி வாய்வழி கொட்டிடப் புடைததோர் கூளி

(இ-ள்.) சுழன்றுவருகின்ற கோபத்தையுடைய திருமாலாகிய இடபத்தை வாகனமாக ஏறிச்செனுத்துஞ் சிவபெருமானை யில்லாமற்செய்கின்ற யாகத்திற் பிரவேசித்து, இன்னும் (உயிர்கொண்டு) போகின்றனையா? என்று நிருதியை

ஒருகையாலழுந்தும்படி நெருக்கிப்பிடித்து (மற்றொருகையால்) உதிரமானதுவாய் வழி வழியும்படி அடித்தது ஓர் பூதம். எ-று.

கோபம் சிறிது மாறிமாறி வருமியற்கையுடைத்தாதலின் "இருகுசீற்றம்" எனப்பட்டது. (௩௬)

சூர்த்த நோக்கினிற் றெறுதழல் வடவையிற் றூங்கப்
பார்த்து வெந்திறற் காற்றிறை யாருயிர் பதைத்துப்
போர்த்த நீணமயிர்க் காறொறுங் குருதிநீர் பொடிப்ப
வார்தது மூக்குவாய் பதைத்துயிரப் பவித்ததோ ரலகை.

(இ-ள்.) ஓர்பூதமானது சுழன்றபார்வையினாலேசிந்துகின்ற நெருப்பானது வடவாமுகாக்கினிபோலச் சொரியப்பார்த்து, வெவ்விய வலியையுடைய காற்றுக்கிறைவனாகிய வாயுதேவனது அருமையாகிய உயிர்பதைத்துத் தன்னைமூடிய நெடிய மயிர்க்கால்களிலெல்லாம் உதிரநீரொழுகும்படி ஆரவாரித்து, மூக்கும் வாயுந்துடித்து ஓர் நிசுவாசஞ்செய்தது. எ-று. (௩௭)

கற்றை யஞ்சுடர் கான்றுவெங் கனையிருள் பருகு
மொற்றை யாழியந் தேருடைப் பகன்றனை யுடன்று
பற்றி மற்றவன் கண்ணினை வேரொடும் பறியா
வெற்றி மன்றிடை வீழ்த்திகின் றிழுத்ததோர் பூதம்.

(இ-ள்.) ஒருபூதம், தொகுதியாகிய அழகிய கிரணத்தைக்கக்கி மிகுதியாகிய கொடிய இருளை விழுங்கும் ஒற்றைச்சக்கரம் பொருந்திய அழகிய தேரையுடைய பகனென்னுஞ் சூரியனைக் கோபித்துப்பிடித்து அவனது கண்ணை வேரோடு பறித்து வெற்றிபொருந்திய பூமியின்பேரில் வீழ்த்தியிழுத்தது. எ-று.

உலகம் யாவையும் விழுங்கிருட் குறும்பெறிந் தோட்டு
மலர்செ ழுங்கதி ரரியமா வென்னும்வா னவன்றன்
குலவ ரைத்தடந் தோளினை வாளினுற் குறையா
வலகை யொன்றதன் புலவுவாய் மடுத்துகின் றூடும்.

(இ-ள்.) ஓர்பூதமாதமானது உலகமுழுவதையும் மறைக்கின்ற இருட்குறும்பைக் கடிந்து அகற்றுகின்ற, பரந்த செழுமைவாய்ந்த கிரணங்களையுடைய அரியமாவென்னுஞ் சூரியனது சிரேஷ்டமாகிய மலைபோன்ற விசாலமாகிய தோளைவாளால் வெட்டி, அதனது புலால் மணமுடைய மாமிசத்தைப் புசித்து (களிப்பெய்தி)க் கூத்தாடியது. எ-று. (௩௯)

முல்லை மெல்லரும் பனையநல் லவிமுகந் தினிதி
னல்லு கண்பக லுந்தனி யயின்றுடல் தடித்த
வெல்வி ளக்குபூ டாதவன் றனைப்பிடித் தெற்றிப்
பல்லு குத்ததோர் சுழல்விழிப் பாழிவாய்ப் பூதம்.

(இ-ள்.) சுழன்ற விழியையும் பெரிய வாயையுமுடைய ஒரு பூதமானது மெல்லிய முல்லையரும்பையொத்த நல்ல அவிசைமொண்டு இனிதாக இரவிலும் நடுப்பகலிலும் ஒப்பற்றுப்புசித்து உடல்பூரித்த பகலில் ஒளிசெய்கின்ற பூடன் என்னுஞ் சூரியனைப்பிடித்தடித்துப் பல்லை யுதிர்த்தது. எ-று. (௪0)

இபக்கர் வேக்தனை வசுக்களோ ரெண்மரை யாரும
வியக்கு நல்லெழின் மருத்துவ ரிருவரை வெகுண்டு
துயக்க முற்றுநெய்த் தோர்பல வாய்தொறுஞ் சொரிய
வயக்கொ டுங்கதை யொன்றினு லடித்தனன் மணிமான்.

(இ-ள்.) மணிமானென்னுங் கணநாதன் கோபித்து, குபேரனையும் அட்ட வசுக்களையும் எல்லாரும் விரும்பத்தக்க நல்ல அழகினையுடைய இரண்டு மருத்துவர்களையும், சோர்வடைந்து இரத்தவெள்ளமானது பலவழிகளிலும் பெருகும்படி வெற்றி பொருந்திய கொடிய கதாயுதமொன்றால் அடித்தனன். எ று.

மருத்துவர்=தேவவைத்தியர். (சுக)

நீளி ருங்கதிர்த் திங்களஞ் செல்வனை நெருக்கி
வாளி ஞலமர் மலைந்தவன் வாட்படை நூறித்
தோளி ஞற்பிணித் தணிமுடி துகள்பட வீழ்த்தித்
தாளி ஞலக னிலத்தொடுந் தேய்த்தனன் சணடன்.

(இ-ள்.) சண்டனென்னுஞ் சிவகணத்தலைவன் பெருமைதங்கிய நெடிய கிரணங்களையுடைய அழகிய சந்திரபகவானை நெருக்கி வாளாயுதத்தாற் போர் புரிந்து, அச்சந்திரனது வாளாயுதத்தைப் பொடிசெய்து, தோளினல் முறுக்கி அழகிய கிரீடத்தைப் பொடியாகச்செய்து கீழேதள்ளி, காலினாலே பெரியபூமியோடுந் தேய்த்தனன். எ-று. (சுஉ)

பிள்ளை வெண்பிறை பிணித்தவார் செஞ்சடைக் காளி
கள்ள வாவுயிர்க் குங்குழற் காமர்பூந திருவை
வள்ள வாய்ப்பொலம் பொகுட்டுவெண டாமரை மயிலை
யள்ளி லைச்சுடர் வாளினுல் மூக்கினை யரிந்தாள்.

(இ-ள்.) தாவளயமாகிய இளம்பிறையைத் தரித்த நெடிய செந்நிறம் வாய்ந்த சடையுடைய காளியம்மையார், விரும்பத்தக்க தேனைச்சிந்துங் கூந்தலையுடைய அழகிய (செந்) தாமரைமலரில் வாசஞ்செய்யுந திருமகளையும், வெண்டாமரை மலர்க்கொட்டையில் வீற்றிருக்கின்ற மயிலின் சாயலையுடைய வாணியையும், கூர்மை பொருந்திய அச்சவடிவாகிய பிரகாசத்தோடு கூடிய வாளாயுதத்தினுல் மூக்கையரிந்தனர். எ-று. (சுங)

இடுகு நுண்ணிடை யிறுமிறு மென்பதை யுணர்ந்தோ
கொடிய கூற்றினு மென்பதை யுளத்திடைக் குறித்தோ
வுடல்சி னத்தபோர்க் காளியொள் வாளினு விலங்கு
படைகொள் வேல்விழிப் புலோமசை படர்முலை குறைத்தாள்.

(வி-ள்.) ஒடுங்கத்தக்க நுட்பமாகிய இடையானது ஒடியும் ஒடியுமென் பதையாலோசித்தோ இயமனைக்காட்டிலுங் கொடியதென்பதை மனதிற்கருதியோ துன்புறுத்துகின்ற கோபத்தையுடைய போர்த்தொழிலில் வல்ல காளிகாதேவி தன்து ஒளிதங்கிய வாளாயுதத்தால், விளங்குகின்ற வேற்படைபோன்ற கண்களையுடைய இந்திராணியின் பரவிய குசங்களைக் கொய்தனர். எ-று. (சுச)

தக்க னன்மனைக் கிழத்திதன் ருழ்குழை கொய்தாள்
தொக்க விண்ணவர் மடந்தையர் துணைமுலை செவிநா
மைக்க ருங்குழல் குறைத்தனள் வாய்வழி குருதி
கக்க நல்லெழி லதிதியைக் கவிரித ழரிந்தாள்.

(இ-ள்.) தக்கனது நல்ல இலவாழ்க்கைக் குரிய (மனைவியாகிய) வேதவல்லியின் தாழ்கின்ற காதுகளை யறுத்தனர். கூட்டங்கொண்டு நின்ற தேவமாதர்களது இருதனங்களையும் காதுகளையும் நாக்களையும் மைபோன்ற கரிய அளகபாரங்களையுங் கொய்தனர். நல்ல அழகோடுகூடிய அதிதியென்பாளை வாயினின்று இரத்தமொழுக முண்முருக்கமலர்போன்ற இதழையறுத்தனர். எ-று.

மைகருங்குழல் எனபதற்கு மயிர்ச்சாந்தணிந்த கரிய கூந்தல் எனப் பொருளுரைப்பினும் பொருந்தும்.

அதிதி—காசிபன்மனைவியரு ளொருத்தி. தேவர்களைப் பயின்றவள். (சரு)

குடவ யிற்றெளிர் குருமணிக் குண்டலக் குழைய
கடவுட் காசிபன் முதலிய முனிவரர் கலங்க
முடியு டைத்தலை கீழுற முனிவொடும் பற்றி
யொடிவில் யூபத்திற் றாக்கிமார் புறச்சில ருதைத்தார்.

(இ-ள்.) குடம்போன்ற வயிற்றையும், பிரகாசிக்கின்ற செந்நிறம் வாய்ந்த மாணிக்ககுண்டலமணிந்த காதையுமுடைய காசிபர் முதலிய ருஷிசிரேஷ்டர்கள் மனங் கலங்கவும், (சடை) முடியுடைய தலை கீழ்மேலாக நிற்கவும், கோபத்தோடு பிடித்து, கெடுதலில்லாத யூபஸ்தம்பங்களிற் கட்டி மார்பிற் படும்படி சிலசில கணநாதர்கள் உதைத்தார்கள். எ-று. (சசு)

ஈருள் மூளைதோ லென்புசெந் தசைகுடர் நரம்பு
சோரி சிந்திடக் காலினற் சிலர்தமைத் துகைத்தார்
பாரின் மீதிவிட் டரைத்தனர் சிலர்தமைப் பலரைக்
காரி னூடுபுக் கொளித்திடக் கைவிசைத் தெறிந்தார்.

(இ-ள்.) (சில சிவகணங்கள்) ஈரல் - மூளை - தோல் - எலும்பு - சிவவிய மாமிசம் - குடல் - நரம்பு - உதிரம் (ஆகிய இவை) சிந்தும்படி தங்கள் காலினாலே சிலரை மிதித்தார்கள்; வேறு சிலரைத் தரையின்மேல் வீழ்த்தி (தாளால்) அரைத்தார்கள்; பலபேரை மேகத்திற்புகுந்து மறைந்துபோம்படி கையினால் அதிவேகமாக வீசினார்கள். எ-று. (சஎ)

தொழுது பற்றெரைக தோன்றநின் றிரந்தனர் சிலர்மற்
றழுது நெஞ்சகங் குழைந்துநின் றரற்றினர் சிலர்வெங்
கழுகு கொத்திடக் களத்திடைக் கவிழ்ந்தனர் சிலர்தாம்
விழுது விட்டன கொத்துடைக் கரத்தவிண் ணவரே.

(இ-ள்.) (இவ்வாறு நிகழ்ந்த யுத்தத்திலே) விழுதுவிட்டது (ஆகியமரத்தைப்)போலக்கொத்தாகிய கைகளையுடைய தேவர்களிற் சிலர் பணிந்து கூட்டமாகிய பற்களெல்லாந் தெரியும்படி எதிர்நின்று யாசித்தார்கள்; சிலர் அழுது மனங்

கரைந்து (செயலற்று) நின்று முறையிட்டார்கள்; சிலர் கொடிய கழுகுகள் கொத்தும்படி போர்க்களத்திலே கவிழ்ந்தார்கள். எ-று. (௪அ)

தாளி ழந்தனர் சிலர்சிலர் தடக்கைக ளிழந்தார்
தோளி ழந்தனர் சிலர்சிலர் துணைவிழி யிழந்தார்
காள முண்டிருள் கனிந்தமைக் கண்டனை யிகழ்ந்தோர்
நாளு லந்திடா துய்ந்தவர் நானிலத் தெவரோ.

(இ-ள்) சிலதேவர்கள் காலிழந்தார்கள்; சிலர் விசாலமாகியகைகளறுபட்டார்கள்; சிலர் தோளொடிபட்டார்கள்; சிலர் இருவிழிகளும பறிபட்டார்கள்; (ஏனெனில்,) ஆலாலவிஷத்தைப்புசித்துக் கருமைநிறம் மிகுந்த ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானை இகழ்ச்சிசெய்தோரது ஆயுள் காலம் முடியாமல் பிழைத்தவர் பூமியில் எவரேனு முளரோ? (இல்லை,) எ-று.

இச்செய்யுளின இறுதி இரண்டுவரிகள் கவிக்கூற்று. (௪௯)

தக்கன் வேள்வியையழித்த அ-ம்
முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௧௫௩.

எண்பத்தொன்பதாவது.

## தக்கன்வதை அத்தியாயம்.

முன்ன ரெய்திய கொடிபடை யின்னன முடிப்பப்
பன்ன கத்தொடும் புடவிபா தலத்திடை யொளிப்பச்
சென்னி யண்டகோ ளகைகிழித் தப்புறஞ் செல்லத்
தன்ன டித்துணை பெயர்த்தவண் வீரனுஞ் சார்ந்தான்.

(இ-ள்.) தமக்கு முன்னாகச்சென்ற துவஜமுஞ் சைனியமும் இவவகைப்பட்ட கருமங்களைச் செய்துமுடிக்க, ஆதிசேடனுடன் (அவனாற் சுமக்கப்பட்ட)உலகமும் பாதலலோகத்திற் பதுங்கவும், சிரமானது அண்டகடாகமுகட்டினைப் பிளந்து அதற்குமேலே செல்லவும், தமது உபயதிருவடிகளைப் பெயர்த்துவைத்து வீரபத்திரக்கடவுளுந் தக்ஷயஞ்ஞத்தை யடைந்தனர். எ-று. (௧)

எம்மை யாளுடை யீசனை யிகழ்ந்தன னுய
செம்மை தீர்தொழிற் றக்கனைச் சேர்ந்ததீ மையினால்
மும்மை யாகிய வுலகமுங் கணத்தினின் முடிந்த
வம்ம வோவென வதிசயம் பூத்திட வறைவான்.

(இ-ள்.) எம்மை யடிமையாகவுடைய சிவபெருமானை நிந்தித்தவனாகிய கடுவுநிலைமை நீங்கிய செய்கை பொருந்திய தக்கனையடைந்த தீமையாகிய காரணத்தினால், மூவகைப்பட்ட லோகங்களும் கணப்பொழுதில் ஹதமாயின. ஆ ஆவென்று ஆச்சரிய மிகும்படி கூறுகின்றார் வீரபத்திரக்கடவுள். எ-று. (உ)

தக்க னெங்குள னன்னவன் றீமகச் சாலை
தொக்க வானவ ரெங்குளர் விரைவினிற றொடர்ந்து
புக்க புக்கவெவ் விடநதொறும் நீவிரும புக்குச்
சிக்க யாதிவட் டருகெனச் சிலாதமை விடுத்தான்.

(இ-ள்.) தக்கன் எவவிடத்தி லிருக்கின்றான் ; அவனது கொடிய யாகசாலையிற் கூட்டமாகவந்த தேவாகள் யாண்டிருக்கின்றார்கள் ; சீக்கிரமாகசசெனறு அவர்கள் போயிருக்கும் எல்லாவிடங்களினு நீஙகளுந் தொடர்ந்து, (அவர்களைப்) பிடித்துக்கட்டி இவவிடங் கொண்டுவாருஙகள் என்று சில சிவ கணஙகளை வீரபத்திரர் விடுத்தனர். எ-று. (ங)

விரைவி னிற்கணஞ் செல்வுழி வேள்வியம் புருட
னிரலை யேறென நடத்தலு மெதிரதொரு பூதந்
திருகு கோட்டினைப் பறறிநீள் சென்னியைத திருகிக்
குருதி வாளுடை வீரன்முன் கொணாந்ததை யனறே.

(இ-ள்.) (கட்டளைமேற்கொண்ட) சிவகணங்கள் (அவர்களைப் பிடித்துவர) விரைந்துசெல்லுகையில் அழகிய யாகபுருடனை ஓா ஆண் கலைமான்போல நடந்து செல்லவும், ஒரு பூதம் எதிர் கண்டு வளைநதகொமபைபபிடித்து நெடிய தலையைத் திருகி, உதிரஞ்சொரியும் வாளாயுதமேந்திய வீரபத்திரப்பெருமானுக்குமுன் கொண்டுவந்து விடுத்தது. எ-று.

வேள்வி புருஷன் என்பது யாகத்திறகு அதிதேவதை. (ச)

கடிம லர்ப்பொலங் கற்பகக் காடுகா வலனோ
டடைய மற்றுள வமரர்கள் யாவரு மவிந்தா
ருடல்சி னத்தவைம் படைசுமந் தோரடி யதனாற்
படிய ளந்ததண் பசுந்துழாய் மாலுள னென்றார்.

(இ-ள்.) வாசனைபொருந்திய மலர்களையுடைய அழகிய கற்பகவனத்திற்கு அரசனாகிய இந்திரனோடு ஒன்றாக மற்றுள்ள அமரர்கள் அனைவரும் அழிந்தார்கள்; போர்புரிகின்ற கோபத்தையுடைய பஞ்சாயுதங்களைத்தாங்கி ஓரடியினாலே யுலகத்தையளந்த குளிர்ச்சிவாய்ந்த பசிய துளவமாலையணிந்த திருமால்தான் இருக்கின்றனர் எனறு கணநாதர்கள் வீரபத்திரசுவாமிக்கு விளம்பினர். எ-று. (ரு)

எங்கு ளானவ னெங்குளா னெனவுருத் தெழுந்து
பொங்கு வெங்கவுட் கடாக்களிற் றெருத்தன்மேற் போதுஞ்
சிங்க வேறெனச் சேறலுந தாமரை பூத்த
மங்குல் போன்மெனத் தோன்றிய மாயனைக் கண்டான்.

(இ-ள்.) (அதுகேட்ட வீரபத்திரவிமலர்) அத்திருமால் எங்கிருக்கின்றனன் எங்கிருக்கினறனன என்று கோபித்தெழுந்து, பொங்கிவழிகின்ற வெவவியகன்ன மதத்தை யுடைய ஆண்யானையின்மேல் (செருவேற்றுச்) செல்லும் ஆணசிங்கம் போலச்செல்லவும்,தாமரைப்பூக்கள்புட்பித்த மேகம்போல விளங்குகின்ற விண்டு மூர்த்தியைக் கண்டனர் வீரபத்திரர். எ-று. (சா)

கொன்றை வேணியோன் குரைகழற் போதினிற் றாவி
மன்ற வேத்துவா னுயிரந் தாமரை மலரி
லொன்றி லாமையி னுனதுகண் ணிடந்ததூ யன்றோ
வென்றி நேமியும் விளம்பருஞ் செல்வமு மடைந்தாய்.

(இ-ள்.) கொன்றைமலர்மாலை தரித்த சடையையுடைய சங்கரனது சத்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடித்தாமரையில் (மலர்களால்) அர்ச்சித்து நிலைபெறத் துதிக்க, ஆயிரந்தாமரைப்பூக்களில் (அவ் வெம்பெருமானது விருப்பின்படி) ஒன்றில்லாமல் மறைய, உனது கண்ணைத் தோண்டி யருச்சித்தல்லவோ வெற்றிபொருந்திய * சக்கராயுதத்தையும் அளவிட்டுச் சொல்லுதற்கரிய செல்வத்தையும் பெற்றாய். எ று. (எ)

கருமு கைச்செழும் பூவைபோன் மேனியங் கண்ண
புரியும் வேள்வியம் புருடனீ தக்கனைக் காத்துச்
செருவி னேத்தியோ தீயனை யறிவொடும பற்றித்
தருதி யோவுயி ரிழத்தியோ சாற்றுதி யென்றான.

(இ-ள்.) கரிய மொட்டாகிய மதர்த்த காயாம்பூவை நிகர்த்த திருமேனியையுடைய அழகிய கண்ணனே! செய்கின்ற அழகிய யாகத்திற்குக் கருத்தா நீ (ஆதலின்) தக்ஷப்பிரசாபதியைக் காப்பாற்றிச் சண்டைசெய்வையோ? அக் கொடியோனை நியாயமாகப் பிடித்துக்கொடுப்பையோ? (அல்லது) உனது உயிரைத் துறப்பையோ? (இவற்றுள் யாதுன சம்மதம்) சொல்வாயாகவென (வீரபத்திரர்) வினவினர். எ று. (அ)

தவல றுந்திறற் றக்கனைக் காக்குவ னெரிகா
லவிர்கொ டும்படை யெறிந்தம ராற்றுதி யென்னுக்
குவல யம்பொதி குரைகழற் றாமரைக் குரிசில
கவன வேகவெங் கலுழன்மே லிவர்ந்தனன் கடிதின்.

(இ-ள்.) கெடுதலற்ற வல்லமையுடைய தக்ஷப்பிரசாபதியை யான் காக்க வல்லேன; நெருப்பைச்சொரியும் பிரகாசிக்கின்ற கொடிய ஆயுதங்களை விடுத்துப் போர்புரிகவென்று, உலக முழுவதும் ஒருங்கேபொருந்திய சத்திக்கின்ற வீரக்கழலணிந்த அடித்தாமரையுடைய திருமால் மிகுந்த வேகத்தையுடைய கொடிய கருடப்பறவைமீது விரைந்து ஆரோகணித்தனர். எ-று. (கூ)

வேறு.

அண்ட கோளகையு டைந்து மோழைபட வப்பு றத்திலுய ரண்டமும்
விண்டு போழ்படவி லங்கு பொற்குடுமி மேரு மாலவரைவெ டிப்பநீ
ளெண்டி சாமுகமு மொலியி னிற்செவிடு படம ழைக்கருவி ருந்ததோர்
கொண்டல் வண்ணனுரு மேறெ னக்குளிறு குடவ யிற்றவளை யூதினன்.

---

* சுதரிசன மெனனுஞ் சக்கராயுதமே யன்றிச்சஙகு கட்க முதலியனவுஞ் சிவபிரானாலேயே கொடுக்கப்பட்டன. விரிவு சிவபராக்கிரமம் சக்ரதாநஸ்வரூப மூர்த்தத்திற் காண்க.

(இ-ள்.) அண்டமுகடு உடைந்து வெடிபடவும், அதற்கப்பாலுள்ள வுயர்வாகிய அண்டமும் வாய்விண்டு பிளவுபடவும், பிரகாசிக்கின்ற பொன்னுலாகிய உச்சியையுடைய பெரிய மேருமலையும் வெடிபடவும், நெடிய எட்டுத் திசைப்புறங்களும் ஓசையினாற் செவிடுபடவும், மழைக்குரிய நீரைச் சூல்கொண்ட மேகவண்ணராகிய விஷ்ணுமூர்த்தி இடியேறுபோல வொலிக்கின்ற குடம்போன்ற வயிற்றையுடைய (பாஞ்சசன்னிய மென்னும்) சங்கத்தைத் தொனித்தனர். எ-று.

திருமால் கருடவாகன மேறவே, வீரபத்திரர் வெகுளிமீக்கொண்டு போர் செய்யக்கருதினர். அப்பொழுது நம திறைவராகிய சிவபெருமானது திருவருளினாலே ஓர் இரதம் ஆங்கு வர, பிரமன் அதன்மேல் சாரதியாய் வந்து "தேவரீர் இதனை யாரோகணிக்கவேண்டும்" என வீரபத்திரரை வேண்டிக்கொள்ள, வீரபத்திரர் பத்திரகாளியுடன் அத் தேரிலேறிச் சீதரனுடன் செருச்செய்தனர் எனவும சரிதம். இதனை,

கந்தபுராணச்சருக்கம்.

"அன்ன போதிலெம தண்ணலரு ளாலோர்
மின்னு தேரணுக வீரனதன மீதே
துன்னு வீரனெதிர் சூதனென வந்தே
யின்ன வையமிசை யேறென விரப்ப.

வீறு காளியொடு வீரனதன் மீதே
யேறி நான்முகனி லங்கிரத முய்ப்ப
மாறு கொண்டுபொரு மாயனெதிர் வல்லே
சேற லோடுமிவை செப்புவன் முராரி."—என்பதனு லுணர்க. (க0)

அஞ்சி றைக்கழலுன மீதி வார்ந்துவரு மைமப டைக்கடவு ளழலொடு
நஞ்சு யிர்க்குமடல வாளி கோடிகண நாத ரோரொருவர மேலவிட
வெஞ்ச மத்திடையெ திரநத தானவரை வெல்வ தன்றுகண நாதர்மு
னுஞ்சு போவதரி தென்று மாயனை நகைத்து வீரனுரை யாடினன்.

(இ-ள்.) அழகிய சிறகையுடைய கருடவாகனத்தின்பேரில் ஏறிச் செல்கின்ற பஞ்சாயுதங்களைத் தாங்கிய மாயவன அக்கினியுடன் விஷத்தைச்சிந்தும் வலிதாங்கிய கோடி அஸ்திரங்களை ஒவ்வொரு கணநாதர்பேரினுஞ் செலுத்த, வீரபத்திரக்கடவுள் மாயோனைப் பார்த்து (விஷ்ணுவே!) கொடிய போர்க்களத்திலே எதிர்கின்ற அசுரர்களைச் செயிப்பது (போல ஈதற்பகாரியம்) அல்ல; சிவகணத்தலைவர்கட்குமுன்னே பிழைத்துச் செல்வது அருமையென்று நகைசெய்து நவின்றனர். எ-று. (கக)

உலகம் யாவையுமொ டுங்கு காலையினி லுடைதி ரைக்கடலி னுள்ளுறு
மலகி லண்டமுமு டைக்கு மோரகதைகொ டாடல வீரனெதிர்மோதமால்
விலகி வில்லுமிழும் வாள ரக்கருயி ருண்டு வெங்குருதி முடையுறுப்
புலவு வெங்கதைகொ டெற்ற மற்றதுசி தைந்து பூழியென லாயதே.

(இ-ள்.) எல்லா அண்டங்களும் அழியுங்காலத்தில், மறிகின்ற அலைகளையுடைய சமுத்திரத்தினுள்ளே பொருந்திய குற்றமில்லாத அண்டங்களையும்

உடைக்கத்தக்க ஓர் கதாயுதத்தால் வலியுடைய வீரபத்திரப்பெருந்தகையை யெதிர்த்து (விட்டுணுமூர்த்தியானவர்) மோத்வும், வீரபத்திரர் ஒளிவீசுகின்ற வாளேந்திய அசுரருயிரைக்குடித்து வெவ்விய உதிரத்தின் முடைநாற்றம் நீங்காத புலாலையுடைய கொடிய கதாயுதத்தால் (எதிரில் அக்கதையை) மோத, அவ்விஷ்ணுவின் கதை யழிந்து தூளாயிற்று. எ-று. (கஉ)

மட்டு வார்தருப சுந்து ழாய்மவுலி பின்னர் வார்சிலைகு னித்துமேல்
விட்ட வெமபகழி மாரி கணடுகொடு வெஞ்சி னததினடல வீரனுங்
கடடு வாங்கமது கொணடு திண்சிலையெ டுத்த கைமுரிய மோதலுந்
தொட்ட வெஞ்சிலைவி ழுந்த தமபுவிசு மந்த வாளரவு ளுக்கவே.

(இ-ள்.) தேன்வழிகின்ற பசிய துழாய்மாலையணிந்த கிரீடத்தையுடைய கேசவன் மீணடும் நெடிய வில்லைவளைத்து (தம்பேரில்) பிரயோகித்த கொடிய பாணவருஷத்தைக்கண்டு மிக்க கோபத்துடன் வலியுடைய வீரபத்திர ஸ்வாமியும் கட்டுவாஙகத்தால், பலம்பொருந்திய வில்லைப் பிடிதத கையானது முரியும்படி அடிக்கவும், அழகிய பூமியைச்சுமந்த ஒள்ளிய ஆதிசேடன் (உடல) அசையும்படி கொடிய விலலானது தரைமேலவீழ்ந்தது. எ-று.

கட்டுவாங்கம் = கதாயுதம். (கங)

பரிதி யாயிரமெ ழுநத தென்னவுயர் பாய்செ ழுங்கதிப ரப்பிவா [வெங்
னுருமு மின்னுமெொரு கோடி கோடியுயர் தாரை தாரைதொறு முமிழுமகுருதி நேமிநெடு மாலவி டுபபவது கொறற வீரன்மணி மார்பினிற்
பொருவில விக்னதையடு சயம ரத்திடைபு னைந்த மாலையென லாயதே.

(இ-ள்.) ஆயிரஞ் சூரியர்கள் உதயமானாற்போல வுயர்ந்து பாய்கின்ற செழுமைதங்கிய கிரணஙகளைப் பரப்பி, ஆகாயத்திலுள்ள இடியின் மின்னலபோற் பிரகாசிக்குங் கோடா கோடியாகிய தாரைகளிலெல்லாஞ் சிந்துகின்ற வெவ்விய உதிரம்பொருந்திய சுதரிசனத்தை நெடுமால் செலுத்தவும், அச்சக்ராயுதமானது வெற்றியமைநத வீரபததிரப்பெருமானது அழகிய மார்பினில் விளஙகுஞ் சமானமில்லாத விஜயலக்ஷ்மியானவள் தன்னையடுத்த சுயம்வரகாலத்திற தரித்தமாலை போன்றது. எ-று. (கச)

வெயில்வி ரிக்குமடல் நேமி மாலையினவி ளங்க லோடுமுகில் மேனியான்
செயிர்வி ளைத்துவடி வாள்வி திர்த்தமரு டற்றல கணடுதிறல் வீரன்வா
ளெயிற துக்கியழ லெழவி ழித்துடலும வெஞ்சி னத்தெதிரு றுக்கினன்
புயனி றக்கடவுள் வெருவி மாழ்கியுயிர் பொன்றி னானுடல வாடினன்.

(இ-ள்.) வெயிலை வீசுகின்ற வலியமைந்த சுதரிசனமானது மாலைபோல் விளங்கவும, மேகவண்ணராகிய நாரணன் கோபங்கொண்டு, கூர்மைபொருநதிய வாளையசைத்துப்போர்புரிதலைப்பார்த்து, பராக்கிரமம் பொருந்திய வீரபத்திரப்பகவான் வெள்ளிய பற்களைக்கடித்து நெருப்புப்பொறி பறக்கச்சிரித்து, கொடுங்கோபத்தோடு எதிர்சென்று அதட்டினர். மேகவண்ணராகிய விண்டு பயந்துதுன்புற்று உயிர் நீங்கினவரைப்போல உடல்வாட்டமெய்தினர். எ-று. (கரு)

நீல மால்வரைவி ழுந்த தாமெனவி ழுந்த நீனிறமு குந்தனைச்
சூல வேல்கொடுது ழாய்மு டித்தலைது ணிப்ப வீரன்வரு போழ்தினில்
மாவி றந்துபட மைந்த வாருயிரை வவ்வல் வவ்வலென வானினவா
யால முண்டமர ருய்ய வின்னருள்பொ ழிந்த வண்ண லுரை யாடினன்.

(இ-ள்.) பெரிய நீலமலையானது (நிலமிசை) விழுந்தாற்போல விழுந்த நீலநிறந்தங்கிய நெடுமாலை, முத்தலை வேலாகிய சூலத்தைக்கொண்டு துழாய்சூடிய முடியணிந்த சிரத்தைத் துணிக்க வீரபத்திரக்கடவுள் வருஞ்சமயத்திலே, மகனே! மாதவனிறந்து போகும்படி அருமையாகிய உயிரைக் கொல்லாதே! கொல்லாதே! என்று ஆலாலவிடத்தை யபோசனஞ்செய்து அண்டர்கள் பிழைக்கும்படி இனி யகிருபைபுரிந்த சிவபெருமான் ஆகாயத்தில் (அசரீரியாய்) திருவாய்மலர்ந் தருளி னர். எ-று.

மேல் மூன்று பாடல்களின் கருத்தை,

கந்தபுராணச் சுருக்கம்.

"அங்காழிப் படைவருத றெரிந்தா னடல்வீரன் கடிதுபிடித் தயின்முன்
கொங்காரு நறுந்துளப நெடியோன் கொடுவாள்கொண் டிறையோன்முன்குறுக
வுங்காரஞ் செய்தனனெம் பெருமா னேவியம்போன் மாயவனுங் குறைந்தான்
மங்காத பெருஞ்சினமென் னினைந்தோ மருவினு னுதல்விழியான மதலை."

"எம்பெருமான் சினந்திடனுஞ் சினவே லெனவிசும்பில் வாசகமொன் றிசை . .
வும்பர்பிரான் றனதுசத னதுகேட் டுள்ளெழுவெஞ் சினமகன்றுங் குறனும்"
என மாறுபடாது கூறியது காண்க. (கசு)

ஐயன் வானிடையு ரைத்த வின்மொழியி னருணி னைந்துதிறல் வீரன்மா
லுய்யு மாறுவகை யொடும்வி டுத்தயலு றைந்த தக்கனெதி ரோடிநீ
செய்யு மாமகமு டிந்த தோவென நகைத்து ரைத்துவளர் செங்கிறக்
கையி னுலுருமி னெற்ற வெற்புறழ்க ளத்தொ டுந்தலைதெ றித்ததே.

(இ ள்.) சிவபெருமான் ஆகாயத்தினிடத்தில் (அசரீரியாகத்) திருவாய்ம லர்ந்தருளிய இனிய வார்த்தையினது கிருபையைக்கருதி, பராக்கிரமமுடைய வீர பத்திரர் விண்டுபிழைக்கும் விதமாகக் களிப்பொடு விடுத்து, சமீபத்திலிருந்த தக் கனுக் கெதிரிலோடி, நீ செய்த பெரிய யாகமானது நிறைவேறியதோவென்று சிரித் துக்கூறி, வளர்கின்ற செம்மைநிறமுடைய கையினாலே இடிபோலடிக்க மலைபோ ன்ற கழுத்து தலையோடு சிந்தியது. எ று. (கஎ)

தெறித்த சென்னியையெ டுத்த வீரனுயர் செங்கை வன்னியின்ம டுத்துமுன், னெறுத்த வானவரை யொழிய நின்றவர்த முடல்பி ழிந்து யிர்கு டித்துவெம், பொறித்த ழற்சிகையி னுலகம யாவுமுயிர் பொ . று காலையின டித்திடு, மறித்த டக்கையுடை மழுவ லானெனவ ய . . ள் வெஞ்சமரி னடிஞன்.

(இ-ள்.) (தக்கனது) சிந்திய சிரத்தை வீரபத்திரக்கடவுள் திருக்கரத் தாலெடுத்துத் தீயில் வீழ்த்தி, முன்னே தண்டித்த தேவர்கள் நீங்க எஞ்சிநின்றவ ர்களது உடலைப் பிழிந்து உயிருண்டு, கொடிய பொறிகளைச் சொரியுந் தீக்கொழு

ந்திறைலே உலகத்துள்ளா ரெல்லாம் உயிரழியும் (ஊழி) காலத்திலே (ஆநந்த) நடனஞ்செய்கின்ற மானேந்திய பரந்த கையையுடைய மழுவல்லானுகிய சிவபெருமான் என்று (கண்டோர்) சொல்லும்படி வெற்றிபொருந்திய கொடிய யுத்தத்திலே நடித்தனர். எ-று. (கஅ)

வேறு.

மண்டமர் கடந்தவிம் மனச்செ ருக்கினு
லண்டகோ டிகளுமின் றள்ளி யள்ளிநின்
றுண்டிடும் வீரனென் றுள்ளத் தெண்ணினுன்
புண்டரி கத்தவி சுறையும் புங்கவன்.

(இ-ள்.) தாமரைமலர்ப் பீடத்தில் வாழும் பிரமதேவன் (அப்பொழுது) இவ்வீரபத்திரக் கடவுள் (தேவர்களோடு) உண்டாகிய போரைச்செயித்த இந்த மனேவிறுமாப்பால், பல்லாயிரகோடி அண்டஙகளையும் எடுத்தெடுத்து (ஆயிரம்வாய்களாலும்) உண்டுவிடுவாரென்று மனதிற் கருதினுன். எ-று. (கக)

எண்ணியெவ் வுலகமு மீன்ற புங்கவன்
கண்ணுத லுறைதரு கயிலை மாலவரை
நண்ணிவார் கங்கைதாழ் நளிர்ம திச்சடை
யண்ணலை யேத்தியீ தறைதன் மேயினுன்.

(இ-ள்.) எல்லாவுலகங்களையும்பெற்ற பிரமதேவன் (இவவாறு) கருதி, நுதற்கண்ணையுடையசிவபெருமான் வீற்றிருக்கும் பெரிய கைலாயகிரியையடைந்து, நெடிய கங்காநதிபாய்கின்ற குளிர்ந்த சந்திரனைச் சூடிய சடையையுடைய சிவபிரானைத் துதித்து இவ்விதமாகச் சொல்லததொடங்கினுன். எ-று. (உ0)

அல்லல்செய் மகம்புரி தக்கன் றீமையா
லெல்லையி லமரராண் டிறந்து போயினு
ரொல்லையி னளித்தியென் றுரைப்ப மால்வரை
வில்லினான் முகனெடு விரைவி னெய்தினுன்.

(இ-ள்.) கொடுமை பயக்கத்தக்க யாகத்தை யியற்றிய தக்கனது தீமையால், அளவில்லாத அமரர்கள் மரித்துப்போனுர்கள். சீக்கிரத்திலே தேவரீர காத்தருளவேண்டுமென்று (பிரமதேவன்) விண்ணப்பஞ்செய்யவும், பெரிய மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமான் சதுமுகனேடு விரைவாக (தக்ஷயஞ்ஞஹதத்தை) க் காணும்படி சென்றனர். எ-று. (உக)

கொழுதிவண் டிமிர்தரு கொன்றை வார்சடை
முழுமுத லெய்தலு மூரி வீரனே
டெழுதரு நந்தியே முதல யாவருந்
தொழுதனர் மலர்மழை தூவி நின்றனர்.

(இ-ள்.) வண்டுகள் கொத்தி ரீங்காரஞ் செய்யுங் கொன்றைமாலைதரித்த நெடிய சடையையுடைய முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் எழுந்தருளவும், பெருமைதங்கிய வீரபத்திரக்கடவுளுடன் நந்திமுதலாகிய சிவகணநாதர்கள் எல்

லாரும் (அரஹரசங்கர மஹாதேவா! என்று) பணிந்து மலர் மாறிதூற்றி (சந்தோஷித்து) நின்றார்கள். எ-று. (உஉ)

அன்னகா லையின்மறைக் கிழவ னண்ணறன்
பொன்னடி தொழுதுமான் முதல புங்கவ
ரின்னுயி ரளித்தியென் றிரப்பத் தன்னுழை
மன்னிய வீரனை வழங்குவா யென்றான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட காலத்திலே பிரமதேவன் சிவபெருமானது பொன்போன்ற திருவடியைப்பணிந்து அச்சுதன் முதலாகிய அமரர்களது இனிய வுயிரை யனுக்கிரகஞ் செய்யவேண்டும் என்று யாசித்தவுடன், (சிவபெருமான்) தமதருகிற் பொருந்திய வீரபத்திரக்கடவுளை (பார்த்து இப்பிரமன் விருப்பின்படி, இறந்தோர் பிராணனை மீண்டும்) கொடுப்பாயாகவென்று திருவாய்மலர்ந்தருளினர்.

வெந்திறல் வீரனும் விளிந்த விண்ணவா
செந்தசை யென்புதோல் சென்னி தோள்கரங்
கந்தர மூக்குநாக் கண்ண ளித்தவ
ருய்ந்திட வாவியு முதவி னனரோ.

(இ-ள்.) மிக்க பராக்கிரமத்தையுடைய வீரபத்திரக்கடவுளும், இறந்த தேவர்களது செந்நிறமமைந்த மாமிசம் - எலும்பு - தோல் - சிரம் - தோள் - கரம் - கழுத்து - மூக்கு - நாக்கு - மேல்வாய் - (முதலாகிய இழந்த வுறுப்புக்களை) அநுக்கிரகித்து, அவர்கள் பிழைக்கும்படி உயிரையும் உதவி செய்தனர். எ-று. (உ௩)

காத்துல கமைத்தவை கடியு மீசனை
யேத்திடா விறைவரோ பசுக்க ளென்பவாற்
றீத்தொழிற் றக்கன்வான் சென்னி கண்டிலன்
மோத்தையா டெறிந்ததன் முகத்தை யொட்டினன்.

(இ-ள்.) சமஸ்தலோகங்களையுஞ் சிருஷ்டித்து ரக்ஷித்து அவற்றை யழிக்கின்ற சிவபெருமானைத் துதிசெய்யாதவர்களே பசுக்களாவார்க ளாதலின், கொடுந்தொழிலையுடைய தக்ஷப்பிரசாபதியின் பெரிய சிரசைக் காணாராகிய (வீரபத்திர மூர்த்தி) ஒரு மோத்தையாட்டை வெட்டி அதன்சிரத்தை (தக்கனுக்கு) ஒட்டி எழுப்பினர். எ-று. (உ௪)

கண்டுயி லேற்றவ ரென்னக் கார்நிற
வண்டுழாய் மாயவன் முதல வானவர்
தொண்டரேம் பிழைத்தவை பொறுத்தி தூய்சடை
யண்டர்நா யகவென வடிவ ணங்கினார்.

(இ-ள்.) மேகவண்ணம்பொருந்திய வளப்பமமைந்த துழாய் மாலைசூடிய மாயவன் முதலியவானவர்கள் நித்திரைசெய்து விழித்தார்போலவெழுந்து, அடியேங்கள் தவறிழைத்தவற்றை மனம்பொறுத்தருள வேண்டும்; பரிசுத்தமாகிய சடையுடைய தேவநாயகா! என்று திருவடியைப் பணிந்தார்கள். எ-று. (உ௫)

அண்ணலு மருள்புரிந் திமய மால்வரை
நண்ணினன் கணங்களை நாம வீரனைக்

கண்ணனே முதலிய கடவு ளோரெலாம்
புண்ணியத் தாண்மலர் போற்றிப் போயினர்.

(இ-ள்.) சிவபெருமானும் (அத்தேவர்கட்கு) திருவருள்செய்து, பெரிய இமாசலத்தை யடைந்தனர். விஷ்ணுமூர்த்தி முதலாகிய தேவர்க ளெல்லாருஞ் சிவகணங்களையும், அச்சத்தைத் தரத்தக்க வீரபத்திரப் பெருமானையும் புண்ணிய ஸ்வரூபமாகிய திருவடித் தாமரையைத் துதித்துச் சென்றார்கள். எ-று. (உஎ)

நந்தியே முதற்கண நாதர் யாவரும்
வெந்திறல் வீரனும் விடைநெ டுங்கொடி
யெந்தைசே ரிமயமால் வரையி னேகினர்
தந்தையுந் தக்கனை நோக்கிச் சாற்றுவான்.

(இ-ள்.) நந்திமுதலாகிய சிவகணத் தலைவர்களெல்லாரும், மிக்க பராக்கிரமத்தையுடைய வீரபத்திர மூர்த்தியும், நெடிய இடபக்கொடியையுடைய எமது தந்தையாகிய சிவபெருமான்வீற்றிருக்கும் பெரிய இமாசலத்தை யடைந்தார்கள்; (இப்பால்) தந்தையாகிய பிரமதேவனும் (தன் தனயனாகிய) தக்ஷனைப்பார்த்துச் சாற்றுகின்றான். எ-று.

வீரபத்திரருக்கு ஓர் உலகங் கொடுத்து அவரை அதற்கு அனுப்பியதாகக் கந்தபுராணம் கூறும். (உஅ)

காசியி னிலிங்கமொன் றமைத்துக் காதலாற்
றேசுட னருச்சனை செய்யி னல்லதை
யீசனை யிகழ்ந்ததீங் கொழிந்தி டாதென
வாசநாண் மலரவன் வழங்கிப் போயினன்.

(இ-ள்.) காசிக்ஷேத்திரத்திலே ஓர் சிவலிங்கக்குறியைப் பிரதிட்டைசெய்து ஆசையோடு கிரமப்படி யருச்சித்தாலல்லது சிவபெருமானை யிகழ்ச்சிசெய்த பாவமொழியாதென்று, வாசனையோடுகூடிய அன்றலர்ந்த தாமரைமலரில் வாழுஞ் சதுமுகன் கூறி (தனது சத்தியலோகத்திற்குச்) சென்றனன். எ-று. (உகூ)

திருவமர் காசியிற் றக்கன் சேர்ந்தவண்
பொருவரு மிலிங்கமொன் றமைத்துப் பூசைசெய்
தொருபதி னாயிரம் பருவ மொள்ளழ
லெரிநடு விருந்தருந் தவமி யற்றினன்.

(இ-ள்.) செல்வம்பொருந்திய காசிப்பட்டணத்தில் தக்கன் சேர்ந்து, அப்பதியிலே சமானமில்லாத சிவலிங்கமூர்த்த மொன்றைத்தாபித்து (வேதாகமமுறைப்படி) பூசைசெய்து, ஒரு பதினாயிரவருடகாலம் பிரகாசத்தோடு எரிகின்ற அக்கினியின் மத்தியிலிருந்து அருமையாகிய தவத்தைச்செய்தனன். எ-று. (௩௦)

திரைதவழ் கங்கைதாழ் திங்கள் வேணியான்
வரைமகள் மணவினை முற்றி நாண்மலர்
விரைவளந் தருமலர்ச் சோலை மேயவான்
கரைபொரு தடம்புனற் காசி யெய்தினன்.

(இ-ள்.) அலைகள் தவழ்கின்ற கங்கையாறானது இழிகின்ற சந்திரனைத்த ரித்த சடையையுடைய சங்கரன் பர்வதராஜபுத்திரி(ஆகத் தோன்றிய பார்ப்பதி) யை மணமுடித்து, புதியமலர்கள் வாசனைவீசுகின்ற வளப்பம்பொருந்திய பூஞ் சோலைகள் பொருந்திய பெரியகரையை மோதும் விசாலமாகிய நீரையுடைய காசி நகரத்தை யடைந்தனர். எ-று. (௩௧)

அருந்தவம் பற்பக லாற்றி யன்பினீங்
கிருந்தவித் தக்கனுக் கிறைவி நல்கெனச்
செருந்திதாழ் பூஞ்சடைச் செல்வன் றக்கனை
விருமபிய கேளென விழைவிற கூறுவான்.

(இ-ள்.) அருமையாகிய தவத்தை அநேககாலஞ்செய்து அன்போடு இங் குவாழ்கின்ற இந்தத் தக்கனுக்கு அநுக்கிரகஞ் செய்யவேணடுமென்று பார்ப்பதிய ம்மையார் சொல்லவும், வாட்கோரைபோலும், நெடிய அழகிய சடையையுடைய சிவபிரான் தக்கனைநோக்கி நீ விரும்பிய வரஙகளைக்கேளென்று திருவாய்மலர்ந்த ருள, (தக்கன்) ஆசையோடு சொல்லத் தொடங்கினன். எ-று.

செருந்தி என்பதற்குச் செருந்தி மலரணிந்த எனக்கூறினும் பொருந்தும்.

துறக்கமீ துறையினு நரகிற் றுறையினு
மிறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும நின்னடி
மறக்கொணு நல்வரம் வழங்கு வாயென்றான்.

(இ-ள்.) இளம்பிறைச் சந்திரனையணிந்த சடாபாரத்தையுடைய சங்கரா! (அடியேன்) மோக்ஷலோகத்தில் வாழ்ந்தாலும், நரகலோகத்தில் வாழ்ந்தாலும், இறந்தாலும், பிறந்தாலும், இன்பத்தை யனுபவித்தாலும், தேவரீரது திருவடிகளை மறக்கக்கூடாத நலல வரத்தைத் தயைசெய்யவேண்டுமென்று (தக்கன்) வரங் கேட்டனன். எ-று. (௩௩)

கொவ்வைவாய் மலைமகள் கொழுநன் கூறுவா
னவ்வர மளித்தன மமைத்த லிங்கமுஞ்
செவ்விதி னின்பெயர் புனைந்து சீரொடு
மெவ்வலர் திசைகளு மேத்த வோங்குக.

(இ-ள்.) கொவவைக்கனி போன்ற வாயையுடைய பாரப்பதி யம்மையா ரது கணவராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருள்கின்றார். (நீ விரும்பிய) அவ வரத்தைக் கொடுத்தோம்; நீ பிரதிட்டைசெய்த சிவலிங்கமும் செவவையாக உன து பெயர்பெற்று (தக்கேசமெனச்) சிறப்புடன் பரந்த எத்திசையிலுந் துதிக்கும் படி ஓங்கக்கடவது. எ-று. (௩௪)

அளப்பிலா வுலகெலா மமைத்துப் பின்னருந்
துளக்கறு முத்தியந் துறையிற் சேர்கெனக்
களிற்றுரி போர்த்தவெங் கடவுள் தன்னுடை
யுளத்துறு முவகையோ டுரைத்துப் போயினன்.

(இ-ள்.) அளவில்லாத காலம் உலக முழுவதையும் அரசு செய்து மீண்டும் கெடுதலில்லாத அழகிய மோக்ஷ லோகத்திற் சேரக்கடவாயென்று யானையின் சருமத்தை ஆடையாகப்போர்த்த எமது சிவபெருமான் தமது திருவுள்ளத்திலுண்டாகிய களிப்போடு திருவாய்மலர்ந்து சென்றனர். எ-று. (ரு௫)

தக்கனுந் தன்னுடைப் பதியிற் சார்ந்தன
னிக்கதை கேட்பவர் பயில வெண்ணினோர்
முக்கணற் பழிச்சுறு முறைதி றம்பினு
மக்குறை கொளாதர னளிக்கு மென்றனன்.

(இ-ள்) தக்கனும் தனது நகரமாகிய தக்கமாபுரியையடைந்தான். இச்சரித்திரத்தைக் கேட்டவர்களும் வாசிக்கக் கருதினோர்களும், திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானைத் துதிசெய்யுங்கிரமத்தில் தவறினாலும், சிவபெருமான் அக்குறையைக்கொள்ளாமல், (அவர்கட்குத) திருவருள் செய்வரென்று (ஸ்ரீகுமாரக்கடவுள் அகத்திய முனிவருக்குத) திருவாய்மலர்ந்தருளினர். எ-று. (ரு௬)

தக்கன்வதை அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உகஅ௬.

---

தொண்ணூறாவது,

## பார்வதீசன் கதையுரைத்த அத்தியாயம்.

மாறுபடுஞ்சூர் மாளவிடும்போர் வடிவேலோய்
பாறுவதீசன் காதை விளங்கப் பகரென்னக்
கூறலு மன்பான மாதவனெஞ்சங் குழைவெய்த
வூறுபசுந்தே னின்னமுதென்ன வுரைசெய்தான்.

(இ-ள்.) பகைத்தன்மைகொண்ட சூரபன்மனுயிர் அழியும்படி செலுத்துங் கூர்மையாகிய வேலாயுதக்கடவுளே! பார்வதீச்சுர விலிங்கத்தின் சரிதையை விளங்கும்படி திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று (அகத்தியபகவான்) வினவவும், அன்போடு அருமையாகிய தவங்களைச்செய்த அகத்தியமுனிவர் மனங் குழையும்படி ஊற்றெடுக்கின்ற பசிய தேன்கூடிய இனிய அமுதம்போல (அறுமுகப்பெருமான்) அருளிச்செய்கின்றனர். எ-று. (க)

இமயநெடுங்குல வரையின கன்றெம் மிறையன்பா
லுமையவளோடுங் காசிய டைந்தாங் குறைபோதி
லமலவிளங்கா னந்தநெடுங்கா னனமென்றாய்
கமையிலுணர்ந்தா னந்தசமூகங் கழறென்றாள்.

(இ-ள்.) எமது தலைவராகிய சிவபெருமான், பெரிய இமோற்கிரியிலிருந்து நீங்கி அன்போடு பார்வதிதேவியாருடனே காசிப்பட்டணத்தில் வாழ்ந்திருக்குங் காலையில், நிமலரே! விளங்குகின்ற நெடிய காசிக்ஷேத்திரம் ஆனந்தசமூகம் என்பதைப் பொறுமையோடு ஆலோசித்து அடியேனுக்குபதேசிக்க வேண்டுமென்று (பார்வதியம்மையார) கேட்டனர். எ று. (உ)

மஞ்சுப டிநதார தண்டலை சூழும் வளர்காசி
யஞ்சுகு ரோசத் தெலலையு மெட்டு வுதலாகா
விஞ்சுமி லிங்க மேயவ வற்றான் மேலோர்தா
மெஞ்சலி னல்லா னந்தச மூக மென்பாரால்.

(இ-ள்.) மேகங்கள்படிந்திருக்கின்ற சோலைகள்சூழ்ந்த(கீர்த்தி) வளர்கின்ற காசிநகரத்தின் அஞ்சுகுரோசத்தளவு எள்ளைத் தூவுதற்கு மிடமில்லாத மிகுதியாகிய சிவலிங்கக்குறிகள் பொருந்திய காரணத்தினால, அறிவுடையோர் (இந்தக்காசிக்ஷேத்திரத்தை) கெடுதலில்லாத நல்ல ஆனந்தசமூகம் என்று சொல்லுவார்கள்.

குரோசம்=கூப்பிடுதூரம. (ங)

என்றெமை யாளு மீசன்வி ளம்ப வெறிவைவேல்
வென்றத டங்கண் மாதுமை நெஞ்சின் விழைவோடு
மன்றொரி லிங்கம மைத்தனள் மற்றங் கதனுமம்
பொன்றலில் பாறுவ தீசனெ னப்பேர் புகல்வாரே.

(இ-ள்.) என் றிவ்வகையாக எம்மை ரக்ஷிக்குஞ் சிவபிரான் திருவாய்மலர்ந்தருளினவுடன், வீசுகின்ற கூர்மைதங்கிய வேலாயுதத்தைச் செயித்த விசாலமாகிய நேத்திரங்களையுடைய உமாதேவியார் மனதில் ஆசையுடனே அப்பொழுது ஓர் சிவலிங்கக்குறியைததாபித்து அருச்சனைசெய்தனர். அவ்விலிங்கமூர்த்தத்தின் திருநாமம் கெடுதலிலலாத பாருவதீசனென்று பெயர்கூறுவர். எ-று. (ச)

அன்னைய ளித்தரு ளீசன பைம்பொன் னடிதாழ்வோர்
தன்னைவ ழுத்துவர் விண்ணவர் யாருந் தமதன்பா
லென்னில்வி ருபபுட னிக்கதை கற்றோ ரியல்பாகச்
சொன்னவர் பேறிம் மானுட ரோகனி செல்வாரே.

(இ-ள்.) பார்வதியம்மையார் பிரதிட்டைசெய்தருளிய பார்வதீசப்பெருமானது பசும்பொன்போன்ற திருவடியைப் பணிந்தவர்களைத் தேவர்களெல்லாரும் ஆசையோடு துதிப்பார்களென்றால், இச்சரிதத்தை விருப்பத்துடனே வாசித்தவர்களும் கிரமமாகச் சொன்னவர்களும் அடையும் பலனை இம்மனிதர்களோ மிகுதியும் எடுத்துச் சொல்ல வல்லவர். எ-று. (டு)

பார்வதீசன் கதையுரைத்த அ—ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உககூச.

சிவமயம்.

தொண்ணூற்றொன்றாவது,

# கங்கேசன் வரலாறுரைத்த அத்தியாயம்.

கொங்கூற் றிருக்கு நறைக்கொன்றைக் குழகன் மாலை புனைவேணி
கங்கேச் சுரன்றன் காதையினை யுரைத்து மென்னக் காய்சினத்த
வெங்கூற் றனைய தாருகனை விழுங்கிப் புலவுத் தேக்கெறியுஞ்
செங்கேழ்ப் பரிதி நெட்டிலைவேற் செல்வ னதனைச் செப்புமால்.

(இ - ள்.) மகரந்தப்பொடியுடனே ஊற்றெடுக்கின்ற தேனையுடைய கொன்றைமாலையணிந்த சடையையுடைய கங்கேசசுரரது வரலாற்றினைச் சொல்கின்றோமென்று, கொல்லுகின்ற கோபத்தையுடைய கொடிய யமனைப்போன்ற தாருகாசுரனைப்புசித்து மாமிசத்தைத் தேக்கெடுக்கின்ற செந்நிறம்பொருந்திய சூரியனையொத்த நீண்ட அச்சவடிவமைந்த வேலாயுதமேந்திய ஸ்ரீவிசாகப்பெருமான் அதனைவிளம்புகின்றனர். எ-று. (க)

செய்வாய் துடைப்ப வுறைகழிப்பி னேரார் மகளிர் நெடுந்தடங்கண்
மைவாய் துடைத்தா லன்றிமணித் தடறு புகுதா வடிவேலோன்
பைவா யரவந் தனிசுமந்த பாரேழ் புரக்கும் பகீரதன்முன்
வெவ்வா ரழலிற் றவமாற்றி விரிநீர்க் கங்கை கொணாபோழ்தில்.

(இ - ள்.) செய்யை வாயினின்று துடைக்கும்படி உறையினின்றெடுத்தால், சத்துருக்களின் மாதரது நெடிய விசாலமாகிய கண்களிலுள்ள மையைத் துடைத்தாலல்லாமல் அழகிய உறையிலே மீண்டும் புகாத கூர்மையாகிய வேலாயுதந் தாங்கியவனும், படத்தையுடைய ஆதிசேடனால் ஒப்பற்றுச் சுமக்கப்பெற்ற ஏழுலகங்களையும் ரக்ஷிப்பவனுமாகிய பகீரதன் முற்காலத்திலே கொடுமைபொருந்திய அக்கினிமத்தியில் தவஞ் செய்து பரந்த நீர்மயமாகிய ஆகாய கங்கையைக் கொண்டு வருகையில். எ-று. (உ)

கங்கை மணிகன் னிகைமடுவிற் கலத்த லோடு மதிர்கமஞ்சூல்
மங்கு றவழுங் குடுமிமதி லுடுத்த காசி வளநோக்கி
யங்க ணிலிங்க மொன்றமைத்தா னதன்பேர் கங்கேச் சுரமதனைப்
பொங்கு முவகை யொடுமலர்தூய்ப் புகழ்வோர் கருவிற் புகுதாரால்.

(இ - ள்.) கங்காநதியானது மணிகன்னிகைத்தீர்த்தத்திற் கலக்கவும், சத்திக்கின்ற நிறைவாகிய சூல்கொண்ட மேகங்கள்தவழும் உச்சியையுடைய மதில்சூழ்ந்த காசிநகரத்தின் வளப்பத்தைக் கண்டு அவவிடத்திலே ஓர் சிவலிங்கத்தைப் பிரதிட்டைசெய்தனன். அச்சிவலிங்கமூர்த்தத்தின் திருநாமம கங்கேச்சரமாகும். அக்குறியை மிகுந்த ஆசையுடனே மலர்களானருச்சித்துத் துதிப்பவர்கள் (மீண்டும் ஒருமுறை) கருப்பாசயப் பையிற் புகமாட்டார்கள். எ-று. (ங)

கன்னிக் கமுகின் பசுங்கழுத்தின் கமஞ்சூற் பாளை வயிறுடையச்
செங்நெற் பழனத் திளவாளை யுகளுங் காசித் திருநகரிற்

பின்னற் றிரைவார் புனற்கங்கை சமைத்த விலிங்கம் பேருலகி
லின்னற் கிடமாங் கலியுகத்தில விளங்கித் தோன்றா திருக்குமால்.

(இ-ள்.) இளமைதங்கிய பாக்கு மரங்களின் பசிய மிடற்றிலேயுள்ள சூல் முதிர்ந்த பாளைகள் வயிறுடைதலால், செந்நெற்பயிரையுடைய வயலில வாழும் இளவாளைமீன்கள் புரளுகின்ற சிறந்த காசிநகரத்திலே, சிக்குகளையுடைய அலைகள்பொருந்திய நெடிய நீர்மயமாகிய கங்கையிலே தாபிக்கப்பட்ட சிவலிங்கமூர்த்தங்கள் பெரிய வுலகத்திலே துன்பத்திற் கிடமாகிய கலியுகத்திலே கட்புலனுக்குத் தெரியாமல் விளங்கும் எ-று. (௭)

முத்தங் கோத்த நிலாத்தொடையின் மூழ்கு தடந்தோள் வேல்வேந்தர்
தத்து திரைநீர்க் கங்கேசன காதை கேட்பிற பஃறலையிற்
பைத்தெவ் வுலகுந் தனித்தாங்குஞ் சேட னெனனப் பார்தாங்கி
மைத்தாழ் கண்டன் பொலங்கமல மலர்ச்சே வடியி னடைகுவரால்.

(இ-ள்.) சந்திரன்போன்ற முத்துக்களாற் கோத்த மாலையில் மூழ்கிய பருத்த தோள்களையுடைய வேலேந்திய மன்னர்கள், தாவுகின்ற அலைகளையுடைய கங்கேசரது சரிதத்தைச் சிரவணஞ்செய்தால, பல தலைகளிற் பொருந்திய படத்தினல் எல்லா உலகங்களையுந் தாங்குகின்ற ஆதிசேடனைப்போல உலகத்தைத் தாங்கி நீலகண்டராகிய சிவபெருமானது அழகிய தாமரைமலர்போன்ற செவ்விய திருவடியிற் கலப்பார்கள். எ-று. (௮)

முத்தீ யாற்று மருமறையோர் முதல வெவரும் பூங்கொன்றைத்
தொததார் கணணிக் கங்கேசன் காதை கேட்பிற றொடுகடலின
மத்தாய் நெடுமால் வரைநிறுவி மதிபப வெழுதீ விடமுண்ட
புத்தேள் கமலச் சேவடியி லடைவ ரென்னப் புகன்றனனல்.

(இ-ள்.) மூவகைய யாகாக்கினியை வளர்க்கும் அருமையாகிய வேதமுணர்ந்த அந்தணர் முதலாகிய எல்லா வருணத்தவரும், அழகிய கொன்றைமலர்க்கொத்துகள் பொருந்திய மாலையணிந்த கங்கேசரது வரலாற்றினைக் கேட்டால், (சகரரால்) தோண்டப்பட்ட சாகரத்தில திருமால் மலையைமத்தாகநிறுத்திக் கடைந்தபொழுது தோன்றிய ஆலாலவிடத்தை யருந்திய சிவபெருமானது கமலமலர்போன்ற சிவந்த திருவடிகளிற் சேர்வார்கள் என்று (ஸ்ரீகுமாரக்கடவுள் அகத்திய முனிவருக்குத) திருவாய்மலர்ந்தருளினர். எ-று, (௯)

கங்கேசன் வரலாறுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் – ௨௨௦௦.

சிவமயம்.

தொண்ணூற்றிரண்டாவது,

# நருமதேசன் வரலாறுரைத்த அத்தியாயம்.

முருகு வாய்மடுத் துண்டளி தெவிட்டிமூச் செறியு
முருள்ப சுந்துணர்க் கடம்பணி யொளிரும்வே லூரவோய்
நரும தேச்சுரன காதையை நவிலகென நவின்றுன்
றிருகு சீற்றத்த வில்வலற் செகுத்தமா முனிவன்.

(இ - ள்.) வண்டுகள் தேனை வாய்மடுத்துக் குமட்டிப் பெருமூச்சுவிடுகின்ற உருட்சியாகிய பசிய பூங்கொத்துகளாலாகிய கடம்பமாலையணிந்த பிரகாசிக்கின்ற வேலாயுதத்தைத் தனதாகவுடைய ஸ்ரீசுப்பிரமணியப்பெருமானே! நருமதேசரது சரிதத்தைத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று, சுழலுகின்ற கோபம்பொருந்திய வில்வலனைச் சம்ஹரித்த சிறந்த அகத்தியமுனிவர், வினவினர். எ-று.

வில்வலற்செகுத்த மாதவத்தோ னென்றது,

பூர்வம் பர்வதராஜ புத்திரியாராகிய உமையம்மையாரை மணஞ் செய்யச் சிவபெருமான் இமாசலமடைந்தபொழுது, அவ்வெம்பெருமானுடன் கோடி யுருத்திரர் - காலாக்கினியுருத்திரர் - கூர்மாண்டர் - ஆடகேசுரர் - திருமால் - பிரமன் - இந்திராதி அட்டதிக்குபாலகர் - சூரியராதி நவக்கிரகங்கள் - நவசித்தர்கள் - அட்டவசுக்கள் - சத்தருஷிகள் - யக்ஷ கிந்நர கருட கந்தர்வாதி அஷ்டாதசகணங்கள் - வேதாகமாதி சாஸ்திரங்கள் - யுகாதிகாலபேதங்கள் முதலிய யாவருங் குழுமிநின்றமையால், வடமுனை தாழ்ந்தும் தென்முனை யுயர்ந்தும் உலகழியுநிலையிலிருப்பதுகண்ட சிவபெருமான் அருகிருந்த அகத்தியமுனிவரைநோக்கி "நீரே எம்மையொத்தவராதலின், யான் வடமுனையிலும் நீர் தென்முனையிலு மிருந்தாலன்றி உலகு சமானமாகாது. நீர் தென்றிசைசெல்கின் யாம் மணக்கோலதரிசனம் தருவோம்" என, அகத்தியமுனிவர் கடவுளது கட்டளை கடவாது தென்றிசை நோக்கிச் சென்றனர்.

அவ்வாறு செல்கையில், சூரபன்மன் தங்கையாகிய அசமுகி என்னும் ஆட்டுமுகமுடைய அரக்கி துர்வாசமுனிவரைக் கூடிப் பெற்ற பிள்ளைகளாகிய வில்வலன் வாதாவி யெனப்பேர் வேதிய வடிவேற்று வழிச்செல்லும் மறையோரை விருந்தினராகவிளித்து வாதாவி ஆட்டுருவெடுப்ப, அவன் தமயன் அவ்வாட்டிறைச்சியைச்சமைத்து முனிவர்க்கூட்ட, பின்னர் வயிற்றிலுள்ள வாதாவி மீண்டும் ஆட்டுவடிவேற்று அவ்வந்தணன் வயிற்றைப் பீறிக்கொண்டு வெளிவர, சகோதரரிருவருங்கூடி அம்முனிவரைப் புசிப்பது வழக்கமாகலின், தம்முன்வந்த அகத்தியமுனிவரை அதிதிபிக்ஷைக் கழைத்து வழக்கம்போல விருந்திட்டு, வில்வலன் அவர்முன்னின்று "வாதாவி" என வழைப்ப, அவன் முனிவர்வயிற்றைக்கலக்க, அகத்தியர் வயிற்றின்மேற் கைவைத்து "ஜீரணபி" என, வாதாவி ஜீரணமாயொழிந்தனன்.

அது கண்ட வில்வலன் தன் தம்பி இறந்தமை கருதிக் கடுஙகோபத்தோடு தனது ஆசுர நிஜவடிவேற்று ஓர் தண்டாயுதத்தைக் கையில் தாங்கிச் சமர் செய்ய வருகையில், முனிவர் பெரிதும் முனிந்து தமது கரத்திலிருந்த தருப்பை யொன்றைச் சங்காரது மழுப்படையாகக் கருதி அக்கொடியோன்மீது பிரயோகிக்க, வில்வலன் எரிந்து மாண்டனன். பிறகு அகத்தியர் தம திச்சைப்படி தென்றிசை சென்று, பொதியாசலத்திற் பொருந்தித் திருமணக்காட்சியைத் தரிசித்தனர் என்பதாம். இதனை,

கந்த புராணம்.

வில்வலன் வாதாவி வதைப்படலம்.

"ஊன்கொண்ட கறியாகி நுகாவுற்ற வாதாவி யுயிர்போகி யுடைவியல்பே
தான்கொண்டு முடிகென்று சடரத்தை யொருகாலே தமிழ்வல்ல முனிதடவலும
கான்கொண்ட வெரிமண்டு சிறுபுன்பு தர்ப்போன்று கடியோனு முடிவெய்தவே
வான்கொண்ட லெனவங்கண் முனனின்ற வன்தம்பி மாய்வுறற துனனிவருவான.

மெய்க்கொண்டு தொன்னூரு ருக்கொண்டு முனிதன்னை வெகுளுற்றோர் தண்டமதனை, கைக்கொண்டு கொலையுன்னி வருபோதின் முனிவனக ரத்திற் றருப்பையொன்றை, மைக்கண்டர் படையாக நினைகுற்று விடவில்வ லன்றானு மடிவெய்தலும், அக்கண்ட ககள்வ ருரைவுற்ற விடநீங்கி யப்பால கன்றனனரோ."
என வருவனவற்றானறிக. (க)

மறைவ டித்தநா முனிவரர் வராககற் பத்தி
னிறைபெ ரும்புன லாறறினுட் சிறந்தவை நிகழ்த்தென்
றறைய வெநதிறற் கூற்றின தாருயி ரகல்வான்
கறைமிடற்றனை யேத்திய மார்ககண்டன் கழறும.

(இ-ள்.) வேதப்பொருளைத் தெளிவுபடுத்திய நாவையுடைய முனிசிரேஷ்டர்கள், ஓர் வராககறபததிலே, நிறைவாகிய மிகுந்த சலத்தையுடைய நதிகளிற் சிறப்புள்ளவற்றைச சொல்லவேண்டும என்று கேட்க, வெவ்விய வலிதங்கிய இயமனது அருமையாகிய உயிர் நீங்கும்படி நீலகண்டராகிய சிவபெருமானைத் துதித்த மாாக்கண்டேயமுனிவா (அவாகட்குப் பதில) சொல்வாராயினா. எ-று. (உ)

அரிகு ரற்பகு வாய்வலம் புரிகிடக் தலறும்
விரிதி ரைக்கடன மேவுறு நதிகளில விளங்கு
கரைய லைத்தெறி கங்கைநற் சரஸ்வதி யமுனை
நரும தைப்பெயர் நதியிவை நான்குமேம படுமால்.

(இ-ள்.) வலிமையுடைய குரலையும் பிளவுபட்ட வாயையுமுடைய வலம்புரிச்சஙகுகள் இருந்து முழஙகுகினற பரநத அலைகள் பொருந்திய சமுத்திரத்தோடு சங்கமமுறும் புண்ய நதிகளில், பிரகாசிக்கினற கரையின்மேல் அலைகொண்டெறிகின்ற கங்கை-நல்ல சரஸ்வதி-யமுனை-நருமதை யாகிய பெயரோடு கூடிய நதிகள் இவை நான்கும் மேம்பாடுற்றுவிளங்கும். எ-று. (௩)

இரங்கு கங்கைநல் லிருக்குவே தத்துரு யமுனைத்
தரங்க மாநதி யுருவிரண் டாமறை சாமம்

பரந்த தீமபுனற் சரஸ்வதி நருமதை பகரின்
விரிந்த தீவினை விலக்குநான் காமறை விளம்பின்.

(இ-ள்.) ஒலிக்கின்ற கங்காநதி நலல இருக்குவேதவடிவம். யமுனையாகிய அலைகளையுடைய பெரிய நதியானது இரண்டாம் வேதமாகிய யசுர்வேதவடிவம். பரவியுள்ள மதுரமான சலத்தையுடைய சரஸ்வதிநதியானது சாமவேதவடிவம். சொல்லுமிடத்தில் நருமதை நதியானது பலவாய் விரிந்த தீவினைச் சம்பந்தங்களை யொழிக்கும் நான்காம்வேதமாகிய அதர்வணவேதவடிவம். எ-று.

விளம்பின என்பதைப் பின் செய்யுளிற் கூட்டிப் பொருள் கொள்க. (ச)

கங்கை மாநதி யெவற்றினுஞ் சிறந்தமை கருதி
யங்க தற்குநே ரமைந்திட நருமதை யாறு
பங்க யாசனற் பழிச்சவப் பணணவன் ஞேன்றி
யிங்கு னக்குளம விழைந்தன கேளென விசைத்தான்.

(இ-ள்.) சிறப்பமைந்த கஙகையாறுனது எல்லா நதிகளிலும் (எடுத்துப் பேசுமிடததில்) கீர்த்தியுற்றதை நினைத்து, நருமதைநதி அதற்குச் சமானமாக (விளங்க), சததளகமலத்தில் வசிக்கும் சதுமுகனைத் தோத்திரஞ் செய்கையில், அப்பிரமதேவா பிரசனனராகி, (ஏ நருமதை நதியே!) இப்பொழுது உனக்கு மனம்விரும்பியவற்றைக் கேள் என்று கூறினர். எ-று. (ரு)

அரிலப டுங்கொடிப் பவளவெண் டிரைமுகந் தலைக்கும
விரித டம்புனற் கங்கையை நிகர்த்திடல வேணடும
வரம ளித்தரு ளின்றென நருமதை வழங்கப்
பொருவில தாமரைப் பொகுட்டுறை புணணியன் புகலும.

(இ-ள்.) சிக்குண்டிருக்குங் கொடிப்பவளத்தை வெள்ளிய அலைகள் அள்ளியலைக்கும் பரந்த விசாலமாகிய கங்காதீரத்தைச் சமானமாதல் வேண்டும் (அத்தகைய) வரத்தைஇப்பொழுது அநுக்கிரகிப்பீராக என்று நருமதையாறுகூறவும், சமானமில்லாத தாமரைமலர்க் கொட்டையில் வாசஞ் செய்கின்ற பிரமதேவன் கூறுகின்றனன. எ-று. (சா)

திங்கள் சூடிய செல்வனை நிகர்த்திடுந தேவும்
பங்க மறறுயர் காசியை நிகர்த்திடும பதியு
மங்குல போன்றொளிர் மாயனிற புருடனு முண்டேல்
கங்கை மாநதி நிகர்க்குமா றுளதெனக் கரைந்தான்.

(இ-ள்.) சந்திரனைச் (சடாடவியிற்) சூடிய சிவபெருமானை யொப்பாகுந் தேவனும், குற்றமற்று உயர்ந்த காசிக்ஷேத்திரததைச் சமானமாகும் (புண்ணிய) நகரமும், மேகம்போன்று பிரகாசிக்கின்ற திருமாலை நிகர்த்த புருஷனும் உண்டாயிருப்பின், சிறந்த கங்கை நதியை யொக்கும் நதியுளதாகுமென்று (சதுமுகன்) சாற்றினன். எ-று. (எ)

என்ன வோதலு மிறையல தளிக்குமோ வென்று
முன்னி யோதியல் முத்திகூர் காசியி னடைந்து

பின்னு தெண்டிரைப் பிப்பல தீர்த்தத்தின் கரையின்
மன்னி லிங்கமொன் றமைத்துவான் றவமியற் றியதால்.

(இ-ள்.) என்று (பிரமதேவன்) சொல்லவும், சிவபிரானல்லாமல் (பிறிதொருவர் அத்தகையவரத்தைக்) கொடுப்பரோவென்றுகருதி, சொல்லு மியல்பினுல் மோக்ஷமிருந்த காசிப்பதியைச் சேர்ந்து, தெற்றுகின்ற தெள்ளிய அலையையுடைய பிப்பல தீர்த்தத்தின் கரையிலே நிலைபெற்ற சிவலிங்கக் குறியொன்றை ஸ்தாபித்து சிறந்த தவத்தைச் செய்தது (நருமதைநதி.) எ-று. (அ)

நிலவு கான்றிடு நித்திலங் கூன்முது கிப்பி
யலைகொ ழித்தெறி நருமதை யருந்தவ நோக்கிக்
கலைகொ ழிக்குமவெண் டிங்களங் கண்ணியோன் றோன்றி
யுலைவி னற்றவ மொழிதிகேள் வரமென வுரைத்தான்.

(இ-ள்.) சந்திரிகையைக்கக்குகின்ற முத்துக்களை,வளைந்தமுதுகையுடைய இப்பிகள் அலைகள் கொழித்தலால் எறிகின்ற நருமதைநதியின் அருமையாகிய தவச்செயலைக்கண்டு, கலைகளைக் கொழிக்கின்ற வெள்ளிய சந்திரனை அழகிய சிரோமாலையாக வணிந்த சிவபெருமான் பிரதியக்ஷமாய், கெடுதலில்லாத நல்லதவத்தை யொழி; நீ விரும்பிய வரத்தைக் (கொடுப்போம்) கேள் என்று திருவாய்மலர்ந் தருளினர். எ-று. (க)

கங்கை யோர்முறை படிந்திடில் யமுனைகா மருநீர்
தங்கி யேழுநாள் படிந்திடிற் சரஸ்வதி நாள்மூன்
றங்க தன்புனல் படிந்திடி லருவினை யகற்று
மிங்கு நின்முகங் காண்டலு மிரிந்திடும் பாவம்.

(இ-ள்.) கங்கை நதியின் நீரிலே ஒரு தரம் முழுகினுல், யமுனை நதியின் அழகிய சலத்தில் ஏழுநாளிருந்து முழுகினுல், சரஸ்வதியாற்றினது புனலில் மூன்று தினங்கள் ஸ்நானஞ்செய்தால், அருமையாகிய தீவினைகளை யொழிக்கும். இவவிடத்தில் உனது முகத்தைக் கண்ட மாத்திரையிற் பாவங்களெல்லாம் ஒழியும்.

நின்னி டத்துறு சிலையெலா மிலிங்கமாய் நிகழ்க
வன்ன லிங்கமு நருமதேச் சுரப்பெய ராக
சொன்ன லிங்கமேத் துநர்தமை மறலியுந் தொழுக
வென்ன நல்வர மளித்தரன் மறைந்தன னென்னு.

(இ-ள்.) உன்னிடத்திற் பொருந்திய சிலைகளெல்லாஞ் சிவலிங்கங்களாய் விளங்குக ; அச்சிவலிங்கக்குறிகளும் நருமதேச்சுர லிலிங்கமென்னும் பெயரையடைக; சொல்லிய அவ்விலிங்கங்களைத் துதித்தவர்களை யமனும் (வணங்கிப்) பணிக வென்று நல்ல வரங்களைப் பிரசாதித்துச் சிவபெருமான் அந்தர்த்தான மாயினரென்று. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (கக)

கோளில் மாதவர்க் குலகெலாங் குரைகடல் கொளினு
நாளு லந்திடா மார்க்கண்ட னிலவாங் கவன்றன்

ருள்ப ணிந்துயர் முனிவரர் தம்பதி யகன்றார்
நீளி ருங்கதை கேட்டவர் நிரயமீ தடையார்.

(இ-ள்.) கெடுதலில்லாத சிறந்த தவத்தையுடைய முனிவர்கட்கு, உலகத்தையெல்லாம் சப்திக்கின்ற சமுத்திரங் கோணடபொழுதிலும், தனது ஆயுள்காலம் முடியாத மார்க்கண்டேயமுனிவர் சொல்ல, உயர்வாகிய முனிவர்கள் அம்மார்க்கண்டேயரது பாதங்களை நமஸ்கரித்துத் தமது நகரங்கட்குச் சென்றனர். பெருமைபொருந்திய இப்பெருஞ் சரிதத்தைக்கேட்டவர்கள் நரகத்திற் சேரமாட்டார்கள் (என்று குமாரக்கடவுள் குறுமுனிவருக்குக் கூறினர்.) எ-று. (கஉ)

நருமதேசன் வரலாறுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஉகஉ.

உ

சிவமயம்.

தொண்ணூற்று மூன்றாவது,

## சதீச்சுரன் வரலாறுரைத்த அத்தியாயம்.

தளர்ந டைப்பசுங் குழவிவெண் டிங்கள்தாழ் கண்ணி
களிபு னற்சடைச் சதீச்சுரன் கதையினை நவில்து
முளமு வந்துயர் குறுமுனி கேட்டியென் றுரைத்தான்
றுளிம துக்கமழ் நறுமலர்க் கடம்பணி தோளான்.

(இ-ள்.) தளர்வாகிய நடையையுடைய இளமைதங்கிய வெள்ளிய பிறைச்சந்திரனைச் சிரோமாலையாகக் கொண்ட குளிர்ச்சி வாய்ந்த கங்கா சலத்தைச் சூடிய சடையையுடைய சதீச்சுரரது வரலாற்றினைச் சொல்கின்றோம்; உயர்வாகிய அகத்தியமுனிவனே ! மனக்களிப்புற்றுக் கேட்பாயாகவென்று, தேன்றுளிக்கின்ற நறுமணங்கமழும் கடப்பமலர்மாலை யணிந்த தோளையுடைய ஸ்ரீமுருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றனர். எ-று. (க)

மின்ன ரம்புடை வீங்குசூற் கொண்டல்கண் படுக்குங்
கன்னி மூதெயில் விளிம்புடுத் தோங்குகா சியினில்
முன்ன ரண்மலர்ப் பொகுட்டுறை யொருதனி முதல்வன்
பன்னெ டும்பக லாற்றின னருந்தவம் பரிவின்.

(இ-ள்.) புதிய தாமரைமலர்க்கொட்டையில் வசிக்கின்ற ஒப்பற்ற பிரமதேவன், மின்னலையுடையதும் நீருண்டதுமாகிய சூல்முதிர்ந்த மேகங்கள் துயில்கின்ற அழியாதபழமையாகிய மதில்களை (பக்கத்தில் ஆடைபோல) ஓரத்தில் உடுத்து உயர்ந்த காசிப்பட்டணத்தில், முற்காலத்திலே அநேககோடிகாலம் ஆசையுடனே அருந்தவத்தைச் செய்தனன். எ-று.

மின்னரம்புடை யெசுபது மின்னலை நரம்பாகக் கொண்ட வெனவும் பொருள பயக்கும். அவ்வாறுயின் அதனைக் கொடிமின்னலெனக் கொள்க. மின்னர் அம்பு எனப் பிரித்தால் மின்னர் மின்னல் என்பதன் போலி (உ)

மறைகொ ளுன்முகத் தொருவனுற் றியதவ மகிழ்ந்து
சிறுக ருந்துழாய்ப படலைதாழ் சென்னிய னறியாக்
கறைமி டற்றவேற் றந்தணன் கருணையிற் றேன்றி
யறைதி வேட்டதென் றுரைத்தலு நான்முக னறைவான்.

(இ-ள்.) (நான்கு) வேதங்களைத் (தன்னிடத்திற்) கொண்ட நான்கு திருமுகங்களையுடைய ஒப்பற்றபிரமதேவனசெய்த தவச்செயலுக்குமகிழ்வுற்று, சிறியகருந்துளசிமாலையணிந்த சிரசையுடைய திருமால் தேடியறியாத நீலகண்டத்தையும் இடபவாகனத்தையுமுடைய சிவபெருமான் கிருபையோடு பிரசன்னராய் விரும்பியதைக்கேட்கவென்று வினவவும், வேதன்விளம்புகின்றனன். எ-று. (ங)

கடவு ணீற்றெளி பழுத்தசெம் மேனிமுக் கண்ண
விடைய ருதுல கியற்றுவான் வேண்டிமென் னெற்றி
நடுவட் டோன்றுக நீயினித் தக்கனன் மகளாய்த்
தடமு லைக்கொடி வருகவென் றுரைத்தனன் முழ்ந்தான்.

(இ-ள்.) தெய்வீகம்பொருந்திய திருவெண்ணீற்றின் பிரகாசமிகுந்த செவ்விய திருமேனிவாய்ந்த திரிநேத்திரங்களை யுடைய சிவபிரானே! (அடியேன்) எப்பொழுதும் உலகதைச் சிருஷ்டி செய்யும்படி(அநுக்கிரகஞ்)செய்யவேண்டும்; (அன்றியும்) அடியேனது நெற்றி நடுவிலே தேவரீர் ஜனிக்கவேண்டும். பூரித்த தனங்களையுடைய உமாதேவியார் தக்கனுக்கு நல்ல புதல்வியாய்த் தோன்றவேண்டும் என்று பணிந்து வரங்கேட்டனன். (பதுமன) எ-று. (ச)

எரித வழ்ந்தெறி முத்தலைச் சூலவே லேந்து
கருணை யங்கடல குறுநகை கோட்டிமென் கமலத்
தரசி ருக்குநற் பண்ணவ னியானமாற் றுழியிற்
புருவ நாப்பணிற் றேன்றினன் பூவையோர் பங்காய்.

(இ-ள்.) தீபடர்ந்து வீசுகின்ற முத்தலை வேலாகிய சூலப்படையைத் தாங்கிய அழகிய கிருபாசமுத்திரமாகிய சிவபெருமான் புன்சிரிப்புசெய்து, மெல்லிய தாமரைமலரிற் கொலுக்கொண்டிருக்கும் நல்ல நான்முகன் நிஷ்டைசெய்கையில், அவனது இருபுருவங்கட்கிடையே உமாதேவி சமேதராகத் தோன்றினர். எ-று.

கொழுதி வண்டிமிர் கொன்றையான் றேன்றிய பின்னா
ரழுத லாலவற் குருத்திர னெனும்பெய ரமைந்த
தழுது தேனின முண்டிடுந் தாமரைக் கிழவன்
றெழுது மங்கையோர பாகனை நோக்கினன் றுணிவான்.

(இ-ள்.) வண்டுகள் கொத்திப்பண்பாடுங் கொன்றைமாலையணிந்த சங்கரர் (அவ்வாறு பிரமன் நெற்றியிலிருந்து) தோன்றியபிறகுஅழுதகாரணத்தினால், அவ

ருக்கு உருத்திரனென்னும் பெயரமைந்தது. வண்டுகள் கிண்டித் தேனுண்ணுந் தாமரை மலரிலுள்ள சதுமுகன் உமாசமேதராகிய உருத்திர மூர்த்தியைத் துணிவோடு பணிந்து பார்த்தனன். எ-று. (௬)

பெண்ணு மாணுமா யமைப்பினல் லாலுயிர் பிறப்பி
னண்ண யாவையுந் தோற்றுவித் தறிவுற நாட்டற்
கொண்ணு மோவெனக் காட்டிய வுருவிதென் றுணர்ந்தான்
றண்ணந் தாமரை மீதுறை சதுமுகக் கிழவன்.

(இ-ள்.) உயிர்த்தொகைகள் பிறப்பிற்பொருந்த, பெண்ணும் ஆணுமாகப் படைத்தாலல்லாமல், எல்லாவற்றையும் பிறப்பித்து அறிவுறும்படி நிலைநிறுத்தற்கு முடியுமோவென்று காண்பித்த திருவுருவம் இதுவாகுமென்று, தண்ணிய அழகமைந்த தாமரைமலரின்மேல் வசிக்கும் நான்கு முகங்களையுடைய பிரமதேவன் அறிந்தான். எ-று.

யாவையும் என்பது எழுவகைத் தோற்றம் எண்பத்துநான்கு லட்சம் யோனிபேதமாகிய பிராணிகளை. (௭)

வாய்ந்த பெண்ணுரு வாணுரு வாய்மலர்க் கிழவ
னேய்ந்திடும்படி வகுத்திட வொன்றொடொன் றியைபிற்
றோய்ந்து தோய்ந்திடை யறுதுதோன் றியதுபே ருலகஞ்
சாந்த மென்முலை தக்கனன் மகளென வுதித்தாள்.

(இ-ள்.) (வெவ்வேறாக) வாய்ந்த பெண்வடிவும் ஆண்வடிவுமாகப் பொருந்தும்படி பிரமதேவன் சிருஷ்டிசெய்ய, (அவ்வுருக்கள்) ஒன்றோடொன்று நீங்காமற் கிரமப்படி கலந்தமையால், பெரிய வுலகத்திலுள்ள பிராணிகளுண்டாயின. சந்தனமணிந்த மெல்லிய தனங்களையுடைய சாம்பவியுந் தக்கனுக்குத் தவப்புதல்வியாகத் தோன்றினள். எ-று. (௮)

எழின லங்கனிந் தேந்திள வளமுலைப் பேதை
குழைமு கம்பொதி மழைமலர்ச் சோலைதேங் கொழிக்குங்
கழனி சூழ்புனற் காசியிற காய்கன லுமிழு
மழுவ லாற்பெற வருளொடு மாதவம புரிந்தாள்.

(இ-ள்.) அழகி னிலக்கணங்கள் மிக்குத் தாங்கிய சந்தனக்கோலமணிந்த இளமையாகிய குசங்களையுடைய தாக்ஷாயணி யம்மையார், இலைகளிற் பொதிந்த தண்ணிய மலர்கள்பொருந்திய சோலையின் தேனைக்கொழிக்குங் கழனிகள்சூழ்ந்த நீர்வளமமைந்த காசிப்பதியில், கோபிக்கின்ற அக்கினியைச் சிந்தும் மழுப்படை தாங்கிய மகாதேவனை (மணநாயனாக) அடைய ஆசையோடு சிறந்த தவத்தைச் செய்தனர். எ-று. (௯)

அருவி யங்கடாக் களிற்றுரி யந்தண னிலிங்க
வுருவிற் றோன்றிநீ விழைந்தது பெறுகவுள் ளுவப்பால்
மருவி லிங்கின் பேரொடும் பொலிகம்ற் றிதனைப்
பரவி யேத்துநர் விழைந்தன பரிவொடும் பெறுக.

(இ ள்) அழகிய அருவியாறுபோல மதசலம் பொழியும் (கயாசுரனென்னும்) யானையினது சருமத்தையணிந்த சங்கரர் சிவலிங்கவடிவத்திலே தோன்றி, நீ விரும்பியதனை யடையக்கடவாய்; மனவிருப்பத்தோடு பொருந்திய சிவலிங்கக் குறியும் (சதீசசுரன் என்று) உன் பெயரால் விளங்குக; இச்சிவலிங்கக்குறியை வணங்கித் துதிப்போர் விரும்பியவற்றை அன்புடனே யடைக. எ-று.

சதி=மனைவி; பார்வதி. சதி+ஈச்சுரன்=சதீச்சுரன். தீர்க்கசந்தி. (௧0)

இற்றை ஞான்றினுக் கெட்டென வுரைக்குஞான் றுன்னைப்
பெற்ற தந்தையெற் கருளுக வென்றுபெட் போடுங்
கற்றை வார்குழற் பூங்கொடிக் குரைத்தனன் கரந்தான்
வெற்றி யைங்கணைக் கிழவனை யழலெழ விழித்தான்.

(இ-ள்). வெற்றிபொருந்திய பஞ்சபாணங்களையுடைய மன்மதனை எரிந்துபோகும்படிவிழித்த சிவபெருமான், இன்றையதினத்திற்கு எட்டாவதென்றுசொல்லுநாளில், உன்னையீன்ற தந்தையாகிய தக்ஷன் எனக்கு (மணஞ்செய்து) கொடுக்கக் கடவனென்று, தொகுதியாகிய நெடிய அளகபாரத்தையுடைய பூங்கொடி போன்ற தாக்ஷாயணிக்கு ஆசையோடுசொற்றி அந்தர்த்தானமாயினர். எ-று. (௧௧)

தரைபி திர்த்தெறி கவின்குளம் பூர்பரித் தக்க
னரும ணிப்பொலங் காஞ்சிசூழ் படவர வல்கு
லுநவப் பூங்கொடி தன்னைமால் விடைக்கொடி யுயர்த்த
பரமற் கற்றைநாட் கடிமணம் புணர்த்தினன் பரிவின்.

(இ-ள்.) நிலத்தைச் சிதறச்செய் தெறிகின்ற அழகிய பரந்த குளம்பையுடைய குதிரையை வாகனமாகக்கொண்ட தக்கன், அருமையாகிய மணிகளாலாகிய காஞ்சியென்னும் எண்கோவை மணியையணிந்த ப்பாம்பின் படம்போன்ற கடிதடத்தையுடைய அழகிய பூங்கொடிபோன்ற தாக்ஷாயணி யம்மையை, திருமாலாகிய இடபத்தைக் கொடியாக வுயர்த்திப்பிடித்த சிவபெருமானுக்கு (அவ்வாறே) அத்தினத்தில் ஆசையுடனே மணஞ்செய்வித்தனன். எ-று. (௧௨)

உலகெ லாந்தொழுஞ் சதீச்சுரன் காதையீங் குரைத்தே
நிலவு மிக்கதை யுரைப்பவர் கேட்பவர் நீங்கா
வலகில் தீவினைத் துயர்க்கடல் படிந்திடா ராகி
யுலைவில் ஞானவா ரிதியினிற் படிந்தினி துறைவார்.

(இ ள்.) உலகினர் யாவரும் பணியும் சதீச்சுரப்பெருமானது சரித்திரத்தை ஈண்டுரைத்தோம். விளங்குகின்ற இவ்வரலாற்றினைச் சொல்பவர்களும் கேட்ப்வர்களும் எப்பொழுதுந் கெடுதலில்லாத தீவினையாகிய துக்கசாகரத்தில் மூழ்காதவர்களாய், அழிவற்ற ஞானக்கடலிற் குளித்து இனிதாக வாழ்வார்கள் என்று, ஸ்ரீ குமாரக்கடவுள் குருமுனிவருக் குபதேசித்தனர். எ-று. (௧௩)

சதீச்சுரன் வரலாறுரைத்த அம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உஉஉ௫.

சிவமயம்.

தொண்ணூற்று நான்காவது,

## அமுதேசன் முதலிய விலிங்கங்களின் சிறப்புரைத்த அத்தியாயம்.

கதிர்விட் டெறிக்குங் குழவிமதிக் கண்ணி வேய்ந்த வமுதேசன்
முதல விலிங்க மெவற்றினையு மொழிது மென்ன முனிகேட்ப
வதிர்தெண் டிரையிற் கவிழ்தலைய சூர்மாத் தொலைய வலங்குவரை
பிதிர விடிவேல் பணித்தவருட் பெருமா னினிது கூறுவனால்.

(இ-ள்.) கிரணங்களைவீசிப் பிரகாசிக்கும் பிறைச் சந்திரனைச் சிரோமாலையாகவணிந்த அமுதேசலிங்கம் முதலாகிய சிவலிங்கங்க ளெல்லாவற்றினையும் எடுத்துக் கூறுவோமென்று அகத்தியமுனிவர் கேட்கும்படி, சப்திக்கின்ற தெள்ளிய அலைகளையுடைய சமுத்திரத்தில் தோன்றிய பரந்த தலையையுடைய சூரப்ன்மனாகிய மாமரமான தொழியவும் ஒலிர்கின்ற கிரவுஞ்சபர்வதம் பிதிரவும் வேலாயுதத்தைச் செலுத்திய கிருபைபொருந்திய ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள் இவ்வாறு திருவாய் மலர்ந்தருளுகின்றார். எ-று. (க)

முன்னை யுகத்திற் சனுருவெனு முனிவனொருவ னுளனவன்றன்
பன்னற் கேள்வி மறைப்பொருளின் றுறைபோய் நெறியிற் படர்கின்றோன்
பொன்னிற் பிதிர்ந்த சுணங்கணிவெம் முலையாள் பங்கன் பூங்கழல்கள்[ன்
சென்னி தாங்கி யில்லறத்திற் றிறம்பா தினிது சென்னாளில்.

(இ-ள்) முன்னையயுகத்திலே சனுருவென்னும் பெயர்வாய்ந்த முனிவனொருவ னிருந்தனன். அவன்பல நல்ல (நீதிநூற்) கேள்வியுடனே வேதப்பொருளின் துறைகளிற் பழகி நன்னெறியில் நடக்கின்றவன்; பொனபோலச் சிதறிய தேமல்படர்ந்த அழகிய தனங்களையுடைய பார்ப்பதியைப் பாகமாகக்கொண்ட சிவபிரானது மலர்போன்ற திருவடிகளைச் சிரமேலணிந்து இல்லறதருமத்தில் முறைதவறாது இனிதாக வாழ்ந்து வருகையில். எ-று. (உ)

ஓது மறைதேர் முனிவனுக் குவசம் பனியென் றுரைக்குமொரு
காதற் புதல்வ னுளனவன்வெங் களிறு வழங்கு பெருங்கானிற்
போத லோடும் பஃறலைய பொறிவா ளரவொன் றெயிறூன்றச்
சாதல் நோக்கி யவனையுடன் சென்றோர் மனையிற் கொடுசார்ந்தார்.

(இ-ள்.) சொல்லுகின்ற வேதத்திற் றேர்ச்சியடைந்த (சனுருவென்னும்) முனிசிரேஷ்டனுக்கு உவசம்பனி யென்று சொல்லப்படும் ஒரு ஆசைமைந்தனிருந்தனன்; அச்சிறுவன் கொடிய யானைகள் வசிக்கும் பெரிய காட்டிற்செல்லவும், பல தலைகளையுடைய படப்பொறிவாய்ந்த ஒள்ளிய சர்ப்பமொன்று கடிக்க இறந்ததுகண்டு, அவ்விறந்தவனை உடன்போனவர்கள் வீட்டிற்குக் கொண்டுபோயினர்.

எயிறூன்ற=பற்பதிக்க - கடிக்கவென்றும். (௩)

விடங்கொப் பளிக்குந் தொளையெயிற்ற வெவ்வா யரவின் வாய்ப்பட்டுக்
கிடந்த புதல்வன் றனைக்கொடுபோய்க் கிளைத்துக் கலித்த கொடிக்கரும்பு
படர்ந்து நிலவுக் கதிரெறிக்கும் பருமுத் துயிர்க்கும் வயற்காசி
யடைந்து சுவர்க்கத் துவாரத்தி லன்னோன் றந்தை யிட்டனனால்.

(இ-ள்.) விஷத்தைச்சிந்துந் துவாரம்பொருந்திய பற்களமைந்த கொடிய வாயையுடைய பாம்பின் வாய்க்கடியாலிறந்து கிடந்தமைந்தனை, அவன் தந்தையாகிய சனருமுனிவன் எடுத்துக்கொண்டுபோய், கிளைவிட்டுயர்ந்த நெடிய கரும்புகள் பரவிச் சந்திரிகையை வீசுகின்ற பருத்த முத்துகளைச் சிந்தும் வயல்வளப்முள்ள காசிநகரஞ்சேர்ந்து சொர்க்கத்துவாரத்தி விட்டனன். எ-று.

சொர்க்கத்துவாரம் முன் வந்துள்ளவிடத்திற் கண்டறிக. (௪)

வெவ்வா யரவின் கொடும்பிறைப்பற் சுவட்டிற் குதட்ட வீந்தோனை
யெவ்வா றழலிற் பெய்வதெனத் தந்தை யுளத்தி னெண்ணுதலு
மவ்வாய் வில்லத் துருவொடுமோ ரிலிங்கந் தோன்று தமர்ந்தனுற்[ந்தான்.
செவ்வாய்ப் புதல்வன் றுயிலுணர்ந்தான் போன்றுங் கெழுந்து துயர்தீர்

(இ-ள்.) வெம்மையாகிய வாயையுடைய பாம்பினது வளைந்த (மூன்றாம்) பிறைபோன்ற பல்லின் (கடிக்) குறியோடதக்க இறந்தமைந்தனை, எவ்வகையாக நெருப்பிலிடுவதென்று சனருமுனிவன் மனதில் நினைக்கவும், அவ்விடத்தில் (பூமியின்) கீழே அழகுடன் ஓர் சிவலிங்கம் (கட்புலனுக்கு) தெரியாமலிருந்தமையால், செவ்விய வாயையுடைய உவசம்பனி நித்திரை தெளிந்தான்போல வெழுந்து துன்பமொழிந்தான். எ-று.

வில்லம்=குகை. ஈண்டு பூமியின்கீழுள்ள நிலவறை யென்றவது, வில்லபத்திரமணிந்து என்றவது பொருள்கொள்க. குகையென்பதற்குக் கீழென்றும்.

என்னே தீவாய்க் கொடுந்தறுகட் பாந்தள் தீண்ட வீங்கிறந்தோன்
கொன்னே பிழைத்த தெவ்வாறென் றெண்ணி யாங்குக் குறுகுதலுந்
தன்னு ருயிரிற் பிறியாவோ ரெறும்பு வீளிய வதுதாங்கி
முன்னோர் சிறுகட் பெண்ணெறும்பு வருத னோக்கி முனிநின்றான்.

(இ-ள்.) இஃதென்னவியப்பு? நெருப்புப்போன்ற வாயையும் கொடிய அஞ்சாமையையுமுடைய பாம்பு கடிக்க இறந்தவன் இவிடத்திற் சும்மா உயிர்பிழைத்ததென்னகாரணம்? என்று கருதி, ஆண்டுச் சமீபிக்கவும், தனது அருமையாகிய உயிர்போலப் பிரியாத ஓர் ஆணெறும்பு இறத்தலால், அதனை யெடுத்துக் கொண்டு சிறிய கண்களையுடைய ஒரு பெண்ணெறும்பு தன்முன் வருவதை முனிவன் பார்த்து நின்றான். எ-று. (௬)

ஆவி நீத்த கிண்கிணிக்காற் புதல்வன் பிழைத்த வங்கிலையின்
மேவ லோடு முயிர்வாளா வீந்த வெறும்பு முய்ந்ததனாற்
சாவப் பெற்றோ ருய்வதிதன் றன்மை யெனவாங் கோர்பிடிமண்
ணோவில் தவத்து முனியெடுப்ப விலிங்கந் தோன்றி யோங்கியதே.

(இ-ள்.) உயிரிழந்த சதங்கைமாலை யணிந்த காலையுடைய பிள்ளை (மீண்டும்) உயிர்பிழைத்த அவ்விடத்திற்குவரவும், இறந்தவெறும்பும் பிழைத்ததன்மை

யால், இறந்தவர்கள் பிழைபபுறுவது இவவிடத்தின் சுபாவமென்று, கெடுதலில்லாத தவதனையுடைய சனற்குமுனிவன் அவிடத்தில் ஓர் பிடி மண்ணை எடுக்க, (மறைந்திருந்த) சிவலிங்கக்குறியானது காணப்பட்டுப் பிரகாசித்தது. எ-று. (எ)

உலகு விளக்குங் கதிர்ப்பரிதி கோடி யெழுந்தா லெனவோங்கி
யிலகு மிலிங்கந் தனைவழிபட் டேத்தி யிதன்பே ரெஞ்ஞான்று
நிலவு மமுதேச் சுரமென்ன நிகழ்த்திச் சனற்கு முனியென்பா
னலகி லுவகை மீதூரப் புதல்வற் கொடுதன் பதியடைந்தான்.

(இ-ள்.) உலகத்தை ஒளிசெய்கின்ற கிரணங்களையுடைய சூரியர் ஒருகோடியர் உதயமானாற்போல விளங்கிப்பிரகாசிக்குஞ் சிவலிங்கமூர்த்தத்தை வழிபாடுசெய்து துதித்து, இதன்பேர் எப்பொழுதும் பிரகாசிக்கின்ற அமுதேச்சுரமென்று கூறி, சனற்குமுனிவன் குறைவில்லாத சந்தோஷ மதிகரிக்கத் தனது மைந்தனாகிய உவசம்பனியையுடன்கொண்டு தனதூரைச்சேர்ந்தான். எ-று. (அ)

அன்று முதலா வவ்விலிங்க மமுதேச் சுரப்பே ராகியது
துன்று கொடிய கலியுகத்திற் றோன்றா துறையு மஃதன்றி
மன்ற வுலக முழுதேத்த வயங்கு முத்தித் துவாரத்தி
லென்று மோங்கு மெழிற்கருணேச் சுரப்பே ரிலிங்க மொன்றுளதால்.

(இ-ள்.) அன்றுமுதலாக அச்சிவலிங்கக்குறி அமுதேசலிங்கமாகியபெயரையுடையதாயிற்று; நெருங்கிய கொடுமைபொருந்திய கலியுகத்திலே (பாவிகள் கண்ணுக்குத்) தெரியாமல் (மறைந்து) இருக்கும். அதுவேயல்லாமல், நிலைபெற உலகமுழுவதுந் துதிசெய்யும்படி விளங்குகின்ற முத்தித்துவாரத்திலே எப்பொழுதும் மிக்க அழகுவாய்ந்த கருணேச்சுரமென்னும் பெயரையுடைய சிவலிங்கம் ஒன்று விளங்குகின்றது. எ-று. (கூ)

கரிய மிடற்றுச் செம்மேனிக் கருணேச் சுரனை மதிவாரத்
தருளாற் கடிநாண் மலரிலைகொண் டருச்சித் தொருபோ துணவாயோர்
பருவம் விரத மாற்றுமவர் விழைந்த பெறுவார் பன்மலர் தூய்த்
தெருளால் முத்தித் துவாரேசற் றொழுவோர் முத்தி சேர்ந்திடுவார்.

(இ-ள்.) நீலகண்டத்தையும் செவ்விய திருமேனியையுமுடைய கருணேச்சுரலிங்கப்பெருமானை, சோமவாரத்திலே வாசனையுடைய புதிய மலர்கள் பத்திரங்கள் இவற்றால் ஆசையோடருச்சனைசெய்து, ஒருகாலபோசனமாக ஒருமாசகாலம் விரதமிருப்பவர்கள் விரும்பிய இஷ்டசித்திகளையடைவார்கள். முத்தித்துவாரேசலிங்கப் பெருமானை முறைப்படி பலமலர்களா லருச்சித்துப் பணிபவர்கள் மோக்ஷலோகத்தைச் சேர்வார்கள். எ-று. (கo)

பொருவில் சுவர்க்கத் துவாரேசற் றொழுவோர் துறக்கம் பொருந்திடுவர்
கருடப் பசும்புட் கரும்பாக னேமி வாவிக் கரையினிருந்
தருளிற் புரிந்த தவநோக்கி யடைந்த சோதி ரூபேசற்
பரவித் தொழுவோ ரெஞ்ஞான்றுஞ் சோதி யுருவிற் பரிந்துறைவார்.

(இ-ள்.) சமானமில்லாத சொர்க்கத்துவாரேசலிங்கப்பெருமானைப்பணிப்பவர்கள் சுவர்க்கலோகத்தைச்சேர்வார்கள். பசிய கருடப்பறவையை அரிய வாக

னமாகக்கொண்ட திருமால் சக்கரதீர்த்தக்கரையிலிருந்து ஆசையோடு செய்ததவத்தைநோக்கி, ஆங்கெழுந்தருளிய சோதிரூபேசவிலிங்கப்பெருமானைத் துதித்து வணங்குவோர், எக்காலத்திலும் சோதிசொரூபத்தில் ஆசையோடு வாழ்வார்கள்.

திருமால் ஒரு காலத்தில தமது கையிலுள்ள சக்கராயுதத்தால் ஓர் தடாகமெடுத்து அதில் தனது வேர்வைநீரை நிரப்பி அத் தீர்த்தக்கரையில் தவஞ்செய்தனர். அதுவே சக்கரதீர்த்தம். இது முன் வந்துள்ளது.

நேமி=சக்கரம், வாவி=தீர்த்தம். (கக)

அறைந்த விலிங்கம் பதினொன்கிற் றக்கேச் சுரனே முதலாக
வுறைந்த விலிங்க மோரொட்டு மோங்கா ரேசன் முதலாகச்
சிறந்த விலிங்கம் பதினொன்குஞ் செயிரில் சயிலேச் சுரன்முதலாய்
நிறைந்த விலிங்கம் பதினொன்கும நிகரி லிலிங்க மெனவுரைப்பார்.

(இ-ள்.) சொல்லிய சிவலிங்கக் குறிகள் பதினொன்கிலே தக்கேசப்பெருமான் முதலாக விளங்கும் ஓரெட்டுசிவலிங்கங்களும், ஓங்காரேசப்பெருமான் முதலாகச் சிறப்புற்ற பதினொன்கு சிவலிங்கங்களும், குற்றமில்லாத சயிலேசப்பெருமான்முதலாகக் கீர்த்திநிறைந்த பதினொன்கு சிவலிங்கங்களும் (தமக்குத்தாமேயன்றி) சமானம் (பிறிதொன்று) இல்லாத சிவலிங்கங்களென்று (மேலோர்) சொல்வார்கள்.

அருள்கூ ரிலிங்க மாகியவிம் முப்பத் தாறு மத்துணையாய்
மருவ வருதத் துவவுருவாம் வரத னுறையு மிவையாவுந்
தெரிய வரிய மறைப்பொருளா யுறைந்து முத்திச் செலநல்கு
முரிமை யதனல் முத்திநக ரெனும்பேர் காசிக் குளதாகும்.

(இ ள்.) கிருபைமிகுந்த சிவலிங்கங்களாகிய இம்முப்பத்தாறும், அவ்வளவினதாய்ப் பொருந்தவருகின்ற (முப்பத்தாறு) தத்துவங்களின் வடிவமாம். (அவரவர் அபீஷ்டப்படி) வரமருளுஞ் சிவபெருமான்வீற்றிருக்கும் இச்சிவலிங்கக்குறிகளெல்லாம் அறிதற்கரியவேதப்பொருளாயிருந்து மோக்ஷத்திற்குச் செல்லும்படி அநுக்கிரகிக்குஞ் சுதந்தரமுடைமையினாலே முத்திநகரம் என்று.சொல்லுந் திருநாமமொன்று காசிநகரத்திற்கு உள்ளதாகும். எ-று.

காசிக்ஷேத்திரத்திற் கணக்கில்லாத சிவலிங்கங்க ளிருப்பினு மவற்றுள் முப்பானறு சிவலிங்கக்குறிகளே சிறந்தனவென்றும், அவை முப்பத்தாறும், பிருதிவிமுதல் நாதவீறாய்த் தத்துவரூபங்கொண்டு முத்திசேர்த்தற்குரிய சோபானங்களெனவும் கூறுவது இச்செய்யுளின் கருத்து. (கஉ)

மிடறு திறந்த பசுங்கமுகின் வெள்ளிப் பாளை மடல்கிழிய
விடறு கயவாய் நெடுவாளை யெழுந்து தடவுச் சினைப்பலவின்
குடமுட் கனிப்பொற் சுளைகிழிப்பக் கொழித்த பசுந்தேன் குமிழியெழுந்
தடமுற் றியகா சியையலது முத்தி நகரந் தானுளதோ.

(இ ள்.) தொண்டைதிறந்த பசிய பாக்குமரத்தின் வெள்ளிய பாளையின் மடல்கள் கிழிதலால், இடறுகின்ற ஆழமாகிய வாயையுடைய நெடிய வாளைமீன்கள் எழுந்து, வளைவாகிய கிளைகளையுடைய பலாமரத்தின் முட்பொருந்திய குடம்போன்ற பழத்தின் பொன்மயமான சுளைகளைக் கிழிக்க, சொரிகின்ற பசியதேன்

குமிழி யெழுகின்ற தடாகங்கள் நிறைந்த காசிநகரத்தை யல்லாமல் (வேறொரு) முத்திநகர மிருக்கின்றதோ. எ-று. (கச)

முன்ன வரிய வமுதேசன் கதை மொழிந்தோர் கேட்டோர்கள்
மன்னு ஞானஞ் சிவபூசை தானந் தவமந் திரம்யோக
மின்ன யாவுந் தருபலன்க ளெளிதி னெய்தி மறைநான்கும்
பன்ன வரிதாய்ச் சிறந்தோங்கும் பரம னடியிற் சேர்குவரால்.

(இ-ள்.) நினைக்கவரிதாகிய அமுதேசப்பெருமானது சரிதத்தைச் சொன்னவர்களும் கேட்டவர்களும், நிலைபெற்ற ஞானம் - சிவார்ச்சனை - (சோடசமகா) தானங்கள் - (முப்பத்திரண்டு) தருமம் - (பஞ்சாக்ஷர - சடாக்ஷர - அஷ்டாக்ஷர) மந்திரங்கள் - (அஷ்டாங்க) யோகங்கள் - இவை முதலிய யாவுங் கொடுக்கத்தக்க பலன்களை இலேசாகவடைந்து, வேதங்கள் நான்குந் துதித்தற்கரியதாய் மேம்பட்டு விளங்குகின்ற சிவபெருமானது திருவடியிற் கலப்பார்கள். எ-று. (கரு)

அமுதேசன் முதலிய விலிங்கங்களின் சிறப்புரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஉசும.

---

தொண்ணூற்றைந்தாவது,

## வியாதன் கையுநாவு மெழாதுநின்ற அத்தியாயம்.

---

அருமறைதேர் வியாதமுனி கதையினி தறையுமெனப்
பொருவரிய தவமாறறும் பொதியவரை முனிகேட்ப
வெரிதவழு நெட்டிலைய சுடர்வேலா லெழுந்தோங்கு
வரையகடு தொளைபடுத்தி மாத்தடிந்தோன் கூறுமால்.

(இ-ள்.) அரிய வேதப்பொருளிற் றேர்ச்சியடைந்த வியாதமுனிவரது சரிதத்தை (அடியேன் செவிக்கு) இனிமையாகத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று, ஒப்புரைத் தற்கரிதாகிய தவத்தைச்செய்யும் பொதியாசலத்திலிருக்கும் அகத்தியமுனிவர் வினவவும், நெருப்பைச்சிந்துகின்ற நெடிய அச்சவடிவாய்ப் பிரகாசம்பொருந்திய வேலாயுதத்தினால், ஓங்கியுயர்ந்த (கிரவுஞ்ச) பர்வதத்தின் வயிற்றைத் தொளைபடுத்தி மாமரவடிவேற்ற சூரபன்மனைச் சங்கரித்த ஸ்ரீ சுப்பிரமணியப்பெருமான் உபதேசிக்கின்றார். எ-று. (க)

இவர்விடையேற் றானருள்கூ றெண்பத்தெண் ணுயிரராஞ்
சவுனகரா தியநைமி சாரணியத் துறைவோர்பாற்
குவலயமோ ரேழ்புகழக் கோதிலரு மறைவடித்து
நவையறுநூற் கடலகடந்த வியாதமுனி நண்ணினன்.

(இ-ள்.) வாகனமாக இடபத்தையுடைய சிவபிரானது அநுக்கிரக மிகுந்த எண்பத்தெண்ணுயிரவராகிய சவுனகர் முதலாகச் சொல்லப்பட்ட நைமிசாரண்ய

வாசிகளிடத்தில், ஒப்பறற சத்தலோகங்களும் புகழும்படி குற்றமில்லாத அரிய வேதங்களைப் பாகுபடுத்தி, தூஷணையற்ற சாத்திரமாகிய சமுத்திரத்தின் கரையைத்தாண்டிய வியாசமுனிவர் (முன்னொருகாலத்திற்) சென்றனர். எ-று. (உ)

நண்ணுமறை முனிவரனை யினிதேத்தி யுளகயந்து
பண்ணுமருக் கியமுதல யாவுமிகப் பரிந்தாற்றிக்
கண்ணுதலவா னவன்போலுங் கடவுளர்மற் றுளர்கொலெனப்
புண்ணியமா தவாகேட்பப் பொருவரிய முனிபுகல்வான்.

(இ-ள்.) (தம்மிடத்திற்கு) வந்த வேதவியாசமுனிவனை (உபசாரமொழிகளால்) இனிதாகத் துதித்து மனங் களிதுளும்பிச் செய்யத்தக்க அருக்கியம்-(பாத்தியம் - ஆசமனம்) முதலாகிய மரியாதைகளையெல்லாம் மிக்க ஆசையுற்றுச்செய்து, நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைப்போல வேறுதேவா யாவராயினும இருக்கின்றார்களோ ? என்று புண்ணியஸ்வரூபமாகிய சிறந்த தவத்தைச் செய்த நைமிசாரண்ணியவாசிகள் வினவ, ஒப்பிடுதற்கரிய வியாதமுனிவர் உரைக்கின்றனர். எ-று. (௩)

எக்கலையு மெய்பொருளு முறையுணர்ந்து மிழுதைபோற்
சிக்குறுமா ணவமலத்திற் சிமிழ்ப்புண்டு தெருளிலனாய்ப்
பொக்கமுறு முளத்தோடும் பூவைபோற் றிருமேனி
யக்கடவுள் பிரமமெனக் கையெடுத்தாங் கறைந்தனனால்.

(இ-ள்.) எல்லாக்கலைகளையும் எல்லா (நூற்) பொருள்களையும் முறையாக (ஐயம்-திரிபு-அறியாமை என்னு முக்குற்றங்களும் நீங்க) அறிந்திருந்தும், அகப்பட்டுள்ள ஆணவமலத்தினால்கட்டுண்ணப்பட்டு, ஞானமில்லாதவர்போல அறியாதவராய், பொய் பொருந்திய மனத்துடனே காயாம்பூவைப் போலுந் திருமேனி வாய்ந்த கடவுளாகிய அந்தத் திருமாலே பரப்பிரம ஸ்வரூப மென்று கைதூக்கி அம்முனிவர்கட்கு முன்னே கூறினர் (வியாதமுனிவர்) எ-று.

கையெடுத்தல் சபதக்குறி எனக்கொள்க. (௪)

இற்றெனநான் மறைமுனிவ னியம்புதலு நகைகோட்டிக்
கற்றதனாற் செருக்கெய்திக் கழறினனென் றுளத்தெண்ணி
யொற்றைநெடுங் குழைக்கிழவன் காசியில்வந் துரைத்திடென
முற்றுமுணர்ந் தருணமுனிவா முதுக்குறைவாற் புகன்றனரால்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் நான்கு வேதங்களையுங் கூறிய வியாதமுனிவர் விளம்பவும், (இறப்பு நிகழ்வு எதிர்வென்னுந் திரிகாலவர்த்தமான முதலிய) எலலாவற்றையுமறிந்த நைமிசாரண்ணியமுனிவர், இவவியாதமுனிவர் தாங் கற்ற கல்வியினாற் கர்வமுற்றுக் கூறினரென்று மனதுட்கொண்டு, ஒன்றியாகிய நெடிய குண்டலமணிந்த சிவபெருமானது காசிப்பதியில்வந்து(அவவாறு) கழறவேண்டுமென்று சொல்லினர். எ று.

காஞ்சிபுராணம்.

"வாத ராயண நீயிவண் மொழிதரு மாற்றம்
வேத நூற்பொரு ளுண்மையே யாமெனில் விசுவ

நாத ஞர்திரு முன்பெமக் குறையென நவின்று
ரோது கேனென மூர்க்கனு மெழுந்துசென் றற்று."—என மாறுபடாது கூறியதுகாண்க. (டு)

மருள்பூத்து மதிமருண்ட மறைமுனிவன் முனிவரொடு
தெருள்பூத்துச் சிறப்பெய்துங் காசிநகர் சென்றெய்தி
யருள்பூத்த பஞ்சநத மாடிமா தவற்போற்றி
முருகூற்றும் பசுந்துளவ முகில்வண்ணன சீர்பாடி.

(இ-ள்.) மயக்கமிருந்து அறிவழிந்த வேதவியாசமுனிவர் நைமிசாரண்ய முனிவருடனே, ஞானமிருந்து சிறப்பெய்திய காசிப்பட்டணத்தைச் சென்றுசேர்ந்து, கிருபைமிகுந்த பஞ்சநததீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, திருமாலைத் துதிசெய்து, தேன் ஊற்றெடுக்கின்ற பசிய துளவமாலையணிந்த மேகவண்ணராகிய விண்டு மூர்த்தியின் சிறப்பு (ஆகிய தோத்திரங்)களை யெடுத்துப்பாடி. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

பஞ்சநதமென்றது—தருமநதம - கங்காதீரம் - தூதபாவை - கிரணைநதி - யமுனையாறு ஆகிய ஐந்தும் ஒன்றோடொன்று கலக்குந்தானம். இதன்விரிவு இந்நூலிற் பஞ்சநதத்தின் வரலாறுரைத்த அத்தியாயத்திற் பரக்கக்காண்க. (சு)

தண்டுளவ மணிபூண்டு பாகவதர் தற்சூழ
மண்டுதீம் புனன்ஞான வாவியின்கீழ்ப் பானில்லா
வெண்டிசையி லுள்ளோருங் கேண்மின்க ளிறையாவான்
புண்டரிகக் கண்ணனெனக் கையெடுத்துப் புகன்றனனால்.

(இ-ள்.) (வியாதமுனிவர்) தண்மைதங்கிய துளவமணிமாலை தரித்துப் பாகவதர்கள் தம்மைப் புடைசூழ்ந்துவர, மதுரம்நிறைந்த நீரையுடைய ஞானதீர்த்தத்தின்கீழ்த்திசையிலே நின்று, எட்டுத் திக்கிலு முள்ளவர்களுங் கேளுங்கள்: (யாவருக்கும்) தலைவனாக வுள்ளவன் செந்தாமரை மலர்போலுங் கண்ணையுடைய திருமாலேயென்று கைதூக்கிக் கூறினர். எ று.

பாகவதர்=பகவத்பக்திசெய்வோர். இச்சொல் ஈண்டு விண்டுவினடியாரையுணர்த்தியது. (எ)

அருவுருவா யேகமா யாதியாய் நிறைந்தருளும்
பொருவரிய சிவனல்லாற் புண்டரிகக் கண்ணனே
பிரமமென மயக்குற்றுப் பிதற்றுகின்ற பிழையதனு
லுரைபயில்லாக் கையசையா தூமனென முனியிருந்தான்.

(இ-ள்.) அருவுருவமாகியும் (அருவமாகியும், உருவமாகியும்), ஒன்றியாகியும், முழுமுதற் பொருளாகியும், சர்வவியாபியாக விளங்கும் சமான ரகிதராகிய சிவபெருமானை யல்லாமல், செந்தாமரைக்கண்ணராகிய திருமாலே பரப்பிரமமென்று மதிமயக்குற்று உளறிய குற்றத்தினுல், பேசுகின்றநாவும், (தூக்கிய) கையும் அசையாமல் (தம்பித்து) ஊமையென்று (கண்டோர்) சொல்லும்படி (வியாத முனிவர்) நின்றனர். எ-று.

வியாதமுனிவர் விண்டுவே பரமெனக் கைதூக்கி ஸ்ரீவிச்சுவநாதப்பெருமான் சந்நிதியிற் கூறியபொழுது, விண்டுவுந் தமதொரு கூறேயாதலின், சிவபிரான் அதனாற் சினங்கொண்டாரில்லையென்றும், அப்பெருமான்முன் வீற்றிருக்கும் விடைத்தேவர் வியாதமுனிவர் கூற்றால் வெகுளியுற்றுத் தூக்கிய கரமும் தூஷிதநாவும் அவ்வண்ணமே யசைவற்றிருக்கச் சபித்தனரானபடியால் வியாதர் கையுநாவுமெழாது கம்பித் துன்புற்றனரெனவும்,காஞ்சிபுராணங்கூறும்.இதனை,

காஞ்சிப்புராணம்-சார்ந்தாசயப்படலம்.

"அறிவு போலடர்ந் தெழுமறி யாமையின் வலியாற்
பொறியி லானிது இளப்பவும் வெகுண்டிலன் புனிதன்
மறுவில் கூற்றெலாந் தன்பெய ரொனுமறை வழக்கால்
வெறிம லர்க்குழ லுமையொடு மகிழ்ந்துவீற் றிருந்தான்.

நந்தி யெம்பிரான் வெகுண்டோண் மலர்க்கர மெடுத்த
வந்த வண்ணமே யசைவற நிற்குமா சபிப்ப
மந்த ஞயினு னிமித்தகை மடக்கவல் லாமை.
நிந்தை யாற்சிலைத் தூணமொத் தசைவற நின்றான்."—என்பதனானறிக.

அத்தலையிற் பிழைகூறி யஞரெய்து முனிவரன்பால்
மைத்தசெழும் புயலனைய மணிவண்ணன் கரந்தெய்திப்
பித்தரின்பா னிறையென்னப் பிதற்றியதென் மதியிலலோ
யெத்திறத்தா லெனையாளு மீசனைநீ மறந்தனையே.

(இ-ள்.) அப்பொழுது பொய்ச்சத்தியஞ்செய்து (கையும் வாயு மெழாது) துன்புற்றிருக்கும் வியாதமுனிவரிடத்தில், கறுத்த செழுமைதங்கிய மேகம்போன்ற நீலவண்ணராகிய விண்டுமூர்த்தி (ஏனையர் கண்ணுக்குத்) தெரியாமல் வந்து, அறிவில்லாதவனே! வெறிபிடித்தான்போல யான் தலைவனென்றுளறியது யாது காரணம்? என்னை யாளாகக்கொள்ளுஞ் சிவபெருமானை என்னகாரணத்தால் நீ மறந்தாய்? எ-று.

முனிவரன்பால் என்பதை முனிவரிடத்தில் என்றுவது, முனிவர் அன்பால் என்றுவது பொருள்கொளக.

வியாதமுனிவர் தான் செய்வது தெரியாமல் விஷ்ணுவைத் தியானஞ்செய்ய அதற்காக அவர் வந்தனரெனக் காஞ்சிப்புராணங் கூறுகின்றது. இதனை,

"தெற்றற் செஞ்சடை யெம்பிரான் திருமுன்பு நாட்டும்
வெற்றித் தம்பமொத் திலகிவல் விம்பைகூர் வியாதன்
பற்றிச் சிந்தையி னெடியமா லிணையடி பரவ
வற்றைப் போதுமுன் றோன்றிகின் றச்சுத னறைவான்."என்பதனானறிக.

முக்கண்ணன் சேவடியில் விழிமுளரி பெய்தன்றோ
சக்கரமு மலர்மகளுந் தணப்பருஞ்செல் வமுமடைந்தே
னக்கடவு ளருள்சிறிது மடையாரோ றம்பதத்தி
லெக்கடவுள் தேவென்றுங் கேமாப்புற் றிருக்குமால்.

(இ-ள்.) திரிநேத்திரங்களையுடைய சிவபிரானது செவ்விய திருவடியில் எனது கண்ணாகிய தாமரையை யருச்சித்தல்லவோ சுதரிசனத்தையும் திருமகளையும் அழிதலில்லாத பெருஞ்செல்வத்தையும் அடைந்தேன்! அந்தப்பெருமானது திருவருள் சிறிதுமடையாராகில்,எவ்வெத்தேவர் தத்தம்பதவியிற் கடவுளரென்று களிகூர்ந்திருப்பர்? (ஒருவருமில்லை.) எ-று.

இச் செய்யுளின கருத்தை,

காஞ்சிபுராணம்.

"வான மேத்தயான் வைகுந்த வாழ்வுபெற் றதுவு
ஞான நான்முகன் சத்திய வுலகநண் ணியது
மேனை விண்ணவர் தத்தம வாழ்க்கையெய் தியது
மானு யர்த்தவன் றிருவடி யருச்சனைப் பயனால்."—என வருவதனானறிக. (௧0)

ஊனமுறு சடமொருவ னூற்றினன்றி யாடாதால்
யானுலக மளிப்பதுவு நான்முகத்தோ னியற்றுவது
மானிவருஞ் செஞ்சடையோ னாட்டுவித்த லாமதனால்
வானவர்தஞ் செயலெல்லா மரப்பாவைக் கூத்தாமால்.

(இ-ள்.) ஈனம்பொருந்திய சடப்பொருளானது ஒருவன் தொழில்செய்தாலன்றி யசையமாட்டாது. நான் உலகத்தைரட்சிப்பதும், சதுமுகப்பிரமன் (அவ்வுலகத்தை) சிருஷ்டிசெய்வதும், இடபத்தைவாகனமாக வேறுஞ் செவ்விய சடையையுடைய சிவபிரான் அசைப்பித்தலாம். ஆனபடியால் தேவர்களது செய்கை முழுவதும் மரப்பதுமையின் நடனம்போலாகும். எ-று.

இச்செய்யுளின் கருத்தை,

"அவனசைந்திடி லுலகசைந்திடும்" என்னும் தேவாரத்தானும், "அவனன்றி யோரணுவு மசையாதெனும்பெரிய வாய்தர்மொழி" என்னுந் தாயுமானார் திருவாக்கானும், "நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னார்தப்பினால் - தன்னாலு மாடிச் சலிப்பதுண் டோவிந்தத் தன்மையைப்போல் - உன்னா லியானுந் திரிவதல்லான்மற் றுனைப்பிரிந்திங் - கென்னாலொன் றாவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே." என்னும் பட்டணத்தடிகள் வாசகத்தாலும், "சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு மறைக்கோவுந் தழல்கால் சூல - மங்கேந்து மம்மானுந் தத்தமது தொழிறலைநின் றாற்றச் செய்தோர் - பங்கேந்து பெருமாட்டி விழிகளிபப விருமுனிவர் பணிந்து போற்றக் - கொங்கேந்து மணிமன்றுட் குனித்தருளும் [illegible]வாழ்வைக் குறித்து வாழ்வாம்"—என்னும் சிவஞானயோகிகள் மொழியானுந் தெளிக. (௧௧)

தண்ணிலவு மதிக்கண்ணித் தாழ்சடையோன் றாள்போற்றும்
புண்ணியநற் சிவகணங்கள் பூங்கழலிற் கிடப்பதெல்லா
மெண்ணிறந்த வரிபிரமர் தலையன்றோ வெனிற்சிறிது
நுண்ணறிவி லாயெனையேன் பிரமமென நுவல்கின்றாய்.

(இ-ள்.) தட்பம்பொருந்திய நிலவைவீசுகின்ற சந்திரனைச் சிரோமாலையாக வணிந்த நீண்ட சடையையுடைய சிவபெருமானது திருவடிகளைத் துதிசெய்யும் புண்ணிய ஸ்வரூபமாகிய நல்ல சிவகணங்களின் அழகிய கால்களிற் கிடப்பதெல்லாம், கணக்கில்லாத விண்பிரமர்களின் சிரங்களல்லவோவென்றால, இலேசமும் நுட்பமாகிய மதியில்லாதவனே ! என்னையேன் பிரமமென்று பேசுகின்றனை ?

நின்வயிற்சேர் கொடியபிழை மொழிசெவியி னேர்படலு
மென்வயிற்றி னெரிதவழ வுளம்வெருவி யீண்டடைந்தேனை
பொன்னசலச் சிலைகுனித்துப் புரமூன்று மழலூட்டு
முன்னவனை யானறியா முழுமுதலைப் போறறென்றான்.

(இ-ள்.) உன்னிடஞ் சேர்ந்த கொடிய பழிச்சொல், எனது செவிப்புலனிற் றெரிந்தவுடன், வயிற்றில் தீபபற்றவும் மனதில் அச்சமுறவும் இவ்விடத்திற்குவந்தேன். பொன்மலையாகிய மேருவை (வில்லாக) வளைத்துத் திரிபுரங்களையுந் தீயூட்டிய ஆதிபெருமானும் யான்(இறுமாப்புற்றபொழுது)கண்டறியாத முழுமுதற்பொருளுமாகவுள்ள சிவபெருமானைத் துதிப்பாயாகவென்று(திருமால்)கூறினார்.

அண்ணல்மால் விடையூர்ந்த வரும்பொருளைப் பழிச்சுதற்கு
மண்ணிடந்தோ யெனதுநா வழங்கவருள் வழங்கென்னக்
கண்ணினால் முனியுரைப்பக் கண்ணுதல்பேர்ச் செவியி னிசைத்
தொண்ணிறகே மியங்கடவுள் விசும்பினொளித் தேகினனால்.

(இ-ள்.) திரிலோகங்களையுந் திருவடியாலளந்த திருமாலே ! பெருமை பொருந்திய பெரிய இடபத்தை யாரோகணித்த அரிய பரம்பொருளாகிய சிவபெருமானைத் தோத்திரஞ்செய்வதற்கு எனது நாவானது உபயோகப்படும்படி அருள்கொடுக்கவேண்டும் என்று, வியாதமுனிவர் கண்ணினால் (சைகைசெய்து) சொல்லியவுடனே, ஒள்ளிய நிறமமைந்த அழகிய சக்ராயுதமேந்திய திருமால் நுதற்கண்ணையுடைய சிவபெருமானது திருநாமமந்திரத்தை (வியாதமுனிவர்) செவியிலுபதேசித்து, ஆகாயமார்க்கமாக மறைந்துசென்றனர். எ-று.

திருமால் சிவமந்திர முபதேசித்தல் தகுதியோவெனின் அவரும் சைவ சமயிகட்கு ஓர் குரவரோயாதலிற் பொருந்தும் இதனை,

“ திருமாலிந் திரன்பிரம னுபமனியன் தபனனந்தி செவவேளாதி
தருமமுது குரவருக்குந் தமதருளா லாசிரியத் தலைமை நலகி
வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம் மலரும்வாய்ந்த
உருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை யுளத்துள் வைப்பாம்”
என்னும் ஆன்றோர் திருவாக்கானும்,

“ குண்டையேர கொற்றக் கொடியோ கொடுக்கணையோ
பெண்டோசீர்த் தொண்டனோ பேசுங்கால்—மண்டருணைப்
பூவிரத மோட்டினர்க்குப் பொற்பிருடி மாதர்தம்
மாவிரத மோட்டினர்க்கு மால்.”—என்றபடி திருமால் சிவனடியார்களுள்ளே சிறந்தவராதலானும் பொருந்துமென்க.

நீறணிந்த செம்மேனி நீலகண்ட னன்னுமங்
கூறியது செவிப்புலத்திற் குறுகுதலு மருடீர்ந்து
தேறிமுதுக் குறைவெய்திச் செழுமறைதேர் வியாதமுனி
யாறணிந்த செஞ்சடையெம மந்தணனை யேத்துவனுல.

(இ-ள்.) திருவெண்ணீற்றினையணிந்த செவவிய திருமேனிவாய்ந்த நீகண்டத்தையுடைய சிவபெருமானது நல்லதிருநாமமாகிய (திருமால்) கூறியது காதிற் பட்டவுடனே, செழுமையாகிய வேதங்களில் தேர்ந்த வியாதமுனிவர் மயக்க மொழிந்து உணாவுற்றுப் பேரறிவுகொண்டு, கங்கையாற்றினை யணிந்த செந்நிறம் பொருந்திய சடையையுடைய எமது சிவபெருமானை (பின்வருமாறு) துதிசெய்ய த்தொடங்கினர். எ-று. (கஙு)

மாலவன்றன் னுடலின்னுங் கரிதாக வருங்கொடிய
வாலமுண்டு துயர்கூரா தமரருயி ரளித்தோனைப்
பாலனுக்காக் கூற்றுதைத்த பண்ணவனைப் பவளவரை
போல்பவனை யலதுநாப் போற்ருது போறறுதே.

(இ-ள்.) மாயோனது சரீர மின்னுங் கருமையெய்தத் (திருப்பாற்கடலில்) தோன்றிய கொடிய ஆலாலவிஷத்தைப் புசித்துத் துன்பமுறுமல் தேவருயிரைக் காத்திரட்சித்தவரும், பாலராகிய மார்க்கண்டேயமுனிவருக்காக இயமனை (திருவடியினுல் அவன் வீறுகுன்ற) உதைத்தருளிய கடவுளும், பவளமலைபோன்ற திருமேனி யுடையவருமாகிய சிவபெருமானை யல்லாமல் எனது நாவானது (பிறரொருவரையும்) ஒருபோதும் துதிசெய்யாது. எ-று.

இதுமுதல் ஆறுசெய்யுள்களால் வியாதமுனிவர் சிவஸ்துதிசெய்கின்றனர்; இக்கவிகளிற் பொதிந்த காதைகள் முன் வந்தவையே. (கசு)

மண்ணகம்பொற் றிண்டேரா மாமறைகள் பாய்பரியாத்
தண்மதிவெய் யோனிலங்கு பாண்டிலாத் தண்டுளவோ
னெண்ணிறவம் பாய்ப்புரங்க ளொருமூன்று மொருங்கவித்த
கணணுதல்பொற் றுளன்றிக் காணுகண் காணுவே.

(இ-ள்.) பூலோகமே அழகிய இரதமாகவும், பெருமைதங்கிய (நான்கு) வேதங்களே பாய்ந்து செல்லும் (நான்கு) குதிரைகளாகவும், குளிர்ச்சிதங்கிய சந்திரனும் வெப்பம்பொருந்திய சூரியனும விளங்குகின்ற சக்கரங்களாகவும், தண்ணிய துளவமாலையணிந்த திருமாலே ஒள்ளிய நிறமுடைய அம்பாகவுங் கொண்டு, ஒப்பற்ற புரங்கள் மூன்றையும் ஓரேகாலத்தில் அழித்த சிவபெருமானது அழகிய திருவடிகளையல்லாமல் எனது கண்கள் (வேறொன்றையும்) ஒருபொழுதும் பாராது.

பாணிகருஞ் சிறைத்தும்பி படிந்தாடுங் கொன்றையந்தார்
வாணிலவு மதிக்கண்ணி வனைந்தருளும் புரிசடையோன்
சேணமர்ந்த தேவாமணி முடியுழுது சேந்தொளிரபொற்
றுண்மலர்க்கல் லாதுசென்னி தாழாது தாழாதே.

(இ-ள்.) பண்ணைப்போன்ற சிறகோசையைப் பொருந்திய தும்பிகள் மூழ்கி விளையாடுகின்ற அழகிய கொன்றைமலரையும், ஒள்ளிய நிலவைவீசுகின்ற சந்

திரனையுஞ் சிரோமாலையாக வணிந்தருளிய புரிந்தசடையையுடைய சிவபெருமானது,ஆகாயத்திற்பொருந்திய தேவர்களது மணிகள்பதித்த கிரீடங்கள்விழுதலால் சிவந்து பிரகாசிக்கின்ற பொன்மயமாகிய திருவடித்தாமரையையல்லாமல (வேறொன்றையும்) எனது சிரமானது ஒருபொழுதும் பணியாது. எ-று.

பாணிகரஞ் சிறைத்தும்பி யெனவும் பாடம். அஞ்சிறையென்பதற்கு அகச்சிறகு ஏனப் பொருள் கொள்க. (கஅ)

கறையனற்பேழ் வாயுரக கங்கணத்தோ னெவனெழுதா
மறைமுழுதுந் தனியேத்தி வழிபடுவோ னெவன்கோணற்
பிறையணிந்தோன் யாவனீங் கவனல்லாற் பெட்பினொடு
மிறைவனென வெனதுள்ளத் தெண்ணேனமற் றெணணேனே.

(இ-ள்.) விஷம பொருந்திய நெருப்பை யொத்த பெரிய வாயையுடைய சர்ப்பங்களைக் கங்கணமாகவணிந்த கடவுள் யாரோ? எழுதாக்கிளவியாகிய வேதங்களெல்லாம் தனித்தனி துதித்து வழிபாடுசெய்தற்குரிய கடவுள் யாரோ? வளைவாகிய பிறைச் சந்திரனைச் சிரசி லணிந்த கடவுள் யாரோ? அப்படிப்பட்ட கடவுளை யல்லாமல் ஆசையோடு கடவுளென்று என் மனதில் (வேறொருவனையும்) ஒருபொழுதும் தியானியேன். எ-று. (க௯)

ஆதியாய் முழுமுதலா யருவுருவாய்ப் பூரணமா
யோதுநான் மறைதெளிந்த வுபநிடதப் பொருளாகி
நாதமாய் வெறுவெளியாய் நாரணனுங் காண்பரிதாஞ்
சோதியா லயமலது சூழாகால் சூழாவே.

(இ-ள்.) ஆதிபகவனாகியும், முழுமுதற் காரணராகியும், அருவுருவராகியும், சர்வவியாபகராகியும், சொல்கின்ற நான்கு வேதங்களையும் தெளிவுபடுத்திய உபநிஷதத் தாற்பரியராகியும், நாதமயமாகியும், சுத்தவெளியாகியும், திருமாலுங் கண்டறிதற்கு முடியாத சோதிஸ்வரூபராகியு முள்ள சிவபெருமானது திருக்கோயிலையல்லாமல் எனது கால்கள் (மற்றொன்றையும்) ஒருகாலத்திலும் பிரதட்சணஞ்செய்யாது. எ-று. (உ0)

மையநெடு வரை போலு மழைமதமால் கரியுரித்துச்
செய்யதிரு மேனிதனிற் போர்த்தருளுஞ் சேவகன்ற
னையசெழும் பொற்கமல மலர்போலு மடியினல்லாற்
கொய்மலர்க டூவிநின்று கூம்பாகை கூம்பாவே.

(இ-ள்.) கருமைநிறம் பொருந்திய பெரியமலைபோன்ற, குளிர்ந்த மதநீரைச்சொரியும் மயக்கத்தை யுடைய யானையை யுரித்து, செவ்விய திருமேனியிற் போர்வையாகக் கொண்டருளிய பராக்கிரமமுடைய சிவபெருமானது அழகிய செழுமை வாய்ந்த பொற்றாமரைமலர்போன்ற திருவடியிலல்லாமல், கொய்தமலர்களா லருச்சித்துநின்று எனது கைகள் (பிறிதொன்றையும்) ஒருநாளும் கூம்பாது.

மேல் போந்த ஆறு செய்யுள்கள் வியாதமுனிவர் செய்த சிவத்தியானம். அச்செய்யுள்களின்கருத்தைத் **திருநாவுக்கரசுசுவாமிகள்** திருவாய்மலர்ந்தருளிய **திருஅங்கமாலைத்** திருப்பதிகத்தானும்,

வரதுங்கராமபாண்டியர்.

" கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவனறன் சீர்பாடு நன்னாவே நன்னா
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிகள்
அண்ணல்பொலங் கழனிணைக்கு நெஞ்சமே நெஞ்ச
மவனடிக்கீ ழடிமைபுகு மடிமையே யடிமை" எனப் பிரமோத்
தரகாண்டத்துட் கூறியவற்றானு முணர்க. (உக)

வேறு.

என்று கூறி முனிவர னேத்தலுங்
கொன்றை வேணிய னின்னருள் கூர்தரத்
துன்று பாவந் தொலைந்தவ னோங்குகை
மன்ற முன்னைய தாக வழங்கிற்றால்.

(இ-ள்.) என்றிந்தவகையாக வியாதமுனிவர் தோத்திரஞ்செய்து துதிக்கவும், கொன்றைமாலையணிந்த சடையையுடைய சங்கரரது இனிமையாகிய திருவருள் மிகுதலால், தன்னையடைந்த பாவமானது தொலைந்து அவரது தூக்கிய கை நிலைபெற முன்னைய தன்மையாக வழக்கத்திற்கு வந்தது. எ-று.

இவ்வாறே யன்றி, வியாதமுனிவர் செய்த தோத்திரத்திற் களிகூர்ந்த சிவபெருமான் உமாதேவியாருடன் இடபாரூடராய் விநாயகர் - ஸ்கந்தர் - திருமால் - திசைமுகன் முதலிய தேவர்கள் புடைசூழவும் புஷ்பமாரி பொழியவும் காட்சியளித்ததாகவும், அவ்வாறு வருகையில் தமது திருவடியைத் தாங்கிநின்ற திருமாலின் நிலைமையை முனிவர்க்குக் காட்டியதாகவும், சரிதமுளது. இதனை,

காஞ்சிப்புராணம் - சார்ந்தாசயப்படலம்.

" எவனைநீ மதித்து நம்முன் சூளுற விசைத்தா யிந்நா
ளவனிதோ காண்டி மற்றெம் மடியிணை தாங்கி நின்றான்
சவலைநீ பேதை நீராற் சாற்றினை யெம்மைத் தேறு
துவலையா மதத்திற் பட்டோ ரிம்மைநோ யுழப்பர் கண்டாய்—என்பதனு னறிக. (உஉ)

தண்டு ழாய்மணி மாலை தணந்தொளிர்
கண்டி கைத்தொடை சூடிக் களிப்பொடும்
புண்ட ரங்கள் புனைந்து சிவனடித்
தொண்டர் தாணமலர் சூடின னாடினன்.

(இ-ள்.) குளிர்ச்சிதங்கிய துளபமணி மாலையை நீங்கி, பிரகாசிக்கின்ற உருத்திராக்க கண்டிகையாகிய மாலையையணிந்து,ஆசையுடனே திரிபுண்டரங்கள் (ஆகத்திருவெண்ணீறு) தரித்து, சிவனடியிற் றொண்டர்களாக வுற்றோரது பாதங்களாகிய மலர்களைச் சிரமேற்கொண்டு ஆநந்தக்கூத்தாடினர் (வியாதமுனிவர்.)

அன்று தொட்டெம் மமலனுக் கன்பனாய்
மன்ற வோங்குகண் டாகனன் வாவியிற்
றுன்று தண்கதிர்ச் சோதியி லிங்கமாங்
கொன்ற மைத்துள் ளுவந்தருச் சித்தனன்.

(இ-ள்.) அன்றையதினமுதல் எமது சிவபெருமானுக் கடியவராய், நிலை பெற்றுயர்ந்த கண்டாகனன் தீர்த்தத்திலே, நெருங்கிய தட்பமாகிய கிரணங்களை யுடைய சோதிவடிவாகிய சிவலிங்கக் குறியொன்றினைப் பிரதிட்டைசெய்து மன விருப்புற்றுப் பூசித்தனர் (வியாதமுனிவர்). எ-று. (உச)

இன்ன வீசனற் காதை யியம்பினர்
துன்னு பாதகங் கோடி தொகுப்பினு
மன்ன யாவுந் தொலைத்தரன் சேவடி
மன்னி வாழ்குவ ரென்ன வழங்கினன்.

(இ-ள்.) இத்தன்மையான பெருமானது சரிதத்தைச் சொன்னவர்கள், நெருங்கிய கோடிபாதகங்களைச் செய்தபோதிலும், அவற்றையெல்லாமொழித்துச் சிவபெருமானது சிவந்த திருவடிகளில் நிலைபெற்று வாழ்வார்களென்று (ஸ்ரீ ஆறு முகப்பெருமான் அகத்தியமுனிவருக்கு) அருளிச்செய்தனர். எ-று. (உரு)

வியாதன் கையுகாவு மெழாதுநின்ற அ-ம்.

முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - உஉகூரு.

---

தொண்ணூற்றொருவது,

## வியாதன் சாபமிட்ட அத்தியாயம்.

---

விடைக்கொடி யுயர்த்தோன் றொண்டர்க் கன்பனும் வியாதன் முன்னங்
கடக்கருஞ் சாபங் காசிக் கிடுமெனக் கரைந்தா யவ்வா
றடக்கரு முவகை யேற்கின் றறைகென முனிவன் கேட்பப்
படைக்கட லுடைக்கும வைவேற் பண்ணவ னுரைக்கு மன்றே.

(இ-ள்.) இடபத்தைக் கொடியாக வுயர்த்திப்பிடித்த சிவபிரானது அடியார்கட்கன்பராகிய வியாதமுனிவர், நீக்குதற்கரிய சாபத்தைமுற்காலத்தில், காசி நகருக்குக் கொடுத்தனரென்று திருவுள்ளம் பற்றினீர், அவ்வரலாற்றினை யறிய அடக்கமுடியாத ஆசையுடைய அடியேனுக்கு இப்பொழுது திருவாய்மலர்ந்த ருளவேண்டுமென்று, அகத்தியமுனிவர் கேட்டலும், சேனைகளையுடைய சமுத்திரம் உடையும்படி செலுத்திய கூர்மையாகிய வேலாயுதத்தையேந்திய ஸ்ரீ கார்த்திகேயர் கழறுவாராயினர். எ-று.

படைக்கடலுடைக்கும் வைவேற் பண்ணவனென்றது :—

ஸ்ரீ முருகப்பிரான் தேவர்கட்காகச் சூரபன்ம ருதியருடன் செருச்செய்கையில், ஆருவதுதினம் சூரபன்மனுக்கு இளையோனுகிய சிஙகமுகாசுரன் அநேக நாழிகைப்பொழுது நவவீரர் இலக்ஷகுமாரர் ஆயிரம் வெள்ளம பூதசேனை ஆகிய இவர்களை யெதிர்த்துச் சண்டைசெய்து செயிக்கமுடியாமல் வெகுளி கொண்டு ஓர் மாயாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அது நவவீரர்களையும், லக்ஷவீரர்களையும், பூதசேனையையுங் கட்டிக்கொண்டு ஆகாயவழியாய்ச்சென்று பாற்கடலி லுண்டாகிய உதயகிரியில் விடுத்தது. அதுகண்ட வாயுதேவன் இளையபிள்ளையாருக்கு விஷயத்தை விண்ணப்பஞ்செய்ய, அப்பெருமான் தம்மோடிருந்த ஆயிரவெள்ளம் பூதசேனையோடும் இரதாரூடராய்ப் போர்க்களஞ் சேர்ந்து சமர்செய்கையில, பூதசேனைமுழுவதையும, அச்சிங்கன் ஆயிரம் வாய்களால் விழுங்கினன். அப்பொழுது தனித்துநின்ற ஆறுமுகப்பெருமான் அவன்வயிற்றை அஸ்திரமொன்ருற் பிளக்க அதன்வழி பூதர்வெளி வருவதுகண்டு தன்கைகளால் தொளையை மூடினன். விமலர் அவன்நெற்றியில் ஓர் கணைசெலுத்திக் களைப்படுத்தினர். அவன் அதனல் அவசமாக, அதுகாலையில் அவன் வயிற்றி லிருந்தோர் வெளிப்பட்டுப் பெருமானைப் பணிந்தனர்.

மீண்டும் ஒருகணையையெடுத்துத் திருப்பாற்கடலில் உள்ள உதயகிரியிற் பலமுடன் செலுத்தினுர். அது போய் வீரர்கள் தொகையைத் தன்மேல் தாங்கிக்கொண்டு விரைவாகத்திரும்பி, சுப்பிரமணியக்கடவுள்முன் விடுத்ததென்பதாம்.-இதனை,

கந்தபுராணச்சுருக்கம்.

"மற்றிவ்வேலை வெகுளிகொண்டு சிங்கமாமு கத்தினேன்
மாயமான பாசம்வீச மாசிலாத பூதனாக்
கொற்றமுற்ற வெண்மரைத்து லக்கமாமி லக்கரைக்
கோளுறும்பு யத்தனைக்கொ தித்துவந்து கட்டியே
வெற்றிகொண்டு விண்ணெழுந்து தண்ணெனப்ப டர்ந்துபால்
வேலைதன்னி லுதயமான வெற்பிலிட்டி ருந்ததா
லுற்றதேவ ரீதுகண்டு வாடினுர்க ளோடினு
ருலவைசென்று முருகனேடு ரைப்பவங்கெ ழுந்தனன்"-எனவும்,

"அப்போது தன்னி லுதயச்சி லம்பி லருள்கொண்ட வேல னொருகோ
றப்போடு கைப்ப வதுசென்று வீரர் தொகையைத்த னுது மிசையே
மெய்ப்போடு கொண்டு கடிதேதி ரும்பி விறல்வேலன் முன்பு விடவே
மைப்பாவு கண்டன் மகனங்க வர்க்கு மகிழ்வாக வோதி னனரோ." எனவும் வருவனவற்ருனுணர்க. இதுவேயன்றி, படைக்கடலுடைக்கும் என்பதற்குச் சூரபன்மனிருந்த கடலைக்கலக்கிய வெனக் கூறினும் பிழையாது. (க)

அடைபுடை பொதிந்து தீந்தே னரும்புபூங் கரும்பு வேலி
படர்வயற் காசி தன்னிற் பாயொளி யிலிங்க மொன்று

கடவுளுன் மறைவி யாத னமைத்தநாள் முதலாய்க் காமர்
சுடர்மணி கன்னி கைப்பூம் புனலில்லை கறையிற் றோய்ந்து.

(இ-ள்.) (தெய்வீகம்பொருந்திய) நான்குவேதங்களையறிந்த வியாதமுனிவர் இலைகளின் பக்கத்திற்பொதிந்து, மதுரமாகிய தேனைச் சிந்தும் பூக்களையுடைய கரும்புவேலிகள் படர்ந்த வயல்களமைந்த காசிக்ஷேத்திரத்தில், பரவிய பிரகாசத்தையுடைய ஓர் சிவலிங்கக்குறியைப் பிரதிஷ்டைசெய்த தினமுதற்கொண்டு,அழகிய பிரகாசத்தோடுகூடிய மணிகன்னிகையாகிய பொலிவமைந்ததீர்த்தத்தில் விடியற்காலத்திலே ஸ்நானஞ்செய்து. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம் (உ)

எறிசுடர்ப் பணில முத்த மீர்ங்கதிர் மதியென் றெண்ணி
யறைபுனற் றுறைதோ றும்ப லரும்பற வெடித்து மன்ற
னறவுகொய் பனிகருங் காசி நகரில்வீற் றிருக்கு முக்கட்
கறைமிடற் றெநதை செம்பொற் கழலிணை கருதி யேத்தி.

(இ-ள்.) ஒளிவீசுகின்ற சங்கமுத்துகளைக் குளிர்ந்த கிரணத்தையுடைய சந்திரனென்று கருதி, சத்திக்கின்ற நீர்த்துறைகளிலெல்லாம் பொருந்திய ஆம்பற்செடிகள் மொட்டுகளை நன்றாகவிகசித்து வாசனையோடுகூடிய தேனைச்சொரியும் காசிப்பட்டணத்தில் எழுந்தருளியுள்ள திரிநேத்திரங்களையும் நீலகண்டத்தையுமுடைய எமது தந்தையாகிய ஸ்ரீ விச்சுவநாதப்பெருமானது செம்பொன் போன்ற உபயதிருவடியைத் தியானித்துத் துதித்து. எ-று. (௩)

பத்தியிற் குயின்ற முத்தம் பனிச்சுட ரெறிப்ப வோங்கு
முத்திமண் டபத்தின் வைகி வழிபடு முனிவர் கேட்ப
வைத்திரு டீங்கு சோலை மதிமுகந் துடைக்குஞ் செவ்வி
வித்தகன் மருவு காசி வியன்சிறப் புரைக்கு மன்றே.

(இ-ள்.) வரிசையாகப் பதித்துள்ள முத்துகள் குளிர்ந்த ஒளிவீசும்படி யுயர்ந்த முத்திமண்டபத்திலே வீற்றிருந்து, தம்மை வழிபாடுசெய்கின்ற முனிவர்கள் கேட்கும்படி, கருமைமிகுந்து இருள்வாழ்கின்ற சோலைகள் சந்திரனைத்தாவுகின்ற அழகமைந்த ஞானரூபராகிய சிவபெருமான் வீற்றிருக்கும் காசிநகரத்தின் மேன்மைதங்கிய பிரபாவங்களையெடுத்துப் போதிப்பாராயினர் (வியாதமுனிவர்).

கூன்பிடர்ப் பவளச் செந்நெல் கொழுமடற் கமுகி னோங்கி
வான்படர் வயல்சூழ் காசி மாநக ரடைந்த போதே
தேன்படு மொழியாள் பங்கன சீறடி சேர்வ னென்னுந்
தான்படர் நெறியி னீங்கித் தவறிழைத் திடுத லாகா.

(இ-ள்.) வளைவாகிய கழுத்தையுடைய செவ்விய பவளநிறம்பொருந்திய நெற்பயிர், மதர்த்த மடலையுடைய பாக்குமரங்கள்போல வுயர்ந்து ஆகாயத்திற் படர்கின்ற வயல்கள்சூழ்ந்த காசியாகிய சிறந்தபட்டணத்தைச் சேர்ந்தபொழுதே தேன்சொரியுஞ் சொல்லையுடைய உமாதேவிபாகராகிய சிவபெருமானது சீர்த்தி தங்கிய திருவடியைக்கூடுவேனென்று, தான் செல்லு நன்னெறியை விலகி (மமதையால்) பாவச்செயல்களைச் செய்தல் கூடாது. எ-று. (௫)

பிறன்மனை யினிது வேட்டல் பிறர்பொருள் கவாந்து கோடல்
தெறுதொழின் முதல வாய தீவினை புரித லாகா
விறுவது காசி தன்னில் வேண்டுமென் றெண்ணி யாவி
மறலிதன் றூதர் கொள்ள வலிதினில வழங்க லாகா.

(இ-ள்.) அன்னியமாதனை ஆசையாகவிரும்புதல் - மற்றொருவரது சொத்துக்களைக் கிரகித்துக்கொள்ளுதல் - கொலைபுரிதல் முதலிய பாவங்களைச்செய்தலாகாது. (ஒருவன்) காசிக்ஷேத்திரத்திலே சாகல்வேண்டுமென்று நினைத்து (தனக்குத்தானே)பலாத்காரமாய் உயிரை இயமதூதர்கொள்ளும்படி கொடுத்தலாகாது.

மற்றைய தலத்தி லிங்கங் கோடிமேல் வழங்கு பேறு
முற்றுநீர்க் கங்கை யோங்கு காசியில் முடிவி லாத
கற்றையஞ் சுடரி லிங்க மொன்றினைக் காணட லோடும்
பெற்றுவிண் ணவர்க ளேத்தப் பெறலரும் வீடு சேர்வார.

(இ-ள்.) ஏனைய (புண்ய) ஸ்தலங்களில் ஒருகோடிக்குமேற்பட்ட சிவலிங்கள் கொடுக்கும்பலன் முழுவதையும், நீர மயமாகிய கங்காநதியோங்கிய காசிநகரத்தில், கெடுதலில்லாத தொகுதியாகிய அழகிய கிரணங்களையுடைய ஓர் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தவுடன் அடைந்து, தேவர்கள் துதிக்கும்படி அடைதற்கரிதாகியமோக்ஷத்தையடைவார்கள். எ-று. (எ)

முயலடை கிடக்குந் திங்கள் மோலிய லிலிங்க மொன்றைப்
பயின்மலர் தூவி யோர்காற் பழிச்சிலெண் ணிருமா தான
மியைவுறக் கொடுத்த பேறிங் கெய்துமைந் தமுதத் தாலாட்
டயர்பவர் புரவி மேத மாற்றிய பயனுண் டாவார்.

(இ-ள்.) முயற்களங்கம் பொருந்திய சந்திரனைச் சடையிலுடைய ஓர் சிவலிங்கக்குறியை இக்காசிக்ஷேத்திரத்தில் மலாகளானருச்சித்து ஒருமுறைதோத்திரஞ் செய்தால், சோடசமகாதானங்களையுங் கிரமமாகக்கொடுத்த புண்ணியம் கைகூடும். (ஓர் சிவலிங்கத்தை) பஞ்சாமிர்தத்தினால் அபிடேகித்தவர் அசுவமேத யாகஞ் செய்தபலனை அடையப் பெறுவார்கள். எ-று. (அ)

குலைபொறு தலையுந் தாநீர்க் குடம்படு குரும்பைத் தெங்கி
னிலைதலை விரிக்குங் கான மிருசுடர் தடுக்குங் காசி
யுலர்கதி ரிலிங்க மொன்றிற் கோர்பொழு தடிசி லேற்றின்
மலர்தலை யுலகில் வாச பேயமாற் றியதை மானும்.

(இ-ள்.) குலையின் சுமையைத் தாங்கமாட்டாமல் அசைகின்ற சுத்தசலத்தையுடைய குடம்போன்ற குரும்பைகள்பொருந்திய தென்னமரங்களின் இலைகள் தலைவிரிந்து விளங்கும் சோலையானது (சூரியசந்திரர்களாகிய) இருசுடர்களை(ச்செல்லவொட்டாமல்) தடைசெய்யுங் காசியிலுள்ள பரந்த ஒளியமைந்த ஓர் சிவலிங்கக்குறிக்கு, ஒருகாலம் திருவமுது (நிவேதனம்) செய்வித்தால், இடமகன்ற உலகத்தில் வாசபேயயாகஞ் செய்ததை யொக்கும். எ-று.

வாசபேயம்—பதினெறுபசுக்களாற் செய்யும் ஓர்யாகம். (கூ)

கொலைத்தலைச் சூல வொள்வேற் குழகனுக் கருளி னேடுங்
கலைத்தலைத் திங்க ளன்ன கவிகைவெண் கவரி சங்க
நலத்தகு கொடிக ளின்ன நல்கினோர் குடையி னீழ
லலைத்தலை சுமந்த வாழி யகனில முழுது மாள்வார்.

(இ-ள்.) கொல்லுகின்ற சிரசையுடைய சூலமாகிய ஒள்ளிய (முத்தலை) வேலாயுதமேந்திய சிவபெருமானுக்கு ஆசையுடனே சோடசகலைகளுநிறைந்த சந்திரன்போன்ற குடை - வெண்மைதங்கிய சாமரை - சங்கு-நன்மைதரத்தக்க துவஜம் இப்படிப்பட்டவற்றை (தானம்) கொடுத்தவர்கள் ஓர்குடையின் நீழலில் (ஏகசக்ராதிபதியாய்) அலைகள்பொருந்திய கடல்சூழ்ந்த பரந்த பார்முழுவதையும் அரசுசெய்வார்கள். எ-று.

கொலைத்தலை என்பதற்குக் கோறல்புரிதலிற் றலைமைபெற்ற என்றும்பொருள்.

இச்செய்யுளின்கருத்தை-சிவபுண்ணியத்தெளிவு.

"தழங்குசங்குபல்லியஞ்சாமரைவாள்கண்ணடி
சத்திரம்வத்திரங்கனகந்தாம்பிரபாத்திரமு
முழங்குநதிமதியிதழிமுடிக்கணிந்தபெருமான்
முன்னருறப்பணிந்தெழுந்துமொழிந்திடுனேன்முறையே
வழங்குவோர்தமைமுன்னுள்வருத்திடுநல்குரவு
மாற்றியகமகிழ்வுறப்பின்மல்குவளநுகர்வர்
பழங்கணிருளொளியகன்றவுயிர்க்குயிராய்நிறைந்த
பரமசிவனுருத்திரன்றன்பதிபெறலுண்மையதால்."—என்னும் திருவிருத்தத்தின்படியே சிவசந்நிதிக்கு சங்கு-வாத்தியம்-சாமரை-வாள்-கண்ணடி-குடை-வஸ்திரம் - பொன் - தாம்பிரபாத்திரம் முதலியவற்றைப் பிரயோசனப்படுத்தினோர் சகலபாக்கியத்தோடும் வாழ்ந்து முத்தியுறுவர்.—எனக் கூறியவாற்றானறிக.

பாவடிப் பனைக்கை வேழ முரித்தருள் பரமன் செம்பொற்
சேவடிப் போதிற் றூவி யேத்துவான் சிறந்த வந்தண்
பூவலர் சோலை வாவி யின்னன புரிவித் தீந்தோர்
யாவரங் கவர்தம் வீட்டிற் கற்பக மிருக்கு மன்றே.

(இ-ள்.) பரவிய அடியையும் பனைமரம்போன்ற துதிக்கையையுமுடைய யானையை உரித்தருளிய சிவபிரானது செம்பொன்போன்ற செவ்விய திருவடிதாமரையில் அருச்சித்துத் துதிசெய்யும்படி, சிறந்த அழகிய தட்பமாகிய பூக்கள் மலரும் சோலைகள் - தடாகங்கள் இப்படிப்பட்டவற்றை உண்டுசெய்து (தானம்) கொடுத்தவர்கள் யாரோ, அவர்கள்வீட்டிற் கற்பகவிருட்சம் வீற்றிருக்கும். எ-று.

பூவலர்சோலை யீந்தோர்பயனை

சிவபுண்ணியத்தெளிவு.

"உத்தியானமிறைக்களித்தோரதிற்
பத்திரம்மலர்பைங்கனியின்வரை
யொத்தசிருகமொன்றிமகிழ்வொடு
நித்தனேங்கும்புரத்தினிலவுவார்"—என்பதனாலும்,

வாவியிந்தோர்பயனை ஷை.

"வாவிகூபதடாகங்கள்வகுத்துமேற்றனக்கோர்
கோவிலாதபோக்குரிசிலைக்குறித்தவைகொடுத்தோர்
தாவில்சீர்ப்பெருந்தனத்தொடுந்தரணிமேற்றழைத்தே
சேவினேருக்கியதேவனையடைவரந்தியதத்தே"—என்பதனுலுமறிக. (கக)

படுமணி மிடற்ற சேதா மடிசுரந் தொழுகு பாலிற்
கடவுணல் லிலிங்க மாட்டிற் பாற்கடற் றுயில்வர் கங்கை
புடைகிடந் தலைக்குந் திங்கட் புரிசடை யண்ணல் கோயில
வடிவுறப் புனைந்தோ ரோங்கு கயிலைமால் வரையின் வாழ்வார்.

(இ-ள்.) அடிபடுகின்ற மணிகள்கட்டிய கழுத்தையுடைய செம்மையாகிய பசுவின் மடியினின்று சுரந்தொழுகும் பாலினாலே தெய்வீகம்பொருந்திய நல்ல சிவலிங்கப்பெருமானை (யாவராயினும்) அபிடேகித்தால் அவர்கள் (திருமால் பதவியடைந்து) க்ஷீராப்தியில் (யோக) நித்திரைசெய்வார்கள். கங்கையானது ஒருபுறத்திலிருந்து அலையெறியும் சந்திரனைச்சூடிய புரிந்தசடையையுடைய சிவபெருமானது திருக்கோயிலை அழகுறப் புதுக்கினவர்கள் உயர்வாகிய பெரிய கைலாயகிரியில் வாழ்வார்கள். எ-று.

ஆவின்பாலபிடேகஞ்செய்வித்தோர்பலனை

சிவபுண்ணியத்தெளிவு.

"வண்டுகிண்டிதழித்தொடைவார்சடை
யண்டர்நாயகற்கன்பொடுபால்தயிர்
தொண்டினேடுந்தொழுதுவந்தாட்டினோர்
விண்டுவின்பதமேவுவர்மெய்ம்மையே"—என்பதனுலும்,

கோயில்கட்டுவித்தோர் பலனை ஷை.

"திருவரங்குதிருமதில்கோபுர
மருவுமண்டபம்வானவர்க்கன்பொடு
கருவரம்பறக்கண்டவர்கண்ணுத
லருவனன்குறமேவுவருண்மையே"—எனவும்,

சிலமான சிவாலயமுதலியவற்றைப் புதுக்குவிப்போர்பலனை ஷை.

"மாதவர்மடங்களாதிவரதன்மந்திரங்களாதி
நாதமாமிலிங்கமாதிநளினபுட்கரணியாதி
சேதமுற்றிடின்முன்போலச்செய்கின்றோர்க்குறுபலந்தா
னேதுமுன்செய்தோர்தம்மினுயிரங்குணிதமோங்கும்"—எனவும்வருவனவற்று னுணர்க. (கஉ)

எண்ணிரு தான மற்றைத் தலங்களி னீத றன்னில்
மண்ணமை முழுவந் துஞ்சா வளங்கெழு காசி தன்னில்
நண்ணியோர் யோகிக் கீத னன்றெனு வுரைத்தான் மீட்டும்
புண்ணிய விரதம் யாவும் புகலெனப் புகலு மன்றே.

(இ-ள்.) சோடமகாதானங்களையும் ஏனையஸ்தலங்களிற் கொடுப்பதைக் காட்டிலும், மார்ச்சனைபூசிய மத்தளங்கள் துயிலாத வளப்பமிருந்த காசிநகரத்திற் சென்று, ஓர் யோகிக்குக்கொடுத்தல் நன்றாகுமென்று (வியாதமுனிவர் தன்மாணுக்கர்க்கு) கூறினர். திரும்பவும் புண்ணியவிரதங்களையெல்லாம்சொல்லவேண்டுமென்று (மாணுக்கர்) கேட்க, (வியாதமுனிவர்) சொல்லத்தொடங்கினர். எ-று.

ஒருபக லுண்டல் கங்கு லுண்டல்யா சிதநல லுண்டி
வரைகுதல் நான்கும பாத கிரிச்சரம் வடந்த ருப்பை
யரசுநல லத்தி விலல மவற்றிலொன் ஹோர்நாள் தோய்த்து
தருபுலல் நுகர்தல் பன்ன கிரிச்சர மென்பர் தக்கோர்.

(இ-ள்.) ஒருமுறை பகற்காலத்திற் புசித்தல் - இராவிற்புசித்தல் - யாசித்துண்ணல் - நல்லவுணவையகற்றல் ஆகிய இவை நான்கும் பாதகிரிச்சரம். ஆல் - தருப்பை - அரசு - நல்லஅத்தி - வில்வம் ஆகிய அவற்றின் (இலைகளில்) ஒவ்வொன்றை யொவ்வோர்நாள் நீரில்தோய்த்து உண்ணுதல் பன்னகிரிச்சரம் என்று மேலோர் கூறுவார்கள். எ-று.

பன்னம் - இலை. கிரிச்சரம்—ஓர்வகைப் பிராயச்சித்த விரதம். (கச)

ஓர்பக லோரொன் றாக வுவந்துபிண் ணுக்கு தீம்பால்
மோர்புனல் பொரிமாக் கோடல முறையினோர் வைக லுண்டி
தீர்தலிந் நெறியில் யாதுந் திறம்பில ராற்றி னுரு
மேர்பெறு சவுமி யப்பேர்க் கிரிச்சர மென்ப மன்னே.

(இ ள்.) நாளொன்றுக் கொவ்வொன்றாகக் களித்து, பிண்ணுக்கு - மதுரமாகிய பால் - மோர் - நீர் - பொரிமா முதலியவற்றைப் புசித்தல்-முறைப்படி ஒருநாள் (இத்தகைய) உணவு நீங்குதல் - இம்மார்க்கத்தில் யாதுந் தவறாமற் செய்தல், என்றும் அழகுபொருந்திய சவுமிய கிரிச்சரமென்று பெயர்கூறுவர். எ-று. ()

மூன்றுநாள் பிடியோ ரொன்று முறைபட வருந்தி முன்னு
ளான்றவவ் வுணவுந் தீர்த லதிகிரிச் சரம தாகு
மேன்றுய ிருபத் தோர்நாள் பால்குடித் தினிதி ருத்தல்
சான்றவர் கிரிச்ச ராதி கிரிச்சர மென்ப தாமே.

(இ.ள்.) மூன்றுதினங்கள் ஒவ்வோர் பிடியாக முறையோடருந்தி, அடுத்த (நான்காவது) நாள் பெருமைதங்கிய அவ்வுணவும் நீங்குதல் அதிகிரிச்சரமென்று சொல்லப்படும். மேம்பட்டுயர்ந்தஇருபத்தொருதினங்கள்பாலைப்பருகி இனிதாக (உபவாசம்) இருத்தலைக் கிரிச்சராதி கிரிச்சரமென்று மேலோர் விளம்புவார்கள். எ-று. (கரு)

மும்மைநாட் காலை யுண்டல் மும்மைநா ளிரவ ருத்தல்
மும்மைநாட் கிடைப்பிற் றுய்த்தல் மும்மைநா ளுணவுதீர்தல்
மெய்ம்மைசேர் பிரசா பத்திய கிரிச்சர முணவு விட்டிங்
கம்மபன் னிருநாள் வைகல் பார்க்கிரிச் சரம தாமால்.

(இ-ள்.) மூன்றுநாட்கள் காலையிற் புசித்தல் - மூன்றுதினங்கள் இரவிற் சாப்பிடுதல் - மூன்றுபொழுதுகள் (அன்னம்) கிடைத்தால் (கிடைத்தபொழுது ஒருமுறை) உண்ணுதல் - மூன்றுதிவசங்கள் அன்னமயிலாதிருத்தல் - உண்மை பொருந்திய பிரசாபத்திய கிரிச்சரமென்று சொல்லப்படும். ஆகாரமகன்று, பன்னிருதினங்கள் (விரதம்) இருததல் பார்க்கிரிச்சரம் எனப்படும். எ-று. (கஎ)

கோசல மோர்நா ளோர்நாள் கோமய மோர்நாள் தீம்பால்
மாசிலவெண் டயிரோர் நாள்நெய் யொருபகல் மற்றை யோர்நா
ளாசறு தருப்பை தோய்த்த புனலுண லகற்ற லோர்நா
ளேசற வாற்றிற் சாந்த பனகிரிச் சரமென் பாரே.

(இ-ள்.) கோமூத்திரம் ஒருதினமும், கோமயம் ஒருதினமும், மதுரமாகிய பால் (ஒருநாளும்), குற்றமில்லாத வெள்ளிய தயிர் ஓர் நாளும், நெய் ஒருபகலும், குற்றமற்ற தருப்பைப்புல்லில் தோய்த்த சலம் மற்றோர்தினமும் உண்ணுதல் - (எவற்றையும்) நீக்குதல் ஒருதினமும் (ஆக) ஏசுதலில்லாத விரதத்தை யாச்சிரயித்தால் சாந்தபன கிரிச்சரமென்று சாற்றுவார்கள். எ-று.

கோமயம்=பசுவின் சாணம். (கஅ)

கோசல் முதல வாகக் கூறிய விவற்றி லோரோன்
றேசற வேழ்நா ளாற்றி னதன்பெயர் தவத்தின் மேலோர்
பேசரு முயர்மா சாந்த பனகிரிச் சரமாம் பெட்புற்
றோசைபோ முனிவ கேட்டி சாந்திரா யணமென் றோதும்.

(இ-ள்.) கோமூத்திரமுதலாக (மேற்செய்யுளிற்) சொல்லிய இவற்றுள் ஒவ்வொன்றாகக் குற்றமற்ற ஏழுதினங்கள் விரதஞ்செய்தால் அதன்பெயர் சிறந்த சாந்தபன கிரிச்சரமாகுமென்று தவத்தாற் பெரியோர்பேசுவர். கீர்த்திபொருந்திய முனிவனே! ஆசையுற்றுச் சாந்திராயணவிரதத்தைக் கேட்பாயாகவென்று சொல்லத்தொடங்கினர். எ-று.

வியாதமுனிவர் மாணாக்கர்க்குக் கூறிய கூற்றினைக் குமாரக்கடவுள் குறுமுனிவர்க்கு உபதேசிக்கு முறையாதலின் "ஓசைபோமுனிவ" வென்றது அகத்தியமுனிவரையெனக் கொள்க. (கக)

ஒடிவில்சுக் கிலபக் கத்தி னுதியாய்த் தொடங்கி யோரோர்
பிடிகுறைத் தபர பக்க முதலவாய்ப் பெட்பி னேரோன்
றடைவினி லேற்றி யிவ்வா றருந்திமுப் போது நீரிற்
படிவது மேலோர் சாந்தி ராயண மெனப்ப கர்ந்தார்.

(இ-ள்.) கெடுதலில்லாத சுக்கிலபக்கத்தின் முதலாகத் தொடங்கி (நாளொன்றுக்கு) ஓர்பிடியாக (உணவைக்) குறைத்து அபரபக்கமுதலாக ஆசையோடு ஒவ்வோர்பிடி முறையே யுயர்த்தி இந்தப்பிரகாரம் புசித்து, (காலை - உச்சி - மாலையென்னும்) முக்காலத்திலும் நீரில் ஸ்நானஞ்செய்வது சாந்திராயண விரதமாகுமென்று மேலோர் கூறினர். எ-று. (உ0)

சுக்கில பக்க மாதி தொடங்கியொன் றேற்றி மற்றைப்
பக்கமே முதலோ ரொன்று குறைப்பினும பகர்வ ரப்பேர்
புக்ககா லையினுங் கங்குற் போதுநன் ஞன்கு பிண்டந்
தக்கவா றருந்தல் வால சாந்திரா யணம தாமால்.

(இ-ள்.) சுக்கிலபக்கமுதலாக ஆரம்பித்து ஒவ்வொருபிடி உணவை யதிகப்படுத்தி, அபரபக்கமுதலாக ஒவ்வொரு பிடி குறைத்துப்புசித்தாலும் அச்சாந்திராயண விரதமேயென்று பேர்சொல்லுவர். ஆரம்பித்தகாலத்திலும் இராப்பொழுதிலும் நான்குகவளங்களை முறைப்படியுண்ணுதல் வாலசாந்திராயணவிரதமாகும்.

தினமுமுக் கவள முண்ட லல்லதை யோம சேட
மினிதினிற் றுய்த்த லின்ன சாந்திரா யணமா மென்பர்
புனைநெடு வாய்மை கல்வி ஞானத்தாற் பொருவி லாக்கை
வினையறு மனமபூ தான்மாப் புந்திதான் விமல மாகும.

(இ-ள்) நாடோறும் மூன்றுகவளம் புசித்தல் - அல்லது ஓமசேடத்தை ஆசையோடுண்ணுதல் இத்தகைப்பட்டவும்சாந்திராயணமாகுமென்றுசொல்வார்கள். அழகுசெய்யும் நீங்காதவுண்மை-கல்வி-ஞானமாதியவற்றால் சமானமில்லாத சரீரம்-பாவமொழிந்த மனம் - பூதான்மா - புத்தி (ஆகிய இவை) பரிசுத்தமாகும்.

மேவருசித்தங் காசி யடைந்தல்லால் விமல மாகா
தாவயி னுறைதல் முத்தி யாமென வியாதன் றன்பொற்
சேவடி பணிவோர் யார்க்குஞ் செப்பினன் பலியேற் றுண்டு
காவண மிலங்கு மந்தண் காசியி னுறையு நாளில்.

(இ-ள்.) நிலையினிற்றற்கரிய மனமானது காசிநகரையடைந்தாலன்றிப் பரிசுத்தமாகாது. அவவிடத்திலேவாசஞ்செய்வது மோக்ஷமாகுமென்று வியாதமுனிவர் தமது அழகமைந்த செவ்வியதிருவடியை வணங்குவோரெல்லாருக்கும் உபதேசித்துக்கொண்டு, பிட்சையெடுத்துப் புசித்து, சோலைகள் விளங்கும் அழகிய குளிர்ச்சிதங்கிய காசிக்ஷேத்திரத்தில் வாழ்ந்துவருங்காலத்தில். எ-று. (உ௩)

நீர்முகந் தளர்ந்த கொண்டல் நீனிற வண்ணன் காணு
வார்கழற் புனிதன் செம்பொன் மணிக்குடம் பதித்த தன்ன
வேரிள வனமென் கொங்கை யிலவிதழ்ப் பவளச் செவ்வாய்
கார்புரை கரிய கூந்தற் கவுரியை நோக்கிக் கூறும்.

(இ-ள்.)நீருண்டு (சூல்) முதிர்ந்தமேகம்போன்ற நீலநிறத் திருமேனியையுடைய திருமால் கண்டறியாத நெடியவீரக்கழலணிந்த பரிசுத்தராகியசிவபெருமான், செம்பொன்னுலாகிய மாணிக்கக் கலசங்களைப் பதித்துவைத்தாற்போன்ற இளமைதங்கிய பேரழகுடைய மெல்லிய குசங்களையும்இலவம்பழம்போன்ற உதட்டையும் பவளம்போன்ற செவந்தவாயையும் மேகம்போன்ற கரியஅளகத்தையுமுடைய உமாபிராட்டியாரைப்பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுவர். எ-று. ()

மறைவளம் பழுத்த செந்நாப் புலமைய வியாதன் மன்னு
நெறியுடை யன்பு தேர்தல் வேண்டுநீ யேகி யன்னோர்க்

குறுபலி வழங்கா திங்ஙன் விலக்கென வுலக மீன்ற
பிறைகிடந் தனைய நெற்றிப் பெய்வளை விலக்கி னாளே.

(இ-ள்.) (உமையே!) வேதங்களின் வண்மைமிகுந்த செவந்த நாவன்மை யுடைய வியாசமுனிவனது நிலைபெறற முறையோடுகூடிய அன்பை யறியவேண்டும். (ஆதலின்) நீ சென்று (அவனும் அவன் மாணுக்கருமாகிய) அவர்கட்கு வரும் பிச்சையை அகப்படவொட்டாமல் இப்பொழுது தவிர்க்கக்கடவாய்என்று ஆஜ்ஞாபிக்க, உலகமுழுவதையும் பெற்ற, இளம்பிறைச்சந்திரன் பிரகாசிததாற் போன்ற நெற்றியையும் (கையில்) தொடுத்த வளையலையு முடைய உமையம்மையார் (அவவாறே) விலக்கினர். எ-று. (உரு)

விரிகட லனைய கேள்வி வியாதமா முனியு மற்றை
யருமறை பயில்வோர் யாரு மகனகா மனைக டோறு
மொருபக லந்தி காறு முறுபலி பெறுத வாற்றுற்
பெருகுவெம் பசிநோய் பற்றப் பேதுற வோடும் வைகி.

(இ-ள்) பரநத சமுத்திரம்போனற நூற்கேள்வியை யுடைய சிறந்த வியாதமுனிவரும், அவரிடம் அரிய வேதததை அத்தியயனஞ் செய்யும் அந்தணச்சிறுர் முதலிய யாவரும், விசாலமாகியஊரிலுள்ள வீடுகளிலெல்லாம, ஒருநாள் மாலைப்பொழுதுவரையில் கிடைக்கக்கூடிய பிச்சையை யடையாததன்மையால், மிகுதியாகிய கொடிய பசிநோய்வரத் துன்பத்தோடு (பட்டினி) இருந்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள குளகம். (உசு)

மற்றைய ஞான்று மைய மேற்பவை மனங்கொண் டேகி
யற்றைஞான் றினுமுள் ளாவி யலமர வையம யாதும்
பெற்றில னதனு லோதுஞ் சிறுவரைப் பெரிது நோக்கி
யுற்றதோர் குறையுண் டாங்கொ லிந்நகர்க் குரைமி னென்றான்.

(இ-ள்.) மறுதினமும் பிச்சையெடுத்தலை மனதிற் கொண்டுசென்று, அந்நாளிலும் உள்ளேயிருக்கும் உயிரானது துன்பமுறும்படி பிச்சையாக ஒன்றையும்பெறுது (வியாதமுனிவர்), தமமிடததில் வித்தியாப்பியாசஞ்செய்யுஞ் சிறுவரை யதனுல் உற்றுப்பார்த்து, இக்காசிப் பட்டணத்திற்கு நேர்ந்ததாகிய (ஏதாவது) ஓர் குறையிருக்குமோ? சொல்லுங்கள் என்று வினவினர். எ-று. (உஎ)

அருமறை வியாதற் போற்றி யடிகள்கேட் டருள்க வோங்கித்
திருவநீ ணகரம் யாவுஞ் செல்வமுஞ் சிறப்பு மிக்க
வொருகுறை களுமின் றென்ன மறைபயில் சிறுவ ரோத
வருபசி பிணிமூ தூர வயிறெரி தவழ்ந்து பொங்கி.

(இ-ள்.) (அதுகேட்ட) வேதாத்தியயனஞ் செய்யுஞ் சிறுவர் அரிய வேதவியாதமுனிவரைத் துதிதது, சுவாமிகளே! கேட்டருள்வீராக: உயர்ந்து செல்வமிகுந்த நகரமுழுவதும் செல்வமும் சிறப்பும் மிக்கு விளஙகுகின்றது. ஒருகுறையையு முடைத்தாயிருக்கவில்லை யென்றுகூற, (வியாதமுனிவர்) வருகின்ற பசியாகிய துன்பம்மிக மேம்பட்டு வயிறு தீப்பற்றி யெரிந்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (உஅ)

தெறுசினந் தலைக்கொண் டோங்க விருநிதி சிறந்த முத்தி
யறிவருங் கலவி மூன்று தலைமுறை யகலக வென்று
மறைபயில வியாதன் காசி நகரினை வைது கையி
னுறுபலி யேற்பக் கொண்ட வோடுமவ் விட்டெறிந்து போனான்.

(இ-ள்.) கொல்லத்தக்க கோபமானது மிக மேலெழும்ப, பெருமைதங்கிய செல்வம்-சிறப்புற்ற மோட்சம் - அறிதற்கரிய வித்தை (ஆகிய இம்மூன்றும்) மூன்று தலைமுறை யெல்லையும் நீங்குகவென்று வேதமுணர்ந்த வியாதமுனிவர் காசிப்பட்டணத்திற்குச் சாபமிட்டு, பிட்சையிடுவதைப் பெறும்படி கையிலதாங்கிய பிட்சா பாத்திரத்தையும் உடைத்தெறிந்து போயினர். எ-று. (௨௯)

ஈற்றுளைந் தலறுஞ் சூற்சங் கீன்றவெண் டரளக் குப்பை
பாற்றிரைக் கதிர்கள் கான்று பாயொளி பரப்பு மந்தண்
சேற்றகல வயல்சூழ் காசி நகரினை முனிந்து செல்லு
மாற்றல்சால் முனிமுன் ஞால மளித்தரு ளன்னை சென்றாள்.

(இ-ள்.) சூலுளைந்த திரைச்சலிக்கின்ற கருவுற்ற சங்குகள் பெற்ற வெள்ளிய முத்துக்களாகிய குப்பைகள், அலைகளில் பால்போன்ற கிரணங்களைக் கக்கிப் பரவிய பிரகாசத்தைவீசும் அழகிய குளிர்ச்சிதங்கிய சேறுகிய அகன்ற வயல்கள் சூழ்ந்த காசிக்ஷேத்திரத்தைக் கோபித்துச் செல்கின்ற வல்லமைமிகுந்த வியாத முனிவர் முன்னே, உலகங்களையெல்லாம் பெற்ற தாயாகிய உமாபிராட்டியார் (ஓர் பார்ப்பனி வடிவொடு) சென்றனர். எ-று. (௩௦)

கடந்தசெப் பென்ன வீங்கு கதிர்முலை முனிவன் பாற்சென்
றடைகவென் தன்ப னுண்ணு னதிதிப்பூ சனைசெய் தல்லால
தொடர்ந்தபே ருவகை யுள்ளந் தூண்டவெம் மைய மேற்றுப்
படர்ந்திடு கென்ன லோடும் பழமறை வியாதன் கூறும்.

(இ-ள்) கடைந்த செப்புக்கலயமென்று சொல்லும்படி பூரித்த ஒள்ளிய குசங்களையுடைய தேவியார் வியாதமுனிவரிடத்திற் போய், எனது நாயகர் அதிதிபூசை செய்தலல்லாமற் புசிக்கமாட்டார் (ஆகையால்) மனதில் உண்டாகிய பெருங்களிப்பு மிகும்படி எமது பிச்சையை யங்கீகரித்துச் செல்லக்கடவாய் என்று செப்பவும், பழமையாகிய வேதங்களையுணர்ந்த வியாதமுனிவர் கூறுவார். எ-று.

பற்பல கலையு மெம்பாற் பயிலுந ரளவி லோராய
மற்றவர் தம்மோ டன்றி யருந்தில மாதே யென்ன
வற்புமீ தூர யாரு மடைதிரென் றுரைத்த லோடுந்
தற்பதந் தொழுமா ணாக்கர் தம்மொடும் வியாதன் சார்ந்தான்.

(இ-ள்.) நங்காய்! பலவகையினவாகிய நூல்களையும் எம்மிடத்தில் அப்பியசிக்கும் மாணாக்கர் கணக்கில்லாதவர் உளர்; அவர்களுடனன்றி (தனிமையாய்) யாம் புசிக்கமாட்டோம், என்று சொல்ல, (உமாபிராட்டியார் அப்படியாயின்) எல்லாரும் ஆசையதிகரிக்கும்படி வாருங்களென்று (மறுமொழி) இசைத்தவுடன், வியாதமுனிவர் தமது பாதங்களைப்பணியும் மாணாக்கர் குழாத்துடன் வந்தனர்.

சேர்தலு மமுத மன்ன தீஞ்சுவை யடிசி லுள்ளத்
தார்வமோ டுவந்து நல்க வருந்திநற் கலன்ம்வண டுகூ
தார்நறுந் தெய்வச் சாந்தந் தாவணிந் தியலமா ணுக்கர்
யாரொடு முவகை பூப்ப முனிவர னேகு மேலவை.

(இ-ள்.) (வியாதமுனிவர் சீடருடன்) வரவும், தேவாமிர்தம்போன்ற மதுரமாகிய உருசியையுடைய அன்னத்தை மனக்களிப்போடு விரும்பிப் பரிமாறப் புசித்து, நலல ஆபரணங்கள் - வெள்ளிய வஸ்திரங்கள்-மலர்மாலைகள்-தேவரணியத்தக்க சந்தனமுதலியன கொடுக்கத்தரித்து, பொருந்திய மாணுக்கர் யாவரோடும் களிப்புமிகும்படி வியாதமுனிவரர் செலலுங்காலத்தில். எ-று. (௩௩)

உலகெலாம் பூத்த வுந்தி யொருதனி முளரிப பூவை
மலர்புரை வண்ணன காணு வரதனோ மறைய்யா னுகிச்
சிலைநுத லேழையோர்க்குத் திருத்தகு மறனே தெனனப்
பலகலை முனிபாற் கேட்டி யெனவவள பகாத லோடும.

(இ-ள்.) சமஸ்தலோகங்களையும பெற்ற ஒப்பற்ற உந்திக்கமலத்தையுடைய காயாமபூவையொதத திருமேனிவாயநத திருமால் கண்டறியாத சிவபெருமான (உமாதேவியாகிய பாாபபணிககேடட) ஓா அந்தணப்படிவங்கொணடு, வில்போன்ற புருவத்தையுடைய பெணகளுக்குச் செம்மையாகிய தருமமயாது? எனறு பலநூல்களையும் படித்தறிந்த இம்முனிவனைக் கேட்கவென்று சொல்லியவுடன், தேவியார் (அப்படியே) வினவவும். எ-று. (௩௪)

அருந்ததிக் கற்பி னலலாாக் கறனுயிர்க கேள்வ ருள்ளம்
பொருநதிய வேவல செய்த லெனமுனி புகலச செவ்வி
திருநதிழை யனேயாள் யாாக்கும பொதுவறன் செப்பு கென்னக்
கருந்தடங் கணணி கேட்டி யெனமுனி கழறு மன்றே.

(இ-ள்.) அருந்ததியைப்போலுங் கற்பினையுடைய மாதர்கட்குத் தருமமாவது—உயிர்போன்ற கணவா மனம்விரும்பிய ஏவல்களைச் செய்தலாம் என்று வியாதமுனிவா விளம்பவும், திருத்தமாகிய அழகிய ஆபரணமணிநத அவவம்மையார் எல்லாருக்கு முரிய பொதுதாமத்தைப் புகலவேண்டுமென்றுவினவ, கருமையாகிய விசாலம்பொருந்திய கண்ணையுடையாய்! கேட்பாயாகவெனறு வியாதமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (௩௫)

வெருவர மொழிந்தி டாமை வெகுளுதல் செயாமை தானம்
வருதவங் கருணை சிந்தை துணிநதுகூ றுதன்மற் றொன்றிற்
கருதரும பொறுமை யின்றித் தன்னுயிர் போலக் காத்தல
தருமமென் றுரைப்ப வாதி யந்தணன் சாற்று மன்றே.

(இ-ள்.) அஞ்சத்தக்க வார்த்தைகளைச் சொல்லாமை - கோபங்கொள்ளாமை - தானம்-வளர்கின்ற தவம் - கிருபை - துணிவுகொண்டு பேசுதல்-மற்றோர் விஷயத்தில் நினைத்தற்கரிய பொறுமையில்லாமல் தன்னுயிர்போல (மன்னுயிரையும்) காத்தல் - (இவையே பொதுவாகிய) தருமமென்று புகல, சிவபெருமானாகிய வேதியர் விளம்புகின்றார். எ-று. (௩௬)

இன்னன தரும மென்ன விசைத்தனை யிவற்றே தேனு
முன்னிடை யுளதேற் சாப முரைத்தவா றென்னை யென்ன
வன்னது கருதான் சாப மிடுமெனி லவன்பா லந்தப்
பன்னருஞ் சாபஞ் செல்லு மெனமுனி பகர்ந்தான் மன்னே.

(இ-ள்.) இப்படிப்பட்டவைதருமங்களென்று சாற்றினை; இவற்றுள் ஒன்றாயினும் உன்னிடத்தில் உண்டாயிருக்குமாயின் (காசி க்ஷேத்திரத்திற்குச்) சாபங்கூறிய காரணம்யாது? என்றுவினவ, வியாதமுனிவர், அதுபோன்றதை நினையாமற் சாபமிடுவோனுகில் அச்சபித்தோனிடத்திலேயே சொல்லுதற்கரிய சாபமுஞ்செல்லுமென்று சொல்லினர். எ-று. (கஎ)

பகர்தலு மினையோர் முத்திப் பதிதனி லுறைத லீதா
மகல்கநீ யெனவி யாதற் கருள்புரி யமலன் கூறப்
புகலருங் கொடிய தீமை புரிந்தனன் பொறுத்தி தணணென்
வகிரமதி புனைந்த வேணி வரதவென் றடியில் வீழ்ந்தான்.

(இ-ள்.) சொல்லவும், இப்படிப்பட்டவர்கள் மோக்ஷம் பயக்கத்தக்க (காசி)க்ஷேத்திரத்திலே வாசஞ்செய்வது கொடிதாகும் (நீ இந்நகரிலிருந்து) நீங்குகவென்று கிருபைபுரியுஞ் சிவபெருமான் வியாதமுனிவருக்குக் கட்டளைசெய்யவும், (வியாதமுனிவர்) சொல்லற்கரிதாகிய கொடிய தீமையைச்செய்தேன்; தண்ணிய சந்திரதுண்டமணிந்த சடையையுடைய சங்கரா! மனம்பொறுக்கவேண்டுமென்று திருவடியில் வீழ்ந்து பணிந்தனர். எ-று. (கஅ)

முளரிபோல் முகத்த நல்லார் முலைதிமிர்ந் துகுத்த சாந்த
வளறுகா லிழுக்கச் செல்லா தரசிளங் குமரர் வீழும்
வளமலி மறுகு சூழுங் காசிவா ணவனை யுள்ளத்
தெளிவுறப் பதினன் கெட்டாம் பக்கமீங் கிவற்றிற் சேர்த்து.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற முகத்தையுடைய மாதர்கள் முலைகளிற் பூசிச் சிந்திய சந்தனக்குழம்பாகிய சேறு காலினைவழுக்குதலால் நடக்கமுடியாமல் இளமைதங்கிய அரசகுமாரர்கள் விழுகின்ற வளப்பமிகுந்த வீதிகள் சூழ்ந்துள்ள காசிப்பதியில் வீற்றிருக்கும் ஸ்ரீ விஸ்வநாதப்பெருமானை மனம் அறிவுறும்படிசதுர்த்தசி அஷ்டமியாகிய திதிகளில் தியானித்து. எ-று. (கக)

தொழுதனை போதி யென்னத் தூய்ச்சடை யண்ணல் கூறி
மழவிடை யிவர்ந்து வெற்பின் மயிலொடுஞ் செலவி யாதன்
விழைதகு கடவுட் டெண்ணீர்க் கங்கையின் மேற்பா லோங்கு
மொழுகொளி பயிலும் லோலா தவனுறை யிடத்தின் கீழ்பால.

(இ-ள்.) தொழுது செல்கவென்று, பரிசுத்தமாகிய சடையையுடைய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளி, இளமைதங்கிய இடபவாகனத்தை யாரோகணித்து, மலையரயன்பெற்ற மயிலின் சாயலையுடைய உமாதேவியாருடன் அந்தர்த்தானமாக, வியாதமுனிவர் விரும்பத்தக்க தெய்வீகம்பொருந்திய தெள்ளிய நீரையுடைய கங்காதீரத்தின் மேற்பக்கத்தில் உயர்வாகிய ஒளிவீசுகின்ற லோலார்க்கன் வாசஞ்செய்யுமிடத்திற்குக் கீழ்ப்புறத்தில். எ-று. (உ0)

ஆரழற் கடவுள் வைகுந் திசையினின றளவு நீங்கான்
சீரமலி காசி நோக்கி யுறைந்தனன சிறதை வேட்ப
யாரிது பயின்றோர் கேட்டோ ரவரெலா மிமையோ ரேத்தச
சாரவரி தாகி யோங்கு முத்தியிற் சார்வ ரெனறான்.

(இ-ள்.) அக்கினிதேவனை பொருந்திய (தென்கிழக்குத்) திசையிலே, இது வரையில நீஙகாமல, சிறப்புமிருந்த காசிநகரத்தை நோக்கி வசித்திருககின்றனா. (வியாதமுனிவர்). மனம்விரும்புமபடி எவர் இந்தவரலாற்றினைப்படிததவர்களோ கேட்டவாகளோ அவர்களெல்லாம தேவாகள் துதிசெய்யும்படி கிடைத்தற்கரி தாகி யுயர்ந்த மோக்ஷததிற் கலபபாாகளென்று (ஸ்ரீ முருகப்பிரான் அகஸ்தியமு னிவருக்கு) அருளிச்செய்தனர். எ-று. (சுக)

வியாதன் சாபமிட்ட அ-ம.

முற்றிற்று.

ஆ திருவிருததம் - உகூ0சு.

தொண்ணூறறேழாவது.

# க்ஷேத்திரவளமும் தீர்த்தத்தின்கதையுமுரைத்த அத்தியாயம்.

எவ்வமில காசி யுறைதரு மிலிங்கந் தீரத்தமற் றெத்துணை யென்ன, வவ்விய மவித்த முனிவரன் கேட்ப வழலுமிழ் நுதல்விழிக் கடவுள், கொவ்வையங கனிவாய் வரைமகட குரைதத வண்ணமயான கூறுவ லென்னத், தெவ்வடு குருதி வேலவல னேந்து சேவலங் கொடியவ னு ரைப்பான்.

(இ-ள்.) துனடமிலலாத காசி நகரத்தில் வீறறிருக்கும் சிவலிங்கங்களும் தீாத்தங்களும் எவவளவின? என்று, பொருமைக்குணமொழிநத அகஸ்தியமுனி வரர் கேடக, தீயைச்சொரியும் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான கொவ் வைபபழம்போனு மழகிய வாயையுடைய பாவதராஜபுததிரியாராகிய பார்வதியம் மையாருக்கு உபதேசிதத முறையே யான் சொல்கினறேனெனறு, பகைஞரைக் கொல்லும் உதிரம் பொருந்திய வேலாயுதத்தை வலக்கரத்திற் பிடித்த அழகிய சேவற்கொடியை யுடைய ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள் திருவாய்மலர்ந் தருளுவர்.

தீர்த்தமென் றேது பெயரிலிங் கத்தின் சிறப்புடைப் பெயர்சிவன் முதலோர், பூத்தசெங் கமலக் கையினிற் றொடலாற் புனலுமப் பெய ரோடும் பொலிந்த, தேத்தருங் காசி நகரில்மா தேவ விலிங்கமே முதல் வாந் தீர்த்தம், பார்த்தவ ருவக்கு நான்கருள் கூப மதன்வட பாலிலொ ன் றுளதால்.

(இ-ள்.) தீர்த்தமென்று சொல்லும்பெயர் சிவலிங்கத்தின் சேர்த்திபொருந்திய பெயரேயாம். சிவபெருமான் முதலாகிய தேவர்கள் மலர்ந்த செங்கமலம் போன்ற தமது திருக்கரங்களாற் பரிசித்த காரணம் பற்றிச சலமும் (தீர்த்தமென்னும்) அப்பெயர் கொண்டு விளங்கியது. துதித்தற்கரிய காசிப்பட்டணத்தில் மாதேவலிங்கம் முதன்மையானது. விரும்பத்தக்க தீர்த்தங்களில, பார்த்தவர்களுக்குக் களிப்பைத்தரும் (அறம்-பொருள் - இன்பம் - வீடு என்னும்) நான்கு புருஷார்த்தங்களையும் உதவத்தக்க கிணறொன்று அதன் வடதிசையிலுள்ளது.

இத்தீர்த்தம் மாதேவதீர்த்தம். (உ)

ஆங்கதன் குடபாற் கங்கையா ளுருவோ டமருமா தேவுறை கீழ்பாற்
றீங்கறு கயிலை யமைந்தநல் லிலிங்கஞ் சிறப்பினமே விடுமதன் றென்பாற
பூங்கதி ரெறிக்குந் திங்களங் கண்ணிப் புரிசடைத் ததீச்சுரன பொருநது
மோங்கொளி யுருவி னெடுமதன் றென்பா லத்திரீச சுரனுவந் துறையும.

(இ-ள்.) அதன் மேற்றிசையிலே கங்காதேவியார் திருவுருவத்துடன வீற்றிருப்பர். மாதேவலிங்கம் வீற்றிருத்தலின கீழ்த்திசையிலே குறைமற்ற நல்ல கைலாயலிங்கம் சிறப்போடு பொருந்தியுள்ளது. அதற்குத் தென்றிசையிலே அழகிய கிரணங்களைச் சிந்துகின்ற சந்திரனை அழகிய சிரோமாலையாகக் கொண்ட புரிந்த சடையை யுடைய (ததீசிமுனிவர் பிரதிட்டையாகிய) ததீச்சுரலிங்கம் வீற்றிருக்கின்றது. ஒளியோடுகூடிய அழகோடுகூடிய அதன் தென்புறத்திலே அத்திரீச்சுரலிங்கம் சந்தோஷித்து விளங்குகின்றது. எ-று. (௩)

புனிற்றிளஞ் சேதாப் புகழுட னமைத்த பொங்கொளி யிலிங்கத்
தின் கீழ்பாற்,கனற்றுவெம் பொறியு மிலிங்கமொன் றுறையுங் கருணைகூ
ர்ந் தாங்கதன் குணபால், வினைத்துய ரகற்றி வீடருள் சதுர்வே தேச்சு
ர முறையுமற றதன்பாற், கனைத்துவண் டிமிருந் தண்டுழாய் மவுலிக்
கடவுணல் லிலிங்கமொன் றமரும்.

(இ-ள்.) மிக்க இளமைவாய்ந்த செம்மையாகிய கபிலை கீர்த்தியோடு பிரதிட்டைசெய்த புகழ் மிகுந்த சிவலிங்கத்தின் கீழ்ப்பக்கத்திலே, வெவ்விய கிரணங்களைக் கக்குகின்ற ஓர் சிவலிங்கமூர்த்தம் விளங்குகின்றது. அதன்கீழ்ப்புறத்தில் கிருபைமிகுந்து தீவினைகளை யொழித்து மோக்ஷத்தைக் கொடுக்கும் சதுர்வேதேச்சுரலிங்கம் வீற்றிருக்கின்றது. அதன்பக்கத்தில் வண்டுகள் பண்பாடிக் கிண்டுகின்ற தண்ணிய துளபமாலையணிந்த திருமால் (பிரதிட்டைசெய்த) ஆதிகேசவலிங்கமென்னும் சிவலிங்கமொன்று எழுந்தருளியுள்ளது. எ-று. (௪)

அவிர்சுட ரெறிக்கு மைம்படை சுமந்த வாதிகே சவற்குநற் கீழ்
பாற், பவவினைக் கடலுட் புகாதருள் சங்க மேச்சுரன் பரிவின்வீற் றிரு
க்கும், புவனகோ டிகளுந் தொழவதன் குணபாற் புகழ்விரா தேச்சுரன்
பொருந்தும், பவளமுத் துயிர்க்கும் வரணைமா நதியின் பாங்கர்குந் தீச்
சுர னுறையும்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற சுடரை வீசும் பஞ்சாயுதங்களைத்தாங்கிய (விண்டுவின் பிரதிட்டையாகிய) ஆதிகேசவலிங்கத்திற்குச் சரியான கீழ்ப்புறத்தில்,

பிறவித் துன்பமாகிய சாகரத்திற் புகவொட்டாமற் கிருபைபுரியும் சங்கமேச்சுர விலிங்கம் அன்போடு அமர்ந்துள்ளது. அதன் கீழ்த்திசையில் அளவில்லாத புவனங்களும் பணியும்படி கீர்த்திபெற்ற விராதேச்சுரவிலிங்கம் விளங்கியுள்ளது. பவளத்தையும் முத்தையும் சொரியும் சிறந்த வரணைநதிக்குப் பக்கத்திற் குந்தீச்சுரவிலிங்கம் எழுந்தருளியுள்ளது. எ-று. (௬)

குவிமுகி ழருக்கங் கண்ணிசூழ் வேணி யோங்குகுந் தீச்சுரன் வடபாற்
றவழ்திரை முத்தங் கொழித்திடு கபில வாவிபூம் புனலொடு தயங்குஞ்
சுவைகனிந் தமுதிற் பழுத்தவந் தீம்பாற் சுரபிமுன் பழிச்சியவிலிங்க [ம்.
மூவகையி னுறையு மதன்வடக் கனகூ யேச்சுர விலிங்கமொன் றோங்கு

(இ-ள்.) குவிவாகிய மொட்டுகள்போன்ற அழகிய அருகமாலை யணிந்த சடையோடோங்கிய குந்தீச்சுரவிலிங்கத்தின் வடபக்கலில், தவழ்கின்ற அலைகள் முத்துகளைக் கொழிக்கின்ற கபிலதீர்த்தம் பொலிவுள்ள புனலோடு விளங்கும். அமிர்தத்தைக் காட்டிலும் மதுர மிகுந்து விளங்கும் அழகிய தித்திப்பாகிய பாலையுடைய கபிலை முற்காலத்தில் துதிசெய்த கபிலவிலிங்கம் அன்போடமர்ந்துள்ள அதின் வடபுறத்தில் அநகூயேச்சுரவிலிங்கமொன்று விளங்குகின்றது.

மற்றதன் கீழ்பா லருள்தரு சித்தி விநாயகன் மகிழ்சிறந் திருக்கு [ல்
முற்றதன் மேற்பால் விளங்கொளி யிரணி யேச்சுர முளததன் மேல்பா
வெற்பென வோங்கு முயர்சின கரத்து விளங்குமுண் டீசுர வீச
னற்புட னுறையுங் கோப்பிரேச் சுரத்தி னயல்விட பேச்சுர னமரும்.

(இ-ள்.) அதன் கிழக்குத்திசையிலே கிருபைபுரிகின்ற சித்திவிநாயகப் பெருமான் சந்தோஷமிகுந்து வீற்றிருப்பர். பொருந்திய அதன் மேலைப்பக்கத்தில் ஒளி விளங்கும் இரணியேச்சுரவிலிங்கம் உள்ளது. அதன் மேல்பக்கத்தில் மலைபோல ஓங்கி யுயர்ந்த திருக்கோயிலில் வீற்றிருக்கும் முண்டீச்சுரவிலிங்கம் ஆசையோடு அமரும். கோப்பிரேச்சுரத்திற்குப் பக்கலில் விடபேச்சுரவிலிங்கம் வீற்றிருக்கின்றது. எ-று. (எ)

மறைமுத லறியா தொளிர்மக தேவ லிங்கத்தின் மேற்றிசை யிலங்கு
மறைகடல் வயிறு புழுங்கமாட் டியவே லாதிகந் தேச்சுர னுறையும்
பெறலரு முத்தி யருள்விசா கேசன் பெட்பொடு மவ்வழி யுறையு
முறையுமத் தலையிற் கறைமிடற் றணிந்த நயிகமேச் சுரனுவந் துறையும்.

(இ-ள்.) வேதம்முதல் (யாவராலும்) அறிவரிதாய் விளங்கும் மாதேவ விலிங்கத்தின் மேற்றிசையில், சத்தித்துப் பிரகாசிக்கும் சமுத்திரமானது புழுங்கும்படி செலுத்திய வேலையுடைய ஆதிகந்தேச்சுரவிலிங்கம் அமர்ந்துள்ளது. பெறுதற்கரிய மோக்ஷத்தைக் கொடுக்கும் விசாகேசவிலிங்கம் ஆசையோடு அவ்விடத்தில் வீற்றிருக்கும். (விசாகேசர்) வீற்றிருக்கும் அவ்விடத்தில் நீலகண்டத்தை யுடைய நயிகமேச்சுரவிலிங்கம் அகமகிழ்ந்து அமர்ந்திருக்கும். எ-று. (அ)

நந்தியே முதல கணமினி தமைத்த நளிகதிர் பூத்தொளி ரிலிங்கம்,
புந்தியி னுணர்ந்தாங் கித்துணை யென்னப் புகலரி தவ்வழிச் சிலாதன்,

சிந்தையி னன்பு கனிந்ததன பெயாாற செய்தவோ ரிலிங்கமுண் டன் பால, வந்தனை புரிவோர்க் கினிதருள் வழங்கு மாணியாக் கேச்சுரன் ம ருவும.

(இ-ள்.) திருநந்திதேவர் முதலாகிய கணததலைவர்கள் இனிதாகப் பிர திஷடைசெய்த தண்ணிய கிரணங்களைச் சிந்திவிளங்கும சிவலிங்கஙகளை அறி வால் ஆலோசித்து இவவளவெனறு சொல்லுத லருமை. அவவிடத்திற் சிலாதமு னிவர் மனதில் விருபபமிக்க தமது பெயராற் பிரதிட்டைசெய்த வோர்சிவலிங்க முளளது. அதன பக்கலில வந்தனை செய்வோர்க்கு இனிதாகக் கிருபைபாலிக் கும மாணியாக்கேச்சுரலிஙகம் பொருந்தியுள்ளது. எ-று.

சிலாதரென்பது காரணப்பெயா. அதாவது:—வேதாரண்ணியமென்னுஞ் சிவஸ்தலததில் வேதியா குலத்தி லவதரித்த இவா இளம்பருவத்திற் பிள்ளைமைக் குணத்தால தம் வீட்டுககு அன்னப்பிக்ஷை யேறகவந்த ஓா அந்தணரது அன்ன ததில ஓர் சிறு கல்லை யெறிந்தனா. அவ வதிதி யதனை யறியாது மறற வீடுகளி லும் யாசித்து, பெற்ற வுணவையெலலாம் ஒனறுகூட்டி, அக் கல்லோடு அருந்தி னர். அது நிறக: பினனா இவர் தக்க வயதுவந்து வேதமுதலிய நூலாராய்ச்சியில் தோச்சியுற்று அநதணாகுலததிற் கேற்ப ஆசாரமுதலிய தருமங்களிற் குறைவுறா து கடுந்தவமியற்றிக் கோரதபசி யென்னுங் காரணப்பெயருற்று, சகலசித்துகளி லும் வல்லவராய், ஒருநாள தமது சித்தின்மகிமையால தம்முடன் போந்த பல பாாபபனமக்களோ டெனகூடி இயமபுரத்தைக கண்டுவருமபடி சென்று அங் குள்ள விபவஙகளையும் தண்டனைகளையும் தணடலாளரையும் பார்த்துக்கொண்டு திரும்புகையில், ஆணடோர் பெரிய மலைககல இருக்கக் கண்டு அங்குள்ள சில கா வலாளரை "இபபெரிய பாறையின விர்ததாநத மெனன?" என, வினவ, அவர் கள் "ஐயா! உலகததிலே கோரதபசியென ெருரு பாபி வேதியன் பிச்சையிற் கலலெறிந்தான. அதனையறியாத சற்குணன் புசித்துவிட்டனன். அசசிறுகல் இபபடி வளாந்துவருகிறது. அக்கோரதபசி யென்பான் மரித்து இங்கடைந்தவு டன் எங்கள் தணடனையினபேரில் இதனைப் புசிக்கும்படி கேரிடும்." என்று சொல்லினா. அதனைக்கேட்ட கோரதபசி தமது பாவியச்செய்கையை நினை ந்து நடுஙகி அவாகளை நோககி "அவன இதனைத் தப்பித்துக்கொள்ளுந் தந்திரமு ளதோ?" என, அவர்கள் "இவ்வவினதாகிய ஓர் மலையை நாளாவண்ணத்தில் பூமியிலே கரைத்துண்பானுகில் இம்மலை கரைந்துவிடும்" என்றாகள். பின்னர் பலவேடிக்கைகளையும் பார்த்துத் திரும்பி உடன்வந்தாரோடு ஊரை யடைந்து தமது உள்ளநடுஙகி அவர்க ளுரைத்தவண்ணமே யோர்மலையைக் குறிப்புவைத்து க்கொண்டு, நிஷ்டையிலிருப்பதும் பசியுற்றபோது சிறிது அம்மலையை யுடைத்து அதைத் தூளாக்கிச் சலத்திற் கரைத்துச் சாப்பிடுவதும் மீண்டும் நிஷ்டை செய் வதுமாக விருந்து அப்பெரியமலையையும் கரைத்தனா். அதனால் இயமபுரத்தில் இவர்க்காக வளாநத மலையுஞ் சிறிது சிறிதாகக்கரைந்து அறவே யொழிந்தது. சிலை=மலை. ஆதம்=அழிவு. சிலையை ஆதஞ்செய்தகாரணத்தாற் சிலாதா எனப் பெயரெய்தினர் என்பதாம். சிலாதரரெனவுங் கூறல்வழக்கு. (கூ)

அரவகங் கணத்த வட்டகா தேச மனையதன் வடக்கதன் வடபால்,
பிரசன் னதனேச் சுரமதன் பாலிற பிறங்குநீர் வாவியொன் றுளதாற்,
குரைகடல் குடித்துத் தேக்கெறிந் தெழுந்த கொண்டலம்போன் மேனிய
னறியா, விரிசுடாப பிழம்பா மித்திரா வருண விலிங்கமத் தலையின்வீற
றிருக்கும்.

(இ-ள்.) அதனவடக்கில சாப்பகங்கணத்தை யுடைய அட்டகாதேச விலிங்கம் உள்ளது. அதனவடதிசையில பிரசன்னதனேச்சுரமும், அதனபக்கலிற் விளங்குகின்ற நீரையுடைய ஓர் தீர்த்தமுமுண்டு. அவவிடத்தில சத்திக்கின்ற சமுத்திரசலத்தைப பானஞ்செய்து தேக்கெடுத்தெழுந்த மேகமபோன்ற மேனி வாய்ந்த விண்டுமூர்த்தி கண்டறியாத பரந்த சுடாத்தொகுதியாகிய மித்திராவருண விலிங்கம்வீற்றிருக்கும். எ-று. (கo)

அலங்கிலைச் சூல வேலவல னுயர்த்த வட்டகா தேச்சுரற் கருளா,
விலங்குமென் மேலபால விருத்தவா தித்தேச் சுரமுள திசைத்தமற
றதன்பால, வலங்கொளபே ராழி வலனுயா கிருஷ்ணச் சுரனவதிந் திடு
மத னுழையில, நலங்கிள ரருமா தவயபுரி யாககிய வாககால விலிங்க
நண ணுறுமால.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற அச்சவடிவாகிய சூலமெனனும் முத்தலைவேலை வெற்றியோடுதரித்த அட்டகாதேசசுர விலிங்கத்திறகுத்தெனமேறகுத திக்கிலே அனபோடுபொருந்தும் விருத்தவாதித் தேச்சுரவிலிங்கம விளங்குகின்றது. சொல்லிய அதன்பக்கத்தில ஜெயத்தைக்கொண்ட பெரிய சக்ராயுதத்தை வலத்திருக்கரத்தி லுயர்த்திய கிருஷ்ணபகவானாற் பிரதிட்டைசெய்த சிவலிங்கம் வீற்றிருக்கின்றது. அதனருகில நனமை விளங்கும் பெருமைதங்கிய அருந்தவஞ்செய்த நலல யாக்கியவர்க்கிய விலிங்கம பொருந்தியிருக்கும். எ-று. (கக)

பேசிய வதன்பாற் பிரகலா தேசன் பிறங்குமாங் கதனுழைப் பெட்பின்
மாசறு ஞான நெறியருள் வயிரோச் சுரமுறு மதனவட பாலி
லோசையோ டியபே ருவகைகூர் வலீச முளததன் பாலவரு ணேச
மாசற விளங்குஞ் சந்திரச் சுரன்பால் வயங்குவிஸ் வேச்சுர னமரும்.

(இ-ள்.) சொல்விய (யாககியவாக்க) விலிங்கத்தின் பக்கலில், பிரகலா தேச விலிங்கம் விளங்கும். அதனருகே குற்றமற்ற ஞானமார்க்கத்தைக் கொடுக்கும் வயிரோச்சுர விலிங்கம அழகோடு பொருந்தும் அதனவடதிசையிலே கீர்த்தி பரவிய பெருங்களிப்பை யுண்டுசெய்யும் வலீசவிலிங்கம் உள்ளது. அதன் சமீபத்திலே வருணேசவிலிங்கம குற்றமறவிளங்கும். சந்திரேச்சுரவிலிங்கத்தின் சமீபத்தில் விளங்குகின்ற விஸ்வேஸ்வர விலிங்கம் வீற்றிருக்கும். எ-று. (கஉ)

அறைந்ததன் றென்பால் மதிமுகி ழணிந்த வவிர்சடை யண்ணல்வீ
ரேசஞ், சிறந்திடு மதன்பால விகடையென் றுரைக்குந் தேவியும் பஞ்ச
முத் திரையென், றுறைந்தபீ டமுமாங் குண்டதன் வட்பேற் குபாசக
ரேச்சுர மோங்கும், பிறங்கிய வதனின் றென்குண புலத்திற பெட்பினு
வீச்சுரன் வதியும்.

(இ ள்.) மேற்கூறியதன் றென்றிசையிலே இளஞ்சந்திரனையணிந்த பிர காசிக்கின்ற சடையையுடைய பெருமைதங்கிய வீரேசலிங்கம் சிறப்புற்று வி ளங்கும். அதன்பக்கலில விகடையென்று சொல்லுஞ் சத்தியும் பஞ்சமுத்திரை யென்று வீற்றிருக்கும் (சத்தி பீடமும் ஆண் டுண்டு. அதன வடமேற்புலத்தில் உயர்வாகிய சகரேச்சுரலிங்கம் இருக்கின்றது. விளங்குகின்ற அதன் தென்கீழ் த்திசையில் நாரீச்சுரலிங்கம் ஆசையோடமர்கின்றது. எ-று. (கக)

மல்குநீரக் கங்கை புனைந்தகா ளீசற் சேர்ந்தன வடபுல மதனிற்
கொலசின வடிவேற் சுக்கிரீ பேசங் குறுகிய தாங்கனு மேசம்
நல்வினை யளிக்குஞ் சாம்பவ தீச நணணிய கங்கைமேற் கரையி [ல்.
னெல்லொளிக் கதிரோன் பலலுக வடர்த்த வச்சுவ னேசமெய் தியதா

(இ ள்.) நிறைவாகிய நீர்மயமான கங்காநதியைத்தரித்த காளீசலிங்கத் தைச் சேர்ந்தாற்போல வடதிசையில, கொல்லத்தக்க கோபத்தையுடைய கூர் மையாகிய வேலேந்திய சுக்கிரீபேசம் விளங்குகின்றது. அவவிடத்தில் அனுமேச லிங்கம் - நல்வினைப் பயனைக்கொடுக்கும் சாம்பவதீசலிங்கம் (ஆகிய இவை) பொருந்தியுள்ளன. கங்காதீரத்தின் மேற்குக்கரையிலே பகற்காலத்தில் ஒளிசெ ய்யுஞ் சூரியனது பல்லைச்சிந்தும்படித் தாக்கிய அச்சுவனேசலிங்கம் எழுந்தரு ளியுள்ளது. எ-று. (கச)

மற்றதன் வடபாற் பக்கிர கிருத மடுவுள ததனின்மேற் றிசையிற்
பற்பல கோடி யமரர்கின் றேத்தும் பத்திரேச் சுரமினி துறையு
முற்றதன் வடமேற் கருளுப சாந்தி சிவமுறைந் துளததன் வடபாற்
கற்பகோ டியினு மொழிவருஞ் சீர்த்திச் சக்கரேச் சுரன்கரந் துறையும்.

(இ-ள்.) அதன் வடதிசையிலே பக்கிரகிருத மடுவிருக்கின்றது. அதன் மேலைத்திசையில் அநேககோடி தேவர்கள் நின்று துதிசெய்யும் பத்திரேச்சரலி லிங்கம் இனிதாக விளங்கும். பொருந்திய அதன் வடமேற்குத்திக்கில், கிருபைபு ரியும் உபசாந்தி சிவலிங்கம் உள்ளது. அதன வடக்குத்திசையில் கற்பகோடி கா லத்திலுங் கெடாத கீர்த்தியையுடைய சக்கரேச்சுரலிங்கம் (கட்புலனுக்குத் தோன்றாமல்) மறைந்து விளங்கும். எ-று.

கற்பம்=தேவா ஊழி. (கரு)

சக்கரேச் சுரற்கு வடபுல மதனிற் சக்கர காதமென் றுரைக்கப்
புக்கநல் வாவி யமர்ந்திரு வினையும் போக்குமற் றதன்வட மேல்பாற்
செக்கர்வா னூத்த விளங்கிலா மவுலி சிறந்தசூ லேச்சுரஞ் செயிரில் [ம்.
முக்கணெம் பெருமான் வடிவமாஞ் சூல வாவிமென் பூம்புனல் முழங்கு

(இ-ள்) சக்கரேசலிங்கத்திற்கு வடதிசையிலே சக்கரகாத மென்று சொல்லப்பட்ட நல்ல தீர்த்தமானது பொருந்தி இருவினைத்தொடக்கை யொழி க்கும். அதன் வடமேற்புலத்தில் செவ்வானத்தில் தோன்றிய பிறைச்சந்திரனைச் சடையிற் சூடிய சிறந்த சூலேசலிங்கம் (உள்ளது அவவிடத்தில்) குற்றமில் லாத திரிநேத்திரங்களையுடைய எமது சிவபெருமானது வடிவமாகிய சூலதீர்த்தத் தின் மெல்லிய அழகமைந்த நீரானது சத்தித்துக்கொண்டிருக்கும். எ று. (கசு)

நண்ணருஞ் சூல வாவியின் கீழ்பால் நாரகேச் சுரமுள ததன்பால்
புண்ணியர் சாருங் குண்டமொன் றுளதுபுகன்றவா வியின்வட மேல்பால்
விண்ணவர் மகுட கோடிக ளிறைஞ்சும் விக்கினேச் சுரமும்வா னதியி
னுண்ணிறை நெடுநீர் விக்கின கரமென் றுரைத்திடும வாவியு முளவால.

(இ-ள்.) அடைதற்கரிய சூலதீர்த்தத்தின் கீழ்ப்புறத்தில் நாரகேச்சுரலி லிங்க முள்ளது. அதனருகே புண்ணியர்கள் அடையத்தக்க தீர்த்தம் (வேறு) ஒன்றிருக்கின்றது. சொல்லிய அததீர்த்தத்தின வடமேற்பக்கலில தேவர்களது கணக்கில்லாத கிரீடங்கள் பணியும் விக்கினேச்சுர லிலிங்கமும் சிறந்த நதிகளின் உள்ளே நிறைந்த நெடிய நீரையுடைய விக்கினகர மெனறு சொல்லப்படும் தீர்த்தமுமுண்டு. எ று.

சூலதீர்த்தமென்பது - வயிரவர் வைகுந்தமுற்று விடுவச்சேனனைத் தமது சூலத்திற்குத்தி விண்டுவின் உதிரத்தைப் பலியேற்று,தேவர் செருக்கொழித்துக் காசிநகரை யடைந்தபோது, அவர் தமது கைச்சூலத்தை யூன்றிய விடமென்று புராணங்களாற் கூறப்பட்டுள்ளது. (கஎ)

அலங்கொளி விரிக்கு நாரகேச் சுரமு நாரகுண் டமுமதன் வட பா, லிலங்கிடு மெறிநீர் வரணையங் கரையி லியல்வர ணேச்சுர னுறை யும், நலங்கெழு மதன்மேற் குயர்சயி லேச னண்ணுறு மாங்கதன் றென் பாற், பொலங்கெழு குடுமி நெடுமதிற் கோயிற் பொலிந்தகோ டீச்சுரன் பொருந்தும்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற வொளியைப் பரவச்செய்யும் நாரகேச்சுர லிலிங்கமும் நாரகேச்சுவர தீர்த்தமும் அதன் வடபுறத்திலே விளஙகும் மறிகின்ற நீரையுடைய வரணைநதியின் அழகிய கரையிலே கீர்த்திபொருந்திய வரணேச்சுவர லிலிங்கமும் வீற்றிருக்கும். நன்மைமிகுந்த அதன் மேற்குத்திசையில், உயர்வாகிய சயிலேசலிலிங்கம் பொருந்தியிருக்கும். அதன் தென்றிசையிலே பொலிவுமிகுந்த சிகரத்தையுடைய நெடிய மதிலபுடை சூழ்ந்த திருக்கோயிலில் விளங்குகின்ற கோடீச்சுரலிலிங்கம் எழுந்தருளியிருக்கும். எ-று. (கஅ)

தீம்புனல் பெருகித் திரைபொரு கோடி தீர்த்தமாங் குளதுதென் கீழ்பாற், பாம்புட னெளிப்பப் பஃறலைத் தாங்கு மசானதம் பமுமுள ததன்பாற், காம்பிசை கனியச் செய்யவா யமைதத கண்ணனைத் தருங் கபா லேச, னேம்பலி னுறையுங் கபாலமோ சனமென் றியம்புதீர்த் தமுமவ ணியையும்.

(இ-ள்.) மதுரமாகிய நீர்வெள்ளங்கொண்டு அலைகள் மோதுகின்ற கோடி தீர்த்தம் (இன்னும்) அங்கே உள்ளது. தென்கீழ்த்திக்கிலே ஆதிசேடனது உடல் நெளியும்படிப் பலதலைகளால்தாங்கும் மயானஸ்தம்ப லிலிங்கமுமுண்டு. அதன் பக்கலில் வேய்ங்குழலி னோசை மதுரமுறும்படி செவ்விய திருவாயில் வைத்தூதிய கிருஷ்ணபகவானால் (பிரதிட்டைசெய்த) துதித்தறகரிய கபாலேசலிலிங்கம் பெருமையோடு விளங்கும். கபாலமோசனமென்று சொல்லப்படும் தீர்த்தமும் அவ்விடத்திற் பொருந்தியிருக்கும்.எ-று.

கபாலேசவிலிங்கம் - கபாலமோசன தீர்த்தம் என்பவற்றின் வரலாறு.

வயிரவப்பெருமான் தேவர் முனிவரது இறுமாப்பகல உதிரப்பலி யேற்க ச்சென்று, முனிவர்கள் தேவர்கள் முதலானோரைத தமது திருக்கரத்திருந்த சூலா யுதத்தாற் குத்தி, தாம்கொய்த பிரமனது ஐந்தாந் தலையாகிய கபாலததில் உதிர த்தைப் பலிவாஙகிச்சென்று வைகுந்த மடைந்தனர். அப்பொழுது அவவிடத்தி ற்கு முதற்பெருங் காவலாகவுள்ள விஷ்வக்சேனன், இவரதுபிரபாவமகிமை தெ ரியாமல் உட்செல்வதை விலக்க, வயிரவர்வெகுண்டு தமது கைச்சூலத்தில் அவ னைக் குத்தித் தோள்மேற் சாய்த்துக்கொண்டுவிண்டுவின் அந்தப்புரஞ்சேர, அது கண்ட அச்சுதன் அச்சமெய்தித் தமது பக்கலிலிருந்த மனைவிய ரிருவரோடும் துண்ணென்றெழுந்து எதிர்சென்று இறைவரது இருசரணங்களைப்பணிந்து "சண் டெம்பிரா னெழுந்தருளிய நிமித்தமென்ன" என வினவ, வடுகர் "பலிக்கு வந் தோம் உதிரப்பலியிடுக" என, மாதவன் தன் நெற்றியிலிருந்த நரம்பொனறை நகநுதியாலீர்த்து வயிரவர் பிக்ஷாபாத்திரமாகிய கபாலத்தில்விட ஆயிரவருஷம் அந்நாடிவழி உதிரவெள்ளமொழுகியும், அப்பிரமகபாலம் அணைப்பங்கும் நிறை ந்ததில்லை. திருமால் இதனால் உடலிளைத்து உயிர்நீங்கி நிலமிசை வீழ்ந்தனர். அரு கிருந்த அரிவையரிருவரும் ஐயனடிக்கமலத்தைப் பணிந்து "அண்ணலே! அடி யேங்கட்குத் திருமாங்கல்யப்பிக்ஷை பிரசாதிக்கவேண்டும்" என்றிரப்ப, அதற்கு டன்பட்டாராய் உள்ளக்களிப்போடு உவணகேதனனை யெழுப்பி விடுத்துத்திரு ம்புகையில், விண்டு வயிரவநாதனைப் பணிந்து "தேவரீர் விடுவச்சேனனை அடி யேன் பக்கலில் பண்டுபோற்காவல் செய்திருக்கக் கருணைசெய்யவேண்டும்" என, அவ்வாறே அவனைச்சூல நுதியி லிருந்திறக்கி உயிரளித்து, வைகுந்தத்தை யகன்று மற்றைய வானவர்முனிவரது மமதையையு மாய்த்து உலகமுழுவதுஞ் சஞ்சரித் துக் கடைசியாகக் காசிநகரஞ் சென்றனர். அப்பொழுது அவர் கையிலிருந்தகபா லம் நிலமிசைவீழ்ந்தது. அதுவே கபாலலிங்க மாயிற்றென்றும், அவ்வயிரவர் கபா லமகன்றவிடத்திலுள்ள தீர்த்தமேகபாலமோசனதீர்த்தமென்றும் வடமொழிக் காசிகண்டம் பிரமாண்டபுராணம் இவை கூறும். (கக)

அரும்புசாய்த் தொழுகு நாண்மலர்ப் பசுந்தே னலம்புமங் காரக தீர்த்தம், விரும்பினர்க் கருளும் விசுவகன் மேசம் விளங்குமாங் கதன் வட பாலில், வரும்பவந் தொலைக்குஞ் சோதிஞா னேச மருவிடு மன்ன தன் றென்பாற், சுரும்பிமி ரிதழி புனைமகா குண்டேச் சுரமொளி பெரு கிடத் துளங்கும்.

(இ-ள்.) மொட்டுகளைச் சாய்த்துப் பாய்கின்ற புதிய மலரினுள்ள பசிய தேனானது அலம்புகின்ற அங்காரகதீர்த்தம்-இச்சைகொண்டோர்க்கு அருள்பா லிக்கும் விஸ்வகன்மேசலிங்கம் (இவ்விரண்டும் அதனருகே) வீற்றிருக்கின் றன. அதன்வடபக்கலில், வருகின்ற பாவத்தை யொழிக்குஞ் சோதிஞானேசலி ங்கம் பொருந்தியிருக்கின்றது. அதன் தென்புறத்திலே வண்டுகளொலிக்கும் கொன்றைமாலையணிந்த மகாகுண்டேச்சுர லிங்கம் கீர்த்திவிளங்கும்படி பிரகா சிக்கும். எ-று. (உ0)

இலங்கிடுங் கேசி மோதக மென்ன மோட்டரா முடியினின் றெழுந்த, வலங்குநீர்க் கூப மொன்றுள ததன்பா லருண்மகா முண்டியென் றேதும்,வலமபடு குருதிச் சூலியாங் குறையு மவவுழிக கட்டுவாங் கேசன,விலங்கிவில லுமிழு முயர்பொலங் கோட்டுச் சிகர மேவிடுமன்றே.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற கேசிமோதக மென்று, உச்சிக்கொண்டையை யுடைய சேடனது முடியினின்று தோன்றிய அசைகின்ற நீரையுடைய கிணறு ஒன்றிருக்கின்றது. அதன்பக்கவில் மகாமுணடி யென்று சொலலப்படும் வெறறி பொருநதிய உதிரத்தைச் சொரியும் சூலாயுதமேந்திய காளிகாதேவி வீற்றிருக்கின்ருள். அவவிடத்தில கட்டுவாங்கேசப் பெருமானது ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் உயர்வாகிய அழகிய சிகரததையுடைய திருக்கோயில் வீற்றிருக்கின்றது. எ-று.

"இலங்குமகேசினமோதகம்" எனவும் பாடம். (உக)

தூங்கிருள் விழுங்கு விரிசுடர்ப் புவனேச் சுரம்புவ னேச்சுர குண்ட மாங்குள விமலேச் சுரமுயர் விமல குண்டமென் றுண்டதன் றெனபா லோங்குபே ருவகை புரிதரும் பிருகு கோயிலு முளததன் றென்பாற் ருங்கருந் தவத்துக் கபிலநன் முனிவற் கருள்புரி சனீச்சுரன் மேவும்.

(இ-ள்.) நிரம்பிய இருளையொழிக்கும் பரந்த சுடரையுடைய புவனேச்சுர விலிங்கமும் புவனேச்சுவர தீர்த்தமும் அவவிடத்திலுள்ளன. அதன் தென்புறததில் விமலேச்சுர விலிஙகமும் விமலேச்சுர தீர்த்தமும் எனறிருக்கின்றன. அங்கே பேரானந்த மிகச்செய்யும் பிருகு முனிவர் (பிரதிட்டைசெய்த சிவலிங்கத்தின்) திருக்கோயிலு மிருக்கின்றது. அதன் தென்பக்கவில் சகித்தற்கரிய தவத்தையுடைய நல்ல கபிலமுனிவருக்கு அநுக்கிரகஞ்செய்த சனீச்சரவிலிங்கம் பொருந்தியிருக்கும். எ-று. (உஉ)

அவ்வுழிக்கபிலேச் சுரமறை முனிவ ரருநதவம் புரியுமோர் குகைமற் றெவ்வமி லச்சோ தகமுள தச்சோ தரியினி திருந்ததன் வடபால் வெவவிடம் பழுத்துக் கனிந்தகார் மிடற்று வெற்றுநா கேச்சுர மேவுஞ் செவ்விசேர் கவுத்து வேச்சுரன் பாங்கர்ச் சங்குகன னேச்சுரன்சிறக்கும்.

(இ-ள்.) அவ்விடத்திலேயே கபிலேச்சுர விலிங்கம்-வேதமுணர்ந்த முனிசிரேஷ்டர்கள் அரிய தவத்தைச்செய்கின்ற ஒரு குகை - குற்றமில்லாத அச்சோதகவிலிங்கம் (ஆகியஇவை) அமர்ந்திருக்கின்றன. அச்சோதரி இனிதாக வீற்றிருப்பதன் வடப்பக்கத்திலே வெவ்விய ஆலாலவிடமானது மிருந்து பிரகாசிக்கின்ற நீலகண்டத்தையுடைய வெற்ற நாகேச்சுரவிலிங்கம் வீற்றிருக்கின்றது. செம்மை பொருந்திய கவுத்துவேச்சுர விலிங்கததினருகே சங்குகன்னேச்சுர விலிங்கம் சிறப்புற்றிருக்கும். எ-று. (உங)

சங்குகன் னேசன் மணிநெடுங் கோயில் வாயிலிற் றங்ககோ ரேசம், பொங்குதண் கடவுட் புனல்கெழு மகோர தீர்த்தம்வான் புகழ்த்தமனேசு, மங்கண்மா ஞாலந் தொழுகருப் பேச மிவையுள வன்னதன் றென்பால, மங்குல்வாய் துடைக்குங் கொடிநெடுங் கோயி லுருத்திரேச் சுர மகிழ்ந் திறையும்.

(இ-ள்.) சங்குகன்னேசப்பெருமானது அழகிய நெடிய திருக்கோயிலின் திருவாயிலிற்பொருந்திய அகோரேசலிங்கம்- ஊற்றெடுக்கின்ற தண்ணிய தெய்வீகந்தங்கிய நீர்மிகுந்த அகோரதீர்த்தம் - சிறந்த கீர்த்தியையுடைய தமனேசம் - அழகிய இடமகன்ற உலகத்தார் துதிசெய்யும் கருப்பேசம் - ஆகிய இவை வீற்றிருக்கின்றன. அதன் தென்புறத்திலே மேகத்தில் தோய்கின்ற கொடிகள் கட்டிய நீண்ட திருக்கோயிலையுடைய உருத்திரேச்சுரலிங்கம் களிகொண்டு எழுந்தருளியிருக்கும். எ-று. (௨௪)

உருத்திர வாச குண்டமு மாங்க ணுளதுதென் மேற்றிசை முனிவ,
ரருத்தியிற் போற்றுங் காலநல லிங்க மமர்ந்தகவ் விலிங்கத்தின் முன
ரரத், திருத்தக விறந்தோர்க் குறுகடன் கழிக்குந் திகழ்பிதிர் கூபமவை
தரணி, மருக்கமழ் வாவி வியாழவீச் சுரங்கா மேசமா குண்டமும் வய
ங்கும.

(இ-ள்.) உருத்திரவாச தீர்த்தமும் அவ்விடத்திலுள்ளது. (அதன்) தென்மேற்குத்திசையிலே முனிவர் ஆசையோடு துதிக்கும் நல்ல காலலிங்கம் பொருந்தியுள்ளது அச்சிவலிங்கத்திற்குரியின் திருமுன்னர், இறந்தோர்க்குப் பொருந்திய கடன்களைச் செம்மைபெறக் கழிக்கத்தக்க பிதிர்தீர்த்தம்-வாசனை வீசுகின்ற வைதரணிதீர்த்தம்- வியாழவீச்சுரம்-காமேசம் (காமேச) தீர்த்தம் (ஆகிய இவை) விளங்குகின்றன. எ-று. (௨௫)

ஒழுகொளிச் சூல மேந்திய காமேச் சுரனினி துறைவதன் கீழ்பால்
விழியருள் கொழிக்கு மியல்நள கூப ரேச்சுர மேவிய தாங்குப்
பழவினைப் பவத்தின் வேரறுத் தருள்கூர் பாவன குண்டமொன் றுளது
தொழுதகு நளகூ பரனுழைச் சந்திர சூரிய லிங்கமவை கியதால.

(இ-ள்.) ஒளிசிறந்துஞ் சூலாயுதத்தைத் தாங்கிய காமேச்சுர லிங்கப்பெருமான் இனிதாக வீற்றிருப்பதன் கீழ்ப்புறத்தில, திருவிழியாற் கிருபை பாலிக்கும் இயல்பையுடைய நளகூபரேச்சுரலிங்கம் பொருந்தியுள்ளது. அவ்விடத்தில் பழவினைத்தொடக்கைஅடியோடறுத்துக் கிருபைசெய்கின்ற பாவனதீர்த்தமொன்றிருக்கின்றது. பணியத்தக்க நளகூபர லிங்கத்தினருகே சந்திரசூரிய லிங்கம் பொருந்தியுள்ளது. எ-று.

நளகூபரன் = குபேரன் மகன். (௨௬)

அரிகூரற் பகுவாய் வலம்புரி யலம்பு மாழ்கட லகடுளோங் தீன்ற
விருசுட ரிலிங்க மதனுழை யத்த கேசிசித் தேச்சுரம் யாண்டும்
பரவுமண் டலேச மறைதொழு சவனேச் சுரஞ்சன கேச்சுரம் பரத்திற்
றெரிவருசனதேச்சுரஞ்சனற்குமார மிவையெலாஞ்சிறந்துவீற்றிருக்கும்.

(இ-ள்.) பெரிய குரலையும் பிளவுபட்ட வாயையையுமுடைய வலம்புரிச் சங்குகள் முழங்குகின்ற ஆழமாகிய கடலின் வயிறளித்து பெற்ற (சந்திர சூரியராகிய) இருசுடரிலிங்கத்திற்குச் சமீபத்தில் அத்தகேசிச்சுரம்-சித்தீச்சுரம் - எவ்விடத்தும் துதிக்கும் மண்டலேச்சுரம்-வேதங்கள் துதிசெய்யும் சவனேச்சுரம்- ச

னகேச்சரம்-மறுமையில் ஞானத்தை வரச்செய்யுஞ் சனதேசசுரம்-சனற்குமாரேச்சரம் ஆகிய இச்சிவலிங்கங்களெலலாம் சிறப்போடு எழுந்தருளியிருக்கும்.

அன்னதன் றென்பா லாருதீச் சுரமபுண் ணியேச்சுர மழிவருஞ் சீர்த்தி
மன்னுமாண் டவிய வாவிகுண் டேசம வயங்குசண டேச்சுர மருவும்
பன்னரு மறைக டுணிவரு கபாலேச் சுரமதன றென்றிசை பயிலுஞ்
சொன்னதன் றென்பாற் றிரைபொரு நெடுநீர்க் குண்டமோர் மூன்றருள் சுரக்கும்.

(இ-ள்.) அவவிடத்திற்குத் தென்பாரிசததில் ஆருதீச்சுர விலிங்கம் புண்ணியேச்சுர விலிஙகம்-அழிதலற்ற சிறப்புதஙகிய மாண்டவிய தீர்த்தம்-குண்டேச விலிங்கம் - பிரகாசிக்கின்ற சண்டேச்சுர விலிஙகம் (இவை) பொருநதியிருக்கும். அவ்விடத்திற்குத் தெனபக்கலில் சொல்லுதற்கரிய வேதங்களால துணிவிடப்படாதகபாலேச்சுரவிலிங்கம்வீற்றிருக்கும். சொலலிய அதனதெனபக்கததிலே அலைகள்மோதுகின்ற மிக்கநீரையுடைய மூனறுதீர்த்தங்கள் கிருபைமிகுந்திருக்கும்.

பததுநூ றடுத்த பருமடன் முளரித் தமனியப் பொகுட்டின்மேற் பயிலு
மெய்த்திரு வமைதத விலிங்கமு மாங்கு மேவிய தத்தலந் தனக்குச்
சித்திகூா சொர்ககத துவாரமென் றுரைபப ரன்னதன் றென்புலமதனில்
முத்திகூாகாயத திரியொடுசாவித் திரிப்பெயரிலிஙகமொய்த்துளவால்

(இ-ள்.) பருத்த மடல்கள் ஆயிரம் பொருந்திய அழகிய பொற்றாமரைக் கொட்டையினபேரில் வாசஞ்செய்யும் மெய்யையுடைய திருமகள் பிரதிட்டை செய்த சிவலிங்கமும் அவவிடத்திலுள்ளது. அந்த ஸ்தலததிற்கு இஷ்டசித்திகளை அருள்கூரும் சுவாக்கதுவாரமென்று (மேலோர் பெயர்) சொல்லுவார்கள். அதற்குத் தென்றிசையிலே மோக்ஷததைக் கொடுக்கும் காயத்திரியும சாவித்திரியும் ஆகிய பெயர்களோடு கூடிய சிவலிஙகஙகள் நெருஙகியுள்ளன. எ-று.

காயத்திரி - சாவித்திரி—பிரமன் மனைவியர். (உகூ)

கரைபொரு நீத்த மடைதிறந் தொழுகுங் கடவுணமச் சோதரிக் கரையி
னொருதனிச் சுடராஞ் சததிய தபேச னுக்கிரேச் சுரனுவங் துறைவர்
பரிபவந் துடைக்கு முக்கிர குணட மொன்றதன் றென்றிசை பயிலும்
பொருவரு மதனமேற் குயாகரா வீரேச் சுரமருள் பூத்தினி திருக்கும்.

(இ ள்.) கரையை மோதுகினற வெள்ளமானது மடையெடுத்துப் பாய்கின்ற தெய்வீகம் பொருந்திய மச்சோதரி (தீர்த்த)க்கரையிலே, ஒன்றியாய் ஒப்பற்ற சுடர்மயமாகிய சத்தியதபேசவிலிங்கப்பெருமான் - உக்கிரேச்சுரவிலிங்கப்பெருமான (இவர்கள்) களித்து வாழ்வார்கள். எளிமையை விலக்கத்தக்க உக்கிரதீர்த்த மொனறு அதற்குத தென்புறத்தில் விளங்கும் சமானமிடற் கரிதாகிய உயர்வுதங்கிய கரவீரேச்சுரவிலிங்கம் அதன் மேற்குத்திசையில் அருள் மிகுந்து இனிதாக அமர்ந்திருக்கின்றது. எ-று. (நூ0)

மாகத கிறத்த பாசடைத் துளவ மாலைதாழ் சென்னிய னறியா
விரிசுடர்க் கரவி கரேச்சுரன் கோயில் மேற்புறத் தருண்மரி கேச

னெரிதவழ் குடுமிப் பரிதிநெட் டிலைவே லிந்திரத் துய்ம்முன னிருப்பர்
பரவதன் மேற்பால் சந்திரேச் சுரனுஞ் சந்திர குண்டமும் பயிலும்.

(இ-ள்.) மரகதரத்தினம்போன்ற நிறத்தையுடைய பசிய துளசியிலையா லாகிய மாலையணிந்த முடியையுடைய திருமால் கண்டறியாத பரந்த சுடர்மயமா கிய காவிகரோச்சுரப்பெருமானது திருக்கோயிலின் மேற்புறத்திலே கிருபைபுரியும் அரிகேசப்பெருமானும், நிமயமாகிய உச்சியையுடைய சூரியன்போன்ற நீண்ட அச்சவடிவாகிய வேலேந்திய இந்திரத்துய்ம்மேசப் பெருமானும் எழுந்தருளியிரு பர். துதித்தற்கரிய அதன் மேற்புலத்தில் சந்திரேச்சுரப்பெருமானும் சந்திரதீர்த் தமும் உண்டு. எ-று. (கூக)

ஆரழற் புரவி வேள்விநூ றாற்று மிந்திரேச் சுரனுறை வதன்பால்
வார்சினைச் சங்க மீற்றுளைந் தரம வழங்குகார்க் கோடக வாவி
சேர்தரும் விளங்கு தருமசண் டேசஞ் சிறந்திடு மேற்றிசைத் தென்பால்
வேரியங் கமலக் காடுசூழ் பகுவாய் விரிபுனற் குண்டமொன் றுளதால்.

(இ-ள்.) அக்கினிகாரியமாகிய நூறு அஸ்வமேதயாகங்கள் செய்த இந் திரேச்சுரப்பெருமான் வீற்றிருப்பதன்பக்கலில், நெடிய சூல்கொண்ட சங்கங்கள் ஈற்றுளைந்து முத்துகளைப் பெறும் கார்க்கோடகதீர்த்தமிருக்கின்றது. அதன்மேற் கே தருமசண்டேசலிங்கம் சிறந்து விளங்கும். அதன் தென்புலத்தில் தேன்சொ ரியும் அழகிய தாமரைக்காடு சூழ்ந்த பெரிய நீர்மயமாகிய தீர்த்தமொன்றிருக்கின் றது. எ-று. (கூஉ)

அதனின்மேற் காக்கி னீச்சுரங் கீழ்பா லவிரொளி வாலசந் திரேசம்
பிதிர்நெடுங் கூப முளவதன் மேலபால பிறங்குசித் தீச்சுரங் கீழ்பால்
மதிதவழ் கோயி லுருத்திரேச் சுரஞ்சீர் விருத்தகா ளேச்சுர மருவு
முதுதிரை புரட்டி முழங்குநீர் காலோ தகமதன் முன்னரொன் றுளதால்

(இ-ள்.) அதன் மேற்றிசையிலே அக்கினீச்சுவர விலிங்கமும், கீழ்ப்புற த்திலே ஒளிவீசும் வாலசந்திரேசவிலிங்கமும், நெடிய பிதிர்தீர்த்தமும் விளங்கு கின்றன. அதன் மேற்பக்கத்திலே விளங்குகின்ற சித்தீச்சரம் - கீழ்ப்பக்கத்திலே சந்திரன் தவழுந் திருக்கோயிலையுடைய உருத்திரேச்சுரம் - சிறப்புதங்கிய விரு த்தகாளேச்சரம் (ஆகிய இவை) பொருந்தியிருக்கும். அதன்முன்னே பெரிய அலைகளை வீசிச் சத்திக்கின்ற நீரையுடைய காலதீர்த்தம் ஒன்றிருக்கின்றது.

செந்தசைப் புலவுச் சூலவேற் காலேச் சுரமுறை யிடத்ததன்
றென்பால், வெந்திறற் றக்கேச் சுரமிருத் தேச மேவிடு மாங்கதன் மேல்
பா, லந்தகேச் சுரமீங் குறைத்ததன் றென்பா லத்திபா லேசமற் றதன்
பால், நந்தலி லயிரா வதேச்சுர மயிரா வதநெடு வாவிநண் ணியவே.

(இ-ள்.) செவ்விய மாமிசத்தின் புலால் மணங் கமழும் சூலாயுத மாகிய முத்தலைவேலேந்திய காலேச்சுரவிலிங்கம் வீற்றிருக்கும் இடத்திற்குத் தென்பக் கத்தில், வெவ்விய வலியமைந்த தக்கேசவிலிஙகம் - மிருத்தீசவிலிங்கம் இவை மேவியிருக்கும். அதன் மேலைத்திசையில் அந்தகேசுரவிலிங்கமிருக்கும். சொல்

லிய அதன் தென்புறத்தில் அததிபாலேசலிலிங்க மமரும். அதன்பக்கலில் அழி தலில்லாத அயிராவதேச்சுர லிலிங்கமும் பெரிய அயிராவத தீர்த்தமும் தங்கி யுள்ளன. எ-று. (௩௪)

மாதரீச் சுரஞ்செங் தேச்சுர மாங்கு வயங்குமவன் மீச்சுரஞ் சிறந்த
மேதகு குண்ட முயர்பிருங் கேசம வயித்தியேச் சுரமடு வியபபுற்
றேறுதன் மந்தி ரேச்சுரம் வளர்தன் மந்திர மடுவரி கேசந்
தீதிலமா காள குண்டத்தின் வடபாற் சிறந்துவீற் றிருந்திடு மன்றே.

(இ-ள்.) அவ்விடத்தில் மாதரீச்சுரம்-செந்தீச்சுரம் (இவை) விளங்கும். வன்மீச்சுரம்-சிறப்புற்ற மேம்பாடுதங்கிய வன்மீகதீர்த்தம் - உயர்வாகிய பிருஙகே சலிலிங்கம் - வயித்தியேச்சுரலிலிங்கம் - வயித்தியேச்சுரதீர்த்தம் - சந்தோஷமு ற்றுச்சாற்றுகின்ற தன்மந்திரேச்சுரலிலிங்கம் - பெருகுகின்ற தன்மந்திரதீர்த்தம் அரிகேசலிங்கம் (ஆகிய இவை) கெடுதலில்லாத மாகாளதீர்த்தத்தின் வடபா லிற் சிறப்புற்று எழுந்தருளியிருக்கின்றன. எ-று. (௩௫)

துங்கமா ரத்தின் றென்புலஞ் சிவேசந் துளங்கிடு மாங்கதன் றென்பாற்
றங்கிய வயிர வேச்சுர நந்தீச் சுரமொடு வயிரவ கூப
மங்கதன் மேற்குப் புகழ்வியா தேசம் வியாதநல் வாவியு மமர்ந்த
பொங்குநீர்க்கண்டா கன்னனல்வாவி புகன்றதன்மேற்றிசை பொருந்தும்

(இ-ள்.) பரிசுத்தமாகிய மாகாளதீர்த்தத்தின் தென்புலத்தில் சிவேசலி ங்கம் எழுந்தருளியுள்ளது. அதன் தென்புலத்தில் வயிரவேச்சுரமும், நந்தீச்சுர மும், வயிரவதீர்த்தமும், அதன் மேற்புலத்தில் கீர்த்திதங்கிய வியாதேசலிங்கமும் நல்ல வியாததீர்த்தமும் பொருந்தியுள்ளன. சொல்லிய அதன் மேற்புலத்தில் பொங்குகின்ற நீரையுடைய கண்டாகணதீர்த்தம் வீற்றிருக்கின்றது. எ-று. (௩௬)

அனையதன் பாங்கர் சந்த்ரசூ டேச னமருமற் றதனுழை மருவும்
பனிவரு கமல மலராறு நெடுநீர்ப் பஞ்சசூ டாசல வாவி
வனைகுழற் கவுரி கூபமு மதன்மேற் குள்ளது மற்றதன் வடபால்
வினையறுஞ் சோக கூபமு மந்தா கினிநெடு வாவியும் விளங்கும்.

(இ-ள்.) அத்தகைய கண்டாகனதீர்த்தத்தின் சமீபத்தில் சந்திரசூடேச லிலிங்கம் வீற்றிருக்கின்றது. அதனருகே குளிர்ச்சி தங்கிய தாமரை மலர்கள் நீங்காத நெடியநீரையுடைய பஞ்சசூடாசலதீர்த்தம் பொருந்தியுள்ளது. அதன் மேற்புறத்திலே அலங்கரிக்கின்ற அளகபாரத்தையுடைய கவுரிதீர்த்தமு முள் ளது. அதன் வடதிசையில் இருவினைகளொழியுஞ் சோகதீர்த்தமும் நெடிய மந் தாகினிதீர்த்தமும் விளங்குகின்றன. எ-று. (௩௭)

மற்றதன் வடபால் விச்சுவ தேவேச்சுரன்வரு மத்திய மேசன், கொ
ற்றவை வாவி பத்ரகா ளீசன் குருதிவேல் வீரபத் திரேச, னுற்றினி-தி
ருப்பு ரதன்வட புலத்திற் புண்ணிய கூபமுண் டதன்மேற், கற்றமில் சீ
ர்த்திச் சவுனக வாவி சவுனகேச் சுரமினி தமரும்.

(இ-ள்.) அதன் வடாத்திசையில் விச்சுவதேவேச்சுரலிங்கப்பெருமான் முத்தியமேச லிங்கப்பெருமான் - துர்க்கைதீர்த்தம் - பத்திரகாளீச லிலிங்கப்பெ

ருமான் - உதிரமொழியாத வேலேந்திய வீரபத்திரேசன் (ஆகிய இவர்) இனிதாகப் பொருந்தியிருப்பர். அதன் வடபக்கலில் புண்ணியதீர்த்தமிருக்கின்றது. அதன் மேலைதிசையில் கெடுதலில்லாத கீர்த்தியையுடைய சவுனகதீர்த்தமும், சவுனகேச்சுவர லிங்கமும் பொருந்தியிருக்கும். எ-று. (௬அ)

சவுனகேச் சுரற்குத் தென்றிசைக் கஞ்சு கேச்சுரஞ் சார்ந்திடும் வடபா, லவிரொளி பரப்பு முபர்மதங் கேச மமர்ந்திடு மதன்வட மேலபாற், பவவினை துடைக்கு முனிவர ரமைத்த விலிங்கமற் றளப்பில பயிலும், கவையறு மதங்கேச் சுர னுழைத் தென்பால் பிரமார்த் திரேசகண் ணியதே.

(இ-ள்.) சவுனகேச்சுவரலிங்கப் பெருமானுக்குத் தென்றிசையில், கஞ்சுகேச்சுரவிலிங்கம் வீற்றிருக்கும். வடபக்கலில் விளங்குகின்ற ஒளியைப்பரவச்செய்யும் மதங்கேசவிலிங்கம் விளங்கும். அதன் மேற்றிசையில், பிறவித்துன்பத்தையொழிக்கும் முனிசிரேஷ்டர்கள் பிரதிட்டைசெய்த சிவலிங்கக்குறிகள் அளவில்லாதன விளங்கும். குற்றமற்ற மதங்கேசவிலிங்கப் பெருமானுக்கருகே தென்பக்கலில் பிரமார்த்திரேசவிலிங்கம் எழுந்தருளியுள்ளது. எ-று. (௯௯)

தென்புலத் தவர்க ளமைத்திடு மிலிங்க மளப்பில வாங்குள தென்பால், மன்பெருந தவத்தோ ரேத்துசித் தேசஞ் சித்தநற் கூபமும் வயங்கு, மன்புறு வியாக்கி ரேச்சுர மதனின் குணக்குள தன்னதின் றென்பால்,பொன்பழுத் தென்னப் புரிசடைச் சேட்டேச் சுரமுறைந் துலகெலாம் புரக்கும்.

(இ-ள்.) தென்புலமடைந்த பிதிரர்கள் ஸ்தாபித்த சிவலிங்கமூர்த்தங்கள் கணக்கில்லாதனவாக ஆண்டிருக்கின்றன. தென்பாலில் நிறைவாகிய பெருந்தவமுடையவர்கள் துதிக்கத்தக்க சித்தேச்சரவிலிங்கமும்,நல்லசித்ததீர்த்தமும் விளங்குகின்றன. அதன் கிழக்குத்திசையிலே அன்புபொருந்திய வியாக்கிரேச்சுரவிலிங்கம் வீற்றிருக்கின்றது. அதன் தென்புறத்திலே பொன் பழுத்தாற்போன்ற புரிந்த சடையையுடைய சேட்டேச்சுரவிலிங்கம் வீற்றிருந்து உலகங்களையெல்லாம் ரக்ஷிக்கின்றது. எ-று. (௪0)

சேட்டிளங் கொன்றை புனைந்தசேட் டேச னமர்ந்ததன் றென்புலமதனிற், சூட்டர வணிநத பிரகசி தேவேச் சுரனுறு மன்னதன் வடபால், வீட்டுநல வின்பந் தருசிவா கேசஞ் சேட்டமா தேவியும் விளங்கு, மூட்டரக் குண்ட செய்யதாட் சண்டீச் சுரமதன மேற்றிசை யுறையும்.

(இ-ள்.) அழகிய இளங்கொன்றைமாலை யணிந்த சேட்டேசவிலிங்கப் பெருமான் பொருந்தியுள்ள இடத்திறகுத தென்பக்கலில், உச்சிக்கொண்டையையுடைய உரகத்தை ஆபரணமாகத் தரித்த பிரிகசிதேவேச்சுரவிலிங்கப்பெருமான் உறைவர். அதன் வடபுறத்தில் நலல மோக்ஷவின்பத்தைப் பிரசாதிக்கும் சிவாகேசவிலிங்கமும் சேட்டமாதேவியும் விளங்குவர். செந்நிறந் தங்கிய பாதங்களையுடைய சண்டீச்சுவரவிலிஙகம் அதன் மேற்புறத்திலேயமர்ந்திருக்கின்றது.()

விளம்பிய விதற்கு வடபுலக் தண்ட காதகூ பந்திகழ் மேற்பால், களங்கமில் தேவ லேச்சுரஞ் சதகா லேச்சுர முமாபதி கருணை, துளங்

கொளிச் சரதா தபேச்சுர மருவுஞ் சொற்றதன் மேற்கெது கேசு, மூளங் கவர் கணுதீச் சுரஞ்செபா தேசஞ் சக்ரபா ணீச்சுர முறையும்.

(இ-ள்.) சொல்லிய இதன் வடதிசையில் தண்டகாததீர்த்தமும், விளங்குகின்ற மேற்புலத்தில் குற்றமில்லாத தேவலேச்சுரவிலிங்கமும், சதகாலேச்சர விலிங்கமும், உமாதேவி நாயகராகிய சிவபெருமானது கிருபை மிகுந்து பிரகாசிக்கும் சரதாதபேச்சுவரவிலிங்கமும் வீற்றிருக்கின்றன. சொல்லிய அவ்விடத்திற்கு மேற்குத்திசையிலே எதுகேசவிலிங்கம் - மனதைக் கிரகிக்கும் கணுதீச்சுர விலிங்கம் - செபாதேசவிலிங்கம் - சகரபாணீசுசுரவிலிங்கம் (ஆகிய இச் சிவலிங்கங்கள்) எழுந்தருளியுள்ளன. எ-று. (௬௨)

சக்கிர பாணீச் சுரனுறை தென்பாற் றயங்குபூ தேசமேற் றிசையின், மிக்கொளி விரிக்குங் கறைமிடற் றரவி ரிடீச்சுரம விளம்பிய வதன் கீழ்த், திக்கினிற் றுருவா சேச்சுர மதனின் றெனறிசை மழகதி ரெறிக்குங், கக்குசெங் குருதி மூவிலை நெடுவேற் பாரபூ தேச்சுரங் கவினும்.

(இ-ள்.) சக்கிரபாணீச்சுரவிலிங்கப்பெருமான் வீற்றிருப்பதன் தென்றிசையில் விளங்குகின்ற பூதேசவிலிங்கமும், மேற்றிசையில் மிகுந்த ஒளியைப் பரவச்செய்யும் நீலகண்டத்தை யுடைய சர்ப்பாபரணமணிந்த இருடீச்சுர விலிங்கமும், சொல்லிய அச் சக்கிரபாணீச்சுரவிலிங்கத்தின் கீழைத்திக்கிலே துருவாசேச்சுரவிலிங்கமும், அச் சிவலிங்கத்தின் தென்பாரிசத்தில் இளங் கிரணங்களை வீசுகின்ற செவ்விய உதிரத்தைச் சொரியும் முத்தலைவேலாகிய நெடிய சூலத்தைத் தாங்கிய பாரபூதேச்சுரவிலிங்கமும் அழகுசெய்யும். எ-று.

சக்ரபாணீச்சுரத்தின் நாற்புறத்திலும் முறையே மேற்கூறிய நான்கு சிவலிங்கங்க ளிருக்கின்றன என்பதாம். (௬௩)

மறையொரு நான்குந் தெரிவியா தேச னுறைவதன் கீழ்ப்புலம் வாய்ந்த, வெறிதிரைக் கங்கை புனைந்தசங் கேசம் விச்சுவேச் சுரம்விகு தேச,மறையதன் வடகீழ்த் திசையவ தூதேச் சுரமவ தூதநற் றீர்த்தம்,பெறலரு மதன்கீழ்த் திசையிடைப் பசுப தீச்சுரம் பெட்பின்வீற் றிருக்கும்

(இ-ள்.) ஒப்பற்ற நான்குவேதங்களையுமுணர்ந்த வியாதமுனிவர் பிரதிஷ்டையாகிய சிவலிங்கத்தின் கீழ்ப்பக்கலில் வாசனையோடுகூடியகஙகாநதியையணிந்த சங்கேசவிலிங்கம் - விச்சுவேச்சுரலிங்கம் - விகுதேசவிலிங்கம் (ஆகியஇவை) அமர்ந்துள்ளன: சொல்லிய அதன்வடகிழக்குத்திசையிலே அவதூதேச்சுவரலிங்கமும், நல்ல அவதூததீர்த்தமும். அடைதற்கரிய அதன்கிழக்குததிசையில் பசுபதீச்சரலிங்கமும் ஆசையோடு எழுந்தருளியிருக்கின்றன. எ-று. (௬௪)

பசுபதீச் சுரர்க்குத் தென்புல மதனில் படரொளிக் கோப்பிரேச் சுரமேற்,கசைவில்சீ மூத வாகனம் பஞ்ச நதத்தினில் மயூகவா தித்த,னிசைப்டு சத்தீச் சுரமுல கேத்து பக்கிர காதமெய் தியவித், திசையதின் வடபாற் கங்கைநீர் வளர்க்குங் கற்பக வாவிசேர்ந் துளதால்.

(இ-ள்.) பசுபதீசவிலிங்கப் பெருமானுக்குத் தெற்கிலே படர்கின்ற ஒளியையுடைய கோப்பிரேச்சுரவிலிங்கமும்,மேற்றிசையிலே அசைதவில்லாத சீமூத

வாகனலிங்கமும் பஞ்சநததீர்த்தத்தில் மயூகாதித்தலிங்கமும் கீர்த்திபொருந்திய சத்தீச்சுரலிங்கமும் உலகத்தார் துதிக்கின்ற உபக்கிரகாத லிங்கமும் (ஆகிய இவை) அடைந்துள்ளன. இவ்விடத்திற்கு வடபுலத்தில் கங்காநதியின் நீரை வளர்ப்பிக்கின்ற கற்பகத்தீர்த்தம் தங்கியிருக்கின்றது. எ-று.

சீமூதம்=மேகம்; ஈண்டு சீமூதவாகனமென்றது மேகவாகனன் பிரதிட்டையாகிய லிங்கம் என்க. (சுசு)

கடன்முரசதிர்க்குங் கருப்புவில் லனங்கற் செற்றருள் புரிகபர்த்தீச,னிடத்ததன் றென்பால் மங்கல கவுரி யிலங்குகங் கேசனின் வடபால, விடக்கருஞ் சேறு பழுத்திரு டுங்கு மிடற்றசித் தீச்சுர மதனின, வடக்குயர் தொட்டேச் சுரம்விருத் திரேசம் வேணடிய வரமளித் துறையும்.

(இ-ள்.) சமுத்திரமாகிய பேரிகையை யதிரச்செய்கின்ற கருப்புவில்லையுடைய அருபியாகிய மன்மதனையெரித்து (அவன்மனைவி இரதிவேண்டுகோளுக்கிரங்கிமீண்டும் அவளுக்குமட்டில் உருவாயிருக்க) அநுக்கிரகஞ்செய்த கபர்த்தீசலிங்கப்பெருமான் வீற்றிருப்பதன் தென்புறத்திலே மங்கலகரமாகிய கௌரியம்மையாரும், பிரகாசிக்கின்ற கங்கேசப்பெருமானுக்கு வடபக்கலில் விடமாகிய கருஞ்சேறுமிருந்து இருண்மயமாகிய கண்டத்தையுடைய சித்தீச்சுரலிங்கமும், அதன் வடக்குத்திசையில் உயர்வாகியதொட்டேச்சுரலிங்கமும், விருத்திரேச்சுரலிங்கமும், (உலகினர்) வேண்டும்வரங்களைப் பிரசாதித்துவிளங்கும். எ-று.

அதன்வட திசையிற் சத்திகா தேவி யமருமற் றவள்முனஞ் சிறந்த, கதிரெதி ரெறிக்கும் விரிசுடர் வடிவே லிரோவதேச் சுரங்கவின் கொழிக்கு, மிதன்முனம் பஞ்ச நதேச்சுரம் வயங்கு மெறிபுனல் மங்கலோ தகமென்,றுததிநஞ் சருந்து மங்கல தேவி யுறைவதன் மேற்புறத்தொளிரும்.

(இ-ள்.) அதன் வடதிக்கிலே சத்திகாதேவியார் அமர்ந்திருப்பர். அத்தேவியாருக்கு முன்னே பிரதிபலிக்கும் சிறந்த கிரணங்களைவீசும்பரந்த சுடர்மயமாகிய கூர்மையுடைய வேலேந்தியஇரோவதேச்சுரலிங்கம் அழகினைச்செய்யும். இதற்குமுன்னே பஞ்சநதேச்சுரலிங்கம் விளங்குகின்றது. மறிகின்ற நீரையுடைய மங்கலதீர்த்தமென்று கடலிற்றோன்றிய காளகூடத்தை யருந்திய மங்கலதேவியின் இருப்பிடம் அதன் மேலைத்திக்கிலே யிருக்கின்றது. எ-று. (சுஎ)

வண்டொடு சுரும்புங் கலித்தசில் லோதி மங்கல கவுரியின் றென்பால், வெண்டலை மாலை புனையுப மனிய லிங்கமே விடுகபர்த் தீசன், றண்டலில் கோயில் தென்றிசை தசாங்கேச் சுரந்தயித் தியேச்சுரஞ் சார்ந்த, வொண்டிற லிரேவ தேச்சுரன் றென்பால் சயிமினீச் சுரமுவந் துறையும்.

(இ-ள்.) பெண்வண்டுகளும் ஆண்வண்டுகளும் ஆரவாரத்தோடு பண்பாடும் அளகபாரத்தையுடைய மங்கலகௌரியம்மையாருக்குத் தென்புறத்திலே வெண்டலைமாலையையணிந்த உபமன்னியலிங்கம் உறைகின்றது. கபர்த்தீசப்பெருமானது கெடுதலில்லாத திருக்கோயிலின் தென்புறத்திலே தசாங்கேச்சுரலிங்கமும் தயித்தியேச்சுரலிங்கமும் சார்ந்துள்ளன. மிக்கபராக்கிரமத்தையுடைய

இரேவதீச்சுரலிங்கப்பெருமானுக்குத் தென்பக்கலில், சயிமினீச்சுர லிங்கம் சந்தோஷித்து வீற்றிருக்கும். எ-று. (சஅ)

பற்பல கோடி யிலிங்கமாங் குண்டு பின்னரும் பகர்ந்தன வடபா;லு ற்றது ராவ ணேச்சுரந தென்பா லுயர்வரா கேச்சுர முறையு, மற்றதன் றென்பால் மருவிடு மாண்ட வேச்சுர மாண்டவேச் சுரர்க்குத், தெற்கி னி தமர்ந்த வயோகன தேசஞ் சிறந்தொளி தயங்குவா தேசம்.

(இ-ள்) பல்லாயிரகோடி சிவலிங்கங்கள் ஆண்டு வீற்றிருக்கின்றன. மே லும் சொல்லியதன் வடக்கிலே இராவணேச்சுரலிங்க மிருக்கின்றது. தென்றி சையிலே உயர்வாகிய வராகேசசுரலிங்கம் விளங்குகின்றது. அதன தென்பக்க லில் மாண்டவேச்சுர லிங்கம் பொருந்தியுள்ளது. மாண்டவேச்சுரலிங்கத்தி ற்குத் தென்புறத்திலே வயோகனதேசலிங்கமும் பிரகாசிக்கின்ற வாதேசலி ங்கமும் இனிதாக எழுந்தருளியுள்ளன. எ-று. (சகூ)

அதன்முனஞ் சோமேச் சுரமத னிருதி மூலையிற் கன்னிகேச் சுர மற், றதன்வட பாலிற் பஞ்சபாண் டவர்க ளமைத்தருள் சுரக்குநல் லி லிங்க, மதன்முனஞ் சனவா தேச்சுர மதன்மேற் கருந்தவம புரிசுவே தேச, மதனின்மேற் குலகந் தொழுதகு கலேச மமர்ந்தினி திருந்ததை யன்றே.

(இ-ள்.) அதன்முன்னே சோமேச்சுரலிங்கமும், அதன் தென்மேற்கு க்கோணத்தில் கன்னிகேச்சுரலிங்கமும், அதன வடபக்கலில் பஞ்சபாண்டவர் கள் பிரதிட்டைசெய்து கிருபை பாலிக்கின்ற நல்ல சிவலிங்கமும், அதன்முன் னே சனவாதேச்சுரலிங்கமும், அவன் மேற்புலததில் அரிய தவத்தைச செய்த சுவேதேசலிங்கமும், அதன் மேற்பாலிலே உலகமுழுவதுந் தொழத்தக்க கலே சலிங்கமும் இனிதாக அமர்ந்துள்ளன. எ-று. (கூ0)

வாய்ந்ததன் வடபாற் சித்திர குத்தேச் சுரங்கலா கேசனின் வடபாற் சேர்ந்தொளிர் கருணை வாமதே வேசந் தென்புலங் கமபனேச் சுரந்தார்ப் பூந்துணர் புனையச் சுவதரேச் சுரமவிண் புகழ்நள கூபர லிங்கஞ் சார்ந்தன வதனின் றென்றிசை மணிகன் னேச்சுரந் தயங்கிய தன்றே.

(இ-ள்.) பொருந்திய அதன் வடக்குத்திக்கிலே சித்திரகுத்தேசலிங்க மும் கலாகேசனுக்கு வடதிசையிலே சேர்ந்து பிரகாசிக்கினற கிருபைபுரியும் வா மதேவேசலிங்கமும், தென்புறத்தில் கம்பனேச்சுரலிங்கமும், பூங்கொத்துக ளாகிய (கொன்றை) மாலையணிந்த அச்சுவதரேச்சுர லிங்கமும், தேவலோகத் தாரால் துதிசெய்யப்படும் நளகூபரேசலிங்கமும் பொருந்தியுள்ளன. அதற்கு த்தென்புலத்திலே மணிகன்னேசலிங்கம் வீற்றிருக்கின்றது. எ-று. (கூக)

வார்கதிர் பரப்பிப புதையிருள் விழுங்கு மணிகனேச் சுரற்கு மேற் புறத்திற், சாரத ரேச மதனின்மேற் பாலிற் றவலருஞ் சீர்பிதா மகே சம், சீரள வறியாப் பிதாமக வாவி கீகழ்த்ததன் றென்றிசை யதனில், யாருமேத் தெடுப்ப வினிதருள் புரியு மியல்வர ணேச்சுர முளவால்.

(இ-ள்) நெடிய கிரணங்களைப் பரவச்செய்து மிருந்த இருளைப் பருகுகின்ற மணிகன்னேச்சவரலிங்கப்பெருமானுக்கு மேற்பக்கலில் சாரதரேசலிங்கமும், அதற்குமேற்புறத்தில் கெடுதலற்ற சாத்தியையுடைய பிதாமகேச லிங்கமும், சலத்தின் அளவை யறியப்படாத (ஆழமுடைய) பிதாமகதீர்த்தமும், சொல்லிய அதற்குத் தென்சாராக யாவரும் துதிசெய்யும்படி இனிமையாகக் கிருபை செய்கின்ற தன்மையுடைய வரணேச்சுரலிங்கமும் எழுந்தருளியுள்ளன. எ று.

அருமறை வடித்த பிதாமக வாவி யருகுகூர் மாண்டமா லிங்கம் [ல்
பொருவறு மதனின் குணபுலத் திராக்க தேச்சுரம் புகன்றதன் றென்பா
விரிபுனல் வேணி யிலங்குகங் கேசம் விளங்குறு மச்சுதேச் சுரந்தார்
மருவிரி கடுக்கை புனைதரு சக்க ரேச்சுர நாடொறும வயங்கும்.

(இ-ள்.) அருமையாகிய வேதத்தைத் தெளிவுபடுத்திய பிதாமகதீர்த்தத்திற்குச் சமீபத்தில் சிறந்த கூர்மாண்டலிங்கமும், சமானமற்ற அதற்குக் கீழ்த்திசையில் இராக்ஷதேச்சுரலிங்கமும், கூறிய அதன் தெனபக்கத்திற பரந்த (கங்கா) சலத்தை யணிந்த சடையானது விளக்குகின்ற கங்கேசலிங்கமும், விளக்கம் பொருந்திய அச்சுதேச்சுரலிங்கமும், வாசனைவீசுகின்ற கொன்றைமாலையணிந்த சக்கிரேச்சுரலிங்கமும் எப்பொழுதும் விளங்கும். எ-று. (௩௬)

மின்னகு வடிவேற் சாரகேச் சுரம்யாழ் மென்மொழிச் சானகேச்
சுரமுன், சொன்னபா ரேச மருள்மருத் தேசங் துளங்கொளி பயின்ற
சக் கிரேசம், பொன்னவி ரிதழி புனையரங் கேச நதீச்சுர முடற்றுவெம்
போரி, லொன்னலர்க் கடந்த லோகபா ரேச ரளப்பில ராங்கினி துறை
வார்.

(இ-ள்.) மின்னல்போன்று பிரகாசிக்கும் கூர்மையாகிய வேலேந்திய சாரகேச்சுரலிங்கமும், வீணாநாதம்போன்ற மெல்லிய சொல்லையுடைய சானகேச்சுரலிங்கமும், முன் சொல்லிய பாரேசலிங்கமும், மருத்தேசலிங்கமும், பிரகாசிக்கின்ற ஒளிவீசும் சக்கிரேசலிங்கமும், பொன்போலும் பிரகாசிக்கின்ற கொன்றைமலரணிந்த அரங்கேசலிங்கமும், நதீச்சுரலிங்கமும், புரிகின்ற கொடிய போரில் சத்துருக்களைச் செயித்த லோகபாரேசமூர்த்திகள் அளவில்லாதவர்களும் அவ்விடத்தில் இனிதாக அமர்ந்திருக்கின்றனர். எ-று. (௩௭)

உரகர்கந் தருவ ரியக்கர்கிம் புருடர் தானவ ரும்பரி னுறைவோர்
பெரிதுணர் சித்தர் வித்தியா தரரோ முதலினோர். பெட்பொடு மமைத்த
தெரிவரு லிங்க மனேககோ டிகளுண் டிலங்குசக் கிரேச்சுரன் றென்
பரவினர்க் கருள்கூர் பாசுப தேசம் பற்குனேச் சுரமிவை பயிலும். [பாற்

(இ-ள்.) நாகர் - காந்தருவர் - யக்ஷர் - கிம்புருடர் - அசுரர் - ஆகாயவாசிகள் - மிக்க உணர்ச்சியுடைய சித்தர் - வித்தியாதரர் முதலிய கணங்கள் ஆசையோடு பிரதிட்டைசெய்த அறிதற்கரிய சிவலிங்கங்கள் அநேககோடிகளிருக்கின்றன. பிரகாசிக்கின்ற சக்கிரேச்சுர லிங்கப் பெருமானுக்குத் தென்புறத்திலே துதித்தவர்கட்குக் கிருபை (மாசி) பொழியும் பாசுபதேசலிங்கமும், பற்குனேச லிங்கமும், வீற்றிருக்கும். எ-று.

பற்குனன்=பல்குனமாகிய பங்குனி மாதத்திற் பிறந்தோன்; அருச்சுனன். நாகர் - கந்தர்வர் முதலானோர் அஷ்டாதச கணங்கள். (ருரு)

வடபுல மீசா னேச்சுரன் மேல்பால் வயங்கொளி திகழசமுத் திரேச
னடையிலாங் கிலீச னவ்வுழி லகுளீச் சுரன்கயி லேச்சுர னொரு
மடிதொழும் பிரதி கேச்சுர னுறைவர் மேற்றிசை யலங்குநீர் கரவாத்
தடமுள ததன்மேற் றிசையினிற் றண்ட பாணிமா நகர்தனை யளிக்கும்.

(இ-ள்.) வடதிசையில் ஈசானேசப்பெருமான்-மேல்புறத்தில் ஒளிவிளங்குகின்ற சமுத்திரேசப்பெருமான் - ஆங்கிலேசப்பெருமான் - இலகுளேசப்பெருமான் - கயிலேச்சுரப்பெருமான் - யாவரும் திருவடியைப் பணிகின்ற பிரதிகேச்சுரப்பெருமான் (ஆகிய இவர்கள்) அமர்ந்திருக்கின்றனர். மேற்றிசையிலே நீர் வடியாத தீர்த்தமொன் றிருக்கின்றது. அதன் மேலைப்பாகத்தில் தண்டபாணிக் கடவுள் சிறந்த (காசி) நகரத்தைக் காவல்செய்திருப்பார். எ-று. (ருசு)

அசைநடைத் தென்றற் கன்றுலாம் வீதி யவிமுத்தேச் சுரனுறை வதன்
வசையறுமுத்தியீசன்மற்றதற்குவடபுலங்குணேசன்ஞா னேசன் [பால்
றிசைமுகங் கமழுந் தேம்படு நறுந்தார் கிடந்ததோட் சிறந்தசொன் னேச
னிசைபட வுறைவர் கொடிமதிற் கோயிற் பாக்கிய கவுரியாங் கிருக்கும்.

(இ-ள்.) அசைகின்றநடையையுடைய இளந் தென்றற்காற்றானது உலாவுகின்ற வீதியையுடைய அவிமுத்தேசப்பெருமான் வீற்றிருப்பதற்கருகே குற்றமற்ற முத்தியீசப்பெருமானும், அதன் வடதிசையில் குணேசப்பெருமான் - ஞானேசப்பெருமான் - திசைகளிலெல்லாம் பரிமளிக்கின்ற தேன்சொரியும் நல்ல மாலையணிந்த தோளையுடைய சிறப்புதங்கிய சொன்னேசப்பெருமான் (ஆகியஇவர்களும்) பொருந்திவீற்றிருப்பர். கொடிகள்கட்டிய மதில்பொருந்திய கோயிலையுடைய பாக்கியகௌரி அங்கிருக்கின்றனள். எ-று. (ருஎ)

கயமலர் துவைத்துக் கனைதவழ் பணிலங் கழனிதோ றலங்குமுத்
துயிர்ப்பப், புயல்வளஞ் சுரக்குங் காசிவிச் சுவேச னுறையுளின் றென்பு
லம் புனைதா,ரயி லுடைச் சூல மேந்துகும் பேச னதனினமேற் கருள்செ
ய்விக் கினேசன், செயிரிலகுமபேசன் கோயிலின் றென்கீழ்த் திசைவிரு
பாக்கமே விடுமால்.

(இ-ள்.) குளத்திலுள்ளமலர்களை மிதித்துக்கனையில் தவழ்ந்தசங்குகள் கழனிகளிலெல்லாம பிரகாசிக்கின்ற முத்துகளைப்பெறும்படி மேகங்கள் பொழிகின்ற காசி விஸ்வநாதப்பெருமானது திருச்சந்நிதானத்தின தென்றிசையில் அலங்கரிக்கின்ற மாலையையணிந்த கூர்மையாகிய சூலாயுதமேந்திய கும்பேசப்பெருமானும்,அதற்குமேற்புறத்தில் கிருபைசெய்கின்றவிக்கினேசப்பெருமானும் குற்றமில்லாத கும்பேசப்பெருமானது திருக்கோயிலின் தென்கிழக்குத்திசையில் விருபாக்கேசப்பெருமானும் வீற்றிருப்பார். எ-று. (ருஅ)

தீவினை தொடரு மருட்பிணி யகற்றிப் பெறலரு முத்தியிற் சேர்க்குந்
தாவரு குருக்கேத் திரத்தினி லுறைந்த தாணுவா மிலிங்கம்வெங் கதிர்

கால், மேவரு லோலா தவனினி துறையு மீயுயர் கோயிலின் மேல்பா
லோவரு முததி யடியவர்க் கருளி யுவாதுவீற் றிருந்ததை யன்றே.

(இ-ள்.) பாவமானது தொடரத்தக்க அஞ்ஞானமாகியபிணியையொழித்து அடைதற்கரிய மோட்சததிற்சேர்க்கின்ற கெடுதலில்லாத குருக்ஷேத்திரத்தில் வீற்றிருந்த இறைவராகிய சிவலிங்கம் வெவ்விய கிரணங்களைக்கக்கும் லோலாதித்தன் இனிதாகவாழ்ந்திருக்கும் மிகவுமுயர்ந்தகோயிலின் மேலைத்திசையில் கெடுதலில்லாத மோக்ஷத்தை அடியார்களுக்கு அனுக்கிரகித்துக் களித்து வீற்றிருக்கின்றது. எ-று. (௫௯)

நனந்தலை யுலக முழுவதும் புகழு நைமிசா ரணியத்தி னுறையுஞ்
சினங்கனிந தொழுகு மழுவல னேந்து தேவதே வப்பெய ரிலிங்கங்
கனமபொழி காலைக கரையழித் தொழுகு காளிந்தி யெனக்கடாங் கவிழ்
மனமபடு துண்டி விநாயகன் கோயில வடபுலத் தினிதிருந் ததுவே. [க்கு

(இ-ள்.) உலகமெல்லாம் புகழ்கினற நைமிசவனததில் வீற்றிருக்கும் கோபமிகுந்து விளஙகும் மழுப்படையை வலப்புறத்திற்றாங்கிய தேவதேவன் என்னும்பெயரையுடைய சிவலிஙகப்பெருமான், மேகம் வருஷிக்குங்காலத்திலே கரையைக்கரைத்துப் பாய்கின்ற காளிந்திநதியைப்போல மதஜலத்தைப் பொழிகின்ற (அன்பாகளது) மனதில்வீற்றிருக்கும் துண்டிவிநாயகப் பெருமானது திருக்கோயிலின் வடபுறத்திலே இனிமையாக எழுந்தருளியிருக்கின்றனர். எ-று. (௬0)

மழைவளஞ் சுரக்குங் கோகனத் துறையு மாபெல விலிங்கமீண் டெய்தி
யொழுகொளிச் சாம்பா தவனுழை வதிந்த வுயர்பிர காசகேத் திரத்திற்
றழைவுறு சசிபூ ரணமெனு மிலிங்கத் தயங்கொளி திரண்டுமோ சனத்தி
விழைவுறு கீழ்ப்பா லமரரேத் தெடுபப மேவிவீற் றிருந்தது மாதோ. [ன்

(இ-ள்.) மழை வளப்பம் சுரக்கின்ற கோகனமென்னும் க்ஷேத்திரத்தில் விளங்கிய மஹாபலேஸ்வரலிங்கமானது இக்காசிநகரத்தையடைந்து ஒளிசொரிகின்ற சாம்பாதித்தனுக்கருகே வீற்றிருக்கின்றது. உயர்வாகிய பிரகாசமென்னும் க்ஷேத்திரத்திலே (கீர்த்தி) தழைத்த சசிபூரண மென்னும் பெயர் வாய்ந்த சிவலிங்கக்குறியானது பிரகாசிக்கின்ற புகழ் விளங்குகின்ற மோசனலிங்கத்தின் ஆசைபொருந்திய கீழ்ப்புறத்தில் தேவர்கள் தோத்திரஞ்செய்யும்படி பொருந்தியிருக்கின்றது. எ-று.

"கோகனத் துறையு மாபெல விலிங்கம்" என்பதன் வரலாறு.

முன்னொருகாலத்தில், அரைக்கோடி ஆயுள் பெற்று இலங்கைத்தீவை இராச்சியமாக்கித் தேவர்முதலாயினோர்க்கு இடுக்கண் செய்துவந்த தசக்கிரீவனுகிய இராவணன் பிரதிதினமும் ஸ்ரீகைலாயகிரியை யடைந்து சிவபிரானைச் சேவை செய்துவந்து புசித்தல் வழக்கமாக நடந்தேறிவருகையில், ஒருநாள் வெள்ளிமலையில் இந்திராதி இமையவர் சூரியன்முதலிய கோள்கள் அட்டவசுக்கள் துவாதசாதித்தர் நக்ஷத்திரங்கள் நவசித்தர்கள் சப்தவிருடியர் கருடகாந்தர்வாதி அட்டாதசகணங்கள் திசைமுகன் திருமால் முதலாயினோர் நெருங்கிச் சிரமேற் கரங்குவித்து சிவநாமங்களைச் சாற்றி ஆனந்தக்கண்ணீர் துளித்துப் பரவசராய் நிற்பவும் பல்வ

கை வாச்சிய முழக்கவும் தும்புரு நாரத ரிசைபாடவும் திருநந்திதேவா மத்தள வொலிசெய்யவும் வாணன் குடமுழவிசைக்கவும் இறைவா திருநடஞ் செய்திருத தலின், அதனைக்கண்ட இராவணன் தனது இருபதுகண்களிலும் அருவியாறுகள் போல ஆனந்தபாட்பஞ் சொரிந்து நெடுநேரந் தெரிசித்துக்கொண்டிருந்துவிட்ட னன். இறைவர் நடன முடிந்தபின ஒருவாறு மனதைத் திருப்பித தனதுணாய டைந்தனன். அப்பொழுது அவனுடனேணும் இயல்புடைய தாய் பசிமிக்கு "மக னே! அச்சிவதரிசனம் இவவிலங்கையிலேயேயிருப்பின் நலம்' எனநவில, "அன னையே! அவவாறே யாகுக" எனக் கூறி, வெள்ளிமலையை யடைந்து ஆண்டுள்ள ஓர் பெருத்த சுனையிலிறங்கித் தனது இருபதுதோளகளாலும் ஒருகாலததுமசை யாத அம்மலையை யெடுக்கும்படி கருதியசைக்கினன. இறைவாபாலிருந்த இமய வல்லி "இஃதென்" என, சிவபிரான தமது சேவடியின திருவிரலமுனையை நில மிசை யூன்ற அவ்வசலம் அநேககோடியோசனை பூமியி லழுந்தியது. அமமுழை யிலகப்பட்ட அரக்கபிரான அநேககாலம் அரவாபரணனைச் சாமகீதத்தால் துதி செய்ய இறைவர் உளமகிழ்ந்து அவனை வருவித்து "உனது வேட்கையை யுரை த்தி" என, அரக்கன் "அணணலே! இக்கயிலை இலங்கையிலிருக்கவேண்டும்" எனப் பிரார்த்திக்க, ஈசன் ஓர் சிவலிங்கத்தைப் பிரசாதித்து, "இதைத் தரிசிப் பின் இக்கயிலாயதரிசன பலன் கிடைக்கும். ஆயினும இதனை எவ்விடத்தில் எழு ந்தருளச் செய்கினறனையோ அவ்விடத்திலேயே இஃது வேரூன்றிவிடும வல்லப முடையது" எனவும் விளம்பி விடுத்தனர்.

இராவணன் அச்சிவலிங்கத்தைப் பெற்றுத் தென்புலமாகத் திரும்பிச்செ ல்லுகையில் இவன் இச்சிவலிங்கததை இலங்கைக்குக் கொண்டுபோகாமல் தடை செய்யவேண்டுமென்று மனங்கொண்ட வானவர் வருணபகவானல் அவன வயி ற்றை நிரப்பிச் சலஸ்பரிசம் செய்யவேண்டிய சமயமாகச் செய்தனா. அதனல் அவன அச்சிவலிங்கப் பெருமானை நிலமிசை வைக்கமாட்டாதவனுய் அருகே யா வரடைவர் என்று நாற்றிசையும் நோக்கி நின்றனன். அதுசமையம் அமரர் வேண் டுகோளின்படி ஐங்கரக்குரிசில் ஆண்டோர் அந்தணர்வடிவங்கொண்டு அருகணை ய அதுகண்ட அரக்கன் "அந்தணு! இதனைச் சிறிது தாஙகுக. யான் வருணபா தையை நீக்கிப் பெறுகின்றேன்" எனறும், "யான இராவணன்! இலஙகாதிபதி! தப்பையேல் நின்னைக் கோறல் புரிவேன்" என்றும் பயமுறுத்திக் கூறினன். மாணிடவடி வேற்றிருக்கும் யானைமுகப் பெருமான "யான் பெருங்காரியமாகச் செல்கின்றேன். உமது சொல்லைத தடுக்கமுடியாமல் இதனைத தாஙகுகினறேன். உம்முடைய பெயரை மூன்றுமுறை கூறி யழையுமுன் இதனை யெனனிடமிரு ந்து மீண்டும் பெறீராகில மேதினிமேல் வைதது நடப்பேன" எனறிசைதது ஏற்றுக்கொண்டனர். அதே சாலுமெனறு களிதுளும்பிய கார்வண்ணன் ஜலஞ் செய்யும்படி உட்காருமுன் 'இராவணு!' என்றோரதரமும், உட்கார்ந்தவுடன் 'இ ராவணு' என்று மறுதரமும், உடனே 'இராவணு' என மூன்ருந்தரமுங் கூறி மு ன்னேன் தன் தந்தையின் பிரசாதமாகிய சிவலிஙகத்தைத் தரைமிசை வைத்து நடந்தனர். இராவணன் கடுங்கோபங்கொண்டு அப்பாதையை நீக்கி நீரில்மூழ்கிச் சிவலிங்கத்தையெடுக்க அது வராமையின் தன் முழு வலிமையோடு அதனை யீர்

க்க அது பசுவின காதுபோற் குழைந்துவிட்டது. அதனல் கோபாக்கிரசித்தங் கொண்டு பாரபபனவடிவோடு படாகதுசெல்லும் விநாயகபபெருமானை வழிமறுத் துவைய, கணேசபபெருமான் கோபங்கொணடாாபோனறு அவனைப் பனமுடை பந்துபோலத் தூக்கியெறிந்து அவன வலியை மாய்ததுத் தனது வடிவத்தைக்கா ட்டினர். அச்சமெயதிய இராவணன் தனது ஒருபது சிரததிலும் இருபது கரஙக ளால் இடிமுழக்கம்போல் விணணுலகமும் வெடிபடக் குட்டிக்கொண்டு "விபா ரே! வெகுளிகொள்ளவேணடாம" என்று திருவடியில்வீழ்ந்து நமஸ்கரித்தனன். விநாயகா தமதிச்சையின்படி சென்றனா. சிவலிங்கம் இலஙகைசேராமல் தடை யுற்றது. இராவணன அவ்விலிங்கத்திற்கு ஆலயமுதலியன ஆக்குவித்து அருச்ச னைசெய்து போவாறுயினன். அக்குறி பசுவின் காதுபோற் குழைந்தமையின் அந்தஸ்தலததிற்குக கோகானமெனனும் பெயரெய்தியது (கோ=பசு; கா்ணம்= காது.) அவவிலிஙகம் பெயாக்கமுடியாமல் அதிகவலியுற்றிருத்தலின மஹாபலலி ஙகமெனனும் காரணப்பெயருமுற்றது. என்பதாம். (சுக)

இருள்படு சோலையுடுத்தவுச் சீனி நகர்மகா காளநல் விலிங்கம்
பிரணவ லிஙக முறைவதன் கீழ்பா லமர்ந்தது பிறங்குநீர்க் கங்கைப்
புரிசடை யோகங் தேசசுர விலிஙகம் புட்கர தீர்த்தத்தி ஞேடு
மருள்கொழித் தெழுமச் சோதர வாவி யதன்வட புலத்தமர்ந் ததுவே.

(இ ள்.) இருண்மயமாகிய சோலைசூழ்ந்திருக்கும் உச்சினிநகரத்திலிருந்த நல்ல மகாகாளேசலிங்கம (பிரணவலிங்கமாகிய) ஓஙகாரேசலிங்கம் வீற்றிருக் குமிடத்திற்கு கீழ்த்திசையிலே யிருக்கினறது. விளங்குகின்ற நீர்மயமாகிய கங் கையை யணிநத புரிவாகிய சடையையுடைய யோகந்தேச்சுரலிங்கமானது புஷ்கரதீர்த்ததுடனே, கிருபைசொரிந்து எழுகின்ற அச்சோதர தீர்த்தத்தின் வடபக்கலில் வீற்றிருக்கின்றது. எ-று. (சுஉ)

நெடுநில மாட மிருசுடர் தடுக்குஞ்சீகரில்சீ ரட்டகா தெசத்திற்
கடவுளர் புகழ்நா கேச்சுர முக்கட் கடவுடன் வடபுலத் துறைந்த[கன்று
தடியவாக் கருள்கூா மகோறகடேச் சுரம வாளணிமருட் கோடம்விட் ட
விடுசுடர் பரப்பி விளங்குறு காமேச் சுரன்வட பாலின்மே வியதால.

(இ ள்.) மிகுதியாகிய சந்திரிகையை வீசுகினற மாளிகைகள் (சூரியசந்தி ராகளாகிய) இருசுடாகளைத்தடுக்கினற சமானமில்லாத சீர்த்தியையுடைய அட் டகாதேசததிலுளள தேவர்கள் புகழ்நதுபேசும நாகேச்சுரலிங்கமானது திரி லோசனலிஙகபபெருமானது வடதிசையில எழுநதருளியுள்ளது. பக்தஜனங்க ட்குத் திருவருள் பாலிக்கினற மகோற்கடேச்சுரலிஙகமானது, ஒள்ளிய ... கையுடைய மருட்கோடமென்னும் ஸ்தலத்தைவிட்டு நீங்கி (உஜ்ஜயினிநகரத்தி) எறிகின்ற கிரணஙகளைப் பரவச்செய்து பிரகாசிக்கின்ற காமேச்சுரலிஙகத்தி... வடதிசையில் அமர்ந்திருக்கின்றது. எ-று. (சுங)

மழைதவழ் குடுமிப் புரிசைசூழ் கிடந்த விச்சுவ தானத்து வயங்கு [நாள்
மொழுகொளி விமலேச் சுரஞ்சிவ லோகத் துயர்வட புலத்துறைந் ததுவே

விழவறு வீதி சூழ்மகேந் திரத்தி லருள்மகா விரதநல் லிலிங்கந
தொழுதகு கங்கை தரித்தருள் கங்கேசச் சுரனிடத் தினிதமாந் ததுவே.

(இ - ள்.) மேகங்கள் ஊர்ந்து செல்கின்ற உச்சியையுடைய மதில் சூழ்ந்து விளங்கும் விப்ரவதானமென்னும் ஸ்தலத்தில் விளங்கிய ஒளிசொரியும் விமலேசுரலிங்கமானது (காசிப்பட்டணத்தில்) சிவலோகலிங்கத்தின் உயாவாகிய வடபக்கத்தில் மேவியிருக்கின்றது. நித்தியோற்சவக்காட்சிகள் நீங்காத மாட வீதிகள் சூழ்ந்த மகேந்திரமென்னும் ஸ்தலத்தில் கிருபைபுரியும் நல்ல மகாவிரதலிங்கமானது,பணியத்தக்க கங்காநதியைச் சூடியருளிய கங்கேச்சுரலிங்கப்பெருமானுக்கு அருகே இனிதாகஅமர்ந்திருக்கின்றது. எ-று. (சுஞ)

அரியயன் முதல தேவர்கள் றேத்த வருண்மகா தேவநல லிலிங்கம
விரிதிரைபுரட்டு மிரணியகருப்பத் தீரத்ததின் மேற்றிசைவதிந்த [ணை
தூவுநீர த திரைதா யொழுகுசீர தீரதத்த் துறைந்திடும பிதாமகேச் சுரமீ
டிருமையு மடியர்க் கருள்புரி தருமேச் சுரனுழை யிருந்ததை யன்றே.

(இ - ள்.) திருமால் திசைமுகன் முதலிய தேவர்கள் கின்று துதிசெய்யக் கருணைசெய்யும் நல்ல மகாதேவலிங்கமானது பரந்த அலைகளைவீசுகின்ற இரணியகருப்ப தீர்த்தத்திற்கு மேற்றிசையில் வீற்றிருக்கின்றது. வலிதங்கிய நீரமயமாகிய அலைகளால் தாவி யோடுகின்ற சிறப்பை யுடைய (ஹிரண்யகருப்ப) தீர்த்தத்தில் வாழ்கின்ற பிதாமகேச்சுரலிங்கமானது இவவிடத்தில் இம்மை மறுமைப் பலன்களையும் அடியவர்கட்கு அநுக்கிரகிக்கும் தருமேச்சுர லிங்கத்தின சமீபத்தில் விளங்குகின்றது. எ-று. (சுடு)

தண்புனற் பிரயாகை சூலடங் கேசம் பிரயாகைதன் னொடுதிருவா
ணமண்டப மதன்மேற் றிசையினிற் சுடரின் வயங்குபொற் கோயிலின்
மருங்கு, கண்கவர் மாட மறுகுசூழ் சங்கு கன்னத்தில மகாவொளி யிலிங்கம,வெணபிறைக் கண்ணி புனையருட் பிணுகேச் சுரத்ததன் குணக்கின்ம வியதால.

(இ - ள்.) தட்பமாகிய நீரையுடைய பிரயாகையிலுள்ள சூலடங்கேசலிங்கமானது பிரயாகைத்தீர்த்ததுடனே, திருவாணமண்டபத்தின் மேற்றிசையிலே சுடர்மயமாகவிளங்கும் அழகிய திருக்கோயிலினருகே (கண்டோரது) கண்களைக் கிரகிக்கத்தக்க மாளிகைகள் பொருந்திய வீதிகளாற் சூழப்பெறற சங்குகன்ன க்ஷேத்திரத்தில் மகாவொளியோடுகூடிய சிவலிங்கமாகிய வெள்ளிய சந்திரனைச் சிரோமாலையாகவணிந்த கிருபாமூர்த்தியாகிய பினாகேச்சுரலிங்கப்பெருமானது திருச்சந்நிதானத்தின கிழக்கேயுள்ளது. எ-று. (சுசு)

அலை பொரு தலைக்கு முருத்திர கோடி தீர்த்தத்தி னருண்மகா யோகீச்
சுரமெனு மிலிங்கம் விளங்குபா ருவதீச் சுரத்துழை யுறைந்தது தேவர்
பரிவுறு மேகாம பரதலத் தமர்ந்த கிருத்திவா கேச்சுரா பரிவிற்
கரியுரி போர்த்து விளங்குறு மூக்கட்க ரும்புறை தலத்தின்வை கியதால்.

(இ - ள்.) அலைகள் (ஒன்றோடொன்று) மோதியலைக்கின்ற உருத்திரகோடி தீர்த்தத்திலே அருள்புரியும் மகாயோகீச்சுர மென்று சொல்லும் சிவலிங்கமா

னது பிரகாசிக்கின்ற பார்வதீசலிங்கத்தினருகே வீற்றிருக்கின்றது. அமரர் ஆசையுறுகின்ற ஏகாம்பரதலத்திற் பொருந்திய கிருத்திவாசேச லிங்கமானது ஆசையுடன் ஆனைத்தோலையணிந்து விளங்கும் திரிநேத்திரங்களையுடைய கரும்பு போன்ற பெருமான் வீற்றிருக்கும (மணிகாணேச) ஸ்தலத்தில எழுந்தருளியுள்ளது. எ-று. (சுஎ)

இருள்படப் பொதுளு மிளமரச் சோலை யிடையறு துயாமதங் கேசத்
தருள்புரி சண்டேச சுரனியற பாச பாணியாங் கணத்துழை யமரும
பொருவறு காளாஞ் சரதனுறை நீல கண்டமா லிங்கமால போற்றக[றே.
கருணைகூர் கூட தந்தனென் றுரைக்குங் கணத்தரு குறைந்ததை யன்

(இ-ள்.) இருள்மயமாகப் பொருந்திய இளமரங்களை யுடைய சோலைகள் எக்காலமும் வளர்கின்ற மதங்கேசஸ்தலததில் (அடியார்கட்கு) கிருபைசெய்கின்ற சண்டேச்சுரலிங்கமானது பாசபாணியாகிய கணத்திடையே இருக்கின்றது. சமானமற்ற காளாஞ்சரமெனனும் க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் நீலகண்டேசமாகிய பெருமை பொருந்திய சிவலிங்கக்குறியானது, கிருபைமிகுந்த கூடதந்தனென்று சொல்லுங கணத்தருகே திருமால் (முதலிய தேவர்) பரவும்படி பொருந்தியுள்ளது. எ-று. (சுஅ)

அசைநடைத் தென்றல முருகுயிர்த் துலவு மகன்பணைக் காசுமீ ர
த்தின், விசையங் லிங்க முயாகிரி சண்டை யூத்தரேச் சுரனென விள
ங்கி, யிசைபடு மிலிங்க மிலகுகூர் மாண்ட கணததுழை யிருந்தமுக் கண
னும், வசையிலபேரி லிங்கா திரிசந்த விட் டருள்கூர் முக்கண னுழைவதி
ந் ததுவே.

(இ-ள்.) அசைந்துசெல்லும் நடையையுடைய தென்றற்காற்றானது வாசனையைச்சிந்தி யுலாவுகின்ற விசாலமாகிய வயல்கள் பொருந்திய காசுமீரத் தலத்தில் நல்ல விசயலிங்கமானது உயர்வாகிய சண்டகிரியில் ஊாததரேச்சுரனென்னும் பெயரோடுவிளஙகிக் கீர்த்திபொருந்திய சிவலிஙகமமைநத கூர்மாண்டகணத்தில் இருக்கின்ற குற்றமில்லாத பெரிய இலிஙகமாகிய திரிசந்தவீட்டேச மென்னும் அருள்மிகுந்த சிவலிங்கத்தருகே யமர்ந்துள்ளது. எ-று. (சுகூ)

பொருப்புடுத் தன்ன புரிசைசூழ் மண்ட லேச்சுர தலத்தினிற் பொலிந்த
வெருட்சிதீ ரகண்ட லிங்கமா முண்டி விநாயகர்க் குத்தரத் தமாநத
திரைத்தெழு நசாக தணடமா தீாத்தத தினிதுறைந் தருள்கபர்த் தீசன்
றிருத்தகு பசாசு மோசன வாவி யகன்கரை சிறந்திருந் திடுமால.

(இ-ள்.) மலையை ஆடையாக அணிந்தாற்போன்ற மதில் சூழ்ந்த மண்டலேச்சுர தலத்தில் அழகமைந்த மயக்க மொழிக்கும் அகண்டலிஙகமானது சிறப்பமைந்த முண்டிவிநாயகருக்கு வடதிசையிலே வீற்றிருக்கின்றது. அலைகொணடெழுகின்ற நசாகதண்டமென்னும் பெயரிய பெரியதீர்த்தத்தில் எழுந்தருளியிருந்து அருள்பாலிக்கும் கபர்த்தீசலிங்கமானது நன்மைபொருந்திய பசாசமோசன தீாத்தத்தின் விசாலமாகிய கரையிற் சிறப்புற்றிருக்கின்றது. எ-று.

முன்னொரு காலத்தில் வேதியனொருவன் தன் மனைவிக்குப் பசாசுபற்றியிருந்தமையின், அதனைத் தீர்க்கும்படி அதர்வணவேதத்தை அப்பியசித்த அந்த

ணர் குழாங்களிற்சென்று அவர்சொற்படி நடந்தும், அரியவிரதாதிகளை யநுஷ்டித்தும், அநந்தம் புண்ணியதீர்த்தங்களில் மூழ்கியும், தலயாத்திரை செய்தும் அது விலகாமல்துன்புற்றுக் கடைசியாய்க் காசிநகரமடைந்து அங்கேயே வாசஞ் செய்துகொண்டிருக்கையில் ஒருநாள் அவன் தன் மனைவியோடு பண்டைய புண்ணிய வசத்தால் தற்செயலாக அதில் மூழ்கும்படி நேர்ந்தது. அந்தக்கணமே அவனைப்பற்றியிருந்த பசாசமகன்று அவன் தனது சுயவறிவுற்று நடந்த விருத்தாந்தங்களை யாதியந்தமாகக் கணவனசொலலத் தெரிந்துகொண்டு அவனைத் தமதூருக்குச்செல்லும்படி விடைகேட்க அப்பார்ப்பனன சிறிதுகாலம் ஆங்கிருந்து பினனர் மனைவியோடு தனது நகர்சார்ந்து புதல்வரைப்பெற்றுவாழ்ந்திருந்தனன். அதில் மூழ்கினோர்க்குப் பசாசுநீங்கியதனால் அத்தீர்த்தம் பசாசமோசனவாவியெனப் பெயரெய்தியது. என்பதாம். (௭0)

துளங்கொளி பரப்பு மாம்பிரா தக்கேத் திரத்துறை குக்கமேச் சுரன்றான், வளங்கெழு விகடத் துடனருகுறையும் வயங்குமம போதன பாங்கி, னுளங்கவர் மனுகேச் சுரத்துறை சயந்தி லிங்கமுற் றதுதிருச் சயிலம, விளங்கொளித் திரிபுராந்தகம விசுவேச் சுரற்குமேற் றிசையின்மேவியதால்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற ஒளியைப்பரவச்செய்யும ஆம்பிராதக்ஷேத்திரத்தில் வசிக்கும் குக்குமேச்சுரலிங்கமானது, வளப்பமிருந்த விகடாபீடத்துடன் சமீபததில் வீற்றிருக்கின்ற விளக்கம்பொருந்திய ஞானமயமாக மனதைக்கிரகிக்கும் மனுகேச்சுரததில் பொருந்திய சயந்தீசலிங்கத்தைச் சார்ந்துளளது, ஸ்ரீசைலத்தலததிலுள்ள திரிபுராந்தகமானது விஸ்வேச்சுரப் பெருமானுக்கு மேலைத்திசையில் அமர்ந்துள்ளது. எ-று. (௭௧)

குக்குடேச் சுரமவான்றொடுமதிட் குடுமிச் சவுமிய தானம் விட்டிலகு, வக்கிர துண்ட கணத்தருகுறையும் வயங்குசா லேச்சுரத் தகன்று, செக்கரவான் பூதத பச்சிளங் குழவித் திங்களஞ் சடைததிரி சூலி, புககுயர் கூட தந்தவைங் கரத்தோ னிருநதுழிப பொலிந்துறை கிடுமால.

(இ-ள்.) குக்குடேச்சுரலிங்கமானதுஆகாயமளாவிய சிகரத்தையுடைய மதில்களமைநத சவுமியதானததை நீஙகி, பிரகாசிக்கினற வக்கிர துண்ட கணத்தருகே வசிககின்றது. விளங்குகின்ற சாலேச்சுரத்தைவிட்டு, செவ்வானத்திற் றோனறிய பசிய இளம்பிறைச்சந்திரனை யணிந்த அழகிய சடையையுடைய திரிசூலேசலிங்கமானது மேன்மைவாய்ந்த கூடதந்தகணேசர் இருப்பிடததிற் கீர்த்தியோடு வீற்றிருக்கும். எ-று. (௭௨)

தாங்கரு நீத்தந் தருபுன லருவி தழங்குவா மேச்சுரத் தமர்ந்த
வோங்கொளிச் சேட தேவனோர் தந்த கணபதிக் குத்தரத் துறையும்
பூங்கதிர்க் கழனி பயிலரிச் சந்திர கேத்திரம பொலிநதக ரேசம்
நீங்கறு மரிச்சந் திரன்றன்முன் னமர ரேத்திடச் சிறந்துவை கியதால்.

(இ-ள்.) தாங்குதற்கரிய வெள்ளத்தை யுதவுகின்ற நீரருவியானது ஒலிக்கின்ற வாமேச்சுரதலத்திற் பொருந்திய உயர்கின்ற ஒளியையுடைய சேடதேவ

லிங்கம் ஒற்றைக் கொம்பை யுடைய (ஏகதந்த) விநாயகருக்கு வடதிசையில் வீற்றிருக்கின்றது. அழகிய கிரணங்களோடு கூடிய கழனியிலுள்ள அரிச்சந்திரக்ஷேத்திரத்திற் றங்கிய நரேசலிங்கமானது குற்றமற்ற அரிச்சந்திரேச லிங்கத்தின முன்னே தேவர்கள் தோத்திரஞ்செய்யும்படி சிறப்புற்று வீற்றிருக்கின்றது எ-று.

வலஞ்சுழித் தொழுகு புனலுறுக் கழனி மத்திய மகதலத் தமர்ந்த
நலங்கெழு சதுர்வே தேச்சுர மருள்கூர் தலேச்சுர நணுமெச் சேச
மலங்கிலைச் சூல மேந்துமா தேவ னருகிருந தனசொலா யிரங்கண
ணிலிங்கமுஞ்சயிலேச் சுரந் தனிற சுயமாக்கதமொழிந்திருந்ததுமாதோ.

(இ-ள்.) வலஞ்சுழிகள்கொண்டு பாய்கின்ற நீர்ப்பெருக்கம் நீங்காத வயல்களையுடைய மத்தியமகஸ்தலத்திலே பொருந்திய நன்மைமிகுந்த சதுர்வேதேச்சரலிங்கமும், இருமைமிகுந்த தலேச்சுரத்திற் பொருந்திய யஜ்ஞேசலிங்கமும், பிரகாசிக்கின்ற அச்சவடிவாகிய சூலப்படை தாங்கிய மாதேவலிங்கத்தின் சமீபத்திலிருக்கின்றன. (புகழ்ந்து) சொல்லுகின்ற ஆயிரங்கணணிலிங்கமும் சயிலேச்சுரத்திலே சுயம்புவாக உளியிடுதலொழிந்திருக்கின்றது. எ-று.

சுயமா எனினும் கதமொழிந்து எனினும் ஒன்றே. க்ஷதம்=உளியிடல்.

அரிதகந் தரிபீ சேச்சுர மந்த ணேச்சுர னருகினி லமரு
முருவமூ விலைவே லுருத்திரேச் சுரன்வா ழுருத்திர மகாபல தீர்த்தந்
திரிபுரேச் சுரன்பால வைகிய விடபே சத்துறை புகழிட பேசம
வரியர வசைத்த புரிசடை வரணேச் சுரனுழை வைகிய மாதோ.

(இ-ள்.) அரிதகத்தைப் பீசமாகத்தரித்த பீசேச்சரலிங்கமானது அந்தணேச்சரலிங்கத்தின் சமீபத்திற் பொருந்தியது. அழகுவாய்ந்த முத்தலைவேலாகிய சூலத்தையேந்திய உருத்திரேச்சுரலிங்கமும், வாழ்வளிக்கும் மகாபலம்பொருந்திய உருத்திரதீர்த்தமும் திரிபுரேச்சுரலிங்கப்பெருமானருகேவிளங்குகின்றன. இடபேசத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் கீர்த்தியுடைய இடபேசலிங்கமானது கீற்றுகளையுடைய சர்ப்பாபரணமணிந்த புரிந்த சடையையுடைய வரணேச்சுரலிங்கப்பெருமானருகே வாழ்கின்றது. எ-று.

"அரிதகததரி பீசேச்சுரம்" என்றும் "அரிதகத்தடி பீசேச்சுரம்" என்றும் "பீதேச்சுரம" எனறும் பாடபேதங்கள் உண்டு. அரிதகம்=பொன். ஈண்டு வடநூ லிலக்கணப்படி கப்ரத்தியம்பெற்றது. இது கருத்துப்பற்றியே "ஹிரண்யபீஜாயநம:" என மந்த்ரசாஸ்திரமுங் கூறும். பீதேச்சுரமெனப பாடமாயின பிதேச்சுரமென்பதன நீட்டல் விகார மென்க. (எ௫)

அஞ்றபுனற் றுறைதோ றளிவிருந் தூட்டு பொய்கைசூழ்ந் தணிகொள்கே தாரத், துறையுமீ சானேச் சுரன்பிர கலாத கேசவ ருற்றுழி யுறையு, மறுகுதோ றெழுதா மறைகிடக் தொலிக்கும் வயிரவ கேத்திரத் தமர்ந்த, திறல்கொள்சங் கார வயிரவன் பரவ விநாயகன் றன்னுழைச் சேரும்.

(இ-ள்.) சத்திக்கின்ற நீர்த்துறைகளிலெல்லாம் வண்டுகளுக்கு விருந்தூண்பிக்கின்ற தடாகங்கள் சூழ்ந்து அழகுபொருந்திய கேதாரஸ்தலத்திற் பொருந்

திய ஈசாநேசலிங்கமானது பிரகலாதகேசவர் இருக்குமிடத்தில் தங்கியது. வீதிகளிலெல்லாம் எழுதாக்கிளவியாகிய வேதமானது இருந்து ஒலிக்கின்ற வயிரவக்ஷேத்திரத்திற் பொருந்திய வல்லமைகொண்ட சங்காரவயிரவப்பெருமான், (யாவரும்) பணியும்படி விநாயகக்கடவுளருகே வீற்றிருப்பர். எ-று.

"பரவ, விநாயகன்", "பருவவிநாயகன்", "(யாவரும்) பரவுவிநாயகன்" எனவும் பாடாந்தரம். (எசு)

கனகலத் துங்கி ரேச்சுர னருக்க விநாயக னிருந்துழி கலக்கும்
பனிமலர்ச் சோலை வத்திரா பகதநிற் பவேச்சுரன வீமசண் டேசன்
றனதிடத் தமரு நறுமலாத் தேவ தாருநல் வனத்ததண் டீசன்
சினவுழு விலைவே லேந்தின னிருக்குந தேகளி விநாயகன் மருங்கே.

(இ-ள்.) கனகலத்து உக்கிரேச்சுரலிங்கப் பெருமான் அருக்கவிநாயகர் இருக்குமிடத்தில் அமர்ந்தனர். குளிர்ந்த மலர்களையுடைய சோலைவாய்ந்த வத்திராபகத்தலத்திலுள்ள பவேச்சுரலிங்கப்பெருமான் வீமசண்டேசனுக்கு அருகே வீற்றிருப்பர். நல்ல வாசனைவாய்ந்த மலர்களையுடைய தேவதாரு வனத்திலுள்ள தண்டீசலிங்கப்பெருமான் கோபிக்கின்ற சூலப்படைதாங்கி தேகளிவிநாயகன் சமீபத்தில் இருக்கின்றனர். எ-று.

கனகலத்து என்பதற்கு விலையுயர்ந்த ஆபரணமணிந்த என்றுவது, கனகலமென்னும் தலத்திலுள்ள என்றுவது பொருள்கொள்க. (எஎ)

பொருவில்பத் திரகன் னேச்சுரன் பத்திர கன்னனன் மடுவொடும்
போதா, வருள்செய்யுந் தண்ட கணபதி கோயி லதன்கிழக் கமர்ந்திடு
மோங்கு, கரைபொரு தலைக்கும் புனலுறு வியம லிங்கத்திற் காலலிங்
கேசன், விரிகதிர் பரப்பி விளங்குசந் திரேசன் கோயிலின் குணக்குவீற்
றிருக்கும்.

(இ-ள்.) ஒப்பில்லாத பத்திரகன்னேச்சுர லிங்கப் பெருமான் நல்ல பத்திரகன்னமடுவுடன்வந்து திருவைபுரிகின்ற தண்டகணபதியின் திருச்சந்நிதானத்திற்குக் கீழைத்திசையிற் பொருந்தியிருப்பர். உயர்வாகிய கரையை மோதியலைக்கின்ற நீரானது நீங்காத இயமலிங்கத்திலே காலலிங்கேசன் விரிந்த கிரணங்களைப் பரவச்செய்து விளங்குகின்ற சந்திரேசலிங்கப்பெருமானது திருக்கோயிலுக்குக் கிழக்கே எழுந்தருளியிருப்பர். எ-று. (எஅ)

தாற்றிளங் கதலிப் படப்பைசூழ் வேலித் தண்வய லுடுத்தநே பாளத்
தூற்றிருந் தொழுகு குருதிமூ விலைவேற் பசுபதீ சனுமவ ணுறையுஞ்
சேற்றிதழ்க் கமல மலர்க்கர வீர தீர்த்தத்தி லுறைகபா லீசன்
பாற்றிறை புரட்டு பாலமோ சனத்தி னகன்கரைப் பரிவொடு மமரும்.

(இ-ள்.) குலைகளையுடைய இளவாழைச் சோலையைச் சூழ்ந்த வேலியாகக்கொண்ட தட்பமாகிய வயலையுடுத்த நேபாளத்திலுள்ள, ஊற்றெடுத்துப் பெருகும் உதிரந்தங்கிய சூலாயுதமேந்திய பசுபதீசப்பெருமானும் ஆண்டமர்ந்திருப்பர். சேற்றிற்பொருந்திய இதழ்களையுடைய தாமரை மலர்கள் பொருந்திய கரவீரதீர்

த்தத்தில்வீற்றிருந்த கபாலீசப்பெருமான் வெள்ளிய அலைகளைவீசும் பாலமோசன தீர்த்தத்தின் அகன்ற கரையில் ஆசையோடு அமர்ந்திருப்பர். எ-று.

கபாலமோசனம் என்பது பாலமோசனமென முதற்குறைந்துவந்தது. ()

கன்னலங் காடு படர்வய லாரோ கணத்தில குளிச்சர னுடையு
மன்னுமூர் தவனு மேத்தருங் கங்கா சாகரத் தருளம ரீசன
றன்னுளத் துவகை மீக்கொள விலங்கு சதத்கோ தாவிரி புறைபு
மன்னுமந் நதியி னுறைதரும வீமேச் சரமவண மகிழ்ந்துவை கியதால்.

(இ-ள்.) அழகிய கருப்பங்காடுபடர்ந்த வயல்களையுடைய ஆரோகணத்து இலுளீச்சப்பெருமானும், அன்னவாகனத்தையுடைய பிரமதேவனும் துதித்தாக ரிய கங்காசாகரத்திற் கடாக்ஷஞ்செய்யும் அமரீசப்பெருமானும், தமது மனதில் களிதுளும்பும்படி விளங்குகின்ற சததகோதாவிரியிலே வீற்றிருக்கின்றனர். நிலை பெற்ற அந்நதியில் வீற்றிருக்கின்ற வீமேசுரலிங்கமும் அவ்விடத்தில் மகிழ்ந்து வீற்றிருக்கின்றது. எ-று. (௮௦)

மதிமுகந் துடைக்கு மேமகூ டத்தில வாழ்விரு பாக்கநல் லிலிங்கம்
பொதியவிழ் மலர்த்தேன் படிபுனற் கங்கா துவாரத்திற புகழிமத் தேச
கதிரொளி மழுங்க வொளிர்கயி லாயத் துறைதரு கணபதி கருங்கார்
முதுகினி னுலவு கந்தமா தனத்தின மொழிவரும புறபவ லிலிங்கம்.

(இ-ள்.) சந்திரமண்டலமளாவிய ஏமகூடபர்வதத்தில் வாழ்கின்ற நல்ல விரூபாக்ஷலிங்கம் - முறுக்கவிழ்ந்த மலர்களிலுள்ள தேன்பொருந்திய நீரை யுடைய கங்காதுவாரத்தில் புகழ்பொருந்திய இமவேசலிங்கம் - சுடரொளி மழுங் கப்பிரகாசிக்கும் ஸ்ரீகைலாயத்திற் பொருந்திய கணபதி - கரியமேகங்கள் முதுகி னமே உலாவுகின்ற கந்தமாதனகிரியில் சொல்லுதற்கரிய புற்பவலிங்கம். எ-று.

இதுமுத லிரண்டு பாடல்கள் ஒருதொடர். (௮௧)

பாதலத் தாட கேச்சுரம விசும்பிற் படரொளித் தாரக லிலிங்க
மேதமில கிராதத் துறைகிரா தேச மிலிங்கமா புரிமகத் தேச
மாதவன றொழுகோ டீசுரத் தினிது வைகிய சேட்டமா லிலிங்கங்
காதலிற சிறந்த வமரா கின றேத்தக கருணையி னுவந்துவை கியதே.

(இ-ள்.) பாதலலோகத்திலேயுள்ள ஆடகேச்சுரலிங்கம்- ஆகாயத்திற் செல்லும் நக்ஷத்திர (பிரதிட்டையாகிய) லிங்கம் - குற்றமில்லாத கிராதத்தலத் தில் வாழும் கிராதேசலிங்கம்-இலிங்கமாபுரியில் வீற்றிருக்கும் மகத்தேசலிங்கம் - விண்டுவினால் பணியப்பெற்ற கோடீச்சுரதலத்தில் இனிதாகவாழ்ந்த சேட்டலிங் கம் - (ஆகிய இவை இக்காசிநகரத்தில்) சிறப்புற்ற தேவர்கள் ஆசையோடு நின்று துதிசெய்ய, கிருபையோடு களிகொண்டு வாழ்ந்திருக்கின்றன. எ-று. (௮௨)

வேறு.

வெள்ளிக் குருத்து விரித்தநிலா முடித்த விரூபாக் கேசனுயர்
வள்ளற் கோயிற் றென்றிசையிற் சுக்கி லேச மதன்வடபா

வெள்ளற் கரிய பேரின்ப முத்தி யருள்தெய் வானீச
முள்ளத் துறைசுக் கிலேச்சுரற்குக் குணபாற் கூபேச் சுரமுறையும்.

(இ-ள்.) வெண்மைநிறந்தங்கிய (கிரணங்களாகிய) கொழுந்துகளைப் பரப்பிய சந்திரனைச் சடையிற்சூடிய விரூபாக்ஷசலிங்கப் பெருமானாகிய உயர்வாகிய வள்ளலது திருக்கோயிலின் தென்றிசையிலே சுக்கிரேசலிங்கமிருக்கின்றது. அதன் வடபுறத்திலே தாழ்வுபடுத்தற் கரிதாகிய பேரின்பமாகிய மோக்ஷத்தை யனுக்கிரகிக்கும் தெய்வானீசலிங்கமும், (அடியாரது) மனதில் வசிக்கும் சுக்கிலேச்சுரலிங்கதிற்குக் கீழ்புறத்திலே கூபேச்சுரலிங்கமும் உள்ளன. எ-று. ()

ஆங்கோர் கூப முளததனி லாடிற் புரவி மகப்பலனுண்
டோங்கு பவனீச் சுரமளகேச் சுரங்கொன் னேச்சு ரமமோசை
தேங்கு மதலேச் சுரமரிகேச் சுரங்கோ னேசஞ் செழுந்திரைநீர்
வாங்கு கடல்வாய் நஞ்சமுண்ட கவேசம யாவு மனனுமால.

(இ-ள்.) அவ்விடததில் ஓர் தீர்த்தமிருக்கின்றது. அதனில் ஸ்நானஞ்செய்தால் அஸ்வமேதயாகப் பலனுண்டாகும. உயாகினற பவனேச்சுரம்-அளகேச்சுரம்-கொன்னேச்சுரம்-கீாததிமிகும் மதலேச்சுரம் அரிகேச்சுரம்-கோனேச்சுரம்-செழுமையாகிய அலைகளையுடைய நீர்மயமான வனைவாகிய (திருப்பாற) கடலிற றேன்றிய ஆலாலத்தைப் புசித்த கவேச்சுரம் (முதலிய) எல்லாம (அவவிடத்திற) பொருந்தியிருக்கின்றன. எ-று. (அச)

அதன்வா யுளதோர் துருவகுண்ட மதனின் வடபால் பிசாசேசம
பிதிரேச் சுரமுன் பிதிர்குண்டந் துருபேச் சுராககுமுனபிறங்கு
மதர்வா ணெடுங்கட் பேதைபுணா வயித்திய நாத னவன்றெனபால்
கதிர்கான் றெழுகு மனோலிங்க முசுகுந் தேசங களித்துறையும.

(இ-ள்.)அவவிடத்தில் ஒப்பறற துருவகுண்டம (என்னும்தீர்த்தம்) இருக்கின்றது. அதற்குவடதிசையில் பிசாசேச்சுரமும்,பிதிரேச்சுரததின்முனனே பிதுர்குண்டமும், துருபேச்சுரததிறகுமுனனே மதாதத ஒளிதங்கிய நெடியகணகளையுடைய உமாதேவிநாயகராகிய வயித்தியநாதலிங்கபபெருமானும் உளா. அதனதென்றிக்கிலே கிரணங்களைவிட்டுப் பிரகாசிக்கின்ற மனோலிங்கம்-முசகுந்தேசலிங்கம்(ஆகிய இவை) சந்தோஷித்திருக்கின்றன. எ-று. (அரு)

பிறவித் துன்பக் கடல்கடததும் பிரிய விரதேச் சுரப்பாங்கர்
விறலவல் வீர பத்திரேசங் கௌதம மேசம விளங்குதென்பா
லறிய வரிய வீரியசிங் கேச மவைமுன் பிரமேசங்
கறைவாழ் மிடற்று முக்கணுடைப் பருச்ச னேசங் கலந்துறையும்.

(இ-ள்.) பிறவியாகிய துன்பக்கடலை யொழிக்கின்ற பிரியவிரதேச்சுரத்தருகிலேயே மிக்கவலிதங்கிய வீரபத்திரேச்சுரமும் கௌதமேச்சுரமுமிருக்கின்றன. விளங்குகின்ற தென்றிசையிலேஅறிதற்கரிதாகிய வீரியசிங்கேச்சுரமும்அவற்றின் முன்னே பிரமேச்சுரமும், நீலகண்டத்தையும் திரிநேத்திரங்களையுமுடைய பருச்சனேச்சுரமும்(ஆகிய இவை) நெருங்கியிருக்கின்றன. எ-று. (அசு)

பரிச்ச னேச னுறைந்ததன்கீழ்ப் பாலின் குடக்கேச் சுரம்பாங்கர்
விருப்பி னுறையும் விசாலாக்ஷி விசாலா க்ஷேச னவர்தென்பாற்
பொருப்பின் வீங்கு பணைநெடுந்தோட் சராசந் தேசன் புகல்தென்பால்
கருப்ப வினை தீர்த் தருளிரணி யாக்கே சன்கா தலினுறையும்.

(இ-ள்.) பருச்சனேசலிங்கம் வீற்றிருப்பதன் கீழ்த்திசையில் குடக்கேச்சுரமும், அதனருகே விஸாலாக்ஷியம்மையாரும் விஸாலாக்ஷேச லிங்கப்பெருமானும் இருப்பர். அவர்கட்குத் தென்புறத்திலே மலைபோற்பூரித்த கிளைத்த நெடிய புயங்களையுடைய சராசந்தேசலிங்கப்பெருமானும், சொல்லிய அதன்றென்றிசையில் பிறவிவினையை யொழித்தருள்செய்யும் இரணியாக்கேசலிங்கப்பெருமானும் ஆசையோடு அமர்வர். எ-று. (அஎ)

அங்கட் கமலத் தயனறியா வாதீச் சுரமற் றதன்மேற்பால்
வெங்கட் களிற்றி னுரிபோர்த்த பகீர தேச மேயதன்முன்
றிங்கள் மவுலித் திலீபேசம் விசுவா வசுவேச் சுரஞ் செயிரில்
பொங்கு புகழ்முண் டேசமவர் தென்பால் விதீசம் புகுந்துறையும்.

(இ-ள்.) அவ்விடத்தில், தாமரைமலரி லுள்ள சதுமுகன் கண் டறியாத ஆதீச்சுரலிங்கமும், அதன் மேற்புறத்தில் கோபக்கண்ணையுடைய யானைத்தோலைப் போர்த்த பகீரதேசலிங்கமும், பொருந்திய அதன் முன்னே சந்திரனைச் சடையிலணிந்த திலீபேசலிங்கமும், விசுவாவசுவேச்சுரலிங்கமும், குற்றமில்லாத புகழ் மிகுந்தமுண்டேசலிங்கமும், அதன் தென்பக்கலில் விதீச்சுரலிங்கமும் இருந்துவாழ்கின்றன. எ-று. (அஅ)

விதீசன் பாங்கர் தசாசுவத மேச முயர்மா தவிதீர்த்தங்
கதிர்கால் புட்ப தெந்தேசந் தென்கீழ்த் திசையிற் காதலினால்
முதுமா தவத்தின் றுறைபடிந்த முனிவ ரமர ரினிதமைத்த
சதுரா னனத்தோ னேத்தரிய விலிங்கங் கோடி சார்ந்துளவால்.

(இ-ள்.) விதீசலிங்கப்பெருமானுக்குப் பக்கலில் தசாசுவதீசலிங்கமும், உயர்வாகிய மாதவிதீர்த்தமும், கிரணங்களைச்சிந்தும் புட்பதந்தேசலிங்கமும், தென்கீழ்த்திசையில் ஆசையோடு முதிர்ந்த பெருந்தவத்தின் துறைகளிற் படிந்த முனிசிரேஷ்டர்களும் தேவர்களும் இனிதாகப் பிரதிட்டைசெய்த, பிரமனால் துதித்தற்கரிய கோடிக்கணக்காகிய சிவலிங்கமூர்த்தங்களும் பொருந்தியுள்ளன. எ-று.()

மைத்த விடவா ளரவணிந்த புட்ப தெந்தேச் சுரன்வடபாற்
சித்தீச் சுரன்பார் புகழுமரிச் சந்த்ரேச் சுரற்குத் திகழ்மேற்பால்
முத்தி வழங்கு நிருதேசன் கிரீச னதனின் மொழிதென்பாற்
றெருத்தா ரிதழி புனைசயமேச் சுரன்சித் திராங்கேச் சுரனுறையும்.

(இ-ள்.) கறுத்தவிடமமைந்த ஒள்ளிய சர்ப்பத்தை (ஆபரணமாகத்) தரித்தபுட்பதந்தேச்சுரனுக்கு வடதிசையில் சித்தீச்சுரலிங்கப்பெருமானும், உலகத்தார் துதிசெய்யும் அரிச்சந்திரேச்சுரற்கு மேற்புறத்தில் மோக்ஷத்தையுதவும் நிருதேசப்பெருமானும், சொல்லிய அவருக்குத் தென்பக்கலில் கிரீசலிங்கப்பெரு

மானும், கொத்தாகிய கொன்றை மலர்மாலையணிந்த சயமேசப்பெருமானும் சித்திராங்கேசப்பெருமானும் வீற்றிருப்பர். எ-று. (௬0)

உரவுக் கறைப்பா வடிக்களிறதி னுரிபோர்த் தருள்சித் திராங்கேசன்
மருவு மதனின் றென்புலத்துக் கோதா கேசன் வளர்தென்பா
லிரவுப் பகல்செய் வெணடிங்கள் வெய்யோன் குலத்தி னியல்வேந்தர்
பரவித் தொழுநீ டொளியிலிங்கங் கோடி மேலும பலவுளவால்.

(இ-ள்.) வலிதங்கிய பரவிய அடியையுடைய யானைததோலை யுடுத்த சித்திராங்கேசப்பெருமான் பொருந்தியதன் தென்பக்கலில் கோதாகேசலிங்கப்பெருமானும், வளர்கின்ற (அதன்) தென்புலத்தில் இராத்திரியைப் பகலாகச்செய்கின்ற வெள்ளிய சந்திரனும் சூரியனுமாகிய (தலைவர்) வம்மிசத்திற் சனித்த அரசர்கள் வணங்கிப் பணிந்த பேரொளிவாய்ந்த சிவலிங்கக்குறிகள் கோடிக்கணக்கிற்கதிகமாக அநந்தமும் அமர்ந்திருக்கின்றன. எ-று. (௬க)

அண்ண லேற்றுக் கொடியுயர்த்த வாசா பூர கன்னேச
நண்ணு மதன்மேற் றிசைக்காந்த மேச நடஞ்செய் மகாதுர்க்கை
மண்ணு மதன்பாற் சங்கேசன் மற்றுஞ் சங்கு கன்னேச
னெண்ணி னதன்மேற் றிசையின்மகா சித்தி வாயி னினிதுறைவார்.

(இ-ள்) பொருந்திய அதன் மேற்றிசையில் பெருமைபொருந்திய இடபக்கொடியை யுயர்த்திப்பிடித்த ஆசாபூரகன்னேசலிங்கமும், அழகிய அதனருகே காந்தமேசலிங்கமும், நடனஞ்செய்கின்ற துர்க்கைமாதேவியும் பொருந்தியிருப்பர். எண்ணிப்பார்க்குமிடத்தில், அதற்கு மேற்றிசையிலுள்ள மகாசித்திவாயிலில் சங்கேசப்பெருமானும் சங்குகன்னேசப்பெருமானும் இனிதாகவீற்றிருப்பர்.

முட்கூ னெயிற்று விடநாக மணிந்த முடிதாழ் சங்குகனன்
பெட்பா லினிது வைகியதன் மேலபால் விளங்கு விதண்டேசன்
கொட்பாம் பிறவி யகற்றுதுவா ரேசன் விறல்வேற் குகனேசன்
புட்பா கனும்போற் றரியதுவா ரேசியிவர்கள் பொருநதினரால்.

(இ-ள்.) கூர்மையாகிய வளைந்த பற்களையுடைய விடம்பொருந்திய சர்ப்பத்தையணிந்த முடியையுடைய சஙகுகன்னேசன் ஆசையோடு இனிதாகவீற்றிருப்பதன் மேற்றிசையில் விளங்குகின்ற விதண்டேசன் - சுழல்கின்றதாகிய பிறவிப்பிணியை யொழிக்கின்ற துவாரேசன் - வலிதங்கிய வேலேந்திய குகனேசன் - விண்டுவும் துதித்தற்கரிய துவாரேசி (ஆகிய) இவர்கள் வீற்றிருப்பர். எ-று.

குடபால் சுரந்து வழிந்தமடிக் குறுந்தாண் மேதி மலர்கறித்து
மடைகீழ்க் கிடந்து மூச்செறியும் வளங்கூர் காசி நகரளிக்குஞ்
சுடர்பூங் கதிர்வேற் கணநாத ரனேக ருளர்தோ மறுமாங்கட்
கடற்பார் புகழு மரீசசன் சாங்க லேசன் கரந்துறையும.

(இ-ள்.) அதன் மேற்றிசையில், சுரந்துவழியும் பால்மடியையும் குறுகிய காலையுமுடைய எருமைகள் மலர்களைக் கடிதது மடைகளிலிருந்து மூச்சுவிடுகின்ற வளப்பமிகுந்த காசிக்ஷேத்திரத்தைக் காக்கும் ஒளிவாய்ந்த அழகிய கிரணங்

களைச்சிந்தும் வேலேந்திய சிவகணத்தலைவர்கள் எண்ணிறந்தவரிருக்கின்றனர். குற்றமற்ற அவவிடத்தில் கடல்சூழ்ந்த உலகத்தார் துதிசெய்யும் மரீசப்பெருமானும் சாகலேசப்பெருமானும் (ஆண்டு) மறைந்து வாழ்கின்றனர். எ-று. (௬௪)

கனக னுக முகிரிடந்த கண்ணன் கமல மலர்பூத்தோ
னினைய வரிய காத்தியாய னேசன் பாங்கர் மகுடேச
னினிதி னுறையு மத்தலையோர் கூப முளதின் புறவாடி
வினைக டீர்க்கு மகுடேசற் றொழுவோர் வேட்ட பலன்பெறுவார்.

(இ-ள்.) இரணியாசுரனது சரீரத்தை நகங்களாற் பிளந்த (நாரசிங்க வடிவுகொண்ட) விஷ்ணு மூர்த்தியும், உந்திக்கமலம் பூத்த பிரமதேவனும் நினைத்தற் கரிதாகிய காத்தியாயனேசப்பெருமானுக்கருகே மகுடேசப்பெருமான் இனிதாக வீற்றிருப்பர். அவவிடத்தில் ஓர் கூபமிருக்கின்றது. அதில் இன்புறும்படிமூழ்கி, தீவினைகளை நீக்கும் மகுடேசப்பெருமானைப் பணிவோர் இச்சித்த பலன்களை யடைவார்கள். எ-று. (௬௫)

அதனின் வடபா லோர்தலமுண் டாங்கு நூறு யிரலிங்கம்
விதியி னுளபொற் சினகரமோ ரைந்துண் டாங்கு வீற்றிருந்து [மூக்
மதர்வே லுண்கட் பூங்கொடியாய் தொழில்மூன் றியல்வான் வழங்குவ
கதிர்கா லிலிங்க மோரொருவ ரமைத்த வொன்றே கழறினமால்.

(இ-ள்.) அதற்குவடதிசையிலே ஓர் தலமிருக்கின்றது. அவ்விடத்தில் நூறுயிரலிங்கங்கள் முறையோடிருக்கின்றன. அழகிய கோயில்கள் ஐந்து இருக்கின்றன. மதர்த்த வேல்போன்ற கண்ணையுடைய பூங்கொடிபோன்ற உமையே! அவ்விடத்தில் எழுந்தருளியிருந்து, (சிருட்டி திதி சங்காரமாகிய) முத்தொழில் களையும் நடக்கும்படி முறையே அநுக்கிரகஞ்செய்யும் ஒளி வீசுகின்ற சிவலிங்கக்குறிகள் ஒவவொருவர் பிரதிட்டை செய்த ஒவவொனறே கூறினோம் (என்று சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளினர்). எ-று.

ஒவ்வொருவ ரமைத்த வொன்றே என்பதனால் எல்லாரது எல்லாப்பிரதிஷ்டையையும் கூறாமல், சிலர் செய்த ஒவ்வொரு பிரதிஷ்டையையே யுரைத்தோமென்பதாம் (௬௬)

இன்னு மாங்குப் பலகோடி யிலிங்க முளவித் துணையிலிங்க
மன்னு கூப மணிக்குண்ட மின்ன வென்ன வகுத்தெமமால்
பன்னியு ரைப்ப தரிதுபசும் பாரரைக் கமுகின் மிடறொடியக்
கன்னிப் பருக்கண் வாரா லுகளுங் காசி யிலிங்க வுருவாமால்

(இ-ள்.) இன்னு மவ்விடத்திற் பலகோடி சிவலிங்கக்குறிகளிருக்கின்றன. இவ்வளவு சிவலிங்கங்களும், நிலைபெற்ற கூபங்களும், அழகிய தடாகங்களும், (ஆகிய தீர்த்தங்கள்) இவவளவு இவவளவென்று கணக்கிட்டு எம்மாலே எடுத்துச்சொல்வ தருமை. பருத்த பசிய அடியையுடைய பாக்குமரத்தின் கழுத் தொடியும்படி இளமைதங்கிய பருத்த கண்களமைந்த வரால்மீன்கள் புரளும் காசிநகரமுற்றுமே இலிங்கவடிவமாகும். எ-று. (௬௭)

நீரேற் றணைந்த சூற்கொண்டல் நெடுவாய் திறந்து துளிகவிழ்ப்பப்
போரேற் றெருத்தின வயிர நுகம் பூட்டிக் களம ருழுசேற்றில்
வாரேற் றணிந்த முலைக்கடைசி மடவார் நடுதண் வயற்காசி
யாரேத் துநர்மற் றவரேநம் புதல்வ ரினுமன் பினிதுள்ளார்.

(இ-ள்.) நீர் பருகிக் கருக்கொண்டு வந்த மேகங்கள் பெரிய வாயை யங் காந்து மழைத்துளிகளைச் சிந்த, போர்செய்யும் எருதுகளை வலிய நுகத்தடிகளிற் கட்டி மள்ளர்கள் உழுத சேற்றிலே, கச்சையெடுத்துப் பூட்டிய தனத்தையுடைய பள்ளஸ்திரீகள் (பயிரை) நடவுசெய்யும் தண்ணிய வயலையுடைய காசி க்ஷேத்திரத்தை எவர் துதிக்கின்றார்களோ அவர்களே நமது மைந்தனைக்காட்டிலும் இனிதாக அன்புடையவராவர். எ-று. (கூஅ)

வண்டீன் றறையா முகைமுளரி மடல்வாய் திறபப மடைதிறந்து
தண்டேன் குதிக்கும் வளவயல்சூழ் காசி நகரந் தனிலுதிக்கும்
விண்டோய் மரமும் புல்லுமெல்லா மீட்டும் பிறவா நெறிசேர்தல்
கண்டா லகல்வா னுறைவோரிற் சிறந்த தென்னக் கழறுமால்.

(இ-ள்.) வண்டுகள் கருவுயிர்த்து ரீங்காரஞ்செய்தலால், தாமரைமொட்டுகள் தனது மடல்களை வாய்திறக்க, ஊற்றெடுத்துக் குளிர்ந்த தேனானது பாய்கின்ற வளம்பொருந்திய வயல்சூழ்ந்த காசிநகரத்தில் தோன்றிய ஆகாய மளாவிய மரமும், புல்லும் (முதலிய உயிர்கள்) யாவும், திரும்பவும் பிறவியடையாத (மோக்ஷ) மார்க்கத்தை யுறுதலைப்பார்க்கையில், அகன்ற ஆகாயத்திலுள்ள அமரரைக் காட்டிலும் சிறந்ததென்று (நூல்கள்) கூறும். எ-று. (கூகூ)

க்ஷேத்திர வளமும் தீர்த்தத்தின் கதையு முரைத்த அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் -௨௪௦௫.

---

தொண்ணூற்றெட்டாவது

## முத்திமண்டபத்தின் கதையுரைத்த அத்தியாயம்.

வண்டுஞ் சுரும்பு மீற்றுளைந்து மலர்வா யிரங்கி வயாவுயிர்க்குங்
கண்டல் வேலி விளிம்புடுத்த காசி நகரி லுமையோடு
மண்டர் பெருமா னடைந்ததற்பி னிகழ்ந்த வெல்லா மயில்வேலோன்
கொண்ட றவழும் பொதியமலை முனிவற் கினிது கூறுமால்.

(இ-ள்.) பல்வகைய வண்டுகள் கருப்பவாதனை யுற்று (தாமரைமுதலிய) மலர்களில் பிரசவிக்கின்ற கரும்புவேலியை ஓரத்திலே யுடுத்த காசிக்ஷேத்திரத்தில், தேவநாயகராகிய ஸ்ரீவிஸ்வநாதப்பெருமான் விசாலாக்ஷி யம்மையாருடன் சேர்ந்தபிறகு நடந்த விருத்தாந்தங்களையெல்லாம், கூர்மையாகிய வேற்படைதா

ங்கிய ஸ்ரீமுருகக்கடவுள் மேகங்கள் சஞ்சரிக்கின்ற பொதியமலையில் வாழும் அக ஸ்தியமுனிவருக்கு இனிதாகத் திருவாய்மலர்ந்தருளத்தொடங்கினர். எ-று. (க)

கமலக் காடு பூத்தனைய கன்னித் துளவ மாலமுதல
வமர ரோடு மெமபெருமான் றிரிவட் டபத்தி னகன்றேகிக்
குமரிப் பாளை மடலகிழியக் கயவாய் வாளை குதித்துகளுந்
தமரத் திரைநீர்க் கங்கைபுனை காசி நகரஞ் சாரந்தனரால்.

(இ-ள்.) தாமரைக்காடு புட்பித்தாற்போன்ற இளமைதங்கிய துளவமாலையணிந்த திருமால் முதலிய தேவர் குழுவுடன எமது இறைவராகிய சிவபெருமான் இரதத்தினின் றிறங்கிச் சென்று இளம்பாளைகளின் மடல் கிழியும்படி பெரிய வாயையுடைய வாளைமீனகள் குதித்துப் புரள்கின்ற ஒலிக்கின்ற அலைகள் பொருந்திய நீர்மயமாகிய கங்காநதி யழகுசெய்கின்ற காசிக்ஷேத்திரத்தை யடைந்தனர். எ-று. (௨)

பொன்செய் கொல்லர் கைசெய்யாப பொலமபூண் டுயிலு முலைசுமந்து
மின்செய் மருங்கு நோவவர மகளிர் விழைவி னுட்டயரக்
கொன்செய் நேமி நான்முகத்தோன் குலிசப் படையோன் முதலமர
ரன்பி னேத்தி யடிபோறறக் கடவுட் கோயி லகமபுக்கான்.

(இ-ள்.) பொன்வேலைசெய்யும் கம்மியரது கையினாற் செய்யாத அழகிய ஆபரணமாகிய தேமல்விளங்கும் குசங்களைத் தாங்கி, மின்னல்போன்ற இடையானது நோவும்படி, அரம்பாஸ்திரீகள் ஆசையோடு விளையாடவும், அசசத்தை யுண்டுசெய்யுஞ் சகராயுதததைத் தாங்கிய திருமால் - நானகு முகங்களை யுடைய பிரமதேவன்-வச்சிராயுதமேந்திய இந்திரன் முதலாகிய இமையவர் ஆசையோடு துதித்துத் திருவடியைப் பணியும்படி தெய்வீகம்பொருந்திய திருக்கோயிலுக்குட் பிரவேசித்தனர். எ-று. (௩)

தென்றல் வழங்கு சாளரத்திற் செங்காற் புறவு தூதருந்தி
நின்று பேட்டின சிறையுளரு நெடுவெண மாட மருங்குடுத்த
மன்ற வோங்கு திருமதிலோ ரெட்டுங் கடந்து வான்முடுமிக்
குன்ற மனைய வருள்முத்தி வழங்கு மாடங் குறுகினரால்.

(இ-ள்.) தென்றற்காற்றுவீசும சாளரவாயிலில் செவ்விய காலையுடைய புறாக்கள் உணவையுண்டு பெட்டையின் சிறகைக் கோதுகின்ற நெடிய தாவள்யமாகிய மாளிகைகளைப் பககத்திலுடைய நிலைபெற வுயர்ந்த திருமதில்கள் எட்டையும் தாண்டி, ஆகாயமளாவிய உச்சியையுடைய மலையை யொத்த கிருபை பொருந்திய முததியைக் கொடுக்கும் (முத்தி) மாடத்தை யடைந்தனர். எ-று.

தரணி பொதிந்த நிலாத்திங்கள் தவழுஞ் சடையோன் பாலனுக்காய்
முரணி யெதிர்ந்த கூற்றுடல முரிய வுதைத்த மலர்த்தாளி
லருண முளரி யலங்கிதழ்ப்பூம பொகுட்டி லிருக்கு மருமறையோன்
கருணை யொடுநன் மலாதூவிப் பழிச்சிப் பழிச்சிக் கைதொழுதான்.

(இ-ள்.) உலகெங்கும் பொதிந்த நிலவை வீசுஞ் சந்திரன் தவழுஞ் சடையையுடைய சிவபெருமான், பாலராகிய மார்க்கண்டேயமுனிவருக்காகப்

பகைகொண் டெடிர்ந்த இயமனது சரீரஞ் சிதையும்படி யுதைத்தருளிய திருவடித்தாமரையில், செவ்விய தாமரையினது பிரகாசிக்கின்ற இதழ்களையுடைய மலர்க்கொட்டையில் வீற்றிருக்கும் பிரமதேவன் ஆசையுடனே நல்ல மலர்களா னருச்சித்துத் துதித்துப் பணிந்தனன். எ-று. (ரு)

நெடுவெண் களிற்றுப் பெரும்பாகன் முதல வமரா கிழனுமிழ்பொற்
சுடிகைப் பிறைவா ளெயிற்றரவ நகரி லுறைவோர் தீந்தொடையாழ்
தடவுந் தமுதி னிசையூற்று தனமை யோர்மற றெவரொவருங்
கடிமென் மலர் தூய் தாழ்ந்துள்ள நெகிழ்ந்து நெகிழ்ந்து களிப்புற்றார்.

(இ-ள்.) தாவள்யமாகிய பெரிய ஐராவதத்தை வாகனமாகவுடைய இந்திரன் முதலாகிய தேவர்கள் - பிரகாசத்தை வீசுகின்ற அழகிய உச்சிக்கொண்டையையும் ஒளிதங்கிய பற்களையுமுடைய நாகலோகத்தில் வாழ்வோர்கள் - மதுரமாகிய பாடல்களை வீணைமீட்டி அமுதம்போல இசை யூற்றெழச்செய்யுந் தன்மையோர் - வேறெல்லாரும் வாசனை தங்கிய மெல்லிய மலர்களைத் தூவிப் பணிந்து மனமுருகி யுருகி ஆனந்தித்தார்கள். எ-று. (சு)

மின்னுக் கொழுந்து விட்டெறிக்கு மிளிர்பூண சுமந்து வீங்குபசும்
பொன்னஞ் சுணங்கு பூத்தமுலை மாத ரெழுவர் புகழ்ந்தேத்தி
மன்னு நீராஞ் சனமேந்த மகிழ்கூர தருளான மறைக்கிழவன்
றன்னை யீனமேருன் பழிச்சுதலு மெந்தை யினிது சாற்றுமால.

(இ-ள்.) மின்னற்கொழுந்தை வீசிப் பிரகாசிக்குங் காந்தியையுடைய ஆபரணமணிந்து பூரித்த பசிய பொன்மயமாகிய அழகிய தேமல்படர்ந்த தனங்களையுடைய சத்தமாதர்கள் புகழ்ந்து துதித்து நிலைபெற்ற நீராஞ்சன மெடுக்கவும், களிமிகுந்து ஆசையுடனே பிரமனைப்பெற்ற திருமால் துதிசெய்யவும், எமது தந்தையாகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (எ)

ஆல மொழுக்கு மாயிரவா யமளித் துயிலு மழைவண்ணா
ஞால மளிக்குந் தனிச்செங்கோற் றிவோதா னனுக்கு முத்திநலகிச்
சோலைக் கரும்பிற றொடுத்தவிறால பெருகி நறவத் துளிதூற்று
சாலித் தடஞ்சூழ் காசியினயா மடையும் வண்ணந் தந்தனையால்.

(இ-ள்.) விஷத்தைச் சிந்துகின்ற ஆயிரம் வாயையுடைய (ஆதிசேடனாகிய) படுக்கையில் நித்திரைசெய்யும் மேகவண்ணா! உலகத்தைக் காக்கும் ஒப்பற்ற செங்கோலையுடைய திவோதானனுக்கு மோக்ஷத்தைக்கொடுத்து, சோலையிலுள்ள கரும்பங்கழியிற் கட்டிய தேன்கூடானது பெருகக்கொடுத்துத் துளித்துளியாகச் சொரிதலால் தேன் தடாகங்கள் சூழ்ந்த காசிநகரத்தில் யாம் (மீண்டும்) வந்து சேரும்வண்ணம் செய்தனை! எ-று. (அ)

கருந்தாட் செங்கட் பொறிச்சுரும்பும் வண்டுந் தேனுங் களிதூங்கி
விருந்தாட் டயருந் துழாய்முடியோ யெமது விழைவு விசைத்துவரால்
பருந்தாட் குடக்காய் முடத்தெங்கின் பழங்கள் சிந்த மலர்குதட்டி
வருந்தாண் மேதி வெரீஇப்பெயருங் காசி யலது மற்றுணடே.

(இ-ள்.) கரியகாலேயும் செவ்வியகண்ணேயுமுடைய புள்ளிவாய்ந்த ஆண் வண்டுகளும் பெண்வண்டுகளும் தேனவண்டுகளும் மகிழ்ச்சிமிகுந்துவிருந்துண்டு விளையாடுகின்ற துளவமாலேயணிந்த முடியையுடைய விண்டுவே! எமது இச்சை வரால்மீன்கள் விரைவுடன் பருத்தஅடியையும் குடம்போன்ற காயையுமுடைய முடத்தென்னமரங்களின பழஙகளை யுதிர்த்தலால், மலர்களை யதுக்கிக்கொண்டு வரும் தாளேயுடைய எருமைகள்பயந்தோடுகின்றகாசிநகரத்தினிடத்தின்றிப் பிறி தொன்றி னுளதோ. எ-று. (௯)

கருமபு விளைந்து கழுத்திறைஞ்சும் வயல்சூழ் காசி நகரினுளம்
விருமபு மதுபோல மூவுலகும வேண்டு கிலலே நமதேவல
புரிநது ளாரிற சிறப்புடையை நீயே யன்றே புகல்வேட்ட
வரங்க டருது மெனவுரைத்தான கண்மூன் றுடைய மறையோனே.

(இ ள் ) கரும்புகளபயிராய்ப்பிடரிசாய்கின்ற வயல்கள்சூழ்ந்த காசிப்பட் டணததில் யாம் மனவிருப்புறுவதுபோலத திரிலோகங்களேயும் விரும்பேம். நம து கட்டளேயைச் செய்கின்றவாகளில் சீரத்தியுடையவன் நீயே யல்லவா ? இச்சி த்த வரங்களைக் கேள் ; அவவாறே யனுக்கிரகிப்போமென்று திரிநேத்திரங்களேயு டைய தேவதேவியராகிய சிவபெருமான் திருவாய்மலாந்தருளினர். எ று. (௧0)

கறங்கு பகுவாய் மணிமிடற்ற வெள்ளே றுகைக்குங் காபாலி
யறைநத மாற்றந் தலேக்கொள்ளா வமல வரமின் றருளுதியே
னிறைந்த வுவகை மீதோங்க நின்பா லன்றி யாமயலே
மறநது முறையா வரநதருதல வேண்டுங் கயிலே வானவனே.

(இ ள்.) சப்திக்கின்ற பெரியவாயையும் மணிகட்டிய கழுத்தையுமுடைய வெள்ளமயாகிய இடபத்தை வாகனமாகச்செலுத்திய சிவபெருமான் திருவாய்ம லர்ந்தருளிய சொற்களைச் சிரமேற்கொண்டு, (திருமால் கூறுகின்றார்) நிமலரே! இபபொழுது வரங்கொடுப்பீராகில நிறைவாகிய சந்தோஷத்துடன் மிகுதியாகத் தேவரீரிடததிலல்லாமல் அடியேன் பிறரிடததில்மறந்தேனும் எண்ணுதவரத்தை த்தரல்வேண்டும் கயிலேநாயகா! எ று. (௧௧)

என்று பறவாப் பசும்பூவை வண்ண னுரைப்ப விசைத்தவரம்
நன்று தந்தேம நினைத்தொழுதோர்க் கியாமே முத்தி வழங்குவம்வான்
குன்ற மெடுத்து நிரைகாததோய் குறுகா முத்தி மண்டபத்திற்
சென்ற நமதன் போங்குநெடுங கயிலே யிடததுஞ் செல்லாதால்.

(இ-ள் ) என்றிவவகையாகப் பறவாத பசிய பூவைவண்ணனுகிய திரு மால் விண்ணப்பஞ்செய்ய, நீ கேட்டவரத்தை நனறுகக்கொடுததோம்; நின்னைப் பணிந்தோர்க்கு நாமே மோக்ஷங்கொடுப்போம் ; பெரிய (கோவர்த்தன) மலேயை (குடையாக) எடுத்துப் பசுமந்தையைக்காத்த மாயவா! சேர்குன்றுத முத்திமண்ட பத்திலே சென்ற நம தூசையானது உயர்வாகிய நெடிய கைலாயகிரியிலும் செ ல்லமாட்டாது. எ-று.

பூவை யென்பது நாகணவாய்ப்புள் - காயம்பூ விரண்டிற்கும் பொதுவாக நிற்றலின், நாகணவாய்ப்புள்ளை யொழித்துக் காயாம்பூவைக் காட்டும்படி "பறவாப் பூவை" என்றார். (கஉ)

அருள்கூர் முத்தி மண்டபத்தி னமைந்த வுவகை நமதன்பர்
மருளா விதய மலரிடத்து மிலையா மகிழ்வுற் றங்கிருந்து
தெருளால் நம்மை யொருபோது சிந்தை செய்வோ ரொழிவரிய
கருவா ழியிற்புக் கிறந்துபிறந் துழலார் முத்தி நெறிகாண்பார்.

(இ-ள்.) கிருபை மிகுந்த முத்திமண்டபத்திலே நமக்குப் பொருந்தியசந்தோஷமானது நம தடியார்களின் மருட்சியற்ற இதயதாமரையிடத்து மில்லையாகும். ஆசைகொண்டு அவ்விடத்திலிருந்து அறிவோடு நம்மை ஒருநாள் தியானிப்பவர்கள் நீக்குதற்கரிதாகிய பிறவிச்சாகரத்தில் வீழ்ந்து இறந்தும்பிறந்தும் உழலாதவர்களாய் மோக்ஷவழியைக் காண்பார்கள். எ-று. (கங)

வண்டல் வாரித் திரைபுரட்டு மணிகன் னிகைத்தண் புனல்மூழ்கி
யண்ட முகடு கிழித்தோங்கு முத்தி மாடத் தமர்ந்தொருகாற்
பண்டை மறைக டெரிந்துசெபந் தான மோமம் பண்ணுகின்றோர்
கொண்டல் விளையாட் டயர்குடுமிக் கயிலை வரையிற் குறுகுவரால்.

(இ-ள்.) வண்டலை வாரிக்கொண்டு அலையை மறிக்கின்ற மணிகன்னிகையாகிய தண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, அண்டகடாகத்தைக் கிழித்துயர்ந்த முத்திமண்டபத்திலிருந்து ஒருதரம் பழைமையாகிய வேதங்களையறிந்து (அதனிற்கூறிய முறைப்படி) செபம்-தானம்-ஓமம் முதலியவற்றைச் செய்கின்றவர்கள் மேகங்கள் விளையாடி இளைப்பாறும் உச்சியையுடைய திருக்கைலாயகிரியிற் சேர்வார்கள். எ-று. (கச)

மணிகன் னிகையிற் சிறந்தோங்கு மலர்வா வியும்பொன் வயங்குகதி
ரணிசேர் முத்தி மண்டபத்தை நிகர்மண் டபமு மலங்குதுத்திப்
பணவா ளரவின் முடிகிடந்த பாரில் விசும்பிற் காசிநகர்க்
கிணையா நகரு மெஞ்ஞான்று மில்லை யில்லை யிலலையால்.

(இ-ள்.) மணிகன்னிகையைப் போலச் சிறப்புற் றுயர்ந்த மலர்கள் பொருந்திய தீர்த்தமும், பொன்போலப் பிரகாசிக்கின்ற கிரணங்களை யுடைய அழகிய முத்திமண்டபத்தை யொப்பாகிய மண்டபமும், காசிநகரத்திற்குச் சமானமாகிய நகரமும், அசைகின்ற படப்பொறிவாய்ந்த ஒள்ளிய ஆதிசேடனது முடியில் விளங்கும் பூலோகத்திலும் தேவலோகத்திலும் எவ்விடத்திலும் இல்லை இல்லை இல்லை.

இம்பர் வருமூன் றாமுகத்தி லெழில்சேர் முத்தி மண்டபத்துக்
கும்ப ரேத்துங் குக்குடமண் டபமென் றொருபே ருளதாமென்
றம்பொற் சிலைமால் வரைகுனித்துப் புரநீ றூட்டு மடலேற்று
நம்ப னுமைப்ப மாயனது நவிலகென் றிறைஞ்ச நவில்கின்றான்.

(இ-ள்.) இப்பொழுது வருகின்ற மூன்றாவதாகிய துவாபரயுகத்திலே அழகுபொருந்திய முத்திமண்டபத்திற்குத தேவர்கள் துதிசெய்யும் குக்குடமண்டபமென்று ஒருபெயருண்டாகும் என்று, அழகிய பொன்வில்லாக மேருமலையை

வளைத்துத் திரிபுரங்களை யெரித்த வலிதங்கிய ஆண்சிஙகம் போன்ற சிவபிரான் திருவாய்மலர்ந்தருள, திருமால் அதன் விருத்தாந்தத்தை யுரைக்கவேண்டுமெ னப் பணிய, பெருமான கூறத்தொடங்கினர். எ று. (கசு)

மறைதேர் வாழ்க்கை மாகநந்த னென்பா னொருவன் வான்கலையின்
றுறைபோ யுலகிற் பலகலைக்கு மொருவ னென்னுந் துணிவெய்தி
யுறையு நாளி லவன்றாதை யிறப்பக் காம மீதூர்ந்து
பிறன்மற் றொருவ னொடுந்தீரா நண்பு நாளும் பெரிதோங்க.

(இ-ள்.) வேதங்களைத் தேர்ந்த வாழ்க்கையை வாய்ந்த மாகநந்தன் என் பவ னொருவன், சிறந்த சாஸ்திரங்களின்மார்க்கங்களிற் படிந்து பலசாஸ்திரங்கட் கு மொருவனேயென்று சொல்லும் துணிவையடைந்து வசிக்குங்காலத்தில், அவ வந்தணனது பிதா மரிக்க, காமவேட்கை மிகமேம்பட்டு அயலானாகிய வேறொரு வனோடு நீஙகாத சினேகமானது தினந்தோறும் அதிகரித்துயர. எ-று. (கஎ)

நண்பிற் றீரான் போன்றவனிற் கிழத்தி முலைமென் னலநுகர்ந்தும்
பண்பிற் றிரிந்துங் கொலைகளவு முதல பாவம் பலபயின்றும்
வண்சொற் பயிலு மறைநெறியின் வழுக்கிக் காம வயத்தனாய்த் [ந்தும்.
திண்பொற் றடந்தோ ளெறும்வலியாற் பிறர்பாற் பொருள்க டினங்கவர்

(இ-ள்.) நேசத்தி னீங்காதவன்போல விருந்து, அந்நண்பனது மனையாட் டியின் குசங்களது மெல்லிய சுகத்தையனுபவித்தும், அவளோடு உழன்றும், கொலை திருடு முதலாகிய பலவகைப் பாவச்செயல்கள்செய்தும், வண்மைதங்கிய சொற்களைச் சொல்லும் வேதமார்க்கத்தினின்றுதவறிக் காமாதுரமிக்கவனும் வலி யமைந்த அழகிய விசாலமாகிய தோள்களின் பெருவலிமையால் மற்றோர்வயத்து ள்ள பொருளை நாடோறு மபகரித்தும். எ-று. (கஅ)

பாக வதரோ டியைந்துசைவ நெறியைப் பழித்துஞ் சைவநெறி
போகு மவர்பா லியைந்துதினம் பாக வதரைப் புறமொழிந்தும்
யாக முனிவர்க் கிடர்விளைத்தும் யாவர் பொருணல் கினரவர்கட்
காக நெறியில் கரிநாளும் பகர்ந்தும பதித னாயினனால்.

(இ-ள்.) விஷ்டுபக்தரோடுகூடிச் சைவமார்க்கத்தைத் தூஷித்தும், சைவ மார்கத்தை மேற்கொள்வாரோடு சேர்ந்து தினந்தோறும் வைணவரைப்புறங்கூறி (யவமானப்படுத்தி)யும், யாகஞ்செய்யும் தவசிகட்குத் தீமையுண்டுசெய்தும் எவர் பொருள்கொடுப்பரோ அவர்க்காக நல்வழியில்லாத (பொய்)சாக்ஷிபுகன்றும், பதி தனுகமாறினன் (மாகநந்தன்) எ-று.

பதிதன் = சமயாசாரதருமங்களைக் கைவிட்டவன். (கக)

கதிர்முத் துரிஞ்சு முலைக்கருங்கட் காமர்கோதை முலைவேட்டுப்
பதித னாகிப் படிற்றொழுக்கிற் பயிலு நாளோ ரிழிகுலத்து
முதியோ னொருவ னளப்பரிய நிதியங் கொணர்ந்து முதுக்குறைவால்
மதிதாழ் குடுமிப் பருவத்தே யத்தி னகன்று வந்தனனால்.

(இ-ள்.) ஒளிவீசும் முத்துமாலையணிந்த முலையையும் கரிய கண்ணையுமுடைய அழகிய அப்பெண்ணின்போகததை யிச்சித்துப்பதிதனுகிக் கெட்டமார்க்கத்திற் பழகிவருங்காலததில், ஒருநாள் தாழ்ந்தகுலத்திற் பிறந்த ஒருகிழவன், சந்திரன் தவழுகின்றஉச்சியையுடைய பருவததேசத்தினின்று அளவிடறகரிதாகிய செல்வத்தை யெடுத்துககொணடு பேரறிவால் நீஙகிவநதனன். எ-று.

இழிகுலத்து முதியோன் = நீசக் கிழவன். (௨0)

காமர் சிறைச்சே வடிக்குருகு கயலாய்ங் தெடுத்தாங் கிரைகுதட்டிப்
பூமென் றவிசின் புறத்துமடப் பெடையோ டுறங்கப் பொறிவாளை
தேமென் கதலிப் படுபழங்கள் சிந்த வுகளும் பொழிற்காசி
நாம மெடுநீர்த் திரைபுரட்டு மணிகன் னிகையி னயந்தாடி.

(இ-ள்.) அழகிய சிறகையுஞ் செவவிய காலையு முடைய நாரைகள் கயற்கெண்டைகளைத் தேடி யெடுத்து வாயிற் குதட்டிப் புசித்து மலாகளா லாகிய மெல்லிய தவிசிலே, இளமை தங்கிய பெணகுருகோடு துயிலவும், புள்ளிகளையுடைய வாளைமீன்கள் மதுரமாகிய மெலலிய வாழைப்பழஙகள் சிந்தும்படிப் புரள்கின்ற சோலையையுடைய காசிப்பட்டணத்திலே அச்சத்தைத தவிாக்கும நீர்மயமான அலைகளைப் புரட்டும் மணிகன்னிகைத்தீர்த்தத்தில மகிழ்ந்துமூழ்கி.

இதுமுத விரண்டுபாடல்கள்குளகம. (௨௧)

காண்டல் செல்லா வினைபுரிசண் டாளன் யானும பொழிகருணை,
வேண்டி வேண்டு பொருள்கொணர்ந்தீங் கடைநதேன கோடல வேண்டு
மெனப்,பூண்ட பேரன் பொடுமுவகை பூப்ப மணிகன் னிகைப்புறத்தி,
னீண்டு தவஞ்செய் மாதவரை நோக்கி யினிதி னியமபின்னல.

(இ-ள்.) அடியேனும் (அருமையின்றி) காணக்கூடாத காரியஙகளைச் செய்யும்நீசன் ; பொழிகின்ற கிருபையைக் கோரி வேண்டியவளவு பொருளெடுத்துக்கொண்டு இவவிடத்திற்கு வந்திருக்கின்றேன. அதனைப் பெறுதல்வேணடுமென்று, மேற்கொண்ட பேரன்புடனே சந்தோஷமதிகரிகக மணிகன்னிகைத தீர்த்தத்தருகே தவஞ்செய்கின்ற சிறந்த தவசிகளைப் பார்த்து இனிதாகக் கூறினன். எ-று. (௨௨)

முன்னை வினையின் வேரொறிந்த முதிப தவத்தோ ரதுகேளா
வன்னோன் வாங்கு மெனநோக்கி யறைத லோடு மிழிகுலத்தோன்
பன்னு மறைபி னெறிதிறம்பு மறையோற் பணிந்து பகாந்திடலு
மன்னு பொருளைத் துணையீங்கு கொணாநதா யென்ன வழங்குமால்

(இ-ள்.) ஜன்மாந்தர பாவத்தின் வேரை யடியோடு நீக்கிய பெருந்தவசிகள் அவன் கூறிய சொல்லைச் செவிக்கொண்டுஅம் மாகநந்தன் வாங்குவானென்று பார்த்துச் சொல்லவும், இழிகுலத்தனுகிய நீசன், சொல்லிய வேதத்தின்மார்க்கத்தைத் தவறிய மாகநந்தனென்னு மறையோனை வணங்கி (இப்பொருளைத தானம்பெறுவீரா வென்று) சொல்லவும்,நிலைபெற்ற பொருள் எவவளவு இப்பொழுது கொண்டுவந்தாயென்று கேட்க, நீசன் சொல்கின்றுன். எ-று. (௨௩)

உனது விழைவெத் துணையுளவத்துணைப பொருள்யா னுதவுவலென்
றனையோ னுரைபபக் கொணாந்தபொருளனைத்து மெனக்கினறருளுதி
னினது தான மேற்பலென நிதிய மனைததுமவனகொடுபப [யேல
வினிது மகிழ்ந்தாங் கிழிகுலத்தோன் வழஙகு தான மேற்றனனால்.

(இ-ள்.) உம்முடைய ஆசை எவவளவுண்டோ அவவளவினதாகிய பொருளை யான் கொடுபபேனென்று, அச்சண்டாளன் சாறற, நீ கொடுவாத செல்வ முழுவதையும் எனக் கிப்போழ்து தானஞ்செய்வாயாகில, உனது தானத்தை யங்கீகரிப்பேனென்று கூற, பொருள் முழுவதையும் அப் புலையன் கொடுக்க, (மாகநந்தன்) இனிதாகக் களித்து அந்த நீசசன் கொடுத்த தானததை வாஙகிக் கொண்டனன். எ-று. (உ௪)

வேற்றுக் கொடிய விழிகுலத்தோன வழங்கு நிதியந் தனைவிழைவி
னேற்ற வதனுற் சண்டாள னிவனே யாகு மென்றென்று
போற்றல் செய்யா விழிகுலத்தோ னென்ன வெவரும் புறங்கூற
வாற்றல் தீர்நது தன்மனைவிட் டகலா தாங்கு வைகினனால.

(இ-ள்.) வேறுகிய கொடிய இழிகுலத் துதித்தவன் கொடுதத செல்வத்தை ஆசையோடு அங்கீகரித்ததன்மையால இவனே சண்டாளனுவானென்று கூறி, துதிக்கப்படாத இழிகுலததோனென்று யாவரும் புறஞ்சொல்லித் தூஷிக்க, வல்லமையொழிந்து தனது வீட்டைவிட்டு விலகாமல் அவவிடத்தில் வாழ்ந்திருந்தனன் (மாகநந்தன்). எ-று. (உரு)

கண்ட பெயர்யா வருமிவனைக் கண்ணிற் காணு தகற்றுகென
வண்டுண் கோதை பின்றொடர மக்க ளோடு மணித்தோட்டுக்
குண்மி சினைபூத் தலர்கனைக்காற் குவளைப் பசுந்தேன் குமிழியெழக்
கெண்டை குதிக்கும் வளவயற்கீ கடதே யத்திற் செலவயர்ந்தான்.

(இ-ள்.) கண்டோரெல்லாரும் இவனைக் கண்ணிற்படாமல் விலக்குங்களென்றுகூற, வண்டுகள் (தேன்) உண்ணுங் கூந்தலையுடைய அவன் வைப்பாட்டியின் தொடர்ந்துசெல்லவும், புதல்வருடனே, அழகிய இலையையுடைய திரட்சியாகிய பூங்கொத்துகளலர்ந்த பருத்த அடியையுடைய குவளைச்செடிகள் பசிய தேன்குமிழியை யூற்றெடுக்க, கெண்டைமீன்கள் குதிக்கும் வளப்பம் பொருந்திய வயல்களையுடைய கீகடதேயத்திற் சென்றனன். எ-று. (உகா)

கங்கை படிந்து காவடிகொண் டேகு வார்பின் கரந்தேகி
வெங்கட் களிறு புலிவழங்கு கொடுங்கா னிடையின் மேவுதலுந்
துங்கச் சிலையர் தொடுதோலர் தூணிப் புறத்தா ரிளையுளைய
சிங்கப் போத்தி னுருகெழுவெந திறலோர் விளைவிற் சென்றெதிர்ந்தார்.

(இ-ள்.) கஙகாநதியில் மூழ்கிக்காவடிகொணடு செல்வோருக்குப்பின்னே மறைந்துசென்று, அஞ்சாமை யுடைய யானைகள் - புலிகள் (முதலிய துஷ்ட மிருகங்கள்) சஞ்சரிக்கும் கொடிய வனத்திற் செல்லவும், விற்பிடித்தவர்களும், (காலில்) தொடுத்த செருப்பையுடையவர்களும், அம்பறுத்தூணி முதுகிற் கட்டி

யவர்களுமாகிய வரிசையாகிய பிடரிமயிரையுடைய ஆண்சிங்கம்போன்ற கோப மிகுந்த வலியுடைய கொடிய வேடுவர் விரைவாகவந்து எதிர்த்தார்கள். எ-று.

ஈனுக் குறுங்கட் பசுங்கமுகி னெழில்சேர் கண்டத் தேந்திழைக்கா
யானுக் கொடுந்தீ வினையிழைத்துக் கொணர்ந்த பொருள்க ளனைத்தினையு
மூன்வாய் பிலிறறி நிணங்கமழு மொள்வா யெயினர் கவர்வொனப்
போனுன் போகு நெறியினிடைப் புகுந்தா ரேற்றுப் புலிபோல்வார்.

(இ-ள்.) குலையீனுத குறுகிய கணுக்களையுடைய பசிய பாக்குமரத்தினை யொத்த அழகு வாய்ந்த கழுத்தையுடைய வைப்பாட்டிக்காகச் செய்யத்தகாத கொடிய பாவகாரியங்களைச்செய்து சம்பாதித்து வந்த பொருள்களெல்லாவற்றை யும், மாமிசத்தை வாய்வழிசிந்திப் புலால்மணங் கமழும் ஒள்ளிய வாயையுடைய வேடுவர் கொண்டுபோவரொன்று கருதிச் சென்றனன் (மாகந்தன்.) அவ்வாறுசெ ல்லுகையில் ஆண்புலிபோன்ற அவர்கள் வந்தனர். எ-று. (உஅ)

காழிற் சிறந்த கூன்பிறைவெங் கதையாற் புடைத்துக் கலைமறையோ
னூழிற் கொண்ட கொடும்பாவ நிதிய மனைத்து மொருங்கள்ளி
மாழைக் கருங்க ணேக்கியையும் வலிதிற் குறைத்து மாகந்தன்
தாழ்வுற் றாவி சிலைதநதொழிய மக்க ளோடுங் தடிந்தனரால்.

(இ-ள்.) வைர மிகுந்த வளைவாகிய பிறைச்சந்திரன்போன்ற கொடிய கதாயுதத்தால் அடித்து, வேத முணர்ந்த அந்தணனாகிய மாகந்தன் ஊழ்வினைவ சத்தாற் கொண்ட கொடிய பாவப்பொருள் எல்லாவற்றையும் ஒன்றாக வெடுத்து க்கொண்டு, அவனுடன் போந்த வைப்பாட்டியையும் பலவந்தமாக வெட்டி மாக ந்தனை கெடுதியுற்று உயிர்போயிறக்கக் குழந்தைகளுடனே (அவனையும்) கொன் றனர். எ-று. (உ௯)

கரும்பு குதட்டிச் சாறொழுகுங் கடைவாய் மேதி கண்படுக்கு
மிருந்தண் புனலசூழ் காசிதனை யிதயத் தெணணி யிறந்தனனால்
வரம்பிற் சாலி முத்துயிர்க்கும வயற்கீ கடத்தில் முற்பவத்திற்
றிருந்து முணர்வோ டவனாத்தச் சூட்டுச் சேவ லாயினனால்.

(இ-ள்.) கருப்பங் கோல்களை யதுக்கி இரசமொழுகப்பெற்ற கடைவா யையுடைய எருமைக்கடாக்கள் துயில்கின்ற பெரிய குளிர்ச்சிதங்கிய நீர்சூழ்ந்த காசிக்ஷேத்திரத்தை மனதிற்கருதி மாய்ந்ததன்மையால், அளவில்லாத நெற்பயிர் முத்துக்களைப் பெறும் வயலையுடைய கீகடதேசத்தில், ஜன்மாந்தரத்திற் பொருந் திய அறிவுடனே அம் மாகந்தன் செவந்த உச்சிக்கொண்டையையுடைய சேவ லாகப்பிறந்தனன். எ-று, (௩௰)

மக்க ளிருவர் பார்ப்பாக மடமா னேக்கி பேடாக
வொக்க வுறையு நாளதனிற் காசிக் கேகு மவரோடுஞ்
செக்கர் நிறத்த கூர்வாய சூட்டுச் சேவல் பெடைதொடரத்
தொக்க பார்ப்பி னெடுங்காசித் தொல்லை நகரிற் சென்றதுவே.

(இ-ள்.) குழந்தைக ளிரண்டுங் குஞ்சுகளாகவும், இளமைதங்கிய மான் போன்ற கண்ணையுடைய அவள் பெட்டையாகவும், ஒன்றாக வாழுங்காலத்தி

லே நகரிகருக்குச் செல்வோருடனே, செவ்விய நிறத்தையும் கூர்மையாகிய வா யையும் உச்சிக்கொண்டையையு முடைய சேவலானது தன பெட்டையின் தொடர்ந்துவர, குஞ்சுகளோடும் பழமையாகிய காசிநகரை யடைந்தது. எ-று.

செங்கட் கயவாய் மோட்டெருமை செழுநீர்க் குவளைப் போதருந்திப்
பங்கப் பழனத் துளைந்துழக்கப் பணில முழங்கு காசியினிற்
றிங்க டவழ்ந்து விளிமபுரிஞசு முத்தி மாடத் திடைசோர
வங்க ணிறந்து படுபேற்றாற் கயிலை வரையி னடையுமால்.

(இ-ள்.) செவ்விய கண்ணையும் பிளவுபட்ட வாயையு முடைய பெரிய எருமைக்கடாக்கள், செழுமையாகிய நீரிலுள்ள குவளைமலரைப் புசித்துச் சேறு பொருந்திய வயலில் விழுந்து கலக்குவதால், சஙகுகள் முழங்குகின்ற காசி நகரத்தில், சந்திரன் தவழ்ந்து ஓரந் தேய்கின்ற முத்திமண்டபத்தையடைந்து அங்கவிடத்திறந்து நற்கதியாற் கயிலாயபதவி யடையும். எ-று. (௯௨)

அன்று முதலாய்க் குக்குடமண் டபமென் றோது மகனுலக
மன்ற விதனைக் கேட்டோர்கள் மருளா முத்தி தனிலடைவா
ரென்று கூறத் திருநெடுமா லிதய நெகிழ விழிபனிப்பக்
குன்ற வில்லி சேவடிக்கீழ்க் குழைந்து குழைந்து தொழுதனனால்.

(இ-ள்.) அன்றைய தினமுதற்கொண்டு குக்குடமண்டபமென்று பெரிய வுலகத்திலுள்ளோர் கூறுவர். நிலைபெற இச்சரிதையைக் கேட்டவர்கள் மயக்கமற்ற மோக்ஷத்திற் சேர்வார்கள் என்று (சிவபெருமான்) திருவாய்மலர்ந்தருள, திரிவிக்கிரமாவதாரங் கொண்ட திருமால் மனமுருகவும், கண்கள் நீர்துளிக்கவும், மலைவில்லேந்திய மகாதேவரது திருவடியினகீழே மனமுருகியுருகிப் பணிந்தனர்.

ஆய காலை யளப்பரிய விலிங்க பூசை யாற்றுகின்றோர்
பாய பசும்பொற் படுமணியி னோதை செவியி னிடைப்படா
மாயன் கமலப் பொகுட்டுறையு மறையோன் முதலோர வாழ்த்தெடுப்பச்
சேய பசும்பொற் சிங்கார மணிமண் டபத்திற் சென்றடைந்தான்.

(இ-ள்.) ஆகிய காலத்தில் அளவிடுதற்கரிதாகிய சிவலிங்கபூசை செய்வோர் பரவிய பசிய அழகிய அடிக்கின்ற மணியோசை திருச்செவியிற் படவும், திருமால் • தாமரைமலர்க்கொட்டையில் வாழும் பிரமதேவன் முதலானவர்கள் பல்லாண்டு பாடவும், பெருமைதங்கிய பசிய பொன்னாலாகிய அழகிய ரத்தினங்கள்பதித்த மண்டபத்திற்போய்ச்சேர்ந்தனர் (ஸ்ரீவிஸ்வநாதப்பெருமான்.) எ-று.

இனைய காதை கேட்கின்றோர் நவில்வோ ரிதயத் தெண்ணுமவ
ரனையோர் பாதம் பணிந்திடுவோர் பணிந்தோர்க் கடிமை பூணுவோர்
கனைவண் டிமிரும் கற்பகப்பூங் காட்டி னமரர் பணிந்தேத்தப்
பனைவெம் புழைக்கை வெள்ளானைப் பாகன் பரவ வீற்றிருப்பார்.

(இ-ள்.) இத்தகைய சரிதத்தைக் கேட்கின்றவர்களும், சொல்கின்றவர்களும், மனதிற்றியானஞ்செய்வோரும், அவர்களது திருவடிகளைப்பணிவோர்களும், வணங்குவோர்க்கு அடிமைத் திறத்தை மேற்கொண்டவர்களும், சத்திக்கின்ற

வண்டுகள் கிண்டுகின்ற அழகிய கற்பகவனத்தில் தேவர்கள் வணங்கித் துதி செய்யும்படி பனைமரம்போன்ற வெவ்விய புழைக்கையையுடைய (ஐராவதமென்னும்) வெள்ளையானையை வாகனமாகக்கொண்ட இந்திரன் துதிக்கும்படி எழுந்தருளியிருப்பர். எ-று. (௯௫)

முத்திமண்டபத்தின் கதை யுரைத்த அ-ம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௪௪௦.

---

தொண்ணூற்றொன்பதாவது

## விச்சுவநாதர் மகிமை யுரைத்த அத்தியாயம்.

வானிற் றடவுஞ் சிங்கார மணிமண் டபத்திற் புகுந்ததற்பின்
கூனற் பிறைதாழ் கோடீரக் குழகன் செய்தி யுரைத்துமென
ஞானத் துறைவாய்ப் படிந்தகுறு முனிவ னுவப்ப நலங்கெழுதண்
பானற் கருங்கட் செங்கனிவாயக் குறத்தி கொழுநன் பகர்ந்திடுமால்.

(இ-ள்.) ஆகாயத்தை யளாவிய அழகிய முத்திமண்டபத்திற் சென்றபிறகு, வளைவாகிய பிறைச்சந்திரனையணிந்த சடையையுடைய ஸ்ரீவிஸ்வநாதப்பெருமானது விருத்தாந்தங்களை விளம்புவாமென்று, ஞானமாகிய துறையில்மூழ்கிய அகத்திய முனிவர் ஆநந்திக்கும்படி நன்மை மிகுந்த தண்ணிய நீலோற்பலம்போன்ற கரிய கண்ணையும் செவ்விய கனிபோன்ற வாயையுமுடைய குறவர் குலக்கொடியாகிய வள்ளிநாச்சியார் காதலர் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று. (௧)

இருண்மேய்ந் திலங்கு கதிர்நாவாற் கடைவாய் நக்கு மெரிமணிசே
ரரியா சனத்தி னினிதேறி யழற்கட் பெருமா னமர்ந்திடலுங்
கரியான் முதல புத்தேளிர் வணங்கக் காந்தள் முகைகவற்றும்
வரிவால் வளைக்கை வாணிமுத லமர மாதர் வாழ்த்தெடுத்தார்.

(இ-ள்.) இருளை விழுங்கிப் பிரகாசிக்கின்ற ஒளியாகிய நாவினால் வாயிற்படியைத் தொடுகின்ற காந்திபொருந்திய மாணிக்கங்களாலமைந்த சிங்காதனத்தில் இனிதாக ஆரோகணித்து அக்கினிக்கணணை யுடைய சிவபெருமான் வீற்றிருக்கவும், கருமைநிறம்வாய்ந்த திருமால் முதலிய தேவர்கள் பணியவும், காந்தளரும்பினையொத்து விளங்கும் கீற்றுகளபொருந்திய வெள்ளிய வளையலையணிந்த சரஸ்வதி முதலிய தேவஸ்திரீகள் மங்கலப்பாடல் பாடினர். எ-று. (௨)

கன்னிப் படலைத் துழாய்முடியோய் கேட்டி கமழ்தே னூற்றிருக்கும்
பொன்னிற் பழுத்த கொன்றையந்தார் புனையுஞ் சடைவிச் சுவநாத
னென்ன வுரைக்கு மவ்விலிங்கம் பிரம மாகு மீங்கதனில்
மன்னி யன்பர்க் கெஞ்ஞான்று மழியா முத்தி வழங்குவமால்.

(இ-ள்.) இளமைவாய்ந்த துளவமாலை யணிந்த முடியையுடைய மாலே! கேட்பாயாக. பரிமளிக்கின்ற தேனை தூஊற்றெடுக்கின்ற பொன்போலப் பழுத்த அழகிய கொன்றைமாலை தரித்த சடாமுடியையுடைய விச்சுவநாதனென்று பெயர் சொல்லும் அச்சிவலிங்கக்குறி பரப்பிரம்ஹஸ்வரூபமாகும். இக்காசிநகரில் அச் சிவலிங்கமூர்த்தத்தில யாம் எக்காலத்தும் நிலைத்திருந்து அடியார்கட்குக் கெடாத மோக்ஷபோகத்தை யநுக்கிரகிப்போம். எ-று. (௩)

நிலவுக் கதிர்கான் றிலகொளிய வெண்ணீ றணிந்த நிலாநெற்றி
மலமூன் றெறிந்த பாசுபதர் வடிவ நமது வடிவாகு
மலா தூய் வணங்கி யாஙகவரை யொருகாற் பழிச்சி லாயிரக்காற்
பலன்வேண டாம லெமையேத்து பான்மை யோரிற் பலன்பெறுவார்.

(இ-ள்.) சந்திரிகையாகிய கிரணங்களைச் சிந்திப் பிரகாசிக்கின்ற ஒளி தங்கிய நிலாவைப் போன்ற திருவெண்ணீற்றைத் தரித்த நெற்றியையுடைய (ஆணவம் - காமியம் - மாயை யென்னும்) மும்மலங்களையொழித்த பாசுபதர்களின் உருவமே நம்முடைய வடிவமாகும். அவர்களை ஒரு முறை மலர்களிட் டருச்சித்துத துதிசெய்தால், (யாதொரு) பிரயோசனத்தையுங் கருதாமல் எம்மை ஆயிரந்தரம் துதித்தத்தன்மையர்போலப் பலனுறுவார்கள. எ-று.

பாசுபதர் = பசுபதிவிரதம்பூண்டோர்; அறுவகையுட்சமயத்தினருளொரு வகையினர். (௪)

என்னை யேத்தி வணங்குதற்குக் காண்ட லரிய தென்றுான்று
மன்ன வாற்ற லிவ்விலிங்க தனையே வழிபா டியற்றிடுமின்
சொன்னேன் சொன்னேன முக்காலு மினை விலிங்கந் தொழுதிடுவோர்
மன்னு முததி தனிலநாளும வாழ்த லுணமை யுண்மையே.

(இ ள்.) எக்காலததிலும் எம்மைத் துதித்துப் பணிதற்குக் காணுதலருமையாகிய தனமையால் இவவிஸ்வநாத விலிங்கத்தையே (நீஙகள்யாவரும்) வழிபாடுசெய்யுங்கள்; சொன்னேன; சொனனேன; முக்காலுஞ் சொன்னேன். இத்தகைய இலிங்கததைப் பணிவோாகள் நிலைபெற்ற மோக்ஷபோகத்தில் எப்பொழுதும வாழ்நதிருப்பது சததியம! சததியம! எ-று. (ரு)

வினைபூட் டறுக்கு மிவ்விலிங்கந் தன்னை விழைவி னெண்ணாது
நினைப்பி னவாத மிருபபிறவிக் கொடிய பாவ வினைநீங்கு.
மனத்தின் விழைந்து வழிபடுவான் போதல் செய்யின் மற்றவர்கள்
கனைக்குங் கடலின விரிநதகன்ற கொடுந்தீ வினையின் கடல்கடப்பார்.

(இ-ள்.) (பிறவியாகிய) வினைத்தொடக்கை யொழிக்கும் இச்சிவலிங்கத்தைக் காமியார்த்தமாகத் தியானிக்காமல் (நிஷ்காமியமாக) தொழுதால், அவர்களுடைய பெரிய பிறவியாகிய கொடிய தீவினைதீரும். மனதில் ஒன்றை யாசைப்பட்டு வழிபாடுசெய்துவந்தால், அவர்கள் சத்திக்கின்ற சமுத்திரம்போலப் பரந்து அகன்றுள்ள கொடிய தீவினையாகிய துன்பசாகரத்தைத் தாண்டித் தொலைப்பார்கள். எ-று. (சு)

கருணை யோடு மிவ்விலிங்கங் காணடல் செய்பி னவரொளிதிற்
புரவி மகநூ றுற்றுபல னடைவா தீணடிம் புகலரிதாய்ப்
பரவ வருமா யிரராச சூய மாற்றும பலனடைவார
விரிநீ ராட்டிற் புரவிமகங் கோடி யாறறும பலன்மேவும.

(இ-ள்.) ஆசையுடனே இச்சிவலிங்கக்குறியைத் தெரிசித்தால், அவர்கள் இலேசாக நூறு அசுவமேதயாகங்கள் செய்தபலனைப் பெறுவார்கள். (அதனைத் தமது கையால்) பரிசித்தால், சொல்லுதற்கரிதாய்த் துதித்தற்குரிய ஆயிரம் இராசசூயயாகங்கள் இயற்றிய பலனை யெய்துவார்கள். பரவிய நீரால் அபிடேகித்தால், கோடி அசுவமேதயாகங்கள் ஆக்கிய புண்ணியம் பொருந்தும். எ-று. (எ)

இன்ன கடவு ளிலிங்கத்தின் மேனி குளிரப்ப வெழுந்தோங்கு
தென்னம் பொதியி னறுஞ்சாந்தத் தேய்வை கொட்டி னுங்கவாமே
லன்னம் பொருவு மரமகளிர் தெய்வச் சாநத மகிழ்நதணியப்
பொன்னங் துணர்க்கற் பகநீழ லரியா சனத்திற பொலிகதிருப்பார்.

(இ-ள்.) இத்தகைய தெய்வீகம்பொருந்திய சிவலிங்கப்பெருமானது திருமேனியானது குளிர்ச்சி யெய்தும்படி,தென்றிசையிலுள்ள மேலநோக்கியெழுந்த அழகிய பொதியாசலத்திற்றோன்றிய வாசனையுடைய சந்தனத்தா லபிடேகித்தால், அவ்வாறு செய்தவாகள தம்பேரில் அன்னத்தை யொதத (நடையையுடைய) அரம்பாஸ்திரீகள் தேவர் கலவையைச சந்தோஷித்துப் பூசும்படி பொன்போன்ற அழகிய பூங்கொத்துகளை யுடைய கற்பகவிருக்ஷத்தின நிழலிலே (இந்திரபட்டமுற்று) சிங்காசனத்தில் வீற்றிருப்பாாகள். எ-று.

சாந்தத்தேய்வை = அரைத்தசநதனம். (அ)

மணங்கொள் தூப மளிக்கின்றோர் மணங்கூர் தெயவ வுருவாவர்
கணங்கொள் தீப மெடுக்கின்றோர் கதிரகா லுடுவின் வடிவாவா
ரிணங்கு நறிய கருப்பூரத் தீப மினிதி னெடுததோாகள்
பணங்கொ ளரவ கங்கணததோன் படிவ மாகி வீற்றிருப்பார.

(இ-ள்.) வாசனைபொருந்திய தூபத்தைக் கொடுக்கின்றவர்கள் மங்கலகரமிகுந்த தேவவடிவெய்துவார்கள ; கூட்டமாகிய தீபார்த்திகளைச் செய்கின்றவர்கள ஒளிவீசும் நக்ஷததிரவடி வடைவார்கள்; நனமணந்தங்கிய கருப்பூராததியை இனிதாக எடுத்தவாகள் படத்தையுடையசாப்பகஙகணமணிந்த சங்கராது சாரூபமடைந்து வாழ்ந்திருப்பார்கள். எ று. (கூ)

ஆர்வ மோடு மின்னமுத மளிபபோர் நமது கயிலைவரை
சேர்வர் நித்த மாடலபல வியமுன் செய்வித் திடுமவர்தா
மூர்பொற் றிதலை பூத்தமுலை யரம்பை மாத ருவநதாட
வேர்முற் றியபூங் தருநீழற் குலிசப் படையோ னெனவிருப்பார்.

(இ-ள்.) ஆசையுடனே இனிய அமுதத்தை நிவேதிப்போர் நம்முடைய திருக்கைலாயமலையிற் சேர்வார்கள். நாடோறும் நடித்தல் - பல்வாச்சியஙகளை முழக்குவித்தல் (முதலியகருமங்களைச்)செய்வித்தவர்கள், பரவுகின்ற பொன்மயமாகிய தேமல்பூத்த தனங்களையுடைய அரம்பாஸ்திரீகள் ஆநந்தித்து நடிக்க அழகு

மிருந்த மலர்களையுடைய கற்பகவிருக்ஷத்தின் நீழலில் வச்சிராயுதமேந்திய இந்திரன்போல இருப்பார்கள். எ-று. (௧0)

நறைதூ மலரா லிவ்விலிங்கந் தன்னை நாளும் பணிவோரைத்
திறைதூ யுலக மொருமூன்றுஞ் சேவை செய்யு மீங்கிதன்பே
ரறைவோர் தம்பாற் கூற்றணுகா தன்பா னோக்கி யுவந்திடுவோர்
கறைதா ழரவக் குழையணிந்து கணத்தின் முதலா யினிதிருப்பார்.

(இ-ள்.) தேன்பொருந்திய பரிசுத்தமாகிய மலர்களால் இச்சிவலிங்கத்தை நாடோறும் (அருச்சித்துத்) துதித்தோரை மூவுலகி லுள்ளவர்களும் கப்பங் கொடுத்துப் பணிசெய்வார்கள். இச்சிவலிங்கத்தின்பெயரை (ஸ்ரீவிஸ்வநாதா என்று) செபித்தபேரிடத்தில் இயமன் வரமாட்டான்; அதனை ஆசையோடு தெரிசித்து அன்புசெய்வோர் விஷஞ் சொரியுஞ் சர்ப்பகுண்டலமணிந்து சிவகணங்கட்குத் தலைவராய் இனிதாக விருப்பார்கள். எ-று. (௧௧)

அலகில் புகழ்விச் சுவநாத வென்ன வொருகா லறைவோனை
இலகு நமது நல்லுருவென் றெண்ணி முத்தி யினிதளிப்போ
முலகம் புகழெண டிசைப்பாலர் பதமு மழியு முவந்துவந்து
பலகா லிதனைத் தொழுமவர்தம் பதமற் றழியா தழியாதால்.

(இ-ள்.) குற்றமற்ற கீர்த்தியையுடைய ஸ்ரீவிஸ்வநாதா! வென்று ஒருதரஞ் சொல்பவனை, பொருந்திய நமது நல்ல வடிவமென்று கருதி இனிதாக மோக்ஷங் கொடுப்போம். உலகத்தார் துதிசெய்யும் (இந்திரன் முதலாகிய) அஷ்டதிக்குப்பாலகரின் பதவிகளும் அழிந்துவிடும். மென்மேலுஞ் சந்தோஷித்து இச்சிவலிஙகத்தைப் பன்முறை பணிவோர் பெறும் பதவி ஒருபோது மழியாது. எ-று.

இலகுஞ்சுடர்விச் சுவநாதற் கிணையாங் கடவு ளிலிங்கமுநீர்
சுலவு மணிகன் னிகைக்கிணையாந் துகடீர் தெய்வ தீர்த்தமும்வான்
கலவ மஞ்ஞை நடம்பயிலுங் காசிக் கிணையா நன்னகரு
முலக மொருமூன் றினுமிலையீ துண்மை யுண்மை யுண்மையால்.

(இ-ள்.) சுடர்மயமாக விளங்கும் விஸ்வநாதலிங்கத்திற்குச் சமானமாகிய தெய்வீகம் பொருந்திய சிவலிங்கமும், நீரானது சுழல்கின்ற மணிகன்னிகைத்தீர்த்தத்திற்கு ஒப்பாகிய குற்றமில்லாத தெய்வீகம் பொருந்திய தீர்த்தமும், பெரிய கலாபத்தையுடைய மயிற்பறவைகள் நடனஞ் செய்கின்ற காசிக்ஷேத்திரத்திற்கு நிகராகிய நல்ல க்ஷேத்திரமும், திரிலோகத்திலும் (வேறொன்று) இல்லை. இது உண்மை! உண்மை! உண்மை! எ-று. (௧௩)

என்று கூறி யுமையொடு மெண்டோள் முக்க ணெம்பெருமான்
றுன்று கதிர்கால் சுடரிலிங்க மதனிற் சேரத் துழாய்முடியோன்
மன்றற் கமல வீட்டுறையு முரவோன் முதல் வானவர்கள்
நின்று பழிச்சிப் பழிச்சியென்று நீங்கா தாங்க ணுறைந்தனரால்.

(இ-ள்.) என்று எட்டுத் திருத்தோள்களையும் திரிநேத்திரங்களையுமுடைய எமது இறைவராகிய ஸ்ரீ விஸ்வநாதப்பெருமான் திருவாய்மலர்ந்தருளி, உமாதே

வியாருடனே, நெருங்கிய கிரணத்தொகுதியைச் சொரிகின்ற சோதிமயமாகிய சிவலிங்கக்குறியில் அந்தர்த்தானமாக, துளவமாலையணிந்த முடியையுடைய திருமால் - வாசனை தங்கிய தாமரை மலரில் வாசஞ்செய்யும் சதுமுகன் முதலாகிய தேவர்கள் எதிர்நின்று எப்பொழுதும் துதிப்பத் துதித்து நீங்காமல் ஆண்டு அமர்ந்திருந்தனர். எ-று. (கச)

கன்னற் காடு விளிம்புடுத்த காசி நகரின் பெருமையெலாம்
பன்னி விரிப்பின் முடியாதாற் சுருக்கி நினக்குப் பகர்ந்தனம்யா
மென்ன வுவந்து சூர்மாள விலங்கு வடிவேல் பணிகொண்டோன்
தென்னம் பொருப்பி னினிதுறையுஞ் சீர்சால் முனிவற் குரைத்தனனால்.

(இ-ள்.) கருப்பங்காட்டை வேலியாகக்கொண்ட காசிப்பட்டணத்தின் சிறப்பு முழுவதையும் விரித்துச்சொல்லிமுடியாதாகையால் யாம் நினக்குச் சுருக்கிக்கூறினோம் என்று, பிரகாசிக்கின்ற வேற்படையைச் சூரபன்மன் மாயும்படி செலுத்திய முருகப்பிரான் தென்றிசையிலுள்ள அழகிய பொதியமலையில் வீற்றிருக்கும் சிறப்புமிகுந்தஅகஸ்தியமுனிவருக்குச் சந்தோஷித்து அருளிச்செய்தனர்.

அலகில் புகழிப் பெருங்காதை நவின்றோர் கேட்டோ ரன்புற்றோர்
நிலவு பொழியுந் தனிக்கவிகை நிழற்ற வரியா சனத்தேறி
யுலக மூன்று மொருதிகிரி யுருட்டி யரசர் திறையளப்ப
மலரி னுறைபொற் றிருமடந்தை வாழ்த்த வினிது வாழ்ந்திருப்பார்.

(இ-ள்.) அளவில்லாத புகழையுடைய இப்பெரிய சரிதத்தைச் சொன்னவர்களும், கேட்டவர்களும், அன்புவைத்தவர்களும், சந்திரிகை வீசும் ஒப்பற்ற வெண்கொற்றக்குடை நிழலைச் செய்யும்படி சிங்காசனத்திலிருந்து, திரிலோகங்களிலும் தனது ஒரே (ஆக்கினை) சக்கிரத்தைச் செலுத்தி, மன்னர்கள் பகுதி கொடுக்கவும், தாமரைமலரில் வாழும் அழகிய இலக்குமிதேவியானவள் வாழ்த்தவும் இனிதாக வாழ்ந்திருப்பார்கள். எ-று. (கரு)

விச்சுவநாதர் மகிமை யுரைத்த - அ-ம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உசறுசு.

---

நூறாவது

## சேவியத் திறமுரைத்த அத்தியாயம்.

மூசி வரிவண் டிசைபயிலு முட்டாட் கமலத் தடமுடுத்த
காசி நகரி லுறையிலிங்கம் போற்று முறைமை கழறுகென
வாசின் மறைகள் முழுதுணர்ந்த மலய முனிவ னறைந்திடலும்
பூசல் புரியுங் கயனெடுங்கட் குறத்தி கொழுநன் புகலுமால்.

(இ-ள்.) கீற்றுகள் பொருந்திய வண்டுகள் மொய்த்துப் பண்பாடுகின்ற முள்ளடியையுடைய தாமரைத்தடாகங்களைப் புடைசூழ்ந்த காசிக்ஷேத்திரத்தில் வீற்றிருக்கின்ற சிவலிங்கமூர்த்தங்களைத் துதிசெய்யு முறைமையைத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று, குற்றமில்லாத வேதநூற்களையெல்லாமறிந்த பொதியாசலத்துள்ள அகத்தியமுனிவர் வினவவும், போர்செய்கின்ற சேல்மீன்போல நீண்டகண்களையுடைய குறவர்குலப்பெண்ணாகிய வள்ளிநாயகியார் காதலர் வாய் மலர்ந்தருளத்தொடங்கினர். எ-று. (க)

அசைத்த துகிலோ டலைபுரட்டு மணிகன் னிகையி லமர்ந்தாடி
யிசைத்த தேவர் முனிவரர்தென் புலத்தோர் கடன்க ளினிதாற்றிப்
பசுத்த புரவி நெடுந்தேரோன் றுருபா தித்தன் மால்பாந்தள்
விசித்த தண்ட பாணிமச்சேச் சுரன்றாள் முறையின் வியந்தேத்தி.

(இ-ள்.) அணிந்துள்ள வஸ்திரத்துடனே அலையைச் சுருட்டுகின்ற மணி கன்னிகைத் தீர்த்தத்தில் மூழ்கி, (நூல்களிற்) சொல்லிய தேவர் முனிவர்-பிதிரர் ஆகிய இவர்கடன்களை இனிமைபெறச் செய்து, பச்சைநிறந்தங்கிய எழுபுரவிகட்டிய நெடியதேரையுடையதுருபாதித்தன் - பெரிய சாப்பத்தைக்கட்டிய தண்டாயுதமேந்தியபெருமான்-மச்சேஸ்வரப்பெருமான் ஆகிய இவர்களது திருவடிகளைக் கிரமப்படி சந்தோஷித்துத் துதித்து. எ-று. (உ)

பின்னர்த் துண்டி விநாயகனைப் பெட்பி னோடு மினிதேத்தி
நன்னித் திலஞ்சூற் சங்குயிர்க்கு ஞான வாவி நீர்தெளித்துப்
பொன்னிற் பொலிந்த சடைநந்தி தார கேசன் மாகாளர்
பன்னற் கரிய புகழ்த்தண்ட பாணி பாதந் தினம்பணிக.

(இ-ள்.) அதன்பிறகு துண்டிவிநாயகப்பெருமானை அன்புடனே இனிதாகத் தோத்திரஞ்செய்து, கருவுற்றசங்குகள் நல்ல முத்துகளைப்பெறும் ஞானதீர்த்தத்தின் நீரை (சிரமேற்) புரோக்ஷித்துக்கொண்டு, பொன்போற்பிரகாசிக்கும் சடையையுடைய நந்தி யெம்பெருமான் - தாரகேசப்பெருமான் - மகாகாளர் - துதித்தற்கரிதாகிய கீர்த்திவாய்ந்த தண்டபாணி ஆகிய இவர்கள் திருவடிகளை நாடோறும் பணியக்கடவர். எ-று. (௩)

மழலைத் தும்பி பாட்டயர மதுவூற் றிருக்கு மலர்ப்பொதும்பிற்
குழவித் தூநீர்க் குடக்குரும்பை சிதற வாளை குதித்துகளும்
பழனத் தடஞ்சூழ் காசியகி லேசற் போற்றும் பரிசினியான்
மொழியக் கேட்டி பெறலரிய வருமா தவத்து முதலோனே.

(இ-ள்.) அடைதற்கரிய பெருந்தவஞ்செய்த அகத்தியமுனிவனே! மழலைத்தும்பிகள் பண்பாட, தேன் ஊற்றெடுத்துப் பாய்கின்ற பூஞ்சோலையில், இளமையாகிய மதுரம்பொருந்திய நீரையுடைய குடம்போன்ற தென்னங் குரும்பைகள் சிதறும்படி, வாளைமீன்கள் குதித்துப்புரள்கின்ற வயலிற் பொருந்திய தடாகஞ்சூழ்ந்த காசிநகரத்திலுள்ள ஸ்ரீ அகிலேசப்பெருமானைத் துதிசெய்யுந் தன்மையை இனியான் சொல்லக்கேட்பாயாக. எ-று.

மழலைத்தும்பி என்பது ஓசைநிரம்பாத குதலைச் சொல்லையுடைய இளந் தும்பிகளை. அகிலேசன் எனினும் விஸ்வநாதனெனினு மொனறு. (௪)

ஓங்கா ரேசன் றனையருச்சித் துவப்பி னுமைச் சோதரியி
னீங்கா தாடிக் கடன்கழித்து நிகரில் திரிவட் டபத்தீசன்
றீங்கில் கிருத்தி வாகேச னிரத்னேச் சுரன்சந் திரேச்சுரன்பார்
தாங்கு புகழ்க்கே தாரேசன் பிரமேச் சுரன்சொல் வீரேசன்.

(இ-ள்.) ஓங்காரேசப்பெருமானைப் பூசித்து, ஆசையுடனே மச்சோதரிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து (செய்யவேண்டிய) கடன்களைக்கழித்து, சமானமில்லாத திரிவட்டபத்தீசன் - கெடுதலில்லாத கிருத்திவாகேசன் - இரத்தினேசன்-சந்திரேசன் - உலகநிறைந்த கீர்த்தியையுடைய கேதாரேசன் - பிரமேசன் - வீரேசன். எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் ஒருதொடர். (௫)

அணிசேர் கருணைக் காமேச னருள்கூர் விசுவ கன்மேசன்
மணிகன் னேச னவிமுத்தேச் சுரனீங் கிவரை வரன்முறையிற்
பணிக காசி யகிலேசற் பணிக நாளும் பணியாரேற்
றணவா முத்தி தருகாசி யகன்று போகித் தளர்குவரால்.

(இ-ள்.) அழகியகிருபைபொருந்திய காமேசன - அன்புமிகுந்த விச்சுவகன்மேசன் - மணிகன்னேசன் - அவிமுத்தேசன் ஆகிய இவர்களைக் கிரமப்படி வணங்கக்கடவர். தினந்தோறும் காசி அகிலேசப்பெருமானைப் பணியக்கடவர். (அவ்வாறு) நாடோறும் பணியாராகில் நீங்காதமோக்ஷத்தைக்கொடுக்குங் காசிப் பதியை விலகிச்சென்று மனம்வருந்துவர். எ-று. (௬)

இன்ன வீசர் தமைமுறையி னிறைஞ்சி னபர பக்கத்து
முன்னர்த் திதியை முதற்பதினான் களவுந் தொழுக வஃதின்றேற்
பன்னு மீசர் பதினல்வர் தமையு மருளாற் பதினான்கு
தன்னி லேனுந் தொழவேண்டு மென்ன மறைகள் சாற்றுமால்.

(இ-ள்.) இத்தகைய சிவலிங்க மூர்த்திகளை முறைப்படி பணிந்தால், அபரபக்கத்திலே பிரதமைத்திதியை முதலாகக்கொண்டு (சதுர்த்தசியாகிய) பதினான்காந் திதி வரையில் (தினந்தோறும்) பணியக்கடவர். அவ்வாறில்லையாயின், சொல்லிய மூர்த்திகள் பதினல்வரையும் அன்புடனே பதினான்கு திதிகளிலாயினும் வணங்கவேண்டுமென்று வேதங்கள் விளம்புகின்றன. எ-று. (௭)

இருநான் கிலிங்க மின்னுமுள கேத்திரேச் சுரன்பா ருவதீச
னருள்கூர் பசுப தீச்சுரன்கங் கேச னரும தேசனன்பு
தருமோங் கொளிய கபர்த்தீசன் சதீசன் தார கேச்சுரன்முன் [வ்.
தெருளா லுணர்ந்தட் டமிதொறும்போய்ச் சேவை செய்ய வேண்டுமா

(இ-ள்.) (இவையேயன்றி) இன்னும் எட்டுச் சிவலிங்கமூர்த்தங்க ளிருக்கின்றன. க்ஷேத்திரேசன் - பார்வதீசன் - கிருபைமிகுந்த பசுபதீசன்-கங்கேசன்-நருமதேசன் - அன்பைத் தரும் பேரொளி வாய்ந்த கபர்த்தீசன் - சதீசன்-தார

கேசன் (ஆகிய இவர்களது) திருவடிகளைப் பத்தியோடு தியானித்து அஷ்டமித் திதிகளிற் சென்று தெரிசிக்கவேணடும், எ-று. (அ)

தடங்கொள் வரணை தனிலாடிச் சயிலே சனையுஞ் சங்கமத்திற்
படிந்து சங்க மேசனையுஞ் சுவல வாவி தனிற்படிந்தாங்
கடைந்த சுவலே சனையுமுத்தி யருள்கூர் மந்தா கினிப்புனலிற்
குடைந்து புகழ்மத் தியமேசன் றனையுந் தொழுது கைகூப்பி.

(இ-ள்.) இடங்கொண்டுள்ள வரணைநதியில் ஸ்நானஞ்செய்து சயிலேசனையும், சங்கமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சங்கமேசனையும், சுவலவாவியில் மூழ்கிச் சுவலேசனையும், மோக்ஷத்தை யநுக்கிரகிக்கும் மந்தாகினி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து புகழ்பெற்ற மத்தியமேசனையும் வணங்கிக் கைகுவித்து. எ-று.

சங்கம மென்றது வரணை நதியும் அசியுஞ் சங்கம முறும் இடம் என்க.

இதுமுதல ஐந்துபாடல்கள் குளகம். (௯)

பூசை புரிந்தாங் கிரணியகற் பத்திற் படிந்தப் பெயர்புனைந்த
வீசன் றனையு முயாமணிகன் னிகைதோய்ந் தீசா னேசனையும்
பேசு புகழ்கோப பிரோகத்திற் படிந்தப் பெயர்மெய்க் கடவுளையு
மாசில கபில மடுமூழ்கி யிடபக் கொடியோ னையும்வாழ்த்தி.

(இ-ள்.) பூசைசெய்து, இரணியகருப்பதீர்த்தத்திலே தோய்ந்து, இரணியகருப்பேசப்பெருமானையும், உயர்வாகிய மணிகன்னிகைத் தீர்த்தத்திலே படிந்து ஈசானேசனையும், சொல்லத்தக்க கீர்த்தியையுடைய கோப்பிரோகதீர்த்தத்திலே நீராடி அந்தப் பெயர்புனைந்த ஈசனையும், குற்றமில்லாத கபிலதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து இடபக்கொடியையுடைய கபிலேசனையும் துதித்து. எ-று (௧௦)

மறைக ளோது முபசாந்தி மடுவி லாடி யுபசாந்தி
யிறைவன் றனையு மெழிற்பஞ்ச சூட வாவி யினிதாடி
நறவு துளிதூங் கிதழிபுனை சேட்டே சனையு நற்கடற்பேர்
பெறுகூ பத்திற் படிந்தாங்க ணுறைந்த பெருமா னையுமேத்தி.

(இ-ள்) வேதங்கள் கூறுகின்ற உபசாந்தி தீர்த்தத்தில் தோய்ந்து உபசாந்தீசனையும், அழகிய பஞ்சசூட மென்னும் தீர்த்தத்தில் இனிதாக மூழ்கி, தேன்துளிக்கின்ற கொன்றைமாலையணிந்த சேட்டேசனையும், நல்ல கடற்கூபதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஆங்கு வசிக்கும் பெருமானையும் துதிசெய்து. எ-று.(௧௧)

மகதே வுறைபொற் கினகாத்து வாவிதோய்ந்தவ் விறைவனையுந்
தகைசால் தருசுக் கிரேசர்முன்னர்த் தடத்திற் படிந்தக் கடவுளையுந்
துகடீர் தண்ட காதத்திற் றோய்ந்து வியாக்கி ரேசனையு
முகில்வாய் மடுக்குஞ் சவுனகசுண் டத்தி னெங்கு புனல்மூழ்கி.

(இ-ள்.) மகாதேவலிங்கம் எழுந்தருளியுள்ள அழகிய திருக்கோயிலின் தீர்த்தத்தில் மூழ்கி அப்பெருமானையும், மேம்பாடுதோத்தக்க சுக்கிரேசலிங்கத்தின் முன்னுள்ள தடாகத்தில் ஸ்நானஞ்செய்து அத்தலைவனையும், குற்றம் நீங்கிய

தண்டகாததீர்த்தத்தில் தோய்ந்து வியாக்கிரேசனையும், மேகஙகள் (நீர்) உண்ணு கின்ற சவுனக தீர்த்தத்தின் பெருகுகின்ற நீரில் படிந்து. எ-று. (௧௨)

மூற்றாக் குறுத்து முளைத்திங்கள் முடித்த சவுன கேசனையுங்
கற்று ரிதய மலாகளிப்பக் களிகூா சமபு கேசனைய
முற்று தாவி னபாபக்கத் துயர்முற் றிதியை முதற்றொடங்கி
மற்றோர் பதினுன் களவேத்தி வணங்கு மவர்வீ டடைவாரே.

(இ-ள்.) மிக்க இளம்பிறைச்சந்திரனைச் (சடைக்கற்றையிற்)சூட்டியுள்ள சவுனகேசனையும், (வேதநூல்களைப்) படித்தவரது இதயதாமரை களிப்பெய்தும் படி ஆநந்தமிகுகின்ற சம்புகேசனையும், முழு அன்புடன் அபரபக்கத்தின் பிரத மைத்திதிமுதல் பதினுன்குதிதிவரையில துதித்துப் பணிபவர்கள் மோக்ஷமடை வார்கள். எ-று. (௧௩)

அறைவ லின்னு மீசர்பதி னொருவ ருளராக் கினித்திரப்பேர்
பெறுவா வியினிற படிந்தாக்கி னித்திரேச் சுரனறண பிறைவேணி
யுறுவ சீசன் விளங்குமகி லேச னுஙகு சடாமீசன்
பொறிவா ளரவ கங்கணதநுப் புனைதாரப் பார பூதேசன்.

(இ-ள்.) இனனும்சொல்கின்றேன், (இவரேயன்றிப்) பதினொருமூர்த்திக ளிருக்கின்றனர். ஆக்கினிதநிரதீர்த்தத்தில ஸ்நானஞ் செய்து ஆக்கினிதநிரேச் சுரன் - தண்ணியபிறைச்சநதிரனையணிநத சடையையுடைய உருவசீனன் - பிர காசிக்கினற அகிலேசன் - உயர்வாகிய சடாமீசன் - புள்ளிவாய்நத ஒள்ளிய சர்ப் பத்தைக் கஙகணமாகவும மாலையாகவும் தரிதத பாரபூதேசன். எ-று.

இதுமுதலிரண்டுபாடல்கள ஒருதொடா. (௧௪)

புனிற்று மடமா னிடனேநது மிலாஙக லேசன் புராந்தகனன்
மனப்பி ரகாசேச் சுரன்பிரிதி கேசன் மாத லேசனவண்டு
கனைக்கு மிதழி புனைவேணித் திலவன் னேசன் கழலிணைகள்
நினைத்து முறையிற் சேவைசெய்யு மவரே முத்தி நெறிகாண்பார்.

(இ-ள்.) மிக்க இளமைதஙகிய மானை இடத்திருக்காததேந்திய இலாங் கலேசன - புராந்தகேசன் - நல்லமனதையுடைய பிரகாசேச்சுரன் - பிரிதிகேச ன் - மாதலேசன - வண்டுகளொலிக்கும் கொன்றைமலர்சூடிய சடையையுடைய திலவன்னேசன் (ஆகிய இவர்களது) திருவடிகளைததியானித்து, கிரமப்படி தெரி சிப்பவர்களே மோக்ஷவழியையடைவாாகள். எ-று. (௧௫)

கருமபுங கழையு நிகாமெனறோட் காமா கவுரி சேவைமுறை
விருமபிக் கேட்டி சுக்கிலபக் கத்தின் மேய திரிதிகையி
லரம்பை குலைத்து முகங்கவிழு மகன்கோப் பிரோரங் தனிலாடிச்
சுரும்புண் கூந்தற் கருநெடுங்கட் சுகசிக் காளி தாள்போற்றி.

(இ-ள்.) கரும்பையும் மூங்கிலையுமொத்த மெல்லியதோளையுடைய அழ கிய உமாதேவியின் தெரிசனமுறையை விருப்புற்றுக் கேட்பாயாக. சுக்கிலப்க்க த்திற்பொருந்திய திரிதிகைத்திதியிலே, வாழைமரங்கள் குலைவிட்டுத் தலைசாய்க்

கும விசாலயாகிய கோப்பிரோக தீர்த்தத்தில்மூழ்கி, வண்டுகள் மொய்க்கின்ற அளகபாரதத்தையும் கறுத்து நீண்ட விழியையு முடைய சகதிக்காளியம்மையின் திருவடியைத் துதித்து. எ று.

இதுமுதல் நான்கு பாடல்கள் குளகம். (கசு)

சேட்ட வாவி தனிற்படிந்து சேட்ட கவுரி தனையுமுத்தி
காட்டு ஞான மடுமூழ்கிச சௌபாக் கியநற் கவுரியையும்
வீட்டி னின்ப மினிதருள்சிங் கார விமலை யருள்கோயில
மோட்டு வாவி படிநதவள்பொன் முளரி மலர்த்தா ளையுமேத்தி.

(இ ள்.) சேட்டதீர்த்தத்திலே தோய்ந்து சேட்டகௌரியம்மையையும், முத்தி வழியைக் காண்பிக்கத்தக்க ஞானதீர்த்ததில் மூழ்கி நல்ல சௌபாக்கிய கௌரியையும், மோக்ஷானந்தத்தை இனிதாகப்பிரசாதிக்கின்ற சிங்காரகௌரி யம்மையின் கிருபைதங்கிய திருக்கோயிலிலுள்ள பெருமைபொருந்திய தீர்த்தத் தில் மூழ்கி அவ்வம்மையாரது பொற்றாமரை மலர்போன்ற திருவடியையுந் துதி செய்து. எ-று. (கஎ)

வெண்ணந் துயிர்த்த முத்தமிருள் விழுங்கு கோட்டு விசாலகங்கை
தணணம் புனவிற் றோய்நதுவிசா லாட்சி தனையு மருவினையா
மெண்ணந் தொலைக்கும் லளிதமடு மூழ்கி லளித கவுரியையும்
வணணந் திகழும் பவானிதடத் தப்பேர் மடமா னையுமேத்தி.

(இ-ள்.) தாவள்யமாகிய சங்குகள் பெற்ற முத்துகள் இருளையொழிக்கி ன்ற கலைகளையுடைய விசாலம்பொருநதிய கங்கையாகிய அழகிய தண்ணிய தீர்த்தத்தில் படிந்து விசாலாக்ஷியம்மையாரையும், அரியதீவினையாகிய எண்ண ங்களை யொழிக்கும் இலளிததீர்த்தத்தி லாடி இலளிதகௌரியம்மையாரையும் அழகுவிளஙகும் பவானி தீர்த்தத்தில் (மூழ்கி) மான்போன்ற (விழியை யுடைய) பவானிகௌரியையும் துதிசெய்து. எ-று. (கஅ)

விந்து தீர்த்தப் புனலாடி வியன்மங் கலப்பேர்க் கவுரியையுந்
தந்த முறையிற் பணிந்துமலர்த் தையல் பாத மலர்க்கமலஞ்
சிந்தை செய்து சதுர்த்திதொறு மலர்தூய் வணங்கிச் சேவைசெயி
னந்தி லதனுற் கொடுங்கூற்ற மடையு நகரி லடையாரால்,

(இ-ள்.) விந்து தீர்த்த சலத்திலே தோய்ந்து மங்கலகௌரியம்மையை யும், தத்தமக்குரிய கிரமப்படிவணங்கி, இலக்குமியம்மையின் பாததாமரையைத் தியானஞ் செய்து, சதுர்த்தித திதிகள்தோறும் மலர்களா லருச்சித்துப் பணிந்து சேவை செய்தால், அதனுலே கொடிய இயமபுரத்தை (ஒருபோதும்) சேரமாட் டார்கள். எ-று.

"அந்திலாங் கசைகிலே யிடப்பொரு ளாகும்"—என்றார். (கக)

மகிழ்கூர்ந் தினிது மங்கலவா ரத்தில் வயிர வனைத்தொழுக
புகழ்ஞா யிற்றிற் கன்னியொடு பொருந்து மஞ்ஞான் றினிற்புதல்வ
ரிகழா தேத்துந் துலாமியைந்த வவ்வா ரத்தி லிருள்சீக்கும்
பகலோற் பணிக கொற்றவையைப் பணிக நவமி யட்டமியில்.

(இ-ள்.) மகிழ்ச்சியிருந்து மங்கலவாரத்திலே வயிரவப்பெருமானை இனிதாகப்பணியக்கடவர். புகழ்பொருந்திய ஞாயிற்றுக்கிழமைகளில் (சூரியன கன்னியாராசிபொருந்திய) புரட்டாசிமாதத்திலும், மைந்தர்கள் மகிழ்ந்து துதிக்கும்(சூரியன் துலாராசிகூடிய)அற்பசிமாதத்தில் அவ்வாதிவாரத்திலும் அந்தகாரத்தையகற்றும் சூரியனை வணங்கக்கடவர். நவமி அஷ்டமித்திதிகளிற் துர்க்காதேவியைத் தொழக்கடவர். எ-று (உ0)

தடவுப் பசுந்தாள் நெடுமுட வுத் தாழை புடைசூழ் வயற்காசிக்
கடவுட் கோயி லகத்துணிகழ் சேவை கேட்டி வைகறையி
லடைவிற் புனலாட் டயர்ந்துபஞ்ச வேழ முகவற் பணிந்ததற்பின்
விடமுற் றியகார் மணிமிடற்றெம் மகிலே சன்றாள் வியந்தேத்தி.

(இ-ள்.) பெரிய பசுமையாகிய அடியையுடைய நீண்ட முடத் தென்னமரங்கள் புடைசூழ்ந்த வயலையுடைய காசிக்ஷேத்திரத்திலுள்ள தெய்வீகம் பொருந்திய திருக்கோயிலுக்குள் சேவை செய்யவேண்டிய முறைமையைக் கேட்பாயாக; விடியற்காலத்தில்நீராடி நியமனப்படி பஞ்சவேழமுகவனைப் பணிந்து அதன்பின்னர் கரிய ஆலாலம் பொருந்திய அழகிய கண்டத்தையுடைய எமது அகிலேசப்பெருமானது திருவடியைச் சந்தோஷித்துத் துதித்து. எ-று.

"பஞ்சவேழமுகவன்" என்றது யானைமுகங்களைந்துள்ள சிந்தாமணிவிநாயகரை. இவர் பிரபாவம் சிறப்புநூற்கடலுட் காண்க. "பஞ்சவேழமுகவர்ப்பணிந்து" எனப் பாடமாயின், "ஆசார கேசசிந்தா மணிகபர்த்தி சித்திவிநா யகனென்றுய- தேசாரும் விநாயகரோ ணவர்" என முன்கூறிய ஐங்கரக்கடவுளர் ஐவரையெனக் கொள்க.

இதுமுதல் பன்னிரண்டு பாடல்கள் குளகம். (உக)

மதிய முரிஞ்சு நிருவாண மணிமண் டபத்தி லிருந்துமறை
விதியி னகத்து நிகழ்சேவை புரிவல் கொடுந்தீ வினையகற்றிக்
கதியின் றருளல் வேண்டுமெனக் கருதி மவுன மொடுமலர்த்தேன்
பொதியு மணிகன் னிகைநறுந்தண் புனலி னன்பு புரிந்தாடி.

(இ-ள்.) சந்திரனை யளாவிய அழகிய நிர்வாணமண்டபத்திலிருந்து, வேதாகமமுறைப்படி தெரிசனஞ் செய்கின்றேன்; (அடியேனது) கொடிய தீவினைத் தொடக்கை யொழித்து இப்பொழுது நற்கதியை யநுக்கிரகிக்கவேண்டு மென்று மௌனமாகத் தியானித்து, மலர்களிற் பொருந்திய தேன் பொதிந்த மணிகன்னிகையாகிய வாசனைதங்கிய தண்ணியநீரில் ஆசைகொண்டு ஸ்நானஞ்செய்து. எ-று.

மணிகன் னிகையை மலர்தூவி வணங்கிக் கம்ப ளேச்சுவத
வினையி லிலிங்கம் புயகேசன் பருவ தீச னுலகெல்லாம்
பணிய வருகங் கேசனன்பாம் லளிதா கவுரி பணைநெடும்பொற்
றிணிதோட் சராசந் தேச்சுரன்சோ மேசன் வராகஞ் சிறந்தேத்தி.

(இ-ள்.) மணிகன்னிகைத் தீர்த்தத்தை மலரானருச்சித்துப் பணிந்து, சமானமில்லாத கம்பளேச்சுவதலிங்கப்பெருமான்-புயகேசப்பெருமான் - பருவதீ

சப்பெருமான் - உலகமுழுவதும் தொழும்படித்தோன்றிய கங்கேசப்பெருமான்- அன்பமைந்த இலளிதாகௌரியம்மை - இளைதத கெடிய பொன்மயமாகிய வலிய தோளையுடைய சராசந்தேசப்பெருமான் - சோமேசப்பெருமான் - வராகலிங்கப் பெருமான (ஆகிய இவர்களை) சிறப்போடு துதித்து. எ று. (உ௩)

பிரமேச் சுரனைப் புகழகத்தீச் சுரனைக் கச்சிப பேசனையோங்
கரிகேச் சுரனை வயித்தியநா தனைமெய்த் துருவே சனையிலங்கு
விரிதார்க் கோகன் னேச்சுரனை யாட கேசன் றனைவிதிக்குந்
தெரியா வுருவாந் தடாகேசன் றனையாங் குவகை சிறந்தேத்தி.

(இ-ள்.) பிரமேச்சுரனையும், புகழ்பொருந்திய அகத்தீச்சுரனையும், கச்சியபேசனையும், (சீர்) ஓங்கிய அரிகேச்சுரனையும், வயித்தியநாதனையும், உண்மையாகிய துருவேசனையும், பிரகாசிக்கின்ற பரந்த மாலையையணிந்த கோகன்னேச்சுரனையும், ஆடகேச்சுரனையும், பிரமதேவனுக்குந் தெரியப்படாத திருவுருவையுடைய தடாகேச்சுரனையும், அவ்விடத்தில் ஆநந்தமிகுந்து துதிசெய்து. எ-று.

பொன்னங் கொன்றை புனைகீக டேசன் பார பூதேசன்
மின்னுக் கதிர்வேற் சித்திரகுத் தேசன் விறற்சித் திரபூதன்
பன்னு மறையி னுபநிடதப பொருளாம் பசுப தேச் சுரனீள்
கன்னங் கரிய மணிமிடற்றுப் பிதாம கேசன் கழல்போற்றி.

(இ-ள்.) பொன்னிறமாகிய அழகிய கொன்றைமாலையணிந்த கீகடேசன்- பாரபூதேசன் - பிரகாசிக்கின்ற கிரணங்களையுடைய வேலேந்திய சித்திரகுத்தேசன் - சித்திரபூதேசன் - வேதத்திற் சொல்லிய உபநிடதப் பொருளாகிய பசுபதேச்சுரன் - மிகக் கருமையாகிய நீலகண்டத்தையுடைய பிதாமகேசன் (ஆகிய இவர்களது) திருவடிகளைத் தோத்திரஞ்செய்து. எ-று. (உ௫)

கலசேச் சுரன்சந் தேச்சுரன்வீ ரேசன் விஸ்வேச் சுரன்கருணை
யிலகுஞ தேசு வளர்சிந்தா மணியைங் கரன்வா னிமையோர்கள்
மலர்தூஞ் சேனு விநாயகன்சீர் வசிட்டன் வாம தேவனவரைச்
சிலையார் புரமூன் றழலூட்டு திரிசந் தேசனடி போற்றி.

(இ-ள்.) கலசேச்சுரன் - சந்தேச்சுரன் - வீரேச்சுரன் - விச்சுவேச்சுரன் - கிருபைவிளங்கும் ஞானமயமாகிய சிந்தாமணிவிநாயகன் - பெருமைதங்கிய தேவர்கள் மலரானருச்சிக்கும் சேனுவிநாயகன் - சீர்த்தியுடைய வசிட்டேச்சுரன் - வாமதேவேச்சுரன் - மலைவில்லால் திரிபுரங்களைத் தீயூட்டிய திரிசந்தேசன் (ஆகிய இவர்களது) திருவடிகளைத் தியானஞ்செய்து. எ-று. (உ௬)

தள்ளா விழுச்சீ ரொடுமோங்கு விசாலாட் சேசன் தருமேசன்
வெள்வே லேந்து விச்சுவபா குவனு சார விநாயகன்று
ரொள்வாள் விருத்தா தபன்சதுர்வக் கிரேசன் பிரமீச் சுரனுடைந்து
கள்வா யுமிழ்தார் மணப்பிரகா சேச னணிபொற் கழல்வாழ்த்தி.

(இ-ள்.) நீக்கப்படாத மேம்பட்ட சீர்த்தியோடுயர்ந்த விசாலாட்சேசன்- தருமேசன் - வெள்ளிய வேலேந்திய விச்சுவபாகேசன் - ஆசாரவிநாயகன் -

(வெற்றி) மாலைசூடிய ஒள்ளிய வாளைத்தாங்கிய விருத்தாதபேசன் - சதாவக்கிரேச ன-பிரமீச்சுரன்-(முறுக்கு)உடைந்து வாயினின்று தேனைச்சொரியும் மலர்மாலை தரித்த மனப்பிரகாசேசன் (ஆகிய இவர்களது) அழகிய பொன்போன்ற திருவடிகளைத்துதித்தது. எ-று. (உஎ)

ஏற்றுக் கொடியேந் தியவீசா னேசன் சண்டி சண்டீசன்
போற்று பவானி சங்கரனீள் புழைக்கைத் துண்டி விநாயகன்வெங்
கூற்றை யுதைத்த பொலங்கழற்றூட் சராசந் தேசன் கொன்றைநற
வூற்று சடிலத் திலாங்கேசன் குலீச்சு ரன்று ளுவந்தேத்தி.

(இ-ள்.) இடபக்கொடியைத்தாங்கிய ஈசானேசன் - சண்டி - சண்டீசன - துதிக்கத்தக்க பவானியம்மை - பவானீசன் - நெடிய துதிக்கையையுடைய துண்டிவிநாயகர் - கொடிய காலனையுதைத்த அழகிய வீரகண்டாமணிதரித்த திருவடியையுடைய சராசந்தேசன் - கொன்றைமலரின் தேனைச்சொரிகின்ற சடையையுடைய இலாங்கேசன் - குலீச்சுரன் (ஆகிய இவர்களது) திருவடிகளைச் சந்தோஷித்துத்துதித்து. எ-று. (உஅ)

பரிதிச் சுடர்வே லுயர்த்தருள்பார்ச் சேச னருட்பாத் திரவேசன்
பிரதிக் கிரேச னிட்களங்கன் மார்க்கண் டேசன் பெய்ம்மலர்ப்பூந்
தெரியற் பரிசா சேச்சுரன்கங் கேச னிவர்தாள் சேவைசெய்யா
வருவிப் பசுந்தே னலைபுரட்டு ஞான வாவி தனிலாடி.

(இ-ள்.) சூரியனபோலக் கிரணங்களைசசிந்தும் வேலாயுதமேந்திய பாரச்சேசன் - கிருபை தங்கிய பாத்திரவேசன் - பிரதிக்கிரேசன் - நிட்களங்கேசன - மார்க்கண்டேசன் - (தேன்) சொரியும் மலர்மாலை தரித்த பரிசாசேசன் - கங்கேசன் - இவர்களது திருவடிகளைத் தெரிசனஞ் செய்து, அருவிபோலிழியும் பசிய தேனை அலைகள் புரட்டுகின்ற ஞானதீர்த்ததில் ஸ்நானஞ்செய்து. எ று. (உகூ)

நந்தி கேச னருட்டார கேச னுலக நன்குதொழ
வந்த மகாகா ளேசன்விறற றண்ட பாணி மகேசன்வினைப்
பந்த மறுக்கு முத்தீசன் விடையூர் வீர பத்திரேச
னைந்து வேழ முகனவிமுத் தேசனிவரை யடிபோற்றி.

(இ-ள்.) நந்திகேசன் - கிருபைபுரியுந் தாரகேசன் - உலகத்தார் நன்குகப் பணியும்படி போந்த மகாகாளேசன் - பராக்கிரமம் பொருந்திய தண்டபாணிக்கடவுள் - மகேசன் - தீவினைத்தொடக்கை யொழிக்கும் முத்தீசன் - இடபவாகனமுடைய வீரபத்திரேசன் - ஐந்து வேழமுகமுடையவர் - அவிமுத்தீசன் இவர்களது திருவடிகளைத் துதிசெய்து. எ று. (௩௦)

வளங்கொள் காசி யகிலேசன் திருமுன் போந்து மவுனமொழிக்
துளங்கொள் மறையின் பொருளோதி யின்ன சேவை யுஞற்றினன்யான்
விளங்க வெண்பா லருள்புரிய வேண்டுமெ விமல வெனவேத்தித்
துளங்கு முயர்தென் மண்டபத்தி னிருந்து போந்த துயர்நீங்கி.

(இ-ள்.) வளப்பம் பொருந்திய காசி அகிலேசப் பெருமானது திருச்சந்நி தானத்தின முன் வந்து மௌனம் நீங்கி மனதிற்கொண்ட வேதபபொருளால் தியானஞ்செய்து நிமலஸ்வரூபியே! அடியேன் இத்தகைய சேவையைச் செய் தேன. அடியேனிடத்தில தேவரீர் அநுக்கிரகஞ் செய்யவேண்டும் என்று தோத்திரஞ்செய்து பிரகாசிக்கின்ற உயர்வாகிய அழகிய மண்டபத்திலிருந்து நட ந்துவந்த துயரததை யொழிந்து. எ-று.

தெனமண்டபம் என்பதறகுத் தென்றிசையிலுள்ள மண்டப மெனினும் பொருந்தும். "துளங்கு முததி மண்டபத்தி னிருந்து" எனவும் பாடம். (௩௧)

பினனாத் தமது மனைகககேகிற் பாவ நீங்கிப் பேரின்ப
மன்னி யிருப்பர் பதினொருந் திதியிற் கடவுண் மாதீர்த்தந
தன்னி லாடி மணிவண்ணன் சேவை தாழா தியற்றுவரேல்
முன்ன வரிய பேரின்ப முத்தி நெறிக்கு வழியாமால்.

(இ-ள்.) அதன்பிறகு தமதுவீட்டிற்குச் செல்வாராகில் (தாம்செய்த) பாவ மொழிந்து பேரின்பத்தில் நிலைபெற்று வாழ்வார்கள். பதினொன்றாவதாகிய ஏகா தசித் திதியிலே தெய்வீகம் பொருந்திய மகாதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து நீலம ணிபோன்ற திருமேனிவாய்ந்த திருமால் சேவையை (முறை) தவறாது செய்வா ராகில், எண்ணுதற்கரிதாகிய பேரின்பமென்று சொல்லும் மோக்ஷமார்க்கத்திற்கு வழியுண்டாகும். எ-று. (௩௨)

குலதம் பத்தைப் பூரணையி லுவாவிற் போற்றிக் கைகூப்பி
னலகை வருத்தா சேவையன்றி வீழ்நாள் கழித்த லாகாவா
னிலவு தினதோ றிருபோது நெடுநீர்க் கங்கை மாநதிதோய்ந்
துலக மேத்து மகிலேசன் பொற்றாள் வணங்கி யுறைகவே.

(இ-ள்.) குலதம்பத்தைப் பூரணை அமாவாசைகளில் துதித்துக் கைகுவித் தால் பசாசுகள் துன்பப்படுத்தமாட்டா. சிவதெரிசனமில்லாமல் நாட்களை வீணு கக்கழித்தல் கூடாது. விளங்குகின்ற நாடோறும் காலையுமாலையும் நெடிய நீர்மய மாகிய பெரிய கங்காநதியில் மூழ்கி, உலகத்தார் துதிசெய்யும் ஸ்ரீ அகிலேசப்பெரு மானது அழகிய திருவடிகளைப் பணிந்து வசிக்கக்கடவர். எ-று. (௩௩)

காவி மேய்ந்து கள்ளொழுகக் கயவாய் மேதி கிடந்துபிர்க்கும்
வாவி சூழ்ந்த காசிநகர் வதிந்து சேவை செய்யாமல
யாவ ருறைந்தா ரவர்மரபி னிறந்தோர் சிறிது மருளின்றிப்
போவ ரென்ன வெஞ்ஞான்று மருமா மறைகள் புகலுமால்.

(இ-ள்.) நீலோற்பலத்தைப் புசித்துத் தேன் சிந்தும்படி பெரிய வாயை யுடைய எருமைக்கடாக்கள் இருந்து மூச்செறிகின்ற தடாகங்கள் புடைசூழ்ந்த காசிக்ஷேத்திரத்தில் வாசஞ்செய்து,சிவதெரிசனஞ்செய்யாமல் எவர் (வீணாக) வசி க்கின்றார்களோ, அவர் வமிசத்திலிறந்தவர்கள் சற்றேனும் ஈஸ்வரகடாக்ஷமில்லா மற் போவார்களென்று பெருமை பொருந்திய அரிய வேதங்கள் எப்போதும் கூறும். எ-று. (௩௪)

உலகு புகுதத் திறந்தகடை யோங்கு மதிற்கா சியிலுறைந்து
மலைநீர் புரட்டு கங்கைதனி லாடி யகிலே சனைப்பணியார்
கொலைசெய் பிறைவா ளெயிற்றழல்கட் கூர்முத் தலைவேற் காலனெனு
மிலகு மணிச்சூட் டலங்குதுத்திப் பாந்தள் வாய்ப்பட் டிறந்துழல்வார்.

(இ-ள்.) உலகத்தினர் பிரவேசிக்கும்படி திறந்துள்ள கடைவாயையுடைய உயர்ந்த மதில்சூழ்ந்த காசிநகரத்திலிருந்தும், அலைகள் நீரைப்புரட்டுகின்ற கங்காதீரத்தில் தோய்ந்து ஸ்ரீ அகிலேசப்பெருமானை வணங்காதவர்கள், கொலைத்தொழில் புரியும் பிறைச்சந்திரன்போன்ற வெள்ளிய (வக்கிர) தந்தத்தையும், தீக்கண்ணையும், கூர்மை வாய்ந்த முத்தலை வேலாகிய சூலப்படையையுமுடைய எமனென்றுசொல்லப்படும், மாணிக்கத்தை உசசிக்கொண்டையிற் கொண்டு பிரகாசிக்கின்ற படப்பொறிவாய்ந்த பாம்பின்வாயிலகப்பட்டு இறந்து வருந்துவர். எ-று.

அணிபொற் கனத்த தகடுபொதிந் தலங்கு சோதிக் கதிரெறிக்கு
மணிகன் னிகையிற் றினமூழ்கி யகிலே சன்றாள் வழுத்துகின்றோ
ரிணையில் கடவுட் டீர்த்தங்கள் யாவும் படிந்து சேவைசெய்தார்
தணிவி லுயர்பே ரின்பமுத்தி சார்வ ருண்மை யுண்மையே.

(இ-ள்.) அழகிய பொன்னாலாகிய கனத்த தகட்டினால் மூடப்பட்டுப் பிரகாசிக்கும் சோதிமயமாகிய கிரணங்களை வீசும் மணிகன்னிகைத் தீர்த்தத்திலே தினந்தோறும் ஸ்நானஞ்செய்து ஸ்ரீ விஸ்வநாதப் பெருமானது திருவடிகளைத் துதிசெய்வோர் சமானமில்லாத தெய்வீகம்பொருந்திய தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் மூழ்கி (எல்லாச் சிவமூர்த்திகளையும்) சேவைசெய்தவராவார்கள். (அவர்கள்)கெடுதலில்லாத உயர்ந்த பேரின்பமாகிய மோக்ஷத்தைச் சேர்வார்கள், சத்தியம் - சத்தியம். எ று. (கூசு)

வேறு.

யாழிசை மிடற்ற மாங்குயி லகவு மிலைதலை விரித்ததண் சோலை
சூழ்கிடந் தோங்கு காசிகண் டத்தின் றொடர்புயர் வதனுடை சிறப்பு
மாழ்கடற் பரப்பின் கண்ணறி வரிதா மருந்தமிழ் முழுவதுந் தெரிந்த
தாழ்வில்சீர் முனிவ கேளெனச் சூர்மாத் தடிந்தவ னருளொடுஞ் சாற்றும்

(இ-ள்.) வீணாநாதம்போன்ற மிடற்றொலியையுடைய மாமரத்தில் வசிக்குங் குயில்கள் கூவுகின்ற இலைகள் தலைவிரித்துள்ள தட்பமாகிய சோலைசூழ்ந்து விளங்கியுயர்கின்ற (காசிநகரத்தின் சிறப்பாகிய) காசிகண்டத்தினது தொடர்ச்சி- உயர்ச்சி - மேம்பாடு முதலியவற்றையெல்லாம், ஆழமாகிய கடல் சூழ்ந்தபூமியில் அறிதலருமையாகும். அரிய தமிழ்நூல்களையெல்லாம் உணர்ந்த கெடுதலில்லாத சிறப்புவாய்ந்த அகத்தியமுனிவனே! கேளென்று, சூரபன்மனாகிய மாமரத்தைச் சம்ஹரித்த ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள் கிருபையுடன் திருவாய் மலர்ந்தருளுகின்றனர். எ-று. (கூஎ)

மின்னவிர்பசும்பொற் குடுமியநெடுவோன் முகட்டுயர் விந்தமால்வரையை
இன்னிசை மகதி யாழ்பயில் முனிவ னெதிர்ந்தன னிடம்பிய வாறும்

பன்னரு மறைநான் முகத்தவ னுலகிற் பண்ணவர் போகிய வாறு
மன்னவா மலயத் தருந்தவ முனிவன் சாலையி னடைந்திடு மாறும.

(இ-ள்.) (முதலாவது) இனிய இசைபயிலும் மகதிவீணையேந்திய நாரதமுனிவர் மினனலே வீசிப் பிரகாசிக்கும் பசும்பொன்னுலாகிய உச்சியையுடைய நெடிய ஆகாயமளாவியுயர்ந்த பெரிய விந்தவரையை யடைந்து (மேருமலேயோடு பகைமைகொள்ள) போதித்தவகையும், (இரண்டாவது) சொல்லுதற்கரிய வேதங்களையோதிய பிரமதேவனது சத்தியலோகத்தைத் தேவர்கள் சார்ந்தவகையும், (மூன்றுவது) தேவர்கள் (காசிக்ஷேத்திரத்திலிருந்த) அகஸ்தியமுனிவர் ஆசிரமத்தை யடைந்தவகையும், எ-று.

இதுமுதல் பதினொருபாடல்கள் ஒருதொடர். (௩௮)

கடவுண்மீன் கற்பிற் றிருந்திழை மகளிர் செய்திறன் கழறிய வாறுங்
குடுமிவான் பொதியத் தருந்தவன் விந்த வரையிடைக் குறுகிய வாறும்
உடைதிரை நெடுநீர்ப் புண்ணிய தீர்த்தத் துயர்சிறப் போதிய வாறுங்
கெடலருஞ் சீர்த்தி சிறந்துயர் சத்த புரிவளன் கிளத்திய வாறும்.

(இ-ள்.) (நான்காவது) தெய்வீகம்வாய்ந்த அருந்ததியை யனைய திருந்திய ஆபரணமணிந்த மாதர்களது கற்பிலக்கணங் கூறிய வகையும், (ஐந்தாவது) உச்சியானது ஆகாயமளாவிய பொதியாசலத்து அகத்தியமுனிவர் விந்தவரையையடைந்தவகையும், (ஆறுவது) முடங்குகின்ற அலைகளையுடைய நெடிய நீர்மயமாகிய புண்ணியதீர்த்தத்தின் உயர்வாகிய மகிமையை யுரைத்தவகையும், (ஏழாவது) கெடுதலற்ற கீர்த்தியையுடைய சிறப்புற்றுயர்ந்த (அயோத்தி-மதுரை-மாயை-காசி-காஞ்சி-அவந்தி-துவாரகையாகிய) சத்தபுரிகளின் சிறப்புரைத்த வகையும், எ-று.

புண்ணியசீலன் சுசீலனென் றுரைக்கு மாயவன் கணங்கள்முன் போந்து
திண்ணிதி னுரைப்ப வருசிவ சன்மன் றென்புல நோக்கிய வாறும்
பண்ணமை புரவி யேழுடைத் தேரோ னுலகிடைப் படர்ந்துபோ மாறும்
விண்ணவர்க் கிறைவ னினிதுவீற் றிருக்கு முலகினின் மேவிய வாறும்.

(இ-ள்.) (எட்டாவது) புண்ணியசீலன் - சுசீலனென்று சொல்லப்படும் விஷ்ணுகணத்தலைவர்கள் முன்தோன்றிப் பலவிர்த்தாந்தங்களைப்புகல அவர்களோடு வருகின்ற சிவசன்மா இயமலோகங் கண்டவகையும், (ஒன்பதாவது) சிவசன்மா எழுபுரவிகட்டிய தேரையுடைய சூரியலோகங் கண்டவகையும், (பத்தாவது) சிவசன்மா தேவர்கட்கிறைவனாகிய இந்திரன் இனிதாகவீற்றிருக்கும் தெய்வலோகங்கண்டவகையும். எ-று. (௪0)

ஆரழற் கடவு ளுலகினி லடைந்த வாறுமற் றடல்கெழு நிருதி
யேருடை யுலகும் வருணனீ டுலகு மெய்திய வாறுநீள் காற்றின்
போபெறு முலகுங் குபேரனீ டுலகும் பேசிய வாறுமீ சானன்
சார்தரு முலகுந திங்கண்மூ துலகின் றன்மையும் வழங்கிய வாறும்.

(இ-ள்.) (பதினொன்றுவது) சிவசன்மா அக்கினிதேவனது உலகத்திற்சென்று கண்டவகையும், (பன்னிரண்டாவது) சிவசன்மாவலிமிகுந்த நிருதியுலகையும் வருணனது நெடியவுலகையுங் கண்டவகையும், (பதின்மூன்றுவது) சிவசன்மா

நெடிய வாயுவுலகும் பெரிய குபேரனுலகுங்கண்டவகையும், (பதினுன்காவது)சிவ சன்மா ஈசானன்பொருந்திய உலகத்தையும் பழமையாகிய சநதிரனுலகததையுங் கண்டவகையும். எ று. (சச)

அவிரொளி பரப்பு தாரகை யுலகு புதனுல கடைநதுபோ மாறுங்
கவியுறை யுலக மெயதிய வாறுங் கருணையங் காரக னுலகும்
புவிதொழு குருவி னுலகமுஞ் சனியி னுலகமும பொருநதிய வாறுந்
தவமுயல முனிவ ரெழுவா்தம் முலகின் றன்மையை விளமபிய வாறும.

(இ-ள்.) (பதினைந்தாவது) சிவசன்மாபிரகாசிக்கின்ற ஒளியைப் பரவச்செய்யும் நக்ஷத்திரலோகமும் புதனுலகமும்கண்டு சென்றவகையும, (பதினுறுவது) சிவசன்மா சுக்கிரனுலகங்கண்டவகையும், (பதினேழாவது) சிவசன்மா கிருபை தங்கிய அங்காரகனுலகும் உலகமுழுவதுமவணங்கும் குருவுலகமும்சனியுலகமுங் கண்டவகையும் (பதினெட்டாவது) தவஞ்செய்கின்ற சத்தவிருடியரது உலக மடைந்தவகையும். எ று. (சஉ)

அருந்தவ மிழைப்பான் விறல்கெழு துருவன் போகிய வாறுமங் கன்னே
புரிநதிடு செய்தி சாற்றிய வாறும் புரிந்துதன் பெயருடைப் பதம்பெற்[ன
றிருநதிடு மாறு முயா்மக லோக முதலநான் குலகெதிாந் தனவுந்[மாறும.
திருந்துநான் முகத்தோன் காசியைத் துதிதத செய்கையாங் குரைத்திடு

(இ-ள்.) (பத்தொன்பதாவது) வலிமிகுந்த துருவன்அரியதவத்தைச்செய்யும்படி வழிக்கொண்டவகையும், (இருபதாவது) ஆண்டு அத்துருவன்செய்த தவத்திறனுரைத்தவகையும், (இருபதடுதான்றுவது)துருவனபதம்பெற்றவகையும், (இருபத்திரணடாவது) சிவசன்மா உயர்வாகிய மகலோகமுதல் நான்குலகஙகளைக் கண்டவகையும், அவவிடத்தில திருந்தியநான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் காசிக்ஷேத்திரத்தைத் தோத்திரஞ்செய்த செயலைக்கூறியவகையும். எ-று.

தொல்லுல களவை புகன்றுமா யவற்குச் சுடா்முடி சூட்டிய வாறும
பல்கலை தெரிந்த புகழ்ச்சிவ சன்மன் பரகதி மேவிய வாறும்
வில்வலற் செகுத்தோன் வரைபக வெறிந்த விமலனைக் கூடிய வாறுங்
கல்லொலி மணிகன் னிகையின்வான் சிறபபுக் காதலிற் கழ றிய வாறும்.

(இ ள்.) (இருபத்துமூன்றுவது) பழமையாகிய அண்டத்தினளவுகூறி மாயோனுக்குப் பிரகாசிக்கின்ற முடிசூட்டியவகையும், (இருபத்துநான்காவது) பல நூல்களை யறிந்தகீாத்தியுடைய சிவசன்மா முத்தியடைநதவகையும், (இருபத்தைந்தாவது) வில்வலனைக்கொன்ற அகததியமுனிவர் கிரௌஞ்சகிரி பிளவுறும்படி வேற்படைவிடுத்த ஸ்ரீமுருகப்பெருமானை அடைந்தவகையும், (இருபத்தாறுவது) கல்லென்னும் ஒலியையுடைய மணிகன்னிகைத்தீர்த்தத்தின் பெருஞ்சிறப்பை ஆசையோடுரைத்த வுகையும். எ-று. (சச)

விரிதிரை பொருநீர்க் கங்கையின் றன்மை விளம்பிய வாறுமக் கங்கைத்
திரையிடைக் கழுகோ ரென்பிட முன்னைத் தீவினை யகற்றிய வாறும்
பொருவிலாக் கடவுட் கங்கையி னும மாயிரம் புகன்றிடு மாறுங்
கரைபொரு வார ணசியுடைத் தனமை கருணையிற் கூறிய வாறும்.

(இ-ள்.) (இருபத்தேழாவது) பரந்தஅலைகள் மறிகின்ற நீரையுடைய கங்காநதியின் சிறப்புரைததவகையும், (இருபத்தெட்டாவது) அக்கங்காதீர்த்தத்தின் அலையில்கழுகு ஒன்றனபிணவீழ்தத (அவவென்பினன்) பண்டைய வினையை நீஙகிய வகையும, (இருபததொன்பதாவது) சமானமில்லாத தெய்வீக மமைந்த கஙகையின ஆபிரநாமஙகூறியவகையும், (முப்பதாவது) கரையை மோதுகின்ற வாரணாசியின் சிறப்பை அன்போடறைநதவகையும், எ-று. (௩௫)

வடிகெழு குருதி மூவிலைச் சூல வயிரவன் றோன்றிய வாறு
மடல்கெழு தண்ட பாணிபார் போற்ற வன்பினிற் றோன்றிய வாறுந்
தடமலி ஞான வாவிசாற் றுழியிற் றருபட நோக்கிய வாறும்
படைநெடுந தடங்கட் கலாவதி செய்தி பரிவொடு கிளத்திய வாறும்.

(இ-ள்.) (முப்பததொன்றாவது) உதிரஞ்சிந்துங் கூர்மைமிகுந்த மூத்தலைவேலேந்திய வயிரவன் தோன்றிய வகையும், (முப்பததிரண்டாவது) வலிமிகுந்த தண்டபாணிக்கடவுள் உலகினர் துதிசெய்யப்பராக்கிரமத்தோடு தோன்றியவகையும், (முப்பத்துமூன்றாவது) இடமகன்ற ஞானதீர்த்தத்தை(சிறப்பித்து)க்கூறுகையிற் காசிப்படங் கண்டவகையும், (முப்பத்துநான்காவது) வேற்படைபோலும் நெடிய விசாலமாகியகண்ணையுடைய கலாவதி பேறுபெற்றதை அன்போடறைந்த வகையும். எ-று. (௩௬)

வழுவிவில் லொழுக்க நிகழ்த்திய வாறு முன்னராச் சிரமத்தின் வருவாய்
மொழிதரு மாறு மணிநுதன மகளி ரிலக்கண மொழிந்திடு மாறும்
பழுதிலா சாரம விளம்பிய வாறு மிலலறம் பகர்ந்திடு மாறு
மழிவிலா முத்தி வீடருள் யோக நிலைமையை யறைந்திடு மாறும்.

(இ-ள்.) (முப்பத்தைந்தாவது) குற்றமில்லாத இல்லொழுக்கங் கூறியவகையும், (முப்பத்தாறுவது) பிரமசரியததின சிறப்புரைத்தவகையும், (முப்பத்தேழாவது) அழகிய நெற்றியையுடைய பெண்களின் (சாமுத்திரிக) லக்ஷணமுரைத்தவகையும், (முப்பத்தெட்டாவது) கெடுதலில்லாத ஆசாரங் கூறியவகையும், (முப்பத்தொன்பதாவது) இல்லறஙகூறியவகையும், (நாற்பதாவது) கெடுதலில்லாத மோக்ஷவீட்டைக் கொடுக்கத்தக்க (அஷ்டாங்க) யோகநிலை யுரைத்தவகையும்.

காலமுற் றுணர்வா னுரைததது மீறுக் கணிக்கிலத் தியாயமோர் நாற்பான், மேனுமொன் றுகும் பூருவ காண்டம வியப்பினத் தொகைத னைக் கேட்டோர, ஞாலமோ ரேழு மொருகுடை நிழற்ற வாசுவீற் றிருந் துநா ளுலப்பிற், பாலலோ சனனறன் செயயபொற கழற்காற் பங்கயப் போதினி லடைவார்.

(இ-ள்.) (நாற்பததொன்றாவது) முடிவுகாலமறியும் வகையுரைத்தவகையும் இறுதியாகக் கணக்கிடின் அததியாயங்கள் நாற்பததொனறுகிய பூருவகாண்டமாகும் அன்புடன் அச்சரிதங்களைக்கேட்பவர்கள் சத்தலோகங்களிலும் தமது ஓரேகுடைநிழல்செய்யச் செங்கோல்செலுத்தி, ஆயுள்முடிவில் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது செவ்வியபொன்னுலாகிய வீரகண்டாமணிதரித்ததிருவடித்தாமரைமலரிற் கலப்பார்கள். எ-று. (௩௮)

அருள்புரி யவிமுத் தேசனற் காதை யறைந்தது மருட்டிவோ தானன்
புரவுபூண் டிருந்த துரைத்ததுங் காசிச் சிறப்பினைப் புகன்றதுங் கங்கைத்
திரைதவழ் காசி நகரில்யோ கினிகள் சென்றிடு மாறுமவிண் புகழும்
விரிசுட ருலோலா தவனுயர் காதை விளங்குறப் பகர்ந்திடு மாறும்.

(இ-ள்.) (நாற்பத்திரண்டாவது) கிருபைசெய்கின்ற அவிமுத்தேசப்பெருமானது நல்லசரிதையைக் கூறியவகையும், (நாற்பத்துமூன்றாவது) அன்புடையதிவோதானன் அரசுபுரிந்ததையுரைத்த வகையும், (நாற்பத்துநான்காவது) காசியின் சிறப்புரைத்தவகையும், (நாற்பத்தைந்தாவது) கங்காநதியின் அலைகள் தவழ்கின்ற காசிநகரத்தில் யோகினிகளடைந்தவகையும, (நாற்பத்தாறாவது) தேவர்துதிக்கும்பரந்தசுடரையுடைய லோலாதித்தனது உயர்வாகிய காதைவிளங்கக் கழறியவகையும். எ-று.

இதுமுதல் பன்னிரண்டுபாடல்கள் ஒருதொடர். (சகூ)

உருவவொண் கதிர்கா லுத்தரா தித்தன் காதையாங் கோதிய வாறும்
விரிகதிர்ச் சாம்பா தவனியற் காதை விளம்பிய வாறுமேழ் பரித்தேர்
துருபதா தித்தன் மயூகவா தித்தன் காதைகள் சொலலிய வாறு
மருளருங் கடோற்கா தவன்கரு டேசன் காதைகள் வழங்கிய வாறும்.

(இ-ள்.) (நாற்பத்தேழாவது) அழகமைந்த ஒள்ளிய கிரணத்தைக்கக்கும் உத்தராதித்தன கதையுரைத்தவகையும், (நாற்பத்தெட்டாவது) பரந்தகிரணத்தையுடைய சாம்பாதித்தன் கதைசாற்றிய வகையும், (நாற்பத்தொனபதாவது) எழுபுரவிபூண்ட தேரைச்செலுத்தும் துருபாதித்தன் மயூகாதித்தன கதைகளுரைத்தவகையும், (ஐம்பதாவது) மயக்கமற்ற கடோற்காதித்தன் கருடேசனகதைகளுரைத்தவகையும். எ-று. (௫௰)

ஆய்கதி ரருண தவன்முதற் றபனர் காதைக ளறைந்திடு மாறும்
பாய்பரி மகமோர் பத்துநான் முகத்தோன் பரிவுட னாற்றிய வாறுஞ்
சேயவான் குஞ்சிச் சிவகணம் வளங்கூர் காசியிற சோநதிடு மாறு
மேயவோ ரலகை தன்னுரு நீங்கி விணணவ னாகிய வாறும்.

(இ-ள்.) (ஐம்பத்தொன்றாவது) அருணாதித்தன முதலாதித்தர் கதைகளுரைத்தவகையும், (ஐம்பத்திரண்டாவது) பிரமதேவன பதது அச்சுவமேதயாகங்கள் அன்புடன் செய்தவகையும், (ஐப்பத்துமூனறாவது) செவவானமபோன்ற தலைமயிரையுடைய சிவகணங்கள் வளப்பமிகுந்த காசியையடைந்தவகையும், (ஐம்பத்துநான்காவது) பொருந்திய ஓர் அலகைதனது வடிவமகனறு தேவனாகியவகையும். எ-று. (௫௧)

அருவியங் கடாத்த வைங்கரன் காசி யடைந்திடு மாறுமைந் தரத்தோன்
கருணையி னுலகு புகழ்திவோ தானற் காணடலுங் கடனிற வண்ணன்
பொருவறு காசி சேர்ந்ததுந திவோதா னனுக்கருள் புரிநதிடு மாறும்
விரிதிரைப் பஞ்ச நதவா லாறும் விந்துமா தவனுதித் ததுவும்.

(இ-ள்.) (ஐம்பத்தைந்தாவது) அருவியாறு போலிழியும் அழகியமதஜலத்தையுடைய கணபதிகாசியை யடைந்தவகையும், (ஐம்பத்தாறுவது) ஐந்துதிருக்கரங்களையுடைய கணேசர் ஆசையோடு அவனியைக்காக்கும் திவோதாஸனைக்கண்டவகையும், (ஐம்பத்தேழாவது) திருமால் ஒப்பில்லாத காசியையடைந்தவகையும், (ஐம்பத்தெட்டாவது) திவோதாஸனுக்குமுத்தியளித்தவகையும், (ஐம்பத்தொன்பதாவது) பரந்த அலையையுடைய பஞ்சநதத்தின் வரலாறுரைத்த வகையும், (அறுபதாவது) விந்துமாதவன தோன்றியவகையும். எ-று. (ருஉ)

அருள்புரி விந்து மாதவன் றோன்றி யக்கினி விந்துவுக் கியல்பாற்
பொருவறு தீர்த்த மான்மிய முரைத்த தன்மையும் புரிசடைக் கடவு
ளெரிமணி யிமைக்கு மந்தர நீங்கிக் காசியி னெய்திய வாறு
மருவருஞ் சேட்ட தானத்தி னடைந்து மறைமுனிக் கருள்புரிந் ததுவும்.

(இ-ள்.) (அறுபத்தொன்றுவது) கிருபைசெய்கின்ற விந்துமாதவன் தோன்றி அக்கினிவிந்துவுக்குஇயல்போடு சமானமற்றதீர்த்தமான்மிய முரைத்தவகையும், (அறுபத்திரண்டாவது) புரிந்தசடையையுடைய ஸ்ரீவிஸ்வநாதப்பெருமான் மாணிக்கங்கள் பிரகாசிக்கின்ற மந்தரமலையை யகன்று காசிப்பதியை யடைந்தவகையும், (அறுபத்துமூன்றுவது) அடைதற்கரிய பெருமைதங்கிய சேட்டதானத்தைச்சேர்ந்து வேதமுணர்ந்தமுனிவனுக்கு அனுக்கிரகஞ்செய்தவகையும். எ-று.

காசியின் பெருமை முனிவரர்க் குரைத்த வண்ணமுங் கலைமதி புனைந்த
மாசறு கடவுட் பராசர விலிங்க முதலிய விலிங்கத்தின் வரவுந்
தேசுறு சயிலேச் சுரன்முத லீசா காதையுஞ் சிறந்தரத் தினேச
ஞசறு சிறப்புங் கிருத்திவா கேச னன்புற வினிதுதோன் றியதும்.

(இ-ள்.) (அறுபத்துநான்காவது) சிவபெருமான் காசிக்ஷேத்திரத்தின் சிறப்பை முனிவருக்குத் திருவாய்மலர்ந்தருளிய வகையும், (அறுபத்தைந்தாவது) கலைகள் பொருந்திய இளஞ்சந்திரனையணிந்த குற்றமற்ற தெய்வீகமமைந்த பராசரலிங்க முதலிய இலிங்கங்களின் கதைகளுரைத்தவகையும், (அறுபத்தாறுவது) ஒளிபொருந்திய சயிலேசலிங்க முதலிய இலிங்கங்களின் கதைகளுரைத்தவகையும், (அறுபத்தேழாவது) சிறப்புற்ற இரத்தினேசனது குற்றமற்ற கீர்த்தியையுரைத்தவகையும், (அறுபத்தெட்டாவது) கிருத்திவாசேசன் அன்போடு இனிதாகத்தோன்றியவகையும். எ-று. (ருச)

உலகொரு மூன்றும புகழ்பெறு துர்க்க னரசின துரிமையு மன்னோன்
புலவுகா றழலவேற் சூலிமேற் றாணடு பொருபடை யெழுச்சியு மவனைக்
கலையிவ ரணங்கு செற்றதும வச்சிர பஞ்சர கவசமுங் கதிர்கான்
றிலகுமோங் கார விலிங்கமெய் தியது மன்னத னேத்தருஞ் சிறப்பும்.

(இ-ள்.) (அறுபத்தொன்பதாவது) ஒப்பற்ற திரிலோகமும் புகழப்பெற்ற துர்க்கன் அரசுரிமை செய்தவகையும், (எழுபதாவது) அத்துர்க்கன் புலால்மணங்கமழும் தீயமாகிய வேலேந்திச்சூலியினமேற் படையெடுத்துச்சென்றவகையும், (எழுபத்தொன்றுவது) துர்க்காதேவி அத்துர்க்கனைக் கொன்றவகையும், (எழுபத்தி

ரண்டாவது) வச்சிரபஞ்சரகவசமுரைத்த வகையும், (எழுபத்துமூன்றாவது) ஓங்காரலிங்கந் தோன்றியவகையும், (எழுபத்துநான்காவது) அவ்வோங்கார லிங்கத்தின் துதித்தற்கரிய சிறப்புரைத்தவகையும். எ-று. (௫௫)

முக்கணெம்பெருமான் றோற்றமுமன்னோன் பெருமையுமுடிவில்கேதாரந்
தொக்கநற் கதையுந் தருமலிங் கத்தின் றோற்றமுங் கிள்ளையின் கதையு
மிக்கவான் செலவ நோற்றவாக் களிக்கு மனோரதத் திரிதிகை விதியுங்
கக்குவெங் குருதி வேலவல னுயர்த்த தூர்த்தம னினியநற் கதையும்.

(இ-ள்.) (எழுபத்தைந்தாவது) எமது திரிலோசனலிங்கப் பெருமான் தோன்றியவகையும், (எழுபத்தாறாவது) அத்திரிலோசனப் பெருமானது சிறப்புரைத்த வகையும், (எழுபத்தேழாவது) கெடுதலில்லாத கேதாரலிங்கந் தோன்றிய நல்ல கதையுரைத்தவகையும், (எழுபத்தெட்டாவது) தருமேசலிங்கத்தின் தோற்றமுரைத்தவகையும், (எழுபத்தொன்பதாவது) கிளியின்கதை யுரைத்தவகையும், (எண்பதாவது) பெருமைதங்கிய பெருஞ் செல்வத்தை நோற்றவர்களுக்குக் கொடுக்கத்தக்க மனோரததிரிதிகைவிதியுரைத்தவகையும், (எண்பத்தொன்றாவது) வெவ்விய உதிரத்தைச்சிந்தும் வேற்படையை வெற்றியோடுயர்த்திய தூர்த்தமனது இனியகதையுரைத்தவகையும், எ-று. (௫௬)

ஒண்ணிற வடிவே லேந்துகங் காள கேதுவின் வதையுமோங் கொளிய
வண்ணல்வீ ரேசன் காதையு மமர ரேத்திட வருதவக் கிழமை
நண்ணியார் மாட்டு முனிதுரு வாச னலவரம் பெற்றது மறையு
மெண்ணருஞ் சீர்த்தி விசுவகன் மேச விலிங்கமுன் றோன்றிய வியல்பும்

(இ-ள்.) (எண்பத்திரண்டாவது) ஒள்ளியநிறமமைந்த கூரியவேலேந்திய கங்காளகேதுவின் வதை யுரைத்த வகையும், (எண்பத்துமூன்றாவது) பேரொளிவாய்ந்த பெருமைதங்கிய வீரேசன் தோன்றியவகையும், (எண்பத்துநான்காவது) தேவர்கள் துதிசெய்யும்படி அரிய தவவுரிமையை மேற்கொண்ட துருவாசமுனிவன் காசியையடைந்து நல்லவரம்பெற்றவகையும், (எண்பத்தைந்தாவது) வேதங்களுந் துதித்தற்கரிய சீர்த்தியையுடைய விச்சுவகனமேசலிங்கம் முற்காலத்தில் தோன்றியவகையும், எ-று. (௫௭)

தக்கனோர் வேள்வி முயன்றதுந் தேவி தந்தைதன் சாலைபுக் கதுவு
மிக்கவவ் வேள்வி சிதைத்ததுந் தக்கன் வீந்ததும் பாருவ தீசன்
புக்கதுங் கங்கேச் சுரன்வர லாறு நருமதேச் சுரன்பொருந் தியது
மைக்கரு மிடற்றுத் திங்களந் கணணி வனேசடைச் சதீச்சுரன் வரவும்.

(இ-ள்.) (எண்பத்தாறாவது) தக்கன் ஓர்யாகஞ்செய்தவகையும், (எண்பத்தேழாவது) உமாதேவியார் தக்கன் வேள்விச்சாலை யடைந்தவகையும், (எண்பத்தெட்டாவது) மேம்பாடுதங்கிய தக்கன் வேள்வியை யழித்தவகையும், (எண்பத்தொன்பதாவது) தக்கன் இறந்த வகையும், (தொண்ணூறாவது) பாருவதீசன் கதையுரைத்தவகையும், (தொண்ணூற்றொன்றாவது) கங்கேசுரன் வரலாறுரைத்த வகையும், (தொண்ணூற்றிரண்டாவது) நருமதேசன் தோன்றிய வகையும்,

(தொண்ணூற்றுமூன்றாவது) நீலகண்டத்தையும் அழகிய சந்திரனாகிய சிரோமாலையையுமுடைய சதீச்சுரன் தோன்றியவகையும், எ-று. (௫௮)

புனிற்றிளங் திங்கள் புனையமு தேசன் முதலிய லிலிங்கத்தின் பொலிவுங்
கனிச்சுவை யனன கவிபுனை வியாதன் கையொடு நாவெழா வாறு
நினைப்பருஞ் சாப மவன்விளம் பியது நிகரில்க்ஷேத்திரவள ஞேடு[தையும்.
கனைத்துவெண் டிரைதாழ் தீர்த்தவான் சிறபபு முத்திமண் டபத்தினற்க

(இ-ள்.) (தொண்ணூற்றுநான்காவது) இளம்பிறைச் சந்திரனை யணிந்த அமுதேசனமுதலிய இலிங்கங்களின் சிறப்புரைத்தவகையும், (தொண்ணூற்றைந்தாவது) பழச்சுவைபோல (மதுரமாகிய)பாடல்சொல்லும் வியாதமுனிவன் கையு நாவு மெழா தநின்றவகையும், (தொண்ணூற்றாறாவது) அவ்வியாதமுனிவன் நினைத்தற்கரிய சாபமிட்ட வகையும், (தொண்ணூற்றேழாவது) சமானமில்லாத க்ஷேத்திரவளமும் வெள்ளிய அலைகளொலிதருப்பாயுந் தீர்த்தத்தின் சிறப்புமுரைத்த வகையும், (தொண்ணூற்றெட்டாவது) நல்லமுத்திமண்டபத்தின் கதையுரைத்த வகையும். எ-று. (௫௯)

அலங்கிதழ்க் கொன்றைத் தெரியல்சூழ் வேணி யகிலநா யகனுயா சிறப்பு, நலங்கெழு சேவை புரிதரு முறையு மாகநன் கிசைத்தவத் தியாயம், புலங்கொள நோக்கி னைம்பதோ டொன்பான் புகலினீ துத்தர காண்டம், விலங்கலில காண்ட மிரண்டினத் தியாய நூறெனவுணர்ப்பர்மிக் குணர்ந்தோர்.

(இ-ள்.) (தொண்ணூற்றொன்பதாவது) அசைகின்ற இதழ்கள் பொருந்திய கொன்றைமாலைசூடிய சடையையுடைய ஸ்ரீவிச்சுவநாதர் மகிமையுரைத்தவகையும்,(நூறாவது) நன்மைமிகுந்த சேவியத்திறமுரைத்தவகையு மாகச்சேவைபெறக்கூறிய அத்தியாயங்களைக் கணக்கிட்டுப் பார்க்கின் ஐம்பத்தொன்பதாகிய இது உத்தரகாண்டம். பூர்வ வுத்தரகாண்டங்க ளிரண்டிலுமுள்ள அத்தியாயங்கள் நூறென்று உணர்வுடையமேலோர் கூறுவர். எ-று. (௬0)

கலைமுழு துணர்ந்து தவத்துறை போய கடவுணன் முனிவா கார்ந்தத்
துலகெலா மேத்து காசிகண் டத்தின் பெருமையி னொருமுறை கேட்
ரலைதிரை புரட்டு புண்ணிய தீர்த்த மாடுவோர் பெறுபல னடைந்து [போ
கொலைமுத லாய தீவினைக் குறும்பு கொன்றுயர் முத்திவீ டடைவார்.

(இ-ள்.) எல்லாச் சாஸ்திரங்களையுமறிந்து தவத்துறைகளிற் சென்ற தெய்வீகம்வாய்ந்த நல்ல அகத்தியமுனிவனே! மகாஸ்காந்தபுராணத்துள் உலகினர் யாவரும் துதிசெய்யும் காசிகண்டத்தின் சிறப்பை ஒருமுறை கேட்டவர்கள் அலைகள் மறிகின்ற புண்ணியதீர்த்தங்களி லாடுவோர் பெறுகின்ற பலனைப் பெற்று, கொலைமுதலாகிய தீவினைச் சம்பந்தங்களை யொழித்து உயர்வாகிய மோக்ஷ வீட்டைச் சேர்வார்கள். எ-று. (௬௧)

...த்தகத் திதனை வணக்குள் மூவகை யூப்பநன் களிப்பவ ரதனி,
லெத்துணைக் காதை யெத்துணைக் கவிக ளெத்துணைப் பதம்வரி யெழுத்

தாங்,குய்த்தவே டணிந்த நாணிழை பொதிந்த துகில்முத லிவைகளோ ரொன்றிற், கத்தமால வரைபோற் களிற்றுரி புனைந்தோன் கயிலையி னளப்பினா ளுறைவர்.

(இ-ள்.) புத்தகத்தி லிதனையெழுதி மனக்களிப்புமிக நன்றாகத்தானஞ் செய்வோர் அதில் எத்தனைச்சரிதைகள் - எத்தனைச்செய்யுள்கள்-எத்தனைவார்த்தைகள் - எத்தனைவரிகள் - எத்தனையெழுத்துகள் - பொருந்திய ஏடுகள் அணிந்துள்ள இழைகளாலாகிய துகில்முதலிய (உண்டோ) இவையொவ்வொன்றிற்கு, பெரிய அஸ்தமயகிரியைப்போன்ற (கயாசுரனாகிய) யானையின் தோலையணிந்த சிவபெருமானது திருக்கைலாயமலையில் அளவில்லாதகாலம் வாழ்ந்திருப்பார்கள்.

இனிதினிவ் வேடொன் றளித்திடிற் புராணம யாவுமீந் திடுபல னெய்து மனையது விழைந்து கேட்பின்வந் தியரு மருமகப் பெறுவர்தீர் வரிதா முனிதரு பிரம கத்திபன் னிருகாற் கேட்டிடிற் றீர்ந்திடு முக்கட் டனிமுதற் கடவு ளாணைமுக் காலுஞ் சத்தியஞ் சத்திய மாமால்.

(இ-ள்.) (இக்காசிகண்டத்தின்) ஏடொன்றை யினிதாகத் தானங்கொடுத்தால் (அஷ்டாதசபுராணங்களையெல்லாம் தானங்கொடுத்த புண்ணியம் கிடைக்கும். அதனை யாசைகொண்டு சிரவணஞ்செய்தால் மலடிகளும் அருமையாகிய குழந்தைகளைப்பெறுவார்கள். பன்னிரண்டுமுறைகேட்டால் தீரவரிதாகிய கொடிய பிரமஹத்தி (முதலிய மகாபாதகங்கள்) ஒழியும். திரிநேத்திரங்களையுடைய ஒப்பற்ற முழுமுதற்கடவுளாகிய சிவபிரான்பேரில் ஆணைப்படி முக்காலும் சத்தியம். சத்தியம். சத்தியம். எ-று. (௬௩)

பெறலரும் விரத மருந்தவந் தானம் வேள்வியாற் றுநர்பெறு பலனு, மறைமுழு துணர்ந்துங் கயையினிற் பிண்டம் வழங்கியும் புராணமுற் றறிந்து,மறநெறி வழுவா தொழுகிய மறையோர்க் கடிசிலூட் டியுமெது போது, முறையுற செய்து பேறுமிக் காதையோர்முறை கேட்டுளோர் பெறுவார.

(இ-ள்.) இக்காசிகண்டச் சரிதத்தை ஒருமுறை கேட்டவர்கள் அடைதற்கரிய விரதம் - அருமையாகிய தவம் - தானம் - யாகம் முதலியவற்றைச் செய்வோர் அடையும் பலனையும், வேதமுழுவதையுமறிந்தும் (இறந்தோர்க்குக்) கயையிற் பிண்டங்கொடுத்தும் புராணங்களையெல்லாங்கற்றும் தருமமார்க்கந்தவறாமல் நடந்தும் வேதியர்க்கு அன்னமளித்தும் எப்பொழுதும் (நல்வழியில்)நிற்போரடையும் பலனையும் பெறுவார்கள். எ-று. (௬௪)

கொழுந்துவிட் டிலகுங் குருச்சுடர் மாடக் கொடிநெடு வீதிதோ றாம்மைப்,பழுங்கனிந் தொழுகு மமுதமூற் றிருக்கும் வளவயற் காசியம் பரமன், பொழிந்திடு கருணை வாரிதி படிந்த புலமையோர்க் கன்றியெஞ் ஞான்றும், விழைந்துள முலகை பூப்பவிக் காதை கேட்குநல் வினைய மெய் திடாதால்.

(இ-ள்.) கொழுந்துவிட்டுப் பிரகாசிக்குஞ் செந்நிறந்தங்கிய சுடர்மயமாகிய கொடிகள்கட்டிய நெடியமாளிகைகளமைந்த தெருக்களிலெல்லாம் வாழைப்பழங்கள் கனிந்தொழுகுகின்ற தேன ஊற்றெடுக்கின்ற வளப்பம்பொருந்திய வயல்சூழ்ந்தகாசிக்ஷேத்திரததிலுள்ள எமதுஸ்ரீவிஸ்வநாதப்பெருமானது சொரிகின்ற கிருபாசாகரத்திற படிந்த புலமையுடையோரகலலாமல, எப்பொழுதும் விரும்பி மனம் களிகூரும்படி இக்கதையைக் கேட்கத்தக்க நல்வினைப்பயன் வரமாட்டாது. எ-று. (௬௫)

ஓதுமிக் காதை முழுவதுங் கேளா தொழிந்திடி னுரைத்தகா தையினிற், பாதியா யினுமத் தியாயமொன் றேனும விருத்தமொன் ருயினும் பரிவிற், றீதிலோ ரெழுத்தா யினுமுணர்ந் தொருவன் செவிப்புலத் துறவுரைப் போனை, மேதகு குலத்துத் தமதுதெய் வதமென் றருச்சனை புரிந்திடல் வேண்டும்.

(இ-ள்.) சொல்லும் இக்காசிகண்டச் சரிதையை முற்றும்கேளாது நீங்கினும், சொல்லிய இந்நூலில் அரைப்பங்கேனும் ஒரு அத்தியாயமாயினும், ஒருவிருத்தமாயினும், ஆசையோடு கெடுதலில்லாத ஒரு அக்ஷரமட்டேனும், ஒருவன்கற்றறிந்து (பிறரது) செவிப்புலத்திற் பொருந்தக் கூறுவானாயின், அவனை மேம்பாடு பொருந்திய தமது குலதெய்வமென்று பூசை செய்தல் வேண்டும். எ-று. (௬௬)

அன்னவன் றனக்கு வேண்டுவ நல்கி மகிழ்ச்சிசெய் திடிலகி லேசன், றன்னுள மகிழ்ச்சி செய்திடல் போலுஞ் சாற்றுமிக் காதைகேட் டறிந்தோர், புன்னெறி யொழுக்கம் பயின்றிடார் தீமை புரிகிலார் திருவொடும் பொலிந்து, பன்னெடுங் காலம் விரிகட லுடுத்த பாரினி லினிதுவாழ்ந் திருப்பார்.

(இ-ள்.) அப்படிப்பட்டவனுக்கு வேண்டும் பொருள்களைக்கொடுத்து மகிழ்ச்சி செய்வித்தால் ஸ்ரீவிஸ்வநாதப்பெருமானுக்கு மகிழ்ச்சிசெய்தல்போலாகும். சொல்லிய இக்காசிகண்டச் சரிதையைக் கேட்டறிந்தவர்கள் தீய மார்க்கங்களிற் பழகமாட்டார்கள்; பாவச்செய்கை செய்யமாட்டார்கள்; அநேககோடிகாலம் பரந்தகடலே யாடையாகத் தரித்த பூமியில் செல்வத்துடன்விளங்கி இனிதாக வாழ்ந்திருப்பார்கள். எ-று. (௬௭)

என்றினி தருளால் வரைபக வெறிந்த விலங்கிலை வேல்வல னுயர்த்தோன், குன்றுறை தெய்வ முனிவனுக் குரைத்த யாவையு முளமகிழ் கூர, மன்றநான் மறைதேர் வியாதனின் னருளால் வழிபடு சூதனைம் புலனும், வென்றுறை கடவு ளைமிசா ரணியத் தருந்தவர் வியப்புற வுரைத்தான்.

(இ-ள்.) என்று இனிதாகக் கிருபையுடன், கிரவுஞ்சபர்வதம் பிளவுறும்படி செலுத்திய பிரகாசிக்கின்ற அச்சவடிவாகிய வேலாயுதத்தை வலப்புற முயர்

த்திய ஸ்ரீ முருகக்கடவுள் பொதியாசலத்தில் வாழ்கின்ற தெய்வீகம் பொருந்திய அகஸ்தியமுனிவருக்குத் திருவாய்மலர்ந்தருளிய எல்லாவற்றையும் மனக்களிப்பு மிகும்படி, நிலைபெற நான்குவேதங்களையும் தேர்ந்த வியாதமுனிவரது இனிய திருவருளால்வழிபட்ட சூதமுனிவா பஞ்சேந்திரியங்களையுஞ்செயித்து வாழ்கின்ற தெய்வீகம் பொருந்திய நைமிசாரண்ய வாசிகளாகிய (எண்பத்தெண்ணாயிரவரான) அரியதவசிகள் சந்தோஷிக்கும்படி கூறினர் எ-று. (௬௮)

சேவியத் திறமுரைத்த அ-ம்.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௩௨௫.

---

உத்தரகாண்டம் - முற்றிற்று.

---

காசிகண்டம்

முற்றுப்பெற்றது.

